ஸ்ரீ:





ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

# ஸ்ரீ பகவத்கீதை.

## மூன்றாம் ஷட்கம்.

---

ஸ்ரீபாஷ்யகாரர் அருளிச்செய்த கீதாபாஷ்யம்,
ஷை பாஷ்யத்திற்கு ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்
அருளிச்செய்த தாத்பர்யசந்த்ரிகை, கீதார்த்தஸங்க்ரஹ ரக்ஷை,
இவைகளுக்குச் சரியான தமிழ் மொழி பெயர்ப்பும்,
ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹ
ஶ்லோகங்கள், கீதா ஶ்லோகங்கள் இவைகளுக்கு
பாஷ்யத்துக்கிணங்கப் பதவுரையும், ஸ்ரீநிகமாந்த
மஹாதேசிகன் அருளிச்செய்த கீதார்த்த
ஸங்க்ரஹப் பாட்டுகளுக்குப் பொழிப்
புரையுமுள்ளது.

---

திருவஹீந்த்ரபுரம் சேட்லூர் வித்வான், பகவத்விஷயம்
ஸ்ரீ. உ. வெ. நரசிம்மாசார்யார் ஸ்வாமியால் செய்யப்பட்டு
சிந்தாத்ரிப்பேட்டை ஸத் ஸம்ப்ரதாய வர்த்தனீ ஸபையாரால்
பிரசுரம் செய்யப் பெற்றது.

---

இதன் விலை ரூபாய் **4-8-0**
முதல் ஷட்கம் விலை ரூபாய் 5-0-0
இரண்டாம் ஷட்கம் விலை ரூபாய் 3-8-0
தபாற்கூலி வேறு.

---

PRINTED AT THE SACCHIDHANANDHA PRESS MADRAS.
1915

# ஸ்ரீமத் பகவத்கீதை

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ஸ்ரீமதே பாஷ்யகாராய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

## பதின்மூன்றாவது அத்யாயம்.



பா-அ] முதல் ஷட்கத்தில் முக்யமான அடையவேண்டிய ப்ரயோஜனமாயும் பரப்ரம்மமாயும் பகவானுமிருக்கிற வாஸுதேவனை அடைவதற்கு உபாயமாகிய பக்தியென்கிற பகவானைப்பற்றிய உபாஸனத்திற்கு அங்கமாயும் ஜ்ஞானயோகம் கர்மயோகம் ஆகிய இரண்டுவித நிஷ்டைகளாலுமுண்டாக்கப்படுகிற அடைகிறவனாகிய ஜீவாத்மாவின் உண்மையைப்பற்றிய ஸாக்ஷாத்காரம் சொல்லப்பட்டது. நடுஷட்கத்தில் முக்யமான அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய பகவானுடைய உண்மையான ஸ்வபாவங்களும் அந்த மஹிமையைத் தெரிந்துகொண்ட பிறகு உண்டாக்கக்கூடியதாயும் ஒரே நிஶ்சயத்துடன் கூடியதாயும் எப்பொழுது மிடைவிடாம லிருப்பதாயுமிருக்கிற பக்தியோகத்தில் நிஷ்டை சொல்லப்பட்டது; மேலான ஐஶ்வர்யத்தில் ஆசையுடையவர்களுக்கும்

---

தா] பிறகு மூன்றாவது ஷட்கத்திற்கு ஸங்கதி சொல்லுவதற்காக முதல் இரண்டு ஷட்கங்களின் அர்த்தத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறார்—'முதல் ஷட்கத்தில்' என்றாரம்பித்து. இவ்விடத்திலிருக்கும் பதங்களுக்குத் தாத்பர்யம் முன்னமேயே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. "ஜ்ஞாநகர்மாத்மிகே நிஷ்டே யோகலக்ஷ்யே ஸுஸம்ஸ்க்ருதே। ஆத்மாநுபூதிஸித்த்யர்த்தே பூர்வஷட்கேந சோதிதே' என்று முதல் ஷட்கத்தினர்த்தம் ஸங்க்ரஹத்தில் சொல்லப்பட்டது. அடையவேண்டுமென்றிச்சிக்கப்பட்ட பலம் கிடைக்கும் வரையிலும் இடைவிடாமல் அனுஷ்டித்தல் நிஷ்டை என்றிங்கே சொல்லப்படுகிறது. 'மத்யமே பகவத்தத்த்வயாதாத்ம்யாவாப்திஸித்தயே। ஜ்ஞாநகர்மாபிநிர்வர்த்யோ பக்தியோக: ப்ரகீர்த்தித:' என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்தை அனுஸரித்து நடுஷட்கத்தின் முக்யமான அர்த்தத்தைச் சொல்லிவிட்டு ப்ரஸ்தாவத்தின்மேல் சொல்லியிருக்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—மேலான ஐஶ்வர்யத்தில்' என்றாரம்பித்து. 'என்பதும்' என்கிற இடத்

ஜீவாத்மாவின் கைவல்யத்தில் மாத்திரம் ஆசையுடையவர்களுக்கும் இந்த பக்தியோகமே அவரவர்களுக்கு வேண்டிய பலங்களுக்கு உபாயமென்பதும் சொல்லப்பட்டது. இப்பொழுது கடைசி ஷட்கத்தில் கீழ் இரண்டு ஷட்கங்களில் சொல்லப்பட்ட ப்ரக்ருதி, ஜீவன், இவைகளின் சேர்க்கையினுலேற்பட்ட ப்ரபஞ்சம், ஈஶ்வரன், இவைகளின் உண்மையான ஸ்வபாவங்களும், கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம், இவைகளின் ஸ்வரூபமும், இவைகளை அனுஷ்டிக்கும் விதங்களும், நிரூபிக்கப்

---

*திலிருக்கிற 'உம்' இதுதாழ்ந்ததென்று காட்டுவதற்காக. இதுவும் ஸங்க்ரஹத்திலே கடைசியில் 'ஐஶ்வர்யாக்ஷரயாதாத்ம்ய பகவச்சரணார்த்திநாம் | ஸாத்யோ பக்தி ஸ்ம்ருதோ யோக: ...' என்று சொல்லப்பட்டது. 'ப்ரதாநபுருஷவ்யக்த ஸர்வேஶ்வர விவேசநம் | கர்மதீர்பக்திரித்யாதி: பூர்வஶேஷோந்திமோதித:' என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்திற்கு வ்யாக்யானம் செய்யவேண்டும் என்கிற அபிப்ராயத்தினுல் மூன்றுவது ஷட்கத்திற்கு முதல் இரண்டு ஷட்கங்களோடு ஸங்கதி சொல்லுகிறுர்—'இப்பொழுது' என்றாரம்பித்து. 'இப்பொழுது' என்பதற்கு ஸாமான்யமாகத் தெரிந்து கொண்டபடியினுலே விஶேஷமாகத் தெரிந்து கொள்ளவேண்டும் என்கிற ஆசை உண்டாகிறபடியினுல் நிரூபிக்கவேண்டிய ஸமயம் வந்திருக்கும்பொழுது, என்றர்த்தம். 'இவைகளின் சேர்க்கையினுலேற்பட்ட ப்ரபஞ்சம்' என்பது 'வ்யக்த' என்னும் பதத்தினர்த்தத்தை விவரிக்கிறது. 'சேர்க்கை' ஆவதிவ்விடத்தில் ஒரே கும்பலாகச் சேர்ந்திருத்தல். ஶ்ருதியிலே 'தஸ்மிந்நஸ்ய ச யோநிம் | ... ... ...' என்று சொல்லப்படுகிற ஒருவித ஸம்பந்தத்தினுலுண்டாகிறபடியினுல், 'சேர்க்கையினுலேற்பட்ட' என்று சொல்லப்பட்டிருக்கிறதாகவுமாம். 'உண்மையான ஸ்வபாவங்களும்' என்பதினுல் 'விவேசநம்' என்னும் பதத்தின் அபிப்ராயத்திலிருக்கிற அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறது. 'விவிச்யதே அநேந' (இதனால் பிரித்துக் காட்டப்படுகிறது) என்னும் வ்யுத்பத்தியினுல் பிரித்துக்காட்டக்கூடிய ஸ்வபாவங்கள் இவ்விடத்தில் 'விவேசநம்' என்னப்படுகிறது. "'இவைகளை அனுஷ்டிக்கும் விதங்களும்' என்பதினுல் 'இத்யாதி:' என்கிற இடத்தில் 'ஆதி:' என்னும் பதத்தினுல் சுருக்கிச் சொல்லப்பட்ட அர்த்தம் சொல்லப்படுகிறது. 'கீழ் இரண்டு ஷட்கங்களிலும் சொல்லப்பட்ட' என்பதினுலும் 'நிரூபிக்கப்படுகின்றன' என்பதினுலும் 'பூர்வஶேஷோந்திமோதித:' என்கிற இடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட ஸங்கதி*

படுகின்றன. அதில் இப்பொழுதிந்தப் பதிமூன்ருவது அத்யாயத்தில்

---

விசேஷத்தை விவரித்திருக்கிறது. 'நிரூபிக்கப்படுகின்றன' என்று சொல்லியிருப்பது, மொத்தமாக மேலே சொல்லப்போகிற எல்லா அர்த்தங்களுக்கும் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காக. அபிப்ராயத்தி லிருப்பதாயும் கீழே சொல்லப்படாததாயும் அவச்யமாக வேண்டிய வைகளாயுமிருக்கிற பாகங்களைச் சொல்லுவதினுல் முன்பு சொன்ன அர்த்தங்களில் ஒருவிதத்தாலும் ஸந்தேஹமுண்டாகாதபடிச் செய் தலை நிரூபித்தலாம். பிறகு '𑌦𑍇𑌹𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍋𑌧𑌨𑌮𑍍। 𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌵𑍇𑌕𑌶𑍍𑌚 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶 𑌉𑌦𑍀𑌰𑍍𑌯𑌤𑍇' என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்திற்கு வ்யாக்யானம் செய்துகொண்டு பதி மூன்ருவது அத்யாயத்திற்கு அவதாரிகை சொல்லுகிருர்—'அதில் இப் பொழுது' என்ருரம்பித்து. 'அதில்' என்பதற்கு மூன்ருவது ஷட்கம் சொல்லவேண்டிய ஸமயத்தில் என்றும், 'இப்பொழுது' என்பதற்கு முதலில் என்றும் அர்த்தம். இத்தால் மேலே சொல்லப்போகிற ஐந்து அத்யாயங்களைவிட இந்த அத்யாயம் முந்தியது என்பது ஸங்கதி விசேஷத்தினுலேற்பட்டது என்று அபிப்ராயத்தில்கொள்ளப்பட்டது. எப்படி என்னில்—முதல் ஷட்கம் இந்த ஶாஸ்த்ரத்தின் உபோத்கா தத்தையும் ஶாஸ்த்ரம் உண்டாவதற்குக் காரணமாகிய அர்ஜுநனு டைய துக்கத்தையும் அதை நீக்குவதற்குக் காரணமாகிய ஆத்ம ஸா க்ஷாத்காரத்தையும் சொல்லுகிற இரண்டு அத்யாயங்கள் ஒருபாகமாக வும், அந்த ஆத்ம ஸாக்ஷாத்காரத்திற்கு ஸாதனத்தையே விவரமாகச் சொல்லுகிற நான்கு அத்யாயங்கள் ஒருபாகமாகவும், ஆகஇரண்டு பாக மாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. இரண்டாவது ஷட்கமும் அங்கங்கள், அதிகாரி, பலம்,முதலிய வ்யத்யாஸங்களுடன் கூடியபக்தியோகத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லுகிற மூன்று அத்யாயங்கள் ஒருபாகமாகவும், அந்த பக்தி உண்டாவதற்கும் வ்ருத்தியடைவதற்கும் காரணமாகிய அர்த்தத்தைச் சொல்லுகிற மூன்று அத்யாயங்கள் ஒரு பாகமாகவும், எப்படிப்பிரிக்கப்பட்டிருக்கிறதோ அப்படியே இந்த மூன்ருவதுஷட்க மும் மூன்றுமூன்று அத்யாயங்களடங்கிய இரண்டுபாகமாகப் பிரிக்கப் பட்டிருக்கிறது. அதில்முதல் மூன்றத்யாயங்கள் அடங்கியபாகம்ப்ரக்ருதி ஜீவன் இவைகளின் சேர்க்கையாகிய ப்ரபஞ்சம் இவைகளுக்குஈஶ்வரனு கியபகவான் இவைகளாகிற வஸ்துக்களைப் பிரித்துக்காட்டுகிறது. இதில் ப்ரஸ்தாவத்தின் மேல் செய்யவேண்டிய கார்யங்களைப்பற்றிக் கொஞ்சம் நிரூபித்திருக்கிறது. பதினுருவது முதல் மூன்றத்யாயங்களடங்கிய பாகம் செய்யவேண்டிய கார்யங்களைப்பிரித்துக்காட்டுகிறது. அதிலும்

தேஹத்தினுடையவும் ஆத்மாவினுடையவும் ஸ்வரூபங்களும், தேஹத்

---

*ப்ரஸ்தாவத்தின் மேலே வஸ்துக்களைப்பற்றிக் கொஞ்சம் நிரூபித்திருக்கிறது. ஶாஸ்த்ரத்திற்குக் கீழ்ப்படிந்து நடக்கவேண்டுமென்று நிரூபித்திருப்பதும் செய்யவேண்டிய தின்னதென்றேற்படுவதற்காகவே. இப்படி மூன்று மூன்று அத்யாயங்களடங்கிய பாகங்களின் பிரிவு சொல்லப்படுகிறது என்பதைப் பாஷ்யத்தில் பதினாறாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் 'கீழ் மூன்று அத்யாயங்களால்' என்று ஆரம்பித்துக் காட்டப்போகிறார்—அதில் 'ப்ரக்ருதிபுருஷதத்ஸம்ஸர்கேஶ்வரஸ்வரூபம்' என்கிற ஒரு பதத்தினால் மூன்றத்யாயங்களடங்கிய முதல் பாகத்தினர்த்தம் சுருக்கிச்சொல்லப்பட்டது. 'கர்மஜ்ஞாநக்ருதி த்யாதி:' என்று செய்யவேண்டிய கார்யத்தை நிரூபிக்கிற மூன்றத்யாயங்களடங்கிய இரண்டாவது பாகத்தின் அர்த்தம் சுருக்கிச்சொல்லப்பட்டது, என்று பாஷ்யகாரரின் அபிப்ராயம். இத்தால் இந்த ஶாஸ்த்ரம் பதினேழாவது அத்யாயத்தில் முடிந்துவிட்டது மேலே மூன்றத்யாயங்கள் கிலாத்யாயங்கள் ஆகையினால் மிகுதியான அனேக தர்மங்கள் சொல்லப்படுகின்றன, என்று யாதவப்ரகாசர் கல்பித்தது நிராகரிக்கப்பட்டது. இந்த முதல் மூன்றத்யாயங்களிலும் பதிமூன்று பதினான்கு அத்யாயங்களினால் 'மதாஸக்தமநாஸ்' என்பது முதலாக க்ரமமாக தேஹம் ஆத்மா இவைகளின் பிரிவு முதலியவைகளை முன்னிட்டுக்கொண்டு ஆரம்பித்திருக்கிற முதல் ஷட்கத்தினர்த்தத்திற்கு ஶேஷமாகிய தேஹம் ஆத்மா இவைகளின் உண்மையான ஸ்வபாவம் ஸம்ஸாரம் அதின் நிவ்ருத்தி அது நிவ்ருத்திப்பதற்குக்காரணம் முதலியவை நிரூபிக்கப்படுகின்றன. பதினைந்தாவது அத்யாயத்தில் நடு ஷட்கத்தில் சொல்லப்பட்டவனும் இரண்டு விதங்களான ப்ரக்ருதிகளுக்கும் ஶேஷியாயும் நான்குவித அதிகாரிகளாலும் பக்தி செய்யத்தக்கவனுமிருக்கிற பரம புருஷனைப்பற்றிய நிரூபணம் செய்யப்படுகிறது. இந்தப் பிரிவையும் பாஷ்யத்தில் பதினைந்தாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் 'க்ஷேத்ராத்யாயத்தில்' என்றாரம்பித்துக் காட்டப்போகிறார். க்ஷேத்ராத்யாயத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகிய குணங்களின் ஸம்பந்தம் ஸம்ஸாரபந்தத்திற்குக்காரணமாகும் விதத்தையும், அது நிவ்ருத்திக்கிறது முதலியவைகளையும், சொல்லுகிறபடியினால் 'பரம் பூய:' என்றாரம்பித்திருக்கிற பதினான்காவது அத்யாயம் இதற்குப் பிறகு இருக்கவேண்டியது என்பதும் ஏற்பட்டது. ஆகையினால் க்ஷேத்ராத்யாயம் மூன்றாவது ஷட்கத்தில் முதலாவது என்பது யுக்தம் இவையெல்லாவற்றையும்*

தின் உண்மையை நிரூபித்தலும், தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மா வை அடைவதற்கு உபாயமும், தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மா வின் ஸ்வரூபத்தை நிரூபித்தலும், அப்படிப்பட்ட ஆத்மாவுக்கு அசேத னத்துடன் சேர்க்கை யுண்டாவதற்குக் காரணமும், அந்த தேஹத்தை விட வேறுபட்டது என்று தெரிந்துகொள்ளுகிற விதங்களும், சொல்லப் படுகின்றன—

ஶ்ரீபகவாநுவாச.

இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபிதீயதே ।
ஏதத்யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: ॥

ஶ்ரீபகவாந்-க்ருஷ்ணன், உவாச-சொன்னார்.

ப-ரை] கௌந்தேய - அர்ஜுந, இதம் - இந்த, ஶரீரம் - தேஹம், க்ஷேத்ரம் இதி - க்ஷேத்திரம் என்று, அபிதீயதே - சொல்லப்படுகிறது, ய: - எவன், ஏதத் - இந்த தேஹத்தை, வேத்தி - அறிகிறானோ, தம் - அவனை, க்ஷேத்ரஜ்ஞ: இதி - க்ஷேத்திரஜ்ஞன் என்று, தத்வித:-அந்த ஆத் மாவையறிந்தவர்கள், ப்ராஹு: - சொன்னார்கள். 1

---

அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு—'அதில் இப்பொழுதிந்தப் பதிமூன் றுவது அத்யாயத்தில்' என்று சொல்லப்பட்டது. "தேஹத்தினுடைய வும் ஆத்மாவினுடையவும் ஸ்வரூபங்களும், தேஹத்தின் உண்மையை நிரூபித்தலும்' என்றது, இந்த அத்யாயத்தினர்த்தத்தை முழுமையும் ஆலோசித்து ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் சொல்லப்படாமலிருந்த போ திலும் 'ச' என்பதினால் குறிக்கப்பட்டதைச் சொல்லியிருக்கிறது. ஶ்லோகத்தில் தேஹஸ்வரூபம் என்று சொன்னது அதற்கு எதிர்த் தலையான ஆத்மாவின் ஸ்வரூபத்தையும் குறிப்பதற்காக 'தத்த்வஶோ தநம்' என்றதும் தேஹத்தின் உண்மையை நிரூபிப்பதையும் குறிப்ப தற்காக. ஸ்வரூபங்களும் என்று வஸ்துவைச் சொல்லியிருக்கிறது 'விவேக' என்னும் பதத்தினால் பிரித்துக்காட்டுவதாவது வ்யாத்யா ஸம் மாத்திரமாவது சொல்லப்படவில்லை, 'தத்த்வஶோதநம்' என்பதி னாலேயே சொல்லப்பட்டபடியினால் 'ப்ராமேநாத்மநிவஶ்ய' என் றாரம்பித்துப் பார்க்கத்தகுந்ததாகச் சொல்லப்பட்ட ஆத்மாவைப் பாகு திப்பிரித்து அனுஸந்தானம் செய்யும் விதமல்லவோ 'ஸம்ஸோவே ஷ' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது, இதையே சொல்லுகிறார்— 'வேறுபட்டது என்று தெரிந்து கொள்ளுகிற விதங்களும்' என்று.

பா] நான் தேவன், நான் மனுஷ்யன், நான் பருத்தவன், நான் இளைத்தவன், என்று போக்தாவாகிய ஆத்மாவுடன் ஒன்றாகத் தோன்றுகிற இந்தச் சரீரம் தன்னைவிட வேறாய் போக்தாவாகிய ஆத்மாவுக்கு ஸுகதுக்

---

தா] பிறகு 'மதாவஸ-நமதாவஸம்ஹூ' என்று முதலில் தான் ஆரம்பித்த க்ரமத்தை அனுஸரித்தும் ஏழாவது அத்யாயத்தின் ஆரம்பத்தில் இரண்டுவித ப்ரக்ருதிகளைக் குறித்திருக்கிற க்ரமத்தை அனுஸரித்தும் கேட்கப்படாதவனாக இருந்தபோதிலும் ஸமயம் வந்தபொழுது தானே நிரூபிப்பதற்காகப் பகவான் சொன்னார்—'இதம் சரீரம்' என்று ஆரம்பித்து. ப்ரமமாயும் லோகத்தில் ஜனங்கள் தெரிந்துகொண்டதாயுமிருக்கிற விதத்தைக் குறிக்கிறது 'இதம்' என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் 'நான்தேவன்' என்பது முதல் சொல்லியிருக்கிறது. 'நான்தேவன் நான் மனுஷ்யன்' என்றது கணக்கில்லாத ஜாதிகளின் பேதத்தைக் காட்டுவதற்காக. 'நான் பருத்தவன் நான் இளைத்தவன்' என்றது கணக்கில்லாத குணங்களின் பேதத்தைக் காட்டுவதற்காக. இப்படி ஜாதிகளையும் குணங்களையும் குறித்து உதாஹரணம் சொன்னது 'நான் நடக்கிறேன்' என்பது முதலிய கார்யங்களின் வ்யபாஸத்தையும் குறிப்பதற்காக. ஸம்ஸாரிகள் ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறது அனேகமாக தேஹமே ஆத்மா என்கிற ப்ரமத்தைக் காரணமாக உடையது என்கிற அபிப்ராயத்தினால் 'போக்தாவாகிய ஆத்மாவுடன்' என்று சொல்லப்பட்டது. 'க்ஷேத்ரமித்யபிதீயதே' (க்ஷேத்திரம் என்று சொல்லப்படுகிறது) என்பதினாலேயே அனுபவிக்கத்தக்கது என்பதும் ஏற்பட்டது. ஆகையினாலேயே கழனியைவிட அந்நியனாய் யஜமானனாகிய மனுஷ்யன் எப்படியோ அப்படியே இந்த யஜமானனாகையினால் தானாகவே ஏற்பட்ட போக்தாவாகிய ஆத்மா இதை அனுபவிக்கிறவன் என்கிற ஆகாரத்தினாலேயே இதைவிட வேறுபட்டவனாக ஏற்பட்டான் என்று சொல்லுகிறார்—'தன்னைவிட வேறாய் போக்தாவாகிய' என்று. ஸுகதுக்கங்களின் அனுபவம் உண்டாகிற இடமாகையினால் க்ஷேத்திரம் என்று சொல்லியிருப்பது யுக்தம் என்று சொல்லுகிறார்—'ஸுகதுக்கங்களை அனுபவிக்கிற க்ஷேத்திரம்' என்று. அபாயத்திலிருந்து காப்பாற்றுகிறது, குறைவதற்குக் காரணமாக இருப்பது, என்றிவை முதலிய ப்ரஸித்தமில்லாததும் கஷ்டமுமான அர்த்தங்களைச் சொல்லுவதைப்பார்க்கிலும் கழனியைப்போலக் கர்மங்களாகிற விதைகளின் ப்ரயோஜனங்கள் உத்பத்தியாகுமிடம் என்று சொல்லுவதே உசிதம் என்று தாத்பர்யம். 'அபிதீயதே' (சொல்லப்படுகிறது) என்பதினால் அவச்யமாய் எதிர்பார்க்கப் படுகிறதாயும் உசிதமாயும்

கங்களை அனுபவிக்கிற க்ஷேத்திரம் என்று சரீரத்தின் உண்மையை யறிந்தவர்களால் சொல்லப்படுகிறது. இந்தத் தேஹத்தை ஒவ்வொரு அவயவங்களாகவும் கும்பலாகவும், இதை நான் அறிகிறேன் என்று எவன் அறிகிறானோ அப்படிப்பட்டதன்னால் அறியப்படுகிற இந்தத் தேஹத்தை

---

இருக்கிற கர்தாவைக் சேர்த்துச் சொல்லியிருக்கிறது—'சரீரத்தின் உண்மையை யறிந்தவர்களால்' என்றது. அன்றிக்கே தத்வித: என்னும் பதத்தையே ப்ரக்ருதமான அர்த்தத்தைச் சொல்லுவதாக 'தத்விதாம்' என்று வேற்றுமையை மாற்றிவைத்துக்கொள்ளவேண்டியதாகவுமாம் அப்படி மாற்றிவைத்துக்கொண்ட பிறகு அதிலிருக்கும் தத் என்னும் பதம் ப்ரக்ருதத்தில் இருக்கிற க்ஷேத்திரத்தைச் சொல்லுகிறது, என்று அபிப்ராயம். 'ஏதத்யோவேத்தி' என்பதினாலேயே தேஹத்தை விட வேறுபட்டவன் என்பது ஸ்பஷ்டமாகச் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'இந்தத் தேஹத்தை ஒவ்வொரு அவயவங்களாகவும்' என்றாரம்பித்து. இதன் கருத்தாவது, வீடு முதலியவைகளைப் போல இதை நான் என்பதினாலேயே ஒன்று ப்ரத்யக்காக இருப்பதினாலும் மற்றொன்று பராக்காக இருப்பதினாலும் பேதம் தோன்றுகிறது. நான் தேவன் நான் மனுஷ்யன் என்று ஒன்று சேர்த்துச் சொல்லுவதற்குக் காரணமாகிய தேஹமே ஆத்மா என்கிற புத்தியுண்டாவதினால் முன் சொன்ன புத்தி ப்ரமம் என்பதும் யுக்தமல்ல, ஏனெனில் முன் சொன்ன புத்தியினால் தேஹமே ஆத்மா என்கிற புத்தியே தடுக்கப்படுகிறதாகையினால் பலமுள்ளதினால் பலமில்லாதது பாதிக்கப்படுமல்லவா தேஹத்தைவிட ஆத்மா வேறு என்கிற புத்திக்கு பலமாவது முன்பே விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட யுக்தியும் ஶாஸ்த்ரங்களும். தேஹமே ஆத்மா என்கிற புத்திக்கோவெனில் இவையிரண்டும் விரோதிகள் என்பது. முன்பு சொல்லப்பட்டதாகிய அவயவங்கள் தனித்தனியாக ஆத்மாவா? கும்பலாகச்சேர்ந்து ஆத்மாவா? என்கிற விகல்பங்களையும் அகற்த யுக்தி விரோதங்களையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'ஒவ்வொரு அவயவங்களாகவும் கும்பலாகவும்' என்று சொல்லப்பட்டது. 'ஒவ்வொரு அவயவங்களாக' என்பதற்கு என்னுடைய தலை என்னுடைய கை என்றிவ்விதமாக அவயவங்களைக் காட்டிலும் நான் என்பதின் அர்த்தம் ஸ்பஷ்டமாக வேறாகத் தோன்றுகிறது நான் தலை என்றிவ்விதமாகத் தோன்றுவதில்லை என்று தாத்பர்யம். 'ஏதத்யோவேத்தி' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டதாயும் லோகத்தில் தெரிந்துகொள்ளப்பட்டதாயுமிருக்கிற பேதத்தைக்

விட வேறுபட்டவனாகிய ஆத்மாவை ஆத்மாவின் உண்மையையறிந்தவர்கள் க்ஷேத்ரஜ்ஞன் என்று சொன்னார்கள் தேஹத்தைவிட வேறான குடம் முதலிய வஸ்துக்களை யறியும்போது தேவனாகிய நான் மனுஷ்யனாகிய நான் குடம் முதலியவைகளை யறிகிறேன் என்று தேஹத்துடன் ஒன்றாகவே அறிகிறவனாகிய ஆத்மாவையு மறிகிறான்; அப்படியிருந்த

*காட்டுகிறார்—'தன்னாலறியப்படுகிற' என்று. 'தத்விதஃ' என்கிற இடத்தில் ஸாமான்யமாகத் தெரிந்துகொள்ளுதல் மாத்திரம் நிஶ்சயம் செய்ய உபயோகப்படாது ஆகையினால்—'ஆத்மாவின் உண்மையை யறிந்தவர்கள்' என்று சொல்லப்பட்டது. அறிகிறவன் ஆத்மா என்பது ப்ரஸித்தமாக இருக்கிறது அவனும் 'ஜாநாமி' (அறிகிறேன்) என்கிற புத்தியினாலேயே ஏற்படுகிறான். அந்தப் புத்தியும் அறியும் தன்மையைப் போலவே தேஹமே என்பதையும் நான் தேவன் என்றிவ்விதமாக ஒரேகாலத்திலேயே க்ரஹிக்கிறது தேஹமே ஆத்மா என்பது ப்ரத்யக்ஷத்தினால் ஏற்பட்டிருக்கும்பொழுது யுக்தியினாலாவது ஶாஸ்த்ரத்தினாலாவது தேஹத்தைவிட வேறுபட்டது என்று ஸாதித்தால் வஸ்துவைத் தெரிவிக்கிற ப்ரமாணத்துடன் விரோதம் வருகிறது என்று ஆக்ஷேபத்தி னபிப்ராயமாகக்கொண்டு சொல்லுகிறார்—'தேஹத்தைவிட வேறான' என்றாரம்பித்து. அறிகிறவனாகிய ஆத்மா தேஹத்துடன் ஒன்றாகவே தோன்றுவதாக இருந்தால் அப்பொழுது இப்படி ஆக்ஷேபிக்கலாம் அதுவே இல்லை, ஏனெனில் தேஹமே ப்ரதானமாக அறியப்படுகிற பொழுது ஆத்மாவைவிட வேறுபட்டதாகத் தோன்றுகிறபடியினால் வஸ்துவைத் தெரிவிக்கிற ப்ரமாணத்தி லேற்பட்ட எல்லா ஸ்வபாவங்களும் வாஸ்தவம் என்கிற நிர்பந்தமுமில்லை. நீர்க்குமிழி, முத்து, தாலம், கண்ணாடி, இவைகளுக்கு ஸமமான அளவுள்ளவைகளாகவே க்ரஹங்கள், நக்ஷத்திரங்கள், சந்திரமண்டலம், ஸூர்யமண்டலம், இவைகள் எல்லோராலும் பார்க்கப்படுகின்றன, யுக்தியினாலும் ஶாஸ்த்ரங்களாலும் மிகவும் பெரிய அளவுள்ளவைகளாக ஸ்தாபிக்கப்படுகின்றன, அதைப்போலவே இவ்விடத்திலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படியிருந்த போதிலும்' என்றாரம்பித்து; ஆகையினால் வஸ்துவைத் தெரிவிக்கக்கூடிய ப்ரமாணத்திற்கு விரோதமில்லாததாயும் ஶ்ருதி யுக்தி இவைகளுக்கு ஒத்திருக்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற ஆத்மா வேறென்று தெரிவிக்கிற புத்தியினால் ஏற்படுகிற தேஹம் ஆத்மா இவைகளின் பேதத்தை உதாஹரணத்துடன் நிரூபிக்*

போதிலும் தேஹத்தையறியும்போது தேஹத்தையும் குடம் முதலியவை களைப்போலவே இதை நானறிகிறேன் என்று, தன்னால் அறியப்படுகிறதாக அறிகிறவனாகிய ஆத்மா தெரிந்து கொள்ளுகிறான்; ஆகையினால் அறிகிற வனாகிய ஆத்மாவைப்பார்க்கிலும் அவனால் அறியப்படுகிற தேஹமும் குடம் முதலியவைகளைப்போல வேறு வஸ்து. அப்படியே குடம் முதலிய வைகளைப்போலத் தன்னாலறியப்படுகிற சரீரத்தைப்பார்க்கிலும் அதை அறி கிறவனாகிய க்ஷேத்திரஜ்ஞன் வேறு வஸ்து. ஒன்றாகத்தோன்றுவதோவே னில் வாஸ்தவத்தில் சரீரம், ஜாதி முதலியவைகளைப் போலவே ஆத்மாவுக் கு விசேஷணமாக இருப்பதையே ஸ்வபாவமாக உடையதாகையினாலே

---

*கிறார்—'அறிகிற ஆத்மாவைவிட' என்றாரம்பித்து. 'ஆகையினால்' என் பது காரணத்தைச் சொல்லுகிறது. எது எந்தவஸ்துவைவிட வேறா னதோ அது அந்த வஸ்துவோடு ஒன்றாகத் தோன்றுவதில்லை எப்படி குடத்துடன் துணி ஒன்றாகத் தோன்றுகிறதில்லையோ அப்படியே. மண் ணும் குடமும் போலவே தேஹம் அறிகிறவனாகிய ஆத்மாவோடு ஒன்றாகத் தோன்றுகிறதே, என்று விரோதமான யுக்தியை ஆக்ஷே பித்துக்கொண்டு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஒன்றாகத் தோன்று வதோ' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—ஒன்றாகத் தோன்று வது மாத்திரத்தினால் பேதமில்லை என்று சொல்லமுடியாது ஜாதி குணம் முதலியவைகளி லப்படியில்லாமையினால், அந்த ஜாதி முதலிய வைகளில்லை என்று பௌத்தர்களைப்போலச் சொல்லுவதும் ஸரியல்ல, ஒரு விரோதமுமில்லாத ஜ்ஞானத்தினாலும், பார்ப்பது தொடுவது முத லியவைகளினால் ஒரே வஸ்துவைத் தெரிந்துகொள்ளுவது முதலிய காரணங்களினாலும் ஜாதி முதலியவைகளுக்கும் வஸ்துக்களுக்கும் பேதத்தை ஸ்தாபித்திருக்கிறபடியினால். அவைகளுக்குப் பேதம் அபே தம் இரண்டு முண்டென்பதும் ஸரியல்ல, விரோதம் முதலியது வரு கிறபடியினால். ஆகையினால் ஜாதி குணம் க்ரியை முதலியவைகளில் விட்டுப் பிரியாமையாகிற விசேஷமான ஸம்பந்தமிருப்பதினால் எப்படி அவை ஒன்றாகத் தோன்றுகின்றனவோ; அப்படியே இவ்விடத்திலும் என்று, எல்லா இடத்திலும் ஒரேவிதமாகச்சொல்லவேண்டும்; ஆகையி னால் அவைகளுக்கு ஒன்றுக்கொன்று பேதம் ஏற்பட்டால் ஒன்றாகத் தோன்றுவது வேறு காரணத்தினாலும் பொருந்துகிறது, என்று— 'விசேஷணமாக யிருப்பதையே ஸ்வபாவமாக உடைத்தாயிருப்பதினால்' என்று விட்டுப்பிரியாமையை விவரித்திருக்கிறது. ஜாதி குணம் முத லியவைகளைப்போல இவ்விடத்தில் விசேஷணமாகவும் விசேஷ்யமாக*

ஆத்மாவை விட்டுப் பிரியாததாகையினால் உசிதம்தான். அதில் அறிகிறவனாகிய ஆத்மாவின் அஸாதாரணமான ஸ்வபாவம் கண் முதலிய இந்த்ரியங்களுக்குத்தோன்றாததாகையினாலும் யோகத்தினால்சுத்தமாக்கப்பட்ட மனதிற்குத்தோன்றக்கூடியதாகையினாலும் ப்ரக்ருதியுடன்கூட சேர்ந்திருப்பதினாலேயே மூடர்கள் அறிகிறவனாகிய ஆத்மாவையும்ப்ரக்ருதியாக

வும் இருக்கை ஒன்றாகத்தோன்றும்பொழுது தோன்றுகிறதில்லை. எப்படி 'வெளுத்தமாடுபோகிறது' என்றிவை முதலிய இடங்களில் மாடாக இருக்கை, வெண்மை, முதலியவைகளையுடைய வஸ்து என்றுபுத்தியுண்டாகிறதோ, அப்படி இங்கே புத்தி உண்டாவதில்லை; தேவன் நான், மனுஷ்யன் நான், என்கிறவிடத்தில் தேவனாக இருக்கையையுடையவன் நான், மனுஷ்யனாக இருக்கையையுடையவன் நான், என்று தோன்றுகிறதே அல்லாமல் தேவ சரீரத்தை யுடையவன் நான், மனுஷ்ய சரீரத்தையுடையவன் நான், என்று தோன்றுவதில்லையல்லவா. ஆகையினால் 'குடம்' என்கிற இடத்தில் குடமாக இருக்கையாகிற ஜாதியையுடைய வஸ்துமாத்திரம் தோன்றுவதைப்போல தேவன் நான், மனுஷ்யன் நான். என்கிற இடத்திலும் தேவனாக இருக்கை முதலிய ஜாதியையுடைய வஸ்து மாத்திரம் தோன்றுகிறபடியினால் சரீரம் வெவ்வேறாக்கும் விசேஷணமாகத் தோன்றவில்லை ஆகையினாலும் தேஹமும் ஆத்மாவும் ஒன்றாகத்தோன்றுவது விட்டுப்பிரியாமையாகிற ஸம்பந்தத்தைக் காரணமாக உடையதல்ல, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்—'அவ்விடத்தில்' என்றாரம்பித்து. ஜ்ஞானமாக இருக்கை, நித்யமாக இருக்கை, ஸூக்ஷ்மமாக இருக்கை, முதலியவை இவ்விடத்தில் அஸாதாரணமான ஆகாரம். இதின் கருத்தாவது—இவ்விடத்தில் வெளி இந்த்ரியங்களினால் தேஹம் மாத்திரம் அறியப்படுகிறதா? மனதினால் மாத்திரமறியப்படுகிறதா? அன்றிக்கே பரிசுத்தமான மனதினால் அறியப்படுகிறதா? முதலாவது ஸரியல்ல, கண் முதலிய இந்த்ரியங்களுக்கு ஆத்மாவை அறிய ஶக்தியில்லாமையினால் அறியக்கூடியஶக்தியுள்ள இந்திரியத்தினால் ஆத்மா அறியப்படவில்லை, என்பதில்லை. இரண்டாவதும் உசிதமல்ல, மனதிற்குஆத்மாவை அறியக்கூடிய ஶக்தியிருந்தபோதிலும் அசுத்தமான மனதிற்கு தேஹத்தைவிட வ்யத்யாஸத்தைக்காட்டுகிற அளவு முதலியவைகளோடு காட்ட ஶக்தியில்லாமையினால். மூன்றாவதும் ஸரியல்ல, அது ஸித்திக்காமையினால். தேஹத்தைவிட வேறு பட்டதாகத்தெரிந்து கொள்வதற்காகவன்றோ யோகத்தை உபதேசம் செய்திருக்கிறது. அப்படியே யோகிகளுக்கு புத்தி யுண்டாகிறது ஆகையினால் நம்மாலறியப்படுகிற பாஷ்யத்தும்

வே பார்க்கிறார்கள். அப்படியே மேலே 'உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜாநம் வா குணாந்விதம்। விமூடா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ:॥' என்று சொல்லப்போகிறார். 1

க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத।
க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம் யத்தஜ்ஜ்ஞாநம் மதம் மம ॥ 2

ப - ரை] பாரத - அர்ஜுந, ஸர்வக்ஷேத்ரேஷு - எல்லாச் சரீரங்களிலும் (இருக்கிற), க்ஷேத்ரஜ்ஞம் சாபி - ஜீவாத்மாவையும், மாம் - நானாக (என்னை ஆத்மாவாக உடையதாக), வித்தி - அறி, யத் - எந்த, க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோ: - சரீரம் ஜீவாத்மா இவைகளைப்பற்றிய, ஜ்ஞாநம் - ஜ்ஞானம் (சொல்லப்பட்டதோ), தத் - அது, ஜ்ஞாநம் - (அவச்யமாக அறியவேண்டிய) ஜ்ஞானமாக, மம - எனக்கு, மதம் - அபிப்ராயம். 2

---

*ஜலத்திற்கும் ஒன்றுக்கொன்று குறைவாகவும் ஸமமாகவும் அதிகமாகவும் சேர்க்கை உண்டாகுமிடங்களில் பாலென்றுவது, ஜலமென்றுவது, புத்திஎப்படி உண்டாகிறதோ, அப்படியே இவ்விடத்திலும் தேஹமும் ஆத்மாவும் நம்மாலறியப்படும்பொழுதே அவைகளுடையவிஶேஷமான சேர்க்கையினாலும், ரஜோகுணம் தமோகுணம் வ்ருத்தியடைவதற்குக் காரணமாகிய கர்மத்தினாலும் பேதத்தை அறியாமையினால்ஒன்றென்கிற ப்ரமம் உண்டாகிறது ஆகையினால் தோஷம் உண்டென்று நிஶ்சயம் செய்யப்பட்ட இந்த புத்தியைக்கொண்டு விரோதம் வருகிறதென்று ஆக்ஷேபிக்கக்கூடாது,—என்று மோஹத்திற்குக் காரணமாகிய குணமயமான ப்ராக்ருதியுடன் சேர்ந்திருப்பதினாலே மூடர்களாகையினால் ஆத்மாவை உள்ளபடி அறியவில்லை என்பதிலும் ஆத்மா யோகத்தினால் பரிசுத்தம் செய்யப்பட்டமனதினால் அறியத்தக்கது, என்பதிலும் மேலே சொல்லப்போகிறதை ப்ரமாணமாக உதாஹரிக்கிறார்—'அப்படியே' என்றாரம்பித்து.* 1

*தா] இப்படி ஒன்றுக்கொன்று வ்யத்யாஸமுள்ள ஆகாரங்களையுடையவைகள் என்று கீழே சொல்லப்பட்ட சரீரம், ஜீவாத்மா இவைஇரண்டுக்கும் பரமாத்மாவைவிட வ்யத்யாஸத்தைக் காட்டுவதற்காக இவை இரண்டுக்கும் பொதுவாகிய பகவானுக்குச் ஶேஷமாக இருக்கையை உபதேசம் செய்து இதுவே என்னுடைய மதம் என்று ஸ்தோத்திரம் செய்கிறார்—இந்த ஶ்லோகத்தினால் சரீரத்தைவிட வேறு பட்டவனாய் பத்ததசையையுடைய ஜீவாத்மாவை இங்கே 'க்ஷேத்ரஜ்ஞ' என்னும் பதத்தினால் சொல்லியிருக்கிறது. அவன் தன்னுடைய சரீரத்திற்கு*

பா] தேவன் மனுஷ்யன் முதலிய எல்லாச் சரீரங்களிலும் அறிகிறவனாக இருக்கை ஒன்றையே ஸ்வரூபமாக உடைய ஜீவாத்மாவையும் நானாக அறி, அதாவது என்னையே ஆத்மாவாக உடையதாக அறி. 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி' என்கிற இடத்திலிருக்கிற 'அபி' என்னும் பதத்தினால் சரீரத்தை யும் நானாக அறி, என்று சொல்லப்பட்டதென்றேற்படுகிறது. எப்படிச்சரீரம் ஜீவாத்மாவுக்கு விசேஷணமாக இருப்பதையே ஸ்வபாவமாக உடையதாகையினாலே ஜீவாத்மாவைவிட்டுப் பிரியாததாகையினால் அவனோடு சேர்த்துச் சொல்லத்தக்கதோ அப்படியே சரீரமும் ஜீவாத்மாவும் எனக்கு விசேஷணமாக இருப்பதையே ஸ்வபாவமாக உடையவைகளாகையினாலே என்னைவிட்டுப் பிரியாதவைகளாகையினால் என்

---

*ஆத்மா, என்னைக்குறித்துச்சரீரம், என்று சேர்த்துச்சொல்லியிருப்பதற்குத் தாத்பர்யம், என்று சொல்லுகிறார்*—'தேவன் மனுஷ்யன் முதலிய' *என்றாரம்பித்து. 'க்ஷேத்ரஜ்ஞம்' என்கிற இடத்திலிருக்கிற ஒருமையினால் ஜாதி ஒன்றென்பது அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது, என்று காட்டுவதற்காக*—'எல்லாச் சரீரங்களிலும் அறிகிறவனாக இருக்கை ஒன்றையே ஸ்வரூபமாக உடைய' *என்று சொல்லப்பட்டது. ஏற்பட்ட அர்த்தத்தைச்சொல்லுகிறார்*—'அதாவது' *என்றாரம்பித்து. 'அபி' என்னும் பதம் இங்கே சொல்லப்படாததையும் சேர்த்துக்கொள்ளுவதற்காக. அப்படிக்கில்லாவிடில் வ்யர்த்தமாய் விடும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'க்ஷேத்ரஜ்ஞம்சாபி' என்கிற இடத்திலிருக்கிற' *என்றாரம்பித்து. வ்யக்தமாகச் சொல்லப்பட்டதையும், சேர்த்துக்கொண்டதினாலேற்பட்டதையும், அபிப்ராயத்திலிருப்பதையும், சேர்த்துச்சொல்லுகிறார்*—'எப்படி' *என்றாரம்பித்து. ஜீவாத்மாவை அதின் சரீரத்துடன் சேர்த்துச் சொல்லியிருப்பதற்குக் காரணமெதுவோ, அந்தக்காரணமே இவ்விடத்திலுமிருக்கிறபடியினால் சேர்த்துச் சொல்லியிருப்பது முக்யந்தான் என்று தெரிவிப்பதற்காக விட்டுப்பிரியாமையைச் சொல்லியிருக்கிறது. சரீரம் ஜீவாத்மாவுக்கு விசேஷணம் என்பது ப்ரத்யக்ஷத்தினாலேற்பட்டபடியினால் ஒப்புக்கொள்ளப்படுகிறது, சரீரம் ஜீவாத்மா இவைகள் பரமாத்மாவுக்கு விசேஷணம் என்பது அப்படி தெரியவில்லை. மேலும் குடம், துணி முதலியவைகளும் ஜீவாத்மாவும் ஸ்வாதீனங்களாகவே தோன்றுகின்றன, ஆகையினால் ஒன்று சேர்த்துச் சொல்லியிருப்பது முக்யமல்ல, என்னில் விசேஷ்யமாகிய பரமாத்மா ப்ரத்யக்ஷமாகக் காணக்கூடியவனல்ல, ஆகையினால் வேதாந்தம் தெரியாதவர்களுக்கு அவனுக்கு விசேஷணம் என்று தெரிய*

ளுடன் சேர்த்துச் சொல்லத்தக்கவைகள், என்றறி. ப்ரதிவி முதலியவை களின் சேர்க்கையாகிய சரீரமும், ஜீவாத்மாவும் பகவானுக்குச் சரீரமாக இருப்பதையே ஸ்வரூபமாக உடையவைகளாகையினுல் பகவானை ஆத்மாவாக உடையவைகள் என்பதை 'எவன் ப்ரதிவியில் இருந்துகொண்டு ப்ரதிவிக்குள்ளிருக்கிறுனே எவனை ப்ரதிவி அறியவில்லையோ எவனுக்கு ப்ரதிவி சரீரமோ எவன் ப்ரதிவியை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறுனே அழிவில்லாத அவன் உனக்கு அந்தர்யாமியாகிய ஆத்மா' என்றர்த்தமுள்ள வாக்யம் முதலாக 'எவன் ஆத்மாவினிடத்தி லிருந்துகொண்டு ஆத்மாவுக்குள்ளிருக்கிறுனே எவனை ஆத்மா அறியவில்லையோ எவனுக்கு ஆத்மா சரீரமோ எவன் ஆத்மாவை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறுனே அழிவில்லாத அவன் உனக்கு அந்தர்யாமியாகிய ஆத்மா' எ ˆ

---

*வில்லை என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்*—'ப்ரதிவி முதலியவைகளில்' *என்றுரம்பித்து. ப்ரதிவி முதலியவைகள் பரமாத்மாவுக்குச் சரீரங்கள் என்று சொல்லியிருப்பதினுலேயே அவைகளின் சேர்க்கையாகிய தேவன், மனுஷ்யன் முதலிய தேஹங்களும் பரமாத்மாவுக்குச் சரீரம் என்பதும் சொல்லப்பட்டது. சரீரத்திலிருக்கிற தாதுக்களும் தனித்தனியாகப் பரமாத்மாவுக்குச் சரீரம் என்பதும் சொல்லப்படுகிறது ஆகையினுலும் அவைகளின் சேர்க்கையாகிய தேஹம் பரமாத்மாவுக்குச் சரீரம் என்பதும் சொல்லப்பட்டதாகிறது, என்கிற அபிப்ராயத்தினுல்* 'ப்ரதிவி முதலியவைகளின் சேர்க்கையாகிய' *என்று சொல்லப்பட்டது. ஜீவாத்மாவுக்கு இந்த தேஹம்போல இவைகள் பரமாத்மாவுக்கு ஒருதசையில் மாத்திரம் சரீரம் என்பதில்லை, என்று தெரிவிப்பதற்காக*—'பகவானுக்குச் சரீரமாக இருப்பதையே ஸ்வரூபமாக உடையவைகளாகையினுல்' *என்று சொல்லப்பட்டது. லோகத்தில் சரீரமென்று ப்ரஸித்தங்களல்லாத ப்ரதிவி முதலியவைகள் பரமாத்மாவுக்குச் சரீரம் என்பது எப்படி ஶ்ருதியினுல் ஒப்புக்கொள்ளத்தக்கதோ, அப்படியே தன்னுடைய தேஹத்திற்கு ஆத்மாவாகிய ஜீவனுக்கும், என்று தாத்பர்யம். இப்படி ஸ்வரூபம் வேறுபட்டது என்பதும் இவைகளுக்குப் பகவான் அந்தர்யாமி என்பதும் ஏற்பட்டிருக்கும்பொழுது ஶ்ருதிகளிலும் அதின் அர்த்தத்தை விவரிக்கிற இந்தக் கீதையிலும் மற்ற ஸ்ம்ருதிகளிலும் இவைகளுடன் பகவானை ஒன்றுகச் சேர்த்துச் சொல்லியிருப்பதற்கு இதுவே காரணம். இந்தக் கீதையிலும் விபூத்யத்யாயத்தில் அந்தர்யாமியாக இருப்பதையே மேலும் கீழும் சொல்லிநடுவில் ஒன்று சேர்த்துச் சொல்லியிருப்பதினுல் ஆத்மாவாக இருப்பதே ஒன்றுசேர்த்துச் சொல்லுவதற்குக் காரணம் என்று ஶ்ருதி*

றர்த்தமுள்ள வாக்யம் வரையிலுள்ள வாக்யம் முதலியவைகள் சொல்லுகின்றன. இப்படிப்பட்ட அந்தர்யாமியாக இருக்கையினாலே எல்லா ஜீவாத்மாக்களுக்கும் ஆத்மாவாக இருப்பதே பகவானை எல்லா வஸ்துக்களுடனும் சேர்த்துச் சொல்லுவதற்குக் காரணம். ஆகையினாலே 'அஹமாத்மா குடாகேஶ ஸர்வபூதாஶயஸ்தித:' 'ந ததஸ்தி விநா யத்ஸ்யாந்மயா பூதம் சராசரம்' 'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நமேகாம்ஶேந ஸ்திதோ ஜகத்' என்று மேலும் கீழும் சொல்லி, நடுவில் 'ஆதித்யாநாமஹம் விஷ்ணு:' என்றாரம்பித்து மற்ற வஸ்துக்களுடன் சேர்த்துச் சொல்லியிருக்கிறார். சரீரம் ஜீவாத்மா இவைகளின் வ்யத்யாஸத்தைப்பற்றியும் இவைகள் என்னை ஆத்மாவாக உடையவைகள் என்பதைப்பற்றியும் எப்படிப்பட்ட இந்த ஜ்ஞானம் சொல்லப்பட்டதோ இதுவே அங்கீகரிக்கத தகுந்த ஜ்ஞானம் என்று எனக்கு அபிப்ராயம். சிலர் சோ

---

*யின் அர்த்தம் விவரித்துச் சொல்லப்பட்டது. அதைப்போலவே இருக்கிறபடியினால் இவ்விடத்திலும் சேர்த்துச் சொல்லியிருப்பதற்கு அதுவே அர்த்தம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட' என்றாரம்பித்து. மேல்பாதிக்கு வ்யாக்யானம் செய்கிறார்—'சரீரம் ஜீவாத்மா' என்றாரம்பித்து. கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட வ்யத்யாஸங்களுடன் கூடிய வஸ்துக்களையல்லவோ இங்கே சொல்லியிருக்கிறது; நெருப்பில் காய்ச்சப்பட்ட இரும்புண்டையில் நெருப்பென்கிற ஜ்ஞானத்தைப்போலப் பொய்யான ஆகாரத்தைப்பற்றிய ஜ்ஞானத்தை யிங்கே ஸ்தோத்திரம் செய்வதுபொருந்தாதாகையினால், என்கிற அபிப்ராயத்தினால்—'வ்யத்யாஸத்தைப்பற்றியும்' என்றுசொல்லியிருக்கிறது. ஜ்ஞானத்தைக் குறித்து ஜ்ஞானம் என்பது மாத்திரம் விதிக்கத்தக்கதல்ல, புனருக்திதோஷம் வருகிறபடியினால். மற்ற ஜ்ஞானங்கள் ஜ்ஞானங்களல்ல என்பதில் தாத்பர்யம் என்பதும் உசிதமல்ல, தன் வார்த்தைக்கே விரோதம் வருகிறபடியினால். ஜ்ஞானம் என்பதை அநுவாதம் செய்துகொண்டு அது தன்னுடைய மதம் என்பது விதிக்கப்படுகிறது என்பதும் ஸரியல்ல, 'ஜ்ஞாநம்' என்கிற பதத்தை இரண்டு தரம் சொல்லியிருப்பது வ்யர்த்தமாகையினால். ஆகையினால் இவ்விடத்தில் ஜ்ஞானத்தையே ஜ்ஞானம் என்று விதிக்கிறது. இதுவே அங்கீகரிக்கத்தக்கது, என்றேற்படுவதற்காக ஸ்தோத்திரம் செய்திருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதுவே அங்கீகரிக்கத்தகுந்த ஜ்ஞானம்' என்று. 'எனக்கு அபிப்ராயம்' என்றதற்கு எல்லா ப்ராணிகளுக்கும் ஸுஹ்ருத்தாகிய எனக்கு எல்லா ஶாஸ்த்ரங்களினுடையவும் அர்த்தத்தைத் தெரி*

ல்லுகிறார்கள்—'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்று சேர்த்துச்சொல்லி யிருப்பதினால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றென்றேற்படுகிறது. ஆகையினால் ஈஶ்வரனாக இருப்பவனுக்கே அஜ்ஞானத்தினால் ஜீவனாக இருப்பதைப்போலத் தோற்றம் உண்டாகிறது, என்று ஒப்புக்கொள்ள

---

ந்து கொள்ள உபயோகமானதாகையினாலும், எல்லோருக்கும் நன்மையைக்கொடுக்கக் கூடியதாகையினாலும் இதுவே அங்கீகரிக்கத் தக்கது என்று அபிப்ராயம், என்று தாத்பர்யம். இப்படி இந்த ஶ்லோகத்திற்கு ஶ்ருதி மற்ற ஸ்ம்ருதிகள் இதிலேயே முன்பின் ஸந்தர்ப்பங்கள் இவைகளுக்குப் பொருந்தின அர்த்தத்தைச் சொல்லி குத்ருஷ்டிகள் சொன்ன அர்த்தத்தைத் தூஷிப்பதற்காக அதை அநுவதிக்கிறார்—'சிலர் சொல்லுகிறார்கள்' என்றாரம்பித்து. 'சிலர்' என்றதனால் நிரூபகர்களில் தாழ்ந்தவர்கள் என்றபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. பன்மையாகச் சொல்லியிருப்பதினால் லோகத்தை மயக்குவதற்காகச் செய்யப்பட்டதென்பதையும் அந்தக்ரந்தங்களைச்செய்த க்ரமங்களின் வரிசையையுங் குறித்திருக்கிறது. "சேர்த்துச் சொல்லியிருப்பதினால் ஜீவாத்மாவும் பரமாத்மாவும் ஒன்றென்றேற்படுகிறது' என்றதற்கு 'விருத்தவ்ருத்திநிமித்தாநாம் ஶப்தாநாமேகஸ்மிந்நர்த்தே வ்ருத்திஸாமாநாதிகரண்யம்' என்றல்லவோ அதற்குலக்ஷணம், என்று தாத்பர்யம். ஸர்வஜ்ஞனாகயிருக்கை ஒன்றுந்தெரியாதவனாக இருக்கை முதலியஒன்றுக்கொன்று விருத்தங்களான ஸ்வபாவங்களையுடைய வஸ்துக்கள் ஒன்றென்பது எப்படியறியத்தக்கது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார், 'ஆகையினால்' என்றாரம்பித்து ஶாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிற அர்த்தம் தள்ளமுடியாததாகையினால் இப்படிச் சொல்லாவிடிலது பொருந்தாதாகையினாலென்றர்த்தம். 'இருப்பவனுக்கே' என்பதினால் விரோதமுண்டாகிறதென்கிற ஆக்ஷேபத்தைக் காட்டியிருக்கிறது. ஸம்ஸாரம் வேறொருகாரணத்தினாலுண்டாகிறதென்பது எல்லாராலு மொப்புக்கொள்ளப்பட்டபடியினால் ஸ்வபாவத்தில் ஜீவனாகயிருக்கை யில்லாமற்போனபோதிலுந் தோஷத்தினால் அது ஸம்பவிக்கலாம் என்கிற அபிப்ராயத்தினால் 'அஜ்ஞானத்தினால்' என்று சொல்லப்பட்டது. தோஷமிருந்தபோதிலும் விருத்தமானது ஸம்பவிக்காது. தோஷத்தினால் வெளிச்சம் இருட்டாக மாறுவது ஸம்பவிக்காதல்லவா. பூமி ஜலம் முதலிய காரணங்கள் சேர்ந்தபோதிலும் கல்லுமுளைக்காதில்லவா என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஜீவனாக இருப்பதைப்போல்' என்று. விருத்தமான ஸ்வபாவங்கள் வாஸ்தவத்தில் இருக்காது. இருப்பதைப்போல் ப்ரமிப்பதோவெனில் கயிற்றைக்கண்டு

வேண்டும், அது நிவ்ருத்திப்பதற்காக இவை இரண்டும் ஒன்றென்கிற இந்த உபதேசம் செய்யப்படுகிறது மிகவும் ஆப்தனாகிய பகவானுடைய இந்த உபதேசத்தினால் 'இது கயிறு, பாம்பல்ல' என்கிற ஆப்தனுடைய வார்த்தையினால் பாம்பு என்கிற ப்ரமம் நிவ்ருத்திப்பதைப்போல ஜீவன்

---

பாம்பென்று ப்ரமிப்பதுபோல ஸம்பவிக்கலாமென்று தாத்பர்யம். 'ஒப்புக்கொள்ளவேண்டும்' என்பதற்கு வேறுகதியைக் காணாமையால் என்று தாத்பர்யம். வாஸ்தவத்தில் ஸம்ஸாரமில்லாமற்போனால் ஸம்ஸாரத்தைப் போக்குவதற்காக உபதேசம் முதலியவை ஏன் செய்யப்படுகிறது. வாஸ்தவத்தில் வ்யாதியில்லாமற்போனால் அதைப் போக்குவதற்காக வைத்தியம் செய்வது பொருந்ாதல்லவா? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அது நிவர்த்திப்பதற்காக' என்று. ஜீவன் என்கிற ப்ரமம் நிவர்த்திப்பதற்காகவென்று தாத்பர்யம். ஜீவாத்மாவும் பரமாத்மாவுமொன்றென்கிற இந்த உபதேசம் த்ருஷ்டி, விதி முதலியவைகளைப்போல வேறொன்றுக்கு அங்கமாகத் தோன்றவில்லை பின்னை எப்படியெனில் ஆத்மாவின்உண்மையைப்பற்றிய ஜ்ஞானத்திற்காகவென்று உங்களாலுமொப்புக்கொள்ளப்பட்டது, என்கிற அபிப்ராயத்தினால் 'இந்த' என்று சொல்லப்பட்டது. சந்திரனிரண்டென்கிற ப்ரமத்தைப்போக்குகிற அது ஒன்றென்கிற உபதேசத்தைப்போல இது என்று தாத்பர்யம். ஒருவித விரோதமுமில்லாத ப்ரத்யக்ஷத்தினால் பேதம் உறுதியாகத்தோன்றும் பொழுது அத்தை எதிர்பார்க்கக் கூடியதாயும் வேறபிப்ராயம் ஸம்பவிக்கக் கூடியதாயும் ப்ரத்யக்ஷமல்லாத உபதேசத்தினால் அதற்கு விரோதம் எப்படி ஸம்பவிக்கும் என்கிற ஆக்ஷேபத்திற்கு சமாதானஞ் சொல்லுகிறார், 'மிகவும்' என்றாரம்பித்து. பொதுவாக ப்ரத்யக்ஷத்தை எதிர்பார்க்கிறதென்பது இது விரோதஞ் செய்வதற்குத் தடையாகாது, அப்படிக்கில்லாவிடில் விளக்கின் ஜ்வாலை இரண்டென்கிற அநுமானத்தினால் அந்த ஜ்வாலை ஒன்றென்கிற ப்ரத்யக்ஷத்திற்கு விரோதமுண்டாகாமல் போகவேண்டிவரும், ஆகையினாலேயே ப்ரத்யக்ஷமல்லாததென்பதும் இது துர்பலமென்பதற்குக் காரணமல்ல, தோஷமில்லாமலிருப்பதே ப்ரபலமாவதற்குக்காரணம். வாக்யத்திற்குத் தோஷங்களாவன சொல்லுகிறவனுக்கு ப்ரமம், மோசஞ்செய்ய வேண்டுமென்கிற எண்ணம், அஜ்ஞாக்கிரதை, அசக்தி, முதலியவைகள். இவ்விடத்தில் இந்த வார்த்தையைச்சொல்லுகிற வாஸுதேவன் மிகவும் ஆப்தனாகையினால்மோசஞ்செய்யவேண்டுமென்கிற எண்ணத்தின் சம்பந்தமேயில்லை. பகவானாகையினால் ப்ரமம், அஜாக்கிரதை, அசக்தி, இவைகள் சம்பவிக்காது. ஆகையினால் அவ

என்கிற ப்ரமமும் நிவ்ருத்திக்கிறது, என்று—அவர்களைக் கேழ்கவேண்டியது—இப்பொழுது உபதேசம்செய்கிற பகவானுயும் எல்லாவற்றிற்கு மீஶ்வரனுயுமிருக்கிற இந்த வாஸுதேவன் ஆத்மாவின் உண்மையை நேரில்

னுடைய உபதேசத்தினுல் ஜீவாத்மாவாக விருப்பதைப்பற்றிய ப்ரமம் ப்ரத்யக்ஷமாக விருந்தபோதிலும் நிவ்ருத்திப்பது உசிதந்தானென்பது தாத்பர்யம். இப்படி அனுவதிக்கப்பட்டதை தூஷிப்பதற்காக ஆரம்பிக்கிறார்—'அவர்களைக் கேழ்கவேண்டியது' என்று. எல்லாந்தெரிந்தவனும் ஈஶ்வரனுயுமிருப்பவனுக்கே அஜ்ஞானத்தினுல் ஜீவாத்மா என்கிற ப்ரமம் உண்டாகிறது. அந்த ஈஶ்வரனே ஜீவாத்மாவுக்குபதேசிக்கிறுன் என்று ஒன்றுக்கொன்று விருத்தமாகப்பேசுகிற இவனுக்கு அபிப்ராயமென்ன, என்று இவனபிப்ராயத்தை நிரூபித்துக்கொண்டு தூஷணஞ் சொல்லவேண்டுமென்றபிப்ராயம். 'இந்த' என்பதற்கு '(நத்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா:' என்றாரம்பத்திலேயே வேறுபட்டவனுகவே தன்னையுபதேசித்துக் கொண்டும் மேலேயும் க்ஷரம் அக்ஷரம் என்று சொல்லப்பட்ட புருஷர்களைக் காட்டிலும் தான் வேறுபட்டவனென்பதைச் சொல்லப்போகிறவராயும் இப்படித்தனித்துச் சொல்லும்போதெல்லாம் ஜீவாத்மாவைவிடத் தன்னை வேறுகக்காட்டிக் கொண்டிருக்கிற இவர், என்று தாத்பர்யம். 'உபதேசம் செய்கிற' என்பதற்கு இவரும் தெரியாதவராயிருந்தால் அர்ஜுநன் முதலியவர்களைப்போல இவரும் சிஷ்யராக இருப்பதே உசிதம். உபதேசஞ் செய்கிறவராக இருப்பது உசிதமல்லஎன்று தாத்பர்யம். 'பகவானுயும்' என்பதற்கு அயலாருடைய அஜ்ஞானத்தை நிவ்ருத்தி செய்வதற்காகவல்லவோ இவர் உபதேசஞ்செய்கிறுர் தான் தத்துவத்தைத் தெரிந்து கொண்டவரானபடியால், என்றபிப்ராயம். 'வாஸுதேவன்' என்கிற பதத்தில் எல்லாவற்றிற்கு மந்தர்யாமியா யிருப்பவர் என்றர்த்தஞ் சொல்லில் 'ஸர்வபூதாதிவாஸஶ்ச' என்கிற ப்ரமாணத்தினுல் பேதமே வ்யக்தமாகவேற்படுகிறது என்று தாத்பர்யம். வஸுதேவருக்குப் பிள்ளை என்றர்த்தஞ் சொல்லில் அந்த பகவானே யல்லவோ அவதாரஞ் செய்தாரென்று தாத்பர்யம். 'ஸர்வலோகமஹேஶ்வரம்' 'விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்நம்' யஸ்மாத்க்ஷரமதீதோஹம்' என்றிவைமுதலிய விடங்களில் தன்னை ஈஶ்வரனுகவே எண்ணிக்கொண்டு ஜீவர்களை விட எல்லாவிதத்திலும் வேறுபட்டவனென்றுபதேசிக்கிறுர், என்கிற அபிப்ராயத்தினுல் 'எல்லாவற்றிற்கு மீஶ்வரனுயுமிருக்கிற' என்றுசொல்லியிருக்கிறது. ஈஶ்வரனுக்கு ப்ரமத்திற்குக் காரணமாகிய அஜ்ஞானம்

பார்த்ததினால் அஜ்ஞானம் நிவ்ருத்தித்தவனா? அல்லது இல்லையா? என்று. அஜ்ஞானம் நிவ்ருத்தித்தவனாக இருந்தால் விஶேஷங்களொன்றுமில்லாமல் ஜ்ஞானம் மாத்திரத்தையே ஸ்வரூபமாகஉடைய ஆத்மாவினிடத்தில் அதற்கு விரோதமான ரூபங்களையுடைய வஸ்துக்களின் ப்ரமம் ஸம்பவிக்காதாகையினால் அர்ஜுநன் முதலிய பேதங்களைப் பார்ப்பதும், அவர்களைக்குறித்து உபதேசம் செய்வது முதலிய வ்யாபாரங்களும், ஸம்பவிக்

---

எப்பொழுது மில்லையென்று அவர்களால் சொல்லமுடியாது. அப்படியாகில் தன்னால் நியமிக்கப்படுகிற வஸ்துக்களின் ஜ்ஞானமேயில்லாததினால் ஈஶ்வரனுயிருக்கையே ஸித்திக்காதாகையால், அஜ்ஞானமில்லாவிடில் பொய்யாகிய பேதம் தோன்றக்கூடாதாகையினால், அயலானுடைய புத்தியில் தோன்றுவதாக எண்ணப்பட்ட பொய்யான வஸ்துவை நினைக்கிறானென்னில் அப்பொழுதும் அயலானொருவனிருக்கவேண்டிய தவஶ்யமாகையினால் அது அவர்களால் ஒப்புக்கொள்ளப்படவில்லையாகையினாலும், ஆகையினாலீஶ்வரனுக்கும் இதற்குமுன் அஜ்ஞானமிருக்கிறது அதுவும் பிற்பாடு ஜ்ஞானத்தினால் நிவ்ருத்திசெய்யத்தக்கதென்று ஒப்புக்கொள்ளவேண்டும். அதுவும் இந்த உபதேசஞ் செய்தபொழுது உன்னாலொப்புக்கொள்ளப்பட்ட காரணத்தினால் நிவ்ருத்தியடைந்ததா இல்லையா என்கிற அபிப்ராயத்தினால் பிரித்துக் கேட்கிறார், ஆத்மாவின் என்றாரம்பித்து'. முதல் கல்பத்தை தூஷிப்பதற்காக அநுவாதஞ் செய்கிறார் 'அஜ்ஞானம் நிவ்ருத்தித்தவனாக இருந்தால்' என்று. 'விஶேஷங்க ளொன்றுமில்லாமல்'என்பதற்குக் காரணமில்லாமையினால் காரியமுமில்லை என்று தாத்பர்யம். உன்னால் ஒப்புக்கொள்ளப்பட்ட ஆதாரமான வஸ்துவின் ஸ்வபாவத்தினாலேயே ப்ரமம் ஸம்பவிக்காது, தோஷமும் நிவ்ருத்தித்துவிட்டால் கேழ்கவேண்டியதில்லை என்கிற அபிப்ராயத்தினால்'விஶேஷங்க ளொன்றுமில்லாமல் ஜ்ஞானம் மாத்திரத்தையே ஸ்வரூபமாகவுடைய' என்று சொல்லியிருக்கிறது. அதாவது சில விசேஷங்களோடுகூடிய வஸ்துவில் அஸாதாரணமாகிய ஏதாவதொரு ஆகாரம் மறைக்கப்பட்டதானால் அதற்கு விருத்தமான ஸ்வபாவத்தைப்பற்றி ப்ரமமுண்டாகும். அறியுந்தன்மையையுள்ளவொருவன் அதை வேறுவிதமாக அறிவான், ஜ்ஞானம் மாத்திரமறியாது, என்று தாத்பர்யம். 'அர்ஜுநன் முதலிய' என்கிற இடத்தில் முதலிய என்கிற பதத்தினால் கொல்லவேண்டுமென்று இச்சிக்கப்படுகிற த்ருதராஷ்டிரன் பிள்ளை முதலியவர்களையுஞ் சேர்த்துக்கொள்ளவேண்டியது. 'உபதேசஞ் செய்வது முதலிய' என்கிற விடத்தில் முதலிய என்னும் பதத்தினால் தேரோட்டுவது முதலியவையுஞ் சேர்

காது. ஆத்மாவின் ஸாக்ஷாத்காரமில்லாமையினால் அஜ்ஞானம் நிவ்ருத்தியாகாதவரென்னில், அப்படியாகில் தெரியாதவராகையினாலேயே ஆத்மஜ்ஞானத்தை உபதேசிப்பது ஸம்பவிக்காது. 'உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ் தத்த்வதர்ஶிந:' என்றல்லவோ சொல்லப்பட்டது. ஆகையினால் இப்படிப்பட்டது முதலிய வார்த்தைகள் ஶ்ருதி ஸ்ம்ருதி இதிஹாஸம் புராணம் ந்யாயம் தன்னுடைய வார்த்தை இவைகளின் விரோதம்

---

*த்துக்கொள்ள வேண்டியது. இரண்டாவது விகல்பத்தை அநுவாதஞ்செய்கிறார்—'ஆத்மாவின்' என்றாரம்பித்து. நிவ்ருத்திப்பதற்குக் காரணமாகிய ஆத்மாவைப்பற்றிய ஸாக்ஷாத்காரம் இல்லாமையினால் என்று தாத்பர்யம். 'அப்படியாகில்' என்பதற்கு இந்த்ரியங்கள், லிங்கம், சப்தம் முதலியவைகளைப் போலத் தானறியாதவனாக விருந்தபோதிலும் அயலானுக்கு ஜ்ஞானத்தை உண்டுபண்ணுவது ஸம்பவிக்காது. உபதேச வாக்யத்தைச் சொல்லுவது ஜ்ஞானத்தை முன்னிட்டுக் கொண்டிருக்கவேண்டிய தவஶ்யமாதலாலும், தன்னாலறியப்படாததை யுபதேசஞ்செய்தால் ஆப்தனில்லாமல் போகவேண்டிவருமாதலாலும், என்று தாத்பர்யம். உண்மையை ஸாக்ஷாத்காரஞ் செய்தவனே ஆத்மாவைப்பற்றி உபதேசஞ் செய்யவேண்டுமென்பதில் அவருடைய வார்த்தையையே ப்ரமாணமாகக்காட்டுகிறார் 'உபதேக்ஷ்யந்தி' என்றாரம்பித்து. இப்படி சங்கராசார்யருடைய பக்ஷத்தில் சொல்லப்பட்ட தோஷமே பாஸ்கரர் முதலியவர்களுடைய பக்ஷங்களிலுமுண்டென்று காட்டுகிறார் 'ஆகையினால்' என்றாரம்பித்து. சங்கராசார்யருடைய மதத்தில் பேத ஶ்ருதிகளும், ஸகுண ஶ்ருதிகளும், அந்தர்யாமி ஶ்ருதிகளும், ப்ரக்ருதி, ஜீவன், இவைகள் நித்யங்கள் என்று சொல்லுகிற ஶ்ருதிகளும், இதை யனுவதிக்கிற ஸ்ம்ருதிகளும் விரோதிக்கின்றன. அபேதஶ்ருதிகளும் முக்யமான அர்த்தத்தை விட்டு விசேஷங்களொன்றுமில்லாத ப்ரம்மத்தை லக்ஷணையாகச் சொல்லுகின்றன, என்றவர்களாலேயே ஒப்புக்கொள்ளப்படுகிறபடியினால் முக்யமான அர்த்தத்தைச் சொல்லில் அவைகள் விரோதிக்கின்றன. விஷயங்கள் வெவ்வேறென்கிற ஏற்பாடு முதலியவைகளால் விரோதத்திற்குப் பரிஹாரம் ஸம்பவிக்கும் பொழுது விரோதத்தினாலொன்றுக்கொன்று பாதிக்கப்படுகிறதென்று ஒப்புக்கொள்வதனால் நியாயத்திற்கும் விரோதம் வருகிறது. தன்னுடைய வார்த்தைக்கு விரோதமோ ப்ரம்மம் ஒரு விசேஷமுமில்லாதது. இப்படிப்பட்டதாகையினாலென்றாஹிக்கும்பொழுது இந்தக் காரணமும் விசேஷமில்லாமையாகிற ஸ்வபாவமும் அதிலிருக்கவேண்டியதவஶ்யமாகையினாலும், இப்படியே ஜ்ஞானமொன்றுமறியத்தகா*

முதலியவைகளை யோசிக்காத அஜ்ஞானிகளால் லோகத்தைமயக்குவதற்

---

தது, என்று சொல்லும்பொழுது ஜ்ஞானம் என்கிற பதத்தைக்கொண்டறியத்தக்கதென்று அவஶ்யமாக ஒப்புக்கொள்ள வேண்டியதாகையாலும், இப்படியே ப்ரம்மம் சப்தத்தினால் சொல்லத்தக்கதல்ல என்று இவை முதலிய வார்த்தைகளினு மறிந்துகொள்ளவேண்டியது. பாஸ்கராசார்யருடைய பக்ஷத்திலும் பேதத்தைச் சொல்லுகிற ஶ்ருதிகளா அவைகளுக்கு விரோதமாகிய அபேதத்தைப் பொறுக்காதாகையினால் அவைகளுடன் விரோதம் வருகிறதென்று சொல்லவேண்டியது. அசேதனத்திற்கும் ப்ரம்மத்தோடு அபேதம் ஒப்புக்கொள்ளுகிறபடியினால் ப்ரம்மம் விகாரங்களில்லாதது என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடு விரோதம் வருகிறது. ப்ரம்மமே உபாதியுடன் சேர்ந்து ஜீவனாகிறதென்று சொல்லுகிறபடியினால் ப்ரம்மம் தோஷங்களற்றது என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடு விரோதம் வருகிறது. அபேத ஶ்ருதிகளும் அனேகமாய் முக்யங்களல்ல. ஏனெனில் ஜீவனையும் ஈஶ்வரனையும் ஒன்று சேர்த்துச் சொல்லும்பொழுது குடத்துக்குள்ளிருக்கிற ஆகாசமும் பெரிய ஆகாசமும் ஒன்றென்பதைப்போல இங்கே சொல்லப்படுகிற ஆகாரத்துடன் ஒன்றல்ல, ஆகையினால். இப்படியே அசேதனமும் ஈஶ்வரனும் ஒன்றென்பதும் ஸ்வாரஸ்யமுள்ளதல்ல, ஏனெனில் ஸர்வஜ்ஞனாக இருக்கை முதலிய குணங்களையுடைய ப்ரம்மம் எல்லா வஸ்துக்களுடனும் ஒன்று என்னில் எல்லா வஸ்துக்களுடையவும் துக்கங்களை அனுபவிக்கவேண்டி வருகிறபடியினால். ப்ரம்மம் தோஷமில்லாததுஎன்று சொல்லுகிற ஶ்ருதியுடன் விரோதம் வருகிறதே அதற்குப் பரிகாரம் இல்லாமையினால் ந்யாயத்திற்கும் விரோதம் வருகிறது. யாதவப்ரகாசருடைய பக்ஷத்திலும் ஸ்வபாவத்திலேயே ஒன்றாயும் வெவ்வேறாகவும் இருக்கிற ஜீவர்களாக ஆகிறது ப்ரம்மம், என்று ஒப்புக்கொள்ளுகிறது, இவர்கள் சொல்லுவதைவிட அதிகம். எல்லா வஸ்துக்களிலும் தொடர்ச்சியாக இருக்கிற ஸத் என்பதே ப்ரம்மம் என்று ஒப்புக்கொள்ளுகிறபடியினால் ப்ரம்மம் ஒருவராலும் பார்க்கத்தகாதது என்றுசொல்லுகிற ஶ்ருதிகளுடன் விரோதம் வருகிறது. ஸத் என்பது குடம் முதலிய வஸ்துக்களுக்கு ஸ்வபாவமாகத் தோன்றுகிறபடியினால் ப்ரம்மம் ஜாதியாகவேண்டிவரும், என்றிவை முதலிய தோஷங்களறியத்தக்கவைகள். இவ்விருவர்களுக்கும் தங்களுடைய வார்த்தைக்கு விரோதமும் ஸப்தபங்கி சொல்லுகிறவர்களைப்போல பேதம் அபேதம் இந்த இரண்டையும் ஒப்புக்கொள்ளுகிறபடியினாலும், தோஷங்களில்

காக உண்டாக்கப் பட்டவைகள் ஆகையினால் அநாதரிக்கத்தக்கவைகள்.

லாதவனாக இருக்கை, தோஷங்களையுடையவனாக இருக்கை, இந்த இரண்டும் ஒரே இடத்தில் சேருகிறபடியினாலும் வ்யக்தமாக ஏற்படுகிறது. 'லோகத்தை மயக்குவதற்காக உண்டாக்கப் பட்டவைகள்' என்றது அவர்களபிப்ராயத்தைக் கொண்டு சொல்லப்படவில்லை 'அஜ்ஞானிகளால்' என்று சொல்லப்பட்டபடியினால். பின்னை எப்படியென்னில் அஜ்ஞர்களாகிய அவர்களுடைய வார்த்தை தெய்வ ஸங்கல்பத்தினால் லோகத்தை மயக்குவதற்குக் காரணமாயிற்று, என்று சொல்லப்படுகிறது. உங்களுடைய பக்ஷத்திலும் ஶ்ருதிகளுடன் விரோதம் முதலிய தோஷங்கள் ஸமமாக இருக்கின்றன; எப்படியென்னில் லோகமும் ப்ரம்மமும் வெவ்வேறு என்று ஒப்புக் கொள்ளப்பட்டதாகில் அப்பொழுது 'அது பெயரினாலும் ரூபத்தினாலும் வ்யாகரணம் செய்யப்படுகிறது' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் காரணமாகிய ப்ரம்மமே கார்யங்களுடைய பெயரையும் ரூபத்தையும் அடைகிறது என்று சொல்லியிருக்கிறதற்கு விரோதம் வருகிறது. ப்ரம்மம் ஒன்றை அறிந்ததினால் எல்லாவற்றையும் அறிந்ததாகிறது என்று ப்ரதிஜ்ஞை செய்திருப்பதற்கும் விரோதம் வருகிறது. குடத்தை அறிந்ததினால் அதைவிடவேறாகிய துணி அறியப்பட்டதாகாதல்லவா. வெவ்வேறாகிய லோகத்தையும் ப்ரம்மத்தையும் ஒன்றுசேர்த்துச் சொல்லியிருப்பதும் பொருந்ாது. குடம் துணி இவைகளைப்போலவே. லக்ஷணையாக அர்த்தம் சொல்லுகிறோமென்னில் மற்றவர்கள் பக்ஷத்தில் என்ன த்வேஷம்? லோகம் ப்ரம்மத்தை உபாதான காரணமாக உடையது என்பதும் ஸம்பவிக்காது, மண்ணையும் குடத்தையும் போல லோகமும் ப்ரம்மமும் ஒரேத்ரவ்யம்என்று ஒப்புக்கொள்ளாமையினால். அப்படி ப்ரம்மமே உபாதானகாரணம் என்று ஒப்புக்கொள்ளாவிடில் முன்பு இருக்கிற வஸ்துவே கார்யமாக மாறுகிறது என்று சொல்லுவதற்கு விரோதம்வரும். வெவ்வேறாகிய ப்ரக்ருதி, ஜீவன், ஈஶ்வரன், இவைகளாலேயே லோகம் உண்டாக்கப்படுகிறதாகில், அவைகள் ஒன்று சேர்ந்துக் கார்யத்தை உண்டாக்குகின்றனவா? அல்லது தனித்தனியாக இருந்துகொண்டு உண்டாக்குகின்றனவா? முதலாவது பக்ஷத்தில் மற்றவர்களுடைய பக்ஷம்போலவே ஒன்றுக்கொன்று ஸ்வபாவங்கள் கலக்கவேண்டிவரும்; இரண்டாவது பக்ஷத்திலும் அவைகள் தனித்தனியான கார்யத்தை உண்டாக்குகின்றனவா? இல்லையா? தனித்தனியான கார்யத்தை உண்டாக்குகிறதாக இருந்தால் எல்லாம் ப்ரம்மத்தைக்காரணமாக உடையது என்கிற உங்கள் கொள்கை ஓடிப்போய்விட்டது.

இவ்விடத்தில் உண்மை இது – அசேதன வஸ்துவுக்கும் சேதனவஸ்

ஓரேகார்யத்தை உண்டாக்குகிறதாக இருந்தால் கார்யமாக இருக்கும் தசையில் ஸ்வபாவங்கள் கலக்கவேண்டி வரும் என்று முன்பு சொன்னது அப்படியே யிருக்கிறது. ப்ரம்மம் ஸ்வரூபத்தில் விகாரங்களில்லாததாகில் அதுவே கார்யரூபமாகிறது என்று சொல்லுகிற ஶ்ருதிகளுடன் விரோதம் வருகிறது. அன்றிக்கே விகாரங்களை யுடையது, என்று ஒப்புக்கொள்ளில் அயலாருடைய பக்ஷத்தில் நீர் கேட்ட விகாரங்களில்லாதது என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடு விரோதம் முன்போலவே இருக்கிறது. ப்ரம்மம் எப்பொழுதும் ஸர்வஜ்ஞனாகஇருக்கை முதலிய கல்யாணகுணங்களின் கூட்டங்களை உடையதாக இருந்தால் அப்பொழுது குணங்களில்லாததுஎன்றுசொல்லுகிற ஶ்ருதிகளோடும் ஜ்ஞானம் மாத்திரம்தான் ப்ரம்மம் என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடும் விரோதம் வருகிறது. எப்பொழுதும் லோகத்திற்கும் ப்ரம்மத்திற்கும் பேதமுண்டென்று ஒப்புக்கொள்ளில் பேதமில்லை என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடு விரோதம் வருகிறது. வஸ்துவின் ஸ்வபாவத்தினால், குணங்கள் உண்டு என்பது முன்னதாகவும் குணங்களில்லை என்பது பின்னதாகவும் ஏற்படுகிறபடியினால் அபச்சேதாதிகரண ந்யாயத்தினால் முன்பு சொன்னதைப் பின்னால் சொன்னது மறுக்கிறது என்று ஒப்புக்கொள்ளாமையினால் ந்யாயவிரோதமும்வருகிறது. ப்ரம்மம் எல்லா ரூபமாகவும் இருக்கிறது என்றும் எல்லாவற்றையும் விடவேறுபட்டது என்றும் ஒப்புக்கொள்ளுகிறபடியினால் தங்களுடைய வார்த்தைகளோடும் விரோதம் வருகிறது. ஆகையினால் தோஷம் ஸமமாக இருக்கும்பொழுது யாருடைய மதம் உண்மை, என்று பூர்வாபரவாஹகலக ந்யாயத்தினால் அபிப்ராயம் தெரியாத மற்றவர்கள்செய்த ஆக்ஷேபத்தைப்பரிஹரித்து நல்லதாய் சாரீரக ஸூத்திரங்களில் சொன்ன ந்யாயங்களினால்நிர்ணயம் செய்யப்பட்ட எல்லா வேதாந்தங்களின் ஸாரமாகிய அர்த்தத்தை இந்த ஶாஸ்த்திரம் சொல்லுகிறது, என்று ஸ்தாபிப்பதற்காகச் சொல்லுகிறார்—'இவ்விடத்தில்உண்மை இது' என்று. 'இவ்விடத்தில்' என்பதற்கு ஶ்ருதி, ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம், இவை முதலியவைகளுக்கு விரோதமில்லாத*அர்த்தத்தை யோசிக்குமளவில், என்று அர்த்தம். அன்றிக்கே ஶ்ருதி முதலியவைகளில், என்று அர்த்தமாகவுமாம். 'இது' என்பதற்கு ப்ரமாணங்களை அநுஸரித்து நாம் மேலே சொல்லப்போகிறதே ஒழிய சங்கராசாரியர் முதலியவர்களால் சொல்லப்பட்டதல்ல, என்று அர்த்தம். 'உண்மை' என்பதற்கு ப்ரமாணங்களில் ஏற்பட்டது என்று அர்த்தம். கீழ்ச் ஆக்ஷே

நுவுக்கும் பரமாத்மாவுக்கும் போக்யம் என்றும் போக்தா என்றும் நிய ந்தா என்றும் ஸ்வரூபங்களின் வ்யத்யாஸங்களைச் சில ஸ்ருதிகள் சொல்லு கின்றன. எவை என்னில் 'மாயையையுடையவன் இந்த ப்ரக்ருதியினிட த்திலிருந்து இந்த ப்ரபஞ்சத்தை ஸ்ருஷ்டிக்கிறன். இந்த ப்ரபஞ்சத்தில்

---

பிக்கப்பட்ட தோஷங்களை மேலே பரிஹரிக்கப்போகிறவராய் முதலில் தன்னுடைய பக்ஷத்தை ப்ரமாணங்களினுல் ஸ்த்தாபிக்கிறர், 'அசே தன வஸ்துவுக்கும்' என்று ஆரம்பித்து ஸத்யமாக ஆயிற்று என் கிற வரையில். 'போக்யம் என்றும்' என்பது முதலியது மூன்றிலும் முறையே அன்வயிக்கிறது. 'போக்யம் என்றும், போக்தா என்றும் நியந்தா என்றும்' என்றது மேலே சொல்லப்போகிற ஸ்ருதிகளில் ஏற்படுகிற வ்யத்யாஸத்தைக் காட்டக்கூடிய மற்றவ ஸ்வபாவங்களை யும் குறிக்கிறது. சொல்லாத அர்த்தத்தையும் சேர்த்துக்கொள்ளுகிற சகாரத்தினுல் அவைகள் சேர்த்துக்கொள்ளப்படுகிறதாகவுமாம். 'ஸ்வ ரூபத்தின் வ்யத்யாஸத்தை' என்பதற்கு ஸ்வரூபங்கள் வெவ்வேறு என் பதை என்று அர்த்தம். வ்யத்யாஸம் என்னும் பதம் ப்ரமத்தைப்போக் கடிக்கக் கூடியது என்று தெரிவிப்பதற்காக. பேதத்தைச் சொல்லுகிற ஸ்ருதிகளும் வேதங்கள் தான் என்கிற விஷயத்தில் ஒரு விதத்தடையு மில்லை, என்கிற அபிப்ராயத்தினுல் 'சில ஸ்ருதிகள்' என்று சொல்லப் பட்டது. ஸ்ருதிகள் என்கிற பன்மையினுல் அதிகமாக இருக்கிறது பல முள்ளது, என்கிற ந்யாயத்திற்கு விரோதமில்லை, என்பதும் தெரி விக்கப்பட்டது. பேத ஸ்ருதிகளுக்கும் விரோதமில்லாமல் சேர்த்துச் சொல்லி இருக்கிறஸ்ருதிகளின் அர்த்தத்தை ஸ்த்தாபிப்பதற்காக முத லில் பேத ஸ்ருதிகளை எடுத்தது. 'இந்த ப்ரக்ருதியினிடத்திலிருந்து' என்று ஆரம்பிக்கும் வாக்யத்தினுல் நேராக விகாரங்களுக்கு ஆதார மாக இருக்கை அசேதனமாகிய த்ரவ்யத்திற்கு என்று ஏற்பட்டது. மற்ருெருவன் ப்ரக்ருதியினுல் கட்டப்பட் டிருக்கிறன் என்பதினுல் அவித்யை முதலியவைகளோடு கூடிய ப்ரம்மமே ஜீவனுகிறது, என் றிவை முதலிய வாதங்கள் நிராகரிக்கப்பட்டன. இந்த வாக்யத்தில் மாயையினுல் தடுக்கப்பட்டிருக்கிறபடியினுல் வேருெருவனுகிறன். என்று சொல்லப்படவில்லை யல்லவா ? பின்னை எப்படியெனில் வாஸ்த வத்தில் வேருக இருக்கிறவனுக்கு ப்ரக்ருதியினுல் பந்த முண்டு என்று சொல்லப்படுகிறது. கட்டப்பட்டிருக்கிறன், என்பதற்கு ஸ்வபாவத்தி லேயே ஏற்பட்ட ஸர்வஜ்ஞனுக இருக்கை, எல்லை இல்லாத ஆனந்தம் முதலியவைகளின் ப்ரகாசமில்லாமல் இருக்கிறன் என்று அர்த்தம். மற் றவர்களால் ஒப்புக்கொள்ளப்பட்ட மாயா என்னும் பதத்தின் அர்த்

ப்ரக்ருதியினால் மற்றொருவன் கட்டப்பட்டிருக்கிறான். மாயை என்பதை ப்ரக்ருதி என்றறி. மாயையையுடையவனை மஹேச்வரன் என்றறி' என்றும், 'க்ஷரம் ஆவது ப்ரக்ருதி, அம்ருதமான அக்ஷரம் ஆவது ஹரன், க்ஷரத்தையும் ஜீவாத்மாவையும் ஒருதேவன் நியமிக்கிறான்' என்றும், இதில் அம்ருதமான அக்ஷரம் ஆவது ஹரன் என்று போக்தாவாகிய ஜீவாத்மா

---

தம் ப்ரக்ருதியினாலேயே தள்ளப்பட்டது, என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'மாயை' என்று ஆரம்பித்து. 'க்ஷரமாவது' என்று ஆரம்பிக்கும் வாக்கியத்தில் 'ஹர:' என்னும் பதத்திற்கு மேல் வாக்கியத்தோடு அன்வயம் சொல்லி குத்ருஷ்டிகள் கல்பிக்க வேறுவிதமான யோஜனையை நிராகரிப்பதற்காக அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அம்ருதமான அக்ஷரம் ஆவது ஹரன் என்று போக்தாவாகிய ஜீவன் சொல்லப்படுகிறான்' என்று ருத்ரனிடத்தில் இடுகுறிப்பெயராக வழங்குகிற ஹர: என்னும் பதம் போக்தாக்களை எல்லாம் பொதுவாகச் சொல்லுகிறது, என்பது எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ப்ரக்ருதியை' என்று ஆரம்பித்து. ஹரதி என்று ஆரம்பித்துப்பதத்தின் வ்யுத்பத்தி சொல்லி இருக்கிறது. மற்றது ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி இருக்கிறது. இதின் அபிப்ராயமாவது—இவ்விடத்தில் ஹர: என்னும் பதம் ஒரு தேவன் என்பதோடு அன்வயிக்கிறதாக இருந்தால் அம்ருதாக்ஷரம் என்பது விதிக்கப்படுவதாக ஆகாது. அம்ருதாக்ஷரம் என்பது தனித்தனிப்பதமாகவும் விபக்திலோபித்தும் அதில் அக்ஷரம் என்பது அனுவாதம் என்றும் அம்ருதம் என்பது விதிக்கப்படுகிறது, என்று சொல்லப்பட்டால் அப்பொழுது விபக்திக்குலோபம் சொல்ல வேண்டிய கஷ்டமும் விதிக்கப்படுகிறதையும் அனுவதிக்கப்படுகிறதையும் மாற்றிச்சொல்லுகிற கஷ்டமும்வரும். 'க்ஷரம் என்பது அவித்யை, அம்ருதம் என்பது வித்யை' என்று அர்த்தமுள்ள வாக்யத்திலேபோல அம்ருதம் என்னும்பதமே அனுவதிக்கப்படுகிறதில்லை, க்ஷர அக்ஷர என்கிற பதங்களை ஒன்றுக்கொன்று எதிராக இருப்பதினால். ருக்குக்களில் பாதங்களின் வ்யத்யாஸத்தினால் அர்த்தங்கள் வேறு என்பது ஸம்பவிக்கக்கூடியதாக இருக்கும்பொழுது விடத்தக்கதல்ல. இப்படியாகில் க்ஷரம் என்பது, அவித்யை அம்ருதம் என்பது, வித்யை. இந்த வித்யையையும் அவித்யையையும் எவன் நியமிக்கிறானோ அவன் வேறுஎன்று அர்த்தமுள்ள மற்ற வாக்யங்களின் க்ரமமும் அநுஸரிக்கப்பட்டதாகும். அப்படிக்கில்லையாகில் தூரத்தில் அன்வயம் சொல்ல வேண்டும். ஒரு தேவன் என்கிற இடத்தில் வேறு விசேஷம் சொல்ல

சொல்லப்படுகிறான். ப்ரக்ருதியைத் தனக்கு அனுபவிக்கத்தக்க வஸ்து வாக ஹரதி அங்கீகரிக்கிறான், ஆகையினால் 'ஹர' என்னப்படுகிறான். 'அவன் காரணம், இந்த்ரியங்களுக்கு யஜமானனாகிய ஜீவனுக்கும் யஜ மானன், அவனை உண்டாக்குகிறவன் ஒருவனுமில்லை, அவனுக்கு யஜமா னனுமில்லை' என்றும், 'ப்ரக்ருதி ஜீவன் இவைகளுக்கு யஜமானன் குணங்களுக்கு மீஶ்வரன்' என்றும், 'ப்ரபஞ்சத்திற்கு யஜமானனாகியும் தனக்குத்தானே ஈஶ்வரனாகியும் நித்யனாகியும் மங்களங்களைச் செய்கிறவ னாகியும் ஸ்வபாவங்களில் மாறுதலில்லாதவனாகியு மிருக்கிறவனை' என் றும், 'எல்லாம் தெரிந்தவனாயும் ஒன்றும் தெரியாதவனாயும், ஈஶ்வர

---

வேண்டியதுமில்லை. அதினாலேயே அவனுக்கு விசேஷமான மஹிமை ஏற்படுகிறது. க்ஷரத்தையும் ஜீவாத்மாவையும் என்று அர்த்தமுள்ள வாக்யத்தில் ஆண்பாலாக அனுவதித்திருப்பதும் ஆண்பாலுள்ள 'பதத்தினால் சொல்லப்படுகிற அர்த்தத்தை அனுவாதம் செய்வதாக இருந்தால் ஸ்வாரஸ்யமாக இருக்கும். வேறு பதத்தினால் அனுவாதம் செய்திருக்கிறது என்கிற தோஷமோ, இரண்டு பக்ஷத்திலும் ஸமம். நம்முடைய பக்ஷத்திலோ ஹரஃ என்னும் பதம் ஜீவாத்மாவினுடைய கும்பலைச் சொல்லி இருக்கிறது என்று தெரிவிக்கிறதற்காகையினால் ப்ரயோஜனமும் உண்டு. அம்ருதாக்ஷரம் என்று விசேஷணத்தோடு சேர்த்துச் சொல்லி இருப்பதும் ஆத்மாவின் ஸ்வபாவத்தைத் தெரிவிக்கிறபடியினால் ப்ரயோஜனத்தோடு கூடியதே. ஆக இப்படி ஹரஃ என்னும் பதம் ப்ரக்ருதியோடுகூடச் சொல்லப்படுகிற ஜீவாத்மா வைச் சொல்லுகிறது என்பது அவசியமாக இருக்க லக்ஷணை முதலி யவைகளும் இல்லாமலிருக்க மற்ற ஶ்ருதிவாக்யம் ஸந்தர்ப்பம் முதலி யவைகளுக்கு விருத்தமாகிய ரூடிசக்தியை விட்டுவிட்டு அவயவ சக் தியினாலேற்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறது, என்பது ஐந்த்ரீ என்னும் பதத்திற்கு அர்த்தம்சொல்லுகிற நியாயத்தை அனுஸரித்துச் சொல்லவேண்டியது—என்பது. ப்ரக்ருதிஜீவன் இவர்களுக்கு ஸர்வஜ்ஞ னாக இருக்கை, அல்பம் தெரிந்தவனாக இருக்கை, நியமிக்கப்படுகிற வனாக இருக்கை, ஆகிய வ்யத்யாஸத்தையும், இரண்டும் நித்யம் என் பதையும், இரண்டு என்கிற கணக்கினாலேயே குறிப்பிட்டுச் சொல்லு கிற ஶ்ருதியைச் சொல்லுகிறார்—'எல்லாம் தெரிந்தவனாகவும்'' என்று. ஆரம்பித்து. உறக்கம், மரணம், மூர்ச்சை, ப்ரளயம், இவைகளில் ஜீவ னுக்கு ஒன்றையும் அறியாமை உண்டு. விழித்துக்கொண்டு இருக்கும் பொழுதும் கனவு காணும்பொழுதும் அறிவு சிற்சில வஸ்த்துக்களைப்

ஞயும் ஈஶ்வரனல்லாதவஞயு மிருக்கிற நித்யர்களாயுமிருக்கிற இருவர்களாயுமிருக்கிற இவர்கள்' என்றும், 'நித்யர்களாயும் அறியும் தன்மையுள்ளவர்களாயும் அனேகம் பேர்களுக்கு நித்யஞயும் அறியும் தன்மையுள்ளவஞயுமிருக்கிற எந்த ஒருவன் இஷ்டங்களைக் கொடுக்கிருனே' என்றும், 'போக்தா, போக்யம், நியமிக்கிறவன், இவர்களைத்தெரிந்து கொண்டு' என்றும், 'ஜீவாத்மாவையும் நியமிக்கிறவனையும் தனித்தனியாகத் தெரிந்துகொண்டு பிறகு அவஞல் ப்ரீதி செய்யப்பட்டவஞல் அதிஞலே மோக்ஷத்தை அடைகிருன்' என்றும், 'அவ்விருவர்களுக்குள் ஒருவன் கர்மங்களின் பலத்தை ருசியாக ஸாப்பிடுகிருன் மற்றெருவன் ஸாப்பி

---

*பற்றியது. அஜ்ஞானமோ எண்ணிறந்த வஸ்துக்களைப்பற்றியது. பகவானைவிட வேறு ஜீவர்களுக்கே, நித்யர்களாக இருக்கையும், அனேகர்களாக இருக்கையும், ஜீவன் ஈஶ்வரன் இவ்விருவர்களுக்கும் அறியும் தன்மை உண்டு என்பதும், ஈஶ்வரன் ஒருவன் என்பதும், எல்லாப்பலங்களையும் கொடுக்கிறவன் என்பதும் நித்யர்களாயும் என்கிற ஶ்ருதி வாக்யத்திஞல் ஏற்படுகிறது. நேராக பதத்திஞலேயே பேதத்தைத் தெரிந்துகொள்ளவேண்டியது என்று சொல்லுகிறதாயும் பேதத்தை அறிவதை முன்னிட்டு பகவானுடைய ப்ரீதிக்குப் பாத்ரஞவதிஞல் மோக்ஷமுண்டாகிறது, என்று சொல்லுகிறதாயுமிருக்கிற ஶ்ருதியை உதாஹரிக்கிருர்—'ஜீவாத்மாவையும்' என்று ஆரம்பித்து. ஒரே ஶரீரத்தில் ப்ரவேஶித்து இருக்கிற ஜீவன் பரமாத்மா இவர்களுக்கு கர்மங்களின் பலத்தை அனுபவிப்பதும் அனுபவிக்காமையுமாகிற வ்யத்யாஸத்தைக்காட்டுகிறஶ்ருதியைச் சொல்லுகிருர்—'அவ்விருவருக்குள்' என்று ஆரம்பித்து. ஶ்ருதியில் இருக்கிற 'அந்ய:' என்னும் பதத்திற்கு ஒருவன் என்றர்த்தம் 'ருசியாக ஸாப்பிடுகிருன்' என்று புண்யங்களின் பலத்தைமாத்திரம் சொல்லியிருக்கிறது. 'மிகவும் ப்ரகாசிக்கிருன்' என்பதற்கு மேலானவஞக ப்ரகாசிக்கிருன் என்றர்த்தம். அப்பொழுதும் அப்படிப்பட்ட ஜீவாத்மாவை நியமிக்கிறவஞக இருக்கையாகிற மேன்மை ஏற்படுகிறது, ஜ்ஞானத்திற்குச் சுருக்கம் முதலியதில்லை, என்று சொல்லப்பட்டதாகிறது. ஸத்வம் ரஜஸ்ஸு தமஸ்ஸு இந்தக் குணங்கள் நிறைந்த ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் உத்பத்தி இல்லை என்பதையும், ப்ரக்ருதியே ஜீவர்களின் கர்மங்களுக்குத் தக்கபடி மாறுதல்களை அடைகிறதாகையிஞல் ப்ரமம் முதலியவைகளுக்கு ப்ரஸ்தாவமே இல்லை, என்பதையும், பத்தர்கள் முக்தர்கள் இவர்களின் ஏற்பாட்டையும், முக்தஞகும்பொழுதும் ப்ரக்ருதியை விட்டுப் பிரிவது மாத்திரம்*

டாமல் மிகவும் ப்ரகாசிக்கிறுன்' என்றும், 'சிகப்பு நிறமுள்ளதாயும் வெளுப்பு நிறமுள்ளதாயும் கறுப்பு நிறமுள்ளதாயும் இருக்கிற தன்னைப் போன்ற அனேகம் ப்ரஜைகளை உண்டுபண்ணுகிற ஒரு நித்யமான ப்ரக்ருதியை நித்யமான ஒருவன் ப்ரீதி செய்துகொண்டு அத்துடன் கூடவே இருக்கிறுன் நித்யமான மற்றொருவன் அனுபவிக்கப்பட்ட போகங்களையுடைய இந்த ப்ரக்ருதியை விடுகிறுன்' என்றும், 'ஆதியும் அந்தமுமில்லாத அந்த ப்ரக்ருதி எல்லாவற்றையும் உண்டாக்குகிறது எல்லா ப்ராணிகளையும் காப்பாற்றுகிறது' என்றும், ஒரே மரத்தில் அழுந்தியிருக்கிற ஜீவன் தான் ஈஸ்வரனில்லாமையினுல் மோஹத்தை யடைந்தவனுய் துக்கப்படுகிறுன் தன்னைவிட வேறுகிய ஈஸ்வரனைத் தன்னிடத்தில் ப்ரீதியையுடையவனுகவும் இவ்விதமாகிய அவனுடைய மஹிமையையும் எப்பொழுது பார்க்கிறுனே அப்பொழுதே துக்கங்கள் நீங்கினவனுக ஆகிறுன்' என்றும், ஆர்த்தமுள்ள ஸ்ருதி வாக்யம் முதலியவைகள் இந்தக் கீதையிலும் 'ஃஹாஂகாரஜ-தீயஂ ெ8

---

*தான், என்பதையும், தெரிவிக்கிறுர்—'சிகப்பு நிறமுள்ளதாயும்' என்றுரம்பித்து. கீழ்ச் சொல்லிய ஸ்ருதிகளின் அர்த்தத்தை விவரிக்கிற இந்தக் கீதையிலும் ப்ரக்ருதி ஜீவன் ஈஸ்வரன் இதுகளின் பேதம் நித்யம் என்று நிரூபித்திருப்பதைக் காட்டுகிறுர்—'இந்தக் கீதையிலும்' என்றுரம்பித்து. 'ெ8ஷ்ரகூ்ருதி (என்னுடைய ப்ரக்ருதி)' என்று தனித்துச் சொல்லியிருப்பதினுல் ப்ரக்ருதிக்கும் ஜீவனுக்கும் ஈஸ்வரனைவிட பேதம் ஏற்பட்டது. 'ஊதஸூந்யா (இதைவிட வேறுகிய)' என்பதினுல் ப்ரக்ருதியைவிட ஜீவனுக்கு பேதம் ஏற்பட்டது. ஸ்ருஷ்டியும் ப்ரளயமும்—ப்ரமமும் அதின் நிவ்ருத்தியும், என்பதை விலக்குவதற்காகப் பரமாத்மாவுக்குச் சரீரமாகிய ப்ரக்ருதியின் பிரிதலும் சேருதலுமே என்று சொல்லுகிறுர்—'ஸவ-ூஹ-ூதாநி' என்றுரம்பித்து. இவ்விடத்திலும் 'ொ8ிகாஂ (என்னுடையதாகிய)' என்பது முதலியவைகளால் பேதம் வ்யக்தமாக ஏற்படுகிறது. ப்ரக்ருதிக்கும் புருஷனுக்கும் ஜங்கமம் ஸ்த்தாவரமுமாகிய அவஸ்த்தைகள் உண்டாவதற்குப் பரமாத்மாவின் ப்ரமம் காரணம் என்பதை விலக்குவதற்காகப் பரமாத்மாவின் அதிஷ்ட்டானம் காரணம் என்பதைச் சொல்லுகிறுர்—'ஃயா' என்றுரம்பித்து ஜீவர்கள் ப்ரமத்தினுலுண்டாகிறுர்கள் என்பதை விலக்குவதற்காக ப்ரக்ருதியும் ஜீவனும் விசேஷமொன்றுமில்லாமல் அநாதி என்பதைக் காட்டுகிறுர்—'ஷ்ரகூ்ருதிஂவு-ாஷஂெ8வ' என்றுரம்பித்து ப்ரக்ருதியே மாறுதல்களுக்கு நேரில் ஆதாரம் என்பதையும், ஸ்ருஷ்*

𑌭𑌿𑌨𑍍𑌨𑌾 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌰𑌷𑍍𑌟𑌧𑌾 । 𑌅𑌪𑌰𑍇𑌯𑌮𑌿𑌤𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑌾𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍇 𑌪𑌰𑌾𑌮𑍍 । 𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌾𑌂' '𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌮𑌾𑌮𑌿𑌕𑌾𑌮𑍍 । 𑌕𑌲𑍍𑌪𑌕𑍍𑌷𑌯𑍇 𑌪𑍁𑌨𑌸𑍍𑌤𑌾𑌨𑌿 𑌕𑌲𑍍𑌪𑌾𑌦𑍌 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 ॥ 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌸𑍍𑌵𑌾𑌮𑌵𑌷𑍍𑌟𑌭𑍍𑌯 𑌵𑌿𑌸𑍃𑌜𑌾𑌮𑌿 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 । 𑌭𑍂𑌤𑌗𑍍𑌰𑌾𑌮𑌮𑌿𑌮𑌂 𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌮𑌵𑌶𑌂 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌰𑍍𑌵𑌶𑌾𑌤𑍍 ॥' '𑌮𑌯𑌾𑌧𑍍𑌯𑌕𑍍𑌷𑍇𑌣 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌃 𑌸𑍂𑌯𑌤𑍇 𑌸𑌚𑌰𑌾𑌚𑌰𑌮𑍍 । 𑌹𑍇𑌤𑍁𑌨𑌾𑌨𑍇𑌨 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌜𑌗𑌦𑍍𑌵𑌿𑌪𑌰𑌿𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ।' '𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑌂 𑌚𑍈𑌵 𑌵𑌿𑌦𑍍𑌧𑍍𑌯𑌨𑌾𑌦𑍀 𑌉𑌭𑌾𑌵𑌪𑌿 ।' '𑌮𑌮 𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌸𑍍𑌮𑌿𑌨𑍍𑌗𑌰𑍍𑌭𑌂 𑌦𑌧𑌾𑌮𑍍𑌯𑌹𑌮𑍍 । 𑌸𑌂𑌭𑌵𑌃 𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌤𑌤𑍋 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. லோகங்களுக் காரணமாயும் பெரிதாயும் ப்ரம்மம் என்று சொல்லப்பட்டதாயும் எனக்குச்சேஷமாயும் பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மமாகிய அசேதன வஸ்து எதுவோ அதில் சேதனமாகிய கர்ப்பத்தைச் சேர்க்கிறேன் அந்த என்னுடைய ஸங்கல்ப்பத்தினால் செய்யப்பட்ட சே-

---

*டிக்குக் காரணமாகிய ப்ரக்ருதியினுடையவும் ஜீவனுடையவும் ஸம்பந்தம் பரமாத்மாவினுடைய ஸங்கல்ப்பத்தினாலுண்டாகிறது என்பதையும் அதினாலேயே லோகத்தின் ஸ்ருஷ்டி உண்டாகிறது என்பதையும் இந்த மாதிரியாக மூன்று வஸ்துக்களுக்கும் ஒன்றுக்கொன்று பேதத்தையும் சொல்லுகிறார்—'𑌮𑌮𑌯𑍋𑌨𑌿:' என்றாரம்பித்து. லோகத்திற்குக்காரணமாக இருக்கையாவது லோகத்தை ஸ்ருஷ்டிக்கிறவனாகிய பகவான் அதிஷ்டாதாவாகச் சேர்ந்திருத்தல், இதையே சொல்லுகிறார்—'லோகத்திற்குக் காரணமாகிய' என்று. முக்யமான ப்ரம்மம் '𑌮𑌮 (என்னுடைய)' என்று வேறாகச் சொல்லப்படுகிறபடியினால் லோகத்திற்குக் காரணம் என்று சொல்லியிருப்பதினாலும் '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮' என்னும் பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ப்ரக்ருதி என்றுபேருடைய' என்று. சேதனங்கள் கலந்த ப்ராணிகள் உண்டாவதற்குக் காரணமாக இருக்கிறபடியினாலும் ப்ரக்ருதியில் வைக்கப்படுகிறபடியினாலும் ஏற்பட்ட கர்ப்பம் என்னும் பதத்தினர்த்தத்தைச் சொல்லுகிறார்—'சேதனம் என்றுபேருடைய' என்று. '𑌦𑌧𑌾𑌮𑌿' என்று சேர்த்தல் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'சேர்க்கிறேன்' என்று. இதற்கு விஸ்தாரமான அர்த்தம் இந்த ஶ்லோகம் க்ரமமாகவருகிற இடத்தில் சொல்லப்படப்போகிறது. இப்படியே அநேக இடங்களில் ப்ரக்ருதி, ஜீவன், லோகங்களின் ஸ்ருஷ்டி, முதலியவைகளைச் சொல்லும்பொழுது ஜீவாத்மாக்களைப்பற்றிய ப்ரமத்தையும் லோகம் பொய் என்பதையும் தெரிவிக்கக்கூடிய அடையாளம் மூன்றும் காணப்*

தனத்தினுடையவும் அசேதனத்தினுடையவும் சேர்க்கையினாலேயே தேவதை முதலாக ஸ்த்தாவரம் வரையிலுள்ள அசேதனங்களுடன் சேர்ந்த எல்லா ப்ராணிகளுடையவும் உத்பத்தி உண்டாகிறது, என்று அர்த்தம். ஶ்ருதியிலும் 'அந்தப் பகவானிடத்திலிருந்து பேர் ரூபம் இவைகளையுடையதாய் ஜீவர்களாலனுபவிக்கப்படுகிற ப்ரம்மம் (ப்ரக்ருதி) உண்டாகிறது' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் பஞ்ச பூதங்களின் ஸூக்ஷ்மமாகிய ப்ரக்ருதி ப்ரம்மம் என்று சொல்லப்படுகிறது. இப்படி போக்தாவாகவும், போக்யமாகவுமிருக்கிற எல்லா அவஸ்த்தைகளையுமுடைய சேதனமும், அசேதனமும் பரமபுருஷனுக்குச் ஶரீரமாகையினாலும், அவனால் நியமிக்கக்கூடியதாகையினாலும், அவனை விட்டுப் பிரியாதவை என்பதையும், பரமபுருஷன் அவைகளுக்கு ஆத்மா என்பதையும், சில ஶ்ருதிகள் சொல்லுகின்றன. அவை எவை என்னில், 'எவன் ப்ரதிவியில் இருந்துகொ

*டவில்லை என்றபிப்ராயம். இவ்விதமாக சேதனத்திற்கும் அசேதனத்திற்கும் ஈஶ்வரனுக்கும் ஸ்வரூபங்களின் பேதம் தார்க்கிகர் முதலியவர்களினாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது ஆகையினால் அதைவிட விஶேஷமானதும் கடக ஶ்ருதிகளில் ஏற்பட்டதுமாகிய சரீரமாகவும் ஆத்மாவாகவும் இருக்கையாகிற ஸம்பந்தத்தை ஒன்று சேர்த்துச்சொல்லியிருப்பது முக்யமென்றேற்படுவதற்காகச் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. ஒன்றாகச்சேர்ந்து கொண்டிருக்கும் அவஸ்த்தையிலும் இவை அவனுக்குச் சரீரம் என்பது 'எவனுக்குத்தமஸ்ஸு சரீரமோ, எவனுக்கு ம்ருத்யு சரீரமோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளாலேற்பட்டது, என்று தெரிவிப்பதற்காக—'எல்லா அவஸ்த்தைகளையும் உடையதாக இருக்கிற' என்று சொல்லப்பட்டது. ப்ரத்யக்ஷம் முதலியவைகளாலறியப்படாததாகிய லோகத்திற்கும் ப்ரம்மத்திற்குமிருக்கிற சரீரமாகவும் ஆத்மாவாகவும் இருக்கையாகிற ஸம்பந்தம் உண்மையை உபதேசிப்பதில் தாத்பர்யத்தையுடைய அநேக ஶ்ருதிகளில் ஏற்பட்டிருக்கிறபடியினால் விடத்தக்கதென்று ஸந்தேஹிக்கத்தக்கதல்ல அதற்கு அநுகுணமாக சரீரத்தின் லக்ஷணம் சொல்லிக்கொள்ளவேண்டியது என்று தாத்பர்யம். அந்தர்யாமி ப்ராம்மணத்தில் எல்லா அவஸ்த்தைகளையுமுடைய ப்ரக்ருதி ஜீவன் இவைகள் ஸமமாகப் பரமாத்மாவுக்குச் சரீரம் என்பதைக் காட்டுகிறார்—'எவன் ப்ரதிவியிலிருந்துகொண்டு' என்றாரம்பித்து. இந்த அர்த்தத்தையே சிலவற்றை மாற்றியும் சிலவற்றைச் சேர்த்தும் நிருபிக்கிற ஸுபாலோபநிஷத்தினால் அந்தர்யாமி ப்ராம்மணத்தில் சொல்லப்படாத கர்மங்களில்லாதவனாக இருக்கை முதலிய குணங்களின் ஸம்பந்தத்தையும்,*

ண்டு ப்ரதிவிக்கு உள்ளே இருக்கிறனோ, எவனை ப்ரதிவி தெரிந்து கொள்ளவில்லையோ, எவனுக்கு ப்ரதிவி ஶரீரமோ, எவன் ப்ரதிவியை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறனோ' என்று அர்த்தமுள்ள வாக்யம் ஆரம்பித்து 'எவன் ஆத்மாவிலிருந்துகொண்டு, ஆத்மாவினுள்ளே இருக்கிறனோ, எவனை ஆத்மா தெரிந்து கொள்ளவில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறனோ, அழிவில்லாத அவன் உனக்கும் அந்தர்யாமியாகிய ஆத்மா' என்றும், அப்படியே 'எவன் ப்ரதிவிக்குள்ளே ஸஞ்சரித்துக்கொண்டு இருக்கிறனோ, எவனுக்கு ப்ரதிவி ஶரீரமோ, எவனைப்ரதிவிதெரிந்துகொள்ளவில்லையோ,' என்று அர்த்தமுள்ள வாக்யம் முதலாக 'எவன் அக்ஷரத்திற்குள்ளே ஸஞ்சரிக்கிறனோ, எவனுக்கு அக்ஷரம் ஶரீரமோ, எவனை அக்ஷரம் தெரிந்து கொள்ளவில்லையோ, எவன் ம்ருத்யுவுக்குள்ளே ஸஞ்சரித்துக்கொண்டு இருக்கிறனோ, எவனுக்கும்ருத்யு ஶரீரமோ, எவனை ம்ருத்யுதெரிந்து கொள்ளவில்லையோ, இவன் எல்லா ப்ராணிகளுக்கும் அந்தராத்மாவாகவும் கர்மங்களில்லாதவனுவும் திவ்யனுகவுமிருக்கிற ஒரு தேவனுகியநாராயணன்.' இவ்விடத்தில் ம்ருத்யுவென்னும் பதத்தினுல் தமஸ் என்று சொல்லப்படுகிற ஸூக்ஷ்மமான அவஸ்த்தையை உடைய அசேதன வஸ்து சொல்லப்படுகிறது. இந்த உபநிஷத்திலேயே அவ்யக்தம் அக்ஷரத்தில் லயிக்கிறது,

---

*ஒருவனுக இருக்கையையும், நாராயணனுக இருக்கையையும், விசதமாகச் சொல்லுகிறுர்—'எவன்' என்றுரம்பித்து. இவ்விடத்தில் ம்ருத்யு என்னும் பதம் வேறு வாக்யத்தில் இதற்குச்சமான இடத்தில் சொல்லியிருப்பதை அனுஸரித்து மிகவும் ஸூக்ஷ்மமான தசையையுடைய மூலப்ரக்ருதியைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறுர்—'இவ்விடத்தில்' என்றுரம்பித்து. இவ்விடத்தில் என்பதற்கு அக்ஷரத்தைச் சொல்லியிருக்கும் வரிசைக்கு மேற்பட்ட வரிசையில் என்றர்த்தம். ப்ரகாசத்திற்கு விரோதமாகிய தமஸ்ஸை (இருட்டை) விலக்குவதற்காக 'ஸூக்ஷ்மமான அவஸ்த்தையையுடைய அசேதனவஸ்து' என்று சொல்லப்பட்டது. 'இந்த உபநிஷத்திலேயே' என்பதினுல் சீக்கிரத்தில் ஞாபகத்துக்கு வரும் என்று காட்டப்பட்டது. ஆத்மாவின் லக்ஷணத்தைச் சொல்லிக்கொண்டு ஆத்மாவாக இருக்கையை நிரூபிக்கிற தைத்திரீய உபநிஷத்தின் வாக்யத்தைச் சொல்லுகிறுர்—'எல்லா ஜனங்களுக்கும்' என்றுரம்பித்து. ராஜாவையும் ஆகாசத்தையும் விலக்குகிற உள்ளே நுழைந்திருப்பதினுலும் நியமிக்கிறதினுலும் சரீரம் என்பது அறிந்தது. கீழ்ச்சொல்லிய பேதஶ்ருதியையும் கடஶ்ருதியையும் அனுஸரித்து ஒன்று சேர்த்துச் சொல்லியிருக்கிறஶ்ருதிகளினர்த்தத்தையும்*

அக்ஷரம் தமஸ்ஸில்லயிக்கிறதுஎன்று சொல்லி இருக்கிறபடியினால் 'ஜனங்களுக்கு உள்ளே நுழைந்துகொண்டு நியமிக்கிறவனாகவும், எல்லாவற்றிற்கும் ஆத்மாவாகவும் இருக்கிறவன்'என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யங்கள் இப்படி எல்லா அவஸ்த்தைகளை யுடையவைகளாக இருக்கிற சேதனவஸ்துவையும் அசேதன வஸ்துவையும் சரீரமாக உடையவனாகையினால்அவைகளை விஷேஷணமாக உடைய பரமாத்மாவே கார்யதசையையும் காரணதசையையும் உடைய லோகங்களாக இருக்கிறான் என்றிந்த அர்த்தத்தைத் தெரிவிப்பதற்காகச் சில ஶ்ருதிகள் கார்யதசையையும் காரணதசையையும் உடையலோகமும் அவனே என்று சொல்லுகின்றன. அவை எவை என்னில் 'ஸோமத்தின் ரஸத்தைப் பானம் செய்யத் தகுந்தவனே இந்த லோகம் ஸ்ருஷ்டிக்கு முன்னே இரண்டாவது வஸ்துவில்லாமல் ஒன்றாகவேயிருக்கிற ஸத்தாகவே இருந்தது அந்த ஸத்து நான் அனேக வஸ்துக்களாகவேண்டும் (அதற்காக) உண்டாகக் கடவேன் என்று ஸங்கல்பித்தது' என்றாரம்பித்து 'ஸோமத்தின் ரஸத்தைப் பானம் செய்யத்தகுந்தவனே இந்த ப்ரஜைகளெல்லாம் ஸத்தையே காரணமாக உடையவைகள் ஸத்தையே ஆதாரமாக உடையவைகள் ஸத்தையே லயிக்குமிடமாக உடையவைகள் இந்த எல்லாமும் இதையே ஆத்மாவாக உடையவைகள் அது ஸத்யமானது அவன் ஆத்மா

---

*முக்யமாகவேசொல்லுகிறார்—'இப்படி எல்லா அவஸ்த்தைகளையுமுடையவைகளாக இருக்கிற' என்றாரம்பித்து. இவ்விடத்தில்இரண்டுவிதமான அவஸ்த்தைகளையுமுடையதாயும் பரமாத்மாவுக்கு விஶேஷணங்களாயுமிருக்கிற வஸ்துக்கள் ஒன்றென்பது சேர்த்துச் சொல்லியிருக்கும் ஶ்ருதிவாக்யங்களின் தாத்பர்யம் என்றர்த்தம். 'இந்த அர்த்தத்தைத் தெரிவிப்பதற்காக' என்பதற்கு மற்ற ஶ்ருதிகளுக்கும் அந்தந்த ஸந்தர்ப்பங்களுக்கும்தங்கள் வார்த்தைகளுக்கும் ப்ரத்யக்ஷத்திற்கும் விரோதமான அர்த்தத்தைத் தெரிவிப்பதற்காக இல்லை, என்றர்த்தம். சாந்தோக்யோபநிஷத்தைப்போல சேர்த்துச்சொல்லியிருப்பதையும் அது சேதனத்திலும் உள்ளே நுழைந்திருப்பதைக் காரணமாக உடையது என்பதையும் தைத்திரீய உபநிஷத்தில் காட்டுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. ஶ்ருதியிலிருக்கிற 'தப:' என்னும் பதத்திற்கு ஆலோசனை என்றர்த்தம், 'ப்ரம்மம் தபஸ்ஸினால் வ்ருத்தியடைகிறது' என்றர்த்த முள்ள வாக்யத்திலிருக்கிற 'தப:' என்கிற பதத்திற்கு எவனுடைய தபஸ்ஸு ஜ்ஞானரூபமோ என்று வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்பதினால். பேத ஶ்ருதி அபேத ஶ்ருதி இவைகளுக்கு விரோதமில்லை என்பது வேறு ஸந்தர்ப்பத்தில் சொல்லியிருக்கிற கடகஶ்ருதி*

ஶ்வேதகேதுவே நீயும் அதுவாகிறுப்' என்றும், 'அந்தப் புருஷன் நான் அனேக வஸ்துக்களாக ஆகவேண்டும் அதற்காகப் பிறக்கக் கடவேன் என்று ஸங்கல்பித்தான் அந்தப் புருஷன் ஆலோசனை செய்தான் அவன் ஆலோசனை செய்து இந்த எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தான்' என்றுரம்பித்து 'சேதனமும் அசேதனமுமாகியும் விகாரமற்றதாகவே இருந்தது என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்கள் இதிலும் மற்ற ஶ்ருதிகளில் ஏற்பட்ட சேதனம் அசேதனம் பரமாத்மா இவைகளினுடைய ஸ்வரூபங்களின் வ்யத்யாஸம் ஞாபகப்படுத்தப்பட்டது. 'நான் இந்த மூன்று பூதங்களையும் இந்த ஜீவனுகிய ஆத்மாவினுல் அனுப்ரவேசித்துப் பேரையும் ரூபத்தையும் ஏற்படுத்துகிறேன்' என்றும், 'அதை ஸ்ருஷ்டித்து அதையே அனுப்ரவேசித்தான். அதை அனுப்ரவேசித்து ஜ்ஞானஸ்வரூபமாய் விகாரமற்றதாய் ஸத்யம என்று சொல்லப்பட்ட சேதனமாயும் ஜ்ஞானஸ்வரூபமல்லாததாய் விகாரத்தை அடையக்கூடியதாய் அந்ருதம் என்று சொல்லப்பட்ட அசேதனமாய் ஆகியும் தான் விகாரமில்லாதவனுக இருந்தான்'

---

*களாலே மாத்திரம் ஏற்படவில்லை பின்னை எப்படி யென்னில் இந்த ஸந்தர்ப்பத்திலிருக்கிற வாக்யங்களாலும் ஏற்படுகிறது என்று சொல்லுகிறுர்—'இதிலும்' என்றுரம்பித்து. சேர்த்துச்சொல்லியிருக்கிற சாந்தோக்யோப நிஷத்திலும் தைத்திரீயோப நிஷத்திலுமிருக்கிற ஸந்தர்ப்பங்களிலேயே, என்றர்த்தம். 'ஜீவனுகிய ஆத்மாவினுல்' என்பதற்கு ஜீவனுகிய என்னுல் என்றர்த்தம். 'என்னுல் ஸிம்ஹமாக இருந்து வெகு பேர்கள் ஸாப்பிடப்பட்டார்கள்' என்பதைப்போல மூன்று பூதங்களையும் ஜீவனுகிய என்னுல் உள்ளே நுழைந்து என்பதினுல் அசேதனங்களுக்குள்ளே நுழைந்திருப்பது வ்யக்தமாகச் சொல்லப்படுகிறது. ஜீவனை ஒன்று சேர்த்துமாத்திரம் சொல்லப்பட்டது, அதுவும் உள்ளே நுழைந்திருப்பதினுல் ஏற்பட்டது, என்பது தைத்திரீய உபநிஷத்தில் வ்யக்தமாகச்சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்—'அதை ஸ்ருஷ்டித்து' என்றுரம்பித்து. இப்படி ஜீவனைச் சரீரமாக உடைய பரமாத்மா ப்ரவேசித்திருப்பதினுல் பேர் ரூபம் இவைகள் உண்டாயிருக்கிறது என்பதும், பேர்கள் பரமாத்மா வரையிலும் சொல்லுகின்றன என்பதும், ஆகையினுலேயே சேர்த்துச்சொல்லியிருப்பது முக்யம் தான் என்பதும் ஏற்பட்டது. இத்துடன் ஒரே அபிப்ராயத்தை உடையதாகையினுலும் எல்லாச் சாகைகளிலும் சொல்லியிருக்கிற அர்த்தம் ஒன்று என்கிறந்யாயத்தினுலும் சேதனத்திலும் அசேதனத்திலும் ப்ரவேசித்திருப்பதைச் சொல்லாத இன்னும் சில ஸந்தர்*

என்றர்த்தமுள்ள வாக்யமும் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட பேரையும் ரூபத்தையும்உண்டாக்குவதே—'இது முன்புஅவ்யாகிருதமாக இருந்தது, அது பேராலும் ரூபத்தினாலும் வ்யாகரணம் செய்யப்படுகிறது' என்கிற இடத்திலும் சொல்லப்பட்டது. ஆகையினால் ஸ்தூலங்களான சேதநாசேதன வஸ்துக்களைச் சரீரமாக உடைய பரமாத்மா கார்ய தசையையுடையவன், ஸூக்ஷ்மங்களான சேதநா சேதனவஸ்துக்களைச் சரீரமாக உடைய பரமாத்மா காரணதசையையுடையவன், ஆகையினால் காரணத்தைவிடக் கார்யம் வேறல்ல, ஆகையினாலே ஒன்றைத் தெரிந்து கொண்டதினால் எல்லாந்தெரிந்து கொள்ளப்பட்டதாகிறது, என்கிற அபி

---

*ப்பங்களில் பேர் ரூபம் இவைகளை உண்டாக்கினதைச் சொல்லியிருப்பதும் இவ்விதமாக அனுப்ரவேசித்திருக்கிறான் என்கிற அபிப்ராயத்தை முன்னிட்டுக்கொண்டதே, என்று சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட' என்றாரம்பித்து. இது முதல் முன் சொல்லிய ஆக்ஷேபங்களுக்கு க்ரமமாகப் பரிஹாரம் சொல்லப்படுகிறது—எப்படி என்னில் காரணத்தைத் தெரிந்து கொண்டதினால் கார்யங்களும் அறியப்பட்டதாகிறது என்பதாவது—கார்யம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட வஸ்துவே காரணத்தைப்பற்றிய அறிவினாலும் அறியப்பட்டதாயிருக்கை. முன்பு உட்கார்ந்துகொண்டிருந்த தேவதத்தனைப் பார்த்துப் பிறகு அவனையே நடந்துகொண்டிருக்கும்பொழுதும் பார்த்து, இவன் முன்னமே என்னால் பார்க்கப்பட்டான் என்றல்லவோ சொல்லுகிறான். ஆகையினால் கார்யதசை முன்பு அறியப்படாமற் போனாலும், இப்படிச் சொல்லியிருப்பது முக்யமல்ல, என்பதில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினால் ஸ்தூலங்களான' என்றாரம்பித்து. மற்றவர்களின் பக்ஷத்திலோ இதெல்லாம் பொருந்தாது என்றபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. எப்படி என்னில் ஒரு விசேஷங்களுமில்லாத ஒரு வஸ்துவைத் தெரிந்துகொண்டதினால் எல்லாம் அறியப்பட்டதாகிறது, என்கிற இடத்தில் அறியவேண்டியதாகச் சொல்லப்படுகிற எல்லா என்கிற பதத்திற்கு அர்த்தமாகிய வஸ்துவே இல்லாமையினாலும், ஸத்யமாகிய வஸ்துவும் பொய்யாகிய வஸ்துவும் ஒன்றாகவேண்டி வருகிறது முதலியவைகளினும்,, எல்லாம் தெரிந்துகொள்ளப்பட்டதாகிறது என்பது பொருந்தாது. எல்லாம் பொய் என்று தெரிந்துகொள்ளப்பட்டதாகிறது என்று அர்த்தம் சொல்லில் இல்லாத பதத்தை வைத்துக் கொள்ளுவது முதலிய தோஷங்கள் வருகின்றன. அவித்யையோடு கூடிய ப்ரம்மம் ஒன்றைத் தெரிந்துகொண்டதினால் அதின் கார்யமாகிய ப்ரபஞ்சம் அறியப்படுகிறது என்னில் அதிக தூரம் வ்யத்யாஸமில்லா*

ப்ராயமும் மிகவும் பொருத்தமுள்ளது. 'நான் இந்த மூன்று பூதங்களையும் இந்த ஜீவனாகிய என்னாலனுப்ரவேசித்து பேர்களையும்,ரூபங்களையும் வ்யாகரணம் செய்கிறேன்' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் மூன்று பூதங்களை என்று எல்லா அசேதன வஸ்துக்களையும் குறித்துக்காட்டி, அவைகளில் தன்னை ஆத்மாவாக உடைய ஜீவனுடைய அனுப்ரவேசத்தினால் பேர் ரூபங்கள் இவைகளை வ்யாகாரணம் செய்கிறேன் என்று சொல்லியிருக்கிறபடியினால் அர்த்தங்களைச் சொல்லுகிற எல்லாப்பதங்களும் அசேதனம் ஜீவன் இவைகளுடன் சேர்ந்த பரமாத்மாவையே சொல்லுகின்றன. ஆகையினால் காரணதசையையுடைய பரமாத்மாவைச் சொல்லுகிற பதத்தோடு கார்யதசையையுடைய பரமாத்மாவைச் சேர்த்துச்சொல்லியிருப்பது முக்யமாகவே ஏற்பட்டது. ஆகையினால் ஸ்தூலங்களாயும்

---

*மல் நம்முடைய பக்ஷத்தில் சேர்ந்ததாகிறது, எல்லா ப்ரமாணங்களுக்கும் விரோதம் வருகிறது அதிகம். இப்படியே மற்ற இரண்டு பக்ஷங்களிலும், ஸூக்ஷ்மமாகிய சேதன சக்தியுடன் கூடியிருப்பதை விட முடியாதாகையினால் சேர்ந்ததாகிய ஒரு வஸ்துவை அறிந்ததனால் அதின் கார்யமாகிய எல்லாம் அறியப்பட்டதாகிறது என்ற அர்த்தம் சொல்லவேண்டும். அப்படியாகில் ப்ரம்மம் விகாரங்களில்லாதது, தோஷங்களில்லாதது,என்று சொல்லுகிற ஶ்ருதிகளுக்கு விரோதமில்லாத நம்முடைய பக்ஷமே மிகவும் யுக்தமானது, என்பது. மற்றவர்களுடைய பக்ஷத்தில் சேர்த்துச் சொல்லியிருப்பது லக்ஷணையாக என்பது அவர்களாலேயே ஒப்புக்கொள்ளப்பட்டது, ஆகையினால் அந்த விஷயத்தில் ஒன்றும் சொல்லவேண்டியதில்லை என்று மனதில் வைத்துக் கொண்டு தன்னுடைய பக்ஷத்தில் சேர்த்துச் சொல்லியிருப்பது முக்யம் என்பதைச் சொல்லுகிறார்—'நான் இந்த மூன்று பூதங்களையும்' என்றாரம்பித்து. வேறு ஸந்தர்ப்பங்களில் சொல்லப்பட்ட தத்வங்களும் சுருக்கிச் சொல்லியிருக்கிற இடத்தில் வேறு சாகைகளில் சொல்லியிருப்பதைப்போலவே சேர்த்துக்கொள்ளத் தக்கவைகள் என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'மூன்று பூதங்களை என்று எல்லா அசேதன வஸ்துக்களையும் குறித்துக்காட்டி' என்று. லோகங்களுக்கும் ப்ரம்மத்திற்கும் ஸ்வரூபத்தில் அதிகமான வ்யத்யாஸமிருந்தபோதிலும் அவைகள் ஒன்று சேர்ந்தே இருப்பதினால் கார்யமும் காரணமுமாய் இருப்பது ஒரேவஸ்து என்றேற்படுகிறபடியினால் லோகம் ப்ரம்மத்தை உபாதானகாரணமாக உடையது என்பது யுக்தம்,என்றுசொல்லுகிறார்—'ஆகையினால் ஸ்த்தூலங்களாயும்' என்றாரம்பித்து. 'ஆகையினால்' என்பதற்கு ஒன்று சேர்த்துச் சொல்லியிருப்பது முக்யமாகையி*

ஸூக்ஷ்மங்களாயு மிருக்கிற சேதனங்களையும் அசேதனங்களையும் விசேஷணங்களாக உடைய ப்ரம்மமே கார்யமும் காரணமும், ஆகையினால் ப்ரம்மத்தையே உபாதானகாரணமாக உடையதுலோகம். ஸூக்ஷ்மங்களான சேதனு சேதன வஸ்துக்களைச் சரீரமாக உடைய ப்ரம்மமே லோகத்திற்கு உபாதான காரணமாகையினால் லோகம் ப்ரம்மத்தை உபாதான காரணமாக உடையதாக இருந்தபோதிலும் இந்த மூன்று வஸ்துக்களும் சேர்ந்து காரணமாகையினால் சேதனு சேதன வஸ்துக்களுக்கும் ப்ரம்மத்திற்கும் ஸ்வபாவங்கள் கலக்காமலிருப்பதும் யுக்தமாகிறது. எப்படி என்னில் சித்திர வர்ணமுள்ள துணி வெளுப்பு சிவப்பு கறுப்பு நிறமுள்ள நூல்களைக்காரணமாக உடையதாக இருந்தபோதிலும் அந்தந்த நூல்கள் சேர்ந்திருக்குமிடத்தில் அந்தந்த நிறமுள்ளதாகிறது ஆகையினால் கார்யதசையிலும் வர்ணங்கள் ஒன்றுக்கொன்று எப்படிக்கலப்பதில்லையோ அப்படியே லோகம், சேதனம், அசேதனம், ஈஶ்வரன், இவைகளின் சேர்க்கையைக் காரணமாக உடையதாக இருந்தபோதிலும் கார்யதசையிலும் போக்தாவாக இருக்கை, போக்யமாக இருக்கை, நியமிக்கிறவனாக இருக்

---

*னால் என்றர்த்தம். முன்பிருந்ததே கார்யதசையையடைகிறது என்று சொல்லுவதற்கும் விரோதமில்லை என்பதும் தானாகவே ஏற்பட்டது என்றபிப்ராயம். உபாதான காரணமாகும் தசையில் ஒன்று சேர்ந்திருப்பதினால் உண்டாகிய, ஸ்வபாவங்கள் கலக்கவேண்டிவரும் என்கிற ஆக்ஷேபத்தைப்பரிஹரிக்கிறார்--'ஸூக்ஷ்மங்களாகிய' என்றாரம்பித்து. பாலனாக இருந்தவன் யுவாவாகும்பொழுது பாலசரீரத்திற்கும் அதற்கு அபிமானியாகிய ஜீவனுக்கும் ஸ்வபாவங்கள் எப்படிக் கலப்பதில்லையோ, அப்படியே இவ்விடத்திலும், என்கிற அபிப்ராயத்தினால் 'சேர்ந்து உபாதான காரணமாகையினால்' என்று சொல்லப்பட்டது. இவைகள் ஒரேகார்யத்தை உண்டாக்குகிறபடியினால் கார்யதசையில் ஸ்வபாவம் கலக்கவேண்டி வருகிறது என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார் —'வெளுப்பு' என்றாரம்பித்து. வெளுப்பு கறுப்பு சிவப்பு நிறமுள்ள நூல்களாலுண்டாக்கப்பட்ட துணியைத் தனித்து வெளுப்புநிறமுள்ள நூல்களோடாவது கறுப்பு நிறமுள்ள நூல்களோடாவது ஒன்று சேர்த்துச் சொல்லுவது காணப்படவில்லை. பொதுவாக நூல்களை துணி என்று மாத்திரம் சொல்லப்படுகிறது; ஆகையினால் இவ்விடத்திலும் ப்ரக்ருதி, ஜீவன், ஈஶ்வரன், இவைகளின்சேர்க்கையினாலுண்டாக்கப்பட்ட லோகத்தைத் தனித்து ஈஶ்வரனோடு சேர்த்துச் சொல்லியிருப்பது பொருந்தாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகி*

கை, ஆகிய ஸ்வபாவங்கள் கலக்கிறதில்லை. பிரிந்திருக்கக்கூடிய நூல்கள் புருஷனுடைய இச்சையினால் சில ஸமயங்களில்சேர்ந்துகொண்டு காரண மாகவும் கார்யமாகவும் இருக்கின்றன. இவ்விடத்திலோவெனில் எல்லா அவஸ்தைகளையு முடைய சேதனசேதன வஸ்துக்கள் பரமாத்மாவுக்குச் சரீரங்களாகையினால் அவனுக்கு விசேஷணங்களாக இருந்துகொண்டே வஸ்துக்களாகையினால் அவைகளை விசேஷணங்களாக உடைய பரமாத்மாவே காரணமும், கார்யமும், அவனே எப்பொழுதும் எல்லாப் பதங்களினாலும் சொல்லப்படுகிறான், என்பது விசேஷம். ஸ்வபாவங்கள் வெவ்வேறு என்பதும் அவைகள் ஒன்றோடொன்று கலப்பதில்லை என்பதும் அங்கும் இங்கும் ஸமம். இப்படியாகையினால் பரப்ரம்மம் கார்யவஸ்

---

றார்—'பிரிந்திருக்கக்கூடிய' என்றாரம்பித்து. இதின்கருத்தாவது— எல்லா விதத்தாலும் ஸமானம் என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு நூல்களையும் துணியையும் உதாஹரணமாகச் சொல்லியிருக்கவில்லை, பின்னை எப்படி என்னில் ஸ்வரூபத்தி மிகவும் வெவ்வேறாகிய வஸ்துக்கள் ஒன்றுசேர்ந்து கார்யமாகும் தசையிலும் ஸ்வபாவம் கலக்கிறதில்லை என்பதை மாத்திரம் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லியிருக்கிறது. சேர்த்துச்சொல்லுவதோவெனில் பதங்கள் ஒரே விசேஷ்யத்தில் முடிவுபெறுவதற்குக் காரணமாகிய விசேஷணங்களாகவும் விசேஷ்யமாகவும் இருக்கை எந்த இடத்திலிருக்கிறதோ அந்த இடத்தில் ஸம்பவிக்கும் வேறு இடத்தில் ஸம்பவிக்காது, என்பது விசேஷம். ஆனால் பொதுவானது எது, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக முன் சொன்ன உதாஹரணத்திலிருந்து க்ரஹித்துக்கொள்ளக்கூடிய பாகத்தைச் சொல்லுகிறார்—'ஸ்வபாவம் வெவ்வேறு என்பதும்' என்று ஆரம்பித்து. உபாதான காரணமாகையினாலே தானேகார்யமாக மாறின போதிலும் விகாரமற்றது என்று சொல்லுகிற ஶ்ருதிக்கு விரோத மில்லை என்று சொல்லுகிறார்—'இப்படியாகையினால்' என்று ஆரம்பித்து. இப்படியாகையினால் என்பதற்குசேதனசேதனவஸ்துக்களுடன் சேர்ந்தே உபாதான காரணமாகையினாலும், எப்பொழுதும் அவைகள் ஒன்றோடொன்று கலக்காத ஸ்வபாவங்களை யுடையவைகளாகையா லும் என்றர்த்தம். விகாரங்களற்றது என்று சொல்லுகிற ஶ்ருதி ஸ்வரூபத்தைப்பற்றியது, உபாதான காரணம் என்றும், கார்யம் என்றும், சொல்லுகிற ஶ்ருதி சேதனசேதனங்களுடன் சேர்ந்த ப்ரம்மத்தைப் பற்றியது ஆகையினால்அவைகளுக்கு ஒன்றுக்கொன்று விரோதமில்லை. ஸ்வரூபமே மாறுகிறது என்கிற பக்ஷத்தில் விகாரங்களற்றது என்கிற ஶ்ருதிக்கு ஒருவிஷயமுமில்லை, என்று தாத்பர்யம். நாம் ஸ்வரூபத்தில்

துக்களுக்குள் நுழைந்திருந்தபோதிலும், ஸ்வரூபத்திற்கு மாறுதலில்லாமையினால் விகாரமற்றது, என்பதும் யுக்தம் தான். ஸ்த்தூலமான அவஸ்த்தையோடு கூடியதாயும் பேர் ரூபம் இவைகளால் பிரிக்கப்பட்டதுகளாயுமிருக்கிற சேதனாசேதன வஸ்துக்களுக்கு ஆத்மாவாகஇருப்பதினால் கார்யமாகஇருப்பது முசிதம்தான். வேறு அவஸ்த்தையைஅடைவதுதான் கார்யமாக இருக்கை. குணங்களற்றது, என்று சொல்லி இருப்பதும் பரப்ரம்மத்திற்குக் கெட்ட குணங்களின் ஸம்பந்தமில்லாமையினால் பொருத்தமுடையதுதான். 'கர்மங்களில்லாதவன் கிழத்தனமில்லாதவன்,மரணமில்லாதவன், துக்கமில்லாதவன், பசி இல்லாதவன், தாஹமில்லாதவன்,' என்று அர்த்தமுள்ள வாக்யத்தினால் கெட்ட குணங்களை மறுத்து 'ஸத்ய

---

*ஒரு பாகத்திலாவது விகாரம் உண்டு என்று சொல்லவில்லையல்லவா என்கிற அபிப்ராயத்தினால்* 'மிகவும் பொருத்தமுடையது' *என்று சொல்லப்பட்டது. விகாரங்களில்லாமலே கார்யமாகும் விதத்தைச் சொல்லுகிறார்*—'ஸ்த்தூலமான அவஸ்த்தையோடு கூடினதாயும்' *என்றாரம்பித்து.* 'ஆத்மாவாக இருப்பதினால்' *என்பதற்கு அப்பொழுதிருக்கிற அந்தந்த வஸ்துக்களைத்தரிப்பதும் நியமிப்பதுமாகிய அவஸ்த்தைகளே கார்யமாக இருக்கை. பேர் ரூபம் இவைகளை வ்யாகரணம் செய்தது அந்தர்யாமி வரையிலும்என்றும் ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால்இவ்விடத்திலிருக்கிற கார்யம் என்னும் பதமும் அந்தர்யாமிவரையிலும் சொல்லுகிறதாகையினால் அது முக்யம் தான், என்று தாத்பர்யம். அப்படியிருந்தபோதிலும் யுக்தா யுக்தங்களைப் பிரித்துப்பார்க்கும்பொழுது விஶேஷணங்களாகிய சேதனாசேதனங்களை கார்யங்களாகின்றன, என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார்*—'வேறு அவஸ்த்தையை' *என்றாரம்பித்து. விஶேஷணங்களான சேதனாசேதன வஸ்துக்களுக்கு வேறு அவஸ்த்தை வரும்பொழுது அப்படிப்பட்ட அந்த வஸ்துக்களை நியமிக்கிறதாகிய வேறு அவஸ்த்தை விஶேஷ்யமாகிய பரமாத்மாவுக்கும் உண்டு, என்று தாத்பர்யம். ‡ உத்ஸர்காபவாதந்யாயத்தினால் ப்ரம்மம் குணங்களையுடையது என்று சொல்லுகிற ஶ்ருதிகளோடு விரோதமில்லாமைக்காக ப்ரம்மத்துக்குக் குணங்களில்லை என்று சொல்லுகிற ஶ்ருதிகளுக்கு விஷயத்தை ஏற்படுத்துகிறார்*—'குணங்களற்றது என்று சொல்லியிருப்பதும்' *என்றாரம்பித்து. இவ்விதமாக ஏற்படுத்தப்பட்ட விஷயங்களின் வ்யத்யாஸத்தை ஶ்ருதியே ஒரே வாக்யத்தில் காட்டுகிறது, என்று சொல்லுகிறார்*—'கர்மங்களில்லாதவன்' *என்றாரம்பித்து.* 'ஶ்ருதி

---

‡ *முதல் வால்யம், 9-வது பக்கம், 3-வது நம்பர் புட்நோட்டைப்பார்க்க.*

காமன் ஸத்யஸங்கல்பன்' என்கிற வாக்யத்தினுல் நல்ல குணங்களை விதிக்கிற இந்த ஶ்ருதியே வேறு இடங்களில் போதுவாக அறியப்படுகிற குணங்களில்லை, என்பது கெட்ட குணங்களைப் பற்றியது என்று ஏற்படுத்துகிறது. 'ப்ரம்மம் ஜ்ஞானத்தை ஸ்வரூபமாக உடையது' என்று சொல்லி இருப்பதும் எல்லாம் தெரிந்தவனுயும், எல்லாவித சக்தியையுமுடையவனுயும் எல்லாக் கெட்ட குணங்களுக்கும் விரோதமாகிய கல்யாணகுணங்களுக்கு இருப்பிடமாகவுமிருக்கிற பரப்ரம்மத்தின் ஸ்வரூபம் ஞானம் ஒன்றைக்கொண்டே நிரூபிக்கத்தக்கது. தானே ப்ரகாசிக்கக்கூடியது, ஆகையினுல் ஞானஸ்வரூபமாகவுமிருக்கிறது, என்று ஒப்புக்கொள்ளுகிறபடியினுல் மிகவும் பொருத்தமுடையது. 'எவன் எல்லாவற்றையும் அறிந்தவனே, எவன் எல்லாவற்றையும் ப்ரத்யக்ஷமாகப் பார்க்கிறனே' என்றும்

---

யே' என்பதினுல் உபாயங்கள் வேண்டியதில்லை என்பது காட்டப்பட்டது. தாத்பர்யத்தினுல் ஏற்பட்ட குணங்களில்லை, என்பதைப் பரிஹரிக்கிருர்—'ப்ரம்மம் ஜ்ஞானத்தை ஸ்வரூபமாக உடையது' என்று ஆரம்பித்து. 'எல்லாம் தெரிந்தவனுயும், எல்லாவித ஶக்தியையுமுடையவனுயும்' என்றிவை முதலியது வேறு ஶ்ருதி முதலியவைகளில் ஏற்பட்டவைகளுக்கு விரோதமில்லை, என்று தெரிவிப்பதற்காக. 'ஜ்ஞானம் ஒன்றைக்கொண்டே நிரூபிக்கத்தக்கது' என்பதற்கு ஸ்வரூபநிரூபக தர்மங்களைச் சொல்லும் பதங்கள் அந்தத் தர்மத்தை முன்னிட்டு அதற்கு ஆதாரமாகிய வஸ்துவையும் சொல்லுகின்றன அல்லவா, என்று தாத்பர்யம். ஸூத்ரத்திலும் 'தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத்' என்றும், 'யாவதாத்மபாவித்வாச்ச நதோஷஸ்தத்தர்ஶநாத்' என்றும் சொல்லப்பட்டது. இங்கே சொல்லப்படாததையும் சேர்த்துக் கொள்ளவேண்டும் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற ஸூத்ரத்திலிருக்கும் 'து' என்பதினுல் குறிக்கப்பட்ட மற்றொரு அர்த்தத்தையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிருர்—'தானே ப்ரகாசிக்கக்கூடியதாகையினுலும்' என்று. தர்மபூத ஜ்ஞானத்திற்குப்போல ஜ்ஞானம் என்னும் பதத்திற் கர்த்தமாகிய ஸ்வபாவமும் இருக்கிறது, என்று தாத்பர்யம். ப்ரம்மம் விஶேஷங்களொன்றுமில்லாதது என்றுசொல்லுகிறவர்கள் அறியும் தன்மையுள்ளவனுக இருக்கையை ஒப்புக்கொள்ளுவதில்லை, தார்க்கிகர்களோவெனில் ஜ்ஞான ஸ்வரூபனுகவிருக்கையை ஒப்புக்கொள்ளுவதில்லை, இந்த இரண்டு பேர்களுக்கும் ஶ்ருதியோடு விரோதம் உண்டாகிறது, என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு, தன்னுடைய பக்ஷத்தில் ஶ்ருதிகள் அனுகூலங்களாக இருக்கின்றன என்று சொல்லுகிருர்—'எவன்எல்லாவற்றையும் அறிந்தவனே' என்ருரம்பித்து. பேதங்

'இவனுடைய உயர்ந்த ஶக்தி அனேகவிதம் என்று ஶ்ருதியில் சொல்லப் படுகிறது. ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட ஞானம், பலம், க்ரியை, இவைகளும் சொல்லப்படுகிறது,' என்றும், 'அறியும் தன்மையுள்ள பரமாத்மாவை, எதினால் அறிவான்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகள் பரமாத்மாவுக்கு அறியும் தன்மை உண்டு என்று தெரிவிக்கின்றன. 'விகாரமற்றதாயும், ஞானஸ்வரூபமாயும்' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளோ ஞானம் ஒன்றைக்கொண்டே நிரூபிக்கவேண்டியதாகையினாலும் தானே பிரகாசிக்கக்கூடியதாகையினாலும் ஞானஸ்வரூபம் என்பதைத் தெரிவிக்கின்றன. 'அவன் இச்சித்தான் நான் அனேகமாகவேண்டும் என்று' என்றும், 'அந்த ஸத் நான் பகுவாகக்கடவேன் என்றுயோசித்தது,' என்றும், 'அதுபேரினாலும், ரூபத்தினாலும் வ்யாகரணம் செய்யப்படுகிறது' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களால் அந்தப் பரப்ரம்மம் தன்னுடைய ஸங்கல்பத்தினால் விசித்ரங்களான ஸ்த்தாவர ஜங்கமங்களாக அனேகவிதங்களாகப் பிரிந்திருக்கிறது என்று ஏற்படுகிறபடியினால் அதற்கு விரோதமாய் பரமாத்மாவை அந்தர்யாமியாக உடையதல்லாத அனேகவிதங்களான வஸ்துக்கள் உண்டு என்பது உண்மையல்ல, என்று 'அவன் அஜ்ஞானத்தினால் ஸம்ஸாரத்தை அடைகிறான் எவன் இந்த லோகத்தில் அனேகவிதங்களான வஸ்துககள் போலப் பார்க்கிறானோ' என்றும், 'இவ்விடத்தில் அனேகவிதங்களான வஸ்துக்களொன்றுமில்லை, எந்த இடத்தில் இரண்டு வஸ்துக்கள்போல இருக்கின்றதோ அப்பொழுது ஒருவன் மற்றொருவனைப் பார்க்கிறான், எந்த இடத்தில் இவனுக்கு எல்லாம் ஆத்மாவாக ஆய்விட்டதோ அப்பொழுது எதை எதினால் பார்க்கிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளினால்மறுக்கப்படுகிறது. இப்படிக்கல்லாமல் 'நான் பகுவாகக்கடவேன்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினாலேற்பட்டதாகிய, ப்ரம்மத்தின் தன்னுடைய ஸங்கல்பத்தினாலேற்பட்டதாய் அனேக விதங்களான பேர்களையும் ரூபங்களையும் அடைவதினாலுண்டான அனேகவித வஸ்துக்களாக இருக்கை

---

*களில்லை என்று சொல்லுகிற வாக்யங்களுக்குப் பேதங்களுண்டு என்று சொல்லுகிற வாக்யங்களோடு விரோதமில்லாத அர்த்தத்தைச்சொல்லுகிறார்—*'அவன் இச்சித்தான்' *என்றாரம்பித்து. ப்ரம்மம் அதின் குணங்கள், அதின் விபூதிகள் முதலிய பேதங்கள் ஶ்ருதி வாக்யங்களாலேயே உண்டென்று சொல்லப்பட்டிருக்கிறபடியினால் அவைகளில்லை என்று மறுக்கமுடியாது, என்று தாத்பர்யம். மற்றவர்கள் சொல்லுகிற அர்த்தம் ஶ்ருதிகளுக்கு விரோதமானது ஆகையினாலதை நிராகரிக்கிறார்—*'இப்படிக்கல்லாமல்' *என்றாரம்பித்து.* 'எந்த இடத்தில் இவனு

க்

மறுக்கப்படுகிறதல்ல. 'எந்த இடத்தில் இவனுக்கு எல்லாம் ஆத்மாவாக இருக்கிறதோ' என்றர்த்தமுள்ளதாகிய மறுக்கிற வாக்யத்திஞரம்பத்திலே யே இது ஸ்த்தாபிக்கப்பட்டது. 'எல்லாம் அவனை அவமானம் செய்கிறது எவன் ஆத்மாவைவிட வேறு இடத்திலிருப்பதாக எல்லாவற்றையும் அறி கிறனே' என்றும், 'அந்தப் பெரிய பூதத்தின் மூச்சுக்காற்று ருக்வேதம்' என்றும் அர்த்தமுள்ள வாக்யம்முதலியவையும் இதையே ஸ்த்தாபிக்கின் றன. இப்படிச் சேதனுசேதன வஸ்துக்களுக்கும் ஈஶ்வரனுக்கும் ஸ்வரூ பங்களின் வ்யத்யாஸத்தையும் ஸ்வபாவங்களின் வ்யத்யாஸத்தையும் சொல்லுகிற ஶ்ருதிவாக்யங்களுக்கும் ப்ரம்மமே கார்யமாகவும் காரணமா கவும் இருக்கிறதென்றும் கார்யமும் காரணமும் ஒன்றென்றும் சொல்லு கிற ஶ்ருதிவாக்யங்களுக்கும் விரோதமில்லை என்பது, சேதனுசேதன வஸ் துக்கள் சரீரமாகவும் பரமாத்மா இவைகளுக்கு ஆத்மாவாகவும் இருப்ப தையும் சரீரங்களாகிய சேதனுசேதன வஸ்துக்கள் காரணமாக இருக்கும் தசையில் பேர் ரூபங்கள் இவைகளால் பிரிக்கத்தகாதபடி ஸூக்ஷ்மதசை யை யடைந்திருப்பதையும், கார்யதசையில் இவைகளால் பிரிக்கக்கூடிய ஸ்த்தூலமாகிய தசையையடைந்திருப்பதையும்சொல்லுகிறஶ்ருதிவாக்யங் களாலேயே அறியப்படுகிறது, ஆகையினுல் ப்ரம்மத்துக்கு அஜ்ஞான முண் டென்கிறவார்த்தைக்கும், ப்ரம்மத்துக்கே உபாதியினுல்பேதமுண்டாகிறது

---

கு' என்றர்த்தமுள்ள வாக்யம் முதலான ஶ்ருதிவாக்யத்திற்கு ப்ரம்மத் தை ஆத்மாவாக உடையதல்லாத வஸ்துக்களனேகமில்லை என்று மறுப் பதில் தாத்பர்யம் என்பது ஶ்ருதியினுலேயே சொல்லப்பட்டது என்று சொல்லுகிறூர்—' மறுக்கிற வாக்யத்திஞரம்பத்திலேயே' என்று. இப்படிச் சொல்லாவிட்டால் ஆரம்பத்துக்கு விரோதம் வரும், என்று தாத்பர்யம். 'இது ஸ்த்தாபிக்கப்பட்டது' என்பதற்கு 'நான் அனேகமாக ஆகக்கடவேன்' என்றர்த்த முள்ள வாக்யம் முதலிய மற்ற ஶ்ருதிவாக் யங்களில் சொல்லப்பட்ட அர்த்தம். மறுத்திருப்பதற்குஸ்படாமையி னுல் விரோதமொன்று மில்லாததாக ஸ்த்தாபிக்கப்பட்டது, என்றர்த் தம். பிறகு தன்மதத்தில் ஒருவிதத்தாலும் விரோதமில்லை என்பதை யும், மற்றவர்கள் பக்ஷத்தில் எல்லாவிதத்தாலும் விரோதம் உண்டெ ன்பதையும், ஶ்ருதியில் சொல்லியிருப்பதை விட்டு விடுதலும், ஶ்ருதி யில் சொல்லாததைக் கல்ப்பனை செய்வதுமாகிய தோஷத்தையும் சுரு க்கமாகச் சொல்லிக்கொண்டு முடிக்கிறூர்—'இப்படி' என்றாரம்பித்து. 'ஶ்ருதிவாக்யங்களாலேயே' என்பதற்கு ந்யாயத்தையும் அவஶ்யமாக

என்கிற வார்த்தைக்கும் மற்றும் சில தப்பான ந்யாயத்தினால் உண்டாகிற எல்லா ஶ்ருதிகளுக்கும் விரோதமான வார்த்தைகளுக்குமெவ்விதத்திலும் இடமில்லை, ஆகையினால் இது விஷயத்தில் இனிவிஸ்தாரமாகச் சொல்ல வேண்டியதில்லை. 2

தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச யத்விகாரி யதஶ்ச யத் |
ஸ ச யோ யத்ப்ரபாவஶ்ச தத்ஸமாஸேந மே ஶ்ருணு || 3

ப - ரை] தத் - அந்த, க்ஷேத்ரம் - சரீரம், யச்ச - எந்த வஸ்து, யாத்ருக்ச - எப்படிப்பட்டது, யத்விகாரி - எப்படிப்பட்ட மாறுதல்களை யுடையது, யதஶ்ச — எதினாலுண்டானது, யத் - எவ்விதமான ஸ்வரூபத்தை உடையது, ஸச - அந்த ஜீவாத்மாவும், யஃ — எவ்வித ஸ்வரூபத்தை உடையவன், யத்ப்ரபாவஶ்ச - எவ்விதங்களான மஹிமைகளையுடையவன், தத் - அவை எல்லாவற்றையும், ஸமாஸேந - சுருக்கமாக, மே — என்னிடத்திலிருந்து, ஶ்ருணு - கேள். 3

டா] அந்தச் சரீரம் எந்த வஸ்து, எவைகளுக்கிருப்பிடம், இதின் மாறுதல்

*அபேக்ஷிக்க வேண்டியதில்லை, இந்த அர்த்தம் மிகவும் ஸ்பஷ்டமாக இருக்கிறபடியினால், என்று தாத்பர்யம். 'மற்றும் சில' என்பதினால் யாதவப்ரகாசர், தார்க்கிகர்கள், இவர்கள் சொல்லுகிற அர்த்தங்கள் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. 'தப்பான ந்யாயத்தினாலுண்டாகிற, எல்லா ஶ்ருதிகளுக்கும் விரோதமான' என்கிற இரண்டையும் ப்ரம்மத்துக்கு அஜ்ஞானம் உண்டென்கிற வார்த்தை முதலிய எல்லா வார்த்தைகளிலும் அன்வயித்துக் கொள்ளவேண்டியது.* 2

தா] *ஏற்கனவே கேட்டுக்கொண்டிருக்கிற அர்ஜுநனுக்கே மறுபடியும் 'ஶ்ருணு' (கேள்) என்று ஸாவதானமுண்டாவதற்காகச் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். 'மஹாபூதாநி' என்றாரம்பித்து 'ஸங்காதஃ' என்கிற வரையிலும் மேலே சொல்லப்போகிறதை யோசித்து, முதலிலும் கடைசியிலும் இருக்கிற 'யத்' என்னும் பதங்கள் ஜடத்ரவ்யம் என்பதையும், அவைகளின் சேர்க்கை என்பதையும் பற்றியவைகளாகையினால்புனருக்திதோஷம்இல்லைஎன்கிற அபிப்ராயத்தினால், சொல்லுகிறார். 'எந்த வஸ்து' என்று. இந்த்ரியங்களுக்கு இருப்பிடம் என்று மேலே சொல்லப்போகிறதை அனுஸரித்து 'யாத்ருக்' என்னும்பதத்திற்கு அர்த்தம் சொல்லுகிறார்—'எவைகளுக்கிருப்பிடம்' என்று. எந்த மாறுதல்கள் இதினாலுண்டாக்கப்படுகின்றனவோ அது 'யத்விகாரி'. அதில் யத் என்னும் பதத்தினர்த்தத்தைக் கேழ்ப்பதில் தாத்பர்யம், என்றுதெரிவிப்பதற்காக—'இதின் மாறுதல்கள் எவை' என்றுசொல்லப்*

கள் எவை, எந்தக் காரணத்தினாலுண்டானது இந்தச் சரீரம், அதாவது எந்த ப்ரயோஜனத்திற்காக உண்டானது என்றர்த்தம், இது எவ்விதமான ஸ்வரூபத்தையுடையது, அந்த ஜீவாத்மாவும் எவ்விதமான ஸ்வரூபத்தையுடையவன், இவனுடைய மஹிமைகள் எவை, இவை எல்லாவற்றையும் சுருக்கமாக என்னிடத்திலிருந்து கேள். 3

ருஷிபிர்பஹுதா கீதம் சந்தோபிர்விவிதை: ப்ருதக் |
ப்ரஹ்மஸூத்ரபதைச்சைவ ஹேதுமத்பிர்விநிச்சிதை: || 4

ப - ரை] ருஷிபி: – ரிஷிகளாலும், விவிதை: - அனேகவிதங்களான, சந்தோபி: - வேதங்களாலும், ஹேதுமத்பி: - காரணங்களை உடைய, விநிச்சிதை: - நன்றாக நிச்சயிக்கப்பட்டிருக்கிற, ப்ரஹ்மஸூத்ர பதைச்சைவ - ப்ரம்மஸூத்ரம் என்றுபேரை உடைய பதங்களாலும், ப்ருதக் – தனித்தனியாக, பஹுதா - அனேகவிதமாக, கீதம்-சொல்லப்பட்டிருக்கிறது. 4

---

பட்டது. 'யத:' என்னும்பதம் உபாதான காரணம் முதலியவைகளைப் பற்றியதல்ல,முதலிலேயே அது சொல்லப்பட்டபடியினால்,என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எந்தக்காரணத்தினால்' என்று. 'மஹாபூதாநி' என்று மேலே சொல்லப்போகிற விசேஷமான காரணத்தைச் சொல்லுகிறார்—'எந்த ப்ரயோஜனத்திற்காக' என்று. சரீரத்தை உண்டாக்கின ஈச்வரனுடைய புத்தியில் தோன்றி இருப்பதினால் ப்ரயோஜனமும் காரணமாகலாம். அப்படியே 'அத்யயனத்தினால் வஸிக்கிறான்' என்று சொல்லவும்படுகிறது. 'எவ்விதமான ஸ்வரூபத்தை உடையது' என்பது சேர்க்கையைப்பற்றியது. சில வஸ்துக்களின் அமைப்பல்லவோ சரீரமாக இருப்பது முதலியது. ஆகையினால் முதலில் இருக்கும் 'யச்ச' என்னும் பதம், ஜடத்ரவ்யம், அஜடத்ரவ்யம் இவைகளுக்குள் எது,என்று நிச்சயம் செய்து கொள்வதற்காக. இரண்டாவது, 'யச்ச' என்னும் பதம், ஜடம் என்று நிச்சயம் செய்தபோதிலும், அனேகங்களான ஜடவஸ்துக்களில் இது ஒன்றா, அல்லது அனேக வஸ்துக்களின் சேர்க்கையா, என்று நிச்சயம் செய்வதற்காக, என்று தாத்பர்யம். 'ஸ:' என்று கீழே பரமாத்மாவையும் ப்ரஸ்தாவித்திருப்பதினால், அவனைச்சொல்லுகிறது, என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'அந்த ஜீவாத்மாவும்'என்று. 'ய: யத்ப்ரபாவ:'என்கிற இரண்டு பதங்களும், ஸ்வரூபம், ஸ்வபாவம், இவைகளைச் சொல்லி இருக்கிறது. ப்ரபாவங்களாவன ஆச்சர்யங்களாயும், உயர்ந்ததுகளுமான ஸ்வபாவ விசேஷங்கள். 3

பா] அப்படிப்பட்ட இந்த ஶரீரம், ஜீவன், இவைகளுடைய உண்மை பராஶரர் முதலிய ரிஷிகளால் அனேகவிதமாகச்சொல்லப்பட்டது. எப்படி எனில் * '𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌚 𑌤𑌥𑌾𑌨𑍍𑌯𑍇 𑌚 𑌭𑍂𑌤𑍈𑌰𑍁𑌹𑍍𑌯𑌾𑌮 𑌪𑌾𑌰𑍍𑌥𑌿𑌵। 𑌗𑍁𑌣𑌪𑍍𑌰𑌵𑌾𑌹𑌪𑌤𑌿𑌤𑍋 𑌭𑍂𑌤𑌵𑌰𑍍𑌗𑍋𑌽𑌪𑌿 𑌯𑌾𑌤𑍍𑌯𑌯𑌂॥ 𑌕𑌰𑍍𑌮𑌵𑌶𑍍𑌯𑌾 𑌗𑍁𑌣𑌾𑌹𑍍𑌯𑍇𑌤𑍇 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌦𑍍𑌯𑌾𑌃 𑌪𑍃𑌥𑌿𑌵𑍀𑌪𑌤𑍇। 𑌅𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌸𑌞𑍍𑌚𑌿𑌤𑌂 𑌕𑌰𑍍𑌮 𑌤𑌚𑍍𑌚𑌾𑌶𑍇𑌷𑍇𑌷𑍁 𑌜𑌨𑍍𑌤𑍁𑌷𑍁। 𑌆𑌤𑍍𑌮𑌾 𑌶𑍁𑌦𑍍𑌧𑍋𑌽𑌕𑍍𑌷𑌰𑌶𑍍𑌶𑌾𑌨𑍍𑌤𑍋 𑌨𑌿𑌰𑍍𑌗𑍁𑌣𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑍇𑌃 𑌪𑌰𑌃।' என்றும், அப்படி

---

தா] தன்னுனுபதேசிக்கப்படுகிறவர்த்தம் இதிஹாஸம், புராணம், மீமாம்ஸை, இவைகளால் ஒத்தாசை செய்யப்பட்ட அநேக ஶ்ருதிகளி லேற்பட்டதென்று சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினுல். விசதமாக இருக்கிற புராணம் முதலியவைகளில் சொல்லியிருப்பதையனுஸரித்து விசதமில்லாத ஶ்ருதிவாக்யங்களின் அர்த்தத்தை நிச்சயம் செய்யவே ண்டும் என்று தெரிவிப்பதற்காக முதலில் ரிஷிகளால் சொல்லப்பட்ட தென்று சொல்லியிருக்கிறது. ராஜஸங்களாயும் தாமஸங்களாயுமிருக் கிற புராணங்களை விலக்குவதற்காக 'ரிஷிபி:' என்னும் பதத்தினுல் சொல்லப்பட்டவர்களை விசேஷித்துக்காட்டுகிறார்—'பராசரர் முதலிய ரிஷிகளால்' என்று. 'அநேகவிதமாக' என்பதற்கு அர்த்தம் ஒன்றாக இருந்தபோதிலும் வாக்யங்களில் சொல்லியிருப்பதில், தேராகவும்,சக்ர மாகவும், நதியாகவும், கல்பனை செய்திருக்கும் விதங்களில் வ்யத்யாஸ முண்டு என்று தாத்பர்யம். அன்றிக்கே சுருக்கமாகவும் விஸ்தாரமாக வும் இருப்பது முதலிய விதங்களால் என்றுமர்த்தம். தேஹம், ஜீவாத் மா, இவைகளின் ஸ்வரூபத்தை தனித்து அறியாத ராஜவினுடைய, தூக்கப்படுகிறவன் தூக்குகிறவன் என்கிறவார்த்தையை நிராகரிப்பதற் காக உண்டான வாக்யம்—'𑌅𑌹𑌂 𑌤𑍍𑌵𑌂 𑌚' என்றது. வேதாந்தத்தின்

---

* விஷ்ணுபுராணம்—2-13-39, 51, 71. அஹம்-நான், த்வம்ச-நீயும், ததா-அப்படியே, அன்யேச-மற்றவர்களும், பார்த்திவ-ஓ, ராஜாவே, பூதை:-பஞ்சபூதங்களினுல், ஊஹ்யாம-தூக்கப்படுகிறோம், அயம்-இந்த, பூதவர்கோபி-பஞ்சபூதங்களின் கூட்டமும், குணப்ரவாஹபதித:-ஸத்வ ரஜஸ் தமோகுணங்களின் வரிசையில் விழுந்து, யாதி-போகிறது. ப்ருதிவிபதே-ஓ, அரசனே, ஸத்வாத்யா-ஸத்வம் முதலிய, ஏதே-இந்த, குணா:-குணங்கள், கர்மவஶ்யாஹி-கர்மங்களுக்கு வசப்பட்டவைகளல்லவா, கர்ம-கர்மமும், அவித்யாஸஞ்சிதம்-அஜ்ஞானத்தினுலுண்டாக்கப்பட்டது, தச்ச-அதுவும், அசேஷேஷு-எல்லா. ஜந்துஷு-ப்ராணிகளிலும் (இருக்கிறது), ஆத்மா-ஜீவாத்மாவானவன், சுத்த-கர்மங்களின் ஸம்பந்தமில்லாதவன், அக்ஷர:-அழிவில்லாதவன், நிர்குண:-ஸத்வம் முதலியகுணங்களில்லாதவன், ப்ரக்ருதே-ப்ரக்ருதியைவிட, பர:-மேலானவன்,

ஸம்பந்தமுள்ளதான வாக்யங்களைக் கேட்டதினால் உண்டாகிய சீரார் என்கிற கேழ்வைக்குப்பதில்—'விணூ:' என்றது. 'ப்ராணோபாணௌ நக்ஷணா:' என்றதினால் எல்லாம் சேர்ந்து ஆத்மாவா? தனித்தனியாய் இவை ஆத்மாவா? என்கிற விகல்பம் தெரிவிக்கப்பட்டது. இப்படிக்கீழ் நிரூபித்த அர்த்தத்தைக் கேட்டுக் கொண்டிருக்கும் ராஜாவிடத்திலும் அவனுடைய புத்தியைக்கொண்டு உறுதிப்படுத்துவதற்காக உண்டான வாக்யம்—'கிம் க்ஷ:' என்றது. இப்படி 'இதம் ஶரீரம்' என்கிற ஶ்லோகத்தினால் சொல்லப்பட்ட அர்த்தத்திற்கு மேற்கோள் காட்டப்பட்டது. 'இரண்டு பக்ஷிகள்' என்றர்த்தமுள்ள வாக்யம் முதலான ஶ்ருதிவாக்யத்தில் 'அவர்களுக்குள் மற்றொருவன் கர்மங்களின் பலத்தை ருசியாக ஸாப்பிடுகிறான்' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் கர்மங்களின் பலத்தை யனுபவிக்கிற ஜீவாத்மா சொல்லப்படுகிறான். 'மற்றொருவன் அந்தக் கர்மபலத்தை ஸாப்பிடாமல் மேலானவனாக ப்ரகாசிக்கிறான்' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் பரமாத்மா சொல்லப்படுகிறான் என்று ஶாரீரகஸூத்ரத்தில் 1 'குஹாம்ப்ரவிஷ்டாவாத்மாநௌ ஹி தத்தர்ஶநாத்' என்றும், 2 'ஸ்தித்யதநாப்யாம்ச' என்றும், இவைமுதலியவிடங்களில் விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டது. ப்ராம்மணத்திலோவெனில் 'அவர்களுக்குள் ஒருவன் கர்மபலத்தை ருசியாக ஸாப்பிடுகிறான்,' என்றர்த்தமுள்ள வாக்யத்தினால் ஸத்வம் சொல்லப்படுகிறது என்று ப்ராணிகளைச் சொல்லுகிற ஸத்வ என்கிற பதத்தினால் ஜீவாத்மாவைச்சொல்லி 'மற்றொருவன் அந்தக் கர்மபலத்தை ஸாப்பிடாமல் மேலானவனாக எல்லாவற்றையும் பார்க்கிறான்,' என்றர்த்தத்தினால் க்ஷேத்ரஜ்ஞன் சொல்லப்படுகிறான். அந்த இவைகள் இரண்டும் ஸத்வம் க்ஷேத்ரஜ்ஞனும் அவைகளுக்குள் எதினால் கனவு காண்கிறானோ அது ஸத்வம் 'எவன் ஶரீரத்திலிருந்து அறிகிறானோ அவன் க்ஷேத்ரஜ்ஞன்' என்று க்ஷேத்ரஜ்ஞன் என்னும் பதத்தினால்பரமாத்மாவைச் சொல்லியிருக்கிறது. அந்த 'க்ஷேத்ரஜ்ஞம்' 'உபத்ரஷ்டா' என்கிற இரண்டு பதங்களும் இவ்விடத்தில் 'க்ஷேத்ரஜ்ஞம்' என்றும், 'உபத்ரஷ்டாநுமந்தா' என்னும் பதங்களினாலும் ஞாபகப்படுத்தப்படுகின்

1 சாரீரகஸூத்ரம்-1-2-11. குஹாம்-சரீரத்தின் ஹ்ருதயகுஹையை, ப்ரவிஷ்டௌ-ப்ரவேசித்திருப்பவர்கள், ஆத்மாநோஹி-ஜீவாத்மா பரமாத்மா இவர்களல்லவா, தத்தர்சநாத்-அப்படியே ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால்.

2 சாரீரகஸூத்ரம்-1-3-6. ஸ்திதி - சாப்பிடாமலிருப்பதினாலும், அதனப்யாம்ச-சாப்பிடுவதினாலும் (மேற்கூறியவர்களே).

யே, † 'பிண்ட: ப்ருதக் யத: பும்ஸ: ஶிர:பாண்யாதிலக்ஷண:। ததோஹமிதி குத்ரைதாம் ஸம்ஜ்ஞாம் ராஜந் கரோம்யஹம்' என்றும், அப்படியே, ‡ 'கிம் த்வமேதச்சிர: கிந்நு உரஸ்தவ ததோதரம்। கிமு பாதாதிகம் த்வம் வை தவைதத் கிம் மஹீபதே॥ ஸமஸ்தாவயவேப்யஸ்த்வம் ப்ருதக் பூப வ்யவஸ்தித:। கோஹமித்யத்ர நிபுணோ பூத்வா சிந்தய பார்த்திவ॥' என்று சொல்லப்பட்டது. இப்படித் தனித்தனியாக இருக்கிற இரண்டு வஸ்துக்களும் வா

றன. மனுவும் 1 'யோஸ்யாத்மந: காரயிதா தம் க்ஷேத்ரஜ்ஞம் ப்ரசக்ஷதே। ய: கரோதி து கர்மாணி ஸ பூதாத்மோச்யதே புதை:॥' என்று க்ஷேத்ரஜ்ஞ என்னும் பதத்தினுல் பரமாத்மாவைச் சொல்லியிருக்கிருர். ஆகையிஞல் இவ்விடத்தில் க்ஷேத்ரஜ்ஞ என்று சொல்லியிருப்பது ஜீவாத்மாவை என்று எப்படி சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரித்துக்கொண்டும், 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி' என்பதை அனுஸரித்துச் சொல்லுகிற வசனத்தையும், அது, தான் சொன்ன அர்த்தத்திற்குப் பொருந்தியிருக்கிறது என்பதையும், காட்டிக்கொண்டும், அவதாரிகை சொல்லுகிருர்—'இப்படி தனித் தனியாக இருக்கிற' என்ருரம்பித்து. அதாவது க்ஷேத்ரஜ்ஞன் என்னும் பதத்தை ஜீவாத்மாவினிடத்தில் ப்ரயோகித்திருப்பதினுல் க்ஷேத்ர

---

† விஷ்ணுபுராணம்-?-13-89. ஶிர:பாண்யாதிலக்ஷண:-தலைகை முதலிய அவயவங்களையுடைய, பிண்ட:-உருவமானது, யத:-எந்தக்காரணத்திஞல், பும்ஸ:-ஜீவாத்மாவைவிட, ப்ருதக்-வேறுபட்டதோ, தத:-ஆகையிஞல், ராஜன்-ஓ, ராஜாவே, அஹமிதி-நான் என்கிற, ஏதாம்-இந்த, ஸம்ஜ்ஞாம்-பேரை, குத்ர-எந்த வஸ்துவில், அஹம்-நான், கரோமி-செய்வேன்.

‡ விஷ்ணுபுராணம்-2-13-102-103. மஹீபதே-ராஜாவே, த்வம்-நீ என்பது, ஏதத்-இந்த, ஶிர: கிம்-தலையா, ததா-அப்படி, தவ-உன்னுடைய, உர: கிந்நு-மார்பா, உதரம்-வயிரா, த்வம்-நீ, கிமுபாதாதிகம்-கால் முதலியவையா, ஏதத்-இது, தவகிம்-உன்னுடையதா, பூப-ராஜாவே, த்வம்-நீ, ஸமஸ்தாவயவேப்ய:-எல்லா அவயவங்களைக்காட்டிலும், ப்ருதக்-தனியாக, வ்யவஸ்தித:- இருக்கிருய், நிபுண:-கெட்டிக்காரனுக, பூத்வா-இருந்து, அஹம்-நான், க:-யார், இத்யேவ-என்று, பார்த்திவ-ராஜாவே. சிந்தய-யோஜனை செய்.

1 மனு-12-12. ய:-எவன், அஸ்ய-இந்த, ஆத்மந:-ஜீவாத்மாவிற்கு, காரயிதா-செய்விக்கிறவனே, தம்-அவனை, க்ஷேத்ரஜ்ஞம்-க்ஷேத்ரஜ்ஞனுக, ப்ரசக்ஷதே-சொல்லுகிருர்கள், ய:-எவன், கர்மாணி-கர்மங்களை, கரோதி - செய்கிருனே (அவன்), புதை:-தெரிந்தவர்களால், ஆத்மாபரம்-ஆத்மாவாகமாத்திரம், உச்யதே-சொல்லப்படுகிருன்.

ஸுதேவனையே ஆத்மாவாக உடையதுகள், என்பதையும் § 'இந்த்ரியாணி மநோ புத்தி: ஸத்வம் தேஜோ பலம் த்ருதி:| வாஸுதேவாத்மகாந்யாஹு: க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞ ஏவ ச||' என்றும் சொன்னார்கள். அனேகவிதங்களாய் தனித்தனியாய் இருக்கிற ருக், யஜுஸ்ஸு,

---

ஜ்ஞன் என்பது ஜீவன் என்பது உசிதம். தனித்னியாகவும் கூட்டலாகவும், இது என்னுடைய தலை, இவை என்னுடைய கைகள், இது என்னுடைய சரீரம், என்று சரீரத்தைத்தெரிந்து கொள்ளுகிறவனாகையினால் ஜீவன் க்ஷேத்ரஜ்ஞனாகிறான். பரமாத்மாவோவெனில் இந்தச் சரீரம் இந்தக் கர்மங்களை ஆரம்பிப்பதற்காகவும், இந்தக் கர்மங்களின் பலங்களை அனுபவிப்பதற்காகவும், உண்டானது என்று சரீரத்தின் உண்மையைத் தெரிந்துகொள்ளுகிறபடியினால் க்ஷேத்ரஜ்ஞனாகிறான். இதுவும் 'இந்தச் சரீரத்தைத் தனித்தனி அவயவங்களாகவும் கூட்டலாகவும் இதை நான் அறிகிறேன், என்று எவன் தெரிந்து கொள்ளுகிறானோ' என்கிற பாஷ்ய வாக்யத்தினாலும், 'யோஸ்யாத்மந: காரயிதா' என்கிற மனுவின் வசனத்தினாலும் தெரிவிக்கப்பட்டது. இப்படியே த்ரஷ்டா (பார்க்கிறவன்) என்பதும் ஜீவனுக்குத்தன்னுடைய சரீரம் மாத்திரத்தைப்பற்றியும், பரமாத்மாவுக்கு எல்லாச்சேதனாசேதனங்களையும் பற்றியுமுண்டாகையினால் இருவரும் த்ரஷ்டா என்பதும் விருத்தமல்ல. ஆகையினால் ஒரு ப்ரமாணத்திற்கும் விரோதமில்லை, என்று தாத்பர்யம். ஸ்வரூபங்களனேகவிதங்கள் என்பது, 'சந்தோபி:' என்கிற இடத்திலிருக்கிற பன்மையினாலேயே ஏற்படுகிறபடியினால் 'விவிதை:' என்பது இப்பொழுது நிரூபிக்கப்படுகிற விதங்கள் அனேகங்கள் என்பதைச்சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'அனேகவிதங்களாய்' என்று. 'விவிதை:' என்பதற்கு 'வ்யவஸ்திதா: (தனித்தனியாக இருக்கிற) விதா: நிரூபிக்கப்படுகிற விதங்கள் எவைகளுக்கு இருக்கின்றனவோ அவைகள் என்று பிரித்து அர்த்தம் சொல்லிக்கொள்ள வேண்டியது. 1 'ஆம்நாயச்சந்தஸாம் தண்ட:'என்றிவை முதலிய ப்ரயோகங்களை அனு

---

§ மஹாபாரதம், ஸஹஸ்ரநாமாத்யாயம், 149-114., இந்த்ரியாணி- இந்த்ரியங்களும், மந:-மனதும், புத்தி:-புத்தியும், ஸத்வம்-பராக்ரமும், தேஜ:-தேஜஸ்ஸும், பலம்-பலமும், த்ருதி:-தைர்யம், இவைகளையும், க்ஷேத்ரம்-சரீரத்தையும், க்ஷேத்ரஜ்ஞமேவச - ஜீவாத்மாவையும், வாஸுதேவாத்மகாநி - வாஸுதேவனை யாத்மாவாக வுடையவைகளாக, ஆஹு:-சொன்னார்கள்.

1 ஆம்நாய-உருப்போடுவது, சந்தஸாம்-வேதங்களுக்கு, தண்ட:-ஸ்வாதீனப் படுத்தும் வழி.

ஸாம, அதர்வண வேதங்களாலும், தேஹம், ஆத்மா, இவைகளின் ஸ்வரூபம்தனித்தனியாகச் சொல்லப்பட்டது. எப்படி என்னில், ‡ 'அந்தஇப்படிப்பட்ட ஆத்மாவினிடத்திலிருந்து ஆகாஶமுண்டாயிற்று, ஆகாஶத்திலிருந்து வாயு உண்டாயிற்று, வாயுவினிடத்திலிருந்து நெருப்பு உண்டாயிற்று, நெருப்பினிடத்திலிருந்து ஜலமுண்டாயிற்று, ஜலத்திலிருந்து ப்ரதிவி உண்டாயிற்று, ப்ரதிவியிலிருந்து, ஓஷதிகளுண்டாயிற்று, ஓஷதிகளிலிருந்து அந்நமுண்டாயிற்று, அந்நத்திலிருந்து புருஷனுண்டானன், அப்படிப்பட்ட இந்தப் புருஷன் அந்நத்தின் ரஸத்தினலுண்டானவன்,' என்றர்த்தமுள்ள

---

ஸரித்து 'ஊஹ:' என்னும் பதம் வேதங்களைச்சொல்லுகிறது, காயத்ரீ முதலியவைகளைச் சொல்லுகிறதல்ல என்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'ருக், யஜுஸ்ஸா' என்றாரம்பித்து. 'வ்ருயக்' (வேருக) என்பது ரிஷிகளால் சொல்லப்பட்டதைவிட வேருக என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது என்கிற ப்ரமத்தை நீக்குவதற்காகச் சில பதங்களைச் சேர்த்துக்கொண்டு அர்த்தம் சொல்லுகிறார்—'தேஹம், ஆத்மா, இவைகளின் ஸ்வரூபம் தனித்தனியாகச் சொல்லப்பட்டது' என்று. ஒன்றுக்கொன்று வேறுபட்டதாகச் சொல்லப்பட்டது என்றர்த்தம். 1 'எப்படித் தேரின் ஆரைக்கால்களில் வட்டை கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, ஆரைக்கால்கள் குடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றனவோ, இப்படியே இந்தப் பஞ்சபூதங்கள் ஜ்ஞானஸ்வரூபனுகிய ஜீவாத்மாவினிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன. ஜீவாத்மாக்கள் பரமாத்மாவினிடத்தில் கோர்க்கப்பட்டிருக்கின்றன' என்றும், 2 'இந்த ஆத்மா என்னுடைய ஹ்ருதயத்திற்குள் இருக்கிறன் இங்கிருந்துபோய் இவனை யடையப்போகிறேன்' என்றும், 3 'பரமபதத்திலிருப்பவனும் ரூபமில்லாதவனும் வெளி உள் எங்கும் நிறைந்தவனும் பிறப்பில்லாதவனும் ப்ராணவாயுவில்லாதவனும் மனதில்லாதவனும் பரிசுத்தனும் அசேதனத்தைவிட மேலாகிய ஜீவாத்மாவைவிட மேற்பட்டவனுமிருக்கிற புருஷன்', என்றும், 4 'இந்திரியங்களுக்கு யஜமானனுகிய ஜீவனுக்கும் யஜமானனுகிய அவன் காரணம்' என்றும், 5 'போக்தாவாகிய ஜீவனையும் போக்யமாகிய ப்ரக்ரு

‡
1 சௌஷீதி:-3-9.
2 சாந்தோக்யம்-3-14-4.
3 முண்டகோபநிஷத்-2-1-2.
4 ஸ்வேதாச்வதரம்-6-9.
5 ஸ்வேதாச்வதாம்-1-9.

வாக்யத்திலுல் சரீரத்தின் ஸ்வரூபத்தைச் சொல்லி அதற்குள்ளேயிருக்கிற ப்ராணமயனையும், அதற்குள்ளேயிருக்கிற மனோமயனையும் சொல்லி, 'அப்படிப்பட்ட இந்த மனோமயனைக்காட்டிலும் வேறுபட்டவனாய் அவனுக்குள்ளே இருப்பவனாகிய ஆத்மா விஜ்ஞானமயன்,' என்று ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்லி, 'அப்படிப்பட்ட இந்த விஜ்ஞானமயனைக் காட்டிலும் வேறுபட்டவனாய் அவனுக்குள்ளே இருப்பவனாகிய ஆத்மா ஆனந்தமயன்' என்று ஜீவாத்மாவுக்கும் அந்தராத்மாவாக ஆனந்தமயனை பரமாத்மா சொல்லப்பட்டான். இப்படியே ருக்வேதம், ஸாமவேதம், அதர்வணவேதம், இவைகளிலும் ஆங்காங்கு சரீரம், ஜீவாத்மா இவைகள் வெவ்வேறு என்பதும், இவைகள் பரமாத்மாவை ஆத்மாவாக உடையதுகள் என்பதும், ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. காரணங்களோடு கூடியதுகளும் நிஸ்சயத்தை முடிவிலுடையதுகளுமாகிய ப்ரம்மத்தை நிரூபிக்கிற ஸூத்திரங்களென்று பேருடைய பதங்களினுலும் அதாவது ஶாரீரகஸூத்ரங்களினுலும் † 'நவியதஶ்ருதே:' என்றாரம்பித்துச் சரீரத்தின் ஸ்வபாவங்களினுடைய நிஸ்சயம் சொல்லப்

---

*தியையும் இவைகளை நியமிக்கிறவனாகிய பரமாத்மாவையும் தெரிந்து கொண்டு அவனால் ப்ரீதி செய்யப்பட்டவனாய் அதற்குப் பிறகு அவனாலேயே மோக்ஷத்தை யடைகிறான்' என்று மர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'* இப்படியே ருக்வேதம், ஸாமவேதம், *' என்றாரம்பித்து. 'ப்ரம்ம ஸூத்ர' என்கிற இடத்தில் ப்ரம்மத்தினுடைய ஸூத்ரம் என்று ஆறாம் வேற்றுமை தொக்கியிருக்கிறபடியால் அதற்கு அர்த்தமாகிய ஸம்பந்தம் நிரூபிக்கிறதாயிருக்கை என்று அபிப்ராயத்தில் வைத்துக் கொண்டு'ஸூத்ரைச:'என்கிறவிடத்தில் ஆறாம்வேற்றுமைதொக்கியிருக்கிறதென்கிற ப்ரமத்தை விலக்குகிறார்—'*ப்ரம்மத்தை நிரூபிக்கிற ஸூத்திரங்களென்று பேருடைய பதங்களினுலும்*' என்று. தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'*அதாவது*' என்றாரம்பித்து. '*காரணங்களோடேகூடியதுகளும்*' என்பதற்கு காரணங்களை நிரூபிக்கிற வென்றர்த்தம். கர்மமாகிற அர்த்தத்தைச் சொல்லுகிற 'கு' என்னும் விகுதியை ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் ப்ரயோஜனமில்லை ஆகையினுல் விசேஷமாக நிஸ்சயத்தையுடையதுகளென்று பஹுவ்ரீஹி ஸமாஸத்தை அபிப்ராயத்தில்வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'*நிஸ்சயத்தை முடிவில்*

---

† *சாரீரகஸூத்ரம்,* 2-3-1. *வியத்-ஆகாசம், ந-உண்டாகிறதில்லை, அஶ்ருதே:-அப்படி ஶ்ருதியில் சொல்லப்படாமையினுல்.*

பட்டது. * 'நாத்மா ஶ்ருதே நித்யத்வாச்ச தாப்ய:' என்றாரம்பித்து ஜீவாத்மாவினுடைய உண்மையின் நிஶ்சயம் சொல்லப்பட்டது. † 'பரா

---

உடையதுகளுமாகிய' என்று. நிஶ்சயத்தை ப்ரயோஜனமாக உடைய என்றர்த்தம். 'ந வியதஶ்ருதே: என்றாரம்பித்து' என்பதனால் 1 'அஸ்தி து' என்பது முதலிய ஆறு ஸூத்ரங்களும், 2 'ஏதேந மாதரிஶ்வா வ்யாக்யாத:' 3 'தேஜோऽதஸ்ததாஹ்யாஹ' 4 'ஆப:' 5 'ப்ருதிவீ' என்கிற நாலு ஸூத்ரங்களும் சொல்லப்படுகின்றன. 'சொல்லப்பட்டது' என்பதற்கு இவ்விதமாக ஆகாசம் முதலியவைகளுக்கு உத்பத்தி உண்டென்று சொல்லியிருப்பதினால் அவைகளின் சேர்க்கையாகிய ஶரீரத்தின் உண்மையும் சொல்லப்பட்டதைப் போலவே என்று தாத்பர்யம். 'நாத்மா ஶ்ருதே:' என்றாரம்பித்து' என்பதனால் 6 'ஜ்ஞோऽத ஏவ,' 'உத்க்ராந்திகத்யாகதீநாம்' 'ஸ்வாத்மநா சோத்தரயோ:' 'நாணுரதச்ச்ருதேரிதி சேந்நேதராதிகாராத்', 'ஸ்வஶப்தோந்மாநாப்யாம் ச' 'அவிரோதஶ்சந்தநவத்' 'அவஸ்திதிவைஶேஷ்யாதிதி சேந்நாப்யுபகமாத்ஹ்ருதி ஹி,' 'குணாத்வாலோகவத்,' வ்யதிரேகோ கந்தவத்ததா ச தர்ஶயதி,' 'ப்ருத

---

* சாரீரகஸூத்ரம்-2-3-18. ஆத்மா-ஆத்மாவானவன், ந-உண்டாகிறதில்லை; ஶ்ருதே:-அப்படி ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினாலும், தாப்ய:-அந்தஶ்ருதிகளாலேயே, நித்யத்வாச்ச-நித்யமாகவேற்படுகிறபடியாலும்.

† சாரீரகஸூத்ரம்-2-3-40. தத்-அந்த கர்த்ருத்வமாவது, பராத்-பரமாத்வினாலுண்டானது, ஶ்ருதே:-ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால்.

1 சாரீரகஸூத்ரம்-2-3-2. அஸ்தி து -ஆகாசத்தின் உத்பத்தியைப்பற்றி ஶ்ருதி இருக்கிறது.

2 சாரீரகஸூத்ரம்-2-3-7. ஏதேந-இந்நயாயத்தினாலேயே, மாதரிஶ்வா-காற்றும், வ்யாக்யாத:-சொல்லப்பட்டது (உத்பத்தியடைந்ததாகவே).

3 சாரீரகஸூத்ரம்-?-3-10. அத:- இந்தவாயுவினிடத்திலிருந்து, தேஜஸ்-தேஜஸ்ஸு (உண்டாகிறது), ததா-அப்படி, ஆஹஹி-ஶ்ருதிசொல்லுகிறதல்லவா.

4 சாரீரகஸூத்ரம்-2-3-11. ஆப:-அந்தத்தேஜஸ்ஸிலிருந்து ஜலமுண்டாகிறது.

5 சாரீரகஸூத்ரம்-2-3-12. ப்ரதிவி-அந்த ஜலத்திலிருந்து ப்ரதிவி உண்டாகிறது.

6 சாரீரகஸூத்ரம்—2-3-19—40. அதஏவ-ஶ்ருதியினாலேயே, ஜ்ஞ:-அறியும் ஶக்தியுள்ளவன் (ஆத்மா). உத்க்ராந்தி - வெளிக்கிளம்புதல், கதி - போகுதல், ஆகதி - திரும்பிவருதல் (இவைகளையும் ஶ்ருதியில் சொல்லியிருப்பதினால் ஜீவன் அணு). உத்தரயோ:-மேலே இருக்கிற போகுதல் திரும்பிவருதலாகிய இரண்டும், ஸ்வாத்மனாச - தன்னுடைய ஸ்வரூபத்தினாலேயே செய்யவேண்

த்து தச்ச்ருதே:' என்று பகவானால் நியமிக்கப்படுகிறவனாகையினாலே பகவானை ஆத்மாவாக உடையவன் என்பதும் சொல்லப்பட்டது இப்படி

---

பதேஶாத்,'' 'தத்குணஸாரத்வாத்து தத்வ்யபதேஶ: ப்ராஜ்ஞவத்,' 'யாவதாத்மபாவித்வாச்ச ந தோஷஸ்தத்தர்ஶநாத்,' 'பும்ஸ்த்வாதிவத்த்வஸ்ய ஸதோऽபிவ்யக்தியோகாத்,' 'நித்யோபலப்த்யநுபலப்தி ப்ரஸங்கோऽந்யதரநியமோ வாந்யதா,' 'கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்,' 'உபாதாநாத்விஹாரோபதேஶாத்,' 'வ்யபதேஶாச்ச க்ரியாயாம் ந சேந்நிர்தேஶவிபர்யய:,' 'உபலப்திவதநியம:,' 'ஶக்திவிபர்யயாத்,' 'ஸமாத்யபாவாச்ச,' 'யதா ச தக்ஷோபயதா,' 'பராத்து தச்ச்ருதே:' என்கிறவரையிலுள்ள

---

டியவைகளாகையினால். அதச்ச்ருதே:-அணு அல்லவென்று ஶ்ருதியில் சொல்லியிருப்பதினால், நாணு:-(ஜீவன்) அணுவல்ல, இதிசேத் என்று சொல்லில் அது உசிதமல்ல, இதராதிகாராத்-ஜீவனைவிட வேறாகிய பகவானைப்பற்றி அவ்விடத்து சொல்லியிருப்பதினால். ஸ்வஶப்த - அணு என்னும் பதம் இருப்பதினாலும், உன்மானுப்யாம் ச-ரோம்பவும் அல்பமாகியவஸ்துவை எடுத்து அதின் அளவுள்ளவன் என்று சொல்லியிருப்பதினாலும் ஜீவன் அணு. சந்தனவத்-சந்தனத்தைப்போல, அவிரோத:-விரோதமில்லை அதாவது நல்லவாசனையுள்ள சந்தனம் தேஹத்தில் ஓரிடத்தில் பூசப்பட்டிருந்தபோதிலும் தேஹத்தில் எல்லாவிடத்திலும் வாசனையுண்டாக்குவதைப்போல் அணுவாகிய ஜீவனும் எங்கேயாவது ஓரிடத்திலிருந்தபோதிலும் தேஹத்தில் எல்லாவிடங்களிலும்உண்டாகிறஸுகதுக்கங்களை அநுபவிப்பதற்கு விரோதமில்லை. அவஸ்திதிவைசேஷ்யாத் - இருப்பில் வ்யத்யாஸமிருக்கிறபடியினால்(அந்த உதாஹரணம் பொருந்தாது அதாவதுசந்தனம் தேஹத்தில்ஒருஇடத்திலிருக்கிறது. அவ்விதமாகஆத்மாதேஹத்திலிருக்கிறதாகச்சொல்லவில்லையாகையினால் உதாஹரணத்திற்கு வ்யத்யாஸமுண்டென்று கருத்து). இதிசேத் - என்னில், ந - அப்படியில்லை, அப்யுபகமாத் - (ஆத்மாவிற்கும் அவ்விதமாக தேஹத்தில் ஓரிடத்தில் இருப்பை) ஒப்புக்கொள்ளுகிறபடியினால், ஹ்ருதிஹி - (இந்த ஆத்மாஹ்ருதயத்திலல்லவோ) இருக்கிறான். ஆலோகவத் - வெளிச்சத்தைப்போல, குணாத் - தனக்குக்குணமாகிய தர்மபூதஜ்ஞானத்தினால் (எல்லாத் தேஹத்தையும் வ்யாபரிக்கிறது ஜீவன்). கந்தவத்-வாசனை என்னும் குணத்தைப்போல, வ்யதிரேக:-(ஜ்ஞானமாகிற குணத்திற்குஜீவாத்மாவைவிட) பேதம் (ஏற்பட்டது), ததாச - அப்படியே (அதாவது குணமென்றே), தர்சயதி - ஶ்ருதி சொல்லுகிறது. ப்ருதகுபதேசாத்-(ஜீவனைவிட ஜ்ஞானமாகிய குணத்தை) தனியாகச் சொல்லியிருக்கிறபடியினால் (அது குணம்). தத்குணஸாரத்வாத - அந்த ஜ்ஞானமென்கிற குணத்தையே ஸாரமானதாக உடையதாகையினால், தத்வ்யபதேச:-ஜ்ஞானம் என்று சொல்லியிருப்பது, ப்ராஜ்ஞவத்- பரமாத்மாவைப்போல, அதாவது ஸர்வஜ்ஞனென்றுசொல்லியிருக்கிற பரமாத்மாவை ஜ்ஞானம் என்றும் சொல்லியிருப்பதைப்போல என்று கருத்து. யாவதாத்மபாவித்வாச்ச - (இந்த

ஜ்ஞானமாகிற குணம்) ஜீவாத்மா உள்ளவரையில் இருக்கிறபடியினாலும், நதோஷ:-தோஷமில்லை அதாவது ஜ்ஞானமென்று ஜீவாத்மாவைச் சொல்லுவதால் தோஷமில்லை, தத்தர்சனாத் - அப்படியே ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால். ச என்பதனால் ஜ்ஞானத்தைப்போல இதுவும் ஸ்வயம் ப்ரகாசம் ஆகையினாலும் என்று தாத்பர்யம். ஸத:-தூங்கும்பொழுதும் இருந்து கொண்டிருக்கிற, அஸ்ய - இந்த ஜ்ஞானத்திற்கு, பும்ஸ்த்வதா திவத்-ஆண்பிள்ளைத்தன்மைமுதலியவைகளைப்போல, அபிவ்யக்தியோகாத் - விழித்துக்கொண்டிருக்கும்பொழுது ப்ரகாசமுண்டாகிறபடியினால் (எப்பொழுதும் ஆத்மாவிற்கு ஜ்ஞானமுண்டு). அந்யதா-ஆத்மாஜ்ஞான ரூபமென்றும் அது எல்லாவிடத்திலுமிருக்கிறதென்று ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில், நித்யோபலப்தி - எப்பொழுதும் எல்லா வஸ்துக்களும் தெரியவேண்டியதாகவும், அனுபலப்தி-தெரியமாலிருக்க வேண்டியதாகவும், ப்ரஸங்க:-வரும், அந்யதரநியமோவா - இவைகளிரண்டில் ஒன்று எப்பொழுதுமிருக்கவேண்டியதாகவாவது வரும். கர்த்தா-இந்த ஜீவாத்மா கர்த்தா, ஶாஸ்த்ரார்த்தவத்வாத் - ஶாஸ்த்ரங்களுக்கு ப்ரயோஜனமுண்டாக வேண்டியதாகையினால் அதாவது ஜீவாத்மா கர்த்தாவாக இல்லாவிடில் இதைச்செய், இதைச்செய்யாதே என்று சொல்லுகிற ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாய்விடும் என்று கருத்து. உபாதானாத் - (இந்த்ரியங்களை) க்ரஹித்துக்கொண்டு போகிறானென்று சொல்லியிருப்பதனாலும், விஹாரோபதேசாச்ச - விளையாடுகிறானென்று சொல்லியிருப்பதினாலும் (கர்த்தா). க்ரியாயாம் - கார்யத்தில், வ்யபதேசாச்ச-கர்த்தாவென்று சொலலியிருப்பதனாலும், நசேத் - அப்படிக்கர்த்தாவாக இல்லாவிடில், நிர்தேசவிபர்யய:-வேறு விதமாகச்சொல்லியிருக்கவேண்டும். உபலப்திவத் - ஜ்ஞானத்தைப்போலவே; அநியம:-ப்ரயோஜனத்திற்கு நியமமில்லாமல் போகவேண்டிவரும் அதாவது ஆத்மா விபு என்று ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் எல்லா வஸ்துக்களும் எல்லாருக்கும் தெரியவேண்டியவரும் ஆகையால் எப்படி நியமமில்லையோ அதைப்போலவே. ப்ரக்ருதி கர்த்தா என்று ஒப்பும் பக்ஷத்தில் அது எல்லா ஆத்மாக்களுக்கும் பொதுவானதால் எல்லா ஆத்மாக்களுக்கும் எல்லாக்கர்மங்களின் பலம் உண்டாகவேண்டி வரும். ஶக்திவிபர்யயாத் - (ப்ரக்ருதியே) கர்த்தாவாகும் பக்ஷத்தில் கர்த்தாவுக்கே பலத்தை யனுபவிக்கக்கூடிய யோக்யதை உண்டாகையினால் போக்த்ருத்வமும் ப்ரக்ருதிக்கே இருக்கவேண்டி வரும். ஸமாத்யபாவாச்ச - ப்ரக்ருதியே கர்த்தா வென்னில் மோக்ஷஸாதனமாகிய ஸமாதி ஸம்பவிக்காதாகையினாலும் அதாவது ப்ரக்ருதியைவிட வேறுபட்டவன் என்கிற ஸமாதியல்லவோ மோக்ஷஸாதனமென்று உங்கள் கொள்கை. அப்படி ப்ரக்ருதி செய்யக்கூடாதல்லவா. யதாச தக்ஷா - தச்சனைப்போலவே, உபயதா - இரண்டு விதமாகவும் ஏற்பாடு வித்திக்கிறது அதாவது தச்சன் எல்லாக் கருவிகளிருந்தபோதிலும் தன்னிஷ்டமிருந்தபோது செய்கிறான் இல்லாவிடில் விட்டுவிடுகிறான் அதைப்போலவே இவ்விடத்திலும்.

அனேகவிதமாகச் சொல்லப்பட்ட சரீரம் ஜீவாத்மா இவைகளின் உண்மையை என்னால் சுருக்கமாகவும் ஸ்பஷ்டமாகவும் சொல்லப்படுகிறதைக் கேள், என்றர்த்தம். 4

மஹாபூதாந்யஹங்காரோ பு₃த்₃தி₄ரவ்யக்தமேவ ச |
இந்த்₃ரியாணி த₃ஶைகம் ச பஞ்ச சேந்த்₃ரியகோ₃சரா: || 5
இச்சா₂ த்₃வேஷ: ஸுக₂ம் து₃:க₂ம் ஸங்கா₄தஶ்சேதநா த்₄ருதி: |
ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகாரமுதா₃ஹ்ருதம் || 6

ப-ரை] மஹாபூதாநி - பஞ்சமஹாபூதங்களும், அஹங்கார: - அஹங்காரமும், பு₃த்₃தி₄: - மஹானும், அவ்யக்தமேவ ச — ப்ரக்ருதியும் (ஶரீரத்திற்குக் காரணமாகிய வஸ்துக்கள்), த₃ஶ — பத்தாயும், ஏகம் ச — ஒன்றாகவுமிருக்கிற அதாவது பதினோன்றாயிருக்கிற, இந்த்₃ரியாணி - இந்த்ரியங்களும், இந்த்₃ரியகோ₃சரா: - இந்த்ரியங்களா லறியக்கூடியவைகளாகிய, பஞ்ச ச — ஐந்து குணங்களும் சரீரத்தையடைந்திருக்கும் வஸ்துக்கள், இச்சா₂ - ஆசை, த்₃வேஷ: - த்வேஷம், ஸுக₂ம் - ஸுகம், து₃:க₂ம் - துக்கம் (இவைகள் ஶரீரத்தினலுண்டாக்கப்படும் விகாரங்கள்), சேதநாத்₄ருதி: - ஜீவாத்மாவுக்கு ஆதாரமாகிய, ஸங்கா₄த: -

---

ஸூத்ரங்களின் கூட்டம் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது.' என்றாரம்பித்து 'ஜந்மாத்₃யஸ்ய' என்றிவை முதலிய ஸூத்ரங்களினால், என்று பாடமானபொழுது முதலிய என்னும் பதத்தினால் கீழ்ச்சொல்லிய ஸூத்ரங்கள் சொல்லப்படுகின்றன. 'பகவானால் நியமிக்கப்படுகிறவனாகையினாலே' என்பதற்குச் சேதனனைக்குறித்து எப்பொழுதும் நியமிக்கக்கூடியவஸ்துவாக விருக்கை ஶரீரத்திற்கு லக்ஷணமாகையினாலென்று தாத்பர்யம். ஶ்ருதி முதலியவைகளால் நிரூபிக்கப்படுகிற ஶரீரம் ஆத்மா இவைகளின் உண்மை அவைகளாலேயே தெரிந்துகொள்ளமுடியுமாகையினால் உம்மிடத்திலிருந்து எதற்காகக் கேழ்கவேண்டும் என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரிப்பதற்காக கீழ் ஶ்லோகத்தில் சொல்லிய 'தத்ஸமாஸேந மேஶ்ருணு' என்கிறவாக்யத்தை இவ்விடத்தில் சேர்த்துக்கொண்டு அதின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'இப்படி அனேகவிதமாக' என்றாரம்பித்து. ஶரீரம் ஜீவாத்மா இவைகளின் உண்மை ஶ்ருதி முதலியவைகளால் அதிக விஸ்தாரமாக அநேகவிதமாய்ச் சொல்லப்பட்டிருப்பதினாலே அல்ப புத்தியையுடைய உன்னால் ஸ்பஷ்டமாகத் தெரிந்துகொள்ள முடியாதாகையினால் எல்லாந் தெரிந்தவனாகிய என்னால் சுருக்கமாகவும் ஸ்பஷ்டமாகவும் சொல்லப்படுகிற அது, கேழ்க்கத்தக்கது என்று தாத்பர்யம். 4

அநேக வஸ்துக்களின் சேர்க்கை, ஏதத் - இந்த, க்ஷேத்ரம் - ஶரீரமானது, ஸவிகாரம் - விகாரங்களுடன், ஸமாஸேந - சுருக்கமாக, உதாஹ்ருதம் - சொல்லப்பட்டது. 5–6

பா] 'மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவச' என்று ஶரீரத்திற்குக் காரணமாகிய வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன. ப்ரதிவி, ஜலம், தேஜஸ்ஸு, காற்று, ஆகாஶம், இவைகள் மஹாபூதங்கள். அஹங்காரமாவது பூதாதி. புத்தி என்பது மஹான். அவ்யக்தம் என்பது ப்ரக்ருதி. 'இந்த்ரியாணி தஶைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசரா:' என்று ஶரீரத்தை யடைந்திருக்கும் வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன. காது,

---

தா] 'தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச' என்கிற ஶ்லோகத்தில் 'யச்ச' என்று சொல்லியிருப்பதை 'மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவச' என்பது நிரூபிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'மஹாபூதாநி' என்றாரம்பித்து, 'ஶரீரத்திற்குக் காரணமாகிய வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன' என்கிற வரையில். 'பூத' என்னும் பதம் ஶரீரத்துடன் கூடிய ஜீவாத்மாக்களிடத்திலும் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதனால் அதை விலக்குவதற்காக இந்த ஸந்தர்ப்பத்திற்குபயோகமான அர்த்தத்தைச்சொல்லுகிறார்—'ப்ரதிவி' என்றாரம்பித்து. 'அஹங்கார:' என்னும் பதம் மூன்றுவிதமான அஹங்காரங்களையும் சொல்லுவதாயிருந்தபோதிலும் ஸாத்விகாஹங்காரம் இந்த்ரியங்களுக்குக் காரணமாகையினாலும் ராஜஸாஹங்காரம் இரண்டுக்கும் ஒத்தாசை செய்கிறபடியாலும் தாமஸாஹங்காரத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்—'அஹங்காரமாவது' என்றாரம்பித்து. புத்தி என்னும் பதம் ஜ்ஞானத்தைச் சொல்லுகிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'புத்தி என்பது மஹான்' என்று. அவ்யக்தம் என்னும் பதம் 1 'அவ்யக்தமக்ஷரத்தில் லயிக்கிறது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட அவ்யக்தத்தைச் சொல்லுவதாக இருந்தால் அதின் காரணமும் சொல்லவேண்டியதாகும் என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு அதற்கு வ்யாக்யானம் செய்கிறார்—'அவ்யக்தம் என்பது ப்ரக்ருதி' என்று. 'இந்த்ரியாணி தஶைகஞ்ச' என்றிவை முதலியது யாத்ருக்ச என்று கீழ்ச்சொல்லியதை நிரூபிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் 'இந்த்ரியாணி' என்றாரம்பித்து, 'ஶரீரத்தையடைந்திருக்கும் வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன' என்கிறவரையில். இந்த்ரியங்கள் பதினொன்று என்பதை வ்யக்தமாக்குவதற்காகவும் அவைகளா லறியக்கூடியவைகள் ஐந்தென்பதை

---

1 ஸுபாலோபநிஷத் - 2 வது கண்டம்.

தோல், கண், நாக்கு, மூக்கு, ஆகிய ஐந்தும் ஜ்ஞானேந்த்ரியங்கள். வாய் கை, கால், அபானம், உபஸ்தம், இவ்வைந்தும் கர்மேந்த்ரியங்கள் இவை இரண்டும் சேர்ந்து பத்து. ஒன்றென்பது மனது. 'இந்த்ரியகோசரா:' (இந்த்ரியங்களா லறியக்கூடியவைகள்)ஐந்து அவையாவன ஓசை, ஸ்பர்ஶம், ரூபம், ரஸம், வாஸனை. 'இச்சா த்வேஷ: ஸுகம் து:கம்' என்று ஶரீரத்தினாலுண்டாக்கப்படுகிற அதின் விகாரங்கள் சொல்லப்படுகின்றன. ஆசை, த்வேஷம், ஸுகம், துக்கம், இவைகள் ஜீவாத்மாவின் ஸ்வபாவங்கள். அப்படியிருந்தபோதிலும் ஜீவாத்மா ஶரீரத்தோடு சேர்ந்

ஸ்பஷ்டமாக்குவதற்காகவும் 1 'த்வக்சக்ஷுர் நாஸிகா ஜிஹ்வா ஶ்ரோத்ரமத்ர ச பஞ்சமம்। ஶப்தாதீனாமவாப்த்யர்த்தம் புத்தியுக்தானி வை த்விஜ ॥ வாயுபஸ்தௌ கரௌ பாதௌ வாக் ச மைத்ரேய பஞ்சமீ। விஸர்கஶில்பகத்யுக்தி கர்ம தேஷாஞ்ச கத்யதே॥ மனஶ்சைகாதஶம் த்வத்ர' என்றுபராசரர் சொல்லியிருப்பதை யனுஸரித்தும் அந்த இந்த்ரியங்களையும் அவைகளின் விஷயங்களையும் விசேஷித்துச் சொல்லுகிறார்—'காது' என்றாரம்பித்து. 'இச்சா த்வேஷ: ஸுகம் து:கம்' என்கிறது 'ஸவிகாரம்' என்று சொல்லியிருப்பதை விவரிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இச்சா த்வேஷ:' என்றாரம்பித்து. ஆசை முதலியவைகள் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகிய ஶரீரத்தின் மாறுதல்கள் அல்லாமையாலே ஶரீரத்தின் விகாரங்களென்பது எப்படிப்பொருந்தும். மேலும் ஜீவாத்மாவின் ஸ்வபாவமாகிய தர்மபூத ஜ்ஞானத்தின் விகாரங்கள் என்பதே உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் ஆக்ஷேபிக்கிறார்—'ஆசை, த்வேஷம்' என்றாரம்பித்து. அவைகள் ஶரீரத்தின் விகாரங்களென்று சொல்லியிருப்பது ஔபசாரிகம் என்கிற அபிப்ராயத்தினால் பரிஹரிக்கிறார்—'அப்படி யிருந்தபோதிலும்' என்றாரம்பித்து. ஶரீரத்திற்கே அஸாதாரணமான கார்யங்களாக

1 விஷ்ணுபுராணம்—1 - 2 - 48 - 49. த்விஜ - ஓ, ப்ராம்மணனே, த்வக் - தோல், சக்ஷு:-கண், நாஸிகா - மூக்கு, ஜிஹ்வா - நாக்கு, அத்ர - இவைகளில், பஞ்சம - ஐந்தாவதாகிய, ஶ்ரோத்ரம் - காது (இவைகள்), ஶப்தாதீனாம் - ஓசை முதலியவைகளை அவாப்த்யர்த்தம் க்ரஹிப்பதற்காக, புத்தியுக்தானி - ஜ்ஞானத்தோடு கூடியதுகள். மைத்ரேய - ஓ, மைத்ரேயனே, பாயூபஸ்தௌ - குதம், உபஸ்தம் இவைகள், கரௌ - கைகள், பாதௌ - கால்கள், பஞ்சமீ - ஐந்தாவதாகிய, வாக்ச - வாக்கும் (கர்மேந்திரியங்கள்), தேஷாம் - அவைகளுக்கு, விஸர்க - மலமூத்ராதிகளை விடுதலும், ஶில்ப - சித்ரம் எழுவதும், கதி - நடப்பதும், உக்தி - பேசுவதும், கர்ம - கார்யமாக, கத்யதே - சொல்லப்படுகிறது, அத்ர - இவைகளில், மன - மனதானது, ஏகாதசம் - பதினொன்றாவது.

திருப்பதினால் உண்டானவைகளாகையினாலே ஶரீரத்தினாலுண்டாக்கப் படுகிறவைகள் ஆகையால் ஶரீரத்தின் விகாரங்கள் என்று சொல்லப்படு கின்றன. அவைகள் ஜீவாத்மாவின் ஸ்வபாவமென்பது † ‘புருஷஸ்ஸு

இருப்பதே அப்படி உபசாரமாகச் சொல்லியிருப்பதற்குக் காரணம் என்று தாத்பர்யம். ஆசை முதலியவைகள் தர்மபூத ஜ்ஞானத்தின் விகாரமென்பது எப்படி? 1 ‘காமம் ஸங்கல்பம்’ என்றர்த்தமுள்ள வாக்யம் முதலான ஶ்ருதி வாக்யத்தில் அவைகள் மனதின் விகாரமென்று சொல்லியிருக்கிறபடியினாலும், 2 ‘பஞ்சவ்ருத்திர்மநோவத் வ்யபதிஶ்யதே’ என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் காமம் முதலியது மனதை விட வேறு வஸ்துவல்ல என்று சொல்லியிருக்கிறபடியாலும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—‘அவைகள்’ என்றாரம்பித்து. ஆகாரமாக இருக்கையல்லாமல் காரணமாக இருக்கை மாத்திரம் ஜீவனுக்கிருக்கட்டுமேஎன்றுசொல்லுவதுஸரியல்ல 3 ‘கார்யகாரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே’ என்கிறமுன்வாக்யத்தில் க்ரியைக்கு ஆதாரமாகஇருக்கையாகிற கர்த்தாவாயிருப்பதற்குப்ரக்ருதி இருப்பிடமாகையினாலே‘ஹேது:’ என்றுசொல்லியிருக்கிறபடியால்அதற்குவ்யத்யாஸம் வருகிறபடியினால். அந்த: கரணத்தோடுசேர்ந்த சைதன்யமாகிய ஜீவன்,புருஷன் என்னும்பதத்தினால் சொல்லப்படுகிறபடியினால் 1 ‘காமம் ஸங்கல்பம்’ என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தை யனுஸரித்து அப்படியாதாரமாக யிருப்பதற்குத் தகுந்திருக்கிறபடியினால் அந்த அந்த: கரணம் அவைகளுக்கு ஆதாரம் என்பதையே சொல்லு கிறது 3 ‘புருஷஸ்ஸுகது:கா நாம்’ என்கிற இந்த வாக்யம் என்று சொல்லுவதும் உசிதமல்ல. தேஹம் முதலியவைகளைப்போல அந்த: கரணமும் ப்ரக்ருதியின் மாறுதலாகையினால் கார்யம் காரணம் இவைகளுக்கு கர்த்தாவாயிருப்பதிலும்ஸுகதுக்கங்களுக்குப்போக்தா வாயிருப்பதிலும் காரணம் ப்ரகிருதி என்று சொல்லப்படுகிறது என்று ஒரே வாக்யமாகவே இருக்கவேண்டியதாகையினால். சைதன்யத்தின் சேர்க்கையினால் போக்தாவாயிருப்பதற்கு ஆதாரமாகஇருக்கை ஏற்பட்டது ஆகையினால் 3 ‘புருஷஸ்ஸுகது:கா நாம்’ என்று தனித்

† பகவத்கீதை - 13 - 20.

1 ப்ரஹதாரண்யகம் . 3 - 5 - 3.

2 சாரீரகஸூத்ரம் - 2 - 11 மநோவத் - மனதைப்போல (ப்ராணவாயுவே), பஞ்சவ்ருத்தி:-ஐந்துவிதமான வ்ருத்திகளையுடையதாக, வ்யபதிஶ்யதே- சொல்லப்படுகிறது.

3 பகவத்கீதை - 13 - 20.

வஷூஃவா நாம ஹொதூ ரெகஹொதாரா வூடிதெ' என்று மேலே சொல்லப்படப்போகிறது. 'ஆயூ திஃ' என்பதற்கு ஆதாரம் என்றர்த்தம். ஸுக துக்கங்களை யனுபவிக்கிறவனும் இஹலோக ஸுகம் மோக்ஷம் இவைகளை ஸம்பாதிக்கிறவனுமிருக்கிற ஜீவாத்மாவுக்கு ஆதாரமாக உண்டாகிய பஞ்சபூதங்களின் சேர்க்கை, அதாவது ப்ரக்ருதி முதலாக ப்ரதிவி வரையிலுள்ள வஸ்துக்களாலுண்டாக்கப்பட்டதாகவும் இங்

துச்சொல்லியிருக்கிறது என்னில் கர்த்தாவாயிருப்பதற்கு ஆதாரமாக இருக்கையும் அந்தச்சைதன்யத்தின்ஸம்பந்தத்தாலேற்பட்டபடியினால் அப்பொழுதும் ஒரே வாக்யமாகச்சொல்லியிருக்கலாம். இப்படியாகில் 1 'காமம் ஸங்கல்பம்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திற்கும் 2'ஒம வஷூதிஊரெநாவஷூவஷிஶூடிதெ' என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்திற்கும் எவ்விதமாக சேர்க்கை யுண்டு ? என்னில் காமம் ஸங்கல்பம் முதலியபதங்களால் சொல்லப்படுகிற தர்மபூத ஜ்ஞானத்தின்மாறுதல்களுக்குக் காரணமாகிய மனதின் மாறுதல்களை அதின் கார்யங்களைச்சொல்லும் பதங்களினால் சொல்லிக்கொண்டு அவைகள் மனதை விட வேறு வஸ்துவல்ல என்று நிரூபிப்பதில் தாத்பர்யமாகையினால் பொருத்த முடையதாகிறது. இரண்டு வாதிகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட காமம் முதலிய பேர்களையுடைய மனதின் அவஸ்தைகளாலேயே எல்லாக்காரியங்களும் உசிதமாயிருக்க காமம் முதலிய பதங்களினால் சொல்லப்படுகிற தர்மபூத ஜ்ஞானத்தின் மாறுதல்களைக் கல்பிப்பதில் ப்ரமாணமில்லாமையினால் காமம் முதலிய பதங்கள் மனதின் அவஸ்தைகளை லக்ஷணையாகச் சொல்லுகின்றன வென்பதும் உசிதமல்ல. 3 'அவன் ஆசைப்பட்டான்' என்றும், 4 'பிறகு புருஷனாகிய நாராயணன் ஆசைப்பட்டான்' என்றும், இதற்குச்சமமான இன்னொரு இடத்தில் 5 'அந்த ஸத்பார்த்தது' என்றும், 6 'அவன் பார்த்தான்' என்றும், அந்த: கரணமில்லாத லோகங்களுக்குக் காரணமாகியவஸ்துவினிடத்திலிருக்கிற ஜ்ஞானத்தைச்சொல்லுகிற 'ஶூக்ஷதி' என்னும் தாதுவை உபயோகப்படுத்தியிருப்பதினாலும், 7 'அவன் தபஸ்ஸு செய்தான்'

1 ப்ரஹதாரண்யகம் - 3 . 5 3. 2 55 பக்கம், 2-வது புட்நோட்டைப் பார்க்க. 3 தைத்ரீயம் ஆனந்தவல்லி - 6 - 2.

4 நாராயணோபநிஷத்.

5 சாந்தோக்யம் - 6 - 2 - 3.

6 ப்ரஸ்னோபநிஷத் - 6 - 3.

7 தைத்ரீயம் ஆனந்தவல்லி - 6 - 4.

த்ரியங்களுக்கிருப்பிடமாகவும் ஆசை, த்வேஷம், ஸுகம், துக்கம், என்று அதற்குச்சமமான இடத்தில் சொல்லப்பட்ட தபஸ்ஸு என்னும் பதத்திற்கு 1 'எவனுடைய தபஸ்ஸு ஜ்ஞானரூபமோ' என்று ஜ்ஞான என்னும் பதத்தினால் வ்யாக்யானம் செய்திருப்பதினாலும், 2 'அவன் பித்ருக்களின் கூட்டங்களில் ஆசையுள்ளவனாக ஆகிறானேயானால் அவனுடைய ஸங்கல்பத்தினாலேயே பித்ருக்கள் உண்டாகிறார்கள்' என்கிற வாக்யத்தில் காமம் ஸங்கல்பம் முதலிய இவைகள் முக்தனிடத்திலிருப்பதாகச் சொல்லியிருப்பதினாலும், ஸுகம் என்கிற பதத்தின் அர்த்தத்தையே சொல்லுகிற ஆனந்தம் என்பது 3 'ரஸமாகிற ப்ரம்மத்தை யடைந்து இவன் ஆனந்தத்தை உடையவன் ஆகிறான்' என்றும் 4 'ப்ரம்மத்தின் ஆனந்தத்தைத் தெரிந்துகொண்டவன்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் அனுகூலமாகத் தெரிந்துகொள்ளுவதே ஆனந்தம் என்று பாஷ்யகாரர் வ்யாக்யானஞ் செய்திருக்கிறபடி முக்தன், ப்ரம்மம், இவர்களுடைய ஜ்ஞானத்தின் அவஸ்த்தை என்று சொல்லியிருப்பதினாலும் 5 'நிரஸ்தாதிஶயாஹ்லாதஸுகபாவைகலக்ஷணா| பேஷஜம் பகவத்ப்ராப்திரேகாந்தாத்யந்திகீ மதா' என்றும், பகவானை யனுபவிப்பதாகிய பகவானை அடைவது ஸுகம் என்று புராணத்தில் சொல்லியிருக்கிறபடியினாலும், காமம், ஸங்கல்பம், ஸுகம் முதலியவைகள் ஜ்ஞானத்தின் அவஸ்த்தா விசேஷங்கள் என்பது அவஶ்யமாக ஒப்புக்கொள்ளவேண்டியதாகையினாலும், மனதின் அவஸ்த்தைகள் ஜ்ஞானமல்லவாகையினாலே வேறொன்றினாலேயே ப்ரகாசஞ் செய்யக்கூடியவைகளாகையினால் வேறொன்றினாலேயே ப்ரகாசஞ் செய்யக்கூடியவைகளல்லாமையாகிய பெரிய ஸ்வபாவம் இல்லாமையினால் சின்னதாகிய வேறொரு வஸ்துவின் ப்ரகாசத்திற்குக் காரணமாக இருப்பதும் ஸம்பவிக்காதாகையினால் இவைகள் ஜ்ஞானத்தின் அவஸ்த்தா விஶேஷங்களெ

1 முண்டகோபநிஷத் - 1 - 1-9.

2 சாந்தோக்யம் - 8 - 2 – 1.

3 தைத்திரீயம் ஆனந்தவல்லீ - 7 - 1.

4 தைத்திரீயம் ஆனந்தவல்லீ - 9 - 3.

5 விஷ்ணுபுராணம்—5 - 6 - 59. நிரஸ்தாதிசய - தள்ளப்பட்ட மற்றவஸ்துக்களின் மேன்மையையுடைய அதாவது தன்னைவிட மேற்பட்ட வஸ்துவில்லாததாகிய, ஆஹ்லாத - சந்தோஷத்தை யுண்டாக்குகிற, ஸுகபாவைகலக்ஷணா - ஸுகமாயிருப்பதொன்றையே அடையாளமாக உடைய, ஏகாந்தத்யாத்யந்திகீ - வேறொரு வஸ்துவைப்பற்றி யில்லாததாயும் நித்யமாயுமிருக்கிற, பகவத்ப்ராப்தி: பகவானையடைவதானது, பேஷஜம் - மருந்தாக, மதா - எண்ணப்பட்டது.

இவைகளாகிற விகாரங்களை யுடையதாகவும் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகவும் ஜீவனுக்கு ஸுகத்தையும் துக்கத்தையு மனுபவிப்பதற்கு

---

ன்று ஒப்புக்கொள்ளாத பக்ஷத்தில் வேறு விஷயங்களை ப்ரகாசஞ் செய்வதும் அவைகளை வ்யவஹரிப்பது முதலியவைகளும் பொருந்தாதாகையினாலும், தானே ப்ரகாசிக்கக்கூடிய ஜ்ஞானத்தின் அவஸ்தா விஶேஷங்களென்று ஒப்புக்கொள்ளுவது அவஶ்யமாகையினால், அசேதன வஸ்துக்களில் ஶக்தியைக் கல்பிப்பது ந்யாயமல்லவாகையினால், 'காமம் ஸங்கல்பம்' முதலிய பதங்கள் மனதின் அவஸ்தைகளை லக்ஷணையாகச் சொல்லுகிறதென்பது ந்யாயத்தை யனுஸரித்ததாகையினால். மனதின் அவஸ்த்தைகள் சைதன்யத்தின் ஸம்பந்தத்தினால் விஷயங்களை ப்ரகாசஞ் செய்வது முதலியவைகளில் ஸாமர்த்திய முள்ளதாகிறது என்பதும் ஸரிபல்ல. ஒரு விசேஷங்களுமில்லாத சைதன்யம் எல்லா விஷயங்களிலும் நிவ்ருத்தியடைந்ததானபடியினால் விஷயங்களை ப்ரகாசஞ் செய்வது முதலியவைகளுக்கு யோக்யதையற்றதாகையினால் அத்தோடு சேர்ந்திருப்பது [1] 'ஶதமப்யந்தாநாம் ந பஶ்யதி' என்கிற ந்யாயத்தினால் விஷயங்களை ப்ரகாஶம் செய்வது முதலியவைகளுக்கு ஸாமர்த்தியத்தை உண்டாக்காது ஆகையினாலும், அப்படி விசேஷங்களில்லாத சைதன்யம் விஷயங்களை ப்ரகாசஞ் செய்ய யோக்யதை உள்ளதாக இருந்தால் அதினாலேயே ப்ரகாசம் முதலியவைகள் உண்டாகும்பொழுது, மனதின் தசைகளோடு சேர்ந்திருப்பது என்று கல்பிப்பது வ்யர்த்தமாகும். ஸம்ஸாரத்திலிருக்கும் தசையில் சுருக்கத்தையடைந்திருக்கிற அந்தச் சைதன்யத்திற்கு விஷயங்களினுடைய ஏற்பாட்டிற்கு உபயோகப்படுவதினால் ப்ரயோஜன முண்டென்று சொல்வதும் உசிதமல்ல; அந்தச் சைதன்யத்திற்குச் சுருக்கம் ஒப்புக்கொள்ளும் பக்ஷத்தில் விகாரங்களற்றது என்று சொல்லுகிற ஶ்ருதி முதலியவைகளுக்கு விரோதம் வருகிறபடியினாலும் கண் முதலிய இந்த்ரியங்களின் வழிகளாலேயே விஷயங்களின் ஏற்பாடு பொருந்துமாதலாலும். நம்முடையபக்ஷத்திலோ தர்மபூத ஜ்ஞானத்திற்குச் சுருக்கம் முதலிய விகாரம் ஒப்புக்கொள்ளப்பட்டதாதலால் ஒருவிதக்கஷ்டமுமில்லை, என்றிவை யெல்லாவற்றையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு பாஷ்யத்தில் 'அவைகள் ஜீவாத்மாவின் ஸ்வபாவம் என்பது' என்றாரம்பித்துச் 'சொல்லப்பட்டது. 'சேதநாத்ருதி:' என்பது இரண்டு பதமல்ல, ஜ்ஞானம் ஶரீரத்திற்குள்ளடங்கியதல்லவாகையினால் ஒரே பதமாகவிருந்தபோதிலும் சேதனஜ்ஞானத்திற்கு த்ருதி: ஆதார

---

1 குருடர்கள் நூறுபேர்கள் சேர்ந்தாலும பார்க்கமாட்டார்கள்.

ஆதாரமாகவிருப்பதையே ப்ரயோஜனமாகவுடையதாகவு மிருக்கிறது ஶரீரம் என்று சொல்லப்பட்டது. இப்படிப்பட்ட ஶரீரம் சுருக்கமாக அதின் கார்யங்களுடன் சொல்லப்பட்டது. 5—6

---

மென்றும் பதங்களுக்குப்பிரிவில்லை. த்ருதிஃ என்னும் பதம் ஆதாரம் என்னுமர்த்தத்தைச்சொல்லுவதாகவிருந்தால் ஶரீரத்திற்கு, ஜ்ஞானத்திற்கு ஆதாரமாகவிருக்கை ஸம்பவிக்காதாகையினால். ஸுகதுக்கங்களை யனுபவிக்குமிடம் என்னுமர்த்தத்தைச் சொல்லுவதாகவிருந்தால் ஒரு விஶேஷங்களுமில்லாத சைதன்யத்திற்கு ஸுகதுக்கங்களை அனுபவிக்கை ஒப்புக்கொள்ளப்படவில்லையாகையால். 1 'இந்த ஆத்மா பார்க்கிறவன், கேழ்கிறவன், ருசியையறிகிறவன், வாஸனையை முகருகிறவன், நினைக்கிறவன், அறிகிறவன், கர்த்தா, ஜ்ஞான ஸ்வரூபனாகிய புருஷன்,' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் அறிகிறவனாகவிருக்கையையும் கர்த்தாவாக யிருக்கையையுமுடைய சேதனனுக்கே ஸுகதுக்கங்களையுமனுபவிக்கிறவனாகவிருக்கையும் சொல்லியிருக்கிறபடியினால், 'சேதநா' 'த்ருதிஃ' என்று பிரிக்கவேண்டியது, 'சேதநா' என்னும் பதத்தினால் ஜீவாத்மா சொல்லப்படுகிறான். 'ஹூமெதாஉஹ்ரூஃ' என்பதைப் போல 'த்ருதிஃ' என்னும்பதமும் ஆதாரத்தைச்சொல்லுகிறது என்றுசொல்லுகிறார்—'த்ருதிஃ என்பதற்கு ஆதாரம்என்றர்த்தம்' என்று. இவ்விடத்தில் சொல்லவேண்டியதாக உத்தேசிக்கபபட்ட அர்த்தத்தின் வரிசையை யனுஸரித்து முன் பின் பதங்களுக்கு வ்யத்யாஸமாக வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. ஆதாரமாக விருக்கையாவது இவ்விடத்தில் ஸுகதுக்கங்களை யனுபவிப்பதற்கு இடமாக இருக்கையாகையினால் ஆதேயத்வம் ஶரீரத்தின் லக்ஷணமென்பதற்கு விரோதமில்லை என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'ஸுக துக்கங்களை' என்றாரம்பித்து. 'மஹாபூதாநி' என்றாரம்பித்துச் சொன்ன வர்த்தம் ஸுலபமாய்த் தெரியவேண்டியதற்காக 'மஹாபூதாநி' என்றாரம்பித்துச் சொன்னது. 'தச்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக்ச' என்றாரம்பித்துக் கேழ்க்கப்பட்ட ஐந்து விதமான கேழ்வைகளுக்கும் ஸமாதானஞ் சொல்லுகிறது என்று காட்டிக்கொண்டு மொத்த அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது ப்ரக்ருதி' என்றாரம்பித்து. 'ஸவிகாரம்' என்னும் பதத்தினால் ஆசை முதலியவைகளும் ஶரீரத்தின் மாறுதல்கள் என்று சொல்லப்படுகிறது என்னும் ஸந்தேஹத்தை நீக்குவதற்காகச் சொல்லுகிறார்—'அதின் கார்யங்களுடன்' என்று. 5-6

---

1 ப்ரஶ்நோபநிஷத் - 4 - 9.

ஷ்டிக்கவும் தக்கதான யோக்யதை, 'ஸ்தைர்யம்' - வேதாந்த ஶாஸ்த்ரங்களில்சொல்லப்பட்டஅர்த்தத்தில்சலிக்காமலிருக்கை, 'ஆத்மவிநிக்ரஹ:' - ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர மற்ற விஷயங்களிலிருந்து மனதை நிவ்ருத்தி செய்தல். 7

இந்த்ரியார்த்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச |
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது:கதோஷாநுதர்ஶநம் ||

ப - ரை] இந்த்ரியார்த்தேஷு - இந்த்ரியங்களினுடைய விஷயங்களில், வைராக்யம் - ஆசையில்லாமை, அநஹங்கார: - தேஹமே ஆத்மா என்கிற அபிமானமில்லாமை, ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது:கதோஷாநுதர்ஶநம்—ஜந்ம - பிறப்பு, ம்ருத்யு - மரணம், ஜரா- கிழத்தனம், வ்யாதி - ரோகம், இவைகளாலுண்டான, து:க - துக்கமாகிற, தோஷாநுதர்ஶநம் - தோஷங்களைத் தெரிந்துகொள்ளுதல்.

---

*மறுத்தவைகளை ஸாப்பிடுவது முதலியவைகளும், முறையே மனதிற்கும், வாக்குக்கும், ஶரீரத்திற்கும், அசுத்திகள். இவைகள் ப்ரத்யக்ஷ முதலியவைகளால் அறியமுடியாதென்பதையும், ப்ரமாணங்களைக் கொண்டறியவேண்டுமென்பதையும், தெரிவிப்பதற்காகவும் 'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாகிய' என்று சொல்லப்பட்டது. ஸ்திரமாயிருக்கையாவது அசங்காமலிருத்தல், அதை ப்ரஸ்தாவிக்கப்படுகிற அர்த்தத்தில் சொல்லுகிறார்—'வேதாந்த ஶாஸ்த்ரங்களில்' என்றாரம்பித்து. சலிக்காமலிருக்கையாவது வேதங்களுக்கு புறம்பான மதத்திலிருப்பவர்களாலும், வேதங்களை ஒப்புக்கொண்டு தப்பர்த்தம் செய்கிறவர்களாலும் கலக்கமுடியாமை, அதாவது ஸந்தேஹமில்லாமை என்று அர்த்தம். அடக்கவேண்டியதாக இருக்கிற ஸ்வபாவத்தினால் இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம் மனதைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே மற்றவர்கள் சொன்ன ஶரீரத்தைச் சொல்லுகிறது என்பது யுக்தமல்ல. ஸ்வபாவத்தினாலேயே எல்லா விஷயங்களிலும் ப்ரவர்த்தித்துக் கொண்டிருக்கிற மனதை அடக்குவதாவது கெட்டவழியிலிருந்து திருப்புதல் அதையே சொல்லுகிறார்—'ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர' என்றாரம்பித்து.* 7

பா] ஜந்மம்ருத்யுஜராவ்யாதிதுஃகதோஷாநுதர்ஶநம் — ஆத்மாவைவிட வேறாகிய விஷயங்களில் இவை தோஷத்தோடு கூடியவை என்று தெரிந்துகொள்ளுவதால் பயப்படுதல். அநஹங்கார ஃ — ஆத்மாவல்லாத தேஹத்தில் இது ஆத்மா என்கிற அபிமானமில்லாமை. இது மற்றதையுங் குறிப்பதற்காகத் தன்னைச்சேர்ந்ததுஎன்கிற அபிமானமில்லாமையும்சொல்லப்படுகிறது. ஜந்மம்ருத்யுஜராவ்யாதி துஃகதோஷாநுதர்ஶநம் — ஶரீரத்தோடுகூட இருக்கும்பொழுது பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோ

தா] *வெளி விஷயங்களில் ஆசையில்லாமை ஆத்மாவினிடத்தில் ஆசையால் உண்டாகிறதல்லவா என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—* 'ஆத்மாவைவிட வேறாகிய' *என்றாரம்பித்து. ஆசையில்லாதவனுடைய ஸ்வபாவம் வைராக்யம், அதினுடைய விதத்தைச் சொல்லுகிறார்—* 'இவை தோஷத்தோடு கூடியவை' *என்றாரம்பித்து. துக்கத்தினால் ஸம்பாதிக்கக்கூடியவைகளாயும், துக்கத்தோடு கலந்திருப்பவைகளாயும், அழியக்கூடியவைகளாயும், இருப்பது முதலியவைகளால் அவைகள் தோஷங்கள் நிறைந்தவை என்பது. ஈர்வமாகிய அஹங்காரம் முன்னமே தடுக்கப்பட்டிருக்கிறபடியினால் இவ்விடத்தில்* 'அநஹங்கார ஃ' *என்னும் பதத்தினால் தேஹமே ஆத்மா என்கிற ப்ரமம் தடுக்கப்படுகிறதென்று சொல்லுகிறார்—* 'ஆத்மாவல்லாத' *என்றாரம்பித்து. அஹங்காரத்தைத்தடுத்தது அதினாலுண்டானதாயும், எல்லாவிடங்களிலும் அத்துடன் கூடச்சொல்லப்பட்டதுமாகிய மமகாரத்தைத் தடுப்பதையும் குறிப்பதற்காக, என்று சொல்லுகிறார்—* 'இது மற்றதையுங் குறிப்பதற்காக' *என்றாரம்பித்து. ஶரீரத்தினாலுண்டாகிய பிறப்பு முதலிய தோஷங்களையனுஸந்தானஞ் செய்தல் 1 'ஶரீரத்தோடுகூட இருப்பவனுக்கு இஷ்டாநிஷ்டங்களுக்குத் தடங்கல் இல்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லியபடி ஶரீரம் விடத்தக்கது என்று தெரிந்துகொள்ளுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—* 'ஶரீரத்தோடு கூட இருக்கும்பொழுது' *என்றாரம்பித்து. பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோகம், இவைகளால் உண்டாகிய துக்கம், அதுவாகிற தோஷம் என்று அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. அன்றிக்கே பிறப்பு முதலிய துக்கம் வரையிலுள்ள எல்லாம் துக்கத்திற்குக்காரணமாகையினாலும் துக்கமாகையினாலும் தோஷங்கள் என்றர்த்தமாகவுமாம். அரிசியையும் உமியையும் போல ஶரீரத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு தோஷங்களைப் பரிஹரிக்க முடியாது என்று தெரிவிப்ப*

1 *சாந்தோக்யம்* - 8 - 12 - 9.

ஷ்ட்டிக்கவும் தக்கதான யோக்யதை, 'ஸ்தைர்யம்' - வேதாந்த ஶாஸ்த்ரங்களில்சொல்லப்பட்டஅர்த்தத்தில்சலிக்காமலிருக்கை, 'ஆத்மவிநிக்ரஹ:' - ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர மற்ற விஷயங்களிலிருந்து மனதை நிவ்ருத்தி செய்தல். 7

இந்த்ரியார்த்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச |
ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க தோஷாநுதர்ஶநம் ||

ப - ரை] இந்த்ரியார்த்தேஷு - இந்த்ரியங்களினுடைய விஷயங்களில், வைராக்யம் - ஆசையில்லாமை, அநஹங்கார: - தேஹமே ஆத்மா என்கிற அபிமானமில்லாமை, ஜந்ம ம்ருத்யு ஜரா வ்யாதி து:க தோஷாநுதர்ஶநம்—ஜந்ம - பிறப்பு, ம்ருத்யு - மரணம், ஜரா - கிழத்தனம், வ்யாதி - ரோகம், இவைகளாலுண்டான, து:க - துக்கமாகிற, தோஷாநுதர்ஶநம் - தோஷங்களைத் தெரிந்துகொள்ளுதல்.

---

மறுத்தவைகளை ஶாப்பிடுவது முதலியவைகளும், முறையே மனதிற்கும், வாக்குக்கும், ஶரீரத்திற்கும், அசுத்திகள். இவைகள் ப்ரத்யக்ஷ முதலியவைகளால் அறியமுடியாதென்பதையும், ப்ரமாணங்களைக் கொண்டறியவேண்டுமென்பதையும், தெரிவிப்பதற்காகவும் 'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாகிய' என்று சொல்லப்பட்டது. ஸ்திரமாயிருக்கையாவது அசங்காமலிருத்தல், அதை ப்ரஸ்தாவிக்கப்படுகிற அர்த்தத்தில் சொல்லுகிறார்—'வேதாந்த ஶாஸ்த்ரங்களில்' என்றாரம்பித்து. சலிக்காமலிருக்கையாவது வேதங்களுக்கு புறம்பான மதத்திலிருப்பவர்களாலும், வேதங்களை ஒப்புக்கொண்டு தப்பர்த்தம் செய்கிறவர்களாலும் கலக்கமுடியாமை, அதாவது ஸந்தேஹமில்லாமை என்று அர்த்தம். அடக்கவேண்டியதாக இருக்கிற ஸ்வபாவத்தினால் இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம் மனதைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே மற்றவர்கள் சொன்ன ஶரீரத்தைச் சொல்லுகிறது என்பது யுக்தமல்ல. ஸ்வபாவத்தினாலேயே எல்லா விஷயங்களிலும் ப்ரவர்த்தித்துக் கொண்டிருக்கிற மனதை அடக்குவதாவது கெட்டவழியிலிருந்து திருப்புதல் அதையே சொல்லுகிறார்—'ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர' என்றாரம்பித்து. 7

பா] இந்த்ரியார்தேஷு வைராக்யம்—ஆத்மாவைவிட வேறாகிய விஷயங்களில் இவை தோஷத்தோடு கூடியவை என்று தெரிந்துகொள்ளுவதால் பயப்படுதல். அநஹங்கார:—ஆத்மாவல்லாத தேஹத்தில் இது ஆத்மா என்கிற அபிமானமில்லாமை. இது மற்றதையுங் குறிப்பதற்காகத் தன்னைச்சேர்ந்ததுஎன்கிற அபிமானமில்லாமையும்சொல்லப்படுகிறது. ஜந்ம ம்ருத்யுஜராவ்யாதி து:கதோஷாநுதர்ஶநம்—ஶரீரத்தோடுகூட இருக்கும்பொழுது பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோ

தா] வெளி விஷயங்களில் ஆசையில்லாமை ஆத்மாவினிடத்தில் ஆசையால் உண்டாகிறதல்லவா என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆத்மாவைவிட வேறாகிய' என்றாரம்பித்து. ஆசையில்லாதவனுடைய ஸ்வபாவம் வைராக்யம், அதினுடைய விதத்தைச் சொல்லுகிறார்—'இவை தோஷத்தோடு கூடியவை' என்றாரம்பித்து. துக்கத்தினால் ஸம்பாதிக்கக்கூடியவைகளாயும், துக்கத்தோடு கலந்திருப்பவைகளாயும், அழியக்கூடியவைகளாயும், இருப்பது முதலியவைகளால் அவைகள் தோஷங்கள் நிறைந்தவை என்பது. கர்வமாகிய அஹங்காரம் முன்னமே தடுக்கப்பட்டிருக்கிறபடியினால் இவ்விடத்தில் 'அநஹங்கார:' என்னும் பதத்தினால் தேஹமே ஆத்மா என்கிற ப்ரமம் தடுக்கப்படுகிறதென்று சொல்லுகிறார்—'ஆத்மாவல்லாத' என்றாரம்பித்து. அஹங்காரத்தைத்தடுத்தது அதினாலுண்டானதாயும், எல்லாவிடங்களிலும் அத்துடன் கூடச்சொல்லப்பட்டதுமாகிய மமகாரத்தைத் தடுப்பதையும் குறிப்பதற்காக, என்று சொல்லுகிறார்—'இது மற்றதையுங் குறிப்பதற்காக' என்றாரம்பித்து. ஶரீரத்தினாலுண்டாகிய பிறப்பு முதலிய தோஷங்களையனுஸந்தானஞ் செய்தல் 1 'ஶரீரத்தோடுகூட இருப்பவனுக்கு இஷ்டாநிஷ்டங்களுக்குத் தடங்கல் இல்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லியபடி ஶரீரம் விடத்தக்கது என்று தெரிந்துகொள்ளுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶரீரத்தோடு கூட இருக்கும்பொழுது' என்றாரம்பித்து. பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோகம், இவைகளால் உண்டாகிய துக்கம், அதுவாகிற தோஷம் என்று அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. அன்றிக்கே பிறப்பு முதலிய துக்கம் வரையிலுள்ள எல்லாம் துக்கத்திற்குக்காரணமாகையினாலும் துக்கமாகையினாலும் தோஷங்கள் என்றர்த்தமாகவுமாம். அரிசியையும் உமியையும் போல ஶரீரத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு தோஷங்களைப் பரிஹரிக்க முடியாது என்று தெரிவிப்ப

1 சாந்தோக்யம் - 8 - 12 - 9.

பா — அ] பிறகு ஶரீரத்தின் கார்யங்களுக்குள் ஆத்ம ஜ்ஞானத்திற்கு ஸாதனங்களாகையினால் அங்கீகரிக்கத் தகுந்தவைகளாகிய குணங்கள் சொல்லப்படுகின்றன:—

**அமாநித்வமதம்பித்வமஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |**
**ஆசார்யோபாஸநம் ஶௌசம் ஸ்தைர்யமாத்மவிநிக்ரஹ: ||**

ப - ரை] **அமாநித்வம்** — கர்வமில்லாமலிருக்கை, **அதம்பித்வம்** - டம்பமில்லாமலிருக்கை, **அஹிம்ஸா** - ஹிம்ஸைசெய்யாமலிருத்தல், **க்ஷாந்தி:** - பொறுமை, **ஆர்ஜவம்** - கபடமில்லாமை, **ஆசார்யோபாஸநம்** - ஆசார்யர்களை உபாஸனஞ் செய்தல், **ஶௌசம்** — பரிசுத்தி, **ஸ்தைர்யம்** - உறுதியுள்ளவனாகயிருத்தல், **ஆத்மவிநிக்ரஹ:** - மனதை அடக்குதல். 7

பா] '**அமாநித்வம்**' - பெரியோர்களிடத்தில் அவமானம் செய்யாமலிருத்தல், '**அதம்பித்வம்**' - தர்மங்களைச் செய்கிறவன் என்கிற கீர்த்தியையே ப்ரயோஜனமாக வைத்துக்கொண்டு தர்மங்களையனுஷ்டித்தல்-டம்பம்,

தா] ஜீவாத்மாவை நிரூபித்தபிறகு அதைப்பற்றிய ஜ்ஞானத்தில் ஆசையுண்டாகி அதற்குப்பிறகு அனுஷ்டிக்கத்தக்கவைகளாயிருந்தபோதிலும் '**அமாநித்வம்**' முதலியவைகள் ஆசைமுதலியவைகளைப்போலவே ஶரீரத்தின் கார்யங்களாகையினால் அந்த ஶரீரத்தை நிரூபித்தபிறகு அவைகளைச்சொல்லியிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பிறகு ஶரீரத்தின் கார்யங்களுக்குள்' என்று. வித்யை, ஜாதி, பணம், இவைகள் சேர்ந்திருப்பதினால் உண்டாகிய பெரியோர்களை அவமானஞ் செய்வதற்குக்காரணமாகிய கர்வம் இவ்விடத்தில் மாநம் என்னப்படுகிறது, அதையுடையவன் மாநீ, அதில்லாதவன் அமாநீ, அப்படிப்பட்டவனாக இருக்கை அமாநித்வம். அன்றிக்கே மாநித்வம் இல்லாமை '**அமாநித்வம்**' ஆகவுமாம். இப்படியே **அதம்பித்வம்** முதலிய விடங்களிலும் கண்டுகொள்ளவேண்டியது. இதையே சொல்லுகிறார்-'அதில்லாதவன்' என்று. **யஶோர்த்தஜ:** (கர்மத்தைக்கொடியாகவுடையவன்) என்று சொல்லியிருப்பதை யனுஸரித்துச் சொல்லுகிறார்—'தர்மங்களைச் செய்கிறவன்' என்றாரம்பித்து. அதாவது அப்படிச் செய்கிறதே ஒழிய ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதை அவஶ்யம் செய்யவேண்டுமென்கிற புத்தியினாலல்ல, என்று தாத்பர்யம். அநிஷ்டமொன்றையே பலமாகவுடைய பீடையாகிய வ்யாபாரம் ஹிம்ஸை. அது வாயினாலும் மனதினாலும் ஶரீரத்தினாலும் சாபங்கொடுத்தல் முதலியவைகளின் வழியாக ஸம்பவிக்கக்கூடும். ஆகையினால் ஸம்பவிக்கக்கூடிய

அதில்லாமை, 'அஹிம்ஸா' - வாக்கு,மனது, ஶரீரம், இவைகளால் அயலானுக்குப் பீடைசெய்யாமை, 'க்ஷாந்தி:'-அயலாரினால் பீடிக்கப்பட்டவனாயிருந்தபோதிலும் அவர்களைக்குறித்துவிகாரத்தையடையாத மனதையுடையவனாகயிருக்கை, 'ஆர்ஜவம்' - அயலாரைக்குறித்து வாக்கு, மனது, ஶரீரம், இவைகளினுடைய கார்யங்கள் ஒரேவிதமாகஇருக்கை, 'ஆசார்யோபாஸநம்'—ஆத்ம ஜ்ஞானத்தை யுபதேசித்த ஆசார்யர்களிடத்தில் நமஸ்காரம் செய்தல், அவர்களை ப்ரஶ்னம் செய்தல், அவர்களுக்குஶிஶ்ருஷைமுதலியவைகளைச்செய்துகொண்டிருத்தல்,'ஶௌசம்'-மனதிலும், வாக்கிலும், ஶரீரத்திலுமிருக்கிற ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாகிய ஆத்ம ஜ்ஞானத்தை யடையவும் அதின் உபாயங்களை யனு

எந்தவிதத்தாலும் அது செய்யக்கூடாதென்பது வசனங்களினாலேற்பட்டிருக்கிறபடியினால் 'வாக்கு,மனது, ஶரீரம், இவைகளால்' என்று சொல்லப்பட்டது. 'அயலானுக்கு' என்பது அநேகமாக ஸம்பவிக்கக்கூடியதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லியிருக்கிறது, ஶாஸ்த்ரத்தில் சொல்லாததாகிய தன்னைப்பீடித்துக் கொள்ளுவதும் ஹிம்ஸையாகையினால், மனதில் வேறு, வாயில் வேறு, இப்படியிருப்பது கபடம், அதில்லாமலிருப்பது ஆர்ஜவம் என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அயலானைக்குறித்து' என்றாரம்பித்து. அவன் செய்த உபகாரத்தை அறிவதனால் ஆசார்யனிடத்தில் உபாஸனஞ்செய்வது தானே உண்டாகும் என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'ஆத்ம ஜ்ஞானத்தை யுபதேசித்த' என்று. அன்றிக்கே ஆத்ம ஜ்ஞானத்திற்கு இது அவஶ்யம் வேண்டியது என்று தெரிவிப்பதற்காக அதைச் சொல்லியிருக்கிறதாகவுமாம் 1தத்வித்தி ப்ரணிபாதேந பரிப்ரஶ்நேந ஸேவயா' என்று, முன்பு விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதே இவ்விடத்தில் உபாஸனம் என்னும் பதத்தினால் சுருக்கிச் சொல்லப்பட்டது,என்றுதெரிவிப்பதற்காக நமஸ்காரம் செய்தல் முதலியவைகளை எடுத்திருக்கிறது.பரிசுத்தமில்லாமையாவது மேல் கர்மங்களைச்செய்ய யோக்யதையில்லாமை,பரிசுத்தமாயிருக்கையாவதுஅவைகளைச்செய்ய யோக்யதையுடையவனாயிருக்கை,அதுவும் இவ்விடத்தில் இந்தஸந்தர்ப்பத்தில் ஏற்பட்ட விஶேஷமான கர்மங்களைப்பற்றியது,என்று சொல்லுகிறார்—'ஆத்ம ஜ்ஞானத்தையடையவும்' என்றாரம்பித்து. ஆசைமுதலியவைகளும், பொய் சொல்லுவது முதலியவைகளும், ஸாப்பிடக்கூடாதென்று ஶாஸ்த்ரத்தில்

1 கீதை - 4 34.

ஷ்டிக்கவும் தக்கதான யோக்யதை, 'ஸ்தைர்யம்' - வேதாந்த ஶாஸ்த்ரங்களில்சொல்லப்பட்டஅர்த்தத்தில்சலிக்காமலிருக்கை, 'ஆத்மவிநிக்ரஹ:' - ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர மற்ற விஷயங்களிலிருந்து மனதை நிவ்ருத்தி செய்தல். 7

இந்த்ரியார்த்தேஷு வைராக்யமநஹங்கார ஏவ ச |
ஜந்மம்ருத்யுஜராவ்யாதிது:கதோஷாநுதர்ஶநம் ||

ப - ரை ] இந்த்ரியார்த்தேஷு - இந்த்ரியங்களினுடைய விஷயங்களில், வைராக்யம் - ஆசையில்லாமை, அநஹங்கார: - தேஹமே ஆத்மா என்கிற அபிமானமில்லாமை, ஜந்மம்ருத்யு ஜராவ்யாதி து:க தோஷாநுதர்ஶநம்—ஜந்ம - பிறப்பு, ம்ருத்யு - மரணம், ஜரா - கிழத்தனம், வ்யாதி - ரோகம், இவைகளாலுண்டான, து:க - துக்கமாகிற, தோஷாநுதர்ஶநம் - தோஷங்களைத் தெரிந்துகொள்ளுதல்.

---

மறுத்தவைகளை ஸாப்பிடுவது முதலியவைகளும், முறையிலன்றிலும், வாக்குக்கும், ஶரீரத்திற்கும், அசுத்திகள். இவைகள் ப்ரத்யக்ஷ முதலியவைகளால் அறியமுடியாதென்பதையும், ப்ரமாணங்களைக் கொண்டறியவேண்டுமென்பதையும், தெரிவிப்பதற்காகவும் 'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாகிய' என்று சொல்லப்பட்டது. ஸ்த்திரமாயிருக்கையாவது அசங்காமலிருத்தல், அதை ப்ரஸ்தாவிக்கப்படுகிற அர்த்தத்தில் சொல்லுகிறார்—'வேதாந்த ஶாஸ்த்ரங்களில்' என்றாரம்பித்து. சலிக்காமலிருக்கையாவது வேதங்களுக்கு புறம்பான மதத்திலிருப்பவர்களாலும், வேதங்களை ஒப்புக்கொண்டு தப்பர்த்தம் செய்கிறவர்களாலும் கலக்கமுடியாமை, அதாவது ஸந்தேஹமில்லாமை என்று அர்த்தம். அடக்கவேண்டியதாக இருக்கிற ஸ்வபாவத்தினால் இவ்விடத்தில் ஆத்மா என்னும் பதம் மனதைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே மற்றவர்கள் சொன்ன ஶரீரத்தைச் சொல்லுகிறது என்பது யுக்தமல்ல. ஸ்வபாவத்தினாலேயே எல்லா விஷயங்களிலும் ப்ரவர்த்தித்துக் கொண்டிருக்கிற மனதை அடக்குவதாவது கெட்டவழியிலிருந்து திருப்புதல் அதையே சொல்லுகிறார்—'ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைத் தவிர' என்றாரம்பித்து. 7

பா] இந்த்ரியார்தேஷு வைராக்யம்—ஆத்மாவைவிட வேறுகிய விஷயங்களில் இவை தோஷத்தோடு கூடியவை என்று தெரிந்துகொள்ளுவதால் பயப்படுதல். அநஹங்கார:—ஆத்மாவல்லாத தேஹத்தில் இது ஆத்மா என்கிற அபிமானமில்லாமை. இது மற்றதையுங் குறிப்பதற்காகத் தன்னைச்சேர்ந்ததுஎன்கிற அபிமானமில்லாமையும்சொல்லப்படுகிறது. ஜந்ம ம்ருத்யுஜராவ்யாதி து:கதோஷாநுதர்ஶநம்—ஶரீரத்தோடுகூட இருக்கும்பொழுது பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோ

---

தா] வெளி விஷயங்களில் ஆசையில்லாமை ஆத்மாவினிடத்தில் ஆசையால் உண்டாகிறதல்லவா என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'ஆத்மாவைவிட வேறுகிய' என்றுரம்பித்து. ஆசையில்லாதவனுடைய ஸ்வபாவம் வைராக்யம், அதினுடைய விதத்தைச் சொல்லுகிருர்—'இவை தோஷத்தோடு கூடியவை' என்றுரம்பித்து. துக்கத்தினுல் ஸம்பாதிக்கக்கூடியவைகளாயும், துக்கத்தோடு கலந்திருப்பவைகளாயும், அழியக்கூடியவைகளாயும், இருப்பது முதலியவைகளால் அவைகள் தோஷங்கள் நிறைந்தவை என்பது. கர்வமாகிய அஹங்காரம் முன்னமே தடுக்கப்பட்டிருக்கிறபடியினுல் இவ்விடத்தில் 'அநஹங்கார:' என்னும் பதத்தினுல் தேஹமே ஆத்மா என்கிற ப்ரமம் தடுக்கப்படுகிறதென்று சொல்லுகிருர்—'ஆத்மாவல்லாத' என்றுரம்பித்து. அஹங்காரத்தைத்தடுத்தது அதினுலுண்டானதாயும், எல்லாவிடங்களிலும் அத்துடன் கூடச்சொல்லப்பட்டதுமாகிய மமகாரத்தைத் தடுப்பதையும் குறிப்பதற்காக, என்று சொல்லுகிருர்—'இது மற்றதையுங் குறிப்பதற்காக' என்றுரம்பித்து. ஶரீரத்தினுலுண்டாகிய பிறப்பு முதலிய தோஷங்களையனுஸந்தானஞ் செய்தல் [1] 'ஶரீரத்தோடுகூட இருப்பவனுக்கு இஷ்டாநிஷ்டங்களுக்குத் தடங்கல் இல்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லியபடி ஶரீரம் விடத்தக்கது என்று தெரிந்துகொள்ளுவதற்காக, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'ஶரீரத்தோடு கூட இருக்கும்போழுது' என்றுரம்பித்து. பிறப்பு, மரணம், கிழத்தனம், ரோகம், இவைகளால் உண்டாகிய துக்கம், அதுவாகிற தோஷம் என்று அர்த்தம் சொல்லிக்கொள்ளவேண்டியது. அன்றிக்கே பிறப்பு முதலிய துக்கம் வரையிலுள்ள எல்லாம் துக்கத்திற்குக்காரணமாகையினுலும் துக்கமாகையினுலும் தோஷங்கள் என்றர்த்தமாகவுமாம். அரிசியையும் உமியையும் போல ஶரீரத்தை மாத்திரம் வைத்துக்கொண்டு தோஷங்களைப் பரிஹரிக்க முடியாது என்று தெரிவிப்ப

---

1 சாந்தோக்யம் - 8 - 12 - 9.

கம், இவைகளாலுண்டான, துக்கமாகிற தோஷங்கள் விடமுடியாதென்று அநுஸந்தானஞ் செய்தல். 8

அஸக்திரநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு ।
நித்யஞ்ச ஸமசித்தத்வமிஷ்டாநிஷ்டோபபத்திஷு ॥ 9

ப-ரை] அஸக்தி:-பற்றுதலில்லாமை, புத்ரதாரக்ருஹாதிஷு —புத்ர-பிள்ளை, தார - பத்னீ, க்ருஹ - வீடு முதலியவைகளில், அநபிஷ்வங்க: - அதிக ஆசையில்லாமை, நித்யம் - எப்பொழுதும், இஷ்டாநிஷ்டோபபத்திஷு - இஷ்டமாவது அநிஷ்டமாவது வந்த ஸமயங்களில், ஸமசித்தத்வம் - ஸமமான மனதையுடையவனாக விருக்கை. 9

பா] 'அஸக்தி:'—ஆத்மாவைத்தவிர வேறு வஸ்துக்களில் பற்றுதலில்லாமை. 'அநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு'—அவைகளில்

---

தற்காக 'விடமுடியாதென்று' சொல்லியிருக்கிறது. 'அநுதர்ஶநம்' என்பதற்கு அடிக்கடி தெரிந்துகொள்ளுதல் என்றர்த்தம், என்று சொல்லுகிறார்—'அநுஸந்தானஞ் செய்தல்' என்று. 8

தா] முன்பு 'இந்த்ரியார்த்தேஷு வைராக்யம்' என்று இந்த்ரியங்கள் தொடுவதினால் அறியக்கூடிய ஶப்தம் முதலிய விஷயங்களில் வைராக்யம் சொல்லப்பட்டது. இப்பொழுது இந்த ஶ்லோகத்தில் 'அஸக்தி:' என்பதனால் அபிமானத்தினாலேற்பட்ட வஸ்துக்களில் பற்றுதலில்லாமை சொல்லப்படுகிறது, என்று புனருக்திதோஷத்தைப் பரிஹரிப்பதற்காக 'ஆத்மாவைத்தவிர வேறு' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. ஆனால் க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருந்து மோக்ஷத்திலாசையுடைய புருஷனுக்கு அபிமானத்தினாலேற்பட்ட எல்லா வஸ்துக்களையும் விட்டுவிட்டால் அந்தாஶ்ரமத்திற்குரிய தர்மங்கள் எப்படி நிறைவேறும் என்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானம் சொல்லப்படுகிறது— 'அநபிஷ்வங்க: புத்ரதாரக்ருஹாதிஷு' என்று. இவ்விடத்தில் அந்த ஆஶ்ரம தர்மங்களுக்கு உபயோகிக்கக்கூடிய வஸ்துக்களை முழுமையும் ஸ்வரூபத்தையே விடவேண்டும் என்று சொல்லப்படவில்லை. ஸந்யாஸிக்கும் விடமுடியாதவஸ்துக்களில் 1 'நகுண்ட்யாம் நோதகே ஸங்கோ

---

1. யஸ்ய - எவனுக்கு, குண்ட்யாம் - கமண்டலுவில், ஸங்க:—பற்று, ந-இல்லையோ, உதகே - ஜலத்திலும், ந - இல்லையோ, சேலே - துணியிலும், ந - இல்லையோ, விஷ்டரே - தர்ப்பாஸனத்திலும், ந - இல்லையோ, அகாரே - வீட்டிலும், ந - இல்லையோ, ஆஸநே - ஆஸநத்திலும், ந - இல்லையோ, அந்யே-மற்ற வஸ்துவிலும், ந - இல்லையோ, ஸ:-அவன், மோக்ஷவித் - மோக்ஷத்தைத் தெரிந்தவன்.

ஶாஸ்த்ரங்களில் சொல்லிய கர்மங்களைச் செய்ய ஒத்தாசையாக விருக்கிறது என்பதைத்தவிர வேறு விதமான ஆசையில்லாமை. தன்னுடைய ஆசையாலுண்டாகிய இஷ்டங்களும் அநிஷ்டங்களும் வந்தபோதிலும் ஸந்தோஷமும் பயமுமில்லாமை. 9

மயி சாநந்யயோகேந பக்திரவ்யபிசாரிணீ।
விவிக்ததேஶஸேவித்வமரதிர்ஜநஸம்ஸதி॥ 10

ப - ரை] மயி - என்னிடத்தில், அநந்யயோகேந - வேறொருவரைப்பற்றியதில்லாமையினால், அவ்யபிசாரிணீ - வ்யபிசாரமில்லாத, பக்தி:-பக்தியும், விவிக்ததேஶஸேவித்வம் - ஜநங்களில்லாத விடத்தில் வஸிப்பதும், ஜநஸம்ஸதி - ஜநங்களின் கூட்டத்தில், அரதி: - ப்ரீதியில்லாமையும்.

பா] எல்லாவற்றிற்கு மீஶ்வரனாகிய என்னிடத்தில் ஒரே நிஶ்சயத்தோடு கூடியிருப்பதினால் ஸ்த்திரமான பக்தியும், ஜநமில்லாத தேசத்தில்

---

*மோக்ஷம் பெறுவதில் ஈடுபட்டோர் | யதாமோக்ஷம் பரோக்ஷமோக்ஷிதாம் ஸர்வஸ்ய ஸாக்ஷ்யத் தம்ஸ:॥' என்று ஆசையைமாத்திரம் தடுத்திருப்பதினால், ஆகையினால் தர்மங்களுக்குபயோகமுள்ளவைகள் என்கிற மாத்திரத்தினால் அவைகளை அங்கிகரிக்கவேண்டும்என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் சொல்லிய' என்றாரம்பித்து. பற்றுதல் ஆசைக்குக்காரணம் 'ஸங்காத்ஸஞ்ஜாயதே காம:' என்று சொல்லப்பட்டிருக்கிறபடியினால். ஆகையினால் காரணமில்லாததினால் கார்யமுமில்லை என்று தாத்பர்யம். ஆசையாவது அதிகமான பற்றுதல். தொட்டு அறியக்கூடியவைகளாகிய இஷ்டம் அநிஷ்டம் இவைகளில் ஸமமான மனதை யுடையவனாக யிருக்க முடியாதாகையினால் சொல்லுகிறார்—'தன்னுடைய ஆசையாலுண்டாகிய' என்றாரம்பித்து. பிள்ளை, பத்நீ, முதலியவைகளின் ப்ரஸ்தாவம் கீழேவராதபடியினால் இதுவும் அவைகளைப்பற்றியதென்பது உசிதம் என்று தாத்பர்யம். 9*

*'மயி' என்பதினால் வேறொருவரிடத்திலுண்டான பக்தியைப்போக்கடிப்பதினால் பக்தி ஸ்த்திரமாக விருப்பதற்குபயோகமாகிய ஆகாரம் சொல்லப்படுகிறதென்றுசொல்லுகிறார்—'எல்லாவற்றிற்குமீஶ்வரனாகிய' என்று 'அநந்யயோகேந' என்பதினால் இதர தேவதைகளை விடுதல் சொல்லப்படுகிறது. அதினாலேயே 'அவ்யபிசாரிணீ' என்பது அதினாலுண்டாகிற ஸ்த்திரமாயிருக்கை, அப்படிச் சொல்லாவிடில் புனருக்தி வருகிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'ஒரே நிஶ்சயத்தோடு கூடியிருப்பதினால் ஸ்த்திரமான' என்று. 'அநந்யயோகேந'*

வஸிப்பதும், ஜநங்களின் கூட்டத்தில் ப்ரீதியில்லாமையும். 10

அத்⁴யாத்மஜ்ஞாநநித்யத்வம் தத்த்வஜ்ஞாநார்த²த³ர்ஶநம் |
ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யத³தோऽந்யதா² || 11

ப - ரை] அத்⁴யாத்மஜ்ஞாநநித்யத்வம் - ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்தில் எப்பொழுது மிருந்து கொண்டிருப்பதும், தத்த்வஜ்ஞாநார்த²த³ர்ஶநம் - தத்வஜ்ஞானத்தை ப்ரயோஜனமாகவுடைய சிந்தனையைச் செய்தலும், அதாவது எந்த நினைவினால் தத்வஜ்ஞானமுண்டாகுமோ அதையே நினைத்துக்கொண்டிருத்தல் என்றர்த்தம், ஏதத் - இது, ஜ்ஞாநமிதி - ஜ்ஞானமென்று, ப்ரோக்தம் - சொல்லப்பட்டது, அத꞉ - இதைவிட, அந்யதா² - வேறாகியது, யத் - எதுவோ (அது), அஜ்ஞாநம் - அஜ்ஞானமென்று சொல்லப்படுகிறது. 11

பா] ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானம் அத்யாத்மஜ்ஞானமெனப்படுகிறது என்பதற்கு ஒன்றென்கிற ஸமாதியினால் என்று சங்கராசார்யார் வ்யாக்யானஞ்செய்தது இதனால் நிராகரிக்கப்பட்டது. 'அவ்யபி⁴சாரிணீ' என்பதற்கு வேறோரிடத்தில் செல்லும் ஸ்வபாவத்தை உடைத்தாகாதது என்றர்த்தம். த்யானத்தின் விரோதத்தை பரிஹரிப்பதற்காக 'விவிக்த தே³ஶஸேவித்வம்' என்று சொல்லியிருக்கிறது. 1 'அஹேரிவ க³ணாத் பீ⁴த꞉' என்றிவை முதலியவைகளைப்போல மோக்ஷதர்மத்திலும் 2 'நைதாத்³ருஶம் ப்³ராஹ்மணஸ்யாஸ்தி வித்தம் யதை²கதா ஸமதா ஸத்யதா ச | ஸத்த்வம் த்⁴ருதிர்த³ண்ட³நிதா⁴நமார்ஜவம் ததஸ்ததஶ்சோபரம꞉ க்ரியாப்⁴ய꞉ ||' என்று சொல்லப்பட்டது. ஜனமாவது இவ்விடத்தில் ஸத்வகுணம் மேலிட்டவர்களைத்தவிர மற்றவர்கள். 10

'அத்⁴யாத்மஜ்ஞாநநித்யத்வம்' என்கிற இடத்தில் 'நித்ய'என்னும் பதத்தினால் இடைவிடாமல் தொடர்ந்து இருக்கவேண்டுமென்று சொல்லப்படுகிறதென்று சொல்லுகிறார்—'அதில் நிஷ்டையையுடையவனாக இரு

1 அஹேரிவ - பாம்பினிடத்திலிருந்துபோல, க³ணாத் - கூட்டத்திலிருந்து, பீ⁴த꞉-பயந்தவனாய்.

2 மஹாபாரதம் - மோக்ஷதர்மம் - 283-38. ஏகதா - ஒருவனாக இருக்கையும், ஸமதா - ஸமமாக இருக்கையும், ஸத்யதா ச - ஸத்யமாக இருக்கையும், ஸத்த்வம் - ஸத்வகுணமும், த்⁴ருதி꞉-தைர்யமும், த³ண்ட³நிதா⁴நம் - இந்த்ரியங்களை யடக்குதலும், ஆர்ஜவம் - கபடமில்லாமையும், ததஸ்ததஶ்ச - அந்தந்த இடங்களிலும், க்ரியாப்⁴ய꞉-கார்யங்களிலிருந்து, உபரம꞉-நிவ்ருத்தித்தலும், யதா² - எப்படியோ, ஏதாத்³ருஶம் - இதற்கு ஸத்ருஶமான பொருளானது, ப்³ராஹ்மணஸ்ய - ப்ராம்மணனுக்கு, நாஸ்தி - (வேறு) இல்லை.

அதில் நிஷ்ட்டையையுடையவனாக இருத்தலும், எதைப்பற்றிய த்யானம் தத்வஜ்ஞானத்தை ப்ரயோஜனமாகவுடையதோ அதில் எப்பொழுது மிருந்து கொண்டிருத்தலும்,என்றர்த்தம். 'ஜ்ஞாயதே அநேந இதி' (இதனால் ஆத்மா அறியப்படுகிறான்) ஆகையினால் ஜ்ஞானமென்னப்படுகிறது, அதாவது ஆத்மஜ்ஞானத்திற்கு ஸாதனம் என்றர்த்தம். ஶரீரத்தோடுகூட இருக்கும் ஜீவாத்மாவுக்கு அமாநித்வம் முதலாக கீழ்ச்சொல்லப்பட்ட குணங்

---

த்தலும்' என்று. 'தத்வஜ்ஞாநார்த்தத³ர்ஶநம்' என்பதற்கு தத்வ ஜ்ஞானத்தினுடைய ப்ரயோஜனத்தைச் சிந்தித்தல் என்றர்த்தம் சொல்லுவது உசிதமல்ல. தத்வஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனமென்ன என்றல்லவே த்யானம் செய்யும் விதம்,பின்னை எப்படியெனில் தத்வம் எது, என்றல்லவோ எண்ணவேண்டியது ஆகையினால் 'தத்வத³ர்ஶநம்' என்றாவது 'தத்வார்த்தத³ர்ஶநம்' என்றாவதல்லவோ சொல்லவேண்டும் 'தத்வஜ்ஞாநார்த்தத³ர்ஶநம்' என்று சொல்லவேண்டியதில்லை யல்லவா. இப்படியே தத்வஜ்ஞானத்தின் விஷயத்தையாவது ப்ரயோஜனத்தையாவது சிந்தித்தல் என்பதும், தத்வஜ்ஞானத்தினால் உண்டாகிற புருஷார்த்தத்தை நேராய்ப் பார்ப்பது என்பது முதலியவையும் அதிக் ப்ரயோஜனமற்றவைகள். பார்ப்பது என்பதைச் சொல்லக்கூடிய 'ஆலோசந' என்னும் பதமும் அத்யயனம் செய்கிறவர்களால் இவ்விடத்தில் படிக்கப்படவில்லை. ஆகையால் இதற்கு உசிதமாகிய வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'தத்வஜ்ஞானத்தை ப்ரயோஜனமாகவுடைய' என்றாரம்பித்து. வேறு விஷயங்களில் சிந்தையில்லாமலிருப்பதும் இதனால் ஏற்பட்டது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அதில் எப்பொழுது மிருந்துகொண்டிருத்தலும்' என்று. 'அமாநித்வம்' முதலிய எல்லாவற்றையும் மொத்தமாக ஜ்ஞான என்னும் பதத்தினால் குறித்திருப்பதற்கு உசிதமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஜ்ஞாயதே' என்றாரம்பித்து. ஆத்மா என்பது இந்த ஸந்தர்ப்பத்தினாலும் வஸ்துவின் ஸ்வபாவத்தினாலு மேற்பட்ட விஷயத்தைச் சொல்லியிருக்கிறது. காரணம் என்னுமர்த்தத்தைச் சொல்லுகிற வ்யுத்பத்தியை வ்யாக்யானஞ் செய்துகொண்டு அதினை லேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார் —'ஆத்மஜ்ஞானத்திற்கு' என்று. மொத்தமான ஜ்ஞானம் முன்பே ஏற்பட்டிருப்பதினால் ப்ரத்யக்ஷம், முதலிய ஜ்ஞானம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது. 'ஏதஜ்ஜ்ஞாநம்' என்று சொல்லி 'யத³தோ'ந்யதா²' என்று பொதுவாக இதைத்தவிற மற்றது எல்லாம் அஜ்ஞானம் என்று சொல்லியிருப்பது அவையெல்லாம் பரிகரிக்கத்தக்கது என்பதற்காக, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லு

களின் கூட்டமே ஆத்மஜ்ஞானத்திற்கு உபயோகமானது, இதைத் தவிர ஶரீரத்தினால் உண்டாக்கப்படுகிற மற்றதெல்லாம் ஆத்ம ஜ்ஞானத்திற்கு விரோதமாகையினால் அஜ்ஞானம் என்று சொல்லப்படுகிறது. 11

பா-அ] பிறகு '𑌏𑌤𑌦𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿' என்று கீழே அறிகிறவனாகச் சொல்லப்பட்ட க்ஷேத்ரஜ்ஞனுடைய ஸ்வரூபம் நிரூபிக்கப்படுகிறது —

*𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌯𑌜𑍍𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾𑌽𑌮𑍃𑌤𑌮𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 ।*
*𑌅𑌨𑌾𑌦𑌿 𑌮𑌤𑍍𑌪𑌰𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌨 𑌸𑌤𑍍𑌤𑌨𑍍𑌨𑌾𑌸𑌦𑍁𑌚𑍍𑌯𑌤𑍇 ॥* 12

ப – ரை] 𑌯𑌤𑍍 - எந்த ஜீவாத்மாவானது, 𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 - (கீழ்ச்சொல்லிய அமாநித்வம் முதலிய குணங்களினால்) அறியத்தக்கதோ, 𑌤𑌤𑍍 - அப்படிப்பட்ட ஜீவாத்மாவை, 𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 - சொல்லப்போகிறேன், 𑌯𑌤𑍍 - எந்த ஆத்மாவை, 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 - தெரிந்துகொண்டு, 𑌅𑌮𑍃𑌤𑌂 - அழிவில்லாத பரிசுத்த ஆத்மாவை, 𑌅𑌶𑍍𑌨𑍁𑌤𑍇 - அடைகிறானோ; 𑌅𑌨𑌾𑌦𑌿—ஆதியில்லாதது, 𑌮𑌤𑍍𑌪𑌰𑌂-என்னையே மேலானவனாகவுடையது, 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮- தர்மபூத ஜ்ஞானத்தினால் எங்கும் வ்யாபிக்கக்கூடியது, 𑌤𑌤𑍍 -- அந்த ஆத்மா, 𑌸𑌤𑍍 - ஸத்தாகவும், 𑌅𑌸𑌤𑍍-அஸத்தாகவும், 𑌨 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇-சொல்லப்படுகிறதில்லை. 12

---

கிறார்—'ஶரீரத்தோடு கூடவிருக்கும்' என்றாரம்பித்து. ஶரீரத்தோடு கூட இருக்கும் என்று சொல்லியிருப்பது அவைகளை முழுவதும் நிவ்ருத்திசெய்வது ஜ்ஞானத்தைக் கொண்டே ஆகவேண்டுமென்பதற்காக. '𑌏𑌤𑌤𑍍' (இது) என்று தனித்துக் குறித்திருப்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தம் 'குணங்களின் கூட்டமே' என்பதினால் விவரிக்கப்பட்டது. இப்பொழுது சொல்லப்பட்ட குணங்களுக்கு விரோதியாகிய அஹங்காரத்தையுடையவனாயிருக்கை முதலியவைகள் மாத்திரமல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதைத் தவிர' என்றாரம்பித்து. அஜ்ஞானம் என்கிறவிடத்தில் முன்போல கரணவ்யுத்பத்தி சொல்லவேண்டியதில்லையாகையினால் ப்ரஸித்தமாகிய ஞானமென்னும் பதத்தினர்த்தத்தை பரிஹரிக்கிற '𑌅' என்பதினால் அதற்கு விரோதி என்று சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'ஆத்ம ஜ்ஞானத்திற்கு விரோதமாகையினால்' என்று. கீழ்ச்சொல்லிய ஜ்ஞானமென்னும் பதத்தின் அர்த்தத்தோடு ஒத்திருக்க வேண்டியதற்காக முன்போல கரண வ்யுத்பத்தியைச் சொன்னபோதிலும் அதினாலேற்பட்ட தாத்பர்யத்தைச் சொல்லியிருக்கிறதாகவுமாம். 11

பா] அமாநித்வம் முதலிய உபாயங்களினால் அடையக்கூடியதாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைச் சொல்லப்போகிறேன். எதைத் தெரிந்துகொண்டு பிறப்பு, கிழத்தனம், மரணம், முதலிய ப்ரக்ருதியின் ஸ்வபாவங்களில்

---

தா] முதலில் அறிகிறவனாகிற ஆத்மாவல்லவோ 1 'ஸவ வெயா டகுவெ ஹா வஷ' என்றுகுறிக்கப்பட்டான். இப்பொழுது அவனையல்லவோ நிரூபிக்க வேண்டியது. அப்படியிருக்க 'ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி' என்று ஏன் சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்— 'பிறகு' என்றாரம்பித்து. அறியத்தக்கதாகிய ஆத்மாவிற்கு லக்ஷணமாக வல்லவோ முன்பு அறிகிறவனாகயிருக்கை சொல்லப் பட்டது என்று தாத்பர்யம் ஆகையினால் 'ஜ்ஞேயம் யத்தத்' என்றாரம் பித்துச்சொன்னது பரப்ரம்மத்தைப்பற்றிச் சொன்னதென்கிற ப்ரமம் நிராகரிக்கப்பட்டது. ஏனெனில் 2 'க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ ர்ஜ்ஞாநம்' என்றாரம்பித்திருப்பதினாலும், 3 'க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோ ரேவமந்தரம் ஜ்ஞாநசக்ஷுஷா' என்று மேலே முடிக்கப்போகிறபடியினாலும், நடுவிலும் 4 'ப்ரக்ருதிம் புருஷஞ்சைவ' என்று அவைகளையே நிரூபிக்கிறபடியினாலும், இந்த்ரியங்களாலுண்டாக்கக்கூடிய ஸுக துக்கங்களை யுடையவனாகயிருக்கையையும், ஶரீரத்தைவிட்டுக் கிளம்புதலையும், ஸத்வம் முதலிய குணங்களுக்கு வசப்பட்டிருக்கையையும், இவை முதலியவைகளைச் சொல்லியிருப்பதினாலும். ஸ்வரூபம் என்னும் பதத்தினால் நபும்ஸகலிங்கமாகச் சொல்லியிருப்பதின் தாத்பர்யம் தெரிவிக்கப்பட்டது. அன்றிக்கே மேலே 'ப்ரஹ்ம' என்று சொல்லப்போகிறதைப் பார்த்து நபும்ஸகலிங்கமாகச் சொல்லியிருக்கிறதாகவுமாம். தன்னைவிட மற்றெல்லா வஸ்துக்களைக் காட்டிலும் இது வேறுபட்டதென்று காட்டக்கூடியதல்லவோ லக்ஷணமென்பது. அப்படியிருக்க அறிகிறவனாயிருக்கையாகிய லக்ஷணத்தினால் எல்லா வஸ்துக்களைவிட வேறுபட்ட ஸ்வரூபத்தையுடையதாக ஏற்பட்டிருக்கிற ஆத்மாவிற்கு வேறு ஸ்வரூபத்தை நிரூபிப்பது எதற்காக என்னில் அது உசிதமல்ல. லக்ஷணத்தினால் இதர வஸ்துக்களைவிட வேறுபட்டது என்பது மாத்திரம் தோன்றுகிறதேயல்லாமல் இதற்கிருக்கும் மற்ற எல்லா ஸ்வபாவங்களும் தோன்றுகிறதில்லை. எப்படி

---

1 பகவத்கீதை 13-3.
2 பகவத்கீதை 13-2.
3 பகவத்கீதை 13-34.
4 பகவத்கீதை 13-19.

லாத ஆத்மாவையடைகிறனே;எதற்கு ஆதியில்லையோ அது அநாதி. இந்த ஜீவாத்மாவிற்கு உத்பத்தியில்லையல்லவா ஆகையினாலேயே நாசமுமில்லை, ஸ்ருதியிலும் * 'அறியும் தன்மையுள்ள ஜீவாத்மா பிறக்கிறதுமில்லை மரணமடைகிறதுமில்லை' என்றர்த்தமுள்ள வாக்யமும் சொல்லப்பட்டிருக்கிறது; எதற்கு நான் மேலானவனோ அது உத்தமம் † 'அபரேயமிதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் | ஜீவபூதாம்' என்றல்லவோ கீழேசொல்லப்பட்டது. பகவானுக்குச் சரீரமாகையினால் பகவானுக்கு சேஷமாயிருக்கையையே ஸ்வபாவமாக உடையதல்லவோ ஜீவாத்மாவின் ஸ்வரூபம். அப்படியே ஸ்ருதியிலும் ‡ 'எவன் ஆத்மாவிலிருந்துகொண்டு ஆத்மாவின் உள்ளே

*என்னில் 'ப்ருதிவீ வாஸனையையுடையது' என்னும்பொழுது அந்த ஸ்வபாவத்தினால் ஜலம் முதலிய வஸ்துக்களினின்றும் வேறுபட்டது என்பது மாத்திரம் ஏற்படுகிறதேயல்லாமல் பாகத்தினால் உண்டாகிற ரூபம்முதலியவைகளை உடையது என்றிவை முதலியவை ஏற்படுகிறதில்லை. அதைப்போலவே இவ்விடத்திலும் அறிகிறவனாயிருக்கையாகிற லக்ஷணத்தைச் சொன்னபோதிலும் அறிகிறவனாகிய அந்த ஆத்மா உண்டாக்கப்படுகிறதா? இல்லையா? என்றிவை முதலியவைகளின் பகுத்தறிவு உண்டாகாது ஆகையினால் அவைகள் சொல்லவேண்டியவைகள்தான் என்கிற அபிப்ராயத்தினால் 'ஸ்வரூப' என்பதினால் காட்டப்பட்ட ஸங்கதியைச் சொல்லுகிறார்—'அமானித்வம் முதலிய' என்றாரம்பித்து. 'ப்ரவக்ஷ்யாமி' என்பதற்கு உள்ளபடியே சொல்லப்போகிறேன் என்றர்த்தம். 'அநாதிமத்' என்று பதத்தைப் பிரிப்பது யுக்தமல்ல. 'மத்' என்னும் விகுதி இல்லாமலும் பஹுவ்ரீஹி என்னும் ஸமாஸத்தினால் அந்த அர்த்தம் ஏற்பட்டுவிடுகிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எதற்கு ஆதியில்லையோ' என்றாரம்பித்து. அநாவது அநாதி என்பதற்குக் காரணமில்லாதது என்றர்த்தம். இந்த அர்த்தம் 1 'நாத்மா ச்ருதே:' என்னும் ஸூத்ரத்தில் சொல்லப்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இந்த ஜீவாத்மாவிற்கு' என்றாரம்பித்து. முன்பு சொல்லிய மரணமில்லாமைக்கும் இதுவே காரணம் என்று சொல்லுகிறார்—'ஆகையினாலேயே' என்று. இந்த இரண்டு விஷயங்களிலும் ப்ரமாணத்தைச் சொல்லுகிறார்—'ச்ருதியிலும்' என்றாரம்பித்து. 'அநாதிமத்' என்று பதத்தைப் பிரித்துவிட்டால் இவ்விடத்தில் சொல்லப்படுகிற 'ப்ரஹ்ம' என்னும் பதத்திற்கு 'பரம்' என்*

* கடவல்லி-1-2-18. † பகவத்கீதை 7-5.

‡ ப்ருஹதாரண்யகம்-5-7-22 (மாத்யந்தினபாடம்).

1 சாரீரகஸூத்ரம்-2-3-18.

இருக்கிறுனோ, எவனை ஆத்மா தெரிந்து கொள்ளவில்லையோ, எவனுக்கு ஆத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறுனோ' என்றும், அப்படியே ¶ 'அவன் காரணம், இந்த்ரியங்களுக்கு யஜமானனுகிய ஜீவனுக்கும் யஜமானன், அவனை உண்டு பண்ணுகிறவனும் அவனுக்கு யஜமானனும ஒருவருமில்லை' என்றும், $ 'ப்ரக்ருதி ஜீவாத்மா இவைகளுக்கு யஜமானன், குணங்களுக்கும் யஜமானன்' என்றுமர்த்தமுள்ள வாக்யம்முதலியவைகள சொல்லப்பட்டிருக்கின்றன. பெரிதாகயிருக்கையாகிற குணத்தையுடையது அதாவது ஶரீரம் முதலியவைகளால் அளவிடப்படாததாயும் இருக்கிறது ஜீவாத்மா என்

பது விஶேஷணமாகவிருக்கவேண்டும். அதுவும் பரப்ரம்மத்தைப் பற்றி இங்கு நிரூபிக்கும் ஸந்தர்ப்பமில்லாமையினுல் ஸ்வாரஸ்யமில்லை ஆகையினுல் இந்த ஸந்தர்ப்பத்திற்கு உசிதமான பதங்களின் பிரிவையும் அர்த்தத்தையுஞ் சொல்லுகிறுர் —'எதற்கு நான் மேலானவனோ' என்று. முன்பு சொல்லியிருப்பதைச்சுருக்கமாகச் சொல்லியிருப்பதல்லவோ இது என்கிற அபிப்ராயத்திருல் சொல்லுகிறுர்—'உக்தலக்ஷணம்' என்றாரம்பித்து. மேலானவன் என்னும் பதம் ஶேஷி என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. ஶரீரம் என்பதிலும் ஶேஷம் என்பதிலும் க்ரமமாக ஶ்ருதியை உதாஹரிக்கிறுர்—'அப்படியே ஶ்ருதியிலும்' என்றாரம்பித்து. இத்தால் ஶேஷபரம் என்று பதத்தைப் பிரித்தால் அதற்கு அர்த்தம் ஸம்பவிக்கவில்லையாதலால் பஹுவ்ரீஹியும் ஶேஷ என்னும்விகுதியும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுவதாகவிருந்தபோதிலும் ஶ்லோகம் பூர்ணமாக வேண்டியதற்காக சேர்த்து ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்று சங்கராசாரியர் சொன்ன அர்த்தம் நிராகரிக்கப்பட்டது. ஶர என்னும் விஶேஷணமில்லாத ஸூக்ஷ்ம என்னும் பதம் பரமாத்மாவினிடத்திலேயே முக்யமாக ப்ரயோகிக்கப்படுகிறது அப்படியிருக்க இங்கு ஸூக்ஷ்ம என்னும் பதம் ஜீவாத்மாவைப்பற்றிய தென்பதும் எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறுர்—'பெரிதாக இருக்கையாகிற குணத்தையுடையது' என்று. அணுவென்றும் ஶ்ருதியில் ஏற்பட்டதாயும் சுருங்கிய ஜ்ஞானத்தையுமுடைய ஆத்மாவுக்கு பெரிதாக யிருக்கை எப்படி ஸம்பவிக்கும் என்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ் சொல்லுகிறுர்—'அதாவது' என்றாரம்பித்து. 'அளவிடப்படாததாயும்' என்பதற்கு ஸ்வபாவத்தில்

¶ ஶ்வேதாஶ்வதரம்-6-9.

$. ஶ்வேதாஶ்வதரம்-6-16.

றர்த்தம். † 'அவன் அளவிடப்படாமலிருக்கத் தகுந்தவனாகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமிருக்கிறதல்லவா. ஶரீரத்தினால் அளவிடப்படக் கூடியதாயிருத்தலும் இவனுக்கு கர்மத்தினாலுண்டானது. கர்மங்களாகிற பந்தங்களினால் விடுபட்டவனுக்கு அளவிடப்படக்கூடாமையுண்டாகிறது. ஜீவாத்மாவினிடத்திலும் ப்₃ருஹ என்னும் பதம் ‡ ஸகு₃ணாந்

எல்லா விஷயங்களையும் அறியக்கூடியதாயிருக்கிற ஜ்ஞானத்திற்கு சுருக்கமில்லாதது என்றர்த்தம். தன்னுடைய உண்மையாகிய ஸ்வரூபம் ப்ரகாசிக்கும்பொழுது இந்தப் பெரிதாகவிருக்கை ஶ்ருதியில் சொல்லப்பட்டது என்று சொல்லுகிறார்—'அவன்' என்றாரம்பித்து. அளவில்லாத ஸ்வபாவத்தை யுடையவனுக்கு அளவிடப்பட்டவனாயிருக்கை ஸம்பவிக்காதாகையினால் அளவிடப்படாமலிருக்கத் தகுந்தவன் என்பது ஔபசாரிகமாகச் சொல்லியிருக்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்குச் சமாதானஞ் சொல்லுகிறார்—'ஶரீரத்தினால் அளவிடக்கூடியதா யிருத்தலும்' என்று. ஒரு உபாதியினாலுண்டானதும் வெவ்வேறு அவஸ்தைகளில் உண்டாயிருப்பதினால் விரோதமில்லை என்று தாத்பர்யம். ஔபசாரிகமாகவும் 'ப்₃ருஹ' என்னும் பதத்தின் ப்ரயோகம் ஜீவாத்மாவினிடத்திலும் ப்ரஸித்தமாயிருக்கிறது என்று சொல்லுகிறார்—'ஜீவாத்மாவினிடத்திலும்' என்றாரம்பித்து. ஆகையினாலல்லவோ 'பரம் ப்₃ரஹ்ம' என்கிற விஶேஷணம் ப்ரயோஜனத்தோடு கூடியதாகிறது என்றபிப்ராயம். இந்த ஶாஸ்த்ரத்திலேயே அநேக இடங்களில் ஜீவாத்மாவினிடத்திலேயே 'ப்₃ருஹ' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதைக் காட்டுகிறார்—'ஸகு₃ணாந்' என்றாரம்பித்து. 'ப்₃ரஹ்மபூ₄யாய' என்பதற்கு ப்ரம்மமாவதற்கென்று அபிப்ராயம். முக்தியடைந்தவனா யிருந்தபோதிலும் ஜீவாத்மாவிற்கு நேராக ப்ரம்மமாகுகை ஸம்பவிக்காதல்லவா 1 'ஸாத₄ர்ம்யமாக₃தா:' என்கிறவை முதலியவைகளுக்கு விரோதம் வருகிறபடியினால் என்று தாத்பர்யம். 'ப்₃ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டா₂ஹம்' என்கிற விடத்தில் 'அஹம்' (நான்) என்று பரப்ரம்மம் சொல்லப்படுகிறது. அதில் இருப்பையுடைய ப்ரம்மம் அதைவிட வேறாகவே யிருக்கவேண்டுமல்லவா என்று தாத்பர்யம். 'ப்₃ரஹ்மபூ₄த:' என்கிற ஶ்லோகத்தில் பரப்ரம்மத்தை யடைவதற்குச் சாதனமாகிய பக்தி உண்டாவதற்கு முன்னமே சொல்லப்படுகிற

† ஶ்வேதாஶ்வதரம்-5-9.
‡ பகவத்கீதை-14-26.
1 பகவத்கீதை 14-2.

ஸதீசேத்யுதாஹ்ருத:—அனாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே ।' † 'ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச' ‡ 'ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி । ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥' என்றிவை முதலிய விடங்களில் ப்ரயோகிக்கப்படுகிறது. கார்ய தசை காரண தசை ஆகிய இவ்விரண்டு தசைகளு மில்லாமையினுல் ஸத், அஸத், என்னும் பதங்களினுல் ஜீவாத்மாவின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறதில்லை. கார்யதசையில் தேவன் முதலிய பேர்களையும் ரூபங்களையுமடைகிறதினுல் ஸத் என்று சொல்லப்படுகிறது. அப்படியே அவைகளை அடையத்தகாதிருப்பதினுல் காரணதசையில் அஸத் என்று சொல்லப்படுகிறது. அப்படியே ஶ்ருதியில் ¶ இது முதலில் அஸத்தாக இருந்

---

*ப்ரம்மமாகுகை பரமாத்மாவின் ஸ்வரூபத்தோடு ஐக்யமாவதல்ல என்று தாத்பர்யம். 'நஸத்தந்நாஸதுச்யதே' என்னுமிடத்தில் ஒருவிதத்தாலும் சொல்லமுடியாது என்று மறுப்பது உசிதமல்ல, தன்னுடைய வார்த்தைக்கு விரோதம் வருகிறபடியினுல். ஸத்தாக விருக்கையும் அஸத்தாக விருக்கையும் இல்லை என்று மறுப்பதும் உசிதமில்லை, ஒன்றுக்கொன்று விரோதமாக விருக்கும் ஸ்வபாவங்களை மறுத்தால் மூன்றுவது ஸ்வபாவ மேற்படாது என்று ந்யாயமிருப்பதால். ஸத், அஸத் தென்று பேருடைய வஸ்துக்களைவிட வேறுபட்டது என்று மர்த்தமல்ல, அப்படிப்பட்ட வஸ்துக்களே ஏற்படாமையினுல். சுபம் அசுபம் இவை இரண்டுமில்லை என்பது மர்த்தமல்ல, சுபம் என்பதை மறுப்பது பொருந்தாதாகையினுல். ஆகையினு லிவ்விடத்தி லென்னசொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறுர்— 'கார்யதசை காரணதசை' என்றுரம்பித்து. இது பரிசுத்தமான ஆகாரத்தைச்சொல்லுகிறதுஎன்றுதெரிவிப்பதற்காக—'ஜீவாத்மாவின் ஸ்வரூபம்' என்று சொல்லப்பட்டது. இந்த இரண்டு தசைகளிலும் ஸத், அஸத், என்னும் பதங்களை ப்ரயோகித்ததற்குக் காரணத்தைச் சொல்லுகிறுர்—'கார்யதசையில்' என்றுரம்பித்து. இந்தக் காரணங்களை முன்னிட்டு ஶ்ருதியில் பரமாத்மாவைப்பற்றி இந்தப் பதங்களை ப்ரயோகித்திருப்பதைக் காட்டுகிறுர்—'அப்படியே ஶ்ருதியில்' என்றுரம்பித்து. 'அஸத்தாக இருந்தது' என்கிற இடத்தில் அஸத்தென்னும் பதத்தினுல் சொல்லப்பட்ட வஸ்துவே 'அதிலிருந்து' என்கிற விடத்தில் காரண*

---

† பகவத்கீதை-14-27

‡ பகவத்கீதை-18-54.

¶ தைத்திரீயம்-ஆனந்தவல்லி-7-1.

தது அதிலிருந்து ஸத் உண்டானது' என்றும், * 'அப்பொழுது இது வ்யாகரணம் செய்யப்படாமலிருந்தது, அது பேர்களினாலும் ரூபங்களினாலும் வ்யாகரணம் செய்யப்பட்டது' என்றமர்த்தமுள்ள வாக்யம் முதலியவைகள் சொல்லப்படுகின்றன. கார்யதசை காரணதசையாகிற இவ்விரண்டு தசைகளின் ஸம்பந்தம் ஜீவாத்மாவிற்குக் கர்மமாகிய அவித்யையினால் கட்டுப்பட்டிருப்பதினால் உண்டானது. ஸ்வரூபத்தினாலுண்டானதல்ல. ஆகையினால், ஸத், அஸத், என்னும் பதங்களினால் ஜீவாத்

*மாகச் சொல்லப்படுகிறது. 'ஸத் உண்டானது' என்கிற விடத்தில் ஸத்தென்பது கார்யமாகச் சொல்லப்படுகிறது. 'அப்பொழுது இது' என்றாரம்பிக்கும் இதினர்த்தத்தைச் சொல்லுகிற ச்ருதிவாக்யத்தில் அஸத் முதலிய பதங்கள் பேர் ரூபங்களில்லாமலிருப்பதையும் அவைகளையடைந்திருப்பதையும் காரணமாக உடையனவாக வ்யாக்யானம் செய்யப்பட்டதுகள். 'முதலில் இது அஸத்தாக விருந்தது' என்றர்த்தமுள்ள ச்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்பட்ட இரண்டு அவஸ்தைகளும் ஜீவாத்மாவிற்கும் உண்டு. அப்படிக்கில்லாவிடில் முன்பு ஜீவாத்மாவை ப்ரக்ருதி என்று சொல்லியிருப்பது பொருந்தாதாகையினால். 1 'ஜீவாத்மாக்களை ஜலத்துடன் பூமியில் ஸ்ருஷ்டித்தார்' என்றர்த்தமுள்ள ச்ருதிவாக்யத்தினாலிது விருத்தப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'கார்யதசை காரணதசையாகிற' என்றாரம்பித்து. கர்மமாகிற உபாதியினால் இவை இரண்டு தசையும் ஏற்பட்டனவல்லாமல் ஸ்வாபாவிகமாக ஏற்பட்டவையல்ல, இவ்விடத்தில் ஸ்வபாவத்தினாலேற்பட்ட ஆகாரம் சொல்லப்படுகிறது என்றர்த்தம். 2 'காரணத்வேந சாகாசாதிஷு யதாவ்யபதிஷ்டோக்தே:' என்கிற இந்த அதிகரணத்தில் ஸத், அஸத், அவ்யாக்ருதம், முதலிய காரணவாக்யங்களிலிருக்கிற எல்லாப் பதங்களும் பரமாத்மாவைச் சொல்லுகின்றன என்று நிரூபிக்கப்பட்டது. அப்படியிருக்க இவ்விடத்தில் அஸத்தென்னும் பதத்தினால் ஜீவாத்மாவைச் சொல்லியிருக்கிறதென்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு*

* ப்ருஹதாரண்யகம்-3-4-7.

1 தைத்திரீயம், முதல் அநுவாகம்.

2 சாரீரகஸூத்ரம் - 1 - 4 - 14. ஆகாசாதிஷு—ஆகாசமுதலிய பதங்களோடு கூடிய வாக்யம் முதலியவைகளில், காரணத்வேந - லோகங்களுக்குக் காரணமாக யதாவ்யபதிஷ்டோக்தே:-முன்பு சொல்லியபடி ப்ரம்மத்தையே சொல்லியிருக்கிற படியினால் (லோகங்களுக்குக் காரணம் ப்ரம்மம் தான்).

மாவின் ஸ்வரூபம் சொல்லப்படுகிறதில்லை. 'இது முன்பு அஸத்தாகவே இருந்தது' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்தில் காரணதசையோடு கூடிய பரப்ரம்மமே சொல்லப்படுகிறது. பேர் ரூபம் முதலிய இவைகளால் பிரிக்கத்தகாத ஸூக்ஷ்மங்களாகிய சேதநாசேதன வஸ்துக்களைச் சரீரமாகவுடைய பரப்ரம்மமே காரணாவஸ்த்தையையுடையதாகையினால் ஶரீரம் ஜீவாத்மா இவைகளின் ஸ்வரூபங்களும் காரணதசையில் அஸத் என்னும் பதத்தினால் சொல்லப்படுகின்றன. அப்படியிருந்தபோதிலும் ஜீவாத்மாவிற்கு அந்தக்காரணதசையும் கர்மத்தினாலுண்டானதாகையினால் பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ஸத், அஸத், என்னும் பதங்களினால் சொல்லத்தகாதது. 12

ஸர்வத: பாணி பாதம் தத் ஸர்வதோக்ஷிஶிரோமுகம் |
ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ‖ 13

ப: ரை] தத் - அந்த பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபம், ஸர்வத: பாணி பாதம் - எல்லா விடங்களிலும் கை, கால்கள் இவைகளையுடையது, ஸர்வதோக்ஷிஶிரோமுகம் - எல்லாவிடங்களிலும் கண், தலை, முகம், இவைகளை யுடையது, ஸர்வத: ஶ்ருதிமத் - எல்லா விடங்களிலும் காதையுடையது, லோகே - இந்த லோகத்தில், ஸர்வம் - எல்லா வஸ்துக்களையும், ஆவ்ருத்ய - வ்யாபித்துக்கொண்டு, திஷ்டதி - இருக்கிறது.

---

*ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இது முன்பு' என்றாரம்பித்து. ஸத், அஸத், என்னும் பதங்கள் பரமாத்மாவினிடத்தில் சேதநாசேதன வஸ்துக்களின் வழியாகவல்லவோ ப்ரயோகிக்கப்படுகின்றன ஆகையினால் வழியாக இருக்கிற ஜீவாத்மாவினிடத்திலும் அந்தப் பதங்களினால் சொல்லத் தகுந்தவனா யிருக்கை ஏற்பட்டது என்று தாத்பர்யம். அப்படியாகில் பரிசுத்தமான தசையிலும்கார்யதசையிலுமிருக்கிற பேர் ரூபம் இவைகளாலுண்டான பிரிவில்லையாகையினால் அஸத்தென்னும் பதம் ப்ரயோகிக்கப்படலாமே? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அப்படியிருந்தபோதிலும்' என்றாரம்பித்து. கர்மங்களினாலுண்டான இரண்டு வித தசைகளும் இல்லை என்று தடுப்பதிலதற்குத் தாத்பர்யம் என்று கருத்து.* 12

*தா] ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ஶரீரமில்லாததாகையினாலும், அவயவங்களில்லாததாகையினாலும், இந்த்ரியங்களில்லாத தாகையினாலும், கை கால்களுக்கு ப்ரஸ்தாவமேயில்லை. மேலும் இது முன்பு விஶ்வரூபத்தில் சொல்லிய அநேகங்கைகளையுடைத்தாயிருக்கையைச் சொல்லு*

பா] அந்தப் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் எல்லாவிடங்களிலும் கைகள் கால்கள் இவைகளினுடைய கார்யங்களைச் செய்ய சக்தியுள்ளது. அப்படியே எல்லாவிடங்களிலும் கண் முதலியவைகளின் கார்யங்களைச்செய்யக்கூடியது. * 'கைகள் கால்களில்லாதவனு யிருந்தபோதிலும் வேகமாய் ஓடுகிறான், (மற்ற வஸ்துக்களை) பிடிக்கிறான், கண்ணில்லாதிருந்த

---

*கிறதுமல்ல, ஜீவாத்மாவைப்பற்றிச் சொல்லுகிற ஸந்தர்ப்பமென்று ஸ்தாபித்திருப்பதினால். ஆகையினாலேயே ஜீவாத்மாவின் கர்மங்களால் அடையப்பட்டதும் தன்னுடைய ஸங்கல்பத்தினால் அடையப்பட்டதுமாகிய கை முதலியவைகளோடு ப்ரபஞ்சத்தை சரீரமாகவுடைய பரமாத்மாவிற்கு ஸம்பந்தம் சொல்லப்படுகிறது; என்றிவை முதலிய கல்பனைகளும் நிராகரிக்கப்பட்டன. மேலும் எல்லாவிடத்திலும் என்று சொன்னதும் பொருந்தாது. ஆகையினால் எல்லாவிடங்களிலும் கைகளையும் கால்களையுமுடையது என்பது முதலியது எப்படிச் சொல்லப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார் — 'அந்தப் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம்' என்றாரம்பித்து. பரிசுத்தமான ஆத்மாவிற்கு கை முதலியவைகளில்லாமலிருந்தபோதிலும், 'பாணி' முதலிய பதங்களினால் லக்ஷணையாகச் சொல்லப்படுகிற கை முதலியவைகளின் சக்தியுண்டென்பதில் ச்ருதியை ப்ரமாணமாகக் காட்டுவதற்காக பரமாத்மாவிற்கு கை முதலியவைகளில்லாமலிருந்தபோதிலும் அவைகளின் ஶக்தியுண்டென்பதை முதலில் நிரூபிக்கிறார்—'கைகள் கால்களில்லாதவனுயிருந்தபோதிலும்' என்றாரம்பித்து. கைகள் கால்களில்லாதவனென்பது கர்மேந்த்ரியங்களின் கூட்டமில்லையென்று மறுக்கப்படுகிறது என்று குறிப்பதற்காக. 'கண்ணில்லாதவன் காதில்லாதவன்' என்பது ஜ்ஞானேந்த்ரியங்களின் கூட்டமில்லையென்று மறுக்கப்படுகிறது என்பதற்காக. இப்படியாகில் பரமாத்மாவிற்கு அஸாதாரணமான ஸ்வபாவத்தை அல்பமான ஶக்தியையுடைய ஜீவாத்மாவினிடத்தில் எப்படிச் சொல்லியிருக்கிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—பரிசுத்தனாகிய' என்றாரம்பித்து. முக்தியடைந்திருக்கும் தசையில் ப்ரம்மத்தின் குணங்களெட்டு முண்டாகிறபடியினால் சுருக்கமில்லாத ஜ்ஞானத்தின் ஶக்தியினால் இவையெல்லாம் பொருந்தும் என்று தாத்பர்யம். ஸர்வ என்கிற ச்ருதிக்கு சுருக்கி அர்த்தஞ் சொல்லக் காரணமில்லாமையினால் விசேஷித்துச் சொல்லாமலிருந்தபோதிலும் எல்லாவிடங்களிலும் கைகால்களையுடையவனாகயிருக்கை முதலியது ஸித்தமாகவே ஏற்பட்டது என்கிற அபிப்ராயத்*

* ச்வேதாச்வதரம் - 3-19.

வனு யிருந்தபோதிலும் பார்க்கிறான், அவன் காதில்லாதவனுயிருந்தபோதிலும் கேட்கிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் பரமாத்மாவை கை,கால்கள் இவைகளில்லாம லிருந்தபோதிலும் எல்லாவிடங்களிலும் கை,கால்களின் கார்யங்களைச்செய்கிறுனென்பது சொல்லப்படுகிறது பரிசுத்தமாகிய ஜீவாத்மாவிற்கும் அவனேடு ஸமமாயிருக்கை உண்டாகையினுல் எல்லாவிடங்களிலும் கை,கால்கள் முதலியவைகளின் கார்யங்களைச் செய்யக்கூடியவனு யிருக்கை உண்டாகிறது என்பதும் ஶ்ருதியிலேற்பட்டதே. † 'வித்வானுக இருப்பவன்அப்பொழுது புண்ணிய பாபங்களை நீக்கிவிட்டு ப்ரக்ருதியின் ஸம்பந்தமில்லாதவனுய் மிகுந்த ஸாம்யத்தை யடைகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்ய மிருக்கிறதல்லவா. ‡ 'இதம் ஜ்ஞாநமுபாஶ்ரித்ய மம ஸாதர்ம்யமாகதா:' என்றல்லவோ மேலே சொல்லப்படப்போகிறது. இந்த லோகத்தில் எங்கெங்கு வஸ்துக்களின் கூட்டங்களிருக்கிறதோ அவையெல்லாவற்றையும் வ்யாபரித்துக்கொண்டிருக்கிறது. பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் இடம் முதலியவைகளாலுண்டான

)ல் 'ஏற்பட்டதே' என்று சொல்லியிருக்கிறது. ஸமமாகயிருக்கையுண்டாகிறது என்று சொன்னமாத்திரத்தினுல் எல்லா ஆகாரங்களினுலும் ஸமமாக விருக்கை ஶ்ருதியில் எப்படி யேற்பட்டது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறுர்–'வித்வானுக இருப்பவன்' என்றுரம்பித்து. இந்தமிகுந்த ஸாம்யமாவது லோகங்களின் வ்யாபாரத்தைத் தவிர மற்ற எல்லாவற்றையும் பற்றியது என்று ஶாரீரக ஸூத்ரத்தில் நான்காவது அத்யாயம் நாலாவது பாதத்தில் விசாரிக்கப்பட்டது என்று தாத்பர்யம். அந்த ஶ்ருதியினர்த்தம் இந்தக் கீதையிலும் மேலே உபதேசிக்கப்படப்போகிறது. அதை இவ்விடத்தில் சொல்லுகிறது யுக்தம் என்று சொல்லுகிறுர்—'இதம் ஜ்ஞாநம்' என்றுரம்பித்து. 'திஷ்டதி (இருக்கிறது)' என்கிற விடத்தில் வ்யாபரித்திருப்பதற்கு ஒருகாலத்திலும் குறைவில்லை என்று சொல்லப்படுகிறது கர்மங்களால் சுற்றப்பட்ட ஜ்ஞானத்தையுடையவனுயும் அணுவாயுமிருக்கிற ஜீவாத்மாவிற்கு எல்லாவற்றையும் வ்யாபரித்துக்கொண்டிருக்கை எப்படிப் பொருந்தும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறுர்—'பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபம்' என்றுரம்பித்து. இந்த வ்யாபரித்திருக்கை தர்மபூத ஜ்ஞானத்தின் வழியாக என்று ஶாரீரக ஸூத்ரத்தில் 1 'ப்ரதீபவதாவேஶஸ்ததா ஹி தர்ஶயதி' என்றுரம்பித்து நிரூபிக்கப்பட்டது, ஜீவாத்மாவின் ஸ்வரூபம் அணுவென்றே சொல்லப்பட்டிருப்

† முண்டகம் - 3-1-3.

‡ பகவத்கீதை - 14-2.

1 சாரீரகஸூத்ரம் - 4-4-15.

அளவில்லாததாகையினால் எல்லாவிடத்திலு மிருக்கிறதென்றர்த்தம். 13

ஸர்வேந்த்ரியகுணாபாஸம் ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம் |
அஸக்தம் ஸர்வப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச || 14

ப - ரை' ஸர்வேந்த்ரியகுணாபாஸம் - எல்லா இந்த்ரியங்களினுடைய வ்யாபாரத்தினால் ப்ரகாஶத்தையுடையது, ஸர்வேந்த்ரியவிவர்ஜிதம் - (ஸ்வபாவத்தில்) எல்லா இந்த்ரியங்களுமில்லாதது, - அஸக்தம் - (ஸ்வபாவத்தில்) தேஹங்களோடு ஸம்பந்தமில்லாதது, ஸர்வப்ருச்சைவ - எல்லா தேஹங்களையும் தரிக்கக்கூடியது, நிர்குணம் - (ஸ்வபாவத்தில்) ஸத்வம் முதலிய குணங்களில்லாதது, குணபோக்த்ரு ச - ஸத்வம் முதலிய குணங்களை யனுபவிக்கிறது. 14

பா] எல்லா இந்த்ரியங்களின் குணங்களினால் ப்ரகாஶத்தை யுடையது. இந்த்ரியங்களின் குணங்களாவது இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் அதாவது இந்த்ரியங்களின் வ்யாபாரங்களினால் விஷயங்களையறி

---

*பதினாலும், விகாரமற்றதென்று ஶ்ருதியில் சொல்லியிருப்பதினாலும், ஸ்வரூபத்தில் விகாரமுண்டென்பது பொருந்தாததாகையினாலும்.* 13

தா] *இந்த்ரியங்களல்லவோ காரணங்கள் இந்த்ரியங்களின் குணங்கள் காரணங்களல்லவே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'இந்த்ரியங்களின் குணங்களாவது இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள்' என்று. ஸ்வயம் ப்ரகாசமாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்திற்கு இந்த்ரியங்களின் வ்யாபாரங்களினால் எப்படி ப்ரகாஶமுண்டாகும். விஷயங்களின் ப்ரகாசத்தைச் சொல்லுவதாயிருந்தபோதிலும் பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தைச்சொல்லிக் கொண்டுவரும் போது இந்த்ரியங்களினால் உண்டாகிற ஜ்ஞானத்தைச் சொல்லுவதெப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இந்த்ரியங்களின் குணங்களால் ப்ரகாசிக்கிறது என்கிறவை முதலிய மற்றவர்கள் சொன்ன அர்த்தங்களை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'இந்த்ரியங்களின் குணங்களினால்' என்றாரம்பித்து. யோக்யதை பரிசுத்தமான தசையிலுமுண்டு என்று தாத்பர்யம். இதனால் இந்த்ரியங்களினுடைய வ்யாபாரங்களினால் வ்யாபரிக்கிறதுபோல அறியத்தக்கது, என்று சங்கராசாரியர், க்ரந்தத்திலில்லாமல் கல்பனை செய்திருப்பது நிராகரிக்கப்பட்டது. ஒரு ஸமயத்தில் இந்த்ரியங்களையுடையதாக விருக்கிற ஜீவாத்மாவிற்கு எல்லா இந்த்ரியங்களுமில்லாதது என்பது எப்ப*

யக்கூடிய ஶக்தியையுடையது என்றர்த்தம். ஸ்வபாவத்தில் எல்லா இந்த்ரியங்களு மில்லாதது அதாவது இந்த்ரியங்களின் வ்யாபாரங் களில்லாமலே தானாகவே எல்லாவற்றையும் அறியக்கூடியது என் றர்த்தம் ஸ்வபாவத்தில் தேவன் முதலிய ஶரீரங்களோடு ஸம்பந்தமில்லா தது. தேவன் முதலிய எல்லா ஶரீரங்களையும் தரிக்கக்கூடிய சக்தியை யுடையது $ 'அவன் ஒருவிதமாக ஆகிறான், மூன்று விதமாக ஆகிறான்,' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளிருக்கிறபடியினால் அப்

டிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகி றார்—'ஸ்வபாவத்தில்' என்று. இந்த்ரியங்களில்லை யென்று சொல்லும் பக்ஷத்தில் அதினாலுண்டாகக்கூடிய ஜ்ஞானமுமில்லாமையினால் மற்ற வர்கள் சொன்னதைப்போல மோக்ஷத்தில் கல்லைப்போ லிருக்கிறது என்றேற்படுமே என்கிற ஆக்ஷேபத்தை முன்புசொன்னதைக்கொண் டு பரிகரிக்கிறார்—'அதாவது இந்த்ரியங்களின் வ்யாபாரங்களில்லாமலே' என்றாரம்பித்து. முக்தியையடைந்தவனுக்கும் எல்லா லோகத்திற்கும் ஆதாரமாக விருக்கையில்லாமையினாலும், க்ரமமாக எல்லா ஜாதிகளை யுமுடைய சரீரத்தைத் தரித்துக்கொண்டிருப்பது மில்லாமையினாலும், அவைகளை தரிக்கக்கூடிய ஶக்தி இங்கே சொல்லப்படுகிறது. ஸ்வபா வத்தில் அவைகளோடு ஸம்பந்தமில்லாமை 'அஸக்தம்' என்பதினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தில் தேவன் முதலிய' என்றாரம்பித்து. எல்லாவித ஶரீரங்களையும் தரிக்கக்கூடிய ஶக்தியையுடையவனாக யிருப்பதையும் பரிசுத்த தசையில் உண்டா கிற கார்யத்தைக்கொண்டு நிரூபிக்கிறார்—'அவன் ஒருவிதமாகஆகிறான்' என்றாரம்பித்து. ஜீவாத்மாவின் ஸ்வரூபம் பேதத்தை அடையாதாகை யினாலும், ஸாப்பிடுவது முதலியவைகளை ஶ்ருதி சொல்லியிருப்பதினா லும், ஶரீரங்களின் வழியாகவே 'மூன்றுவிதமாக ஆகிறான்' என்பது முதலியது சொல்லியிருக்கிறது என்று தாத்பர்யம். இத்தால் 'ஸர்வ ப்ருத்'என்பதற்கு எல்லாவித ப்ரமங்களுக்கும் ஆதாரமாகவிருக்கைஎன் று அர்த்தம் சொன்னவன் நிராகரிக்கப்பட்டான். 'நிர்குணம்' என்கிற விடத்தில் ஸத்வம் முதலிய குணங்களுக்கு ஆதாரமல்லஎன்று தடுக்கப் படவில்லை, பரிசுத்தமில்லாத தசையிலும் அதற்கு ப்ரஸ்தாவ மில்லா மையினாலும் 'குணபோக்த்ரு'என்கிறதற்கு அது எதிர்நடையாக இல் லாமையினாலும். ஆகையினால் இவ்விடத்தில் கர்மங்களைக் காரணமாக வுடைய ப்ரக்ருதியின் குணங்களைப்பற்றிய அநுபவம் இல்லை என்று

$ சாந்தோக்யம் - 7-26-2.

படியே ஸ்வபாவத்தில் ஸத்வம் முதலிய குணங்களில்லாதது. ஸத்வம் முதலிய குணங்களையனுபவிக்கும் சக்தியை யுடையது. 14

𑌬𑌹𑌿𑌰𑌨𑍍𑌤𑌶𑍍𑌚 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑌚𑌰𑌂 𑌚𑌰𑌮𑍇𑌵 𑌚 |
𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 𑌤𑌦𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂 𑌚𑌾𑌨𑍍𑌤𑌿𑌕𑍇 𑌚 𑌤𑌤𑍍 || 15

ப-ரை] 𑌤𑌤𑍍 - அந்த ஆத்மஸ்வரூபமானது, 𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌮𑍍 - பஞ்சபூதங்களினுடைய, 𑌬𑌹𑌿𑌃-வெளியிலும், 𑌅𑌨𑍍𑌤𑌃 - உள்ளேயும்(இருக்கிறது), 𑌅𑌚𑌰𑌂 - (ஸ்வபாவத்தில்) சலிக்காதது, 𑌚𑌰𑌮𑍇𑌵 - (தேஹத்தோடிருக்கும்போழுது) சலிக்கிறது; 𑌸𑍂𑌕𑍍𑌷𑍍𑌮𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - ஸூக்ஷ்மமாகவிருக்கிறபடியினால், 𑌤𑌤𑍍 - அந்த ஆத்மஸ்வரூபமானது. 𑌅𑌵𑌿𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 - அறியத்தகாதது, 𑌦𑍂𑌰𑌸𑍍𑌥𑌂𑌚 - தூரத்திலுமிருக்கிறது, 𑌅𑌨𑍍𑌤𑌿𑌕𑍇𑌚- ஸமீபத்திலுமிருக்கிறது,

பா] ப்ரதிவீ முதலிய பஞ்சபூதங்களை விட்டுவிட்டு ஶரீரமில்லாமல் வெளியில் இருக்கிறது. ¶ 'ஸாப்பிட்டுக்கொண்டும், ஸ்த்ரீகளோடு விளையாடி-

*சொல்லுகிறதே அல்லாமல் நிர்விசேஷம் என்கிறவார்த்தைக்கிடமே இல்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தில் ஸத்வம் முதலிய' என்றாரம்பித்து. 'ஸ்வபாவத்தில்' என்பதினால் 'குணபோக்த்ரு' என்று சொல்லியிருப்பதோடு விரோதத்தைப் பரிகரித்திருக்கிறது. 'அனுபவிக்கும் ஶக்தியையுடையது' என்கிற விடத்திலும் முன்போலவே அபிப்ராயம் சொல்லிக்கொள்ள வேண்டியது. அதாவது குணங்களை யனுபவிப்பதோ கர்மமாகிற காரணத்தினாலுண்டானது. அதில்லாமையோ ஸ்வபாவத்திலிருக்கிறது. அனுபவிக்கும் ஶக்தி மாத்திரம் எப்பொழுது மிருக்கிறது ஆகையினால் விரோதமில்லை என்று.* 14

*தா] ஶரீரத்தோடு கூடியிருக்கும் தசையிலல்லவோ பஞ்சபூதங்களுக்குள்ளே யிருக்கிறது ஆகையினால் முக்தியடைந்தவனுக்கு ஶரீரமில்லாமையினால் பஞ்சபூதங்களுக்கு வெளியிலிருக்கிறதென்பது உசிதம். அவைகளுக்குள்ளே யிருப்பதென்பது எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஸாப்பிட்டுக் கொண்டும்' என்றாரம்பித்து. இந்தச் ஶரீரத்தோடு கூடயிருப்பது கர்மத்தினாலேற்பட்டதல்ல, 1 'தன்னுடைய ரூபத்தோடுசேருகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லியபடி ப்ரகாசமாகிய தன்னுடைய ஸ்வரூபத்தை உடையவனுக்கு இது சொல்லியிருக்கிறபடியினால.*

¶ *சாந்தோக்யம்* - 8-12-3.
1 *சாந்தோக்யம்* - 8-12-2.

க்கொண்டும், இருக்கிறது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவை களிலேற்பட்ட தன்னிஷ்டப்படி நடக்கிற வ்யாபாரங்களைச்செய்யும் போழுது அந்தச் ஶரீரங்களுக்குள்ளேயு மிருக்கிறது. ஸ்வபாவத்தில் சலிக்காதது. தேஹத்தோடிருக்கும்போழுது சலிக்கிறது. இப்படி எல்லாச் ஶக்திகளையுடையதாயும் எல்லாவற்றையு மறிந்துகொள்ளக்கூடியதாயு

*அவன் புண்யபாபங்களை விட்டவனாகையினாலும் 1 'கர்மங்களுக்கு வசப்படாதவனாகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் இருக்கிறபடியினாலும். இவையெல்லாவற்றையு மபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு* 'தன்னிஷ்டப்படி நடக்கிற வ்யாபாரங்களை' *என்று சொல்லப்பட்டது. 2 'அவன் பிதாக்களின் கும்பலை ஆசைப்படுகிறானேயானால்' என்றும், 3 'தன்னிஷ்டப்ரகாரம் அனுபவித்துக்கொண்டும் தன்னிஷ்டப்பிரகாரம் ரூபங்களை எடுத்துக்கொண்டும் இந்த லோகங்களில் சஞ்சரித்துக்கொண்டிருக்கிறான்' என்று மர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்கள், 'முதலியவைகளில்' என்பதால் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. ஸ்வரூபத்தில் விகாரங்களில்லாதவனுகிய ஆத்மாவிற்கு மூன்றுவிதமாக ஆகுதல் முதலியதும், ஸாப்பிடுதல் முதலியதும், பிதாக்களின் ஸமூகம் முதலியதும், ஶரீரங்களையடையாமல் பொருந்ாதல்லவா. ஶரீரமாவது, ப்ரக்ருதியைச் சேர்ந்தவைகளாகவாவது, ப்ரக்ருதியைச் சேராதவைகளாகவாவதிருக்கிற பஞ்சபூதங்களின் சேர்க்கையே; ஆகையினால் பஞ்சபூதங்களுக்குள்ளே இருக்கிறதென்பதும் ஸித்தித்துவிடுகிறதென்றபிப்ராயம். 'சுவரம்', 'வரம்', என்பவைகளுக்கு ஸ்தாவர ஜங்கமங்களுக்கு அந்தர்யாமியாயிருக்கிறதென்றர்த்தஞ் சொல்லில் பரிசுத்தமான அவஸ்த்தையில் அவைகள் பொருந்தாது. ஆகையினால் 'பஹிரந்தஃ' என்று கீழ்ச்சொல்லிய ஶரீரத்தோடு கூட இருத்தலும், ஶரீரமில்லாமலிருத்தலுமே அவைகளுக்குக் காரணம் என்று காட்டுகிறார்—* 'ஸ்வபாவத்தில்' *என்றாரம்பித்து. கால, முதலியவைகளால் நடப்பதும் அதில்லாமையுமிங்கே சொல்லப்படுகின்றன. ஒருநாளு மறியப்படாமையினால் அப்படிப்பட்ட வஸ்துவே யில்லை என்கிற ஆக்ஷேபத்தை பரிகரிப்பதற்காக—'ஸூக்ஷ்மத்வாத் ததவிஜ்ஞேயம்' என்று சொல்லப்படுகிறது. 'நான்' என்று எப்பொழுதுமறியப்படுகிற ஆத்மா 'அறியக்கூடாதது' என்பது எந்த ஆகாரத்தினால்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—* 'இப்படி எல்லாச் ஶக்திகளையுடையதாயும்' *என்றாரம்பித்து. 'தத்' என்னும் பதத்தினால் குறிக்கப்படும்*

1 *சாந்தோக்யம* - 7-25-2.

2 *சாந்தோக்யம்* - 8-2-1. 3 *தைத்திரீயம், ப்ருகுவல்லி*, 10-*வது அனுவாகம்*

போதிலும் அதிக தூரத்திலிருக்கிறது. அப்படியே அமாநித்வம் முதலிய குணங்களை யுடையவர்களுக்கு அதுவே ஸமீபத்திலிருக்கிறது. 15

அவிப⁴க்தம் ச பூ⁴தேஷு விப⁴க்தமிவ ச ஸ்தி²தம் |
பூ⁴தப⁴ர்த்ரு ச தஜ்ஜ்ஞேயம் க்³ரஸிஷ்ணு ப்ரப⁴விஷ்ணு ச || 16

ப-ரை] தத் - அந்த ஆத்மவஸ்துவானது, பூ⁴தேஷு - ப்ராணிகளிடங்களில் (இருந்தபோதிலும்), அவிப⁴க்தம் - ஒரே ஆகாரத்துடன் கூடியதாயும், விப⁴க்தமிவ-தனித்தனி ஆகாரங்களையுடையதுபோலவும், ஸ்தி²தம்-இருக்கிறது, பூ⁴தப⁴ர்த்ரு-பஞ்சபூதங்களைத் தரிக்கிறதாகவும், க்³ரஸிஷ்ணு-(அன்னம் முதலியவைகளை) ஸாப்பிடுகிறதாகவும், ப்ரப⁴விஷ்ணு - (அப்படி ஸாப்பிட்ட வஸ்துக்கள் வேறு விதமாகமாறி) வெளியில் வருவதற்குக் காரணமாகவும், ஜ்ஞேயம் - அறியத்தக்கது. 16

பா] தேவன் மனுஷ்யன் முதலிய ப்ராணிகளில் எல்லாவற்றிலுமிருக்கிற ஆத்மவஸ்துவானது அறிவுந்தன்மையையுடைத்தா யிருக்கையாகிய ஒரே ஆகாரத்தையுடையதாகையினால் வ்யத்யாஸங்களில்லாமல் இருக்கிறது. தெரியாதவர்களுக்குத் தேவன் முதலிய ஆகாரத்தினால் 'இவன்தேவன்', 'இவன் மனுஷ்யன்' என்று பிரிவையுடையதைப்போல இருக்கிறது.

---

*அதிகாரிகளுக்குச் சுலபமா யறிய முடியும் என்பதையும் சொல்லுகிறது, என்று சொல்லுகிறார்—'அமாநித்வம்முதலிய' என்றாரம்பித்து.* 15

*ஸ்வரூபங்களில் அநேக பேதங்களையுடைய ஶரீரங்களில் பேதமில்லாததென்று சொல்லியிருப்பதினால் 1 'வித்³யாவிநயஸம்பந்நே' என்று கீழ்ச்சொல்லிய ஸமமாக இருந்தமேல இங்கு சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'தேவன் மனுஷ்யன்' என்றாரம்பித்து. 'அவிப⁴க்தம்' என்பதற்கு ஸ்வரூபத்தில் தேவனாயிருக்கை முதலிய பேதங்களில்லாதது என்றர்த்தம். 'விப⁴க்தமிவ' என்கிற விடத்தில் 'இவ' என்னும் பதத்தினால் ப்ரமிக்கிறவர்களின் ஜ்ஞானத்தில் தோன்றுகிற ஆகாரத்தைச் சொல்லியிருக்கிறது என்று சொல்லுகிறார்—'தெரியாதவர்களுக்கு' என்றாரம்பித்து. இப்படி ஜீவாத்மாவின் பரிசுத்தமான அவஸ்தை சொல்லப்பட்டது. இதில் 'பூ⁴தப⁴ர்த்ரு' என்பது முதலாக லோகங்களை ஸ்ருஷ்டிப்பது முதலிய வ்யாபாரங்களைச் சொல்லுகிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காக, இந்த ஸந்தர்ப்பம் போக்தாவாகிய ஜீவாத்மாவின் வ்யத்யாஸத்தைச் சொல்லுகிறது என்று சொல்லிக்கொண்டு*

---

1 பகவத்கீதை 5-18.

'நான் தேவன்,' 'நான் மனுஷ்யன்', என்று தேஹத்தோடு ஒன்றுகச்சேர்ந்து அநுஸந்திக்கப்பட்டிருந்தபோதிலும் அறிகிறவனுகையினுல் தேஹத்தைவிட வேறு வஸ்துவாக அறியக்கூடியது என்று முதலிலேயே * 'க்ஷேத்ரஜ்ஞ இதி' என்று சொல்லப்பட்டது. இப்பொழுது இன்னும் சில ஸ்வபாவங்களாலும் அவ்விதமாக அறியக்கூடியது என்று சொல்லுகிறார்—'பூதபர்த்ரு' என்றுரம்பித்து. தேஹமாகச் சேர்ந்திருக்கிற ப்ரதிவீ முதலிய பூதங்களை எது தாங்குகிறதோ அது தன்னுல் தாங்கப்படுகிற பூதங்களைவிட வேறுபட்டது என்று அறியத்தக்கது அதாவது வேறுவஸ்துவென்று அறியகூடியதென்றர்த்தம். அப்படியே பஞ்சபூதங்களாலுண்டாகிய அன்னம் முதலியவைகளைச் சாப்பிடுகிறது. தன்னுல் விழுங்கப்படுகிற பூதங்களைக் காட்டிலும் விழுங்குகிறவனுகையினுல் வேறு வஸ்து வெ

முன்னே சொல்லியிருப்பதோடு புனருக்தியையும் பரிகரிக்கிறார்—'நான் தேவன்' என்றுரம்பித்து. முன்பு 'நான்' என்கிற பதத்திற்கு அர்த்தமாக விருக்கை, அதற்கு அர்த்தமல்லாமலிருக்கை, அறியும் தன்மையுடையதாயிருக்கை, அதில்லாததாயிருக்கை, முதலிய வ்யத்யாஸம் சொல்லப்பட்டது. இப்பொழுதோவெனில் ஆதாரமாகவிருக்கை, அதனுல் தரிக்கக்கூடியதாயிருக்கை, போக்தாவாக விருக்கை, அவனுல் அநுபவிக்கத்தக்கதாயிருக்கை, அவனுல் விகாரத்தை அடைவிக்கக்கூடியவனுயிருக்கை, அதன் விகாரத்திற்குக் காரணமாயிருக்கை, இவைகளால் வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது என்பர்த்தம்.

ஒல் ஜீவாத்மாவினுல் தரிக்கப்படுகிற வஸ்துவைச் சொல்லுகிற 'பூத' என்னும் பதம் அசேதனமாத்ரத்தைச் சொல்லுகிறது. அதிலும் ப்ரஸித்தியை யநுஸரித்து பஞ்சபூதங்களைச் சொல்லுவதாக யிருந்தபோதிலும் ஶரீரத்தைச்சொல்லிக்கொண்டுவருப் ஸந்தர்ப்பமாகையினுல் அப்படிச் ஶரீரமாக மாறியிருக்கிற பூதங்களைச் சொல்லுகிறது, என்று சொல்லுகிறுர்—'தேஹமாகச் சேர்ந்திருக்கிற' என்றுரம்பித்து. 'ஜ்ஞேயம்' என்னும் பதம் 1 'ஜ்ஞேயம் யத்தத்ப்ரவக்ஷ்யாமி' என்றுரம்பித்திருந்தபோதிலும் மறுபடி இங்கே சொல்லப்படுகிறபடியினுல் அங்கே சொல்லப்பட்ட அர்த்தத்தைவிட வேறுபட்ட அர்த்தத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. தரிக்கிறவனுக யிருக்கை, தரிக்கத்தக்கதாக விருக்கை, இவைகளாலேற்பட்டதைச்

* பகவத்கீதை-13-1.

1 பகவத்கீதை-13-12.

ன்று அறியத்தக்கது. அப்படியே விழுங்கப்பட்டவைகளாயும் வேறு வித மான மாறுதல்களை யடைந்தவைகளாயுமிருக்கிற அன்னம் முதலியவை கள் வெளி வருவதற்குக்காரணம் அவைகளைவிட வேறு பட்டதென்று அறியக்கூடியதென்றர்த்தம். ப்ரேதஶரீரத்தில் அன்னம் முதலியவைகளை விழுங்குவதையும் மேல் சொல்லியபடி அவைகள் உண்டாவதையும் காணுமையினுல் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகிற ஶரீரம் விழுங்கு

---

சொல்லுகிருர்—'வேறுபட்டது' என்று. 'அப்படியே விழுங்கப்பட்டவை களாயும்' என்றிவை முதலிய வாக்யத்திற்கு இங்கு ஜீவாத்மா தேஹத் தைவிட வேறுபட்டவனென்று நிரூபிப்பதில் தாத்பர்யமானதினுல் இந்த அர்த்தமே உசிதமென்று கருத்து. வெளிவருவதாவது ரேதஸ் ஸாகவும், கர்ப்பம் முதலியவைகளாகவும் மாறுகிறது. 'வேறுவிதமான மாறுதல்களை' என்பதற்கு ரஸமாகவும், மலமாகவும், தாதுக்கள், முத லிய மாறுதல்களாகவும் என்றர்த்தம். ஶரீரத்திலேயே விழுங்குதல் முதலியது செய்யப்படுகிறதாகக் காணப்படுகிறது. மேலும் இந்த்ரியம் ஶரீரம் இவைகளின் சேர்க்கையில்லாமல் அவயவங்களில்லாத ஆத்மா விற்கு விழுங்குதல் முதலியது ஸம்பவிக்காது. ஆகையினுல் அவைகள் ஆத்மாவின் ஸ்வபாவங்களாக எப்படிச் சொல்லப்படுகின்றன என்று ஆக்ஷேபம் வரில் கீழ்ச்சொல்லிய அர்த்தத்தையே ஆத்மாவில்லாவிடில் விழுங்குதல் முதலியதில்லை என்று உறுதிப்படுத்துகிருர்—'ப்ரேத ஶரீ ரத்தில்' என்ருரம்பித்து. இந்தச் ஶரீரம் ஶரீரமாகவிருக்கிறவாகாரத்தி ஞல் விழுங்குதல் முதலியவைகளுக்குக் காரணமா? அல்லது பஞ்ச பூதங்களின் சேர்க்கை என்பது மாத்திரத்தினுல் காரணமா? முதல் பக்ஷத்தில் ஶரீரமாக விருக்கை ஆத்மாவுடன் கூடியிருப்பதினுல் ஏற் பட்டதாகையினுல் விழுங்குதல் முதலியவைக்கு ஆத்மாவும் வேண்டி யது தான் என்றேற்பட்டது. இரண்டாவது பக்ஷத்தில் ப்ரேத ஶரீரம் முதலியவைகளில் அவைகள் காணப்படாமையினுல் அது பொருந்தாது. ப்ரேத ஶரீரத்திலும் சில விஶேஷங்கள் காணப் படுகின்றன. ஆனுலும் ஜீவாத்மாவின் ஜ்ஞானத்தை முன்னிட்டு நடக்கிற விழுங்குதல், உள்ளே வைத்துக்கொள்ளுதல், முதலிய தில்லாமையினுல் அவைகள் ஜீவாத்மாவை அபேக்ஷிக்கிறதில்லை. ஈஶ்வரனை அபேக்ஷிக்கிறதென்பதோ எல்லாவிடத்திலு முண்டா கையினுல் அதில் ஒரு விசேஷமுமில்லை என்று தாத்பர்யம். இவ்வி டத்தில் தரிப்பது, விழுங்குவது, முதலியது கயிறு முதலியவைகளில் பாம்பு முதலிவைகளை ப்ரமிப்பதுபோல என்று சொல்லுகிறவர்கள்

வதற்கும் அவைகள் உண்டாவதற்கும் காரணமல்லவென்று நிஶ்சயிக்கப்படுகிறது. 16

ஜ்யோதிஷாமபி தஜ்ஜ்யோதிஸ்தமஸ꞉ பரமுச்யதே |
ஜ்ஞாநம் ஜ்ஞேயம் ஜ்ஞாநகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் || 17

ப-ரை' தத் - அந்த ஆத்மவஸ்துவானது, ஜ்யோதிஷாமபி - ப்ரகாஶத்தையுடைய வஸ்துக்களுக்கும், ஜ்யோதி꞉ - ப்ரகாஶத்தை உண்டு பண்ணுகிறது, தமஸ꞉ - ப்ரக்ருதியைவிட, பரம் - மேலானதாக, உச்யதே - சொல்லப்படுகிறது, ஜ்ஞாநம் - ஜ்ஞானஸ்வரூபமாக, ஜ்ஞேயம் - அறியத்தக்கது, ஜ்ஞாநகம்யம் - அமாநித்வம் முதலிய குணங்களினால் அடையத்தக்கது, ஸர்வஸ்ய - எல்லா வஸ்துக்களினுடைய, ஹ்ருதி - ஹ்ருதயத்தில், விஷ்டிதம் - இருக்கிறது. 17

பா] விளக்கு, சூரியன், ரத்னம், முதலிய வஸ்துக்களுக்கும் இந்த ஆத்மாவே ப்ரகாசத்தை யுண்டு பண்ணுகிறது. அதாவது விளக்கு, சூரியன், முதலிய வஸ்துக்களையும் ஆத்மாவின் வெளிச்சமாகிய தர்மபூத ஜ்ஞானமே ப்ரகாசஞ்செய்கிறது. விளக்கு முதலியவைகளோடு வெளியில் வஸ்துவும் இந்த்ரியங்களும் ஸம்பந்தப்படுவதற்குத் தடையாகிய இருட்டைப்போ

இருக்கிற வர்த்தத்தைவிட்டுவிட்டு இல்லாத அர்த்தத்தைக் கல்பிப்பதினால் நிராகரிக்கப்பட்டார்கள். 16

தா] ஸ்வரூபம் மாத்திரத்தின் ப்ரகாசமாகிய ஆத்மஸ்வரூபாத்மா, முதலியவைகளுக்கு ப்ரகாசத்தை உண்டாக்குகிறதென்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்— 'அதாவது விளக்கு, சூரியன்' என்று முதலியது. விளக்கு முதலிய வஸ்துக்கள் எப்படி விஷயங்களில் பரவுகிற வெளிச்சத்தின் வழியாக ப்ரகாசத்தை உண்டுபண்ணுகின்றனவே யன்றி ஸ்வரூபத்தினா லில்லையோ அதைப்போலவே இவ்விடத்திலும் வெளிச்சத்தின் ஸ்தானத்திலிருக்கிற ஜ்ஞானமென்னும் பெருமையுடைய தர்மபூதத்தினால் ப்ரகாசம் செய்கிறது என்று தாத்பர்யம். ப்ரகாசம் செய்யக் கூடியவைகளாகிய வஸ்துக்களையும் என்பது 'வஸ்துக்களையும்' என்கிற இடத்தில் 'உம்'மின் கருத்து. தங்களால் ப்ரகாசஞ்செய்யப்படுகிற குடம், முதலிய வஸ்துக்களைப்போலவே தங்களையும் ப்ரகாசஞ்செய்யக்கூடிய ஜ்ஞானத்திற்கு ஆதாரமாகிய ஜீவாத்மாவின் விஷயத்தில் அந்தச்சூரியன் முதலிய வஸ்துக்கள் என்று தாத்பர்யம். 'வஸ்துவும் இந்த்ரியங்களும் ஸம்பந்தப்படுவதற்கு' என்பதினால் இவ்விடத்தில் ப்ரத்யக்ஷமுண்டாவதற்குக் காரணமான ஸம்பந்தம் சொல்லப்படுகிறது

க்குவதை மாத்திரம் செய்கின்றன. அவ்வளவு மாத்திரத்தினால் அவைகள ப்ரகாசத்தை யுண்டு பண்ணுகின்றன என்பது. 'தம:' என்னும்

---

அன்றிக்கே அந்த ஸம்பந்தத்தினாலுண்டான ப்ரகாசமாவது லக்ஷணையாகச் சொல்லப்படுகிறதாகவுமாம். ஏனெனில் இருட்டு, சுவர் முதலியவைகளைப்போல் இந்த்ரியங்களும் வஸ்துக்களும் ஸம்பந்தப்படுவதற்கு தடங்கலில்லை ஆகையினால். அப்படித் தடங்கலாயிருக்கும் பக்ஷத்தில் இருட்டு நடுவிலிருக்கிற மனுஷ்யனுக்கு இருட்டை தாண்டி வெளிச்சத்தில் இருக்கிற வஸ்துக்கள் சுவருக்கு அப்புறம் இருக்கிற வஸ்துக்களைப்போல் ப்ரகாசிக்காமல் போகவேண்டி வருகிறபடியினால். இத்தால் விளக்கு முதலியவைகள் கண்களால் பார்க்கக்கூடிய வஸ்துக்களை மாத்திரம் ப்ரகாசம் செய்கிறபடியினால் ஜ்ஞானத்தைப்போல எல்லா வஸ்துக்களையும் ப்ரகாசஞ்செய்கிறதென்பதில்லை என்று காட்டப்பட்டது. 'அவ்வளவு மாத்திரத்தினால்' என்பதற்கு நேரில் ப்ரகாசத்தை யுண்டு பண்ணுகிறபடியினாலல்ல என்றர்த்தம். வெளிச்சத்தின் ஸமீபத்தில் சொல்லியிருக்கிறபடியினாலும், அதிக ப்ரஸித்தியிருக்கிறபடியினாலும் 'தம:' என்னும் பதம் இவ்விடத்தில் இருட்டைச்சொல்லுகிறது என்கிற புத்தியை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'தம:' என்னும் பதம்' என்றாரம்பித்து. வெளிச்சமுடைய வஸ்துக்களையும் ப்ரகாசஞ் செய்கிறபடியினால் கைமுதிக ந்யாயத்தினாலேயே ஏற்பட்டதாகிய இருட்டைவிட மேலானதென்பதைச்சொல்லுவதில் ப்ரயோஜனமில்லாமையினாலும், ப்ரக்ருதியைவிட மேலானதென்பது ஆவஶ்யம் சொல்லவேண்டியதாகையினாலும், 'தம:' என்னும் பதம் 1 'எவனுக்கு தமஸ்ஸு ஶரீரமோ' என்றும், 2 'தமஸ்ஸு இருந்தது, முதலில் இந்த வஸ்துக்களெல்லாம் தமஸ்ஸினால் மறைக்கப்பட்டிருந்தது' என்றும், 3 'எப்பொழுது தமஸ்ஸு இருந்ததோ அப்பொழுது' என்றும், 4 'தமஸ்ஸு பகவானிடத்தில் ஒன்று சேருகிறது' என்றுமர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யங்களிலும், 5 'ஆஸீதிதம் தமோபூதம்' என்றிவை முதலிய இடங்களிலும் மூலப்ரக்ருதியைச் சொல்லுகிறதாக ஶ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் அதிகமாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினாலும். என்று தாத்பர்யம். 'பரம்' என்பதற்கு வேறானது என்றர்த்தம். அவைகளை யனுபவிக்கிறவனானபடியினால் முக்யமானது என்றாகவுமாம். முன்பும் அவை

---

1 ப்ரஹதாரண்யகம்-5-7-13.  2 யஜுர்வேதம்-அஷ்டகம் 2.
3 ஶ்வேதாஶ்வதரம்-4-I8.  4 ஸுபாலோபநிஷத் - 2.
5 மனு ஸ்ம்ருதி-1-6. இதம் - இந்த லோகம், தமோபூதம்-தமஸ்ஸாக, ஆஸீத்-

பதம் ஸூக்ஷ்மமாகிய அவஸ்தையையுடைய ப்ரக்ருதியைச் சொல்லுகிறது. அதாவது ப்ரக்ருதியைவிட மேலானது என்று சொல்லப்படுகிறது என்றர்த்தம். ஆகையினால் ஜ்ஞானம் ஒன்றையேஸ்வரூபமாகவுடையது என்றறியத்தக்கது. அதுவும் அமானித்வம் முதலிய கீழ்ச்சொல்லிய ஜ்ஞானத்தின் காரணங்களினால் அறியத்தக்கது. மனுஷ்யன் முதலிய எல்லா வஸ்துவினுடையவும் ஹ்ருதயத்தில் விசேஷமாக இருக்கிறது. 17

இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:।
மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ 18

---

*யிரண்டும் மேலானதென்றும் தாழ்ந்ததென்றும் பிரிக்கப்பட்டதல்லவா. 'சொல்லப்படுகிறது' என்கிற இடத்தில் 'தமஸ: பரமுச்யதே' என்றிவை முதலியவிடங்களில் என்று சேர்த்துக்கொள்ளவேண்டியது. இத்தால் ஜடவஸ்துக்களைவிட வேறுபட்டது என்பது சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்று. முன்போலவே வெவ்வேறானஸ்வபாவங்களைத் தெரிந்துகொள்ளக்கூடிய என்பதில் 'ஜ்ஞேயம்' என்னும் பதத்திற்குத் தாத்பர்யம். அப்படிக்கில்லாவிடில் புனருக்திவருகிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஜ்ஞானம் ஒன்றையே' என்றாரம்பித்து. 'ஜ்ஞாநகம்யம்' என்கிறவிடத்தில் எல்லா வஸ்துக்களுக்கும் பொதுவாகிய அறியத்தக்கது என்பதை மாத்திரம் சொல்லுவதில் ப்ரயோஜனமில்லாமையினாலும், 'ஜ்ஞேயம்' என்பதோடு புனருக்திவருகிறபடியினாலும், 'ஹ்ருதி' என்னும் பதம் அடையத்தகுந்தது என்னுமர்த்தத்தை சொல்லுவதென்று ப்ரஸித்தமாகவிருப்பதினாலும், இந்த ஸந்தர்ப்பத்திற்குப்பொருத்தமான தாத்பர்யத்தைச்சொல்லுகிறார்—'அமானித்வம் முதலிய' என்றாரம்பித்து. 'தத்வஜ்ஞாநம்' என்கிறவிடத்தில் போல இவ்விடத்திலும் காரணம் என்னுமர்த்தத்தை ப்ரகாசப்படுத்துகிறார்—'ஜ்ஞானத்தின் காரணங்களினால்' என்று. 'மனுஷ்யன் முதலிய' என்பதோடு பதார்த்தங்களினுடைய என்று சேர்த்துக்கொள்ளவும். 'விசேஷமாக இருக்கிறது' ஆவது அவைகளாலுண்டாகும் ஸம்பந்தங்களை யடையவில்லாதவனாக யிருக்கை. அன்றிக்கே ஹ்ருதயத்தில்ஸ்வரூபத்தினாலேயே இருக்கிறது. மற்ற அவயவங்களிலோவெனில் தர்மபூத ஜ்ஞானத்தினால் என்பது விசேஷம். 'இருக்கிறது' என்கிற பதத்திற்கு முக்யமான அர்த்தம் பொருந்தாதாகையினால் அவ்விடத்தில் சேர்ந்திருப்பது மாத்திரம் அர்த்தம் என்று சொல்லப்பட்டது. எல்லாருடைய வீடுகளிலும் இந்த நெல்லு என்று சொல்லுவதைப்போல ஜாதிஒன்றுஎன்கிற தாத்பர்யத்தினால் 'எல்லாருடைய ஹ்ருதயத்திலுமிருக்கிறது' என்று சொல்லியிருக்கிறது.* 17

ப-ரை] இதி - இவ்விதமாக, க்ஷேத்ரம் — ஶரீரமும், ததா - அப்படியே, ஜ்ஞாநம் — ஜ்ஞாநத்திற்குக் காரணமாகிய அமாநித்வம் முதலிய குணங்களும், ஜ்ஞேயம்ச - அவைகளாலறியக்கூடிய ஆத்மாவும், ஸமாஸத: - சுருக்கமாக, உக்தம் — சொல்லப்பட்டது, மத்பக்த: - என்னிடத்தில் பக்தி செய்துகொண்டவனாய், ஏதத் - இதை, விஜ்ஞாய - தெரிந்துகொண்டு, மத்பாவாய - என்னுடைய ஸ்வபாவத்தை யடைவதற்கு, உபபத்யதே-தகுந்தவனாகிறான். 18

பா] இப்படி * 'மஹாபூதாந்யஹங்கார:' என்றாரம்பித்து † 'ஸங்காத:சேதநா த்ருதி:' என்கிற வரையில் ஶரீரத்தின் ஸ்வபாவம் சுருக்கமாய் சொல்லப்பட்டது. ‡ 'அமாநித்வம்' என்றாரம்பித்து § 'தத்வஜ்ஞாநார்த்ததர்ஶநம்' என்கிற வரையில் அறியத்தகுந்தவனாகிய ஜீவாத்மாவின் உண்மையையறிவதற்குக்காரணம்சொல்லப்பட்டது ‖ 'அநாதிமத்பரம்' என்றாரம்பித்து ¶ 'ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம்' என்கிற வரையில் அறியத்தகுந்தவனாகிய ஜீவாத்மாவின் உண்மை சுருக்கமாகச்சொல்லப்பட்டது. என்னிடத்தில் பக்திசெய்துகொண்டிருப்பவனாய் இந்தச் ஶரீரத்தின்உண்மையையும், ஶரீரத்தைவிட வேறுபட்டவனாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை யடைவதற்கு உபாயங்களாகிய குணங்களின் உண்மையையும், ஜீவாத்மாவின் உண்மையையுந் தெரிந்துகொண்டு என்னுடைய ஸ்வபாவத்தை அடையத் தகுந்தவனாகிறான். என்னுடைய ஸ்வபாவமா

---

தா] இந்த ஸந்தர்ப்பத்தை உபஸம்ஹாரஞ் செய்துகொண்டு கீழ்ச்சொல்லியபடித்தெரிந்துகொள்வதின் ப்ரயோஜனத்தையும்சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதைக் குறிக்கிற 'ஏதத்' என்னும் பதம், தனித்துச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட மூன்று அர்த்தங்களையும் சொல்லுகிறது, என்று சொல்லுகிறார்—'ஶரீரத்தின் உண்மையையும்' என்றாரம்பித்து. 'மத்பாவாய' என்கிறவிடத்தில், 'ஸாம்யத்தை யடைகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளுக்கு விரோதமாக ஐக்யத்தையடைகிறான் என்றர்த்தம், என்கிற ப்ரமத்தை விலக்குவதற்தாகச் சொல்லுகிறார்—'என்னுடைய ஸ்வபாவமாவது' என்றாரம்பித்து. எப்பொழுதும் ஏற்பட்டதாகிய ஜ்ஞானஸ்வரூபனாயிருக்கை முதலிய ஸ்வ

---

* பகவத்கீதை-13-5.
† பகவத்கீதை-13-6.
‡ பகவத்கீதை-13-7.
§ பகவத்கீதை-13-11.
‖ பகவத்கீதை-13-12. ¶ பகவத்கீதை-13-17.

வது ஸம்ஸாரமில்லாமலிருக்கை, அதாவது ஸம்ஸாரமில்லாமலிருக்கைக்குத் தகுந்தவனாகிறான் என்றர்த்தம். 18

பா-அ] பிறகு மிகவும் வேறுபட்ட ஸ்வபாவங்களையுடைய தேஹம், ஜீவாத்மா, இவைகளினுடைய சேர்க்கை அநாதியென்பதும், சேர்ந்து கொண்டிருக்கிற இவை இரண்டினுடைய கார்யங்களின் வ்யத்யாஸமும், அப்படி இரண்டும் சேர்ந்திருப்பதற்குக் காரணமும் சொல்லப்படுகிறது —

*ப்ரக்ருதிம் புருஷம்சைவ வித்த்யநாதீ உபாவபி |*
*விகாராம்ஶ்ச குணாம்ஶ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவாந் ‖* 19

ப-ரை] ப்ரக்ருதிம் - ப்ரக்ருதியையும், புருஷம்சைவ - ஜீவாத்மாவையும், உபாவபி - இவை இரண்டையும், அநாதீ - அநாதிகளாக, வித்தி - அறி, விகாராம்ஶ்ச – ஆசை முதலிய விகாரங்களையும், குணாம்ஶ்சைவ-அமாநித்வம் முதலிய குணங்களையும், ப்ரக்ருதிஸம்பவாந் - ப்ரக்ருதியிலிருந்து உண்டானவைகளாக, வித்தி - அறி. 19

பா] ஒன்றோடொன்று சேர்ந்தவைகளாக இருக்கிற ப்ரக்ருதி ஜீவாத்மா ஆகிய இரண்டையும் அநாதிகள் என்றறி. ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணங்களாகிய ஆசை, த்வேஷம், முதலிய விகாரங்களையும், மோக்ஷத்திற்குக் காரணங்களாகிய அமாநித்வம் முதலிய குணங்களையும், ப்ரக்ருதியிலிருந்து உண்டானவைகளாக அறி. அதாவது ஜீவாத்மாவுடன் சேர்ந்து கொ

---

*பாவங்களை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஸம்ஸாரமில்லாமலிருக்கை' என்று. 'உபபத்யதே' என்கிற விடத்தில் ஜ்ஞாநத்தினால் உண்டாகிய யோக்யதை உண்டென்பதில் தாத்பர்யம் என்பது 'தகுந்தவனாக' என்பதினால் காட்டப்பட்டது.* 18

தா] *பிறகு* 1 *'ஸம்பந்த:' என்று ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாய், 'ப்ரக்ருதிம்புருஷம்' என்றாரம்பித்து, வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளவேண்டுமென்று சொல்லுகிற தாத்பர்யத்தை முந்தின க்ரந்தத்தின் அர்த்தத்தை விவரிக்கிறார்—'பிறகு' என்றாரம்பித்து. 'அப்படி இரண்டும் சேர்ந்திருப்பதற்குக் காரணமும்' என்றதற்கு பரம்பரையாக அநாதியாக சேர்ந்துகொண்டிருப்பதற்குக் காரணமென்றர்த்தம். 'உபாவநாதீ' என்கிற விடத்தில் 'ப்ரக்ருதிம்புருஷஞ்ச' என்றுஒன்றோடொன்று சேர்ந்திருக்கிறதென்கிற அர்த்தத்தைச்சொல்லுகிற'ச' என்பதனால் ஏற்பட்ட விஶேஷத்தைக் காட்டுகிறார்—'ஒன்றோடொன்று சேர்ந்தவைகளாக இருக்கிற' என்று ஆகையினாலே த்வி*

---

1 கீ. ஸம். ஶ்லோகம்-17.

ண்டே அநாதிகாலமாயிருக்கிற ஶரீரமாகமாறியிருக்கிற ப்ரக்ருதி, தன் விகாரங்களாகிய ஆசை, த்வேஷம், முதலியவைகளினுல் ஜீவாத்மாவின் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகிறது. அதுவே, அமாநித்வம் முதலிய தன்

---

வசனமாக ப்ரயோகித்திருப்பதும் உசிதம். 'ப்ரக்ருதியையும் புருஷனையும்' என்கிற இடத்தில் த்வந்த்வம், தத்புருஷம், இந்த ஸமாஸங்களில் கடைசியில் சொல்லுகிற பதத்தின் லிங்கமே வரவேண்டியது என்று சொல்லி யிருக்கிறபடியினுல் புல்லிங்கமாகவே இருக்கவேண்டும். அதற்கு விஶேஷணமாகையினுல் 'உபௌ அநாதீ' என்கிற இடத்திலும் அந்தப் புல்லிங்கமே சொல்லவேண்டியது. 1 'இச்சா த்வேஷ:' என்பது முதலியவையாலும், 2 'அமாநித்வம்' என்பது முதலியவையாலும் சொல்லப்பட்டவைகள் க்ரமமாக விகாரமென்னும் குணமென்னும் பதங்களினுல் அனுவதிக்கப்படுகின்றன என்று காண்பிக்கிறார்—'ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகிய' என்றாரம்பித்து. 3 'தச்ச க்ஷேத்ரம் யத்விகாரி' என்கிற இந்தஸந்தர்ப்பத்தின் ஆரம்பத்திலேயே 'விகாரி' என்னும்பதம் ஶரீரத்தின் கார்யங்களை மாத்திரம் சொல்லுகிறது. அதுவே இவ்விடத்திலும் ஞாபகத்திற்கு வருகிறபடியினுல் இவ்விடத்திலும் 'விகார' என்னும் பதம் அவைகளையே சொல்லுகிறது. ஆகையினுல் இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்து மஹான் முதலிய விகாரங்களைச் சொல்லுகிறதென்பதில்லை. அத்தோடு சேர்ந்திருப்பதினுல் 'குண' என்னும் பதமும் இந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லப்பட்ட அர்த்தங்களை சொல்லுகிறதென்பது உசிதமாகையினுல் ஸத்வம், முதலிய குணங்களைச் சொல்லுகிறதென்பதும் உசிதமல்ல, என்று தாத்பர்யம். 'விகாரங்களையும் குணங்களையும்' என்று வெவ்வேருகச் சொல்லி யிருப்பதின் காரணத்தைத் தெரிவிப்பதற்காக 'ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணங்களாகிய' என்றும், 'மோக்ஷத்திற்கு காரணங்களாகிய' என்றும் சொல்லியிருக்கிறது. தள்ளத்தகுந்ததும் அங்கீகரிக்கத்தக்கதுமாகிய இரண்டுவிதமான குணங்களின் வகுப்புக்களை உபதேசம் செய்திருப்பது தள்ளுவதற்காகவும் அங்கீகரிப்பதற்காகவுமாகையினுல் ப்ரயோஜனத்தோடு கூடியதே. அது ப்ரக்ருதியி லிருந்து உண்டானது என்று உபதேசஞ் செய்திருப்பது எதற்காக என்ருக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாகச் சொல்லப்படுகிற தென்று நினைத்து அறியவேண்

---

1 பகவத்கீதை - 13 - 6.

2 பகவத்கீதை - 13 - 7.

3 பகவத்கீதை - 13 - 3.

னுடைய விகாரங்களினால் ஜீவாத்மாவிற்கு மோக்ஷத்திற்குக் காரணமா கிற தென்றர்த்தம். 19

கார்யகாரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ।
புருஷ: ஸுகது:கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥

ப - ரை] கார்யகாரணகர்த்ருத்வே - ஶரீரம், இந்த்ரியங்கள், இவைகள க்ரியைகளைச்செய்வதில், ப்ரக்ருதி: - ஶரீரம், ஹேது: - காரணமாக, உச்யதே - சொல்லப்படுகிறது, புருஷ: - ஜீவாத்மா, ஸுகது:கானாம்-ஸுகதுக்கங்களை, போக்த்ருத்வே - அனுபவிக்கிறவனாக இருப்பதில், ஹேது: - காரணமாக, உச்யதே - சொல்லப்படுகிறான். 20

பா] கார்யமாவது ஶரீரம். காரணங்களாவது மனஸ்ஸோடுகூடின ஜ்ஞா

*டிய விஷயத்தைப்பற்றி, 'வித்தி (அறி)' என்று அதிகமாகச் சொல்லி யிருப்பதின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'அதாவது ஜீவாத்மா வுடன்' என்றாரம்பித்து. ப்ரக்ருதிக்கே வெவ்வேறு ஆகாரங்களினால் தள்ளத்தகுந்ததா யிருக்கையும், அங்கீகரிக்கத்தகுந்ததா யிருக்கையு முண்டு என்று தெரிவிப்பதற்காக அந்த ப்ரக்ருதியிலிருந்து உண்டா னது என்றுபதேசஞ் செய்திருக்கிறது என்று தாத்பர்யம். 'தன்னு டைய விகாரங்களினால்' என்று அமாநித்வம் முதலியவைகளை விகாரங் களாய்ச் சொல்லியிருப்பது 'ப்ரக்ருதிஸம்பவாந்' என்று சொல்லப்பட்ட ப்ரக்ருதியிலிருந்து உண்டானவைகளாக யிருக்கை பொதுவானபடியி யினால் கோபலிவர்த்தந்யாத்தைத் தெரிவிப்பதற்காக.* 19

தா] *பிறகு ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற ப்ரக்ருதி ஜீவாத்மா இவைகளின் சேர்க்கையினால் உண்டாகிய கார்யங்களின் வ்யுத்யா ஸம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். 'கார்யமாவது ஶரீரம்' என்பதற்கு இந்த ஸந்தர்ப்பத்தினாலும் 'காரண' என்னும் பதத்தி னேடு சேர்ந்திருப்பதினாலும் இவ்விடத்தில் 'கார்ய' என்னும் பதம் ஸுகதுக்கங்களை யனுபவிப்பதற்கு ஆதாரமாக இருக்கிற ஶரீரமென்று பேருடைய ஒருவித கார்யத்தைச் சொல்லுகிறது என்று தாத்பர்யம். [1]'இந்த்ரியாணி தஶைகம் ச' என்றுப்ரஸ்தாபிக்கப்பட்ட இந்த்ரியங்களைச் சொல்லுகிறது இவ்விடத்தில் 'காரண' என்னும் பதம், என்று சொல் லுகிறார்—'மனஸ்ஸோடுகூடின' என்றாரம்பித்து. இத்தால் கார்யமா வது பஞ்சபூதங்கள், ஐந்து தன்மாத்திரங்கள், ஆகப்பத்துவிதம். கார ணமாவது புத்தி, அஹங்காரம், முதலாகப் பதிமூன்றுவிதம். இவை*

1 பகவத்கீதை - 13 -5.

னேந்த்ரியங்களும் கர்மேந்திரியங்களும். இவைகள் கார்யத்தைச்செய்வதில் ஜீவாத்மாவினுல் அதிஷ்ட்டானஞ் செய்யப்பட்ட ப்ரக்ருதியே காரணம். அதாவது ஜீவாத்மாவினுல்அதிஷ்ட்டானஞ்செய்யப்பட்ட ஶரீரமாக மாறியிருக்கிற ப்ரக்ருதியை ஆதாரமாகயுடையவைகள் ஸுகதுக்கங்களை

---

களின் உத்பத்தியிலும் ஒவ்வொரு நிமிஷங்கள்தோறும் மாறுவதிலும் காரணம் மூல ப்ரக்ருதி என்றிவை முதலிய மற்ற வ்யாக்யானங்கள் நிராகரிக்கப்பட்டன. 'காயகரணகர்த்ருத்வே' என்று மற்றவர்கள் சொன்ன பாடம் ப்ரஸித்திஇல்லாததால் அனுதரிக்கப்பட்டது. 'கர்த்ரு' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ரயத்னத்திற்கு இருப்பிடமென்பதைச் சொல்லுகிறதல்ல, அசேதனத்தில் அது ஸம்பவிக்காதாகையினுல். ஆகையினுல் அதற்குத் தக்கபடி வ்யாபாரத்திற்கு இருப்பிடமாயிருக்கை சொல்லப்படுகிறது; என்று சொல்லுகிருர்—'இவைகள் கார்யத்தைச் செய்வதில்' என்று. புத்திபூர்வமாய் நடக்காத மனது காது முதலியவைகளின் சில வ்யாபாரங்களில் புருஷனுடைய இச்சைக்கு வசப்பட்டிருத்தல் கிடையாது. அப்படியிருந்தபோதிலும் அவைகள் ஜீவாத்மாவிற்கு ஸுகதுக்கங்களை யனுபவிப்பதற்காக ஏற்பட்டவைகளாகையினுல் போக்தாவாகிய ஜீவாத்மா ஸமீபத்தில் இருப்பதாகிய அந்தஜீவாத்மாவினுடையஅதிஷ்ட்டானம் வேண்டியது. பெரும்பாலும் ஜீவாத்மாவின் ப்ரயத்னத்திற்கு வசப்பட்டு நடப்பதுமுண்டு என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'அதாவது ஜீவாத்மாவினுல்' என்றாரம்பித்து. இவைகளுக்குத் தனித்தனியே பிரித்து வ்யாபாரத்தைச் சொல்லியிருப்பதினுல் 'ப்ரக்ருதியே' என்பதேற்பட்டது. ஜீவாத்மாவினுல அதிஷ்ட்டானஞ் செய்யப்பட்ட ப்ரக்ருதி என்பது யுக்தமல்ல. ப்ரளய தசையில் ஶரீரம், இந்த்ரியங்களில்லாத ஸம்ஸாரியாகிய ஜீவாத்மா தன்னுடைய இஷ்டத்தினுல் ப்ரக்ருதியை அதிஷ்ட்டானஞ் செய்வது ஸம்பவிக்காதாகையினுல் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிருர்—'ஶரீரமாக மாறியிருக்கிற' என்று. ஸுகதுக்கங்களின் அனுபவம், அவைகளுக்குக் காரணங்கள், இவைகளுக்கு இருப்பிடமாக யிருக்கையே காரணமாகயிருக்கை யென்று இவ்விடத்தில் பிரித்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் 'ப்ரக்ருதியை ஆதாரமாகவுடைய' என்பது முதலியது சொல்லியிருக்கிறது. ப்ரக்ருதியே கர்த்தாவாகவிருந்தால், [1]'கர்த்தாஶாஸ்த்ரார்த்தவத்வாத்' என்றிவை முதலிய ஸூத்ரங்களோடு விரோதம் வருமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்

---

1 ஶாரீரகஸூத்திரம் - 2 - 3 - 33.

யனுபவிப்பதற்குக் காரணமாகிய க்ரியைகள் என்றர்த்தம். ஜீவாத்மாவிற்கு அதிஷ்டாதாவாயிருக்கையே உண்டு அதைப்பற்றியே *'கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. ஶரீரத்தை அதிஷ்டானஞ் செய்வதாகிய ப்ரயத்னத்திற்குக் காரணமாக இருக்கையே ஜீவாத்மாவிற்குக் கர்த்ருத்வம். ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கிற

---

சொல்லுகிறார்-'ஜீவாத்மாவிற்கு அதிஷ்டாதாவாகயிருக்கையேஉண்டு' என்று. ஜீவாத்மாவிற்கு அதிஷ்டாதாவாகயிருக்கைமாத்திரமேயுண்டானால் அப்பொழுது நேராக கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கே, ஜீவாத்மாவிற்கு கர்த்ருத்வம் ஔபசாரிகமாக இருக்கவேண்டி வருமே, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஶரீரத்தை அதிஷ்டானஞ் செய்வதாகிய' என்றாரம்பித்து. இதன் கருத்தாவது—ப்ரயத்னத்தால் உண்டாகிய அசங்குதல் முதலியவைகளுக்கு இருப்பிடமாயிருக்கையாகிய கர்த்ருத்வம் ஜீவனுக்குண்டென்று ஸூத்ரத்தில் சொல்லப்படவில்லை. அப்படிப்பட்ட கர்த்ருத்வத்தில் ஶாஸ்த்ரங்களுக்கு ப்ரயோஜனமுண்டாக வேண்டியதாகையினால் என்றிவை முதலிய காரணங்கள் ஸரியானவைகளல்ல. மேலும் ஶரீரம் முதலியவைகளை வேலைகளைச் செய்விக்கக்கூடிய ப்ரயத்னத்திற்கு இருப்பிடமாக இருப்பதில் கர்த்தா என்னும் பதம் ஔபசாரிகமுமல்ல, க்ருதி என்பதும், ப்ரயத்னம் என்பதும், ஒரே அர்த்தத்தைச்சொல்லுகிற பதங்களாகையினால் க்ருதிக்கிருப்பிடமாகயிருக்கையே கர்த்ருத்வமாகையினாலும். ஆகையினால் மற்ற அர்த்தங்களில் கர்த்தா என்பது ஔபசாரிகமென்று ஏற்பட்டது. அந்தந்த வஸ்துவுக்குத்தக்கபடி க்ரியைக்கு இருப்பிடமாகவிருக்கையே கர்த்ருத்வம் என்று சொல்லப்படுகிறதேயானாலும் எப்பொழுதும் ஜீவாத்மாவுக்குக் கர்த்ருத்வம் முக்யமாகவே இருக்கிறது என்பது. ஜீவாத்மா ஸுகதுக்கங்களை யனுபவிக்கிறான் என்பது உசிதமல்ல, பரிசுத்தனான ஜீவனுக்கு ப்ரியம், அப்ரியம் இவை இரண்டுமில்லை என்று, ஶ்ருதியில் சொல்லப்பட்டிருப்பதினால். மோக்ஷத்தில் விசித்ரமான ஸுகம் அனுபவிக்கப்படுகிறது. அப்படியிருந்தபோதிலும் துக்கத்தின் ப்ரஸ்தாவமே இல்லையே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கிற' என்று. 1 'ஶரீரத்தோடுகூட இருப்பவனுக்கு ப்ரியம், அப்ரியம் இவைகளுக்கு ஓய்வில்லை' என்றர்த்தமுள்ள வாக்யமும் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். விஷயங்களாகவும், இந்த்ரியம் முதலியவைகளாகவும் மாறியிருக்கிற ப்ரக்ருதியும் ஸுகதுக்கங்களை யனுப

---

* ஶாரீரக ஸூத்ரம் - 2-3-33, 1 சாந்தோக்யம் - 8-12-1.

ஜீவாத்மா ஸுகதுக்கங்களை யனுபவிப்பதற்குக்காரணம். அதாவது ஸுக துக்கங்களின் அனுபவத்திற்கு இருப்பிடம் என்றர்த்தம். 20

---

விப்பதற்குக் காரணமாயிருக்கிறது. அப்படியிருக்க ஜீவாத்மா தனித்து எப்படிச் சொல்லப்படுகிறான் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அதாவது ஸுகதுக்கங்களின்' என்றாரம்பித்து. இத்தால் அந்தந்தக் காலங்களிலுண்டாகிறதும், தன்னிடத்தி லிருக்கிறதுமாகிய ஸுகதுக்கங்களை ப்ரத்யக்ஷமாக அனுபவிப்பதே போகம், என்று போகத்தின் லக்ஷணமும் காட்டப்பட்டது. இத்தால் விகாரங்களொன்றுமில்லாத ஜீவாத்மா ஸமீபத்திலிருப்பதினால் ப்ரக்ருதியே ஸுகதுக்கங்களை யனுபவிக்கிறது என்று சொல்லுகிற பக்ஷம் நிராகரிக்கப்பட்டது. அந்தப் பக்ஷத்தில் 1 'போக்த்ருபாவாத்புருஷோஸ்தி', 2 'புருஷஸ்ய தர்சநார்த்தம் கைவல்யார்த்தம் ததா ப்ரதானஸ்ய' என்றிவை முதலிய தங்கள் க்ரந்தத்திற்கே விரோதம் வருகிறது. இந்த பக்ஷம் ஶாரீரக ஸூத்ரத்தில் 3 'ரசநாநுபபத்தேஶ்ச' என்றாரம்பித்து 4 'விப்ரதிஷேதாச்சாஸமஞ்ஜஸம்' என்கிற வரையிலுள்ள ஸூத்ரங்களினால் விஸ்தாரமாக நிராகரிக்கப்பட்டது. இந்தஶ்லோகத்திலும் ப்ரக்ருதிக்கே ஸுகதுக்கங்களை யனுபவிக்கிறதாயிருக்கை உண்டென்று சொல்லப்படுகிறதேயானால் அப்பொழுது கர்த்ருத்வத்திலும் போக்தாவாக விருக்கையிலும் ப்ரக்ருதியே காரணம் என்று சொல்லவேண்டி வரும். தனித்துச் சொல்லவேண்டியதில்லை. ஏனெனில் போக்தாவாக விருக்கையும் கர்த்ருத்வத்தில் சேர்ந்திருப்பதினாலும் ஶாஸ்த்ரத்தின் ப்ரயோஜனம் அதில்சொல்லிய கார்யத்தை அனுஷ்டானஞ்செய்தவனுக்கு உண்டாகும் என்று ந்யாயமிருப்பதினாலும். கர்த்ருத்வம் ப்ரக்ருதிக்கு ஸ்வபாவத்திலே ஏற்பட்டது. அது ஸுகதுக்கங்களை யனுப

---

1 சாங்க்ய தத்வ கௌமுதீ - 17. போக்த்ருபாவாத்-போக்தாவாக இருக்கிறபடியினால், புருஷ:-ஜீவாத்மா, அஸ்தி - இருக்கிறான்.

2 சாங்க்ய தத்வ கௌமுதீ - 21. புருஷஸ்ய - புருஷனுக்கு, தர்சனார்த்தம்- பார்ப்பதற்காகவும், ததா- அப்படியே, ப்ரதானஸ்ய - ப்ரக்ருதிக்கு, கைவல்யார்த்தம்- மோக்ஷத்திற்காகவும்.

3 ஶாரீரகஸூத்ரம் - 2-2-1. ரசநாநுபபத்தே:-லோகத்தை ஸ்ருஷ்டிப்பது பொருந்தாதாகையினால் (ப்ரக்ருதி ஜகத்காரணமாகாது என்றுசேர்த்துக் கொள்ளவும்).

4 ஶாரீரக ஸூத்ரம்-2-2-9. விப்ரதிஷேதாச்ச-ஒன்றுக்கொன்று விரோதமாக இருப்பதினாலும், அஸமஞ்சஸம் (சாங்க்யர்களின் ஸித்தாந்தம்) பொருத்தமுடையதல்ல.

பா—அ] இப்படி ஒன்றுக்கொன்று சேர்ந்துகொண்டிருக்கிற ப்ரக்ருதி ஜீவாத்மா இவைகளினுடைய கார்யங்களின் வ்யத்யாஸம் சொல்லப்பட்டது. ஸ்வபாவத்தில் தன்னை அனுபவிப்பதொன்றையே ஸுகமாகவுடைய ஜீவாத்மாவிற்கு விஷயங்களாலுண்டாகிய ஸுகதுக்கங்களை அனுபவிப்பதற்குக் காரணமாகயிருக்கையு முண்டு என்று சொல்லுகிறார்.—

**புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி பு⁴ங்க்தே ப்ரக்ருதிஜாந் கு³ணாந் ||**

*விப்பதில் ஜீவாத்மா காரணம், என்று காட்டுவதற்காகப் பிரித்துச்சொல்லியிருக்கிறது என்பது உசிதமல்ல. ஜீவாத்மாவின் ஸம்பந்தமில்லாமல் கேவலமான ப்ரக்ருதிக்குக கர்த்ருத்வம் உண்டாகாது. அப்படி ஒப்புக்கொள்ளவுமில்லை. அப்படிக்கில்லாவிடில் பரிசுத்தமான கேவலஜ்ஞான முண்டானபிறகும் 1 'ததோ நிவ்ருத்தப்ரஸவாமர்த்தவஶாத் ஸப்தரூபவிநிவ்ருத்தாம்' என்று சொல்லப்பட்ட எழுவிதமாகிய நிவ்ருத்தி இல்லாமல்போகவேண்டிவரும் அப்படியாகில் முக்திதசையிலும் முன்போலவே ப்ரக்ருதி தன் வ்யாபாரங்களைச் செய்யவேண்டியதாகும். 2 'ஸங்காதபரார்த்தத்வாத் த்ரிகு³ணாதி³விபர்யயாத³தி⁴ஷ்டா²நாத் | புருஷோऽஸ்தி போ⁴க்த்ருபா⁴வாத் கைவல்யார்த²ம் ப்ரவ்ருத்தேஶ்ச' ; 3 'ஜநநமரணகரணாநாம் ப்ரதிநியமாத³யுக³பத் ப்ரவ்ருத்தேஶ்ச | புருஷப³ஹுத்வம் ஸித்³த⁴ம் த்ரைகு³ண்யவிபர்யயாச்சைவ |' என்று ஶரீரத்தை அதிஷ்டானஞ் செய்வதினாலும் தனித்தனிக் காலங்களில் ப்ரவ்ருத்திக்கிறபடியினாலும் ஜீவாத்மா உண்டென்றும், அந்த ஆத்மாக்கள் அநேகம் என்றும், சொல்லியிருப்பதற்கும் விரோதம் வரும். இந்தக்கீதையிலும 'புருஷ: ப்ரக்ருதிஸ்தோ² ஹி பு⁴ங்க்தே ப்ரக்ருதிஜாந் கு³ணாந்' என்று மேலே சொல்லியிருப்பதும் விரோதமாகும் என்று தாத்பர்யம். 20*

---

*1 தத: - அதினால், நிவ்ருத்தப்ரஸவாம் - நிவ்ருத்தியினாலுண்டாகிய, அர்த்தவஶாத் - வஸ்துவின் ஸ்வபாவத்தினால், ஸப்தரூபவிநிவ்ருத்தாம் - எழுவிதமான பிரிவுகளையுடைய*

*2 சாங்க்ய தத்வ கௌமுதீ - 17 சங்காதபரார்த்தத்வாத்- சிலவஸ்துக்களின் சேர்க்கையாகிய ஶரீரம் அயலானுக்காக ஏற்பட்டதினாலும், த்ரிகுணாதி விபர்யயாத்- ஸத்வ ரஜஸ் தமோ குணங்களை யுடையவனல்லாமையினாலும், அதிஷ்டானாத்-சரீரத்தை அதிஷ்டானஞ்செய்வதினாலும், போக்த்ருபாவாத்-போக்தாவாக இருப்பதினாலும், கைவல்யார்த்தம்-மோக்ஷத்திற்காக, ப்ரவ்ருத்தேஶ்ச-ப்ரவ்ருத்திக்கிறபடியினாலும், புருஷ:- ஜீவாத்மா, அஸ்தி இருக்கிறான்.*

*3 சாங்க்ய தத்வகௌமுதீ-18. ஜநநமரணகரணானாம் - உத்பத்தி, மரணம், இவைகளின் காரணங்கள் இவைகள், ப்ரதிநியமாத் - தனித்தனியே ஏற்பட்டிருப்பதினாலும், அயுகபத் ப்ரவ்ருத்தேஶ்ச - தனித்தனியாக ப்ரவ்ருத்திக்கிறபடியினாலும், த்ரைகுண்யவிபர்யயாச்ச-ப்ராக்ருதியைவிட வேறுபட்டதாகையினாலும், புருஷபஹுத்வம் - ஜீவாத்மாக்கள் அநேகம் என்பது, ஸித்தம்-ஏற்பட்டது.*

ப - ரை] புருஷ: - ஜீவாத்மா, ப்ரக்ருதிஸ்த: - ஶரீரத்தில் இருந்துகொண்டே, ப்ரக்ருதிஜாந் - ஶரீரத்தினுல் உண்டாகிய, குணாந் - ஸத்வம் முதலிய குணங்களின் கார்யங்களாகிய ஸுக துக்கம் முதலியவைகளை, புங்க்தே - அனுபவிக்கிறுன். *

பா] 'குண' என்னும் பதம் அந்தக் குணங்களின் கார்யங்களை ஔபசாரிகமாகச்சொல்லுகிறது. ஸ்வபாவத்தில் தன்னையனுபவிப்பதொன்றையே

* தா] கீழ்ச்சொல்லிய அர்த்தத்தில் ஒருபாகத்தில் ஆக்ஷேபம்உண்டாவதற்காகவும், கீழ்ச்சொல்லியதற்கும் மேல் சொல்லப் போகிறதற்கும் புனருக்தியைப் பரிகரிப்பதற்காகவும், கீழ்ச்சொன்ன அர்த்தத்தைத் தனியாக அனுவதிக்கிறுர்—'இப்படி' என்றுரம்பித்து. பரிசுத்தனுகியும் தன்னையனுபவிப்பதனுல் உண்டான ஸுகமொன்றுக்கே இருப்பிடமாயுமிருக்கிற ஜீவாத்மாவிற்கு விஷயங்களாலுண்டான வெளியிலிருக்கிற ஸுகதுக்கங்களை யனுபவிப்பது வாஸ்தவமாக இராது. பின்னை எப்படியெனில் ஸ்படிகமணியினிடத்தில் செம்பருத்திப் பூவினுடைய சிவப்பு நிறத்தை ஆரோபிப்பதைப்போல அதிகமான ஸம்பந்தத்தினுல் ஆரோபிக்கப்பட்டதாகவே இருக்கவேண்டும் என்கிற ஆக்ஷேபம் 'புருஷ:' என்று ஆரம்பிக்கிற பாதி ஶ்லோகத்தினுல் பரிகரிக்கப்படுகிறது, என்று சொல்லுகிறுர்—'ஸ்வபாவத்தில்' என்றுரம்பித்து ஸத்வம் முதலிய குணங்கள் நேராக அனுபவிக்கக்கூடியவைகளல்ல, ஸுகம், துக்கம், அஜ்ஞானம், முதலிய கார்யங்களைக்கொண்டு ஊஹிக்கக்கூடியவைகளாகையினுலே இந்த்ரியங்களுக்குப் புலப்படாதாகையினுல். ஸுகதுக்கங்களையனுபவிப்பதோவெனில் கீழே ப்ரஸ்தாவிக்கப் பட்டது ஆகையினுல் மேலே நிரூபிக்கவேண்டியது. அதுவும் 'ஹி' என்னும் பதத்தினுல் காட்டப்பட்டது. இவ்விடத்திலோ வெனில் 'ப்ரக்ருதிஜாந் குணாந் புங்க்தே' என்று குணங்களை யனுபவிக்கிறுனென்பது எப்படிச் சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறுர்—'குண' என்னும் பதம்' என்றுரம்பித்து. 'அந்தக் குணங்களின் கார்யங்களை' என்பது லக்ஷணை சொல்லுவதற்குக் காரணத்தைச்சொல்லியிருக்கிறது. 'குண' என்னும் பதமே ஸுகதுக்கங்களில் முக்யமாக ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. அப்படி யிருந்தபோதிலும் ப்ரக்ருதியினுண்டான குணங்களென்று சொல்லப்படுகிறபடியினுல் ஔபசாரிகமென்பது உசிதந்தான். மேலும் அநேக இடங்களில் 'குண' என்னும் பதம் ஸத்வம், முதலிய குணங்களைப்பற்றியே ப்ரயோகிக்கப்படுகிறது உள்ளபடியே இருக்கிற ஆகாரம் இவ்விடத்தில் 'புருஷ:' என்னும் பதத்தினுல் அனுவதிக்கப்படுகிறது என்று சொல்லுகிறுர்—'ஸ்வபாவத்தில்' என்றுரம்பித்து. 'ப்ரக்ருதிஸ்த:' என்னும் பதம் தன்

ஸுகமாகவுடைய ஜீவாத்மா ப்ரக்ருதியோடு சேர்ந்தவனாய் ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தைக் காரணமாக உடைய ஸத்வம் முதலியகுணங்களின் காரியங்களாகிய ஸுக துக்கம் முதலியவைகளை யனுபவிக்கிறான். *

பா - அ] ப்ரக்ருதியோடு சேருவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்—

𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁 ॥ 21

ப-ரை] 𑌅𑌸𑍍𑌯-இந்த ஜீவாத்மாவிற்கு, 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁-நல்லதும் கெட்டதுமாகிய ஜாதிகளில் பிறப்பதில், 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑌃 - குணங்களில் பற்றுதல், 𑌕𑌾𑌰𑌣𑌂 - காரணம். 21

---

னுடைய ஸ்வபாவத்திலேயே இருக்கிறான் என்னும் அர்த்தத்தைச் சொல்லுவதாக ப்ரயோகிக்கப்படுகிறது. ஆகையினால் அதை விலக்குவதற்காக 'ப்ரக்ருதியோடு சேர்ந்தவனாய்' என்று சொல்லப்பட்டது. '𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑍍𑌥𑌃' என்பதினால் ப்ரக்ருதியை யாதாரமாக உடைத்தாயிருத்தலை சொல்லப்படவில்லை, 'நான் ஸுகத்தையுடையவன்', 'நான் துக்கத்தையுடையவன்,' என்று தன்னிடத்திலிருப்பதாகவே அவைகள் தோன்றுகிறபடியினால். அந்தக்கரணத்தின் விகாரங்களாகிய ஸுகம் முதலியவைகள் தன்னிடத்தில் ஆரோபிக்கப்படுகின்றன என்னும் பக்ஷம் கீழ்ச்சொல்லிய ப்ரமாணங்களுக்கு விரோதமாகையினால். ஆகையினால் ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பதைக் காரணமாகவுடையவைகள் என்பதே சொல்லப்படுகிறது என்று தெரிவிப்பதற்காக 'ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தைக் காரணமாக உடைய' என்று சொல்லியிருக்கிறது. 'முதலிய' என்னும் பதத்தினால் முன்னே சேர்த்துச் சொல்லப்பட்ட ஆசை, த்வேஷம், முதலியவைகளையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. அவைகளும் கர்மங்களின் பலமாகையினால் அனுபவிக்கத் தக்கவைகளே. ஆத்மனேபதமாக இருப்பதினாலும், அர்த்தம் பொருந்தாதாகையினாலும், ரக்ஷிக்கிறது என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறதென்பது யுக்தமல்ல. ஸாப்பிடுகிறது என்னும் அர்த்தமும் இவ்விடத்தில் உசிதமல்லாமையால் விடப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் '𑌭𑍁𑌙𑍍𑌕𑍍𑌤𑍇' என்பதினால் கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்ட அனுபவம் மாத்திரம் சொல்லப்படுகிறது. தன்னிடத்திலிருப்பதாயும் தத்காலத்தில் நடந்துகொண்டிருப்பதாயுமிருக்கிற ஸுகதுக்கங்களை நேராகக் கண்டறிவதே போகம் என்றல்லவோ அதற்கு லக்ஷணம் சொல்லுகிறார்கள் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அனுபவிக்கிறான்' என்று. *

பா] முன்பிருந்த ப்ரக்ருதியின் மாறுதலாகிய தேவன் மனுஷ்யன் முதலிய ஜாதிகளில் இருந்துகொண்டிருந்த இந்த ஜீவாத்மா அந்தந்த ஜாதிகளில் லேற்பட்ட ஸத்வம்முதலியகுணங்களின் கார்யங்களாகிய ஸுகம் துக்கப்

---

தா] தன்னுடைய அனுபவம் ஒன்றுக்கே இருப்பிடமாகிய ஜீவாத்மா விஷயங்களாலுண்டாகிய ஸுகதுக்கங்களை யனுபவிப்பதில் ப்ரக்ருதியின் ஸம்பந்தம் காரணமென்று சொல்லப்பட்டது. பரிசுத்தனாகிய ஆத்மாவிற்கு அந்த ப்ரக்ருதியின் ஸம்பந்தமும் எப்படி உண்டானது என்கிற ஆக்ஷேபத்தை உடனே பரிகரிக்கிறார் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரக்ருதியோடு' என்றாரம்பித்து. விரையும் முளையும் போன்ற ந்யாயத்தினால் பரம்பரையாக அநாதியாகையினால் அந்யோந்யாஶ்ரய தோஷத்திற்கும், சக்ரகம் என்னும் தோஷத்திற்கும் பரிகார மேற்பட்டது. அநவஸ்த்தையும் இதுவிஷயத்தில் தோஷமல்ல. இந்தப் பரம்பரையில் முன்பிருந்த காரணங்கள் விசித்ரங்களாக இருப்பதினால் மேல்வரும் கார்யங்கள் விசித்ரங்களென் றேற்பட்டது. குணங்களில் பற்றுதல், ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதும் தடுக்கப் பட்டதுமாகிய காமங்களின் வழியாக அவைகளின் பலத்தை யனுபவிப்பதற்காக விசித்ரமான ஜன்மங்களுக்குக் காரணமாகையினால் ஶாஸ்த்ரங்களுக்கும் ப்ரயோஜன முண்டு. 1 'திரும்பிவருகிறவர்கள் கெட்ட நடத்தை உள்ளவர்களாக இருந்தார்களேயானால் கெட்ட யோநியை அடைவார்கள். திரும்பிவருகிறவர்கள் நல்ல நடத்தை உள்ளவர்களாக இருந்தார்களேயானால் நல்லயோனியை யடைவார்கள்' என்று நல்லதும் கெட்டதுமாகிய யோனியை யடைவது கர்மங்களினால் உண்டாகிறது, என்று சொல்லுகிற ஶ்ருதிவாக்யத்திற்கு விரோதமில்லை யென்று சொல்லுகிறார்—'முன்பிருந்த' என்றாரம்பித்து. ஸத்வம் முதலிய குணங்கள் நேரில் பற்றுதல் உண்டாகக்கூடிய இடங்களென்பது பொருந்தாதாகையினால் இவ்விடத்திலும் 'குண' என்னும் பதம் முன்போலவே ஔபசாரிகமாகச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஸத்வம் முதலிய குணங்களின் கார்யங்களாகிய ஸுகம் துக்கம் முதலியவைகளில்' என்று சொல்லப்பட்டது. பற்றுதலாவது துக்கத்தில் ஸுகமென்கிற ப்ரமத்தால் உண்டாகும் பற்றுதல். துக்கத்திற்குக் காரணங்களாகிய ஸமுத்ரத்தைத் தாண்டுவது முதலிய கார்யங்களில் அல்பஸுகத்தில் பற்றுதலாலல்லவோ ஆசைப்படுகிறான்.

1 சாந்தோக்யம் - 5-10-7.

முதலியவைகளில் பற்றுதலையடைந்தவனாய் அவைகளுக்கு ஸாதனங்களாகிய புண்ய பாப கர்மங்களில் ப்ரவ்ருத்திக்கிறான். ஆகையினால் அந்தப் புண்ய பாபங்களின்பலத்தை யனுபவிப்பதற்காக நல்லதாகவும் கெட்டதாகவு மிருக்கிற ஜாதிகளில் பிறக்கிறான். பிறகு மறுபடியும் கர்மங்களைச்

---

1'ஜ்ஞாநஜ்ஞாநவதாம் ஸம்ஸாரம் ப்ரஹாரோபி ஸாதயேத்' என்றும் சொன்னார்கள். எவன் எதை இச்சிக்கிறானோ அவனுக்கு அதிலாவது அதின் ஸாதனத்திலாவது இது நாம் செய்யவேண்டியது என்கிற புத்தி உண்டாகிறது. இப்படியிருக்க ஸாதகம் ஸ்வரூபத்தில் செய்ய முடியாதாகையினால் அதின் ஸாதனங்களிலேயே ப்ரவ்ருத்தி உண்டாகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'அவைகளுக்கு ஸாதனங்களாகிய' என்று சொல்லப்பட்டது. ஶ்ருதியிலும் 'அந்த ஜீவாத்மா எப்படி ஆசைப்பட்டவனாகிறானோ அப்படிப்பட்ட கார்யத்தையுடையவனாக ஆகிறான்' என்றர்த்த முள்ளவாக்யம் சொல்லப்படுகிறது. இருக்கிறது, இல்லாதது, என்றிவை முதலிய அர்த்தங்களைச் சொல்லில் பொருந்தாதாகையினாலும், 2 'திரும்பிவருகிற எவர்கள் நல்ல நடத்தையுள்ளவர்களோ அவர்கள் நல்ல யோனியை யடைவார்கள்—ப்ராம்மணயோனியையாவது, க்ஷத்திரிய யோனியையாவது, வைஶ்ய யோனியையாவது, அடைவார்கள். அப்படியல்லாமல் திரும்பி வருகிற எவர்கள் கெட்ட நடத்தையுள்ளவர்களோ அவர்கள் கெட்ட யோனியை யடைவார்கள்—நாயின் யோனியையாவது, பன்றியின் யோனியையாவது, சண்டாளர்களின் யோனியையாவது(அடைவார்கள்)' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளை யனுஸரித்தும் நல்லதும் கெட்டதுமாகிய என்னும்பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. 'நல்லதாகவும் கெட்டதாகவுமிருக்கிற ஜாதிகளில்' என்று சொன்னதினால் ஸத், அஸத், இவைகளின் ஜன்மங்களில் என்று மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்தது நிராகரிக்கப்பட்டது. பன்மையாகச் சொல்லியிருப்பதினால் ஒரு ஜீவாத்மாவிற்கே பரம்பரையாக விசித்ரங்களாகவும் எண்ணிறந்தவைகளாயுமிருக்கிற நல்லதும் கெட்டதுமாகிய யோனிகளின் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'மறுபடியும் கர்மங்களைச் செய்கிறான், மறுபடியும் பிறக்கிறான்' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. இப்படிப் பரம்பரையாக அநாதியாயிருப்பதைப்

---

1 ப்ராந்திஜ்ஞானவதாம்-ப்ரமமாகிய ஜ்ஞானத்தையுடைய, பும்ஸாம்-புருஷர்களுக்கு, ப்ரஹாரோபி-அடிப்பதும், ஸாதாயதே-ஸாதகம் போலிருக்கிறது.

2 சாந்தோக்யம்-5-10-7.

செய்கிறான், மறுபடியும் பிறக்கிறான். எப்பொழுது அமாநித்வம், முதலிய ஆத்மாவை அடைவதற்குக் காரணங்களாகிய குணங்களை அடைகிறானோ அதுவரையில் ஸம்ஸாரத்தை யடைகிறான். அதுதான் இங்கே '𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁' என்றுசொல்லப்பட்டது. 21

𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌮𑌨𑍍𑌤𑌾 𑌚 𑌭𑌰𑍍𑌤𑌾 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 |
𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚𑌾𑌪𑍍𑌯𑍁𑌕𑍍𑌤𑍋 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 𑌪𑌰𑌃 ‖ 22

ப - ரை] 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - இந்த, 𑌦𑍇𑌹𑍇 - தேஹத்தில், 𑌪𑌰𑌃 - மேலான, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - ஜீவாத்மா, 𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 - பார்த்துக்கொண்டிருப்பவன், 𑌭𑌰𑍍𑌤𑌾 - (ஶரீரத்தைத்) தாங்குகிறவன், 𑌭𑍋𑌕𑍍𑌤𑌾 - (ஸுகதுக்கங்களை) அனுபவிக்கிறவன், 𑌮𑌹𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 - (தேஹம், முதலியவைகளைக் குறித்து) ஈஶ்வரன், 𑌪𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑍇𑌤𑌿 𑌚 - பரமாத்மாவென்றும், 𑌉𑌕𑍍𑌤𑌃 - சொல்லப்பட்டான். 22

ப॰] இந்தத் தேஹத்திலே இருக்கிற இந்த ஜீவாத்மா தேஹம் வேலை செய்

---

தா] போல மேலும் முடிவில்லாமல் பரம்பரையாகவே எப்பொழுது மிருந்து கொண்டிருக்குமோ என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிக்கிறார்—'எப்பொழுது' என்றாரம்பித்து. ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பதற்குக் குணங்களில் பற்றுதல் காரணம் என்றுசொல்லியிருக்கும்பொழுது தானாகவே காரணமில்லாமல்போனால் கார்யமுமுண்டாகாது என்கிற ந்யாயத்தினால் அமாநித்வம் முதலியவைகளால் குணங்களில் பற்றுதல் நிவ்ருத்தித்துவிடுவதினால் நல்லதும் கெட்டதுமாகிய ஜாதிகளில் ஜன்மங்களின் பரம்பரையும் ஓய்ந்துவிடும் என்று சொல்லபபட்டதாகிறது என்று சொல்லுகிறார்—'அது தான்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் நேராகச் சொல்லாமற் போனபோதிலும் குணங்களில் பற்றுதல் முன்பிருந்த தேஹங்களின் ஸம்பந்தத்தினாலுண்டானது என்பதும், கர்மங்களின் வழியாக ஜன்மங்களை யடைவதற்குக் காரணமென்பது முதலியதும் ஶ்ருதிகள், மற்ற ஸ்ம்ருதிகள், இவைகளை யனுஸரித்து அபிப்ராயத்தினால் சொல்லப்பட்டதென்று தாத்பர்யம். 21

நல்லதாயும் கெட்டதாயும் இருக்கிற ஜாதிகளில் பிறந்த பிறகு வரக்கூடிய ஜீவாத்மாவின் ஸ்வபாவங்களைச் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். த்ரஷ்டாவாவது ப்ரமாணங்களைக் கொண்டு அறிய வேண்டிய வஸ்துக்களை அறிகிறவன். உபத்ரஷ்டாவாவது உண்மையாகத்தான் ப்ரவ்ருத்திக்காமலே ப்ரவ்ருத்தி செய்பவனைப் பார்த்துக் கொண்டிருக்கிறவன். அவனைப்போல் இருக்கிறபடியினால் இங்கும் '𑌉𑌪𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்—'தேஹம் வேலை செய்வதற்குத் தகுந்த' என்றாரம்பித்து

வதற்குத் தகுந்த ஸங்கல்பம் முதலியவைகளைச் செய்துகொண்டு தேஹத்தைப் பார்த்துக்கொண்டிருக்கிறான். அப்படியே அனுமதி செய்கிறவனுமாகிறான். அப்படியே தேஹத்தைத் தாங்குகிறவனுமாகிறான். அப்படியே தேஹம் ப்ரவ்ருத்தி செய்வதால் உண்டாகிய ஸுகதுக்கங்களை அனுபவிக்கிறவனாகவுமாகிறான். இப்படியே தேஹத்தை நியமிப்பதினாலும், தேஹத்தைத் தாங்குவதினாலும், தேஹத்திற்குச் சேஷியாயிருப்பதினாலும், தேஹம், இந்த்ரியம், மனஸ் ஸு, இவைகளைக் குறித்து ஈஶ்வரனாகிறான். அப்படியே மேலும் * ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: ।

---

'முதலியவைகளை' என்பதினால் ப்ரேரணம் செய்கிறதும் சேர்த்துக் கொள்ளப்பட்டது. அன்றிக்கே ஏற்கனவே ப்ரவருத்தித்திருப்பவனை அதிலேயே ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறவன் அநுமந்தா என்னப்படுகிறான் என்கிற வ்யுத்பாஸத்தை மனதில் வைத்துக்கொண்டு 'முதலிய' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறதாகவுமாம். பார்த்துக்கொண்டிருக்கிறது, அனுமதி செய்கிறது, முதலியவைகளுக்கு இன்னதை என்று சொல்லவேண்டிய தவஸ்யமாகையினால் ஆதாரமாக ஸமீபத்தில் இருக்கிற தேஹமே அதற்கும் ஸமாதானமாக அந்வயிக்கத்தக்கது என்கிற அபிப்ராயத்தினால் 'தேஹத்தை' என்று சொல்லப்பட்டது. நியமனம் செய்பவனாகயிருக்கை, தரிப்பவனாகயிருக்கை, சேஷியாக யிருக்கை, இவைகள் ஶரீரத்தோடு சேர்ந்திருக்கிற ஆத்மாவிற்கு லக்ஷணங்கள் என்கிற பிரிவைக் காட்டுவதற்காக ப்ரவ்ருத்தியைப் பற்றிய பார்த்துக்கொண்டிருத்தலையும், அனுமதி செய்தலையும், ஒரே வாக்யத்தில் சேர்த்தெடுத்ததும், 'அப்படியே' என்று வாக்யத்தை வேறுபடுத்தினதும். 'ஹர்தா' என்பதற்குத் தரிக்கிறவன் என்பர்த்தம். கீழ்ச் சொல்லிய காரணங்களினால் மஹேஶ்வரன் என்பதும். ஸமீபத்திலிருக்கிற தேஹம் முதலியவைகளைப்பற்றியதே என்று சொல்லுகிறார்—'இப்படித் தேஹத்தை நியமிப்பதினாலும்' என்றாரம்பித்து. தேஹத்தினாலுண்டாகிய ப்ரயோஜனங்களையனுபவிக்கிறான் என்று ... லேயே தேஹம் அவனுடைய ப்ரயோஜனத்திற்கேற்பட்டதாகையினால் ஆத்மா சேஷீ என்பதுமேற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தேஹத்திற்குச் சேஷியாயிருப்பதினாலும்' என்று. கர்மங்களுக்கு வசப்பட்ட உத்பத்தி மரணங்களையுடைய ஜீவாத்மாவினிடத்திலேயே 'ஈஶ்வர:' என்னும் பதம் சில விஷயங்களைப்பற்றியதாக ப்ரயோகித்திருப்பதைக் காட்டுகிறார்—'அப்படியே மேலும்' என்றாரம்பித்து. ஜீவாத்மாவினிடத்திலேயே அவன் தர்மபூத

---

* பகவத்கீதை-15-8.

க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ॥' என்று சொல்லப்படப்போகிறது. இந்தத்தேஹத்தில் தேஹம், இந்த்ரியங்கள், மனஸ்ஸு, இவைகளைக் குறித்துப் பரமாத்மாவென்றும் சொல்லப்பட்டான். தேஹத்திலும் மனஸ்ஸிலும் ஆத்மாவென்னும்பதம் அடுத்த மேல் ஶ்லோகத்திலேயே † 'த்யாநேநாத்மநி பஶ்யந்தி கேசிதாத்மாநமாத்மநா' என்று ப்ரயோகிக்கப்படுகிறது. 'அபி' என்னும் பதத்தினால் மஹேஶ்வரன் என்

---

ஜ்ஞானத்தினால் வ்யாபித்துக்கொண்டிருப்பதினால் பரமாத்மா என்னும் பதம் ப்ரயோகித்திருப்பது பொருந்துவதற்காக ஸமீபத்திலிருக்கிற இந்தப்பதத்தினர்த்தத்தைச் சுருக்கிச்சொல்லுவதற்குக் காரணமாகிய பதங்களோடு அந்வயத்தைச் சொல்லுகிறார்—'இந்தத் தேஹத்தில்' என்று. நேரில் பரமாத்மாவைச் சொல்லுகிறதாக விருந்தால் 'தேஹேஸ்மிந்' என்பது பொருந்தாது என்று தாத்பர்யம். 'இவ்விடத்தில் தேஹம் இந்த்ரியங்கள், மனஸ்ஸு, இவைகளைக் குறித்து' என்று மனஸ்ஸைத் தனித்தெடுத்தது அதனிடத்திலும் ஆத்மா என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறதென்று காட்டுவதற்காக. 'பர:' என்னும் பதத்தினால் விலக்கக்கூடியது ஒன்றுமில்லாமையினால் ஜீவாத்மாவைச் சொல்லுகிறதென்பது பொருந்ாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'தேஹத்திலும் மனஸ்ஸிலும்' என்றாரம்பித்து. இந்த ப்ரயோகம் வேறு க்ரந்தத்திலாவது வேறு இடத்திலாவது தேட வேண்டியதில்லை. இதே ஸந்தர்ப்பத்தில் ஒரு ஶ்லோகத்திற்கப்புறமிருக்கிறது. ஆகையினால் விலக்கவேண்டிய வஸ்து ஸமீபத்திலிருக்கிறது, அதை விலக்குவது மாத்திரத்திற்காக என்பதை உறுதிப்படுத்துகிறது என்கிற அபிப்ராயத்தினால்—'அடுத்தமேல் ஶ்லோகத்திலேயே' என்று சொல்லப்பட்டது. பரமாத்மா என்னும் பதத்தைப்போல 'மஹேஶ்வர:' என்னும் பதமும் ஸமீபத்திலிருக்கிற இந்தப் பதத்தின் அர்த்தத்தைச் சுருக்கிச்சொல்வதற்குக் காரணமாகிய பதங்களின் அர்த்தங்களைப்பற்றியதே என்பது 'ச' என்பதின் அர்த்தத்தைவிட வேறு அர்த்தத்தைச் சொல்லுகிற 'அபி' என்னும் பதத்தினாலு மேற்படுகிறது என்று சொல்லுகிறார்—'அபி' என்னும் பதத்தினால்' என்றாரம்பித்து. 'உக்த: (சொல்லப்பட்டான்)' என்பதினால் பரமாத்மாவல்லாத வஸ்துவினிடத்தில் சில வஸ்துக்களைபற்றியது இந்தப் பரமாத்மா முதலிய பதங்கள் என்று காட்டப்பட்டது. ''புருஷ: பர:' என்

† பகவக்கீதை-13-24.

றும் சொல்லப்பட்டான் என்றேற்படுகிறது. 'அநாதிமத்பரம்' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட அளவில்லாத ஜ்ஞானம், ஶக்தி, இவைகளையுடைய இந்த ஜீவாத்மா அநாதியாகிய ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தினாலுண்டான குணங்களில் பற்றுதலால் இந்தத் தேஹம் மாத்திரத்திற்கு ஈஶ்வரனாகவும், தேஹம் மாத்திரத்திற்குப் பரமாத்மாவாகவும் ஆகிறான். 22

(௪) ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிஞ்ச குணைஸ்ஸஹ |
ஸர்வதா வர்த்தமாநோऽபி ந ஸ பூயோऽபிஜாயதே || 23

ப-ரை] ய: - எவன், ஏவம் - இந்த, புருஷம் - ஜீவனையும், ப்ரக்ருதிஞ்ச - ப்ரக்ருதியையும், குணைஸ்ஸஹ - ஸத்வம் முதலிய குணங்களோடு, வேத்தி - அறிகிறானோ, ஸ: - அவன், ஸர்வதா - எவ்விதமாக, வர்த்தமாநோऽபி - இருந்தபோதிலும், பூய: - மறுபடியும், ந அபிஜாயதே - பிறக்கிறதில்லை. 23

பா] கீழ்ச்சொல்லிய ஸ்வபாவங்களையுடைய ஜீவாத்மாவையும் கீழ்ச்

---

னுமிடத்தில் 'பர:' என்னும் பதமும் முன்போலவே சில விஷயங்களைப்பற்றியது என்பதற்கு ஒத்தாசையையும், தேஹத்தைச் சொன்னதற்கும், சில விஷயங்களைப்பற்றி மஹேஶ்வரன் என்று சொல்லியிருப்பதற்குத் தாத்பர்யத்தையும், இந்த ஶ்லோகத்தில் அநுவதிக்கப்படும், விதிக்கப்படும் பாகங்கள், இவைகளின் பிரிவையும் மொத்த அர்த்தத்தையும் காட்டுகிறார்—'அநாதி' என்றாரம்பித்து. 'அநாதிமத்பரம்' 'என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட' என்பதினால் பரமன் என்பது இல்லை என்று சொல்லியிருக்கிறது. அளவில்லாத ஜ்ஞானம் ஶக்தி இவைகளையுடைய என்றதெனில் மேன்மை மாத்திரம் உண்டென்பதைக் காட்டியிருக்கிறது. 'இந்த' என்பதினால் இந்த ஸந்தர்பத்தின் நடுவிலிருக்கிற இந்த ஶ்லோகம் ஜீவாத்மாவைப்பற்றியதே, இந்த ஸந்தர்ப்பம் ஜீவாத்மாவைப் பற்றியதாகையினால் என்பது காட்டப்பட்டது. 'தேஹேऽஸ்மிந்' என்பதினால் முன்பு சொல்லிய காரணம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'அநாதியாகிய ப்ரக்ருதியின் ஸம்பந்தத்தினாலுண்டான' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. 22

பிறகு வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளவேண்டிய விதத்தைச் சொல்லுவதற்காக அதில் அதிக ப்ரீதியுண்டாவதற்காக அதின் ப்ரயோஜனம் முதலில் நிரூபிக்கப்படுகிறது-இந்தஶ்லோகத்தினால். 'ஏவம் (இந்த)' என்று சொல்லியிருப்பது முன்பு சொல்லப்பட்டவெவ்வேறான ஆகாரங்களைக் குறிக்கிறது என்று சொல்லுகிறார்—'கீழ்ச்சொல்லிய'

சொல்லிய ஸ்வபாவங்களையுடைய ப்ரக்ருதியையும், மேலே சொல்லப் போகிற ஸ்வபாவங்களோடு கூடிய ஸத்வம் முதலிய குணங்களோடுகூட எவன் அறிகிறனோ; அதாவது உள்ளபடியான பகுத்தறிவினாலறிகிறனோ, அவன் தேவன் மனுஷ்யன் முதலிய தேஹங்களில் மிகவும் கஷ்டப்பட்

---

என்று. ப்ரக்ருதியும் முன்பே சொல்லப்பட்டபடியினால் 'ஸஹ' என்று பதத்தை மாற்றிக்கொள்ளவேண்டியதென்பது 'கீழ்ச்சொல்லிய ஸ்வபாவங்களையுடைய ப்ரக்ருதியையும்' என்பதினால் சொல்லப்பட்டது. ஸத்வம் முதலிய குணங்களையோ வெனில் முன்பு பிரித்துக்காட்டியிருப்பது மாத்திரம். விஸ்தாரமாக நிரூபிப்பதோவெனில் பதினான்காவது அத்யாயத்தில் செய்யப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மேலே சொல்லப்போகிற' என்று. ப்ரக்ருதியும் ஆத்மாவும் முக்யங்களாகையினாலும், குணங்கள் முக்யங்களல்லவாகையினாலும் 'குணங்களோடுகூட' என்று சொல்லப்பட்டது. ஜீவாத்மாவையும் ப்ரக்ருதியோடு சேர்த்துச்சொல்லியிருந்தபோதிலும் 'ஸஹ' என்னும் பதம் இவ்விடத்தில் கீழும் மேலும் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்ட ப்ரக்ருதியின் குணங்களை மாத்திரம் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காக—'ஸத்வம் முதலிய' என்று சொல்லப்பட்டது. ப்ரக்ருதியோடும் அதின் குணங்களோடும் சேர்த்து அறிவது பரிசுத்தமல்லாத ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானமாகுமே என்றுக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக 'ஸஹ வேத்தி' என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது உள்ளபடியான' என்றாரம்பித்து. ஶாஸ்த்ரங்களை மீறி நடப்பதென்றர்த்தமோ?என்னும் ஸந்தேஹத்தைவிலக்குவதற்காக 'ஸர்வதா' என்பதினால்அநேக விதங்களாகிய தேஹங்களின் ஸம்பந்தத்தினாலேற்பட்டவைகளாயும் யோகத்திற்கு விரோதிகளாயுமிருக்கிற விசித்ரங்களான க்லேசங்களின் ஸம்பந்தம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'தேவன் மனுஷ்யன் முதலிய' என்றாரம்பித்து. இத்தால் சொல்லப்பட்டதாவது—உண்மையைத் தெரிந்துகொண்டவன் பலம் கொடுக்க ஆரம்பித்திருக்கிற கர்மங்களின் வசத்தினால் அப்பொழுது சில கஷ்டங்களை யனுபவித்துக்கொண்டிருந்தபோதிலும் இதர மனுஷ்யர்களைப் போல அவனுக்குமேல் ஜன்மமுண்டென்று ஊஹிக்கமுடியாது—என்பது. 'பூய:' என்னும் பதத்தினால் கஷ்டப்படாமலிருப்பவர்கள்விஷயத்தில் கைமுதிகந்யாயம் காட்டப்பட்டது. 1 'நஜாயதே ம்ரியதே' என்பதினாலேயே ஜீவாத்மாவின் ஸ்வரூபத்திற்கு உத்பத்தி இல்லையென்று

---

1 பகவத்கீதை-2-20.

டுக் கொண்டிருந்தபோதிலும் மறுபடியும் ப்ரக்ருதியோடு சேரத்தகுந்தவனல்ல. அளவில்லாத ஜ்ஞானத்தையே லக்ஷணமாக உடையதாயும், கர்ம ஸம்பந்தங்களில்லாததாயுமிருக்கிற ஜீவாத்மாவை இந்தத் தேஹம் முடிகிற ஸமயத்திலேயே அடைகிறான் என்றர்த்தம். 23

த்யாநேநாத்மநி பஶ்யந்தி கேசிதாத்மாநமாத்மநா ।
அந்யே ஸாங்க்யேந யோகேந கர்மயோகேந சாபரே ॥ 24

ப - ரை] கேசித் - சிலர், ஆத்மநி - ஶரீரத்தில் (இருக்கிற), ஆத்மாநம் - ஜீவாத்மாவை, ஆத்மநா — மனஸ்ஸினால், த்யாநேந - யோகத்தினால், பஶ்யந்தி-பார்க்கிறார்கள், அந்யே - வேறுசிலர், ஸாங்க்யேந யோகேந - ஜ்ஞானயோகத்தினால் (பார்க்கிறார்கள்), அபரே - மற்றும் சிலர், கர்மயோகேந - கர்மயோகத்தினாலும் (பார்க்கிறார்கள்). 24

---

சொல்லப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் அநந்த ப்ரஸ்தாவமில்லாமையினால் 'புந:(மறுபடியும்)' என்னும் பதம் அந்வயிக்காததாகையினாலும் 1'ஸதஸத்யோநிஜந்மஸு' என்று ஸித்தப்ரஸ்தாவிக்கப்பட்ட தேஹத்தோடு சேர்க்கையாகிய ஜன்மமே மறுக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மறுபடியும் ப்ரக்ருதியோடு சேரத்தகுந்தவனல்ல' என்று. ப்ரளயம் முதலிய தசைகளில் தேஹத்தை நசித்தவனுக்கு அந்தத் தேஹத்திற்கு அடுத்த உடனே தேஹத்தோடு ஸம்பந்தமாகிய ஜன்மம் இல்லாமற்போனபோதிலும் மறுபடி தேஹத்தோடு ஸம்பந்தப்படுவதற்கு யோக்யதையிருக்கிறது. இவனுக்கோவெனில் ஜ்ஞானமாகிற நெருப்பினால் எல்லாக் கர்மங்களும் கொளுத்தப்பட்டபடியினால் அந்த யோக்யதையுமில்லை என்கிற அபிப்ராயத்தினால் 'தகுந்தவனல்ல' என்று சொல்லியிருக்கிறது. அப்படித் தகுந்தவனல்ல என்பதையே விவரித்துக்கொண்டு மறுபடி ஜன்மம் முதலியவைகளாகிய அநிஷ்டங்களின் நிவ்ருத்தியானது வஸ்துவின் ஸ்வபாவத்தினால் இஷ்டத்தை அடைகிறவரையில் முடிவுபெறுகிறது என்று சொல்லுகிறார்—'அளவில்லாத ஜ்ஞானத்தையே' என்றாரம்பித்து. அஜ்ஞானமும் கர்மங்களும் மிகுதியில்லாமல் நாசமடைந்ததினால் தேஹத்தோடு சேருவதற்கு யோக்யதையில்லையல்லவா என்கிற அபிப்ராயத்தினால்—'அளவில்லாத ஜ்ஞானத்தையே லக்ஷணமாக உடையதாயும், கர்மஸம்பந்தங்களில்லாததாயுமிருக்கிற' என்கிற இரண்டு விசேஷணங்கள் சொல்லப்பட்டன. 'புந:(மறுபடியும்)' என்கிற பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'இந்தத் தேஹம் முடிகிற ஸமயத்திலேயே' என்று. 23

1 பகவத்கீதை-13-21.

பா] யோகம் பூர்த்தியான சிலர் ஶரீரத்திலிருக்கிற ஜீவாத்மாவை மனதினால் யோகத்தினாலே பார்க்கிறார்கள். யோகம்பூர்த்தியாகாத இன்னும்சிலர் ஜ்ஞானயோகத்தினால் மனதை யோகஞ்செய்யத் தகுந்ததாகச் செய்து கொண்டு ஜீவாத்மாவைப் பார்க்கிறார்கள். ஜ்ஞானயோகத்தி லதிகாரமில்லாதவர்களும், அதில் அதிகாரிகளாயிருந்தும் ஸுலபமான உபாயத்தில் ஆசையுடையவர்களும், ப்ரஸித்தமானவர்களுமாகிய வேறு சிலர் ஜ்ஞானத்தை உள்ளடக்கிக்கொண்டிருக்கிற கர்மயோகத்தினால் மனதிற்கு யோகம் செய்யத்தகுந்த யோக்யதையை யுண்டுபண்ணிக்கொண்டு ஆத்மாவைப் பார்க்கிறார்கள். 24

அந்யே த்வேவமஜாநந்த: ஶ்ருத்வாந்யேப்ய உபாஸதே |
தேऽபி சாதிதரந்த்யேவ ம்ருத்யும் ஶ்ருதிபராயணா: || 25

ப - ரை] ஏவம் - இவ்விதமாக, அஜாநந்த: - தெரிந்துகொள்ளாத, அந்யே து - மற்றும் சிலரோவெனில், அந்யேப்ய: - வேறு புருஷர்களிடத்திலிருந்து, ஶ்ருத்வா-கேட்டுக்கொண்டு, உபாஸதே-உபாஸனம் செய்கிறார்கள், ஶ்ருதிபராயணா: - கேழ்ப்பதையே கதியாகவுடைய, தேऽபி - அவர்களும், ம்ருத்யும் - ஸம்ஸாரத்தை, அதிதரந்த்யேவ - தாண்டி விடுகிறார்கள். 25

*தா] கீழ்ச்சொல்லிய அர்த்தத்தையே இரண்டு ஶ்லோகங்களால் விவரித்துக்கொண்டு ஆத்ம ஜ்ஞானத்தின்படிகளின் வ்யத்யாஸங்களைச் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். ஆதாரமாகவும், விஷயமாகவும், காரணமாகவும், சொல்லியிருக்கிறபடியினால் இங்கு ஆத்மா என்னும் பதங்கள் மூன்றும் வெவ்வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறதாகையினால் அததற்குத் தகுந்த அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஶரீரத்தில்' என்பது முதல். மேல்மேலே தாழ்ந்ததானபடிகளைச் சொல்லியிருக்கிற க்ரமத்தை யனுஸரித்து 'த்யாந' என்னும் பதம் இவ்விடத்தில் ஜ்ஞான யோகத்தைவிட மேலானதாகிய நேரில் யோகமென்று பேருடையபடியைச் சொல்லுகிறது. 'யோகம் பூர்த்தியாகாத' என்பது முதலியவைகளால் படிகளின் வரிசைகளைக் காட்டியிருப்பது ஆத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதில் அவைகள் ஸ்வதந்த்ரங்களாகத் தனித்தனி உபாயங்கள் என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக. 1 'ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம்' என்று முன்பு சொல்லி யிருக்கிறதை யனுஸரித்து 'ஸாங்க்யேந யோகேந' என்பதற்கு அர்த்தம் சொல்லுகிறார்—'ஜ்ஞானயோகத்தினால்' என்று. 'அபரே' என்பதினால் முன்பு சொல்லப்பட்ட கர்மயோகத்தில் அதிகாரிகளின் வகுப்புக்கள் எல்லாம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஜ்ஞானயோகத்தில் அதிகாரமில்லாதவர்களும்' என்றாரம்பித்து.* 24

1 பகவத்கீதை-3-3.

பா] கர்மயோகம்முதலிய ஆத்மாவை ப்ரயத்க்ஷமாகப் பார்ப்பதற்கு உபாயங்களில் அதிகாரமில்லாத வேறு சிலர் உண்மையை யறிந்தவர்களாகிய வேறு ஜ்ஞானிகளிடத்திலிருந்து கேட்டுக்கொண்டு கர்மயோகம்முதலியவைகளால் ஆத்மாவை உபாஸனஞ் செய்கிறார்கள். அவர்களும் ஆத்மாவைப் பார்ப்பதினால் ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள், எவர்கள்கேழ்ப்பதிலேயே நிஷ்ட்டையை யுடையவர்களோ. கேழ்ப்பதிலேயே நிஷ்ட்டையுடைய இவர்களும் பாபங்களைப்போக்கடித்து க்ரமமாகக்கர்மயோ

---

தா] கர்மயோகம் முடிவுபெறாமலிருக்கிறவர்களாயும், மோக்ஷத்திலாசை யுடையவர்களாயுமிருக்கிறவர்களுடைய கர்மயோகத்தின் ஆரம்பத்தை சொல்லப்படுகிறது. 'அந்யே' என்கிறவிடத்திலிருக்கிற 'து' என்னும் பதத்தினாலும், 'ஏவமஜாநந்த:' என்பதினாலும் தன்னுடைய ஸ்வரூபத்தைப் பகுத்தறியக்கூடிய சக்தி முதலியவைகளில்லாமையினால் கர்மயோகம் முதலியவைகளில் அதிகாரமில்லை யென்பது காட்டப்பட்டது. உபதேசஞ்செய்கிறவர்களைச் சொல்லுகிறார் 'அந்யேப்ய:' என்னும் பதத்தினால் 1 'உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞாநம் ஜ்ஞாநிநஸ்தத்வதர்ஶிந:' என்று முன்பு சொல்லப்பட்டவர்கள் சொல்லப்படுகிறார்கள் என்கிற அபிப்ராயத்தினால் 'உண்மையை யறிந்தவர்களாகிய' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. 'தேऽபி' என்றாரம்பித்துக் கர்மயோகத்தை ஆரம்பிப்பதிலும் சக்தியில்லாதவர்கள் சொல்லப்படுகிறார்கள் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அவர்களும்' என்றாரம்பித்து. அன்றிக்கே இந்த வாக்யத்திற்கு முன் வாக்யத்தோடு அந்வயம் சொல்லிக்கொள்ளவேண்டியது. 'ஶ்ருதிபராயணா:' என்று சேர்த்துக்கொண்டு வேறு வாக்யமாகச் சொல்லவேண்டியது. அதை யே காட்டுகிறார்—'எவர்கள்' என்றாரம்பித்து என்பதாம். 'ஶ்ருதி:'-கேழ்ப்பது, பரம்—முக்யமான, அயநம் - நிஷ்ட்டை (எவர்களுக்கோ)' அவர்கள் ஶ்ருதிபராயணர்கள். 'ஶ்ருதிபராயண' என்னும் பதம் கேட்டு உபாஸநஞ்செய்கிறவர்களைவிட இவர்கள் வேறு என்று காட்டுகிறது. அப்படிக்கில்லாவிடில் 'ஶ்ருத்வா' என்று முன்பே சொல்லியிருக்கிறபடியினால் மறுபடியும் 'ஶ்ருதிபராயணா:' என்னும் பதம் வ்யர்த்தமாகவேண்டிவரும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—கேழ்ப்பதிலேயே நிஷ்ட்டையை யுடைய' என்று. இவ்விடத்தில் கேழ்ப்பதில் நிஷ்ட்டைக்கு மிகவும் பரிசுத்தமாக இருக்கையாகிற மேன்மை சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'பாபங்களைப் போக்கடித்து'

---

1 பகவத்கீதை-4-34.

கம் முதலியவைகளை ஆரம்பித்து ஸம்ஸாரத்தைத் தாண்டுகிறார்கள். 'அபி' என்னும் பதத்தினால் முன்பு சொன்னதைவிட இது தாழ்ந்தபடி என்றேற்படுகிறது. 25

பா-அ] பிறகு ப்ரக்ருதியோடுசேர்ந்திருக்கிற ஆத்மாவின் வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளும் மாதிரியைச்சொல்லுவதற்காக ஸ்த்தாவரமும் ஜங்கமமுமாகிய எல்லா ப்ராணிகளும் சேதனத்தினுடையவும் அசேதனத்தினுடையவும் சேர்க்கையினால் உண்டானதென்று சொல்லுகிறார்—

*யாவத்ஸஞ்ஜாயதே கிஞ்சித்ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம் |*
*க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்தத்வித்தி பரதர்ஷப ||* 26

ப - ரை] பரதர்ஷப - பரதவம்சத்தில் ஶ்ரேஷ்டனாகிய அர்ஜுந, ஸ்தாவர ஜங்கமம் - ஸ்த்தாவரமும் ஜங்கமமுமாகிய, கிஞ்சித் - எந்த, ஸத்த்வம் - ப்ராணி, யாவத் - எவ்வளவு, ஸஞ்ஜாயதே - உண்டாகிறதோ, தாவத் - அவ்வளவும், க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகாத் - ஶரீரம், ஜீவாத்மா, இவைகளின் சேர்க்கையினால் (உண்டாகியதாக) வித்தி - அறி 26

---

*என்று. 'க்ரமமாக' என்பதினால் கர்மயோகம் முதலியவைகளை விதித்திருப்பது வ்யர்த்தம் என்கிற ஆக்ஷேபத்திற்குப் பரிகாரம் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் தனியான உபாயத்தைச்சொல்லுவதாக ஏன் இருக்கக்கூடாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்— 'அபி' என்னும் பதம்' என்றாரம்பித்து. 'அபி' என்னும் பதத்தினால் மற்றவர்களைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை யென்பதும், இவர்கள் தாழ்ந்தபடியில் இருக்கிறவர்கள் என்பதும் காட்டப்பட்டது, என்று தாத்பர்யம்.* 25

*இப்படி ஆத்மாவின் ஸாக்ஷாத்காரம் சொல்லப்பட்டது. அதற்காக 'ஸமம் ஸர்வேஷு' முதலிய ஶ்லோகங்களினால் ப்ரக்ருதி ஜீவாத்மா இவைகளின் வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளும் விதம் சொல்லப்படப்போகிறது. அதுவும் இரண்டும் தனித்தனியாக அறியப்படாமலிருக்கும்பொழுது உபதேசம் செய்யவேண்டியது, அப்படிக்கில்லாவிடில் ப்ரயோஜனமற்றதாய் விடுமாதலினால். அப்படித் தனியாக அறிபப்படாமலிருப்பதும் தோஷமில்லாவிடில் உண்டாகாது. அந்தத் தோஷமாவது இவ்விடத்தில் ஸுகதுக்கங்களை யனுபவிப்பவனாக இருப்பதற்கும், அவைகளை யனுபவிப்பதற்கு இடமாகஇருப்பதற்கும், காரணமாகிய இவை இரண்டின் சேர்க்கையே. இது தான் 'யாவத்ஸஞ்ஜாயதே' என்கிற ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது, என்று ஸங்கதி சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து. 'எல்லா' என்பதினால் யாவத்'*

பா] எவ்வளவு ஸ்த்தாவரமாகவும் ஜங்கமமுமாகவுமிருக்கிற ப்ராணியுண்டாகிறதோ அவ்வளவும் ஶரீரம், ஜீவாத்மா, இவைகளின் ஒன்றோடொன்று சேர்க்கையினாலேயே உண்டாகிறது. அதாவது சேர்ந்தே உண்டாகிறது, ஒன்றுக்கொன்று பிரிந்து உண்டாகிறதில்லை என்றர்த்தம். 26

ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்டந்தம் பரமேஶ்வரம் |
விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய꞉ பஶ்யதி ஸ பஶ்யதி || 27

---

என்னும் பதம் இவ்விடத்தில் முழுமையும் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று சொல்லப்பட்டது. 'யாவத்' என்னும் பதம் 'யத்' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானஞ் செய்திருப்பது அது அந்த அர்த்தத்தைச் சொல்லாததாகையினாலும், அதிக ப்ரயோஜனமில்லாததாகையினாலும் யுக்தமல்ல என்று தாத்பர்யம். 'ஸத்த்வ' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ராணிகளைச் சொல்லுகிறது. 1 'த்ரவ்யாஸுவ்யவஸாயேஷு ஸத்த்வமஸ்த்ரீ து ஜந்துஷு' என்று சொல்லியிருப்பதினால் மரம், புதர், கொடி, செடி, புல், முதலியவைகளிலும் ஜ்ஞானத்திற்குப் பரவுதல் இல்லாத மாத்திரத்தினால் ஜடங்களைச் சொல்லுவதைப்போல் கேவலம் அசேதனங்கள் அவைகள் என்கிற ஆக்ஷேபத்தை நிராகரிப்பதற்காக இவ்விடத்தில் 'ஸ்தாவர' என்னும் பதம் ஸ்த்தாவரமாயிருக்கை, ஜங்கமமுமாயிருக்கை, இவைகள் பால்யம், யௌவனம், கிழத்தனம், முதலியவைகளைப்போலச் ஶரீரம் இருக்கும் வரையில் இருக்கக்கூடியவைகளல்ல என்று தெரிவிப்பதற்காக 'ஸ்த்தாவரமாகவும் ஜங்கமமுமாகவு மிருக்கிற' என்று சொல்லப்பட்டது. ஶரீரம், ஜீவாத்மா, இவைகளோடு கூட வேறு ஒருவஸ்து சேருகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக—'ஒன்றோடொன்று சேர்க்கையினால்' என்று சொல்லப்பட்டது. இங்கு விதிக்கப்படும் பாகத்தைத் தெரிவிப்பதற்காக 'சேர்க்கையினாலேயே' என்று சொல்லப்பட்டது. தாய், தகப்பன் இவைகளினுடைய சேர்க்கையினால் புத்திரனுண்டாவதைப்போல ஶரீரம் ஜீவாத்மா இவைகளின் சேர்க்கையினால் வேறொரு ப்ராணி உண்டாகலாமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அதாவது சேர்ந்தே' என்று. தனித்தனியே இருக்கிற லோகத்தில் ப்ரஸித்தமான க்ஷேத்ரம், க்ஷேத்ரி, இவர்களின் சேர்க்கையை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'பிரிந்து உண்டாகிறதில்லை' என்று. 'ஜநீ' என்கிற விடத்தில் 'ஜந' என்னும் பதத்தினால் உத்பத்தியைச் சொல்லியிருக்கிறது. 26

---

1 அமரம்-3-வது காண்டம்.

ப - ரை] ஸர்வேஷு - எல்லா, பூதேஷு - ப்ராணிகளிடங்களில், பரமேஶ்வரம் - (தேஹம் முதலியவைகளுக்கு) ஈஶ்வரனாக, திஷ்டந்தம் - இருக்கிற, ஸமம் - ஸமனாக இருக்கிற, விநஶ்யத்ஸு - (இந்த ப்ராணிகள்) நாசமடையும்பொழுது, அவிநஶ்யந்தம் - நாசமடையாமலிருக்கிற ஜீவாத்மாவை, ய꞉ - எவன், பஶ்யதி - பார்க்கிறானோ, ஸ꞉-அவன், பஶ்யதி- உண்மையாகப் பார்க்கிறான். 27

பா] இப்படி ஒன்றோடொன்று சேர்ந்திருக்கிற எல்லா ப்ராணிகளுக்குள்

தா] பிறகு ஸமமாகவிருக்கை வ்யத்யாஸமுடையதாயிருக்கை, நியமிக்கிறவனாயிருக்கை நியமிக்கப்படக்கூடியவனாயிருக்கை, நித்யமாகவிருக்கை அநித்யமாகவிருக்கை, இவைகளால் சேதனாசேதனங்கள் இரண்டிற்கும் வ்யத்யாஸம் தெரிந்துகொள்ளவேண்டியதென்பதைச்சொல்லி அதுவே உண்மையைப்பற்றிய நிஶ்சயமானதையினால் மேலான புருஷார்த்தத்திற்குக் காரணம் என்று ஸ்தோத்திரம் செய்கிறார்—இந்த ஶ்லோகத்தில். 1 'க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகாத்' என்கிற விடத்தில் சங்கராசார்யரால் சொல்லப்பட்டதாவது—ஆகாசம்போல் அவயமில்லாததாகையினால் அவயவங்களின் சேர்க்கையாகிய ஸம்பந்தம் சரீரத்திற்கும் ஆத்மாவிற்கும் ஸம்பவிக்காதாகையினாலும், ஒன்றுக்கொன்று காரணமாயும் கார்யமாயும் இருக்கிறதென்று ஒப்புக்கொள்ளாமையினாலேயே ஸமவாயம் என்கிற ஸம்பந்தமும் பொருந்தாதாகையினாலும், விஷயமாகவும் விஷயத்தையறிக்கூடியதாயுமிருக்கிற அந்தச் ஶரீரம் ஆத்மா இவைகளுக்கு ஒன்றின் ஸ்வபாவத்தை மற்றொன்றில் ப்ரமிப்பதே ஸம்பந்தம். அதை நிவ்ருத்தி செய்யக்கூடிய உண்மையான ஜ்ஞானம் 'ஸமம்ஸர்வேஷு' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது—என்று. இது தெரியாதவர்களின் வார்த்தை. அவயவமில்லாத வஸ்துவிற்கும் ஸம்யோகம் என்னும் ஸம்பந்தமுண்டு. பிரிந்திருக்கக்கூடிய வஸ்துக்களின் சேர்க்கை ஸம்யோகம் என்றல்லவோ அதற்கு லக்ஷணஞ் சொல்லுகிறார்கள். அதுவும் அவயமில்லாத இரண்டு வஸ்துக்களுக்கும், அவயவங்களோடுகூடிய இரண்டு வஸ்துக்களுக்கும், ஒன்று அவயவமில்லாமலும் மற்றொன்று அவயவத்தோடுகூடியிருக்கும் இரண்டு வஸ்துக்களுக்கும் ஸம்பவிக்கும். மேலும் அவர் மதத்தில் ப்ரமம் பொருந்ாதுஎன்பவை முதலிய தோஷங்கள் விஸ்தாரமாய் ஏற்கனவே சொல்லப்பட்டது. 'ஸர்வேஷு பூதேஷு' என்று தேவன்மனுஷ்யன் முதலிய வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது. எப்படி மண் குடம், தங்கக்

1 பகவத்கீதை-13-26.

தேவன் முதலிய வ்யத்யாஸமுள்ள ஆகாரத்தையுடைய வஸ்துவைக் காட்டிலும் வேறுபட்டதாயும், அந்தந்தத் தேஹங்களில் அந்தந்தத் தேஹங்களுக்கும், இந்த்ரியங்களுக்கும், மனஸ்ஸுக்களுக்கும், ஈஶ்வரனாக இரு

---

குடம்முதலியவைகளில் எடுத்து வைக்கப்பட்ட கங்காஜலத்திற்கு அந்தந்தக்குடத்தில்இருப்பதுமாத்திரமேதவிர கங்கமாகுகை முதலியவ்யத்யாஸம் உண்கிறதில்லையோ அப்படியே ஆத்மாவிற்கும் தேவன் மனுஷ்யன் முதலிய தேஹங்களில் இருப்பது மாத்திரமே ஒழிய உப்பில் வைக்கப்பட்ட குச்சி முதலியவைகள் உப்பாவதைப்போல ஸ்வரூபத்திலேயே தேவன் மனுஷ்யன் முதலிய வ்யத்யாஸங்களுக்கு இருப்பிடமாகவிருக்கை இல்லை என்று 'திஷ்டந்தம்' என்பதின் அபிப்ராயம் என்று சொல்லுகிறார்—'தேவன் முதலிய வ்யத்யாஸமுள்ள' என்றாரம்பித்து. அன்றிக்கே 'ஸமம்' என்று சொல்லியிருப்பதினால் தானாகவே ஏற்பட்ட வ்யத்யாஸமில்லையென்பதைச் சொல்லியிருக்கிறது இது. 'திஷ்டந்தம்' என்பதோவெனில் மேலே அந்வயித்துக்கொள்ள வேண்டியது. ஆகையினாலேயே 'ஈஶ்வரனாகயிருந்து கொண்டிருப்பவனையும்' என்று பாஷ்யத்தில் சொல்லப்படுகிறது. ஈஶ்வரன் அல்லாதவனாயும் அல்பஶக்தியுடையவனாயுமிருக்கிற ஜீவாத்மாவிற்கு பரமேஶ்வரன் என்பது எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக முன்போல சுருக்கிச் சொல்லவேண்டும் என்று சொல்லுகிறார்—'அந்தந்தத் தேஹங்களுக்கும்' என்றாரம்பித்து. தேஹமே ஆத்மா என்பதான புத்தியுடையவர்கள் தேஹம் நசித்துப்போவதினால் ஆத்மாவிற்கே நாசமுண்டாகிறதென்று நினைக்கிறார்கள். புத்தியிலேயே தோன்றுகிற பரமாத்மாவிற்கு நாசமுண்டு என்று நினைக்கிறதில்லை ஆகையினால் 'அவிநஶ்யந்தம்' என்று கீழ்ப்ரஸ்தாவிக்கப்பட்ட நாசம் இல்லையென்று குறிக்கிற அர்த்தத்தைச்சொல்லுகிற பதத்தோடு சேர்ந்ததாகிய 'பரமேஶ்வரம்' என்னும்பதம் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜீவாத்மாவையே சொல்லுகிறது என்று தாத்பர்யம். 'ஸமம்' என்னும் பதத்தினால் வெளியிலேயிருக்கிற தேவனாயிருக்கை முதலிய வ்யத்யாஸங்களில்லை என்பது மாத்திரம் சொல்லப்படுகிறதில்லை. பின்னை எப்படியென்னில் 1 'அநேகமான நிறங்களையுடைய பசுமாடுகளின் பால் எப்படி ஒரே வர்ணமுடையதாயிருக்கிறதோ அப்படியே ஜ்ஞானஸ்வரூபமாகிய ஆத்மாவைப்பால்போலவும் தேஹத்தை மாடுகளைப்போலவும் அறிகிறான்,' என்றர்த்தமுள்ள ஶ்ருதியை யனுஸரித்து ஆத்மாக்களின் ஸ்வரூபங்களில் ஒன்றுக்கொ

1 அம்ருதபிந்தூபநிஷத்.

ந்துகொண்டிருப்பவனையும், அறியுந்தன்மை யுடையவனாகையினால் ஸம மான ஆகாரத்தையுடையவனையும், அந்தத்தேஹம் முதலியவைகள் நாச மடையும்பொழுது நாசத்தை யடையத்தகாத ஸ்வபாவங்களை யுடையவ னாகையினால் நாசமடையாமலிருக்கிற ஆத்மாவை எவன் அறிகிறானோ அவன் ஆத்மாவை உள்ளபடியே அறிகிறான். எவன் தேவன் முதலிய வ்யத்யாஸமுள்ள ஆகாரங்களினால் இத்தையும் வ்யத்யாஸமான ஆகார த்தை யுடையதாகவும், உத்பத்தி, நாசம், முதலியவைகளை உடையதாக வும் அறிகிறானோ அவன் எப்பொழுதும் ஸம்ஸாரத்தையே அடைகிறான் என்றபிப்ராயம். 27

𑌸𑌮𑌂 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌹𑌿 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌮𑍀𑌶𑍍𑌵𑌰𑌂 ।
𑌨 𑌹𑌿𑌨𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 ॥ 28

ப - ரை] 𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰 - எல்லாத்தேஹங்களிலும், 𑌸𑌮𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌂 - இருக்கிற, 𑌈𑌶𑍍𑌵𑌰𑌂 - ஈஶ்வரனாகிய ஜீவாத்மாவை, 𑌸𑌮𑌂 - ஸமமானதாக, 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍-

---

*ன்று வ்யத்யாஸமில்லை யென்பதும் சொல்லப்படுகிறது. அப்படி ஸம மாக இருப்பதும் எப்படிப்பட்டதென்று ஆக்ஷேபம்வரில் [1] '𑌏𑌤𑌦𑍍𑌯𑍋 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿' என்று ஆரம்பித்திருப்பதை யனுஸரித்துச் சொல்லுகிறார்— 'அறியுந்தன்மையுடையவனாகையினால்' என்றாரம்பித்து. ஜ்ஞானஸ்வரூப மாக இருக்கை முதலியவைகளையும் குறிக்கிறது இது. [2] '𑌯𑍇𑌨 𑌸𑌰𑍍𑌵𑌮𑌿𑌦𑌂 𑌤𑌤𑌂' என்றாரம்பித்து விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட நாசத்தை யடையாதது என்பதின் காரணங்களை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'நாச த்தையடையத்தகாத ஸ்வபாவங்களை யுடையவனாகையினால்' என்று. '𑌯𑌃 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿' என்கிற இரண்டு வாக்யங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறதாகையினால் வ்யர்த்தமானது, அநு வாதம் செய்வதும் விதிப்பதும் பொருந்தாது என்கிற ஆக்ஷேபங்களு க்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அவன் ஆத்மாவை உள்ளபடியே' என்று. மற்றவர்களோ வெனில், சங்கை, மஞ்சள் நிறமுள்ளதாகப் பார்ப்பவர்களைப்போல வ்யத்யாஸமாகப் பார்க்கிறவர்களாகையினால் பார்த்துக்கொண் டிருந்தபோதிலும் பார்க்கவில்லை என்று தாத்பர்யம். '𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿' என்று இவ்விடத்தில் ஸ்தோத்திரம் செய்தது மேலான புருஷார்த்தத்தை அடைவது முதலியவைகளைக் காரணமாகவுடையது. அப்படிக்கில்லாதவர்களை நிந்தித்திருப்பதும் இவ்விடத்திலேற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எவன் தேவன் முதலிய' என்றாரம்பித்து.* 27

---

1 பகவத்கீதை-13-1.    2 பகவத்கீதை-18-46.

பார்க்கிறவன், ஆத்மநா - மனதினால், ஆத்மாநம் - தன்னை, நஹிநஸ்தி - ஹிம்ஸை செய்கிறதில்லை அதாவது ரக்ஷிக்கிறான், தத꞉ - அதினால், பராம் – உயர்ந்த, கதிம் - கதியை, யாதி - அடைகிறான். 28

பா] தேவன்முதலிய ஶரீரங்கள் எல்லாவற்றிலும் அந்தந்தச் ஶரீரங்களுக்குச் சேஷியாகவும், அவைகளுக்காதாரமாகவும், அவைகளை நியமிக்கிறவனாகவுமிருக்கிற ஈஶ்வரனாகிய ஜீவாத்மாவை, தேவன் முதலிய வ்யத்யாஸமுள்ள ஆகாரங்களில்லாதவனாகவும் ஜ்ஞானம் ஒன்றையே

தா] கீழ்ச்சொல்லியதை நிரூபிக்கிறார்—இந்த ஶ்லோகத்தினால். 'ஹி' என்பது காரணத்தைக்காட்டுகிறது. கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸமம் என்று பார்ப்பதின் ப்ரயோஜனத்தைச் சொல்லிக்கொண்டு ஸ்தோத்திரம் செய்யப்படுகிறது. 1 'ஸர்வத்ராவஸ்திதோ தேஹே' என்று மேலே சொல்லப்போகிறதை யோசித்து 'ஸர்வத்ர' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'தேவன் முதலிய ஶரீரங்களில் எல்லாவற்றிலும்' என்று. 2 'பர்த்தா போக்தா மஹேஶ்வர꞉' என்று முன்சொல்லியிருப்பதை யனுஸரித்து 'ஸமவஸ்திதம்' என்கிறவிடத்தில் 'ஸம்' என்னும் உபஸர்க்கத்தினால் ஏற்பட்ட விசேஷமான இருப்பைச் சொல்லுகிறார்—'அந்தந்தச் ஶரீரங்களுக்கு' என்றாரம்பித்து. ஆகையினாலல்லவோ 'ஸ்திதம்' என்பது பிரித்துச்சொல்லப்பட்டது. 'ஈஶ்வரம்' என்னும் பதத்தினாலும் சேஷியாகவிருக்கையும் சொல்லப்பட்டது. இந்த இடத்திலும் 'ஈஶ்வர꞉' என்னும் பதம் முன்பு சொல்லிய ந்யாயத்தினால் சிற்சில விஷயங்களைப் பற்றியதாக அறியவேண்டியது. தேஹமே ஆத்மா என்கிற அபிமானத்தினாலேற்பட்ட தேவன் முதலிய வ்யத்யாஸத்தை மறுப்பதற்காக இவ்விடத்தில் 'ஸமம்' என்னும் பதம் சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தேவன் முதலிய வ்யத்யாஸமுள்ள ஆகாரங்களில்லாதவனாகவும்' என்று. 'க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞ ஸம்யோகாத் [illegible]' என்றும், முன்பின் ஸந்தர்ப்பங்களை யோசித்து தேஹத்தோடு சேர்ந்திருப்பதினால் ஏற்பட்ட வ்யத்யாஸமில்லை என்பது சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். மூன்றும் வேற்றுமையை யுடைய ஆத்மா என்னும் பதம் இவ்விடத்தில் 'கரண' என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற வேற்றுமையையுடைய தாகையினாலும், உசிதமாகையினாலும், மனதைச்சொல்

1 பகவத்கீதை-13-32.
2 பகவத்கீதை-13-22.

ஸ்வபாவமாக முடையவனுகையினுல் ஸமமாகவும் பார்க்கிறவன் மனஸ்ஸினுல் ஜீவாத்மாவாகிய தன்னைக் காப்பாற்றிக்கொள்ளுகிறுன். அதாவது ஸம்ஸாரத்திலிருந்து விடுவித்துக்கொள்ளுகிறுன். அப்படிப்பட்ட அறிகிறவனுயிருக்கையினுலே எல்லா இடங்களிலும் ஸமமான ஆகாரத்தை உடையவனென்று பார்ப்பதினுல் மேலான கதியை யடைகிறுன். 'கம்யதே' அடையப்படுகிறதென்று 'கதி' என்னப்படுகிறது. மேலானதாய் அடையக்கூடியதாகிய உள்ளபடியே இருக்கிற ஜீவாத்மாவை

---

னுகிறது. இரண்டாம்வேற்றுமையைமுடிவிலுடைய 'ஆத்மா'என்னும்பதமேனெவெனில்ஹிம்ஸைசெய்யப்படுவதாகிய அர்த்தத்தின்சக்தியினுல்ஸம்ஸாரியாகிய ஆத்மாவைச்சொல்லுகிறது என்றுதெரிவிக்கிறுர்—'மனஸ்ஸினுல் ஜீவாத்மாவாகிய தன்னை'என்று. ஸமமென்று பார்க்கிறவன் ஹிம்ஸை செய்கிறவனல்ல என்கிறவிடத்தில் சாஸ்த்ரங்களில் சொல்லப்படாததாயும், மறுக்கப்படாததாயுமிருக்கிற கர்மங்களைச் செய்பவனைப்போல ஆத்மாவை ஸமம்என்று பார்க்கிறவன் ஆத்மாவைத்தொந்திரவு செய்கிறதில்லை என்பது மாத்திரம் சொல்லப்படும். அது வ்யர்த்தம். மேலும் வ்யத்யாஸமுள்ளதென்று பார்க்கிறவனுடைய ஆத்மாவும் நித்யமாகையினுல் ஹிம்ஸை செய்யத்தக்கதல்ல. ஆகையினுல் இவ்விடத்தில் 'நஹிநஸ்தி' என்பதினுல் ஸமம் என்று பார்ப்பதினுல் உண்டாக்கக்கூடிய புருஷனுக்கு இஷ்டமான பலமொன்று அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்றுசொல்லுகிறுர்—'காப்பாற்றிக்கொள்ளுகிறுன்' என்று. இந்த ஸந்தர்ப்பத்திலும் மேலிருக்கும் மிகுதி வாக்யத்திலும் காப்பாற்றுவதையே விவரமாகச் சொல்லுகிறுர்—'அதாவது' என்றாரம்பித்து. 'ததஃ' என்னும்பதம் இவ்விடத்தில் கீழ்ச்சொன்ன அர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல. அநிஷ்டம் நிவ்ருத்திப்பதும் தானே ப்ரயோஜனமாகையினுல் இஷ்டத்தை யடைவதற்குக்காரணம் என்று சொல்லியிருப்பது மூசிதமல்லவாகையினுல். ஆகையினுல் இவையிரண்டிற்கும் காரணமாகிய ஸமமென்று பார்ப்பதே சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறுர்—'அப்படிப்பட்ட' என்றாரம்பித்து. 'பராம் கதிம்' என்று அடையவேண்டிய ப்ரயோஜனத்தைச் சொல்லியிருப்பதினுல் போவது என்னும் அர்த்தத்தைச்சொல்லுவதா யிருந்தால் அது ஸித்திக்காதாகையினுல் இவ்விடத்தில் உசிதமான வ்யுத்பத்தி சொல்லுகிறுர்—'கம்யதே' என்றாரம்பித்து. அத்தையே விவரிக்கிறுர்—'உள்ளபடியே இருக்கிற' என்றாரம்பித்து. இந்த ஸந்தர்ப்பம் ஜீவாத்மாவைப்

அடைகிறான். தேவன் முதலிய ஆகாரங்களையுடைய தாகையினால் எல்லாவிடங்களிலு மிருக்கிற ஆத்மா வ்யத்யாஸமுள்ளதென்று பார்க்கிறவன் ஆத்மாவை ஹிம்ஸித்துக்கொள்ளுகிறான். ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தின் நடுவில் தள்ளிவிடுகிறான். 28

ஒருகூரு௮வெதெூவ வ கஉ௴ாணி கி௵ாணாநி ஸவ௴ஶஃ |
யஃ வஶூதி தயாத்ாநஉகதௗாரம் ஸ வஶூதி || 29

ப - ரை' கஉ௴ாணி - காரியங்களை, ஸவ௴ஶஃ - எல்லாம், ஒருகூ௮வெதூ வ - ப்ரக்ருதியினாலேயே, கி௵ாணாநி - செய்யப்படுகின்றனவாகவும், தயா - அப்படியே, ஆதூாநம் - ஜீவாத்மாவை, அகதௗாரம் - கர்த்தாவல்லாதவனாகவும், யஃ - எவன், வஶூதி - பார்க்கிறானோ, ஸஃ-அவன், வஶூதி - (ஆத்மாவை உள்ளபடி) அறிகிறான். 29

---

பற்றியது என்று முன்பே ஸ்தாபிக்கப்பட்டது. 'வரமேஶ்வரஃ' என்றும் பதமும் 1 'அவ்யக்தோக்ஷர இத்யுக்தஃ தமாஹுஃ வரமாம் கதிம்' என்றிவை முதலிய விடங்களில் ஜீவாத்மாவினிடத்திலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்று தாத்பர்யம். ஆத்மாவினிடத்தில் வ்யத்யாஸத்தை அறிகிறவனோ வெனில் தன்னுடைய ஆத்மாவை ஹிம்ஸிக்கிறான் என்பது, தனித்து ஒன்றை மறுத்தது மற்றவைகளுக்கும் என்று தெரிவிப்பதற்காக என்கிற ந்யாயத்தினாலேற்பட்டது, என்று சொல்லுகிறார்—'தேவன் முதலிய' என்றாரம்பித்து. நித்யமாகிய ஆத்மாவின் ஸ்வரூபம் வெட்டக்கூடாமை முதலியவைகளையே ஸ்வபாவமாக உடையதென்று 2 'அவ்யாதய அதிஹுதிகம்' என்று சொல்லப்பட்ட ஜீவாத்மாவிற்கு இப்பொழுதுசொல்லப்படுகிற ஹிம்ஸையாவது என்ன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'ஸம்ஸாரமாகிற' என்றாரம்பித்து. இந்தஶ்லோகத்தினாலும் ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளுக்குத் தங்கள் தங்கள் ஆகாரங்களைப் பார்ப்பதினால் ஸம்ஸாரத்திற்குக் காரணமாயிருக்கை, மோக்ஷத்திற்குக் காரணமாயிருக்கை, இவைகளாலும் வ்யத்யாஸம் சொல்லப்பட்டதாகிறது என்றபிப்ராயம். 28

1 பகவத்கீதை-8-21.
2 பகவத்கீதை-2-21.

பா] எல்லாக் கர்மங்களையும் 'காயகாரணகர்த்ருத்வே ஹேதுஃ ப்ரக்ருதிருச்யதே' என்று முன்பு சொல்லியிருக்கிறபடி ப்ரக்ருதியினாலே செய்யப்படுகின்றனவென்று எவன் பார்க்கிறானோ; அப்படியே ஜ்ஞானம் ஒன்றையே ஸ்வபாவமாக உடையஜீவாத்மாவை கர்த்தாவல்லாதவனாக எவன் பார்க்கிறானோ, அப்படிப்பட்டவனுக்கு ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பதும், அதை அதிஷ்டானம் செய்வதும், அதினால் உண்டாகிய ஸுக துக்கங்களை யனுபவிப்பதும் கர்மமாகிய அஜ்ஞானத்தினால் உண்டாக்கப்பட்டவைகள் என்றும் எவன் பார்க்கிறானோ; அவன் ஆத்மாவை உள்ளபடியே பார்க்கிறான். 29

*யதா பூதப்ருதக்பாவமேகஸ்தமநுபஶ்யதி ।*
*தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥* 30

ப - ரை] யதா - எப்பொழுது- பூதப்ருதக்பாவம் - ப்ராணிகளுக்குள் வ்யத்யாஸத்தை, ஏகஸ்தம் - ஒருவஸ்துவிலிருப்பதாக, அநுபஶ்யதி - பார்க்கிறானோ, தத ஏவ ச - அந்த வஸ்துவினாலேயே, விஸ்தாரம் - பரவுதலையும் (பார்க்கிறானோ), ததா - அப்பொழுது, ப்ரஹ்ம - பரிசுத்தமான ஜீவாத்மாவை, ஸம்பத்யதே - அடைகிறான். 30

---

*தா] பிறகு நேரில் க்ரியைக்கு இருப்பிடமாக விருக்கை, அதில்லாமை, முதலிய ஸ்வபாவங்களினால் வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இவ்விடத்தில் கர்மங்களாவது மடக்குதல், நீட்டுதல், முதலியவைகள் ப்ரக்ருதியினால் செய்யப்படுகிற கர்மங்களின் ஸ்வரூபத்தை மாத்திரம் பார்ப்பது வித்வான், வித்வானல்லாதவன், இவ்விருவர்களுக்கும் பொது வித்வானுக்கோவெனில் ப்ரக்ருதியினாலே செய்யப்படுகிறதாகப் பார்ப்பது விசேஷம், என்று விதிக்கப்படுகிற பாகத்தை வ்யக்தமாய்ச் சொல்லுவதற்காக—'செய்யப்படுகின்றனவென்று' சொல்லப்பட்டது. கர்த்தாவல்லாமலிருக்கை ஆத்மாவென்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் சொள்ளப்பட்ட பரிசுத்த ஸ்வரூபத்தில் உண்டென்று சொல்லுகிறார்—'ஜ்ஞானம் ஒன்றையே' என்றாரம்பித்து. அப்படியாகில் ஶாஸ்த்ரங்களிற்குக் கீழ்ப்படிந்திருக்கையும் அவைகளின் பலத்தை யனுபவிக்கையும் எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'அப்படிப்பட்ட ஜீவாத்மாவிற்கு' என்றாரம்பித்து. இவையெல்லாம் சக்கரம்போல் சுழன்றுகொண்டிருக்கிற காரணங்களின் வரிசைகளைப் பொறுத்தவைகளாகையினால் ஒருவித தோஷமுமில்லை என்று தாத்பர்யம்.* 29

பா] தேவன் முதலிய எல்லா ப்ராணிகளும் ப்ரக்ருதி ஜீவன் ஆகிய இரண்டு வஸ்துக்களினுடைய சேர்க்கையாக விருக்க அவைகளுக்குள் தேவனுகயிருக்கை, மனுஷ்யனுகயிருக்கை, குள்ளமாகவிருக்கை, நீண்டிருக்கை, முதலிய வ்யத்யாஸங்கள் ஒரு வஸ்துவில் இருக்கிறதாகவும் அதாவது ப்ரக்ருதியிலிருக்கிறதாகவும் ஆத்மாவினிடத்தி லில்லாததாக

---

தா] பிறகு மாறுதல்களையடைகை, அவைகளை யடையாமலிருக்கை யாகிய வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தில். 'ஏகஸ்த' என்னும் பதத்தினுல் ஒன்றைத்தனித்துச் சொல்லுவதற்காக. 'ப்ருதக்' என்னும் பதம் இவ்விடத்தில் எள்ளும் எண்ணெயும் போல ஒன்றோடொன்று கலந்திருக்கிற சேதனம் அசேதனம் இவைகளின் கும்பல்களைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'தேவன் முதலிய' என்றாரம்பித்து. 'பூதபாவ' என்னும் பதம் இவ்விடத்தில் ஜாதியும் குணங்களுமாகிய வ்யத்யாஸங்களெல்லாவற்றையும் சொல்லுகிறது. அதெல்லாம் வேறு அவஸ்தையை அடைவது விகாரங்களில்லாத ஜீவனைவிட வ்யத்யாஸம். இதையே சொல்லுகிறார்—'தேவனுகயிருக்கை, மனுஷ்யனுகயிருக்கை' என்றாரம்பித்து. 'ஏகஸ்' என்னும் பதம் இவ்விடத்தில் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட இரண்டு வஸ்துக்களில் ஒன்றைத் தனித்துச் சொல்லுவதற்காக என்று சொல்லுகிறார்—'ஒரு வஸ்துவில் இருக்கிறதாவும்' என்று. அந்த ஒரு வஸ்து எது என்னில் சொல்லுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஜீவாத்மா 'ஏகஸ' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறதென்பதால் அப்பொழுது அந்த ஜீவாத்மாவிற்கே தேவன் முதலிய வ்யத்யாஸங்களிருப்பதாகப் பார்க்கவேண்டும், என்று சொல்லப்பட்டதாகும். 'யதா பூதப்ருதக்பாவம்' என்றிவை முதலிய ஆரம்பத்துடனும் 1 'ஶுநி சைவ ச்வபாகே ச பண்டிதா: ஸமதர்சிந:' என்றிவை முதலிய மற்ற ஸ்ம்ருதிகளில் சொல்லியிருப்பதோடு விரோதிக்கும் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'ஆத்மாவினிடத்தில் இல்லாததாகவும்' என்று. ஸத்தாக மாத்திரம் இருக்கிற ஒரு ப்ரம்மம் எல்லா வ்யத்யாஸங்களுக்கும் எல்லா மாறுதல்களுக்கும் ஆதாரமாகவிருக்கிறது என்பது இவ்விடத்தில் சொல்லப்படுகிறது, என்று மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்தது முன்னமேயே நிராகரிக்கப்பட்டது என்றுமபிப்ராயம். 2 'ஆத்மாவே புத்ரனென்று பேருடையவனுய் ஆகிறுய்' என்றர்த்தமுள்ள வாக்ய முதலியவைகளில் ஆத்மாவிற்கு புத்திரன் முதலிய மாறுதல்கள் இருப்பதாகத்தோன்றுகிறதே. அதுவும்,

---

1 பகவத்கீதை-5-18

2 கௌஷீதிகி உபநிஷத்.

வும் எப்பொழுது பார்க்கிறானோ, அந்த ப்ரக்ருதியினாலேயே மேன்மேலும் பிள்ளை, பேரன், முதலிய வ்யத்யாஸங்களின் பரவுதலையும் எப்பொழுது பார்க்கிறானோ, அப்பொழுதே ப்ரம்மத்தை யடைகிறான். அதாவது எங்கும் நிறைந்ததாகவும், ஜ்ஞானம் ஒன்றையே ஸ்வபாவமாக உடைய ஜீவாத்மாவை அடைகிறான் என்றர்த்தம். 30

**அநாதி³த்வாந்நிர்கு³ணத்வாத் பரமாத்மாயமவ்யய: |**
**ஶரீரஸ்தோ²பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ||** 31

[ப - ரை] கௌந்தேய-குந்தியின் பிள்ளையாகிய அர்ஜுந, அயம் - இந்த, பரமாத்மா - பரிசுத்தனான ஜீவாத்மா, ஶரீரஸ்தோ²பி- ஶரீரத்திலிருந்த

1'ஶரீரத்தின் ஒவ்வொரு அவயவத்தினின்றும்உண்டாகிறாய்' என்றிவை முதலியவைகளை யோசித்துப்பார்ப்பவனுக்கு ப்ராக்ருதியாகிய பாகத்தில் இருப்பதாகவே தோன்றும் என்று சொல்லப்படுகிறது 'தத ஏவ ச விஸ்தாரம்' என்பதினால். இதையே விவரிக்கிறார்—அந்த ப்ரக்ருதியினாலேயே' என்றாரம்பித்து ப்ரக்ருதியாகிய வஸ்து முதலில் தேவன் முதலிய விசித்ரங்களான மாறுதல்களை யடைவதிலும், அதின் மூலமாக ஸந்ததி என்றும் பேரையுடைய மாறுதல்களை யடைவதிலும், போக்தாவாகிய ஜீவாத்மா ஸுக துக்கங்களை யனுபவிப்பதற்காக அந்த ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பது மாத்திரம் வேண்டியதேயல்லாமல் ஶரீரம் முதலியவைகளில் இருக்கிற விகாரங்களுக்கிருப்பிடமாக இருத்தல்வேண்டியதில்லை என்று 'அந்த ப்ரக்ருதியினாலேயே' என்பதின் அபிப்ராயம். 'ப்³ரஹ்ம ஸம்பத்³யதே' என்கிற விடத்தில் பரமாத்மாவாகுகை விருத்தமாகையினாலும், ஜீவாத்மாவாயிருக்கை எப்பொழுது மிருப்பதினாலும் 2 'பரமம் ஸாம்யமுபைதி', 3 'மம ஸாத⁴ர்ம்யமாக³தா:' என்றிவை முதலியவைகளோடு ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறதானதினாலும், பரப்ரம்மத்தோடு ஸாம்யத்தை யடைவதே சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எங்கும் நிறைந்ததாகவும்' என்றாரம்பித்து. அன்றிக்கே தேஹம் ஆத்மா இவைகளின் வ்யத்யாஸத்தை அறிந்த மாத்திரத்தினால் நேரில் பரமாத்மாவை அடைவது ஸம்பவிக்காது என்று தாத்பர்யம். 'ப்³ரஹ்ம ஸம்பத்³யதே' என்பதற்கு ப்ரம்மமாகிறான் என்றர்த்தம். அதில் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறது—'ஜீவாத்மாவை அடைகிறான்' என்று. அன்றிக்கே 'ப்³ரஹ்ம' என்னும் பதம் இரண்டாம் வேற்றுமையுடையது. 'ஸம்பத்³யதே' என்பதற்கு அடைகிறான் என்றர்த்தமாகவுமாம். 30

1 மந்த்ரப்ரஶ்நம்.2-12-3. 2 முண்டகோபநிஷத் - 3-1-3.
3 பகவத்கீதை - 14-2.

போதிலும், *அநாதித்வாத்* - ஆதியில்லாதவனாகையினால், *அவ்யய:* - நாசமில்லாதவன், *நிர்குணத்வாத்* - ஸத்வம் முதலிய குணங்களில்லாமையினால், *நகரோதி* - கார்யங்களைச் செய்கிறதுமில்லை, *நலிப்யதே* - (தேஹத்தின் ஸ்வபாவங்களால்) சேரப்படுகிறதுமில்லை. 31

பா] தேஹத்தைவிட வேறுபட்ட ஸ்வபாவங்களைக்கொண்டு நிரூபிக்கப்பட்டவனாகிய இந்த ஜீவாத்மா ஶரீரத்திலிருந்தபோதிலும் ஒன்றினாலுமுண்டாக்கப்பட்டவனல்லவாகையினால் நாசமுமில்லாதவன். ஸத்வம் முதலிய குணங்களில்லாமையினால் ஒன்றையும் செய்கிறதுமில்லை.

---

தா] *ஆத்மாவிற்கு நித்யமாகவிருக்கை, மாறுதல்களையடையாதவனாயிருக்கை முதலியவைகளினால் கீழ்ச்சொல்லிய தேஹத்தைவிட வ்யத்யாஸத்தை அதின் காரணங்களுடன் உறுதிப்படுத்துகிறார்—இந்த ஶ்லோகத்தில். சில விஷயங்களைப்பற்றிப் பரமாத்மா என்பதைச் சொல்லுகிற இந்தப்பரமாத்மா என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—தேஹத்தைவிட வேறுபட்ட' என்றாரம்பித்து. ஜ்ஞானத்தின் சுருக்கமாகிய நாசமும், தேஹத்தை எடுத்தல் முதலிய கர்த்ருத்வமும் உண்டென்று ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களினாலேற்பட்டிருப்பதினால் நாசம் இல்லை என்பது முதலியது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஸ்வபாவங்களைக் கொண்டு நிரூபிக்கப்பட்டவனாகிய' என்று. 'அநாதித்வாத்' என்பதினால் நாசமில்லாமைக்குக் காரணமாகிய உத்பத்தியில்லாமை சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'ஒன்றினாலும் உண்டாககப்பட்டவனல்ல ஆகையினால்' என்று. ஒன்றினால் உண்டாக்கப்பட்ட வஸ்துவல்லவோ நாசமடையத்தக்கது என்று பார்க்கப்பட்டது என்று தாத்பர்யம். 'நிர்குணத்வாத்' என்று பொதுவாக ஜ்ஞானம் முதலிய குணங்களில்லையென்று சொல்லியிருக்கிறது என்பதைப் பரிகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'ஸத்வம் முதலிய' என்றாரம்பித்து. இப்படிக்காரணங்கள் இரண்டாகச் சொல்லியிருப்பதையும், அவைகளின் ஸாமர்த்யத்தையும் அனுஸரித்து அதற்குத்தகுந்தபடி, கார்யங்களோடு அந்வயம் சொல்லப்பட்டது. லேபம் உண்டென்று ஸந்தேஹமுண்டாவதும், அதில்லையென்று மறுப்பதும் ஸம்பவிக்கக்கூடிய விஷயங்களைப்பற்றியதே என்பது உசிதமாகையினால்*[1] *'தத்வ்யாப்த்ய ஸப்ததாது* ...

---

1 *தத்-அந்த ஶரீரம்- ஶரீரமானது, ஸப்ததாது - ஏழுவிதமான தாதுக்களையுடையது, த்ரிமலம்-மூன்றுவிதமான மலங்களையுடையது, த்வியோநி-இரண்டுவித யோநிகளையுடையது, சதுர்விதாஹாரமயம் - நான்குவிதமான ஆகாரங்களினால் உண்டானது.*

தேஹத்தின் ஸ்வபாவங்களால் பூசப்படுகிறதுமில்லை. 31

பா - அ] ஸத்வம் முதலிய குணங்களில்லாதவனாகையினால் ஒரு கார்யமும் செய்கிறதில்லை என்பதிருந்தபோதிலும் தேஹத்துடன் எப்பொழுதும் சேர்ந்து கொண்டிருக்கிற ஜீவன் தேஹத்தின் ஸ்வபாவத்தினால் பூசப்படுகிறதில்லை யென்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—

𑌯𑌥𑌾 𑌸𑌰𑍍𑌵𑌗𑌤𑌂 𑌸𑍌𑌕𑍍𑌷𑍍𑌮𑍍𑌯𑌾𑌦𑌾𑌕𑌾𑌶𑌂 𑌨𑍋𑌪𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ।
𑌸𑌰𑍍𑌵𑌤𑍍𑌰𑌾𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌤𑌥𑌾𑌤𑍍𑌮𑌾 𑌨𑍋𑌪𑌲𑌿𑌪𑍍𑌯𑌤𑍇 ॥ 32

---

[illegible]𑌵𑌿𑌷𑌯𑌾𑌹𑌾𑌰𑌾𑌯𑌂 𑌶𑌰𑍀𑌰𑌂’ என்று சொல்லப்பட்ட ஶரீரம், துணி, முதலியவைகளில் சேறு முதலியவைகளைப்போல தன்னுடைய ஸம்பந்தத்தினாலேயே லேபத்தையுண்டாக்கக்கூடிய ஸ்வபாவத்தையுடையதாகையினால் ‘𑌶𑌰𑍀𑌰𑌸𑍍𑌥𑍋𑌽𑌪𑌿’ என்பதனால் ஏற்பட்ட அர்த்தத்தைச்சொல்லுகிறார்—‘தேஹத்தின்ஸ்வபாவங்களால்’ என்று. 31

தா] ‘𑌨 𑌕𑌰𑍋𑌤𑌿’ என்று சொல்லப்பட்ட கர்த்தாவாகாமலிருக்கை முன்பும் மேலும் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஶரீரத்திலிருந்தபோதிலும் அதின் ஸ்வபாவங்களால் பூசப்படுகிறதில்லை என்கிறவிஷயத்தில் உப்புக்குழியில் போடப்பட்ட கட்டை முதலியவைகளைப்போலவே ஆகவேண்டியதென்கிற ஸந்தேஹம் அடுத்த ஶ்லோகத்தினால் பரிகரிக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்—‘ஸத்வம் முதலிய’ என்றாரம்பித்து. 1‘𑌸𑌂𑌸𑌰𑍍𑌗𑌜𑌾 𑌦𑍋𑌷𑌗𑍁𑌣𑌾 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿’, 2 ‘𑌶𑍁𑌷𑍍𑌕𑍇𑌣𑌾𑌰𑍍𑌦𑍍𑌰𑌂 𑌦𑌹𑍍𑌯𑌤𑍇 𑌮𑌿𑌤𑍍𑌰𑌭𑌾𑌵𑌾𑌤𑍍’ என்றல்லவோ ப்ரஸித்தமாக விருக்கிறது என்று தாத்பர்யம். 3 ‘𑌯𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌯𑌾𑌤𑌿𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌾𑌣𑌿 𑌵𑌸𑍍𑌤𑍍𑌰𑌾𑌣𑍍𑌯𑌾𑌭𑌰𑌣𑌾𑌨𑌿 𑌚 । 𑌅𑌶𑍁𑌚𑌿𑌤𑍍𑌵𑌂 𑌕𑍍𑌷𑌣𑌾𑌦𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌕𑌿𑌮𑌨𑍍𑌯𑌦𑌶𑍁𑌚𑌿𑌸𑍍𑌤𑌤𑌃 ॥’ என்று சொல்லியிருக்கிற ந்யாயத்தினால் தேஹத்துடன் க்ஷணப்பொழுது ஸம்பந்தப்பட்டபோதிலும் துணி முதலியவைகள் அபரிசுத்தங்களாகின்றன. அநாதியாக அத்து

---

1 தோஷகுணா: - தோஷங்களும் குணங்களும், ஸம்ஸர்கஜா: - சேர்க்கையினாலுண்டானவைகளாக, பவந்தி-ஆகின்றன.

2 சுஷ்கேண-உலர்ந்த விறகினால், ஆர்த்ரம்-ஈரவிறகும், மித்ரபாவாத்-சேர்ந்திருப்பதினால், தஹ்யதே-கொளுத்தப்படுகிறது.

3 யம்-எந்த ஶரீரத்தை, ப்ராப்ய அடைந்து, அதிபவித்ராணி, மிகவும் பரிசுத்தங்களான, வஸ்த்ராணி-துணிகளும், ஆபரணானிச-ஆபரணங்களும், க்ஷணாத்-க்ஷணகாலத்தில், அசுசித்வம் - அபரிசுத்தங்களா யிருக்கையை, யாந்தி-அடைகின்றனவோ, தத: - அந்த ஶரீரத்தைவிட, அசுசி: - அபரிசுத்தமானது, அந்யத்-வேறு, கிம்-எந்த வஸ்து.

ப - ரை] யதா - எப்படி, ஸர்வகதம் - எல்லா வஸ்துக்களுடன் சேர்ந்திருக்கிற, ஆகாஶம் - ஆகாசம், ஸௌக்ஷ்ம்யாத் – ஸூக்ஷ்மமாக விருக்கிறபடியினால், நோபலிப்யதே - (அந்த வஸ்துக்களின் ஸ்வபாவங்களினால்) பூசப்படுகிறதில்லையோ, ததா - அப்படியே, ஆத்மா - ஜீவாத்மா, ஸர்வத்ர - எல்லா, தேஹே - தேஹத்தில், அவஸ்தித꞉ - இருந்தபோதிலும், நோபலிப்யதே - (அவைகளின் ஸ்வபாவங்களால்) பூசப்படுகிறதில்லை. 32

பா] எப்படி ஆகாசம் எல்லா வஸ்துக்களோடும் சேர்ந்திருந்தபோதிலும் ஸூக்ஷ்மமாகையினால் எல்லா வஸ்துக்களின் ஸ்வபாவங்களால் பூசப்படுவதில்லையோ அப்படியே ஜீவாத்மாவும் மிகவும் ஸூக்ஷ்மமாகையினால் தேவன், மனுஷ்யன், முதலிய தேஹங்களிலிருந்த போதிலும்

---

டன் சேர்ந்திருக்கிற ஜீவாத்மாவைப்பற்றிக் கேட்கவேண்டியதில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எப்போழுதும் சேர்ந்து கொண்டிருக்கிற' என்று. சேர்ந்திருக்கை சேர்ந்திருக்கிற வஸ்துவினிடத்தில் மற்றொரு வஸ்துவின் ஸ்வபாவத்தை யுண்டுபண்ணுவதென்பது எல்லா இடத்திலும் ஸம்பவிக்கக்கூடியதல்ல என்று த்ருஷ்டாந்தத்தை நிரூபிப்பதற்காக 'யதாஸர்வகதம்' என்று அநுவாதம் செய்திருக்கிறது என்று தெரிவிப்பதற்காக 'இருந்தபோதிலும்' என்று சொல்லியிருக்கிறது. எல்லா வஸ்துக்களோடும் சேர்ந்திருப்பதை அநுவாதம் செய்திருப்பது எல்லாத் தேஹத்திலும் இருப்பதினாலுண்டான ஆக்ஷேபத்தைக் கிளப்புகிறது என்று தாத்பர்யம். 'எல்லா வஸ்துக்களோடும் சேர்ந்திருந்தபோதிலும்' என்பதற்கு 'ஸர்வகதம்' என்னும் பதத்தினால் ஒன்றுக்கொன்று விருத்தங்களான எல்லாவிருந்த ஸ்வபாவங்களால் பூசப்படவேண்டிவரும் என்கிற ஆக்ஷேபமும் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று தாத்பர்யம். எப்படி ஆகாசம் மற்ற பூதங்களைவிட ஸூக்ஷ்மமானதோ அப்படியே ஆகாசத்தைவிட அதிக ஸூக்ஷ்மமானது இந்த ஆத்மா, என்று தெரிவிப்பதற்காக 'மிகவும் ஸூக்ஷ்மமாகையினால்' என்று சொல்லப்பட்டது. 'அப்படியே' என்பதினால் பூசப்படாமலிருப்பதற்குக் காரணமும் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். சில வஸ்துக்கள் சில வஸ்துக்களோடு சேர்ந்தபொழுது அவைகளின் ஸ்வபாவங்களால் பூசப்படாமலிருந்தபோதிலும் அதைவிட மற்ற வஸ்துக்களோடு சேர்ந்தபொழுது அவைகளின் ஸ்வபாவங்களால் பூசப்பட்டிருப்பதாகக் காணப்படுகின்றன. எப்படியெனில் பஞ்சு முதலியவைகளில் மை முதலியவைகள் சேர்ந்திருந்த

அந்தந்தத் தேஹங்களின் ஸ்வபாவங்களினால் பூசப்படுகிறதில்லை. 32

யதா ப்ரகாஶயத்யேக꞉ க்ருத்ஸ்நம் லோகமிமம் ரவி꞉ |
க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்நம் ப்ரகாஶயதி பாரத || 33

ப - ரை] யதா - எப்படி, ஏக꞉ - ஒரு, ரவி - ஸூர்யன், இமம் - இந்த, க்ருத்ஸ்நம் - எல்லா, லோகம் - லோகத்தையும், ப்ரகாஶயதி - ப்ரகாசம் செய்கிறானோ, ததா - அப்படியே, பாரத - பரதவம்சத்தில் பிறந்த அர்ஜுந, க்ஷேத்ரீ - ஜீவாத்மா, க்ருத்ஸ்நம் - எல்லா, க்ஷேத்ரம் - ஶரீரத்தையும், ப்ரகாஶயதி - ப்ரகாசம் செய்கிறான். 33

பா] எப்படி ஒரு ஸூர்யன் தன்னுடைய காந்தியினால் இந்த எல்லா லோகத்தையும் ப்ரகாசம் செய்கிறானோ அப்படியே ஶரீரத்தையும் ஜீவாத்மா

---

*போதிலும் கருப்பு வர்ணம் முதலியவைகள் உண்டாவதில்லை. செம்பஞ்சுக்குழம்பில் நனைத்த மாத்திரத்தில் சிவப்பு நிறம் காணப்படுகிறது. அப்படியே இவ்விடத்திலும் ஸம்பவிக்கலாமே என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காக உபமானம் உபமேயம் இரண்டிலும் 'எல்லா' என்னும் பதம் சொல்லியிருக்கிறது.* 32

*தா] பிறகு இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் 1 'ஏதத்வேதி தம் ப்ராஹு꞉ க்ஷேத்ரஜ்ஞம்' என்று அறியத்தகுந்ததாயிருக்கை, அறிகிறவனாயிருக்கை, இவைகளால் நிரூபிக்கப்பட்டதாயும் அவயவங்களின் சேர்க்கையாயிருக்கை, அவைகளின் சேர்க்கையல்லாதிருக்கை, இவைகளால் ஏற்பட்ட அநேகமாயிருக்கை, ஒன்றாயிருக்கை, இவைகளால் தானே ஏற்பட்டதுமாகிய ஶரீரம் ஆத்மா இவைகளின் பேதத்தை உதாஹரணத்துடன் உறுதிப்படுத்துகிறார்—இந்த ஶ்லோகத்தினால். ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் தர்மபூதஜ்ஞானமும் ஒரே ஜாதியான வஸ்துக்களாயிருந்த போதிலும் இவைகளின் வ்யத்யாஸத்தைக் காட்டுவதற்காக காந்தியை உதாஹரணமாகச் சொல்லியிருக்கிறது. 'க்ருத்ஸ்நம் க்ஷேத்ரம்' என்பதில் எல்லாச் ஶரீரங்களும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது என்று தோன்றுகிறது. அப்படியே மற்றவர்களும் வ்யாக்யானஞ் செய்தார்கள். ஸூர்யனை த்ருஷ்டாந்தமாகச் சொல்லியிருப்பதும் ஸூர்யனைப்போல ஆத்மா ஒருவன், அவன் ஒன்றோடும் ஸம்பந்தப்படாதவன் என்று தெரிவிப்பதற்காகவும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். அது யுக்தமல்ல, ஒவ்வொரு ஶரீரங்கள்தோறும் ஆத்மாக்கள் தனித்தனியாகையினால் ஒவ்வொரு ஆத்மாவும் எல்லாச் ஶரீரங்களையும் ப்ரகாசம் செய்கிறானென்பதில்லாமையினாலும். ஆத்மாக்களின்*

---

1 *பகவத்கீதை* 13-1.

இது என்னுடைய ஶரீரம், இப்படிப்பட்டது, என்று வெளியிலும், உள்ளிலும், உள்ளங்கால் முதல் தலைவரையிலும் தன்னுடைய ஜ்ஞானத்தினால் ப்ரகாசம் செய்கிறான். ஆகையினால் தன்னால் ப்ரகாசிக்கப்படுகிற லோகத்தைவிட ப்ரகாசம்செய்கிற ஸூர்யனைப்போல அறிகிறவனாகையினாலே தன்னால் அறியப்படுகிற இந்தச் ஶரீரத்தைப் பார்க்கிலும் மிகவும் வேறுபட்டவன் இந்த கீழ்ச்சொல்லிய குணங்களோடு கூடிய ஜீவாத்மா என்றர்த்தம். 33

𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑍋𑌰𑍇𑌵𑌮𑌨𑍍𑌤𑌰𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌚𑌕𑍍𑌷𑍁𑌷𑌾 ।
𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑍋𑌕𑍍𑌷𑌂 𑌚 𑌯𑍇 𑌵𑌿𑌦𑍁𑌰𑍍𑌯𑌾𑌨𑍍𑌤𑌿 𑌤𑍇 𑌪𑌰𑌮𑍍 ॥ 34

ஸ்ரீகண்ணபிரான் அருளிச்செய்த ஸ்ரீமத் பகவத்கீதையில்
பதிமூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃.

ப - ரை] 𑌏𑌵𑌂 - இப்படி, 𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌕𑍍𑌷𑍇𑌤𑍍𑌰𑌜𑍍𑌞𑌯𑍋𑌃 - ஶரீரம் ஜீவாத்மா இவைகளின், 𑌅𑌨𑍍𑌤𑌰𑌂—வ்யத்யாஸத்தையும், 𑌭𑍂𑌤𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌮𑍋

---

*ஜாதியைச்சொல்லுவதாயிருந்தால் ஸூர்யனை த்ருஷ்டாந்தமாகச் சொல்லியிருப்பது பொருந்தாது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வெளியிலும், உள்ளிலும்' என்றாரம்பித்து. வெளியில் தோல் முதலியவைகளையும் உள்ளில் மாம்ஸம் முதலியவைகளையும் என்பதர்த்தம். ஒவ்வொரு ஶரீரத்திற்கும் அவயவங்கள் வெவ்வேறாகையினால் அவைகளும் அநேகவிதங்களாகையினாலே ஜீவாத்மாவைவிட அவைகளுக்கு வ்யத்யாஸத்தைக் காட்டுவதற்காகவும் அவயவங்களில் ஏதாவது ஒன்று அறிகிறவன் என்னும் ஸந்தேஹத்தை விலக்குவதற்காகவும் '𑌕𑍃𑌤𑍍𑌸𑍍𑌨𑌂 (எல்லா)' என்னும் பதத்தின் தாத்பர்யம். அநேகங்களான அவயவங்களின் சேர்க்கையாகிய ஶரீரத்தைவிட அவைகளெல்லாவற்றையும் அறிகிறவனாகத் தோன்றுகிற ஒருவனே ஆத்மா வேறுபட்டவன் என்று நாம் தெரிந்துகொள்வதினாலேயே ஏற்பட்டது, என்று சொல்லப்பட்டதாகிறது. ப்ரகாசம் செய்கிறவனாயிருக்கையை மாத்திரம் சொல்லவந்ததல்ல இந்த உதாஹரணம். பின்னை எப்படியெனில் அதினால் உண்டான வ்யத்யாஸத்தையும் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'ஆகையினால் தன்னால் ப்ரகாசிக்கப்படுகிற' என்றாரம்பித்து. கர்மமாகவும் கர்த்தாவாகவும் (எழுவாயாகவும் செயப்படு பொருளாகவும் இருப்பது முதலியவைகளால் இவ்விடத்தில் பேதம் வ்யக்தமாக இருக்கிறது என்று தாத்பர்யம். 33*

க்ஷம்ஷ - பஞ்சபூதங்களாக மாறியிருக்கிற, ப்ரக்ருதி - ப்ரக்ருதியிலிருந்து விடுபேவதற்குக் காரணமாகிய அமாநித்வம் முதலிய குணங்களையும், ஜ்ஞாநசக்ஷுஷா - ஜ்ஞானமாகிற கண்ணினுல், யே – எவர்கள், விது: - அறிந்தார்களோ, தே - அவர்கள், பரம் - பரிசுத்தமான ஆத்மாவை, யாந்தி - அடைகிறுர்கள். 34

பா] கீழ்ச்சொல்லிய விதமாக ஶரீரம் ஜீவாத்மா இவைகளின் வ்யத்யாஸத்தை விவேக ஜ்ஞானம் என்று பேருடைய கண்ணினுல் எவர்கள் தெரிந்துகொள்ளுகிறுர்களோ; பஞ்சபூதங்களாகிய ப்ரக்ருதி விடுவதற்குக் காரணமாகிய அமாநித்வம் முதலிய குணங்களை எவர்கள் தெரிந்துகோள்

---

தா] பிறகு இந்த அத்யாயத்திற்கு முக்யமான அர்த்தமாகிய விடத்தகுந்ததினுடையவும், அங்கீகரிக்கத் தகுந்ததினுடையவும், அவைகளின் உபாயங்களினுடையவும் ஜ்ஞானத்திற்குப் பலம் சொல்லப்படுகிறது— இந்தஶ்லோகத்தினுல். 'ஏவம்' என்னும்பதத்தினுல் அநுவதிக்கப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறுர்—'கீழ்ச்சொல்லியவிதமாக' என்று. அறிவில்லாமலிருக்கை, அறிகிறவனுயிருக்கை, தரிக்கத்தகுந்தாயிருக்கை, தரிக்கிறவனுயிருக்கை, சேஷமாயிருக்கை, சேஷியாகவிருக்கை, முதலிய விதங்களால் என்றர்த்தம். 1 'அந்தரமவகாஶாவதிபரிதாநாந்தர்தி பேதார்த்தயோ:' என்று சொல்லியபடி அநேக அர்த்தங்களைச் சொல்லுகிற 'அந்தர' என்னும் பதத்திற்கு இவ்விடத்தில் சொல்லப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறுர்—'வ்யத்யாஸத்தை' என்று. 'ஜ்ஞாநசக்ஷுஷா' என்கிறவிடத்தில் திவ்யஜ்ஞானம் முதலியவற்றின் ப்ரஸ்தாவத்தை விலக்குவதற்காக 'விவேக ஜ்ஞானம்' என்று சொல்லியிருக்கிறது. கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட உபதேசத்தினுல் அடையப்பட்ட ஜ்ஞானம் இங்கே சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். ஜ்ஞானத்தைக் கண்ணுக நிருபித்திருப்பது ஸாக்ஷாத்காரமாக விருக்கிற ஜ்ஞானத்திற்குக் காரணமானதினுல் 'விவிச்யதே அநேந' (இத்தால் பிரித்துக் காட்டப்படுகிறது)' என்று 'விவேக' என்பது இவ்விடத்தில் வ்யத்யாஸத்தைத் தெரிவிக்கக்கூடிய ஸ்வபாவம். பஞ்சபூதங்களாகிய ப்ரக்ருதியிலிருந்து விடுபடுதல் பூதப்ரக்ருதி மோக்ஷம். அன்றிக்கே பூதங்களாகிய ஜீவாத்மாக்களுக்கு ப்ரக்ருதியிலிருந்து மோக்ஷம் என்றுகவுமாம். பூதங்களுக்கு (ப்ராணிகளுக்கு) ப்ரக்ருதியாவது அவித்யை. அவ்யக்தம் என்று பேருடையது. அதற்கு மோக்ஷமாவது நாசத்தை அடைவிக்கிறது என்று சங்கராசார்யரால் சொல்லப்பட்ட அர்த்தம் 2 'ஆதியுமில்

---

1 அமரம்-3 வது காண்டம்.

2 மந்திரிகோபநிஷத்.

ளுகிறார்களோ; அவர்கள் ஸம்ஸாரபந்தத்திலிருந்து நீங்கின ஆத்மாவை யடைகிறார்கள். ‘மோக்ஷ்யதே அநேந (இதினால் ஸம்ஸாரத்திலிருந்து விடுபடுகிறான்)’ என்று மோக்ஷம் என்பதற்கு அமாநித்வம் முதலிய கீழ்ச் சொல்லிய மோக்ஷத்திற்கு ஸாதனமான கூணம் என்றர்த்தம். அதாவது ஶரீரம் ஆத்மா இவைகளின் வ்யத்யாஸத்தைப்பற்றிய கீழ்ச்சொல்லிய ஜ்ஞானத்தினால் அவைகளின் வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொண்டு பஞ்ச பூதங்களாக மாறியிருக்கிற ப்ரக்ருதியிலிருந்து விடுபடுவதற்கு உபாயமாகிய அமாநித்வம் முதலியவைகளையும் அறிந்துகொண்டு எவர்கள் அனுஷ்-

லாமல், நாசமுமில்லாமலிருக்கிறது ப்ரக்ருதி’ என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளுக்கு விரோதமாயிருப்பதினால் நிராகரிக்கத் தக்கது. ஜீவாத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்தின் பலத்தைச் சொல்லுகிறபடியினால் ‘பரம்’ என்னும் பதம் இவ்விடத்தில் பரிசுத்தனான ஜீவனைச் சொல்லுகிறது. அதற்கு மேன்மையாவது ஸம்ஸாரியாக விருந்த தன்னுடையதாகிய முன்தசையைப் பார்க்கிலும் என்கிற அபி ப்ராயத்தினால் சொல்லுகிறார்—‘ஸம்ஸாரபந்தத்திலிருந்து நீங்கின’ என்று. இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் ஶரீரம் ஜீவாத்மா இவர்கள் முதலில் நிரூபிக்கப்பட்டார்கள். பரம்பரையாக பரிசுத்தமான ஆத்மாவை அடைவதற்குபாயமாக அமாநித்வம் முதலிய குணங்களின் கூட்டமும் நிரூபிக்கப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் முடிவிலும் ஶரீரம் ஜீவாத்மா இவர்களோடு சேர்த்துச் சொல்லப்படுகிற பூத ப்ரக்ருதி மோக்ஷம் என்பதும் அந்தக் குணங்களின் கூட்டங்களாகவே இருக்க வேண்டியதவஶ்யம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— ‘மோக்ஷ்யதே அநேந’ என்றாரம்பித்து. இரட்டித்தல் மேலாயிருக்கிற ‘ஸந்’ என்னும் விகுதியை முடிவிலுடையபதத்திலாவது ‘மோக்ஷ’ என்னும் பதத்தை பகுதியாக வைத்துக்கொண்டு ‘ணிச்’ என்னும் விகுதியை முடிவிலுடைய ‘மோக்ஷயதி’ என்னும் பதத்தின் மேலாவது, ‘மோக்ஷணே’ என்கிற மற்றொரு தாதுவிலாவது, ‘மோக்ஷ்யதே’ என்று ‘யக்’ என்னும் விகுதியை ப்ரயோகித்திருக்கிறது. அந்தப் பக்ஷத்தில் ‘மோக்ஷ’ என்னும் பதம் 1 ‘அகர்தரி ச காரகே ஸம்ஜ்ஞாயாம்’ என்கிற ஸூத்ரத்தில் சொல்லியபடி காரணம் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற ‘கஞ்’ என்னும் விகுதியை முடிவிலுடையது. அறியவேண்டியதாக கீழ்ச்சொல்லியவைகளில் ஏற்பட்ட அறியவேண்டியபாகத்தை விவரித்துக்கொண்டும். வாக்யத்தினர்த்தத்தைத் தெரிந்துகொள்ளுவது மாத்

1 அஷ்டாத்யாயீ-3-3-19.

டிக்கிறார்களோ அவர்கள் ஸம்ஸார பந்தத்தை விட்டவர்களாய் தன்னுடைய ரூபத்துடனிருக்கிற எங்கும் நிறைந்த ஜ்ஞாநத்தை ஸ்வபாவமாக உடைய ஜீவாத்மாவை அடைகிறார்கள் என்றர்த்தம். 34

*ஸ்ரீ பகவத் ராமாநுஜன் என்னும் உடையவர் அருளிச் செய்த*

ஸ்ரீமத் கீதா பாஷ்யத்தில்

பதிமூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

*ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய நம:*

*எம்பெருமானார் திருவடிகளே சரணம்.*



---

*திரம் நேராக மோக்ஷத்திற்குக் காரணமாகாதாகையினால் அது அநுஷ்டானத்திற்கங்கம் என்று தெரிவித்துக்கொண்டும், பூதப்ரக்ருதி மோக்ஷம் என்னும் பதத்தினால் அநிஷ்ட நிவ்ருத்தியைச் சொல்லியிருக்கிறது 'யாந்தி' என்பதினால் இஷ்டப் ப்ராப்தியைச் சொல்லியிருக்கிறது என்பதைக் காட்டிக்கொண்டும், சேர்ந்த மொத்தமான வாக்யத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது ஶரீரம்' என்றாரம்பித்து.* 34

*ஸர்வ தந்த்ர ஸ்வதந்த்ரரான*

*ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகனருளிச் செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்*

பதிமூன்றாவது அத்யாயம் முற்றிற்று.

*ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:*



## ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

𑌦𑍇𑌹𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑍁𑌰𑌾𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍋𑌧𑌨𑌂 ।
𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌵𑍇𑌕𑌶𑍍𑌚 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶 𑌉𑌦𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 ॥ 17

பத-உரை] 𑌦𑍇𑌹𑌸𑍍𑌵𑌰𑍂𑌪𑌂-தேஹத்தின் ஸ்வரூபமும், 𑌆𑌤𑍍𑌮𑌾𑌪𑍍𑌤𑌿𑌹𑍇𑌤𑌵𑌃- ஆத்மாவை அடைவதற்குக் காரணங்களும், 𑌆𑌤𑍍𑌮𑌵𑌿𑌶𑍋𑌧𑌨𑌂 - ஆத்மாவை நிரூபிப்பதும், 𑌬𑌨𑍍𑌧𑌹𑍇𑌤𑍁𑌃 - ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமும், 𑌵𑌿𑌵𑍇𑌕𑌃 - வ்யத்யாஸத்தைப் பற்றிய ஜ்ஞானமும், 𑌤𑍍𑌰𑌯𑍋𑌦𑌶𑍇 - பதிமூன்றாவது அத்யாயத்தில், 𑌉𑌦𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 – சொல்லப்படுகிறது 17

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச் செய்த

கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

இவ்விடத்தில் பாஷ்யத்தில் அதில் இப்பொழுது பதிமூன்றாவது அத்யாயத்தில் தேஹம் ஆத்மா இவைகளின் ஸ்வரூபமும், தேஹத்தின் உண்மையை நிரூபிப்பதும், தேஹத்தைவிட்டு நீங்கிய ஜீவாத்மாவை அடைவதற்கு உபாயமும், தேஹத்தைவிட வேறுபட்ட ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை நிரூபிப்பதும், அப்படிப்பட்ட ஆத்மாவிற்கு அசேதனமாகிய ப்ரக்ருதியுடன் ஸம்பந்தமுண்டானதற்குக் காரணமும், அதைவிட வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளவேண்டிய விதமும் சொல்லப்படுகிறது என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் தேஹத்தின் ஸ்வரூபம் என்பதினாலேயே தேஹம் ஆத்மா இவைகளின் ஸ்வரூபமும் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. தேஹத்தின் உண்மையை நிரூபிப்பதும் என்கிற விடத்திலும் அப்படியே என்று நிரூபிக்கப்பட்டது. ஆத்மாவை யடைவதற்குக் காரணம் 1 '𑌅𑌮𑌾𑌨𑌿𑌤𑍍𑌵𑌂' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. ஆத்மாவை நிரூபிப்பது 2 '𑌜𑍍𑌞𑍇𑌯𑌂 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑌕𑍍𑌷𑍍𑌯𑌾𑌮𑌿' என்றாரம்பித்துச் செய்யப்பட்டது. ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமும் 3 '𑌕𑌾𑌰𑌣𑌂 𑌗𑍁𑌣𑌸𑌙𑍍𑌗𑍋𑌽𑌸𑍍𑌯 𑌸𑌦𑌸𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌜𑌨𑍍𑌮𑌸𑍁' என்று சொல்லப்பட்டது. 4 '𑌧𑍍𑌯𑌾𑌨𑍇𑌨𑌾𑌤𑍍𑌮𑌨𑌿 𑌪𑌶𑍍𑌯𑌨𑍍𑌤𑌿' என்றாரம்பித்து வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளவேண்டிய விதமும் அவரவர்கள் அதிகாரத்திற்குத் தக்கபடி காட்டப்பட்டது.



1 பகவத்கீதை - 13-7. 2 பகவத்கீதை-13-12.
3 பகவத்கீதை-13-21. 4 பகவத்கீதை-13-24.

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

## ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டு.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

ஊனின்படியு முயிரின் பிரிவுமுயிர் பெறுவார்
ஞானம் பெறுவகையுஞ் ஞானமீன்ற வுயிர்ப்பயனும்
ஊனின்ற தற்கடியுமுயிர் வேறிடு முள்விரதும்
தேனின்ற பாதன் தெளிவித்தனன் சிலைப்பார்த்தனுக்கே. 14

பா - ரை] தேன் நின்ற - தேன் எப்பொழுதும் ஸ்த்திரமாகஇருக்கிற, பாதன் - திருவடிகளையுடைய ஸ்ரீ கிருஷ்ணன், சிலைப்பார்த்தனுக்கு - சிலையையுடைய பார்த்தனுக்கு, அதாவது வில்லைத்தரித்தவனாகிய அர்ஜுநனுக்கு, ஊனின் - ஶரீரத்தின், படியும் - ப்ரகாரத்தையும், உயிரின் - ஜீவாத்மாவின், பிரிவும் - வ்யத்யாஸத்தையும், உயிர் பெறுவார் - ஜீவாத்மாவை யடைகிறவர்கள், ஞானம் பெறுவகையும் - ஜ்ஞானத்தையடையும் வகையும், அதாவது எந்த அமானித்வம் முதலிய குணங்களினால் ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்தை யடைகிறார்களோ அப்படிப்பட்ட குணங்களையும் என்றர்த்தம், ஞானம் - ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானம், ஈன்ற - உண்டாக்கின, உயிர்ப்பயனும் — ஜீவாத்மாவாகிற ப்ரயோஜனமும், அதாவது அந்த ஜ்ஞானங்களால் அடையக்கூடிய பலமாகிய பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபமும் என்றர்த்தம், ஊன் - ஶரீரம், நின்றதற்கு- இவனோடு சேர்ந்திருப்பதற்கு, அன்றிக்கே ஶரீரத்தில் இவன் உள்ளே ப்ரவேசித்திருப்பதற்கு என்றாகவுமாம், அடியும் - காரணத்தையும், உயிர்- ஜீவாத்மாவை, வேறிடும் - வேறாகத்தெரிந்து கொள்ளும், உள்விரதும்- அந்தரங்கங்களான உபாயங்களும், தெளிவித்தனன் - தெளியும்படி சொன்னான்.

'தேனின்ற' என்பதினால் அல்லாத புஷ்பங்களைக் காட்டிலும் திருவடிகளாகிற தாமரஸ புஷ்பங்களுக்கு மேன்மை சொல்லப்பட்டது. அல்லாத புஷ்பங்கள் ஒரே காலத்தில் சில தேன் துளிகளை உண்டாக்கு மதுபோக்கி அதிலேயே தேன் நிற்பதுமில்லை. பகவானினுடைய திருவடிகளிலேயோவென்றால் தேன் எப்பொழுதும் நிலைத்திருப்பதென்பது விசேஷம். இங்கு திருவடிகளின் போக்யதையையே தேனாக நிரூபித்ததாகவுமாம். இத்தால் [1] 'தவாம்ருதஸ்யந்திநி பாதபங்கஜே நிவேஶிதாத்மா கத²மந்யதி³ச்ச²தி| ஸ்தி²தே(அ)ரவிந்தே³ மகரந்த³நிர்ப⁴ரே மது⁴வ்ரதோ நேக்ஷுரகம் ஹி வீக்ஷதே'

1 ஸ்தோத்ர ரத்நம்-27.

ரேக்ஷாகரம் ஹி வீக்ஷதே॥' என்கிறபடியே திருவடிகளின் போக்யதை நெஞ்சில் பட்டவாறே 1 'மாற்பால் மனஞ் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு' என்கிறபடியே மற்ற விஷயங்கள் தானே தூரத்தில் விலகிப்போம் என்று தாத்பர்யம். அன்றிக்கே 2 'வாத்யாஶதை: விஷயராகமயை: விதூதைர்வ்யாகூர்ணமாந மநஸம் விநிவேஶ்ய நாத। நித்யாவ தப்தவிதாம் நிஜகர்ம தர்மே நிர்வாபய ஸ்வபதபங்கஜ ஸம்ப்லவே மாம்॥' என்று ப்ரார்த்தித்தபடியே சப்தாதி விஷயங்களாகிற பெருங்காற்றிலடிபட்டு தன்னுடைய கர்மங்களாகிற வெய்யிலினால் தாபங்களையடைந்தவனுக்கு அந்த ஸகல தாபங்களும் நீங்கும்படி யிருக்கிறது திருவடிகளின் போக்யதை என்றுமாகவுமாம். 3 அன்றிக்கே 'ப்ரணதஸுரகிரீடப்ராந்தமந்தாரமாலாவிகளிதமகரந்தஸ்நிக்தபாதாரவிந்த:' என்கிறபடியே 4 'வாழ்த்தியவாயராய் வானோர் மணிமகுடம் தாழ்த்த' அதில் சூட்டப்பட்ட புஷ்பங்களிலிருந்து பெருகிய தேன் ப்ரவாஹத்தினால் நனைக்கப்பட்ட திருவடிகளையுடையவன் என்றாகவுமாம். இதை ப்ரபந்ந ஜன ஸந்தான கூடஸ்தரும் 5 'உன் தேனே மலரும் திருப்பாதம்' என்றாரே. 'பகவானுடைய உத்தமமான திருவடிகளில் தேனின் பெருக்கு உண்டாகிறது' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யமுமிருக்கிறது. 'வில்லைப்பார்த்தனுக்கு' என்பதினால் முன்பு வில்லாளிகளுக்குள் மேன்மைபெற்றவனாயிருந்து 6 'விஸ்ருஜ்ய ஸஶரம் சாபம்' என்கிறபடியே வில்லைப்போகட்டு நிற்கிறானாகையினாலே பரிஹாஸமாகச் சொல்லுகிறதாகவுமாம். அன்றிக்கே 7 'பாண்டவாநாம் தநஞ்ஜய:' என்கிற ஏற்றத்தைச் சொல்லுகிறதாகவுமாம். 'ஊனின்படியும் உயிரின் பிரிவும்' என்பதினால் ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் தேஹ ஸ்வரூபம் என்பது ஜீவாத்ம ஸ்வரூபத்தையும் குறிக்கிறது என்று தாமருளிச்செய்தபடியே ஸங்க்ரஹிக்கப்பட்டது. மேலும் 'படியும்பிரிவும்' என்பதினால் அறியத்தக்கதாயிருக்கை, அறிகிறவனாயிருக்கையாகிய வ்யத்யாஸங்களைச் சொல்லி 8 'க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞாநம்' என்று சொல்லியிருப்பதினால் ஒரு விதமான வ்யத்யாஸம் கீழே சொல்லப்பட்டதென்றேற்பட்டது. 'ஞானம் பெறுவகையும்' என்பதினால் 9 'தத்வஜ்ஞா

---

1 மூன்றாந்திருவந்தாதி-14.
2 தேவநாயக பஞ்சாசத்-19.
3 தேவநாயக பஞ்சாசத்-1.
4 மூன்றாந்திருவந்தாதி-96.
5 திருவாய்மொழி-1-5-5.
6 பகவத்கீதை-1-47.
7 பகவத்கீதை-11-37.
8 பகவத்கீதை-13-2.
9 பகவத்கீதை-13-11.

நதிதிஷெஷ்ராக்ஷம்' என்கிற விடத்தில் அமாநித்வா் முதலிய குணங்களை, ஜ்ஞானம் என்று சொல்லியிருப்பது அவைகள் ஆத்ம ஜ்ஞானத்திற்குக் காரணமாகையினால் என்று வ்யக்தமாக அருளிச் செய்யப்பட்டது. 'ஞானமீன்ற வுயிர்ப்பயனும்' என்பதினால் மூலத்தில் 'ஜ்ஞேயம்' என்று சொல்லியிருப்பது முதல் ச்லோகத்தில் சொல்லியபடி இந்த ஆத்மாவினால் அறியப்படுகிற சரீரமல்ல, அமாநித்வம் முதலிய குணங்களால் அடையக்கூடிய பரிசுத்தமான ஆத்ம ஸ்வரூபம் என்பதும், 'ஜ்ஞேயம்' என்றாரம்பித்து பரப்ரம்மம் நிரூபிக்கப்படுகிறது என்று சொல்லுகிறவர்களை நிராகரிப்பதற்காக உபாயத்தை நிரூபித்தபிறகு அதனால் அடையக்கூடிய ப்ரயோஜனத்தை நிரூபிக்கிறது என்கிற ஸங்கதியும் காட்டப்பட்டது. அப்படிச்சொல்லுகிற பக்ஷத்தில் இவ்விதமாக ஸங்கதியில்லை என்று தாத்பர்யம். 'ஊனின்றதற்கடியும்' என்பதினால் அநாதியாக இந்த சரீர ஸம்பந்தம் தொடர்ந்து கொண்டிருப்பதற்குக் காரணமும் என்று அர்த்தமாகையினால் 1 'காரணம் குணஸங்கோஸ்ய' என்னும் ச்லோகத்தின் பாஷ்யத்தில் அருளிச்செய்தபடி அமாநித்வம் முதலிய குணங்கள் உண்டாகும் வரையில் இந்த சரீர ஸம்பந்தம் தொடர்ந்து வருகிறது என்று தாத்பர்யம். 'உயிர் வேறிடுமுள்விரகும்' என்பதினால் முன்பு சுருக்கமாக ஆத்மாவின் வ்யத்யாஸம் சொல்லப்பட்டிருந்தபோதிலும் மற்றும் சில வ்யத்யாஸங்கள் விபரமாக மேலே சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம்.

*சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*



1 பகவத்கீதை 13-21.

# ஶ்ரீமத் பகவத்கீதை.



## பதிநான்காவது அத்யாயம்.



ஶ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.

ஶ்ரீ பகவதே பாஷ்யகாராய நம:.

ஶ்ரீ பகவதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

பா - அ] பதிமூன்றுவது அத்யாயத்தில் ஒன்றோடொன்று சேர்ந்துகொண்டிருக்கிற ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளினுடைய ஸ்வரூபத்தின் உண்மையைத் தெரிந்துகொண்டு பகவானிடத்தில் பக்தியினுல் ஒத்தாசை செய்யப்பட்ட அமாநித்வம் முதலிய குணங்களினுல் ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுகிருன் என்று சொல்லப்பட்டது. அதில் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் முன்பு முன்பிருந்த ஸத்வம் முதலிய குணங்களாலுண்டாகிய ஸுகம் முதலியவைகளில் பற்றுதல் என்றும் * 'காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு' என்பதினுல் சொல்லப்பட்டது. பிறகு இப்பொழுது அந்தக் குணங்கள் ஸம்ஸார பந்தத்திற்குக்காரணமாகும் விதமும், அந்தக் குணங்களை நிவ்ருத்திக்கும் விதமும் சொல்லப்படுகிறது—

ஶ்ரீ பகவாநுவாச ||

ப - ரை] ஶ்ரீபகவாந் - ஶ்ரீபகவானுகிய கிருஷ்ணன், உவாச - சொன்ஞர்.

**பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநாநாம் ஜ்ஞாநமுத்தமம் |**
**யஜ்ஜ்ஞாத்வா முநய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: || 1**

ப - ரை] பரம் - (முன்பு சொல்லியதைவிட) வேருகிய, ஜ்ஞாநாநாம் — ஜ்ஞானங்களுக்குள், உத்தமம் - உயர்ந்ததாகிய, ஜ்ஞாநம் - ஜ்ஞானத்தை, பூய: - மறுபடியும், ப்ரவக்ஷ்யாமி - சோல்லப்போகிறேன், யத் - எந்த ஜ்ஞானத்தை, ஜ்ஞாத்வா - தெரிந்துகொண்டு, ஸர்வே - எல்லா, முநய: - ரிஷிகளும், இத: - இவ்விடத்திலிருந்து, பராம் - மேலான, ஸித்திம் - ஸித்தியை, கதா: — அடைந்தார்களோ. 1

* பகவத்கீதை-13-21,

பா] முன்பு சொல்லியதைவிட வேறானதும், ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவை களுக்குள்ளடங்கியதுமாகிய ஸத்வம் முதலிய குணங்களைப்பற்றிய ஜ்ஞா

தா] முன் அத்யாயத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்தை நிரூபிக் கிறதாகிய இந்த அத்யாயத்திற்கு முன் அத்யாயத்தோடு ஸங்கதியைக் காட்டிக்கொண்டும், 1 'குணஸங்கவிதாநேஷாம் கதுர்த்வம் தந்நிவ ர்த்தநம்|கதித்ரயஸ்வமூலத்வம் சதுர்தச உதீர்யதே' என்கிற ஸங்க்ர ஹ ஸ்லோகத்தையும் வ்யாக்யானஞ் செய்கிறார்—'பதிமூன்றாவது அத்யா யத்தில்' என்றாரம்பித்து. 2 'இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ரமித்யபி தீயதே' என்றாரம்பித்து 3 'இதி க்ஷேத்ரம் ததா ஜ்ஞாநம் ஜ்ஞேயம் சோக்தம் ஸமாஸத:| மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே||' என்கிற வரையிலுள்ள ஸ்லோகங்களின் அபிப்ராயத்தை மனதில் வை த்துக்கொண்டு 'ஒன்றோடொன்று சேர்ந்து கொண்டிருக்கிற' என்றாரம் பித்து 'ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுகிறான் என்று சொல்லப்பட்டது' என்கிற வரையிலும் சொல்லப்பட்டது. 'அந்தக்குணங்கள் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகும் விதமும்' என்பதினால் ஸங்க்ரஹ ஸ்லோ கத்தில் 'குணஸங்கவித' என்பது வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. 'அந்தக்குணங்களை நிவ்ருத்திக்கும் விதமும்' என்பதினால் 'தந்நிவர்த்தநம்' என்பது வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. ஸங்க்ரஹ ஸ்லோகத்தில் சொ ல்லப்பட்ட குணங்களே கர்த்தா என்பதையும், மூன்றுகதிகளும் தன் னாலேயே கொடுக்கப்படுகிறது என்பதையும், பாஷ்யத்தில் சொல்லாம லொழிந்தது அவைகள் வேறு கார்யத்திற்காக அநுவாதம் செய்யப் பட்டதாகையினாலும், ப்ரஸ்தாவத்தின் மேல் ப்ரஸ்தாவமாய் வந்த தாகையினாலும் என்றறியவேண்டியது. 'பரம்' என்னும் பதம் உயர்ந் தது என்னும் அர்த்தத்தைச் சொல்லில் 'உத்தமம்' என்னும் பதத்தோடு புனருக்திவரும். ஆகையினால் அதற்கு வேறுவிதமான வ்யாக்யானஞ் செய்கிறார்—'முன்பு சொல்லியதை விட வேறானதும்' என்று. இப்படி யாகில் முன்பு சொன்னதையே மறுபடி சொல்லுகிறேன் என்று சொல்லுகிற 'பூய: ப்ரவக்ஷ்யாமி' என்பது விரோதிக்குமே என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காக அதின் அபிப்ரா ராயத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளுக்குள்ளடங்கியதுமாகிய' என்று. ஸங்க்ரஹமாக முன்

1 கீதார்த்த ஸங்க்ரஹம்-18.
2 பகவத்கீதை-13-1.
3 பகவத்கீதை-13-18.

னத்தை மறுபடியும் சொல்லப்போகிறேன். அந்த ஜ்ஞானம் ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளைப்பற்றிய ஜ்ஞானங்களெல்லாவற்றிலும் முயர்ந்தது. எந்த ஜ்ஞானத்தை யறிந்துகொண்டு எல்லா ரிஷிகளும் அதையே த்யானம் செய்துகொண்டவர்களாய் ஸம்ஸார மண்டலத்தைவிட மேலாகிய ஸித்தியை யடைந்தார்ளோ அதாவது பரிசுத்தமான ஸ்வரூபத்தை அடைவதாகிய ஸித்தியை அடைந்தார்களோ. 1

---

*அத்யாயத்தில் சொல்லப்பட்ட குணங்கள் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாக இருப்பதையே விஸ்தாரமாக இந்த அத்யாயத்தில் மறுபடியும் சொல்லப்போகிறேன் என்றர்த்தமாகையினால் விரோதமில்லை என்று தாத்பர்யம். 'ஜ்ஞாநாநாமுத்தமம் ஜ்ஞாநம் பூய: ப்ரவக்ஷ்யாமி (ஜ்ஞானங்களுக்குள் உத்தமமாகிய ஜ்ஞானத்தை மறுபடியும் சொல்லப்போகிறேன்)' என்று அந்வயம் ஸம்பவித்தபோதிலும் அந்த ஜ்ஞானம் அவஸ்யமாகத் தெரிந்துகொள்ளவேண்டியது என்பதேற்படவேண்டியதற்காக ஜ்ஞானங்களுக்குள் உயர்ந்ததென்பதை வாக்யத்தை வேறாகப் பிரித்து இது விதிக்கப்படுகிறது என்றந்வயம் சொல்லுகிறார்—'அந்த ஜ்ஞானம்' என்றாரம்பித்து. 'ஜ்ஞாநாநாம்' என்று பொதுவாகச் சொல்லியிருப்பதினால் எல்லா ஜ்ஞானங்களைவிட மேலானது என்றேற்பட்டபோதிலும் பகவானைப் பற்றிய ஜ்ஞானத்தைவிட மேலானதென்பது ஸம்பவிக்காதாகையினால் அதை விலக்குவதற்காக 'ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளைப் பற்றிய' என்று சொல்லப்பட்டது. இந்த ஜ்ஞானத்தைப் பற்றிய ஜ்ஞானம் மாத்திரம் உயர்ந்த ஸித்திக்குக் காரணமென்பது ஸம்பவிக்காதாகையினாலும், அதை அப்யாஸம் செய்வதாகிய அநுஷ்டானம் இவ்விடத்தில் கிடைக்காமையினாலும் 'எல்லா ரிஷிகளும் அதையே த்யானம் செய்துகொண்டவர்களாய்' என்று சொல்லப்பட்டது. 'யத:' என்பது கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜ்ஞானம் ஸித்திக்குக் காரணம் என்னுமர்த்தத்தைச் சொல்லில் அந்தப் பதமில்லாமல் போன போதிலும் இதைத் தெரிந்துகொண்டு ஸித்தியையடைகிறார்கள் என்று சொல்லியிருப்பதினாலேயே அந்த ஜ்ஞானம் காரணமென்றேற்படுகிற படியினாலும் பகவானிடத்தில் பக்தி ஒன்றினாலேயே யடையக்கூடியதாகிய பகவானை யடைவதாகிய ஸித்தி இந்த ஜ்ஞானத்தினால் உண்டாகாதாகையினாலே 'பராம் (மேலானது)', என்று சொல்லியிருப்பதற்கு எதைவிட என்று சொல்லவேண்டியது அவஸ்யமாகையினாலும் இந்தப் பதம் அந்த அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'ஸம்ஸார மண்டலத்தைவிட மேலாகிய' என்று. இந்த மேலான ஸித்தி எப்படிப்பட்டது என்னில் ஸ்வரூபத்தைச் சொல்லுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து.* 1

பா – அ] மறுபடியும் அந்த ஜ்ஞானத்தை ப்ரயோஜனத்தினால் விசேஷித்துச் சொல்லுகிறார்—

𑌇𑌦𑌂 𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑍁𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌮𑌮 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌮𑌾𑌗𑌤𑌾𑌃 |
𑌸𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 𑌪𑍍𑌰𑌲𑌯𑍇 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿 𑌚 ‖ 2

ப - ரை] 𑌇𑌦𑌂 - இந்த, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 - ஜ்ஞானத்தை, 𑌉𑌪𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 - அடைந்து, 𑌮𑌮 - எனக்கு, 𑌸𑌾𑌧𑌰𑍍𑌮𑍍𑌯𑌂 - ஸமமாக விருக்கையை, 𑌆𑌗𑌤𑌾𑌃 அடைந்தவர்கள், 𑌸𑌰𑍍𑌗𑍇𑌽𑌪𑌿 - ஸ்ருஷ்டி காலத்திலும், 𑌨𑍋𑌪𑌜𑌾𑌯𑌨𑍍𑌤𑍇 - பிறக்கிறதில்லை, 𑌪𑍍𑌰𑌲𑌯𑍇 - ப்ரளயகாலத்தில், 𑌨 𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿 - துக்கப்படுவதுமில்லை. 2

பா] மேல் சொல்லப்போகிற இந்த ஜ்ஞானத்தை யடைந்து எனக்கு ஸமமாக விருக்கையை யடைந்தவர்கள் ஸ்ருஷ்டிக்கப்படும் தன்மையையடைவதில்லை. ஸம்ஹாரம் செய்யப்படும் தன்மையையும் அடைவதில்லை. 2

பா - அ] பிறகு ப்ரக்ருதியைச்சேர்ந்த குணங்கள் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகும் விதத்தைச்சொல்லுவதற்காக எல்லா ப்ராணிகளின் கூட்டமும் ப்ரக்ருதி, ஜீவன், இவைகளின் சேர்க்கையினால் உண்டானது

---

தா] *புனருக்தி இல்லை என்பதைத் தெரிவித்துக்கொண்டு மேல் ஶ்லோகத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'மறுபடியும்' என்றாரம்பித்து. இஷ்டத்தை யடைவது முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டது அநிஷ்டம் நிவ்ருத்திப்பது இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது. ஆகையினால் புனருக்தியில்லை என்று தாத்பர்யம். '𑌇𑌦𑌂' என்னும் பதம் கீழ்ச்சொல்லிய என்னும் அர்த்தத்தைச் சொல்லுவதாயிருந்தால் இந்த ஸந்தர்ப்பத்திற்குப் பொருந்தாதாகையினால் வேறுவிதமாக அதற்கு வ்யாக்யானஞ்செய்கிறார்—'மேல் சொல்லப்போகிற' என்று. '𑌆𑌗𑌤𑌾𑌃' என்பதற்கு வந்தவர்கள் என்னும் அர்த்தத்தைச் சொல்லுவதாகவிருந்தால் இந்த ஸந்தர்ப்பத்திற்குச் சேராதாகையினால் அடைவது என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அடைந்தவர்களாய்' என்று. '𑌵𑍍𑌯𑌥𑌨𑍍𑌤𑌿' என்பது துக்கம் என்னும்அர்த்தத்தைச் சொல்லுவதாயிருந்தபோதிலும் உத்பத்தியோடு சேர்த்துச் சொல்லியிருப்பதினால் ஸம்ஹாரத்தைக் குறிக்கிறது என்பது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸம்ஹாரம் செய்யப்படும் தன்மையை' என்று.* 2

என்று * 'யாவத்ஸஞ்ஜாயதே' என்கிற ஶ்லோகத்தினால் சொல்லப்பட்டது. அது பகவானாகிய தன்னாலேயே செய்யப்பட்டது என்று சொல்லுகிறார்—

மம யோநிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம் |
ஸம்பவஸ்ஸர்வபூதாநாம் ததோ பவதி பாரத || 3

ப - ரை] யோநி: - லோகங்களுக்குக் காரணமாகிய, மம – எனக்குச் சேஷமாகிய, மஹத் - பெரிய, ப்ரஹ்ம - ப்ரக்ருதி எதுவோ, தஸ்மிந் - அதில், கர்ப்பம் - கர்ப்பத்தை, அஹம் - நான், ததாமி - வைக்கிறேன்- தத: - அதினாலே, பாரத - பரதவம்சத்தில் பிறந்த அர்ஜுந, ஸர்வ பூதாநாம் - எல்லா ப்ராணிகளினுடைய, ஸம்பவ: - உத்பத்தி, பவதி – உண்டாகிறது. 3

பா] எல்லா லோகங்களுக்கும் காரணமாயும், எனக்குச் சேஷமாயுமிருக்

தா] குணங்கள் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகும் விதத்தையாவது அதை நிவ்ருத்திக்கிற விதத்தையாவது சொல்லாமையினால் 'மமயோநிர்மஹத்ப்ரஹ்ம' என்கிற ஶ்லோகம் இவ்விடத்தில் பொருந்தவில்லை என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிப்பதற்காக அந்த ஶ்லோகத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'பிறகு ப்ரக்ருதியைச் சேர்ந்த' என்றாரம்பித்து. மேலே சொல்லப்போகிற குணங்கள் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகவிருப்பதும் தன்னாலே செய்யப்பட்டதென்று தெரிவிப்பதற்காக எல்லா ப்ராணிகளுடைய கூட்டமும் ப்ரக்ருதி, ஜீவன், இவர்களின் சேர்க்கையினா லுண்டானதாக விருக்கையும் என்னாலேயே செய்யப்பட்டதென்று இந்தஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். 'எல்லா லோகங்களுக்கும் காரணமாயும்' என்பதற்கு எனக்குக் காரணமாகிய என்று அந்வயம் சொல்லில் 1 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ்ததா | மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய||' என்றிவை முதலியவைகளோடு விரோதம் வரும். தனக்குக் காரணமாகிய வஸ்துவினிடத்தில் தான் கர்ப்பத்தை வைக்கிறேன் என்பதும் பொருந்தாது. 2 'தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநிரஹம் பீஜப்ரத: பிதா' என்று மேல் ஶ்லோகத்தில் சொல்லியிருப்பதற்கும்

* பகவத்கீதை-13-26.
1 பகவத்கீதை-7-6.
2 பகவத்கீதை-14-4.

கிற பெரிதாகிய ப்ரக்ருதி எதுவோ அதில் நான் கர்ப்பத்தை வைக்கிறேன். † 'ஸூமிராமொவாஉநலெுொவாயாஙுூவம்ஜெநொஸ்ஸிரெவவ । க்ஷஹஊார ஊதீயம்ெஜஹிணாஒுக்ரூதிரஷ்டயா॥ஃவமெரயம்' என்று சொல்லப்பட்ட அசேதனமாகிய ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம் முதலிய விகாரங்களுக்குக் காரணமாகையினால் 'ஜெஹஸ்ஹ' என்று சொல்லப்படுகிறது. ஶ்ருதியிலும் சில இடங்களில் 'எவன் எல்லாவற்றையுந் தெரிந்தவனோ, எவன் எல்லாவற்றையும் விஶேஷமாகப் பார்க்கிறானோ, எவனுடைய

*விரோதம் வரும். ஆகையினால் 'தஸிநுமஹ-ுூஷயாகுஹம்' என்பது பொருந்துவதற்காக லோகங்களுக்குப் பிதாவாகவிருக்கிற தான் லோகங்களாகிற கர்ப்பத்தை வைப்பதற்குத்தகுந்த நேரில்விகாரத்தையடையக் கூடிய வஸ்து இவ்விடத்தில் 'யொநி' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். 'ஜயொநிஃ' என்கிற இது 'ஸூமிராவஃ' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறதாகையினால், அநுவாதம் என்று தெரிவிப்பதற்காக—'ப்ரக்ருதி எதுவோ அதில்' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் லோகங்களுக்குக் காரணமாக இருக்கிற பெரிதாகிய ப்ரம்மமென்னப்படுகிறது பரமாத்மாதான் என்று 'வாஸுதேவனே லோகத்திற்குக் காரணமாகிய வஸ்து' என்றும், 1 'ப்ராணிகளுக்குக் காரணமாகிய எந்த வஸ்துவை' என்றும், 2 'கர்த்தாவாயும், ஈஶ்வரனாயும், ப்ரம்மமாயும், லோகங்களுக்குக்காரணமாயுமிருக்கிற புருஷனே' என்று மர்த்தமுள்ள ஶ்ருதிவாக்ய முதலியவைகளில் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட பரமாத்மா என்னுடைய என்று தனியாக எப்படிச் சொல்லப்படுகிறான். 'ஹ' என்னும் பதம் ப்ராக்ருதியைச்சொல்லுகிற தென்கிறதுமில்லை. 'ஜெஹஸ்ஹ' என்று 'ஜெஹஸ' என்கிற விஶேஷணம் அப்படிச்சொல்லுவதற்கு விரோதியாயிருக்கிறது. ஆகையினால் பரமாத்மாவின் ஸ்வரூபமே 3 'ப்ரம்மமே ஆதாரமாகிய தன்பின்பாகம்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திலே போலத் தனியாக உபசாரமாகச்சொல்லப்படுகிறதுஎன்று அந்வயித்துக்கொள்ளவேண்டியதுஎன்கிறஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'ஸூமிராவஃ' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—இரண்டு ஷட்கங்களிலும் சொல்லப்பட்ட அர்த்தத்தை விசதப்படுத்துவதற்காக வல்லவோ மூன்றாவது ஷட்கம் ஆரம்பிக்கப்பட்டது. ஆகையி*

† பகவத்கீதை-7-4.
1 முண்டகோபநிஷத்-1-1-6.
2 முண்டகோபநிஷத்-3-1-3.
3 தைத்திரீயம், ஆனந்தவல்லி.

தபஸ்ஸா ஜ்ஞானரூபமோ, அவனிடத்திலிருந்து பேர், ரூபம், இவைகளையுடையதாயும் ஜீவர்களால் அனுபவிக்கக்கூடியதாயுமிருக்கிற இந்த ப்ரக்ருதி உண்டாகிறது' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் ப்ரக்ருதியும் ப்ரம்மம் என்று சொல்லப்படுகிறது. ¶ 'இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்।

---

ணுல் 'பூமிராப:' என்றிவைமுதலியவிடங்களில் தனக்குச்சேஷமாக முன் சொல்லப்பட்ட ப்ரக்ருதியே தன்னுடைய என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிற வேற்றுமையிருக்கிறபடியினாலும், ப்ரக்ருதி என்னும் பதத்தின் அர்த்தத்தைச்சொல்லுகிற 'யோநி' என்னும் பதம்முதலியவைகளாலும், 'மம' என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட சேதனமாகிய ப்ரக்ருதியை வைப்பதற்கு இடமாகையினாலும், ஸுகதுக்கங்களையனுபவிக்க இடமாக விருக்கிறதென்றேற்படுகிறபடியினாலும், இவ்விடத்திலும் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. 'ஏதத்யோநீநி' என்று 'யோநி' என்னும் பதமும் முன்பே அந்த ப்ரக்ருதியினிடத்தில் ப்ரயோகிக்கப்பட்டது. அதுவும் மஹாபூதங்களுக்கும், அதற்குக்காரணமாகிய அஹங்காரத்திற்கும், அதற்கும் காரணமாகிய மஹத் என்னும் வஸ்துவிற்கும் காரணமாகையினால் அந்தந்தக் கார்யங்களைவிடப் பெரிதாகையினால் 'மஹத்ப்ரஹ்ம' என்பதும் உசிதந்தான். 'ப்ரஹ்ம' என்னும் பதமும் காரணமாகஇருக்கை, பெரிதாக இருக்கை, முதலியவைகளால் பரமாத்மாவிற்குச் சமானமாகையினால் பரமாத்மாவல்லாத ப்ரக்ருதியினிடத்திலும் ப்ரயோகித்திருப்பது உசிதந்தான். அப்படியே ஸ்ருதியில் ப்ரயோகமிருக்கிறது. ப்ரக்ருதி லோகங்களுக்குக் காரணம் என்று சொல்லியிருப்பதும் பரமாத்மா லோகங்களுக்குக் காரணமென்பதற்கு விருத்தமல்ல. மேலும் அநுகூலமே. ஏனெனில் விகாரங்களொன்றுமில்லாத அந்தப் பரமாத்மா ப்ரக்ருதியோடு சேர்ந்திருந்து கொண்டே லோகங்களுக்குக் காரணமாகையினால். ஆகையினாலல்லவோ முன்பும் 1 'ஏதத்யோநீநி பூதாநி ஸர்வாணீத்யுபதாரய' என்று சொல்லி உடனே 2 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா' என்று சொல்லப்பட்டது என்பது. ப்ரஸித்தமாகிய கர்ப்பம் என்பது இவ்விடத்தில் பொருந்தாதாகையினால் கர்ப்பம் என்னும் பதத்தினால் சொல்லத் தகுந்ததா யிருக்கை ஜீவாத்மாவிற்கு எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இதஸ்த்வந்யாம்'

---

¶ பகவத்கீதை-7-5.
1 பகவத்கீதை-7-6.
2 பகவத்கீதை-13-26.

ஜீவபூதாம்' என்று சேதனங்களின் கும்பலாகிய எந்த மேலான ப்ரக்ருதி சொல்லப்பட்டதோ அது இவ்விடத்தில் எல்லா ப்ராணிகளுக்கும் காரணமாகையினால் 'மஹத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட அசேதனமாயும் லோகங்களுக்குக் காரணமாயுமிருக்கிற பெரிய ப்ரக்ருதியில் சேதனங்களின் கும்பலாகிய கர்ப்பத்தை வைக்

என்றாரம்பித்து. 'ஸர்வயோநிஷு' என்பதினால் ஜ்ஞாபகப்படுத்தப்பட்ட தனக்குச் சேஷமாகிய இரண்டுவித ப்ரக்ருதிகளைச் சொல்லுகிற முன்பு சொல்லிய வார்த்தையை யோசித்தும், மேல் சொல்லப்போகிற க்ரந்தத்தோடு பொருத்தமுண்டாவதற்காகவும் 'மஹத்' என்னும் பதம் இவ்விடத்தில் மேலான ப்ரக்ருதி என்று சொல்லப்பட்ட ஜீவாத்மாக்களின் கும்பலைச்சொல்லுகிறது என்று தாத்பர்யம். 'மஹத்' என்று ஏகவசனமாக (ஒருமையாக)ச்சொல்லி யிருப்பது, கும்பல் ஒன்றென்பதைச்சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காக 'கும்பலாகிய' என்னும் பதம். சேர்ந்த அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அப்படிப்பட்ட' என்றாரம்பித்து. முன்பு 'யயேதம் தார்யதே ஜகத்' என்று சேதனமாகிய ப்ரக்ருதி ஆதாரமென்பதும் அசேதனம் இந்த ஜீவாத்மாவினால் தரிக்கப்படுகிறது என்பதும் சொல்லப்பட்டது இவ்விடத்திலோ வெனில் 'தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம்' என்று அதற்குவிரோதமாக எப்படிச்சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'அசேதனமாயும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் அதற்கு வசப்பட்டிருக்கையில் முடிவுபெறுகிற ஆதாரமாக விருக்கையும் அத்தால் தரிக்கப்படுகிறதாயிருக்கையும் சொல்லப்படவில்லை. பின்னை எப்படியெனில் ஒன்றொன்று சொல்லுவதற்கு மாத்திரம் தகுந்த ஸம்பந்தம் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட ஸம்பந்தத்தை உண்டாக்குவதற்கு ப்ரயோஜனம் கர்மங்களுக்கு வசப்பட்ட புருஷர்களுக்கு அவரவர் கர்மங்களுக்குத் தகுந்த ஸுகதுக்கங்களைக் கொடுப்பது, என்று சொல்லப்பட்டதாகிறது. இவ்விடத்தில் 'ததஃ' என்பது அப்புறம் என்பதைச்சொல்லுகிறதல்ல, ப்ரயோஜனமற்றதாகையினால் அப்புறம் உண்டாகிறதென்பதினால் காரணமாக இருக்கை ஏற்பட்டபோதிலும் அதை நேரில் சொல்லுவது யுக்தமாகையினால். ஆகையினால் 1 'க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞஸம்யோகாத்' என்று முன் அத்யாயத்தில் சொல்லப்பட்ட காரணமே, இவ்விடத்தில் ஸாங்க்யர்களினுடைய மதத்தை நிராகரிப்பதற்காகத் தனக்கு வசப்பட்டது என்று விசேஷித்துச் சொல்லப்படுகிறது

1 பகவத்கீதை-13-26

கிறேன், அதாவது ஸுகதுக்கங்களை யனுபவிப்பதற்கிடமாகிய அசேதனமாகிய ப்ரக்ருதியுடன் ஸுகதுக்கங்களையனுபவிக்கிறவர்களின் கூட்டமாகிய சேதனமாகிய ப்ரக்ருதிகளின் சேர்க்கையினால் ப்ரம்மா முதல் புழுவரையிலுள்ள எல்லா ப்ராணிகளுடையவும் உற்பத்தி உண்டாகிறது. 3

பா - அ] கார்ய தசையையுடைய சேதனமும் அசேதனமுமாகிய ப்ரக்ருதிகளின் சேர்க்கையும் என்னாலேயே செய்யப்பட்டது என்று சொல்லுகிறார்—

**ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்பவந்தி யா: ।**
**தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோநிரஹம் பீஜப்ரத: பிதா ॥ 4**

---

என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படிப்பட்ட என்னுடைய ஸங்கல்பத்தினால் செய்யப்பட்ட' என்றாரம்பித்தது. ஆகையினாலேயே அது கார்யத்தைச் செய்கிறது என்பதும் உசிதம் என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'ஸர்வபூதாநாம்' என்பது மஹான் முதலிய தத்வங்களைச் சொல்லுகிறதல்ல, 'பூத' என்னும் பதம் அவைகளிலேயே ப்ரயோகிக்கப்படுகிறது என்பதில்லாமையினால். பஞ்ச மஹா பூதங்களைச் சொல்லுகிறதென்பதுமில்லை, ஜீவாத்மாக்களுக்கு ஸம்ஸார பந்தம் உண்டாவதற்குக்காரணமாகும் விதத்தைச்சொல்லுகிறதாகையினால். அதுவும் மேலேசொல்லப்படுகிற ஸ்ருஷ்டிக்கப்பட்டதாக இருக்கை எல்லாவற்றிற்கும் பொதுவாகையினாலும், 1 'ப்ரஹ்மா தக்ஷாதய: கால: ததைவாகில ஜந்தவ: । விபூதயோ ஹரேரேதா: ஜகத: ஸ்ருஷ்டிஹேதவ: ॥', 2 'ப்ரஹ்மாத்யா: ஸகலா தேவா மநுஷ்யா: பஶவஸ்ததா । விஷ்ணுமாயா மஹாவர்த்த மோஹாந்தகாராவ்ருதா: ॥', 3 'ஹிரண்யகர்ப்பாதி ஸ்தம்பபர்யந்தா:' என்றிவைமுதலிய ப்ரமாணங்களினாலும் ப்ரம்மா, ருத்ரன், முதலியவர்களுக்கும் ஸமானம் என்கிற அபிப்ராயத்தினால் 'ஸர்வ' என்னும் பதம் என்று காட்டுவதற்காக—'ப்ரம்மா முதல் புழுவரையிலுள்ள' என்று சொல்லப்பட்டது. 4 'ஸ்ருஷ்டிஸ்திதி அந்தகரணீம் ப்ரஹ்மவிஷ்ணு ஶிவாத்மிகாம்' என்றிவை முதலிய விடங்களில் ப்ரம்மாவின் ஸங்கல்பமில்லாமலே ஸ்த்தாவரம் முதலியவைகள் ஸ்ருஷ்டிக்கப்பட்டன என்று சொல்லியிருப்பதினால் ப்ரம்மாவைப்போல அவனால் ஸ்ருஷ்டிக்கப்பட்ட புழுவரையிலுள்ள எல்லா ப்ராணிகளும் பரமாத்மாவினால் ஸ்ருஷ்டிக்கப்பட்டதுகள் என்பது ஸ்பஷ்டமாக யிருக்கிறது. 3

---

1 விஷ்ணுதர்மம்-164-23. 3 விஷ்ணுபுராணம்-6-.-56.
2 விஷ்ணுபுராணம்-5-30-17. 4 விஷ்ணுபுராணம்-6-7-56

ப - ரை] கௌந்தேய - அர்ஜுந, ஸர்வயோநிஷு - எல்லா ஜாதிகளிலும், யா: - எந்த, மூர்த்தய: - வஸ்துக்கள், ஸம்பவந்தி - உண்டாகின்றனவோ, தாஸாம் - அவைகளுக்கு. மஹத் — பெரிதாகிய, ப்ரஹ்ம - ப்ரக்ருதி, யோநி: - காரணம், அஹம் — நான், பீஜப்ரத: - விரையைச் சேர்க்கிற, பிதா - தகப்பன். 4

பா] தேவன், கந்தர்வன், யக்ஷன், ராக்ஷஸன், மனுஷ்யன், பசு, ம்ருகம், பக்ஷி, பாம்பு, முதலிய ஜாதிகளில் எல்லாவற்றிலும் எந்தெந்த வஸ்துக்கள் உண்டாகின்றனவோ அவைகளுக்குப் பெரிதாகிய ப்ரக்ருதி காரணம். அதாவது என்னால் சேர்க்கப்பட்ட சேதனங்களின் கூட்டத்தை

---

தா] இப்படி கீழ் ஶ்லோகத்தினால் ப்ராக்ருதமாயும், நைமித்திகமாயுமிருக்கிற ஸ்ருஷ்டிகள் தனக்கு வசப்பட்டதென்று சொல்லப்பட்டது. பிறகு நித்யமான ஸ்ருஷ்டியும் தன்னாலேயே செய்யப்பட்டதென்று சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால், என்று இந்த இரண்டு ஶ்லோகங்களுக்கும் புனருக்தியென்னும் தோஷத்திற்குப் பரிகாரத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'கார்யதசையையுடைய' என்றாரம்பித்து. அதாவது நித்யமான ஸ்ருஷ்டியையுடைய என்றர்த்தம். ப்ரம்மாவினால் உண்டாக்கப்படுகிற நான்குவிதமான ஸ்ருஷ்டிக்குப் பிறகும் ப்ரளயம் வரையில் அல்பமாகிய ஜந்துக்களிலும் எந்தெந்த ஸந்ததி உண்டாகிறதோ அதிலும் ஈஶ்வரன் தான் உதாஸீநனாயிருந்துகொண்டு மற்றவர்களைக்கொண்டு செய்விக்கிறதில்லை என்றபிப்ராயத்தினால் 'ஸர்வயோநிஷு' என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தேவன் கந்தர்வன்' என்றாரம்பித்து. ப்ரமாணத்திலேற்பட்ட தனியான காரணமான வஸ்துக்கள் வேறுபட்டிருப்பதாகிற விசித்ரமாக விருக்கையும், ஸ்ருஷ்டிப்பவனாகிய தன்னுடைய விசித்ரமான சக்தியிருப்பதைத் தெரிவிப்பதற்காக 'யா:' என்று ப்ரஸித்தமாக அநுவதிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எந்தெந்த வஸ்துக்கள்' என்று. 'ஸம்பவந்தி' என்கிறது ஸம்பவிக்கக்கூடியவைகளைச் சொல்லுகிறது என்பதை விலக்குவதற்காகவும், உபாதான காரணமும் கார்யமுமென்பதைத் தெரிவிப்பதற்காகவும் சொல்லுகிறார்—'உண்டாகின்றனவோ' என்று. நேரில் உபாதான காரணமில்லாமையினால் 'காரணம்' என்று சொல்லப்பட்டது. சேதனத்தின் சேர்க்கை இல்லாமற்போனாலும், பகவான் அதிஷ்டானஞ் செய்யாமற்போனாலும் கேவலம் அசேதனம் மாத்திரம் காரணமென்பது பொருந்தாது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அதாவது என்னால் சேர்க்கப்பட்ட' என்றாரம்பித்து.

யுடைய மஹான் முதல் பஞ்சபூதங்கள் வரையிலுள்ள அவஸ்தையை யுடைய ப்ரக்ருதி காரணம் என்றர்த்தம். நான் அந்தந்த வஸ்துக்களில் அவரவர்கள் கர்மங்களுக்குத் தக்கபடி ஆத்மாக்களின் கூட்டத்தைச் சேர்க்கிறவன் என்றர்த்தம். 4

பா-அ] இப்படி ஸ்ருஷ்டியின் ஆரம்பத்தில் அதற்கு முன் பழைய கர்மத்தின் வசத்தினுலுண்டான அசேதனத்தின் ஸம்பந்தத்தினுல் தேவன் முதலிய ஜாதிகளில் பிறந்தவர்களுக்கு மறுபடி தேவன் முதலியவைகளாகப் பிறப்புண்டாவதற்குக் காரணத்தைச்சொல்லுகிருர்—

𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌰𑌜𑌸𑍍𑌤𑌮 𑌇𑌤𑌿 𑌗𑍁𑌣𑌾𑌃 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 ।
𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌦𑍇𑌹𑍇 𑌦𑍇𑌹𑌿𑌨𑌮𑌵𑍍𑌯𑌯𑌮𑍍 ॥

ப-ரை] 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋-பாஹுபலமுள்ள அர்ஜுந, 𑌪𑍍𑌰𑌕𑍃𑌤𑌿𑌸𑌂𑌭𑌵𑌾𑌃 - ப்ரக்ருதியிலுண்டாகிய, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 - ஸத்வகுணம், 𑌰𑌜𑌃 - ரஜோகுணம், 𑌤𑌮𑌃 - தமோகுணம், 𑌇𑌤𑌿 - என்கிற, 𑌗𑍁𑌣𑌾𑌃 - குணங்கள், 𑌦𑍇𑌹𑍇 - ஶரீரத்திலிருக்கிற, 𑌅𑌵𑍍𑌯𑌯𑌂 - அழிவில்லாதவனுகிய, 𑌦𑍇𑌹𑌿𑌨𑌂 - ஜீவாத்மாவை, 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌨𑍍𑌤𑌿 - கட்டுப்படுத்துகின்றன. 5

---

'𑌸𑌰𑍍𑌵𑌯𑍋𑌨𑌿𑌷𑍁' என்று சொல்லப்பட்டதாயும் அநேக வஸ்துக்களைக்காரணமாகவுடையதென்றும் தோன்றுகிற கடைசி வ்யஷ்டி ஸ்ருஷ்டியில் ஒரு மூல ப்ரக்ருதி காரணமென்பதெப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிருர்—'மஹான்முதல் பஞ்சபூதங்கள் வரையிலுள்ள' என்று இவ்விடத்தில் '𑌬𑍀𑌜' என்னும் பதத்திற்கு அர்த்தம் என்ன? தன்னைப்பிதாவென்று சொல்லிக்கொள்ளுவதற்குக்காரணமாகிய அவைகளை வைப்பதாவதென்ன? '𑌤𑌾𑌸𑌾𑌂 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌰𑌹𑌂 𑌬𑍀𑌜𑌪𑍍𑌰𑌦𑌃 𑌪𑌿𑌤𑌾' என்பதினுல் ஸம்வாஸாங்க்யன் சொல்லுவதைப்போல ப்ரக்ருதியே உபாதானகாரணமென்றும், ஈஶ்வரன் கேவலம் நிமித்தகாரணமென்றும் தோன்றுகிறது. அது ஶ்ருதிகளுக்கு விருத்தம். மேலும் ஒரே ஜாதியில் பொதுவாகிய ஒருகாரணரிடத்தில் பிறக்கிற ப்ராணிகள் விசித்திரமாக இருப்பது எந்தக்காரணத்தினுலுண்டானது என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானஞ் சொல்லுகிருர்—'அந்தந்த வஸ்துக்களில்' என்று முன் ஶ்லோகத்தில் '𑌮𑌮 𑌯𑍋𑌨𑌿𑌰𑍍𑌮𑌹𑌦𑍍𑌬𑍍𑌰𑌹𑍍𑌮' என்று சொல்லப்பட்ட ப்ரக்ருதியே இந்தஶ்லோகத்திலும் '𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌮𑌹𑌦𑍍𑌯𑍋𑌨𑌿𑌃' என்று சொல்லப்படுகிறது. முன் ஶ்லோகத்தில் '𑌮𑌹𑌤𑍍' என்னும் பதத்தின் ஸ்தானத்தில் சொல்லப்பட்டிருக்கிற '𑌬𑍀𑌜' என்னும் பதமும் முன் ஶ்லோகத்தில் சொல்லப்பட்டதாயும், ப்ராணிகளை ஸ்ருஷ்டிப்பதற்குத் தகுந்ததாயுமிருக்கிற சேதனங்களின் கூட்டத்தைச் சொல்லுகிறதென்று தாத்பர்யம். 4

பா] ப்ரக்ருதியின் ஸ்வரூபத்தோடு சேர்ந்த ஸ்வபாவ விஶேஷங்களாயும், ப்ரகாசம் முதலிய கார்யங்களைக் கொண்டே நிரூபிக்கக்கூடியவைகளா

---

தா] நைமித்திகமான ஸ்ருஷ்டி ஆரம்பிக்கும்பொழுது பழைய கர்மங்களுக்குத்தக்கபடி பகவானுடைய ஸங்கல்பத்தினுல் உண்டாக்கப்பட்ட அசேதனத்தின் ஸம்பந்தத்தினுல் ஜன்மம் உண்டாவது உசிதம். பழைய கர்மமும் அந்த ஜன்மத்தினுலேயே பலத்தைக்கொடுத்து விட்டது. அந்தக் கர்மத்தின்முடிவில் அதினுலுண்டான அந்தச் ஶரீரமும் நாசத்தையடைந்துவிடும். ஆத்மாவோ ஸ்வபாவத்தில் பரிசுத்தன். ஆகையினுல் இந்த ஜீவன் நித்யமாகிய ஸ்ருஷ்டியில் எந்தக் காரணத்தினுல் உட்படுத்தப்படுகிறுன் என்றுக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக குணங்கள் கட்டுகிறவிதத்தைச் சொல்லுகிற இந்த ஸந்தர்ப்பத்திற் கவதாரிகை செல்லுகிறுர்—'இப்படி' என்றுரம்பித்து. இப்படி என்பதற்கு ஸமஷ்டி ஸ்ருஷ்டியையும், வ்யஷ்டி ஸ்ருஷ்டியையும் சொல்லுகிற இரண்டு ஶ்லோகங்களில் சொல்லியபடி என்றர்த்தம். ஸ்வரூபநிரூபக தர்மங்கள் வஸ்துவை ஒருநாளும் விட்டுப்பிரிவதில்லை. ஆகையினுல் இவ்விடத்தில் 'ப்ரக்ருதியி னுண்டாகிய என்று சொல்லியிருப்பது கார்ய தசையில் வ்யத்யாஸத்தையுடையவைகளாக ப்ரகாசிக்கிற மாத்திரத்தைக்கொண்டு என்கிற அபிப்ராயத்தினுல்சொல்லுகிறுர்—'ப்ரக்ருதியின் ஸ்வரூபத்தோடுசேர்ந்த' என்று. வேறொருகாரணத்தினுல் உண்டானவைகளல்ல என்றர்த்தம். கார்யதசையையுடைய ப்ராக்ருதியிலிருக்கிற சப்தம் முதலிய குணங்களைக் காட்டிலும் ஸ்வரூப நிருபக தர்மமாகவிருக்கை எப்பொழுதும் சேர்ந்துகொண்டிருக்கை, முதலிய வ்யத்யாஸத்தைத் தெரிவிப்பதற்காக 'இதி' என்னும் பதம். ஸத்வம் முதலியவைகளே ப்ரக்ருதி யென்று சொல்லப்படுகிற வஸ்து, என்று சொல்லுகிற ஸாங்க்யர்களை நிராகரிக்கிறுர்—'ஸ்வபாவ விஶேஷங்களாயும்' என்று. அஸாதாரணமான தர்மங்கள் என்றர்த்தம். ஜீவாத்மாவிற்கே அஸாதாரணமாகவிருந்தபோதிலும் ஸுகதுக்கங்கள் காரணங்களாலுண்டானவைகள். ஸ்வபாவத்தி லுண்டானவைகளா யிருந்தபோதிலும் த்ரவ்யமாயிருக்கை முதலியவைகள் எல்லா வஸ்துக்களுக்கும் பொது. இவை இரண்டையும் விலக்குவதற்காக—'ஸ்வரூபத்தோடு சேர்ந்த ஸ்வபாவவிஶேஷங்களாயும்' என்கிற இரண்டு பதங்களும் சொல்லப்பட்டிருக்கிறது. இத்தால் 'குணாஃ' என்றது பரிபாஷையாகச் சொல்லப்பட்ட பதம். ரூபம் முதலியவைகளைப்போல ஒரு த்ரவ்யத்தையாதாரமாகவுடையவைகள் என்றர்த்தமல்ல, என்பது மூதலிய சங்கராசார்யரால் சொல்லப்பட்ட அர்த்தம் நிராகரிக்கப்பட்டது. அவர்மதத்தில் 'குண' என்னும் பத

யும், ப்ரக்ருதியாக இருக்கும் தசையில் ப்ரகாசமில்லாமல் அதின் விகாரங்களாகிய மஹான் முதலிய வஸ்துக்களில் ப்ரகாசத்தை யடைந்தவைகளாயுமிருக்கிற, ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, என்கிற மூன்று குணங்களும் மஹான் முதல் பஞ்சபூதங்கள் வரையிலுள்ள வஸ்துக்களால்

---

த்திற்கு வேறொரு குணங்களிடத்தில் ப்ரவித்திஉண்டென்பதே விருத்தம் என்பது தாத்பர்யம். ஶப்தம் முதலியவைகளைப்போல ஸத்வம் முதலிய பேருடைய குணங்கள் ப்ரத்யக்ஷத்தினால் காணப்படவில்லை. எப்பொழுது மிந்த்ரியங்களுக்குப் புலப்படாத விஷயத்தில் அநுமானமும் ப்ரயோஜனமற்றது என்று பாஷ்யத்தில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. ஒரு ப்ரமாணங்களினாலும் அறியப்படாத ப்ரக்ருதியின் குணங்களைப்பற்றி ஶாஸ்த்ரம் உபதேசஞ் செய்வதிலும் காக்கையின் பல் முதலியவைகளைச் சொல்லுவதைப்போல ப்ரயோஜனமொன்றும் தெரியவில்லை. ஆகையினால் தார்க்கிகர் முதலியவர்களைப்போல வேறு வஸ்துவைச் சொல்லுகிறதென்பதிவ்விடத்தில் உசிதம் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ப்ரகாசம் முதலிய' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—ப்ரகாசம் ப்ரவ்ருத்தி, அஜ்ஞானங்களாகிய கார்யங்கள் ப்ரத்யக்ஷமாகத் தெரிகின்றன. அதற்குக் காரண விசேஷங்களும் கார்யங்களாகிய அவைகளைக்கொண்டே மொத்தமாக ஊஹிக்கப்படுகின்றன. ஏனெனில் விசேஷமாகிய காரணமில்லாமல் ஒருகார்யமுமுண்டாகாதாகையினால் அந்தக் காரணவிசேஷமும் ஸத்வம் முதலியவைகள் என்பது ஶாஸ்த்ரத்திலேற்பட்டது. இது விஷயத்தில் ஶாஸ்த்ரம் ப்ரயோஜனமற்றதென்பதுமில்லை. இந்த்ரியங்களுக்குத் தெரியாத விஷங்களின் சக்தி, மருந்துகளின் சக்தி, இவைகளை யுபதேசஞ்செய்திருப்பதைப்போலவே விடுவதற்காகவும் அங்கீகரிப்பதற்காகவும் ஏற்படுகிறபடியினால்—என்பது. கார்யங்களைக்கொண்டே நிருபிக்கவேண்டியவைகளாக இருந்தால் ப்ரளயதசையில் ஸுகம் துக்கம் முதலிய கார்யங்களில்லாமையினால் ஸத்வம் முதலிய குணங்களில்லையென்றேற்படுமே. ஆகையினால் ப்ரக்ருதியின் ஸ்வரூபத்தோடு சேர்ந்ததென்று சொல்லியிருப்பதெப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ப்ரக்ருதியாக இருக்கும் தசையில் ப்ரகாசமில்லாமல்' என்று. கார்யமுண்டாவதற்குக் காரணமாகிய ப்ரகாசம் அப்பொழுதில்லை என்று தாத்பர்யம். 'அதின் விகாரங்களாகிய' என்பது முதலிய வாக்யத்திற்கு மாறுதல்களினால் புஷ்பம் பழம் முதலியவைகளில் வாஸனை முதலியவைகள் ப்ரகாசிப்பதைப்போல என்று தாத்பர்யம். ப்ரக்ருதியினிடத்திலும் அதின் விகாரங்களிடத்திலு மிருக்கிற

உண்டாக்கப்பட்ட, தேவன் மனுஷ்யன் முதலிய தேஹங்களோடு சேர்ந்தவனையும், ஸ்வபாவத்தில் அந்தக் குணங்களோடு சேருவதற்குத்தகாதவனையும், இந்தத் தேஹத்திலிருந்து கொண்டிருக்கிற ஜீவாத்மாவைக் கட்டுப்படுத்துகின்றன அதாவது தேஹத்திலிருப்பதாகிய காரணத்தினுல் கட்டுப்படுத்துகின்றன என்றர்த்தம். 5

பா - அ] ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, என்கிற குணங்களின் ஆகாரத்தையும் அவைகள் கட்டுப்படுத்தும் விதத்தையும் சொல்லுகிறார்—

*குணங்கள் ஸ்வபாவத்தில் விகாரங்களில்லாதவனுகையினுல் குணங்களோடு சேருவதற்குத் தகாதவனுகிய ஜீவாத்மாவை எப்படிக் கட்டுப்படுத்துகின்றன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'தேஹிநம்' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'மஹான் முதல்' என்றாரம்பித்து 'அவ்யய' என்னும் பதம் இவ்விடத்தில் குணங்களின் சேர்க்கையினுலுண்டாக்கப்பட்ட ஜ்ஞானத்தின் சுருக்கமாகிய மாறுதலில்லையென்று சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தில் அந்தக் குணங்களோடு' என்றாரம்பித்து. அப்படியிருந்தபோதிலும் 1 'ஶரீரஸ்தோऽபி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே' என்று சொல்லப்பட்ட ஜீவாத்மாவிற்கு ஸம்ஸார பந்தமாகிய லேபம் எப்படி உண்டாகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக மோக்ஷமுண்டாகிற வரையில் இடைவிடாமலிருக்கிற தேஹத்தோடு சேர்ந்திருப்பதே காரணம் என்பது, 'தேஹே' என்பதினுல் அபிப்ராயத்தில்கொள்ளப்பட்டது, என்றுசொல்லுகிறார்— 'அதாவது தேஹத்திலிருப்பதாகிய' என்றாரம்பித்து. இத்தால் ஜீவாத்மாவைக்கட்டுப்படுத்துவதைப்போல இருக்கின்றன, அதாவது அந்த ஜீவாத்மாவை ஆதாரமாக வைத்துக்கொண்டு தங்கள் ஸ்வரூபத்தையடைகின்றன, என்று சங்கராசாரியர் அர்த்தம் சொல்லியது நிராகரிக்கப்பட்டது. இந்தக் குணங்களினுலுண்டான பந்தம் கைகளின் பலத்தினுல் நிவ்ருத்திசெய்ய முடியாதென்கிற அபிப்ராயத்தினுல் 'மஹாபாஹோ' என்று சொல்லியிருக்கிறது. 2 'தீர்கௌ ஸுவ்ருத்தௌ பாஹூ யாப்யாம் ஹிம்ஸதி ஹிம்ஸிதஃ' என்று தாத்பர்யம். எப்படி உன்னுடைய கைகளின் பலத்தினுல் சத்ருக்களுக்குக் கட்டுண்டாகிறதோ அதைப்போல என்று தாத்பர்யமாகவுமாம்.* 5

1 *பகவத்கீதை* - 13-31.

2 *புத்திமத:-புத்தி யுடையவனுக்கு, பாஹூ - கைகள், தீர்கௌ - அதிக நீளமுள்ளவைகள், ஹிம்ஸித:- பீடிக்கப்பட்டவனுல்கொண்டு, யாப்யாம் - எந்தக் கைகளினுல், ஹிம்ஸதி - பீடிக்கிறுனே.*

𑌤𑌤𑍍𑌰 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌮𑌨𑌾𑌮𑌯𑌮𑍍 |
𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚𑌾𑌨𑌘 || 6

ப—ரை] 𑌅𑌨𑌘 - தோஷமில்லாத அர்ஜுந, 𑌤𑌤𑍍𑌰 - அவைகளுக்குள், 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌂 - ஸத்வகுணமானது, 𑌨𑌿𑌰𑍍𑌮𑌲𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - நிர்மலமானதையினால், 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌕𑌂 - ப்ரகாசத்தை யுண்டாக்குகிறது, 𑌅𑌨𑌾𑌮𑌯𑌂 - ரோகமில்லாமைக்குக் காரணம், 𑌸𑍁𑌖𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 - ஸுகத்தில் ஆசையினாலும், 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑌙𑍍𑌗𑍇𑌨 𑌚 - ஜ்ஞானத்திலாசையினாலும், 𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 - கட்டுப்படுத்துகிறது. 6

பா] அந்த ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸாகிய மூன்று குணங்களுக்குள் ஸத்வகுணத்தின் ஸ்வரூபம் இப்படிப்பட்டது—நிர்மலமானதினால் ப்ரகாசத்திற்குக் காரணமானது ப்ரகாசம், ஸுகம், இவைகளை மறைக்கக்கூடிய ஸ்வபாவங்களில்லாமையே நிர்மலமாயிருக்கை. ப்ரகாசம், ஸுகம், இவைகளை உண்டுபண்ணுவதையே ஸ்வபாவமாகவுடையதாகையினால்

---

தா] '𑌤𑌤𑍍𑌰' என்பது முதல் மூன்று ஶ்லோகங்களுக்கு இந்த ஸந்தர்ப்பத்தில் ஸங்கதி சொல்லுகிறார்—'ஸத்வம்' என்றாரம்பித்து. 'ஆகாரத்தையும்' என்பதற்கு அவைகளை நிரூபிக்கக்கூடிய ஸ்வபாவத்தையும் என்றர்த்தம். '𑌤𑌤𑍍𑌰' என்பது ஒன்றைத் தனித்துச் சொல்லுவதற்காக அவைகளின் கும்பலைக் குறித்திருக்கிறது என்று சொல்லுகிறார்—'அந்த ஸத்வம்' என்றாரம்பித்து. நிர்மலங்களாகிய ஸ்படிகம் முதலியவைகள் மற்ற வஸ்துக்களை ப்ரகாசம் செய்கின்றன என்பது காணப்படவில்லையே என்கிற ஆக்ஷேபத்துக்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ப்ரகாசம்' என்றாரம்பித்து. '𑌮𑌲' என்னும் பதம் இவ்விடத்தில் தமோகுணத்தின் ஸ்வபாவமாகிய ப்ரகாசத்திற்கு விரோதமாகிய ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது என்றர்த்தம். மேலே சொல்லப்போகிறதை யோசித்து இவ்விடத்தில் ஸுகத்தை எடுத்தது. மறைக்கக்கூடிய ஸ்வபாவங்கள் இல்லாத ஆகாசம், வாயு, முதலியவைகளுக்கும் மற்றொன்றை ப்ரகாசம் செய்யக்கூடிய தன்மை இல்லை என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ப்ரகாசம், ஸுகம், இவைகளை உண்டுபண்ணுவதையே' என்றாரம்பித்து. ஸத்வகுணத்தோடு கலந்த ரஜோகுணம் தமோகுணம் இவைகளும் ப்ரமமாகிய புத்திக்குக் காரணம் என்பதை மேலே சொல்லபபோகிறபடியினால் ஸத்வகுணமே ப்ரகாசத்தை யுண்டுபண்ணுகிறதென்று இவ்விடத்தில் சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்

ப்ரகாசத்திற்கும் ஸுகத்திற்கும் காரணம் என்றர்த்தம். ப்ரகாசமாவது வஸ்துவின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானம். ரோகமாகிய கார்யத்தை யுடைத்தாகாத தாகையினால் அநாமயம் என்னப்படுகிறது. அதாவது ரோகமில்லாமைக்குக் காரணமென்றர்த்தம். இந்த ஸத்வமென்கிற பேரை யுடைய குணம் இந்த ஜீவாத்மாவை ஸுகத்தில் ஆசையினாலும் ஜ்ஞா னத்தில் ஆசையினாலும் கட்டுப்படுத்துகிறது. அதாவது ஜீவாத்மாவிற்கு ஸுகத்தில் ஆசையையும் ஜ்ஞானத்தில் ஆசையையும் உண்டாக்கு

---

சொல்லுகிறார்—'ப்ரகாசமாவது' என்றாரம்பித்து. ரஜோகுணத்தின லும் தமோகுணத்தினலுமுண்டாகிற புத்திகளிலும் அந்தந்த ப்ரமங் களுக்கு ஆதாரமாகிய வஸ்துவின் ஸ்வரூபம் ப்ரகாசிப்பது ஸத்வகுண த்தின்பாகம் என்று தாத்பர்யம். ஸத்வகுணத்திற்கு ரோகம்உண்டென் கிறப்ரஸ்தாவமேஇல்லாமையினால் அதில்லையென்று மறுப்பதுயுக்தமல்ல என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'ரோகமாகியகார்ய த்தைஉடைத்தாகாததாகையினால்'என்று.இவ்விடத்தில் இத்துடன்சேர் த்துச் சொல்லப்பட்டிருக்கிற மற்றக்குணங்களில் அவைகளாலுண்டாக் கப்பட்ட கார்யமாகையினால் ரோகத்தின் ஸம்பந்தம் இருக்கிறது. அது இவ்விடத்தில் ப்ரஸ்தாவத்திற்கு வர அது இல்லையென்று மறுக்கப்படு கிறதென்று தாத்பர்யம். ரோகமென்று பேருடைய கார்யமில்லை என்று சொல்லியிருப்பது, இவ்விடத்தில் அதின் ப்ரயோஜனத்தை யோசித்தால் அதற்கு விரோதமான கார்யம் உண்டென்று விதிப்பதில் தாத்பர்யத்தினால் என்று சொல்லுகிறார்—'அதாவது ரோகமில்லாமைக் குக்காரணம்' என்று. 'தத்ரஸத்வம்' என்று மேல் ஶ்லோகங்களில் சொல்லியிருப்பதுபோல இந்த ஶ்லோகத்திலும் ஸ்வரூபத்தைச் சொல்லுவதினாலும் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாக விருக்கையைச் சொல்லுவதினாலும் வாக்யம் வெவ்வேறு என்று சொல்லுகிறார்—'இந்த ஸத்வமென்று பேரையுடைய குணம்' என்றாரம்பித்து. வேறொரு கார ணத்தினாலேற்பட்ட ஸுகம்முதலியவைகளில் ஆசை காரணம் என்பது மாத்திரம் மூன்றும் வேற்றுமையினால் சொல்லப்பட்டது. அது யுக்த மல்ல, அதற்கு வேறொரு காரணமும் சொல்லப்படாமையினால் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறார்—'அதாவது ஜீவாத்மாவிற்கு' என்றாரம்பித்து. ஸம்ஸார பந்தமுண்டாவதற்கு நடுவில் நேரிடக்கூடிய வ்யாபாரம் இது என்பது மாத்திரம் சொல்லப்படுகிறது என்று தாத் பர்யம். பந்தமாவது கர்மங்களின் பலங்களை யனுபவிப்பதற்காக ஏற் பட்ட தேஹத்தோடு சேர்க்கை. அது கர்மத்தினாலுண்டாகிறது. அது ஸுகம்முதலியவைகளில் ஆசையினாலுண்டாகிறது என்பது எப்படிப்

கிறது என்றர்த்தம். ஜ்ஞானத்திலும் ஸுகத்திலும் ஆசையுண்டானல் அவைகளுக் குபாயங்களாகிய லோகத்தில் ஏற்பட்ட கார்யங்களிலும், வேதத்தில் சொல்லப்பட்ட கார்யங்களிலும் ப்ரவ்ருத்திக்கிறன். அதினல் அவைகளின் பலத்தை யனுபவிப்பதற்குக் காரணங்களாகிய ஜாதிகளில் பிறக்கிறன். ஆகையினல் ஸத்வ குணம் ஸுகத்திலும் ஜ்ஞானத்திலும் ஆசையை முன்னிட்டு ஜீவாத்மாவைக் கட்டுப்படுத்துகிறது. ஜ்ஞானம்,

---

பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ்சொல்லுகிறர்—'ஜ்ஞானத்திலும் ஸுகத்திலும் ஆசையுண்டானல்' என்றாரம்பித்து. வேதத்தில் சொல்லிய உபாயங்களை அனுஷ்டானம்செய்வது ஜன்மாந்தரத்தையடைவதற்குக் காரணமாகிறது என்பது உசிதம். லோகத்திலேற்பட்ட உபாயத்தைச்செய்வதோவெனில் இந்தஜன்மத்திலேயே அனுபவிக்கக்கூடிய பலத்திற்குக்காரணமானலும் ஆகலாம், அல்லாமல் போனலும் போகலாம், வேறு ஜன்மங்களுக்குக் காரணமாகாது, ப்ரவ்ருத்திப்பதற்கு உதாஹரணமாக லோகத்திலேற்பட்டிருக்கிற கார்யத்தைச் சொல்லியிருப்பதென்பதும் ப்ரயோஜனமற்றது என்னில் இதற்கு ஸமாதானஞ் சொல்லுகிறோம். இவ்விடத்தில் 'லௌகிக' என்னும் பதத்தினல் ஸ்ம்ருதியில் சொல்லப்பட்ட கர்மங்கள் சொல்லப்படுகின்றன. அன்றிக்கே ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்ட கார்யங்கள் சொல்லப்படுகிறதாகவுமாம். ஹிம்ஸைமுதலிய கார்யங்கள் ஸுகத்திற்குக்காரணமென்று லோகத்திலேற்பட்டது. லோகத்திலேற்படாத அந்தக் கார்யத்தின் சக்தியினல் மிகவும் பாபிஷ்டமாகிய ஜன்மம் முதலியவைகளை உண்டாக்குகிறது—என்று ரஜோகுணத்தைப்பற்றிச் சொல்லுமிடத்திலும் [1]'அந்த க்ரியைகளும் புண்யபாபரூபங்கள் என்று மேலே சொல்லப்போகிறர். ஸத்வகுணமே ப்ரகாசத்தையும் ஸுகத்தையும் தானே உண்டுபண்ணுவதாயிருந்தால் கிடைத்தவைகளான அவைகளில் ப்ரவ்ருத்திப்பதற்கு ஆசை உண்டாகாதே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறர்— 'ஜ்ஞானம் 'ஸுகம்' இவைகளை உண்டாக்குகிறதும்' என்றாரம்பித்து. முளையும் விரையும் போலிருக்கிற ந்யாயத்தினல் மேலேமேலே அவைகளில் ஆசையையும் அப்படி ஆசைப்படப்பட்ட அந்த வஸ்துக்களையும் ஸத்வகுணம் உண்டாக்குகிறது என்றர்த்தம். [2]'நகாங்க்ஷே விஜயம்'

---

1 பகவத்கீதை-14-7 ஶ்லோகத்தின் பாஷ்யம்.

2 பகவத்கீதை-1-32.

ஸாக இவைகளை யுண்டாக்குகிறதும் மறுபடி அவைகளில் ஆசையை யுண்டாக்குகிறதும் ஸத்வ குணம் என்று சொல்லப்பட்டதாகிறது. 6

ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணா ஸங்க ஸமுத்பவம் |
தந்நிபத்நாதி கௌந்தேய கர்ம ஸங்கேந தேஹிநம் || 7

ப - ரை] கௌந்தேய - அர்ஜுந, ரஜ: - ரஜோகுணத்தை, ராகாத்மகம் ராகத்திற்குக் காரணமாகவும், த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் - த்ருஷ்ணை, ஸங்கம், இவைகளுக்குத்பத்திஸ்தானமாகவும் வித்தி - அறி, தத் - அந்த ரஜோகுணம், தேஹிநம் - ஜீவாத்மாவை, கர்மஸங்கேந - கர்மங்களில் பற்றுதலினால், நிபத்நாதி - கட்டுப்படுத்துகிறது. 7

பா] ரஜோகுணம் ராகத்திற்குக் காரணம். ராகமாவது ஸ்த்ரீ புருஷர்களுக்கு ஒருவர்க்கொருவரிடத்தில் உண்டாகும் ஆசை. த்ருஷ்ணை, ஸங்கம்,

---

*தா] என்பது முதலியவைகளைச் சொல்லுகிற உனக்கு ஒன்றிலும் ஸங்கமில்லை என்கிற அபிப்ராயத்தினால் 'அநக' என்னும் பதம்.* 6

*"ரஜஸோ லோப ஏவ ச" என்று மேலே சொல்லப்படப்போகிறது. ஆகையினாலும், 'வ்யாகாமகம்' என்றும், 'லோபம்' என்றும், கீழும்மேலும் சொல்லி யிருப்பதைப்போலவே 'ராகாத்மகம்' என்னுமிடத்திலும் ராகத்திற்குக்காரண மென்பதே சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ராகத்திற்குக் காரணம்' என்று காரணத்தையே கார்யமாக உபசாரமாகச் சொல்லியிருக்கிறது. 'ரஜ்யதே அநேந (இதினால் ஆசைப்படுகிறான்),' என்கிற வ்யுத்பத்தியினால் ராகத்திற்குக் காரணமென்பதே 'ராக' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறதாகவுமாம் என்று தாத்பர்யம். கூடச்சொல்லப்பட்டிருக்கிற 'த்ருஷ்ணா' முதலிய பதங்களுக்குப் புனருக்தியென்னும் தோஷத்தைப் பரிகரிப்பதற்காக 'ராக' என்னும் பதத்தை அதிகமான ப்ரயோகமிருப்பதை யனுஸரித்து சில விஷயங்களைப்பற்றியது என்று குறைத்துச் சொல்லுகிறார்—'ஸ்த்ரீ புருஷர்களுக்கு' என்றாரம்பித்து. த்ருஷ்ணை 'ஸங்கம்' இவைகளிலிருந்து ரஜோகுண முண்டாகிறதென்று சொல்லுவது உசிதமல்ல. ரஜோகுணத்திலிருந்து அவைகள் உண்டாகிறதென்று சொல்லுவதோவெனில் ஸம்ஸாரபந்த முண்டாவதற்கு நடுவில் உண்டாகக்கூடிய வ்யாபாரத்தைத் தெரிவிப்பதனால் ப்ரயோஜனத்தோடு கூடியதாகும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'த்ருஷ்ணை, ஸங்கம், இவைகளுக்கு' என்றாரம்பித்து. ஆத்மாவிற்கு ஸ்வபாவமாகிய இவைகளுக்கு ஆத்மாவல்லவோ உத்பத்தி ஸ்தானம்*

இவைகளுந்தத்பத்திஸ்தானம். அதாவது இவைகளுக்குக் காரணமாகியது என்றர்த்தம். த்ருஷ்ணையாவது ஶப்தம் முதலிய விஷயங்களில்உண்டாகும் ஆசை. ஸங்கமாவது புத்ரன், மித்ரர்கள், பந்துக்கள் இவர்களோடு கூடுவதில் ஆசை. அப்படியே ஜீவாத்மாவை க்ரியைகளில் ஆசையை யுண்டாக்கி அதின் வழியாகக்கட்டுப்படுத்துகிறது. க்ரியைகளில்

என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'அதாவது இவைகளுக்குக் காரணமாகியது என்றர்த்தம்' என்று. 1 'க்ஷுத்த்ருஷ்ணே ஶமே' என்றிவை முதலிய ப்ரயோகங்களிருக்கிறபடியினால் தாகம் மாத்திரம் அர்த்தம் என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'த்ருஷ்ணையாவது' என்றாரம்பித்து. இதுதொட்டு அறியக்கூடியதாகிய ஐந்து குணங்களையும் சொல்லியிருக்கிறது. 'புத்ரன்,' என்பது முதலிய அபிமானத்தினாலுண்டாகிய வஸ்துக்களைச்சொல்லுகிறது. 'விஷயத்ருஷ்ணா', 'விஷயவைத்ருஷ்ண்யம்' என்றிவை முதலிய ப்ரயோகங்களிருப்பதனால் 'த்ருஷ்ணா' என்பது இந்த்ரியங்கள் தொட்டறியக்கூடிய எல்லாவற்றையும் சொல்லுகிறது. ஸங்கமென்பதோ மிகுதியாயிருக்கிறபடியினாலும், ப்ரயோகங்களை யனுஸரித்தும், அபிமானமுண்டாகக்கூடிய விஷயங்களைப்பற்றியது என்று தாத்பர்யம். ராகம் முதலியவைகளாலுண்டாகிய அந்தந்த விஷயங்களின் உபாயங்களில் பற்றுதல் இவ்விடத்தில் கர்மஸங்கம் என்னப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. ராகம் த்ருஷ்ணை, ஸங்கம், இவைகளும் மற்றோரிடத்தில் ஸுக விசேஷங்களில் பற்றுதலென்றே சொல்லப்பட்டதுகள். ஜ்ஞானத்திலும் ஸுகத்திலும் ஆசையுண்டானால் அவைகளுக் குபாயங்களாகிய கார்யங்களில் ப்ரவ்ருத்திக்கிறான் என்று சொல்லியிருப்பதினாலேயே ஸத்வகுணத்தினாலும் கர்மங்களில் பற்றுதலுண்டாக்கப்படுகிறது என்றேற்படுகிறது. அப்படியிருக்க எப்படி வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது? என்னில் இதற்கு ஸமாதானம்—ஸத்வ குணம் ஸுகத்தை முக்கியமாகச் செய்து அதற்காக மற்ற விஷயங்களில் பற்றுதலை யுண்டாக்குகிறது. 2 'ப்ரயோஜநேஷு ஸஜ்ஜந்தே ந விஶேஷேஷு பண்டிதா:' என்று சொல்லியிருப்பதைப்போல. ரஜோகுணமோ வெனில் அந்தந்த வஸ்துக்களில் கர்மங்களின் ஸ்வரூபத்தையே முக்யமாக வைத்துக்கொ

1 பசி, தாகம், முதலியவைகளின் சாந்தி.

2 பண்டிதா: - பண்டிதர்கள், ப்ரயோஜநேஷு - ப்ரயோஜநங்களில், ஸஜ்ஜந்தே - ஆசைப்படுகிறார்கள், விஶேஷேஷு-அதில் காரணங்களுடைய விசேஷங்களில், ந - (ஆசைப்படுவது) இல்லை.

ஆசையினால் ஜீவாத்மா எந்தெந்த க்ரியைகளை ஆரம்பிக்கிறானோ அந்தந்த க்ரியைகள் புண்யபாபரூபமாகையினால் அததின்பலத்தையனுபவிப்பதற்குக் காரணமாகிய ஜாதிகளில் உத்பத்திக்குக் காரணங்கள் ஆகின்றன. ஆகையினால் கர்மங்களில் ஆசையை யுண்டாக்கி அதின் வழியாக ரஜோ குணம் ஜீவாத்மாவைக்கட்டுப்படுத்துகிறது. ஆக இத்தால் ரஜோகுணம் ராகம், த்ருஷ்ணை, ஸங்கம், இவைகளுக்குக் காரணம். கர்மங்களில் பற்றுதலுண்டாவதற்குக் காரணம் என்றும் சொல்லப்பட்டதாகிறது. 7

𑌤𑌮𑌸𑍍𑌤𑍍𑌵𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 𑌮𑍋𑌹𑌨𑌂 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 ।
𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌸𑍍𑌤𑌨𑍍𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ॥ 8

ப - ரை] 𑌭𑌾𑌰𑌤 - அர்ஜுந, 𑌤𑌮𑌸𑍍𑌤𑍁 - தமோகுணத்தையோவெனில், 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨𑌜𑌂 - அஜ்ஞானத்தினால் உண்டானதாகவும், 𑌸𑌰𑍍𑌵𑌦𑍇𑌹𑌿𑌨𑌾𑌂 - எல்லாப்ராணிகளுக்கும், 𑌮𑍋𑌹𑌨𑌂 - மோஹத்தையுண்டு பண்ணுவதாகவும், 𑌵𑌿𑌦𑍍𑌧𑌿 - அறி, 𑌤𑌤𑍍 - அந்தத் தமோ குணமானது, 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦𑌾𑌲𑌸𑍍𑌯𑌨𑌿𑌦𑍍𑌰𑌾𑌭𑌿𑌃 𑌪𑍍𑌰𑌮𑌾𑌦 - அஜாக்கிறதை, 𑌆𑌲𑌸𑍍𑌯 - சோம்பல், 𑌨𑌿𑌦𑍍𑌰𑌾 - தூக்கம், இவைகளினால், 𑌨𑌿𑌬𑌧𑍍𑌨𑌾𑌤𑌿 - கட்டுப்படுத்துகிறது. 8

பா] ஜ்ஞானத்தைவிட வேறுபட்டது இவ்விடத்தில் அஜ்ஞானமென்ற

---

*தா] ண்டு அதினாலுண்டாகிய ஸுகம் அல்பமோ அதிகமோ என்கிற விஷயத்தை யோசிக்காமல் உதாஸீனமாக இருந்துவிடுகிறது. இதுவும் ராஜாவினுடைய அந்தப்புர ஸ்த்ரீகளினிடத்தில் ஆசை, கெட்ட குணமுடைய பிள்ளை முதலியவர்களை ஸம்ரக்ஷணம் செய்தல், வ்யர்த்தமான கார்யங்கள், முதலியவைகளில் வ்யக்தமாக விருக்கிறது — என்று. கர்மங்களில் ஸங்கம் ஸம்ஸாரபந்தத்திற்கு வழி என்பது எப்படி என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'க்ரியைகளில் ஆசையினால்' என்றாரம்பித்து. கர்மங்களில் ஆசையைப்போலவே ராகம் முதலியவைகளும் ஸம்ஸாரபந்த முண்டாவதற்குவழி என்று தெரிவிப்பதற்காக மொத்த அர்த்தத்தைச்சொல்லுகிறார்—'ஆக இத்தால்' என்றாரம்பித்து. 'ஆக' என்பதற்கு ராகம் முதலியவைகள் ஸம்ஸாரபந்தமுண்டாக்குவதில் முடிவு பெறுகிறபடியினாலே ப்ரயோஜனத்தோடு கூடியவைகளாகையினால் என்றர்த்தம். 'இத்தால்' என்பதற்கு ஸத்வகுணம் தமோகுணம் இவைகளைவிட வேறுபட்டதாகிய ஸ்வபாவத்தையுடையதென்று கீழ் நிரூபித்திருப்பதினால் என்றர்த்தம். 7*

*மிகவும் பரிகரிக்கவேண்டியது என்கிற வ்யத்யாஸத்தைக் காட்டுவதற்காக '𑌤𑌮𑌸𑍍𑌤𑍁' என்கிற விடத்தில் '𑌤𑍁' என்னும்பதம். '𑌅𑌜𑍍𑌞𑌾𑌨'*

சொல்லப்படுகிறது. ஜ்ஞானமாவது வஸ்துவின் உண்மையைத்தெரிந்து கொள்ளுதல். அதைவிடவேறு பட்டதாவது அதற்கு விரோதமாகிய ஜ்ஞானம். தமோகுணம் வஸ்துவின் உண்மைக்கு விரோதமாகிய ஸ்வபாவத்தைப்பற்றிய ஜ்ஞானத்தினுலுண்டானது. மோஹமாவது விரோதமாகத் தெரிந்து கொள்ளுதல், விரோதமாக அறிவதற்குக் காரணம் என்றர்த்தம். அந்தத்தமோகுணம் அஜாக்கிரதை, சோம்பல், தூக்கம், இவைகளுக்குக் காரணமாகையினுல் அவைகளின் வழியாக ஜீவாத்மாவைக் கட்டுப்படுத்துகிறது. அஜாக்கிரதையாவது செய்யவேண்டிய கார்யங்களைத் தவிர வேறு கார்யங்களில் ப்ரவ்ருத்தி செய்வதற்குக்காரணமாகிய ஸாவதானமில்லாமை. சோம்பலாவது கர்மங்களை ஆரம்பிக்காமல் இருக்கிற

என்னும் பதம் புண்யபாபங்களாகிற கர்மங்களிலும், ஜ்ஞானமில்லாமை முதலியவைகளிலும் ப்ரயோகிக்கப்படுகிறபடியினுல் இங்கே அவைகளை விலக்குவதற்காக மோஹத்தை உண்டுபண்ணுவதற்குத் தகுந்த காரண விசேஷத்தைச் சொல்லுகிறூர்—'ஜ்ஞானத்தை விட வேறுபட்டது' என்று. எல்லா ஜ்ஞானங்களைவிட வேறுபட்டதென்பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறூர்—'ஜ்ஞானமாவது' என்றாரம்பித்து. விரோதமாகிய ஜ்ஞானம் தமோகுணத்தை யுண்டாக்குவது பாபங்களின் அனுஷ்டானம் முதலியவைகளை முன்னிட்டு தமோகுணத்தினுல் உண்டாக்கப்படுவதாக மேலே சொல்லப்போகிற உண்மையாகிய ஸ்வபாவத்திற்கு விரோதமான ஸ்வபாவத்தைப் பற்றிய ஜ்ஞானம் இவ்விடத்தில் 'மோஹ' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறூர்—'மோஹமாவது விரோதமாகத் தெரிந்து கொள்ளுதல்' என்று 'மோஹ' என்னும் பதத்தின் மேலிருக்கிற விபக்தி காரணம் என்பதை மாத்திரம் சொல்லுகிறது என்று சொல்லுகிறூர்— 'விரோதமாக அறிவதற்குக் காரணம் என்றர்த்தம்' என்று. 'ஸாவதானமில்லாமை' என்பது மாத்திரம் 'ப்ரமாத' என்னும் பதத்தின் அர்த்தம். 'செய்யவேண்டிய கார்யங்களை' என்பது முதல் அந்த அஜாக்கிரதை ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகும் விதத்தைச் சொல்லியிருக்கிறது. செய்யத்தகாத கார்யங்களில் ப்ரவ்ருத்தி செய்வது பாபிஷ்டமான ஜன்மம் முதலியவைகளுக்குக் காரணமாகிறது. இப்படியே அவஶ்யம் செய்யவேண்டிய கார்யங்களை ஆரம்பிக்காமலிருப்பதும் [1]அகுர்வந் விஹிதம் கர்ம நிந்திதம் ச ஸமாசரந்। ப்ரஸஜ்ஜம்ஶ்சேந்த்ரியா

1 விஹிதம் - ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட, கர்ம-கர்மத்தை, அகுர்வன்-செய்யாதவனும், நிந்திதம்-கெட்ட கார்யத்தை, ஸமாசரன் - செய்கிற மனிதனும், இந்த்ரியார்த்தேஷு-இந்த்ரியங்களின் விஷயங்களில், ப்ரஸஜ்ஜம்ச-அதிக ஆசை வைத்துக்கொண்டிருக்கிற, நர:-மனிதனும், ப்ராயஶ்சித்தீயதே - ப்ராயஶ்சித்தம் செய்யக்கூடியவனுகிறுன்.

தாகிய ஸ்வபாவம், அதாவது அசங்காமலிருக்கை என்றர்த்தம். ஜீவாத்மா இந்த்ரியங்களைத் தன்தன் கார்யங்களில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்ததினால் உண்டான ஶ்ரமத்தினால் எல்லா இந்த்ரியங்களையும் வ்யாபாரங்களைச் செய்விக்காமல் ஓய்ந்துவிடுவது தூக்கம். அதில் வெளி இந்த்ரியங்களை அதின் வ்யாபாரங்களைச் செய்விக்காமல் ஓய்ந்துவிடுவது ஸ்வப்னம். மனஸ்ஸையும் வ்யாபாரங்களைச் செய்விக்காமல் ஓய்ந்துவிடுவது ஸுஷுப்தி. 8

ப்ர - அ] ஸத்வம் முதலிய குணங்கள் ஸம்ஸாரபந்தத்தை யுண்டாக்குவதற்கு வழியாக இருப்பவைகளில் முக்யமானவைகளைச்சொல்லுகிறார்.—

ஸத்த்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।
ஜ்ஞாநமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9

ப - ரை] பாரத - அர்ஜுந, ஸத்த்வம் - ஸத்வகுணம், ஸுகே - ஸுகத்தில், ஸஞ்ஜயதி - ஆசையையுண்டாக்குகிறது, ரஜ: - ரஜோகுணம், கர்மணி - கர்மத்தில் (ஆசையையுண்டாக்குகிறது), தம: - தமோகுணம், ஜ்ஞாநம் - ஜ்ஞானத்தை, ஆவ்ருத்ய - மறைத்துவிட்டு, ப்ரமாதே - அஜ்ஞாக்கிரதையில், ஸஞ்ஜயதி உத - ஆசையையுண்டாக்குகிறது. 9

---

மெளுஷ்டு ப்ராயஶ்சித்தீயதே நர:॥' என்று ஸ்ம்ருதியில் சொல்லியிருக்கிறார்கள் அல்லவா. 'ஆலஸ்ய' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ரயோஜனத்தையுடைய கார்யங்களிலும் ப்ரவ்ருத்தி செய்வதற்கு விரோதமான ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அதாவது அசங்காமலிருக்கை' என்று. எப்பொழுதும் தமோகுணம் இருந்தபோதிலும் சில ஸமயங்களில் தூக்கத்தினாலுண்டாகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இந்த்ரியங்களை' என்றாரம்பித்து. ஸ்வப்னத்தை இங்கு சொல்லவில்லையே என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிப்பதற்காக ஸ்வப்னம் ஸுஷுப்தி இவை இரண்டும் தூக்கத்தின் உட்பிரிவுகள் என்று காட்டுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. தூக்கம் ஸம்ஸாரபந்தத்தை யுண்டாக்குவது ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களை யனுஷ்டிப்பதற்கு விரோதியாகிய தூங்கத்தகாத காலத்தில் தூங்குவதினாலும், தூங்கக்கூடிய காலத்தில் தூங்காததினாலும் பாபிஷ்டங்களாகிய கனவுமுதலியவைகளினாலும் என்றறியவும் 1 'யுக்தஸ்வப்நாவபோதஸ்ய' என்று சொல்லப்பட்டது. 8

1 பகவத்கீதை-6-17.

பா] ஸத்வகுணம் ஸுகத்தில் ஆசையை முக்யமாகவுடையது. ரஜோ குணம் கர்மங்களில் ஆசையை முக்யமாகவுடையது. தமோகுணம் வஸ்துக்களின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானத்தை மறைத்து விபரீத மான ஜ்ஞானத்திற்குக் காரணமாகையினால் செய்யவேண்டிய கார்யங் களுக்கு விரோதமான கார்யங்களில் ப்ரவ்ருத்தி செய்வதில் ஆசையை முக்யமாகவுடையது. 9

பா - அ] தேஹமாக மாறியிருக்கிற ப்ரக்ருதிக்கு ஸ்வரூபத்தைச்சேர்ந்த வைகள் ஸத்வம் முதலிய குணங்கள். அவைகள் ஸ்வரூபத்தைச் சேர்ந் வைகளாகையினாலேயே எப்பொழுதுமிருக்கின்றனவாகையினால் ஒன் றுக்கொன்று விருத்தமான கார்யத்தை ஏன் உண்டாக்குவதில்லை என் கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—

*ரஜஸ்தமஶ்சாபிபூய ஸத்த்வம் பவதி பாரத ।*
*ரஜஸ்ஸத்த்வம் தமஶ்சைவ தமஸ்ஸத்த்வம் ரஜஸ்ததா ॥* 10

ப — ரை] பாரத - அர்ஜுந, ரஜ: - ரஜோகுணத்தையும், தம: - தமோ குணத்தையும், அபிபூய - அடக்கிவிட்டு, ஸத்த்வம் — ஸத்வகுணம், பவதி - அதிகமாகிறது, ரஜ: - ரஜோகுணம், ஸத்த்வம் - ஸத்வகுணத்தையும், தம ஶ்சைவ - தமோகுணத்தையும் (அடக்கிவிட்டு அதிகமாகிறது), ததா அப்படியே, தம: - தமோகுணம், ஸத்த்வம் — ஸத்வகுணத்தையும், ரஜ: ரஜோகுணத்தையும் (அடக்கிவிட்டு அதிகமாகிறது). 10

---

தா] 'ஸத்த்வம்ஸுகே' என்கிற ஶ்லோகங்களைவிட அர்த்தத்தைப் பிரி த்துக்காட்டுவதினால் புனருக்தி தோஷத்தைப் பரிகரிக்கிறார்—'ஸத்வம் முதலிய குணங்கள்' என்றாரம்பித்து. 'ஸத்வகுணம் ஸுகத்தில் ஆசை யை முக்யமாகவுடையது' என்பதற்கு ஜ்ஞானத்தில் ஆசையும் ஸுகத் திற்காக என்று தாத்பர்யம். 'ரஜோகுணம் கர்மங்களில் ஆசையை முக் யமாகவுடையது' என்பது ராகம், த்ருஷ்ணை முதலியவைகளும் கர்மத் திலேயே முடிவுபெறுகின்றன என்று தாத்பர்யம். முழுமையும் ஜ்ஞா னத்தை மறைத்துவிட்டால் ஸுஷுப்தியாய் விடுமாதலால் அஜ்ஞாக்கிர தை என்கிற பேருடைய தசை உண்டாகாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'வஸ்துவின் உண்மையைப் பற்றிய ஜ்ஞானத்தை மறைத்து' என்றாரம்பித்து. 9

பா] ஸத்வம் முதலிய மூன்று குணங்களும் ப்ரக்ருதியோடு சேர்ந்த ஆத்மாவின் ஸ்வரூபத்தைப் பொறுத்தவைகள். அப்படியிருந்த போதிலும் அநாதி கர்ம வசத்தினாலும், தேஹத்திற்குப் புஷ்டியை யுண்டாக்குகிற ஆஹாரங்களில் வ்யத்யாஸத்தினாலும் ஸத்வம் முதலிய குணங்கள் ஒன்றுக்கொன்று அதிகரித்தும் அடங்கியும் இருக்கின்றன. சில ஸமயத்தில் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் அடக்கி ஸத்வகுணம் அதிகமாக இருக்கிறது. அப்படியே தமோகுணத்தையும் ஸத்வகுணத்தையுமடக்கி ரஜோகுணம் சில ஸமயத்திலும், சிலஸமயத்தில் ரஜோகுணத்தை

---

தா] அடுத்த க்ரந்தம் பொருந்தவில்லை என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிக்கிறார்—'தேஹமாக மாறியிருக்கிற' என்றாரம்பித்து. 'ஒன்றுக்கொன்று விருத்தமான' என்பதற்கு உண்மையைப் பற்றிய ஜ்ஞானம், அதற்கு விரோதமாகிய ஜ்ஞானம், ஸுகத்திலாசை, துக்கத்திலாசை, முதலியவைகளை என்றர்த்தம். குணங்களுக்கு அதிகரிப்பதும் அடங்குவதும் ஒருவித ஏற்பாடு மில்லாமல் வரவேண்டியதாகுமே என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிப்பதற்காகப் பகவானுடைய அநுக்ரஹத்திற்கும் நிக்ரஹத்திற்கும் காரணமாகிய கர்மங்களுக்குப்பரிபாகம் வரவேண்டிய ஸமயங்கள் தனித்தனி ஆகையினால் அதற்குத்தக்கபடி குணங்களுக்கு அடக்கமும் அதிகரிப்பதும்பரம்பரையாகவருகிறதென்பது முசிதந்தான் என்று சொல்லுகிறார்—'அநாதி கர்ம வசத்தினாலும்' என்றாரம்பித்து. எப்படி வாதபித்த கபங்களுக்கு அந்தந்த ஸ்வபாவமுடைய வஸ்துக்களினால் வ்ருத்தியுண்டாகிறதென்று 1 'வ்ருத்தி ஸமாநை ஸர்வேஷாம் விபரீதைர் விபர்யய:' என்று ஆயுர் வேதம் தெரிந்தவர்களே சொல்லுகிறார்களோ அப்படியே இவ்விடத்திலும் மேலே சொல்லப்போகிற ஸத்வகுணம்நிறைந்த ஆஹாரம் முதலியவைகளின் வ்யத்யாஸத்தினால் அந்தந்தக் குணங்கள் வ்ருத்தியடைகின்றன வென்று சொல்லுகிறார்—'தேஹத்திற்குப் புஷ்டியை யுண்டாக்குகிற ஆஹாரங்களில் வ்யத்யாஸத்தினாலும்' என்று. 2 'பிறகு தேவதைகள் அதிகரித்தார்கள், அஸுரர்கள் தோல்வி யடைந்தார்கள்' என்றர்த்த முள்ள ஶ்ருதிவாக்யத்திலே போல 'பவதி' என்பது இவ்விடத்தில் அதிகமாகிறது என்னுமர்த்தத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்— 'அதிகமாக இருக்கிறது'

---

1 அஷ்டாங்க ஹ்ருதயம்-1-14. ஸர்வேஷாம்-எல்லா தாதுக்களுக்கும், ஸமானை:-ஸமமான குணமுள்ள வஸ்துக்களினால், வ்ருத்தி:-வ்ருத்தி (உண்டாகிறது), விபரீதை:-விரோதமான குணமுள்ள வஸ்துக்களினால், விபர்யய:-நாசமுண்டாகிறது.

2 யஜுர்வேதம், 2-வது காண்டம்-3-3-1.

யும் ஸத்வகுணத்தையுமடக்கித் தமோகுணமும் அதிகரித்திருக்கிறது. 10

பா-அ] அதையும் கார்யங்களைப் பார்த்தே அறியவேண்டுமென்று சொல்

𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 𑌦𑍇𑌹𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶 𑌉𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 ।
𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 𑌯𑌦𑌾 𑌤𑌦𑌾 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌦𑍍𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌂 𑌸𑌤𑍍𑌵𑌮𑌿𑌤𑍍𑌯𑍁𑌤 ॥ 11

ப-ரை] 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 - இந்த, 𑌦𑍇𑌹𑍇 - ஶரீரத்தில், 𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁 — எல்லா இந்த்ரியங்களிலும், 𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑍇-ப்ரகாஶம் உண்டாவதில், 𑌯𑌦𑌾- எப்பொழுது, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌂 - ஜ்ஞானம், 𑌉𑌪𑌜𑌾𑌯𑌤𑍇 - உண்டாகிறதோ, 𑌤𑌦𑌾 - அப்பொழுது, 𑌸𑌤𑍍𑌵𑌂 - ஸத்வகுணம், 𑌵𑌿𑌵𑍃𑌦𑍍𑌧𑌂 - வ்ருத்தியடைந்தது, 𑌇𑌤𑌿 - என்று, 𑌵𑌿𑌦𑍍𑌯𑌾𑌤𑍍 - அறியவேண்டும். 11

பா] கண் முதலிய எல்லா இந்த்ரியங்களிலும் எப்பொழுது வஸ்துவின்

---

*என்று. இந்த அதிகமாகவிருக்கையையும், அடங்கியிருப்பதையும் பற்றி உபதேசஞ்செய்திருப்பது ரஜோகுணம் தமோகுணம் அதிகமாகவிருக்கும்பொழுது அவைகளைப் பரிகரிக்க வேண்டுமென்பதற்காக.* 10

*அவைகள் எவ்விதமாக அறியப்பட்டுப் பரிகாரம் செய்யக்கூடியவைகள் என்று க்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமென்று '𑌸𑌰𑍍𑌵𑌦𑍍𑌵𑌾𑌰𑍇𑌷𑍁' என்கிற மூன்று ஶ்லோகங்களுக்கு அவதாரிகை சொல்லுகிறார்— 'அதையும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் '𑌦𑍍𑌵𑌾𑌰' என்னும் பதம் ஶரீரத்திலிருக்கும் ஒன்பது த்வாரங்களைச் சொல்லுகிறதல்ல, பதினொரு இந்த்ரியங்களையும் சொல்லுகிறதல்ல, அவைகளெல்லாம் ஜ்ஞானத்துடன் ஸம்பந்தப் பட்டவைகளல்லவாகையினால். ஆகையினால் ஜ்ஞானம் பரவுவதற்கு வழியாகிய மனதுடன்சேர்ந்து ஆறாகிய ஜ்ஞானேந்த்ரியங்களின் கூட்டத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்— 'கண் முதலிய' என்றாரம்பித்து. '𑌪𑍍𑌰𑌕𑌾𑌶' என்னும் பதம் இவ்விடத்தில் முதல் வேற்றுமையை யுடையதல்ல, '𑌜𑍍𑌞𑌾𑌨' என்னும்பதத்துடன் புனருக்தி வருமாதலால். '𑌪𑍍𑌰𑌕𑌾𑌶𑌃' என்னும் பதத்திற்கு வ்யாக்யானம் ஜ்ஞானமென்னும் பதம் என்று சிலர் சொன்னதும் ஸ்வாரஸ்யமில்லை. ஏழாவது வேற்றுமையையுடையதாகவிருந்தால் ஜ்ஞானத்திற்கு ப்ரயோஜனமாகிய வ்யவஹார யோக்யதையைச் சொல்லுகிறது என்றாவது, ப்ரகாஶிப்பிக்கப்படுகிற ஸ்வரூபம் முதலியவைகளைச் சொல்லுகிறதென்றாவது, '𑌜𑍍𑌞𑌾𑌨' என்னும் பதத்தினால் மனதின் வ்யாபாரத்தைச் சொல்லுகிறது என்றாவது, அந்வயம் சொல்வது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—*'வஸ்துவின் உண்மை ப்ரகாஶிப்பதில்'

உண்மை ப்ரகாசிப்பதில் ஜ்ஞான முண்டாகிறதோ அப்பொழுது அந்தத் தேஹத்தில் ஸத்வம் வ்ருத்தி யடைந்ததென்று அறியவேண்டும். 11

லோப⁴: ப்ரவ்ருத்திராரம்ப⁴: கர்மணாமஶம: ஸ்ப்ருஹா ।
ரஜஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே⁴ ப⁴ரதர்ஷப⁴ ॥ 12

ப-ரை] ப⁴ரதர்ஷப⁴—பரதவம்சத்தில் சிறந்தவனான அர்ஜுந, லோப⁴:—ஆசை, ப்ரவ்ருத்தி: - ப்ரவ்ருத்தி செய்வது, கர்மணாம் - கர்மங்களை, ஆரம்ப⁴: - ஆரம்பிப்பது, அஶம: - இந்த்ரியங்கள் ஓயாமலிருத்தல், ஸ்ப்ருஹா - விஷயங்களில் ஆசை, ஏதாநி - இவைகள், ரஜஸி - ரஜோகுணம், விவ்ருத்தே⁴ - வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது, ஜாயந்தே - உண்டாகின்றன. 12

பா] லோப⁴: - தன்னுடைய பொருளைக் கொடாமை, ப்ரவ்ருத்தி: - ப்ரயோஜனங்களை உத்தேசிக்காமலே வ்யாபாரஞ் செய்யும் ஸ்வபாவம், கர்மணாமாரம்ப⁴:-பலங்களுக் குபாயங்களாகிய கர்மங்களை யாரம்பித்தல், அஶம: - இந்த்ரியங்களுக்கோய் வில்லாமை, ஸ்ப்ருஹா-விஷயங்களில் ஆசை,

---

என்று. இத்தால் ப்ரகாசம் என்பது வெளிச்சம்போல ஜ்ஞானம் என்பது கண்போல என்று சொல்லுகிறவர்கள் நிராகரிக்கப்பட்டார்கள். யோகியாகிய ஸௌபரி முதலிய ஒருவன் ஒரே ஸமயத்தில் அநேக தேஹங்களை யடைந்திருக்கும்பொழுது ஒவ்வொரு தேஹங்களிலும் குணங்கள் தனித்தனியாக வ்ருத்தியடைவது ஸம்பவிக்கலாம் என்று தெரிவிப்பதற்காகவும் ஒரே ஸமயத்தில் மஹாப்ரளயம்முதலிய ஸமயங்களிலேபோல எல்லாருக்கும் இவைகள் ஸமமாக இருக்கின்றன என்பதைப் பரிகரிப்பதற்காகவும் 'அஸ்மிந் தேஹே' என்று விசேஷித்துச் சொல்லப்பட்டது என்று சொல்லுகிறார்—'அப்பொழுது அந்தத் தேஹத்தில்' என்றாரம்பித்து. 11

'லோப⁴: ப்ரவ்ருத்தி:' என்றாரம்பிக்கும் ஶ்லோகத்தில், 'ஸ்ப்ருஹா' என்னும் பதத்திற்குப் புனருக்தியைப் பரிகரிப்பதற்காக ரூடி சக்தியினாலேற்பட்ட 'லோப⁴' என்னும் பதத்தினர்த்தத்தைச்சொல்லுகிறார்— 'தன்னுடைய பொருளைக்கொடாமை' என்று. 'ஆரம்ப⁴:' என்னும் பதம் ஒரு ப்ரயோஜனத்தில் உத்தேசத்தோடு ப்ரவ்ருத்தி செய்வதில் ப்ரயோகிக்கப்பட் டிருக்கிறது. இவ்விடத்திலும் 'கர்மணாம்' என்னும் பதத்தோடு சேர்ந்திருப்பதின் ஸ்வாரஸ்யத்தினாலுமிது ஏற்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் 'ஆரம்ப⁴:' என்னும் பதம் த்ருஷ்டத்திலும்

இவைகள் ரஜோகுணம் வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது உண்டாகின்றன. எப்பொழுது லோபம் முதலியவைகளிருக்கின்றனவோ அப்பொழுது ரஜோகுணம் வ்ருத்தியடைந்ததென்று அறியவேண்டும் என்றர்த்தம். 12

அப்ரகாஶோऽப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதாநி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தந ॥ 13

ப-ரை] குருநந்தந - குருவம்சத்தில் பிறந்தவனாகிய அர்ஜுந, அப்ரகாஶ: – ப்ரகாசமில்லாமை, அப்ரவ்ருத்தி: - ப்ரவ்ருத்திசெய்யாமை, ப்ரமாத: - அஜாக்கிரதை, மோஹ ஏவ - மோஹம், ஏதாநி – இவைகள், தமஸி - தமோகுணம், விவ்ருத்தே - வ்ருத்தி யடைந்திருக்கும்பொழுது, ஜாயந்தே - உண்டாகின்றன. 13

பா] ஜ்ஞானம் உண்டாகாமை, ஒரு கார்யத்திலும் ப்ரவ்ருத்தி செய்யாமை, செய்யத்தகாத கார்யங்களில் ப்ரவ்ருத்தி செய்வதற்குக் காரணமாகிய அஜாக்கிரதை, விபரீதமாகிய ஜ்ஞானம், இவைகள் தமோகுணம் வ்ருத்

---

அத்ருஷ்டத்திலும் உண்டாகிய பலங்களுக்கு ஸாதனங்களாகிய பயிரிடுதல், யஜ்ஞம், முதலியவைகளைச்சொல்லுகிறது. ஆகையினால் 'ப்ரவ்ருத்தி:' என்னும் பதம் இவ்விடத்தில் அதைவிட வேறுபட்ட புல்லேந்துவது அங்க சேஷ்டைகளைச் செய்வது முதலிய வீணான வ்யாபாரங்களைச் சொல்லுகிறது, என்று சொல்லுகிறார்—'ப்ரயோஜனங்களை உத்தேசிக்காமல்' என்றாரம்பித்து. இந்தக் கீழ் இரண்டு பதங்களோடு புனருக்தியைப்பரிகரிப்பதற்காக 'ஶம:' என்பதிவ்விடத்திலப்ரவ்ருத்தி செய்வதற்குக்காரணமாகிய இந்த்ரியங்களின் கொழுப்பு என்று சொல்லுகிறார்—'இந்த்ரியங்களுக் கோய்வில்லாமை' என்று. முன் ஶ்லோகத்தைப் போலவே இவ்விடத்திலும் குணங்கள் வ்ருத்தி யடைந்ததற்கு அடையாளத்தை உபதேசம் செய்திருக்கிறது என்று சொல்லுகிறார்—'எப்பொழுது' என்றாரம்பித்து. 12

'அப்ரகாஶ:' என்கிற ஶ்லோகத்தில் 'ப்ரமாத:' ஆவது தெரிந்துகொள்ளவேண்டிய ஸமயத்திலும் தெரிந்துகொள்ளாமை. ஆகையினால் 'அப்ரகாஶம்', 'ப்ரமாதம்', இவை யிரண்டும்பொதுவாகவும் விசேஷமாகவுமிருக்கிறபடியினால் கோபலீவர்த்தந்யாயத்தையனுஸரித்துப்புனருக்தியில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஜ்ஞானமுண்டாகாமை' என்று. முன்பு சொல்லப்பட்ட தூக்கம் முதலியவைகள் இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. 'அப்ரவ்ருத்தி:'

தியடைந்திருக்கும்பொழுது உண்டாகின்றன. இவைகளைக் கொண்டே தமோகுணம் வ்ருத்தி யடைந்திருக்கிறதென்றறியவேண்டும். 13

யதா ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ப்ரளயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகாநமலாந் ப்ரதிபத்யதே ॥ 14

ப - ரை] தேஹப்ருத் - ப்ராணி, ஸத்த்வே - ஸத்வகுணம், ப்ரவ்ருத்தே - வ்ருத்தியடைந்திருக்கும்பொழுது, ப்ரளயம் - மரணத்தை - யதாயாதி - அடைகிறானே யானால், ததா - அப்பொழுது, அமலாந் - நிர்மலங்களான, உத்தமவிதாம் - மேலான தத்வத்தை யறிந்தவர்களுடைய, லோகாந் - ஸமூஹங்களை, ப்ரதிபத்யதே - அடைகிறான். 14

பா] எப்பொழுது ஸத்வம் வ்ருத்தியடைந்திருக்கிறதோ அப்பொழுது ப்ராணியானவன் மரணத்தை யடைவானே யானால் மேலான தத்வத்தை யறிந்தவர்களுடைய அதாவது ஜீவாத்மாவின் உண்மையை யறிந்தவர்களுடைய அஜ்ஞானமில்லாத ஸமூஹங்களையடைகிறான் அதாவது ஸத்வ குணம் வ்ருத்தி யடைந்திருக்கும் பொழுது மரணமடைந்தவன் ஆத்மாவை யறிந்தவர்களுடைய வம்சத்தில் பிறந்து ஆத்மாவின் உண்மையை யறிவதற்கு உபாயங்களாகிய புண்ய கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்கிறான் என்று சொல்லப்பட்டதாகிறது. 14

---

*ஆவது முன்பு சொன்ன சோம்பேறித் தனம் என்று சொல்லுகிறார்—* '*ஒரு கார்யத்திலும் ப்ரவ்ருத்தி செய்யாமை*' *என்று மோஹம், ப்ரமாதம் என்பதும் முன் சொல்லியவைகளே.* 13

*மரண காலத்தில் ரஜோகுணம் தமோகுணம் வ்ருத்தி யடைவதற்குக் காரணமாகியவைகளை முதலிலேயே பரிகரிக்க வேண்டும் என்பதற்காக மரண காலத்தில் வ்ருத்தி யடைந்த ஸத்வம் முதலிய குணங்களுக்குத் தனித்தனியாகப் பலம் சொல்லப்படுகிறது—இந்த இரண்டு ஶ்லோகங்களால். தேஹத்தின் ப்ரளயத்தைஅபிப்ராயத்தில் வைத்துக் கொண்டு* '*தேஹப்ருத்*' *என்னும் விஶேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—*'*மரணத்தை யடைவானே யானால்*' *என்று.* *

*[இதற்கு மேல் ஐந்து ஶ்லோகங்களுக்குத் தாத்பர்ய சந்த்ரிகை கிடைக்க வில்லை.]*

ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே |

ப - ரை] ரஜஸி - ரஜோகுணம் (வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது), ப்ரளயம் - மரணத்தை, கத்வா - அடைந்து, கர்மஸங்கிஷு - கர்மங்களில் ஆசையுடையவர்களிடத்தில், ஜாயதே - பிறக்கிறன்.

பா] ரஜோகுணம் வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது மரணத்தை யடைந்து பலங்களுக்காகக் கர்மங்களைச் செய்கிறவர்களின் குலங்களில் பிறக்கிறன். அவைகளில் பிறந்து ஸ்வர்கம் முதலிய பலங்களுக்கு ஸாதனமாகிய கர்மங்களைச் செய்ய ஆரம்பிக்கிறன் என்றர்த்தம்.

ததா ப்ரலீநஸ்தமஸி மூடயோநிஷு ஜாயதே || 15

ப - ரை] ததா - அப்படியே, தமஸி - தமோகுணம் (வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது), ப்ரலீந꞉ - மரணமடைந்தவன், மூடயோநிஷு - ஜ்ஞான மில்லாத ஜாதிகளில், ஜாயதே - பிறக்கிறன். 15

பா] அப்படியே தமோகுணம் வ்ருத்தியடைந்திருக்கும் பொழுது மரணமடைந்தவன் ஜ்ஞானமில்லாத ஜாதிகளில் அதாவது நாய், பன்றி, முதலிய ஜாதிகளில் பிறக்கிறன். எவ்வித ப்ரயோஜனங்களையும் அடைய யோக்யதையில்லாதவனுக ஆகிறன் என்றர்த்தம். 15

கர்மண꞉ ஸுக்ருதஸ்யாஹு꞉ ஸாத்விகம் நிர்மலம் பலம் |
ரஜஸஸ்து பலம் து꞉கமஜ்ஞாநம் தமஸ꞉ பலம் || 16

ப - ரை] ஸுக்ருதஸ்ய - ஸுக்ருதமாகிய, கர்மண꞉ - கர்மத்திற்கு, நிர்மலம் - தோஷமில்லாத, ஸாத்விகம் - ஸத்வகுணம் மேலிட்ட, பலம் - ப்ரயோஜனம் (உண்டாகிறதென்று), ஆஹு꞉ - சொன்னர்கள், ரஜஸஸ்து - ரஜோகுணத்திற்கோவெனில், து꞉கம் - துக்கமே, பலம் - ப்ரயோஜனம், தமஸ꞉ - தமோகுணத்திற்கு, அஜ்ஞாநம் - அஜ்ஞானம், பலம் ப்ரயோஜனம். 16

பா] இப்படி ஸத்வகுணம் வ்ருத்தியடைந்திருக்கும்பொழுது மரணத்தை யடைந்து ஆத்மாவையறிந்தவர்களின் குலத்தில் பிறந்தவனுல் அனுஷ்டிக்கப்பட்டதாயும், ப்ரயோஜனங்களில் ஆசையில்லாததாயும என்னுடைய ஆராதனரூபமாயுமிருக்கிற கர்மத்தின் பலம் மறுபடியும் அதற்குமேலான ஸத்வகுணத்தினுல் உண்டாக்கப்பட்டதாயும் துக்கத்தின் ஸம்பந்தமே இல்லாததாயு மிருக்கிறதென்று ஸத்வகுணத்தின் பரிபாகத்தை யறிந்தவர்கள் சொன்னர்கள். மரணகாலத்தில் வ்ருத்தியடைந்த ரஜோகுணத்திற்கு ப்ரயோஜனம் பலங்களுகக ஸாதநமாகிய கர்மங்களில்ஆசையுடை

யவர்களுடைய குலத்தில் பிறப்பது, பலத்திலாசையை முன்னிட்டுக் கர்மங்களை யாரம்பிப்பது, அவைகளின் பலத்தை யனுபவிப்பதற்காக மறுபடியும் பிறப்பது, மறுபடியும் ரஜோகுணம் வ்ருத்தியடைவது, திரும்பவும் பலத்திலாசையை முன்னிட்டுக் கர்மங்களை யாரம்பிப்பது, இப்படிப்பட்ட வரிசையாகிய ஸம்ஸாரத்திலுண்டாகிய துக்கங்கள் நிறைந்திருக்கிறது என்று அந்த ரஜோகுணத்தின் உண்மையை யறிந்தவர்கள் சொன்னார்கள். இப்படியே மரணகாலத்தில் வ்ருத்தியடைந்திருக்கிற தமோகுணத்திற்கு ப்ரயோஜனம் அஜ்ஞானங்களின் பரம்பரையே. 16

பா - அ] அப்படிப்பட்ட அதிகமான ஸத்வகுணம் முதலியவைகளாலுண்டாக்கப்பட்ட நிர்மலமாக விருக்கிறது முதலிய பலம் எது என்னில் சொல்லுகிறார்—

*ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம் ரஜஸோ லோப ஏவ ச |*
*ப்ரமாத மோஹௌ தமஸோ பவதோऽஜ்ஞாநமேவ ச ‖* 17

ப - ரை] ஸத்வாத் - ஸத்வகுணத்தினால், ஜ்ஞாநம் - ஜ்ஞானம், ஸஞ்ஜாயதே - உண்டாகிறது, ரஜஸ: — ரஜோகுணத்தினால், லோப: — ஆசை (உண்டாகிறது), தமஸ: - தமோகுணத்தினால், ப்ரமாதமோஹௌ - அஜாக்கிரதை, மோஹம், இவைகள், பவத: - உண்டாகின்றன, அஜ்ஞாநமேவ ச - அஜ்ஞானமும் உண்டாகிறது. 17

பா] இப்படிப் பரம்பரையாய் உண்டாகிய அதிகமான ஸத்வகுணத்தினால் ஆத்மாவின் உண்மையை நேரில் பார்ப்பதாகிய ஜ்ஞானம் உண்டாகிறது. அப்படியே வ்ருத்தியடைந்திருக்கிற ரஜோகுணத்தினால் ஸ்வர்கம் முதலிய பலங்களிலாசை உண்டாகிறது. அப்படியே வ்ருத்தியடைந்திருக்கிற தமோகுணத்தினால் அஜாக்கிரதையினாலுண்டாகிய கெட்ட கார்யங்களில் ப்ரவ்ருத்தி உண்டாகிறது அதினால் விபரீத ஜ்ஞானம் உண்டாகிறது. அதினால் தமோகுணம் மிகவு மதிகமாகிறது. அதினால் ஜ்ஞானமில்லாமல் போய் விடுகிறது. 17

*ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா: |*
*ஜகந்ய குணவ்ருத்திஸ்தா: அதோ கச்சந்தி தாமஸா: ‖* 18

ப - ரை] ஸத்வஸ்தா: - ஸத்வகுணத்தில் நிஷ்டையுடையவர்கள், ஊர்த்வம்-மேலே, கச்சந்தி-போகிறார்கள், ராஜஸா:-ரஜோகுணம்மேலிட்டவர்கள், மத்யே-நடுவில், திஷ்டந்தி-நிற்கிறார்கள், ஜகந்ய குணவ்ருத்திஸ்தா: - தாழ்ந்த குணத்தினுடைய வ்யாபாரங்களில் நிஷ்டையுடைய, தாமஸா: - தமோகுணம் மேலிட்டவர்கள், அத: - கீழே, கச்சந்தி - போகிறார்கள். 18

பா] இப்படிக்கீழ்ச்சொல்லிய விதமாக ஸத்வகுணத்தில் நிஷ்ட்டையுடையவர்கள் மேலே போகிறார்கள். அதாவது க்ரமமாக ஸம்ஸாரபந்தத்திலிருந்து மோக்ஷமடைகிறார்கள். ரஜோகுணம் ஸ்வர்கம் முதலிய பலங்களில் ஆசையையுண்டாக்குகிறபடியினால் ரஜோகுணம் மேலிட்டவர்கள் பலங்களுக்கு ஸாதனமாகிய கர்மங்களைச் செய்து அவைகளின் பலங்களை யனுபவித்து மறுபடியும் பிறந்து அந்தக் கர்மங்களையே அனுஷ்டிக்கிறார்கள், ஆகையினால் நடுவிலேயே நிற்கிறார்கள். மறுபடியும் திரும்பி வருகிறதாகையினால் அது துக்கம் நிறைந்ததே. தமோகுணம் மேலிட்டவர்களோ வெனில் மேல்மேலே தாழ்ந்ததமோகுணத்தின் வ்யாபாரங்களில் நிஷ்ட்டையுடையவர்களாய் கீழே போகிறார்கள். அதாவது சண்டாளர்களாகுகை, அதிலிருந்து பசுக்களாகவிருக்கை, அதிலிருந்து பூச்சி புழுவாகப்பிறக்கை, அதிலிருந்து ஸ்த்தாவரமாகுகை, அதிலிருந்து புல், பூண்டு, முதலியதாகுகை, அதிலுமிருந்து கல், உலர்ந்த கட்டை, ஓடுகள், முதலியவைகளாகுகை இவைகளை யடைகிறார்கள் என்றர்த்தம். 18

பா-அ] ஆஹார விஶேஷங்களினாலும், ப்ரயோஜனங்களில் ஆசையில்லாமல் செய்கிற ஸுக்ருத கர்மங்களினாலும் பரம்பரையாக வ்ருத்திசெய்யப்பட்ட ஸத்வகுணத்தையுடையவர்கள் குணங்களைத் தாண்டிமேலே போகும் விதத்தைச் சொல்லுகிறார்—

𑌨𑌾𑌨𑍍𑌯𑌂 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 𑌯𑌦𑌾 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 ।
𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 𑌪𑌰𑌂 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 𑌸𑍋𑌽𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 ॥ 19

ப-ரை] 𑌯𑌦𑌾 - எப்போழுது, 𑌦𑍍𑌰𑌷𑍍𑌟𑌾 - அறியுந்தன்மையுடைய ஜீவாத்மா, 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌃 - குணங்களைவிட, 𑌅𑌨𑍍𑌯𑌂 - வேறாகிய, 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 - கர்த்தாவை, 𑌨𑌾𑌨𑍁𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - பார்க்கிறதில்லையோ, 𑌗𑍁𑌣𑍇𑌭𑍍𑌯𑌶𑍍𑌚 - குணங்களைவிட, 𑌪𑌰𑌂 - வேறாகிய ஜீவாத்மாவையும், 𑌵𑍇𑌤𑍍𑌤𑌿 - அறிகிறானோ, 𑌸𑌃 - அவன், 𑌮𑌦𑍍𑌭𑌾𑌵𑌂 - என்னுடைய ஸ்வபாவத்தை, 𑌅𑌧𑌿𑌗𑌚𑍍𑌛𑌤𑌿 - அடைகிறான். 19

---

தா] '𑌊𑌰𑍍𑌧𑍍𑌵𑌂 𑌗𑌚𑍍𑌛𑌨𑍍𑌤𑌿 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑍍𑌥𑌾𑌃' என்று ஸத்வகுணத்தில் நிஷ்ட்டையுடையவனுக்கு மோக்ஷமுண்டென்று சொல்லப்படுகிறதேயானால் அடுத்த மேலே மூன்று குணங்களையுந் தாண்டினவனுக்கு மோக்ஷம் உண்டென்பதோடு விரோதிக்குமே என்று சங்கை வரில் அதற்குஸமாதானமாக மேல் க்ரந்தத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'ஆஹார விஶேஷங்களினாலும்' என்றாரம்பித்து. ஆஹார விஶேஷம் முதலியவைகள் ஸத்வகுணம் வ்ருத்தியடைவதற்குக்காரணமென்பது முன்பின்

பா] இப்படி ஸத்வகுணம் மேலிட்ட ஆஹாரத்தை உட்கொள்ளுவதினுலும், பலங்களில் ஆசையில்லாமல் பகவானுடைய ஆராதனமாகிய கர்மங்களைச் செய்வதினுலும் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையும் எல்லா விதமாகவும் அடக்கி வ்ருத்தி யடைந்திருக்கிற ஸத்வகுணத்தையுடைய அறியுந்தன்மையுடைய இந்த ஜீவாத்மா எப்பொழுது குணங்களைவிட வேருகிய கர்த்தாவைப் பார்க்கிருனே அதாவது குணங்களே தங்களுக்குத் தகுந்த கார்யங்களில் கர்த்தாவாகின்றன என்று பார்க்கிருனே அப்படிக் கர்த்தாவாகிய குணங்களைவிட வேறுபட்ட ஜீவாத்மாவைக் கர்த்த

*ஸந்தர்ப்பங்களினு லேற்பட்டது. ஸம்ஸாரத்திலுண்டாகிய மூன்று குணங்களைத் தாண்டுவதும் அதிகமாக வ்ருத்தியடைந்திருக்கிற ஸத்வ குணத்தினுல் மேலே போவதும் பொருத்தமுடையது என்று தாத்பாயம். 1 'யஜ்ஞஶிஷ்டாஶிநஃ', 2 'போக்தாரம் யஜ்ஞதபஸாம்', 3 'ரஜஸ்தமஶ்சாபிபூய ஸத்த்வம் பவதி பாரத' என்று முன் சொல்லியிருப்பவைகளை யனுஸரித்து இந்த ஸந்தர்ப்பத்திற்கு உசிதமான அர்த்தத்தைச் சொல்லுகிருர்—'இப்படி ஸத்வகுணம் மேலிட்ட' என்ருரம்பித்து. 'எல்லாவிதமாகவும்' என்பதற்கு மறுபடியும் உண்டாகாமல் என்றர்த்தம். 'நாந்யம் குணேப்ய: கர்தாரம்' என்றது குணங்களைத் தவிர வேறொன்றுக்குக் கர்த்ருத்வமில்லை யென்று சொல்லுகிறது. அதில் கர்த்தாவாகிய ஆத்மா குணங்களைவிட வேறு அல்ல என்று அர்த்தம் என்கிற புத்தி உண்டாகவேண்டாம் என்று சொல்லுகிருர்— 'அதாவது குணங்களே' என்ருரம்பித்து. ஜீவாத்மாவின் ஸ்வபாவமாகிய ப்ரயத்னத்திற்கிருப்பிடமா யிருக்கையாகிய கர்த்ருத்வத்தை விலக்குவதற்காகச்சொல்லுகிருர்—'தங்களுக்குத்தகுந்த கார்யங்களில்' என்று. ஏதாவது ஒரு விஷயத்தில் குணங்களே கர்த்தாவென்று தெரிந்துகொள்ளுவது ஆத்மாவை யறியாதவர்களுக்கும் ஸம்பவிக்குமாதலால் அவர்களைவிட விசேஷம் சொல்லப்படுகிறது 'குணேப்யஶ்ச' என்ருரம்பித்து. 'பரம்' என்பது கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஆகாரத்தினுல் என்று சுருக்கிச்சொல்லுவதற்காகச் சொல்லுகிருர்—கர்த்தாவாகிய குணங்களைவிட' என்று. 'பரம்' என்று சொல்லியிருப்பதினுல் கர்த்தாவாகிய குணங்களைவிட மேலானது என்றர்த்தம் என்கிற புத்தியை விலக்குகிறது 'வேறுபட்ட' என்பது. குணங்கள் ஒன்றுக்கொன்று வெவ்வேருக விருப்பதைப்போலவே ஜீவாத்மாவும் குணங்களைவிட வேறுபட்டவ*

1 பகவத்கீதை-3-13.
2 பகவத்கீதை-5-29.
3 பகவத்கீதை-14-10,

வல்லாதவனைகப்பார்க்கிறானோ அவன் என்னுடைய ஸ்வபாவம் எதுவோ அதை அடைகிறான். இத்தால் சொல்லப்பட்டதாவது ஸ்வபாவத்தில் பரிசுத்தமான ஸ்வபாவத்தையுடைய ஜீவாத்மாவிற்கு அநேக விதமான கர்மங்களில் கர்த்தாவாக இருக்கை முன்பு செய்த கர்மங்களாலுண்டாகிய குணங்களின் சேர்க்கையினாலுண்டானது. ஆத்மாவோ ஸ்வபாவத்

னாக விருந்தபோதிலும் கர்த்தாவாக விருக்கை விருத்தமல்லவே என்றாக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாகக் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸ்வபாவமில்லாமையே 'வேறுபட்ட' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று சொல்லுகிறார்—'கர்த்தாவல்லாதவனாக' என்று. குணங்களை யாதாரமாகவுடைய ப்ரவ்ருத்திகளுக்கு ஆதாரமல்லாதவனாகவும் ஸ்வபாவத்தில் அந்தக் குணங்களினால் ப்ரவ்ருத்திக்கத்தகாதவனாகவும் என்றர்த்தம். ஸ்வரூபம் ஒன்றென்கிற ப்ரமத்தை விலக்குவதற்காக மேலே சொல்லப்போகிற க்ரந்தம் என்கிற அபிப்ராயத்தினால் 'ஜ்ஞாவ' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'என்னுடைய ஸ்வபாவம் எதுவோ' என்று. குணங்களே கர்த்தா என்கிற ஜ்ஞானம் இவ்விடத்தில் உபயோகமில்லாதது. ஆத்மா கர்த்தாவல்லாதவனென்பதோ வெனில், 1 'கர்த்தா ஶாஸ்த்ரார்த்தவத்த்வாத்' என்றிவை முதலிய ப்ரமாணங்களுக்கு விருத்தம் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இத்தால் சொல்லப்பட்டதாவது' என்றாரம்பித்து. புண்ய பாபங்களாகிய கர்மங்களிலும் லோகத்திலேற்பட்டகர்மங்களிலும் கர்த்தாவாகவிருக்கை ஜீவாத்மாவிற்கு ஸ்வபாவத்திலேற்பட்டதல்லவே யொழிய ப்ரயத்தனத்திற்கிருப்பிடமாயிருக்கை ஸ்வபாவத்திலேற்பட்டதில்லை யென்பதில்லை என்கிற அப்பிராயத்தினால் சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தில்' என்றாரம்பித்து. இத்தால் ஶ்லோகத்தில் 'பரம்' என்னும் பதம் பரமாத்மாவைச் சொல்லுகிறது என்பது அபிப்ராயமல்ல என்று காட்டப்பட்டது. 'அநேகவிதமான கர்மங்களில்' என்பதற்கு ஸம்ஸாரத்திலுண்டாகிய ஸாத்விகமாயும் ராஜஸமாயும் தாமஸமாயுமிருக்கிற கர்மங்களில் என்றர்த்தம். ஆத்மாவோ ஸ்வபாவத்தில் கர்த்தாவல்ல என்பது குணங்களினால் செய்யப்பட்ட மேல்சொன்ன கர்மங்களிலேயே, அப்படிச் சொல்லாவிடில் 2 'ஸாப்பிட்டுக்கொண்டும் விளையாடிக்கொண்டிருக்கிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளுக்கு விரோதம் வருகிறபடியினால். இவ்விடத்தில் 'ஜ்ஞாவம்' என்பதற்கு ஐக்

1 ஶாரீரகஸூத்ரம்-2-3-33.

2 சாந்தோக்யம்-8-12-3.

தில் கர்த்தாவல்ல. அளவில்லாத ஜ்ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாக வுடையவன் என்றிப்படி ஜீவாத்மாவை எப்பொழுது பார்க்கிருனே அப்பொழுது என்னுடைய ஸ்வபாவத்தை யடைகிருன். 19

பா - அ] கர்த்தாவாகிய குணங்களைவிட வேறுபட்டவனுய் கர்த்தாவல் லாதவனுகிய ஜீவாத்மாவைப் பார்க்கிறவன் பகவானுடைய ஸ்வபாவத்

---

யம் அர்த்தமென்று தோன்றும். அது 1 'ஸாதர்ம்யமாகதா:' என்று முன் சொல்லியிருப்பதற்கு விருத்தமாகும். ஶ்ருதியும் 2 'மேலான ஸாம்யத்தை யடைகிருன்' என்றல்லவோ சொல்லுகிறது. மற்ருெரு ஶ்ருதியிலும் 3 'கௌதம,எப்படி சுத்தமான ஜலத்தில் மற்ருெருசுத்த மானஜலம் விடப்பட்டதாய் அப்படியேயாய்விடுகிறதோ அவ்வித மாகவே ஆத்மஜ்ஞானமுடைய யோகியினுடைய ஆத்மா ஆகிறது' என்றர்த்தமுள்ள வாக்யமும் சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் இர ண்டுவிதமான ஜலங்கள் சேர்ந்தபோதிலும் இரண்டினுடைய ஸ்வரூபம் ஒன்றென்பது ஸம்பவிக்காதாகையினுலும், 'அப்படியே' என்கிற பதத் தின் ஸ்வாரஸ்யத்தினுலும் ஸமம் என்கிறதையே சொல்லுகிறது என் பது வ்யக்தமாக இருக்கிறது. வஸிஷ்ட ரிஷியும் ஜனகருக்கு 4 'பரேண பரமதர்மா ச ஸமேத்ய பவதி। விஶுத்தர்மா ஶுத்தேந புத்தேந ஸபுத்திமாந்॥ விமுக்தர்மா முக்தேந ஸமேத்ய பவதி ததா। வியோகதர்மிணா சைவ வியோகாத்மா பவத்யபி॥ விமோக்ஷிணா விமோக்ஷீ ச ஸமேத்யேஹ ததா பவேத்। ஶுசி கர்மா ஶுசிஶ்சைவ பவத்யமித த்யுதி:॥ விமலாத்மா பவத்யேவ ஸமேத்ய விமலாத்மநா। கேவலாத்மா ததா சைவ கேவலேந ஸமேத்ய வை॥ ஸ்வதந்த்ரஶ்ச ஸ்வதந்த்ரேண ஸ்வதந்த்ரத்வமவாப்நுயாத்॥' என்று சொன்னர். 19

ஆக இப்படி அநேகம் ஶ்ருதி ஸ்ம்ருதி முதலியவைகளுக்கு விருத் தமாகிய முக்தன் பகவானுகிருன் என்பது எப்படிச் சொல்லப்படுகி றது என்ருக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக கீழ்ச்சொல்லப்பட்ட அர்த்தத்தை 'கர்த்தாவாகிய' என்ருரம்பித்து அநுவாதஞ் செய்துகொ

---

1 பகவத்கீதை-14-2.

2 முண்டகோபநிஷத்-3-1-3.

3 கடோபநிஷத்-2-4-15.

4 பாரதம்—சாந்திபர்வம்-313-26-30. ஏஷ:-இந்த ஜீவாத்மா,பரேண-பரமாத் மாவுடன், ஸமேத்ய-சேர்ந்து, பரதர்மா-பரமாத்மாவின் ஸ்வபாவங்களை யுடையவ னுக, பவதி-ஆகிருன்,சுத்தேந-அவித்யையில்லாத (பரமாத்வுடன் சேர்ந்து),விசுத்த தர்மா - அவித்யையில்லாமையை ஸ்வபாவமாகவுடையவனுகவும், புத்தேந-எல்

தை யடைகிறானென்று சொல்லப்பட்டது. அந்தப் பகவானுடைய ஸ்வ பாவமேப்படிப்பட்டது என்றாக்ஷேபம் வருகிறபடியினால் அதற்கு ஸமா தானஞ் சொல்லுகிறார்—

*குணாநேதாநதீத்ய த்ரீந் தேஹீ தேஹஸமுத்பவாந் |*
*ஜந்மம்ருத்யுஜராது:கைர்விமுக்தோऽம்ருதமஶ்நுதே ‖* 20

ப - ரை] தேஹீ - தேஹத்தையுடைய ஜீவாத்மா, தேஹஸமுத்பவாந் - தேஹத்திலுண்டாகிய, ஏதாந் - இந்த, த்ரீந் - மூன்று, குணாந் - குணங்களை, அதீத்ய - தாண்டி, ஜந்மம்ருத்யுஜராது:கை:—ஜந்ம - பிறப்பு, ம்ருத்யு - மரணம், ஜரா - கிழத்தனம் இவைகளாலுண்டாகிய, து:கை: — துக்கங்களினால், விமுக்த: - விடப்பட்டவனாய், அம்ருதம் - மரணமில்லாத ஆத்மாவை, அஶ்நுதே - அநுபவிக்கிறான். 20

ண்டு மேல் ஶ்லோகத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'அந்தப் பக வானுடைய ஸ்வபாவம்' என்றாரம்பித்து. 'தேஹஸமுத்பவாந்' என் கிறவிடத்தில் தேஹம் உண்டாவதற்குக் காரணங்களாகிய என்று மற்ற வர் வ்யாக்யானஞ் செய்தது *யுக்தமல்ல. 1 'குணா: ப்ரக்ருதிஸம்ப வா:' என்கிறவிடத்திலே போல இவ்விடத்திலும் ப்ராக்ருதியின் மாறுத லாகிய தேஹத்தை இருப்பிடமாக உடையவைகள் என்று சொல்லுவ

லாம் தெரிந்தவனாகிய(பகவானுடன்சேர்ந்து),ஸ:-அந்தஜீவாத்மா,புத்திமாந்-எல்லா விஷயங்களைப்பற்றிய அறிவையுடையவனாகவும், முக்தேந-ஸம்ஸாரபந்தமில்லாத பரமாத்மாவுடன், ஸமேத்ய-சேர்ந்து, ததா - அப்பொழுது,விமுக்ததர்மா-ஸம்ஸார பந்தமில்லாமையை ஸ்வபாவமாக உடையவனாகவும், பவேத்-ஆவான். வியோக தர்மணா-துக்கமில்லாமையை ஸ்வபாவமாகவுடைய பகவானுடன்(சேர்ந்து),வியோ காத்மா-துக்கமில்லாமையை ஸ்வபாவமாகவுடையவனாகவும், பவதி-ஆகிறான், விமோக்ஷிணா-பேராநந்தத்தையுடைய பகவானுடன், ஸமேத்ய-சேர்ந்து, ததா-அப் பொழுதே, விமோக்ஷீச-பேராநந்தத்தை யுடையவனாக,பவேத்-ஆவான். ஶுசிநா-கர்ம ஸம்பந்தங்களில்லாத பகவானுடன் சேர்ந்து, ஶுசி:-கர்ம ஸம்பந்தங்க ளில்லாதவனாக வும்,அமிததீப்திமாந்-அளவில்லாத ப்ரகாசத்தையுடையவனாகவும், பவதி-ஆகிறான், விமலாத்மநா-ஸத்வம் முதலிய மூன்று குணங்களில்லாத ஸ்வரூபத்தையுடைய பகவானுடன், ஸமேத்ய - சேர்ந்து, ஏஷ:-இந்த ஜீவன், விமலாத்மா-ஸத்வம் முதலிய குணங்களில்லாத ஸ்வபாவத்தை யுடையவனாக, பவதி-ஆகிறான், கேவ லேந - ப்ராக்ருத ஶரீரமில்லாத பகவானுடன், ஸமேத்ய-சேர்ந்து, கேவலாத்மா- ப்ராக்ருத ஶரீரங்களில்லாதவனாக (ஆகிறான்), ஸ்வதந்த்ரேண - கர்மங்களுக்கு வசப்படாத பகவானுடன் சேர்ந்து, ஸ்வதந்த்ரத்வம்-ஸ்வதந்த்ரனான பகவானுடைய ஸாம்யத்தை, அவாப்நுயாத் - அடைவான்.

1 பகவத்கீதை-14-5.

பா] இந்த ஜீவாத்மா தேஹமாக மாறியிருக்கிற ப்ரக்ருதியிலுண்டாகிய இந்த ஸத்வம் முதலிய மூன்று குணங்களையும் தாண்டி அவைகளைவிட வேறுபட்டவனாய்ஜ்ஞானமொன்றையே ஆகாரமாகவுடைய ஆத்மாவைப் பார்த்தவனாய் பிறப்பு, மரணம், கிழத்தனம் இவைகளாலுண்டான துக்கங்களால் விடப்பட்டவனாய் அழிவில்லாத ஆத்மாவையனுபவிக்கிறான். இதுதான் என்னுடைய ஸ்வபாவம் என்றர்த்தம். 20

பா - அ] பிறகு மூன்று குணங்களையுந் தாண்டியிருப்பவனுடைய ஸ்வரூபத்தைத் தெரிவிக்கக்கூடிய அனுஷ்டானங்களின் விதத்தையும் குணங்களைத் தாண்டுவதற்குக் காரணத்தையும் கேட்டுக்கொண்டு அர்ஜுனன் சொன்னான்—

அர்ஜுந உவாச ||

அர்ஜுநஃ—அர்ஜுனன், உவாச—சொன்னான்.

கைர்லிங்கைஸ்த்ரீந் குணாநேதாநதீதோ பவதி ப்ரபோ|
கிமாசாரஃ கதம் சைதாம்ஸ்த்ரீந் குணாநதிவர்ததே || 21

ப - ரை] ப்ரபோ - ப்ரபுவாகிய ஸ்ரீக்ருஷ்ணா, ஏதாந் - இந்த, த்ரீந் குணாந் - மூன்று குணங்களையும், அதீதஃ-தாண்டியிருப்பவன், கைஃ-எந்த, லிங்கைஃ - அடையாளங்களோடு (கூடியவனாக), பவதி - ஆகிறான், கிமாசாரஃ - எவ்வித அனுஷ்டானத்தையுடையவன், கதம்-எப்படி, ஏதாந் - இந்த, த்ரீந் - மூன்று, குணாந் - குணங்களை, அதிவர்ததே – தாண்டுகிறான். 21

---

...த யுக்தமாகையினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—தேஹமாக மாறியிருக்கிற' என்றாரம்பித்து. மேலே சொல்லப்போகிற ...திதமாகக் குணங்களைத்தாண்டுவது பத்தனாகவிருக்கும் தசையிலேயே ...என்று சொல்லுகிறார்—'மூன்று குணங்களையும்தாண்டி அவைகளைவிட வேறுபட்டவனாய்' என்றாரம்பித்து. 'ஜந்மம்ருத்யுஜராதுஃகைஃ' ...என்பதற்கு அவைகளாலுண்டாகிய துக்கங்களினால் என்றர்த்தம். ஜன்மம் முதலியவைகளினாலும் அவைகளினாலுண்டாகிய துக்கங்களினாலும் என்றாகவுமாம். 'மோக்ஷம் ப்ராப்நோதி' என்று கீழ்ச்சொல்லப்பட்டது தானே 'விமுக்தோऽம்ருதமஶ்நுதே' என்பதனால் விவரிக்கப்பட்டது என்று சொல்லுகிறார்—'ஆத்மாவையனுபவிக்கிறான்' என்று. இதுதான் என்னுடைய ஸ்வபாவம்' என்கிறவிடத்தில் 'இதுதான்' என்பதற்கு ஶ்ருதிமுதலியவைகளுக்கு விருத்தமானதல்ல என்றர்த்தம்.20

பா] ஸத்வம் முதலிய இந்த மூன்று குணங்களையும் தாண்டியிருப்பவன் எந்த அடையாளங்களோடு கூடியவனாக விருக்கிறான். இவன் எவ்வித மான அனுஷ்ட்டானத்தோடு கூடியவன். இவனுடைய ஸ்வரூபத்தை யறிவதற்கு அடையாளமாகிய அனுஷ்ட்டானம்எப்படிப்பட்டது என்றார்த்

---

*தா] இவ்விடத்தில் தன்னுடைய தசையைநிரூபித்துக்கொள்ளுவதற்கா கக்கேழ்க்கிற அர்ஜுநனுடையகேள்விக்குஅவதாரிகைசொல்லுகிறார்— 'பிறகு' என்றாரம்பித்து. 'கைர்லிங்கை:', 'கிமாசார:' என்கிற இர ண்டு பதங்களும் உள்ளே இருக்கிற ஸ்வபாவங்களையும், வெளியிலிருக் கும் ஸ்வபாவங்களையும் சொல்லுகிறதாகையினால் ஒருவகுப்பைச்சேர்ந் ததென்பதையும், 'கதம்'என்பதுஉபாயத்தைப்பற்றியதனியானகேழ் வி என்பதையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்— 'ஸ்வரூபத்தைத் தெரிவிக்கக்கூடிய அனுஷ்ட்டானங்களின்விதத்தையும் குணங்களைத் தாண்டுவதற்குக் காரணத்தையும்' என்று. 'லிங்க' என் னும் பதம் வேஷம் முதலியவைகளிலும் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிற படியினால் அது 'நலிங்கம்ஸ்யாத்காரணம்' என்று சொல்லியிருப்பதினா லே குணங்களைத் தாண்டியிருப்பவனுக்கு அடையாளமென்பது பொரு ந்தாதாகையினாலும் மனதிலிருக்கிற சாந்தி முதலிய அஸாதாரணமான ஸ்வபாவங்களைச் சொல்லுகிறது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'எந்த அடையாளங்களோடு' என்று. 'கிமாசார:' என் னும் பதத்திற்குஇவனுடைய ஆசாரம்எதுஎன்று பஹுவ்ரீஹி சொல் லவேண்டும் என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்— 'எவ்விதமான அனுஷ்ட்டானத்தோடு கூடியவன்'என்று. இவ்விடத்தில் 'ஆசார' என்னும்பதம் அஸாதாரணமான வெளியிலுண்டாகிய அடை யாளங்களைச் சொல்லுகிறதுஎன்றுசொல்லுகிறார்—'இவனுடைய ஸ்வ ரூபத்தை' என்றாரம்பித்து. தன்னால் அறியக்கூடியவைகளாகிய மனதில் இருக்கும் ஸ்வபாவங்களால் தன்னிடத்தில் குணங்களைத் தாண்டியிரு ப்பது தனக்கே தோன்றும், அப்படியிருந்த போதிலும் அயலாரிடங் களில் வெளியிலுண்டான அனுஷ்ட்டானங்களைக்கொண்டு அதைஊஹி க்கவேண்டுமாகையினால் அதற்காகத் தனித்துக்கேட்டிருக்கிறது,என் று தாத்பர்யம். 'கதம்' என்னும் பதம் இவ்விடத்தில் உபாயங்களின் விதத்தைச் சொல்லுகிறது என்பது பதில் சொல்லுகிற வார்த்தையை யனுஸரித்து ஏற்படுகிறபடியினால், அது ஸம்பவிக்காது என்கிற அர்த் தத்தைச் சொல்லுகிறது என்பதையும், பலதசையைப்பற்றிச்சொல்லு*

தம். எந்த உபாயத்தினால் ஸத்வம் முதலிய மூன்று குணங்களையும் தாண்டுகிறான். 21

ஶ்ரீபகவாநுவாச ॥

ஶ்ரீபகவாந் - ஶ்ரீபகவானாகிய க்ருஷ்ணன், உவாச - சொன்னார்.

ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ।
ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி ॥ 22

ப - ரை] பாண்டவ - அர்ஜுந, ஸம்ப்ரவ்ருத்தாநி - உண்டான ப்ரகாஶம் ச - ப்ரகாசத்தையும், ப்ரவ்ருத்திம் ச - ப்ரவ்ருத்தியையும், மோஹமேவ ச - அஜ்ஞானத்தையும் (ஆகிய இவைகளைக்குறித்து), ந த்வேஷ்டி - த்வேஷம் செய்கிறதில்லை, நிவ்ருத்தாநி - இல்லாமலிருக்கிற மேற்கூறிய வைகளை, ந காங்க்ஷதி - ஆசைப்படுகிறதில்லை. 22

பா] ஆத்மாவைத் தவிர வேறாகிய அநிஷ்டமாகிய வஸ்துக்கள் விஷயத்திலுண்டாகிய ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, இவைகளின் கார்யங்களாகிய ப்ரகாசம், ப்ரவ்ருத்தி, மோஹம், என்று பேருடையவைகளை எவன் த்வேஷிக்கிறதில்லையோ, அப்படியே ஆத்மாவைத் தவிர வேறாகிய இஷ்ட

---

*கிறது என்பதையும் விலக்குகிறார்—'எந்த உபாயத்தினால்' என்றாரம்பித்து.* 21

'ஆத்மாவைத் தவிர வேறாகிய' என்பது *முதலியவைகளுக்குக் கருத்தாவது ஆத்மாவைத் தவிர வேறாகிய வஸ்துக்கள் இஷ்டங்கள் என்றும் அநிஷ்டங்கள் என்றும் இரண்டு விதம். அவைகளில் அநிஷ்ட வஸ்துக்களும் அவைகளின் காரணங்களும் உண்டாகும் பொழுது அவைகளில் த்வேஷமும், இஷ்டவஸ்துக்களும் அவைகளின் காரணங்களுமில்லாமலிருக்கும்பொழுது அவைகளில் ஆசையும், லோகத்திலேற்பட்டது. அவைகளில் அநிஷ்டமான ப்ரயோஜனங்களுக்கு ஸாதனங்களாக ஏற்பட்ட குணங்களின் கார்யங்களை எவன் த்வேஷிக்கிறதில்லையோ, இஷ்டமான ப்ரயோஜனங்களுக்கு ஸாதனமாக இருந்து கிடைக்காமற் போன அவைகளை மறுபடி ஆசைப்படுகிறதில்லையோ. ப்ரகாசம் அநிஷ்டத்திற்கு ஸாதனம் என்பது பயம் முதலியவைகளுக்குக் காரணமாகிய வஸ்துக்கள் விஷயத்தில் வ்யக்தமாயிருக்கிறது. இஷ்டத்திற்கு ஸாதனமென்பதும் ப்ரியமான விஷயங்களிலேற்பட்டிருக்கிறது. ப்ரவ்ருத்தியும் அபத்யம், மருந்து, முதலியவைகளைப்பற்றிய விஷயங்களில் அநிஷ்டம் இஷ்டங்களுக்கு ஸாதனமெனபது மேற்பட்டிருக்கிறது. மோஹமும் அநுகூல வஸ்துக்களில் ப்ரதிகூலமென்று புத்தி யுண்டாகும்*

மான வஸ்துக்கள் விஷயத்தில் இல்லாத மேற் கூறியவைகளைப் பற்றி ஆசைப்படுவதுமில்லையோ. 22

உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே ।
குணா வர்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ॥ 23

ப - ரை] ய꞉ - எவன், உதாஸீநவத் - உதாஸீநனைப்போல, ஆஸீந꞉ - இருந்துகொண்டு, குணை꞉ - ஸத்வம் முதலிய குணங்களினால், ந விசால்யதே - அசைக்கப்படுகிறதில்லையோ, குணா꞉ - குணங்கள், வர்தந்தே - (தன்னுடைய கார்யங்களில்) இருக்கின்றன, இத்யேவ - என்று நினைத்துக்கொண்டு, ய꞉ - எவன், அவதிஷ்டதி - பேசாமலிருக்கிறானோ, நேங்கதே - தான் ஒன்றும் செய்கிறதில்லையோ. 23

பா] குணங்களைத்தவிர வேறாகிய ஆத்மாவைப் பார்ப்பதினாலுண்டாகிய த்ருப்தியினால் மற்ற விஷயங்களில் உதாஸீநனைப்போ லிருந்துகொண்டு ஸத்வம் முதலிய குணங்களினால் த்வேஷம் ஆசை இவைகளை முன்னிட்டு எவன் அசைக்கப்படுகிறதில்லையோ, குணங்கள் தங்கள் கார்யங்க

*பொழுதும், ப்ரதிகூல வஸ்துக்களில் அநுகூலமென்று புத்தி யுண்டாகும் பொழுதும், அநிஷ்டம் இஷ்டம் இவைகளுக்கு ஸாதனமாகிறது என்பது த்வேஷம் ஆசை இவைகளை மறுப்பதற்கு அவைகளில் ப்ரஸ்தாவம் வேண்டுமே அதற்காக இஷ்டமென்றும் அநிஷ்டமென்றும் சொல்லியிருக்கிறது.* 22

*ஶரீரத்தோடுகூட இருப்பவன் இஷ்டம் அநிஷ்டம் இவைகளின் காரணம் நேர்ந்தபொழுது எப்படி விகாரங்களை யடையாமலிருப்பான் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்—இந்த ஶ்லோகம். ஆத்மாவைத் தவிர வேறு விஷயங்களில் உதாஸீநனாயிருக்கை குணங்களின் கார்யங்களில் த்வேஷமும் ஆசையும் இல்லாமலிருப்பதற்குக் காரணம். 'அசைக்கப்படுகிறதில்லையோ' என்பதற்கு வெளி விஷயங்களில் கார்யங்களின் வழியாக ப்ரவ்ருத்திப்பிக்கப்படுகிறதில்லையோ என்றர்த்தம். அசைக்கப்படாம லிருக்கையை விவரிப்பதற்காக 'த்வேஷம் ஆசை இவைகளை முன்னிட்டு' என்று அசங்குதலின் விதத்தைச் சொல்லியிருக்கிறது. 1 'குணா குணேஷு வர்தந்தே' என்று கீழ்ச்சொல்லியிருப்பதும் 'குணா வர்தந்தே' என்பதும் ஒரே அர்த்தத்தைச்சொல்லுகிறது என்பதைக் காட்டிக்கொண்டு அசைக்கப்படாம லிருப்பதின் காரணத்தைச் சொல்லுகிறார்—'குணங்கள் தங்கள் கார்யங்களில்' என்றாரம்பித்து. 'இதி' என்று சொல்லியிருப்பது அநுஸந்தானஞ் செய்*

1 பகவத்கீதை-3-28.

ளாகிய ப்ரகாசம் முதலியவைகளில் இருக்கின்றன என்று நினைத்துக் கொண்டு எவன் பேசாமலிருக்கிறானோ, அந்தக் குணங்களின் கார்யங்களுக்குத் தக்கபடி தான் ஒன்றும் செய்கிறதில்லையோ. 23

ஸமது:₂க²ஸுக²: ஸ்வஸ்த²: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந: |
துல்யப்ரியாப்ரியோ தீ⁴ரஸ் துல்யநிந்தா³த்மஸம்ஸ்துதி: || 24

மாநாபமாநயோஸ் துல்யஸ் துல்யோ மித்ராரிபக்ஷயோ: |
ஸர்வாரம்ப⁴பரித்யாகீ³ கு³ணாதீத: ஸ உச்யதே || 25

ப-ரை] ஸமது:க²ஸுக²: -துக்கம், ஸுகம், இவைகளில் ஸமமான மனதையுடையவன், ஸ்வஸ்த²: ஆத்மாவினிடத்திலேயே இருப்பவன், ஸமலோஷ்டாஶ்மகாஞ்சந:-ஓட்டாஞ்சல்லி, கல், தங்கம், இவைகளை ஸமமாக நினைப்பவன், துல்யப்ரியாப்ரிய: - இஷ்டம், அநிஷ்டம், இவைகளில் ஸமமான மனதையுடையவன், தீ⁴ர: - தேஹாத்ம விவேகமுள்ளவன், துல்யநிந்தா³த்மஸம்ஸ்துதி: - தன்னை நிந்திப்பதையும் ஸ்தோத்திரம் செய்வதையும் ஸமமாக நினைப்பவன், மாநாபமாநயோ:-பஹுமானம், அவமானம், இவைகளில், துல்ய: - ஸமமாக விருப்பவன், மித்ராரிபக்ஷயோ: - ஸ்நேகிதன், சத்ரு, இவர்கள் பக்ஷங்களில், துல்ய: - ஸமமாக விருப்பவன், ஸர்வாரம்ப⁴பரித்யாகீ³ - எல்லாக் கர்மங்களின் ஆரம்பத்தை விட்டவன் (எவன் இப்படிப்பட்டவனோ), ஸ: - அவன், கு³ணாதீத: - குணங்களைத் தாண்டினவனாக, உச்யதே - சொல்லப்படுகிறான். 24–25

---

யும் விதத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'நினைத்துக் கொண்டு' என்று. 'ஏவ' என்பதின் அபிப்ராயத்திலிருக்கு மர்த்தத்தைச் சொல்லுகிறார்—'பேசாமல்' என்று. 'அவதிஷ்டதி' என்கிற விடத்தில் 'அவதிஷ்டதே' என்று ஆத்மநே பதமாகச் சொல்லில் இந்த வ்ருத்தத்திற்குக்கெடுதல் வரும் என்று பயந்து ருஷியினால் பரஸ்மைபதமாய் ப்ரயோகிக்கப்பட்டது என்று தாத்பர்யம். தங்கள் கார்யங்களில் ப்ரவ்ருத்தித்திருக்கிற இந்தக் குணங்களினால் எனக்கு என்ன ஆக வேண்டியதென்று தாத்பர்யம். உதாஸீநனாயிருப்பதை விவரணம் செய்திருக்கிறது. 'நவிசால்யதே' என்பதினால் 'நேங்கதே' என்பது விவரிக்கப்பட்டது. அதையே சொல்லுகிறார்—'அந்தக் குணங்களின் கார்யங்களுக்குத் தக்கபடி' என்றாரம்பித்து. த்வேஷம் ஆசை இவைகளுக்குத் தக்கபடி ப்ரவ்ருத்திக்கிறதில்லை யென்றர்த்தம். 23

பா] ஸுகம், துக்கம், இவைகளில் ஸமமான மனதையுடையவனும், தன்னிடத்திலேயே இருப்பவனும், அதாவது தன்னுடைய ஆத்மா ஒன்றையே ப்ரியமாக உடையவனாகையினால் அதைத் தவிர வேறாகிய பிள்ளை முதலியவைகளின் பிறப்பு மரணம் முதலிய ஸுகதுக்கங்களில் ஸமமான மனதையுடையவன் என்றர்த்தம். ஆகையினாலேயே ஓட்டாஞ்சல்லி, கல், தங்கம், இவைகளை ஸமமாக நினைத்துக்கொண்டவனாயும், ஆகையினாலேயே இஷ்டமாயும் அநிஷ்டமாயுமிருக்கிற விஷயங்களை ஸமமாக நினைத்துக்கொண்டவனும், ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளின் பகுத்தறிவில் ஸாமர்த்யமுள்ளவனும், ஆகையினாலேயேஆத்மா

தா] ஸுக துக்கங்கள் இரண்டிலும் ஸமமாகவிருக்கை முதலியது முன்பே நன்றாக நிரூபிக்கப்பட்டது. 'ஸ்வஸ்த' என்னும் பதத்தினால் விகாரங்களில்லாமை, குணங்களை யனுஸரித்திராமை, முதலியவைகளை மாத்திரம் நிரூபிப்பதாய் இருந்தால் புனருக்தி வருகிறது. ஆத்மாவினிடத்தில் நிஷ்டையை யுடையவனாயிருக்கையைச் சொல்லுவதோவெனில் அநேக விதங்களாகிய ஸமமான மனதையுடையவனாயிருக்கையைச் சொல்லுவதற்குக் காரணமாக விருக்கையினால் உபயோகமுடையது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தன்னிடத்திலேயே இருப்பவனும்' என்று. அதின் அபிப்ராயத்திலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது தன்னுடைய' என்றாரம்பித்து. ஸுகம், துக்கம், இஷ்டம், அநிஷ்டம், முதலிய பதங்கள் அநேகமாக ஒரே அர்த்தத்தைச் சொல்லுவதாக விருந்த போதிலும் லோகவ்யவஹாரத்தை யனுஸரித்துப் புனருக்தி பரிஹரிக்கப்பட்டது.'ஆகையினாலேயே' என்பதற்கு தன்னிடத்திலேயே இருந்துகொண்டிருப்பதினாலேயே என்றர்த்தம். இஷ்டங்கள் அநிஷ்டங்கள் நேர்ந்தபோதிலும் கலக்கத்தகாமலிருக்கை 'துல்யப்ரியாப்ரியஃ' என்னும் பதத்தினாலேற்பட்டிருப்பதினால் இவ்விடத்தில் சொல்லப்படுகிற விசேஷமான புத்தியை உடையவனாக விருக்கையாகிற 'தீரஃ' என்பதை நிந்தையிலும் ஸ்தோத்ரத்திலும் ஸமமாயிருப்பது முதலியவைகளுக்கு எப்படியானால் காரணமாகுமோ அப்படி நிரூபிக்கிறார்—'ப்ரக்ருதி, ஜீவாத்மா' என்றாரம்பித்து. 'தீரஃ' என்கிறவரையில் உள்ளே இருக்கும் அடையாளங்கள் சொல்லப்பட்டதுகள். பிறகு வெளியிலுண்டான நடவடிக்கைகளாகிற அடையாளங்களைப்பற்றிய கேள்விக்குப்பதில் சொல்லுகிறார், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினாலேயே ஆத்மாவினிடத்தில்' என்றாரம்பித்து. 'ஸம உபஃவ' என்பது முதலியது வெளியடையாளங்களைச் சொல்லுகிறதென்று சிலர் சொல்லுகிறார்

வினிடத்தில் மனுஷ்யனுயிருப்பது முதலியதை அபிமானிப்பதினுல் செய்யப்பட்ட நல்ல குணம் கெட்ட குணம் இவைகளைக் காரணமாக வுடைய ஸ்தோத்திரம் நிந்தித்தல் இவைகள் தன்னிடத்தில் ஸம்பந்தப் பட்டவைகளல்ல என்று நினைத்துக்கொள்வதினுல் அவைகளில் ஸம மான மனதையுடையவனும்,அதினுல் உண்டாகிய பஹுமானம் அவ மானங்களிலும்அதினுலேற்படுத்தப்பட்டஸ்நேகிதன்சத்துருஇவர்கள்பக்ஷ ங்களிலும் அவைகள் தன்னேடு ஸம்பந்தப்பட்டவைகளல்லவாகையி னுலேயே ஸமமான மனதை யுடையவனும், அப்படியேதேஹத்தோடு

*கள். ஸ்தோத்திரம், நிந்தை, இவைகளாவது குணங்களையும் தோ ஷங்களையும் ப்ரகாசப்படுத்துவது. அதில் தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மாவை அறிந்தவனுக்கு தேஹத்திலிருக்கிற அழகு குரூபியாயிரு க்கை, முதலிய குணங்களாலும் தோஷங்களாலும் ஸ்தோத்திரமும்நிந் தையும் ஏற்பட்டால் அயலாரைப்பற்றி ஸ்தோத்திரம்செய்வதையும்நிந் திப்பதையும் போல ப்ரீதி முதலியவைகள் உண்டாகிறதில்லை என்று சொல்லுகிருர்—'ஆத்மாவினிடத்தில்' என்றாரம்பித்து. 1 'மூர்க்காஃ பூஜிதபூஜகாஃ' என்று சொல்லியிருக்கிற ந்யாயத்தினுல் லோகத் திலிருக்கிற மனுஷ்யர்கள் மற்றவர்களால் ஸ்தோத்திரம் செய்யப் பட்டவனைக் கொண்டாடுகிருர்கள். நிந்திக்கப்பட்டவனை அவமானஞ் செய்கிருர்கள். பஹுமானம்: அவமானம் இவைகளின் விதங்களும் லோக நடவடிக்கைகளாலும் ஶாஸ்த்ரங்களாலுமேற்பட்டிருக்கின் றன. அதில் பஹுமானஞ் செய்கிறவர்கள் ஸ்நேகிதர்களாகிருர் கள். அவமானம் செய்கிறவர்கள் சத்ருக்களாகிருர்கள் என்று லோகத்தில் கண்டறிந்த க்ரமம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிருர்—'அதினுலுண்டாகிய' என்றாரம்பித்து. வாயி னுல் சொல்லப்படுகிற ஸ்த்தோத்திரத்தையும் நிந்தையையும் தனித் துச் சொல்லியிருப்பதினுல் இவ்விடத்தில் 'மாந', 'அவமாந' என்னும் பதங்கள் மனதினுலும் ஶரீரத்தினுலும் செய்யப்பட்டவைகளைப்பற்றி யவை. ஸமமான புத்தியையுடைய குணங்களைத் தாண்டினவனுக் கும் அயலாருடைய புத்தியினுல் கல்பனை செய்யப்பட்ட ஸ்நேகிதன் சத்துரு இவர்களுடைய பக்ஷங்களிருக்கின்றன. 'ஆரப்யதே' என் கிற வ்யுத்பத்தியினுல் 'ஆரம்பஃ' என்பது கர்மம், அதாவது செய்த தற்குப் பதில் செய்வது முதலியவை. மோக்ஷத்திற்குக் காரணமாகிய கர்மங்களை விலக்குவதற்காகச் சொல்லுகிருர்—'தேஹத்தோடு சேர்ந்*

1 மஹாபாரதம், உத்யோக பர்வம்-33 - 62. மூர்க்கா:—மூடர்கள், பூஜிதபூஜ கா:-அயலாரால் பூஜிக்கப்பட்டவர்களைப் பூஜிப்பவர்கள்.

சேர்ந்திருப்பதினுல் உண்டாகிய எல்லா ஆரம்பங்களையும் விட்டவனுயும், எவன் இருக்கிருனே அவன் குணங்களைத் தாண்டினவனென்று சொல் லப்படுகிருன். 24-25

பா-அ] பிறகு இப்படிப்பட்ட குணங்களைத் தாண்டுவதற்கு முக்யமான காரணத்தைச் சொல்லுகிருர்—

மாஂச யோஉவ்யபிசாரேண ஭க்தியோகேந ஸேவதே |
ஸ குணாந்ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே ‖ 26

ப-ரை] யஃ - எவன், மாஂ - என்னை, அவ்யபிசாரேண - வேருருவ ரிடத்திலும் செலுத்தாத, ஭க்தியோகேந - பக்தியோகத்தினுலும், ஸேவதே - அடைகிருனே, ஸஃ - அவன், ஏதாந் - இந்த, குணாந் - குணங்களை, ஸமதீத்ய - தாண்டி, ப்ரஹ்மபூயாய - ப்ரமத்திற்கு ஸம மான ஸ்வபாவத்தை யடைவதற்கு, கல்பதே - தகுந்தவனுகிருன். 26

பா] * 'நாந்யம் குணேப்யஃ கர்தாரம்' என்றுரம்பித்துச் சொல்லப்பட்ட தாகிய ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளின் வ்யத்யாஸத்தை அனுஸந்தானம்

---

திருப்பதினுல் உண்டாகிய' என்று. ஸம்ஸாரத்திலுண்டான எல்லாக் கர்மங்களையும் விட்டவன் என்றர்த்தம். இதுதான் வெளியிலுண்டாகிய நடவடிக்கையாகிய அடையாளம். மனதில் இருக்கிற த்வேஷமில்லாமை முதலியவைகளாலும் வெளியிலிருக்கிற ஆரம்பங்களைவிட்டிருப்பது முதலியவைகளாலும் குணங்களைத் தாண்டினவன் நிரூபிக்கப்படு கிருன். அவைகளே குணங்களைத் தாண்டுவதற்குபாயங்கள் என்று மூன்றுவிதக் கேழ்வைகளும் பதில் சொல்லப்பட்டதாகிறது. 24—25

இவ்விடத்தில் 'மாஂச' என்கிற ஶ்லோகத்திஞல் தனியாக வேறு உபாயத்தை விதித்திருக்கிறதோ என்கிற ஸந்தேஹத்தை விலக்குவத ற்காகச் சொல்லுகிருர்—'பிறகு' என்றுரம்பித்து. குணங்களைத் தாண் டுவதற்குக்காரணமாகியவைகளில் ப்ரதானங்களல்லாதவைகளைச் சொ ன்ன பிறகு என்றர்த்தம். ஆகையினுலல்லவோ 'முக்யமான காரண த்தைச்சொல்லுகிருர்' என்று சொல்லப்பட்டது. 'நாந்யம்' என்பது முதலிய வாக்யத்திற்கு த்ருஷ்டமாக உபகாரம் செய்கிறவைகளுக்குத் தடங்கல்கள் அதிகமாகையினுல் கேவலங்களாகிய அவைகள் கார்யங் களைச் செய்யாது என்று தாத்பர்யம். 'மாம்' என்பதினுல் வாஸனை வரையிலுள்ள அநாதியான தடங்கல்களை நீக்குவதற்குபயோகமாகிய

---

* பகவத்கீதை - 14-11.

செய்வது மாத்திரத்தினால் குணங்களைத் தாண்டுவது ஸித்திக்காது, அது அநாதிகாலமாய் உண்டாகிய அதற்கு விரோதமான வாஸனையினால் தடுக்கப்படக்கூடுமோகையினால். ஸத்ய ஸங்கல்பனும் மிகுந்த கருணையையுடையவனும், ஆஶ்ரிதர்களிடத்தில் வாத்ஸல்யத்திற்கு ஸமுத்ரமாயுமிருக்கிற என்னை ஒரே நிஶ்சயத்துடன் கூடிய பக்தியோகத்தினாலும் எவன் ஆஶ்ரயிக்கிறானோ அவன் ஒருவராலும் தாண்டமுடியாத இந்த

---

குணங்களையுடையவன் என்று சொல்லியிருக்கிறது என்று சொல்லுகிறார்—'ஸத்யஸங்கல்பனும்' என்றாரம்பித்து. 1 'பராபித்யாநாத்து திரோஹிதம் | ததோஹ்யஸ்ய பந்தவிபர்யயௌ' என்கிற ஸூத்ரத்தில் சொல்லியிருக்கிறபடியே பரமாத்மாவினுடைய, ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகிய ஸங்கல்பத்தைப் போலவே அதை நிவ்ருத்திக்கிற ஸங்கல்பமும் ஒன்றினாலும் தடுக்கப்படாதது என்று தாத்பர்யம். ஸத்ய ஸங்கல்பனாகவிருந்தபோதிலும்ஸமமாகையினால்உதாஸீநனாயிருப்பனோ என்கிற. ஸந்தேஹத்தைப் பரிகரிப்பதற்காக 'மிகுந்த கருணையுடையவனும்' என்று சொல்லியிருக்கிறது. தோஷங்களையுடைய ஸம்ஸாரிகளிடத்தில் கருணைக்கிடமேது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஆஶ்ரிதர்களிடத்தில்' என்றாரம்பித்து. இப்படி நிக்ரஹம் செய்வதற்கும் அனுக்ரஹம் செய்வதற்கும் பொதுவாகிய ஸத்ய ஸங்கல்பனாகவிருக்கை அனுக்ரஹம் ஒன்றுக்கே காரணமாகுமென்பதைத் தெரிவிப்பதற்காக கருணை வாத்ஸல்யம், ஆகிய இரண்டுகுணங்களும் சொல்லப்பட்டன. வ்யபிசாரமில்லாமையாவது இதர தேவதைகள் முதலியவைகளை விட்டுவிடுவது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஒரே நிஶ்சயத்துடன் கூடிய' என்று. பக்தியோகத்துடன் அதற்கங்கமாகிய முன்பு சொல்லப்பட்டவைகளையும் சேர்த்துக்கொள்ளவேண்டுமென்பதற்காக 'ச' என்னும் பதம். அவைகளாலும் பரமாத்மாவே ஆராதிக்கப்படுகிறானல்லவா. 'ஏதாந் (இந்த)' என்பதினால் முன்பு சொல்லிய குணங்கள் பந்தத்தையுண்டாக்குகின்றன என்பது சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஒருவராலும் தாண்டமுடியாத' என்று. இத்தால் 2 'தைவீஹ்யே

---

1 ஶாரீரகஸூத்ரம் - 3 - 1 - 4. பராபித்யாநாத் - பகவானுடைய ஸங்கல்பத்தினால், திரோஹிதம் - (இவனுடைய ஜ்ஞானம்) மறைக்கப்பட்டிருக்கிறது ததः-பகவானுடைய ஸங்கல்பத்தினாலேயே, அஸ்ய-இந்த ஜீவனுக்கு, பந்த விபர்யயௌ - ஸம்ஸாரபந்தமும், மோக்ஷமும் (உண்டாகின்றன.)

2 பகவத்கீதை - 7 - 14.

ஸத்வம் முதலிய குணங்களைத் தாண்டி ப்ரம்மமாவதற்குத் தகுந்தவனாகிறான். அதாவது ப்ரம்மத்தின் ஸவபாவத்தை யடையத் தகுந்தவனாகிறான். உள்ளபடியிருக்கிற விகாரங்களில்லாத மரணமில்லாத ஜீவாத்மாவை யடைகிறான் என்றர்த்தம். 26

---

*ஷாமா²ணஶ்ச’ என்பது முதலிய ஶ்லோகங்களில் சொல்லப்பட்டதும் ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது. ‘கல்பதே’ என்பதினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—‘ப்ரம்மத்தின் ஸ்வபாவத்தை யடையத் தகுந்தவனாகிறான்’ என்று. ஜீவாத்மாவிற்கு இங்கு சொல்லப்படுகிற ஸ்வபாவமாவது எது? அதையடையத்தகுந்தவனாந்தன்மை எப்படிப்பட்டது? என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—‘உள்ளபடியிருக்கிற’என்றாரம்பித்து. 1 ‘ப்ரஹ்மபூ⁴த: ப்ரஸந்நாத்மா’ என்றிவை முதலிய விடங்களிலே போல மரணமில்லாமலும் விகாரங்களில்லாமலுமிருக்கை முதலிய ஸ்வபாவங்களினால் ப்ரம்மத்திற்கு ஸமமாகவிருப்பதே ப்ரக்ருதி முதலியவைகளிலேற்பட்டது. அதுவே இவ்விடத்தில் ப்ரம்மத்தின் ஸ்வபாவம் என்னப்படுகிறது. அந்தப் ப்ரம்மத்திற்குஸமமாகியஸ்வபாவமும் 2 ‘ஜந்மம்ருத்யுஜராது:³கை²ர்விமுக்தோ(அ)ம்ருதமஶ்நுதே’ 3 ‘தே³ஹே தே³ஹிநமவ்யயம்’ என்றிவை முதலியவைகளால் இந்த அத்யாயத்திலேயே சொல்லப்பட்டது. அடுத்த ஶ்லோகத்திலும் ‘அம்ருதஸ்யாவ்யயஸ்ய’ என்று விசேஷித்துச் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். அங்கங்களோடு கூடிய ஒரே நிர்சபத்தோடு கூடிய பக்தியோகத்தினால் ஆஶ்ரயிக்கப்பட்ட நானே மோக்ஷத்தில் ஆசையையுடையவனுக்கு மோக்ஷத்தைக் கொடுக்கிறேன் என்று சொல்லப்பட்டதாகிறது.* 26

*இப்படி மோக்ஷத்தைக் கொடுக்கிறேனென்று ப்ரஸ்தாவம் வந்த பொழுதுஶாரீரகஸூத்ரத்தில் எப்படி 4 ‘ப²லமத உபபத்தே:’ என்று பொதுவாக எல்லாப் பலங்களையும் அவனே கொடுக்கிறானென்பது எல்லாப் பலங்களும் அவனுக்கு வசப்பட்டதென்று தெரிவிப்பதற்காக நிரூபிக்கப்பட்டதோ அப்படியே இவ்விடத்திலும் நடு ஷட்கத்தில்*

---

1 பகவத்கீதை - 18 - 54.

2 பகவத்கீதை - 14 - 20.

3 பகவத்கீதை - 14 - 5.

4 ஶாரீரகஸூத்ரம்-3-2-37. பலம்-எல்லாப்பலமும், அத: இந்தப் பகவானிடத்திலிருந்து உண்டாகிறது, உபபத்தே: அப்படி யிருப்பதே பொருத்தமுடையதாகையினால்.

ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹமம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।
சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27

ஸ்ரீ கண்ணபிரானருளிச்செய்த ஸ்ரீ பகவத்கீதையில்
பதினான்காவது அத்யாயம் முற்றிற்று.
ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:



ப - ரை] அஹம் — நான். ஹி - எந்தக்காரணத்தினால், அம்ருதஸ்ய - மரணமில்லாத, அவ்யயஸ்ய - விகாரங்களில்லாத, ப்ரஹ்மண: — பரிசுத்தமான ஜீவாத்மாவிற்கும், சாச்வதஸ்ய - அழிவில்லாத, தர்மஸ்ய - தர்மங்களா லுண்டாகக்கூடிய ஐச்வர்யத்திற்கும், ஐகாந்திகஸ்ய - ஏகாந்திகளால் அடையக்கூடிய, ஸுகஸ்ய ச - மோக்ஷ ஸுகத்திற்கும், ப்ரதிஷ்டா - இருப்பிடமோ. 27

பா] 'ஹி' என்னும் பதம் காரணத்தைச் சொல்லுகிறது. எந்தக் காரணத்தினால் நான் ஒரே நிச்சயத்தையுடைய பக்தியோகத்தினால் ஆராதிக்கப்பட்டவனாய் மரணமில்லாமலும் விகாரங்களில்லாமலுமிருக்கிற

விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்ட மூன்றுவித பலங்களையும் நானே கொடுக்கிறேனென்பது கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட பலத்திற்குத் தானே காரணம் என்பதை ஸ்தாபிப்பதற்காக இந்த ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது; என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஹி என்னும் பதம் காரணத்தைச் சொல்லுகிறது' என்று. இவ்விடத்தில் 'ப்ரஹ்மண:' என்னும்பதம் நேரில் பரமாத்மாவைச்சொல்லுகிறதல்ல, நான் ப்ரம்மத்திற்காதாரம் என்று தனித்துச் சொல்லியிருப்பதற்கு விரோதம் வருமாகையினால். ஜீவாத்மாவாகவும், போக்யமாகவும், இவைகளை நியமிப்பவனாகவும், மூன்றுவித பாகங்களாகிய ப்ரம்மத்திற்கு ஈச்வரனாகிய பாகம் தனியாகையினால் ஆதாரம் என்பதும் ஸரியல்ல, ஈச்வரனே ப்ரம்மமென்று ஸ்த்தாபித்திருப்பதினால். நிர்குணமாகிய ப்ரம்மத்தின் ஸ்வரூபம் பேதங்களோடு கூடிய ப்ரம்மத்திற்கு ஆதாரம் என்றாவது, ஜீவாத்மா பரமாத்மாவுக்காதாரம் என்றாவது,சொல்லுவதும் ஸரியல்ல, ஶ்ருதி முதலியவைகளுக்கு விரோதம் வருகிறபடியினாலும், அந்த மதங்களை முன்னமேயே நிராகரித்திருப்பதினாலும். ப்ரக்ருதி முதலியவைகளையும் சொல்லுகிறதல்ல, அப்படியாகில் கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதற்குக் காரணமென்பது பொருந்தாதாகையினால். ஆகையினால் 'ப்ரஹ்மபூயாய கல்பதே' என்று ஜீவாத்மாவிற்கு பலத்தை

பரிசுத்தமான ஆத்மாவிற்கு ஆதாரமோ, அப்படியே மேலான நித்யமாகிய ஐஶ்வர்யத்திற்கு * 'வாஸுதேவஸ்ஸர்வம்' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட ஜ்ஞானிக்கு அடையக்கூடியதாகிய ஸுகத்திற்கும் (ஆதார

யில் வரப்போகிறதாகச் சொல்லப்பட்ட ரூபம் 'ஸஹ' என்னும் பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்படுகிறது. அப்படிப்பட்ட ரூபத்திற்கு நான் ஆதாரம் என்றர்த்தம். இத்தாலேற்பட்டது என்னவெனில் மோக்ஷத்தில் ஆசையுடையவனுக்குப் பரமாத்மாவிற்கு ஸமானமாகிய பரிசுத்தமான ஸ்வரூபத்தை அடைவதற்குக் காரணமாயும் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாயும், நித்யமாக இருப்பதாயும், தன்னால் செய்யக்கூடியதாயுமிருக்கிற வஸ்துக்களுக்குள் எது முக்யமான காரணம் என்று விசாரிக்கும்பொழுது அந்த விசாரம்முடியும் இடம் நானே என்று. அன்றிக்கே 'ப்ரதிஷ்டா' என்னும் பதம் ஆதாரத்தைச்சொல்லுகிறது. அப்படி ஆதாரமாக இருக்கையும் 1 'கார்கியே, இந்தப் பரமாத்மாவின்நியமனத்தில் ஸூர்யன், சந்திரன், இவர்கள் தரிக்கப்பட்டவர்களாக இருக்கிறார்கள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தை யனுஸரித்து நியமிப்பதையும் சேர்த்துக்கொண்டிருக்கிறது என்று 2 'ஶாஸ்த்ரயோநித்வாத்' என்கிற ஸூத்ரத்தினால் சொல்லப்பட்டது. ஆகையினால் பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபமும் என்னொருவனாலேயே நியமிக்கக்கூடியதாகையினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ரம்மமாகவிருக்கை என்னிடத்தில் பக்தி செய்வதொன்றினாலேயே யடையத்தக்கது என்றர்த்தம். 'ஶாஶ்வதஸ்ய ச' என்பதினால் அந்தத் தர்மத்தின் பலங்கள் லக்ஷணையாகச்சொல்லப்படுகின்றன என்று சொல்லுகிறார்—'அப்படியே மேலான நித்யமான ஐஶ்வர்யத்திற்கும்' என்று. மேலானதாவது இந்த்ரன், ப்ரம்மா, முதலியவர்களுடைய ஸுகங்களைவிட மேல்பட்டிருப்பது என்றும், நித்யமாக விருப்பதாவது மற்றவர்களுடைய ஸுகங்களைவிட வெகுகால மிருக்கிறதுமாத்திரம்என்றுமறியவேண்டியது. 'வாஸுதேவஃ' என்றாரம்பித்த வாக்யத்தின் கருத்தாவது—ஏகாந்திகளால் அடையக்கூடிய ஸுகம் ஏகாந்திகளுடைய தாகையினால் ஐகாந்திகம் என்று சொல்லப்படுகிறது—என்பது. 'சொல்லப்பட்ட' என்பது ஜ்ஞானிக்கு விஶேஷணம். இப்படி மோக்ஷத்திலும் ஸுகமுண்டென்று சொல்லி

* பகவத்கீதை - 7 - 19.

1 ப்ருஹதாரண்யகம்-5-8-2.

2 ஶாரீரக ஸூத்ரம்-2-3-10. ஶாச-அந்த த்தரிப்பதும், ப்ரஶாஸ நாத்-நியமிப்பதினாலே.

மோ) என்றர்த்தம். இவ்விடத்தில் 'ஶாஶ்வத யஶ்ச' என்னும் பதம் ஐஶ்வர்யத்திற்குபாயங்களாகிய தர்மத்தைச் சொல்லுகிறது. அப்படி யிருந்த போதிலும்முன்னும்பின்னுமிருக்கிறபதங்கள்ப்ரயோஜனங்களைச்சொல்லு

யிருப்பதினால் மோக்ஷம் கல்லைப்போல ஸுகதுக்கமொன்றுமில்லாமலிருக்கிறது என்பது முதலியபக்ஷங்கள்நிராகரிக்கப்பட்டன. 1 'ஜ்ஞாநெஷு ஸ்ஸுகம் துக்கம்' என்று கணக்கிட்டிருப்பதினால் ஸுகமெல்லாம் ஶரீரத்தின் கார்யம் என்று ப்ரமிக்க வேண்டியதில்லை, 2 'ஆனந்த ரூபியாகிய பகவானை அடைந்து இந்த ஜீவாத்மா ஆனந்தத்தையுடையவனாக ஆகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் ப்ரக்ருதியிலிருக்கிற ஸுகத்தைவிட வேறு ஸுகமுண்டென்று சொல்லியிருப்பதினால். ஆகையினாலேயே 3 'ஶரீரமில்லாமலிருப்பவனை ப்ரியம், அப்ரியம், இவை இரண்டும் தொடுவதில்லை' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யமும் துக்கத்தோடு கலந்த ஸுகமில்லையென்று சொல்லுகிறது என்று நினைக்கவேண்டியது. இவ்விடத்தில் 'ஶாஶ்வதஸ்ய யஶ்சஸ்ய' என்னும் பதங்களினால் மேலான ஐஶ்வர்யத்தை லக்ஷணையாகச் சொல்லுவது யுக்தமல்ல, ஏனெனில் முக்யமான அர்த்தத்தைச் சொல்லுவதற்கு ஒருவிரோதமு மில்லாமையினால். 4 'நாராயணஶ்ஶாஶ்வதயஶ்சகோப்தா' என்கிற இவை முதலிய விடங்களிலும் இது ப்ரஸித்தமாயிருக்கிறது. 'ஶாஶ்வத' என்னும் விஶேஷணத்தினால் நிவ்ருத்தி தர்மம் சொல்லப்படுகிறதென்று தோன்றுகிறது. அதற்கு ப்ரளயம் முதலிய காலங்களிலும் பாஷண்டர்கள் முதலியவர்களால் ஹிம்ஸையுண்டாகும் பொழுதும் 5 'யதாயதா' என்று கீழேசொல்லியிருக்கிற க்ரமத்தினால் தானே காப்பாற்றுகிறபடியினால் அதற்குத் தான் ஆதாரமென்பதும் எல்லாவிடங்களிலும் ப்ரஸித்தமாயிருக்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இவ்விடத்தில் ஶாஶ்வத யஶ்ச' என்னும் பதம்' என்றாரம்பித்து. 'ப்ரஹ்மணோஹி' என்பது பலத்தைச்சொல்லுகிறதென்பது கீழே நிரூபிக்கப்பட்டது. அப்படியே 'ஸுகஸ்யைகாந்திகஸ்ய' என்பதும் நேரில் பகவானை யனுபவிப்பதாகிய ஸுகத்தைச்

1 பகவத்கீதை-13-6.

2 தைத்திரீயம்.

3 சாந்தோக்யம்-8-12-1.

4 பாரதம், மோக்ஷதர்மம்-343-5. நாராயணன், அழிவில்லாத தர்மத்தைக் காப்பாற்றுகிறவன்.

5 பகவத்கீதை-4-7.

கின்றனவாகையினால் அத்தோடு சேர்ந்திருப்பதினால்இதுவும் ப்ரயோஜன த்தையே குறிக்கிறது. இத்தால் சொல்லப்பட்டதாவது முன்பு ‡ '𑌦𑍈𑌵𑍀 𑌹𑍍𑌯𑍇𑌷𑌾 𑌗𑍁𑌣𑌮𑌯𑍀 𑌮𑌮 𑌮𑌾𑌯𑌾 𑌦𑍁𑌰𑌤𑍍𑌯𑌯𑌾। 𑌮𑌾𑌮𑍇𑌵 𑌯𑍇 𑌪𑍍𑌰𑌪𑌦𑍍𑌯𑌨𑍍𑌤𑍇' என்றாரம்பித்துக் குணங்களைத் தாண்டுவதும்அதை முன்னிட்டு வருகிற ஜீவாத்மாவையும் ஐஶ்வர்யங்களையும் பகவானையும் அடைவது பகவானுடைய ப்ரபத்தி ஒன்றையே உபாயமாக உடையவைகள் என்று நிரூபிக்கப்பட்டபடியினால் ஒரே நிஶ்சயத்தோடு கூடிய பகவானுடைய ப்ர

---

*சொல்லுகிறதென்பதும் ஸ்பஷ்டமாக விருக்கிறது. அல்பமாக விருக்கை முதலிய தோஷங்களையுடையவைகளாகிய ஜீவாத்மாவை அனுபவிப்பது ஐஶ்வர்யமிவைகளாலுண்டான ஸுகங்களை விலக்குவதற்காகவல்லவோ 'ஐகாந்திக' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது. இவை இரண்டிற்கும் நடுவில் சொல்லியிருப்பதினால் முதலில் சொல்லியிருப்பதுபோலவே பின்னுமிருக்கவேண்டு மென்கிற ந்யாயத்தினாலும் கீழே சொல்லப்பட்ட ஐஶ்வர்யம் இங்கே சொல்லப்படுகிறது. ஆகையினால் அவைகளின் உபாயத்தைச் சொல்லுகிற பதத்தினால் லக்ஷணையாக அவைகளைச் சொல்லுவது யுக்தந்தான். ஆகையினாலேயே இந்தப் பதத்தினால் நிவ்ருத்தி தர்மமும் சொல்லப்படுகிறதில்லை. மோக்ஷ ஸுகத்திற்குபாயமாக அது தனித்து அனுஸந்தானஞ்செய்யத்தக்கதொன்று. இவ்விடத்தில் கீழே ப்ரஸ்தாவிக்கப்படாத ஐஶ்வர்யம் முதலியவைகளை ப்ரஸ்தாவித்தது எதற்காக? வேறொன்றை யாரம்பித்து மற்றொன்றை முடிப்பது யுக்தமல்லவே. ஐஶ்வர்யத்திற்குத் தான் ஆதாரமாக விருப்பது கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதற் கெப்படிக் காரணமாகும்? கீழே ஏற்பட்ட அர்த்தமன்றோ காரணமாகச் சொல்லத்தக்கது. அப்படியெங்கே ஏற்பட்டது? குணங்களைத்தாண்டாமல் பகவானிடத்தில் ஒரே நிஶ்சயத்தோடு கூடிய பக்தி எப்படிச் செய்யமுடியும்? பகவானிடத்தில் பக்தியினாலேயே குணங்களைத்தாண்டமுடியுமென்னில் அந்யோந்யாஶ்ரயம்வருகிறதே என்பவைமுதலிய ஆக்ஷேபம்வரில் அதற்குஸமாதானம் சொல்லுகிறார்—'இத்தால்சொல்லப்பட்டதாவது'என்றாரம்பித்து. கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட எல்லாப் பலங்களும் தனக்குவசப்பட்டதென்பதை இவ்விடத்தில் ஜ்ஞாபகப்படுத்தினதற்கு ப்ரயோஜனம் இப்பொழுது ப்ரஸ்தாவிக்கப்பட்ட குணங்களைத் தாண்டுவதை முன்னிட்டு வருகிற ப்ரம்மமாக ஆகுகையும் தனக்கு வசப்பட்டதென்பதை ஸ்தாபிப்பது. ஒரே நிஶ்சயத்துடன்கூடியபக்தியோகம் என்னும்பதம் இவ்விடத்தில்*

---

‡ *பகவத்கீதை* - 7 - 14.

பத்தி ஒன்றையே உபாயமாக உடையது. குணங்களைத் தாண்டுவதும் அதைமுன்னிட்டு அடையக்கூடியப்ரம்மத்தின் ஸ்வபாவமும் என்பது. 27

*ஸ்ரீபகவத் ராமாநுஜனர் என்கிற உடையவர் அருளிச்செய்த*

*கீதாபாஷ்யத்தில்*

பதிநான்காவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய நம:.

*எம்பெருமானர் திருவடிகளே சரணம்.*



---

*பக்தியோகத்திற் கங்கமாகிய ப்ரபத்தியையும் சொல்லுகிறது. ஆகையி னுல் முன் பின் ஸந்தர்ப்பங்கள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று தாத்பர்யம்.* 27

*ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான*

*ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்*

பதிநான்காவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:





## ஸ்ரீ ஆளவந்தார் அருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

குணபந்தவிதா தேஷாம் கர்த்ருத்வம் தந்நிவர்த்தநம் |
கதித்ரயஸ்வமூலத்வம் சதுர்தஶ உதீர்யதே || 18

ப - ரை] குணபந்தவிதா - குணங்கள் ஸம்ஸாரபந்தத்தை யுண்டாக்கும் விதமும், தேஷாம் - அந்தக் குணங்களுக்கே, கர்த்ருத்வம் - கர்த்ருத்வமுண்டென்பதும், தந்நிவர்த்தநம் - அந்தக்குணங்களை நிவ்ருத்தி செய்வதும், கதித்ரயஸ்வமூலத்வம் — மூன்று விதமான பலங்களும் தன்னையே காரணமாகவுடையது என்பதும், சதுர்தஶே - பதினான்காவது அத்யாயத்தில், உதீர்யதே - சொல்லப்படுகிறது. 18

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக னருளிச்செய்த

கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

இவ்விடத்தில் இந்த ஸங்க்ரஹ ஶ்லோகத்தின் அர்த்தத்தை நிரூபித்துக்கொண்டு ஸங்கதியையும் சொல்லுகிற பாஷ்யத்தில், பதிமூன்றாவது அத்யாயத்தில், ஒன்றோடொன்று சேர்ந்துகொண்டிருக்கிற ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளினுடைய ஸ்வரூபத்தின் உண்மையையறிந்துகொண்டு பகவானிடத்தில் பக்தியினால் ஒத்தாசை செய்யப்பட்ட அமானித்வம் முதலிய குணங்களினால் ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபடுகிறான் என்று சொல்லப்பட்டது. அதில் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணம் முன் உண்டாகிய ஸத்வம் முதலிய குணங்களின் கார்யங்களாகிய ஸங்கம் முதலியவைகளில் பற்றுதல் என்பதும் 1 'காரணம் குணஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநிஜந்மஸு' என்பதினால் சொல்லப்பட்டது. பிறகு இப்பொழுது அந்தக் குணங்கள் ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகும் விதமும், அந்தக் குணங்களை நிவ்ருத்தி செய்யும் விதமும் சொல்லப்படுகிறது, என்று சொல்லப்பட்டது. குணங்களே கர்த்தா என்பது முதலியவைகளை பாஷ்யத்தில் சொல்லாமல் விட்டுவிட்டது முன் அத்யாயத்திலே போலவே அவைகள் முக்யமான அர்த்தமல்லவாகையினால் என்று நினைக்கவேண்டியது. ஸத்வகுணம் ஸங்கத்திலும்

1 பகவத்கீதை-13-21.

ஜ்ஞானத்திலும் ஆசையை யுண்டாக்கிக் கட்டுப்படுத்துகிறது. ரஜோ குணம் கர்மங்களில் ஆசையையுண்டாக்கிக்கட்டுப்படுத்துகிறது. தமோ குணம் அஜாக்கிரதை, சோம்பல், தூக்கம், முதலியவைகளால் கட்டுப்படுத்துகிறது என்று ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகும் விதம் சொல்லப்பட்டது. அந்தக் குணங்களுக்கே கர்த்ருவத்ம் உண்டென்பதும் முன்பு சொல்லியபடி உசிதானுசிதங்களைப் பிரித்து நிரூபிப்பதினால் அந்தக் குணங்களுக்கே ஸ்தாபிக்கப்பட்டது. அதுவும் இந்த அத்யாயத்தில் 1 'நாந்யம் குணேப்ய: கர்தாரம்' என்று ஜ்ஞாபகப் படுத்தப்பட்டது. அந்தக் குணங்களை நிவ்ருத்தி செய்யும் விதமும் இவ்விடத்தில் 2 'மாம் ச யோऽவ்யபிசாரேண பக்தியோகேந ஸேவதே | ஸ குணாந் ஸமதீத்யைதாந் ப்ரஹ்மபூயாய கல்பதே ||' என்பதினால் சொல்லப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் 'ப்ரஹ்மபூயாய கல்பதே' என்பது 3 'ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம்' என்றிந்த அத்யாயத்தின் கடைசி ஶ்லோகத்தில் சொன்ன அர்த்தத்தையே சொல்லுகிறது. ஆகையினாலேயே அந்தஶ்லோகத்தின் பாஷ்யத்தில் முன்பு 4 'தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா | மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ||' என்றாரம்பித்துக் குணங்களைத்தாண்டுவதும், அதை முன்னிட்டுவரும் கைவல்யத்தை யடைவதும், ஐஶ்வர்யத்தை யடைவதும், பகவானையடைவதும், பகவானிடத்தில் ஶரணாகதியொன்றையே உபாயமாகவுடையது என்று நிரூபிக்கப்பட்டிருப்பதினால் ஒரே நிஶ்சயத்தோடுகூடிய பகவானை ஆஶ்ரயிப்பதொன்றையே உபாயமாகவுடையது குணத்தைத் தாண்டுவதும் அதை முன்னிட்டுவரும் பரிசுத்தமான ஜீவாத்மாவை அனுபவிப்பதும் என்றும் சொல்லப்பட்டது. 5 'ஊர்த்வம் கச்சந்தி' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட மூன்றுவித கதிகளையும் சொல்லுவதாக விருந்தால் ஸங்க்ரஹத்தில் சொல்லியிருக்கிற வரிசை க்ரமத்திற்கு விரோதம் வரும்.

**பதிநான்காவது அத்யாயம் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.**

*சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*



1 பகவத்கீதை-14-12.
2 பகவத்கீதை-14-26.
3 பகவத்கீதை-14-27.
4 பகவத்கீதை-7-14.
5 பகவத்கீதை-14-18.

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச்செய்த

## கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு.

*சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*

முக்குணமே யுயிர்முற்றவுங் கட்டிடமூண்டமையும்
முக்குணமே யனைத்தும் வினைகொள்ள முயன்றமையும்
முக்குணமாயை கடத்தலு முக்கதிதன்னளிப்பும்
முக்குண மற்றபிரான் மொழிந்தான் முடியோன்றனக்கே. 16

ப - ரை] முக்குணம் - மூன்று குணங்களும், அற்ற - இல்லாதவனாகிய, பிரான் - உபகாரகனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன், முடியோன்றனக்கு - அர்ஜுநனுக்கு, முக்குணமே - மூன்று குணங்களுமே, உயிர் - ஜீவாத்மாக்களை, முற்றவும்-முழுமையும், கட்டிட-ஸம்ஸாரத்தில் கட்டிட, மூண்டமையும்-ப்ரவ்ருத்தித் திருக்கிறபடியையும், முக்குணமே - மூன்று குணங்களுமே, வினை - புண்யபாபங்களாகிற கர்மங்களை, அனைத்தும் - எல்லாவற்றையும், கொள்ள - அடைய, அதாவது தாங்கள் அதற்குக் கர்த்தாவாகவிருக்க, முயன்றமையும் - முயற்சி செய்திருப்பதையும், அன்றிக்கே முக்குணமே - மூன்று குணங்களுமே, அனைத்தும் - கீழ்ச்சொல்லிய ஜீவாத்மா எல்லாவற்றையும், வினை - புண்யபாபரூப கர்மங்கள், கொள்ள - அடைய, அதாவது ஜீவாத்மாவிற்கு புண்ய பாப ரூப கர்மங்களும், அவைகளின் பலங்களும் உண்டாகும்படி, முயன்றமையும் - முயற்சிசெய்திருப்பதையும், முக்குணமாயை - இந்த மூன்று குணங்களையுமுடையப்ரக்ருதியை, கடத்தலும் - தாண்டுவதும், முக்கதி - மூன்றுவிதமான கதிகளும், தன்னளிப்பும் - தன்னால் கொடுக்கப்படுகிறது என்பதையும், மொழிந்தான்-சொன்னான். 16

*'மூண்டமையும்' என்பதினால் அஜ்ஞானம், ஸுகம், ப்ரவ்ருத்தி, அஜாக்கிரதை, சோம்பல், தூக்கம், முதலியவைகளில் ஆசையையுண்டாக்கி மேன்மேலென ஸம்ஸாரபந்தமுண்டாவதற்குக் காரணமாகவிருக்கின்றன என்பது கருத்து. 'முற்றவும்' என்பதினால் கீழ் 'ஸம்ஹவஸ்ஸர்வபூதாநாம்' என்று சொல்லப்பட்ட எல்லா ப்ராணிகளுக்கும் இந்தக் குணங்களாலுண்டாகும் பந்தம் ஸமம் என்று சொல்லப்பட்*

டது. 'முக்குணமே யனைத்தும்' என்பதினால் 'நாந்யம் குணேப்ய: கர்த்தாரம்' என்பதின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. இதனால் எல்லா ஜீவாத்மாக்களும் புண்ய பாப ரூப கர்மங்களும் அதின் பலங்களுமுண்டாவதற்கு இந்தக்குணங்களின் ஸம்பந்தமே முக்யமான காரணம் என்றேற்பட்டது. 'முக்குணமாயை கடத்தலும்' என்கிற விடத்தில் ஸங்க்ரஹ ச்லோகத்தில் 'குணாத்யயம்' என்று குணங்களை மாத்திரம் சொல்லியிருந்தபோதிலும் கீழ் 1 'மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே' என்று 'மாயா' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் இவ்விடத்தில் குணங்களைத் தாண்டுவதென்று சொல்லியிருப்பதினால் அவைகளுக்காதாரமான மாயையைத் தாண்டுவது மேற்பட்டது என்றபிப்ராயம். ஸங்க்ரஹ ச்லோகத்தில் 'மதிர்பலவக்திரைச்வர்யம்' என்றிருப்பதினால் 'முக்கதிதன்னளிப்பும்' என்கிறபாடமே அதை யனுஸரித்தது. அப்படிக்கில்லாமல் 'தந்தளிப்பும்' என்று பாடமாகில் தன்னுடைய என்னும் பதத்தைச் சேர்த்துக்கொள்ளவேண்டும் இவ்விடத்தில் முக்யமான அர்த்தம்நானே எல்லாப் பலங்களுக்கும் காரணம் என்பது ஆகையினால் அது நேரில் பதத்தினாலேயே சொல்லப்படவேண்டும். ஆகையினால் 'தன்னளிப்பும்' என்பதே ஸ்வாரஸ்யமான பாடம் முக்கதியாவது இவ்விடத்தில் ஐஶ்வர்யம், கைவல்யம் பகவத்ப்ராப்தி. கீழே 2 'ஊர்த்வம் கச்சந்தி' என்று சொல்லப்பட்ட மூன்றுவிதமான கதியைச் சொல்லுவதாயிருந்தால் முக்குணமாயை கடத்தலுக்கு முந்திச் சொல்லியிருக்கவேண்டும். ஸங்க்ரஹ ச்லோகத்திலும் இதே க்ரமம் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் இந்த அத்யாயத்தின் கடைசி ச்லோகத்தில் சொல்லப்பட்ட மூன்று கதிகளையே சொல்லியிருக்கிறதென்று கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷையில் தம்மாலேயே வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. 'முக்குணமற்ற' என்றிவ்விடத்தில்பகவானுக்கு சுத்தஸத்வத்தின்ஸம்பந்தமிருந்தபோதிலும் ரஜஸ்ஸு, தமஸ்ஸு, கலந்தஸத்வமில்லாமையினால் சொல்லப்பட்டது. அந்த சுத்தஸத்வமும்இந்த ப்ராக்ருதியைச் சேர்ந்த மூன்று குணங்களைவிட வேறுபட்டதென்று

---

1 பகவத்கீதை-7-14.

2 பகவத்கீதை-14-18.

ஶாஸ்த்ரங்களிலேற்பட்டது. 'முடியோன்தனக்கே' என்பதினால் தேவேந்திரன் தன்னுடைய கிரீடத்தை தலையில் வைத்து கிரீட என்று பட்டாபிஷேகஞ் செய்தது ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. அன்றிக்கே முடியையுடையவன் என்று தாத்பர்யம். அதாவது 1 'ஶிஷ்யஸ்தேஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபந்நம்' என்றும், 2 'நம: புரஸ்தாத்' என்றும் சொல்லியிருக்கிறபடியே அநேக இடங்களில் நமஸ்காரம் செய்ததினால் அவனுடைய முடி நிலைபெற்றது என்றும், முடியென்று சொல்லத்தக்கதென்றும் தாத்பர்யம். அப்படிப் பகவானை ஸேவிக்காமல் போனால் 3 'பார: பரம் பட்டகிரீட ஜுஷ்டமப்யுத்தமாங்கம் ந நமேந்முகுந்தம்' என்று சொல்லியிருக்கிறபடியே கேவல சுமையாகவல்லவோ இருக்கும். அப்படியல்லாமல் 4 'ஶிரஸ்ஸு தே ஸ்யாஹபரிஜாதநமேஷு' என்கிறபடியே ஶ்லாகிக்கப்பட்ட முடியையுடையவனானென் என்று தாத்பர்யமாகவுமாம்.

சீரொன்று தூப்புல் திருவேங்கட முடையான் திருவடிகளே சரணம்.



1 பகவத்கீதை-2-11.
2 பகவத்கீதை-11-40.
3 பாகவதம்.
4 பாகவதம்-10-வது ஸ்கந்தம்.

# ஸ்ரீ பகவத் கீதை.



## பதினைந்தாவது அத்யாயம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

பா - அ] க்ஷேத்ராத்யாயம்என்று சொல்லப்படுகிறபதிமூன்றாவது அத்யாயத்தில், க்ஷேத்ரமாகவும் க்ஷேத்ரஜ்ஞனாகவுமிருக்கிற ப்ரக்ருதி ஜீவாத்மா, இவைகளின் ஸ்வரூபங்களை நிரூபித்து பரிசுத்தனாயும் அளவில்லாத ஜ்ஞானமொன்றையே ஆகாரமாகவுடையவனாயு மிருக்கிற ஜீவாத்மாவிற்கு ப்ரக்ருதியைச்சேர்ந்த குணங்களில் பற்றுதல்களினுடைய பரம்பரையினால் உண்டாகிய தேவன் முதலிய ஆகாரங்களாக மாறியிருக்கிற ப்ரக்ருதியின் ஸம்பந்தம் அநாதி என்று சொல்லப்பட்டது. அதற்குமேல் அத்யாயத்தில் ஜீவாத்மாவிற்குக் கார்யதசை காரணதசை இவைகளையுடைய ப்ரக்ருதியின் ஸம்பந்தம் குணங்களில் பற்றுதலினால் உண்டாகியது பகவானாலேயே செய்யப்பட்டது என்று சொல்லிக்குணங்களில் பற்றுதலுண்டாகும் விதத்தை விஸ்தாரமாக நிரூபித்துக் குணங்களில் பற்றுதல் நிவ்ருத்திப்பதை முன்னிட்டுஆத்மாவின் உண்மையையடைவதும் பகவானிடத்தில் பக்தியைக் காரணமாகயுடையது என்றும் சொல்லப்பட்டது. இப்பொழுது பக்திசெய்யப்படுகிற பகவான் க்ஷரமும்அக்ஷரமுமாகிய பத்த ஜீவன், முக்த ஜீவன், இவைகளை விபூதியாக உடைய

---

தா] இப்படிக் கீழ் இரண்டத்யாயங்களினால் முதல் ஷட்கத்தில் சொல்லப்பட்ட ப்ரக்ருதி,ஜீவாத்மா,இவைகளின் ஸ்வபாவ விசேஷங்கள் நிரூபிக்கப்பட்டன. அதில் இந்த ப்ரக்ருதி தன்னுடைய குணங்களுடன் எவனுக்கு வசப்பட்ட ஸ்வரூபம் முதலியவைகளையுடையதோ, ஜீவாத்மா எவனிடத்தில் அபராதம் செய்ததினால் கட்டப்பட்டிருக்கிறானோ, எவனுடைய அனுக்ரஹத்தினால் மோக்ஷத்தை யடையப்போகிறான் என்று சொல்லப்பட்டதோ, அப்படிப்பட்ட நடு ஷட்கத்தில் சொல்லப்பட்ட பரமாத்மா நிரூபிக்கப்படுகிறான் என்று ஸங்கதியைச் சொல்லு

வன் என்பதையும், விபூதியாகிய க்ஷரம் அக்ஷரம் என்று சொல்லப்படுகிற இரண்டுவித ஜீவர்களைக் காட்டிலும் எல்லாக்கெட்ட குணங்களுக்கும் விரோதமாயும் கல்யாணகுணங்களுக்கேஇருப்பிடமாகவும்இருக்கிறபடியினாலே மிகவும் மேலானவனாகையினால் வேறு பட்டவனாகிய பகவான் புருஷோத்தமன் என்பதையும் சொல்லுவதற்கு ஆரம்பிக்கிறார். அதில் முதலில் பற்றுதலில்லாமையாகிற கத்தியினால் அறுக்கப்பட்ட ஸம்ஸார பந்தத்தையுடைய அக்ஷரம் என்னும் விபூதியைச் சொல்லுவதற்காக

---

கிறார்—'க்ஷேத்ராத்யயம் என்று சொல்லப்படுகிற' என்றாரம்பித்து, 'ஆரம்பிக்கிறார்' என்கிறவரையில். இத்தால் 1 'அசின்மிஶ்ராத்விஶுத்தாச்ச சேதநாத்புருஷோத்தம: | வ்யாபநாத்பரணாத்ஸ்வாம்யாதந்ய: பஞ்சதஶோதித: ||' என்கிற ஸங்க்ரஹஶ்லோகமும் நினைக்கப்பட்டது. பதிமூன்றாவது அத்யாயத்திற்கு அங்கமாகப் பதினான்காவது அத்யாயத்தைச் சொன்ன பிறகு அதின் கடைசியில் 2 'மாம்ச' என்பது முதல் இரண்டு ஶ்லோகங்களினால் ஒரே நிஶ்சயத்தோடு கூடிய பக்தியினால் ஆஶ்ரயிக்கத்தகுந்தவனும், பலங்களைக்கொடுக்கிறவனுமிருக்கிற பரமாத்மா ப்ரஸ்தாவிக்கப்பட்டான். பதினைந்தாவது அத்யாயத்தில் அவனுடைய மேன்மை நிரூபிக்கப்படுகிறதாகையினால் பதினான்காவது அத்யாயத்தோடு ஸங்கதி உண்டென்பது 'பக்தி செய்யப்படுகிற பகவான்' என்றாரம்பித்துக் காண்பிக்கப்பட்டது. இவைகளை விபூதியாகவுடையவன் என்பதை இவ்விடத்தில் நிரூபித்திருப்பது அவைகளைவிட வேறுபட்டவனென்று நிரூபிப்பதற்காக என்கிற அபிப்ராயத்தினால் 'ஆரம்பிக்கிறார்' என்று சொல்லப்பட்டது. கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட பத்த ஜீவர்கள் முக்த ஜீவர்கள் இவர்களை விபூதியாகவுடையவன் என்பது இந்த அத்யாயத்தில் நிரூபிக்கப்படுகிறது. ஆகையினாலும் கீழ்ச் சொல்லப்பட்ட இரண்டு அத்யாயங்களுடன் ஸங்கதி உண்டென்று அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. அதில் 'ஊர்த்வமூலம்' என்பது முதலிய இந்த அத்யாயத்தின் ஆரம்பத்திலிருக்கிற க்ரந்தம் அந்வயமில்லாதது. அப்படி அந்வயமிருந்தபோதிலும் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்துடனும் மேல் ப்ரஸ்தாவிக்கப்போகிற அர்த்தத்துடனும் பொருத்தமில்லாதது என்கிற ஆக்ஷேபத்தைப் பரிகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'அதில் முதலில்' என்றாரம்பித்து. ஸுலபமாய்த் தெரிந்துகொள்ளுவதற்காக ஶ்ருதியையனுஸரித்து அரசமரத்தின்

---

1 கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகம்-19.

2 பகவத்கீதை-14-26-

வெட்டத்தகுந்ததாகிய ஸம்ஸாரபந்தமாகப் பரவியிருக்கிற அசேதனவஸ்து வின் மாறுதலை அரசமரமாகக் கல்பனை செய்துகொண்டு பகவான் சொல்லுகிறார்—

ஶ்ரீபகவாநுவாச।

ஶ்ரீ பகவாநு - ஶ்ரீ பகவானாகிய க்ருஷ்ணன், உவாச - சொன்னார்.

ஊர்த்வமூலமதஶ்ஶாகமஶ்வத்தம் ப்ராஹுரவ்யயம் ।
ச்சந்தாம்ஸி யஸ்ய பர்ணாநி யஸ்தம் வேத ஸ வேதவித் ॥ 1

ப - ரை] அஶ்வத்தம் - (எந்த) அரசமரத்தை, ஊர்த்வமூலம் - மேல்பாகத்தில் வேரையுடையதாயும், அதஶ்ஶாகம் - கீழ்பாகத்தில் கிளைகளையுடையதாயும், அவ்யயம் - அழிவில்லாததாகவும், ப்ராஹு: - ஶ்ருதிகள் சொல்

---

*ஆகாரத்தையுடையதாக இந்தக் கல்பனைசெய்திருக்கிறது. மேலான தத்வத்தை அறியவேண்டுமென்கிற ஆசைக்குக்காரணமாகிய வைராக்ய முண்டாவதற்காக வென்று சிலர் சொல்லுகிறார்கள். எப்படியெனில் இந்த ஸம்ஸாரத்தை விபூதியாகத்தெரிந்து கொண்டதினால் இதை விபூதியாகவுடையவனுடைய மேன்மையும் நிரூபிப்பதற்குக் காரணமாகிற படியினால். மேலே பற்றுதலில்லாமையாகிற கத்தியினால் வெட்டத்தகுந்ததென்று சொல்லியிருக்கிறபடியினால் அப்படிப்பற்றுதலுண்டாவதற்கு விஷயமாகிய ஸம்ஸாரமே இவ்விடத்தில் அரசமரத்தின் ரூபமுடையதாகக் கல்பனை செய்யப்படுகிறது என்றேற்படுகிறது. அதில் [illegible] தற்காக 'ஊர்த்வமூலம்' முதலிய ஆஶ்சர்யங்களைக் காட்டியிருக்கிறது என்று தாத்பர்யம். இவ்விடத்தில் மூலப்ரக்ருதியே அரச மரமாகக் கல்பனை செய்யப்படுகிறதென்று ஏன் ஒப்புக்கொள்ளக் கூடாது? 1 'குணப்ரவ்ருத்தா விஷயா ப்ரவாலா:' என்பவை முதலியவைகளும் அதைப்பற்றியிருந்தால் பொருத்தமுடையவைகளாக ஆகின்றனவே என்னில் அது உசிதமல்ல, நேரில் அதுபற்றுதலுண்டாகக் கூடிய விஷயமல்லவாகையினாலும், பற்றுதலில்லாமையாகிற கத்தியினால் வெட்டத்தகுந்ததென்பதும் அந்த மூல ப்ரக்ருதிநாசமில்லாததாகையினால் அதில் முக்யமாகப் பொருந்தாதாகையினாலும். இதையே அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'அசேதனவஸ்துவின் மாறுதலை' என்றும் 'எந்தஸம்ஸாரமாகிற' என்றும் சொல்லப்பட்டது. இந்த அர்*

---

1 பகவத்கீதை-15-2.

விற்றோ, யஸ்ய - எந்த அரசமரத்திற்கு, ச²ந்தாம்ஸி - வேதங்கள், பர்ணாநி - இலைகளோ, தம் - அப்படிப்பட்ட அரசமரத்தை, ய:-எவன், வேத - தெரிந்துகொள்ளுகிறானோ, ஸ: - அவன், வேதவித் - வேதத்தைத் தெரிந்துகொண்டவன். 1

பா] எந்த ஸம்ஸாரமாகிற அரசமரத்தை மேல்பாகத்தில் வேருடையதாகவும் கீழ்பாகத்தில் கிளைகளையுடையதாகவும் * 'மேல்பாகத்தில் வேரு

த்தமே புராணத்திலும் சொல்லப்படுகிறது. 4 'அவ்யக்தமூலப்ரபவஸ் தஸ்யைவாநுக்ரஹோச்ச்ரித:। புத்திஸ்கந்தமயஶ்சைவ இந்த்ரியாந்தரகோடர:॥ மஹாபூதவிஶாகஶ்ச விஷயை: பத்ரவாம்ஸ்ததா। தர்மாதர்மஸுபுஷ்பஶ்ச ஸுகது:கபலோதய:॥ ஆஜீவ்ய: ஸர்வபூதாநாம் ப்ரஹ்மவ்ருக்ஷ: ஸநாதந:। ஏதத் ப்ரஹ்மவநம் சைவ ப்ரஹ்மவ்ருக்ஷஸ்ய தஸ்ய தத்॥ ஏதச்சி²த்த்வா ச பி⁴த்த்வா ச ஜ்ஞாநேந பரமாஸிநா। ததஶ்சாத்மரதிம் ப்ராப்ய யஸ்மாந்நாவர்ததே புந:॥' என்றிவை முதலியவைகளில் சொல்லப்படுகின்றன. சிலர் புருஷர்களுடைய ஒவ்வொரு ஶரீரத்திலேயே தலைமேல் நோக்கியிருக்கிறபடியினாலும் கைமுதலியவைகள் கீழ்முகமாக விருக்கிறபடியினாலும் 'ஊர்த்⁴வமூலம்' முதலியவைகளாகக் கல்பித்திருக்கிறது என்று சொன்னார்கள். இன்னும் சிலர்

* கடஶ்ருதி-6-1.

4 நரஸிம்மபுராணம்-16,4, 5,6, 7, 11. *அவ்யக்த மூலப்ரபவ: - அவ்யக்தமாகிற வேரிலிருந்து உண்டானதும், தஸ்யைவ-அந்த அவ்யக்தத்தினுடையவே, அனுக்ரஹோசசரித:-ஒத்தாசையினால் ஓங்கிவளர்ந்ததும், புத்திஸ்கந்தமய:-புத்திகளாகிற கிளைகள் நிறைந்ததும், இந்த்ரியாந்தரகோடர:-இந்த்ரியங்களின் த்வாரங்களாகிற பொந்துகளையுடையதாகவும், மஹாபூதவிசாகஶ்ச-பஞ்சபூதங்களாகிற பக்கக் கிளைகளையுடையதாகவும், விஷயை:-சப்தம் முதலிய விஷயங்களினால், பத்ரசாகவாங்-இலைகளையும் கிளைகளையுமுடையதாகவும், தர்மாதர்மஸுபுஷ்பஶ்ச-தர்மம், அதர்மங்களாகிற புஷ்பங்களை உடையதாகவும், ஸுகதுக்கபலோதய:-ஸுகம், துக்கம், இவைகளாகிற பழங்கள் உண்டாகக்கூடியதும், ஸர்வபூதாநாம்-எல்லா ப்ராணிகளுக்கும், ஆஜீவ்ய:-அடையக்கூடியதுமாகிய, ஸநாதந:-அநாதியாகிய, ப்ரம்மவ்ருக்ஷ:-ப்ரக்ருதியாகிய வ்ருக்ஷம், தஸ்ய-அந்த, ப்ரம்மவ்ருக்ஷஸ்ய-ப்ரக்ருதியாகியமரத்திற்கு, ஏதத்-இந்த, ப்ரம்ம-ப்ரக்ருதியே, வனம்சைவ-காடும், ஏதத்-அப்படிப்பட்ட இந்தமரத்தை, ஜ்ஞானேன-ஜ்ஞானமாகிற, பரமாஸினா-உயர்ந்த கத்தியினால், சித்வாச-வெட்டியும், பித்வாச-பிளந்தும், ததஶ்ச-அதினாலேயே, ஆத்மரதிம்-ஆத்மாவினிடத்திலாசையை, ப்ராப்ய-அடைந்து, யஸ்மாத்-எதிலிருந்து, புன:-மறுபடியும், நாவர்த்ததே-திரும்புகிறதில்லையோ (அப்படிப்பட்ட ஆத்மாவை யடைகிறான்.)*

டையதாகவும் கீழ்பாகத்தில் கிளைகளையுடையதாகவு மிருக்கிற இந்தஅரச மரம் அநாதியானது' என்றும், † 'மேல் பாகத்தில் வேரையுடையதும் கீழ் பாகத்தில் கிளைகளையுடையதுமாகிய மரத்தை எவன் இப்பொழுது தெரிந்துகொள்ளுகிறேன்' என்றுமர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்கள் சொல்லுகின்

வேறுவிதமாகவும் அதாவது இது வ்யஷ்டி க்ஷேத்ரம் சொல்லப்பட்டது. பிறகு ஸமஷ்டிக்ஷேத்ரம் சொல்லப்படுகிறது. இந்த ப்ரம்மாண்டம் முழுமையும் ப்ரம்மாவிற்குச் ஶரீரம். அதுவே விராட்என்று சொல்லப்படுகிறது. அதற்கு ஸ்வர்க்கம் தலை, சந்திர ஸூர்யர்கள் கண்கள், திக்குக்கள் காது, ஆகாசம் நடுஶரீரம், பூமி கால்கள், இதில் 'ஊர்த்வமூலம் அ:ஶாகம்' என்பதைப் பொருத்தமாக்கிக்கொள்ளவும் என்று. ப்ராணிகளின் கூட்டம் அரசமரமாகச்சொல்லப்படுகிறது. அதற்குக் காரணமாகிய ப்ரம்மா மேலே இருக்கிறான் என்பது முதலியதும் சொல்லுகிறார்கள். 1 'அ:ஶ்சோர்த்வம்' என்கிற ஶ்லோகத்திலோ ப்ரக்ருதி முதல் பஞ்சபூதங்கள் வரையிலுள்ள எல்லாம் வ்ருக்ஷமாகக் கல்பனை செய்யப்படுகிறதென்றும் சொல்லுகிறார்கள். இம்படி எல்லா அர்த்தங்களிலும் ஸம்ஸாரம் விடத்தக்கது என்று நிரூபிப்பதில் தாத்பர்யம் என்று சொல்லவேண்டும். அதைவிட ஸம்ஸாரத்தையே நேரில் விருக்ஷமாகக் கல்பனை செய்ததென்பது மேலானது. 1 'அ:ஶ்சோர்த்வம்' என்கிற ஶ்லோகத்திலும் 'தஸ்ய' என்று சொல்லியிருப்பதினால் முன் ஶ்லோகத்தினால் கல்பனை செய்யப்பட்ட வ்ருக்ஷமே சொல்லப்படுகிறதென்பது ஏற்படுகிறபடியினால் வேறு வ்ருக்ஷத்தைக்கல்பனை செய்கிறது என்பது யுக்தமல்ல. 2 'ந ரூபமஸ்ய' என்கிற ஶ்லோகத்திலும் அந்த வ்ருக்ஷமே சொல்லப்படுகிறது. ஆகையினால் ஸம்ஸாரமாகிய ஒன்றையே வ்ருக்ஷமாகக் கல்பித்திருக்கிறது என்று பாஷ்யகாரரால் வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. இவ்விடத்தில் கர்த்தா இன்னாரென்று குறிக்காமல் 'ப்ராஹு: (சொன்னார்கள்)' என்று சொல்லியிருப்பது வாதிகள் சொன்னார்கள் என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறது என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஶ்ருதிவாக்யங்கள்' என்று. மேல்பாகத்தில் வேரையுடையதாகவும் கீழ்பாகத்தில் கிளைகளையுடையதாகவுமிருக்கிற இந்த அரசமரம் அநாதியானது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் ஸம்ஸாரத்தைச் சொல்லுகிறதாக இவ்விடத்

† ஆரண்யகம்-1-11-5.
1 பகவத்கீதை-15-2.
2 பகவத்கீதை-15-3.

றனவோ; ஏழுலோகங்களுக்கும் மேலே இருக்கிற ப்ரம்மாவைக் காரணமாகவுடையதாகையினால் அது மேல்பாகத்தில் வேருடையது என்றது. பூமியில் வஸிக்கிற எல்லா மனுஷ்யன், பசு, ம்ருகங்கள், புழுக்கள், பக்ஷிகள், ஸ்த்தாவரங்கள், இவைகளைக் கடைசியாகவுடையதாகையினால் கீழ் பாகங்களில் கிளைகளையுடையதென்றது. பற்றுதலில்லாமைக்குக் காரணமாகிய நல்ல ஜ்ஞானமுண்டாகிறவரையில் பரம்பரையாக வெட்டத்த

---

*தில் எப்படிச் சொல்லப்படுகிறது? இந்த என்று கீழ் ப்ரஸ்தாவிக்கப் பட்டதும் மேலே சொல்லப்போகிறதுமாகிய ஜீவாத்மாவைச் சொல்லுவதல்லவோ உசிதம் என்னில் அது யுக்தமல்ல, ஜீவாத்மாவிற்கு ஸ்வரூபத்தில் மேல் பாகத்தில் வேரையுடைத்தாயிருக்கை முதலியவை ஸம்பவிக்காதாகையினால். மோக்ஷத்தில் ஆசையுடையவர்களுக்கு அந்த ஆத்மாவினிடத்தில் ஆசையிருக்கிறபடியினால் பற்றுதலில்லாமையாகிற கத்தியினால் வெட்டத்தகுந்தது என்று சொல்லியிருப்பதும் பொருந்தாதாகையினாலும். தேஹத்தோடு சேர்ந்திருக்கிற ஆகாரத்தைக்கொண்டு அப்படிச் சொல்லில் பிரித்துப் பார்த்தால் தேஹமாகிற உபாதியினிடத்திலேயே இது அந்வயிக்கிறதாகையினாலும் என்று தாத்பர்யம். 'ஶ்வ: நஸ்தாஸ்யதி (நாளைக்கிருக்கப்போகிறதில்லை)' என்கிற வ்யுத்பத்தியினால் 'அஶ்வத்த:' என்று சொல்லப்படுகிறது. வெட்டத்தகுந்ததாகையினால் வ்ருக்ஷம் என்று சொல்லப்படுகிறது. இதுதான் உதாஹரிக்கப்பட்ட இரண்டு ஶ்ருதிவாக்யங்களிலும் விஶேஷித்தும் பொதுவாகவும் கல்பனை செய்திருப்பதற்குக்காரணம் 'ஊர்த்வமூலம்' என்பதை 'அத:ஶாகம்' என்பதையும் வ்யஷ்டி ஸ்ருஷ்டிமாத்திரியைக்கொண்டு சொல்லுகிறார்—'ஏழுலோகங்களுக்கும் மேலே இருக்கிற' என்றாரம்பித்து. 'பூமியில்' என்பது கீழே இருக்கிற எல்லாலோகங்களையும் குறிக்கிறது. 'அவ்யயம் (அழிவில்லாதது)' என்றும், வெட்டத்தகுந்ததென்றும் சொல்லியிருக்கிறது ஒன்றுக்கொன்று விருத்தமாகவிருக்கிறதே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'பற்றுதலில்லாமைக்குக் காரணமாகிய' என்றாரம்பித்து. தத்வஜ்ஞானம் உண்டாவதற்கு முன்பும் நாசம் காணப்படுகிறபடியினால் அத்துடன் விரோதத்தைப் பரிகரிப்பதற்காகப் பரம்பரையாக என்று சொல்லியிருக்கிறது. எழுத்துக்களின் கணக்காகிய 'சந்தஸ் (விருத்தம்)' என்பதை விலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'ச2ந்தா3ம்ஸி என்பது ஶ்ருதிகள்' என்று. இலைகளைப்போல ஸம்ஸார வ்ருக்ஷத்தின் உள்ளபடியான ஆகாரத்தை மறைத்துக்கொண்டு காப்பாற்றுகின்றன என்று தெரிவிப்பதற்காக இவ்விடத்தில் 'ச2ந்தா3ம்ஸி' என்னும் பதம் ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்*

காதாகையினுல் அழிவில்லாதது என்றது. எந்த அரச மரத்திற்கு ஸ்ருதிகளை இலைகளாகச்சொன்னுர்களோ; '஛ந்தாம்ஸி' என்பது ஸ்ருதிகள் அதாவது * 'ஐஸ்வர்யத்தில்ஆசையுடையவன்வாயுதேவதையைக்குறித்து வெள்ளை நிறமுள்ள பசுவைக்கொண்டு யாகம் செய்யவேண்டும்' என்றும், † 'பிள்ளைகளில் ஆசையுடையவன் இந்த்ரன், அக்னி, இவ்விரண்டு தேவதைகளையும் குறித்துப் பதினொருகபாலங்களில் செய்யப்பட்ட புரோடாசங்களைக்கொண்டு யாகம் செய்யவேண்டும்' என்று மர்த்தமுள்ள ஸ்ருதிக்கு இலைகளாக நிருபித்திருப்பதினுல் '஛ந்தாம்ஸி' என்னும் பதம் இவ்விடத்தில் 1 'வேதவாதரதா:' என்று இவை முதலிய இடங்களிலே போல தர்மம், அர்த்தம், காமமாகிய மூன்று புருஷார்த்தங்களைச் சொல்லுகிற பாகங்களைப்பற்றியது, என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'அதாவது ஐஸ்வர்யத்தில்' என்றுரம்பித்து. இத்துடன் சேராமலிருக்கிற வேதங்கள் இலைகளென்பதெப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'ஸ்ருதிவாக்யங்களில் சொல்லப்படுகிற' என்றுரம்பித்து. அப்படியிருந்தபோதிலும் வ்ருக்ஷங்களுக்கு அநேகம் அவயவங்களிருக்கும்பொழுது இலைகளாக நிருபித்திருப்பதினுல் என்ன விசேஷம்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'வ்ருத்தியடைகிறது' என்று சொல்லப்பட்டது. அதையே விவரிக்கிருர்—'இலைகளால்' என்றுரம்பித்து. 'தம்' என்பது கீழ்ச்சொல்லிய விதங்களோடு கூடிய வ்ருக்ஷத்தைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'இப்படிப்பட்ட' என்றுரம்பித்து. இவ்விடத்தில் எவன் ஸம்ஸாரமாகிற அரசமரத்தை யறிகிருனே அவன் வேதத்தைத்தெரிந்து கொண்டவன் என்பது பொருந்தாது. ஏனெனில் ஸம்ஸாரமாகிறஅரசமரமேவேதங்களல்லவாகையினுல். அப்படியிருந்தாலல்லவோ இதைத் தெரிந்துகொண்டவன் வேதங்களைத் தெரிந்துகொண்டவன் என்றுசொல்லலாம். ஆகையினுலிவ்விடத்தில் 2 'குஹ்யம் த்ரி'

* யஜுர்வேதம்-2-1-1. † யஜுர்வேதம்-2-1. 1 பகவத்கீதை-2-42.

2 மனுஸ்ம்ருதி-11-265. ஆத்யம்-எல்லா வேதங்களுக்கும் முதல்மையாகிய, த்ர்யக்ஷரம்-மூன்று அக்ஷரங்களையுடைய, ப்ரம்ம-வேதம் (எதுவோ), த்ரயீ-இந்த மூன்று வேதங்களும், யத்ர-எதனிடத்தில், ப்ரதிஷ்டிதா-இருக்கிறதோ, ஸ:-அந்த, குஹ்ய:-ரஹஸ்யமாகிய, த்ரிவ்ருத்வேத:-மூன்றக்ஷரங்களின் சேர்க்கையாகிய ப்ரணவமாகிற வேதம், அந்ய:-வேறுபட்டது, தம்-அதை, ய:-எவன் வேத-தெரிந்துகொள்ளுகிருனே, ஸ:-அவன், வேதவித்-வேதத்தைத் தெரிந்துகொண்டவன்.

தி வாக்யங்களில்சொல்லப்படுகிற காம்ய கர்மங்களினால் இந்த ஸம்ஸாரமாகிற மரம் வ்ருத்தியடைகிறது. ஆகையினால் வேதங்களே இதற்கு இலைகள்.இலைகளாலல்லவோ மரம் வ்ருத்தியடைகிறது.எவன் இப்படிப்பட்ட அரசமரத்தைத் தெரிந்து கொள்ளுகிருனே அவன் வேதத்தையறிந்தவன். வேதம் ஸம்ஸாரமாகிற மரத்தை வெட்டுவதற்கு உபாயத்தைச் சொல்

---

க்ஷரம் ப்ரஹ்ம த்ரயீ ப்ரதிஷ்டிதா । ஸ குஹ்யோऽந்யஸ்த்ரிவ்ருத் வேதோ யஸ்தம் வேத ஸ வேதவித் ॥' என்றிவை முதலிய இடங்களிலே போல ப்ரணவத்தைச் சொல்லுகிறது என்பதாவது, க்ருதயுகத்திலுண்டாகிய ஏகாயன வேதத்தைச் சொல்லுகிறதென்பதாவது யுக்தம். ப்ரணவத்தில் கடைசியாகிய அரைமாத்திரை எல்லாவற்றிற்கும் காரணமாகிய பரமபுருஷனைத் தேவதையாகவுடையதென்று ஸ்ருதியில்சொல்லியிருக்கிறபடியினால் 'ஊர்த்வமூலம்' என்பது பொருந்துமுடையது. ஏகாயன வேதத்திற்கும் அது வேதாந்தமாகையினாலும் எல்லா வேதங்களுக்கும் மூலமாகையினாலும் அப்படிச் சொல்லியிருப்பது பொருந்தும். இப்படியே வேதங்களை இலைகளாக உடையது என்பது முதலியதும் இவை இரண்டிற்கும் ஸாமாபடமாய்ச் சொல்லமுடியும் நரம்புகளினால் இலைகள்போல ப்ரணவத்தினால் எல்லா வார்த்தைகளும் உள்ளே கோர்க்கப்பட்டிருக்கிறது என்று ஸ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினாலும், 1 'மஹதோ வேதவ்ருக்ஷஸ்ய மூலபூதோ மஹாநயம் । ஸ்கந்தபூதா ருகாத்யாஸ்தே சாகாபூதாஸ்ததாபரே ॥' என்று விசேஷமான தர்மத்தைச் சொல்லுகிற பாகம் மூலமென்று சொல்லியிருக்கிறபடியினாலும். ஆகையினால் அப்படிப்பட்ட விசேஷமான வேதங்களைத் தெரிந்து கொண்டவனை இவ்விடத்தில் வேதத்தைத் தெரிந்துகொண்டவனென்று ஸ்தோத்திரம் செய்திருக்கிறதே அல்லாமல் வேதமல்லாத ஏதாவதொன்றைத் தெரிந்துகொண்டவனையல்ல என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'வேதம்' என்றாரம்பித்து இவ்விடத்தில் 'வேத' என்னும் பதம் மோக்ஷத்தைக் குறித்துச் சொல்லுகிற வேதபாகத்தைச்சொல்லுகிறது. இத்தால் என்ன ஏற்பட்டதெனில் சொல்லுகிறார்—'வெட்டப்படுகிற' என்றாரம்பித்து. இதன் கருத்

---

1 மஹாந்-பெரியதாகிய, அயம்-இந்த ஏகாயன வேதமானது, மஹத:-பெரிதாகிய, வேதவ்ருக்ஷஸ்ய-வேதமாகிற மரத்திற்கு, மூலபூத:-வேராக இருக்கிறது, ருகாத்யா:-ருக்வேதம் முதலிய, தே-அந்த வேதங்கள், ஸ்கந்தபூதா:-பெருங்கிளைகளாக விருக்கின்றன, அபரே-மற்ற பாகங்கள், சாகாபூதா:-பக்கக்கிளைகளாகவிருக்

லுகிறது. வெட்டப்படுகிற மரத்தின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளுவது வெட்டுவதற்கு உபாயத்தைத் தெரிந்து கொள்ளுவதற்குபயோகமுள்ளது. ஆகையினால் வேதத்தை அறிந்தவனென்று சொல்லப்படுகிறது. 1

அத⁴ஶ்சோர்த்⁴வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய ஶாகா²
    கு³ணப்ரவ்ருத்³தா⁴ விஷயப்ரவாலா: ।
அத⁴ஶ்ச மூலான்யநுஸந்ததானி கர்மானு-
    ப³ந்தீ⁴னி மநுஷ்யலோகே ॥ 2

ப-ரை] தஸ்ய - அந்த மரத்தினுடைய, கு³ணப்ரவ்ருத்³தா⁴: - ஸத்வம் முதலிய குணங்களால் வ்ருத்தியடைந்த, விஷயப்ரவாலா: - ஶப்தம் முதலிய விஷயங்களைத் துளிர்களாகவுடைய, ஶாகா²:-கிளைகள், அத⁴: - கீழும், ஊர்த்⁴வம் ச - மேலும் ப்ரஸ்ருதா: - பரவியிருக்கின்றன, அத⁴: -

---

தாவது பற்றுதலில்லாமையாகிற கத்தியினால் வெட்டத்தகுந்தது என்பது பொருந்தாதாகையினாலேயே ப்ரணவம் முதலியவைகளைச் சொல்லுகிறதென்பது அயுக்தம் 1 'தத: பத³ம் தத்பரிமார்கி³தவ்யம்' என்பதும் அவ்விடத்தில் பொருந்தாது. 2 'ஶப்³த³ப்³ரஹ்மணி நிஷ்ணாத: பரம் ப்³ரஹ்மாதி⁴க³ச்ச²தி' என்று சொல்லியிருப்பதைப்போல இதுவும் இருக்கட்டுமே என்னில் அதுவும் உசிதமல்ல, இது அதற்கு விருத்தமாக இருக்கிறபடியினால். அவ்விடத்தில் வேதத்தில் தேர்ச்சியடைந்தவன் பரப்ரம்மத்தை யடைகிறான் என்று சொல்லப்படுகிறது. இவ்விடத்திலோவெனில் இந்த வ்ருக்ஷத்தை வெட்டிவிட்டு அதற்கப்புறம் பரப்ரம்மத்தைத் தேடவேண்டுமென்று சொல்லியிருக்கிறதாகையினால். ஆகையினால் இதற்குவேறர்த்தம் செல்லுவது ஸம்பவிக்காதாகையினால் ஸம்ஸாரத்தைச் சொல்லுகிறதென்றேற்பட்டபிறகு இதைத் தெரிந்துகொண்டவனை வேதத்தைத்தெரிந்து கொண்டவனென்று ஸ்தோத்திரம் செய்திருப்பது இதைப்பற்றிய ஜ்ஞானம் வேதாந்தங்களில் சொல்லப்படுகிற அர்த்தங்களை அறிவதற்குபயோகமுள்ளதாகையினாலேயே என்பது, 'ஊர்த்⁴வமூலம்' என்றிவை முதலியது நைமித்திக ஸ்ருஷ்டியை யனுஸரித்துச் சொல்லப்பட்டது. 1

---

1 பகவத்கீதை-15-4.

2 விஷ்ணு புராணம்-6-5-64. சப்தப்ரம்மணி-சப்தமாகிய ப்ரம்மத்தில் அதாவது வேதத்தில், நிஷ்ணாத:-சாமர்த்தியத்தையுடையவன், பரம் ப்ரம்ம-பரமாத்மாவை, அதிகச்சதி-அறிகிறான்.

கீழிலும், மநுஷ்யலோகே - மனுஷ்யலோகத்தில், கர்மாநுபந்தீநி - புண்யபாபகர்மங்களாகிற ஜீவாத்மாக்களைக் கட்டுப்படுத்துகிற, மூலாநி - வேர்கள், அநுஸந்ததாநி - பரவியிருக்கின்றன. 2

பா] மனுஷ்யன் முதலியவர்களைக கிளைகளாகவுடைய அந்த வ்ருக்ஷத்திற்கு அவரவர்கள் கர்மங்களாலுண்டாக்கப்பட்ட வேறு கீழிருக்கிற கிளைகளும் மறுபடியும் மனுஷ்யன், பசு, முதலியவைகளாகப் பரவுகின்றன. மேலும் கந்தர்வர், யக்ஷர், தேவர்கள், முதலியவைகளாகப் பரவுகின்றன அவைகள் ஸத்வம் முதலிய குணங்களால் வ்ருத்தியடைந்தவைகள். ஶப்தம்

---

தா] பிறகு நித்யஸ்ருஷ்டியையனுஸரித்துச் சொல்லப்படுகிறது.—இந்த ஶ்லோகத்தினால். 'வேறு' என்பது முன் சொல்லியிருப்பதோடு புனருக்தியைப் பரிகரிப்பதற்காகச் சொல்லியிருக்கிறது. 'மறுபடியும்' என்பது நித்ய ஸ்ருஷ்டியைக் காட்டியிருக்கிறது. கர்மலோகத்தைக் குறித்து மேலே உண்டாகிறதென்று சொல்லப்படுகிறபடியினால் கந்தர்வன் முதலியவர்களைச் சொல்லுகிறது. ஆகையினாலே ப்ரம்மாவினுடைய லோகத்திலிருந்து கீழேயே கிளைகளையுடையதாக இருக்கிறபடியினால் முன்பு சொல்லிய 'அதஶ்ஶாகம்' என்பதோடு விரோதமில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கந்தர்வர், யக்ஷர்' என்றாரம்பித்து. முன்பு சொல்லிய விதமாகக் குணங்கள் மேலே மேலே ஜன்மங்களுண்டாவதற்குக் காரணமாகையினால் தேவன் மனுஷ்யன் முதலிய கிளைகள் குணங்களால் வ்ருத்தியடைந்ததென்பது உசிதம். குணங்கள் இவ்விடத்தில் எல்லாவற்றிற்கும் பொதுவாகிய ஜலங்களின் ஸ்தானத்திலிருக்கிறது. அல்லது அடிக்கட்டை ஸ்தானத்திலிருக்கிறதாகவுமாம். இவ்விடத்தில் 'விஷய' என்னும் பதம் எல்லா வஸ்துக்களுக்கும் பொதுவாகிய ஜ்ஞானம் முதலியவைகளுக்கு விஷயங்களைச் சொல்லுகிறது என்பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஶப்தம் முதலிய' என்று. 'ப்ரவால' என்னும் பதம் இவ்விடத்தில் பவழத்தைச் சொல்லுகிறது என்பது ஸம்பவிக்காது என்று தெரிவிப்பதற்காக 'துளிர்களாகவுடையவைகள்' என்று சொல்லியிருக்கிறது. கிளைகளில் போக்யங்களாகத் துளிர்கள் உண்டாகின்றனவல்லவா. அதைப் போலவே கிளைகள் ஸ்தானத்திலிருக்கிற தேவன் முதலியவைகளில் போக்யங்களாக ஶப்தம் முதலியவைகள் உண்டாகிறபடியினால் அவைகள் துளிர்களின் ஸ்தானத்திலிருக்கின்றன. மேலே வேரையுடைய வ்ருக்ஷம் கீழே கிளைகளையுடையதென்பது வேரிருப்பதையனுஸரித்து உசிதமானாலும் ஆகலாம், மறுபடியும் கீழும் மேலும் பரவியிருப்பதற்

முதலிய விஷயங்களைத் தளிர்களாகவுடையவைகள். அது எப்படி என்னில் சொல்லுகிறார். ப்ரம்மலோகத்தில் வேரையுடையதாயும் மனுஷ்யர்களை நுனியாகவுடையதாயு மிருக்கிற இந்த வ்ருக்ஷத்திற்குக் கீழ் மனுஷ்யலோகத்தில் வேர்கள் பரவியிருக்கின்றன. அவைகள் கர்மாநுபந்திகள், அதாவது கர்மங்களாகிற ஜீவாத்மாக்களைக்கட்டுகிற வேர்கள் கீழே மனுஷ்யலோகத்திலும் உண்டாகின்றன என்றர்த்தம். மனுஷ்யனாகவிருக்கும் தசையில் செய்யப்பட்ட கர்மங்களினால் கீழே மனுஷ்யன், பசு, முதலியவைகளும் மேலே தேவன் முதலியவைகளும் உண்டாகின்றனவல்லவா. 2

---

குக் காரணமென்ன?என்கிற ஆக்ஷேபத்தை அபிப்ராயத்தில்வைத்துக் கொண்டு சொல்லுகிறார்—'அது எப்படி என்னில் சொல்லுகிறார்' என்று. 'அயஶ்சோர்த்வம்' என்று நடுவில் முளைத்த வேர்களைச் சொல்லியிருக்கிறது. அது எப்படி என்னில் மெத்தையின் நுனியில் முளைத்துக் கீழ்முகமாகத் தொங்கிக்கொண்டிருக்கிற கொடிக்குப் பூமியில் ஸம்பந்தப்படுவதினால் வேருண்டாகி அதின் பக்கத்தில் மேல்நோக்கிக் கிளைகளுண்டாவதைப்போல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரம்மலோகத்தில்' என்றாரம்பித்து. மனுஷ்யலோகத்தை யெடுத்தது அவ்விடத்தில் கர்மங்களைச் செய்யக்கூடிய அதிகாரம் பெரும்பாலுமிருக்கிறதென்று தெரிவிப்பதற்காக. ஸமானுதிகரண ஸமாஸம் சொல்லுவதே உசிதமாகையினாலும், கர்மங்களே எல்லாவிடத்திலும் வேராகவிருப்பது பொருத்தமுடையதாகையினாலும் அவைகளைச் சேர்ந்த குணங்களையாவது மற்றவைகளையாவது வேரென்று சொல்லியிருப்பது பொருந்தாது என்பதை யபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அதாவது கர்மங்களாகிற' என்றாரம்பித்து. ஜீவாத்மாவைக் கட்டுகின்றனவாகையினால் 'அநுபந்தீநி' என்னப்படுகின்றன. அன்றிக்கே உறுதியாய் நடுவில் விட்டுப்போகாமலிருக்கின்றன என்றர்த்தம். ஆத்மாவைச்சேர்ந்த கர்மங்களை மனுஷ்யலோகத்திலிருக்கிற வேர்கள் என்று சொல்லியிருப்பதற்குக் காரணமென்ன என்றுக்ஷேபம்வரில் அதற்கு ஸமாதானமாக அது வேராக விருக்கும் விதத்தை நிரூபிக்கிறார்—'மனுஷ்யனாக விருக்கும் தசையில்' என்றாரம்பித்து. எப்படி மேலே கிளைகளையுடைய ஆலமரம் முதலியவைகளுக்கு அந்தக் கிளைகளின் நுனியில் விரையாகவோ, விழுதாகவோ, மூலம் உண்டாகிறதோ அதைப்போலவே கீழ்பாகத்தில் கிளைகளையுடைய இந்த வ்ருக்ஷத்திற்கும் உண்டாகலாமென்று தாத்பர்யம். 2

ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே
நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா । *

ப-ரை] அஸ்ய - இந்த வ்ருக்ஷத்தினுடைய, ரூபம் - ரூபமானது, ததா - அப்படி, இஹ - இந்த மனுஷ்யலோகத்தில், நோபலப்யதே - அறியப்படுகிறதில்லை, அந்த: - நாசமும், ந - அறியப்படுகிறதில்லை, ஆதி: - காரணமும், ந - அறியப்படுகிறதில்லை, ஸம்ப்ரதிஷ்டா - ஆதாரமும் ந - அறியப்படுகிறதில்லை. *

பா] இந்த வ்ருக்ஷம் ப்ரம்மாவையே காரணமாகவுடையதாகையினால் மேல்பாகத்தில் வேரையுடையது. அவரிடத்திலிருந்து உண்டான ஸந்ததிகளின் வரிசையாக மனுஷ்யர்களை நுனியில் கிளைகளாக வுடையதாகையினால் கீழ்பாகத்தில் கிளைகளையுடையது. மனுஷ்யனாயிருக்கும் தசையில் செய்யப்பட்ட கர்மங்கள் வேராகி நிற்க அவைகளினால் மறுபடியும் கீழும் மேலும் கிளைகள் பரவுகின்றன என்று எப்படி இந்த ரூபம் சொல்லப்பட்டதோ அப்படி ஸம்ஸாரிகளால் தெரிந்துகொள்ளப்படுகிறதில்லை.

---

தா] எல்லாருக்கும் ப்ரத்யக்ஷமாகத்தெரிந்து கொள்ளப்பட்டதென்று எல்லாராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட இந்த ஸம்ஸாரத்தில் 'யஸ்தம் வேத' என்று சிலர் இதைத்தெரிந்து கொள்ளுகிறார்கள் என்று ஸ்தோத்திரம் செய்வது அனுசிதம் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இவ்விடத்தில் ரூபம் தெரிந்துகொள்ளப்படவில்லை என்று சொல்லியிருப்பதற்கு ரூபமேயில்லை என்று சொல்லுவதில் தாத்பர்யமில்லை, கீழே ரூபம் சொல்லியிருப்பதற்கு விரோதம் வருகிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்- 'இந்த வ்ருக்ஷத்திற்கு' என்று. எல்லோருக்கும் ஸம்ஸாரத்தைப்பற்றிய ஜ்ஞானமிருந்தபோதிலும் கீழ்ச்சொல்லப்பட்ட ஆகாரத்தோடு கூடியதாக ஜ்ஞானமில்லை என்று 'ததா' என்னும் பதத்தினபிப்ராயம் என்பதை விவரிக்கிறார்—'ப்ரம்மாவையே காரணமாகவுடையதாகையினால்' என்றாரம்பித்து. 'ஸம்ஸாரிகளால்' என்பதற்கு மோக்ஷத்திற்குபயோகமான ஜ்ஞானமில்லாதவர்களினால் என்று தாத்பர்யம். ஸம்ஸாரிகளுக்குள்ளேயே எவன் இப்படித்தெரிந்து கொள்ளுகிறானோ அவன் முக்தனுக்குத்துல்யன் என்று தாத்பர்யமாகவுமாம். கூடஸ்த்தர்கள் தகப்பன் பிள்ளை முதலியவர்கள் ரூபமாக இந்த லோகத்திலும் வேர், கிளை, துளிர், முதலியவைகள் காணப்படுகிறதே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'நான்

நான் மனுஷ்யன், தேவதத்தன் பிள்ளை, யஜ்ஞ தத்தனுக்குத் தகப்பன், அதற்குத்தகுந்ததான வஸ்துக்களை யுடையவன் என்றிவ்வளவு மாத்திரம் தெரிந்து கொள்ளப்படுகிறது. அப்படியே இதற்கு அந்தக்குணங்களாலுண் டான போகங்களில் ஆசையே காரணம் என்றும் தெரிந்துகொள்ளப்படு அப்படியே இதற்கு ஆதாரம் ஆத்மாவல்லாத தேஹத்தில்

---

மனுஷ்யன்' என்றாரம்பித்து. அவர்களுக்கு விடத்தகுந்ததான ஸம் ஸாரத்தை க்ரஹிப்பதற்கு யோகமான ஜ்ஞானமிருக்கிறதேயொழிய அதைவிடுவதற்குத் தகுந்த ஜ்ஞானமில்லை என்று தாத்பர்யம். 'நாஷ:' என்றிவை முதலிய இடங்களிலும் 'தயா' என்னும் பதத் தைச்சேர்த்துக்கொள்ள வேண்டும் என்றும் சொல்லுகிறார்—'அப்படி யே இதற்கு' என்றாரம்பித்து. இத்தோடு சேர்த்துச்சொல்லப்பட்ட ஆசையில்லாமையாகிற கத்தியினால் வெட்டத்தகுந்தது என்பதை யனு ஸரித்து 'ஈஷ' என்னும் பதத்திற்கர்த்தம் சொல்லுகிறார்—'நாசமும்' என்று. திரும்பி உண்டாகாமல் இதை நாசம் செய்வது இவ்விடத்தில் ஆசையில்லாமையால் உண்டாக்கப்பட்ட 'ஈஷ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. அது ஸ்வரூபத்தினாலும் காரணத்தினாலும் அறி யப்படவில்லை நித்யமான நாசம் மாத்திரம் ஸம்ஸாரிகளால் காணப்படு கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸத்வம் முதலிய குணங்களாலுண்டாகிற' என்றாரம்பித்து 'ஷோம' என்னும் பதம் இவ்விடத்தில் அநுபவிக்கக்கூடிய வஸ்துக்களைச்சொல்லுகிறது. ப்ரமா ணங்களிலேற்பட்ட நாசம், ஆதி, ஆதாரம், இவைகளே இல்லை என்று மறைந்திருக்கிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காக 'உ-உ ஒஜ்ஞெ' என்னும்பதம் சேர்த்துக்கொள்ளப்பட்டது. கர்ப்பம், முதலியவைகளா கிய நடுவிலுண்டாகிய காரணம் தெரிந்துகொள்ளப்படுகிற படியினால் ப்ரதானமாகிய காரணம் இங்கே சொல்லப்படுகிறது, என்று சொல்லு கிறார்—'அந்தக்குணங்களாலுண்டான' என்றாரம்பித்து. இவ்விடத்தில் 'ஷுதிஷ்டா' என்னும் பதத்தினால் மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்த படி பரமாத்மாவைச் சொல்லுகிறதென்பது யுக்தமல்ல, ஆசையில்லா தவர்களுக்கு ஆசையை வைக்கக்கூடிய விஷயமாகிய அந்தப் பரமாத் மாவை ஆசையில்லாமையாகிய கத்தியினால் வெட்டத்தகுந்த வ்ருக்ஷத் திற்கு ஆதாரமென்று சொல்லியிருப்பது உசிதமல்லவாகையினால். ஆகையினாலே ஆதியாகிய பற்றுதலுக்கும் காரணமாகிய கழனி முத லியவைகளின் ஸ்தானத்திலிருக்கிற அஜ்ஞானமே இவ்விடத்தில்உசித மாகவிருக்கிறபடியினால் 'ஷுதிஷ்டா' என்னும் பதத்தினால் சொல்லப் படுகிறது என்று சொல்லுகிறார்—'ஆத்மாவல்லாத' என்றாரம்பித்து.

இது ஆத்மா என்கிற அபிமானமாகிய அஜ்ஞானம் என்றும்தெரிந்துகொள்ளப்படுகிறதில்லை. 'ப்ரதிதிஷ்டதி அஸ்மிந் (இதில் நிற்கிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் அஜ்ஞானமே இதற்கு ப்ரதிஷ்டை (ஆதாரம்) என்று சொல்லப்படுகிறது. *

அச்வத்தமேநம் ஸுவிரூடமூலம்
அஸங்கசஸ்த்ரேண த்ருடேந சித்வா || 3
தத: பதம் தத் பரிமார்கிதவ்யம்
யஸ்மிந் கதா ந நிவர்தந்தி பூய: |

ப-ரை] ஏநம் - இப்படிப்பட்ட, ஸுவிரூடமூலம் - ஒன்றாகவும் அநேகவிதமாகவும் முளைத்திருக்கிற வேர்களையுடைய, அச்வத்தம் - அரசமரத்தை, த்ருடேந – உறுதியாகிய, அஸங்கசஸ்த்ரேண - ஆசையில்லாமையாகிய கத்தியினால், சித்வா - வெட்டிவிட்டு, தத: - அதினாலேயே, தத் - அந்த, பதம் - இடமானது, பரிமார்கிதவ்யம் - தேடத்தக்கது, யஸ்மிந் - எந்த இடத்தில், கதா: - போனவர்கள், பூய: - மறுபடியும், ந நிவர்தந்தி – திரும்புவதில்லையோ. *

பா] கீழ்ச்சொல்லிய விதமாகிய நன்றாகவும் அநேகவிதமாகவும் முளைத்

---

இத்தால் 'ஸம்ப்ரதிஷ்டா' நடுவு என்று வ்யாக்யானஞ்செய்ததும் நிராகரிக்கப்பட்டது. அஜ்ஞானத்தை 'ப்ரதிஷ்டா' என்னும் பதம் எப்படிச் சொல்லுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ப்ரதிதிஷ்டதி' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது வேர் ஊன்றியிருக்கும் பூமியானது வ்ருக்ஷத்திற்கு ஆதாரம் கர்மங்களே இந்த ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்திற்கு ஆதாரமென்று சொல்லப்பட்டது. அதுவும் 1 'அவித்யாஸஞ்சிதம் கர்ம' என்று சொல்லப்படுகிறபடியினால் அஜ்ஞானத்திலேயே இருக்கிறது, அந்த அஜ்ஞானத்தினாலேயே அவைகளை யனுஷ்டிக்கிறபடியினால். கர்மங்களுக்குக் காரணமாகிய மமகாரத்திற்கும் இந்த அஹங்காரமே கிழங்கு ஆகையினால் அதுவே இவ்விடத்தில் ஸம்ஸாரமாகிற வ்ருக்ஷத்திற்கு ஆதாரம் என்பது *

'ஏநம்' என்று ஆசை வைக்கஇடமாகிய ப்ரக்ருதி விசித்ரம் என்பதைச் சொல்லியிருக்கிறதென்று சொல்லுகிறார்—'கீழ்ச்சொல்லிய விதமாகிய' என்று. நன்றாக விருக்கையாவது உறுதியான வாஸனையாகிய

---

1 விஷ்ணுபுராணம் - 2 - 13 - 70. கர்ம - கர்மமானது, அவித்யா ஸஞ்சிதம் - அஜ்ஞானத்தினால் உண்டாக்கப்பட்டது.

திருக்கிற வேர்களையுடைய இந்த அரச மரத்தை நல்ல ஜ்ஞானத்தினால் உண்டாகிய உறுதியாகிய ஸத்வம், முதலிய குணங்களாலுண்டான போகங்களில் ஆசையில்லாமை என்று பேருடைய கத்தியினால் வெட்டிவிட்டு அந்த விஷயங்களில் ஆசையில்லாமையாகிற காரணத்தினாலேயே அப்படிப்பட்ட இடத்தைத் தேடவேண்டும். எந்த இடத்தில் போனவர்கள் மறுபடியும் திரும்புவதில்லையோ. *

பா - அ] அநாதிகாலமாயுண்டாகிய ஸத்வம் முதலிய குணங்களாலுண்டான போகங்களில் ஆசையும், அதினால் உண்டாகிய விபரீத ஜ்ஞானமும் எப்படி நிவ்ருத்தியடையும் என்னில் சொல்லுகிறார்—

தமேவ சாத்யம் புருஷம் * ப்ரபத்யே
யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ‖ 4

---

*வேரூன்றிப்போயிருப்பதினால் மற்றவைகளால் வெட்டமுடியாமலிருக்கை. அநேகவிதங்களாக இருக்கைபாவது ப்ராயஶ்சித்தம், முதலியவைகளினால் கர்மமென்று பேரையுடைய ஒவ்வொரு வேரையும் வெட்டினாலும் அநாதி காலமாக மனது, வாக்கு, காயம், இவைகளினால் தெரிந்துகொண்டும் தெரியாமலும், ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதாயும், மறுக்கப்பட்டதாயுமிருக்கிற கர்மங்கள் அநேகவிதமாகச் செய்யப்பட்டிருக்கை. ஆசையில்லாமையும் சில ஸமயத்தில் அந்தந்த ஸமயங்களிலுண்டாகிய வ்யாதி முதலிய கஷ்டங்களினாலுமுண்டாகிறது. அது உறுதியானதல்ல. ஆகையினால் 'நல்ல ஜ்ஞானத்தினாலுண்டாகிய' என்று சொல்லப்பட்டது. விஷயங்களை விடும் ஸமயத்திலே போல ஆத்மாவைத்தேடும் ஸமயத்திலும் இந்த ஆசையில்லாமை தொடர்ந்திருக்க வேண்டும் என்று தெரிவிப்பதற்காக 'தத:' என்னும் பதம். ஆகையினாலேயே 'தத:பதம்' என்று 'பதம்' என்னும் பதத்தைச் சேர்த்துக்கொண்டு வ்யாக்யானஞ் செய்திருப்பது யுக்தமல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்த விஷயங்களில் ஆசையில்லாமையாகிற காரணத்தினாலேயே' என்று. 1 'ஆத்மாவைத் தேடவேண்டும்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளைக் குறிப்பதற்காகச் சொல்லுகிறார்—'தேடவேண்டும்' என்று. இவ்விடத்தில் 'நிவர்தந்தி' என்று பரஸ்மை பதமாகச் சொல்லியிருக்கிறது விருத்தத்தை அநுஸரித்து வேதத்தில் சொல்லியிருப்பதைப் போலச் சொல்லியிருக்கிறது என்றபிப்ராயம்.* *

---

* ப்ரபத்யேத் யத: என்று பாடாந்தரம்.

1 ஜாபாலோப நிஷத் - 6.

ப-ரை] ஆத்யம் - எல்லாவற்றிற்கும் முதல் காரணமாகிய, தம் - அந்த, புருஷமேவ - பரம புருஷனையே, ப்ரபத்யே - ஶரணமாக அடையவேண்டும், யத: - எந்தப் பரம புருஷனிடத்திலிருந்து, ப்ரவ்ருத்தி: - இந்தப் போகங்களில் ஆசையாகிற ப்ரவ்ருத்தி, புராணீ - அநாதியாக, ப்ரஸ்ருதா - உண்டானதோ. 4

பா] இந்த அஜ்ஞானம் முதலியவைகள் நிவ்ருத்திப்பதற்காக எல்லாவற்றிற்கும் ஆதியாகிய* 'மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்', † 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே', ‡ 'மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய' என்றிவை முதலியஇடங்களில் சொல்லப்பட்ட அந்தப் பரம புருஷனையே ஶரணமாக அடையவேண்டும். எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனாகிய எவனிடத்திலிருந்து இந்த ஸத்வம், முதலிய குணங்களாலுண்டாகிய போகங்களில் ஆசையாகிற ப்ரவ்ருத்தி அநாதியாக உண்டாயிற்றே; இதுவும் என்றால் முன்னாலேயே ¶ 'தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா। மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே' என்று சொல்லப்பட்டது. 'ப்ரபத்யே யத: ப்ரவ்ருத்தி:' என்றும் பாடமுண்டு. அப்பொழுது அந்த ஆதியான பரம

தா] உறுதியாகிய ஆசையில்லாமையாகிய கத்தி கிடைத்தாலல்லவோ அதினால் இது வெட்டமுடியும். அதுவே ஸம்ஸாரிகளுக்குக் கிடைக்கக்கூடியதல்லவே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக மேல் க்ரந்தத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'அநாதிகாலமா யுண்டாகிய' என்றாரம்பித்து. 1 'நிர்மாநமோஹா:' என்றிவை முதலியமேல் க்ரந்தங்களை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அஜ்ஞானம் முதலியவைகள் நிவ்ருத்திப்பதற்காக' என்று. 'ஆத்யம்' என்பது முன்பு சொல்லப்பட்டது என்று 'தம்' என்னும் பதத்தினால் ஸ்தாபிக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்—'மயா' என்றாரம்பித்து. எவனுடைய [illegible]வை மீறி நடந்ததினால் ஸம்ஸாரபந்தம் உண்டானதோ அவனே ப்ர[illegible]யை யடைவிக்கப்பட்டவனைக்கொண்டு மோக்ஷத்தைக் கொடுக்கிறான் என்கிற அபிப்ராயத்தினால் 'ஏவ' என்பது. இத்தை விவரமாகச் சொல்லுகிற 'யத: ப்ரவ்ருத்தி:' என்கிற வாக்யம் மஹான் முதலியவைகளின் ஸ்ருஷ்டியை மாத்திரம் சொல்லுகிறது என்பதை விலக்குவதற்காக ப்ரபத்தியைச் சொல்லும் வாக்யத்தில் முன்பு சொல்லியிருப்பதை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'இதுவும் என்றால் முன்னாலேயே' என்றாரம்

* பகவத்கீதை-9-10. † பகவத்கீதை-10-8.
‡ பகவத்கீதை-7-7. ¶ பகவத்கீதை-7-14. 1 பகவத்கீதை-5-5.

புருஷனை, ப்ரபத்யே - ஶரணமாகவடைந்து, யத꞉ - அஜ்ஞானம் நிவ்ருத்திப்பது முதலிய இந்த எல்லாவற்றிற்கும் காரணமாகிய, ப்ரவ்ருத்தி꞉ - வ்யாபாரம், புராணீ - அநாதியாக, ப்ரஸ்ருதா - உண்டானது. முன்பிருந்த மோக்ஷத்தி லாசையுடையவர்களுடைய ப்ரவ்ருத்தி 'புராணீ' என்னப்படுகிறது. அதாவது முன்பிருந்தவர்களாகிய மோக்ஷத்திலாசையுடையவர்கள் என்னையே ஶரணமாகவடைந்து ஸம்ஸாரபந்தத்திலிருந்து விடுபட்டவர்களானார்கள் என்றர்த்தம். 4

பித்து. 1 'தேஷாமேவாநுகம்பார்த²ம்', 2 'மச்சித்த꞉ ஸர்வது³ர்கா³ணி மத்ப்ரஸாதா³த்தரிஷ்யஸி', 3 'மாமேகம் ஶரணம் வ்ரஜ' என்றிவை முதலியதும் இங்கே நினைத்துக்கொள்ளத்தக்கது. இவ்விடத்தில் 'ப்ரஸ்ருதா' முதலிய பதங்களினால் இது ஸத்யமென்றே ஏற்படுகிறபடியினால் மற்றவர்கள் இந்த்ரஜாலம்போல் என்று உதாஹரணம் சொல்லியிருப்பது ஶப்தத்தின் ஸ்வாரஸ்யத்தினாலும், ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களினாலும் மறுக்கப்பட்டது. வேதத்தைப்போலவே ருஷிகளும் ப்ரயோகிக்கலாமென்று அநுமதி செய்யப்பட்டிருப்பதினால் 'ப்ரபத்³யே' என்று பரஸ்மைபதமாகச் சொல்லியிருக்கிறது. அவ்விடத்தில் தன்னாலங்கீகரிக்கப்பட்ட பாடாந்தரத்தையும் அதற்கு வேறு அர்த்தத்தையும்சொல்லுகிறார்—'ப்ரபத்³யேயத꞉'என்றாரம்பித்து.'ப்ரபத்³யே' என்று உத்தம புருஷனாயிருந்தால் வாக்யம் அந்வயிக்கவில்லை. ஆகையினால் 'ப்ரபத்³யே, யத꞉' என்று பதத்தைப் பிரித்தார். இப்படிச் சொல்லில் ஆக்ஷேபத்திற்கு நேராகப்பதிலாகும், என்று தாத்பர்யம். 'யத꞉' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்படுகிற எல்லாவற்றையும் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அஜ்ஞானம் நிவ்ருத்திப்பது முதலிய எல்லாவற்றிற்கும்' என்று. ஜீவாத்மாவின் வ்யாபாரத்தைப்பற்றிச் சொல்லவேண்டியதற்காக 'காரணமாகிய' என்று சொல்லப்பட்டது. 'யத꞉' என்கிற விடத்தில் ஆறும் வேற்றுமையினால் சொல்லப்பட்ட மொத்தமாகிய ஸம்பந்தம் இவ்விடத்தில் கார்யமாயும் காரணமாயு மிருக்கையாகிற விசேஷத்தில் முடிவுபெறுகிறது என்று தாத்பர்யம். 'ப்ரஸ்ருதா புராணீ' என்பதினால் சிஷ்டர்களின் ஆசாரத்தைக்காட்டி யிருக்கிறதென்பது அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று சொல்லுகிறார்—'முன்பிருந்த' என்றாரம்பித்து. அத்தையே விவரிக்கிறார்—'முன்பிருந்தவர்களாகிய' என்றாரம்பித்து. 4

1 பகவத்கீதை–10-11.　2 பகவத்கீதை-18-58.
3 பகவத்கீதை-18-66.

நிர்மாநமோஹா ஜிதஸங்கதோஷா
அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா:|
த்வந்த்வைர் விமுக்தாஸ் ஸுகது:கஸம்ஜ்ஞை
ர்கச்சந்த்யமூடா: பதமவ்யயம் தத்|| 5

ப - ரை] நிர்மாநமோஹா: - தேஹமே ஆத்மாவென்கிற அஜ்ஞானமில்லாதவர்களாய், ஜிதஸங்கதோஷா: - ஸுக துக்கங்களில் ஆசையாகிற தோஷத்தை ஜயித்தவர்களாய், அத்யாத்மநித்யா: - ஆத்மாவைப் பற்றிய ஜ்ஞானத்தில் எப்பொழுது மிருப்பவர்களாய், விநிவ்ருத்தகாமா: - அதைத் தவிர வேறு வஸ்துக்களில் ஆசை நிவ்ருத்தித்தவர்களாய், ஸுகது:க ஸம்ஜ்ஞை:- ஸுகமென்றும் துக்கமென்றும் பேருடைய, த்வந்த்வை:- இரட்டைகளினால், விமுக்தா: - விடப்பட்டவர்களாயும், அமூடா: - அஜ்ஞானமில்லாதவர்களாயும் (இருப்பவர்கள்), தத் அந்த, அவ்யயம் - அழிவில்லாத, பதம் - ஸ்தானத்தை, கச்சந்தி - அடைகிறார்கள். 5

பா]இப்படி என்னைச் ஶரணமாகஅடைந்து ஆத்மா வல்லாத தேஹத்தில் இதுவே ஆத்மா என்கிற அபிமானமாகிற அஜ்ஞானமில்லாதவர்களாயும், குணங்களாலுண்டாகிற போகங்களில் ஆசையென்று பேருடைய தோஷங்களை ஜயித்தவர்களாயும், ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானம் எதுவோ

---

தா] இதே அர்த்தத்தைப்பற்றி 'நிர்மாநமோஹா' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிற மேல் வாக்யமும் 'யத:' என்று கீழ்ச்சொல்லியதை விவரிக்கிறதாகையினால் மிகவும் பொருத்தமுடையது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. இவ்விடத்தில் வஸ்துவின் ஸாமர்த்தியத்தினால் ஆசையைநிவ்ருத்திப்பதற்குக்காரணம் 'நிர்மாநமோஹா:' என்றது, என்று நினைத்து அதற்கனுகுணமாகவ்யாக்யானஞ்செய்கிறார்—'ஆத்மாவல்லாத' என்றாரம்பித்து. 'அமூடா:' என்று தனித்துச்சொல்லியிருப்பதினால், மாநம், மோஹம், இவைகளில்லாதவர்களாய்என்று வ்யாக்யானஞ்செய்தது யுக்தமல்லவென்று தாத்பர்யம். ஆத்மாவினிடத்தில் ஆசையைவிலக்குவதற்காக 'குணங்களாலுண்டாகிற' என்கிற விஶேஷணம் சொல்லியிருக்கிறது. 'ஜிதஸங்கதோஷா:' என்பதின் ப்ரயோஜனம் 'அத்யாத்மநித்யா:' என்பது. அதுவும் 1 'அத்யாத்மஜ்ஞாநநித்யத்வம்' என்று முன்னமேயே சொல்லப்பட்டது. அதையே சொல்லுகிறார்—'ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானம் எதுவோ' என்றாரம்பித்து.

---

1 பகவத்கீதை 13-11.

அது அத்யாத்மம் என்னப்படுகிறது, அதாவது ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞான த்தில் எப்பொழுது மிருப்பவர்களாயும், அதைத் தவிர மற்றவஸ்துக்களில் ஆசை நிவ்ருத்தித்தவர்களாயும், ஸுகம் துக்கமென்று பேருடைய இரட்டைகளால் விடப்பட்டவர்களாயும், ஆத்மா,ஆத்மாவல்லாத வஸ்துக்கள் இவைகளின் ஸ்வபாவங்களைத் தெரிந்துகொண்டவர்களாயு மிருப்பவர்

*யோகம் செய்யும்போது இடைவிடாமலும் அதைவிட்டு எழுந்திருந்த பொழுது அதிகமாகவும் ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்திலேயே நித்யமாக இருக்கை சொல்லப்படுகிறது. மிகவும் ஸுகமாகிய ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்திலேயே எப்பொழுது மிருப்பதினால் அதைத் தவிர வேறு விஷயங்களில் ஆசை நிவ்ருத்தித்து விடுகிறது. 'விநிவ்ருத்தகாமா:' என்பது இவ்விடத்தில் விசேஷமாக நிவ்ருத்தியடைந்த காமங்களையுடையவர்களாயிருக்கை. அதாவது விஷயங்கள் ஸமீபத்திலிருந்தபோதிலும் அவைகளை உபேக்ஷை செய்துகொண்டிருக்கை. ஸங்கம், காமம், இவை இரண்டுகளும் ஒன்று காரணமாகவும், மற்றொன்று கார்யமாகவுமிருக்கின்றன என்று முன்னமேயே சொல்லப்பட்டிருப்பதினால் புனருக்தி யென்னும் தோஷமில்லை. 'ஸுகது:கஸம்ஜ்ஞை:' என்பதற்கு அனுகூலமாயும், ப்ரதிகூலமாயுமிருக்கிற ஸ்வபாவங்களையுடைய என்றர்த்தம். இது உபாயதசையைச் சொல்லுகிறதாக இருந்தால் இந்த இரட்டைகளைப்பொறுத்துக்கொள்ள வேண்டுமென்று சொல்லுகிறது. பலதசையைச் சொல்லுகிறதாக இருந்தால் துக்கம் முழுவதும் நிவ்ருத்தித்து விடுகிறது என்று சொல்லுகிறது. 1 'த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத் । மோஹிதம்' என்று சொல்லப்பட்ட மாயையைத்தாண்டிவிட்டதினால் இவ்விடத்தில் 'அமூடா:' என்று சொல்லப்படுகிறது. அதுவும், தேஹமே ஆத்மா என்கிற ப்ரமமில்லாமை 'நிர்மாநமோஹா:' என்பதினாலேயே சொல்லப்பட்டபடியினால் அதைத் தவிர வேறாகிய ஆத்மாவையும்ஆத்மாவல்லாத விஷயங்களையும் பற்றிய ப்ரமங்களொன்றுமில்லை என்று சொல்லுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆத்மா, ஆத்மாவல்லாத வஸ்துக்கள்' என்றாரம்பித்து. அன்றிக்கே அஜ்ஞானங்களிற்குக் காரணமில்லையென்பதைக் குறிக்கிறது இவ்விடத்தில் 'அமூடா:' என்னும் பதம். ஒன்றுக்கொன்று வ்யத்யாஸத்தைத் தெரிவிக்கக்கூடிய அஸாதாரணமான ஸ்வபாவங்களைத் தெரிந்துகொள்ளுவதினாலல்லவோ ஆத்மாவும் ஆத்மாவல்லாத வஸ்துக்களும் ஒன்றென்கிற ப்ரமம் நிவ்ருத்தி செய்*

1 பகவத்கீதை-7-13.

கள் அழிவில்லாத அந்த ஸ்தானத்தை அடைகிறார்கள். அதாவது அளவில்லாத ஜ்ஞானத்தை ஸ்வபாவமாகவுடைய ஜீவாத்மாவை உள்ளபடியே அடைகிறார்கள். என்னைச் ஶரணமாக அடைந்தவர்களுக்கு என்னுடைய அனுக்ரஹத்தினாலேயே இந்த எல்லா வ்யாபாரங்களும் ஸுலபமாய்ச் செய்யக்கூடியவைகளாயும் ஸித்தி பர்யந்தங்களாகவுமாகின்றன என்றர்த்தம். 5

---

*யத்தக்கது என்று தாத்பர்யம். ஆத்மாக்கள் ஸ்வரூபத்தில் விகாரங்களில்லாததாகையினால் இவ்விடத்தில் வ்யயமாவது ஜ்ஞானத்தின் சுருங்குதலும் பரவுதலும். அதில்லையென்று மறுத்ததினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அதாவது அளவில்லாத ஜ்ஞானத்தை' என்றாரம்பித்து. 'பத்யதே (அடையப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'பதம்' என்னப்படுகிறது. 1 'ப்ராபணீயஸ்ததைவாத்மா ப்ரக்ஷீணாஶேஷபாவந:' என்று பரிசுத்தமான ஜீவாத்மாவும் பரமாத்மாவைப்போலவே அடையத்தகுந்தவனாகையினால் 'பதம்' என்னப்படுகிறான். இவ்விடத்தில் பரமாத்மாவே 'பதம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறானென்பதில்லை, அடுத்த ஶ்லோகத்தில்அதையே'தத்' என்னும் பதத்தினலெடுத்து 'மம தாம' என்று வேறாகச் சொல்லியிருப்பதினால். 'பத' என்னும் பதமும், 'தாம'என்னும் பதமும் திவ்யமான ஸ்தானத்தைச் சொல்லுகிறதென்பது உசிதமல்ல, 'பரிமார்கிதவ்யம்' என்று அதைத் தேடவேண்டுமென்று விதித்திருப்பது பொருந்தாதாகையினால். அது ப்ரயோஜனமாகையினால் இருக்கிறதென்று அறியவேண்டியது மாத்திரமேயொழிய ஆத்மாவைப்போல த்யானம் வரையில் தேடக்கூடியதென்பதில்லை. 'மம தாம' என்று சொல்லப்பட்ட வஸ்துவிற்கே ஸம்ஸாரத்திலிருக்கும் தசை 'மமைவாம்ஶ:' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில் பரமபதமாகிற ஸ்தானத்தை நிரூபித்த பிறகு 2 'மமைவாம்ஶ:' என்று பத்த தசையையுடைய ஜீவாத்மாவைச் சொல்லியிருப்பது பொருத்தமுடையதல்லவென்று தாத்பர்யம். கீழ்ச் சொல்லிய ஆக்ஷேபத்திற்குப் பரிகாரமாக 'தமேவ' என்றாரம்பித்து இதுவரையிலுள்ள க்ரந்தத்திற்கு மொத்த தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'என்னைச் ஶரணமாக அடைந்தவர்களுக்கு' என்றாரம்பித்து.* 5

---

1 *விஷ்ணுபுராணம்-6-7-96. ததைவ- அப்படியே, ப்ரக்ஷீணாஶேஷபாவந:- மூன்றுவித பாவனைகளுமில்லாத, ஆத்மா-ஜீவாத்மாவானவன், ப்ராபணீய:-அடையத்தக்கவன்.*
2 *பகவத்கீதை-15-7.*

𑌨 𑌤𑌦𑍍𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 𑌸𑍂𑌰𑍍𑌯𑍋 𑌨 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑍋 𑌨 𑌪𑌾𑌵𑌕𑌃।
𑌯𑌦𑍍𑌗𑌤𑍍𑌵𑌾 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 𑌤𑌦𑍍𑌧𑌾𑌮 𑌪𑌰𑌮𑌂 𑌮𑌮 ॥ 6

ப - ரை] 𑌤𑌤𑍍 - அந்த ஜீவாத்மாவாகிற ஜ்யோதிஸ்ஸை, 𑌸𑍂𑌰𑍍𑌯𑌃 - ஸூர்யன், 𑌨 𑌭𑌾𑌸𑌯𑌤𑍇 - ப்ரகாசம் செய்கிறதில்லை, 𑌶𑌶𑌾𑌙𑍍𑌕𑌃 - சந்திரனும், 𑌨 - (ப்ரகாசம் செய்கிறது) இல்லை, 𑌪𑌾𑌵𑌕𑌃 - அக்னியும் 𑌨 - (ப்ரகாசம் செய்கிறது) இல்லை, 𑌯𑌤𑍍 - எந்த இடத்தை, 𑌗𑌤𑍍𑌵𑌾 - அடைந்து, 𑌨 𑌨𑌿𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 - திரும்புகிறதில்லையோ, 𑌤𑌤𑍍 - அப்படிப்பட்ட, 𑌪𑌰𑌮𑌂 - உயர்ந்ததாகிய, 𑌧𑌾𑌮 - ஜ்யோதிஸ்ஸானது, 𑌮𑌮 - என்னுடையது, அதாவது எனக்குச்சேஷ பூதம். 6

பா] அந்த ஆத்மாவாகிற ஜ்யோதிஸ்ஸை ஸூர்யனும் ப்ரகாசம் செய்கிறதில்லை, சந்திரனும் ப்ரகாசம் செய்கிறதில்லை, அக்னியும் ப்ரகாசம் செய்கிறதில்லை. ஜ்ஞானமல்லவோ எல்லாவற்றையும் ப்ரகாசம் செய்கிறது. வெளியிலிருக்கிற வெளிச்சங்கள் விஷயங்களோடு இந்த்ரியங்கள் ஸம்பந்

---

தா] ப்ரகாசம் செய்யக்கூடியவைகளாகிய மற்ற வஸ்துக்களை அபேக்ஷிக்கவேண்டியதில்லை என்பதைத் தெரிவிப்பதற்காக '𑌤𑌤𑍍' என்னும் பதத்தினுல் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிருர்—'அந்த ஆத்மாவாகிற' என்ருரம்பித்து. இதின் கருத்தாவது '𑌤𑌤𑍍' என்னும் பதம் ப்ரஸ்தாவிக்கப்பட்டதைச் சொல்லுகிறதென்பது ஸ்வரஸமுடையதாகையினுல் '𑌪𑌦𑌮𑌵𑍍𑌯𑌯𑌂 𑌤𑌤𑍍' என்று கீழ் பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் ப்ரஸ்தாவிக்கப்பட்டிருப்பதினுலும், மேல்ஶ்லோகத்திலும் '𑌮𑌮𑍈𑌵𑌾𑌂𑌶𑍋 𑌜𑍀𑌵𑌲𑍋𑌕𑍇 𑌜𑍀𑌵𑌭𑍂𑌤𑌃' என்று அதையே சொல்லப்போகிறபடியினுலும், ஶ்ருதியில் ஏற்பட்டிருக்கிற ஸ்வயம் ப்ரகாசம் என்பதைச் சொல்லுகிற '𑌧𑌾𑌮' என்னும் பதத்தை இவ்விடத்தில் ப்ரயோகித்திருப்பதினுலும், இந்த ஶ்லோகம் ஜீவாத்மாவைப்பற்றியதே என்பது. ஸூர்யன் முதலியவைகளால் ப்ரகாசம் செய்யக்கூடாமலிருக்கையை அப்படிப்பட்ட ஸ்வபாவமில்லாமையினுல் என்று ஸ்தாபிக்கிருர்—'ஜ்ஞானமல்லவோ' என்ருரம்பித்து. 'எல்லாவற்றையும்' என்பதற்கு ப்ரகாசம் செய்யத்தகுந்த எல்லா வஸ்துக்களையும் அவைகளை ப்ரகாசம் செய்கிறவைகளாக நினைக்கப்படுகிற ஸூர்யன் முதலிய வெளிச்சங்களுக்கும் என்று தாத்பர்யம். ஜ்ஞானம் எல்லாவற்றையும் ப்ரகாசம் செய்வதாயிருந்தால் அப்பொழுது வெளி வஸ்துக்கள் விஷயத்திலும் ஸூர்யன் முதலியவைகளை ஏன் அபேக்ஷிக்க வேண்டும்? அப்படிக்கில்லாவிடில் ஸூர்யன் முதலியவைகளைப்பற்றி ப்ரகாசம் செய்கிறவைகள் என்கிற வ்யவஹாரம்எப்படி

தப்படுவேதற்குத் தடையாகிய இருட்டைப்போக்கடித்துக்கொண்டு அதின் வழியாக உபகாரம் செய்கின்றன. இந்த ஆத்மாவை ப்ரகாசம் செய்யக் கூடியது யோகம். அதற்குத்தடையாகியது அநாதியாகிய கர்மம். அதை நிவ்ருத்திசெய்யக்கூடிய உபாயமும் கீழ்ச்சொல்லப்பட்ட பகவானிடத்தில் ஶரணாகதியைக் காரணமாகவுடையஆசையில்லாமை முதலியது எதை

---

உண்டாகிறது ? என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'வெளியிலிருக்கிற' என்றாரம்பித்து. 'ஸம்பந்தப்படுவேதற்குத்தடையாகிய' என்பது ப்ரத்யக்ஷமுண்டாவதற்குக் காரணங்களின் நடுவில் சேர்க்கப்பட்ட விஶேஷமான ஸம்பந்தங்களைப்பற்றிச் சொல்லப்பட்டது. ஏனெனில் சுவர் முதலியவைகளைப்போல் இருட்டு தடங்கலில்லையல்லவா, நடுவில் இருட்டோடு கூடிய வெளிச்சத்திலிருக்கிற வஸ்துக்கள் ப்ரத்யக்ஷமாக அறியப்படுகிறபடியினால். இப்படி எல்லாவற்றையும் ப்ரகாசம் செய்கிற ஆத்மாவாகிற ஜ்யோதிஸ்ஸு தானே ஏன் ப்ரகாசிக்கிறதில்லை ? வேறு எதினால் ப்ரகாசம் செய்யக்கூடியது ? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'இந்த ஆத்மாவை' என்றாரம்பித்து ஸ்வயம் ப்ரகாசமாயிருக்கிற வஸ்துவையும் உள்ளபடியிருக்கிற எல்லா ஆகாரங்களுடன் அறிவதில் ஸம்ஸாரிகளுக்கு யோகமே உபாயம் என்று தாத்பர்யம். ப்ரகாசம் செய்யக்கூடிய மற்ற வஸ்துக்கள் இதை ப்ரகாசம் செய்யாது என்று மறுப்பதினால் இது அறியக்கூடியதில்லை என்று சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபமும் இதினால் பரிகரிக்கப்பட்டது. ஒரு விஶேஷத்தைப்பற்றி அது இல்லை என்று சொல்லியிருப்பது மற்றவைகள் உண்டென்று காட்டுகிறது என்று தாத்பர்யம். அந்த யோகமும் எல்லாருக்கும் ஏன் ஸித்திப்பதில்லை? இதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதற்குத்தடையாகிய' என்றாரம்பித்து. ஸம்ஸாரத்திலுண்டாகிய கர்மம் யோகமுண்டாவதற்குத்தடை என்றர்த்தம். அப்படியாகில்ஒருவருக்கும் அந்த யோகம் ஸித்திக்காதே என்றாக்ஷேபம்வரில் கீழ்ப்ரஸ்தாவித்த அர்த்தத்தைக்கொண்டு பரிகரிக்கிறார்—அதைநிவ்ருத்திசெய்யக்கூடிய உபாயமும்'என்றாரம்பித்து.'மக்ஷா' என்பதற்குஅடைந்து என்றர்த்தம். 'யாஸ' என்னும்பதம்இவ்விடத்தில் முன்பால நியமிக்குமிடம் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிறதல்ல. பின்னை எப்படி என்னில் ஸூர்யன் முதலிய வெளிச்சங்களை அபேக்ஷிக்கிறதில்லை என்று சொல்லியிருப்பதினாலே ஸ்வரூபம் ப்ரகாசமாகியதென்றேற்பட்டிருக்கிறபடியினால் ஜ்யோதிஸ்ஸு என்னுமர்த்தத்தைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே என்னுடைய உயர்ந்த ஜ்யோதிஸ்ஸு என்று அந்வயம் சொல்வது முசிதமல்ல. என்னுடையது என்று

அடைந்து மறுபடியும் திரும்புகிறதில்லையோ அப்படிப்பட்ட உயர்ந்த ஜ்யோதிஸ்ஸு என்னுடையது. அதாவது எனக்கு விபூதியாகிய என்னுடைய அம்சம் என்றர்த்தம். ஸூர்யன் முதலியவைகளையும் ப்ரகாசம் செய்யக்

---

*ஸம்பந்தத்தை விதிப்பதோவெனில் முக்ததசையில் மிகுந்த ஸாம்யத்தை யடைகிறனென்று சொல்லியிருக்கிறபடியினால் ஸ்வாதந்த்ர்யம் உண்டாகிவிடுகிறதோ என்கிற ஸந்தேஹத்தைப் பரிகரிப்பதினால் ப்ரயோஜனமுடையது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்-'உயர்ந்த ஜ்யோதிஸ்ஸு என்னுடையது' என்று 1'ஶ்லோகவாம்ஶ:' என்று மேலே சொல்லப்போகிறதற்கும் காரணம் இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று தெரிவித்துக்கொண்டு ஆறும் வேற்றுமையினால் சொல்லப்பட்டப் பொதுவாகிய ஸம்பந்தத்தை ஒரு விஶேஷத்திலே சுருக்கிச் சொல்லுகிறார்—'என்னுடைய விபூதியாகிய' என்று. விபூதியாக இருக்கையாவது ஒரு க்ரஹஸ்தனுக்கு வீடு முதலியவைகளைப்போல அல்ல. பின்னை எப்படியெனில் விட்டுப் பிரியக்கூடாத விஶேஷணமாகிய அம்ஶமாக விருப்பதினால் என்று சொல்லுகிறார்—'என்னுடைய அம்ஶம்' என்று. இதின் கருத்தாவது அவயவங்களில்லாத தொன்றாகிய ஸ்வரூபத்தில் அம்ஶம் என்று சொல்லியிருக்கிறதல்ல, ஏனெனில் அம்ஶமென்பது ஒருவஸ்துவில்ஒருபாகமாகையினால், 'அம்ஶம்' 'அம்ஶீ' என்பது பேதத்தைக் குறிக்கிறதாயினால். அப்படிக்கில்லாவிடில் ஒரே வஸ்துவினிடத்தில் அம்ஶமாவது எது? அம்ஶியாவது எது? அதுவே அதினுடைய அம்ஶம் என்று ப்ரமித்தவனும் சொல்ல மாட்டான். பேதம் அபேதம் இரண்டும் ஒரு வஸ்துவிற்கு ஸம்பவிக்காது, ஒன்றுக்கொன்று விரோதம், எல்லா ஶ்ருதிகளுக்கும் விரோதம், முதலியவைகள் வருகிறபடியினால். 2 'இந்தப் பரமாத்மாவிற்கு எல்லா ப்ராணிகளும் கால்பாகம்' என்றும், 3 'அவனுக்கு அவயவங்களாகிய வஸ்துக்களினால் இந்த எல்லா லோகமும் நிறைந்திருக்கிறது' என்றும், 4 'எப்படி நெருப்பினிடத்திலிருந்து சின்னப்பொறிகள் எங்கும் பரவுகின்றனவோ அப்படியே இந்தப் பரமாத்மாவினிடத்திலிருந்து எல்லா ஜீவாத்மாக்களும் பரவுகின்றன' என்றும் அர்த்தமுள்ள அம்ஶமாகவிருக்கையாவது எல்லாம் சேர்ந்த வஸ்துவினிடத்தில் விஶேஷண*

---

1 *பகவத்கீதை*-15-7.
2 *புருஷஸூக்தம்*-1-2-1.
3 *ஶ்வேதாஶ்வதரம்*-4-10.
4 *ப்ருஹதாரண்யகம்*-4-1-20.

கூடியதாகையினால் அதுமேலானதென்பது. ஸூர்யன், முதலிய வெளிச்சங்கள் ஜ்ஞானமாகிற வெளிச்சத்தை ப்ரகாசம் செய்யக்கூடியவைகளல்ல. ஜ்ஞானமேயல்லவோ எல்லாவற்றையும் ப்ரகாசம் செய்கிறது.

மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதந: ।
மந:ஷஷ்டாநீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தாநி கர்ஷதி ॥ 7

பாகிய ஒரு பாகமாகையினால் என்று 1 'அம்ஶோ நாநாவ்யபதேஶாத்' என்கிற அதிகரணத்திலும், 2 'ப்ரகாஶாதிவத்து நைவம் பர:' என்கிற ஸூத்திரத்திலும், ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதாகையினால் அநேக வஸ்துக்கள் ஒரு காரணத்தினால் ஒன்றாகச் சேர்த்துக்கொள்ளப்பட்டிருக்கும்பொழுது அதில் பிரித்துச்சொல்லப்படுகிற ஒருபாகம் அம்ஶமென்று சொல்லப்படுகிறது. இப்படியே துணி, தான்யராசி, முதலியவைகளிலும். இதுவும் விஶேஷணங்களாகவும் விஶேஷ்யங்களாகவுமிருக்கிற வஸ்துக்களிலும் இரண்டும் சேர்ந்த வஸ்து ஒன்றாயிருந்தபோதிலும் விஶேஷணமாகிய அம்ஶம் என்பது முதலிய வ்யவஹாரங்களிலும் துல்யம். ஆகையினால் இவ்விடத்தில் மிகவும் வெவ்வேறாகிய ஜீவாத்மா பரமாத்மா இவர்களுக்குள் ஒன்று விபூதியாகவும் மற்றொன்று விபூதியையுடையவனாகவுமிருப்பதினால் சேர்ந்த ஒரு வஸ்துவாகையினால் அதில் விஶேஷணமாகிய ஜீவாத்மா பிரித்துச்சொல்லப்படும்பொழுது ப்ரதானமாகிய பரமாத்மாவைக்குறித்து அம்ஶமென்று சொல்லப்படுகிறான் என்பது. இவ்விடத்தில் தடங்கலில்லாத மேன்மையையுடைய பரமாத்மாவைத் தவிர வேறாகிய ஜீவாத்மாவைப்பற்றிய 'யத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற ஜ்யோதிஸ்ஸுக்கு விஶேஷணமாகவிருக்கிற 'பரம்' என்பது ஸமீபத்தில் சொல்லப்படுகிற வெளிச்சங்களைக்குறித்து. ஆகையினால் அதினாலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஸூர்யன் முதலியவைகளையும்' என்றாரம்பித்து.

1 ஶாரீரகஸூத்ரம்-2-3-42-அம்ஶாதிகரணம்.

2 ஶாரீரகஸூத்ரம்-2-3-45-(ஜீவாத்மா பகவானுடைய அம்ஶமாயிருந்தபோதிலும்) பர:-பரமாத்மா, நைவம்-இந்த ஜீவாத்மாவின் ஸ்வபாவமுடையவனல்ல, (எப்படி யென்னில்) ப்ரகாஶாதிவத்-ஸூர்யன் முதலிய வஸ்துக்களின் ப்ரகாஶம் முதலியவைகளைப்போல அம்சமாகையினால் அதாவது ப்ரகாசங்கள் எப்படி ஸூர்யனுடைய அம்ஶமோ அப்படி ஜீவாத்மா பரமாத்மாவினுடைய அம்ஶம். ஆகையினால் ஜீவர்களுக்குண்டான தோஷம் இவனுக்குண்டாகாது என்று தாத்பர்யம்.

ப - ரை] ஜீவலோகே - ஜீவர்களின் கூட்டங்களில், மம ஏவ - என்னுடைய, அம்ஶ: - பாகமானது, ஸநாதந: - அநாதியாக விருந்துகொண்டு ஜீவபூத: - பத்த ஜீவர்களாகி, ப்ரக்ருதிஸ்தாநி - ப்ரக்ருதியிலிருக்கிற, மந:ஷஷ்டாநி - மனஸ்ஸை ஆறுவதாக உடைய, அதாவது மனதுடன் சேர்ந்து ஆறுகிய, இந்த்ரியாணி - இந்த்ரியங்களை, கர்ஷதி - இழுக்கிறது.

பா] இப்படிக் கீழ்ச்சொல்லிய ஸ்வரூபத்தையுடையதாயும், அநாதியாயும், எனக்கு அம்ஶமாயுமிருக்கிற சிலபாகம் அநாதியான கர்மமாகிய அவித்யையினுல் சுற்றப்பட்டதாய் பத்த ஜீவனுகி இந்த ஜீவலோகத்திலிருந்துகொண்டு தேவன் மனுஷ்யன், முதலிய ப்ரக்ருதியின் மாறுதல்களாகிய ஶரீரங்களிலிருக்கிற மனஸ்ஸுடன் சேர்ந்த ஆறு இந்த்ரியங்களை இழுக்கிறது. சிலது முன் சொல்லிய வழியினுல் அவித்யையிலிருந்து விடுபட்டதாய் தன்னுடைய ஸ்வரூபத்துடன் நிற்கிறது. பத்தஜீவனே வெனில் மிகவும் சுருக்கத்தையடைந்த ஜ்ஞானம், ஐஶ்வர்யம், இவைகளை யுடையதாய்க்கொண்டு கர்மங்களா லடையப்பட்ட ப்ரக்ருதியின் மாறுதல்களாகிய ஶரீரங்களிலிருக்கிற மனஸ்ஸுடன் ஆறுகிய இந்த்ரியங்களுக்கு ஈஶ்வரனுகி அவைகளைத்தங்கள் தங்கள் கர்மங்களுக்குத்தக்கபடி இங்குமங்கு மிழுக்கிறது. 7

ஶரீரம் யதவாப்நோதி யச்சாப்யுத்க்ராமதீஶ்வர: ।
க்ருஹீத்வைதாநி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ॥ 8

ப - ரை] ஈஶ்வர: - அந்த இந்த்ரியங்களுக்கு நியந்தாவாகிய ஜீவாத்மா, யத் - எந்த, ஶரீரம் - தேஹத்தை, அவாப்நோதி - அடைகிருனே, யத் – எந்த ஶரீரத்திலிருந்து, உத்க்ராமதி - வெளியில் புறப்படுகிருனே

---

தா] இப்படி எல்லா ஜீவர்களும் உமக்கு விபூதியாகையினுல் உம்முடைய ஒருபாகமாகவே இருந்தால் அப்பொழுது நித்யஸூரிகளின் கும்பல்களைப்போலப் பேதமில்லாமல் எல்லா ஆத்மாக்களுக்கும் பரிசுத்தமான ஸ்வரூபத்தை யடைவது ஏன் உண்டாகக்கூடாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானமாக பத்தர்களும் தன்னுடைய விபூதி தான் என்று அநுவாதம் செய்துகொண்டு பத்தர், முக்தர் முதலிய ஏற்பாட்டுக்குக் காரணம் 'மமைவாம்ஶ:' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'இப்படிக் கீழ்ச் சொல்லிய ஸ்வரூபத்தையுடைய' என்றாரம்பித்தது. * * *

[7—வது ஶ்லோகத்திற்கு இதற்குமேலும், 8—வது, 9-வது ஶ்லோகங்களுக்கும் தாத்பர்ய சந்த்ரிகை கிடைக்கவில்லை.]

(அவைகளில்), வாயு꞉ - காற்றானது, ஆஶயாத் – இருப்பிடங்களிலிருந்து, கந்தாநிவ–வாஸனைகளைப்போல, ஏதாநி - இந்த இந்த்ரியங்களை, க்ருஹீத்வா – பிடித்துக்கொண்டு, ஸம்யாதி - போகிறான். 8

பா] எந்தச் ஶரீரத்தையடைகிறானோ, எந்தச் ஶரீரத்திலிருந்து வெளியில் புறப்படுகிறானோ, அவைகளில் இந்த்ரியங்களுக்கு யஜமானனாகிய இந்த ஜீவாத்மா இந்த்ரியங்களை பஞ்சபூதங்களின் ஸூக்ஷ்மமான பாகங்களோடுகூட எடுத்துக்கொண்டுபோகிறான். எப்படிக் காற்று, புஷ்பம், சந்தனம், கஸ்தூரி முதலிய வாஸனைகளின் இருப்பிடங்களிலிருந்து அந்த வஸ்துக்களின் ஸூக்ஷ்மமான பாகங்களோடுகூட வாஸனைகளை யெடுத்துக்கொண்டு வேறிடத்திற்குப் போகிறதோ அதைப்போல என்றர்த்தம். 8

பா - அ] அந்த இந்த்ரியங்கள் எவை என்னில் சொல்லுகிறார்—

ஶ்ரோத்ரம் சக்ஷு꞉ ஸ்பர்ஶநம் ச ரஸநம் க்ராணமேவ ச |
அதிஷ்டாய மநஶ்சாயம் விஷயாநுபஸேவதே ‖ 9

ப - ரை] அயம் – இந்த ஜீவாத்மா, ஶ்ரோத்ரம் - காதையும், சக்ஷு꞉– கண்ணையும், ஸ்பர்ஶநம் ச - தோலையும், ரஸநம் - நாக்கையும், க்ராணமேவ ச - மூக்கையும், மந꞉ - மனஸ்ஸையும், அதிஷ்டாய - அதிஷ்டானம் செய்துகொண்டு, விஷயாந் - அவைகளின் விஷயங்களை, உபஸேவதே - அனுபவிக்கிறான். 9

பா] மனதுடன் சேர்ந்து ஆறாகிய இந்த இந்த்ரியங்களை அதிஷ்டானம் செய்துகொண்டு அதாவது தங்கள் தங்கள் விஷயங்களை க்ரஹிப்பதற்குத் தக்கவைகளாகச் செய்துகொண்டு அந்தந்த ஶப்தம் முதலிய விஷயங்களை யனுபவிக்கிறான். 9

உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜாநம் வா குணாந்விதம் |
விமூடா நாநுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞாநசக்ஷுஷ꞉ ‖ 10

ப - ரை] குணாந்விதம் - ஸத்வம் முதலிய குணங்களையுடைய ஶரீரங்களுடன் சேர்ந்திருக்கிற, உத்க்ராமந்தம் - ஶரீரங்களிலிருந்து வெளிப் புறப்படுகிற, ஸ்திதம்வாபி - அந்தச் ஶரீரங்களுக்குள்ளிருக்கிற, புஞ்ஜாநம்வா – (ஶப்தம் முதலிய விஷயங்களை) அனுபவிக்கிற (இந்த ஜீவாத்மாவை), விமூடா꞉ - மூடர்கள், நாநுபஶ்யந்தி - அறிகிறதில்லை, ஜ்ஞாநசக்ஷுஷ꞉ - ஜ்ஞானத்தைக் கண்ணாகவுடையவர்கள், பஶ்யந்தி - பார்க்கிறார்கள். 10

பா] இப்படி ஸத்வம் முதலிய குணங்கள் நிறைந்த ப்ரக்ருதியின் மாறுதலாகிய மனுஷ்யனாயிருக்கை முதலிய அமைப்புகளையுடைய ஶரீரத்தோடு சேர்ந்திருக்கிற அந்தச் ஶரீரத்திலிருந்து வெளிப்புறப்படுகிறவனாயும் அந்தச் ஶரீரத்திற்குள் இருப்பவனாயும், குணங்கள் நிறைந்த ஶப்தம் முதலிய விஷயங்களை யனுபவிக்கிறவனாயு மிருக்கிற இந்த ஜீவாத்மாவை ஒருஸமயத்திலும் ப்ரக்ருதியின் மாறுதலாகிய மனுஷ்யன் முதலியஶரீரங்களைவிட வேறுபட்டவனாகவும், ஜ்ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாகவுடையவனாகவும் மூடர்கள் பார்க்கிறதில்லை. மூடர்களாவது மனுஷ்யன் முதலிய ஶரீரத்தையே ஆத்மாவென்று நினைத்துக்கொண்டிருப்பவர்கள். ஶரீரம், ஆத்மா, இவைகளின் வ்யத்யாஸங்களைப்பற்றிய ஜ்ஞானமுடையவர்கள்

---

தா] *கர்மங்களின் கூட்டங்களினால் கட்டப்பட்ட ஜீவாத்மா ஶரீரமாகிய ஜயிலிலேயே இருப்பதும் அதிலிருந்து வெளிக்கிளம்புவதும் உள் நுழைவதும் முதலிய கஷ்டங்களும் அதில் இருப்பன் விஷங்கலந்த தேன்போல மிகவு மல்பங்களாகிய விஷயங்களை யனுபவிப்பதும் சொல்லப்பட்டது. பிறகு அதற்குமேல் இவைகளுக்குக் காரணமாகிய ஆத்மாபஹாரமாகிற திருட்டுத்தனத்தை ப்ரஸ்தாவித்து இந்த ஆத்மா எல்லாராலும் தெரிந்து கொள்ளக்கூடியது. அப்படியிருக்க அறியப்படவில்லை என்பதையும் பரிகரிக்கிறார்—இந்த ஶ்லோகத்தினால் 'ஶு ணாந்விதம்' என்பது மற்றவைகளுக்குக் காரணம் என்கிற அபிப்ராயத்தினால் முதலில் அதற்கு வ்யாக்யானஞ்செய்கிறார். வெளிப்புறப்படுவது முதலியவைகளைச் சொல்லியிருப்பது எல்லா அவஸ்தைகளையும் குறிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஒரு ஸமயத்திலும்' என்று சொல்லப்பட்டது. 'அஹம் (நான்)' என்று எல்லாருக்கும் தங்கள் தங்கள் ஆத்மா எப்பொழுதும் ப்ரகாசித்துக் கொண்டிருக்க விஷயங்களை அனுபவிப்பது முதலியதும் தங்கள் தங்களாத்மாவிற்குத்தெரிந்து கொண்டிருக்க சிலர் பார்க்கிறதில்லை என்று எப்படிச்சொல்லப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'மனுஷ்யன் முதலிய ஶரீரங்களைவிட வேறுபட்டவனாகவும்' என்றாரம்பித்து. ப்ரக்ருதியின் மாறுதலாகிய மனுஷ்யனாகவிருக்கைமுதலிய அமைப்புகளையுடைய ஶரீரத்தைக்காட்டிலும் என்றர்த்தம். 'ஜ்ஞானம் ஒன்றையே ஸ்வரூபமாகவுடையவன்' என்று சொல்லியிருப்பது எல்லா வ்யத்யாஸங்களையும் குறிப்பதற்காக. 'விமூடா: நாநுபஶ்யந்தி' என்று பகவானுடைய மிகுந்த கருணையோடு கூடியவார்த்தை. உள்ளபடியிருக்கிற ஆத்மாவை அறியாமைக்குக் காரணமாகிய மூடர்களாக இருக்கையும் அந்த ஆத்மாவைப்பற்றியதே என்று சொல்லுகிறார்—'மனுஷ்யன் முதலிய ஶரீரத்தை' என்றாரம்பித்து. நித்யமாக இருக்கை, ஸ்வயம் ப்ரகாசமாக*

எல்லா அவஸ்த்தைகளையுமுடைய இந்த ஜீவாத்மாவை ஶரீரத்தைவிட வேறுபட்ட ஆகாரத்தையுடையவனாகவே பார்க்கிறார்கள். 10

யதந்தோ யோகிநஶ்சைநம் பஶ்யந்த்யாத்மந்யவஸ்திதம் |
யதந்தோऽப்யக்ருதாத்மாநோ நைநம் பஶ்யந்த்யசேதஸ: ||

ப-ரை] யதந்த: - ப்ரயத்தினம் செய்கிற, யோகிந: – யோகிகள், ஆத்மநி - ஶரீரத்தில், அவஸ்திதம் - இருக்கிற, ஏநம் - இந்த ஜீவாத்மாவை, பஶ்யந்தி - பார்க்கிறார்கள், யதந்தோऽபி - ப்ரயத்தினம் செய்துகொண்டிருந்தபோதிலும், அக்ருதாத்மாந: - பரிசுத்தமான மனதையுடையவர்களாயும், அசேதஸ: - (ஆத்மாவைப் பார்ப்பதற்குத் தகுந்த) மனதில்லாதவர்களாயுமிருப்பவர்கள், ஏநம் - இந்த ஆத்மாவை, நபஶ்யந்தி - பார்க்கிறதில்லை. 11

பா] என்னிடத்தில் ஶரணாகதியை முன்னிட்டுக்கொண்டு கர்மயோகம் முதலியவைகளில் ப்ரயத்தினம் செய்பவர்களாய் அவைகளினால் பரிசுத்தமான மனதையுடைய யோகிகள் யோகமாகிற கண்ணினால் ஶரீரத்திலிருந்தபோதிலும் ஶரீரத்தைவிட வேறுபட்டவனாகவும், தன்னுடைய ஸ்வபாவமாகிய ரூபத்துடன் கூட இருப்பவனாயுமிருக்கிற இந்த ஆத்மாவைப் பார்க்கிறார்கள். அப்படி என்னிடத்தில் ஶரணாகதியைச் செய்யாதவர்களாய், அதனாலேயே பரிசுத்தம் செய்யப்படாத மனதையுடையவர்க

---

*இருக்கை, முதலியவைகளால் வ்யத்யாஸம் உண்டென்று தெரிவிப்பதற்காக 'ஶரீரத்தைவிட வேறுபட்ட ஆகாரத்தை யுடையவனாகவே' என்று சொல்லியிருக்கிறது.* 10

*தா] கீழ்ச்சொல்லப்பட்ட அர்த்தமே காரணத்துடன் நிரூபிக்கப்படுகிறது–இந்த ஶ்லோகத்தினால். 'யதந்தோயோகிந:' என்பதினால் முன்பு விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட அர்த்தம் இவ்விடத்தில் ஞாபகப்படுத்தப்படுகிறது என்று சொல்லுகிறார்–'என்னிடத்தில் ஶரணாகதியை முன்னிட்டுக்கொண்டு' என்றாரம்பித்து. 'ஆத்மநி' என்னும்பதம் இவ்விடத்தில் வேறர்த்தத்தைச் சொல்லுவது பொருந்தாததாகையினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஶரீரத்தைச்சொல்லுகிறது. அப்படியிருந்தால் ஆத்மாவைப்பாராமலிருப்பதற்குக் காரணமும் அனுவதிக்கப்பட்டதாகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶரீரத்திலிருந்தபோதிலும்' என்று. ப்ரயத்தினம் செய்பவர்களுக்கு மனது பரிசுத்தம் செய்யப்படவில்லை என்பது எப்படிப்பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'என்னிடத்தில் ஶரணாகதியைச் செய்யாதவர்களாய்' என்று. இவ்விடத்தில் மனஸ்ஸானது பரிசுத்தம் செய்யப்படா*

ளாய், ஆகையினாலேயே ஆத்மாவைப் பார்ப்பதற்குத்தகுந்த ஶக்தியையுடைய மனதில்லாமலு மிருப்பவர்கள் இந்த ஆத்மாவைப் பார்க்கிறதில்லை. 11

பா-அ] இப்படி ஸூர்யன், சந்திரன், அக்னி, இவைகளாகிய இந்த்ரியங்கள் விஷயங்களோடு ஸம்பந்தப்படுவதற்குத் தடங்கலான இருட்டைப் போக்கடித்துக்கொண்டு அதின் வழியாக இந்த்ரியங்களுக்கு ஒத்தாசை செய்கிறபடியினால் ப்ரகாசத்திற்குக் காரணமாகிய வெளிச்சத்தையுடைய வஸ்துக்களுக்கும் ப்ரகாசம் செய்யக்கூடிய ஜ்ஞானமாகிற வெளிச்சத்யுடைய ஜீவாத்மா முக்திதசையையுடையதும் பந்தஜீவனாகிய தசையையுடையதும்பகவானுடையவிபூதியென்று, * 'தஹாஉவுாஉஂஉ8', † 'உ0ெஉவாஂஶோ ஜீவ0ெஶாகெ, ‡ 'ஜீவஹ-ு தஸூ நாதநஃ' என்பவைகளினால் சொல்லப்பட்டது. இப்பொழுது அசேதனத்தின் மாறுதல்களாயும், ஸூர்யன் முதலிய வெளிச்சத்தையுடைய வஸ்துக்களி னுடையதாயுமிருக்கிற ப்ரகாசமும் பகவானுடைய விபூதி என்று சொல்லுகிறார்—

*யஊாஶிதூமதஂ தெஜொ ஜமஹஸாஸயதெஉஶிலஂ ।*
*யஜூஉஸி யஜூாமுள தெதெஜொ விஶிஉாஉகஂ ॥* 12

---

மையாவது பகவானைச் ஶரணமாக அடையாமை என்று தாத்பர்யம். மனது இருந்தபோதிலும் அது ப்ரக்ருத கார்யத்திற்கு உபயோகப்படாமையினால் அது இல்லாததற்கு ஸமமென்பது 'ஃ0ெதஸஃ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஆத்மாவைப் பார்ப்பதற்குத்தகுந்த' என்றாரம்பித்து. 11

தா] 'யஊாஶிதூமதஂ தெஜஃ' என்பவை முதலியவைகளுக்கு முன் பின் ஸந்தர்ப்பங்களோடு ஸங்கதியில்லை என்பதைப் பரிகரிப்பதற்காகவும், ஸுகமாகத் தெரிந்துகொள்ளுவதற்காகவும் கீழ்ச் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சேர்த்துச் சுருக்கிச் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. ஆத்மாவாகிற ஜ்யோதிஸ்ஸு தன்னுடைய விபூதி என்று சொன்ன பிறகு அதை ப்ரகாசம் செய்யச் சக்தியில்லாதவைகளாகையினால் விலக்கக்கூடியவைகளாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட ப்ரக்ருதியைச்சேர்ந்த ப்ரகாசங்களும் தனக்கு விபூதிதான் என்று சொல்லியிருப்பது உசிதந்தான் என்று சொல்லப்பட்டதாகிறது. வேறு வஸ்துக்களின் ப்ரகாசம் மற்றொருவனுடையதாக எப்படியாகும். ஆகையினால் இவ்விடத்தில் ஸூர்யன் முதலியவர்களும் தானும் ஒன்

* பகவத்கீதை-5-6. † பகவத்கீதை-5-7.
‡ பகவத்கீதை-5-7.

ப-தை] யத் ஆதித்ய கதம் - ஸூர்யனிடத்திலிருக்கிற, யத்—எந்த, தேஜ:- ப்ரகாசமானது, அகிலம் - எல்லா, ஜகத் - லோகத்தை, பாஸயதே - ப்ரகாசம் செய்கிறதோ, யத் - எந்த ப்ரகாசமானது, சந்த்ரமஸி - சந்திரனிடத்திலிருக்கிறதோ, யத் – எந்த ப்ரகாசமானது, அக்னௌ - அக்னியிடத்திலிருக்கிறதோ, தத் - அந்த, தேஜ: - ப்ரகாசத்தை, மாமகம் - என்னுடையதாக, வித்தி - அறி. 12

பா] எல்லா லோகங்களையும் ப்ரகாசம் செய்கிற இந்த ஸூர்யன் முதலியவர்களுடைய ப்ரகாசம் எதுவோ அது என்னுடைய ப்ரகாசம். அவரவர்களால் ஆராதிக்கப்பட்ட என்னால் அவரவர்களுக்குக் கொடுக்கப்பட்டதென்று அறி. 12

---

*றென் றேற்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்— அவரவர்களால்' என்றாரம்பித்து. 1 'எந்தப் பகவானால் தேஜஸ்ஸினால் வ்ருத்தி செய்யப்பட்டவனாய் ஸூர்யன் வெப்பத்தைத்தருகிறானோ' என்றும், 'ஸூர்யன் எந்தப் பகவானுடைய ப்ரகாசத்தை உபயோகப்படுத்திக்கொண்டு ப்ரகாசிக்கிறானோ' என்றும், 2 'அவ்விடத்தில் ஸூர்யன் ப்ரகாசிக்கிறதில்லை' என்றாரம்பித்து 'அவனுடைய ப்ரகாசத்தினால் இவையெல்லாம் ப்ரகாசிக்கின்றன' என்கிற வரையிலும்அர்த்தமுள்ள ச்ருதிவாக்யங்களிருக்கின்றனவல்லவா. ஆகையினால் எல்லாம் ஸ்வபாவத்தில் பகவானுக்கு சேஷமாகஇருந்துகொண்டு அவரவர்களின் கர்மங்களுக்குத்தக்கபடி அந்தப் பகவானுடைய ஸங்கல்பத்தினால் சிலகாலம் மற்றவர்களுக்குச் சேஷமாக இருக்கும் தன்மையையுமடைகிறது. என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'தேஜ:' என்னும் பதத்தினால் ஜ்ஞானமாகிற ப்ரகாசம் சொல்லப்படுகிறது என்பது 'ஜகத் பாஸயதே அகிலம்' என்பதோடு பொருந்தாது. ஸூர்யனிடத்தில் இருக்கிற ஜ்ஞானம் நமக்குக் குடம் முதலியவைகளை ப்ரகாசம் செய்கிறதில்லையல்லவா. எல்லா வஸ்துக்களிடத்திலும் ஜ்ஞானம் ஸமமாக இருந்தபோதிலும் ஸூர்யன் முதலிய வஸ்துக்களில் ஸத்வகுணம் அதிகமாக இருப்பதினால் கண்ணாடி முதலியவைகளிடத்தில் போல் அதிகமாக ப்ரகாசிக்கிறது என்பதும் ந்யாயமல்ல, அவர்கள் மதத்தில் ஜ்ஞானம் மற்றொன்றினால் ப்ரகாசம் செய்யக்கூடியதல்லவாகையினால். ஆகையினால் ப்ரகாசங்களுக்கு மற்றொன்றை ப்ரகாசம் செய்யக்கூடிய சக்தி தன்னுடையதென்றே சொல்லப்பட்டது. 12*

---

1 காடகம்-3-9.

2 கடவல்லி-2-5-15.

பா - அ] எல்லா ப்ராணிகளையும் தரிக்கிற பூமியினுடைய அப்படித் தாங்குகிற ஶக்தியும் என்னுடையது என்று சொல்லுகிறார்—

கா³மாவிஶ்ய ச பூ⁴தாநி தா⁴ரயாம்யஹமோஜஸா ।
புஷ்ணாமி சௌஷதீ⁴ஸ்ஸர்வாஸ்ஸோமோ பூ⁴த்வா ரஸாத்மக: ॥ 13

ப-, ரை] அஹம் - நான், கா³ம் - பூமியை, ஆவிஶ்ய - நுழைந்துகொண்டு, ஓஜஸா - ஸாமர்த்தியத்தினால், பூ⁴தாநி - ப்ராணிகளை, தா⁴ரயாமி - தாங்குகிறேன், ரஸாத்மக: - அம்ருதமயமான ரஸம் நிறைந்த, ஸோம: - சந்திரனாக, பூ⁴த்வா - ஆகி, ஸர்வா: - எல்லா, ஓஷதீ⁴: - செடிகளையும், புஷ்ணாமி - வ்ருத்திசெய்கிறேன். 13

பா] நான் பூமியில் நுழைந்து எல்லா ப்ராணிகளையும் ஒருவராலும் தடுக்கப்படாத என் ஸாமர்த்தியத்தினால் தாங்குகிறேன். அப்படியே நான் அம்

தா] இப்படி மற்றெல்லாவஸ்துக்களினுடையவும் அந்தந்த விசேஷமான கார்யங்களை உண்டாக்கக்கூடிய ஶக்தி என்னுடையதென்று பூமி, சந்திரன், ஜாடராக்னி, இவைகளினுடைய தாங்குவது, வ்ருத்திசெய்து ஜீரணம் செய்வது முதலிய ஶக்திகளைக்கொண்டு குறித்துக்காட்டப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில் தன்னுடைய ஶக்தியை மாத்திரம் சொல்லுவதாக இருந்தால் கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதோடு பொருந்தாதாகையினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகளையும்' என்றாரம்பித்து. 'எல்லா' என்பதற்கு ஸ்த்தாவரங்களாயும் ஜங்கமங்களாயுமிருக்கிற என்றர்த்தம். மற்ற வஸ்துக்கள் கீழே விழாமல் தடுக்கக்கூடிய ஸம்பந்தத்தினால் வஸ்துக்களைத் தாங்குகின்றன. ஆகையினால் அதை விலக்குவதற்காக 'ஓஜஸா' என்று தனக்கு அஸாதாரணமான ஶக்தியைச்சொல்லியிருக்கிறது. அப்படிக்கில்லாவிடில் பூமிக்குத்தாங்கும் ஶக்தியும் தடுக்கப்படும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஒருவராலும் தடுக்கப்படாத' என்றாரம்பித்து. ஶ்ருதியிலும் 1 'எந்தப்பகவானால் உக்ரமாகிய ஆகாஶமும் பூமியும் உறுதியாகவிருக்கின்றனவோ' என்றும், 2 'அவன் பூமியையும் இந்தஆகாசத்தையும் தாங்கிக்கொண்டிருக்கிறான்' என்றும், 3 'எவனால் இவை யிரண்டும் தாங்கப்பட்டிருக்கின்றனவோ, விஷ்ணுவினால் தாங்கப்பட்ட பூமியே' என்றும் 4 'ஓ! கார்கியே, இந்த அக்ஷரத்தின் நியமனத்தில்

1 யஜுர்வேதம், 4-வது காண்டம்-2-8-5.
2 யஜுர்வேதம், 4-வது காண்டம்-2-8-2.
3 ஆரணம்-2-8-2.
4 ப்ரஹதாரண்யகம்-5-8-9.

ருத ரஸம் நிறைந்த சந்திரனாக ஆகி எல்லாச் செடிகளையும் வ்ருத்தி செய்கிறேன். 13

𑌅𑌹𑌂 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑍋 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂 𑌦𑍇𑌹𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑌃।
𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑌚𑌾𑌮𑍍𑌯𑌨𑍍𑌨𑌂 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌂 ॥ 14

ப - ரை] 𑌅𑌹𑌂 - நான், 𑌵𑍈𑌶𑍍𑌵𑌾𑌨𑌰𑌃- ஜாடராக்னியாக(வயிற்றிற்குள்ளிருக்கும் நெருப்பாக), 𑌭𑍂𑌤𑍍𑌵𑌾- ஆகி, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌿𑌨𑌾𑌂-ப்ராணிகளினுடைய, 𑌦𑍇𑌹𑌂 - ஶரீரத்தை, 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑌃 - அடைந்தவனாய்க் கொண்டு, 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨 𑌸𑌮𑌾𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 - ப்ராணவாயு, அபானவாயு இவைகளோடு கூடினவனாய்க் கொண்டும், 𑌚𑌤𑍁𑌰𑍍𑌵𑌿𑌧𑌂 - நான்கு விதமான, 𑌅𑌨𑍍𑌨𑌂 - ஆஹாரத்தை, 𑌪𑌚𑌾𑌮𑌿 - பக்குவம் செய்கிறேன். 14

பா] நான் ஜாடராக்னியாகி எல்லா ப்ராணிகளினுடைய தேஹத்தை யடைந்தவனாய் அவர்களால் போஜனம் செய்யப்பட்ட கடிக்கக்கூடிய

---

ஆகாசம், பூமி, இவைகள் தாங்கப்பட்டு நிற்கின்றன' என்றுமர்த்தமுள்ள வாக்யங்கள் சொல்லப்படுகின்றன. சந்திரனாகவிருக்கை இவ்விடத்தில் 'ரஸாத்மக:' என்று விஶேஷித்துச் சொல்லப்படுகிறது. அதினால் செடிகளை வ்ருத்தி செய்வதற்கு வழி சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அம்ருத ரஸம் நிறைந்த சந்திரனாக ஆகி' என்று. இவ்விடத்தில் விஶேஷணத்தின் ஶக்தியினால் அந்த அம்ருதமயமான ரஸங்களைக்கொண்டு வ்ருத்தி செய்கிறேன் என்று சொல்லப்படுகிறது. 13

'ஜாடராக்கினியாகி' என்பதற்கு 1 '𑌕𑍋𑌷𑍍𑌠𑍇𑌽𑌗𑍍𑌨𑌿𑌰𑍍𑌭𑍁𑌕𑍍𑌤𑌮𑍃𑌚𑍍𑌛𑌤𑌿' என்றல்லவோ சொல்லப்பட்டதென்னென்று தாத்பர்யம். 'இந்த ஆஹாரம் கடிக்கக்கூடியதென்றும் விழுங்கக்கூடியதென்றும், மெல்லக்கூடியதென்றும் மூன்றுவிதமாகப் பிரிக்கப்பட்டது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் மூன்றுவிதம் என்று சொல்லியிருக்கிற படியினால் நான்குவிதம் என்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'கடிக்கக்கூடியவை' என்றாரம்பித்து. வேறுசில இடங்களில் வெவ்வேறாகாரங்களால் சுருக்கி மூன்றுவிதமாகச் சொல்லியிருக்கிறதென்று தாத்பர்யம். 2 '𑌅𑌪𑌾𑌨𑌪𑍍𑌰𑌾𑌣𑌯𑍋𑌰𑍍𑌮𑌧𑍍𑌯𑍇 𑌪𑍍𑌰𑌾𑌣𑌾𑌪𑌾𑌨

---

1 கோஷ்டே - வயிற்றிற்குள்ளிருக்கிற, அக்னி:-அக்னியானது, புக்தம் - போஜனம் செய்யப்பட்டதை, ருச்சதி-அடைகிறான்.

2 அபானன் ப்ராணன் இவைகளின் நடுவிலிருந்துகொண்டு அந்த ப்ராணாபானவாயுக்களுடன் கூடியதாய் ஸமானவாயுவுடன் கூடியதாயும் ஜடராக்னி நன்றாகப் பக்குவம் செய்கிறது.

வை, உறியக்கூடியவை, நக்கக்கூடியவை குடிக்கக்கூடியவைகளாகிய நான்குவித ஆஹாரத்தையும் ப்ராணன் அபானன்என்கிற வாயுவின் வ்யாபாரங்களோடு கூடினவனாய் பக்குவம் செய்கிறேன். 14

பா-அ இவ்விடத்தில் பரமாத்மாவிற்கு விபூதிகளாகிய சந்திரன் ஜாடராக்னி இவர்கள் 'ஸோமோ பூத்வா' 'அஹம் வைஶ்வாநரோ பூத்வா' என்று பகவானுடன் சேர்த்துச்சொல்லப்பட்டார்கள். அவர்களையும் மற்றெல்லா ப்ராணிகளின் கூட்டத்தையும் பரமாத்மாவோடு ஒன்று சேர்த்துச் சொல்லுவதற்குக் காரணத்தைச் சொல்லுகிறார்.—

ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்டோ
மத்தஸ்ஸ்ம்ருதிர் ஜ்ஞாநமபோஹநம் ச ।
வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்யோ
வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் ॥ 15

ப - ரை] அஹம் - நான், ஸர்வஸ்ய -எல்லாப்ராணிகளினுடையவும், ஹ்ருதி - ஹ்ருதயத்தில், ஸந்நிவிஷ்டஃ - இருக்கிறேன், மத்தஃ - என்னிடத்திலிருந்து, ஸ்ம்ருதிஃ - நினைப்பதும், ஜ்ஞாநம் - அறிவதும், அபோஹநம் - மறப்பதும் அல்லது ஊஹிப்பதும் (உண்டாகிறது), ஸர்வைஃ - எல்லா, வேதைஶ்ச - வேதங்களாலும், அஹமேவ - நானே, வேத்யஃ - அறியத்தக்கவன், வேதாந்தக்ருத் - வேதங்களில் சொல்லிய கர்மங்களின் பலத்தைக் கொடுப்பவனும், வேதவித் - வேதத்தைத்தெரிந்து கொண்டவனும், அஹமேவ - நானே. 15

ஶரீரஹிதஃ । ஸந்நிதிக்ஷுத்ஸ்ரேந ஸம்யக் பசதி பாவகஃ ॥' என்றிவை முதலிய இடங்களில் உள்ளே இருக்கிற காற்றுக்களின் வ்யாபாரங்களினால் வ்ருத்தி செய்யப்பட்ட அக்னி பக்குவம் செய்யச் சக்தியுள்ளதாகிறது என்று சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ராணன், அபானன்' என்றாரம்பித்து. ஒருகாற்றே ஶரீரத்தில் அநேகவிதமான வ்யாபாரங்களையுடையது என்பது 1 'பஞ்சவ்ருத்தி மநோவத்வ்யபதிஶ்யதே' என்கிற ஸூத்ரத்தின் பாஷ்யத்தில் 2 'ப்ராணன், அபானன், வ்யானன், உதானன், ஸமானன், என்கிற இவையெல்லாம் ப்ராணவாயுதான்,' என்றர்த்தமுள்ளஶ்ருதிவாக்யத்தைக்கொண்டு நிரூபிக்கப்பட்டது. 14

1 ஶாரீரகஸூத்ரம் - 2-4-11. மநோவத்-மனதைப் போலவே (ஒரு ப்ராணயுவே), பஞ்சவ்ருத்தி:-ஐந்துவிதமான வ்ருத்திகளை யுடையதாக, வ்யபதிஶ்யதே-சொல்லப்படுகிறது. 2 ப்ருஹதாரண்யகம்-1-5-3.

பா] அந்தச் சந்திரன், அக்னி, இவர்களுக்கும், மற்றெல்லா ப்ராணிகளின் கூட்டத்திற்கும், எல்லா வ்யாபாரங்களைச் செய்வதற்கும், செய்யாமல் நிவ்ருத்திப்பதற்கும், காரணமாகிய ஜ்ஞானம் உண்டாகும் இடமாகிய ஹ்ருதயத்தில் அவை எல்லாவற்றையும் என்னுடைய ஸங்கல்பத்தினால் நியமனம் செய்துகொண்டு அவைகளுக்கு ஆத்மாவாக நான் இருக்கிறேன். அப்படியே ஶ்ருதிகளிலும் * 'உள்ளே நுழைந்துகொண்டு எல்லாவற்றையும் நியமிக்கிற எல்லா ப்ராணிகளுக்கும் ஆத்மாவாகிய' என்றும் † 'எவன் ப்ரதிவியில் இருந்துகொண்டு' என்றும், ‡ 'எவன் ஆத்மாவின் உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறானோ' என்றும், ¶ 'தாமரை மொக்கைப்போலிருக்கிற ஹ்ருதயம் தலைகீழாகத்தொங்குகிறது' என்றும், § 'ப்ரம்மபுரமென்று சொல்லப்பட்ட இந்தச் ஶரீரத்தில் ஸூக்ஷ்மமாகிய தாமரைப் பூவைப்போல எந்த இடமிருக்கிறதோ' என்றும் அர்த்தமுள்ளவாக்யங்களில்

---

தா] 'ஸர்வஸ்ய சாஹம்' என்கிற ஶ்லோகத்திற்கு ஸங்கதி இல்லை என்பதைப் பரிஹரிப்பதற்காகக் கீழ் ஒன்று சேர்த்துச் சொல்லியிருப்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறதென்று ஸங்கதி சொல்லுகிறார்—'இவ்விடத்தில்' என்றாரம்பித்து. 'ச' என்பது கீழ்ச் சொல்லியதை சேர்த்துக்கொள்ளவேண்டும் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு கீழ்ச் சொல்லிய அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அந்தச் சந்திரன்' என்றாரம்பித்து. 'ஸர்வஸ்ய' என்பதற்கு 'ஹ்ருதி' என்னும் பதத்தோடு சேர்ந்திருப்பதினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகளின் கூட்டத்திற்கும்' என்று. 'ஹ்ருதி' என்று சொல்லியிருப்பதின் ப்ரயோஜனத்தைக் காட்டுவதற்காக அந்த ஹ்ருதயத்தின் ஸ்வபாவத்தைச் சொல்லுகிறார்—'எல்லா வ்யாபாரங்களைச் செய்வதற்கும்' என்றாரம்பித்து. ஆகாசத்தைப்போல உள்ளே நுழைந்திருப்பதை விலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'ஆத்மாவாக' என்று. ஆத்மாவாகவிருப்பதை நிரூபிப்பதற்காக 'அவை எல்லாவற்றையும் என்னுடைய ஸங்கல்பத்தினால் நியமனம் செய்துகொண்டு' என்று சொல்லப்பட்டது. 'அப்படியே' என்பதற்கு நியமிப்பதற்காக உள்ளே நுழைந்திருப்பதினால் இவனை ஆத்மாவாகவே

* யஜுர்வேதம், ஆரண்யகம்-3-11-2.
† ப்ரஹதாரண்யம்-5-7-3.
‡ ப்ரஹதாரண்யகம்-5-7-22.
¶ தைத்திரியம், நாராயணம்-11.
§ சாந்தோக்யம்-8-1-1.

சொல்லப்படுகின்றன. ஸ்ம்ருதிகளும் * 'ஶாஸ்தா விஷ்ணுரஶேஷஸ்ய ஜகதோ யோ ஜகந்மய:', '† ப்ரஶாஸிதாரம் ஸர்வேஷாமணீயாம்ஸமணீயஸாம்', ‡ 'யமோ வைவஸ்வதோ ராஜா யஸ்தவைஷ ஹ்ருதி ஸ்தித:' என்றிவை முதலியவைகள் சொல்லப்படுகின்றன. ஆகையினால என்னிடத்திலிருந்தே எல்லா ப்ராணிகளுக்கும் நினைவுஉண்டாகிறது நினைவாவது முன்னால் அனுபவிக்கப்பட்ட விஷயத்தைப்பற்றியதாயும், அந்த அனுபவித்தினாலுண்டாகிய ஸம்ஸ்காரம் மாத்திரத்தினால்உண்டாகியஜ்ஞானம். அறிவாவது இந்த்ரியங்கள், காரணங்கள், ஶாஸ்த்ரம், யோகம், இவைக

---

*சொல்லுகின்றன என்றர்த்தம். முதல் பாதத்தில் சொல்லப்பட்ட அர்த்தம் இரண்டாவது பாதத்தில் சொல்லப்படுகிற அர்த்தத்திற்குக் காரணம் என்று சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 'என்னிடத்திலிருந்தே...உண்டாகிறது' என்பது தானாகவே ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறது. வேதத்தின் அர்த்தங்களை விசதப்படுத்துகிற ஸ்ம்ருதி என்னும் க்ரந்தம் சொல்லப்படுகிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காச் சொல்லுகிறார்—'நினைவு' என்று. வெளியிலிருக்கும் விஷயங்களைப்பற்றி நினைவு இல்லை என்கிற மதத்தை நிராகரிப்பதற்காக 'முன்னால் அனுபவிக்கப்பட்ட விஷயத்தைப் பற்றியதாயும்' என்று சொல்லப்பட்டது. நேற்றுப் பார்த்தவனிவன்தான் என்கிற ப்ரத்யக்ஷத்தை விலக்குவதற்காக 'ஸம்ஸ்காரம் மாத்திரத்தினால்' என்று சொல்லியிருக்கிறது. கோபலீவர்த ந்யாயத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'ஜ்ஞாநம்' என்னும் பதத்திற்கு வ்யாக்யானஞ் சொல்லுகிறார்—'இந்த்ரியங்கள்' என்றாரம்பித்து. 'அபோஹதோஷ: (நிவ்ருத்தி செய்யப்பட்ட தோஷங்களையுடையவன்)' என்றிவை முதலிய ப்ரயோகங்களை யனுஸரித்து 'அபோஹநம்' என்னும் பதம் நிவ்ருத்தியைச் சொல்லுகிறது என்பதையும், அந்த நிவ்ருத்தி எதினுடையது என்*

---

* விஷ்ணுபுராணம்-1-17-20. அசேஷஸ்ய-எல்லா, ஜகத:-லோகத்திற்கும் விஷ்ணு:-விஷ்ணு, ஶாஸ்தா-நியமிக்கிறவன். ய:—எவன், ஜகன்மய:-லோகத்தை ஶரீரமாக வுடையவனோ.

† மனுஸ்ம்ருதி-12-122. ஸர்வேஷாம்-எல்லா ப்ராணிகளுக்கும், ப்ரசாஸிதாரம்-நியமிக்கிறவனாகஇருக்கிற, அணீயஸாம்-ஸூக்ஷ்மமாகிய வஸ்துக்களுக்குள் அணீயாம் ஸம் மிகவும் ஸூக்ஷ்மமாகிய.

‡ மனுஸ்ம்ருதி-7-92-யம் நியமிப்பவனும், வைவஸ்வத:-ஸூர்யமண்டலத்திலிருப்பவனும், ராஜா-ஜனங்களைத்திருப்தி செய்விக்கிறவனுமிருக்கிற, ய:-எந்த, ஏஷ:-இந்தப் பகவான், தவ-உன்னுடைய, ஹ்ருதி-ஹ்ருதயத்தில், ஸ்தித:-இருக்கிறானோ.

ளாலுண்டாகிய வஸ்துக்களைப்பற்றிய நிஶ்சயம். அதுவும் என்னாலேயே உண்டாகிறது. 'அபோஹநம்' (மறப்பது) ஆவது ஜ்ஞானம் நிவ்ருத்தியடைவது. அன்றிக்கே ஊஹிப்பதாகவுமாம். ஊஹமாவது இந்த ப்ரமாணம் இவ்விதமாக உண்டாகக்கூடியது என்று ப்ரமாணம் உண்டாகக் கூடிய யோக்யதையைப்பற்றியகாரணம் முதலியவைகளைநிரூபிப்பதினால் உண்டாகிய அந்தந்தப்ரமாணங்களுக்கு ஒத்தாசையாயிருக்கிற ஜ்ஞானம். அதுவும் என்னாலேயே உண்டாகிறது. ஆகையினால் அக்னி, ஸூர்யன், வாயு, சந்திரன், இந்திரன், முதலியவர்கள் என்னையே அந்தர்யாமியாகவுடையவைகளாகையினாலே என்னையே ஆத்மாவாக உடையவைகளாகையினால் அவைகளைச்சொல்லுகிற எல்லா வேதங்களினாலும் தேவன் மனுஷ்யன்முதலிய பதங்களினால் ஜீவாத்மாவைப்போல நானே

---

பதை அபேக்ஷிக்கிறபடியினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜ்ஞானத்தினுடையது என்பதையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'ஜ்ஞானம் நிவ்ருத்தியடைவது' என்று. முன்பு 1 'அபவர்க்க வர்ஜநே' என்பதை யனுஸரித்து 'அப' என்னும் உபஸர்க்கம் நிவ்ருத்தியைச் சொல்லுகிறதென்று அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. இப்பொழுது அதைச் சொல்லாமல் 2 'அத்யாஹாரஸ்தர்க ஊஹ:' என்கிற அமரத்தை யனுஸரித்து ஜ்ஞானம் என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட ப்ரமாணமாகிய ஜ்ஞானங்களுக்கு ஒத்தாசையாகிய யுக்தியைச் சொல்லுகிறதென்பது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் வ்யாக்யானஞ் செய்கிறார்—'அன்றிக்கே ஊஹிப்பதாகவுமாம்' என்று. 'ஊஹநம்' என்னும் பதம் 'ஊஹம்' என்னும் வஸ்துவைச் சொல்லுகிற 'ல்யுட்' என்னும் விக்ருதியையுடையது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஊஹமாவது' என்று. 'இவ்விதமாக உண்டாகக்கூடியது' என்பதற்கு கண்ணாலுண்டாகக்கூடிய ஜ்ஞானம், ரூபத்தையுடைய வஸ்து, ரூபம், அந்தரூபத்துடன் ஒரே இடத்தில் சேர்ந்திருக்கக்கூடிய வஸ்து இவைகளாகிற கண்ணோடு ஸம்பந்தமுடைய விஷயங்களைப்பற்றி உண்டாகக்கூடியது என்றிவை முதலாக ப்ரமாணங்கள் உண்டாகத் தகுந்த விஷயங்களைப் பற்றியது என்றர்த்தம். 'ஸர்வஸ்யாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:' என்று கீழே சொல்லப்பட்ட, எல்லாவற்றிற்கும் அந்தராத்மாவாக இருக்கை 'வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என்கிற விடத்திலும் காரணம் என்றுசொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 'எல்லா வேதங்களினாலும் ...

1 அஷ்டாத்யாயீ-1-4-88.

2 நாமலிங்காநு சாஸனம், 1-வது காண்டம், புத்திவர்க்கம்.

அறியத்தக்கவன். இந்திரனைக்குறித்து யாகம் செய்யவேண்டும், வருணனைக்குறித்து யாகம்செய்யவேண்டும், என்றர்த்தமுள்ளவேதவாக்யங்களுக்கு முடிவாவது பலங்கள். அந்த எல்லா வேதங்களும் பதத்திலேயே

---

நானே அறியத்தக்கவன்' என்பதற்கு 1 'அறியத்தகுந்த வஸ்துக்களுக்குள் உயர்ந்ததாகிய நாராயணனை' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திலும் 2 'வசஸாம் வாச்யமுத்தமம்' என்கிற விடத்திலும் சொல்லப்பட்ட முக்யமான அறியத்தக்கவஸ்து நானே என்றர்த்தம். ஶரீரத்தைச் சொல்லுகிற பதங்களினால் ஆத்மாவே முக்யமாக அறியத்தக்கது என்பதற்கு உதாஹரணம் சொல்லுகிறார்— 'தேவன், மனுஷ்யன், முதலிய பதங்களினால்' என்றாரம்பித்து. 3 'வாசிகை: பக்ஷிம்ருகதாம் மானஸைரந்த்யஜாதிதாம் ; ஶரீரஜை: கர்மதோஷைர்யாதி ஸ்தாவரதாம் நர: ॥' என்றிவை முதலிய வேறுவிதமாக அர்த்தம் சொல்லக்கூடாத ப்ரயோகங்களிருப்பதினால் மனுஷ்யன் முதலிய பதங்கள் ஆத்மா வரையிலும் சொல்லுகின்றன என்பது முசிதந்தான் என்று தாத்பர்யம். 'வேதாந்த' என்னும் பதம் உபநிஷத்தைச் சொல்லுகிறதா யிருந்தாலும் வேதங்களின் முடிவைச்சொல்லுவதாக விருந்தாலும் இந்த ஸந்தர்ப்பத்தில் பொருத்தமில்லாததினால் 'அந்த' என்னும் பதம் கடைசியைச்சொல்லுகிறது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு வ்யாக்யானஞ் செய்கிறார்—'இந்திரனைக்குறித்து' என்றாரம்பித்து. 'என்றர்த்தமுள்ள வேதவாக்யங்களாவது' 4 'இந்திரனைக்குறித்து அமாவாஸ்யையில் தயிரை ஹோமம் செய்யவேண்டும்' என்றும், 'இந்திரனைக்குறித்து அமாவாஸ்யையில் பாலை ஹோமம் செய்யவேண்டும்' என்றும், 5 'வருணனைக்குறித்து அவ்வளவு நாலு கபாலங்களில் செய்யப்பட்ட புரோடாசங்களை ஹோமம் செய்யவேண்டும்' என்றுமர்த்தமுள்ள வாக்யங்கள் என்று தாத்பர்யம். 'அந்த' என்னும் பதம் பலங்களைச் சொல்லுகிறதென்? அதெப்படிப்பொருந்தும்? என்றாக்ஷேபம் வருகிறபடியினால் அதை நிரூபிக்கிறார்—'அந்த எல்லா வேதங்களும்' என்றாரம்

---

1 புருஷஸூக்தம். 2 ஜிதந்தேஸ்தோத்திரம்-வசஸாம்-வார்த்தைகளுக்கு, உத்தமம்-உயர்ந்த, வாச்யம் அர்த்தமாகிய

3 மனுஸ்ம்ருதி-12-9. வாசிகை:-வாயினாலுண்டாகிய, கர்மதோஷை:-கர்மங்களின் தோஷங்களினால், நர:-மனுஷ்யன், பக்ஷிம்ருகதாம்-பக்ஷியாகவும் ம்ருகமாகவும் இருப்பதையும், மானஸை:-மனதினாலுண்டாகிய கர்மதோஷங்களினால், அந்த்யஜாதிதாம்-சண்டாள ஜாதியை யுடையவனாகவிருக்கையும், ஶரீரஜை:-ஶரீரத்தில் உண்டாகிய கர்மதோஷங்களினால், ஸ்தாவரதாம் - ஸ்தாவரமா யிருக்கையையும், யாதி-அடைகிறான். 4 யஜுர்வேதம். 2-வது காண்டம்-5-4-1.

5 யஜுர்வேதம். 2-வது காண்டம்-3-12-1.

அல்லவோ முடிவுபெறுகின்றன. ஆகையினால் 'வேதாந்தக்ருத்' என்பவன் பலத்தைச்செய்பவன். அதாவது வேதங்களில் சொல்லிய பலங்களைக் கொடுப்பவனும் நானே என்றர்த்தம். அதுவும் முன்னமேயே * 'யோ யோ யாம் யாம் தநும் பக்த: ச்ரத்தயார்சிதுமிச்சதி' என்றாரம்பித்து †'லபதே ச தத: காமாந் மயைவ விஹிதாந் ஹி தாந்' என்கிறவரையிலும், ‡'அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச' என்றும்சொல்லப் பட்டது. வேதத்தைத் தெரிந்துகொண்டவனும் நானே. அதாவது இவ்விதமாக வேதம் என்னைச் சொல்லுகிறதென்று தெரிந்துகொண்டவன் நானே. இதற்கு வேறாக எவன் வேதத்திற்கர்த்தம் சொல்லுகிறானோ அவன் வேதத்தைத்தெரிந்து கொண்டவனல்ல என்றபிப்ராயம். 15

---

*பித்து.* 1 'அஹம் ஹி ஸர்வயஜ்ஞாநாம் போக்தா ச ப்ரபுரேவ ச' *என்கிறவிடத்திலேபோல* 'வேதைச்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' *என்பதினாலேற்பட்ட எல்லாக் கர்மங்களினாலும் தானே ஆராதிக்கப்படுகிறான் என்பதைச்சொன்ன பிறகு அவைகளின் பலத்தைக்கொடுக்கிறான் என்று சொல்லியிருப்பது முன் சொல்லியிருப்பவைகளோடுபொருத்த முடையது என்று தெரிவித்துக்கொண்டு ஏற்பட்ட அர்த்தத்தை இத்தையே சொல்லுகிற ப்ரமாணத்துடன் சேர்த்துச்சொல்லுகிறார்—* 'அதாவது வேதங்களில் சொல்லிய பலங்களை' *என்றாரம்பித்து.* 'ஏவ' *என்பது இப்பொழுதிருக்கிறவிடத்திலேயே அந்வயிப்பதாயிருந்தால் பகவான் வேதத்தைத்தெரிந்து கொள்ளாதவரல்ல என்னும் அர்த்தத் தத்தைத் சொல்லுகிறதாகும். அது உசிதமல்ல பகவான் வேதத்தைத் தெரிந்துகொள்ளாதவரென்றாக்ஷேபமேஉசிதமல்ல வாகையினால். ஆகையினால்அந்த*'ஏவ'*என்பது*'அஹம்' *என்பதோடு அந்வயிக்கிறது என்று. சொல்லுகிறார்*—'வேதத்தைத்தெரிந்து கொண்டவனும் நானே' *என்று* 2 'யே வேதவிதோ விப்ரா:' *என்பதினால் பகவானைத் தவிர மற்றவர்களும் வேதத்தைத் தெரிந்து கொண்டவர்களென்றேற்படுகிறபடியினால்* 'நானே' *என்பதினால் மற்றவர்களல்லவென்று மறுத்திருப்பது எப்படிப்பொருந்தும்? என்றாக்ஷேபம் வருகிறபடியினால் அதின் அபிப்ராயத்தைச்சொல்லுகிறார்—*'அதாவது இவ்விதமாக'*என்று ஆரம்பித்து.*

---

* *பகவத்கீதை*-7-21. † *பகவத்கீதை*-7-22.

‡ *பகவத்கீதை*-9-24. 1 *பகவத்கீதை*-9-24.

2 *பாரதம் - ஆரண்யபர்வம்*-86-26. *யே-எந்த, விப்ரா: - ப்ராம்மணர்கள் - வேதவித:-வேதத்தைத் தெரிந்தவர்களோ,*

பா-அ] ஆகையினால் என்னிடத்திலிருந்தே எல்லா வேதங்களுக்கும் ஸாரமாகிய அர்த்தத்தைக் கேள்—

*த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரஶ்சாக்ஷர ஏவ ச |*
*க்ஷரஸ் ஸர்வாணி பூதாநி கூடஸ்தோऽக்ஷர உச்யதே ||*　　16

ப-ரை] லோகே - இந்த லோகத்தில், க்ஷர: - க்ஷரன் என்றும், அக்ஷர: ஏவ ச - அக்ஷரன் என்றும், இமௌ - இந்த, த்வௌ - இரண்டுவிதமான, புருஷௌ - புருஷர்கள் (ஏற்பட்டிருக்கிறார்கள்), க்ஷர: - க்ஷரன் ஆவது, ஸர்வாணி - எல்லா, பூதாநி - ப்ராணிகளும், கூடஸ்த: - பரிசுத்தமான ஜீவாத்மாவானவன், அக்ஷர: - அக்ஷரன் என்று, உச்யதே - சொல்லப்படுகிறான்.　　16

பா] க்ஷரன் என்றும் அக்ஷரம் என்றும் இரண்டுவிதமாகிய இந்தப் புருஷர்கள் இந்தலோகத்தில் ப்ரஸித்தர்களாக இருக்கிறார்கள். அதில் க்ஷரன் என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட புருஷன் பத்த ஜீவனென்னும் பதத்தினால் சொல்லத்தகுந்தவர்களாயும், ப்ரம்மா முதல் புழு வரையிலுள்

---

*தா] எல்லாவேதங்களுக்கும் ஸாரமாகிய புருஷோத்தமனுடைய உண்மையை நிரூபித்திருப்பதைக் கீழ்ச்சொல்லிய அர்த்தத்தோடு சேர்த்து அவதாரிகை சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து 'லோகே' என்னும் பதம் 'லோக்யதே அநேந (இதினால் மற்ற வஸ்து அறியப்படுகிறது)' என்னும் வ்யுத்பத்தியினால் ப்ரமாணங்களைச்சொல்லுகிறது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு 'ப்ரதித:' என்று மேலேசொல்லப் போகிறதை இவ்விடத்தில் வசனத்தை மாத்திரம் மாற்றிச் சேர்த்துக் கொண்டு அர்த்தம் சொல்லுகிறார்—'லோகத்தில் ப்ரஸித்தமாக விருக்கிறார்கள்' என்று. ப்ரமாணமும் 1 'பிறப்பில்லாத ஒருவன் இந்த ப்ரக்ருதியினிடத்தில் ப்ரீதி செய்துகொண்டு இத்துடன் சேர்ந்திருக்கிறான். பிறப்பில்லாத மற்றொருவன் தன்னாலனுபவிக்கப்பட்ட போகங்களையுடைய இந்த ப்ரக்ருதியை விட்டுவிடுகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளென்று இங்கு அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. புருஷன் என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட ஜீவாத்மா ஸ்வரூபத்தில் மாறுதலை யுடையனென்பது பொருந்தாதாகையினால் ஶரீரத்தின் வழியாக அது சொல்லப்படுகிறது, என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு மூன்றுவது பாதத்திற்கு வ்யாக்யானஞ் செய்கிறார்—'அதில் க்ஷரன் என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட' என்*

---

1 *தைத்திரீயம் 2-வது ப்ரஶ்னம.*

ளவர்களாயும் மாறுவதையே ஸ்வபாவமாகவுடைய அசேதனங்களுடன் சேர்ந்தவர்களாயுமிருக்கிற எல்லா ப்ராணிகளும் இவ்விடத்தில் அசேதனத்துடன் சேர்ந்திருப்பதாகிய ஒரு காரணத்தினால் 'க்ஷர:' என்று ஏக வசனமாக (ஒருமையாக)ச் சொல்லியிருக்கிறது. அக்ஷரமென்னும் ஶப்தத்தினால் சொல்லப்பட்டவன் அசேதனங்களின் ஸம்பந்தமில்லாதவனாகவும், தன்னுடைய ரூபத்தோடு கூடினவனுமாயிருக்கிற முக்தனாகிய ஆத்மா. அவன் அசேதனங்களின் ஸம்பந்தமில்லாதவனாகையினால் அசேதனங்களின் மாறுதல்களாகிய ப்ரம்மா முதலிய ஶரீரங்களுக்கு அஸாதாரணமானவனல்ல. ஆகையினால் கூடஸ்தன் என்று சொல்லப்படுகிறான். இவ்விடத்திலும் ஏகவசனமாகச் சொல்லியிருப்பது அசேதனங்களின் ஸம்பந்தமில்

---

*றாரம்பித்து. 'க்ஷர:' என்பதினால் ஒன்றென்று சொல்லியிருப்பதினால் 'ஸர்வாணி பூதானி' என்பதினால் அநேகமென்று சொல்லியிருப்பது உபாதியினாலேற்பட்டது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'இவ்விடத்தில்' என்றாரம்பித்து. பத்த ஜீவர்களுக்கு ஸ்வரூபத்தில் பேதமில்லாமல் போனால் எல்லாருடைய ஸுகம் துக்கம் முதலியவைகளை எல்லோரும் தெரிந்துகொள்ளவேண்டியதாகும் என்று தாத்பர்யம். 'கூடஸ்த' என்னும் பதம் அநேக ஸந்ததிகளுக்கு மூல புருஷனாக இருக்கிறவனிடத்தில் ப்ரஸித்தமாக இருக்கிறது. அப்படிப்பட்டவன் இவ்விடத்தில் பரமாத்மாவல்ல, 'உத்தம: புருஷஸ்த்வந்ய:' என்று அவனைப்பற்றித் தனியாகச் சொல்லப்போகிறபடியினால். 'ப்ரம்மா முதலியவர்களுமல்ல, அவர்கள் தேஹத்துடன் ஸம்பந்தமுள்ளவர்களாகையினால் க்ஷர என்னும் பதத்தினால் சொல்லப்பட்டபடியினால். முக்தியடைந்த ஆத்மாவுமல்ல, இந்தப் பதத்திற்கவனைச் சொல்லக்கூடிய ஶக்தி இல்லாமையினால், என்கிற ஆக்ஷேபம் வருகிறபடியினால் அந்த முக்தாத்மாவினிடத்தில் இந்தப் பதத்திற்குக் காரணப்பெயராகச் சொல்லக்கூடிய ஶக்தி இருக்கிறது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு இது முக்தாத்மாவைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்—'அசேதனங்களின் ஸம்பந்தமில்லாதவனாகவும்' என்றாரம்பித்து. காரணப்பெயராகச் சொல்லக்கூடிய ஶக்தியை நிரூபிக்கிறார்—'அவன்' என்றாரம்பித்து. 'ப்ரம்மா முதலிய ஶரீரங்களுக்கு' என்பதற்கு ப்ரம்மா முதலிய ஶரீரங்களின் ஸம்பந்தத்தினாலேற்பட்ட விசித்ரங்களாகிய ஸுகதுக்கங்களை யனுபவிக்க உரிமையான ஆகாரத்தை யுடையவனல்ல என்றர்த்தம். இத்தால் 1 'தன்னுடைய ரூபத்துடன் சேருகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் சொல்லப்பட்ட சுருக்க*

---

1 சாந்தோக்யம்-8-12-2.

லாமையாகிற ஒரு காரணத்தினால். இதற்கு முன்பு அநாதியாகிய காலத்தில் முக்தியடைந்தவனொருவன் தானல்ல வாகையினால். அப்படியே * 'ப³ஹவோ ஜ்ஞாநதபஸா பூதா மத்³பா⁴வமாக³தா:' என்றும், † 'ஸர்கே³பி நோபஜாயந்தே ப்ரலயே ந வ்யத²ந்தி ச' என்றும் சொல்லப்பட்டது.

உத்தம: புருஷஸ்த்வந்ய: பரமாத்மேத்யுதா³ஹ்ருத: ।
யோ லோகத்ரயமாவிஶ்ய பி³ப⁴ர்த்யவ்யய ஈஶ்வர: ॥ 17

பீ - கை] பரமாத்மேதி - பரமாத்மாவென்று, உதா³ஹ்ருத: - சொல்லப்பட்ட, உத்தம: - உயர்ந்தவனாகிய, புருஷ: - புருஷனோ வெனில், அந்ய: - இவைகளைவிட வேறுபட்டவன், அவ்யய: - மாறுதலில்லாத, ஈஶ்வர: - எல்லாவற்றையும் நியமிப்பவனும் இருக்கிற, ய: — எவன், லோகத்ரயம் - மூன்றுவிதமான வஸ்துக்களையும், ஆவிஶ்ய - உள்ளே நுழைந்து, பி³ப⁴ர்த்தி - தரிக்கிறானோ. 17

பா] உத்தமனாகிய புருஷனோவெனில் க்ஷரம் அக்ஷரம் என்னும் பதங்களினால் சொல்லப்பட்ட பத்த ஜீவர்கள், முக்த ஜீவர்கள், இவர்களை விட வேறுபட்டவன். எல்லா ஶ்ருதிகளிலும் பரமாத்மாவென்று சொல்லப்பட்

---

*மில்லாத ஜ்ஞானமொன்றையே ஸ்வபாவமாகவுடையவன் என்று சொல்லப்பட்டதாகிறது. இப்படியாகில் 'கூடவத் திஷ்ட²தி (சிகரம்போலிருக்கிறான்)' என்று 'கூடஸ்த²:' என்னப்படுகிறான் என்று வ்யுத்பத்தியும் காட்டப்பட்டது. எல்லாவற்றிற்கும் பொதுவாகிய ஆகாரத்தையுடையவனாக இருக்கையே இவ்விடத்தில் சிகரம்போலிருக்கிறதென்று தாத்பர்யம். இவ்விடத்திலும் ஏக வசனமாகச் சொல்லியிருப்பது ஒரு காரணத்தினால் சேர்க்கப்பட்டிருப்பதைக் காரணமாகவுடையது என்று சொல்லுகிறார்—'இவ்விடத்திலும்' என்றாரம்பித்து. கீழ்ச்சொன்ன அர்த்தத்தில் காரணத்தைக்காட்ட வேண்டுமென்கிற அபிப்ராயத்தினால் முக்தியடைந்த ஆத்மாக்கள் அநேகர்கள் என்பதை ப்ரமாணத்துடன் நிரூபிக்கிறார்—'இதற்கு முன்பு' என்றாரம்பித்து, 16*

*தா] இதுவரையில் சொல்லப்படாமையினால் 'அந்ய:' என்பது விதிக்கப்படுகிறது என்று சொல்லிக்கொண்டு அதற்கு யாரைவிட என்று சொல்லவேண்டி யிருப்பதினால் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட க்ஷர, அக்ஷர, என்கிற புருஷர்களை அத்துடன் அந்வயிக்கிறார்கள் என்றும் சொல்லுகிறார்—'உத்தமனாகிய புருஷனோவெனில்' என்றாரம்பித்து. 'பரமாத்மேத்யுதா³ஹ்ருத:' என்பது விதிக்கப்படுகிறது என்று சொல்லுவது ஸம்ப*

---

* பகவத்கீதை-4-10. † பகவத்கீதை-14-2.

டவன். பரமாத்மாவென்று சொன்னதினாலேயே இந்த உத்தமனாகிய புருஷன் பத்தனும் முக்தனுமிருக்கிற ஜீவர்களைக்காட்டிலும் வேறுபட்டவனென்றறியப்படுகிறது. எப்படியெனில் சொல்லுகிறார்—'லோகத்ரயம்' என்று. 'லோக்யந்தே (பார்க்கப்படுகின்றன)' என்கிற வ்யுத்பத்தியினால் லோகா:. அவைகள் மூன்றாவது அசேதனமும், அத்துடன் சேர்ந்த ஜீவாத்மாவும், முக்தனான ஜீவாத்மாவும், என்கிற ப்ரமாணங்களாலறியத்தகுந்த இந்த மூன்று வஸ்துக்களையும் எவன் ஆத்மாவாக உள்ளே நுழைந்து தரிக்கிறானோ அவன் தன்னால் வ்யாபரிக்கத் தகுந்ததாயும், தரிக்காததாகையினால் அந்யன் என்பதற்குக் காரணத்தைச் சொல்லுகிறது அது என்று சொல்லுகிறார்—'எல்லா ஶ்ருதிகளிலும்' என்றாரம்பித்து. 1 'அந்தச் சிகையின்நடுவில் பரமாத்மா இருக்கிறான்' என்றும், 1 'நாராயணன் பரனாகிய ஆத்மா' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் என்றர்த்தம். பரமாத்மாவென்று சொல்லியிருக்கிறதற்குக் காரணத்தை நிரூபிக்கிறது என்று மேல் பாதிக்கு அவதாரிகை சொல்லுகிறார்—'எப்படி யென்னில்' என்று. 'லோக' என்னும் பதம் ப்ரஸித்தமான லோகத்தைச் சொல்லுவதாயிருந்தால் 'லோகத்ரயம்' என்பது பூ:, புவ:, ஸுவ:, என்கிற லோகங்களையாவது, ஸ்வர்க்கலோகம், மனுஷ்யலோகம், பாதாளலோகம், என்கிற லோகங்களையாவது சொல்லுகிறதாகும், அப்படியாகில் அவைகளுக்குள் வ்யாபரித்திருப்பதும், அவைகளைத் தரிப்பதும் எல்லாவஸ்துக்களுக்கும் அந்தராத்மா என்கிற தாத்பர்யத்தையுடைய பரமாத்மா என்பதை நிரூபிக்கக்காரணமாகாதாகையினாலே க்ஷர, அக்ஷர என்கிற எல்லா வஸ்துக்களைவிட வேறுபட்டவன் என்பதற்கு ஸாதகமாகாது. க்ருதகம், அக்ருதகம், க்ருதகாக்ருதகம் என்றுசொல்லப்படுகிறமூன்றுலோகங்களைச் சொல்லுவதாயிருந்தாலும் அவைகளிலிருக்கிற ஜீவாத்மாக்களில் லக்ஷணை ஒப்புக்கொள்ளவேண்டும். அதைவிடக் காரணப்பெயர் என்று ஒப்புக்கொள்ளுவதே மேலானது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு வ்யாக்யானஞ் செய்கிறார்—'லோக்யந்தே' என்றாரம்பித்து. கண்ணுக்குத்தெரியாத பத்த முக்த ஜீவர்களைப்பற்றி 'லோக்யந்தே (பார்க்கப்படுகின்றன)' என்பது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபம் வருகிறபடியினால் அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ப்ரமாணங்களா லறியத்தகுந்த' என்று. 'ய:' என்பது 2 'ஜனங்களை உள்ளேநுழைந்து நியமிக்கிறவன் எல்லாவற்றிற்கும் ஆத்மா' என்றும், 3 'எல்லாவற்றையும் தரிக்கக்கூடிய சக்தி

1 புருஷஸூக்தம். 2 யஜுர்வேதம்-ஆரண்யகம்-3-11.
3 யஜுர்வேதம்-ஆரண்யகம்-3-14.

க்கத் தகுந்ததாயுமிருக்கிற வஸ்துக்களைவிட வேறுபட்டவன். இத்தாலும் கீழ்ச்சொல்லிய மூன்றுவித வஸ்துக்களைவிட வேறுபட்டவன். எந்தக் காரணத்திறைல் அவன் மாறுதல்களில்லாதவனே, எல்லாவற்றையும் நிய மிக்கிறவனே,மாறுதலடையாமலிருப்பதையேஸ்வபாவமாகவுடையவன் மாறுதல்களையடைவதையே ஸ்வபாமமாகவுடைய அசேதனங்களைவிடவும், அந்த அசேதனங்களுடன் சேர்ந்திருப்பதினுல் அதையனுஸரித்திருக்

*யுள்ளவனு யிருந்துகொண்டு தன்னுலேயேதான் தாங்கப்பட்டவனு யிருந்துகொண்டு அவைகளைத் தரிக்கிறுன்' என்று மர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகள் இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டன. 'அவன்' என்பதற்கு பரமாத்மாவென்று சொல்லப்பட்ட அவன் என்றர்த்தம் 'யஃ' என்பது அந்தப் பரமாத்மாவைச் சொல்லுகிறபடியினுலும் இங்கே சொல்லியிருக்கும் விஶேஷணங்கள் தனித்தனியாக அவன் வேறு பட்டவன் என்பதை ஸாதிக்கக்கூடிய சக்தியுள்ளவைகள். வஸ்துவின் ஸ்திதி மாத்திரத்தைச் சொல்லுகிறதென்னில் இவ்விடத்தில் அனுவஶ்யகத்தைச் சொல்லி யிருக்கிறதாகும். ஒரு பதத்தினுலேயே வஸ்துவின் ஸ்திதிசொல்லப்பட்டிருக்கும் பொழுது மற்றப் பதங்கள் வ்யர்த்தமென்றேற்படும், என்றிவைகளை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறுர்—'இத்தாலும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் வ்யாபரித்திருப்பது, தரிப்பது, நியமிப்பது, இவைகளைச் செய்கிறவனும் இவைகள் அந்தக் கார்யங்களுக்கு விஷயங்களாகவுமிருப்பதினுல் வேறுபட்டவன் என்பதை ஸ்தாபிக்கக்கூடியவைகள். மாறுதலில்லாமலிருப்பதோ வெனில் நேரிலேயே ஸ்வபாவம் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிறபடியினுல் வேறுபட்டவன் என்பதை ஸ்தாபிக்கிறது என்கிற அபிப்ராயத்திறைல் சொல்லுகிறுர்—'மாறுதலையடையாமலிருப்பதையே ஸ்வபாவமாகவுடையவன்' என்றாரம்பித்து. இப்படி உள்பிரிவுகளின் வ்யத்யாஸத்தைமேலேயும் 1 'மாறுதலையடையாமலிருப்பதையே ஸ்வபாவமாகவுடையவனுகையினுலும் வ்யாபரிப்பது தரிப்பது, நியமிப்பது, முதலியவைகளையுடையவனுகையினுலும்' என்று காட்டப்போகிறுர். 'அசேதனங்களுடன் சேர்ந்திருப்பதினுல் அதை யனுஸரித்திருக்கிற' என்பதற்கு அதினுலுண்டாகிய பிறப்பு, மரணம் முதலிய கஷ்டங்களையுடைய என்றர்த்தம். அதைப் போலவே ஜ்ஞானத்தின் சுருக்கம், பரவுதல், முதலிய விகாரங்களை உடைய என்றுகவுமாம். 'தகுந்தவன்' ஆகையாவது மற்ற ஒத்தாசைக்

1 பகவத்கீதை-15-19-வது ஶ்லோகத்தின் பாஷ்யம்.

கிற சேதனர்களைவிடவும், அந்த அசேதனங்களோடு சேருவதற்குத்தகுந்த வனாகையினாலே முன்பு சேர்ந்திருந்த முக்தனாகிய ஜீவனைவிடவும் வேறுபட்டவன். அப்படியே இந்த மூன்றுவித வஸ்துக்களையும் நியமிக்கிறவன்

*காரணங்கள் சேர்ந்தால் கார்யமுண்டாகக்கூடிய ஸ்வபாவத்தையுடையதாயிருக்கை. ஒத்தாசைக் காரணங்களில்லாமையினாலே கார்யங்களுண்டாகமலிருப்பதாகவுமாம். அது முக்தாத்மாவுக்கும் உண்டு. ஆகையினால் ஸ்வபாவங்களின் விரோதம் அவ்விடத்திலும் ஸமானம் என்று சொல்லுகிறார்—'அசேதனங்களோடு' என்றாரம்பித்து. முக்தனுக்கும் எப்பொழுதும் தனக்கு மாறுதலில்லை என்பது கிடையாது என்று தாத்பர்யம். 'ஈஶ்வர:' என்னும் பதம் இவ்விடத்தில் உபயோகமில்லாத பேரை மாத்திரம் சொல்லுகிறதல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அப்படியே இந்த மூன்றுவித வஸ்துக்களையும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஆத்மாவின் லக்ஷணத்திற்குள்ளடங்கிய உள்ளே நுழைந்திருப்பது, தரிப்பது, நியமிப்பது, இவைகளைச்சொல்லியிருக்கும் பொழுது தனக்காகவே இவைகளைத்தரிப்பதினாலேசேஷியாக இருக்கையுமேற்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால்ஸங்க்ரஹஶ்லோகத்தில் 'ஶாஸ்தா' என்று சொல்லியிருக்கிறது. அப்படியாகில் ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் நியமிக்கிறவனாக யிருக்கையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது. இப்படியே மாறுதல்களை யடையாமலிருப்பதையே ஸ்வபாவமாகவுடையவனா இருக்கை, வ்யாபித்திருக்கை, தரித்துக்கொண்டிருக்கை ஸ்வாமியாக இருக்கை, இவை முதலியவைகளால் என்று மேல் அத்யாயம் பாஷ்யத்தினவதாரிகையிலும்பார்த்துக் கொள்ள வேண்டியது. அன்றிக்கே கேவலம் நியமிப்பதைமாத்திர முடையவர்களிடங்களில் 'ஈஶ்வர:' என்னும் பதம் ப்ரயோகிக்கப்படாமையினால் யஜமானனாயிருக்கையோடு சேர்ந்திருக்கிற நியமனம் செய்வதைப்பற்றி ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினாலும் 'ஈஶ்வர:' என்னும் பதத்தினாலேயே சேஷியாகவிருப்பதும் ஜ்ஞாபகப்படுத்தப்பட்டது. மேலும் இவ்விடத்தில் 'ய:' என்று அநுவாதம் செய்திருப்பதில் 1 'மயி ஸர்வமிதம் ப்ரோதம்' என்றிவை முதலிய புரோவாதத்தை யோசிக்கும்பொழுது அந்த ஸந்தர்ப்பத்தில் 2 'ஸூணு பார்த்த' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிற சேஷியாகவிருக்கையும் இவ்விடத்தில் இழுத்துக்கொள்ளப்படுகிறது. 3 'இந்த ப்ரபஞ்சத்திற்கு யஜமானனாகவும் தனக்குத்தான் ஈஶ்வரனாயுமிருக்கிற'*

1 பகவத்கீதை-7-7.

2 பகவத்கீதை-7-1. 3 புருஷ ஸூக்தம்.

தன்னால் நியமிக்கப்படுகிற அந்த வஸ்துக்களைவிட வேறுபட்டவன். 17

யஸ்மாத் க்ஷரமதீதோऽஹம் அக்ஷராதபி சோத்தம: |
அதோऽஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: || 18

ப-ரை] யஸ்மாத் - எந்தக் காரணத்தினால், அஹம் - நான், க்ஷரம் -பத்த ஜீவர்களை, அதீத: - தாண்டியிருப்பவனே, அதாவது பத்தஜீவர்களை விட மேலானவனோ, அக்ஷராதபி-முக்த ஜீவர்களைக் காட்டிலும், உத்தம: - உயர்ந்தவனே, அத: - ஆகையினால், லோகே - ஸ்ம்ருதிகளிலும், வேதே ச - வேதத்திலும், புருஷோத்தம: - புருஷோத்தமன் என்று, ப்ரதித: - ப்ரஸித்தியடைந்தவன். 18

பா] எந்தக் காரணத்தினால் இப்படிக் கீழ்ச் சொல்லிய ஸ்வபாவங்களி னால் நான் பத்தஜீவர்களைவிட மேல்பட்டவனோ, முக்தஜீவர்களைக்

*என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திலிருக்கிற 'வஶீ' என்னும் பதத்தின் ஸ்தானத்தில் இவ்விடத்தில் 'ஈஶ்வர:' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்று தாத்பர்யம்.* 17

*தா] இப்படிக் கீழே ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதாகிய தானிவைகளை விட வேறானவனென்பது ஶ்ருதிகளிலும் ஸ்ம்ருதிகளிலும் ப்ரஸித்தமாகிய தாதுவின் அர்த்தத்தையுடைய பெயரினால் ஸ்தாபிக்கப்பட்டது. அதுவேமறுபடியும்அப்படிப்பட்டதாயு*[1] *'உத்தம:புருஷ:'என்று அநுவாதஞ் செய்திருப்பதினால் ஜ்ஞாபகப்படுத்தப்பட்டதாயுமிருக்கிறமற்றொரு பெயரினாலும்உறுதிப்படுத்தப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இத்தால் முன் ஶ்லோகத்தில் மற்றொருவனைச் சொல்லுவதைப் போலச் சொல்லியிருப்பதும் தன்னைப்பற்றியதே என்றும் காட்டப்பட்டது. இவ்விடத்தில் எந்தக் காரணத்தினால் இது நெருப்பையுடையதோ ஆகையினாலேயே புகையையும் உடையது என்றிவை முதலியவைகளைப்போல ஸாதிக்கப்படுகிறதுதானே ஸாதநத்தைக் குறித்துக் காரணமாகையினால் ஹேதுவாகச் சொல்லப்படுகிறது அந்த ஸாத்யம் அதின் காரணங்களுடன் கூட இந்தப் பெயருக்குக் காரணம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எந்தக் காரணத்தினால்' என்றாரம்பித்து. 'க்ஷரமதீத:'என்பதினால் அவைகளின் ஸ்வபாவங்களினுடைய வாஸனை கூட இவனிடத்தில் ஒட்டாது என்பது சொல்லப்படுகிறது. இவ்விடத்திலும் 'க்ஷர' என்னும் பதம் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட இந்தப்பதத்தின் அர்த்தத்தையே சொல்லுகிறபடியினால் ப்ரக்ருதியைச்*

1 பகவத்கீதை-15-17. 2 பகவத்கீதை-15-16.

காட்டிலும் கீழ்ச்சொல்லிய காரணங்களினாலேயே மிகவும் உயர்ந்தவன். ஆகையினால் நான் லோகத்திலும் வேதத்திலும் புருஷோத்தமனென்று ப்ரஸித்தியடைந்தவனாகிறேன். வேதங்களின் அர்த்தங்களைத் தெரிந்து

---

சொல்லுகிறதல்ல என்று சொல்லுகிறார்—'பத்தஜீவர்களைவிட' என்று. 'அக்ஷர' என்னும் பதம் ப்ரக்ருதி, ஈஶ்வரன், முதலிய இடங்களில் ப்ரயோகிக்கப்படுகிறபடியினால் அவைகளை விலக்குவதற்காக 'கூடஸ்தோऽக்ஷர:' என்று கீழ்ச்சொல்லிய அர்த்தத்தையே சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'முக்த ஜீவர்களைக்காட்டிலும்' என்று. இத்தால் 'புருஷோத்தம:' என்னும் பதத்திற்கு நிர்வசனமும் காட்டப்பட்டது. 'கீழ்ச்சொல்லிய காரணங்களினாலேயே' என்பதற்கு 1 'ஷஷ்டீ ஹேதுப்ரயோகே' என்று சொல்லியிருப்பது ப்ரயோஜனமாகிய ஹேதுவைப்பற்றியதாகவே அதிக ப்ரயோகமிருப்பதினால் மூன்றாம் வேற்றுமையாகச் சொல்லியிருப்பதற்கு ஒருவித தோஷமில்லை என்று தாத்பர்யம். 'உத்தம:' என்னும் பதத்தில் பகுதி விகுதிகளைப் பிரித்து அவைகளால் சொல்லப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'மிகவும் உயர்ந்தவன்' என்று. முக்தன் பத்தனைவிட உயர்ந்தவன். அவனைவிட இந்தப் பரமாத்மா எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாக இருப்பது முதலிய கீழ்ச்சொல்லிய காரணங்களினால் மிகவும்உயர்ந்தவன். 'ப்ரதித:' என்னும் பதத்தினால் கேவலம் தான் மாத்திரம் ப்ரஸித்தியடைந்தானென்று சொல்லுவது கீழ்ப்ரஸ்தாவித்திருப்பதோடு பொருந்தாதாகையினால் விஶேஷணங்களோடுகூடின ப்ரஸித்தியைச் சொல்லுகிற இது விஶேஷணங்களிலேயே அந்வயிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'புருஷோத்தம:' என்று சொல்லியிருக்கிறது. இவ்விடத்தில் 'லோகே' என்னும் பதம் ப்ரஸித்தமான லோகங்களைச் சொல்லுகிறதல்ல, ஜனங்களைச்சொல்லுகிறதுமல்ல, அவைகளில் ப்ரஸ்தாவிக்கப்படுகிற அர்த்தம் இங்கே சொல்லுவதற்கு ப்ரமாணமாகவிருக்கை ஸம்பவிக்காதாகையினால். காவ்யம், முதலியவைகளில் ப்ரயோகித்திருப்பதைச் சொல்லுகிறதுமல்ல, அதிலும் அதிகஸ்வாரஸ்யமில்லாமையினால். ஆகையினால் வேதத்தோடு சேர்த்துச்சொல்லியிருப்பதினால், அதையனுஸரித்த ஸ்ம்ருதிகளைச் சொல்லியிருக்கிறது இது. அவ்விடத்திலும் 'லோக்யதே அநேந வேதார்த்த: (வேதங்களின் அர்த்தம் இதினால் அறியப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் ஸ்ம்ருதிசொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வேதங்களின் அர்த்தங்களை'

---

1 அஷ்டாத்யாயி-2-3-26. ஹேதுப்ரயோகே-காரணத்தைச்சொல்லுகிற பொழுது, ஷஷ்டீ-ஆறும்வேற்றுமை வரும்.

கொள்ளுவதற்குக் காரணமாகையினுல் இவ்விடத்தில் 'லொகெ' என்பதினுல் ஸ்ம்ருதி சொல்லப்படுகிறது. அதாவது ஶ்ருதியிலும் ஸ்ம்ருதியிலும் என்றர்த்தம். ஶ்ருதியில் * 'மேலான ஜ்யோதிஸ்ஸை அடைந்து தன்னுடைய ருபத்துடன் சேருகிறுன். அவன் உத்தமனுகிய புருஷன்'

என்றாரம்பித்து.—'அதாவது ஶ்ருதியிலும் ஸ்ம்ருதியிலும்' என்பதற்குக் கருத்தாவது 'ஶ்ரூயதெ நித்யம் (எப்பொழுதும் கேழ்க்கப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினுலல்லவோ ஶ்ருதியென்னப்படுகிறது. ஆகையினுல் சொன்னவனின் தோஷம் என்கிற ப்ரஸ்தாவமே இல்லாமையினுலும், நடுவில் விட்டுப்போகாமல் பரம்பரையாக வருகிறபடியினுலும், அதில் சொல்லப்பட்டது முழுமையும் ப்ரமாணமே. ஸ்ம்ருதியும் கொஞ்சம் தெரிந்தவர்களினுல் அறியக்கூடாத எல்லாச்சாகைகளிலும் ஒரே விதமாகச் சொல்லப்படுகிற அர்த்தத்தைச்சேர்த்து விசதப்படுத்துவதாகையினுல் ப்ரமாணமே. ஆகையினுல் அதினுல் வேதங்களின் அர்த்தத்தைத் தெரிந்து கொள்ளுவது யுக்தம் தான் என்பது. 'மேலான ஜ்யோதிஸ்ஸை' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் முக்தியையடைந்தவனுல் அடையத்தகுந்தவனுகச் சொல்லப் பட்ட எல்லையில்லாத ப்ரகாசத்தையுடைய புருஷனை இவ்விடத்தில் 'அவன் உத்தமனுகிய புருஷன்' என்றெடுத்து விஶேஷித்துச் சொல்லப்படுகிறுன். அதின் அர்த்தத்தை விசதப்படுத்துவதற்காகவே 1 'உத்தம: புருஷஸ்த்வந்ய:' என்று அதைப்போலவே பிரித்துப் பதங்களின் ப்ரயோகமிங்கே காட்டப்பட்டது என்கிற அபிப்ராயத்தினுல் 'மேலான' என்றிவை முதலிய அர்த்தமுள்ள இந்த ஶ்ருதிவாக்யத்தை இங்கு எடுத்திருக்கிறது. இவ்விடத்தில் 'ஸ உத்தம: புருஷ:' என்று சொல்லப்பட்ட சேர்ந்த ப்ரயோகத்தைக் காட்டுவதற்காக 'அம்ஶாவதாரம் புருஷோத்தமஸ்ய' என்கிற ஸ்ம்ருதியை எடுத்திருக்கிறது. இவ்விடத்தில் 'விஷ்ணோ:' என்று பேரைச் சொல்லியிருந்தபோதிலும் 'புருஷோத்தமஸ்ய' என்கிற விஶேஷணத்தின் அர்த்தத்தையே அது சொல்லுகிறதென்று தாத்பர்யமாகையினுல் இந்த 'புருஷோத்தம' என்னும் பதம் யோகரூடமாக (காரணப்பெயராயும்இடுகுறிப் பெயராயும்) ஏற்பட்டது. இத்தால் 2 'ரூட்யா த்வாகாரம் புரு

* சாந்தோக்யம்-8-12-2.

1 பகவத்கீதை-15-17.

2 ரூட்யா-இடுகுறியாக,புருஷோத்தம:-புருஷோத்தமனென்கிற பதத்தினுல் சொல்லப்பட்டவனுக; அஸ்து காமம்-இருந்தாலுமிருக்கலாம்.

என்றர்த்தமுள்ள வாக்யம் முதலியவைகளிலும், ஸ்ம்ருதியிலும் † ‘புருஷோத்தமஸ்ய’ என்று பிதற்றுகிற வேதபாஹ்யன் நிராகரிக்கப்பட்டான். காரணப்பெயராக அர்த்தம் சொல்லும்பக்ஷத்தில் இது வ்யாகரணத்தை யனுஸரித்ததாக எப்படியாகும்? ஏனெனில் இது ஸமாநாதிகரண ஸமாஸமல்ல. 1 ‘ஸந்மஹத்பரமோத்தமோத்க்ருஷ்டா: பூஜ்யமாநை:’ என்று சொல்லியிருப்பதினால் முதல் வேற்றுமையாகச் சொல்லப்பட்ட ‘உத்தம’ என்னும் பதம் முக்யமல்லவாகையினால் முதலில் சொல்லவேண்டியதாகும். வ்யதிகரண ஸமாஸமுமல்ல, ஏனெனில் ‘உத்தம: பூருஷ இவ (புருஷனைப்போல உயர்ந்தவன்)’ என்று உபமித ஸமாஸம்பொருந்தாதாகையினாலும், இதன் அர்த்தத்தைச்சொல்லுவதாக உதாஹரிக்கப்பட்ட ஸ்ருதியிலும் வ்யதிகரணஸமாஸம் காணப்படாமையினாலும். இது ஷஷ்டீ ஸமாஸமுமல்ல, ‘நிர்தாரணா (தனித்தெடுத்திருக்கிறது)’என்னும்அர்த்தத்தைச் சொல்லுகிற ஷஷ்டீவிபக்தியாகவிருந்தால் அதற்கு ஸமாஸம்வராது என்று மறுத்திருக்கிறபடியினால்.மற்றஎந்தவிதமானஸமாஸமும்இவ்விடத்தில்ஸம்பவிக்காது?என்னில் இது உசிதமல்ல, ஷஷ்டீஸமாஸமே இங்கு யுக்தமாகையினால் எப்படியெனில் நாமிவ்விடத்தில் ‘நிர்தாரணம்’ என்னும்அர்த்தத்தைச்சொல்லுகிறதென்று சொல்லவில்லை அல்லவா, புத்திரன் முதலிய பதங்களைப் போல எவனுக்குஎன்று மற்றொருஸம்பந்தியைஎதிர்பார்க்கிற பதமல்லவோ இது. உயர்ந்திருக்கைதாழ்ந்தவைகளைக் குறிக்கல்லவோ. இதுவும் கீழ்ச் சொல்லிய காரணங்களினால் ‘மிகவும் உயர்ந்தவன்’ என்பதினால் காட்டப்பட்டது.ஜாதி,குணம்,முதலிய வைகளைச்சொல்லுகிறமற்றொரு ஸம்பந்தியை எதிர்பாராதபதங்களிலல்லவோ ‘நிர்தாரணம்’ என்னும் அர்த்தத்தில்ஷஷ்டீவரும், பொதுவாக ஸம்பந்தத்தைச்சொல்லுகிறதாக விதிக்கப்பட்ட‘ஷஷ்டீ (ஆறும் வேற்றுமை)’ அந்தந்தத் தன்னைஎதிர்பார்க்கப்படுகிற மற்றொரு ஸம்பந்திகளைச் சொல்லுகிறபதங்களின் சேர்க்கைக்குத் தக்கபடி அந்தந்தஸம்பந்த விசேஷத்தைச் சொல்லுகிறது. இப்படியே யல்லவோ ‘நரோத்தம:’ முதலிய பதங்கள் வ்யாகரணத்தை ஒட்டினதென்று வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. இந்தப் பக்ஷத்தில் 2 ‘உத்தம: புருஷஸ்த்வந்ய:’, ‘க்ஷரோऽதீதோऽஹம்’, ‘அக்ஷராதபி

† விஷ்ணுபுராணம்-5-17-33-புருஷோத்தமஸ்ய-புருஷோத்தமனுகிய, அஜஸ்ய பிறப்பில்லாதவனுகிய, விஷ்ணோ:-விஷ்ணுவினுடைய, அநாதிமத்யாந்தம்-நடுவு, அந்தம், இல்லாத, அம்ஸாவதாரம:-அம்ஸாவதாரமாகிய.

1 அஷ்டாத்யாயி-2-1-61. ஸந்,முதலிய பதங்கள் மற்றப்பதங்களுக்கு முன்பேவரும். 2 பகவத்கீதை-15-17.

ஶாவதாரம் புருஷோத்தமஸ்ய ஹ்யநாதி ஶப்தாநுஜஸ்ய விஷ்ணோ:' என்றிவை முதலிய இடங்களிலும் என்று தாத்பர்யம். 18

ஷோத்தம:' என்று சொல்லியிருப்பது அதினுலேற்பட்ட அர்த்தத்தை சொல்லியிருப்பது மாத்திரமே ஒழிய ஸமாஸங்களின் இரண்டு பாகங்களைச் சொல்லியிருக்கிறதல்ல. இப்படியே 'அவன் உத்தமமாகிய புருஷன்' என்கிற ஶ்ருதிவாக்யத்தை உதாஹரித்திருக்கிறதும். சிலர் பஞ்சமீஸமாஸமாக வ்யாக்யானஞ் செய்கிறார்கள். 'உத்தம' என்னும் பதத்தோடு சேர்ந்திருக்கும்பொழுது பஞ்சமீஸமாஸம் விதிக்கப்படவில்லையே என்று சொல்லுவது உசிதமல்ல. எப்படி 1 'யஸ்மாததிகம்' என்றிவை முதலிய ஸூத்ரத்திலேயே ப்ரயோக மிருப்பதினுல் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாமலிருந்ததும் ஒப்புக்கொள்ளப்படுகிறதோ அப்படியே 'க்ஷஶாஜவிஶோத்தம:' என்றிவை முதலிய ப்ரயோக மிருப்பதினுலேயே அதையும் ஒப்புக்கொள்ளவேண்டியது உசிதமாகையினுல். இதுவும் 'முக்தஜீவர்களைக்காட்டிலும்' என்றாரம்பித்து 'மிகவும் உயர்ந்தவன்' என்கிற வரையிலும் சொல்லியிருக்கிறதினுல் காட்டப்பட்டது. ஸூத்ரத்தைப்பிரித்துக்கொள்ளுவதினுல் பஞ்சமீ விபக்தி (ஐந்தாம் வேற்றுமைக்கு) 'உத்தம' முதலிய பதங்களோடு ஸமாஸமும்விதிக்கப்பட்டது தான். இப்படியே ஸப்தமீ ஸமாஸமாக விருந்தபோதிலும் தோஷமில்லை, ஶௌண்ட முதலிய கணங்களில் சொல்லப்படாமலிருந்தபோதிலும் அவ்விடத்திலும் ஸூத்ரத்தைப்பிரித்துக் கொள்ளுவது ஒப்புக்கொள்ளப்படுகிறபடியினுலே அது பொருந்துமாகையினுல். இவையெல்லாவற்றையும் தெரிந்துகொண்டவர்களாகிய மஹாகவிகளினுலும் இந்தப்பதம் கீழ்ச்சொல்லிய ஸமாஸங்களையுடையதாகவே ப்ரயோகிக்கப்படுகிறது. அப்படியே வ்யாக்யானமுஞ் செய்யப்படுகிறது. அப்படியே ஆதிகாவ்யமாகிற ராமாயணத்தில் 2 'நச தேந விநா நித்ராம் லபதே புருஷோத்தம:' என்று சொல்லப்பட்டது. இவை எல்லாவற்றையும் நினைத்துப் பகவானுகிய யாமுனுசார்யராலும் (ஆளவந்தாராலும்) ஸ்தோத்திரத்தில் 3 'க: புண்டரீகநயந: புருஷோத்தம: க:' என்று சொல்லப்பட்டது. 18

1 அஷ்டாத்யாயி-2-3-9.

2 ராமாயணம்-பாலகாண்டம்-18-29. புருஷோத்தம:-புருஷோத்தமனுகிய ஸ்ரீராமன், தேநவிநா-அந்த லக்ஷ்மணனைவிட்டு, நித்ராம்-தூக்கத்தை, நலபதே-அடைகிறதில்லை. 3 ஆளவந்தார் ஸ்தோத்திரம்-12. க:-எவன், புண்டரீகநயந:-தாமரஸப்புஷ்பங்களைப்போன்ற கண்களையுடையவன், க:-எவன், புருஷோத்தம:-புருஷோத்தமன்.

யோ மாமேவமஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம் ||
ஸ ஸர்வவித் பஜதி மாம் ஸர்வபாவேந பாரத || 19

ப-ரை] பாரத - அர்ஜுந, ய꞉ - எவன், ஏவம் - இந்த மாதிரி, புருஷோத்தமம் - புருஷோத்தமனாகிய, மாம் - என்னை, அஸம்மூட꞉ - அஜ்ஞானமில்லாதவனாய், ஜாநாதி - அறிகிறானோ, ஸ꞉ - அவன், ஸர்வவித் - எல்லாவற்றையு மறிந்தவன், ஸர்வபாவேந - எல்லா அபிப்ராயங்களினாலும், மாம் - என்னைக் குறித்து, பஜதி – பக்தி செய்கிறான். 19

பா] எவன் கீழ்ச் சொல்லிய விதத்தினால் புருஷோத்தமனாகிய என்னை அஜ்ஞானமில்லாதவனாய்த் தெரிந்துகொள்ளுகிறானோ; க்ஷரம், அக்ஷரம், என்று சொல்லப்பட்ட ஜீவர்களைக்காட்டிலும் நாசத்தை யடைவதையே ஸ்வபாவமாக வுடையவனல்லாமையினாலும் வ்யாபரிக்கிறது, தரிப்பது,

---

தா] இப்படி 'புருஷோத்தம' என்னும் பதத்திற்கு அர்த்தம் சொன்னது அப்படி த்யானம் செய்வதற்காக என்பதைத் தெரிவித்துக் கொண்டு இப்படிப் புருஷோத்தமனென்று தெரிந்து கொள்ளுவதை ஸ்தோத்திரம் செய்கிறார்—இந்த ஶ்லோகத்தினால். புருஷோத்தமனை அறிகிறானோ என்றர்த்தம் சொல்லில் 'அஸம்மூட꞉' என்னும் பதம் வ்யர்த்தம். ஆகையினால் 'புருஷோத்தமனாகிய என்னை' என்று வஸ்துவின் ஸ்திதியைக்குறித்துக்காட்டி இவ்விஷயத்தில் உள்ளபடி யறிந்து கொள்ளுவது 'அஸம்மூட꞉' என்பதினால் சொல்லப்படுகிறது. இதையே சொல்லுகிறார்—'எவன் கீழ்ச்சொல்லிய' என்றாரம்பித்து. ஒன்று சேர்த்து ப்ரமிக்கிறதில்லாமை 'அஸம்மோஹ꞉' என்னப்படுகிறது. அதுவும் கீழ்ச்சொல்லிய விதங்களினால் வேறு பட்டவனென்று தெரிந்து கொள்ளுவதினால் என்று சொல்லுகிறார்—'க்ஷரம் அக்ஷரம் என்று சொல்லப்பட்ட' என்றாரம்பித்து. இப்படி 'அஸம்மூட꞉' என்னும் பதத்தினால் மற்றவர்கள் ஒப்புக்கொண்டிருக்கிற ஜீவாத்மா, பரமாத்மா, இவர்கள் ஒன்று என்று தெரிந்து கொள்ளுவது ப்ரமம்என்பதும், ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளுடைய பேதம் உண்மை யென்பதும் சொல்லப்பட்டது. 'ஸ ஸர்வவித்' என்கிறவிடத்தில் 'புருஷோத்தம꞉' என்னும் பதத்தின் அர்த்தத்தைத் தெரிந்துகொள்ளுவதினால் பதினெட்டு வித்யாஸ்தானம்முதலியவைகளைப்பற்றிய ஜ்ஞானம்ஸித்திக்காதாகையினாலும் இவ்விடத்திலும் அவஶ்யமில்லாத மயிர், புழு,முதலியவைகளின் கணக்கைத்தெரிந்து கொள்ளுவதினால் ஸ்தோத்திரம் செய்வது ஸம்பவிக்காதாகையினாலும், அது 'பஜதி மாம் ஸர்வபாவேந' என்கிற விஷயத்தில் ப்ரயோஜன மற்றதாகையினாலும் பக்தியை யநுஷ்டிப்பதற்குப

நியமிப்பது, முதலியவைகளினாலும் வேறுபட்டவனாகத் தெரிந்துகொள்ளுகிறானோ; அவன் என்னை யடைவதற்குபாயமாக எதெதை அறியவேண்டியதோ அவை எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளுகிறான். என்னை யடைவதற்குபாயங்களாக என்னை அடைவதின் விதங்கள் எவை சொல்லப்பட்டதுகளோ அந்த எல்லாவற்றினாலும் என்னை அடைகிறான். என்னைப்பற்றிய எல்லா ஜ்ஞானங்களினாலும் எனக்கு எவ்வித ப்ரீதி உண்டா

---

*யோகமாகிய ஜ்ஞானத்தைச் சொல்லுகிறது என்று சுருக்கிச்சொல்லுகிறார்—'என்னை அடைவதற்குபாயமாக' என்றாரம்பித்து. 'ஶஜதி' என்பதற்கு அடங்கியிருக்கிற 'ஸவஹாவ' என்னும் பதம் பக்தியின் உள்பிரிவாக முன்பு நிரூபிக்கப்பட்ட திருநாமங்களைச் சொல்லுவது, கைங்கர்யங்களைச்செய்வது, முதலிய எல்லா விதங்களையும் சொல்லுகிறது. 1 'ஶாஸெவஸு'என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுவதைப் பார்க்கிலும் இந்த அர்த்தமே ஸ்தோத்திரம் செய்வதற்கு அதிக உபயோகமுள்ளதாகையினால் இவ்விடத்தில் ஒப்புக்கொள்ளத்தக்கது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னை யடைவதற் குபாயங்களாக என்னை யடைவதின் விதங்கள்' என்று 'ஶாவ' என்னும் பதம் இவ்விடத்தில் க்ரியையைச் சொல்லுகிறதாகவாவது வஸ்துக்களைச் சொல்லுகிறதாகவாவது இருந்துகொண்டு பக்தி செய்வதின் விதங்களாகிய விஶேஷங்களைக் குறிக்கிறது. இவ்விடத்தில் தத்வங்களையும் ஹிதங்களையும் தெரிந்துகொள்ளுவதும், ஹிதங்களை யனுஷ்டிப்பதும் ஶாஸ்த்ரங்களுக்கு ப்ரயோஜனங்களாகச் சொல்லப்படுகிறது. அதில் புருஷோத்தமன் என்று தெரிந்துகொள்ளுவது மாத்திரம் பரத்வம், வ்யூஹம், விபவம், இவைகளின் குணங்கள், வ்யாபாரங்கள், முதலிய எல்லாவற்றையும் தெரிந்துகொள்ளுவதாகவும், எல்லாவிதப் பக்தி செய்வதாகவும் ஆகாது ஸ்வரூபங்கள் வெவ்வேறாகையினால். இல்லாமலிருந்தபோதிலும் ஆரோபித்துக்கொண்டு ஸ்தோத்திரம் செய்திருப்பது என்பதும் உசிதமல்ல, அது அவ்வளவு உறுதியில்லாமையினாலும் நிஷ்ப்ரயோஜனமாகையினாலும். காரணமாகவும், கார்யமாகவுமிருக்கை என்று இவ்விடத்தில்சொல்லப்படுகிறது என்பது முசிதமல்ல,'ஶதஸ்வஸ்யாவஷிராஶஸ்ராஸ' என்று அடுத்த ஶ்லோகத்தில் சொல்லியிருப்பதோடு புனருக்தி வருகிறபடியினால். ஆகையினால் இந்த ஶ்லோகம் ப்ரயோஜனமற்றது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'என்னைப்பற்றிய எல்லா ஜ்ஞானங்களினாலும்' என்றாரம்பித்து. புருஷோத்தமன் என்று தெரிந்துகொள்ளுவது மாத்திரத்தினால் பகவானுக்கு*

---

1 பகவத்கீதை-7-20.

கிறதோ, எல்லா விதமாக என்னை ஆஶ்ரயிப்பதினாலும் எந்த ப்ரீதி உண்டாகிறதோ, இரண்டுவிதமான அவ்வித ப்ரீதி இந்த ஜ்ஞானத்தினால் எனக்குண்டாகிறது, என்று இந்தப் புருஷோத்தமனென்று தெரிந்துகொள்ளுவதைக்கொண்டாடுகிறார். 19

𑌇𑌤𑌿 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌮𑌿𑌦𑌮𑍁𑌕𑍍𑌤𑌂 𑌮𑌯𑌾𑌨𑌘 ।
𑌏𑌤𑌦𑍍𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍𑌸𑍍𑌯𑌾𑌤𑍍𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌶𑍍𑌚 𑌭𑌾𑌰𑌤 ॥ 20

*ஸ்ரீ கண்ணபிரானருளிச் செய்த ஸ்ரீமத் பகவத்கீதையில்*

பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

𑌶𑍍𑌰𑍀𑌕𑍃𑌷𑍍𑌣𑌾𑌯 𑌪𑌰𑌬𑍍𑌰𑌹𑍍𑌮𑌣𑍇 𑌨𑌮𑌃



ப—ரை] 𑌅𑌨𑌘 - தோஷமில்லாதவனாகிய, 𑌭𑌾𑌰𑌤 - பாரதவம்சத்தில் பிறந்தவனாகிய அர்ஜுந, 𑌇𑌤𑌿 - என்று, 𑌗𑍁𑌹𑍍𑌯𑌤𑌮𑌂 - மிகவும் ரஹஸ்யமாகிய, 𑌇𑌦𑌂 - இந்த, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌂 - ஶாஸ்த்ரமானது, 𑌉𑌕𑍍𑌤𑌂 - சொல்லப்பட்டது, 𑌏𑌤𑌤𑍍 - இதை, 𑌬𑍁𑌦𑍍𑌧𑍍𑌵𑌾 - தெரிந்துகொண்டு, 𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌮𑌾𑌨𑍍 - புத்தியை யுடையவனாகவும், 𑌕𑍃𑌤𑌕𑍃𑌤𑍍𑌯𑌃 - செய்யவேண்டிய கார்யத்தைச் செய்தவனாகவும், 𑌸𑍍𑌯𑌾𑌤𑍍 - ஆவான். 20

பா] இவ்விதமாக நான் புருஷோத்தமன் என்பதை நிரூபிக்கிறதாகிய எல்லா ரஹஸ்யங்களுக்கும் உயர்ந்த ரஹஸ்யமாகிய இந்த ஶாஸ்த்ரம்

---

*எல்லாவிதமான ப்ரீதி உண்டாவதாக இருந்தால் பக்தி முதலியவைகளையனுஷ்டானம் செய்யவேண்டுமென்று விதித்திருப்பது வ்யர்த்தமாகுமென்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'என்று இந்த' என்றாரம்பித்து. எல்லா ஜ்ஞானங்களுக்கும் இதுவே முதல் காரணம். பலம் ஸமமாகையினால் எல்லாந் தெரிந்துகொள்ளப்பட்டதென்றும், க்ருத க்ருத்யனென்றும் சொல்லியிருக்கிறது என்று தாத்பர்யம். 'என்று இந்த' என்றாரம்பித்து மேல் ஶ்லோகத்திற்கு அவதாரிகையாகவுமாம்.* 19

*மறைக்கத்தகுந்ததென்பதையும், உண்மையானது என்பதையும், இதன் பலம் விஶேஷமானதென்பதையும் தெரிவித்துக்கொண்டு முடிக்கிறார்—இந்த ஶ்லோகத்தினால். இதுவே கீதையாகிற ஶாஸ்த்ரத்தின் முடிவு என்று சொல்லுகிறவர்களை நிராகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'புருஷோத்தமன் என்பதை நிரூபிக்கிறதாகிய' என்று. பதினைந்தாவது அத்யாயத்தின் என்றர்த்தம். '𑌅𑌨𑌘' என்று அழைத்திருப்பது இவன் அதிகாரி என்பதைத் தெரிவிப்பதற்காக*

நீ தோஷமில்லாதவனாகையினால் மிகவும் ததுந்தவன் என்று நினைத்து என்னால் உனக்குச்சொல்லப்பட்டது. இதைத்தெரிந்துகொண்டால் என்னை யடையவேண்டுமென்று ஆசையையுடையவனால் எவ்விதமான புத்தி

என்று சொல்லுகிறார்—'தோஷமில்லாதவனாகையினால்' என்றாரம்பித்து. இப்படியே 'ஹாரத' என்றழைத்திருப்பதும் பிறப்பினாலேயே அதிகாரி என்பதைத் தெரிவிப்பதற்காக. 'இதம் (இந்த)' என்பதற்கு இந்த ஶாஸ்த்ரத்தைச் சொல்லுகிறவனும் கேட்கிறவனும் துர்லபன் என்று தாத்பர்யம். அன்றிக்கே மற்றெல்லா ஶாஸ்த்ரங்களைவிட மிகவும் உயர்ந்ததாகிய என்றர்த்தமாகவுமாம். இதுவும் பெரியோர்களால் 1 'யஸ்மிந்நவஸாநஸம்ஸவே கவமொவிரெகெஶாஸ்த்ராணி ஶாஸஶரிஷதந்தஷரிஶேம யாணி। கஷ்டெநடௌதந யதிஹஷ்ஸஜவஸ்ரீதம் ஶாஸ்த்ரஸ்ய தஸ்யஸதஸ்ஶம் கிஶிஷாஸிஶாஸ்த்ரம் ॥' என்று சொல்லப்பட்டது. 'யோ (என்றால்)' என்பதற்கு சொல்லவேண்டிய தத்வங்களைத் தெரிந்தவனாயும், உன்னுடைய அதிகாரத்தை யறிந்தவனாயும், உனக்கு சிநேகிதனாயும் இருக்கும் என்றால் என்றர்த்தம். முன்பு சொல்லப்பட்ட ஶாஸ்த்ரத்தை அனுவதிக்கிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'உனக்குச் சொல்லப்பட்டது' என்று. 2 'ஸாவித்யாயாவிமுக்தயெ வித்யாந்யாஶில்பநைவுணம்', 3 'தஜ்ஜ்ஞாநஜ்ஞாந ஶதொதாந்யதுக்தம்', 4 'ஊதஜ்ஜ்ஞாநதிதிப்ரோக்தஜ்ஞாநம்யதொதாந்யதா' என்றிவை முதலியவைகளினால் மற்ற ஜ்ஞானங்கள் அஜ்ஞானத்திற்கு ஸமமென்று சொல்லியிருக்கிற படியினால் இவ்விடத்தில் 'புத்தி என்னும் பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'என்னை யடையவேண்டுமென்று' என்றாரம்பித்து. 'க்ருத்ய' என்னும் பதமும் மோக்ஷத்திலாசை யுடையவர்களுக்குச் செய்யவேண்டிய கார்யங்களைப்பற்றியது. அதையே 5 'தத்கர்மயபஷ

1 முதல் ஷட்கம்74-ம்பக்கம் 1-வது-புட்நோட்டைப்பார்க்க.

2 விஷ்ணுபுராணம்-1-19-41. ஸா-அது, வித்யா-வித்யை, யா-எது, விமுக்தயே-மோக்ஷத்திற்குக்காரணமாகிறதோ அந்யா-மற்ற-வித்யா-வித்தையானது, சில்பனைபுணம்-சித்ர வேலையின் ஸாமர்த்தியம்போல.

3 விஷ்ணுபுராணம்-6-5-87. தத்-அந்தப்பரமாத்மாவைப்பற்றிய ஜ்ஞானமே, ஜ்ஞானம்-அறிவு, அத:-அந்யத்-இதைவிடவேறானது, அஜ்ஞானம்-அஜ்ஞானமாக, உக்தம் சொல்லபட்டது.

4 பகவத்கீதை-13-11.

5 விஷ்ணுபுராணம்-1-19-14. தத்-அதுவே, கர்ம-கர்மர், யத்-எது, நபந்தாய-ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாவதில்லையோ. அபாரம்-மற்ற, கர்ம கர்மமா ?, ஆயாஸாய-ஶ்ரமத்திற்குக்காரணம்.

ஸம்பாதிக்கத்தகுந்ததோ அவை எல்லாம் அங்கீகரிக்கப்பட்டதாகும். எது அவனால் செய்யவேண்டியதோ அதெல்லாம் செய்யப்பட்டதாகும். இந்த ம்லோகத்தினால் கீழ்ச்சொல்லிய மாஸ்த்ரங்களினால் உண்டாக்கப் கப்பட்ட புருஷோத்தமன் என்பதைப்பற்றிய ஜ்ஞானமே இவை எல்லா வற்றையும் செய்கிறது, ப்ரத்யக்ஷமாகிய ஜ்ஞானமல்ல என்று சொல்லப் படுகிறது. 20

ஸ்ரீ பகவத் ராமானுஜன் என்னும் உடையவர் அருளிச் செய்த

ஸ்ரீமத் கீதா பாஷ்யத்தில்

பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ உதெ ஹமவதெ ஹாஷ்யகாராய நம:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



வெ௦யாய' என்றிவை முதலியவிடங்களில் சொல்லியிருக்கிற படியினாலும் மற்றவைகளை 'ஆபாஸாயாவஸம்கஜ' என்று நிந்தித் திருக்கிறபடியினாலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகி ருர்—'எது அவனால் செய்யவேண்டியதோ' என்று. கீழ்ப்ரஸ்தா விக்கப்பட்ட அர்த்தமும் அதைப்பற்றிய ஜ்ஞானமும் இவ்விடத் தில் ஸ்தோத்திரம் செய்யவேண்டியது. இவ்விடத்தில் மாஸ்த்ரத் தைச் சொல்லியிருப்பதினால் என்ன ப்ரயோஜனம். அப்படியாகில் முன் ம்லோகத்தோடு புனருக்தி வருகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'இந்த ம்லோகத்தினால்' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது-அர்த்தத்துடன் மாஸ்த்ரத்தை அறிவது 'வனகஸ வெஷா' என்றனுவதிக்கப்படுகிறது. ஆகையினால் அர்த்த ஜ்ஞானத் தைச் சொல்லுவதிலேயே தாத்பர்யம். அதில் மாஸ்த்ரத்தைப்பற்றிச் சொல்லியிருப்பது மாஸ்த்ரம்மாத்திரத்தினால்உண்டாக்கப்படுகிறஜ்ஞா னமும் பலத்தோடு கூடியது என்பதற்காக. 'ஸஸவஜவிக' என்பதும் 'வேஜிரநுவஸ்ராக' என்பதும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது ஆகையினால் புனருக்தியில்லை. ஓ அர்ஜுந, இதைத்தெரிந்துகொண்டு நீயும் க்ருதக்ருத்யனுக ஆய்விடு என்றும் தாத்பர்யம். 20

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான ஸ்ரீமந்நிகமாந்த மஹாதேசிகன்

அருளிச்செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்

பதினைந்தாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீ உதெ நிமஜாஜ உஹாதெஸிகாய நம:



## ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த கீதார்த்த ஸங்க்ரஹம்.

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

𑌅𑌚𑌿𑌨𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌚 𑌚𑍇𑌤𑌨𑌾𑌤𑍍 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 |
𑌵𑍍𑌯𑌾𑌪𑌨𑌾𑌦𑍍𑌭𑌰𑌣𑌾𑌤𑍍 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌦𑌨𑍍𑌯𑌃 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌦𑌿𑌤𑌃 ‖ 19

ப - ரை] 𑌅𑌚𑌿𑌨𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌤𑍍 - அசேதனங்களோடு சேர்ந்துமிருக்கிற, 𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌚 - பரிசுத்தனாயுமிருக்கிற, 𑌚𑍇𑌤𑌨𑌾𑌤𑍍-ஜீவாத்மாவைவிட, 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋𑌤𑍍𑌤𑌮𑌃 பரமாத்மா, 𑌵𑍍𑌯𑌾𑌪𑌨𑌾𑌤𑍍 - வ்யாபரித்திருப்பதினாலும், 𑌭𑌰𑌣𑌾𑌤𑍍 - தரிப்பதினாலும், 𑌸𑍍𑌵𑌾𑌮𑍍𑌯𑌾𑌤𑍍-யஜமானனாக இருக்கையினாலும், 𑌅𑌨𑍍𑌯𑌃-வேறுபட்டவனாக, 𑌪𑌞𑍍𑌚𑌦𑌶𑍋𑌦𑌿𑌤𑌃 – பதினைந்தாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டான். 19

ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹரக்ஷை.

இவ்விடத்தில் '𑌅𑌚𑌿𑌨𑍍𑌮𑌿𑌶𑍍𑌰𑌾𑌦𑍍𑌵𑌿𑌶𑍁𑌦𑍍𑌧𑌾𑌚𑍍𑌚' என்பதினால் தெரிவிக்கக்கூடிய ஸங்கதியை விவரித்துக்கொண்டும், இது க்ஷரம், அக்ஷரம், என்கிற பதங்களுக்கு வ்யாக்யானமென்பதையும் பாஷ்யத்தில் 1 'க்ஷேத்ராத்யாயம் என்று சொல்லப்படுகிற பதிமூன்றாவது அத்யாயத்தில் க்ஷேத்ரமும், க்ஷேத்ரஜ்ஞனுமாகிய ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவர்களின் ஸ்வரூபத்தை நிரூபித்துப் பரிசுத்தனாயும் அளவில்லாத ஜ்ஞானமொன்றையே ஸ்வபாவமாக உடையவனாயுமிருக்கிற ஜீவாத்மாவிற்கு ப்ரக்ருதியிலுண்டான குணங்களில் ஆசையினுடைய பரம்பரையால் உண்டான தேவன், முதலிய ஆகாரங்களையுடையதாக மாறியிருக்கிற ப்ரக்ருதியின் ஸம்பந்தம் அநாதி என்று சொல்லப்பட்டது. அடுத்த அத்யாயத்தில் ஜீவாத்மாவிற்குக் கார்யதசை, காரணதசை, இவ்விரண்டு தசைகளையுமுடைய ப்ரக்ருதியின் ஸம்பந்தம் குணங்களில்ஆசையினால் உண்டாகியது. அதுவும் பகவானாலேயே செய்யப்பட்டது என்று சொல்லிக்குணங்களில் ஆசையுண்டாகும் விதத்தை விஸ்தாரமாக நிரூபித்து அந்தக்குணங்களில் ஆசை நிவ்ருத்திப்பதை முன்னிட்டு ஆத்மாவின் உண்மையை அடைவதும் பகவானிடத்தில் பக்தியினால் உண்டாகிறது என்று சொல்லப்பட்டது. இப்பொழுது அப்படிப் பக்தி செய்யப்படுகிற பகவான் க்ஷரம், அக்ஷரம்,என்று சொல்லப்படுகிற பத்த ஜீவன்

1 கீதாபாஷ்யம்-15-வது அத்யாயத்தின் அவதாரிகை.

முக்த ஜீவன், இவர்களை விபூதியாகவுடையவன் என்பதையும் விபூதியாகிய க்ஷரம், அக்ஷரம், என்கிற இருவகையாகிய ஜீவாத்மாக்களைவிட எல்லாக் கெட்டகுணங்களுக்கும் விரோதமாயும் கல்யாண குணங்களுக்கு இருப்பிடமாகையினாலே மிகவும் உயர்ந்தவனாகையினால் வேறுபட்டவனாகிய பகவான் புருஷோத்தமன் என்பதையும் சொல்ல ஆரம்பிக்கிறார்' என்னுமளவாக வ்யக்தமாகச் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் வ்யாபித்திருப்பது, தரிப்பது, யஜமானனாக இருப்பது இவைகள்
1 '𑌯𑍋 𑌲𑍋𑌕𑌤𑍍𑌰𑌯𑌮𑌾𑌵𑌿𑌶𑍍𑌯 𑌬𑌿𑌭𑌰𑍍𑌤𑍍𑌯𑌵𑍍𑌯𑌯 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃' என்று சொல்லப்பட்டதுகள். இப்படி முக்யமாகச்சேதனம், அசேதனம், ஈச்வரன், ஆகிய மூன்று தத்வங்களையும்பற்றிய நிரூபணம் முறையே மூன்று அத்யாயங்களினால் செய்யப்பட்டது என்றறிய வேண்டியது.

பதினைந்தாவது அத்யாயம் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.





ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன் அருளிச்செய்த

## கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டு.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

மூவெட்டிலு மதில் மோஹமடைந்த வுயிர்களிலும்
நாவெட்டெழுத்தோடு நல்வீடு நண்ணின நம்பரிலும்
மேவெட்டு வண்குண விண்ணோர்களிலும் விசயனுக்குத்
தாவிட்டுலகளந்தான் றன்னை வேறென்று சாற்றினனே. 16

ப - ரை] தாவிட்டு-தாண்டி, தாவு - தாண்டுதல், அதை, இட்டு-செய்து, அன்றிக்கே,தா என்கிற சப்தத்தை, இட்டு-சொல்லி யாசகம்செய்து,உலகு-லோகங்களை, அளந்தான்-அளந்தவனாகிய ஸ்ரீ கிருஷ்ணன்,மூவெட்டிலும்-இருபத்திநான்கு தத்வங்களாகிய ப்ரக்ருதியிலும், அதில் – அவைகளின் நடுவே, மோஹம் - மயக்கத்தை, அடைந்த-அடைந்தவர்களாகிய, உயிர்களிலும் - பத்தஜீவர்களைக் காட்டிலும், நாவெட்டெழுத்தோடு—நா-நாக்கிலிருக்கிற, எட்டெழுத்தோடு - அஷ்டாக்ஷரத்தோடு, நல்வீடு - நல்லதாகிய மோக்ஷத்தை, நண்ணின - அடைந்தவராகிய, நம்பரிலும் - விஶ்வாஸத்தையுடையவர்களிலும், அதாவது பக்திமான்களிலும்,மேவெட்டு வண்குண—மேவு-நித்யமாக இருக்கிற, எட்டு-எட்டுவிதங்களான, வண் - விலக்ஷணங்களான, குண - குணங்களையுடைய, விண்ணோர்களிலும்-நித்ய ஸூரிகளைப் பார்க்கிலும், தன்னை—புருஷோத்தமனாகிய தன்னை, வேறு - வேறுபட்டவன் என்று, விசயனுக்கு அர்ஜுநனுக்கு, சாற்றினன் - சொன்னான். 16

*'தாவிட்டுலகளந்தான்' என்பதினால் ஶ்ருதிகளில் சொல்லியபடி லோகங்களை அளந்து தன்னதாக்கிக்கொண்டமை சொல்லப்படுகிறது. இத்தால் 1 'உண்டுமுமிழ்ந்துங் கடந்து மிடந்துங் கிடந்துநின்றுங் கொண்டகோலத்தொடு வீற்றிருந்து மணங் கூடியுங் கண்டாவாற்றாற்றன தேயுலகென நின்றான் தன்னை' என்கிறபடியே எல்லா லோகங்களுக்கும் தானே யஜமானனென்பது சொல்லப்பட்டது. தானிரப்பாளனாகி என்பதினால் 2 'உவந்தவுள்ளத்தனாய்' என்கிறபடியே தேவதைகள், அஸுரர்கள், மற்றெல்லா ப்ராணி வர்க்கங்கள், எல்லா வற்றிலும்,*

1 திருவாய்மொழி-4-5-10. 2 அமலனாதிப்பிரான்-2.

போதுவாகத் திருவுள்ள முகந்திருக்கிறபடியினால் மஹாபலி சக்ரவர்த்தியைத் தலையறுத்து ராஜ்யத்தைக் கைக்கொள்ளவில்லை. ஆகையினால் எல்லாவற்றையும் ரக்ஷிப்பவனும் ஸ்வாமியும் தானே என்றேற்படுவதினாலும் அதினாலேயே திருமேனியில் ஏகதேசமாகிய திருவடி லோகமெங்கும் வ்யாபரித்திருந்ததினாலும் 1 'வ்யாபநாத்ரக்ஷணாத் ஸ்வாம்யாத்' என்கிற மூன்று மேற்பட்டது. மேலும் உலகளந்தவ்ருத்தாந்தத்தினால் ப்ரம்மாமுதலிய மற்றெல்லாச் சேதனர்களை விடத்தான் புருஷோத்தமன் என்பது 2 'குறைகொண்டு நான்முகன் குண்டிகை நீர்பெய்து மறைகொண்ட மந்திரத்தால் வாழ்த்திக் கறைகொண்ட கண்டத்தான் சென்னிமேலேறக்கழுவினான் அண்டத்தான்சேவடியையாங்கு' என்கிறபடியே ப்ரம்மா திருவடி விளக்குவதினாலும், ருத்ரன் ஸ்ரீ பாததீர்த்த ஸேவை செய்ததினாலு மேற்படுகிறது என்றும் திருவுள்ளம். ஆகையினாலேயே 3 'ஓங்கியுளகளந்த வுத்தமன்' என்றருளிச் செய்யப்பட்டது. 'மூவெட்டிலும்' என்பதினால் இருபத்து நாலு தத்வங்களாய்ப் பிரிந்திருக்கிற ப்ரக்ருதி சொல்லப்படுகிறது. ஶரீரத்தில் இருபத்திநாலு தத்துவங்களில் ஐந்து தன்மாத்திரங்க ளில்லாமற்போன போதிலும் அவைகளின் கார்யங்கள் இருக்கிறபடியினால் அவைகளெல்லாம் ஶரீரமாகச் சொல்லப்படுகிறது. அன்றிக்கே 4 'மஹாபூதாந்யஹங்காரோ புத்திரவ்யக்தமேவ ச। இந்த்ரியாணி தஶைகம் ச பஞ்ச சேந்த்ரியகோசரா:॥' என்று சொல்லப்பட்ட பஞ்ச பூதங்கள் ஐந்து, ப்ரக்ருதி, மஹான், அஹங்காரம், பதினொரு இந்த்ரியங்கள், அந்த இந்த்ரியங்களாலறியப்படுகிற ஶப்தம் முதலியவைகள் ஐந்து, ஆக இருபத்திநாலும் சொல்லப் படுகிறதாகவுமாம். அப்படியே கீதாபாஷ்யத்தில் இந்த இருபத்தி நாலு தத்துவங்களையும் எடுத்து 'ஐதி க்ஷேத்ராரம்பகாணி தத்வாநி (என்றிவைகள் ஶரீரத்தை யடைந்திருக்கும் வஸ்துக்கள்)' என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. அதில் மோஹமாவது ஶரீரத்தில் ஆத்மாவென்கிற மோஹமும், ஶப்தம் முதலியவைகளில் இவைகளே போகயம் என்கிற மோஹமும் 'அடைந்த' என்பதினால் 5 'காரணம் குணஸங்கோஸ்ய' என்று சொல்லப்பட்டபடியே அநாதிகர்மத்தினாலுண்டாகிய குணங்களில் பற்றுதலினால் நடுவில்உண்டானதே யொழிய இவைகள் ஸ்வபாவத்திலேற்பட்டதல்ல என்றேற் பட்

---

1 கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகம்-19.

2 நான்காம் திருவந்தாதி-9. 3 ஆண்டாள் திருப்பாவை-3.

4 பகவத்கீதை-13-5, 5 பகவத்கீதை-13-21.

டது. இத்தால் 1 'க்ஷரஸ்ஸர்வாணி பூதாநி' என்கிற விடத்திலும், 'சவிநிஸ்ருதாஸ' என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்திலும் அசேதனங்களும் அவைகளோடு சேர்ந்திருக்கிற பத்த ஜீவர்களும் சேர்த்துச் சொல்லப் படுகிறார்கள் என்பது 'மூவெட்டிலும்' என்றிங்கு தனித்தெடுத்திருப் பதினால் ஏற்பட்டது. 'நாவெட்டெழுத்தோடு' என்பதினால் 2 'ஸங்கீர்த்ய நாராயணசப்தமாத்ரம்', 3 'வாயினால் நமோநாரணா வென்று' 4 'ஆக்ருஹ்ய ப்ரஸத்வவாந்', இத்யாதிகளில் படியே திருவஷ்டாக்ஷரத்தை உச்சரிப்பது மாத்திரம் மோக்ஷபர்யந்தமாகும் என்று தாத்பர்யம். அன்றிக்கே நா - நாக்கிலிருக்கிற, வெட்டெழுத்தோடு - வெட்டக் கூடிய எழுத்தோடு, அதாவது தன்னுடன் ஸம்பந்தத்தை அறுக்கிற 'நம:' என்கிற எழுத்தொடு என்று தாத்பர்யமாகவுமாம். இத்தால் அந்த 'நம:' என்பதினால் 5 'நமஸாராத்மஸம்ப்ரோக்த ஷட்குணாத்மகம்' என்கிறபடியே ப்ரபத்தி சொல்லப்படுகிற தாத்பர்யம். அது அங்கமாகவுமாம், ஸ்வதந்த்ரமாகவுமாம். ஆகையினால் பக்தி, ப்ரபத்தி, இரண்டும் இங்கே சொல்லப்பட்டன. 'நல்வீடு' என்பதினால் கைவல்யம் விலக்கப்பட்டது. இது 'விமுக்தாஸ' என்கிற இடத்தில் 'வி' என்னுமுபஸர்க்கத்திலும் ஸித்தம். 'நம்பரிலும்' என்பதினால் பகவானிடத்தில் பக்தியுடையவர்கள், அதாவது பரிபூர்ண பகவதனுபவத்தினாலுண்டாக்கப் பட்ட கைங்கர்ய பர்யந்தமான ப்ரீதியை யுடையவர்கள். அன்றிக்கே 'நம்பர்' ப்ரீதி செய்யத்தக்கவர் என்றாய் பகவானால் 6 'ஸ ச மம ப்ரிய:' என்கிற படியே ப்ரீதி செய்யத் தகுந்தவர்கள் என்றர்த்தமாகவுமாம். 'மேவெட்டு வண்குணம்' என்பதற்கு முக்தர்களைப் போல் சில காலம் ப்ரகாசியாம லிருந்து பிறகு ப்ரகாசத்தை யடையாமல் எப்பொழுதும் ப்ரகாசத்தை யடைந்த அபஹத பாப்மத்வம், முதலிய எட்டு குணங்களை யுடையவர்கள் என்றர்த்தம். 'விண்ணோர்கள்' என்பதினால் பரமபதத்தையே தங்களுக்கு நிரூபமாக வுடையவர்கள். அதாவது பகவான் 'வானிளவரசாய்', பரம பதத்திற்குத் தாங்களே கடகர்களாய் பகவானையும் நியமிக்கக் கூடியவர்களான மேன்மை சொலப்படுகிறது. 7 'வல்லர் வானமாளவே' என்றும், 'வானவர் நாடென்றும்' இறே சொல்லப்படுகிறது. இத்தால் 'விமுக்தாஸ' என்கிற விடத்திலிருக்கிற 'சகாரம்' நித்ய ஸூரிகளையும் சேர்த்துக் கொள்ளுகி

---

1 பகவத்கீதை-15-16.
2 ஸ்ரீஸஹஸ்ரநாமம்.　　3 பெரியாழ்வார் திருமொழி-4-5-1.
4 விஷ்ணுபுராணம்.　　5 பாஞ்சாரத்ரஸம்ஹிதை.
6 பகவத்கீதை-7-17.　　7 திருச்சந்தவிருத்தம்.

து. 'ஸூரிபூ⁴ய꞉' என்னும் பதமும் முக்தர்களையும் நித்யர்களையும்
சால்லுகிறதென்று வ்யாக்யாதமாயிற்று. அன்றிக்கே 1 'ஸுக்ஷராஜ
ரிஷொத்தமா꞉' என்கிற இடத்தில் முக்தர்களைவிட உத்க்ருஷ்டர்கள் நித்
ஸூரிகள். அவர்களைவிட உத்கிருஷ்டதமன் பகவான் என்பதினால்
த்ய ஸூரிகளைவிட மேற்பட்டவன் என்பதும் வ்யஞ்ஜிதமாயிற்று.
செயனுக்கு' என்பதினால் 'அநக⁴, பா⁴ரத' என்று சொல்லப்பட்ட
திகாரபூர்த்தி சொல்லப்படுகிறது. 16

சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



# ஸ்ரீ பகவத்கீதை.

## பதினாறாவது அத்யாயம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய வாஸுதேவாய நம:.

ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:.

ஸ்ரீ மதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.

பா-அ] கீழ் மூன்றத்யாயங்களினால் ஒன்று சேர்ந்தும் பிரிந்து மிருக்கிற ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகளின் உண்மையும், அவைகள் சேருவதற்கும், பிரிவதற்கும், ஸத்வம், முதலிய குணங்களில் ஆசையும், அதில்லாமையும், காரணமென்பதும், எல்லாவிதமாகவும் இருந்துகொண்டிருக்கிற ப்ரக்ருதி, ஜீவாத்மா, இவைகள் பகவானுக்கு விபூதிகளென்பதும், இவைகளை விபூதியாகவுடைய பகவான் விபூதிகளாகிய அசேதந வஸ்துக்

தா] மூன்றாவது ஷட்கத்திற்கு மும்மூன்று அத்யாயங்களுள்ள இரண்டு பாகம் உண்டாயிருக்கும் விதம் முன்பே நம்மால் விவரிக்கப்பட்டது. அதில் மூன்றத்யாயங்களுள்ள பிரிவைக் காட்டிக் கொண்டு கீழ் மூன்றத்யாயங்களோடு ஸங்கதியுடையதென்று பதினாறாவது அத்யாயத்திற்கு அவதாரிகை சொல்லுவதற்காக மூன்று தத்துவங்களையும் நிரூபித்திருக்கிற பதிமூன்று முதல் மூன்று அத்யாயங்களின் அர்த்தத்தை க்ரமமாக அனுவாதம் செய்கிறார்—'கீழ் மூன்றத்யாயங்களினால்' என்றாரம்பித்து. 1 'இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரம்' என்று முன் அத்யாயத்தின் கடைசி ஶ்லோகத்தில் ஶாஸ்த்ரம் ப்ரஸ்தாவிக்கப்பட்டது. 'அநக பாரத' என்னும் பதங்களினால் அதில் அதிகாரி குறிக்கப்பட்டான். அவனை 2 'மா ஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ' என்று மேலே சொல்லப்படுகிறான். அவ்விடத்தில் கீழ்ச்சொல்லிய அர்த்தங்களைப் பற்றிய நிஶ்சயம் ஶாஸ்த்ரங்களினால் உண்டாக வேண்டியதாகையினால் புருஷன் ஶாஸ்த்ரங்களுக்குக் கீழ்ப்படிந்திருக்க வேண்டியதென்பது இப்பொழுது சொல்ல வேண்டியது. அதுவும் 3 'தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ । ஜ்ஞாத்வா ஶா

1 பகவத்கீதை - 15 - 20. 2 பகவத்கீதை - 16 - 5. 3 பகவத்கீதை-16-24.

களைப்பார்க்கிலும் பத்தன், முக்தன், என்கிற இரண்டு தசைகளையுடைய சேதன வஸ்துக்களைப்பார்க்கிலும், மாறுதல்களை யடையாத ஸ்வபாவத்தை உடையவனாகையினாலும் இவைகளை வ்யாபித்திருப்பதினாலும், இவைகளைத் தரிப்பதினாலும் இவைகளுக்கு யஜமானனாகையினாலும், இவைகளைவிட வேறு வஸ்துவாகையினால் புருஷோத்தமன் என்று அவனுடைய உண்மையான ஸ்வபாவமும் சொல்லப்பட்டது. பிறகு கீழ்ச் சொல்லப்பட்ட எல்லாஅர்த்தங்களையும்உறுதிப்படுத்துவதற்காகஶாஸ்த்ரங்களுக்குக் கீழ்படிந்திருக்க வேண்டுமென்று சொல்லுவதற்காக ஶாஸ்த்ரத்திற்குக் கீழ்படிந்திருப்பவர் அதற்கு விரோதமாக இருப்பவர்களாகிய

---

*ஞாத்வாநிதிஜக்ஞாநாநு புவந்தி ஸிஹ்ரா ஹதா ॥' என்றிந்த அத்யாயத்தின் கடைசியில் சொல்லப்படுகிறது. அதற்காக முன் அத்யாயத்தின் கடைசி ஶ்லோகத்தில் குறிக்கப்பட்ட அதிகாரி விஶேஷங்களைப் பிரித்துக் காட்டுவதற்காக இந்த அத்யாயத்தின் முதலில் தேவர்கள், அஸுரர்கள், இவர்களின் பிரிவைச் சொல்லியிருக்கிறது. இந்த அபிப்ராயத்தினாலேயே ஸங்க்ரஹ ஶ்லோகத்தில்* 1 *'தேவாஸுரவிபாகோக்தி பூர்விகா ஶாஸ்த்ர வஶ்யதா । தத்வாநுஷ்டாந விஜ்ஞாநஸ்தேமனே ஷோடஶ உச்யதே ॥' என்று சொல்லப்பட்டது. இவை எல்லாவற்றையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து. 'கீழ்ச்சொல்லப்பட்ட எல்லா அர்த்தங்களையும்' என்றது மேலே சொல்லப்போகிற அனுஷ்டானங்களைப் பற்றிய பகுத்தறிவையும் குறிக்கிறது. கீழ்ச் சொல்லிய அர்த்தத்தின் ஒரு பாகத்தை நிரூபிக்கிறதாகையினால் அதைத் தனித்துச் சொல்லவில்லை யாகவுமாம். ஸங்க்ரஹ ஶ்லோகத்தில்சொல்லப்பட்ட அனுஷ்டானமும் இந்தப்பதத்தினால் உள்ளடக்கிச் சொல்லப்பட்டது. விடத்தகுந்தது, அங்கீகரிக்கத் தகுந்தது, இவைகளின் ஸ்வபாவத்தைச் சொல்லியிருப்பது விடவேண்டியவைகளை விடுவதற்காகவும், அங்கீகரிக்க வேண்டியவைகளை அங்கீகரிக்கிறதற்காகவும். ஆகையினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களுக்குக் கீழ் படிந்து நடக்கவேண்டுமென்று சொல்லுவதற்காக' என்று. ஶாஸ்த்ரங்களுக்குக் கீழ்படிந்து நடக்க வேண்டுமென்று சொல்லுவதற்காக தேவர்கள் அஸுரர்கள், இவர்களின் பிரிவைச் சொல்லியிருப்பது எந்த விஷயத்தில் உபகாரம் செய்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரத்திற்குக் கீழ் படிந்திருப்பவன்' என்றாரம்பித்து. பகவானுடைய உத்தரவல்லவோ ஶாஸ்த்ரம். அதை யனுஸரிக்கிற தேவதைகள் அவனால் அனுக்*

---

1 *கீதார்த்த ஸங்க்ரஹ ஸ்லோகம் - 20.*

தேவர்கள், அஸுரர்கள், இவர்களின் ஸ்ருஷ்டியின் பிரிவை பகவான் சொல்லுகிறார்—

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍁𑌵𑌾𑌚 ॥

𑌶𑍍𑌰𑍀𑌭𑌗𑌵𑌾𑌨𑍍 - ஸ்ரீபகவானாகிய க்ருஷ்ணன், 𑌉𑌵𑌾𑌚 - சொன்னார்.

𑌅𑌭𑌯𑌂 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 ।
𑌦𑌾𑌨𑌂 𑌦𑌮𑌶𑍍𑌚 𑌯𑌜𑍍𑌞𑌶𑍍𑌚 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌸𑍍𑌤𑌪 𑌆𑌰𑍍𑌜𑌵𑌮𑍍 ॥ 1
𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 𑌸𑌤𑍍𑌯𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌸𑍍𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌰𑌪𑍈𑌶𑍁𑌨𑌮𑍍 ।
𑌦𑌯𑌾 𑌭𑍂𑌤𑍇𑌷𑍍𑌵𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂 𑌹𑍍𑌰𑍀𑌰𑌚𑌾𑌪𑌲𑌮𑍍 ॥ 2
6) 𑌤𑍇𑌜𑌃 𑌕𑍍𑌷𑌮𑌾 𑌧𑍃𑌤𑌿𑌃 𑌶𑍌𑌚𑌮𑌦𑍍𑌰𑍋𑌹𑍋 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾 ।
𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 𑌸𑌂𑌪𑌦𑌂 𑌦𑍈𑌵𑍀𑌮𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 𑌭𑌾𑌰𑌤 ॥ 3

ப-ரை] 𑌭𑌾𑌰𑌤 - அர்ஜுந, 𑌅𑌭𑌯𑌂 - பயமில்லாமை, 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌸𑌂𑌶𑍁𑌦𑍍𑌧𑌿𑌃 – ஸத்வகுணத்தின் சுத்தி, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌯𑍋𑌗𑌵𑍍𑌯𑌵𑌸𑍍𑌥𑌿𑌤𑌿𑌃 - ஜ்ஞானயோகத்தில் நிலையாகவிருக்கை, 𑌦𑌾𑌨𑌂 - கொடுப்பது, 𑌦𑌮𑌃 - மனதையடக்குதல், 𑌯𑌜𑍍𑌞𑌃 - யாகம், 𑌸𑍍𑌵𑌾𑌧𑍍𑌯𑌾𑌯𑌃 - வேதமோதுதல், 𑌤𑌪𑌃 - தபஸ்ஸு, 𑌆𑌰𑍍𑌜𑌵𑌂 - கபடமில்லாமை, 𑌅𑌹𑌿𑌂𑌸𑌾 - ஹிம்ஸைசெய்யாமை, 𑌸𑌤𑍍𑌯𑌂 - உண்மை, 𑌅𑌕𑍍𑌰𑍋𑌧𑌃 - கோபமில்லாமை, 𑌤𑍍𑌯𑌾𑌗𑌃 - விட்டுவிடுதல், 𑌶𑌾𑌨𑍍𑌤𑌿𑌃 - வெளியிந்த்ரியங்களை யடக்குதல், 𑌅𑌪𑍈𑌶𑍁𑌨𑌂- கோழ்ச்சொல்லாமை, 𑌭𑍂𑌤𑍇𑌷𑍁 - ப்ராணிகளிடங்களில், 𑌦𑌯𑌾 - கருணை, 𑌅𑌲𑍋𑌲𑍁𑌪𑍍𑌤𑍍𑌵𑌂 – விஷயங்களில் ஆசையில்லாமை, 𑌮𑌾𑌰𑍍𑌦𑌵𑌂-ம்ருதுவான ஸ்வபாவம், 𑌹𑍍𑌰𑍀𑌃 - கெட்டகார்யங்களைச் செய்வதில் வெட்கம், 𑌅𑌚𑌾𑌪𑌲𑌂 - இந்த்ரியங்கள் சலிக்காமை, 𑌤𑍇𑌜𑌃 - மற்றவர்களால் அவமானம் செய்யமுடியாமை, 𑌕𑍍𑌷𑌮𑌾–பொறுமை, 𑌧𑍃𑌤𑌿𑌃 - தைர்யம், 𑌶𑍌𑌚𑌂 - பரிசுத்தி, 𑌅𑌦𑍍𑌰𑍋𑌹𑌃 - த்ரோகம் செய்யாமை, 𑌨𑌾𑌤𑌿𑌮𑌾𑌨𑌿𑌤𑌾- அதிக கர்வமில்லாமை (இவைகள்), 𑌦𑍈𑌵𑍀𑌂 - தேவதைகளினுடைய, 𑌸𑌂𑌪𑌦𑌂 - ஸம்பத்தை, 𑌅𑌭𑌿𑌜𑌾𑌤𑌸𑍍𑌯 - உத்தேசித்துப்பிறந்தவனுக்கு, 𑌭𑌵𑌨𑍍𑌤𑌿 - உண்டாகின்றன. 1-3

---

ரஹிக்கப்படுகிறார்கள். ஆகையினால் அப்படியேயிருக்க வேண்டும். அவனுடைய உத்திரவை மீறி நடக்கிற அஸுரர்கள் அவனால் நிக்ரஹிக்கப்படுகிறார்கள். ஆகையினால் அப்படி யிருக்கக் கூடாது என்று தாத்பர்யம். ஸ்வபாவத்திலேயே விரோதம் ஏற்பட்டிருக்கிறதென்று தெரிவிப்பதற்காக மேலே சொல்லப் போகிற ஸ்ருஷ்டி யென்னும்பதத்தை இங்கே சொல்லியிருக்கிறது. பிரிவாவது இவ்விடத்தில்குணங்கள்க்ரியைகள்

பா] இஷ்ட வஸ்துக்கள் பிரிவதும், அநிஷ்ட வஸ்துக்கள் சேருவதுமாகிய துக்கத்திற்குக் காரணத்தைப் பார்ப்பதினால் உண்டாகிய துக்கம் பயம், அதில்லாமைஅபயம். ஸத்வஸம்ஶுத்தி:-மனது ரஜோ குணம், தமோகுணம், இவைகளோடு ஸம்பந்தப்படாமை. ஜ்ஞாநயோகவ்யவஸ்திதி:-ப்ரக்ருதியை விட்டுப்பிரிந்திருக்கிற ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை பகுத்தறிவதில் நிஷ்டையுடையவனாயிருக்கை. தாநம் - ந்யாயமாக ஸம்பாதிக்கப்பட்ட

முதலிய மேலே சொல்லப்போகிறவைகளினால் 1 'பயாஶோகௌ ஶயம் ஶோகம்' என்று மேலே சொல்லுகிறபடியினால் தமோகுணத்தின் ஸ்வபாவமல்லவோபயம். அது ஸத்வ குணம் மேலிட்டவனாகிய தேவஸ்ருஷ்டியில் பிறந்தவனுக்கு உண்டாகாது என்கிற அபிப்ராயத்தினால் 'அபயம்' என்பதை நிரூபிப்பதற்காக அதற்கு எதிர் நடையாகிய பயத்தின் ஸ்வரூபத்தை நிரூபிக்கிறார்—'இஷ்ட வஸ்துக்கள்' என்றாரம்பித்து. இது ஸ்வரூபத்தைச் சொல்லி யிருக்கிறது. பயத்தின் லக்ஷணமல்ல. வரப்போகிற துக்கத்திற்குக்காரணத்தைப் பார்ப்பதினா லுண்டான துக்கமே பயம். 'ஸத்வஸம்ஶுத்தி:' என்கிற இடத்தில் ஸத்வகுணத்திற்கு ஆதாரமாகிய மனது இவ்விடத்தில் ஸத்வம் என்னப்படுகிறது. அதற்கு ஸம்சுத்தியாவது நல்லபரிசுத்தி, அதாவது எல்லாத் தோஷங்களும் நிவ்ருத்தித்தல். அதில் கிழங்காகிய ரஜோகுணம், தமோகுணம், நிவ்ருத்திப்பதினால் காமம், ராகம், அஸூயை, வஞ்சனை, முதலிய எல்லாத்தோஷங்களும் நிவ்ருத்தித்து விடுகின்றன, என்றபிப்ராயத்தில் வைத்துக் கொண்டு சொல்லுகிறார்—'ரஜோகுணம், தமோகுணம், இவைகளோடு' என்றாரம்பித்து. 'ஜ்ஞாநயோக' என்னும் பதம் இவ்விடத்தில் கர்மயோகம் முதலியவைகளை விலக்குவதற்காக வல்ல, அவைகளும் ஸத்வகுணம் மேலிட்டவர்களால் அனுஷ்டிக்கத் தக்கவைகளாகையினால் ஆகையினால் கர்மயோகம், ஜ்ஞான யோகம், பக்தியோகம், இவைகளுக்குப் பொதுவாயும், ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டதாயு மிருக்கிற பரிசுத்தமான ஜீவாத்மாவின் பகுத்தறிவு இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ப்ரக்ருதியை விட்டுப் பிரிந்திருக்கிற' என்றாரம்பித்து. ஜ்ஞானமே இவ்விடத்தில் உபாயமாகையினால் யோகம் என்றுசொல்லப்படுகிறது. அன்றிக்கே ஶாஸ்த்ரங்களினால் உண்டாக்கப்படுகிற ஜ்ஞானத்தினால் உண்டாகிய எப்பொழுதும் நினைத்துக்கொண்டிருத்தல் ஜ்ஞான யோகமாகவுமாம். 'ந்யாயமாக ஸம்பாதிக்கப்பட்ட' என்பது முதலியது தானத்திற்கு ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற ஸ்வரூபத்தைக் காட்டியிருக்கிறது. இப்படி இல்லாமல் செய்வது ராஜஸம் என்றும், தாமஸ

1 பகவத்கீதை - 18 - 35

பொருளை நல்லபாத்திரத்தில் கொடுப்பது. தம:-மனதிற்குண்டானவிஷயங்களில் ப்ரவ்ருத்திக்கும் ஸ்வபாவத்தை நிவ்ருத்தி செய்ய அப்யாஸம் செய்தல். யஜ்ஞ:-பலத்திலாசையில்லாமல் பகவானுடைய ஆராதனமாக மஹாயஜ்ஞம் முதலியவைகளை அனுஷ்டானம்செய்தல். ஸ்வாத்யாய: – எல்லா விபூதிகளையுமுடைய பகவானையும், அவனையாராதனம் செய்யும் விதத்

---

தையும் சொல்லுகிற வேதத்தை யப்யஸித்தல் என்று பொருள். இங்கு 'ஸ்வாத்யாய'

ஸம் என்றும் சொல்லப்போகிறபடியினால், இதுவும் தன்னுடைய ஐஶ்வர்யத்திற்குத்தக்கபடி என்று நினைத்துக்கொள்ளுவது. 'தம:' ஆவது அடக்குதல், அதுவும் மனதைப்பற்றியது. மற்ற ஸந்தர்ப்பங்களிலேற்பட்டிருக்கிறகெட்டவழியிலிருந்து திருப்புதல், என்று சொல்லுகிறார்—'மனதின்' என்றாரம்பித்து. வெளியிந்த்ரியங்களை யடக்குவதை 'ஶாந்தி:' என்று மேலே சொல்லப்போகிறார். இத்தால் சிலர் இந்தப் பதங்களுக்குமாறி அர்த்தங்களைச் சொல்லியிருப்பது நிராகரிக்கப்பட்டது. 1 'யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம்' என்று அஸுரர்களின் யஜ்ஞங்களைப்பற்றி மேலே சொல்லப்போகிற படியினால் இங்கு மோக்ஷத்தைச் சொல்லும் ஸந்தர்ப்பத்தில் சொல்லப்படுகிற ஸாத்விகமாகிய யஜ்ஞத்தின் விஶேஷத்தைச்சொல்லுகிறார்—'பலத்தில் ஆசையில்லாமல்' என்றாரம்பித்து. நித்யங்கள், நைமித்திகங்கள், எல்லாவற்றையும் குறிப்பதற்காக இவ்விடத்தில் 'யஜ்ஞ' என்னும் பதம் சொல்லியிருக்கிறது என்று நினைத்து 'முதலியவைகளை' என்று சொல்லப்பட்டது. தாழ்ந்த தேவதைகளைப்பற்றியதாயும் அல்பங்களான ப்ரயோஜனங்களையுடைய காம்ய கர்மங்களை விதிக்கிறதாயுமிருக்கிற வேதபாகம் 'யாவாநர்த்த உதபாநே' என்றுசொல்லியிருக்கிற ந்யாயத்தினால் மோக்ஷத்திலாசையுடையவர்களால் அப்யாஸம் செய்யத்தக்கதல்லவே என்றுபேக்ஷித்துக்கொண்டு அதிலும் இந்த ஸந்தர்ப்பத்தினாலேற்பட்டதாகிய இதரங்களான மூன்று புருஷார்த்தங்களை ஆசைப்படுகிறவர்களால் செய்யப்படுகிற வேதாப்யாஸத்தைவிட வ்யத்யாஸத்தைச்சொல்லுகிறார்—'எல்லா விபூதிகளையுமுடைய' என்றாரம்பித்து. 2 'எல்லா வேதங்களும் எந்தப் பகவானுடைய திருவடிகளைச் சொல்லுகின்றனவோ' என்றும், 3 'எல்லா வேதங்களும் எந்தப் பகவானிடத்தில் ஒன்று சேருகின்றனவோ' என்று அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லி யிருக்கிற விதமாக அனுஸந்தானம் செய்துகொண்டு அத்யயனம் செய்கிறவனுக்கு உபநிஷத்தை அத்யயனம் செய்யவேண்

1 பகவத்கீதை - 16 - 17
2 கடவல்லீ - 12 - 15
3 யஜுர்வேதம், ஆரண்யகம் - 3 - 11 - 1

தையும் சொல்லுகிறது எல்லாவேதமும் என்று அநுஸந்தானம் செய்து கொண்டு வேதாப்யாஸம் செய்வதில் நிஷ்டையுடையவனா யிருக்கை. தபஃ-க்ருச்ரம்,சாந்த்ராயணம்,த்வாதசி உபவாஸம்,முதலியவைகளாயும்,

டும் என்கிற விதிக்குள்ளடங்கினதாகிய எல்லாம் ப்ரணவம், அஷ்டாக்ஷரம், ஷடக்ஷரம், த்வாதஶாக்ஷரம், நிஷத், உபநிஷத், இவைகளை அப்யாஸம் செய்வதைப்போலவே என்றபிப்ராயம். இத்தால் 1 'மற்றவார்த்தைகளை விட்டு விடுங்கள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் விதித்திருப்பதும் இதைத் தவிர மற்றவைகளைச் சொல்லுகிறதென்று ஸ்தாபிக்கப்பட்டது. அதுவுமல்லாமல் 1 'ப்ரணவத்தைக்கொண்டே ஆத்மாவை த்யானம் செய்யவேண்டும்' என்றர்த்த முள்ள வாக்யமிருப்பதினால் த்யானம் செய்யும் பொழுது ப்ரணவமே அங்கீகரிக்கத் தக்கது. என்று சொல்லுவதில் தாத்பர்யமாகவுமாம். 'ஸ்வேந அத்யயதே' (தன்னால் அத்யயனம் செய்யப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'ஸ்வாத்யாயஃ' என்பது, தன்னுடைய சாகைகள். அப்படி யிருந்தபோதிலும் 2 'நஹ்யேகம் வஸ்து த்ரிர் விதீயதே' என்று ந்யாயமிருக்கிற படியினாலும், எல்லாச் சாகைகளிலும் தொடர்ச்சியாகச்சொல்லியிருக்கிற அர்த்தத்தைத் தெரிந்து கொள்ள வேண்டுமாகையினாலும், ஜபம் செய்ய வேண்டுமென்று விதித்திருப்பது எல்லாச் சாகைகளுக்கும் பொதுவாகையினாலும் 'வேதாப்யாஸம் செய்வதில்' என்று பொதுவாகச் சொல்லப்பட்டது. ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி போகங்களைச் சுருக்கிக் கொள்ளுதல் தபஸ்ஸு என்று லக்ஷணம் ஏற்பட்டிருப்பதினால் அதின் விசேஷங்களை எடுத்துக் காட்டுகிறார்—' க்ருச்ரம் ' என்றாரம்பித்து. 3 'ஏகபக்தேந நக்தேந ததைவாயாசிதேந ச உபவாஸேந தாநேந ந நிர்த்வாதசிகோ பவேத்' ' என்றிவை முதலிய விடங்களில் விதிக்கப்பட்ட த்வாதசியில் பகவானை யாராதிப்பதற்காக ஏகாதசியில் உபவாஸ மிருத்தல் 'த்வாதசிஉபவாஸம்' என்று சொல்லப்பட்டது. அன்றிக்கே திதிகளில் செய்யவேண்டிய வ்ரதங்களுக்குள் த்வாதசிஉபவாஸமும் சொல்லப்பட் டிருக்கிறது. 'முதலிய' என்பதினால் மூன்று கா

1 முண்டகோப நிஷத் - 2 - 56.

2 ஒரு வஸ்துவைக் குறித்து ஶாஸ்த்ரங்களில் விதிக்கப் படுகிறதில்லை.

3 அத்ரி ஸ்ம்ருதி - 1 - 1 - 24. ஏக பக்தேந - ஒரு தரம் ஸாப்பிடுவதையுடைய, நக்தேந - ராத்திரியினாலும், ததைவ - அப்படியே, அயாசிதேனச - யாசிக்காம லிருப்பதினாலும், உபவாஸேந - உபவாஸத்தினாலும், தானேன - கொடுப்பதினாலும், நிர்த்வாதசிகஃ—த்வாதசி வ்ரதத்தை யனுஷ்டிக்காதவனாக, நபவேத் - இருக்கக் கூடாது. அதாவது இவைகளில் ஏதாவதொன்றைக்கொண்டு த்வாதசி வ்ரதத்தை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும் என்று தாத்பர்யம்.

பகவானை ப்ரீதிசெய்விக்கக்கூடியகர்மங்களில்யோக்யதையையுண்டுபண்ணக்கூடியவைகளாயுமிருக்கிற கார்யத்தைச் செய்தல். ஆர்ஜவம்-மனஸ்ஸு, வாக்கு, ஶரீரம், இவைகள் அயலார் விஷயங்களில் ஒரே விதமாக இருக்கை. அஹிம்ஸா-அயலாரைப்பீடிப்பதை விட்டுவிடுதல். ஸத்யம்-தான்பார்த்த விஷயத்தைப்பார்த்ததுபோலவும் ப்ராணிகளுக்கு ஹிதமாகவும் வார்த்தை சொல்லுதல். அக்ரோத:-அயலாருக்குப் பீடையைக் கொடுக்கக்கூடியதாகிய மனதின் விகாரமில்லாமை. த்யாக:-தன்னுடைய நன்மைக்கு விரோதமாகிய வஸ்துக்களை விட்டு விடுதல்.

---

*ணங்களினாலும் செய்யக் கூடியதாயும், மேலே சொல்லப்போகிறவைகளாயு மிருக்கிற எல்லாத் தபஸ்ஸையும் சேர்த்துச் சொல்லி யிருக்கிறது. ரஜோகுணம் மேலிட்டவர்களாலும் தமோகுணம் மேலிட்டவர்களாலும் அனுஷ்டிக்கத் தக்க பலத்திற்காகச் செய்கிற தபஸ்ஸை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'பகவானை ப்ரீதி செய்விக்கக் கூடிய' என்றாரம்பித்து. தபஸ்ஸினால் சுத்தியையடைந்தவனுக் கல்லவோ ஆராதனம் முதலியவைகளில் அதிகார முண்டு. இவ்விடத்தில் மற்றவர்களுக்கும் மூன்று காணங்களும் தன் விஷயத்தில் ஒரே ரூபமாக இருக்கிறதாகையினால் அதைவிலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'அயலார் விஷயகளில்' என்று. கபடம் ஏற்படு மிடத்திலே யல்லவோ அதில்லை என்று சொல்ல வேண்டு மென்று தாத்பர்யம். 'அயலாரைப் பீடிப்பதை விட்டு விடுதல்' என்பது தன்னுடைய பீடையையும் குறிக்கிறது, மூடர்கள் தன்னை ஹிம்ஸித்துக் கொள்ளுவதும்அயலாரைத்தொந்தரவு செய்யவேண்டு மென்கிற அபிப்ராயத்தினா லல்லவா என்று தாத்பர்யம். பார்த்ததைப் போல வார்த்தை சொல்லுவதினாலேயே இவன் உண்மை சொன்னவனாகிறான். ஆனாலும் 1 'ஸத்யம்பூதஹிதம் ப்ரோக்தம்' என்று விதித்திருப்பதினால் 'ப்ராணிகளுக்கு ஹிதமாகவும்' என்று சொல்லப்பட்டது. 'அயலாருக்குப் பீடையைக் கொடுக்கக் கூடியதாகிய' என்பதும் முன் போலவே அறிய வேண்டியது. ஸ்வபாவத்தினாலும், ப்ரயோஜனத்தினாலும், ஶாஸ்த்ரங்களினாலு மேற்பட்டதாகிய தூக்கம், சாப்பிடுதல், மஹாயஜ்ஞம், முதலியவைகள், தண்டம், கமண்டலு, முதலியவைகளை விடுவது ஸம்பவிக்காதாகையினால் சில விஶேஷங்களைப் பற்றியது என்று சொல்லுகிறார்—'தன்னுடைய நன்மைக்கு விரோதமாகிய' என்று 'ஶமம்' என்னும் பதத்தினால் மனஸ்ஸை யடக்குவது சொல்லப்பட்டபடியினால் 2 'ஶாந்தியுடையவனும் தாந்தியுடையவனும்' என்*

---

1 *ப்ராணிகளுக்கு ஹிதமானவார்த்தை ஸத்யமென்று சொல்லப்படுகிறது.*

2 *ப்ரஹதாரண்யகம் - 6 - 4-22.*

ஶாந்தி: — இந்த்ரியங்கள் விஷயங்களில் ஆசைப்படுவதைத்தடுக்க அப்யாஸம் செய்தல். அபைஶுநம் - அயலாருக்குப் பீடையையுண்டாக்கக்கூடிய வார்த்தையை அயலாரிடம் சொல்லாமை. தயாபூதேஷு - எல்லாப்ராணிகள் விஷயங்களிலும் அவைகள் படும் துக்கத்தைப்பொறுக்காமை. அலோலுப்த்வம் - விஷயங்களில் ஆசையில்

---

றர்த்த முள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளிலே போல இவ்விடத்தில் 'ஶாந்தி' வெளி இந்த்ரியங்களைப் பற்றியது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இந்த்ரியங்கள்' என்றாரம்பித்து. 'ஶௌசம்' 'அஹிம்ஸா' முதலிய பதங்களுக்குப் போல எதிர் நடையாகிய குணத்தை நிரூபித்து அதின் வழியாக 'அபைஶுநம்' என்பதற்கு வ்யாக்யானஞ் செய்கிறார்— 'அயலாருக்குப் பீடையை' என்றாரம்பித்து. 'தயா' என்பதினாலேயே ப்ராணிகளைப் பற்றிய தென்பது ஏற்பட்டிருக்கும்பொழுது மறுபடியும் அதை பன்மையாகச் சொல்லி யிருப்பது சத்துருக்கள் சிநேகிதர்கள் முதலிய எல்லா ப்ராணிகளையும் பற்றியிருக்க வேண்டு மென்கிற அபிப்ராயத்தினால். அப்படியே கௌதமரினால் 1 'தயா ஸர்வபூதேஷு க்ஷாந்திரநஸூயா ஶௌசமநாயாஸோ மங்களமகார்ப்பண்யமஸ்ப்ருஹா॥' என்று சொல்லப்பட்டது. வேறு இடத்திலும் 2 'ஸர்வபூததயாபுஷ்பம்' என்றிவை முதலியதும் சொல்லப்பட்டது. இதையே சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகள் விஷயங்களிலும்' என்றாரம்பித்து. 3 'தாபத்ரயேணாபிஹதம் யதேதத் அகிலம் ஜகத்। ததா ஶோச்யேஷு பூதேஷு காருண்யம் ந கரோதி க:॥' என்றல்லவோ கருணை யென்று பேருடைய மனதின் அலங்காரத்தை யுடைய ப்ரஹ்லாதன் சொன்னார். 'துக்கத்தைப் பொறுக்காமை

1 கௌதம தர்மம் - 7 - 10 - ஸர்வேஷு பூதேஷு - எல்லா ப்ராணிகளிடத்திலும், தயா - தயை, க்ஷாந்தி: - பொறுமை, அநஸூயா-பொறாமை யில்லாமை, சௌசம் - பரிசுத்தி, அநாயாஸ: - ஶ்ரமமில்லாமை, மங்களம் - மங்களமான கார்யங்களைச் செய்கை, அகார்ப்பண்யம் - தைந்ய மில்லாமை, அஸ்ப்ருஹா- ஆசை யில்லாமை.

2 பாத்ம புராணம்—பாதாள காண்டம்-7 - 3 - 57-ஸர்வபூததயா - எல்லாப் ராணிகளிடத்திலும் தயை,புஷ்பம்-(பெருமாளுக்கு ஸமர்ப்பிக்கக் கூடிய) புஷ்பம்.

3 விஷ்ணுபுராணம்-1-17-70. யத்-எந்தக்காரணத்தினால், ஏதத் - இந்த, அகிலம்-எல்லா, ஜகத்-லோகமும், தாபத்ரயேண-மூன்று விததாபங்களினால், அபிஹதம்-அடிக்கப்பட்டிருக்கிறதோ, ததா-அப்பொழுது,ஶோச்யேஷு - துக்கிக்கக் கூடியதாகிய, பூதேஷு-ப்ராணிகளிடங்களில், க:-எவன், காருண்யம்-தயையை,நகரோதி-செய்வதில்லை.

லாமை கமொ௭உ௦ என்றும் பாடமாகவுமாம். ௦ாஉ-ஸ்ர - கடின மான ஸ்வபாவமில்லாமை, அதாவது ஸாதுவாகிய ஜனங்கள் சேருவதற் குத் தகுந்த ஸ்வபாவமுடையவனுயிருக்கை. ஹ்ரீ: – செய்யத்தகாத கார்யத்தைச் செய்வதில் வெட்கம். கஉாவஜ௦ - ஆசைப்படக்கூடிய

---

யாவது' துக்கத்தைப் போக்கடிக்க வேண்டுமென்கிற ஆசை என்றர்த் தம். 'ஐவ' என்னும் தாது 'யஜ', 'ஐக', என்னும் விக்ருதியை உடையதாய் அதின் பேரில் 'க்வ' என்னும் விக்ருதியைச் சேர்த்த பொழுது 'மொஐவ' என்று பதமேற்படுகிறது. 'கவ' என்னும் விக்ருதியைச் சேர்த்தால் 'மொஐவஃ' என்று பதமாகிறது. இதை ப்ர காசப் படுத்துகிறுர்—'கமொஐவ௦' என்றுரம்பித்து. 'ஐ-ஜெஉஷ நெ' என்கிற தாதுவின் பேரில் 'யஜஐக' என்னும் விக்ருதியைச் சேர்த்து 'மொஐ' என்றுய் அதில் 'கா' என்னும் விக்ருதியைச் சேர் த்து ருஷியின் ப்ரயோகமாகையினுல் குறைத்தல் வந்தது என்றபிப்ரா யத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறுர்—'கமொஐக' என்றும் பாடமாகவுமாம்' என்று. தகாத விஷயங்களில் ஆசை இவ்விடத்தில்தடு க்கப் படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்— 'விஷயங்க ளில்' என்றுரம்பித்து. முக்கியமாகிய ம்ருதுவாக இருக்கை இவ்விடத் தில் பொருந்தாதாகையினுல் முதலில் பேசுவது, ஸமுகமாக இருப் பது, முதலியவைகளால் ப்ரகாசப் படுத்தக்கூடிய ஔபசாரிகமாகிய ம்ருதுவாயிருக்கை சொல்லப் படுகிறது என்று தெரிவிப்பதற் காகச் சொல்லுகிறுர்—'கடினமான ஸ்வபாவ மில்லாமை' என்று. கடினமான வஸ்து மற்றவைகள் ப்ரவேசிப்பதற்குத் தகாதவை களல்லவா. அதைப் போலவே இவ்விடத்திலும் கர்வத்தை யுடை யவன், ஆகையினுல் அதில்லாமையைச் சொல்லுகிறது என்று ப்ரயோ ஜனத்தைக்கொண்டும் ருதுவாயிருக்கையை ப்ரகாசப் படுத்துகிறுர்— 'அதாவது ஸாதுவாகிய ஜனங்கள்' என்றுரம்பித்து. அவமானம் செய் யப்பட்டிருக்கை முதலியது யோகத்திற்கு உபகாரம் செய்பக்கூடியதா கையினுல் அதனுல் உண்டாகிற வெட்கம் ஸாத்விகர்களுக்குயுக்தமல்ல. ஆகையினுல் உபயோகமாகிய வெட்கத்தைச்சொல்லுகிறுர்—' செய்யத் தகாத கார்யத்தைச் செய்வதில்' என்றுரம்பித்து. ப்ரஸித்தங்களாகிய உயர்ந்த குலத்தில் பிறப்பு, வித்தை, நன்னடக்கை, இவைகளையுடைய பெரியோர்கள் அயலார் கெட்டகார்யங்களைச் செய்த பொழுதும் கூட வெட்கப்படுகிறுர்கள். ஆகையினுல் தங்களைப்பற்றிக் கேட்கவே வேண் டியதில்லை என்று தாத்பர்யம். 'கமொஐவ௦', 'கஉாவஜ௦', இவை

விஷயம் ஸமீபத்திலிருக்கும்போழுது அதில் சஞ்சலிக்காமை. தேஜஃ-கெட்ட ஜனங்களினால் அவமானம் செய்யமுடியாமை. க்ஷமா - அயலாரினாலுண்டாகிய பீடையையனுபவித்துக்கொண்டிருந்த போதிலும் அவர்களிடங்களில் அதைப்பற்றி மனதிற்கு விகாரமில்லாமலிருக்கை. த்ருதிஃ-பெரிய ஆபத்து வந்த பொழுதும் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்ய

*இரண்டிற்கும் புனருக்தியில்லாமைக்காகச்சொல்லுகிறார்—'ஆசைப்படக்கூடிய விஷயம்' என்றாரம்பித்து. இத்தால் விளையாட்டு,பரிஹாஸம், வேட்டை, சொக்கட்டான், இவை முதலியவைகளில் அதிக ஆசையில்லாமையும் காட்டப்பட்டது. பஞ்சபூதங்களில் ஒன்றாகிய தேஜஸ்ஸை சொல்லாத 'தேஜஃ' என்னும் பதம் அயலாரை அவமானம் செய்யக்கூடிய ஶக்தியைப் பற்றியாவது ப்ரயோகிக்கப்படுகிறது. ஆகையினால் இவ்விடத்தில் அயலாரை அவமானம் செய்யக்கூடிய ஶக்தியோடு சேர்ந்ததாகிய அயலாரால் அவமானம் செய்யக்கூடாமை சொல்லப்படுகிறது. அதுவும் கெட்ட ஜனங்களுக்கு இடம் கொடுக்கிற தைந்யம் முதலியவைகள் இல்லாமையினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கெட்ட ஜனங்களினால்' என்றாரம்பித்து. 'ஶௌர்யம்' என்பதைவிட 'க்ஷமா' என்பதின் வ்யத்யாஸத்தைக்காட்டுகிறார்—'அயலாரினாலுண்டாகிய' என்றாரம்பித்து. குற்றமில்லாதவர்களிடத்தில் விகாரமில்லாமை உதாஸீனனாக இருப்பது மாத்திரமேயொழிய பொறுமையல்ல. குற்றமில்லாதவர்களிடத்திலும் கோபம் உண்டாகிறதென்று*
1 'ப்ராஹ்மணா கணிகா வைத்யா ஸாரமேயாஶ்ச குக்குடாஃ। த்ருஷ்ட்வா த்ருஷ்ட்வா குப்யந்தி நஜாநே தத்ர காரணம்॥' *என்று சொல்லப்படுகிறது என்றபிப்ராயம்.* 'அவர்களிடங்களில் அதைப்பற்றி' *என்பதற்கு அந்த அயலார்கள் பீடையையனுபவிப்பதைக்குறித்து என்றர்த்தம். பயம்,சாபல்யம், இவைகளில்லாமை முன்பே தனித்துச்சொல்லப்பட்டபடியினால் பெரிய ஆபத்து வந்திருந்த போதிலும் ஶாஸ்த்ரங்களில் சொல்லிய கர்மங்களை அனுஷ்டானம் செய்யவேண்டுமென்கிற உறுதியை நழுவ விடாமல் பிடித்துக்கொண்டிருப்பதாகிய ஸத்வகுணத்தினால் உண்டாகிய தைர்யம் இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—*'பெரிய ஆபத்து வந்த பொழுதும்'

1 *ப்ராம்மணாஃ-ப்ராம்மணர்கள், கணிகாஃ-தாஸிகள், வைத்யாஃ-வைத்தியர்கள், ஸாரமேயாஃ-நாய்கள், குக்குடாஃ-கோழிகள் (இவைகள்), த்ருஷ்ட்வாத்ருஷ்ட்வா-பார்த்த மாத்திரத்தினால், குப்யந்தி-கோபித்துக்கொள்ளுகின்றன, தத்ர-அந்த விஷயத்தில், காரணம்-காரணத்தை, நஜாநே-நான் அறியவில்லை.*

வேண்டுமென்கிற நிஶ்சயத்துடனிருக்கை. ஶௌசம்-வெளி இந்த்ரியங்கள், மனது, இவைகளுக்கு ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி நல்ல கர்மங்களைச் செய்ய யோக்யதை. அத்ரோஹ: - அயலார் விஷயங்களில் நிர்ப்பந்தம் செய்யாமை—அதாவது அயலார் விஷயங்களில் அவர்கள் தங்களிஷ்டப்ர

---

என்றாரம்பித்து. 1 'மஹத்யாபதி ஸம்ப்ராப்தே ஸ்மர்தவ்யோ பகவான் ஹரி:' என்று சொல்லப்பட்ட ஸுலபமாய்ச் செய்யக்கூடியதாயும் முக்யமாயுமிருக்கிற கார்யத்தை விடாமையினால் மற்ற செய்யவேண்டிய கார்யமும் செய்யப்பட்டதாகவே ஆய்விடும் என்று தாத்பர்யம். ஸத்வ குணத்தினாலுண்டான தைர்யத்தைப்பற்றி 2 'த்ருத்யா யயா தாரயதே மந: ப்ராணேந்த்ரிய க்ரியா:। யோகேநாவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்விகீ॥' என்று மேலே சொல்லப்போகிறார். 'யோகேநாவ்யபிசாரிண்யா' என்பதற்கு வேறொரு ப்ரயோஜனங்களில் ஆசையில்லாமல் மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய பகவானைப்பற்றிய உபாஸனமென்கிற ப்ரயோஜனத்தினால் என்றர்த்தம். ஶரீரம், வாக்கு, மனது, இவைகள், அபரிசுத்தர்களான புருஷர்கள் தொடுவதினாலும், அபரிசுத்தமான வஸ்துக்கள் முதலியவைகளை உபயோகிப்பதினாலும் கெடுக்கப்பட்ட ஸத்வ குணத்தையுடையவைகளாய் அந்தந்தக் கார்யங்களில் யோக்யதையற்றவைகள் ஆகின்றனவென்று ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றன. அதில்லாமை இவ்விடத்தில் 'ஶௌசம்' என்று சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'வெளி இந்த்ரியங்கள், மனது' என்றாரம்பித்து. ப்ரத்யக்ஷத்தினாலேற்பட்ட கை, கால், முதலிய இந்த்ரியங்கள் ஶக்தியையுடையவைகளாக இருக்கையாகிய யோக்யதையை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடி' என்று. அஹிம்ஸை கீழே சொல்லப்பட்டபடியினால் அத்ரோஹத்திற்கு அதை விட வ்யத்யாஸத்தைக்காட்டுவதற்காகச் சொல்லுகிறார்—'அயலார்விஷயங்களில் நிர்ப்பந்தம் செய்யாமை' என்று. பலமில்லாதவர்கள் பலிஷ்டனாகிய மனிதனால் ஸ்வாதீனப்படுத்தப்பட்டவர்களாய்க்கொண்டு தங்களிஷ்டப்படி நடக்கவொட்டாமல் தடுக்கப்படுகிறார்கள். அதுதான் நிர்ப்பந்தம். அது செய்யாமை இவ்விடத்தில் அர்த்தம் என்று சொல்லுகிறார்—'அதாவது' என்றாரம்பித்து. தனக்குத் தன்னிஷ்டப்படி நடக்காமலிருப்பதோ யோகத்திற்கு உபகாரம் செய்கிறதாகையினால் அது தபஸ்ஸில் சேர்ந்தது. ஆகையினால் 'அயலார் விஷயங்களில்' என்று சொல்லப்பட்டது.

---

1 பாரதம்-ஸபாபர்வம்-90-42. மஹதி-பெரிய, ஆபதி - ஆபத்து, ஸம்ப்ராப்தே-வந்திருக்கும பொழுது, பகவான்-பகவானாகிய, ஹரி:-விஷ்ணு, ஸ்மர்த்தவ்ய: நினைக்கத்தகுந்தவர். 2 பகவத்கீதை-18-33.

காரம் இருப்பதற்குத் தடங்கல் செய்யாமை. அதிமாநிதா - கர்வப்படத்தகாத இடங்களில் கர்வப்படுதல் நாதிமாநிதா, அதில்லாமை. இந்தக் குணங்கள் தேவதைகளினுடைய ஸம்பத்தைக்குறித்துப் பிறந்தவனுக்குண்டாகின்றன. தேவதைகளினுடைய ஸம்பத்து 'தைவீ' என்னப்படுகிறது. தேவதைகள் பகவானுடைய ஆஜ்ஞையையனுஸரிக்கும் ஸ்வபாவமுடையவர்கள். அவர்களினுடைய ஸம்பத்தாவது பகவானு

கர்வமென்று பேருடைய அபிமானம் பொதுவாகவே இருக்கக்கூடாதென்று தடுக்கவேண்டியது இஷ்டந்தான். அப்படி யிருந்தபோதிலும் வம்ஶம், வீர்யம், ஶாஸ்த்ரங்களின் அறிவு, இவைகளுக்குத்தக்கபடி இந்தக்கர்வம் கொஞ்சம் உண்டானால் பொறுத்துக்கொண்டாலும் பொறுத்துக்கொள்ளலாம். அப்படியில்லாமல் உண்டானால் அது அஸுரர்களுடைய ஸ்வபாவமாக மேலே சொல்லப்போகிறபடியினால் இங்கே ப்ரஸ்தாவிப்பதற்கே தகுந்ததல்ல என்கிற அபிப்ராயத்தினால் உபலக்ஷணத்தோடே கூடிய கர்வத்தைத் தடுத்திருக்கிறது என்று சொல்லுகிறார்—'கர்வப்படத்தகாத இடங்களில்' என்றாரம்பித்து. 'தைவீஸம்பத்' என்று சொல்லில் தேவதைகளின் ஐஶ்வர்யம் அர்த்தமென்று தோன்றுகிறது. அது இவ்விடத்தில் அந்வயிக்காது ஆகையினால். அபிப்ராயத்திலிருக்கும்அர்த்தத்தைச்சொல்லுவதற்காக அந்தப்பதத்தின் வ்யுத்பத்தியைச் சொல்லுகிறார்—' தேவதைகளினுடைய ஸம்பத்து' என்று. 1 'ஸத்த்வம் தைவகுணம் வித்யாதிதராவாஸுரௌ குணௌ' என்று பிரித்திருப்பதினாலும், 2 'ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' என்று சொல்லியிருக்கிறபடியே ஸத்வகுணம் அனுஷ்டானம் வரையிலாகிய ஜ்ஞானத்திற்குக் காரணமாகையினாலும், ஸத்வகுணம் மேலிட்டிருப்பதினாலேயே பகவானுடைய ஆஜ்ஞையை மீறி நடக்கிறதில்லை. அதையே முதலில் சொல்லுகிறார்—'தேவதைகள் பகவானுடைய ஆஜ்ஞையை' என்றாரம்பித்து. அவர்களுக்கு அதுவே ஸம்பத்தாக நினைக்கப்படுகிறது. எப்படி என்னில் விவேகமில்லாதவர்களுக்குப் போக்ய வஸ்துக்களும் அவைகளை யனுபவிக்க ஸாமக்ரிகளும் நிறைந்திருப்பதைப் போலவே தேவதைகளுக்குப் பகவானுடைய உத்திரவுக்குக் கீழ்ப்படிந்து நடப்பது ப்ரியமாக இருப்பதினாலும், மேலான புருஷார்த்தத்திற்குக் காரணமாகையினாலும், என்று சொல்லுகிறார்—

1 ஸத்வம்-ஸத்வகுணத்தை, தேவகுணம் - தேவதைகளின் குணங்களாகவும், இதரௌ-மற்றவைகளை, ஆஸுரௌ-அஸுரர்களுடையதாகிய, குணௌ-குணங்களாகவும், வித்யாத்-அறியவேண்டும். 2 பகவத்கீதை - 14 - 17

டைய ஆஜ்ஞையை அனுஸரித்து நடப்பது. அதைக் குறித்துப் பிறக்கை யாவது அதை நிறைவேற்றப் பிறந்தவனுக்கு உண்டாகின்றன என்றர்த்தம். 1—3

த³ம்போ⁴ த³ர்போঽபி⁴மாநஶ்ச க்ரோத⁴: பாருஷ்யமேவ ச |
அஜ்ஞாநம் சாபி⁴ஜாதஸ்ய பார்த² ஸம்பத³மாஸுரீம் || 4

ப - ரை] பார்த² - அர்ஜுந, த³ம்ப⁴: - டம்பமும், த³ர்ப:-கொழுப்பும், அபி⁴மாந: - அதிக கர்வமும், க்ரோத⁴:- கோபமும், பாருஷ்யமேவ- க்ரூரமான ஸ்வபாவமும், அஜ்ஞாநம் - அஜ்ஞானமும், ஆஸுரீம் - அஸுரர்களுடையதான, ஸம்பத³ம் - ஸம்பத்தை, அபி⁴ஜாதஸ்ய - உத்தேசித்துப் பிறந்தவனுக்கு (ப⁴வந்தி - உண்டாகின்றன). 4

'அவர்களினுடையஸம்பத்தாவது' என்று. 1'மஹாத்மாநஸ்து மாம் பார்த² தை³வீம் ப்ரக்ருதிமாஶ்ரிதா: | ப⁴ஜந்த்யநந்யமநஸோ ஜ்ஞாத்வா பூ⁴தாதி³மவ்யயம் ||' என்று முன்பு சொல்லப்பட்டது. வேறிடத்திலும் 2 'விஷ்ணுப⁴க்திபரோ தை³வ:' என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. 'ஜாதஸ்ய' என்கிற இடத்தில் தாதுவிற்குக்கர்மா இல்லையேயாகிலும் 'பததி' என்பது முதலியதைப்போல உபஸர்க்கம் சேர்ந்திருப்பதினால் இரண்டாம் வேற்றுமையோடு அந்வயம் உண்டென்று சொல்லுகிறார்—'அதைக்குறித்து' என்று. அதைக் குறித்துப் பிறக்கையாவது அதை உத்தேசித்துப்பிறக்கை. எப்படியானல் தேவதைகளினுடைய ஸம்பத்துண்டாகுமோ அப்படிப் பிறந்தவன் என்றர்த்தம். இப்படிப்பட்ட குணங்களை யுடையவனுக்கு இப்படிப்பட்ட ஸம்பத்துக்கள் அவஶ்யம் நேரிடக்கூடியது என்பது இங்கு உத்தேசிக்கிறது என்று சொல்லப்படுகிறது. அப்படியே 3 'ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந்மது⁴ஸூத³ந: | ஸாத்த்விகஸ்ஸ து விஜ்ஞேய: ஸ வை மோக்ஷார்த²சிந்தக: ||' என்று சொல்லப்படுகிறது. இதையே சொல்லுகிறார்—'அதை நிறைவேற்றப்பிறந்தவனுக்கு' என்று. 1-3

1 பகவத்கீதை - 9 - 13.

2 விஷ்ணு தர்மம் - 109 - 74. பகவானிடத்தில் பக்தி செய்கிறவன் தேவ ஸ்வபாவமுடையவன்.

3. பாரதம் - சாந்திபர்வம் - மோக்ஷதர்மம் - 377 - 75 - ஜாயமானம் - பிறக்கிற, யம் - எந்த, புருஷம் - புருஷனை, மதுஸூதந: - பகவான், பஶ்யேத் - கடாக்ஷிப்பனே, ஸ:-அவன், ஸாத்விக:-ஸத்வகுணம் மேலிட்டவனாக, விஜ்ஞேய:- அறியத்தக்கவன், ஸவை - அவனே, மோக்ஷார்த்த சிந்தக:-மோக்ஷமாகிற ப்ரயோஜனத்தை எண்ணுகிறவன்.

பா] ஹர்ஷ: - தர்மத்தை யனுஷ்டிக்கிறவனென்று ப்ரஸித்தியை ஸம்பாதிப்பதற்காகக் கர்மங்களை யனுஷ்டித்தல். ஹர்ஷ: - செய்யத்தகுந்தது, செய்யத்தகாதது, இவைகளைத் தெரிந்துகொள்ளாமைக்குக் காரணமாகிய விஷயங்களை அனுபவிப்பதினால் உண்டான ஸந்தோஷம். ஸ்தம்ப: - தன்னுடைய வித்யை, குலம், இவைகளுக்குத்தகாததான அபிமானம். க்ரோத: — அயலானுடைய பீடைக்குக்காரணமாகிய மனதின் விகாரம். பாருஷ்யம் - ஸாதுக்களுக்குப் பயத்தைக்கொடுக்கக்கூடிய ஸ்வபாவம்.

தா] 'ஹர்ஷாதயோ:' என்கிற ஶ்லோகத்திலும் 'ஸ்வன்தி' என்பது சேர்த்துக்கொள்ளப்பட்டது. 'தர்மத்தை யனுஷ்டிக்கிறவனென்று ப்ரஸித்தியை ஸம்பாதிப்பதற்காக' என்பதற்குப் பகவானுடைய ஆஜ்ஞையை அனுஸரிக்கவேண்டும் என்கிற புத்தியினாலல்ல என்றர்த்தம். 'செய்யத்தகுந்தது, செய்யத்தகாதது; இவைகளைத் தெரிந்துகொள்ளாமைக்குக்காரணமாகிய' என்பதற்கு ஶாஸ்த்ரத்தை மீறி நடப்பதற்குக்காரணமாகிய என்று தாத்பர்யம். 'ஸ்தம்ப:' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற கர்வமாகிய அபிமானத்தைவிட 'ஹர்ஷ:' என்பதற்கு வ்யத்யாஸத்தைச்சொல்லுகிறார்—'விஷயங்களை அனுபவிப்பதினால் உண்டான' என்று. இத்தால் ஆசார்யன், பகவான், இவர்களை ஸேவிக்கதினால் உண்டாகிய ஸந்தோஷம் விலக்கப்படுகிறது. செய்யத்தகாத இடத்தில் என்று முன்பு சொல்லப்பட்டதே இவ்விடத்தில் 'தன்னுடைய வித்யை, குலம், இவைகளுக்குத்தகாததான' என்பதினால் விவரிக்கப்பட்டது. வித்யையும், குலத்தையும் எடுத்திருப்பது வயது முதலியவைகளையும் குறிக்கிறது, 1 'வயஸ: கர்மணோऽர்தஸ்ய ஶ்ருதஸ்யாபிஜநஸ்ய ச। வேஷவாக்வ்ருத்திஸாரூப்யமாசரந் விசரேதிஹ॥' என்பதை மீறி நடப்பது இங்கே அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. வேதபாஹ்யரிடங்களிலும், குத்ருஷ்டிகளிடங்களிலும், திருடர் முதலியவர்களிடங்களிலும், வார்த்தை க்ரூரமாயிருப்பதும் சிக்ஷை க்ரூரமாயிருப்பதும் அதிக தோஷமல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸாதுக்களுக்கு' என்றாரம்பித்து. ஆகையினாலேயே ஸாதுக்கள் நீக்கிவிடுவதினால் ஶாஸ்த்ரங்களுக்கு விலக்காக இருப்பதும் உண்டாய்விடும் என்றர்த்தம். ஸரியான காலங்களில் தூக்கம் முதலியவைகளாயும்,

1 மனுஸ்ம்ருதி-4-16-வயஸ:-வயதுக்கும், கர்மண:- கர்மத்திற்கும், அர்த்தஸ்ய-பணத்திற்கும், ஶ்ருதஸ்ய-வித்யைக்கும், அபிஜனஸ்யச-ஜாதிக்கும், வேஷவாக்வ்ருத்திஸாரூப்ய- வேஷம், வார்த்தை, அனுஷ்டானம், இவைகளின் ஒற்றுமையை, ஆசரன்-செய்துகொண்டு, இஹ-இந்தலோகத்தில், விசரேத்-இருக்கவேண்டும்.

ஈஜ்ஞாநம் - உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம், செய்யத்தகுந்த கார்யம், செய்யத்தகாதகார்யம், இவைகளைப்பகுத்தறியாமை. இந்த ஸ்வபாவங்கள் அஸுரர்களுடையதாகிய ஸம்பத்தை உத்தேசித்துப் பிறந்தவனுக்கு உண்டாகின்றன. அஸுரர்களாவது பகவானுடைய ஆஜ்ஞையை மீறி நடக்கும் ஸ்வபாவமுடையவர்கள். 4

---

உபயோகமல்லாத விஷயங்களைப்பற்றியதாயுமிருக்கிற அஜ்ஞானம் அஸுரர்களுக்கும் மற்றவர்களுக்கும் ஸமானம். அப்படியிருப்பதினால் தோஷமுமில்லை. ஆகையினால் அதை விலக்குகிறார்—'உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம்' என்றாரம்பித்து. இப்படிப்பட்ட அஜ்ஞானத்தைக்காரணமாகவுடையதுமற்ற ஆகமங்களில் உயர்ந்த தத்துவம் தாழ்ந்த தத்துவம். இவைகளை மாறுடிச்சொல்லியிருப்பதுவேதங்களுக்கு விருத்தமான ஆசாரங்களைஒப்புக்கொண்டிருப்பதும். முன்பு சொல்லப்பட்ட சிலகுணங்களில்லையென்று சொல்லியிருப்பது மற்றவைகளையுங்குறிப்பதற்காக. 'ச' என்பதினால் அவைகள் சேர்த்துக் கொள்ளப்படுகிறதாகவுமாம் அஸுரர்களினுடையதாகிய ஸம்பத்தை ப்ரகாசப்படுத்துவதற்காகச் சொல்லுகிறார்—'பகவானுடைய ஆஜ்ஞையை' என்றாரம்பித்து அவர்களைப்பற்றி 1 ''வஶ்யேத ந்தம் ஜாயமாநம் ப்ரஹ்மா ருத்ரோ ததாவா ஸுராநபி। ரஜஸா தமஸா சைவ மாநஸம் ஸமபிப்லுதம் ॥' என்றும், 2 'விபரீதஸ்ததா ஸுர:' என்றும் சொல்லப்படுகிறது. ப்ரஜாபதி வாக்யத்திலும் தேஹமே ஆத்மா என்கிற அபிமானம் முதலியவைகளைக் காரணமாகவுடைய தர்மார்த்த காம மாத்திரத்தில் நிஷ்டையைப் பற்றி 3 'இது அஸுரர்களினுடைய உபநிஷத்து' என்றர்த்தமுள்ள வாக்யம் சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் 'ஸம்பத்' என்னும் பதம் பகவானுடைய உத்திரவை மீறி நடப்பதில் ஆசையுடையவர்களுடைய அபிப்ராயத்தினாலாவது, அவர்கள் அப்படித் தெரிந்துகொள்ளுகிறார்கள் என்கிற அபிப்ராயத்தினாலாவது, 'ஸம்பத்யதே (உண்டாகிறது)' என்கிற அர்த்தத்தை மாத்திரம் சொல்லுகிறதாகவாவது, வைத்துக்கொள்ளவேண்டியது. 4

---

1 பாரதம்-சாந்திபர்வம்-மோக்ஷதர்மம் - 357-77 ஜாயமானம்-பிறக்கிற, ஏனம்-இந்தப் புருஷனை, ப்ரம்மா- ப்ரமாவாவது, அதவா - இல்லாவிட்டால், ருத்ர:-ருத்திரனாவது, பச்யதி- பார்க்கிறானேயானால், ரஜஸா-ரஜோகுணத்தினாலும், தமஸாசைவ-தமோகுணத்தினாலும், மாநஸம் - மனது, ஸமபிப்லுதம்-வ்யாபரிக்கப்பட்டதோ.

2 விஷ்ணு தர்மம் - 109 - 74-ததா - அப்படி, விபரீத:-விபரீதமான ஸ்வபாவமுள்ளவன், அஸுர: - அஸுரஸ்வபாவமுடையவன்.

3 சாந்தோக்யம் - 8 - 5.

தெவீஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா | *

ப - ரை] தெவீ - தேவதைகளினுடையதாகிய, ஸம்பத் - ஸம்பத்தானது, விமோக்ஷாய - மோக்ஷத்திற்கு (காரணமாகிறது), ஆஸுரீ - அஸுரர்களுடைய (ஸம்பத்து), நிபந்தாய - ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணமாகிறது என்று, மதா - எண்ணப்பட்டது. *

பா] என்னுடைய உத்திரவை அனுஸரிப்பதாகிய ஸம்பத்து ஸ்ம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதற்குக் காரணமாகிறது. க்ரமமாக என்னை அடைவதற்குக் காரணமாகிறது என்றர்த்தம். என்னுடைய உத்திரவை மீறி நடப்பதாகிய ஸம்பத்துத் தாழ்ந்த கதியையடைவதற்குக்காரணமாகிறது என்றர்த்தம் *

பா—அ] இதைக்கேட்டுத் தன்னுடைய ஸ்வபாவத்தை இன்னதென்று நிஶ்சயமாகத் தெரிந்து கொள்ளாமையினால் மிகவும் பயந்திருக்கிற அர்ஜுநனைக்குறித்து இவ்விதமாகச் சொல்லுகிறார்—

மாஶுச: ஸம்பதம் தெவீமபிஜாதோஸி பாண்டவ || 5

ப-ரை] பாண்டவ - பாண்டுவின் பிள்ளையாகிய அர்ஜுநா, மாஶுச:- துக்கப்படாதே, தெவீம் - தேவதைகளினுடையதாகிய, ஸம்பதம் - ஸம்பத்தை, அபிஜாத: - உத்தேசித்துப் பிறந்தவனாக, அஸி - ஆகிறாய். 5

தா] தேவதைகளினுடைய ஸ்வபாவம், அஸுரர்களினுடைய ஸ்வபாவம், இவைகளில் ப்ரீதியையும் பயத்தையும் உண்டு பண்ணுவதற்காக 1 'ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா:' என்றிவை முதலியவைகளால் சொல்லப்பட்டதே இவ்விடத்தில் சுருக்கமாக ஜ்ஞாபகப்படுத்தப் படுகிறது—இந்தப் பாதி ஶ்லோகத்தினால், 'விமோக்ஷம்' இஷ்டத்தை அடைகிறவரையில் முடிவு பெறுகிறது என்று சொல்லுவதற்காக எல்லா அநிஷ்டங்களும் நிவ்ருத்தி யடைவதாகிய இந்தப் பதத்தின் முக்யமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஸம்ஸார பந்தத்திலிருந்து விடுபடுவதற்கு' என்று. இதுவே நேரில் காரணமென்று சொல்லில் த்யானம் வரையிலும் விதிக்கிற ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாய்விடும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'க்ரமமாக' என்றாரம்பித்து. ஜீவாத்மாவை நேரில் பார்ப்பது முதலியவைகளின் வழியாகஎன்றர்த்தமாகவுமாம். 'நிபந்த:' என்பதற்கு எப்பொழுதும் ஸம்ஸாரபந்தம் என்றர்த்தம். அவ்விடத்தில் 1 'அதோ கச்சந்தி' என்று கீழ்ச்சொல்லியதை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'தாழ்ந்த கதியை' என்றாரம்பித்து. *

1 பகவத்கீதை - 14 - 18.

பா] உக்கபப்படாதே, நீ தேவதைகளினுடையதாகிய ஸம்பத்தைக்குறித்துப்பிறந்தவனுகிருய். பாண்டவ, தர்மிஷ்டர்களில் முதன்மையான பாண்டுவின் பிள்ளையல்லவோ, நீ என்றபிப்ராயம். 5

தா] இவ்விடத்தில் 'ஶாஶுசஃ' என்று சொல்லியிருப்பது இந்த ஶாஸ்த்ரத்தின் ஆரம்பத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட துக்கப்படத்தகாத பீஷ்மர், முதலியவர்களைப்பற்றிய துக்கத்தை மறுப்பதற்காகவல்ல, அது அநேகவிதமாகப்பரிஹரிக்கப்பட்டபடியினுலும், 'ஸம்ஶயம் செஷவிஶிஷி ஜாநெதாவஶி' என்பதனுல் அதற்குப் பரிகாரம் ஸம்பவிக்காதாகையினுலும். ஆகையினுல் 'நிஷாஶாயாஷாமீச தா' என்று சொல்லியிருக்கும் பொழுது ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ஏற்பாடுகளை மீறி நடக்காமலிருந்தபோதிலும் தன்னிடத்தில் 1 'ஷிரொநிமூஜா ஷஹ்ஙகாரஃ' என்று சொல்லியிருக்கிறபடி தீரோதாத்த நாயகனுடைய குணமாகிய மறைந்துகொண்டிருக்கிற அஹங்காரத்தை யுடையவனுயிருக்கை தன்னுடைய மனஸ்ஸாக்ஷிகமாய்த் தெரிந்துகொள்ளப்படுகிறபடியினுல்அவ்வளவு மாத்திரத்தைக்கொண்டு தன்னிடத்தில் அஸுர ஸ்வபாவமுடையவனுக இருக்கையைப்பற்றி ஸந்தேஹப்பட்டுக் கொண்டவனும், இரண்டுவித ஸம்பத்துக்களையும் விவரமாகக்கேட்டவனும், தன்னுடைய ஸ்வபாவத்தைப்பற்றி இன்னதென்று நிஶ்சயமாகத் தெரிந்துகொள்ளாமையினுல் மறுபடியும் அபாரமாகிய ஸம்ஸாரமாகிற ஸமுத்திரத்தில் முழுகுவதிலிருந்து பயத்தினுல்துக்கப்படுகிறஅர்ஜுநனுக்கு நீ தேவதைகளின் ஸ்வபாவத்தையுடையவன் என்று தெரிவிப்பதினுல் அவனுடைய துக்கத்தைப் போக்குகிருர், என்று சொல்லுகிருர்—'இதைக்கேட்டு' என்றுரம்பித்து. இவ்விடத்திலும் இடமில்லாத இடத்தில் துக்கத்தை நீயே வரவழைத்துக் கொள்ளுகிருய் என்கிற அபிப்பிராயத்தினுல் சொல்லுகிருர்—'துக்கப்படாதே' என்று. தேவதைகளின் ஸ்வபாவமுடையவர்களாயும், தர்மத்தை யனுஷ்டிப்பதில் சிறந்தவர்களாயும் இருப்பவர்களுக்கு அஸுரஸ்வபாவமுடைய பிள்ளைகள் பிறக்கமாட்டார்களல்லவா என்கிற அபிப்ராயத்தினுல் 'பாண்டவ' என்னும் பதத்தினுல் அழைத்திருக்கிறது என்று சொல்லுகிருர்—'தர்மிஷ்டர்களில் முதன்மையான' என்றுரம்பித்து 5

1 தசரூபகம் - 2-1-ஸ்திர: - தைர்யமுள்ளவனும், நிகூடாஹங்கார:- மறைந்துகொண்ட அஹங்காரத்தையுடையவனுகவும்.

𑌦𑍍𑌵𑍌 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 𑌲𑍋𑌕𑍇𑌽𑌸𑍍𑌮𑌿𑌨𑍍
𑌦𑍈𑌵 𑌆𑌸𑍁𑌰 𑌏𑌵 𑌚।
𑌦𑍈𑌵𑍋 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑌃 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤
𑌆𑌸𑍁𑌰𑌂 𑌪𑌾𑌰𑍍𑌥 𑌮𑍇 𑌶𑍃𑌣𑍁 ॥ 6

ப-ரை] 𑌪𑌾𑌰𑍍𑌥-அர்ஜுந, 𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍-இந்த, 𑌲𑍋𑌕𑍇-லோகத்தில், 𑌦𑍈𑌵𑌃 தேவதைகளின் ஸ்வபாவமுடையதென்றும், 𑌆𑌸𑍁𑌰 𑌏𑌵 𑌚-அஸுரர்களின் ஸ்வபாவமுடையதென்றும், 𑌭𑍂𑌤𑌸𑌰𑍍𑌗𑍌 - ப்ராணிகளின் ஸ்ருஷ்டியானது, 𑌦𑍍𑌵𑍌 - இருவகைப்பட்டது, 𑌦𑍈𑌵𑌃-தேவஸ்வபாவமுடைய ஸ்ருஷ்டி, 𑌵𑌿𑌸𑍍𑌤𑌰𑌶𑌃 - விஸ்தாரமாக, 𑌪𑍍𑌰𑍋𑌕𑍍𑌤𑌃 - சொல்லப்பட்டது, 𑌆𑌸𑍁𑌰𑌂 - அஸுரர்களினுடைய ஸ்வபாவமுடைய ஸ்ருஷ்டியை, 𑌮𑍇 - என்னிடமிருந்து, 𑌶𑍃𑌣𑍁 - கேள். 6

பா] இந்தக் கர்மங்களை அநுஷ்ட்டிக்கக்கூடிய லோகத்தில் கர்மங்களை அநுஷ்ட்டிக்கிற ப்ராணிகளின் ஸ்ருஷ்டி இருவகைப்பட்டது, தேவதைகளின் ஸ்வபாவமுடையதென்றும், அஸுரர்களின் ஸ்வபாவமுடையதென்றும்.

தா] ஸ்வரூபம் முதலியவைகளினால் எல்லா ஜீவாத்மாக்களும் ஸமமாக இருக்க தேவதைகளின் ஸ்வபாவமுடையதென்றும், அஸுரர்களின் ஸ்வபாவமுடையதென்றும், பிரிவு எதைக்காரணமாகவுடையது என்கிற ஆக்ஷேபத்தை அதில் விசேஷணங்களோடு கூட அநுவாதம் செய்வதினால் பரிகரித்துக்கொண்டு மிகவும் விட வேண்டியதென்று தெரிவிப்பதற்காகக் கீழ் பிரஸ்தாவிக்கப்பட்ட அஸுர ஸ்வபாவமுடையவர்களின் நடவடிக்கையைப்பற்றிய விஸ்தாரத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறார்—இந்தஶ்லோகத்தினால். 'இந்த . லோகத்தில்' என்பதுமற்ற லோகங்களை விலக்குவதற்காக அல்ல, எல்லா லோகங்களிலும் தேவஸ்வபாவமுடையவன், அஸுரஸ்வபாவமுடையவன் என்கிற பிரிவு ஏற்பட்டிருப்பதனால். ஒரு அர்த்தமுமில்லாமல் இடத்தை மாத்திரம் குறித்திருக்கிறது என்பதும் யுக்தமல்ல. ஆகையினால் லோகத்தில் தெரிந்துகொள்ளுவதினாலேற்பட்ட ஆகாரத்தினால் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவைகளையும் தடுக்கப்பட்டவைகளையும் அநுஷ்டிப்பதைத் தெரிவிப்பது இவ்விடத்தில் தாத்பர்யம் என்கிற அபிப்பிராயத்தினால் சொல்லுகிறார்—'கர்மங்களை யநுஷ்ட்டிக்கிற ப்ராணிகளின்' என்று கர்மலோகத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு '𑌅𑌸𑍍𑌮𑌿𑌨𑍍 (இந்த)' என்கிற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. 1 '𑌸𑌰𑍍𑌗𑌃 𑌸𑍍𑌵𑌭𑌾𑌵𑌨𑌿𑌰𑍍𑌮𑍋

1 நாமலிங்காநுஶாஸநம்.

‘ஸர்க்கஃ’ ஆவது உத்பத்தி. அநாதியான புண்ய பாபங்களாகிய கர்மவசத்தினால் பகவானுடைய உத்திரவை அனுஸரிப்பதற்கும், அதற்கு விரோதம் செய்வதற்கும் உத்பத்தியாகும் பொழுதே பிரிக்கப்பட்டு ப்ராணிகள் உண்டாகின்றன என்றர்த்தம். அதில் தேவதைகளின் ஸ்வபாவமுடைய ஸ்ருஷ்டி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. அதாவது என்னுடைய ஆஜ்ஞையை அனுஸரித்து நடக்கும் ஸ்வபாவமுடைய தேவதைக

---

க்ஷிதிஸ்ருபாயஸ்ராய ஸ்ருஷ்டிஷு’ என்று அநேக அர்த்தங்களைச் சொல்லுகிற அந்த ‘ஸர்க்கஃ’ என்னும் பதத்திற்கு அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுவதற்காக அந்த தாது ஸ்ருஷ்டிக்கப்படுகிற வஸ்துக்களின் வ்யாபாரங்களைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—‘ஸர்க்கஃ’ ஆவது உத்பத்தி’ என்று. உத்பத்தியில் தேவஸ்வபாவமுடையது, அஸுரஸ்வபாவமுடையது என்பது எப்படிப் பொருந்தும்? என்றுக்ஷேபம் வரில் ‘லோகே஽ஸ்மிந்’ என்பதினாலும், ‘ஸர்க’ என்னும் பதத்தினாலும் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சேர்த்துச் சொல்லுகிறார்—‘அநாதியான’ என்றாரம்பித்து. தேவதைகளினுடையவும், அஸுரர்களினுடையவும் ஸம்பத்திற்காக ஏற்பட்டபடியினால் உத்பத்தியிலும் தேவஸ்வபாவமுடையது, அஸுரஸ்வபாவமுடையது, என்று சொல்லியிருக்கிறது என்றர்த்தம். ‘ஸர்க’ என்னும் பதம் ஸ்வபாவம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பதும், ஸ்ருஷ்டிக்கப்படுகிற வஸ்துக்களைச் சொல்லுகிறது என்பதும், அப்ரஸித்தமாகையினால் அவைகளை அநாதரித்து விட்டு ப்ரஸித்தமாகிய ஸ்ருஷ்டியைச் சொல்லுவதாகவே வ்யாக்யானஞ் செய்யப்பட்டது. தேவதைகளின் ஸ்ருஷ்டி விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது என்று சொன்ன இடத்தில் தேவதைகளினுடைய வம்ஶங்களின் சரித்திரம் சொல்லப்பட்டது என்றர்த்தம் என்று தோன்றுகிறது. அப்படிச் செய்யப்படவில்லை. மேலும் 1‘ப்ரஜஹாதி யதா காமாந்’, 2‘தைவமேவாபரே யஜ்ஞம்’, 3‘யதாதிபா ஸவிதா’, 4‘மஹாத்மாநஸ்து மாம் பார்த’ என்றிவை முதலியவைகளால் கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகம், இவைகளில் நிஷ்டையையுடைய புருஷர்கள் சொல்லப்பட்டார்கள். அப்படியிருந்தபோதிலும் அவர்களால் செய்யவேண்டிய கர்மங்களை விவரிப்பதில்லையே தாத்பர்யம். ஆகையினால் இவ்விடத்தில் தேவதைகளின் ஸ்வபாவத்தையுடைய ஸ்ருஷ்டியைப் பற்றி

---

1 பகவத்கீதை - 2 - 55.　　2 பகவத்கீதை - 4 - 25.
3 பகவத்கீதை - 5 - 16.　　4 பகவத்கீதை - 9 - 13.

ளின் ஸ்வபாவமுடைய ப்ராணிகளின் உத்பத்தி எந்த அனுஷ்ட்டானத்தைச் செய்வதற்காகவோ அப்படிப்பட்ட கர்மயோகம், ஜ்ஞானயோகம், பக்தியோகமாகிற அனுஷ்ட்டானம் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது. அஸுரர்களின் ஸ்வபாவமுடைய ப்ராணிகளின் ஸ்ருஷ்டி எந்த அனுஷ்ட்டானத்தைச் செய்வதற்காகவோ, அந்த அனுஷ்ட்டானத்தை என்னிடமிருந்து கேள். 6

ப்ரவ்ருத்திஞ்ச நிவ்ருத்திஞ்ச ஜநா ந விதுராஸுரா: |
ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே || 7

ப-ரை] ஆஸுரா: - அஸுரர்களின் ஸ்வபாவமுடைய, ஜநா: - ஜனங்கள், ப்ரவ்ருத்திம் - ப்ரவ்ருத்தி தர்மத்தையும், நிவ்ருத்திம்ச - நிவ்ருத்தி தர்மத்தையும், ந விது: - அறிகிறதில்லை. தேஷு - அவர்களிடத்தில், ஶௌசம் - பரிசுத்தியானது, ந - இல்லை, ஆசார: - அனுஷ்ட்டானமும், ந - இல்லை, ஸத்யம் - உண்மையும், நவித்யதே - இல்லை. 7

---

விஸ்தாரமாகச் சொல்லப்பட்டது என்று சொல்லியிருப்பது அவைகளின் கார்யங்களை முன்னிட்டு என்கிற அபிப்ராயத்தினால்—'எந்த அனுஷ்ட்டானத்தைச் செய்வதற்காகவோ' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. 'அபயம் ஸத்வ ஸம்ஶுத்தி:' என்பது முதலியதோ முன்பு விஸ்தாரமாகச் சொல்லப்பட்டதைச் சுருக்கிச் சொல்லியிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் கர்மயோகம் முதலியவைகளை எடுத்து 'ஆஸுரம் ஸர்கம் (அஸுரர்களின் ஸ்வபாவமுடைய ப்ராணிகளின் ஸ்ருஷ்டியை)' என்கிற இடத்திலும் மேலே சொல்லப்போகிறதை அனுஸரித்து இப்படியே தாத்பர்யமென்று சொல்லுகிறார்—'அஸுரர்களின் ஸ்வபாவமுடைய' என்றாரம்பித்து. 'ஆஸுரம் மே ஶ்ருணு' என்று சொன்ன இடத்தில் 'மே' என்கிற ஆறாம் வேற்றுமை கர்த்தாவைச் சொல்லுகிறது. அதாவது என்றால் செய்யப்பட்ட அவ்விதமான ஸ்ருஷ்டியைக் கேள் என்றர்த்தம் என்று ப்ரமம் உண்டாகும். அதைவிட 'ஶ்ருணு' என்பதற்கு அவஶ்யம் வேண்டியதாகிய மிகவும் ஆப்தனுயிருக்கையைச் சொல்லுவதே உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னிடமிருந்து' என்று. அங்கீகரிக்கத்தகுந்த வஸ்து அறியப்படாவிட்டால் எப்படி அங்கீகரிக்க முடியாதோ அப்படியே விடத்தகுந்த வஸ்துவும் அறியப்படாவிட்டால் விடமுடியாது. ஆகையினால் ஸாவதானனாக இரு என்கிற அபிப்ராயத்தினால் 'ஶ்ருணு (கேள்)' என்று சொல்லப்பட்டது. 6

பா] ஐஶ்வர்யத்திற்கு ஸாதனமாயும் மோக்ஷத்திற்கு ஸாதனமாயுமிருக்கிற வேதத்தில் சொல்லப்பட்ட தர்மத்தை அஸுர ஸ்வபாவமுடையவர்கள் அறிவதில்லை. ஶாஸ்த்ரங்களி லேற்பட்டதாயும் வெளியிலும் மனதிலுமிருக்கிற வேதத்தில்சொல்லிய கர்மங்களை யனுஷ்டிக்கக்கூடிய

---

தா] இவ்விடத்தில் 'ப்ரவ்ருத்தி, நிவ்ருத்தி' என்னும் பதங்கள் லோகத்திலேற்பட்ட கார்யங்களைப்பற்றியதல்ல, அஸுர ஸ்வபாமுள்ளவர்களுக்கே இஷ்டத்தையடைவதற்கும், அநிஷ்டத்தைப் பரிஹரிப்பதற்கும், லோகத்தி லேற்பட்டதாகிய கெட்டவழியில் ப்ரவ்ருத்திப்பதும், நல்லவழியிலிருந்து நிவ்ருத்திப்பதும், ஏற்பட்டிருக்கிறபடியினால் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவைகளையும் தடுக்கப்பட்டவைகளையும் மாத்திரம் பற்றியதல்ல, தன்னிஷ்டத்தின லேற்பட்டதும், ஶாஸ்த்ரங்களினலேற்பட்டதையும் பற்றியதுமல்ல, 'நஶௌசம் நாபிசாசார:' என்றிவை முதலியவைகளுக்குப் புனருக்தி வருகிறபடியினால். ஆகையினால் இவ்விடத்தில் மோக்ஷத்தில் ஆசையுடையவனுக்கு அவஶ்யம் செய்யவேண்டியதாகிய ப்ரவ்ருத்தி தர்மம், நிவ்ருத்தி தர்மம், இவைகளைப் பற்றிய விவேகமில்லை என்று சொல்லுவதில் தாத்பர்யம் என்று சொல்லுகிறார்—'ஐஶ்வர்யத்திற்கு ஸாதனமாயும்' என்றாரம்பித்து. அப்படிப்பட்ட தர்மங்கள் [1]'ப்ரவ்ருத்தி லக்ஷணம் தர்மம் ப்ரஜாபதி ரதாப்ரவீத்। நிவ்ருத்தி லக்ஷணம் தர்மம் ருஷிர் நாராயணோऽப்ரவீத்॥' என்று சொல்லப்பட்டது 'நவிது:' என்கிற இடத்தில் 'நமஹத்யேஷ விஜ்ஞே' என்கிற இடத்திலே போல அதைப்பற்றிய ஜ்ஞானம் மாத்திரம் இல்லை என்று சொல்லப்படுகிற தில்லை. பின்னை எப்படி என்னில் அநேகம் தடவை நிரூபித்துச் சொன்ன போதிலும் தமோகுணம் மேலிட்டிருப்பதினால் அதைத் தெரிந்து கொள்ளாமை சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அறிவதில்லை' என்று. முன்பு க்ருத்யங்களைச் செய்யக் கூடிய போக்யதை என்று சொல்லப்பட்டதே இவ்விடத்தில் 'வேதத்தில் சொல்லிய கர்மங்களை' என்று விவரிக்கப்பட்டது. வெளியின் பரிசுத்தி, அசுத்தமான வஸ்துக்களோடு பழகுவது முதலியவைகளினாலும் அவஶ்யமாகச் செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யாமையினாலும் இல்லை. மனதில் சுத்தியோ

---

1 பாரதம் - சாந்திபர்வம், மோக்ஷதர்மம் - 219-2. ப்ரவ்ருத்தி லக்ஷணம்-ப்ரவ்ருத்தி என்றுபேருடைய, தர்மம் - தர்மத்தை, ப்ரஜாபதி:-ப்ரம்மா, அத-பிறகு, அப்ரவீத் - சொன்னார், நிவ்ருத்தி லக்ஷணம்-நிவ்ருத்தி என்று பேருடைய, தர்மம்-தர்மத்தை, நாராயண: - நாராயணனென்கிற, ருஷி: - ருஷி அப்ரவீத்-சொன்னார்.

யோக்யதையும் அஸுர ஸ்வபாவமுடையவர்களிடத்தில் இல்லை. அந்த வெளியிலும் மனதிலும் இருக்கிற ஶுத்தி எவ்விதமான ஸந்த்யா வந்தனம் முதலிய அனுஷ்டானத்தினால் உண்டாகிறதோ அவ்வித அனுஷ்டானமும் அவர்களிடத்தில் இல்லை. அப்படியே * 'ஸந்த்யாஹீனோஶுசிர் நித்யமநர்ஹ: ஸர்வகர்மஸு' என்று சொல்லப்பட்டது. அப்படியே தானறிந்தபடி ப்ராணிகளுக்கு ஹிதமாகப்பேசுவதும் அவர்களிடத்தில் 7

பா-அ] மேலும்—

அஸத்யமப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீஶ்வரம் |
அபரஸ்பரஸம்பூதம் கிமந்யத்காமஹைதுகம் || 8

ப - ரை] தே - அந்த அஸுர ஸ்வபாவமுடையவர்கள், ஏதத் - இந்த, ஜகத் - லோகத்தை, அஸத்யம் — பரமாத்மாவை ஆத்மாவாக உடையதல்ல என்றும், அப்ரதிஷ்டம் - பரமாத்மாவை ஆதாரமாக உடையதல்ல என்றும், அநீஶ்வரம் - பரமாத்மாவினால் நியமிக்கப்படுகிறதல்ல என்றும், ஆஹு: - சொல்லுகிறார்கள், அபரஸ்பரஸம்பூதம் - ஸ்திரீபுருஷர் ஒருவர்க்கொருவர் சேராமல் உண்டாகிய, அந்யத்—வேறுவித வஸ்து, கிம்- எது (ஆகையினால்), காமஹைதுகம்—காமத்தையே காரணமாகவுடையதென்றும் (சொல்லுகிறார்கள்). 8

---

ஆத்மகுணமில்லாமையினால் இல்லை. 'ந ஶௌசம் நாபி சாசார:' என்று க்ரமமாகக் கார்யமும் காரணமும் இல்லை யென்று சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்த' என்றாரம்பித்து. ஸந்த்யா வந்தனம் முதலிய வர்ணாஶ்ரமதர்மத்திற்கு 1 'ப்ராஜாபத்யம் ப்ராஹ்மணாநாம்' என்றிவை முதலிய வசனங்களினால் வேறு பலம் சொல்லப்படுகிறது. அப்படி யிருக்க அது பரிசுத்திக்குக் காரணம் என்று எப்படிச் சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. ஸந்த்யா வந்தனம் செய்யாதவன் சுத்தியில்லாதவன் என்று சொல்லி யிருப்பதினால் ஸந்த்யா வந்தனம் செய்வது சுத்திக்குக் காரணமென்று இவ்விடத்தில் உறுதிப்படுத்தப்பட்டது. இது நித்யங்களாகிய மற்றக் கர்மங்களை விட்டதினாலும் உண்டென்றறியவும். 'தானறிந்தபடி' என்றாரம்பித்த வாக்யத்திற்கு மோசம் செய்வதிலேயே ஆசையுள்ளவனாகையினால் தானறிந்தபடி பேசுவதில்லை, ஹிம்ஸை செய்வதையே ஸ்வபாவமாக உடையவனாகையினால் ஹிதமாகப் பேசுவதில்லை என்று தாத்பர்யம். 7

---

* தக்ஷஸ்ம்ருதி-2-22. ஸந்த்யாஹீந: - ஸந்த்யாவந்தனம் செய்யாதவன், நித்யம் - எப்பொழுதும் அஶுசி: சுத்தியில்லாதவன், ஸர்வகர்மஸு - எல்லாக் கர்மங்களிலும், அநர்ஹ: - யோக்யதை இல்லாதவன்.

1 விஷ்ணுபுராணம்-1-6-37. க்ருஹஸ்தானாம் - க்ருஹஸ்தர்களுக்கு, ப்ராஜாபத்யம் - ப்ரஜாபதியின் லோகம் (உண்டாகிறது).

தா] இப்படி உண்மையைச் சொல்லாதது மாத்திரமல்ல, பின்னை எப்படி என்னில் அதற்கு விரோதமாகச் சொல்லுவது முண்டு என்று சொல்லுகிறார்—'மேலும்' என்று. இவ்விடத்தில் 'அஸத்யம்' என்னும் பதம் பொய்யென்னுமர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல, அது லோகத்தில் தெரிந்துகொள்ளுவதற்கும், தன்னுடைய வார்த்தைக்கும் விரோதம் முதலிய தூஷணங்களால் முன்னே நிராகரிக்கப்பட்டிருப்பதானாலும், மிகவும் ஸ்தூலமாகையினால் ஐம்வர்யத்தை உண்மையாகவும் ஸ்திரமாகவும் நினைத்துக்கொண்டு அதினாலுண்டாகிய ஆக்ரஹத்தையுடைய அஸுரர்கள் லோகம் பொய் என்கிற கபடயுக்திகளால் வஞ்சனை செய்யத்தகுந்தவர்களென்பது ஸம்பவிக்காதாகையினாலும். எப்படி நாம் பொய்க்கு ஸமானமோ அப்படி இந்த எல்லா லோகமும் என்று சொல்லுகிறார்கள் என்று வ்யாக்யானஞ் செய்திருப்பதும் யுக்தமல்ல, 'ஜகத்' என்னும் பதம் ஜீவாத்மாக்களை மாத்திரம் சொல்லுகிறது என்பதில்லாமையினால். இங்கே மறுத்திருப்பதும் முன்பு சொல்லிய ஆகாரத்திற்குவிரோதத்தைச் சொல்லுகிறதாகையினாலும், 'ப்ரதிஷ்டைநீம்ஸாரம்' என்று ஶாஸ்த்ரங்களில் சொல்லிய அர்த்தங்களை இல்லையென்று மறுப்பதைச் சொல்லியிருப்பதினாலும், அஸுரர்கள் ஶாஸ்த்ரத்தில் த்வேஷம் செய்வதையே ஸ்வபாவமாக வுடையவர்களாகையினாலும். ஆகையினால் இவ்விடத்தில் ஶாஸ்த்ரத்திலேற்பட்ட அர்த்தத்தை மறுப்பதையே இந்தப் பதம் சொல்லுகிறது. அதுவும் 'ஸத்யம்' என்பது ப்ரம்மமே என்று 1 'ஸத்யமாயும்,ஜ்ஞானமாயும்,அளவில்லாததாயு மிருக்கிறது ப்ரம்மம்' என்றர்த்தமுள்ள ம்ருதிவாக்யம் முதலியவைகளில் ப்ரஸித்தமாயிருக்கிறது. சாந்தோக்யத்திலும் சேதநா சேதன வஸ்துக்களை நியமிக்கிற படியினால் ப்ரம்மத்திற்கு ஸத்யம் என்பது பெயர் என்று 'அப்படிப்பட்ட இந்த ப்ரம்மத்திற்கு ஸத்யம் என்று பெயர். 2 இது 'ஸத்' 'தி' 'யம்'என்று மூன்று அக்ஷரங்கள். 'ஸத்' என்று சொல்லப்படுகிறதுவிகாரமில்லாத ஜீவாத்மா. 'தி' என்பது மாறுதல்களையடையும் ஸ்வபாவமுடைய அசேதனம். 'யம்' என்கிற இது இவ்விரண்டு வஸ்துக்களையும் நியமனம் செய்கிறான் என்றது எதினால் இவ்விரண்டு வஸ்துக்களையும் நியமிக்கிறானோ ஆகையினால் 'யம்' என்னப்படுகிறது. தினந்தோறும் இப்படித் தெரிந்துகொள்ளுகிறவன் ஸ்வர்க்கலோகத்தையடைகிறான்' என்றர்த்தமுள்ள வாக்யத்தினால் நிர்வசனம் பண்ணப்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் கபிலர், குரு, குமாரிலர், ஜினன், புத்தன், சார்வாகன் முதலியவர்களின் மதத்தை அனுஸரித்தவர்களைப் போல லோகம் ப்ரம்மத்தை ஆத்மாவாக வுடையதல்ல என்று சொல்லு

1 தைத்திரீயம், ஆனந்தவல்லி-1-1. 2 சாந்தோக்யம்-8-3-4.

பா] இந்த லோகம் ஸத்யமென்னும் பதத்தினால் சொல்லப்படுகிற பர ப்ரம்மத்தினால் உண்டாக்கப்படுகிறபடியினால் ப்ரம்மத்தை ஆத்மாவாக வுடையது என்று அவர்கள் சொல்லுகிறதில்லை. அப்படியே பரப்ரம்மத்தினிடத்தில் இருக்கிறதென்றும் சொல்லுகிறதில்லை ஆதிசேஷனாகிய ரூப

கிறார்கள் என்று சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'ஸத்யம் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற' என்றாரம்பித்து. 'அப்ரதிஷ்டம்' என்னும் பதத்தினாலும் எல்லா லோகங்களுக்கும் விரோதம் வருகிறது முதலிய தோஷங்களினால் ப்ரத்யக்ஷமாய் ஏற்பட்ட, நிலை நின்றிருப்பதை மறுப்பது ஸம்பவிக்காதாகையினால் ஶாஸ்த்ரங்களில் ஆதாரம் என்று சொல்லப்பட்ட எல்லா வஸ்துக்களையும் மறுக்கிறார்கள் என்று சொல்லப்படுகிறதுஎன்று சொல்லுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. அத்தையே உதாஹரணத்தைக் கொண்டு விவரிக்கிறார்— 'ஆதிசேஷனாகிய ரூபத்தையுடைய' என்றாரம்பித்து. இத்தால் 'ப்ரதிஷ்டா' என்னும் பதம் தர்மம், அதர்மம், இவைகளை மாத்திரம் சொல்லுகிறது என்று வ்யாக்யானஞ் செய்தது நிராகரிக்கப்பட்டது 'எல்லா லோகங்களையும் தாங்குகிறது' என்பதற்கு ஸ்வரூபத்தினாலும், கார்யத்தினாலும், என்று தாத்பர்யம். ஆதிகூர்மம், ஆதிசேஷன், திக்கஜங்கள், முதலியவைகளால் பூமி தாங்கப்படுகிறது என்று ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டிருக்கும்பொழுது யுக்தி வாதிகளினால் 1 'ய꞉ ... ॥' என்று சொல்லப்படுகிறது. காற்றின் வேகத்தினால் பூமி சுழலுகிறது என்று சிலர் சொல்லுகிறார்கள். ஜைனர்கள் பாரமுள்ளதாகையினால் பூமி எப்பொழுதும் கீழேவிழுந்து கொண்டிருக்கிறது என்று சொல்லுகிறார்கள். 'அநீஶ்வரம்' என்னும் பதமும் விக்ரஹங்கள், அரசர்கள், முதலியலோகத்தில் கண்டறியப்பட்ட ஈஶ்வரர்களை மறுப்பதைச் சொல்லுகிறதல்ல அவர்கள் அவைகளை மறுக்கவில்லை யாகையினால். அப்படியே அவர்கள் மதத்தை லோக வ்யவஹாரத்தினால் ஏற்பட்ட ராஜாமுதலியவர்களை ஈஶ்வரன் என்று சார்வாகர்கள் சொல்லுகிறார்கள் என்று அனுவாதஞ் செய்திருக்கிறார்கள். ப்ரம்மமே இல்லை என்று மறுப்ப

1 தரித்ர்யா:-பூமிக்கு, தர்த்தா-தரிக்கிறவன், அந்ய:-வேறு, கஶ்சித்-ஒருவன், அஸ்தி - இருக்கிறானேயானால், தஸ்ய-அதற்கு, அபர:-மற்றொருவன்,தஸ்ய-அதற்கும், பர:-வேறொருவன்,தத:-அதைவிட,அந்ய:-வேறொருவன், ஏவம்-இப்படி, தேஷாம் அவர்களுக்கு, அநவஸ்திதி:- அநவஸ்தை, ஸ்யாத் உண்டாகும், தத:-ஆகையினால், தர்த்ர்யா:-தாங்குகிற, புவ ஏவ பூமிக்கே, சக்தி:-சக்தி.

த்தையுடைய பரமாத்மாவினுல் தரிக்கப்பட்ட பூமியல்லவோ எல்லா லோகங்களையும் தாங்குகிறது. அப்படியே * 'தேநேயம் நாகவர்யேண ஶிரஸா விധ்ருதா மஹீ। பிபர்தி மாலாம் லோகாநாம் ஸதேவாஸுரமாநுஷாம்॥'' என்று சொல்லப்பட்டது. ஸத்யஸங்கல்பனும், பரப்ரம்மமாயும், எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனுயுமிருக்கிற என்னுல் நியமிக்கப்படு

---

தையும் சொல்லுகிறதல்ல, அஸத்யம் என்பதோடு புனருக்தி வருமாகையினுல். ஆகையினுல் இவ்விடத்தில் வ்யுத்பத்தியை யனுஸரித்து ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டிருக்கிற நியமிக்கிறவன் இல்லை என்று மறுப்பதில் தாத்பர்யம் என்று சொல்லுகிருர்—'ஸத்ய ஸங்கல்பனும்' என்றாரம்பித்து. அபக்காந்தம் முதலியவைகளைப்போல அசேதனங்களின்ஸ்வபாவத்திலுல் ஜீவன், ஜீவனல்லாத வஸ்துக்கள், இவை இரண்டின் சேர்க்கையே இந்தலோகம், இதற்கு ஈஶ்வரனில்லை என்று ஜைனர் முதலியவர்களின் கொள்கையை அனுஸரித்து தர்மம் முதலியவைகளின் மாத்திரத்திலுலாவது 1 'அஜ்ஞோ ஹம் பரமேஶ்வராஜ்ஞோ மயி அவஸ்திதே' என்பதைப்போல என்னையே ஈஶ்வரனுக அபிமானித்துக் கொண்டிருப்பவர்களின் உத்திரவினுலாவது இடம், காலம், இவைகளால் அளவிடப்பட்ட அநேகம் ஈஶ்வரர்களின் பரம்பரையினுலாவது, லோகங்களின் வ்யாபாரங்கள் நடக்கின்றன என்றல்லவோ அவர்களின் மதம் என்று தாத்பர்யம். 'என்னுல் நியமிக்கப்படுகிறது' என்பதற்கு எவர்கள் என்னைத் தவிர வேறு ப்ரம்மா, ருத்ரன், முதலியவர்களைப் பரமேஶ்வரனுகக்கல்பிக்கிருர்களோ அவர்களும் ஆஸுரஸ்வபாவமுடையவர்கள் தான் என்று தாத்பர்யம். பகவானைத் தவிர வேறு சில ஈஶ்வரர்கள் நியமிக்கிறவர்களாக காணப்படுகிருர்கள், ஶ்ருதியிலும் சொல்லப்படுகிருர்கள். அப்படியிருக்கப் பகவானே எல்லாவற்றையும் நியமிக்கிருனென்பது எப்படிப்பொருந்தும்?என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'ஈஶ்வரஸ்ய' என்றாரம்பித்து. நியமிக்கிறவர்களா

---

* விஷ்ணுபுராணம் - 2 - 5 - 27. அயம் - இந்த, மஹீ - பூமி, தேந - அந்த, நாகவர்யேண - பாம்புகளுக்குள் ஶ்ரேஷ்டனுன ஆதிசேஷனுல், ஶிரஸா - தலையினுல், வித்ருதா-தரிக்கப்பட்டதாய்க் கொண்டு, தேவாஸுரமானுஷம்-தேவதைகள், அஸுரர்கள், மனுஷ்யர்கள், இவர்களோடுகூடிய,லோகானும் - லோகங்களினுடைய, மாலாம் - வரிசையை, பிபர்த்தி - தரிக்கிறது.

1 விஷ்ணு புராணம். அஜ்ஞ - மூடனே - மயி - நான், அவஸ்திதே - இருக்கும் பொழுது, பரமேஶ்வராஸம்ஜ்ஞ:-பரமேஶ்வரனென்று பேருடைய, அந்ய:- வேறொருவன், கிம் - இருக்கிருனு.

கிறது என்றும் சொல்லுகிறதில்லை. † 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே' என்றல்லவோ முன்னால் சொல்லப்பட்டது. மேலும் இப்படிச் சொல்லுகிறார்கள்—ஸ்திரீ புருஷர்களுடைய ஒருவர்க்கொருவர் ஸம்பந்தத்தினால் இந்த மனுஷ்யன், பசு முதலியவைகள்

---

கிய மற்றவர்களினுடைய நியமிப்பதாகிய வ்யாபாரமும் பகவானுக்கு வசப்பட்டது. அப்படியே 1 'கர்தா ஶாஸ்த்ரார்த்தவத்வாத்' என்றாரம்பித்து 2 'பராத்து தச்ச்ருதே:' என்கிற வரையில் ஸூத்ரங்களில்சொல்லப்பட்டது. இப்படி மூன்று வாக்யங்களினால் இந்த லோகத்தின் உத்பத்தி, ஸ்திதி, ப்ரவ்ருத்தி, இவைகள் பரமாத்மாவிற்கு வசப்பட்டதென்பதை ஒப்புக்கொள்ளுவதில்லை என்று சொல்லப்பட்டதாகிறது. அதில் லோகங்களின் உத்பத்தி ப்ரம்மத்தினால் உண்டாகிறதில்லை என்று ப்ரதிஜ்ஞை செய்யப்பட்டதை வேறொரு காரணத்தினால் ஏற்பட்டிருப்பதைக் கொண்டு இவ்விதமாக நிரூபிக்கிறார்கள் என்று சொல்லுகிறார்—'மேலும் இப்படிச் சொல்லுகிறார்கள்' என்றாரம்பித்து 'அபரஸ்பரஸம்பூதம்' என்றது முன் வாக்யத்தோடு ஒரே வாக்யமாயந்வயிக்கிறதல்ல, 'கிமந்யத்' முதலியது அந்வயிக்காததாகையினாலும், அப்படி அந்வயம் சொல்லுவதாக இருந்தால் கஷ்டப்பட்டுச் சொல்ல வேண்டுமாகையினாலும், அப்படிச் சொன்னாலும் அது பொருந்தாததாகையினாலும். இதுவே இவர்கள் ஆஸுரஸ்வபாவமுடையவர்கள் என்பதில் போதுமான காரணம், வேறென்ன சொல்ல வேண்டியது என்று கல்பிப்பது அநேகப்பதங்களைச்சேர்த்துக் கொள்ளவேண்டியது, முதலிய தோஷங்களையுடையது. 'மேலும் இப்படிச் சொல்லுகிறார்கள்' என்று பாஷ்யத்தில் சொல்லியிருப்பதோவெனில் அந்தப் பதங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும் என்கிற அபிப்ராயத்தினால்சொல்லப்பட்டதல்ல, 3 'அஸத்க்ராஹான்' என்று மேலே சொல்லியிருப்பதினாலேயே அது ஏற்படுகிற படியினால். ஆகையினால் 'காமஹைதுகம்' என்பதை நிரூபிப்பதற்காக 'அபரஸ்பரஸம்பூதம்' என்றிவை முதலியது சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸ்திரீ புருஷர்களுடைய' என்றாரம்பித்து எப்பொழுதும் உத்பத்தியாகிற கார்யம்இடைவிடாமல் உண்டாகிறபடியினால் ஒன்று காரணம் மற்றொன்று கார்யம்

---

† பகவத்கீதை-10-8.
1 ஶாரீரக ஸூத்ரம் - 2 - 3 - 33.
2 ஶாரீரக ஸூத்ரம் - 2 - 3 - 40.
3 பகவத்கீதை - 16 - 9.

உண்டானதாகக் காணப்படுகிறது. இப்படிக்கல்லாதது வேறேது காணப்படுகிறது. ஒன்றும் காணப்படவில்லை என்றர்த்தம். ஆகையினால் இந்த எல்லா லோகமும் காமத்தையே காரணமாகவுடையது என்று சொல்லுகிறார்கள். 8

---

*என்பதில்லாமல் என்று மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்திருப்பதும் மிகவும் அனுசிதம், ப்ரஸித்தமான அர்த்தத்தை விட்டுவிடுவதினாலும், 'காமஹைதுகம்' என்பது பொருந்தாதாகையினாலும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படிக்கில்லாதது வேறு எது காணப்படுகிறது' என்று. ஸ்திரீ புருஷர்களின் ஸம்பந்தமில்லாமலே புழுக்கள், ஸ்த்தாவரங்கள், இவைகளின் உத்பத்தி காணப்படுகிறது. அப்படியிருந்தபோதிலும் ஈஶ்வரனை மாத்திரம் காரணமாக வுடைய தேவதை முதலியவைகளின் ஸ்ருஷ்டி காணப்படவில்லை. நம்மால் பார்க்கப்படுகிற அயோநிஜ வஸ்துவையோவெனில் யோநிஜமானவஸ்துவைப்போலவே கண்ணுக்குத் தெரிவதினால் ஒப்புக்கொள்ளுகிறோம். அதிலும் எந்தக் காரணமிருந்தால் அவைகள் உண்டாகிறதோ, எதில்லாவிடில் அவைகள் உண்டாகிறதில்லையோ அப்படிப்பட்ட அந்தந்த ஸாமக்ரிகள் மாத்திரத்தினால் அந்தந்தக் கார்யங்கள் ஸம்பவிக்கும்பொழுது கர்த்தாவாக ஈஶ்வரனைக் கல்பிக்கிறதினாலாவது, வேதத்தில் சொல்லப்படுகிறான் என்று ஒப்புக்கொள்ளுவதினாலாவது, என்ன ப்ரயோஜனம் என்று தாத்பர்யம். 'கிமந்யத்காமஹைதுகம்' என்று மற்றவர்கள் சொன்னபாடம் அப்ரஸித்தமாகையினால் அதை அநாதரவு செய்திருக்கிறது என்று ப்ரகாசப்படுத்துவதற்காக 'கிமந்யத்' என்னும் பாடத்தை ஒப்புக்கொண்டு அது இல்லை என்று மறுப்பதைச் சொல்லுகிறதென்று ப்ரகாசப்படுத்துகிறார்—'ஒன்றும் காணப்படவில்லை என்றர்த்தம்' என்று. 'ஆகையினால்' என்பதற்கு இதிருந்தால் கார்யமுண்டாகிறது, இதில்லாவிடில் கார்யமுண்டாகிறதில்லை என்கிற யுக்தியின் பலத்தினால் என்றர்த்தம். 'காமஹைதுகம்' என்பது நம்மால் பார்க்கப்படுகிற காரணங்களை எல்லாம் குறிக்கிறது. காமத்தினிடத்தில் அதிக ப்ரீதியினால் அதைச்சொல்லியிருக்கிறது. எப்படி பாஷண்டர்களின் ஆகமங்களும் அந்தந்தப் புருஷர்களாலுண்டாக்கப்பட்டன என்று அந்தந்த ஆகமங்களினாலும், அப்பொழுது நேரில் பார்த்திருந்ததைக்காரணமாகவுடைய உபதேசத்தின் பரம்பரையினாலும் ஸ்தாபிக்கப்படுகிறதோ, எப்படி பழைய பட்டணங்களின் சரித்திரம் முதலியவைகள் சொல்லப்படுகின்றனவோ, அப்படி ஒவ்வொரு கல்பங்களிலும் உண்டாகிய ஈஶ்வரனாகிய சில்பியினுடைய லோகங்களாகிய பட்டணத்தை ஸ்ருஷ்டிக்கிற சரித்திரம் ஸம்பவிக்கக்கூடியதாயிருந்தபோதிலும் உக்ரமான மருந்துக்கு ஸமானமாகிய ஶாஸ்த்ரங்களில் த்வேஷத்தினால் அதை அபலாபம் செய்கிறார்கள் என்று சொல்லப்பட்டதாகிறது.* 8

ஏதாம் த்ருஷ்டிமவஷ்டப்ய நஷ்டாத்மாநோऽல்பபுத்தய: |
ப்ரபவந்த்யுக்ரகர்மாண: க்ஷயாய ஜகதோऽஹிதா: || 9

ப — ரை] ஏதாம் - இந்த, த்ருஷ்டிம் - ஜ்ஞானத்தை, அவஷ்டப்ய - அடைந்து, நஷ்டாத்மாந: - பார்க்கப்படாத ஆத்மாக்களை யுடையவர்களாய், அல்பபுத்தய: - அல்பமான புத்தியையுடையவர்களாய், உக்ரகர்மாண: - க்ரூரமான கார்யங்களைச் செய்பவர்களாயும், அஹிதா: — பாபிகளாயும், ஜகத: - லோகத்தின், க்ஷயாய - நாசத்திற்குக் காரணமாக, ப்ரபவந்தி - ஆகிறார்கள். 9

பா] இந்த ஜ்ஞானத்தையடைந்து தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மாவைப் பாராதவர்களாய் குடம் முதலியவைகளைப்போல் அறியப்படுகிற வஸ்துவாகிய தேஹத்தில், அறிகிறவனுகையினால் அந்தத் தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மாதெரிந்து கொள்ளப்படுகிறான் என்று பகுத்தறிய சக்தி

---

தா] 'இந்த ஜ்ஞானத்தை' என்பதற்கு இப்படி விபரீதமான ஜ்ஞானத்தை என்றர்த்தம். 'அவஷ்டப்ய' என்பதற்கு ஆகாரமாக அடைந்திருக்கை முதலிய அர்த்தம் தோன்றும், அவைகளை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்— 'அடைந்து' என்று. நித்யமாகிய ஆத்மாவிற்கு நாசமில்லையாகையினால் 'நஶ' என்னும் தாது தெரியாமையைச் சொல்லும் என்கிறபடியே தெரியாமையாகிய அர்த்தம் இங்கே சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'தேஹத்தைவிட' என்றாரம்பித்து. ஸ்வயம் ப்ரகாசமாக இருக்கிற ஜீவாத்மாவின் ஸ்வரூபம் தேஹமென்கிற ப்ரமத்திற்கு ஆதாரமாக எப்பொழுதும் தெரிந்துகொள்ளப்பட் டிருக்கிறபடியினால் 'தேஹத்தைவிடவேறுபட்ட' என்று சொல்லி யிருக்கிறது. அப்படி ஆத்மாவைப் பாராம லிருப்பதற்குக் காரணமாகிய அல்ப புத்தியுடையவனு யிருக்கை இவ்விடத்தில் சொல்லப்படுகிற தாகையினால் புனருக்தியில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'குடம் முதலியவைகளைப் போல' என்றாரம்பித்து. அன்றிக்கே பசு, ம்ருகம், முதலியவைகளைப் போலக் கர்ம வசத்தினால் தேஹத்தைவிட வேறுபட்ட ஆத்மாவைத் தெரிந்து கொள்ளாமை தானுகவே உண்டானது என்று முன் சொல்லப்பட்டது. 'அல்பபுத்தய:' என்பதினாலேயேவெனில் அதைப் பரிஹரிக்கச் சக்தி யில்லாமை சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். இப்படி உயர்ந்தவனுயும் தாழ்ந்தவனுயு மிருக்கிற ஆத்மாக்களைப் பற்றிய விபரீதஜ்ஞானம் சொல்லப்பட்டது. பிறகு 'ப்ரபவந்த்யுக்ரகர்மாண:' என்றாரம்பித்து அதன் ப்ரயோஜனம் சொல்லப்படுகிறது. 'உக்ரகர்மாண:' என்கிற இடத்தில் உக்ரமான வ்ரதம் முதலிய

யில்லாதவர்களாய், எல்லா ப்ராணிகளையும் ஹிம்ஸை செய்கிறவர்களாய் லோகத்தின் நாசத்திற்குக் காரணமாகிறார்கள். 9

𑌕𑌾𑌮𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌂 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃 |
𑌮𑍋𑌹𑌾𑌦𑍍𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇𑌽𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 10

ப - ரை] 𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰𑌂 - பூர்த்தி செய்யமுடியாத, 𑌕𑌾𑌮𑌂 - காமத்தை, 𑌆𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 - அடைந்து, 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 - அஜ்ஞானத்தினால், 𑌅𑌸𑌦𑍍𑌗𑍍𑌰𑌾𑌹𑌾𑌨𑍍 - கெட்டவழியாக ஸம்பாதிக்கப்பட்ட வஸ்துக்களை, 𑌗𑍃𑌹𑍀𑌤𑍍𑌵𑌾 - அங்கீகரித்துக்கொண்டு, 𑌅𑌶𑍁𑌚𑌿𑌵𑍍𑌰𑌤𑌾𑌃 - அபரிசுத்தங்களான வ்ரதங்களை யுடைத்தானவர்களாய்க்கொண்டு, 𑌦𑌮𑍍𑌭𑌮𑌾𑌨𑌮𑌦𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃-டம்பம் அஹங்காரம், கர்வம், இவைகளையுடையவர்களாய்க் கொண்டு, 𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌨𑍍𑌤𑍇 - ப்ரவ்ருத்திக்கிறார்கள். 10

பா] அடையக்கூடாத விஷயங்களைப்பற்றிய காமத்தை யடைந்து அத்

வைகள் சொல்லப்படுகிற தென்று தோன்றும், அதை விலக்குவதற்காகச்சொல்லுகிறார்—'எல்லா ப்ராணிகளையும் ஹிம்ஸைசெய்கிறவர்களாய்' என்று. '𑌅𑌹𑌿𑌤𑌾𑌃' என்பதற்குத் தன்னோடு சேர்ந்தவர்களுக்கும்பாபத்தை உண்டாக்கக் கூடியவர்களாய் என்றர்த்தம். 'லோகத்தின் நாசத்திற்கு' என்பதற்கு 1 '𑌅𑌨𑍇𑌨 𑌪𑍍𑌰𑌸𑌵𑌿𑌷𑍍𑌯𑌧𑍍𑌵𑌮𑍇𑌷 𑌵𑍋𑌽𑌸𑍍𑌤𑍍𑌵𑌿𑌷𑍍𑌟𑌕𑌾𑌮𑌧𑍁𑌕𑍍', 2 '𑌪𑌰𑌸𑍍𑌪𑌰𑌂 𑌭𑌾𑌵𑌯𑌨𑍍𑌤𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 𑌪𑌰𑌮𑌵𑌾𑌪𑍍𑌸𑍍𑌯𑌥', என்றிவை முதலியவைகளால் சொல்லப்பட்ட பகவானாலுண்டாகிய லோகத்தை வ்ருத்தி செய்யக்கூடிய தர்மங்களின் மர்யாதையை மீறிநடக்கிறார்கள். அவர்களை யனுஸரிக்கிற மற்ற மூடர்களும் அவர்களின் ஆகாரம், உபதேசம், முதலியவைகளில் நம்பிக்கையினால் த்ரிவர்க்கம், மோக்ஷமாகிய வ்ருத்தியை யடையாத எல்லா லோகத்திற்கும் மூன்றுவிதமான தாபங்களாலடிபடுவதாகிய நாசத்திற்குக் காரணமாகிறார்கள் என்றர்த்தம். 9

தா] காமமல்லவோ லோகத்திற்குக் காரணமாகக் கீழே சொல்லப்பட்டது. ஆகையினால் அதுவே அவர்களுக்கு அடையவேண்டியதாக அபிமானிக்கப்பட்டது. அதை அடைவதற்கு அங்கங்களாகிய டம்பம், அஹங்காரம், முதலிய அபரிசுத்தமான வ்ரதம் வரையிலுள்ளவைகள் இந்த ஶ்லோகத்தினால் சொல்லப்படுகின்றன. அடையத்தகாத விஷயங்களைப்பற்றியிருக்கை '𑌦𑍁𑌷𑍍𑌪𑍂𑌰' மாக இருப்பதற்குக்காரணம். அன்றிக்கே விஷயங்களையடைவதல்லவோ காமத்திற்குப்பூர்த்தி, ஆகையினால் 'அடையத்தகாத விஷயங்களைப்பற்றி'யிருக்கையே பூர்த்திசெய்ய

1 பகவத்கீதை - 3 - 10  2 பகவத்கீதை - 3 - 11

தை ஸாதிக்க வேண்டுமென்கிற ஆசையினால் அஜ்ஞானத்தினால் அந்யாயமாய் ஸம்பாதிக்கப்பட்ட வஸ்துக்களை க்ரஹித்துக்கொண்டு ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத வ்ரதங்களையுடையவர்களாய் டம்பம், அஹங்கா

---

முடியாமலிருக்கை என்றாகவுமாம். 'ஆஶ்ரித்ய (அடைந்து)' என்பதற்கு ப்ரயோஜனமாக நினைத்து என்றர்த்தம். இந்த அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அத்தை ஸாதிக்கவேண்டுமென்கிற ஆசையினால்' என்று. விபரீதமான கார்யத்தில் ப்ரவ்ருத்தி செய்வதற்குக் காரணமாகிய செய்யத்தகுந்தகார்யம், செய்யத்தகாத கார்யம் இவைகளைப்பற்றிய பகுத்தறிவில்லாமை இவ்விடத்தில் 'மோஹ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அஜ்ஞானத்தினால்' என்று. ஸத்க்ரஹணம் ஸாதிதும் (எவைகளின் ஸம்பாத்யம் கெட்டதோ அவைகள்)' 'ஸத்க்ராஹாஃ' என்று சொல்லப்படுகின்றன. தர்மத்தில் நிலையுள்ளவர்களல்லவோ ந்யாயமாய் ஸம்பாதிக்கிறார்கள். காமத்தில் ஊற்றமுடையவர்களோ வெனில் திருட்டு முதலியவைகளினால் அதற்கு வேண்டிய ஸாமக்ரிகளை ஸம்பாதிக்கிறார்கள் என்று சொல்லுகிறார்— 'அந்யாயமாய் ஸம்பாதிக்கப்பட்ட வஸ்துக்களை' என்று. 1 'ஈஹந்தே காமபோகார்த்தமந்யாயேநார்த்தஸஞ்சயாந்' என்று மேலே சொல்லியிருப்பது இதையே விவரித்திருக்கிறது. ஆகையினாலேயே கெடுதலான ஆக்ரஹங்களை என்று வ்யாக்யானம் செய்திருப்பது உசிதமல்ல. 'க்ருஹீத்வா (ஸம்பாதித்து)' என்பதற்கு அப்பொழுதே அதை உபயோகப்படுத்துகிறதைச் சொல்லுகிறதினாலாவது, அப்பொழுதே தன்னுடையதென்று அபிமானத்தைச் சொல்லுகிறதினாலாவது புனருக்தி பரிஹரிக்கப்படுகிறது. பாஷண்டிகளினுடைய ஆகமம் முதலியவைகளில் சொல்லப்பட்ட வ்ரதங்கள் மனிதனுக்குப் பார்ப்பதற்கும் தொடுவதற்கும் தகாதவனாயிருக்கைக்குக் காரணங்களாக இருப்பதினால் தாங்களே அபரிசுத்தங்கள் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத' என்றாரம்பித்து. தர்மத்தில் எண்ணமில்லாமலிருந்தபோதிலும் தமோகுணம்மேலிட்டவர்களாய் விஷத்தைப்போக்கடிப்பது, கல்லைப்பிளக்கும்படி செய்வது, ஸூர்யனை ஸ்தம்பனம் செய்வது, ப்ரதிமைகளைப்பேசும்படி செய்வது, முதலிய மோசம் செய்யக்கூடிய உபாயங்களினால் வசப்படுத்தப்பட்டவர்களுக்கு வேதங்களில் சொல்லாத வ்ரதங்களில் ஸம்பந்த முண்டாகிறது. அன்றிக்கே பராக்ரமம் அஹங்காரம் முதலியவைகளினாலுண்டான ஶாஸ்த்ரங்களுக்கு விரோதமான ஸங்கல்பம் இவ்விடத்தில்

---

1 பகவத்கீதை - 16 - 12

ரம், கர்வம், இவைகளையுடையவர்களாய்க் கொண்டு ப்ரவ்ருத்திக்கிறார்கள். 10

சிந்தாமபரிமேயாஞ்ச ப்ரளயாந்தாமுபாஶ்ரிதா: |
காமோபபோகபரமா ஏதாவதிதி நிஶ்சிதா: || 11

ப-ரை] ப்ரளயாந்தாம் - ப்ரளயகாலம் வரையில் ஸாதிக்கக்கூடியவைகளாகிய, அபரிமேயாம் - அளவில்லாத, சிந்தாம் - எண்ணத்தை, உபாஶ்ரிதா: - அடைந்தவர்களாய், காமோபபோகபரமா: - காமத்தை அனுபவிப்பதையே முக்யமான புருஷார்த்தமென்று எண்ணிக்கொண்டவர்களாய், ஏதாவத்-இவ்வளவுதான், இதி-என்று, நிஶ்சிதா: - நிஶ்சயமுள்ளவர்களாயும். 11

பா] இன்றைக்கோ நாளைக்கோ மரணத்தையடையப் போகிறவர்கள்

---

'வ்ரத' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட வ்ரதங்களிலும் பகவானுக்கு ஆராதனமாகச் சொல்லப்படுகிறது என்பதைத் தெரியாதவர்கள் ஶாஸ்த்ரத்தில் சொல்லியபடி அனுஷ்டிக்காமையினால் அவைகளும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத வ்ரதங்களே. டம்பம், அஹங்காரம் முதலியவைகள் ஏற்கனவே வ்யாக்யானம் செய்யப்பட்டன. 'கர்வம்' ஆவது இவ்விடத்தில் பணம், ஜாதி, வித்யை, முதலியவைகளைக் காரணமாக உடையதாய் அவனவனிஷ்டப்படிக்குச் செய்வதற்குக் காரணமாகிய கீழ்ப்படியாமை. 10

தா] இப்படி ப்ரவ்ருத்தி செய்கிறவர்களுக்கு மேல்மேலே உண்டாகக்கூடிய மனதின் காரியங்கள் சொல்லப்படுகின்றன—இந்த ஶ்லோகத்தினால். செய்யக்கூடாத விஷயத்தைப்பற்றி வீணான ஶ்ரமப்படுகிறார்கள் என்று தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'இன்றைக்கோ நாளைக்கோ' என்றாரம்பித்து. 'அபரிமேயாம்' என்பதினால் எண்ணிறந்த விஷயங்களைப்பற்றியதாகையினால் அளவில்லாத கிளைகளையுடையது என்பது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அளவில்லாததாயும்' என்று. 'ப்ரளயாந்தாம்' என்கிற இடத்தில் மரணம் அடையும் வரையிலும் என்று சொல்லியிருப்பது அவ்வளவு ஸ்வாரஸ்யமுள்ளதல்ல, அளவில்லாத காலத்தினால் ஸாதிக்கக்கூடிய கார்யத்தை அல்பகாலத்தில் ஸாதிக்கவேண்டுமென்று ஆசைப்படுகிறார்கள் என்பதோவெனில் அவர்களுடைய அதிகமான அஜ்ஞானத்தைத் தெரிவிக்கிறபடியினால் ப்ரயோஜனத்தோடுகூடியது 'ப்ரளய' என்னும் பதமும்மிகவும் ப்ரஸித்தமான அர்த்தத்தைச் சொல்லுகிறதென்பது உசிதம். எண்ணுகிற

அளவில்லாததாயும், மஹா ப்ரளயகால பர்யந்தம் செய்து ஸாதிக்கக் கூடிய விஷயத்தைப்பற்றியதாயுமிருக்கிற சிந்தையை யடைந்தவர்களாயும், அப்படியே காமங்களை யனுபவிப்பதையே மேலான புருஷார்த்தமென்று எண்ணிக்கொண்டவர்களாயும், இதைவிட மேலான புருஷார்த்தம் இல்லை என்கிற நிஶ்சயத்தையுடையவர்களாயும் 11

𑌆𑌶𑌾𑌪𑌾𑌶𑌶𑌤𑍈𑌰𑍍𑌬𑌦𑍍𑌧𑌾𑌃 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 ।
𑌈𑌹𑌨𑍍𑌤𑍇 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌮𑌨𑍍𑌯𑌾𑌯𑍇𑌨𑌾𑌰𑍍𑌥𑌸𑌞𑍍𑌚𑌯𑌾𑌨𑍍 ॥ 12

ப — ரை] 𑌆𑌶𑌾𑌪𑌾𑌶𑌶𑌤𑍈𑌃 - ஆசையாகிற அநேகம் கயிறுகளினால், 𑌬𑌦𑍍𑌧𑌾𑌃 - கட்டுப்பட்டவர்களாயும், 𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃 - காமம், கோபம், இவைகளையே முக்யமாய் உடையவர்களாயும், 𑌕𑌾𑌮𑌭𑍋𑌗𑌾𑌰𑍍𑌥𑌂 - காமங்களையனுபவிப்பதற்காக, 𑌅𑌨𑍍𑌯𑌾𑌯𑍇𑌨 - அந்யாயத்தினால், 𑌅𑌰𑍍𑌥𑌸𑌞𑍍𑌚𑌯𑌾𑌨𑍍 - பணங்களின் கூட்டங்களைக் குறித்து, 𑌈𑌹𑌨𑍍𑌤𑍇 - ப்ரவ்ருத்திக்கிறார்கள். 12

பா] ஆசையென்று பேருடைய அநேகம் கயிறுகளால் கட்டப்பட்டவர்க

---

*புருஷர்கள் ப்ரளயம் வரையில் இருக்கிறதில்லையாகையினால் அவர்களின் எண்ணம் ப்ரளயகாலவரையிலிருக்கிறதென்பதும் யுக்தமல்ல, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மஹா ப்ரளயகாலம் பர்யந்தம்' என்றாரம்பித்து. கணக்கில்லாத எண்ணப்பட்ட விஷயங்களுக்குள் ஒவ்வொன்றே ஸாதிக்கமுடியாதென்று தாத்பர்யம். ப்ரயோஜனமாக நினைக்கப்பட்டவைகளுக்குள் காமங்களை யனுபவிப்பதே எவர்களுக்கு முக்யமானதோ அவர்கள் '𑌕𑌾𑌮𑍋𑌪𑌭𑍋𑌗𑌪𑌰𑌮𑌾𑌃' என்னப்படுகிறார்கள். இதையே சொல்லுகிறார்—'காமங்களை யனுபவிப்பதையே' என்றாரம்பித்து. ஸ்வர்க்கம், மோக்ஷம், இவைகளை விலக்குவதற்காக '𑌏𑌤𑌾𑌵𑌤𑍍' என்னும் பதம் என்று சொல்லுகிறார்—'இதைவிட மேலான' என்றாரம்பித்து. 'நிஶ்சயத்தையுடையவர்களாய்' என்பதற்கு இவ்விடத்தில் '𑌨𑌿𑌶𑍍𑌚𑌿𑌤𑌾𑌃' என்னும் பதம் '𑌭𑍁𑌕𑍍𑌤𑌾𑌃 𑌬𑍍𑌰𑌾𑌹𑍍𑌮𑌣𑌾𑌃' என்பதைப்போல கர்த்தாவைச் சொல்லுகிற 'த' என்னும் விக்ருதியையுடையது என்று தாத்பர்யம்.* 11

*தா] கீழே '𑌚𑌿𑌨𑍍𑌤𑌾𑌂' என்று சொன்னது செய்யவேண்டிய கார்யங்களைப் பற்றியது, ஆசையோவெனில் பலங்களைப்பற்றியது. ஆசைகளின் விஷயங்கள் கணக்கில்லாதவைகளாகையினால் அவைகளைப்பற்றிய ஆசைகளும் அநேகம் பிரிவுகளை உடையவைகளாயிருக்கின்றன. '𑌕𑌾𑌮𑌕𑍍𑌰𑍋𑌧𑌪𑌰𑌾𑌯𑌣𑌾𑌃' என்கிற இடத்தில் கோபம் முக்யமாக அடையவேண்*

ளாயும், காமக்ரோதங்களிலேயே நிஷ்டையை யுடையவர்களாயும், காமங்களை யனுபவிப்பதற்காக அந்யாயத்தினால் பணங்களின் கும்பலைக் குறித்து ப்ரவ்ருத்திக்கிறார்கள். 12

இதமத்3ய மயா லப்3த4மிமம் ப்ராப்ஸ்யே மநோரத2ம் |
இதமஸ்தீத3மபி மே ப4விஷ்யதி புநர்த4நம் || 13

[ப - ரை] இதம் - இது, மயா – என்னால், அத்3ய - இப்பொழுது, லப்3த4ம் - அடையப்பட்டது, இமம் - இந்த, மநோரத2ம் - இஷ்டத்தை, ப்ராப்ஸ்யே-அடையப்போகிறேன், இதம் - இந்த, த4நம் - பணம், அஸ்தி - இருக்கிறது, இத3மபி – இந்தப் பணமும், மே - எனக்கு, புந:— மறுபடியும், ப4விஷ்யதி - உண்டாகப்போகிறது. 13

---

டியதாக அவர்களால் நினைக்கப்படாமையினால் காமக்ரோதம் இவைகளில் ஊற்றமுடையவர்களாயிருப்பது மாத்திரம் இங்கே சொல்லப் படுகிறதென்று சொல்லுகிறார்—'காமக்ரோதங்களிலேயே நிஷ்டையுடையவர்களாய்' என்று. 'பர' என்னும் பதம் இவ்விடத்தில் ஆதாரம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. காமமே தடுக்கப் பட்டதாய்க்கொண்டு கோபமாய் மாறுகிறது என்று முன்னே விஸ்தாரமாகச் சொல்லியிருப்பதை ஜ்ஞாபகப்படுத்துவதில் தாத்பர்யமாகையினால் புனருக்தியில்லை. 'காமங்களை யனுபவிப்பதற்காக' என்பதற்கு விஷயங்களை அனுபவிப்பதற்காக என்றர்த்தம். அதாவது மேலானபுருஷார்த்தமாகிய மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய பரமாத்மாவின் ஆராதனத்திற்காக எது செய்யவேண்டியதோ அதுவே அனர்த்தத்தைக் கொடுக்கக்கூடியதாயும், மிகவும் அல்பமாயும், க்ஷணிகமாயுமிருக்கிற ஆபாஸஸுகத்திற்குக்காரணமாயிற்றே இது என்ன ஆஶ்சர்யம்?என்று தாத்பர்யம் 'அந்யாயத்தினால்' என்பதற்கு யஜ்ஞம், முதலியவைகளைப் போல ந்யாயமாக ஸம்பாதிக்கப்பட்டவைகளினால் காமங்களையனுபவிப்பது ஸம்பவிக்காதல்லவா என்று தாத்பர்யம். இரண்டாம் வேற்றுமை அந்வயிக்கும் விதத்தைத்தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'குறித்து' என்று.'ஸஞ்சயான்' என்பதும், 'ப்ரவர்த்தந்தே' என்பதும் இவ்விடத்தில் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறது. அதில் ப்ரவ்ருத்தியினால் ஸம்பாதிக்கிறார்கள் என்று அர்த்தம் சொல்லப்படுகிறதாகையினால் இரண்டாம் வேற்றுமை அந்வயிக்கிறது என்று தாத்பர்யம். 12

பா] இந்தப்பூமி, புத்திரன், முதலிய எல்லாம் என்னுடைய ஸாமர்த்தியத்தினாலேயே அடையப்பட்டது. அத்ருஷ்டம் முதலியவைகளினாலில்லை. இந்த இஷ்டத்தை நானே அடையப்போகிறேன். அத்ருஷ்டம் முதலியவைகளோடு கூடினவனாயில்லை. என்னுடைய ஸாமர்த்தியத்தினாலேயே அடையப்பட்ட இந்தப் பணம் எனக்கிருக்கிறது. இந்தப்பணமும் மறுபடியும் எனக்கு என் ஸாமர்த்தியத்தினாலேயே உண்டாகப் போகிறது. 13

அஸௌ மயா ஹத: ஶத்ருர்ஹநிஷ்யே சாபராநபி| *

ப - ரை] அஸௌ - இந்த, ஶத்ரு: - சத்ருரு, மயா - என்னால், ஹத: - கொல்லப்பட்டான், அபராநபி - மற்றவர்களையும், ஹநிஷ்யே - கொல்லப்போகிறேன். *

---

தா] இப்படி 'ஸம்ஸாரமோக்ஷமாக நாமேவ ப்ரயோஜநமாக ஸுகமேவ மோக்ஷ:' என்றிவை முதலியவைகளால் காமங்களையனுபவிப்பதே மேலான புருஷார்த்தம் என்று நினைத்து அதற்காக அர்த்தமாகிற புருஷார்த்தத்தை ஒப்புக்கொள்ளுகிறார்கள் என்று சொல்லப்பட்டது பிறகு அதில் ப்ரவ்ருத்தித்தவனுக்கு வ்யதிரேக ஸம்ஜ்ஞாவஸ்த்தையையுடைய யோகியைப்போல அடையப்பட்டதையும், அடையப்படாததையும், செய்யப்பட்டதையும், செய்யப்படாததையும், பற்றிய நிரூபணம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இத்தால் முன்பு சொல்லப்பட்ட எண்ணங்களில் விஷயங்கள் கணக்கில்லாததென்பதும் சொல்லப்பட்டதாகிறது. மேலே சொல்லப்போகிற பணத்தைத் தவிர மற்றதைச் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காக 'பூமி, புத்ரன்' என்னும் பதங்கள் சொல்லப்பட்டன. ஸத்வகுணம் மேலிட்டவர்களுக்கு உண்டாகக்கூடிய ஈஶ்வரனுக்கு வசப்பட்ட செய்த கார்யத்தையும்,செய்யப்படாத கார்யத்தையும், பற்றிய நிரூபணத்தை விலக்குவதற்காக 'அஹங்காரத்தோடு கூடி யிருப்பதினாலும் இப்படிப்பட்ட எண்ணம் ப்ரமம் என்பது 'மயா' என்பதினால் காட்டப்படுகிறது என்று சொல்லுகிறார்—'என்னுடைய ஸாமர்த்தியத்தினாலேயே' என்று. 'ஏ' என்பதின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தை விவரிக்கிறார்—'அத்ருஷ்டம் முதலியவைகளினால் இல்லை' என்று. இப்படியே உத்தம புருஷனைச் சொல்லியிருப்பதினால் சேர்த்துக்கொள்ளப்பட்ட 'அஹம்' என்னும் பதத்திற்கு வ்யாக்யானமாகிய 'நானே' என்றிவை முதலிய இடங்களிலும் அபிப்ராயம் அறிந்து கொள்ளவேண்டியது. 'இதமத்ய' என்றிவை முதலியவைகளால் எண்ணத்தின் விஷயங்கள் அநேகம் என்பது காட்டப்படுகிறது. 13

பா] பலசாலியாகிய என்னால் இந்தச்சத்துரு, கொல்லப்பட்டான். மற்றச்சத்துருக்களையும் சூரனும் வீரனுமிருக்கிற நான் கொல்லப்போகிறேன் இவ்விடத்தில் அல்ப புத்தியுடையவர்களாயும் துர்பலர்களாயுமிருக்கிற மற்றவர்களால் கல்பனை செய்யப்பட்ட அத்ருஷ்டம் முதலிய ஒத்தாசையினால் என்ன ப்ரயோஜனம்.

---

தா] இப்படி இஷ்டத்தை அடைவதில் அவர்கள் அபிப்ராயம் சொல்லப்பட்டது. பிறகு அநிஷ்டத்தை நிவ்ருத்தி செய்வதைப்பற்றிய அபிப்ராயம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இவ்விடத்தில் 'மயா (என்னால்)' என்பது சத்துருவைக் கொல்லுவதற்குபயோகங்களாகிய குணங்களையுடையவன் நான் என்கிற அபிமானத்தைக் காட்டுகிறது என்று சொல்லுகிறார்—'பலசாலியாகிய' என்று. சூரனாவது புலி முதலியவைகளைப்போல எதிரியின்பலத்தை த்ருணமாக நினைத்து ப்பயமில்லாமல் ப்ரவேசிக்கும் ஸ்வபாவமுடையவன், 1 'ஶூரஂ்ச பீருஂ கவிஂ ஜடஂ' என்று சூரனைப் பயந்தவனுக்கு எதிர்நடையாகச் சொல்லியிருப்பதினால். வீரனாவது இவ்விடத்தில் பராக்கிரமம் செய்யும் பொழுது வாட்டம் முதலிய விகாரங்களில்லாதவன், புத்திமான்களாகிய அனேகம் புருஷர்களால் ப்ரவ்ருத்தி செய்யப்படுகிற அத்ருஷ்டத்தை அநாதரவு செய்துவிட்டுத் தன்னுடைய ஸாமர்த்தியம் மாத்திரத்தை ஒப்புக்கொள்ளுவதற்குக் காரணமென்ன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்—'இவ்விடத்தில் அல்ப புத்தியுடையவர்களாயும்' என்று. இதின் கருத்தாவது—பணம்முதலியவைகளை க்ரஹித்துக் கொள்ளுவதில் ஆசையையுடையவர்களினால் தங்கள் அபிப்ராயங்களை மறைத்துச் செய்யப்பட்ட க்ரந்தங்களைக்கொண்டு வஞ்சனை செய்யப்பட்டவர்களாய் தானம், யஜ்ஞம், முதலியவைகளில் ப்ரவ்ருத்திசெய்து கையில் கிடைத்திருக்கும் பொருளையும் செலவழித்து ஏழைகளாகிறார்கள்-என்பது. 'துர்பலர்களாயும்' என்பதற்கு அதிகப்பலசாலியாக இருப்பவனை வஞ்சனைசெய்ய முடியாது, 2 'நபேதஸாத்யா பலதர்பிதா ஜநாஃ' என்று சொல்லியிருப்பதினால், என்று தாத்பர்யம். 'கல்பனை செய்யப்பட்ட' என்பதற்கு 'லௌகாயதம் (எல்லா ஜனங்களாலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதினால் லோகங்களில் பரவி இருக்கிறது)' என்னும் பதத்தினால் தாத்பர்யமாகக் கொள்ளப்படுகிற ப்ரத்யக்ஷமாகக் கண்டறியப்பட்ட இவை இருந்தால் கார்யமுண்டாகிறது இவை இல்லாவிட்டால் கார்யமுண்டாகிறதில்லை என்கிற யுக்திபாகிற ப்ரமாணத்தினால் ஏற்படாத என்றர்த்தம். *

---

1. சூரனையும், பயந்தவனையும், கவியாகவும், மூடனாகவுமிருக்கிற. 2 ராமாயணம் - ஸுந்தரகாண்டம் - 41-3-பலதர்ப்பிதா:-பலத்தினால் கொழுப்படைந்த, ஜநா: - ஜனங்கள், நபேத ஸாத்யா: - மித்ரபேதத்தினால் ஸாதிக்கத்தக்கவர்களல்ல.

பா-அ] ஆகவே—

𑌈𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌹𑌮𑌹𑌂 𑌭𑍋𑌗𑍀 𑌸𑌿𑌦𑍍𑌧𑍋𑌽𑌹𑌂 𑌬𑌲𑌵𑌾𑌨𑍍 𑌸𑍁𑌖𑍀 ॥

ப-ரை] 𑌅𑌹𑌂 - நான், 𑌈𑌶𑍍𑌵𑌰𑌃 – எல்லாவற்றையும் நியமிப்பவன், 𑌅𑌹𑌂 - நான், 𑌭𑍋𑌗𑍀 - போகங்களையனுபவிக்கிறவன், 𑌅𑌹𑌂 - நான், 𑌸𑌿𑌦𑍍𑌧𑌃–ஸித்தியடைந்தவன், 𑌬𑌲𑌵𑌾𑌨𑍍 - பலசாலி, 𑌸𑍁𑌖𑍀 - ஸுகத்தையுடையவன். 14

பா] நான் ஸ்வாதீனன், மற்றவைகளையும் நானே நியமிக்கிறவன், நான் ஸ்வபாவத்தினாலேயே போகங்களையுடையவன், அத்ருஷ்டம்முதலியவைகளாலல்ல, நான் ஸ்வபாவத்தினாலேயே ஸித்தியடைந்தவன், அத்ருஷ்டம் முதலிய மற்றொரு காரணத்தினாலல்ல, அப்படியே ஸ்வபாவத்தினா

---

தா] இப்படி இஷ்டத்தை அடைவதும் அநிஷ்டத்தைப் பரிஹரிப்பதும் தன்னுடைய ஸாமர்த்தியம் மாத்திரத்தினால் உண்டாகிறது என்கிற ப்ரமம் சொல்லப்பட்டது. பிறகு தன்னுடைய ஸாமர்த்தியம் முதலியவைகளிலும் அவைகளுக்குக் காரணமாகிய அத்ருஷ்டம் முதலியவைகள் வேண்டியதில்லை என்கிற ப்ரமம் சொல்லப்படுகிறது '𑌈𑌶𑍍𑌵𑌰𑍋𑌽𑌹𑌂' என்றாரம்பித்து, என்று சொல்லுகிறார்—'ஆகவே' என்று. ஸர்வேஶ்வரனைப்போல மற்றொருவனால் தான் நியமிக்கப்படுகிறான் என்பதில்லை என்பதுவும் இவ்விடத்தில் '𑌈𑌶𑍍𑌵𑌰𑌃' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'நான் ஸ்வாதீனன்' என்று. தன்னைத்தவிர மற்றெல்லா வஸ்துக்களையும் நியமிக்கிறவன் என்கிற அபிமானமும் இவ்விடத்தில் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று சொல்லுகிறார்—'மற்றவைகளையும்' என்று. உன்னுடைய தோள்களில் ஸகல பூமண்டலமும் இருக்கிறது நீயல்லவோ மற்றெல்லாவஸ்துக்களையும் நியமிக்கிறவன் 'என்றொருவன் தன்னைக் குறித்துச்சொன்னால்தான் அப்படிப்பட்டவன் என்கிற அபிமானத்தினாலேயே அல்லவோ அப்படிப்பட்டவர்களுக்கு ப்ரீதி முதலியது உண்டாகிறது. முன்னும் பின்னும் சொல்லியிருப்பதை அனுஸரித்து '𑌭𑍋𑌗𑍀' என்பது போகங்களை யனுபவிக்கக்கூடிய ஸாமர்த்தியத்தைச் சொல்லுகிறது. அதில் தர்மம் முதலியவைகளின் ஸ்வபாவத்தினால் அப்படியானவனல்ல என்பது '𑌅𑌹𑌂' என்னும் பதத்தின் தாத்பர்யம் என்று சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தினாலேயே' என்று. 'ஸித்தியடைந்தவன்' என்பதற்கு ஜ்ஞானம் முதலிய மேன்மைகளையுடையவன் என்றர்த்தம். அல்லது இஷ்டங்களெல்லாம் ஸித்தமாக இருப்பவன் என்றாகவுமாம். 'ஸுகத்தையுடையவன்' என்பதற்கு பிள்ளை பிறப்பது முதலிய

லேயே பலமுடையவன், ஸ்வபாவத்தினுலேயே ஸுகத்தையுடையவன். 14

𑌆𑌢𑍍𑌯𑍋𑌽𑌭𑌿𑌜𑌨𑌵𑌾𑌨𑌸𑍍𑌮𑌿 𑌕𑍋𑌽𑌨𑍍𑌯𑍋𑌽𑌸𑍍𑌤𑌿 𑌸𑌦𑍃𑌶𑍋 𑌮𑌯𑌾 ।
𑌯𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 𑌦𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 𑌮𑍋𑌦𑌿𑌷𑍍𑌯 𑌇𑌤𑍍𑌯𑌜𑍍𑌞𑌾𑌨𑌵𑌿𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃 ॥ 15

ப - ரை] 𑌆𑌢𑍍𑌯𑌃 - பணக்காரனுகவும், 𑌅𑌭𑌿𑌜𑌨𑌵𑌾𑌨𑍍 - நல்ல ஜாதியையுடையவனுகவும், 𑌅𑌸𑍍𑌮𑌿 - ஆகிறேன், 𑌅𑌨𑍍𑌯𑌃 - வேறு, 𑌕𑌃 - எவன், 𑌮𑌯𑌾 - என்னேடு, 𑌸𑌦𑍃𑌶𑌃 — ஸமமானவன், 𑌅𑌸𑍍𑌤𑌿 - இருக்கிருன், 𑌯𑌕𑍍𑌷𑍍𑌯𑍇 — யாகம் செய்யப்போகிறேன், 𑌦𑌾𑌸𑍍𑌯𑌾𑌮𑌿 - தானம் செய்யப்போகிறேன், 𑌮𑍋𑌦𑌿𑌷𑍍𑌯𑍇 - ஸந்தோஷப்படப்போகிறேன், 𑌇𑌤𑌿 - என்று, 𑌅𑌜𑍍𑌞𑌾𑌨 𑌵𑌿𑌮𑍋𑌹𑌿𑌤𑌾𑌃 — அஜ்ஞானத்தினுல் மயக்கப்பட்டவர்களாய் (எண்ணுகிருர்கள்). 15

பா] நான் ஸ்வபாவத்தினுலேயே பணக்காரனுக இருக்கிறேன். இந்த லோகத்தில் எனக்கு ஸமமாகிய வேறேருவன் தன்னுடைய ஸாமர்த்தி

---

*ஸுகங்களை யனுபவிக்கிறவன் என்றர்த்தம். 'போகீ, ஸுகீ' என்னும் பதங்கள் ஒன்று காரணத்தையும் மற்றொன்று ப்ரயோஜனத்தையும் சொல்லுகிறபடியினுலாவது அவைகளுக்குப் புனருக்தியைப் பரிஹரித்துக் கொள்ளவேண்டியது. ஈஶ்வரனுயிருக்கை முதலாக நல்ல ஜாதி வரையிலுள்ள இவை எல்லாம், அனுபவித்து மிகுதியான கர்மங்களினுலுண்டாகிறது என்பது முன்னமேயே ஶ்ருதிகளையும் ஸ்ம்ருதிகளையும் கொண்டு நிரூபிக்கப்பட்டது.* 14

*'இந்தலோகத்தில்' என்பதற்கு வேறு லோகம் இல்லை என்றல்லவோ அவர்கள் அபிப்ராயம் என்று தாத்பர்யம். அன்றிக்கே '𑌅𑌸𑍍𑌤𑌿' என்னும் பதத்தினுல் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட எல்லாக்காலங்களிலும் தனக்கு ஸமமானவன் இல்லை என்கிற தாத்பர்யத்தினுல் 'இந்த லோகத்தில்' என்று சொல்லியிருக்கிறது. அதாவது லோகம் உள்ள வரையில் தேடினுலும் என்று தாத்பர்யம். கீழேசொல்லப்பட்ட 'வாவ' என்பவைகளினுல் தனித்தனியே ஒவ்வொரு குணங்களினுலும் தனக்கு ஸமமானவன் இல்லை என்று சொல்லப்படுகிறது என்று சொல்லுகிருர்—'தன்னுடைய ஸாமர்த்தியத்தினுலேயே' என்றுரம்பித்து. எனக்கு ஸமமானவன் எவன் என்றிவ்வளவு சொன்னுல் போதுமானதாயிருக்க, 𑌅𑌨𑍍𑌯𑌃 (வேறொருவன்)' என்னும் பதம் வேறொருவனுயிருக்கையே அஸாமர்த்தியத்திற்குக் காரணம் என்று தெரிவிப்பதற்காக. அன்*

யத்தினாலேயே அடையப்பட்ட எல்லா ஸம்பத்துக்களையு முடையவன் எவனிருக்கிறான். நான் தானாகவே யஜ்ஞம் செய்யப்போகிறேன், தானம் செய்யப்போகிறேன், ஸந்தோஷப்படப்போகிறேன். பகவானுடைய அனுக்ரஹத்தை எதிர்பாராமல் தன்னாலேயே யாகம், தானம், முதலியவை செய்யமுடியும் என்றிப்படி அஜ்ஞானத்தினால் மயக்கப்பட்டவர்களாய் எண்ணுகிறார்கள். 15

அநேகசித்தவிப்ராந்தா: மோஹஜாலஸமாவ்ருதா: |
ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகே(அ)ஶுசௌ || 16

ப - ரை] அநேகசித்தவிப்ராந்தா: - அநேகவிதமான நினைவுகளினால் ப்ரமத்தையடைந்தவர்களாயும், மோஹஜாலஸமாவ்ருதா: - அஜ்ஞானங்களின் கூட்டங்களினால் மறைக்கப்பட்டவர்களாயும், காமபோகேஷு-காமங்களை யனுபவிப்பதில், ப்ரஸக்தா: - அதிக ஆசையை யுடையவர்களாயும், அஶுசௌ அபரிசுத்தமான, நரகே-நரகத்தில், பதந்தி-விழுகிறார்கள். 16

---

*றிக்கே என்னைவிட வேறானவன் எனக்கு ஸமமானவனாக இல்லை, நானே எனக்கு ஸமமானவன். 1 'ராமராவணயோர்யுத்தம் ராமராவணயோரிவ' என்பதைப்போல என்று தாத்பர்யமாகவுமாம். 'யக்ஷ்யே தாஸ்யாமி (யாகம் செய்யப்போகிறேன், தானம் செய்யப்போகிறேன்)' என்கிற இது ஸத்வகுணம் மேலிட்டவர்களைப்பரிஹாஸம்செய்வதில்மாத்திரம் முடிவு பெறுகிற டம்பத்தினாலேயே. 'தம்பேநாவிதிபூர்வகம்' என்றல்லவோ மேலே சொல்லப்படுகிறது. 'ஸந்தோஷப்படப்போகிறேன்' என்பது ஸ்வர்க்கம் முதலியவைகளை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டல்ல. பின்னை எப்படி யென்னில் யாகம் செய்தவன் என்பது முதலியவைகளைக் காரணமாகவுடைய பெரியவன் என்கிற பேர் கிடைப்பதினால். 'யாகம் செய்யப்போகிறேன்' என்றிவை முதலிய எண்ணத்திலும் இந்த ஸங்கல்பத்தினாலேற்பட்ட அஹங்காரமாகிற தோஷத்தோடு சேர்ந்திருப்பதைக்காட்டுகிறார்—'பகவானுடைய அனுக்ரஹத்தை எதிர்பாராமல்' என்று. இப்படி 'அஜ்ஞானத்தினால் மயக்கப்பட்டவர்களாய்' என்பதே போதுமானது. 'எண்ணுகிறார்கள்' என்பது விசதமாகத் தெரியவேண்டியதற்காச் சொல்லப்பட்டது.* 15

1. *ராமாயணம் - யுத்த காண்டம்-110-24. ராமன் ராவணன் இவர்களுடைய சண்டை அவர்களுடைய சண்டையைப் போலிருக்கிறது. அதாவது அதற்கு ஸமமாக வேறொன்றுமில்லை என்றர்த்தம்.*

பா] அத்ருஷ்டம், ஈஶ்வரன், முதலிய ஒத்தாசைக் காரணங்களில்லாமல் தன்னாலேயே எல்லாம் செய்யமுடியும் என்று நினைத்துக்கொண்டு இப்படிச் செய்வோம், அப்படிச் செய்வோம் மற்றொன்றையும் செய்வோம் என்று அநேகவிதமான எண்ணங்களினால் ப்ரமத்தையடைந்தவர்களாய், இப்படிப்பட்ட அஜ்ஞானங்களின் கூட்டத்தினால் மறைக்கப்பட்டவர்களாய், காமபோகங்களில் அதிக ஆசை யுடையவர்களாய் இருக்கும்

---

தா] *பகவானிடத்தில் வைக்கப்பட்ட பாரத்தையுடையவர்களல்லவோ அநேகமாக நிஶ்சயத்தை யடைந்திருக்கிறார்கள். இவர்களுக்கு அவர்களைவிட வ்யத்யாஸத்தைச் சொல்லுகிறார்—'தன்னாலேயே எல்லாம்' என்றாரம்பித்து. சிந்தை என்கிற வ்யாபாரத்தை யுடைய மனது சித்தம் என்னப்படுகிறது. அதின் ப்ரவ்ருத்திகள் அநேகமாகையினால் அதையே அநேகம் என்று சொல்லியிருக்கிறது. இதையே விவரிக்கிறார்—'இப்படிச் செய்வோம்' என்றாரம்பித்து. 'விப்ராந்தா:' என்பதற்கு அலைக்கழிக்கப்பட்டவர்களாய் என்றர்த்தம். அன்றிக்கே 'விப்ராந்தி' என்பது விபரீதஜ்ஞானம். 'மோஹம்' ஆவது அஜ்ஞானம். அதுவுமன்றிக்கே 1'அந்யதா சிந்திதம் கார்யம் தைவேந க்ருதமந்யதா' என்கிற ந்யாயத்தினால் இவர்கள் எண்ணுவதே ப்ரமம் என்று சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட' என்று. 2'ந ஜாது காம: காமாநாமுபபோகேந ஶாம்யதி। ஹவிஷா க்ருஷ்ணவர்த்மேவ பூய ஏவாபிவர்த்ததே॥' என்று சொல்லப்படுகிற அர்த்தம் 'ப்ர' என்னும் உபஸர்க்கத்தினால் காட்டப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அதிக ஆசையுள்ளவர்களாய்' என்று. 3'இதம் க்ருதமிதம் கார்யமிதமந்யத் க்ருதாக்ருதம்। ஏவமீஹாஸமாயுக்தம் க்ருதாந்த: குருதே வஶே॥' என்று சொல்லப்பட்ட அர்த்*

---

1. *அந்யதா-வேறுவிதமாக, சிந்திதம் - யோசனை செய்யப்பட்ட, கார்யம்-கார்யமானது, தைவேந - தைவத்தினால், அந்யதா - வேறாக, க்ருதம் - செய்யப்பட்டது.*

2. *விஷ்ணுபுராணம்-4-10-23. காம:-ஆசையானது, காமாநாம் - ஆசைப்படப்பட்ட வஸ்துக்களின், உபபோகேந - அநுபவிப்பதினால், நஶாம்யதி-சாந்தியை அடைகிறதில்லை. ஹவிஷா-ஹவிஸ்ஸினால், க்ருஷ்ணவர்த்மேவ-நெருப்பைப்போல, பூயஏவ-மறுபடியும், அபிவர்த்ததே-வ்ருத்தியடைகிறது.*

3. *இதம் - இது, க்ருதம் - செய்யப்பட்டது, இதம் - இது, கார்யம் - இனி செய்யத்தக்கது, அந்யத்-வேறாகிய, இதம் - இது, க்ருதாக்ருதம்-சிலபாகம் செய்யப்பட்டு சிலபாகம் செய்யப்படாமலிருக்கிறது, ஏவம்-இப்படி, ஈஹாஸமாயுக்தம்-எண்ணத்தோடு கூடியிருப்பவனை, க்ருதாந்த:—யமன், வஶே-தன் ஸ்வாதீனத்தில், குருதே-செய்கிறான்.*

பொழுது நடுவில் மரணத்தை யடைந்தவர்களாய் அபரிசுத்தமான நரகத்தில் விழுகிறார்கள். 16

ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தநமாநமதாந்விதா: |
யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேநாவிதிபூர்வகம் || 17

ப - ரை] ஆத்மஸம்பாவிதா: தன்னாலேயே புகழ்ந்துகொள்ளப் பட்டவர்களாயும், ஸ்தப்தா:—ஒரு கார்யத்தையும் செய்யாதவர்களாயும், தநமாந மதாந்விதா:-பணத்தினாலும் மற்றவைகளின் அபிமானத்தினாலுமுண்டாகிய மதத்தையுடையவர்களாயுமிருக்கிற, தே - அவர்கள், தம்பேந - டம்பத்தினால், அவிதிபூர்வகம் - சாஸ்த்ரத்தில் விதித்திருக்கிற விதமாக அல்லாமல், நாமயஜ்ஞை:—பெயரையே ப்ரயோஜனமாக உடைய யாகங்களினால், யஜந்தே - யாகம் செய்கிறார்கள். 17

பா] தன்னாலேயே ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர்களாய் அதாவது தாங்களே தங்களைக் கொண்டாடிக்கொள்ளுகிறார்கள் என்றர்த்தம், தன்னை எல்லாம் நிறைந்தவர்களாக நினைத்துக்கொண்டவர்களாய், ஒரு கார்யத்

---

தத்தைச் சொல்லுகிறார்—'நடுவில் மரணத்தையடைந்தவர்களாய்' என்று. அபரிசுத்தமாகிய காமபோகத்தில் அதிக ஆசையுடையவர்களுக்கு அப்படிப்பட்டதாகிய பலமே உண்டாகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'அசுசௌ' என்கிற விசேஷணம் சொல்லப்பட்டிருக்கிறது. அபரிசுத்தமாயிருக்கையாவது மலம், மூத்ரம், ரக்தம், மாம்ஸம் முதலிய இவைகள் நிறைந்திருக்கை. 16

'ஆத்மஸம்பாவிதா:' என்கிற இடத்தில் வேறொருவர் இவர்களை ஸ்தோத்திரம் செய்வதற்கு ப்ரஸ்தாவமே இல்லாமையினால் 'ஸ்வஹஸ்த:' என்பதைப்போல தன்னாலேயே என்பது தொக்கியிருக்கிறதென்று சொல்லுகிறார்—'தன்னாலேயே ஸ்தோத்திரம் செய்யப்பட்டவர்களாய்' என்று. ஆத்மஶ்லாகை முதலிய தோஷத்தை ப்ரகாசம் செய்வதற்காகச் சொல்லுகிறார்—'அதாவது தாங்களே' என்றாரம்பித்து. அயலார்களால் ஸ்தோத்திரம் செய்யப்பட்டிருந்த போதிலும் பெரியோர்கள் வெட்கப்படுகிறார்கள் அல்லவோ. 'ஸ்தப்தா:' என்பதற்குக் காரணம் 'தன்னை எல்லாம் நிறைந்தவர்களாக நினைத்துக்கொண்டவர்களாய்' என்றது. 'ஒருகார்யம் செய்யாதவர்களாய்'என்றது பதத்தின் அர்த்தம் 'ஒரு கார்யததையும்' என்பதற்கு ஆசார்யனை ஸேவிப்பது முதலிய கார்யங்களையும் என்றர்த்தம். பணம் முதலிய இந்த லோகத்திற்குரிய ஸம்பத்துக்கள் சேர்ந்திருப்பதினா லுண்டாகிய மதத்தினால் அத்ருஷ்டத்தில் தனக்குண்டாகிய குறைவை மறந்து விடுகிறான் என்று

தையும் செய்யாதவர்களாயும், எப்படியெனில் பணத்தினாலும், வித்யை, ஜாதி இவைகளின் அபிமானத்தினாலும் உண்டாக்கப்பட்ட மதத்தோடு கூடினவர்களாய் பேரையே ப்ரயோஜனமாகவுடைய அதாவது யாகம் செய்கிறவன் என்கிற பேர் மாத்திரத்தை ப்ரயோஜனமாகவுடைய யஜ்ஞங்களால் யாகம் செய்கிறார்கள். அதுவும் டம்பமாகிற காரணத்தினால். அதாவது தான் யாகம் செய்கிறவன் என்கிற ப்ரஸித்தியடைவதற்காக

சொல்லுவதற்காகப் பரலோகத்திற்கு வேண்டிய கார்யங்களில் ப்ரவ்ருத்திக்காமலிருப்பதற்குக் காரணமென்ன என்று ஆக்ஷேபிக்கிறார்— 'எப்படி' என்று. 1 'வித்யாமதோ தநமதஸ்த்ருதீயோபிஜநோ மத:' என்று ஒன்று சேர்த்துச் சொல்லியிருப்பதினாலும், இவ்விடத்தில் தனத்தைச் சொல்லியிருப்பதினாலும் அத்துடன் சேர்த்துச் சொல்லப்படுகிற மதத்திற்குக் காரணமாகிய மானம், வித்யை, ஜாதி, முதலியவைகளைப் பற்றியதே என்று சொல்லுகிறார்—'வித்யை, ஜாதி, இவைகளின் அபிமானத்தினாலும்' என்று. நாமத்தோடு சேர்ந்திருக்கிற யஜ்ஞங்கள் நாமயஜ்ஞங்கள். சேர்ந்திருக்கையாவது இவ்விடத்தில் தர்மம் முதலிய ப்ரயோஜனங்களை விலக்குவதற்காக ப்ரயோஜனமாகவும் அதற்குக் காரணமாகவுமிருக்கையினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பேரையே ப்ரயோஜனமாகவுடைய' என்று. கீர்த்தி முதலியவைகளிலும் 'நாம' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் அவைகளில் ஆசை 'டம்ப' என்பதினாலேயே ஏற்பட்டிருப்பதினாலும், பேரில் அதிக ப்ரஸித்தி இருப்பதினாலும், பரிஹாஸம் செய்யவேண்டியதற்காகச் சொல்லவேண்டியது உசிதமாயிருக்கையினாலும் 'யாகம்செய்கிறவன் என்கிற பேர் மாத்திரத்தை' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. ஆகையினாலேயே யஜ்ஞம் என்கிற பேர் மாத்திரமே ஒழிய அவைகள் வாஸ்தவத்தில் யஜ்ஞங்களல்ல என்று வ்யாக்யானஞ் செய்திருப்பதும் அவ்வளவு ப்ரயோஜனமுள்ளதல்ல என்று காட்டப்பட்டது, 'அவிதிபூர்வகம்' என்று சொல்லியிருப்பதினாலேயே இந்த அர்த்தம் ஏற்பட்டபடியினாலும். 'அதுவும் டம்பமாகிற காரணத்தினால்' என்பதினால் ஒருவித பலத்தில் ஆசைகாரணமென்று சொல்லியிருக்கிறது. 'அதாவது' என்றாரம்பித்து விஷயத்தினாலும் பலத்தினாலும் அதை விவரித்திருக்கிறது. விதியாவது இவ்விடத்தில் விதிக்கிற வாக்

1. மஹாபாரதம், உத்யோக பர்வம் 34-46. வித்யாமத:-வித்யையினால் உண்டான கர்வம், தனமத:-பணத்தினால் உண்டான கர்வம், த்ருதீய:-மூன்றாவது, மத:-ஜாதியினாலுண்டான கர்வம்.

ஶாஸ்த்ரங்களில் விதித்திருக்கிறபடியல்லாமல் யாகம் செய்கிறார்கள். 17

பா-அ] அவர்கள் இப்படிப்பட்டவர்களாய் யாகம் செய்கிறார்கள் என்று சொல்லுகிறார்— 18

**𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 𑌬𑌲𑌂 𑌦𑌰𑍍𑌪𑌂 𑌕𑌾𑌮𑌂 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 𑌚 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 ।**
**𑌮𑌾𑌮𑌾𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑍋𑌽𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 ॥** 18

ப-ரை] 𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌂 - அஹங்காரத்தையும், 𑌬𑌲𑌂 - பலத்தையும், 𑌦𑌰𑍍𑌪𑌂 - கர்வத்தையும், 𑌕𑌾𑌮𑌂 - காமத்தையும், 𑌕𑍍𑌰𑍋𑌧𑌂 - கோபத்தையும், 𑌸𑌂𑌶𑍍𑌰𑌿𑌤𑌾𑌃 - அடைந்தவர்களாய்க்கொண்டு, 𑌆𑌤𑍍𑌮𑌪𑌰𑌦𑍇𑌹𑍇𑌷𑍁 - தன்னுடையவும் அயலாருடையதுமாகிய தேஹங்களில்(இருக்கிற), 𑌮𑌾𑌂 - என்னை, 𑌪𑍍𑌰𑌦𑍍𑌵𑌿𑌷𑌨𑍍𑌤𑌃-த்வேஷம் செய்துகொண்டும், 𑌅𑌭𑍍𑌯𑌸𑍂𑌯𑌕𑌾𑌃 - பொறாமையுள்ளவர்களாய்க் கொண்டும் (செய்கிறார்கள்). 18

பா] வேறொருவரையும் எதிர்பாராமல் நானே எல்லாவற்றையும் செய்கிறேன் என்கிற அஹங்காரத்தை யடைந்தவர்களாயும், அப்படியே எல்லாவற்றையும் செய்வதில் என்னுடைய பலமே போதுமானது என்று பலத்

---

*யம். அதில் சொல்லியவிதங்களை விட்டுவிடுவது இவ்விடத்தில், '𑌅𑌵𑌿𑌧𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌕𑌂' என்பது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதித்திருக்கிறபடியல்லாமல்' என்று* 17

*புனருக்தி முதலிய தோஷங்களைப் பரிகரிப்பதற்காக அடுத்த ஶ்லோகம் ஸத்வகுணம் மேலிட்டவர்களால் செய்யப்படுகிற யாகங்களுக்கு அங்கங்களாகிய குணங்களுக்கு விரோதமான குணங்களைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அவர்கள் இப்படிப்பட்டவர்களாய்' என்றாரம்பித்து. பகவானே எல்லாவற்றையும் செய்விக்கிறான் என்பதை விலக்குகிறது அஹங்காரம் என்பது. எதைப்பரிஹரிப்பதற்காக ஸ்ம்ருதிகளால் 1 '𑌅𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑌮𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍍𑌯 𑌯𑌜𑍍𑌞𑌦𑌾𑌨𑌤𑌪𑌃𑌕𑍍𑌰𑌿𑌯𑌾𑌃 । 𑌕𑍁𑌰𑍍𑌵𑌂𑌸𑍍𑌤𑌤𑍍𑌫𑌲𑌮𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌪𑍁𑌨𑌰𑌾𑌵𑌰𑍍𑌤𑌨𑌂 𑌤𑍁 𑌤𑌤𑍍 ॥' என்று சொல்லப்படுகிறதே. பலத்தையுடையவனுடைய பிரக்கைமாத்திரம் தோஷமில்லாமலிருந்தபோதிலும் 2 '𑌸𑌹𑌵𑍀𑌰𑍍𑌤𑌾 𑌬𑌲𑍇𑌨' என்றிவை முதலிய*

---

1. *அஹங்காரம்-அஹங்காரத்தை, ஆஶ்ரித்ய அடைந்து, யஜ்ஞதானதப க்ரியா:-யஜ்ஞம், தானம், தபஸ், முதலிய க்ரியைகளை, குர்வந் - செய்துகொண்டு, தத்பலம் அவைகளின் பலத்தை, ஆப்நோதியதி-அடைகிறானேயானால் தத்-அது, புனராவர்த்தநம்-திரும்புதலையுடையது.*

2. *ஸாத்விகத்யாகத்திற்கு மந்திரம். இதற்குப் பலமந்தரம் என்று பெயர்.*

தையும், ஆகையினால் எனக்கு ஸமானவன் வேறொருவருமில்லை என்கிற கர்வத்தையும், இப்படிப்பட்ட என்னுடைய ஆசை மாத்திரத்தினால் எல்லாம் உண்டாகப்போகிறது என்று காமத்தையும், எனக்கு எவர்கள் அநிஷ்டத்தைச் செய்கிறார்களோ அவர்களெல்லாரையும் கொல்லப்போகிறேன் என்கிறகோபத்தையும், இப்படி இவைகளை யடைந்தவர்களாய்க் கொண்டு தன்னுடைய தேஹத்திலும் அயலாருடைய தேஹங்களிலுமிருக்கிறவனையும், எல்லாவற்றையும் நியமிக்கிறவனையும், புருஷோத்தமனையு

---

*வைகளுக்கு விரோதமாகத் தன்னுடைய பலமே போதுமென்று அனுஸந்தானம் செய்வது இங்கே சொல்லப்படுகிறது. இவ்விரண்டையும் காரணமாகவுடைய அஹங்காரமாவது எல்லாரையும் அவமானம் செய்வதற்குக்காரணமாயும், பூஜிக்கத்தகுந்தவர்களைப் பூஜிப்பதற்கு விரோதியுமாகிய ஸ்வபாவம். பகவானுடைய அனுக்ரஹத்தினாலேயே இஷ்டங்களை யடைவதும் அநிஷ்டங்களைத் தடுப்பதும் என்பதற்கு விரோதமானவைகள் காமக்ரோதங்கள் என்கிற க்ரமத்தை யனுஸரித்து டாம்பிகர்கள் செய்யும் யாகங்களுக்கு அங்கங்களாகிய குணங்களின்வரிசையை விவரிக்கிறார்—'வேறொருவரையும் எதிர்பாராமல்' என்றாரம்பித்து. 'ஸம்ஶ்ரிதாः' என்பதற்கு நன்றாக அடைந்தவர்களாய், அதாவது வேறொன்றையும் எதிர்பாராத காரணங்கள் என்றுஅபிமானித்தவர்களாய் என்றர்த்தம். இவ்விடத்தில் 'பரதேஹேஷு (அயலானுடைய தேஹங்களில்)' என்று சொன்னது யஜ்ஞத்திற்கு அனுகூலராயும் விரோதிகளாயுமிருக்கிற ருத்விக்குக்கள் திருடர்கள் முதலியவர்களை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு. ஏழாம் வேற்றுமையினால் இருக்கிற என்பது ஏற்பட்டது. அதுவும் ப்ரவ்ருத்திக்கும்படி செய்வதற்காக என்பது ஶ்ருதி வாக்யம் முதலியவைகளைக்கொண்டு முன்பு விஸ்தாரமாய் நிரூபிக்கப்பட்டது. அவர்கள் எண்ணுவதற்கு விரோதமான ஆகாரத்தை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'எல்லாவற்றையும் நியமிக்கிறவனையும்' என்று. நன்மையில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்வதே பொறாமைக்குக் காரணமாயிற்று என்று தாத்பர்யம். 'புருஷோத்தமனையும்' என்பதற்கு எவனுடைய மேன்மையை அறிந்த மாத்திரத்தினால் க்ருதக்ருத்யனாகிறானென்று கீழே சொல்லப்பட்டதோ, மிகவும் உபகாரியாகிய அவனை இவர்களுக்கு த்வேஷம் செய்வதற்கும் பொறாமை செய்வதற்கும் இடமானான் என்று தாத்பர்யம். எல்லாவற்றையும்ப்ரவ்ருத்திக்கும்படி செய்வது முதலிய குணங்களைச் சொல்லியிருப்பது குணங்களைத் தோஷமாக நிரூபிப்பதாகிய பொறாமையின் லக்ஷணத்தை வெளிப்படுத்துவதற்காக. புருஷோத்தமன் என்று சொல்லும் ஸந்தர்ப்பத்தில் நினைவு*

மிருக்கிற என்னைக்குறித்துப் பொறுமையுடையவர்களாயும், கெட்டயுக்தி களால் நான் இருப்பதைப்பற்றித் தோஷத்தை வெளிப்படுத்திக்கொண்டு என்னைப் பொறுக்காதவர்களாயும், அஹங்காரம் முதலியவைகளை அடை

---

முதலியவைகளை உண்டாக்குவதற்காகவல்லவோ 1 'ஸம்ஸ்ரயம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:' என்று சொல்லப்பட்டது. அதுவே இவ்விடத்தில் 'ஆத்மபரதேஹேஷு' என்பதினால் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது என்றும் தாத்பர்யம். 'ப்ரத்விஷந்த:, அப்யஸூயகா:' என்கிற பதங்கள் முன்பின்னாகமாறி ஒன்று காரணமாகவும் ஒன்று கார்யமாகவும் அந்வயிக்கிறது என்கிற க்ரமத்தையும், 'யஜந்தே' என்கிற பதத்தைச் சேர்த்துக்கொண்டு வாக்யத்தை முடித்துக்கொள்ளவேண்டும் என்பதையும் சொல்லுகிறார்—'கெட்டயுக்திகளால்' என்றாரம்பித்து. பகவானுக்குக் கீழடங்கினவன் என்னில் கர்மங்களுக்கு வசப்பட்டவன் என்பது எப்படி? பலங்கள் கர்மத்தினாலுண்டாவதாயிருந்தால் ஈஶ்வரனால் என்ன ப்ரயோஜனம்? என்றிவை முதலியவைகள் கெட்ட யுக்திகள். பொறுமையில்லாமைக்கு லக்ஷணம் சொல்லுகிற வ்யாஜத்தினால் பொறுமையின் லக்ஷணத்தையும் ப்ரஹஸ்பதி 2 'நகுணாந் குணிநோ ஹந்தி ஸ்தௌதி சாந்யகுணாநபி। நாந்யதோஷேஷு ரமதே ஸாநஸூயா ப்ரகீர்த்திதா ॥' என்று சொன்னார். பொறுக்காமையாகிற லக்ஷணத்தினால் த்வேஷத்தையும் விவரிக்கிறார்—'என்னைப் பொறுக்காதவர்களாயும்' என்று. பொறுக்காதவர்களாயிருக்கையாவது அவனுடைய உத்திரவிற்கு மீறி நடக்கிறவரையிலும் என்று எண்ணிக்கொள்ளவும். இதுவும் தன்னுடைய வம்ஶத்தில் பிறந்தவர்களும் அபரிசுத்தமான நரகத்தில் விழுவதற்குக் காரணம். அப்படியே 3 'ஜந்மாந்தரஸஹஸ்ரேஷு தபஸா பாவிதாத்மநாம்। யேஷாம் நக்ஷீணம் பாபம் த்வேஷ்டி தே நாராயணம் ஹரிம்॥' என்று சொல்லப்படு

---

1. பகவத்கீதை - 15 - 15.

2. அத்ரிஸ்ம்ருதி - 1 - 34. குணின:—குணத்தை யுடையவர்களின், குணாந் - குணங்களை, நஹந்தி - மறைக்கிறதில்லை, அந்யகுணானபி - அல்பகுணங்களையுடையவர்களையும், ஸ்தௌதி—ஸ்தோத்திரம் செய்கிறான், அந்யதோஷேஷு-அயலாருடையதோஷங்களில், ந ரமதே - த்ருப்தியடைகிறதில்லை, ஸா-அது, அநஸூயா — பொறுமையில்லாமையென்று, ப்ரகீர்த்திதா - சொல்லப்பட்டது.

3. பாரதம் - சாந்திர்வம் - மோக்ஷதர்மம் - 355-6-ய: - எவன், விபுதஶ்ரேஷ்டம் - தேவதைகளுக்குள் உயர்ந்தவனாகிய, நாராயணம் ஹரிம் தேவம் -

ந் து யாகம் முதலிய எல்லா க்ரியைகளையும் செய்கிறார்கள் என்றர்த்தம். 18

தாநஹம் த்விஷத: க்ரூராந் ஸம்ஸாரேஷு நராதமாந் |
க்ஷிபாம்யஜஸ்ரமஶுபாநாஸுரீஷ்வேவ யோநிஷு || 19

ப - ரை] த்விஷத:-என்னை த்வேஷம் செய்கிற, க்ரூராந் - க்ரூரஸ்வபாவமுடைய, நராதமாந்-மனிதர்களுக்குள் அதமர்களாகிய, அஶுபாந் பாபிகளாகிய, தாந் - அவர்களை, அஹம் - நான், ஸம்ஸாரேஷு - ஸம்ஸாரங்களில், ஆஸுரீஷு - அஸுரர்களின் ஸ்வபாவமுடைய, யோநிஷ்வேவ - ஜாதிகளிலேயே, அஜஸ்ரம் - எப்பொழுதும், க்ஷிபாமி - தள்ளுகிறேன். 19

பா] இப்படி என்னை எவர்கள் த்வேஷிக்கிறார்களோ அவர்களையும், க்ரூரமான ஸ்வபாவமுடையவர்களையும், நராதமர்களையும், அஶுபமானவர்களையும், நான் எப்பொழுதும் பிறப்பு, கிழத்தனம், மரணம், முதலியவைக

---

கிறது. இப்படியே 1 'யே த்விஷந்தி மஹாத்மாநம் நஸ்மரந்தி ச கேஶவம்| நதேஷாம் புண்யதீர்த்தேஷு கதிஸ்ஸம்ஸர்கிணாமபி||' என்றிவை முதலியதும் இவ்விடத்தில் நினைக்கத்தக்கது. 'நாமயஜ்ஞை:' என்பது மற்ற க்ரியைகளையும் குறிக்கிறது என்பதைச் சொல்லுகிறார்—'யாகம் முதலிய' என்றாரம்பித்து. 18

தா] இப்படி த்வேஷம் முதலியவைகளை முன்னிட்டுச் செய்யும் யாகம் முதலியவைகளுக்கும் அவைகளுக்குத் தகுந்தபடி விரோதமான பலங்களைக் கொடுப்பவனும் நானே என்று சொல்லப்படுகிறது—'தாநஹம்' என்றாரம்பித்து இரண்டு ஶ்லோகங்களினால். பக்ஷபாதம், தயையில்லாமை, முதலியவைகளைப் பரிஹரிப்பதற்காகத் 'தாந்(அந்த)' என்று அநுவாதம் செய்திருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படி என்னை எவர்கள்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் நான்கு விஶேஷணங்களினாலும் 2 'நமாம் துஷ்க்ருதிந:' என்கி

நாராயணனாகிய தேவதையை, த்விஷ்யாத்-த்வேஷம் செய்வானோ, தஸ்ய-அவனுடைய, பிதர:—பித்ருக்கள், நரகே-நரகத்தில், ஶாஶ்வதீஸ்ஸமா:-அநேகம் ஆயிரம் வருஷங்கள், மஜ்ஜந்தி - முழுகுகிறார்கள்.

1. பாரதம் - சாந்திபர்வம்-மோக்ஷதர்மம் - 336 - 366-யே-எவர்கள், மஹாத்மானம் - மஹாத்மாவாகிய பகவானைக் குறித்து, த்விஷந்தி - த்வேஷம் செய்கிறார்களோ, கேசவம்-ஸ்ரீ க்ருஷ்ணனை, நஸ்மரந்திச - நினைப்பதில்லையோ, தேஷாம் - அவர்களுக்கும், ஸம்ஸர்கிணாமபி - அவர்களோடு சேர்ந்தவர்களுக்கும், புண்ய தீர்த்தேஷு - புண்ய தீர்த்தங்களில், கதி:—நல்லகதியானது, ந-இல்லை.

2. பகவத்கீதை—7-15

ளாகச் சுழன்றுகொண்டிருக்கிற இவைகளின் பரம்பரைகளில் அதிலும் ஆஸுரஸ்வபாவமுடைய ஜாதிகளிலேயே தள்ளுகிறேன். அதாவது எனக்கனுகூலமாக நடப்பதற்கு விரோதமாகிய ஜாதிகளிலே தள்ளுகிறேன். அந்தந்த ஜன்மங்களையடைவதற்குத் தகுந்ததாகிய கார்யங்களில்

---

ஸ்லோகத்தில் சொல்லப்பட்ட நான்குவித பாபிகளும் சொல்லப்படுகிறார்கள் என்று நினைத்து அதற்கு வ்யாக்யானம் செய்திருக்கிறார். அதாவது 'நராதமாந்' என்னும் பதம் அந்த ஸ்லோகத்திலிருப்பதே இந்த ஸ்லோகத்திலுமிருக்கிறது. 'க்ரூரஸ்ஸாதவோ த்ருதா:' என்பது 'த்விஷத:' என்னும் பதத்தின் அர்த்தத்தையே சொல்லுகிறது என்பது முன்னமேயே வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. இப்படியே 'அஜஸ்ரம், அஶுபாந்' என்னும் பதங்களும் அதற்குத்தகுந்தபடி 'க்ஷிபாம்யஶுபாவஹாஜஸ்ராந்' என்கிற பதங்களின் அர்த்தத்தைச் சொல்லுகிறதாக வைத்துக்கொள்ள வேண்டியது. இவ்விடத்தில் பிரிக்காமல் அந்வயம் சொன்னது அஸுரஸ்வபாவமுடைய கும்பல் ஒன்றாகையினால். பிறப்பு முதலியக்ரமங்களின் சுழல்களில் இடைவிடாமல் ஓரேவிதமாகச் சுழன்று வருகிறபடியினால் 'ஸம்ஸாரம்' என்று அந்தச் சக்கிரம் சொல்லப்படுகிறது. 'ஸம்ஸரதி புருஷோஸ்மிந் (புருஷன் இதில் ஓரேமாதிரியாகச்சுழன்று கொண்டு வருகிறான்)' என்கிற வ்யுத்பத்தியினால் ஆதாரம் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிற கஞ் என்னும் விகுதியை முடிவில் உடையது 'ஸம்ஸார' என்னும் பதம். அதில் அதுபகுவசனமாக (பன்மையாக)ச் சொல்லியிருப்பது அப்படிச் சக்கிரங்களின் சுழல்கள் அநேகவிதமாகையினால் என்று சொல்லுகிறார்—'பிறப்பு' என்றாரம்பித்து. 'ஸம்ஸார' என்னும் பதம் நல்ல ஜன்மம் கெட்ட ஜன்மம் இவைகளுக்குப் பொதுவாகையினால் அது விசேஷித்துச் சொல்லப்படுகிறதென்று சொல்லுகிறார்—'அதிலும்' என்றாரம்பித்து. 1'ஏதத்தி துர்லபதரம் லோகே ஜந்ம யதீத்ருஶம்' என்று இவை முதலியவைகளில் சொல்லப்பட்ட பகவானைப் பற்றிய யோகம் செய்வதற்கு அநுகூலமாகிய ஸத்வகுணம் மேலிட்ட ஜன்மத்தை விலக்குவதற்காகத்தமோகுணம் மேலிட்டிருக்கை 'ஆஸுரீஷ்வேவ' என்பதினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அதாவது எனக்கனுகூலமாக' என்றாரம்பித்து. இப்படிப்பட்ட விரோதமாகிய ஜன்மா தேவதை முதலாகிய நான்குவித வகுப்புகளிலும் கண்டறியத்தக்கது என்று தாத்பர்யம். 2 'எவனை இந்தப் பகவான் கீழே கொண்டு போகவே

---

1. பகவத்கீதை - 6 - 42. 2. கௌஷீதகி - 3 - 9.

ப்ரவ்ருத்தி செய்வதற்குக் காரணங்களாகிய க்ரூரங்களான புத்தியில் நானே சேர்க்கிறேன் என்றர்த்தம் 19

ஆஸுரீம் யோநிமாபந்நா மூடா ஜந்மநி ஜந்மநி |
மாமப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் || 20

ப - ரை] கௌந்தேய - அர்ஜுந, ஆஸுரீம் - அஸுரர்களுடையதான, யோநிம் – ஜாதியை, ஆபந்நா:-அடைந்தவர்களாய், ஜந்மநி ஜந்மநி - ஒவ்வோரு ஜன்மங்கள்தோறும், மூடா:-விபரீதஜ்ஞானத்தை யுடையவர்களாய், மாம் - என்னை, அப்ராப்யைவ - அறியாமலே, தத:-அந்த ஜன்மத்தைக் காட்டிலும், அதமாம் – தாழ்ந்த, கதிம் - கதியை, யாந்தி- அடைகிறார்கள். 20

பா] எனக்கனுகூலமாக நடப்பதற்கு விரோதமான ஜன்மத்தை யடைந்தவர்களாய், மறுபடியும் ஒவ்வோரு ஜன்மங்களிலும் என்னைப்பற்றி விபரீதமான ஜ்ஞானத்தை யுடையவர்களாய், எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனு

---

*ண்டும் என்று ஆசைப்படுகிறானோ அவனை இந்தப் பகவானே கெட்ட கர்மத்தைச் செய்விக்கிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளை யனுஸரித்து 'க்ஷிபாமி' என்று சொல்லியிருப்பதற்கு வழியைச்சொல்லுகிறார்—'அந்தந்தஜன்மங்களை'என்றாரம்பித்து. பாபங்களில் ப்ரவ்ருத்திப்பதற்குக் காரணமாகிய க்ரூரமான புத்தி முதலியவைகளைக்கொடுப்பதும் பழையதாகிய த்வேஷம் முதலியவைகளின் பலங்களாகையினால் பகவானுக்குப்பக்ஷபாதம், தயை யில்லாமை, முதலியவைகளுக்குக் காரணமாகாது.* 19

*தா] மேல்மேலே தாழ்ந்து போவதின் வரிசை சொல்லப்படுகிறது— இந்த ஶ்லோகத்தினால். 'மூடா:' என்னும் பதத்தினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'என்னைப்பற்றி' என்றாரம்பித்து. அன்றிக்கே விபரீத ஜ்ஞானமே இவ்விடத்தில் மோஹம். அதுவும் இவ்விடத்தில் சொல்லப்போகிற அர்த்தத்திற்கு அனுகுணமாயிருப்பதினால் தன்னைப்பற்றி யென்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. ஸத்வகுணம் மேலிட்டவர்களுக்கும் பரமாத்மாவை அடைவது அநேக ஜன்மங்களில் உண்டான ஸுக்ருதங்களின் ஸித்தியினால் உண்டாக்கக்கூடியதாகையினால், தமோகுணம் மேலிட்டவர்களிடங்களில் அதைப்பற்றி ப்ரஸ்தாவம் வருவதும் அது இல்லை யென்று மறுப்பதும் உசிதமில்லையாகையினால் அப்படிப் பகவானை யடைவதற்கு முதல்படியாகிய ஶாஸ்த்ரங்களாலுண்டாக்கப்படுகிற ஜ்ஞானத்தை யடைவதே ஶாஸ்த்ரங்*

சிய பகவானாகிய வாஸுதேவன் இருக்கிறான் என்கிற ஜ்ஞானத்தை யடையாமலே அந்தந்த ஜன்மங்களிருந்து தாழ்ந்த கதியை அடைகிறார்கள். 20

பா - அ] ஆத்மாவின் நாசமாகிய இந்த அஸுரர்களின் ஸ்வபாவத்திற்கு மூலகாரணத்தைச் சொல்லுகிறார்—

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶநமாத்மந: |
காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் || 21

ப - ரை] காம:-காமம், க்ரோத:-கோபம், ததா - அப்படி, லோப:- லோபம் என்கிற, த்ரிவிதம் – மூன்று விதமான, ஏதத் - இது, ஆத்மந:- ஆத்மாவிற்கு, நாஶநம் - நாசத்தை யுண்டுபண்ணுகிறதாகிய, நரகஸ்ய- நரகத்தினுடைய, த்வாரம் - வழி, தஸ்மாத் – ஆகையினால், ஏதத் - இந்த, த்ரயம் - மூன்றையும், த்யஜேத் - விடவேண்டும். 21

பா] இந்த அஸுரஸ்வபாவமாகிற நரகத்திற்கு இந்த மூன்றும் வழி. அது ஆத்மாவிற்கு நாசத்தை உண்டாக்கக்கூடியது.காமம், க்ரோதம்,லோபம்,

---

*களுக்குக் கீழ்படியாத அஸுரஸ்வபாவமுடையவர்களிடத்தில் மறுக்கப்படுகிறது. அதில் ஶாஸ்த்ரங்களால் உண்டாகிய ஜ்ஞானம் என்பதை ப்ரகாசப்படுத்துவதற்காகச் சொல்லுகிறார்—'எல்லாவற்றிற்குமீஶ்வரனாகிய' என்றாரம்பித்து. 'தாழ்ந்த' என்பது எதைவிட என்று உயர்ந்ததாகிய ஒன்றை எதிர் பார்க்கிறபடியினால் அதைச் சொல்லக்கூடிய ஶக்தியை யுடையதாய் ஸமீபத்திலிருக்கிற 'தத:' என்னும் பதம் காரணத்தைச் சொல்லுகிறதென்பது உசிதமல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்தந்த ஜன்மங்களிலிருந்து' என்று.* 20

*தா] அவஶ்யமாகப் பரிஹரிக்கவேண்டியது சுருக்கிச்சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் அடுத்த ஶ்லோகத்திற்கு ஸங்கதி சொல்லுகிறார்—'ஆத்மாவின் நாசமாகிய' என்றாரம்பித்து. ஆத்மாவிற்கு நாசமாவது உள்ளபடி இருக்கிற ஆத்மாவை அறியாமையே. அதுவே அஸுரர்களின் ஸ்வபாவம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆத்மாவின் நாசமாகிய அஸுரர்களின் ஸ்வபாவத்திற்கு'என்று. வேரைவெட்டி விடுவதினால் அஸுரர்களின் ஸ்வபாவமெல்லாம் வெட்டப்பட்டதாக ஆய்விடும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மூலகாரணத்தை' என்று. 'அஸுரஸ்வபாவமாகிற நரகத்திற்கு' என்பதற்கு இதைவிட மேல்பட்டதாகிய வேறு நரகம் எது என்று தாத்பர்யம். அஸுரர்களின் ஸ்வபாவத்தைப் பரிஹரிப்பதற்காகவல்லவோ இந்த*

இவை மூன்றின் ஸ்வரூபம் முன்பே விவரமாகச் சொல்லப்பட்டது. வழியென்பதற்குக்காரணம் என்றர்த்தம். ஆகைதம். ஆகையினால் காமக்ரோத லோபங்கள் அதிக பயங்கரமாகிய நரகத்திற்குக் காரணமாகையினால் இவை மூன்றையும் தூரத்திலேயே விட்டுவிட வேண்டும். 21

𑌏𑌤𑍈𑌰𑍍𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌸𑍍𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌰𑍍𑌨𑌰𑌃 ।
𑌆𑌚𑌰𑌤𑍍𑌯𑌾𑌤𑍍𑌮𑌨𑌃 𑌶𑍍𑌰𑍇𑌯𑌸𑍍𑌤𑌤𑍋 𑌯𑌾𑌤𑌿 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌂 ॥ 22

ப - ரை] 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 - அர்ஜுந, 𑌏𑌤𑍈𑌃-இந்த, 𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌃- விபரீதஜ்ஞானத்திற்குக் காரணங்களாகிய, 𑌤𑍍𑌰𑌿𑌭𑌿𑌃 - மூன்றுகளினாலும், 𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌃-விடப்பட்ட, 𑌨𑌰𑌃-மனுஷ்யன், 𑌆𑌤𑍍𑌮𑌨𑌃-தனக்கு, 𑌶𑍍𑌰𑍇𑌯𑌃 - நன்மையை, 𑌆𑌚𑌰𑌤𑌿 - செய்கிறான், 𑌤𑌤𑌃-அதினாலே, 𑌪𑌰𑌾𑌂 - உயர்ந்த, 𑌗𑌤𑌿𑌂 - கதியை, 𑌯𑌾𑌤𑌿 - அடைகிறான். 22

*அதின் மூலகாரணத்தைப்பற்றிய உபதேசம் என்றாவது, '𑌤𑌮𑍋𑌦𑍍𑌵𑌾𑌰𑍈𑌃' என்று மேலே சொல்லப்போகிறதோடு சேர்ந்து ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறதென்பதாவது தாத்பர்யம். 'ஆத்மாவிற்கு நாசத்தை யுண்டாக்கக்கூடியது' என்பதற்கு 1 'அவன் இல்லாதவனாகவே ஆகிறான் எவன் பரமாத்மாவை அறியவில்லையோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லியிருக்கும் க்ரமத்தினால்என்று தாத்பர்யம். நுழைவதற்குக்காரணமல்லவோ த்வாரம். அதினாலும் அதையடைவதற்குக்காரணமென்றுஇங்கேசொல்லப்படுகிறதுஎன்கிற அபிப்ராயத்தினால் அப்படி உபசாரமாகச் சொல்லியிருப்பதற்கு க்ரமத்தைச் சொல்லுகிறார்—'காரணம் என்றர்த்தம்' என்று. '𑌦𑍍𑌵𑌾𑌰𑌂 𑌨𑌾𑌶𑌨𑌂' என்பதற்கு நுழையும் பொழுதே நாசத்தையடைகிறான் என்று தாத்பர்யம். விடத்தகுந்த வஸ்துவின் தோஷத்தைச் சொல்லியிருப்பது விடவேண்டுமென்று விதித்திருப்பதற்கு உபகாரம் செய்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. ரௌரவம்முதலிய நரகம், பாபம் நசிப்பதற்குக்காரணம். அஸுரர்களின் ஸ்வபாவமாகிய இந்த நகரமோவெனில் பாபங்களை ஸம்பாதிப்பதற்குக் காரணமாகையினால் மிகவும் பயங்கரம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதிக பயங்கரமாகிய' என்றாரம்பித்து. அஸுரர்களின் ஸ்வபாவங்கள் எல்லாம்விட வேண்டியதாயிருந்தபோதிலும் சில விசேஷங்களை எடுத்துத் தனித்துவிட வேண்டும் என்று சொல்லியிருப்பது இது மிகவும் பரிஹரிக்கத்தகுந்தது என்று தெரிவிப்பதற்காக, என்று சொல்லுகிறார்—'தூரத்திலேயே விட்டுவிடவேண்டும்' என்று.* 21

1. *தைத்திரீயம் - ஆனந்தவல்லி - 6 - 1.*

பா.] இந்தக் காமம், க்ரோதம், லோபங்களாகிய என்னைப்பற்றிய விபரீத ஜ்ஞானத்திற்குக் காரணங்களினால் விடப்பட்ட மனுஷ்யன் தனக்கு நன்மையைச் செய்துகொள்ளுகிறான், அதாவது என்னைப்பற்றிய ஜ்ஞானத்தை யடைந்தவனாய் எனக்கு அநுகூலமாக நடப்பதில் ப்ரவ்ருத்திக்கிறான். அதினால் உயர்ந்த கதியாகிய என்னையே அடைகிறான். 22

பா - அ] ஶாஸ்த்ரத்தை அநாதரவு செய்வது இப்படிப்பட்ட நரகத்திற்கு முக்யமான காரணம் என்று சொல்லுகிறார்—

---

தா] விடத்தகுந்த வஸ்துவினுடைய தோஷத்தைச் சொன்னதினாலேயே அதைவிடவேண்டுமென்று விதிக்கப்பட்டது. அப்படி விடுவதின் பலங்களின் வரிசை இப்பொழுது இந்த ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது. 'என்னைப்பற்றிய விபரீத ஜ்ஞானத்திற்குக் காரணங்களினால்' என்றது தமோகுணத்தின் பலத்தைச் சொல்லியிருக்கிறது அன்றிக்கே 'தமஃ' என்னும் பதமே இவ்விடத்தில் லக்ஷணையாக அவைகளைச் சொல்லுகிறதாகவுமாம். தமோகுணத்தின் வழிகளினால் விடப்பட்டிருப்பதினால் தமோகுணத்தினாலும் விடப்படுகிறான். நன்மையைச் செய்துகொள்ளுவதும் தத்வஜ்ஞானத்தை முன்னிட்டு என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'என்னைப்பற்றிய ஜ்ஞானத்தை யடைந்து' என்று. 'நன்மையைச் செய்துகொள்ளுகிறான்' என்பதினால் முன்பு சொல்லப்பட்ட பகவானிடத்தில் த்வேஷம் முதலியவைகள் நிவ்ருத்தித்தல் சொல்லப்படுகிறது. 'ஶ்ரேயஃ' என்பதற்கு நன்மை என்றர்த்தம். அதுவும் சுருக்கமாகப் பகவானுக்கநுகூலமாக நடப்பது அதற்குள்ளடங்கியதாகையினால் ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட எல்லாம் ஏற்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'எனக்கநுகூலமாக நடப்பதில்' என்று. 'ததஃ' என்பதற்குத் தனக்கு நன்மையைச் செய்து கொள்ளுகிற காரணத்தினாலேயே என்றர்த்தம். 'ஶாஶ்வதம்வ்யம்' என்றிவை முதலியவைகளை யோசித்து இவ்விடத்தில் 'பராம்கதிம்' என்று சொல்லப்படுகிறது அடையவேண்டிய ப்ரயோஜனங்களில் கடைசியாகிய பரமபுருஷனை என்று சொல்லுகிறார்—'உயர்ந்த கதியாகிய என்னையே' என்று. 22

அஸுரர்களின் ஸ்வபாவங்களில் மூலகாரணமாயிருப்பதினால் முக்யமாக இருக்கிற மூன்று சொல்லப்பட்டன. அவைகளைவிடவும் மிகவும் முக்யமாய் பரிஹரிக்கத்தகுந்த காரணம் அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரத்தை அநாதரவு செய்வது' என்றாரம்பித்து. எல்லா அவஸ்தைகளையுமுடைய எல்லாப் புருஷர்களுக்கும்நன்மையை உபதேசிப்பதினால் 'ஶாஸ்த்ர' என்னும் பத

யஶ்ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:||
ந ஸ ஸித்திமவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ||    23

ப - ரை] ய: - எவன், ஶாஸ்த்ரவிதிம் - வேதமாகிய என்னுடைய உத்திரவை, உத்ஸ்ருஜ்ய - விட்டுவிட்டு, காமகாரத:-தன்னுடைய இஷ்டப்படி, வர்த்ததே - இருக்கிறானோ, ஸ:-அவன், ஸித்திம் - பரலோகத்தின் ஸித்தியை, ந அவாப்நோதி - அடைவதில்லை, ஸுகம் - ஸுகத்தையும், ந - (அடைவது) இல்லை, பராம் - உயர்ந்த, கதிம் - கதியையும், ந – (அடைவது) இல்லை.    23

பா.) ஶாஸ்த்ரமாவது வேதங்கள். விதியாவது உத்திரவு. வேதமென்று பேருடைய என்னுடைய உத்திரவை விட்டுவிட்டு எவன் தன்னுடைய இஷ்டத்திற்கு அனுகுணமான வழியிலிருக்கிறானோ அவன் பரலோகத்திலுண்டாகிய ஒருவித ஸித்தியையும் அடைகிறதில்லை. ஒருவித ஸுகத்

---

*ம் வேதங்களிலேயே முதலில் ஏற்பட்டது. அத்துடன் சேர்ந்திருப்பதினால் மற்றவைகளில் ஏற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரமாவது வேதங்கள்' என்று. விதிக்கிற வாக்யங்கள் 'ஶாஸ்த்ர' என்னும் பதத்தினால் சொல்லப்பட்டபடியினால் அதினுடைய வ்யாபாரம் விதியென்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'விதியாவது உத்திரவு' என்று. ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'வேததேமென்று பேருடைய என்னுடையஉத்திரவை' என்று. ஶாஸ்த்ரமாகிய விதி என்று ஸமானாதிகரண ஸமாஸம் சொல்லப்படுகிறதாகவுமாம். 'என்னுடைய உத்திரவு' என்பதினால் 1'ஶ்ருதி ஸ்ம்ருதிர்மமைவாஜ்ஞா' என்றிவை முதலியவைகளை ஜ்ஞாபகப்படுத்தியிருக்கிறது. இத்தால் 'லிங்' முதலிய ப்ரத்யயங்களுக்கு வேறுவிதமாக அர்த்தத்தைச் சொல்லுகிறவர்கள் நிராகரிக்கப்பட்டார்கள். 'லிங்' முதலிய ப்ரத்யயங்கள் நியமிக்கிறவனுடைய அபிப்ராயத்தைத் தாத்பர்யத்தினாலாவது நேரில் ஶக்தியினாலாவது ப்ரகாசப்படுத்துகின்றன. ஶாஸ்த்ரங்களுக்கு விரோதமாகிய 'காமகார' என்பது ஶாஸ்த்ரங்களில் விகல்பங்களாகச் சொல்லப்பட்டவைகளைப் பற்றியதல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தன்னுடைய இஷ்டத்திற்கு அனுகுணமான வழியிலிருக்கிறானோ' என்று 2 'அத கேந ப்ரயுக்தோऽயம்', 3 'காம ஏஷ*

---

1. *விஷ்ணு தர்மம்* - 76 - 31. *ஶ்ருதி, ஸ்ம்ருதி, இவைகள் என்னுடைய ரவுகளே.*
2. *பகவத்கீதை* - 3 - 36.    3. *பகவத்கீதை* - 3 - 37.

தையும் அடைகிறதில்லை. உயர்ந்த கதியை எவ்விதமாக அடைவான் என்றர்த்தம். 23

தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ।
ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்துமிஹார்ஹஸி॥ 24

ஸ்ரீ கண்ணபிரானருளிச்செய்த ஸ்ரீமத் பகவத்கீதையில்
பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.
ஶ்ரீ க்ருஷ்ணார்ப்பணமஸ்து.



---

ஷதி க்ராமவஷ:' என்றிவை முதலியவைகளில் சொல்லப்பட்டகாமத்தினால் ஏவப்பட்டவனும் என்று சொல்லப்பட்டதாகிறது. 1'யா வேதபாஹ்யா: ஸ்ம்ருதயோ யாஶ்ச காஶ்ச குத்ருஷ்டய:। ஸர்வாஸ்தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டா ஹி தா: ஸ்ம்ருதா:' என்றிவை முதலியவைகளை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அவன் பரலோகத்திலுண்டாகிய' என்றாரம்பித்து. பரலோகத்தில் ஸுகத்திற்குக் காரணமாகிய உபாயத்தின் ஸித்தியை என்றர்த்தம். 'ஸுகத்தை' என்பதற்கு ஸ்வர்க்கம் முதலிய ஸுகத்தை என்றர்த்தம். அன்றிக்கே 'பரலோகத்தில் உண்டாகிய ஸித்தி' என்பது ஸ்வர்க்கம் முதலிய பலங்களைச் சொல்லுகிறது. ஸுகம் என்பது இந்த லோகத்தில் உண்டான ஸுகத்தைச் சொல்லுகிறது. ஆகையினாலேயே 'ஒருவித' என்னும் பதம் சொல்லப்பட்டது. இந்த லோகத்திலும் ஸுகம் ஶாஸ்த்ரத்தில் சொல்லிய கர்மங்களை அனுஷ்டிப்பதினால் உண்டாகிய பரமாத்மாவின் அனுக்ரஹத்தினாலேயே. ஆகையினால் 2 'அநாராதிதகோவிந்தா யே நரா து:கபாகிந:' என்று சொல்லப்படுகிறது. கைமுதிக ந்யாயத்தைக் காட்டுவதற்காக இவ்விடத்தில் மற்ற ஸுகங்களையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறதென்று சொல்லுகிறார்—'உயர்ந்த கதியைஎவ்விதமாய் அடைவான்' என்று

1. மனு ஸ்ம்ருதி - 12-95. யா:-எந்த, ஸ்ம்ருதய:- ஸ்ம்ருதிகள், வேதபாஹ்யா:—வேதத்தை யனுஸரித்தவைகளல்லவோ, யாஶ்ச காஶ்ச-எவைகள், குத்ருஷ்டய:—வேதங்களில் கெட்ட ஜ்ஞானத்தைக் காரணமாக உடையவைகளோ, ஸர்வா:—எல்லா, தா:-அவைகள், ப்ரேத்ய - லோகாந்தரத்தில் (பரலோகத்தில்), நிஷ்பலா:-ப்ரயோஜன மற்றவைகள், ஹி - எந்தக் காரணத்தினால், தா:-அவைகள், தமோநிஷ்டா:-தமோகுணத்தில் நிஷ்டையுடையவைகள் என்று, ஸ்ம்ருதா:-எண்ணப்பட்டவைகளோ.

2. விஷ்ணு தர்மம் - 19-13. யே - எந்த, நரா:-மனிதர்கள், அநாராதிதகோவிந்தா:-பகவானை ஆராதனம் செய்யாதவர்களாய், து:க்கபாகின:—துக்கத்தையே அடைந்திருக்கிறார்களோ

ப - ரை] தஸ்மாத் - ஆகையினால், தே - உனக்கு, கார்யாகார்யவ்யவஸ்திதள - செய்யத்தகுந்தது, செய்யத்தகாதது, இவைகளின் ஏற்பாட்டில், ஶாஸ்த்ரம் - ஶாஸ்த்ரமே, ப்ரமாணம் - ப்ரமாணம், ஶாஸ்த்ரவிதானோக்தம் - ஶாஸ்த்ரவிதிகளில் சொல்லப்பட்ட, கர்ம - கர்மங்களை, ஜ்ஞாத்வா - தெரிந்துகொண்டு, இஹ - இந்த லோகத்தில், கர்தும் - செய்வதற்கு, அர்ஹஸி - தகுந்தவனாகிறாய். 24

பா] ஆகையினால் அங்கீகரிக்கத்தகுந்தது, விடத்தகுந்தது, என்றேற்படுத்துவதில் ஶாஸ்த்ரந்தான் உனக்கு ப்ரமாணம். தர்ம ஶாஸ்த்ரம், இதிஹாஸம், புராணம், இவை முதலியவைகளால் விவரிக்கப்பட்ட வேதங்கள் எவ்

தா] இந்த அத்யாயத்தில் சொல்லப்பட்ட எல்லாம் இதற்காக என்ற பிப்ராயத்தில் வைத்துக்கொண்டு உபதேசம் செய்யப்படுகிறது—இந்த ஸ்லோகத்தினால். இவ்விடத்தில் 'கார்ய, அகார்ய' என்னும் பதங்கள் உண்டாக்கத் தகுந்தது, உண்டாக்கத் தகாதது, முதலிய அர்த்தங்களைச் சொல்லுகிறதென்பது பொருந்தாது என்பதை மனதில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அங்கீகரிக்கத் தகுந்தது, விடத்தகுந்தது' என்றாரம்பித்து. அனுஷ்டானத்தில் மாறாட்டம், தத்துவத்தில் மாறாட்டம், இவை யிரண்டும் அஸுரர்களின் ஸ்வபாவத்தைச் சொல்லுமிடத்தில் நிரூபிக்கப்பட்டிருப்பதினால் இவ்விடத்தில் அதில்லாமலிருக்கவேண்டும் என்று சொல்லப்படுகிற படியினால் 'கார்ய', 'அகார்ய', என்னும் பதங்கள் தத்துவம், தத்துவமல்லாதது, இவைகளையும் குறிப்பதற்காக என்கிற அபிப்ராயத்தினால் 'அங்கீகரிக்கத் தகுந்தது' என்றிவை முதலிய பொதுவான பதங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. அங்கீகரிப்பதாவது இவ்விடத்தில் ஶாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறபடி மனதினால் ஒப்புக்கொள்ளுதல். 'ஶாஸ்த்ரம்' என்பது யுக்தமல்ல, 1 'ஶ்ருதிஸ்ம்ருதிஸதாசார:' என்றிவை முதலியவைகளுக்கு விரோதம் வருகிற படியினால் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'தர்ம ஶாஸ்த்ரம்' என்றாரம்பித்து. 'முதலியவைகள்' என்னும் பதத்தினால் ஆசாரமும் சேர்த்துக்கொள்ளப் படுகிறது. 2 'யஜந்த்யவிதிபூர்வகம்', 3 'ந து மாமபிஜாநந்தி', என்றிவை முதலியவைகளை விலக்குவதற்காக 'ஜ்ஞாத்வா' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது,

1. யாஜ்ஞ வல்க்ய ஸ்ம்ருதி - 1 - 1. வேதங்கள் ஸ்ம்ருதிகள், பெரியோர்களின் அனுஷ்டானம் (இவைகள் ப்ரமாணங்கள்).

2. பகவத்கீதை-9-23. 3. பகவத்கீதை-9-24.

விதமான புருஷோத்தமனென்று பேருடைய மேலான தத்துவத்தையும், அவனுடைய ப்ரீதிக்குக்காரணமாயும், அவனையடைவதற்குபாயமுமாகிய கர்மத்தையும் தெரியப்படுத்துகின்றனவோ அவ்விதமான ஶாஸ்த்ரவிதிகளில் சொல்லப்பட்டதத்துவத்தையும் கர்மத்தையும்உள்ளபடியேதுறை

என்று சொல்லுகிறார்—'எவ்விதமான' என்றாரம்பித்து. எல்லா ஶாஸ்த்ரங்களும் நேராகவாவது பரம்பரையாகவாவது எல்லாக்கர்மங்களையும் பரமாத்மாவின் ஆராதனங்களாகவே விதிக்கின்றன. அதில் அந்தத்தத்துவம், நன்மை இவைகளுக்குள் 1 'வேதைஶ்ச ஸர்வைரஹமேவ வேத்ய:' என்று சொல்லப்பட்ட மேலான தத்துவத்தை முன்பு சொல்லப்பட்டபெயரைக்கொண்டு ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'புருஷோத்தமனென்று பேருடைய'என்று. 'அவனை அடைவதற் குபாயமுமாகிய'என்பதற்கு பலம், ஸங்கம்,முதலியவைகளை விட்டு அனுஷ்டிக்கப்படுகிற எல்லாக் கர்மங்களும் பரமாத்மாவை அடைவதற் குபாயங்கள் என்பதே அவைகளுக்கு ஸ்வபாவம் என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'தெரியப்படுத்துகின்றனவோ' என்பதினால் தெரிந்து கொள்ளப்படாத விஷயத்தைத் தெரியப்படுத்துவதாகிற 'விதாந' என்னும் பதத்தின் அர்த்தமும் விவரிக்கப்பட்டது. ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடிக் கல்லாமல் கர்மங்களைச் செய்யக் கூடாது என்கிற அபிப்ராயத்தினால் 'கர்துமிஹார்ஹஸி' என்று சொல்லப்பட்டது. அவ்விடத்திலும் அனுஷ்டானம் செய்வது, தத்துவத்தை அறிந்துகொள்ளுவது, இவைகளுக்குப் பொதுவான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'அங்கீகரிக்கத் தகுந்தவனாகிறாய்' என்று. 'அர்ஹஸி'என்பதை யனுஸரித்து 'நீ'என்று சொல்லியிருக்கிறது. அதுவும்தேவதைகளினுடையஸம்பத்தைக்குறித்துப்பிறந்த அர்ஜுநனுக்கு இப்படி அங்கீகரிப்பதற்கு அதிகமான யோக்யதை இருக்கிற தென்று தெரிவிப்பதற்காக. இத்தால் சொல்லப்பட்டதாவது—ஸத்வகுணம் மேலிட்ட உன்னால் வஞ்சனை செய்யும் புருஷர்களுடைய அதிக ஸாமர்த்தியத்தினால் ஒப்புக்கொள்ளும்படி செய்விக்கப் பட்ட புத்தியை மயக்கக் கூடிய ஆபாஸ ஶாஸ்த்ரங்களில் சொல்லி யிருக்கும் விதத்தை யனுஸரிப்பதினால் நித்யமாயும் பகவானுடைய உத்திரவுமாகிய வேதங்களென்று பேருடைய ஶாஸ்த்ரங்களுக்கு ஸாரார்த்தமாகிய அவரவர்கள் அதிகாரத்திற்குத் தகுந்தபடி கர்மயோகம், பக்தியோகமாகிற பகவானை ஆராதிக்கிற மேலான தர்மத்திலிருந்து சலிக்கக்கூடாது. எப்பொழுதும் அதுவே அங்கீகரிக்

1. பகவத்கீதை - 15 - 15.

வு மிகுதிகளில்லாமல் தெரிந்துகொண்டு செய்ய நீ யோக்யனாகிறாய், அதையே அங்கீகரிக்கத்தகுந்தவனாகிறாய். 24

பகவத் ராமானுஜன் என்னும் உடையவர் அருளிச்செய்த

ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில்

பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே பகவதே பாஷ்யகாராய நம:

எம்பெருமானார் திருவடிகளே சரணம்.



கத்தகுந்தது—என்பது. 'இஹ (இவ்விடத்தில்)' என்று சொல்லியிருப்பது கர்மங்களைச்செய்ய அதிகாரத்தைக் கொடுக்கக்கூடிய பூமியைக் காட்டுவதற்காக. அன்றிக்கே கர்மங்களுக்குக்கீழ்ப்படிந்திருக்கும் தசையையுடையவனென்று தெரிவிப்பதற்காகவுமாம். 24

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான ஸ்ரீமந் நிகமாந்த

மஹாதேசிகனருளிச்செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்

பதினாறாவது அத்யாயம் முற்றிற்று.

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:.





## ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீகீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

ஆளவந்தார் திருவடிகளே சரணம்.

𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰𑌵𑌿𑌭𑌾𑌗𑍋𑌕𑍍𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌿𑌕𑌾 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌶𑍍𑌯𑌤𑌾 ।
𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌥𑍇𑌮𑍍𑌨𑍇 𑌷𑍋𑌡𑌶 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 20

ப - ரை] 𑌦𑍇𑌵𑌾𑌸𑍁𑌰𑌵𑌿𑌭𑌾𑌗𑍋𑌕𑍍𑌤𑌿𑌪𑍂𑌰𑍍𑌵𑌿𑌕𑌾 - தேவதைகள், அஸுரர்கள், இவர்களின் பிரிவை நிரூபிப்பதை முன்னிட்டு, 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌶𑍍𑌯𑌤𑌾 - ஶாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டிருக்கவேண்டுமென்பது, 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌷𑍍𑌠𑌾𑌨𑌵𑌿𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌥𑍇𑌮𑍍𑌨𑍇 - உண்மையான கர்மங்களைப்பற்றியும், உண்மையான வஸ்துக்களைப்பற்றியவும், அனுஷ்டானம் செய்வது, அறிவது, இவைகளின் உறுதிக்காக, 𑌷𑍋𑌡𑌶𑍇 - பதினாறுவது அத்யாயத்தில், 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 20

### ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகனருளிச் செய்த
### ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

இந்த ஶ்லோகத்தில் முன்பு சொல்லப்பட்டவைகளும் இனி சொல்லப்போகிறவைகளுமான எல்லா அர்த்தங்களையும் ஸ்தாபிக்கிறதாகிய பதினாறுவது அத்யாயத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. இந்த அபிப்ராயத்தினால் 1 'பிறகு கீழ்ச்சொல்லப்பட்ட எல்லா அர்த்தங்களையும் உறுதிப்படுத்துவதற்காக ஶாஸ்த்ரங்களுக்குக் கீழ்படிந்திருக்கவேண்டுமென்பதைச் சொல்லுவதற்காக ஶாஸ்த்ரத்திற்கு வசப்பட்டவர்களும் அதற்கு விரோதிகளுமாகிய தேவர்கள் அஸுரர்கள் இவர்களின் ஸ்ருஷ்டிகளின் பிரிவை பகவான்சொல்லுகிறார்' என்று சொல்லப்பட்டது. ஆகையினாலேயே பதினேழாவது அத்யாயத்திற்கு அவதாரிகை சொல்லும்பொழுதும் 'தேவதைகள் அஸுரர்கள், இவர்களின் பிரிவைச்சொல்லிக்கொண்டு அதின் வழியாக அடையவேண்டியதாகிய தத்துவத்தைப்பற்றிய ஜ்ஞானமும் அதையடைவதற்குபாயத்தைப்பற்றிய ஜ்ஞானமும் வேதம் ஒன்றையே காரணமாகவுடைது என்று சொல்லப்பட்டது' என்று பாஷ்யத்தில் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் ஶாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டிருக்கவேண்டுமென்பதும்

1 16-வது அத்யாயத்தின் பாஷ்ய அவதாரிகை.

1 'தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்யவ்யவஸ்திதௌ। ஜ்ஞாத்வா ஶாஸ்த்ர விதானோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸி ॥' என்கிற இந்த அத்யாயத்தின் கடைசி ஶ்லோகத்தினுல் சொல்லப்பட்டது.

பதினுருவது அத்யாயம் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

ஸ்ரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனருளிச் செய்த

ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப் பாட்டு.

சீரார் தூப்புல் திருவேங்கட முடையான் திருவடிகளே சரணம்.

ஆணைமருதவர் தேவரல்லா வழக்கோரசுரர்
கோணை மருத குணச் செல்வ நீ குறிக்கோண் மறையை
பேணிய தத்துவமும் பிணியற்ற கிரிசைகளும்
காணிதனால் விசயாவென்று கண்ணனியம்பினனே. 17

ப - ரை] கண்ணன் - ஸ்ரீ க்ருஷ்ணன், ஆணை - ஆஜ்ஞையை, மருத வர் - மீறி நடக்காதவர்கள், தேவர் - தேவதைகளின் ஸ்வபாவமுடைய வர்கள், அல்லா - அப்படிக்கல்லாத, வழக்கோர் — வழக்குப் பேசுகிறவர் கள், அதாவது விரோதமாகப் பேசுகிறவர்கள், அசுரர் - அஸுரர்களின் ஸ்வபாவமுடையவர்கள், கோணை — வக்கர ஸ்வபாவத்தினால், மருத - பகவதாஜ்ஞையை மறுக்காத, குண - குணங்களாகிற, செல்வ - ஸம்ப த்தை யுடைய, நீ - நீ, மறையை - வேதத்தை, குறிக்கோள் - ஸாவதான மாக அங்கீகரி, அன்றிக்கே குறி - ப்ரமாணமாக, கோள் - அங்கீகரி, பே ணிய - பேணக் கூடியதான, அதாவது ஆதரவுடன் அங்கீகரிக்கக்கூடிய, அல்லது பேணிய - பெரியோர்களால் ஆதரவுடன் அங்கீகரிக்கப் பட்ட, தத்துவமும் - தத்துவத்தையும், பிணி-வ்யாதி அதாவது துக்கம், அற்ற - இல்லாதவையான, கிரிசைகளும் - க்ரியைகளையும், கர்மானுஷ்டானங் களையும் என்றபடி, விசயா அர்ஜுந, இதனால் — இந்த வேதத்தினால், காண் - விசதமாகத் தெரிந்து கோள், என்று - என்று, இயம்பினன் - சோன்னான். 17

*பதினாறுவது அத்யாய ஸங்க்ரஹ ஶ்லோகத்தின் அர்த்தத்தை அருளிச் செய்கிறார்—இந்தப் பாட்டினால். 'அல்லா வழக்கோர்' என்ப தினால் அல்லாத வழக்குப் பேசுகிறவர்கள் என்று சொல்லப்படுகிறது. இத்தால் ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்டிருக்கிற தத்துவ ஸ்திதிகளுக்கு விரோதமாக 1 'அஸத்யம் அப்ரதிஷ்டம்' என்றாரம்பித்துச் சொல் லப்பட்டபடி இல்லாததைப் பேசுகிறவர்கள் என்றர்த்தம். 1 'ஆஹு:' என்று சொல்லி யிருக்கிறபடியினால் வழக்குப் பேசுகிறவர்கள் என்ற*

---

1. பகவத்கீதை - 16 - 8.

ருளிச் செய்யப்பட்டது. வாசிகமான வ்யவஹாரத்தைச் சொன்னதி னால் மனதிலும் அவர்களுடைய எண்ணம் தத்துவஸ்திதிக்கு விரோத மான தென்பதேற்பட்டது. 'கோணமறாத குணச் செல்வ' என்பதி னால் 1 'அபயம் ஸத்வஸம்ஸுத்தி:' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட குணங்களாகிய தெய்வ ஸம்பத்தையுடைய நீ என்று சொல்லப்பட்டது. இத்தால் 2 'தைவீ ஸம்பத் விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா' என் பதின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. 'குறிக்கொள் மறையை' என்ப தினால் 3 'தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே' என்கிறபடியே ஶாஸ்த்ரத்தை யே கர்த்தவ்யா கர்த்தவ்யங்களைப் பற்றிய பகுத்தறிவிற்கு ப்ரமாண மாக அங்கீகரி என்று தாத்பர்யம். மேலும் 'குறிக்கொள் மறையை' என்பதினால் ஸாவதானமாக அங்கீகரி என்று சொல்லப்படுகிறது. இதனால் "ஸ்வாத்யாய" என்கிற இடத்தில் ஸ்ரீ பாஷ்யகாரர் அருளிச் செய்திருக்கிறபடியே எல்லா வேதங்களும் பகவானுடைய ஆராதனத் தையும், அவனுடைய விபூதிகளையும், அவனுடைய ஸ்வரூப ரூபகுண திகளையும் ப்ரதிபாதிக்கின்றன என்கிற எண்ணத்துடன் அத்யயனம் செய்யவேண்டுமென்பதும் சொல்லப்பட்டது. 'பேணியதத்துவமும்' என்பதினால் முன்னோர்களாகிய ஸாத்விகர்களினால் 'பரதத்வம்' என்று ப்ரீதியுடன் அங்கீகரிக்கப்பட்ட தத்துவமும் என்று சொல்லப் பட்டது. அன்றிக்கே பகவானாலேயே 4 'ஸர்வவித் பஜதி மாம்' என்றும் 5 'இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரம்' என்றும் கொண்டாடப்பட்ட புருஷோத் தம தத்துவத்தையும் என்றர்த்தமாகவுமாம். 'பிணிபற்ற கிரிசைக ளும்' என்பதினால் பகவானுடைய ஆராதனங்களாகையினாலே ஸ்நேகி தர்களின் உபசாரங்களைப்போல ஸ்வயம் ப்ரயோஜனமானதினால் அனு ஷ்டிக்கும்பொழுது ஸுகரூபமாயும், காம்ய கர்மங்களைப்போல துக்க மிஶ்ரங்களான பலங்களைக் கொடுக்கக்கூடிய தல்லாமல் பரம புருஷார்த்தத்திற்குக் காரணமாகையினாலும் துக்க ஸம்பந்தமில்லாத ஸாத்விகத்யாகத்தை முன்னிட்டுப் பகவதாராதன ரூபமாய் அனுஷ்ட் டிக்கப்படுகிற க்ரியைகளும் என்று சொல்லப்படுகிறது. இவை இரண்டி னாலும் கீதார்த்த ஸங்கரஹரக்ஷையில் தாமருளிச்செய்திருக்கிறபடியே முன்னும்பின்னும் சொல்லப்பட்ட எல்லா அர்த்தங்களும் இந்த அத்யா

1. பகவத்கீதை-16-1
2. பகவத்கீதை - 16 - 5
3. பகவத்கீதை - 16 - 24
4. பகவத்கீதை - 15 - 19
5. பகவத்கீதை - 15 - 20

யத்தினால் ஸ்தாபிக்கப்படுகிறது என்று கருத்து. 'காணிதனால்' என்பதற்கு 1 'ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம்' என்கிறபடியே ஶாஸ்த்ரங்களைக்கொண்டே அறியவேண்டும் என்று தாத்பர்யம். இத்தால் 'கார்யாகார்யவ்யவஸ்திதௌ' என்கிற இடத்தில் கர்மங்களை மாத்திரம் சொல்லியிருந்தபோதிலும்தத்துவங்களையும்உபலக்ஷிக்கிறதுஎன்பதும், 2 'தத்த்வாநுஷ்டாந விஜ்ஞாநஸித்த்யே'என்கிற இடத்தில் 'அநுஷ்டாந' என்பதோடு கர்மானுஷ்ட்டானங்கள் என்று சேர்த்துக்கொண்டுகர்மங்களினுடைய அனுஷ்ட்டானம், தத்துவங்களினுடைய விஜ்ஞானம், என்று அர்த்தம் சொல்லிக்கொள்ள வேண்டியதென்பதும் காட்டப்பட்டது. இவ்விடத்தில் 'காண்' என்பதற்குத் தத்துவங்களை அறியென்றும், க்ரியைகளைக்காணுவது அப்படி அனுஷ்ட்டிப்பதற்காகையினால் கண்டறிந்து அனுஷ்ட்டி என்றும் தாத்பர்யம். 'விசயா' என்பதினால் இப்படித் தத்துவஜ்ஞானத்தை முன்னிட்டுக் கேவலம் பகவதாராதனரூபமாகிய வர்ணாஶ்ரம தர்மங்களில் ஒன்றாகிய யுத்தம் என்கிற தர்மத்தை யனுஷ்டிப்பாயேயானால் வெளி சத்துருக்களை ஜயிப்பதைப் போல 3 'ஒன்று சொல்லி ஒருத்தனில் நிற்கிலாத ஓரைவர் வன் கயவரைஎன்று யான் வெல்கிற்ப னுன்திருவருளில்லையேல்'என்கிறபடியே அந்தர சத்துருக்களாய் என்னுடைய ஸகாயமில்லாமல் ஜயிக்க முடியாத பஞ்சேந்த்ரியங்களையும் ஜயித்து விடுவாய் என்று தாத்பர்யம். 'கண்ணன்' என்பதினால் 4 'ஜாயமாநம் ஹி புருஷம் யம் பஶ்யேந் மதுஸூதந:' என்கிறபடியே ஸத்வகுணத்தைத் தரக்கூடிய திருக்கண்களையுடையவன் என்று தாத்பர்யம். அன்றிக்கே 5 'கண்ணன் கண்ணல்லது இல்லையோர் கண்ணே' என்கிறபடியே எல்லாலோகத்திற்கும் ஸ்வாமியாயும், கதியுமாகிய ஸ்ரீக்ருஷ்ணன் என்றுதாத்பர்யம். இத்தால் ஆராத்யனும், பலப்ரதனும், ப்ராப்யனுமாகிய பகவான்தானே இந்தவழிபால் என்னை ஆராதனம் செய்து என்னுடைய அனுக்ரஹத்தினால் என்னை அடையலாம் என்று தன்னுடைய ஸ்வாமித்வமாகிற ஸம்பந்தத்தை முன்னிட்டுக் காருண்யத்தினால் அருளிச் செய்தான் என்று தாத்பர்யம்.

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.



1. பகவத்கீதை - 16 - 24
2. கீதார்த்த ஸங்க்ரஹ ஶ்லோகம் - 20
3. திருவாய்மொழி - 7 - 1 - 7
4. திருவாய்மொழி - 2 - 2 - 1
5. 259-ம் பக்கம்—3-ம் புட்நோட்டைப் பார்க்க.

# ஸ்ரீ பகவத்கீதை.

பதினேழாவது அத்யாயம்.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேசிகாய நம:

பா - அ] தேவதைகள், அஸுரர்கள், இவர்களின் பிரிவைச் சொல்லிக் கொண்டு அதின் வழியாக அடையவேண்டியதாகிய தத்துவத்தைப்பற்றிய ஜ்ஞானமும் வேதமொன்றையே காரணமாக உடையது என்று சொல்லப்பட்டது. இப்பொழுது ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கர்மம் அஸுரர்களின் ஸ்வபாவத்தைச்சேர்ந்ததாகையினால் ப்ரயோஜன மற்றது என்பதும், ஶாஸ்த்ரங்களினால் விதிக்கப்பட்ட கர்மமும் ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவிதமென்பதும் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட

---

தா] கீழ்ச்சொன்ன அர்த்தத்திற்கு ஒத்தாசை என்று பதினேழாவது அத்யாயத்திற்கு அவதாரிகை சொல்லுவதற்காக கீழ்ச் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சுருக்கிச் சொல்லுகிறார்—'தேவதைகள்' என்றாரம்பித்து. கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதையே மற்றொரு வழியாக விவரமாகச் சொல்லுகிற தென்று ஸங்கதி சொல்லுகிறார்— 'இப்பொழுது' என்றாரம்பித்து. விடத்தகுந்தது, அங்கீகரிக்கத் தகுந்தது, இவைகளின் ஏற்பாடு ஶாஸ்த்ரம் ஒன்றையேகாரணமாகவுடையது என்று சொன்னதின் பிறகு என்றர்த்தம். 1 'அஶாஸ்த்ரமாஸுரம் க்ருத்ஸ்நம் ஶாஸ்த்ரீயம் குணத: ப்ருதக்। லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா ஸப்தத்ஶோதிதம் ॥', என்கிற ஸங்க்ரஹ ஶ்லோகத்தை விவரிக்கிறார்— ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கர்மம்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் பொதுவாகவும், விசேஷித்தும் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற அர்த்தங்களைப் பிரித்துக் காட்டுவது இந்த அத்யாயத்திற்குப் பொதுவான அர்த்தம் 'ஸப்தத்ஶோதிதம்' என்று ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் சொல்லி யிருப்பது கீழ் மூன்று வாக்யங்களிலும் தனித்தனியே அந்வயிக்கிறது. அன்றிக்கே

---

1. கீதார்த்த ஸங்க்ரஹஶ்லோகம் - 21

கர்மங்களுக்கு லக்ஷணமும் சொல்லப்படுகிறது. அதில் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத கர்மம் ப்ரயோஜன மற்றதென்பதைத் தெரிந்து கொள்ளாதவனாகிய அர்ஜுநன் ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாததாயும் ஶ்ரத்தையுடன் செய்யப்பட்டதாயு மிருக்கிற யாகம் முதலியவற்றில் ஸத்வ குணம் முதலிய காரணங்களினால் உண்டாகிய பலங்களின் வ்யத்யாஸத்தை அறியவேண்டுமென்கிற ஆசையினால் கேட்கிறான்—

**அர்ஜுந உவாச ||**

அர்ஜுநஃ - அர்ஜுநன், உவாச - சொன்னான்.

*யே ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்தயாந்விதாஃ ।*
*தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்த்வமாஹோ ரஜஸ்தமஃ ॥* 1

ப-ரை] க்ருஷ்ண - ஸ்ரீ க்ருஷ்ணா, யே - எவர்கள், ஶாஸ்த்ரவிதிம் -ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட விதியை, உத்ஸ்ருஜ்ய - விட்டு, ஶ்ரத்தயா - ஶ்ரத்தையுடன், அந்விதாஃ - கூடினவர்களாய், யஜந்தே - யாகம் செய்கிறார்களோ, தேஷாம் - அவர்களுக்கு, நிஷ்டா - நிஷ்டையானது, கா - எது, ஸத்த்வம் - ஸத்வகுணமா? ஆஹோ - அதில்லாமல், ரஜஃ - ரஜோகுணமா? தமஃ — தமோகுணமா? 1

'ஸர்வ ஸஹ (இவை எல்லாம்)' என்று சேர்த்துக் கொண்டு 'ஸப்தத ஶோபிதம் (பதினேழாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது)' என்று எல்லாவற்றையும் சேர்த்து அந்வயம் சொல்லிக்கொள்ளவுமாம். [1] 'ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம்' என்று சொன்ன பிறகு 'யே ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய' என்கிற கேள்வி எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. 'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத கர்மம் ப்ரயோஜன மற்றதென்பதைத் தெரிந்து கொள்ளாதவனாகிய' என்பதற்குக் கருத்தாவது—புத்திமான்களுக்கு ஸ்வபாவத்திலேயே ப்ரயோஜனத்திலாவது அதின் உபாயத்திலாவது அறிய வேண்டும் என்கிற ஆசை உண்டாகும். ஆசையினால் ஸத்வம் முதலிய நிஷ்டைகளின் வ்யத்யாஸத்தைத் தெரிந்துகொள்ளவேண்டு மென்கிற ஆசை அதினால் உண்டாகிற பல விஶேஷங்களைத் தெரிந்து கொள்ளுவதற்காக; ப்ரயோஜனமற்றது என்று தெரிந்து கொண்டால் அதில் விஶேஷங்களைத் தெரிந்துகொள்ள வேண்டு மென்கிற ஆசை உண்டாகாது. ஆகையினால் லோகத்தில் ஏற்பட்ட பயிரிடுதல்,

1. பகவத்கீதை - 16 - 24

பா] ஶாஸ்த்ரவிதியை விட்டு ஶ்ரத்தையுடன் கூடியவர்களாய் எவர்கள் யாகம் செய்கிறார்களோ அவர்களுக்கு நிஷ்டை எது? ஸத்வகுணமா?

---

வைத்தியம் செய்தல் முதலியவைகளும் புத்திமான்களால் ப்ரவ்ருத்தி செய்யப்பட்டவைகளாயும், ப்ரயோஜனத்தோடு கூடினவைகளாயும் காணப்படுகின்றன. அப்படிக்கில்லாவிடில் ஶாஸ்த்ரமும் ப்ரமாணமல்லாமல் போய்விட வேண்டி வரும். லோகத்தில் ஏற்படாத கர்மங்களினும் ஆசாரங்களினுலேற்பட்ட தர்மங்கள் எவ்வளவோ இருக்கின்றன. அவைகள் ஒருவிதபலமும் இல்லாதவைகளாக இருக்கமாட்டா, அதில் புத்திமான்கள் ப்ரவ்ருத்திக்கமாட்டார்களாகையினுல். ஶ்ரத்தையுடன் அனுஷ்டிக்கும்பொழுது அங்கம் குறைவு பட்டதினுல் பலம் இல்லையென்பதும் ஸம்பவிக்காது, எண்ணிறந்த புத்திமான்களாகிய ஜனங்களால் அனேகப் பணச் செலவு, தேஹஶ்ரமம், இவைகளினுல் அனுஷ்டிக்கப்படுகிறவைகளாயும் த்ருஷ்ட பலங்களில்லாதவைகளாயுமிருக்கிற கர்மங்களில் அத்ருஷ்ட பலத்தைத் தவிர வேறுகதியில்லை. ஆகையினுல்ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைவிட இந்தக் கர்மங்களுக்குஎதாவதொருவ்யத்யாஸம்சொல்லப்படுகிறதேயானுல் அப்பொழுது ஸத்வம்,முதலிய குணங்களின் வ்யத்யாஸத்தினுலேற்பட்டபலங்களின் தாரதம்யம் மாத்திரந்தானிருக்கவேண்டும். ஆகையினுல் 1 '𑌯𑌃 𑌶𑌾𑌸𑍍𑌤𑍍𑌰𑌵𑌿𑌧𑌿𑌮𑍁𑌤𑍍𑌸𑍃𑌜𑍍𑌯 𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃 । 𑌨 𑌸 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌮𑌵𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨 𑌸𑍁𑌖𑌂 𑌨 𑌪𑌰𑌾𑌂 𑌗𑌤𑌿𑌮𑍍 ।' என்று முன்பு சொன்னதும் அநேகமாக அதிகமான ஸுகமில்லை என்கிற தாத்பர்யத்தினுல். அன்றிக்கே '𑌕𑌾𑌮𑌕𑌾𑌰𑌤𑌃' என்கிற விஶேஷணம் ஶ்ரத்தையோடு கூடினவனைவிலக்குவதற்காக ஆகவுமாம், என்று கெட்ட உபதேசம், வேதத்திற்குப் புறம்பான ஆகமங்கள், தன்னுடைய ஊஹம், பெரியோர்களின் வ்யவஹாரம், இவைகளால் ஏற்படுத்தப்பட்ட இந்தக்கர்மங்களில் இதுதர்மம் என்கிற எண்ணத்தினுலுண்டாகிய ஶ்ரத்தை முதலியவைகளினுல் இது ப்ரயோஜன மற்றதென்பதை நிவ்ருத்தி செய்யவேண்டியது உசிதம் என்பது அர்ஜுனனுடைய அபிப்ராயம்—என்பது. ஶ்ரத்தையோடு சேர்ந்த கார்யம் பலத்தோடு கூடியது என்று ஸந்தேஹம் வரவேண்டியதற்காகக் கர்த்தாவிற்கு விஶேஷணமாகச் சொல்லப்பட்டிருக்கிற '𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌯𑌾𑌨𑍍𑌵𑌿𑌤𑌾𑌃' என்பது அந்தக் கார்யங்களுக்கு விஶேஷணமாக வ்யாக்யானம் செய்யப்பட்டது. 'யாகம்' என்பது இவ்விடத்தில் தானம் முதலியவைகளையும் குறிப்பதற்காக. தேவதையின் பூஜை என்பது

---

1. பகவத்கீதை - 16 - 23.

அல்லது ரஜோகுணமா? அல்லது தமோகுணமா? நிஷ்ட்டை யென்பது ஸ்திதி, அதாவது 'ஸ்த்யதேஸ்யாம் (இதில் நிற்கப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் ஸத்வம் முதலியவைகளே நிஷ்ட்டை என்று சொல்லப்படுகிறது. அதாவது அவர்களுக்கு ஸத்வகுணத்தில் இருப்பா அல்லது ரஜோகுணத்திலா, அல்லது தமோகுணத்திலா என்றர்த்தம். 1

பா—அ] இப்படிக் கேழ்க்கப்பட்டவராய் பகவான் ஶாஸ்த்ரத்தில் விதிக்

---

பொதுவாகையினால் எல்லாம் சேர்த்துக்கொள்ளப்படுகிறதாகவுமாம். இவ்விடத்தில் 'க்ருஷ்ண' என்னும்பதத்தினால் 1 'க்ருஷிர்பூவாசக ஶப்தோ ணஶ்ச நிர்வ்ருதிவாசக:' என்கிறபடியே எல்லாருடைய இஷ்டம் ஸித்திப்பதற்குபயோகமாகிய அர்த்தத்தை அபிப்ராயமாகக் கொண்டிருக்கிறது 'து' என்னும் பதத்தினால் ஶாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிற நிஷ்ட்டையைவிடவும், தன்னிஷ்டப்படி அனுஷ்ட்டிக்கிற கர்மத்தைவிடவும் வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது. 'கா' என்பதை 'கிம்' என்று மாற்றிக்கொண்டு மூன்றிடத்திலும் திருப்பிக்கொள்ள வேண்டியது. 'ஆஹோ' என்னும் பதத்தையாவது மூன்று இடங்களிலும் திருப்பி வைத்துக்கொள்ள வேண்டியது என்றபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்— 'ஸத்வகுணமா?' என்றாரம்பித்து. நாசம் முதலிய அர்த்தங்களை விலக்குவதற்காகவும், ஸத்வம் முதலிய பதங்களோடுசேர்த்துச்சொல்லுவது பொருந்துவதற்காகவும், 'ஆதாரம் (இருப்பிடம்)' என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பதைத் தெரிவிப்பதற்காக இதின் அர்த்தத்தைச் சொல்லக்கூடிய மற்றொரு பதத்தினால் வ்யாக்யானம் செய்கிறார்—'நிஷ்ட்டை என்பது ஸ்திதி' என்று. அவர்களுக்கு நிஷ்ட்டை எது? என்று கேழ்க்கப்பட்ட அர்த்தமே ஸத்வம் என்றாரம்பித்து விஶேஷித்துச்சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்— 'அதாவது அவர்களுக்கு' என்றாரம்பித்து. 1

ப்ரஶ்னம் எத்தனை விதங்களென்று கேழ்க்காமலிருந்தபோதிலும் அதைச் சொல்லுவது பொருந்தாது என்கிற ஆக்ஷேபத்தைப் பரிஹரித்துக்கொண்டு ப்ரஶ்னம் மூன்று விதமென்று சொல்லியிருப்பதற்கு ப்ரயோஜனத்தையும் சொல்லுகிறார்—'இப்படிக் கேழ்க்கப்பட்டவராய்' என்றாரம்பித்து. முன்பு உபதேசம் செய்ததிற்கு விரோதமாய்

---

1. பாரதம் - உத்தியோகபர்வம்- 69 - 5. க்ருஷி:-க்ருஷி என்னும் பதம், பூவாசக:-பூமியைச் சொல்லுகிற, ஶப்த: - பதம், ண: என்பது, நிர்வ்ருதிவாசக:-ஸுகத்தைச் சொல்லுகிறது.

கப்படாத ஶ்ரத்தையும் அதை முன்னிட்டுச் செய்யும் யாகம், முதலியவைகளும் ப்ரயோஜன மற்றது என்பதை மனதில் வைத்துக்கொண்டு ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட யாகம் முதலியவைகளே ஸத்வம் முதலிய குணங்களினுல் மூன்று விதம் என்று நிரூபிப்பதற்காக ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட ஶ்ரத்தை மூன்றுவித மென்று முதலில் சொல்லுகிருர்—

॥ ஶ்ரீ ஹமவாநுவாச ॥

ஶ்ரீ ஹமவாநு – பகவாளுகிய ஸ்ரீ க்ருஷ்ணன், உவாச - சொன்னர்.

த்ரிவிதா ஹவதி ஶ்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்வபாவஜா ।
ஸாத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥ 2

ப - ரை] தேஹிநாம் - ப்ராணிகளினுடைய, ஶ்ரத்தா - ஶ்ரத்தையானது, ஸாத்விகீ - ஸாத்விகீ என்றும், ராஜஸீ - ராஜஸீ என்றும், தாமஸீசேதி – தாமஸீ என்றும், த்ரிவிதா - மூன்று விதமாக, ஹவதி - ஆகிறது, ஸா - அது, ஸ்வபாவஜா - ஸ்வபாவத்தில் உண்டானது, தாம் - அந்த ஶ்ரத்தையை, ஶ்ருணு - கேள். 2

---

*கேழ்க்கப்பட்டவர் என்றர்த்தம். 'மனதில் வைத்துக்கொண்டு' என்பதற்கு க்ரமமாக நேரில் ஸமாதானத்தைச் சொல்லுவதற்காக என்றர்த்தம். இந்தக் கேழ்வை மிகவும் அநாதரிக்கக் கூடியது என்று தெரிவிப்பதற்காக உடனே நேரில் ஸமாதானம் சொல்லவில்லை என்று தாத்பர்யமாகவுமாம். 'ஸத்வம் முதலிய குணங்களினுல் மூன்றுவிதம்' என்பதற்குக் குணங்களின் பேதங்களினு லேற்பட்ட பலங்களின் பேதங்களையுடையது என்பதை என்று தாத்பர்யம். இவ்விடத்தில் ஶ்ரத்தையோடு கூடியிருப்பதினுல் ஸாத்விகம் என்பதும் ஶாஸ்த்ரத்தை மீறி இருப்பதினுல் தாமஸம் என்பதும் ஸங்கேதஹப்பட்டது. அதில் ஶ்ரத்தையோடு கூடியிருத்தல் பலத்திற்குக் காரணமாவதற்காக உபயோகமுள்ளது அது ஶாஸ்த்ரங்களில் சொல்லிய கர்மங்களிலேதான். அதிலும் ஶ்ரத்தை ஒரே ஸ்வபாவத்தையுடையதல்ல என்கிற அபிப்ராயத்தினுல் ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட கர்மங்களில் ஶ்ரத்தையே மூன்றுவிதம் என்று சொல்லியிருக்கிறது. இத்தால் பரிஸங்க்யாந்யாயத்தினுல் ஶாஸ்த்ரத்தில் சொல்லப்படாதவைகளில் பலங்களின் வ்யத்யாஸங்களினுலேற்பட்ட மூன்றுவிதமென்பது நிராகரிக்கப்பட்டது. இவ்விடத்தில் ஶ்ரத்தை வெவ்வேறுகையினுல் ஸத்வம் முதலிய நிஷ்டைகள் வெவ்வேறு என்பதேற்படுகிறது என்று சொல்லப்பட்டது. 'தேஹிநாம்' என்பதினுல் அந்தர்கத் தேஹங்களுக்குத்*

பா] எல்லா ப்ராணிகளினுடைய ஶ்ரத்தை மூன்று விதமாகிறது. அதுவும் ஸ்வபாவத்தினால் உண்டானது. ஸ்வபாவமாவது தனக்கு அஸாதாரணமான ஸ்வபாவம். அதாவது பழைய வாஸனையினால்உண்டாகிற அந்தந்தக் கர்மங்களில் ஆசை. எந்தக் கர்மத்தில் ஆசை யுண்டாகிறதோ அதிலேயே ஶ்ரத்தையுண்டாகிறது. ஶ்ரத்தையாவது இந்தக் கர்மம் நம்மு

*தருந்த அதிகாரிகள் வெவ்வேறென்பது சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லா' என்று. 'எல்லா' என்பதற்கு ப்ரம்மா முதலிய என்றர்த்தம். 'ப்ராணிகளினுடைய' என்பதற்கு ஸத்வம்முதலிய குணங்கள் நிறைந்தஅந்தந்தத்தேஹங்களுக்குத் தக்கபடி என்று தாத்பர்யம். ஶாஸ்த்ரங்களும், அதில் ஆசையை யுண்டு பண்ணக்கூடிய அர்த்தவாதம் முதலியவைகளும் பொதுவாகஇருக்கப் புருஷர்களின் வ்யத்யாஸம் எப்படி ஏற்படுகிறது என்றாக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக 'ஸாஸ்வபாவஜா' என்றடுத்த வாக்யம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதுவும்' என்றாரம்பித்து. கார்யங்கள் அஸாதாரணங்கள் என்று தெரிவிப்பதற்காக அதின் காரணங்கள் அஸாதாரணங்கள் என்பது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஸ்வபாவமாவது' என்றாரம்பித்து. இவ்விடத்தில் ஸ்வபாவமாவது எது? அது அஸாதாரணமாக இருப்பதற்குக் காரணம் என்ன? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'பழைய வாஸனையினால்' என்றாரம்பித்து. 'ஸ்வபாவ' என்னும் பதம் இவ்விடத்தில் விஶேஷமான ஸ்வபாவத்தைச் சொல்லுகிறது. 'ஸ்வபாவ' என்னும் பதம் அநேக அர்த்தங்களைச் சொல்லக்கூடியதாயிருக்க ஆசை என்று இவ்விடத்தில் எப்படிச் சொல்லப்படுகிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'எந்தக் கர்மத்தில் ஆசையுண்டாகிறதோ' என்றாரம்பித்து. ஆசையும், ஶ்ரத்தையும், காரணமாயும், கார்யமாயுமிருக்கிறதென்பது ஆசையில்லாவிட்டால் ஶ்ரத்தையில்லை. ஆசையுண்டானால் ஶ்ரத்தையுண்டாகிறதாகையினால் ஸித்தித்தது என்றர்த்தம். ஆசையைவிட வேறு பட்டதாய் அதினால் உண்டாக்கப்படுகிற ஶ்ரத்தையாவது எது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—ஶ்ரத்தையாவது' என்றாரம்பித்து. 1 'ஶ்ரத்தாவிஸ்ரம்பஸ்ப்ருஹாகாங்க்ஷயோ:' என்று த்வரையில் முடிவு பெறுகிற விஶ்வாஸத்திலும் 'ஶ்ரத்தா' என்னும் பதம் நிகண்டுவில் சொல்லப்படுகிறது. 2 'காமம், ஸங்கல்பம், ஸந்தேஹம், ஶ்ரத்தை, அஶ்ரத்தை,*

1. நிகண்டு. 2. ப்ருஹதாரண்யகம் - 3 - 5-3

டைய இஷ்டத்தை ஸாதிக்குமென்கிற நம்பிக்கையுடன் அந்தக் கர்மத்தில் த்வாரை, வாஸனை, ருசி, ஶ்ரத்தை, இவை யெல்லாம் ஸத்வம், முதலிய குணங்களுடன் சேர்க்கையினால் உண்டாகிய ஆத்மாவின் ஸ்வபாவங்கள். ஆத்மாவின் ஸ்வபாவங்களாகிய அந்த வாஸனை முதலியவைகளுக்குக் காரணங்கள் தேஹம், இந்த்ரியம், மனது, விஷயங்கள், இவைகளிலிருக்கிற ஸ்வபாவங்களாயும், கார்யங்களைக் கொண்டு நிரூபிக்கக் கூடியவைகளாயுமிருக்கிற ஸத்வம், முதலிய குணங்கள் ஸத்வம்,

---

தைர்யம், அதைர்யம், வெட்கம், புத்தி, பயம், இவை எல்லாம் மனமே' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யமிருக்கிறபடியினால் மனதின்ஸ்வபாவங்களாயும், ஆத்மாவுடன் ஸம்பந்தப்படாதவைகளுமான ஶ்ரத்தை முதலியவைகள் குணங்களினால் உண்டானவைகளானதினால் குணங்களின் ஸ்வபாவங்கள் என்பது ஸம்பவித்த போதிலும் இவ்விடத்தில் 'ஸ' என்னும் பதத்தினாலும், 'தேஹிநாம்' என்னும் பதத்தினாலும் சொல்லப்படுகிற ஜீவாத்மாவினிடத்தில் அந்த ஶ்ரத்தைகள் உண்டாகின்றன என்று சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'வாஸனை, ருசி' என்றாரம்பித்து. பரிசுத்தமான ஸ்வபாவத்தையுடைய ஆத்மாவிற்கே கர்மங்களினாலுண்டாகிற ஸத்வம் முதலிய குணங்கள் நிறைந்தஶரீரத்தோடு சேர்ந்திருக்கையைக் காரணமாகவுடைய தர்மபூத ஜ்ஞானத்தின் மாறுதல்கள் இவைகள் என்று தாத்பர்யம். ஶ்ரத்தைகளில் ஸாத்விகம் முதலிய பெயர்களை ஏற்படுத்துவதற்காக ஸத்வம், முதலிய குணங்களில்லாத ஆத்மாவிற்கு ஸத்வம், முதலிய குணங்களைக் காரணமாகவுடைய வாஸனை, முதலியவைகளின் ஸம்பந்தம் எப்படி உண்டாகிறது? என்கிற ஆக்ஷேபத்தை விலக்குவதற்காகவும், 'தேஹிநாம்' என்கிற பதத்தினால் குறிக்கப்பட்ட விதமாக குணங்களின் ஸம்பந்தத்தினால் ஏற்பட்டதென்பதை விவரிக்கிறார்—'ஆத்மாவின் ஸ்வபாவங்களாகிய' என்றாரம்பித்து. ஔஷதம், முதலியவைகளோடு கூடிய நெருப்பின் சேர்க்கையினால் சில வஸ்துக்களில் பாகத்தினால் குணங்கள் எப்படி உண்டாக்கப்படுகின்றனவோ அப்படியே இவ்விடத்திலும் என்று தாத்பர்யம் அந்தந்தக் கார்யங்களுக்குக் காரணங்களாக ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்டிருக்கிற ஸத்வம் முதலிய குணங்களை நமக்குத் தெரியாமையினால் நிராகரிப்பது யுக்தமல்ல என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கார்யங்களைக்கொண்டு' என்றாரம்பித்து. இந்த்ரியங்களுக்குப் புலப்படாதவைகளாயும், நம்மால் அநுபவிக்கப் படாதவைகளுமாகிய குணங்கள் வாஸனைக்குக் காரணங்கள் என்பது எப்படிப் பொருந்தும்? என்கிற

முதலிய குணங்களோடு கூடிய தேஹம், முதலியவைகளை அனுபவிப்பதினால் உண்டாகிய கர்மங்கள் என்றர்த்தம். ஆகையினால் இந்த ஶ்ரத்தை ஸாத்விகீ, ராஜஸீ, தாமஸீ, என்று மூன்று விதம். அப்படிப்பட்ட இந்த ஶ்ரத்தையைக் கேள். அதாவது அந்த ஶ்ரத்தை எவ்வித ஸ்வபாவங்களையுடையதோ அந்த ஸ்வபாவத்தைக் கேள் என்றர்த்தம். 2

*𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 𑌭𑌵𑌤𑌿 𑌭𑌾𑌰𑌤 ।*
*𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌮𑌯𑍋𑌽𑌯𑌂 𑌪𑍁𑌰𑍁𑌷𑍋 𑌯𑍋 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌃 𑌸𑌏𑌵 𑌸𑌃 ॥* 3

ப-ரை] 𑌭𑌾𑌰𑌤-அர்ஜுந, 𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯-எல்லா ப்ராணிகளுக்கும், 𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾 - மனதிற்குத்தகுந்தபடி, 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾 - ஶ்ரத்தை, 𑌭𑌵𑌤𑌿-உண்டாகிறது, 𑌅𑌯𑌂 - இந்த, 𑌪𑍁𑌰𑍁𑌷𑌃 - ஜீவன், 𑌶𑍍𑌰𑌦𑍍𑌧𑌾𑌮𑌯𑌃 - ஶ்ரத்தையின் மாறுதலாக இருப்பவன், 𑌯𑌃 – எந்தப் புருஷன், 𑌯𑌚𑍍𑌛𑍍𑌰𑌦𑍍𑌧𑌃- எவ்வித ஶ்ரத்தையை யுடையவனோ, 𑌸𑌃 - அவன், 𑌸𑌏𑌵 - அப்படிப்பட்ட ஸ்வபாவத்தையுடையவனாகவே ஆகிறான். 3

பா]. ஸத்வமாவது மனது. எல்லாப் புருஷனுக்கும் மனதிற்குத்தகுந்

---

*ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்— 'ஸத்வம் முதலிய குணங்களோடு கூடிய' என்றாரம்பித்து. முக்கியகாரணத்தை எதிர்பார்த்து ஶ்ரத்தைக்கு ஸாத்விகம் முதலிய வெவ்வேறு பேர்கள் உண்டாகின்றன என்று சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. ஸாத்விகம், முதலாக மூன்றுவிதமென்று சொல்லப்பட்டிருக்கும் பொழுது மறுபடியும் '𑌶𑍃𑌣𑍁' (கேள்) என்று ஏன் சொல்லப்படுகிறது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதாவது அந்த ஶ்ரத்தை' என்றாரம்பித்து. ஸ்வரூபமும் மொத்தமாக மூன்றுவிதமென்பதும் தெரிந்துகொள்ளப்பட்ட படியினால் தெரிந்துகொள்ளப்படாத ஸ்வபாவ விசேஷங்களைப் பற்றி '𑌶𑍃𑌣𑍁 (கேள்)' என்று சொல்லப்பட்டது.*

*'𑌸𑌤𑍍𑌤𑍍𑌵𑌾𑌨𑍁𑌰𑍂𑌪𑌾' என்கிற இடத்தில் ஸத்வகுணம் சொல்லப்படுகிறதில்லை, எல்லாப் புருஷனுடையவும் ஶ்ரத்தை ஸத்வகுணத்தினால் உண்டாவதாயிருந்தால் ராஜஸம் தாமஸம் என்னும் ஶ்ரத்தைகளைப் பிரித்திருப்பது பொருந்தாதாகையினால். ஸத்தாசைக் காரணமாக எல்லா ஶ்ரத்தைகளிலும் ஸத்வகுணம் அபேக்ஷிக்கப்படுகிறதென்னில் அதுவும் உசிதமல்ல, ரஜோகுணமும், தமோகுணமும் அப்படியேயாகையினால் மூன்று குணங்களும் ஒன்றுக்கொன்று ஸத்தாசையாக இருந்துகொண்டேயல்லவோ வாத பித்த கபங்களைப்போல எல்லா*

தபடி ஶ்ரத்தையுண்டாகிறது. அதாவது மனது எப்படிப்பட்ட குணத்தையுடையதோ அப்படிப்பட்ட விஷயத்தைப்பற்றிய ஶ்ரத்தையே உண்டாகிறது. 'ஸத்வ' என்னும் பதம் முன்பு சொலப்பட்ட தேஹம் இந்த்ரியம், முதலியவைகளையும் குறிப்பதற்காக. இந்தப் புருஷன் ஶ்ரத்தையின் மாறுதலாக இருக்கிறான். எந்தப் புருஷன் எப்படிப்பட்ட ஶ்ரத்தையோடு கூடினவனோ அப்படிப்பட்ட ஶ்ரத்தையின் மாறுதலாக இருக்

---

கார்யங்களையும் உண்டாக்குகின்றன. ஆகையினால் இவ்விடத்தில் எல்லா ஶ்ரத்தைகளுக்கும் பொதுவான காரணமாகச் சொல்லப்பட்ட ஸத்வம் மூன்று குணங்களுடன் சேர்ந்திருக்கிற மனது தான் என்று சொல்லுகிறார்—'ஸத்வமாவது மனது' என்று. மனதிற்குத்தக்கபடி என்பதை விவரிக்கிறார்—'அதாவது மனது' என்றாரம்பித்து. எந்த விஷயத்தில் ஆசைக்குக்காரணமாகிய வாஸனையை வ்ருத்தி பண்ணக்கூடிய ஸத்வம்முதலிய குணங்களோடு கூடியிருக்கிறதோ என்றர்த்தம். முன்பு 'தேஹிநாம் ஸாஸ்வஜா' என்று சொல்லப்பட்டது. இவ்விடத்தில் மனதைக்காரணமாகவுடையதென்று சொல்லப்படுகிறது. இவை இரண்டும் விகல்பமாக ஏற்பட்டதல்ல, வஸ்துவில் விகல்பம் பொருந்தாதாகையினால். புருஷர்கள் வெவ்வேறாகையினால். விகல்பமாகச் சொல்லப்பட்டது என்பதும் பொருந்தாது, 'ஸஹ-ஸ்வ' என்று சொல்லியிருப்பதினால். இவை இரண்டும் சேர்ந்து காரணம் என்பதும் பொருந்தாது, தனித்தனி காரணமென் றேற்படுகிறபடியினால். என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஸத்வ என்னும் பதம்' என்றாரம்பித்து. ஸாமக்ரிகளில் சேர்ந்த வஸ்துக்களில் அந்தந்த இடங்களில் ஒவ்வொன்றைச் சொல்லியிருப்பது அநுசிதமல்ல என்று தாத்பர்யம். 'ஶ்ரத்தாமயஃ' என்கிற இடத்தில் இருக்கிற 'மயஃ' என்னும் விகுதி பகுதியின் அர்த்தத்தைச் சொல்லுவதாக இருந்தால் நிஷ்ப்ரயோஜனமாகையினாலும், நிறைந்தவன் என்கிற அர்த்தத்தைச் சொல்லுவதாக இருந்தபோதிலும் இந்த ஸந்தர்ப்பத்தில் ப்ரயோஜனமில்லையாகையினாலும், ஶ்ரத்தையின் பலத்தோடு கூடியவன் என்கிற தாத்பர்யத்தை வைத்துக்கொண்டு மாறுதல் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்— 'ஶ்ரத்தையின் மாறுதலாக இருக்கிறான்' என்று. இப்படிப் பொதுவாக ஶ்ரத்தையினாலுண்டாகிற பலத்தையடையக் கூடியவன் என்பது சொல்லப்பட்டது. அதில் 'யோ யச்ச்ரத்தஃ' என்றாரம்பித்த வாக்யத்தினால் விசேஷமான ஶ்ரத்தையுடையவனுக்கு விசேஷ பலம் சொல்லப்படுகிறது,

கிறான். அதாவது புண்ய கர்மங்களைப்பற்றிய ஶ்ரத்தையோடு கூடினவனுயிருந்தால் புண்யகர்மங்களின் பலங்களோடு கூடினவனுகிறான். ஆகையினால் பலத்தையடைவது ஶ்ரத்தையையே ப்ரதான காரணமாகவுடையது என்று சொல்லப்பட்டது. 3

பா-அ] இத்தையே விவரிக்கிறார்—

*யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: |*
*ப்ரேதாந் பூதகணாம்ஶ்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ||* 4

ப-ரை] ஸாத்விகா: - ஸத்வகுணம்மேலிட்டவர்கள், தேவாந் - தேவதைகளை, யஜந்தே - ஆராதனம் செய்கிறார்கள், ராஜஸா: - ரஜோகுணம் மேலிட்டவர்கள், யக்ஷரக்ஷாம்ஸி - யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும் (ஆராதனம் செய்கிறார்கள்), அந்யே - வேறு, தாமஸா: - தமோகுணம் மேலிட்ட, ஜநா: - ஜனங்கள், ப்ரேதாந் - பிணங்களையும், பூதகணாம்ஶ்ச - பூதங்களின் கூட்டங்களையும், யஜந்தே - ஆராதனம் செய்கிறார்கள். 4

---

*என்று சொல்லுகிறார்—'அதாவது புண்ய கர்மங்களை' என்றாரம்பித்து. வேறொரு ஶ்ரத்தையின் ஸ்வபாவங்கள் இதற்கில்லை என்று தெரியப்படுத்துவதற்காக 'யச்' என்னும் பதத்திற்கு 'எப்படிப்பட்ட' என்று ஸ்வபாவத்தைச்சொல்லுகிறபதத்தினால் வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. 'ரூபாவயுக்தம்' என்றிவை முதலியவைகளைப்போல கார்யமாயும் காரணமாயுமிருக்கிறது என்கிற தாத்பர்யத்தினால் 'ஸ ஏவ ஸ:' என்று ஆரோபித்திருக்கிறது என்று சொல்லுகிறார்—'அவன் அப்படிப்பட்ட ஶ்ரத்தையின்மாறுதலாகஇருக்கிறான்' என்று. இத்தால் 'ஸஏவஸ:' (அவனே அவன்)' என்கிற இடத்தில் உத்தேசிக்கப்படுகிறதற்கும் விதிக்கப்படுகிறதற்கும் பேதமில்லாமையினால் புனருக்தி வருகிறது, என்னும் ஆக்ஷேபமும் பரிஹரிக்கப்பட்டது. ஜீவாத்மா நித்யமாகையினாலும், தர்மபூத ஜ்ஞானத்தின் பரவுதல் முதலியது இந்த்ரியங்களின் வழியாக ஏற்பட்டிருப்பதினாலும், தேஹம் முதலியவை அசேதனத்தின் மாறுதல்களாகையினாலும், ஶ்ரத்தையின் மாறுதல் என்று சொல்லியிருப்பது எந்த அம்ஶத்தைக் குறித்து? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானஞ் சொல்லுகிறார்—'புண்ய கர்மங்களைப் பற்றிய' என்று. பலங்களின் பேதத்தை அறியவேண்டும் என்கிற ஆசையினாலல்லவோ ... [illegible] கேழ்வை உண்டாயிருக்கிறதென்று தாத்பர்யம்.* 5

பா] ஸத்வகுணம் நிறைந்தவர்கள் ஸத்வகுணம் மேலிட்ட ஶ்ரத்தை யோடு கூடினவர்களாய்த் தேவதைகளை ஆராதனஞ் செய்கிறார்கள். துக்கத்தோடு ஸம்பந்தப்படாத உயர்ந்த ஸுகத்திற்குக் காரணமாகிய தேவதைகளைக்குறித்து ஆராதனத்தைப்பற்றிய ஶ்ரத்தையானது ஸாத்விகம் என்று சொல்லப்பட்டதாகிறது. ரஜோகுணம் மேலிட்டவர்கள் யக்ஷகளையும் ராக்ஷஸர்களையும் ஆராதனம் செய்கிறார்கள். மற்றவர்களாகிய தமோகுணம் மேலிட்ட ஜனங்கள் ப்ரேதங்களையும் பூத கணங்களையும் ஆராதனம் செய்கிறார்கள். துக்கத்தோடு கலந்த அல்பஸுகத்தையுண்டு பண்ணுகிறது ரஜோகுணம் மேலிட்ட ஶ்ரத்தை, துக்கம் நிறைந்த மிகவும் அல்பஸுகத்தை யுண்டுபண்ணுகிறது தமோகுணம்மேலிட்ட ஶ்ரத்தை என்றர்த்தம். 4

---

தா] ஆரம்பிக்கப்பட்ட ஶ்ரத்தையினுடைய ஸாத்விகம் முதலிய பிரிவுகள் ஸாத்விக, ராஜஸ, தாமஸ ஶ்ரத்தைகளைச் செய்யக் கூடிய விஷயங்களைக் கொண்டு அடுத்த ஶ்லோகத்தில் நிரூபிக்கப் படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இத்தையே விவரிக்கிறார்' என்று. 'இத்தையே' என்பதற்குப் பல விஶேஷங்கள் ஶ்ரத்தையின் விஶேஷங்களைக் காரணமாக வுடையது என்பதை என்றர்த்தம். புருஷனுக்கு ஸத்வம் முதலிய குணங்கள் வ்ருத்தி யடைந்தவைகளாய் தங்களுக்குத் தகுந்த விஷயங்களில் ஶ்ரத்தையை யுண்டுபண்ணுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸத்வகுணம் நிறைந்தவர்கள்' என்றாரம்பித்து. எல்லா வஸ்துக்களும் மூன்று குணங்களையு முடையவைகளா யிருக்க ஒரு குணத்தைக் கொண்டு விஶேஷமாகச் சொல்லி யிருப்பது அந்தக்குணம் நிறைந்திருப்பதினால். 'அதில் ஸத்வகுணம் மேலிட்ட ஶ்ரத்தையில்' என்பது புருஷர்கள் ஸத்வ குணம் மேலிட்டவர்கள் என்று சொல்லி யிருப்பதினால் ஏற்பட்ட காரணத்தைச் சொல்லி யிருக்கிறது. ஶ்ரத்தையே இங்கு குறிக்கப்பட் டிருப்பதினாலும் 'தாமஸா' என்று சொல்லப்பட்ட ஶ்ரத்தையின் ஸ்வபாவத்தை நிரூபிப்பதில் தாத்பர்யம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'துக்கத்தோடு ஸம்பந்தப்படாத' என்றாரம்பித்து. ஆராதிக்கப் படுகிற தேவதைகளுடன் ஸாயுஜ்யத்தை யடைவதல்லவோ ஆராதிக்கிறவர்களுக்குப் பலம் என்கிற அபிப்ராயத்தினால் 'துக்கத்தோடு ஸம்பந்தப்படாத' என்றிவை முதலியது சொல்லியிருக்கிறது. இப்படியே மேலும் கண்டுகொள்ளுவது. தமோகுணம் மேலிட்டவர்களுக்கு மற்றவர்களை விட மிகவும் வ்யத்யாஸத்தைத் தெரிவிப்பதற்காக 'ஜனா:' என்னும் பதம். பூதங்களின் கூட்டமாவது ருத்ரனின் பார்ஷத கணங்கள்.

பா - அ] இப்படி ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டவைகளாயும் ஶ்ரத்தையோடு கூடியவைகளாயு மிருக்கிற யாகம் முதலியவைகளில் ஸத்வம் முதலிய குணங்களினால் பல விஶேஷ முண்டாகிறது. ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படாத தபஸ்ஸு, யாகம், முதலியவைகளில் என்னுடைய உத்திரவிற்கு விரோதமாக இருப்பதினால் ஒருவிதமான அல்பஸுகமும் இல்லை, அநிஷ்டமே உண்டாகிறது என்று மனதில் நினைக்கப்பட்ட அர்த்தத்தை ப்ரகாசம் செய்து கொண்டு சொல்லுகிறார்—

**அஶாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜநா: |**
**தம்பாஹங்காரஸம்யுக்தா: காமராகபலாந்விதா: ||** 5

**கர்ஶயந்த: ஶரீரஸ்தம் பூதக்ராமமசேதஸ: |**
**மாம் சைவாந்த:ஶரீரஸ்தம் தாந்வித்த்யாஸுரநிஶ்சயாந் ||** 6

ப - ரை] யே-எந்த, ஜநா: - ஜனங்கள், அஶாஸ்த்ரவிஹிதம்- ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத, கோரம் - அதிகக்ரூரமான, தப: - தபஸ்ஸை, தம்பாஹங்காரஸம்யுக்தா: — டம்பம், அஹங்காரம், இவைகளோடு கூடினவர்களாயும், காமராகபலாந்விதா: - காமம், ராகம், பலம், இவைகளோடு கூடினவர்களாயும், அசேதஸ: - புத்தியில்லாதவர்களாயும், ஶரீரஸ்தம் - தேஹத்திலிருக்கிற, பூதக்ராமம் - பஞ்சபூதங்களின் கூட்டத்தை, கர்ஶயந்த: - கஷ்டப்படுத்திக்கொண்டு, அந்த:ஶரீரஸ்தம் - ஶரீரத்திற்குளேயிருக்கிற, மாம் ச ஏவ - என்னுடைய அம்ஶமாகிய ஜீவாத்மாவையும், கர்ஶயந்த: - கஷ்டப்படுத்திக்கொண்டு, தப்யந்தே - செய்கிறார்களோ, தாந் — அவர்களை, ஆஸுரநிஶ்சயாந் - அஸுரர்களின் நிஶ்சயத்தை யுடையவர்களாக, வித்தி — அறி. 5-6

தா] இப்படித்தாத்பர்யத்தினால் கேழ்வைக்குப்பதில் சொல்லப்பட்டது. பிறகு நேரிலேயே சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 1 'நஸித்திம்' என்றாரம்பித்து முன் சொல்லியிருப்பதை ஜ்ஞாபகப்படுத்துவதற்காக 'ஒருவிதமான அல்பஸுகமுமில்லை' என்று சொல்லப்பட்டது. 'அநிஷ்டம் உண்டாகிறது' என்பதினால் முன்பு நரகத்தில் விழுகிறார்கள் என்று சொல்லியிருப்பது ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது. கேழ்வையிலிருக்கிற ஶ்ரத்தையோடு கூடியவர்களாய் என்பதை அநுவாதம் செய்வதில் தாத்பர்யத்தினால் ஶ்ரத்தையினாலுண்டாக்கப்படுகிற அதிக ஶ்ரமத்தைச் சொல்லுகிறது 'கோர' என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லு

1. பகவத்கீதை - 16 - 23

பா] ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாதமிகவும் க்ரூரமாகிய தபஸ்ஸையும் எவர்கள் செய்கிறார்களோ. இது மற்றவைகளையும், குறிப்பதற்காக. ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத மிகவும் ஶ்ரமத்துடன் செய்யக்கூடிய யாகம், முதலியவைகளையும் எவர்கள்செய்கிறார்களோ, டம்பம். அஹங்காரம் காமம் ராகம் பலம், இவைகளோடு கூடினவர்களாயும் ஶரீரத்திலிருக்கிற ப்ருதிவீ முதலிய கூட்டத்தைக் கஷ்டப்படுத்திக்கொண்டும், ஶரீரத்திற்குள்ளேயிருக்கிற என்னுடைய அம்ஶமாகிய ஜீவாத்மாவையும் கஷ்டப்படுத்திக்கொண்டும்

---

*கிறார்—'மிகவும் க்ரூரமாகிய' என்று. 'யஜந்தே ஸாத்விகா:' என்று யாகத்தைப் பற்றிக்கேட்டிருக்கும் பொழுது தபஸ்ஸை செய்கிறார்கள் என்று தபஸ்ஸைப்பற்றிப்பதில் சொன்னது எப்படிப் பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இது மற்றவைகளையும்குறிப்பதற்காக' என்று. அப்படிச் சேர்த்துச் சொல்லக்கூடிய ஆகாரத்தைக் காட்டிக்கொண்டு சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத' என்றாரம்பித்து. வேதபாஹ்யர்களுடைய ஆகமங்களில் சொலப்பட்டதும், வேதத்தில் சொல்லப்பட்டதாயிருந்தபோதிலும் அதிகாரமில்லாதவர்களால் இடம், காலம், த்ரவ்யம் க்ரியைகள், முதலிய, நியமங்களை அலக்ஷியம் செய்து ஶாஸ்த்ரத்தில் சொல்லியபடி யல்லாமல் அனுஷ்டிக்கப்பட்டதும், இங்கு ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாதவை. பயங்கரம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற 'கோரம்' என்னும் பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்— 'மிகவும் ஶ்ரமத்துடன்' என்றாரம்பித்து. 'யாகம், முதலியவைகளை' என்பதினால் கேழ்வையில் யாகத்தைச் சொல்லியிருப்பதும் மற்றவைகளைக் குறிப்பதற்காக என்று தெரிவிக்கப் பட்டது. ஆகையினாலல்லவோ கேழ்வையும் பதிலும் ஒரே விஷயத்தைப் பற்றியதாகும். ஶாஸ்த்ரங்களினால் உத்திரவு செய்யப்படாதவைகளைப் பற்றி உத்திரவு செய்கிற வேறு வஸ்து சொல்லப்படுகிறது—'டம்பம், அஹங்காரம்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் பலம், காமம் ராகம் இவைகளோடு கூடியிருக்கிறபடியினால் ஸத்வகுணம் மேலிட்டதல்ல, 1 'ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத' என்றதல்லவோ முன்பு சொல்லப்பட்டது. பரலோகத்தில் நரகம் மாத்திரமில்லை, பின்னை எதுவென்னில் இந்தலோகத்திலும் ஶரீரத்திற்குக்கஷ்டமும் உண்டாகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஶரீரத்திலிருக்கிற' என்றாரம்பித்துச் சொல்லியிருக்கிறது 2 'அந்தர்யாமியாக அமிவில்*

---

1. பகவத்கீதை - 13 - 11
2. ப்ருஹதாரண்யகம் - 5 - 1 - 3

கள் தபஸ்ஸு செய்கிறார்களோ, யாகம், முதலியவைகளையும் செய்கிறார்களோ, அவர்களை அஸுரர்களின் நிஶ்சயத்தையுடையவர்களாக அறி- அஸுரர்கள் என்னுடைய உத்திரவிற்கு விரோதமாகச் செய்கிறபடியினால் அவர்களுக்கு அல்பஸுகத்தின் ஸம்பந்தமும் இல்லை. பின்னை எதே

லாமலுமிருக்கிற' என்றும், 1 'வேறொருவனாகிய பரமாத்மா கர்ம பலங்களை அனுபவிக்காமல் ப்ரகாசித்துக்கொண்டிருக்கிறான்' என்றும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களிருக்கிறபடியினாலும், 2 'ந ஸ்தாநதோபி பரஸ்யோபயலிங்கம் ஸர்வத்ர ஹி' என்றிவை முதலிய ப்ரமாணங்களிருப்பதினாலும் பரமாத்மாவிற்கு ஸ்வரூபத்திலாவது ஸ்வபாவத்திலாவது கஷ்டம் ஸம்பவிக்காதாகையினாலும், அப்படி ஸம்பவிப்பதாயிருந்தால் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகிற உபவாஸம் முதலியவைகளாலும் கஷ்டம் ஸம்பவிக்கக் கூடுமாகையினாலும், ஶரீரத்தைக் கஷ்டப்படுத்துவதினால் அந்தச் ஶரீரத்தையுடைய ஜீவாத்மாவிற்கு ஜ்ஞானம், ஸுகம், முதலியவைகள் சுருக்கத்தையடைவதாகிய கஷ்டம், ஶ்ருதி, ஸ்ம்ருதி, லோகானுபவம், இவைகளிலேற்பட்டிருப்பதினாலும், 'அஹஶரீரஸ்ய' என்பதினால் ஶரீரத்திற்குள்ளடங்கிய ஜீவாத்மா என்பது தெரிவிக்கப்படுகிற படியினாலும், 3 'க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி', 4 'மமைவாம்ஶ:' என்று முன் சொல்லிய விதமாக எல்லாவற்றையும் ஶரீரமாக உடைய பரமாத்மாவிற்கு விஶேஷணமான அம்ஶமாகிய ஜீவாத்மாவைச் சொல்லுகிறது இவ்விடத்தில் 'ஶரீரம்' என்னும் பதம் என்று சொல்லுகிறார்— 'என்னுடைய அம்ஶமாகிய ஜீவாத்மாவையும்' என்று. எனக்குச் ஶரீரமாகிய ஜீவனைக் கஷ்டப்படுத்துவது என்னைக் கஷ்டப்படுத்துவதற்கு ஸமானம் என்று அதிக தோஷத்தைத் தெரிவிப்பதற்காக இப்படி உபசாரமாகச் சொல்லியிருக்கிறது. ஶாஸ்த்ரத்தை மீறி நடப்பதினால் ஆத்மாவைப் பீடித்துக் கொள்ளுகிறதாகிய பாபமும் இவர்களுக் குண்டாகிறது என்றபிப்ராயம். யஜ்ஞமாவது தேவதையைப் பற்றிய ஆராதனமாகையினால் ஶாஸ்த்ரத்தில் சொல்லிய விதமாக இல்லாமற் போன போதிலும் அதிகக் குறைவில்லை தபஸ்ஸோ வெனில் ஸ்வபாவத்திலே

1. முண்டகோபநிஷத் - 3 - 1 - 1

2. ஶாரீரகஸூத்ரம் - 3 - 2 - 11 - பரஸ்ய - பரமாத்மாவிற்கு, ஸ்தாநதோபி- இடத்தினாலும், ந-(தோஷங்கள் உண்டாகிறது), இல்லை, ஹி - எந்தக் காரணத்தினால் அந்தப் பரமாத்மா, ஸர்வத்ர – எல்லா இடங்களிலும், உபய லிங்கம் - இரண்டுவித ஸ்வபாவமுடையதோ.

3. பகவத்கீதை - 13 - 2

4. பகவத்கீதை - 15 - 7

ன்னில் அரிஷ்டங்களின் கும்பல்களில் விழுகிறார்கள் என்று 'ப்ரஸங்கஸக்தா நரகேऽஶுசௌ' என்பதினால் முன்னமேயே சொல்லப்பட்டது. 5-6

பா - அ] பிறகு கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்டதாகிய ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட யஜ்ஞம், முதலியவைகளில் ஸத்வம் முதலிய குணங்களினால்

---

யே எல்லாவற்றையும் கஷ்டப்படுத்துவதாகையினால் சொல்லிய விதமாக இல்லாவிடில் ஒரு தேவதைக்கு ப்ரீதியைக் கொடுக்கக்கூடியதாக ஆகாது என்று சில குயுக்திகளைச் சொல்லுகிறவர்கள் பிரித்திருப்பதை நிராகரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'யாகம், முதலியவைகளையும்' என்று. எவர்களுக்கு அஸுரர்களினுடையதாகிய நிஶ்சயம் இருக்கிறதோ அவர்கள் 'ஆஸுரநிஶ்சயா:'. அதில் அஸுரர்களினுடைய என்பது அவர்களுடைய ஸம்பந்தத்தை மாத்திரம் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அஸுரர்களின்' என்றாரம்பித்து. அதினால்கொள்ளப்பட்ட நிஶ்சயத்தின் விஶேஷத்தை ப்ரகாசப்படுத்துவதற்காகச் சொல்லுகிறார்—'அஸுரர்கள்' என்றாரம்பித்து அஸுரர்களின் நிஶ்சயத்தையுடையவர்கள் என்று சொன்னது முன்பு சொல்லப்பட்ட அரிஷ்டத்தில் முடிவு பெறுகிறதென்று தெரிவிப்பதற்காக என்று சொல்லுகிறார்—'என்னுடைய உத்திரவிற்கு' என்றாரம்பித்து. அஸுரர்களினுடைய நிஶ்சயத்தையுடையவர்கள் என்றிவ்வளவு சொன்னதினால் இந்த அர்த்தம் எப்படி ஏற்படும் அன்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'முன்னமேயே' என்றாரம்பித்து. 5-6

இப்படி அஶாஸ்த்ரீயமான கர்மங்களிற்குப் பலமில்லை என்கிறதில் தாத்பர்யத்தினாலும் நேரிலும் சொல்லப்பட்ட பிறகு ஆஹாரம், முதலியவைகள் மூன்றுவிதம் என்று சொல்லியிருப்பது கேழ்க்கப்படாத அர்த்தத்தைப் பற்றி உபந்யாஸம் செய்ததாக ஆகுமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கார்யங்களில் ஸத்வம் முதலிய நிஷ்டைகளைக் காரணமாகவுடைய பலங்களின் பேதம் கேழ்க்கப்பட்டிருக்கும்பொழுது ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கார்யங்களிலேயே இது என்று பதில் சொல்லப்பட்டது. அவ்விடத்தில் ஶ்ரத்தைக்கும், அதைச் செய்கிறவர்களுக்கும், ஶ்ரத்தை வைக்கக்கூடிய கார்யங்களுக்கும் ஸத்வம் முதலிய குணங்களினால் பிரிவு சொல்லப்பட்டது. அதைக்கேட்டதினாலேயே இதற்கு ஸமானங்களாகிய எல்லா வஸ்துக்களையும்பற்றி அறியவேண்டுமென்கிற ஆசை அர்ஜுனனுக்கு உண்டாகிறது, ஆகை

வ்யத்யாஸத்தை விஸ்தாரமாக நிரூபிக்கிறார். அதில் ஸத்வம் முதலிய குணங்கள் வ்ருத்தியடைவது ஆஹாரத்தைக் காரணமாகவுடையதாகை யினால் ஆஹாரம் மூன்றுவிதமென்பது முதலில் சொல்லப்படுகிறது. * 'ஸௌம்யனே! மனது ஆஹாரத்தின் பரிபாகமானதல்லவா' என்றும், † 'ஆஹாரம் சுத்தமாயிருந்தால் ஸத்வகுணத்திற்கு சுத்தி யுண்டாகிறது' என்று மர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்கள் சொல்லப்படுகின்றன அல்லவா—

ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: |
யஜ்ஞஸ்தபஸ்ததா தாநம் தேஷாம் பேதமிமம் ஶ்ருணு || 7

ப-ரை] ஸர்வஸ்ய - எல்லா ப்ராணிகளுக்கும், த்ரிவித: - மூன்று விதமான, ஆஹார: - ஆஹாரம், ப்ரிய: - இஷ்டமாக, பவதி - ஆகிறது, ததா - அப்படியே, யஜ்ஞ: - யாகமும், தப: - தபஸ்ஸும், தாநம் - தானமும், (மூன்றுவிதமானது), தேஷாம் - அவைகளினுடைய, இமம் - இந்த, பேதம் - வ்யத்யாஸத்தை, ஶ்ருணு - கேள். 7

யினால் அவைகளின் பேதத்தை உபந்யாஸம் செய்திருக்கிறது—என்பது. 'விஸ்தாரமாக நிரூபிக்கிறார்' என்பதினால் புனருக்தி வருகிறதே என்கிற ஆக்ஷேபமும் பரிஹரிக்கப்பட்டது. யஜ்ஞம், தபஸ்ஸு, முதலிய ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகிற கார்யங்கள் இருக்கத் தன்னசை யினால் செய்யக்கூடியதாகிய ஆஹாரத்தைப்பற்றி முதலில் உபதேசம் செய்திருப்பது எந்த அபிப்ராயத்தினால் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. 1 'வ்ருத்திஸ்ஸமானை: ஸர்வேஷாம் விபரீதைர்விபர்யய:' என்று ஆயுர்வேதத்தில் சொல்லியிருக்கிற ந்யாயத்தை அனுஸரித்து வ்ருத்தி செய்யக்கூடிய வஸ்துக்களின் குணங்களுக்குத் தக்கபடி மனது முதலியவைகளுக்கு ஸத்வம் முதலியவைகள் வ்ருத்தியடைகின்றன என்பது ஶ்ருதியிலும் சொல்லப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஸௌம்யனே' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆஹாரத்திற்கும் ஸத்வகுணத்திற்கும் சுத்தியாவது இவ்விடத்தில் ரஜோகுணம் தமோகுணம் இல்லாமை. 'அபி' என்னும் பதம் முன் சொல்லப்பட்ட ஶ்ரத்தை வைக்கக்கூடிய தேவதை முதலியவைகளின் பேதங்களைப்போல

* சாந்தோக்யம் - 3 - 5 - 4. † சாந்தோக்யம் - 7 - 26 - 2

1 அஷ்டாங்க ஹ்ருதயம் - ஸர்வேஷாம் - எல்லா தாதுக்களுக்கும், ஸமானை: - ஸமமான குணமுள்ள வஸ்துக்களினால், வ்ருத்தி: வ்ருத்தியும், விபரீதை: - விபரீதமான குணமுடைய வஸ்துக்களினால், விபர்யய: - குறைவும் உண்டாகி

பா] எல்லா ப்ராணிகளுக்கும் ஸத்வம் முதலிய மூன்று குணங்களுடன் சேர்ந்திருப்பதினால் மூன்றுவிதமாகிய ஆஹாரம் இஷ்டமாக இருக்கிறது. அப்படியே யஜ்ஞமும் மூன்றுவிதம். அப்படியே தபஸ்ஸும், தானமும். அந்த ஆஹாரம், யஜ்ஞம், தபஸ்ஸு, தானம், இவைகளுக்கு ஸத்வம், முதலிய குணங்களின் பிரிவினால் மேலே சொல்லப்படுகிற பேதத்தைக் கேள். 7

ஆயுஸ்ஸத்வபலாரோக்ய ஸுகப்ரீதி விவர்தநா: |
ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விகப்ரியா: ||

ப - ரை] ஆயுஸ்ஸத்வ பலாரோக்ய ஸுக ப்ரீதி விவர்தநா:— ஆயுஸ்-ஆயுஸ்ஸு, ஸத்வம்-ஜ்ஞானம், பலம்-பலம், ஆரோக்யம் - ரோகமில்லாமை, ஸுகம் — ஸுகம், ப்ரீதி - ஸந்தோஷம், இவைகளை, விவர்தநா: - வ்ருத்திசெய்யக் கூடியவைகளாயும், ரஸ்யா: - ருசியுள்ளவைகளாயும், ஸ்நிக்தா: - மழமழப்புள்ளவைகளாயும், ஸ்திரா: - உறுதியானவைகளாயும் ஹ்ருத்யா: - ரமணீயங்களுமாயிருக்கிற, ஆஹாரா: - ஆஹாரங்கள், ஸாத்விகப்ரியா: - ஸத்வகுணம் மேலிட்ட புருஷர்களுக்கு ப்ரியமானவைகள். 8

*வே ஸாத்விகம், முதலிய பேதங்கள் இதிலும் உண்டு என்று தெரிவிப்பதற்காக.* [1] *'சதுர்விதம்'* என்று முன்பு *சொல்லப்பட்ட நான்குவிதமாய் இருப்பதோடு விரோதம் வராமைக்காக நான்குவிதமாகிய அந்த ஆஹாரத்திலும் ஸத்வம் முதலிய குணங்களாலுண்டாகிய மூன்றுவிதமான பிரிவு இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'ஸத்வம், முதலிய குணங்களுடன் சேர்ந்திருப்பதினால்' *என்று. மூன்றுவிதம் என்று பொதுவாகப் பிரித்திருந்தபோதிலும் விசேஷமாக மேலே சொல்லப்போகிறதை எதிர்பார்த்து இங்கே இப்படி அர்த்தம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்*—'ஸத்வம் முதலிய குணங்களின் பிரிவினால் மேலே சொல்லப்படுகிற' *என்று. மேலே சொல்லப்போகிறது மிகவும் ஸமீபத்திலிருப்பதினால் நிகழ்காலமாகச் சொல்லியிருக்கிறது என்று சொல்லுகிறார்*— 'சொல்லப்படுகிற' *என்று. ஸத்வம், முதலிய குணங்கள், தன்னோடு சேர்ந்திருக்கும் வஸ்துக்களை அனுபவிப்பதினால் உண்டாக்கப்பட்ட வாஸனைகளின் வழியாகத் தங்களுக்குத் தகுந்த விஷயங்களில் ஆசையையுண்டாக்குகிறபடியினால் அந்தந்த ஆஹாரங்கள் அந்தந்தக் குணங்களையுடையவர்களுக்கு ப்ரியங்களாகின்றன.* 7

1. *பகவத்கீதை* - 15 - 14.

பா] ஸத்வ குணத்தோடு கூடினவனுக்கு ஸத்வ குணம் நிறைந்த ஆஹாரங்கள் ப்ரியங்களாகின்றன. ஸத்வகுணம் நிறைந்த ஆஹாரங்கள் ஆயுஸ்ஸை வ்ருத்தி செய்யக்கூடியவைகள். மறுபடியும் ஸத்வத்தை வ்ருத்தி செய்யக்கூடியவைகள். ஸத்வமாவது மனது. மனதினால் உண்டாக்கப்படுகிற ஜ்ஞானம் இவ்விடத்தில் 'ஸத்வ' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. ‡ 'ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' என்கிறபடியே ஸத்வகுணம்

---

தா] ஆயுஸ்ஸை வ்ருத்தி செய்யக்கூடியதாயிருக்கை முதலிய ஆஹாரத்தின் சில குணங்கள் ஆயுர்வேதத்தினால் அறியத்தக்கவைகள். சில குணங்கள் ஶாஸ்த்ரம் வேண்டியதில்லாமல் ப்ரத்யக்ஷத்திலே ஏற்பட்டவைகள். முன்பே ஸத்வகுணம் வ்ருத்தி யடைந்திருப்பதினாலல்லவோ ஸத்வகுணம் மேலிட்ட ஆஹாரத்தில் ஆசையுண்டாகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மறுபடியும்' என்று. ஆயுஸ்ஸு எல்லா ப்ரயோஜனங்களையும் ஸம்பாதிப்பதற்கு உபயோகமுள்ளதாகையினால் அதை முதலில் சொல்லியிருக்கிறது. ஸத்வகுணமோவெனில் விஶேஷமாக மோக்ஷத்தை ஆசைப்படுறவனுக்கு வேண்டியதாகையினால் அதற்கப்புறம் சொல்லியிருக்கிறது. 1 'ஆஹாரம் சுத்தமாயிருந்தால் ஸத்வதத்திற்கு சுத்தியுண்டாகிறது. ஸத்வம் சுத்தமாக இருந்தால் இடைவிடாத த்யானம் உண்டாகிறது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தின் அர்த்தத்தை விசதப்படுத்துவதற்காகச் சொல்லியிருப்பதினால் இங்கு ஆஹாரத்தினாலுண்டாகிய ஸத்வகுணத்தின் வ்ருத்தியாவது ஜ்ஞானம்வரையில் முடிவுபெறுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'ஸத்வ' என்னும் பதம் ஜ்ஞானத்தை உபசாரமாகச் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காக அதின் காரணத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்—'ஸத்வமாவது மனது' என்று. 2 'உத்ஸாஹ வ்யவஸாயௌ ஸத்வம் ஹ்ரீ தேஜஸ்' என்று ஒருவித ஜ்ஞானத்திலும் ஸத்வம் என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மனதினால் உண்டாக்கப்படுகிற' என்றாரம்பித்து. 'இவ்விடத்தில்' என்பதற்கு மேல் சொல்லிய ஶ்ருதியினர்த்தத்தை விசதப்படுத்தும் ஸமயத்தில் என்றர்த்தம். அந்தந்த வஸ்துக்களிலிருக்கிற ரஸம் முதலியவைகள் ஶரீரத்திலிருக்கும் தாதுக்களை வ்ருத்தி செய்கிறபடியினால் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற அந்தந்த வஸ்துக்களையும் எப்படி அவ்விதமாகவே சொல்லபடுகிறதோ அப்படியே இவ்விடத்திலும் ஸத்வகுணம் ஜ்ஞான வ்ருத்தி யடைவதற்

‡ பகவத்கீதை - 14 - 17
1 சாந்தோக்யம் - 7 - 26 - 2    2 நாம லிங்காநுஶாஸநம்.

ஜ்ஞானம் வ்ருத்தியடைவதற்குக் காரணமாகையினால் ஸத்வகுணம் நிறைந்த ஆஹாரமும் ஜ்ஞானம் வ்ருத்தியடைவதற்குக் காரணம். அப்படியே பலம், ஆரோக்யம், இவைகளையும் வ்ருத்தி செய்யக்கூடியவைகள். அப்படியே ஜீர்ணமாகும் காலத்தில் தானாகவே ஸுகத்தை வ்ருத்திசெய்யக்கூடியவைகள். அப்படியே ப்ரீதிக்குக் காரணங்களாகிய கர்மங்களை

---

*குக் காரணமாகையினால் அதற்கு ஆதாரமாகிய ஆஹாரமாயிருக்கும் வஸ்துவையும் அப்படியே சொல்லியிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸத்வா ஸம்ஜாயதே ஜ்ஞாநம்' என்றாரம்பித்து. பலம், ஆரோக்யம், இவைகளையும், ஸுகம், ப்ரீதி, இவைகளையும், சேர்த்துச் சொல்லியிருப்பது இவைகள் இரண்டும் சேர்ந்து உண்டாகிற படியினால் ஒன்றுக்கொன்று பிரிவதில்லை என்கிற தாத்பர்யத்தினால், என்கிற அபிப்ராயத்தினால் 'அப்படியே பலம், ஆரோக்யம்' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. பலமாவது இவ்விடத்தில் ப்ராணவாயு, ஜாடராக்னி, இவைகளின் வ்ருத்தி. ஆரோக்யமாவது தாதுக்கள் ஸமமாக இருப்பது. கர்மங்களின் தோஷத்தினாலும் அக்னி, தாதுக்கள், இவைகளின் வ்யத்யாஸத்தினாலுமல்லவோ ரோகங்கள் உண்டாகின்றன. அந்த ஆஹாரம் ருசியாயிருக்கையாலும் அழகான ரூபத்தையுடைத்தாயிருக்கையாலும், தத்காலத்தில் ஸுகத்தை உண்டுபண்ணுகிறது என்பது ஏற்பட்டபடியினால் அத்தோடு புனருக்தியைப் பரிஹரிப்பதற்காக 'ஸுகத்தை வ்ருத்திசெய்யக்கூடியவைகள்' என்பதற்கு 'ஜீர்ணமாகும் ஸமயத்தில்' என்னும் விசேஷணம் சொல்லப்பட்டது. 'ப்ரீதியை வ்ருத்திசெய்விக்கக்கூடியவைகள்' என்பதை விட வ்யத்யாஸத்தைக்காட்டுவதற்காக 'தானாகவே' என்பதினால் வேறொன்றின் வழியாக அல்ல என்று சொல்லப்பட்டிருக்கிறது. எப்படி மயக்கம் முதலியவைகளுக்குக்காரணங்களாகிய வஸ்துக்கள் ஸாப்பிடப் பட்டதுகளாய்க் கொண்டு லோகத்திற்குப் பயம், முதலியவைகளை உண்டாக்கக்கூடிய கர்மங்களில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்து அதின் வழியாகப் புருஷனுக்கு அப்ரீதியை வ்ருத்திசெய்கின்றனவோ அப்படியே ஸத்வகுணத்திற்குக் காரணமாகிய ஆஹாரங்களும் மங்களகரங்களாயும், லோகங்களுக் குபகாரங்களாயும், பரலோகம் முதலியவைகளுக்குக் காரணங்களாயு மிருக்கிற கர்மங்களில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்து அதின் வழியாக ப்ரீதியை உண்டு பண்ணுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரீதிக்குக் காரணங்களாகிய கர்மங்களை' என்றாரம்பித்து. 'கட்வம்ல' என்றிவை முதலிய வைகளினால் மற்ற ரஸங்கள் ஸாத்விகங்களல்ல என்று சொல்லப்போகிறபடியி*

ஆரம்பிப்பதை முன்னிட்டு அதின் வழியாக ப்ரீதியை வ்ருத்தி செய்விக்கக்கூடியவைகள். ரஸ்யா:-மதுர ரஸத்தை யுடையவைகள். ஸ்நிக்³தா⁴: - மழமழப்பை உடையவைகள். ஸ்தி²ரா: - உறுதியான மாறுதலை யுடைய

---

னாலும், 'ரஸ' என்னும் பதம் அதிகமாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதை அனுஸரித்தும் இவ்விடத்தில் 'ரஸ' என்னும் பதம் விஶேஷமான ரஸத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'மதுர ரஸத்தை யுடையவைகள்' என்று. இதனால் 'ரஸ' என்னும் பதத்தின் பேரிலிருக்கும் விக்ருதி ஸம்பந்தம் மாத்திரத்தைச் சொல்லுகிறது என்பதும் தெரிவிக்கப்பட்டது. 'ரஸ்யந்தே (இச்சிக்கப் படுகின்றன)' என்கிற வ்யுத்பத்தியினாலாவது 'ரஸ்யா:' என்னப்படுகின்றன. அதில் மதுர ரஸத்தை யுடையவைகள் என்று காரணத்தைச் சொல்லி யிருக்கிறது. மதுர ரஸமல்லவோ மற்ற ரஸங்களை விடச் ஶரீரம் நிலைத்திருப்பதற்கு விஶேஷமான காரணமாகிறது. அப்படியே பாஹடனால் 1 'ரஸாஸ் ஸ்வாத்வம்லலவண திக்தோஷணகஷாயகா:। ஷட் த்ரவ்யமாஶ்ரிதாஸ்தே ச யதாபூர்வம் பலாவஹா:॥' என்று சொல்லப்பட்டது. வ்யாதியில்லாமல் இருப்பவனுக்கு மதுர ரஸம் நிறைந்ததாகிய ஆஹாரம் வேண்டும் என்றும் 2 'ஷட்ரஸாந் ஸ்வாத்வாத்யாந் நாதித்ருத விலம்பிதம்' என்று சொல்லப்படுகிறது. ரஸாயனம் முதலிய கல்பங்களிலும் மதுர ரஸம் ஒன்றே விதிக்கப்படுகிறது. இப்படியே மழமழப்பை உடைய ஆஹாரமும், க்ரூரமாயிருக்கைக்கு விரோதமானது. ஆகையினால் க்ரூரமான காற்றினால் ஶரீரம் சிதறிப் போகாமல் தடுக்கிறது என்று ஆயுர் வேதத்தைக் கொண்டறியப்பட்டது. ஸாப்பிடப்படுகிற ஆஹாரத்தில் ஸ்வரூபம் ஸ்திரமாக இருப்பதென்பது ஸம்பவிக்காதாகையினாலும், அது குணமல்லவாகையினாலும், ஶரீரமென்று பேருடைய சேர்க்கை ஸ்திரமாயிருப்பதற்குக் காரணமாகிய ரஸங்கள், ரக்தம், மாம்ஸம், உயிர்த் தண்ணி, எலும்பு, சீழ், சுக்கிலம், என்று பேருடைய ஏழு தாதுக்களாகிற இந்த ஆஹாரத்தின் மாறுதலும் பலம் முதலிய இதனால் உண்டாக்கப்படுகிற ப்ரயோஜனமும் வெகு காலம் இருக்கிறதாகிய ஸ்திரமாயிருக்கை சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'உறுதியான மாறுதல்களை

---

1 அஷ்டாங்க ஹ்ருதயம் - ரஸங்களாவன - மதுர ரஸம், புளிப்பு, உப்பு, கசப்பு, காரம், துவர்ப்பு, ஆக ஆறு. இவைகள் வஸ்துக்களை அடைந்திருக்கின்றன இவைகள் முன்பு சொல்லி யிருக்கிறவைகள் பின்பு சொல்லி யிருக்கிறவைகளை விட பலத்தைக் கொடுக்கக் கூடியவைகள்.

2 மேல் சொல்லிய ஆறு ரஸங்களையும் மதுரரஸம்மேலிட்டவைகளா அதிக வேகமில்லாமலும் அதிகஸாவகாச மில்லாமலும் ஸாப்பிட வேண்டும்.

வைகள். ஹ்ருத்³யா꞉ - அழகான ரூபத்தை யுடையவைகள். இப்படிப் பட்ட ஸத்வகுணம் நிறைந்த ஆஹாரங்கள் ஸத்வகுணம் மேலிட்டிருக் கிற புருஷனுக்கு ப்ரியங்கள். 8

கட்வம்ல லவணாத்யுஷ்ண தீக்ஷ்ண ரூக்ஷ விதா³ஹின꞉ ।
ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து³꞉க²ஶோகாமயப்ரதா³꞉ ॥ 9

ப - ரை] கட்வ - காரமாயும், அம்ல - புளிப்பாயும், லவண - உப்பதிகரி த்ததாயும், அத்யுஷ்ண - அதிக உஷ்ணத்தை யுடையதாயும், தீக்ஷ்ண - க்ரூர மாயும், ரூக்ஷ - உலர்த்தக்கூடியதாயும், விதா³ஹின꞉ - தாபத்தையுண் டாக்கக்கூடியதாயு மிருக்கிற, து³꞉க²ஶோகாமயப்ரதா³꞉ - துக்கம், ஶோ கம், ரோகம், இவைகளைக் கொடுக்கிற, ஆஹாரா꞉ - ஆஹாரங்கள், ராஜஸஸ்ய — ரஜோகுணம் மேலிட்டவனுக்கு, இஷ்டா꞉ - இஷ்டமான வைகள். 9

பா] கடுவாயும், அம்லமாயும், லவணமாயும், அத்யுஷ்ணமாயும், அதி தீக்ஷ்ணமாயும், ரூக்ஷங்களாயும், விதாஹிகளாயு மிருக்கிற என்று சேர்த் துக்கொள்ளவேண்டியது. கட்வ - காரமான ரஸமுடையவைகள்,

---

யுடையவைகள்' என்று. உபயோகப் படுத்துவதற்கு முந்தியே அநுப வருக்கக் கூடியதான அமைப்புகளையுடைய வஸ்துக்கள் விலக்கப்பட்ட படியினால் பார்த்த மாத்திரத்தினால் ப்ரீதியை உண்டாக்கக் கூடிய தாயிருக்கை இவ்விடத்தில் 'ஹ்ருத்³யா꞉' என்னப்படுகிறது, என்று சொ ல்லுகிறார்— 'அழகான ரூபத்தை யுடையவைகள்' என்று. எந்த ஆஹாரங்கள் விஷயத்தில் தர்ம ஶாஸ்த்ரங்களும், ஆயுர் வேதமும், இவை இரண்டும் ஒரே அபிப்ராயத்தோடு பொருந்தா நின்றனவோ அவை எல்லாவற்றையும் இது குறிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட' என்று. இத்தால் 'யுக்தாஹாரவிஹா ரஸ்ய' என்று முன்னே சொன்னது விவரிக்கப்பட்டது 8

'கட்வ' என்னும் பதம் 'த்ரிகட்வகம்' முதலியவைகளிலும், 'அம்ல' என்னும் பதம் புளி முதலியவைகளிலும் அதிகமாக ப்ரயோகிக்கப்பட் டிருப்பதினால் இவ்விடத்தில் அவைகளை மாத்திரம் சொல்லுகிறதென் பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'காரமான ரஸமுடையவை கள், புளிப்பு ரஸமுடையவைகள்' என்று. ஸத்வகுணம் மேலிட்டவ னுக்கும் வ்ரதம் முதலிய காலங்களைத் தவிர மற்றக் காலங்களில் ருசி மாத்திரத்திற்காக உப்பு சேர்த்துக்கொள்ள அனுமதி கொடுக்கப்பட் டிருப்பதினாலும், உப்பு ஸ்வரூபத்தினால் ஆஹாரமல்லவாகையினாலும்,

அம்ல - புளிப்பு ரஸமுடையவைகள், லவண - உப்புமேலிட்டவைகள், அதி-தீக்ஷ்ண - அதிகக் குளிர்ச்சி, அதிக க்ரூரமாயிருக்கை, முதலியவைகளி னால் உபயோகப்படுத்தக் கூடாதவைகள், தேஹத்தை உலர்த்தக்கூடிய வைகள் ரூக்ஷங்கள், தேஹத்திற்குத் தாபத்தை உண்டாக்குகிறவைகள் விதாஹிகள், இப்படிப்பட்ட ஆஹாரங்கள் ரஜோகுணம் மேலிட்டவ

நேரில் ப்ரத்யக்ஷமாய் உப்பைச் சேர்த்துக்கொள்ளுவது பசுவின் மாம் ஸத்திற்கு ஸமமாகையினாலே ஸ்பஷ்டமாக ஶாஸ்த்ரத்தில் தடுக்கப்பட் டிருப்பதினாலும், இவைகளைத்தவிர மற்றதைப்பற்றி 'லவண' என்னும் பதம் சொல்லப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகி றார்—'உப்பு மேலிட்டவைகள்' என்று 1'ஸ்நிக்தோஷ்ணம்போஜநம்' என்று ஸாதோஷ்ணமாகிய போஜனம் விதிக்கப்பட் டிருப்பதினால் 'அத்யுஷ்ண' என்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. 'கடு' முதலியவைகளை எரிக்கக் கூடிய என்றர்த்தம் என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காக இவ் விடத்தில் விக்ரஹத்தைக் காட்டி யிருக்கிறது. க்ரூரமாக இருக்கிற மிளகு முதலிய வைகளைப்பற்றியும் அந்தந்தவஸ்துக்களில்ருசி உண்டா தற்காக ஸ்வல்பமாக அனுமதி கொடுக்கப்பட் டிருப்பதினால் அவ்விட த்திலும் 'அதி' என்னும் உபஸர்க்கத்திற்கு அந்வயம் உண்டென்று காட்டப்பட்டது. உஷ்ணமாயிருப்பது தனித்துச் சொல்லப்பட்ட படியி னால் இவ்விடத்தில் 'தீக்ஷ்ண' என்னும் பதம் அதைச் சொல்லுகிற தல்ல. ஶீக்கிரம் வேலை செய்யக் கூடிய மிளகு முதலியவைகளைப் பற்றி ஆயுர் வேதத்தில் தீக்ஷ்ணம் என்று சொல்லப்படுகிறது. ஆகையினால் இவ்வி டத்தில் உபயோகப்படுத்தின க்ஷணம் முதல் விரோதமாகிய வஸ்துக் கள் தீக்ஷ்ணங்கள் என்கிற அபிப்ராயத்தினால் உதாஹரணம் காட்டுகி றார்—'அதிகக் குளிர்ச்சி என்றாரம்பித்து. மழமழப்புக்கு எதிர் நடை யான குணமாகிய 'ரௌக்ஷ்யம்' என்பது சொல்லப்படுகிறது என்று சொ ல்லுகிறார்—'தேஹத்தை உலர்த்தக் கூடியவைகள்' என்று. இத்தால் வாதத்திற்குக் கோபத்தை உண்டு பண்ணக் கூடியவைகள் என்றேற் பட்டது. இவ்விடத்தில் 'விதாஹி' என்னும் பதத்தில் ப்ரக்ருதி விக்ருதிக ளின் தாத்பர்யத்தை ப்ரகாசப்படுத்துகிறார்—'தாபத்தை உண்டாக்குகி றவைகள்' என்று. பித்தத்தை வருத்திசெய்யக் கூடியவைகள் என்றர் த்தம். 'இப்படிப்பட்ட' என்பதற்குத்தாத்பர்யம் முன்போலவே. 2 'த்ருஷ்ணா ஶோக ஸமுத்பவம்' என்பது முதலாக முன் சொல்லப்பட்டதை

1 அஷ்டாங்க ஹ்ருதயம். ஸ்நிக்தம்-மழமழப்புள்ளதாயும், உஷ்ணம்-சுட்டுக் கொண்டிருக்கும், போஜனம் - ஆஹாரம். 2 பகவத்கீதை - 14 - 7

ஞுக்கு இஷ்டமானவைகள். அவைகள் ரஜோகுணம் மேலிட்டவைக ளாகையினால் துக்கம், ஶோகம், ரோகம், இவைகளை வ்ருத்தி செய்யக் கூடியவைகள். ரஜோகுணத்தையும் வ்ருத்தி செய்யக்கூடியவைகள். 9

**யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் |**
**உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜனம் தாமஸப்ரியம் ||** 10

ப - ரை] யாதயாமம் - அதிக நாழி கழித்தது, கதரஸம்-ஸ்வபாவமாகிய ரஸம் மாறினது, பூதி - துர்க்கந்தமுடையது, பர்யுஷிதம் - அதிக காலம் கழித்ததினால் ரஸம் மாறினது, உச்சிஷ்டமபி - எச்சிலாகியது, அமேத்யம் - யஜ்ஞத்தில் உபயோகப்படுத்தாதது, யத் - எதுவோ (அப்படிப் பட்ட), போஜனம் - ஆஹாரமானது, தாமஸப்ரியம் - தமோகுணம் மே லிட்டவர்களுக்கு ப்ரியமானது 10

பா] யாதயாமம் - வேகுநாழிகையாக இருந்தது, கதரஸம் - ஸ்வபாவத்

---

ஜ்ஞாபகப்படுத்துகிறார்— 'ரஜோகுணம் மேலிட்டவைகளாகையினால்' என்றாரம்பித்து. காரமுள்ளவைகள் முதலிய ஆஹாரங்கள் துக்கம், முதலியவைகளுக்குக் காரணமென்பது அநேகமாய் இந்த லோகத்தில் அவைகளால் கஷ்ட முண்டாகிறது, அவைகளில்லா விட்டால் கஷ்ட முண்டாகிற தில்லை என்பதைக் கொண்டறியத் தக்கது. ஆயுர்வேதத் திலும் நிரூபிக்கப்பட்டது. துக்கத்தைக் கொடுப்பதென்பதோ தாதுக் களுக்கு வ்யத்யாஸத்தை உண்டு பண்ணி அதின் வழியாக. ஶோகத் தைக் கொடுப்பதென்பதோ வெனில் அதைப் பராமர்சிப்பதினால் உண் டாகிய பஶ்சாத்தாப்பம் முதலியவைகளினால். ரோகமும் காலக்ரமத்தி னால் உண்டாகிறது. இந்த லோகத்திலே மாத்திரம் துக்கம் முதலிய வைகளுக்குக் காரணம் என்பது மாத்திரமில்லை. பின்னை எப்படி என் னில் பரம்பரையாகப் பரலோகத்திலும், இதர தேஹங்களிலும் என் கிற அபிப்ராயத்தினால் ஸத்வத்தை வ்ருத்தி செய்கிற ஸத்வகுணம் மேலிட்ட ஆஹாரத்தில் சொல்லியிருக்கிற ந்யாயத்தினாலேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ரஜோகுணத்தையும் வ்ருத்தி செய்யக் கூடியவைகள்' என்று. 9

ஸாத்விகாஹாரம், ராஜஸாஹாரம், இவைகளைப்பற்றிக் குணம், அவைகளின் கார்யங்கள், இவைகளைச் சொல்லியிருந்தபோதிலும் தாமஸமான ஆஹாரத்தில் குணம் மாத்திரத்தைச் சொல்லியிருப்பது அதிக வ்யத்யாஸமில்லாமல் ராஜஸமான ஆஹாரத்தின் கார்யத்தையே இதுவும் உடையதாகையினால். எல்லா ஆஹாரங்களிலும் ஒரு யாமம்

தில் ஏற்பட்ட ரஸத்தைவிட்டது. பூதி—துர்க்கந்தமுடையது, பர்யுஷிதம் - காலம் தாண்டினதினால் வேறு ரஸத்தையடைந்தது, உச்சிஷ்டம்

கழிப்பது மாத்திரத்தினால் தோஷமில்லையாகையினால் அந்தந்த வஸ்துக்களில் எவ்வளவு காலம் கழிவதினால் தோஷமுண்டாகுமோ அவ்வளவு காலம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'வெகு நாழிகையாக இருந்தது' என்று. யாமமாவது உயர்ந்த பாகம், அதாவது நெய்யைவிட மிகவும் ஸூக்ஷ்மமாகிய மண்டம் (ஏடு) என்பதைப் போல என்று சிலர் சொல்லுகிறார்கள். இத்தால் ஸாரம்ஶமில்லாதது என்று சொல்லப்பட்டதாகிறது. இதுவும் வெகுகாலம் இருந்தது என்பதினால் ஏற்பட்டது. ஜலமயங்களாயும் ப்ருதிவியின் மாறுதலாயுமிருக்கிற ஆஹாரங்களில் அந்தந்தப் பாகங்களின் வ்யத்யாஸங்களினால் ஒரு ரஸமும் இல்லாமலிருப்பது எப்பொழுதும் ஸம்பவிக்காதாகையினால் அந்தந்த வஸ்துக்களுக்கு ஸ்வபாவத்திலேற்பட்டதாகச் சொல்லப்படுகிற ரஸத்தைவிட்டு வேறு ரஸத்தை யடைந்திருப்பது இவ்விடத்தில் 'கதரஸம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஸ்வபாவத்தில் ஏற்பட்ட ரஸத்தைவிட்டது' என்று. இத்தால் 'கதரஸம்' என்பதினாலேயே ஸாரம்ஶம் நீங்கியது என்று சொல்லப்பட்டபடியினால் 'யாதயாமம்' என்பது அல்ப பக்குவமானது என்று வ்யாக்யானஞ் செய்ததும் நிராகரிக்கப்பட்டது. 'பூதி' என்னும் பதம் ஸாத்விகமல்லாதவைகள் என்று பாஞ்சராத்ரம், முதலிய ஶாஸ்த்ரங்களிலேற்பட்டதாகிய கஞ்சா முதலிய வஸ்துக்களில் ப்ரயோகிக்கப்படுகிறது. அப்படியிருந்தபோதிலும் இவ்விடத்தில் வஸ்துக்களை விசேஷித்துச் சொல்லுகிற ஸந்தர்ப்ப மில்லாமையினாலும், குணங்களைக்கொண்டு எல்லா ஆஹாரங்களையும் குறிக்கும் ஸந்தர்ப்பமாகையினாலும் இவ்விடத்தில் 'பூதி' என்னும் பதத்தினால் விடத்தகுந்தது என்று லோகத்திலும் ஶாஸ்த்ரத்திலும் ஏற்பட்ட குணம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'துர்க்கந்த முடையது' என்று. காலம் தாண்டியிருப்பது மாத்திரம் 'யாதயாமம்' என்னும் பதத்தினால் சொல்லப்பட்டபடியினாலும், ரஸத்தை விட்டிருப்பது 'கதரஸம்' என்னும் பதத்தினால் சொல்லப்பட்டபடியினாலும், எந்த வஸ்துக்களில் காலம் தாண்டுவது மாத்திரத்தினால் தோஷமுண்டாகிறதில்லையோ, பால் முதலியவைகளில் புரைகுத்துவது முதலியவைகளினால் வேறு ரஸம் உண்டாகிறதோ, அப்படிப்பட்ட வஸ்துக்களில் காலம் கழித்தது மாத்திரத்தினால் வேறு ரஸம் உண்டாயிருப்பது இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'காலம் தாண்டினதினால் வேறு ரஸத்

குரு முதலியவர்களைத் தவிர மற்றவர்கள் ஸாப்பிட்ட மிகுதி, ஸமேத்யம்-யஜ்ஞத்திற்குத் தகாதது, அதாவது யஜ்ஞம் செய்து அதில் மீதியாகாதது

தை யடைந்தது' என்று. இது விடத்தகுந்த மற்றெல்லா விகாரங்களையும் குறிக்கிறது. ஆகையினாலேயே பாகம் செய்யப்பட்டவைகளாயும், ஒருவித மாறுதல்களுமில்லாமலிருந்தபோதிலும் ஒரு ராத்திரி கழித்த ஜலம் முதலியவைகளை விட்டுவிடுகிறார்கள். இத்தால் இவ்விடத்தில் 'யாதயாமம்' என்னும் பதம் வேறு ரஸத்தை யடையாமல் காலம்கழித்தது மாத்திரத்தினால் தோஷத்தை யடைந்த வஸ்துவைப் பற்றியது என்று காட்டப்பட்டது. சில எச்சில்களைப்பற்றி ஶாஸ்த்ரத்தில் அனுமதி கொடுக்கப்பட்டிருப்பதினாலும், ஆசார்யனுடைய எச்சில் பாபவிஶேஷத்திற்கு ப்ராயஶ்சித்தமாகையினாலும், பரிசுத்தமென்றெடுத்திருப்பதினாலும் அதைத் தவிர மற்றவைகளைப் பற்றியது 'உச்சிஷ்டம்' என்னும் பதம் என்று சொல்லுகிறார் — 'குரு, முதலியவர்களைத் தவிர' என்றாரம்பித்து முதலிய, என்னும் பதத்தினால், பிதா, முதல் தமையன், பத்னிக்குப் பர்த்தா, இவர்கள் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். 'அதிதி பிள்ளையைப் பெறவேண்டுமென்று ஆசையுடையவளாய்த் தேவதைகளின் பொருட்டு ப்ரம்மோதனத்தைப் பாகம் செய்தாள். அவளுக்கு மீதியைக் கொடுத்தார்கள். அதை அவள் ஸாப்பிட்டாள். அவள் கர்ப்பத்தைத் தரித்தாள்' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம், முதலியவைகளில் எச்சிலை ஸாப்பிட்டது சொல்லப்படுகிறது. அது ப்ரம்மோதனத்தை விதிக்கவந்ததாகையாயினால் எச்சிலை ஸாப்பிட வேண்டும் என்று விதிப்பதில் தாத்பர்யமல்ல. ஸாப்பிட்டு மீதியாயும், பாகம் செய்த பாத்திரத்தி லிருக்கிற அன்னத்தைச் சொல்லுவதாக இருந்தால் ஒருவித விரோதமுமில்லை. இதற்கு முன் ஓரிடத்திலும் சொல்லப்படாததாகையினால் இங்கு விதிக்கப்படுகிறது என்று ஒப்புக்கொண்ட போதிலும் அதிதியும் ஸாத்யர்கள் என்கிற தேவதைகள் என்று சொல்லப்படுகிறவர்களையும்பற்றி மாத்திரமேயொழிய அதினால் இப்பொழுதிருக்கும் நமக்கு அப்படிப் பட்ட அனுஷ்டானம் வருவதற்கு ந்யாயமில்லை. அப்படி வருவதாயிருந்த போதிலும் அந்த ப்ரம்மோதனம் என்கிற கர்மத்தில் மாத்திரம் அது ஏற்பட்டது. ஆகையினால் இவ்விடத்தில் விதியுமில்லை, அதைக் கல்பிக்க இடமுமில்லை. ஆகையினால் நமக்கு அந்த ந்யாயம் வராது. முன் ஜன்மத்தில் நடந்த கதையை நினைத்துக்கொள்ளக்கூடிய ஸாமர்த்தியமுடைய பகவானாகிய நாரதரால் முன்பு தான் ஶூத்திர ஜன்மத்தை அடைந்திருந்த பொழுது

என்றர்த்தம். இப்படிப்பட்ட தமோகுணம் நிறைந்த ஆஹாரம் தமோ

---

அனுஷ்டித்ததைப்பற்றி 1 ‘உச்சிஷ்டலேபாநநுமோதிதோ த்விஜை: ஸக்ருத்ஸ்ம புஞ்ஜே ததபாஸ்தகில்பிஷ:’ என்றிவை முதலியது சொல்லப்பட்டதே என்னில் அதுவும் அந்த ஜன்மத்தில் நாரதர் அந்த ருஷிகளுக்குச் சிஷ்யனாகிய சூத்திரன் ஆகையினால் அப்படிப்பட்டவர்களிடங்களில் அந்த அனுஷ்ட்டானம் வரலாமே ஒழியமற்றவர்களிடத்தில் இல்லை. இப்படியாகையினால் மற்ற வாக்யங்களும் விரோதிக்கிறதில்லை. வசனங்களுக்கு விரோதம் வரும்பொழுது லிங்கத்தைப் பார்த்தது மாத்திரத்தினால் அனுஷ்ட்டானத்தைக் கல்பிக்கக் கூடாது. ஆசார்யனுடைய பிள்ளை முதலியவர்களினுடையவும் எச்சிலை ஸாப்பிடக் கூடாது என்று 2 ‘உச்சிஷ்டாசநவர்ஜம் ஆசார்யவதாசார்யபுத்ரே வ்ருத்தி:’ என்றாரம்பித்து மறுக்கப்படுகிறது. மற்றவர்களைப் பற்றிக்கேழ்க வேண்டியதில்லை. பாகவதனுக்கோ வெனில் ஆசார்யனைத் தவிர மற்றெல்லாருடைய எச்சிலைஸாப்பிட்டபோதிலும் உக்ரமான ப்ராயஶ்சித்தங்கள் விதிக்கப்படுகின்றன. அப்படியே ஸநத்குமாரீய ஸம்ஹிதையில் சொல்லப்பட்டிருக்கிறதென்று ஆகமப்ராமாண்யத்தில் பகவானாகிய யாமுனாசார்யரால் 3 ‘நிர்மால்யம் பக்ஷயித்வைவ உச்சிஷ்டமகுரோரபி। மாஸம் பயோவ்ரதோ பூத்வா ஜபந்நஷ்டாக்ஷரம் ஸதா॥ ப்ரஹ்மகூர்ச்சம் தத: பீத்வா’ என்றிவை முதலியது எடுக்கப்பட்டிருக்கிறது, இவ்விடத்தில் பாஷ்யத்திலும் குரு என்னும் பதம் ஆசார்யனைப் பற்றியது. பிதாவைப் பற்றியதாகவுமாம். ஏனெனில் குரு என்னும் பதத்திற்கு

---

1 பாகவதம் - 1 - 5 - 25. த்விஜை:-ப்ராம்மணர்களினால், அநுமோதித:—அனுமதி செய்யப்பட்டவனாய், உச்சிஷ்டலேபாந் - எச்சிலில் ஒட்டிக்கொண்டிருந்தவைகளை, ஸக்ருத் - ஒருதரம், புஞ்ஜேஸ்ம - ஸாப்பிட்டேன், ததபாஸ்தகில்பிஷ:—அதினால் போக்கடிக்கப்பட்ட பாபங்களை யுடையவனாய் (இவ்விதமாய் பகவானிடத்தில் பக்தி யுடையவனாக ஆனேன்).

2 ஆபஸ்தம்ப தர்மம்-1 - 2 - 7 - 30. உச்சிஷ்டாசநவர்ஜம்—எச்சிலை ஸாப்பிடுவதை நீக்கி, ஆசார்யவத்-ஆசார்யனிடத்திலே போல, ஆசார்ய புத்ரே-ஆசார்யனுடைய பிள்ளையினிடத்திலும், வ்ருத்தி:—இருக்கவேண்டும்.

3. ஸநத்குமாரீய ஸம்ஹிதை - நிர்மால்யம் - பகவானைத் தவிர இதர தேவதைகளுக்கு நிவேதனம் செய்ததையும், அகுரோ:—ஆசார்யனைத் தவிர வேறொருவனுடைய, உச்சிஷ்டமபி - எச்சிலையும், பக்ஷயித்வா - ஸாப்பிட்டு, மாஸம் - ஒரு மாதம், பயோவ்ரத:—பால் ஸாப்பிடுவதையே வ்ரதமாக உடையவனாக, பூத்வா - ஆகி, ஸதா - எப்பொழுதும், அஷ்டாக்ஷரம்-திருவஷ்டாக்ஷர மந்த்ரத்தை, ஜபந்-ஜபம் செய்து கொண்டும் இருந்து, தத:—பிற்பாடு, ப்ரம்ம கூர்ச்சம்-ப்ரம்ம கூர்ச்ச பஞ்சகவ்யத்தை, பீத்வா - ஸாப்பிட்டு (சுத்தமாகிறான்).

குணம் மேலிட்டவர்களுக்கு ப்ரியமாக இருக்கிறது. 'ஸாஜ்ஞெ (ஸாப்

அர்த்தமாகிய உபாத்யாயர் முதலியவர்களினுடைய எச்சிலை க்ரஹித்துக் கொள்ளவேண்டு மென்று ஶாஸ்த்ர மில்லாமையினால். ஏதாவதொன்றை உபதேசித்த மாத்திரத்தினாலும் அவன் ஆசார்யன் என்பதுமில்லை, 1 'உபநீய து ய: ஶிஷ்யம் வேதமத்யாபயேத் த்விஜ:। ஸகல்பம் ஸரஹஸ்யம் ச தமாசார்யம் ப்ரசக்ஷதே॥' என்றிவை முதலிய வசனங்களினால் ஆசார்யனுக்கு லக்ஷணம் சொல்லி யிருக்கிற படியினால் மற்றவர்களிடத்தில் உபசாரமாக ப்ரயோகிப்பது ஸம்பவிக்கு மாகையினாலும், 'எவன் உபநயனம் செய்து ப்ரணவம், முதலியவைகளை மாத்திரம் உபதேசித்து நின்று விட்டானோ, எவன் ரஹஸ்யம் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய வித்யைகளை அந்தந்த ப்ரக்ருதிகளைக் கொண்டு கற்றுக்கொடுக்கிறானோ, இவ்விருவர்களும் ஆசார்யர்கள்' என்று வசனமிருப்பதினால் அங்கீகரிக்கப்படுகிறது. பகவானாகிய யாஜ்ஞவல்க்யரினால் குரு முதலியவர்களின் லக்ஷணமும், 2'ஸ குருர்ய: க்ரியா: க்ருத்வா வேதமஸ்மை ப்ரயச்சதி। உபநீய ததத்வேதம் ஆசார்ய: ஸ உதாஹ்ருத:। ஏகதேஶமுபாத்யாய:' என்று சொல்லப்பட்டது. 3'ஏகாக்ஷர ப்ரதாதாரமாசார்யம் யோऽவமந்யதே' என்றிவை முதலியது சொல்லப்பட் டிருக்கிறதே என்னில் அது அவமானம் செய்வதைத் தடுப்பதற்காக ஆசார்யன் என்று வைத்துக் கொண்டு சொல்லப்படுகிறது. அதினால் ஆசார்யனாய் இருப்பதினாலேற்பட்ட எல்லா அனுஷ்ட்டானமும் ஸம்பவிக்காது. ஆசார்யன் என்னும் பதம்

1. மனு ஸ்ம்ருதி - 2 - 1 - 40. ய:—எந்த, த்விஜ:-ப்ராம்மணன், ஶிஷ்யம் - ஶிஷ்யனை, உபநீய - உபநயநம் செய்வித்து, ஸகல்பம் - கல்பங்களோடு கூடியதாயும் ஸரஹஸ்யம், ரஹஸ்யங்களோடு கூடியதாயு மிருக்கிற, வேதம் - வேதத்தை, அத்யாபயேத் - அத்யயனம் செய்து வைப்பானோ, தம் - அவனை, ஆசார்யம் - ஆசார்யனாக, ப்ரசக்ஷதே - சொல்லுகிறார்கள்.

2. யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி - 1 - 2 - 34 - ய:—எவன், க்ரியா:—க்ரியைகளை, க்ருத்வா-செய்து, அஸ்மை - இவனுக்கு, வேதம் - வேதத்தைப், ப்ரயச்சதி-உபதேசம் செய்கிறானோ, ஸ: - அவன், குரு:—குரு, (எவன்) உபநீய து - உபநயனம் செய்து வைத்து, தத்வேதம்-அந்த வேதத்தை உபதேசிக்கிறானோ, ஸ:-அவன், ஆசார்ய:—ஆசார்யன் என்று, உதாஹ்ருத:—சொல்லப்பட்டான், ஏகதேசம்-ஒரு பாகத்தை (உபதேசம் செய்தவன்), உபாத்யாய:—உபாத்தியாயன் (என்று சொல்லப்படுகிறான்).

3 அத்ரிஸ்ம்ருதி - 1 - 10 ய:— எவன், ஏகாக்ஷர ப்ரதாதாரம் - ஒரு அக்ஷரத்தையாவது உபதேசம் செய்தவனாகிய, ஆசார்யம் - ஆசார்யனை, அவமந்யதே - அவமானம் செய்கிறானோ (அவன் ஶ்வாந ஜன்மங்களில் பிறக்கிறான்).

பிடப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் ஆஹாரமே 'போஜநம்' என்

நிர்வசனம் முதலியவைகளை அனுஸரித்து ஆயுதம், பாணம், இவைகளைக் கற்றுக்கொடுத்தவர்களாகிய த்ரோணர், க்ருபர், முதலியவர்களிடங்களிலும் அதிகமாக ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினாலும் ப்ரயோகத்தையனுஸரித்து எல்லா இடத்திலும் முக்யந்தான் என்று சிலரால் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கலாம். அப்படியிருந்தபோதிலும் எச்சிலை ஸாப்பிட அனுமதி கொடுப்பதற்குக் காரணமாகிய ஆசார்யனுக்கு இருக்கை ப்ரணவம் முதலாக ரஹஸ்ய த்ரயங்களை உபதேசித்து அதின் வழியாக பரவித்யையை உபதேசிக்கிறவனிடத்திலேயே இருக்கிறது. அப்படியே ஶாஸ்த்ரங்களில் சொல்லியிருப்பதினாலும், ஶிஷ்டர்களின் அனுஷ்ட்டானம் இருப்பதினாலும், ப்ரத்யக்ஷமாக வேதம் முதலியவைகளுக்கு விரோதமாயிருக்கிற ப்ரமித்தவர்களினுடையவும் வேறு அபிப்ராயத்தினால் ஶாஸ்த்ரத்தைமீறி நடப்பவர்களினுடையவும் ஆசாரம் ஶிஷ்டாசாரமல்ல. சிலர் 1 'நாராயணைகநிஷ்டஸ்ய யாயா வ்ருத்திஸ் தத³ர்சநம்। யோயோ ஜல்பஸ் ஸ ஜபஸ் தத்³த்⁴யாநம் யந்நிரீக்ஷணம்। தத்பாதா³ம்பு³ அதுலம் தீர்த்தம் தது³ச்சி²ஷ்டம் ஸுபாவநம்। தது³க்திமாத்ரம் மந்த்ராக்³ர்யம் தத்ஸ்ப்ருஷ்டமகி²லம் ஶுசி' என்கிற வசனங்களைச் சொல்லுகிறார்களே. அதுவும் பகவானொருவனிடத்திலேயே நிஷ்ட்டையுடையவர்களை ஸ்தோத்திரம் செய்கிறதேயொழிய ஸ்வயமாக ஒன்றையும் விதிக்கிறதல்ல. வேறொரு காரணங்களினால் ஏற்பட்டிருப்பதைக் கொண்டு இங்கு ஸ்தோத்திரம் செய்திருக்கிறது. அதில் முதல் ஶ்லோகம் ஸ்வபாவத்தினாலேற்பட்டதாயும் ஒரு ப்ரயோஜனத்தினாலேற்பட்டதாயுமிருக்கிற கார்யத்தையும் அனுவாதம் செய்கிறது. இரண்டாவது ஶ்லோகம் ஶாஸ்த்ரங்களினால் ஏற்பட்ட கார்யத்தை அனுவாதம் செய்கிறதே ஒழிய வேறு ஶாஸ்த்ரங்களினால் மறுக்கப்பட்டிருப்பதைச் சொல்லுகிறதல்ல. ப்ரமாணங்களினாலேற்பட்டிருக்கிற விஷயங்களைச் சொல்லுவதினாலல்லவோ 'அதுலம் ஸுபாவநம் அக்³ர்யம் அகி²லம்' என்று விஶேஷணங்களோடு சேர்த்துச் சொல்லியிருக்கிறது. அதாவது 2 'ப்³ராஹ்மணா: பாத³மேத்⁴யா:॥' என்றிவை முதலிய வசனங்களினால் ப்ராம்மணர்களின் பாதஜலம் பொதுவாகப் பரிசுத்தம் என்றேற்பட்டிருக்கும் விஷயத்தில் அவர்களே பாகவதர்களாக இருந்தால் தனக்கொப்பில்லாத பரிசுத்தமான வஸ்து என்று விஶேஷித்துச்

1 இதின் அர்த்தம் தாத்பர்ய சந்த்ரிகையிலே சொல்லப்படுகிறது.

2 ப்ராம்மணா:-ப்ராம்மணர்கள், பாதத:-காலில், மேத்யா:-பரிசுத்தமுடையவர்கள்.

ணட்படுகிறது. மறுபடியும் தமோகுணத்தை வ்ருத்தி செய்விக்கக்கூடியது.

சொல்லப்படுகிறது. இப்படியே பரமைகாந்தியாக இல்லாமலிருந்தபோதிலும் உபநயனம் செய்விக்கிறவன் முதலியவர்களினுடைய எச்சில் பரிசுத்தமாக ஏற்பட்டிருக்கும்பொழுது அவனை பகவான் ஒருவனிடத்திலேயே நிஷ்டையை யுடையவனாயிருந்தால் அது மிகவும் பரிசுத்தம் என்று விதிக்கப்படுகிறது. அப்படியே மஹா புருஷர்களால் செய்யப்பப்பட்ட ஸ்தோத்திரம், முதலியவைகள் மிகவும் மங்களத்தைக் கொடுக்கக்கூடியதாக ஏற்பட்டிருக்கும் பொழுது 'தத்ராஜி ஸ்ரூ மஹாத்ம்யா' என்பதினால் பகவானைத் தவிர வேறொரு தைவத்தைத் தொழாதவர்களினால் செய்யப்பட்ட தமிழ்ப்பாட்டுக்கள், முதலியவைகளும் உத்தமமான மந்த்ரங்களைப்போலவே பலம் முதலியவைகளுக்குக் காரணம் என்பது சொல்லப்படுகிறது. இப்படியே ஸ்வபாவத்திலே சுத்தியான வஸ்துக்களுக்கு வேறொரு சுத்திசெய்யவேண்டுமென்று அபேக்ஷை உண்டானால் அலம்புதல், முதலியவைகளைப்போல மஹாத்மாக்கள் தொடுவதும் அவர்கள் மாஹாத்ம்ய விசேஷத்தினால் சில வஸ்துக்கள் விஷயத்தில் சுத்தியைக் கொடுக்கிற தென்றேற்பட்டிருக்கிறது. 'தத்ஸ்பர்ஶ ஶைலம் ஶுசி' என்பதினால்வெவ்வேறு சுத்தியைக் கொடுக்கக் கூடிய வஸ்துக்களையுடையதாக ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற எல்லாவஸ்துக்களுக்கும் பாகவதன் தொடுவது ஒன்றே சுத்தியைக் கொடுக்கத் தகுந்தது என்று சொல்லப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில் பாகவதனால் தன்னுடைய புத்தி பூர்வக மில்லாமல் தொடப்பட்ட சண்டாளர்கள், உள்ளிப் பூண்டு, வெங்காயம், முத ஸ்வபாவத்தினாலேயே அசுத்தமான வஸ்துக்களை அங்கீகரித்தால் அலேபகர்கள் சொல்லுவதைப் போல தொடத்தகுந்தது, தொடத்தகாதது, ஸாப்பிடத் தகுந்தது, ஸாப்பிடத்தகாதது. இவைகளெல்லாம் ஒன்றாக வேண்டிவரும். இத்தால் மிகவும் ஆப்தராகிய தொண்டரடிப் பொடியாழ்வாரருளிச்செய்த 1 'வானுளா ரறியலாகா வானவா!வென்பராகில் தேனுலாந் துளபமாலைச் சென்னியா!வென்பராகில் ஊனமாயினகள் செய்யு மூனகாரகர்களேலும் போனகம் செய்த சேடந்தருவரேல் புனிதமன்றே' என்கிற பாட்டிற்கும் தாத்பர்யம் சொல்லப்பட்டது. அது ஸம்ஸ்க்ருத ஶ்லோகமாக இவ்விதமாக மாற்றப்படுகிறது— 2 'திவௌ

1 திருமாலை-41.

2 இது தாத்பர்யசந்த்ரிகை வ்யாக்யான கர்த்தாவாகிய ஸ்ரீமந் நிகமாந்த தேசிகனு லருளிச்செய்யப்பட்டது. திவ்யை:-ஸ்வர்க்கலோகத்திலிருக்கிற தேவதைகளினால், அவேத்யவிபவ - அறியக்கூடாத மஹிமையுடையவனே, இதி- என்று,

ஆகையினால் நன்மையை விரும்புகிறவர்களினால் ஸத்வகுணம் வ்ருத்தி

---

ப்ருவந்தி யதி மாத்வீமநோஜ்ஞ துளஸீக ஶிர இதி வா
ஆஹு: யதி ஊநக்ரியா அபி பராநபி காரயந்தோ புக்தாதிகம் தததி சே
த்தந்ந பவித்ரம்॥? இதுவும் பகவந் நாமத்தைக் கீர்த்தனம் செய்வதை ஸ்தோத்திரம் பண்ணுகிறது என்பது அந்த ஸந்தர்ப்பத்தினாலும் இந்தப்பாட்டிலிருக்கும் பதத்தின் ஸ்வாரஸ்பத்தினாலும் வ்யக்தமாகஏற்பட்டிருக்கிறது. 'புக்தாதிகம்' (போனகம்செய்த சேடம்)' என்பதும் பாகம் செய்த பாத்திரத்திலிருக்கிற மிகுதியும் பரிஹரிக்க வேண்டியதுதான், அதை விலக்குவதற்காக அபவாதமாகச் சொல்லப்படுகிறது. அப்படிக்கில்லாமற் போனாலும் வேறு ப்ரமாணங்களுக்கு விரோதம் வராமலிருப்பதற்காக ஆசார்யன் முதலியர்வர்களினுடைய எச்சிலைப்பற்றியதாகவே இருக்கவேண்டும். அதாவது 1 'ஊநோ ஹீநோ பரிஸ்ரஸ்தோ நஷ்ட:' என்று பாபத்தினுடைய வ்யத்யாஸத்திராய நிஷ்டை குறைந்த பாகவதர்கள் நான்குவிதம் என்று ரஹஸ்யாம்நாயம் தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள் அதில் ஊனன் முதலிய அவஸ்த்தைகள் உண்டானால் ஆசார்யனுடைய எச்சிலும் அபரிசுத்தம் என்கிற ப்ரஸ்தாவம் வருகிறது. அவ்விடத்தில் அவர்கள் வேறொரு தைவத்தினிடத்தில் பக்தியைச் செலுத்தாதவர்கள் என்பது ஸ்திரமாக இருக்கிறது, என்பதைத் தெரிவிக்கக்கூடிய பகவானுடைய திருநாமங்களைச் சொல்லுவது முதலியது இருந்ததேயானால் அப்பொழுது அந்த ஆசார்யனுடைய எச்சில் அபரிசுத்தமல்ல என்று சொல்லப்படுகிறது வேறொரு தைவத்தினிடத்தில் பக்தி யுடைத்தானவனல்ல என்பதற்குக் குறைவுவந்தால் எவ்விதத்திலும் ஆசார்யனைவிட்டு

---

ப்ருவந்தி யதி - சொல்லுகிறார்களேயானால், இதனால் பாட்டின் முதல்பாதத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. மாத்வீமனோஜ்ஞ துளஸீக-தேன்களினால் அழகாகிய துளஸீமாலைகளோடு கூடிய ஶிரஸ்ஸையுடையவனே, இதிசா என்றும் ஆஹு: யதி - சொல்லுகிறார்களேயானால், இத்தால் இரண்டாம்பாதத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்படுகிறது. ஊநக்ரியா அபி - ஊனமான கார்யங்களைச் செய்தபோதிலும், பரானபி-மற்றவர்களையும்(ஊனமான கார்யங்களையும்),காரயந்த:-செய்விப்பவர்களாயிருந்தபோதிலும், இத்தால் மூன்றாவது பாதத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது. புக்தாதிகம் - (அவர்கள்) ஸாப்பிட்ட மிகுதியை, தததிசேத் - கொடுக்கிறார்களேயானால், தத் - அது பவித்ரம்நநு - பரிசுத்தமல்லவா, இத்தால் நான்காவது பாதத்தின் அர்த்தம் ஸங்க்ரஹிக்கப்பட்டது.

1 ஊந:—தாப ஸம்ஸ்காரம் இல்லாதவன் அதாவது சங்க சக்கராங்கமில்லாதவன், ஹீந:-ஊர்த்வபுண்ட்ரமில்லாதவன்,பரிஸ்ரஸ்த:-தாஸ்ய நாமம் வஹிக்காதவன், நஷ்ட: - மந்த்ரோபதேசங்களில்லாதவன்.

யடைவதற்காக ஸத்வகுணம் நிறைந்த ஆஹாரமே ஸாப்பிடத்தக்கது.10

விடவேண்டியதென்பது அந்த ரஹஸ்யாம்நாயத்திலே சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் இனி விஸ்தாரமாகச் சொல்லவேண்டியது இல்லை. புத்திக்கு விரோதியாகிய வஸ்துவினிடத்திலும் 'அமேத்ய' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருப்பதினால் அப்படிச் சொல்லில் க்ருஷ்டத்தில் தோஷம் மாத்திரம் உண்டாகிறதென்று முடிவாகிறபடியினால் அதைவிட அதிக தோஷத்தைத் தெரிவிப்பதற்காக இவ்விடத்தில் 'மேதம்' ஆவது யஜ்ஞம், அதற்கு உபயோகிக்கத்தகுந்தது 'மேத்யம்', அதற்கு விரோதமானது 'அமேத்யம்' என்று சொல்லுகிறார்—'யஜ்ஞத்திற்கு ஏகாதது' என்று. யஜ்ஞத்திற்குத் தகுந்ததாகிய வஸ்துவையும் ஸாப்பிடக் கூடாதென்பது மனு முதலியவர்களால் 1 'வ்ருதா க்ருஸரஸம்யாவம் பாயஸா பூபமேவ ச। அநுபாக்ருத மாம்ஸாநி தேவாந்நாநி ஹவீம்ஷி ச॥' என்று சொல்லப்படுகிறது. அதற்காகச்சொல்லுகிறார்—'அதாவது யஜ்ஞம் செய்து அதில் மீதியாகாதது' என்று. இத்தால் பாஞ்சராத்ர ஶாஸ்த்ரங்களில் 2 'நாநிவேத்ய ஹரே: கிஞ்சித் ஸமஶ்நீயாத் பாவநம்।' என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்டதும் இந்த அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது. 'ஆஹ்ரியந்தே (ஸாப்பிடப்படுகின்றன)' என்கிற வ்யுத்பத்தியினால் 'ஆஹாரா:' என்கிற பதத்தினால் அந்தந்த வஸ்துக்கள் சொல்லப்படுகின்றன. ஸாப்பிடுகிற வ்யாபாரம் மாத்திரத்தில் 'யாதயாமம்' என்றாரம்பித்துச் சொல்லியிருப்பது அந்வயிக்காது. முக்யமான அர்த்தம் சொல்லுவது ஸம்பவிக்கும்பொழுது லக்ஷணை சொல்லுவது ந்யாயமல்ல. ஆகையினால் 3 'க்ருத்யல்யுடோ பஹுலம்' என்கிறபடியே கர்ம என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற 'ல்யுட்' என்னும் விகுதியை முடிவிலுடையது என்று சொல்லுகிறார்—'போஜ்யதே' என்றாரம்பித்து. 'மறுபடியும் தமோகுணத்தை வ்ருத்தி செய்விக்கக் கூடியது' என்பதற்கு அர்த்தம் முன்போலவே. ஆஹா

1 மனு ஸ்ம்ருதி - 5 - 7. வ்ருதா - வீணாக, அதாவது பகவதாராதனம், ஒரு விசேஷகாலங்கள், இவைகள் இல்லாமல், க்ருஸரஸம்யாவம் - க்ருஸரத்தையும், பாயஸம் - பாயஸத்தையும், அபூபம் - பக்ஷ்யத்தையும், அநுபாக்ருதமாம்ஸாநி - யஜ்ஞத்தில் உபயோகப்படாத மாம்ஸத்தையும், தேவாந்நாநி - தேவதைகளுக்குபயோகப்படக்கூடிய அன்னங்களையும், ஹவீம்ஷி ச - ஹவிஸ்ஸையும் (ஸாப்பிடுகிறவன் பாபியாவான்).

2 ஹரே:- பகவானுக்கு, அநிவேத்ய - நிவேதநம் செய்யாமல், பாவனம்-பரிசுத்தமாயிருக்கிற, கிஞ்சித் - ஒன்றையும், நஸமஶ்நீயாத்-ஸாப்பிடக்கூடாது.

3 அஷ்டாத்யாயீ - 3 - 3 - 113.

𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌰𑍍𑌯𑌜𑍍𑌞𑍋 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑍋 𑌯 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇।
𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵𑍇𑌤𑌿 𑌮𑌨𑌃 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯 𑌸 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 ॥ 11

ப-ரை] 𑌯𑌃 - எந்த, 𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃 - ஶாஸ்த்ரங்களைக் கொண்டறியப் பட்ட, 𑌯𑌜𑍍𑌞𑌃 - யாகம், 𑌅𑌫𑌲𑌾𑌕𑌾𑌙𑍍𑌕𑍍𑌷𑌿𑌭𑌿𑌃 - பலத்தில் ஆசையை வைக்காதவர்களால், 𑌯𑌷𑍍𑌟𑌵𑍍𑌯𑌮𑍇𑌵 - யாகம் செய்யவேண்டியது தான், 𑌇𑌤𑌿 - என்று, 𑌮𑌨𑌃 - மனதை, 𑌸𑌮𑌾𑌧𑌾𑌯 - ஸாவதானமாகச் செய்துகொண்டு, 𑌇𑌜𑍍𑌯𑌤𑍇 - செய்யப்படுகிறதோ, 𑌸𑌃 - அந்த யாகம், 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌃 - ஸாத்விகம். 11

பா] பலங்களில் ஆசையில்லாத புருஷர்களினால் ஶாஸ்த்ரங்களினா லறியப்பட்ட அதாவது மந்த்ரம், த்ரவ்யம், க்ரியைகள், இவைகளோடு கூடிய

---

*ரம் மூன்று விதம் என்று சொல்லியிருப்பதற்கு அபிப்ராயத்தி லிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ஆசையினால்' என்றாரம்பித்து. இது பத்தியம், இது அபத்தியம், என்று பிரித்துச் சொன்னால் பத்யத்தை அங்கீகரிக்க வேண்டும் என்று தாத்பர்யமாவதைப் போல என்று தாத்பர்யம். இப்படியே யஜ்ஞம் முதலியவைகளையும் மூன்று விதமாகச் சொல்லியிருப்பதற்குக் கடைசியில் தாத்பர்யம் அறிந்துகொள்ள வேண்டியது.* 10

*பலமில்லாத ஒரு வஸ்துவை ஆசைப்பட வேண்டுமென்றர்த்தம் என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'பலங்களில் ஆசையில்லாத' என்று. பரமாத்மாவினுடைய ப்ரீதியைத் தவிர வேறொன்றையும் அபேக்ஷிக்காத என்றர்த்தம். '𑌵𑌿𑌧𑌿𑌦𑍃𑌷𑍍𑌟𑌃' என்று சொல்லியிருக்கும் இடத்தில் ப்ரம்மாவினால் பார்க்கப்பட்ட என்கிற அர்த்தம் தோன்றும். ஏனெனில் அந்த ப்ரம்மாவல்லவோ எல்லா யஜ்ஞங்களையும் பார்த்தவரென்று ஶ்ருதியில் சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் ப்ரம்மாவினால் பார்க்கப்பட்ட என்று சொல்லுவதினால் அநுஷ்டானம் செய்யும்பொழுது ஒருவித உபகாரமும் இல்லை. ஆகையினால் விதிக்கிற ஶாஸ்த்ரமே 'விதி' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களினா லறியப்பட்ட' என்று. ஶாஸ்த்ரம் ஒன்றையே ப்ரமாணமாக உடையதென்று ப்ரஸித்தமாக இருக்க 'ஶாஸ்த்ரங்களினா லறியப்பட்ட' என்று சொல்லியிருப்பது அநுவாதகம் என்றாக்ஷேபம் வருகிறபடியினால் ஶாஸ்த்ரத்தில் சொல்லியிருக்கிறபடி அநுஷ்டிப்பதினால் குறையொன்றுமில்லாதது என்பது அந்தப் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—*

தாயும், பகவானுக்கு ஆராதனமாகையினாலே அதுதானே ப்ரயோஜனமாக யாகம் செய்யவேண்டியதென்று மனதைச் செலுத்திக்கொண்டு எந்த யாகம் செய்யப்படுகிறதோ அது ஸாத்விகம். 11

அபிஸந்தாய து பலம் தம்பார்தமபி சைவ ய꞉ ।
இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்தி ராஜஸம் ॥ 12

ப - ரை] பரதஶ்ரேஷ்ட-பரதவம்ஶத்தில் சிறந்தவனாகிய அர்ஜுநா, ய꞉-எந்தயாகம், பலம் - ப்ரயோஜனத்தை, அபிஸந்தாய - ஆசைப்பட்டுக் கொண்டு, தம்பார்தமபி - டம்பத்திற்காகவும், இஜ்யதே - செய்யப்படுகிறதோ, தம் - அந்த யாகத்தை, ராஜஸம் - ராஜஸமாக, வித்தி - அறி. 12

பா] பலத்தில் ஆசையோடு கூடினவர்களால் டம்பத்தை உள்ளே உடை

---

'அதாவது மந்த்ரம்' என்றாரம்பித்து. 1 'யஜ தேவ பூஜாயாம்' என்று சொல்லப்படுகிற தாதுவின் அர்த்தத்தை யனுஸரித்துச் சொல்லுகிறார்—'பகவானுக்குஆராதனமாகையினாலே'என்றாரம்பித்து. 'ஏவ' என்பதின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்—'அதுதானே ப்ரயோஜனமாக' என்று. இதின்கருத்தாவது—ஒரு ப்ரயோஜனத்தை உத்தேசிக்காமல் ப்ரவ்ருத்திப்பது ஸம்பவிக்காது. அப்படியிருந்தபோதிலும் முன் சொல்லப்பட்டபடி ஸ்நேகிதனுடைய ஆராதனத்தைப் போலிருக்கிறது இது என்கிற ந்யாயத்தினால் யஜ்ஞம் முதலியவைகளில் ப்ரவேசிப்பதே ப்ரயோஜனம் என்கிற எண்ணம் உண்டாகிறது—என்பது. 'மனதைச்செலுத்திக்கொண்டு' என்பதற்கு வேறுவிதமான ப்ரவ்ருத்திகளிலிருந்து மனதைத்தடுத்து ஆரம்பிக்கப்பட்டிருக்கிற கார்யத்திலேயே ஊற்றமுடையதாய்ச் செய்துகொண்டு என்றர்த்தம். 'யஜ்ஞ꞉ இஜ்யதே' என்பதற்கு யஜ்ஞம் செய்யப்படுகிறது என்றர்த்தம். 11

டம்பத்தைக் காரணமாக உடையது என்பது இவ்விடத்தில் 'தம்பார்தம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'டம்பத்தை உள்ளே உடையதாயும்' என்று. டாம்பிகன் என்பதை ப்ரஸித்தப்படுத்துவதில் ஆசையில்லாத என்றர்த்தம். கேவலம் டம்பத்தோடுகூடியது தாமஸம். ஆகையினால் இந்தலோகத்திலுண்டானதும் பரலோகத்திலுண்டானதுமாகிய பலங்களைச் சேர்த்து ஆசைப்படுவதுதான் இவ்விடத்தில் ராஜஸம் என்று சொல்லப்படுகிறது என்

1 தாதுபாடம். 'யஜ' என்னும் தாது தேவதையின் பூஜையைச் சொல்லுகிறது

யதாயும் கீர்த்தியாகிற ப்ரயோஜனத்திற்காகவும் எந்தயாகம் செய்யப்படு கிறதோ அந்த யாகத்தை ராஜஸம் என்றறி. 12

விதிஹீநமஸ்ருஷ்டாந்நம் மந்த்ரஹீநமதக்ஷிணம் |
ஶ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே || 13

ப-ரை] விதிஹீநம் - ப்ராம்மணர்களின் அனுஜ்ஞை இல்லாததும், அஸ்ருஷ்டாந்நம் - ஶாஸ்த்ரங்களில் சொல்லிய த்ரவ்யங்களில்லாததும், மந்த்ரஹீநம் - மந்த்ரங்கள் இல்லாததும், அதக்ஷிணம் - தக்ஷிணை இல்லாததும், ஶ்ரத்தாவிரஹிதம் - ஶ்ரத்தை இல்லாததுமாயிருக்கிற, யஜ்ஞம் - யஜ்ஞத்தை, தாமஸம் - தாமஸமாக, பரிசக்ஷதே - சொல்லுகிறார்கள்.

பா] ப்ராம்மணர்களின் அனுமதி யில்லாததும், அதாவது நல்ல ஆசாரத்தோடுகூடிய வித்வான்களாகிய ப்ராம்மணர்களினால் யாகம் செய் என்கிற அனுமதி செய்யப்படாததும் என்றர்த்தம். ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத த்ரவ்யத்தையுடையதும், மந்த்ரங்களில்லாததும், தக்ஷிணை இல்

கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கீர்த்தியாகிற ப்ரயோஜனத்திற்காகவும்' என்று. டம்பத்தை அனுஸரித்து இந்த லோகத்திலுண்டான பலத்தைச் சொல்லியிருக்கிறதாகவுமாம். 'பரதஶ்ரேஷ்ட' என்பதற்கு நீ ஸாத்விகமான யாகம் செய்வதற்குத்தகுந்த அதிகாரி என்றபிப்ராயம். 12

'அஸ்ருஷ்டாந்நம்', 'மந்த்ரஹீநம்', என்று சொல்லியிருப்பதினாலேயே ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகிற விதமாக இல்லை என்பதேற்படுகிறபடியினால் இவ்விடத்தில் 'விதிஹீநம்' என்பதினால் ஶாஸ்த்ரப்படி செய்யப்படவில்லை என்பது சொல்லப்படவில்லை, அவஶ்யம் வேண்டியதாகிய மற்றொன்றும் இல்லை யென்பதைச் சொல்லுவது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ராம்மணர்களின் அனுமதி யில்லாததும்' என்று. ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட அர்த்தமே பெரியோர்களால் அனுமதி கொடுக்கப்பட்டே அனுஷ்டிக்கத் தகுந்தது என்கிற இந்த அர்த்தத்தை விவரிக்கிறார்—'அதாவது' என்றாரம்பித்து. அதிக லோபத்தினால் தக்ஷிணையே இல்லை யென்னில் அன்னதானம் செய்யவில்லை யென்பது கைமுதிக ந்யாயத்தினாலேற்படுகிறபடியினாலே 'அதக்ஷிணம்' என்பதினாலேயே அன்னதானம் செய்யவில்லை என்பதும் குறிக்கப்பட்டபடியினாலும், 'அஸ்ருஷ்ட' என்னும் பதத்தின் ஸ்வாரஸ்யத்தினாலும், அதிக தோஷமுள்ளதென்று தெரிவிப்பதற் குபயோகமாகையினாலும், 'அஸ்ருஷ்டாந்நம்' என்னும் பதத்தினால் சூத்திரர்களினிடமிருந்து பணம் ஸம்பாதிப்பது முதலியது சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத த்ரவ்யத்தை

லாததும், ஶ்ரத்தையில்லாததுமாகிய யஜ்ஞத்தை தாமஸமென்று சொல்லுகிறார்கள். 13

பா - அ] பிறகு தபஸ்ஸு ஸத்வம், முதலிய குணங்களினால் மூன்று விதம் என்பதைச்சொல்லுவதற்காக, அது ஶரீரம், வாக்கு, மனது, இவைகளால் செய்யக்கூடியதென்று அதின் ஸ்வரூபத்தினுடைய பேதத்தை முதலில் சொல்லுகிறார்—

தேவத்விஜ குருப்ராஜ்ஞ பூஜநம் ஶௌசமார்ஜவம் ।
ப்ரஹ்மசர்யமஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥ 14

ப - ரை] தேவத்விஜ குருப்ராஜ்ஞ பூஜநம் - தேவதைகள், ப்ராம்மணர்கள், ஆசார்யர்கள், வித்வான்கள், இவர்களைப் பூஜைசெய்வதும், ஶௌசம் - பரிசுத்தியும், ஆர்ஜவம் - கபடமில்லாமையும், ப்ரஹ்மசர்யம் - ப்ரம்மசர்ய வ்ரதமும், அஹிம்ஸா - ஹிம்ஸை செய்யாமையும், ஶாரீரம் - ஶரீரத்தினால் செய்யப்படுகிற, தப: - தபஸ்ஸு என்று, உச்யதே - சொல்லப்படுகிறது. 14

---

*யுடையதும்' என்று. யஜ்ஞத்திற்காக ஏற்படுத்தப்பட்டிருக்கிறது இவ்விடத்தில் 'ஸ்ருஷ்ட' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. அதாவது ந்யாயமாக ஸம்பாதிக்கப்பட்டது என்றர்த்தம். அப்படிக் கல்லாதது 'அஸ்ருஷ்டம்'. அப்படியே 1 'நயஜ்ஞார்த்தம் தநம் ஶூத்ராத் விப்ரோ பிக்ஷேத தர்மவித் । யஜமானோ ஹி பிக்ஷித்வா ப்ரேத்ய சண்டாலதாம் வ்ரஜேத் ॥' என்று சொல்லப்படுகிறது.* 13

*ஆஹாரம், முதலியவைகளைப்பற்றி ஸாத்விகம் முதலிய மூன்று விதமாயிருக்கையை ப்ரஸ்தாவித்துக் கொண்டு வரும் பொழுது தபஸ்ஸு காரணங்களின் வ்யத்யாஸத்தினால் மூன்றுவிதமென்று சொல்லியிருப்பது எதற்காக என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து. தேவதைகள் ப்ராம்மணர்கள், ஆசார்யர்கள், வித்வான்கள், இவர்கள் ஸமீபத்தில் அவரவர்களுக்குத் தகுந்தபடி ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அனுஷ்டானங்களைச் செய்வது இங்கே 'பூஜநம்' என்று சொல்லப்படுகிறது. அப்படியே*

---

*1 தர்மவித்-தர்மம்தெரிந்த, விப்ர:-ப்ராம்மணன், ஶூத்ராத்-ஶூத்திரனிடத்திலிருந்து, யஜ்ஞார்த்தம்-யஜ்ஞத்திற்காக, தநம்-பணத்தை, நபிக்ஷேத-யாசகம் வாங்கக்கூடாது, பிக்ஷித்வா - அப்படி யாசகம்செய்து, யஜமான:-யாகம் செய்கிறவன், ப்ரேத்ய-மரணமடைந்து, சண்டாளதாம்-சண்டாளனாக இருக்கையை, வ்ரஜேத்-அடைவான்.*

பா] தேவதைகள், ப்ராம்மணர்கள், ஆசார்யர்கள், வித்வான்கள், இவர்களைப் பூஜைசெய்வதும், புண்யதீர்த்தங்களில் ஸ்நானம் செய்வது முதலி

---

1 'ப்ரசஸ்தம் மங்கல்யம் தேவாயதநம் சதுஷ்பதாதி ப்ரதக்ஷிணாநி ஆவர்த்தேத மநஸா வா தத் ஸமக்ரம்' என்றிவை முதலியது சொல்லப்பட்டது. அப்படியே 2 'ப்ரதக்ஷிணம் வ்ரஜேத் விப்ராந் காம் ச அச்வத்தம் ஹுதாசநம்' என்றும் சொல்லப்பட்டது. 3 'ஆஸநேப்யஸ் ஸமுத்தஸ்து: மாநயந்த: புரோஹிதம்' 4 'ஊர்த்வம் ப்ராணா ஹ்யுத்க்ராமந்தி யூந: ஸ்தவிர ஆயதி | ப்ரத்யுத்தாநாபிவாதாப்யாம் புநஸ்தாந் ப்ரதிபத்யதே ||' என்றிவை முதலியதும் சொல்லப்படுகின்றன. அப்படியே 5 'ந ஹாயநைர் ந பலிதைர் ந வித்தேந ந பந்துபி: | ருஷயஶ் சக்ரிரே தர்மம் யோநூசாநஸ் ஸ நோ மஹாந் ||' என்றும் சொல்லப்படுகிறது. ப்ரயோஜனமாகிய சுத்தியென்கிற அர்த்தத்தைச் சொல்லுகிற சௌசத்தை தபஸ்ஸென்று பிரித்திருப்பது பொருந்தாதாகையினால் அதின் காரணத்தைச் சொல்லுகிறார்—'புண்யதீர்த்தங்களில் ஸ்நானம் செய்வது முதலியதும்' என்று. 'ஆர்ஜவம்' என்பதைச் ஶரீரத்தினால் செய்யப்படுகிற தபஸ்ஸாகச் சொல்லவேண்டியதற்காக வாக்கு, மனது, ஶரீரம்,

---

1 ப்ரஶஸ்தமங்கல்ய-மிகவும் சிறந்ததாயும் மங்களத்தைக் கொடுக்கக்கூடியதாயுமிருக்கிற, தேவாயதன-தேவதைகளின் கோயில், சதுஷ்பதாதி-நல்சந்திமுதலியவைகளை, ப்ரதக்ஷிணம்-ப்ரதிக்ஷணமாக, ஆவர்த்தேத-போகவேண்டும், மனஸா வா-மனதினாலே யாவது ப்ரதக்ஷினம்-செய்யவேண்டும், தத் - அது, ஸமக்ரம்-பூர்ணமாக ஆகிறது.

2 விப்ராந்-ப்ராம்மணர்களையும், காம்-பசுக்களையும், அஶ்வத்தம்-அரசமரத்தையும், ஹுதாசநம்-நெருப்பையும், ப்ரதக்ஷிணம்-ப்ரதக்ஷிணமாக, வ்ரஜேத்-போக

3 புரோஹிதம்-புரோகிதராகிய வஸிஷ்டருஷியை, மாநயந்த:-பகுமானம் செய்துகொண்டு, ஆஸநேப்ய:-ஆஸனங்களிலிருந்து, ஸமுத்தஸ்து:-எழுந்திருந்தார்கள்.

4 மனுஸ்ம்ருதி-2-120. யூந:-சிறுபிள்ளைக்கு, ஸ்தவிரே - கிழவன், ஆகதே-வரும்பொழுது, ப்ராணா:-ப்ராணங்கள், ஊர்த்வம்-மேலே, உத்க்ராமந்தி-கிளம்புகின்றன, அப்யுத்தானாபிவாதாப்யாம்-எழுந்திருப்பதினாலும், ஸேவிப்பதினாலும், தாந்-அந்தப்ராணங்களை, புந:-மறுபடியும், ப்ரதிபத்யதே-அடைகிறான்.

5 ருஷய:-ருஷிகள், ஹாயனை:-வருஷங்களினாலும், ந - இல்லை, பலிதை:-நரையினாலும், ந - இல்லை, வித்தை:-பணங்களினாலும், ந இல்லை, பந்துபி:-பந்துக்களாலும், ந - இல்லை, ந:-நமக்குள், ய:-எவன், அநூசாந:-ஜ்ஞானமுள்ளவனோ, ஸ:-அவன், மஹாந்-பெரியவன் என்று, தர்மம்-தர்மத்தை, சக்ரிரே-ஏற்பாடு செய்தார்கள்.

யதும், மனதை ஒத்து ஶரீரம் நடப்பதும், ஸ்திரீகளிடங்களில் இதுபோக்ய மான வஸ்து என்கிற புத்தியுடன்கூடிய பார்வை முதலியது இல்லாமையும், ப்ராணிகளுக்குப் பீடை செய்யாமையும், இவைகள் ஶரீரத்தினால் செய்யப்படுகிற தபஸ்ஸு என்று சொல்லப்படுகின்றன. 14

அநுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத் |
ஸ்வாத்யாயாப்யஸநம் சைவ வாங்மயம் தப உச்யதே || 15

ப.-ரை] அநுத்வேககரம் - அயலாருக்குப் பயத்தை உண்டாக்காததும், ஸத்யம் - உண்மையாயும், ப்ரியஹிதம் - ப்ரியமாயும், நன்மையாயுமிருக்கிற. வாக்யம் - வார்த்தை, யத் - எதுவோ (அதுவும்), ஸ்வாத்யாயாப்யஸநம் சைவ - வேதத்தை அப்யாஸம் செய்வதும், வாங்மயம் - வாயினால் செய்யக்கூடியதான, தப: - தபஸ்ஸென்று, உச்யதே - சொல்லப்படுகிறது.

பா] அயலாருக்குப் பயத்தை உண்டுபண்ணாததும், உண்மையாயும், ப்ரிய

---

*இவைகள் ஒருவிதமாக இருப்பதைச் ஶரீரத்தை முக்யமாக வைத்துக் கொண்டு சொல்லுகிறார்—'மனதை ஒத்து' என்றாரம்பித்து. 1 'ப்ரஹ்மசர்யம் யோஷித்ஸு போக்யதா புத்திவர்ஜநம்' என்றிவை முதலியவைகளை அநுஸரித்துச் சொல்லுகிறார்—'ஸ்திரீகளிடங்களில்' என்றாரம்பித்து. அப்படிப்பட்ட பார்வை முதலியதும் 2 'ஸ்மரணம் கீர்த்தநம் கேலி: ப்ரேக்ஷணம் குஹ்யபாஷணம்' என்றிவை முதலிய வசனங்களினால் கூடாதென்றே ஸ்ம்ருதிகளில் சொல்லப்பட்டிருக்கிறதென்று முன்னமேயே நிரூபிக்கப்பட்டிருக்கிறது. இவ்விடத்திலும் 'பார்வை முதலியது இல்லாமை' என்று சொல்லியிருப்பது ப்ரம்மசர்யம் ஶரீரத்தினால் செய்யப்படுகிற தபஸ்ஸு என்று தெரிவிப்பதற்காக.* 14

*'அயலாருக்குப் பயத்தை' என்பது முதலியதற்கு க்ரூரமான வார்த்தை, மர்மங்களை எடுத்து வெளிப்படுத்தல், தூஷித்தல், முதலியவைகள் இல்லாமையினால் பயம் முதலியவைகளுக்குக் காரணமாகாதது என்றர்த்தம். 'உண்மை' ஆவது தான் பார்த்ததைப்போலச் சொல்லுகிற நன்மையான வார்த்தை என்று முன்னமேயே நிரூபிக்கப்பட்டது. ப்ரியமாக இருக்கையாவது க்ஷேமத்தை விசாரிப்பது, தர்மங்களை அநுமோதனம் செய்வது, முதலியவைகளினால். தனக்குத்தகாத ஶப்தம் முதலிய விஷயங்களை ஸ்தோத்திரம் பண்ணுவது, முதலிய ப்ரியமான வார்த்தை ஶாஸ்த்ரங்களினால் மறுக்கப்பட்டிருப்பதினால் அதை*

1 *ப்ரம்மசர்யம்-ப்ரம்மசர்யமாவது, யோஷித்ஸு-ஸ்திரீகளிடங்களில், போக்யதா புத்திவர்ஜநம்-இது அநுபவிக்கத்தகுந்தது என்கிற புத்தியைவிட்டுவிடுதல்.*

2 *பகவத்கீதை-6-13-14-புட்நோட்டைப் பார்க்க.*

மாயும், ஹிதமாயுமிருக்கிற வார்த்தை எதுவோ அதுவும், வேதத்தை அப்யாஸம் செய்வதும் வாயினால் செய்யக்கூடிய தபஸ்ஸென்று சொல்லப்படுகிறது. 15

மன꞉ப்ரஸாத꞉ ஸௌம்யத்வம் மௌனமாத்மவிநிக்ரஹ꞉ |
பாவஸம்ஶுத்திரித்யேதத் தபோ மானஸமுச்யதே || 16

ப - ரை] மன꞉ப்ரஸாத꞉ - மனதின் தெளிவு, ஸௌம்யத்வம் - ஸௌம்யமாக இருக்கை, மௌனம் - மௌனவ்ரதம், ஆத்மவிநிக்ரஹ꞉ – ஆத்மாவினிடத்திலேயே அடக்குதல், பாவஸம்ஶுத்தி꞉ - பாவம் சுத்தமாக இருத்தல், இத்யேதத் – என்கிற இது, மானஸம் – மனதினால் செய்யப்படுகிற, தப꞉ - தபஸ்ஸென்று, உச்யதே - சொல்லப்படுகிறது. 16

பா] மன꞉ப்ரஸாத꞉ - மனதிற்குக் கோபம் முதலியவைகள் இல்லாமை, ஸௌம்யத்வம் – மனது அயலாருடைய வ்ருத்தியிலேயே ஆசையுடையதாக இருக்கை, மௌனம் – வாய் ப்ரவ்ருத்தி செய்வதை மனதினால் அடக்கிக்

---

ப்பரிஹரிப்பதற்காக 'ஹிதமாயும்' என்று சொல்லியிருக்கிறது. புருஷார்த்தத்தில் முடிவு பெறுகிற என்றர்த்தம். 'வேதத்தை அப்யாஸம் செய்வதும்' என்று ஜபயஜ்ஞத்தைச் சொல்லியிருக்கிறது. 15

'மன꞉ப்ரஸாத꞉ ஸௌம்யத்வம்' என்கிற பதங்களினால் அயலாரிடங்களில் கெட்ட அபிப்ராயமாகிற கலக்கமில்லாமையும் நல்ல அபிப்ராயத்துடையதாக இருப்பதும் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'மனதிற்குக்கோபம் முதலியது இல்லாமை' என்றாரம்பித்து. 1 'வஸதி ஹ்ருதி ஸனாதனே ச தஸ்மின் பவதி புமாஞ் ஜகதோऽஸ்ய ஸௌம்யரூப꞉' என்றிவை முதலியவைகளினால் சொல்லப்பட்ட வெளி ஆகாரம் ஸௌம்யமாயிருப்பதும் மனது ஸௌம்யமாயிருப்பதின் ப்ரயோஜனந்தான். ஆகையினாலல்லவோ வெளி ஆகாரத்தைக் கொண்டு மனதின் தெளிவு ஊஹிக்கப்படுகிறது. இவ்விடத்தில் மனதினால் செய்யப்படுகிற தபஸ்ஸு பிரித்துச் சொல்லப்படுகிறபடியினால் மனது என்று பதத்தைப் பிரித்து இங்கே அந்வயித்துக்கொள்ளப்பட்டது. மௌனமும் மனதினால் செய்யப்படுகிற தபஸ்ஸாவதற்காக மனதின் வ்யாபாரமே முக்யம் என்று சொல்லுகிறார்—'மனதினால் அடக்கிக்கொள்ளுதல்' என்று. 'ஆத்மவிநிக்ரஹ꞉' என்கிற இடத்தில் தகாத விஷயங்களிலிரு

---

1 விஷ்ணுபுராணம் - 3-7-24. ஸனாதனே - அநாதியாகிய, தஸ்மிந் - அந்தப் பகவான், ஹ்ருதி - ஹ்ருதயத்தில், வஸதி-வஸித்துக்கொண் டிருக்கும்பொழுது, புமாந் - மனுஷ்யன், அஸ்ய - இந்த, ஜகத꞉-ஜகத்திற்கு, ஸௌம்ய ரூப꞉-அழகான ரூபத்தையுடையவனாக, பவதி-ஆகிறான்.

கொள்ளுதல், ஆத்மவிநிக்ரஹ:-மனதின் வ்யாபாரத்தை த்யானம்செய்யத் தகுந்த விஷயத்தில் நிலைநிறுத்திக்கொள்ளுதல், பாவஸம்ஶுத்தி:-ஆத்மா மாவைத் தவிர வேறு விஷயங்களைப்பற்றிய சிந்தையில்லாமை, இது மன தினால் செய்யப்படுகிற தபஸ்ஸு. 16

ஶ்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத்த்ரிவிதம் நரை: |
அபலாகாங்க்ஷிபிர்யுக்தை: ஸாத்த்விகம் பரிசக்ஷதே || 17

ப - ரை] அபலாகாங்க்ஷிபி: - பலத்தில் ஆசையில்லாதவர்களாயும், யுக்தை: - ஸாவதானத்தையுடையவர்களாயுமிருக்கிற, நரை:- மனி தர்களினால், பரயா - மிகுந்த, ஶ்ரத்தயா - ஶ்ரத்தையினால், (எந்தத் தப ஸ்ஸு) தப்தம் - செய்யப்பட்டதோ, தத் - அந்த, த்ரிவிதம் - மூன்று விதமாகிய, தப: - தபஸ்ஸை, ஸாத்த்விகம் - ஸாத்விகமாக, பரிசக்ஷ தே - சொல்லுகிறார்கள். 17

பா] பலத்திலாசை இல்லாதவர்களாயும், இது பகவானுடையஆராதனம் என்னும் எண்ணத்தோடு கூடினவர்களாயுமிருக்கிற மனுஷ்யர்களினால்

---

*ந்து தடுத்துக்கொள்ளுவது தகுந்த விஷயத்தில் ஊற்ற முண்டாவதற் காகவல்லவா என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'த்யானம் செய்யத்தகுந்த விஷயத்தில்' என்றாரம்பித்து. 'பாவஸம்ஶுத்தி:' என்ப தற்கு 'மந:ப்ரஸாத:' என்றிவை முதலிய பதங்களோடு புனருக்தி யைப்பரிஹரிப்பதற்காகச்சொல்லுகிறார்—'ஆத்மாவைத்தவிர' என்றாரம் பித்து. 'பாவ' என்னும் பதம் இவ்விடத்தில் அபிப்ராயம் என்னும் அர் த்தத்தைச்சொல்லுகிறது. அதற்குச்சுத்திபாவது மற்றெல்லா விஷயங் களையும் விட்டுவிடுதல். இத்தால் பரஸ்திரீ முதலியவைகளில் மனது ஏகாந்தத்தில் ப்ரவ்ருத்திப்பதும் நிராகரிக்கப்பட்டது. இவ்விடத்தில் தபஸ்ஸைச் ஶரீரத்தினால் செய்யப்படுகிறது முதலியவைகளாகப் பிரித் தது அவைகளில் ஶரீரம் முதலியவைகள் முக்ய காரணமாகையினால். அப்படிக்கில்லாவிடில் 1 'பஞ்சைதே தஸ்ய ஹேதவ:' என்பதோடு விரோதம் வரும்.* 16

*இப்படிச் ஶரீரத்தினால் செய்யப்படுகிறதும் வாயினால் செய்யப்படு கிறதும், மனதினால் செய்யப்படுகிறதுமாகிய மூன்று விதமான தபஸ் ஸுக்களும் ஸத்வம் முதலிய குணங்களின் பேதத்தினால் மூன்றுவித மென்று சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகம் முதலாக. பலத்தில் ஆசையில்லை என்று மறுத்திருப்பதோடு சேர்த்துச் சொல்லப்பட்டிருக்*

---

1 பகவத்கீதை - 18-15.

மேலான ஶ்ரத்தையினால் எந்த மூன்றுவிதமான தபஸ்ஸுக்கள் ஶரீரம், வாக்கு, மனது, இவைகளினால் செய்யப்பட்டதோ அதை ஸாத்விகம் என்று சொல்லுகிறார்கள். 17

ஸத்காரமாநபூஜார்த²ம் தபோ த³ம்பே⁴ந சைவ யத் ।
க்ரியதே ததி³ஹ ப்ரோக்தம் ராஜஸம் சலமத்⁴ருவம் ॥ 18

ப-ரை] யத் - எந்த, தப: - தபஸ்ஸு, ஸத்காரமாநபூஜார்த²ம் - மனதினால் கொண்டாடுவேது, ஸ்தோத்திரம், பூஜை, இவைகளுக்காக, த³ம்பே⁴ந - டம்பத்தினால், க்ரியதே - செய்யப்படுகிறதோ, தத் - அது, இஹ - இந்த லோகத்தில், ராஜஸம் - ராஜஸமாகவும், சலம் - சஞ்சலமாகவும், அத்⁴ருவம் - அழியக்கூடியதாயும், ப்ரோக்தம் - சொல்லப்பட்டது. 18

பா] 'ஸத்காரம்' ஆவது மனதினால் ஆதரவு செய்வது. 'மாநம்' ஆவது வாயினால் ஸ்தோத்திரம் செய்வது. பூஜையாவது ஶரீரத்தினால் செய்யப்படுகிற நமஸ்காரம் முதலியது. பலங்களில் ஆசையை முன்னிட்டு ஸத்காரம் முதலியவைகளுக்காக டம்பத்தினால் எந்தத் தபஸ்ஸு செய்யப்படுகிறதோ அது இவ்விடத்தில் ராஜஸம் என்று சொல்லப்பட்டது. ஸ்வர்க்கம் முதலிய பலங்களுக்குக் காரணமாகையினாலே அஸ்திரமாகையினால் 'சலம், அத்⁴ருவம்' என்றும் சொல்லப்பட்டது. 'சலம்' ஆய் இருப்ப

---

*கிற 'யாஜ்ஞ:' என்னும் பதம் அதற்குபயோகமான பகவானுடையப் யாகிய உயர்ந்த பலத்தை எண்ணிக்கொண்டிருப்பதைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இது பகவானுடைய ஆராதனம்' என்றாரம்பித்து.* 17

*புனருக்திவருகிறதோ என்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காக 'ஸத்கார, மாந, பூஜ' என்னும் பதங்கள் க்ரமமாக, மனது, வாக்கு, ஶரீரம், இவைகளினால் செய்யப்படுகிற பஹுமானத்தைச் சொல்லுகின்றன என்று சொல்லியிருக்கிறது. 'அப²லாகாங்க்ஷிபி⁴:' என்று ஸாத்விக தபஸ்ஸைப் பற்றி விஶேஷித்துச் சொல்லியிருப்பதினால் இவ்விடத்தில் ஆசை தானாகவே ஏற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பலங்களில் ஆசையை முன்னிட்டு' என்று. 'ஸ்வர்க்கம் முதலிய பலங்களுக்குக் காரணமாகையினாலே அஸ்திரமாகையினால்' என்பதற்கு அஸ்திரமான ஸ்வர்க்கம் முதலிய பலங்களுக்கு ஸாதனமாகையினால் என்றர்த்தம். இந்தத் தபஸ்ஸு தானே சில ஸமயங்களில் உண்டாகிறது என்று சொல்லுகிறது உபயோகமற்றதாகையினால் பலத்தின்*

தாவது கீழே விழுந்துவிடப்போகிறோம் என்கிற பயத்தினால் மனது சலிப்பதற்குக் காரணமாக இருக்கை 'க்ஷயம்' ஆவது நாசத்தை அடையக் கூடியதாக இருக்கை. 18

மூட⁴க்³ராஹேணாத்மநோ யத்பீட³யா க்ரியதே தப꞉ ।
பரஸ்யோத்ஸாத³நார்த²ம் வா தத்தாமஸமுதா³ஹ்ருதம் ॥ 19

ப - ரை] மூட⁴க்³ராஹேண - மூடர்களால் உண்டாக்கப்பட்ட பிடிவாதத்தினால், ஆத்மந꞉ - தனக்கு, பீட³யா - பீடையினாலும், பரஸ்ய - அயலானை, உத்ஸாத³நார்த²ம் - ஹிம்ஸிப்பதற்காகவும், யத்-எந்த, தப꞉- தபஸ்ஸு, க்ரியதே – செய்யப்படுகிறதோ, தத் - அது, தாமஸம் - தாமஸமாக, உதா³ஹ்ருதம் - சொல்லப்பட்டது. 19

பா] மூடர்களாவது விவேகமில்லாதவர்கள். அதாவது மூடர்களினால் உண்டாக்கப்பட்ட பிடிவாதத்தினால் தன்னுடைய ஶக்தி முதலியவை

---

*வழியாக 'சலம், க்ஷயம்' என்று சொல்லப்படுகிறது. அதில் 'க்ஷய' என்னும் பதத்தினால் பலம் அநித்யமென்று சொல்லப்படுகிறபடியினால் 'சலம்' என்னும் பதம் பலத்தை அனுபவித்துக்கொண்டிருக்கும் பொழுதே ஸம்பவிக்கக்கூடிய தோஷத்தைச் சொல்லுகிறது, அதினும் 'சலபதி (மனதைச் சலிக்கும்படி செய்கிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'சலம்' என்னும் பதத்திற்கு அதைச் சொல்லக்கூடிய ஶக்தியும் இருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கீழே விழுந்து விடப்போகிறோம்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் 'சல' என்னும்பதத்தினால் அநித்யமான பலத்தையுடையது என்றும், 'க்ஷய' என்னும் பதத்தினால் இதற்குத் தடங்கல்கள் ஸம்பவிக்கக் கூடுமாகையினாலே நிஶ்சயமாகப் பலம் உண்டாகிறதென்பதில்லை என்றும் சொல்லப்படுகிறது என்பது யுக்தமல்ல, மற்றத் தபஸ்ஸுக்களிலும் தடங்கள் ஸம்பவிப்பது ஸமானமாகையினால் என்று தாத்பர்யம். 18*

*தனக்கு அஹிதமான கார்யங்களில் ப்ரவ்ருத்திப்பதற்குக் காரணமாகிய மூடனாக இருக்கையாவது அஹிதமான கார்யங்களிலேயே இது ஹிதம் என்கிற ப்ரமம் தான் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் —'விவேகமில்லாதவர்கள்' என்று. மூடர்களுடைய பிடிவாதத்தினால் என்று சேர்ந்திருக்கிற பதத்தின்அர்த்தத்தையும், அவ்விடத்தில் மூடர்களினுடையஎன்கிற இடத்தில்இருக்கிறஆறாம் வேற்றுமை கர்த்தாவைச் சொல்லுகிறதுஎன்பதையும் தெரியப்படுத்துவதற்காகச்சொல்லுகிறார்— 'மூடர்களினால் உண்டாக்கப்பட்ட பிடிவாதத்தினால்' என்று. மொத்த*

களை நிரூபிக்காமல் தன்னைப்பீடித்துக் கொள்ளுவதினால் எந்தத்தபஸ்ஸு செய்யப்படுகிறதோ, அயலானை ஹிம்ஸிப்பதற்காகவும் எந்தத் தபஸ்ஸு செய்யப்படுகிறதோ, அது தாமஸம் என்று சொல்லப்பட்டது. 19

𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌮𑌿𑌤𑌿 𑌯𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌦𑍀𑌯𑌤𑍇𑌽𑌨𑍁𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 ।
𑌦𑍇𑌶𑍇 𑌕𑌾𑌲𑍇 𑌚 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌚 𑌤𑌦𑍍𑌦𑌾𑌨𑌂 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 𑌸𑍍𑌮𑍃𑌤𑌮𑍍 ॥ 20

ப - ரை] 𑌯𑌤𑍍 - எந்த, 𑌦𑌾𑌨𑌂 — தானமானது, 𑌦𑌾𑌤𑌵𑍍𑌯𑌂 - கொடுக்க வேண்டியதென்று, 𑌦𑍇𑌶𑍇 - நல்ல இடத்திலும், 𑌕𑌾𑌲𑍇 𑌚 - நல்ல காலத்திலும், 𑌪𑌾𑌤𑍍𑌰𑍇 𑌚 - நல்லபாத்திரத்திலும், 𑌅𑌨𑍁𑌪𑌕𑌾𑌰𑌿𑌣𑍇 - உபகாரம் செய்யாதவனுக்கு, 𑌦𑍀𑌯𑌤𑍇 - கொடுக்கப்படுகிறதோ, 𑌤𑌤𑍍 - அந்தத் தானம், 𑌸𑌾𑌤𑍍𑌤𑍍𑌵𑌿𑌕𑌂 - ஸாத்விகமாக, 𑌸𑍍𑌮𑍃𑌤𑌂 - எண்ணப்பட்டது. 20

---

*மாகச் சொல்லப்பட்டதை அநுஷ்டிக்கிறவனிடத்தில் விசேஷித்துச் சொல்லுகிறார்—'தன்னுடைய ஶக்தி முதலியவைகளை நிரூபிக்காமல்' என்று. 'முதலியவைகளை' என்னும் பதத்தினால் ஶாஸ்த்ரங்களினால் விலக்கப்பட்டிருப்பதும் 1 '𑌅𑌶𑌕𑍍𑌯𑌾𑌨𑌿 𑌦𑍁𑌰𑌨𑍍𑌤𑌾𑌨𑌿 𑌸𑌮𑌵𑍍𑌯𑌯𑌫𑌲𑌾𑌨𑌿 𑌚 । 𑌅𑌸𑌾𑌧𑍍𑌯𑌾𑌨𑌿 𑌚 𑌵𑌸𑍍𑌤𑍂𑌨𑌿 𑌨𑌾𑌰𑌭𑍇𑌤 𑌵𑌿𑌚𑌕𑍍𑌷𑌣𑌃 ॥' என்றிவை முதலியவைகளில் சொல்லப்பட்ட விஷயங்களின் தோஷங்களும் சேர்த்துக் கொள்ளப்பட்டன. தன்னுடைய பலத்திற்குத்தகாத கார்யத்தை ஆரம்பிப்பது இவ்விடத்தில் ஆத்மாவிற்குப்பீடை. இத்தால் ஸ்வல்ப பீடையைக் கொடுக்கக்கூடிய தன்னுடைய பலத்திற்குத்தகுந்த வ்ரதம், முதலியவைகள் விலக்கப்படுகின்றன. அப்படியே 2 '𑌸𑌂𑌵𑍀𑌕𑍍𑌷𑍍𑌯 𑌫𑌲𑌾𑌫𑌲𑌂' என்று சொல்லப்பட்டது. ஸ்ம்ருதியிலும் 3 '𑌦𑍇𑌶𑌂 𑌕𑌾𑌲𑌂 𑌤𑌥𑌾𑌽𑌽𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌾𑌦𑍍𑌰𑌵𑍍𑌯𑌂 𑌪𑍍𑌰𑌯𑍋𑌜𑌨𑌮𑍍 । 𑌉𑌪𑌪𑌤𑍍𑌤𑌿𑌮𑌵𑌸𑍍𑌥𑌾𑌂 𑌚 𑌜𑍍𑌞𑌾𑌤𑍍𑌵𑌾 𑌶𑍌𑌚𑌂 𑌸𑌮𑌾𑌚𑌰𑍇𑌤𑍍 ॥' என்றிவை முதலியதும் சொல்லப்படுகிறது. 19*

---

*1 விசக்ஷண:-ஸமர்த்தனான மனிதன், அசக்யாநி-தன்னால் செய்யமுடியாததாயும், துரந்தாநி - முடிவில்லாததாயும், ஸமவ்யயபலானிச-செலவுக்கு ஸமமான ப்ரயோஜனத்தை யுடைத்தானவைகளாயும், அஸாத்யானி-ஸாதிக்கமுடியாதவைகளுமாகிய, வஸ்தூநி-கார்யங்களை, நாரபேத-ஆரம்பிக்கக்கூடாது.*

*2 பலம் பலமில்லாமை, இவைகளை யோசித்துப்பார்த்து.*

*3 தேசம்-இடத்தையும், காலம்-காலத்தையும், ததா-அப்படியே, ஆத்மானம்-தன்னையும், த்ரவ்யாத்ரவ்யம்-அதற்குபயோகப்படக்கூடிய த்ரவ்யத்தையும், அப்படிக்கில்லாததையும், ப்ரயோஜனம்-ப்ரயோஜனத்தையும், உபபத்திம்-ஒத்தாசையையும், ஜ்ஞாத்வா-தெரிந்துகொண்டு, சௌசம்-ப்ரிசுத்தியை, ஸமாசரேத்-செய்ய*

பா] பலத்தில் ஆசையில்லாமல் கொடுக்கவேண்டுமென்று தேசத்திலும் காலத்திலும், பாத்திரத்திலும் உபகாரம் செய்யாதவனுக்கு எந்தத் தானம் கொடுக்கப்படுகிறதோ அந்தத் தானம் ஸாத்விகமாக எண்ணப்பட்டது. 20

யத்து ப்ரத்யுபகாரார்த்தம் பலமுத்திஶ்ய வா புந: ।
தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தாநம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥　　21

ப-ரை] யத் - எந்த (தானமானது), ப்ரத்யுபகாரார்த்தம் - ப்ரத்யுபகாரத்திற்காக, புந: - மறுபடியும், பலமுத்திஶ்ய வா - பலங்களை

---

*தா] ராஜஸ தானத்தைப்பற்றிச் சொல்லுமிடத்தில் 'பலமுத்திஶ்ய' என்று சொல்லியிருப்பதினால் இவ்விடத்தில் ஸ்வர்க்கம் முதலிய பலங்களில் ஆசை இல்லை யென்று சொல்லப்பட்டது. 'அநுபகாரிணே' என்கிற இது த்ருஷ்டமான பலங்களில் ஆசையில்லை என்கிற அபிப்ராயத்தைக் காட்டுகிறது 'தாதவ்யம்' என்கிற இது ஸாத்விகமான தபஸ்ஸு முதலியவைகளிலே போல வேறு விதமான பலங்களில் ஆசை இல்லை என்று விலக்குவதற்காக என்று சொல்லுகிறார்—'பலத்தில் ஆசையில்லாமல்' என்று. இவ்விடத்தில் பாத்திரமே உபகாரம் செய்யாதவனாக இருக்கவேண்டும் என்று விஶேஷித்துச் சொல்லப்படுகிறது. அப்படி இருந்தபோதிலும் நாம் கொடுப்பதற்காக உத்தேசிப்பதையும் நம்மால் கொடுக்கப்படுகிற வஸ்துவிற்கு ஆதாரமாக இருப்பதையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு நான்காம் வேற்றுமையையும் ஏழாம் வேற்றுமையையும் சேர்த்து ப்ரயோகித்திருக்கிறது. அன்றிக்கே பாத்திரமாக ஏற்பட்டிருக்கும்பொழுது உபகாரம் செய்யாதவனாகிய அவனுக்கு என்று அந்வயம் சொல்லிக்கொள்ளவுமாம். அதுவுமல்லாமல் பாத்திரத்தில் கொடுக்கப்படுகிறது, அதுவும் உபகாரம் செய்யாதவனுக்குக் கொடுக்கப்படுகிறது என்றாவது வாக்யத்தைப் பிரித்துக்கொள்ளவுமாம். 'இடம், காலம்' என்கிற பதங்கள் இவ்விடத்தில் தானம் செய்யத்தகுந்ததாக ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படுகிற புண்யதேசங்களையும் புண்யகாலங்களையும்சொல்லுகின்றன. 'பாத்ரம்' ஆவது 1 'நவித்யயா கேவலயா ஜந்மநாவாபி பாத்ரதா । யஸ்ய வ்ருத்தமிமேசோபே தம் பாத்ரம் ப்ரசக்ஷதே' என்றிவை முதலியவைகளினால் சொல்லப்படுகிறது.*　　20

---

1 வித்யயா கேவலயா - வித்யைமாத்திரத்தினாலும், ஜந்மநாவாபி-நல்லகுலத்தில் பிறந்ததினால் மாத்திரத்தினாலும், பாத்ரதா-பாத்திரமாக இருக்கை, ந - இல்லை, யஸ்ய-எவனுக்கு, வ்ருத்தம்-நல்ல நடத்தையும், உக்தே, கீழ்ச்சொல்லப்பட்ட, இமேச-இவைகளும், (இருக்கின்றனவோ) அவனை, பாத்ரம்-பாத்ரமாக, ப்ரசக்ஷதே-சொல்லுகிறார்கள்.

ஆசைப்பட்டுக்கொண்டாவது, வரிக்லிஷ்டம் - ஸரியான த்ரவ்யத்தை உடைத்தாகாமல், தீயதே - கொடுக்கப்படுகிறதோ, தத் - அது, ராஜஸம் - ராஜஸமாக, உதாஹ்ருதம் - சொல்லப்பட்டது 21

பா] ப்ரத்யுபகாரத்தை எதிர்பார்த்துப் பலத்தை உத்தேசித்து நல்ல வஸ்துவை யுடையதல்லாமல் எந்தத் தானம் கொடுக்கப்படுகிறதோ அது ராஜஸமென்று சொல்லப்பட்டது. 21

**அதேஶகாலே யத்தாநமபாத்ரேப்யஶ்ச தீயதே |**
**அஸத்க்ருதமவஜ்ஞாதம் தத்தாமஸமுதாஹ்ருதம் ||** 22

ப - ரை] யத் - எந்தத் தானம், அதேஶகாலே - இடமில்லாத இடத்திலும், காலமில்லாத காலத்திலும், அபாத்ரேப்ய - பாத்திரமில்லாதவர்களுக்கும், அஸத்க்ருதம் - ஸத்காரமில்லாமல், அவஜ்ஞாதம் - அவமானம் செய்யப்பட்டதாயும், தீயதே - கொடுக்கப்படுகிறதோ, தத் - அது, தாமஸம் - தாமஸமாக, உதாஹ்ருதம் - சொல்லப்பட்டது. 22

பா] இடமில்லாத இடத்திலும் காலமில்லாத காலத்திலும் அபாத்ரங்களுக்கு எந்தத் தானம் கொடுக்கப்படுகிறதோ, அதுவும் காலலம்புதல் முதலிய

---

தா] 'ப்ரத்யுபகாரத்தை எதிர்பார்த்து' என்பதற்கு ப்ரத்யுபகாரம் செய்வதில் அபிப்ராயத்தை முன்னிட்டு என்றர்த்தம். இத்தால் முன்பு அவனால் செய்யப்பட்டதற்கு ப்ரத்யுபகாரமாக இருக்கிறது என்பதும் வரப்போகிற அவனால் செய்யப்படுகிற ப்ரத்யுபகாரத்திற்குக் காரணமாக இருக்கிறது என்பதும் சுருக்கிச் சொல்லப்பட்டது. த்ரவ்யத்தில் ஆசையினால் கஷ்டப்பட்டுக்கொண்டு கொடுக்கிற புருஷன் நல்லபாகத்தைத் தனக்காக நிறுத்திக்கொண்டு மற்ற பாகத்தை அயலானுக்குக் கொடுக்கிறான் என்கிற அபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'நல்ல வஸ்துவை யுடையதல்லாமல்' என்று. அம்ஶாந்தரத்தையினாலே கொடுக்கப்பட்டிருப்பதினால் வஸ்து உயர்ந்ததல்ல என்பது இவ்விடத்தில் 'வரிக்லிஷ்ட' என்னும் பதத்திற்கு அர்த்தம் என்று தாத்பர்யம். 21

'இடமில்லாத இடமாவது' கலிங்க தேசம் முதலிய ஸங்கடமான இடங்கள். 'காலமில்லாத காலமாவது' ராத்திரி முதலியது. 'அபாத்ரங்கள்' ஆவது பங்க்தியைக் கெடுக்கக்கூடியவர்கள், மூடர்கள், திருடர், தூர்த்தர், வந்திப்பட்டுக்கள், வைதாளிகர், முதலியவர்கள். ஸத்க்ருதமாவது பூஜை, அது இல்லாதது 'அஸத்க்ருதம்'. இதையே சொல்லுகிறார்—'காலலம்புவது முதலிய' என்றாரம்பித்து. வாங்கிக்கொள்ளுகிற புருஷனிடத்தில் செய்கிற அவமதிப்பே அந்தத் தானமாகிற கார்யம்

கௌரவங்களில்லாமலும், அவமதிப்புடனும், அதாவது உபசாரவார்த்தை முதலியதில்லாமலும் எது கொடுக்கப்படுகிறதோ அது தாமஸமென்று சொல்லப்பட்டது. 22

பா - அ] இப்படி வேதத்தில் சொல்லப்படுகிற யஜ்ஞம், தபஸ்ஸு, தானம், இவைகளுக்கு ஸத்வம், முதலிய குணங்களின் பேதங்களினால் பேதம் சொல்லப்பட்டது. இப்பொழுது அந்த வேதத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞர், முதலியவைகளுக்கு ப்ரணவத்தோடு சேர்ந்திருக்கிறதென்றும், 'தத்', 'ஸத்', என்னும் பதங்களினால் சொல்லப்படுகிற தென்றும் லக்ஷணம் சொல்லப்படுகிறது. 23

ஓம் தத் ஸதிதி நிர்தேஶோ ப்ரஹ்மணஸ்த்ரிவிதஃ ஸ்ம்ருதஃ ।
ப்ராஹ்மணாஸ்தேன வேதாஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதாஃ புரா ॥ 23

ப - ரை] ஓம் தத் ஸத், இதி - என்கிற, த்ரிவிதஃ - மூன்றுவிதமாகிய, நிர்தேஶஃ - பதம், ப்ரஹ்மணஃ - வேதத்தைச் சேர்ந்ததாக, ஸ்ம்ருதஃ - எண்ணப்பட்டது, ப்ராஹ்மணாஃ – ப்ராம்மணர்களும், வேதாஶ்ச - வேதங்களும், யஜ்ஞாஶ்ச - யஜ்ஞங்களும், தேந-அந்தச் ஶப்தத்தோடு (சேர்ந்தவைகளாகவே), புரா-முன்னால், விஹிதாஃ செய்யப்பட்டதுகள். 23

---

*வரையிலும் ஸம்பந்தப்படுகிறபடியினால் தானத்திற்கே விஶேஷணமாகச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'அவமதிப்புடன்' என்று. அவமதிப்பாவது வாயினால் செய்யப்படுகிறதைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'உபசாரவார்த்தைமுதலியதில்லாமலும்' என்று. ஶாஸ்த்ரத்தில் இது ப்ரமாணம் தான் என்கிற நிஶ்சயம் இல்லாமல் பரலோகத்தைப்பற்றி ஸந்தேஹத்தையுடையவனுகையினால் அந்தத்தானம் செய்யப்படுகிற பாத்திரங்களைவிடத் தான் உயர்ந்தவன் என்கிற அபிமானத்தினாலும் பூஜை செய்யாமலிருப்பதும், அவமதிப்பு முண்டாகிறது. தேசம், முதலியவைகள் சேர்ந்திருந்த போதிலும் பூஜைசெய்யாமலிருப்பதுமுதலியதுபரிஹரிக்கத்தக்கது.22*

*கீழே ஒருவிதமாக மூன்றுவிதம் என்று சொல்லியிருப்பதைப் போல மேலேயும் மற்றொருவிதமாக மூன்றுவிதம் என்று சொல்லியிருக்கிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக கீழ்ச் சொல்லப்பட்ட எல்லாக் கர்மங்களுக்கும் லக்ஷணத்தைச் சொல்லுகிறதென்று மேல் கிரந்தத்திற்கு அவதாரிகை சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. மூன்றுவிதமென்று விதிப்பது இங்கு வேண்டியதில்லை. லக்ஷ்யங்களைச் சொன்ன பிறகு அவைகளின் லக்ஷணத்தைச் சொல்லவேண்*

பா¹ 'ஓம் தத் ஸத்' என்கிற மூன்றுவிதமான ஶப்தமும் ப்ரம்மத்தோடு

டியது என்கிற அபிப்ராயத்தினால் 'ஸஹ ஷ்ணஃஸஹிதஃ' என்று அந்வயம் சொல்லப்பட்டது. மேல்சொல்லப்போகிறவிதமாக இந்த மூன்று விதமான பதங்களிலும் சொல்லப்படுகிறதாக 'ஸஹ' அந்வயிக்கிறதென்பது பொருந்தாதாகையினால் ப்ரம்மத்தோடு சேர்ந்ததாகிறது என்று மொத்தமாக ஸம்பந்தத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானம் செய்யப்பட்டது. 'ஓம் தத்ஸத்' என்று வேதத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞம், முதலியவைகளுக்கு லக்ஷணம் சொல்லப்படுகிறது என்று சொல்லில் உசிதமல்ல, 'ஸஹ' என்னும் பதம் அந்த யஜ்ஞம், முதலியவைகளைச் சொல்லாததாகையினாலும், முக்யமான அர்த்தத்திற்கு ஒருவித விரோதமில்லையாகையினாலும். இந்த மூன்று பதங்களும் நேரில் பரமாத்மாவிற்குப் பேர் என்பது 1 'அந்த அடையவேண்டிய வஸ்துவை உனக்குச் சுருக்கமாச் சொல்லுகிறேன். 'ஓம்' என்கிற இது தான்' என்றும், 'அந்தப் பெரிய வஸ்துவிற்குப் பேர் இது. எவன் இந்த வஸ்துவின் 'தத்' என்கிற பேரை அறிகிறானோ அவன் ப்ரம்மமாகவே ஆகிறான்' என்றும், 2 'ஓ! ஸௌம்யனே! இந்த ப்ராணிகளெல்லாம் ஸத்தையே காரணமாகவுடையது, ஸத்தையே ஆதாரமாக உடையது, ஸத்தையேலயஸ்தானமாகஉடையது' என்றும்அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யங்களில் சொல்லப்பட்டது. ஆகையினால் இந்த ஶாஸ்த்ரத்தில் முக்யமாக நிரூபிக்கப்படுகிற பரமாத்மாவைச் சொல்லும் விதம் உபாஸனம் செய்கிறவர்களுக்குத் தெரியப்படுத்துவதற்காக உபதேசிக்கப்படுகிறது என்பது யுக்தம். அங்கங்களில் குறைவுபட்டிருந்த போதிலும் கர்மம் பரமாத்மாவின் பேரைச்சொன்ன மாத்திரத்திலேலே பூர்த்தியான அங்கங்களுடன் செய்யப்பட்டதாகிறது. வைதிககர்மங்கள் மற்றக் கர்மங்களினாலாவது லௌகிகங்களான வார்த்தைகளினாலாது, தூக்கம், அஜாக்கிரதை, முதலியவைகளினாலாவது குறுக்கிடப்பட்டதேயானால் பெரியோர்கள் அந்த எல்லா ஸமயங்களிலும் 'ஓம் தத்ஸத்' என்று சொல்லவேண்டும். ஆகையினாலேயே இந்தக்கீதையிலும் அத்யாயங்களின் முதலிலும் முடிவிலும் இந்த மூன்று விதமான பதங்களும் சொல்லப்படுகின்றன என்றுகேக்ஷியம்வரில் கர்மங்களில் 'ஸஹ', என்னும் பதத்தின் ஸம்பந்தத்தை நிரூபிப்பதற்காக அந்தக்கர்மங்களைச் சொல்லுகிற வேதத்தில் இந்தப் பதத்தின் ப்ரயோகம் ஏற்பட்டிருக்கிறது என்கிறஅபிப்ராயத்தினால்சொல்லுகிறார்—'ப்ரம்மமாவது வேதம்' என்று. இங்குவேதத்தைச் சொல்லியிருப்பது முன்பின் ஸந்தர்ப்பங்

1 கடவல்லி-2-15. 2 சாந்தோக்யம்-6-8-6.

சேர்ந்ததாகஇருக்கிறது ப்ரம்மமாவது வேதம். வேதம்என்னும்பதத்தினால் வேதங்களில் சொல்லப்பட்ட கர்மங்கள் சொல்லப்படுகின்றன, அதாவது வேதங்களில் சொல்லப்பட்ட யஜ்ஞம், முதலியவைகள். யஜ்ஞம், முதலிய கர்மங்கள் இந்த மூன்றுவித ஶப்தங்களோடு சேர்ந்தவைகளாய் இருக்கின்றன. அதில் 'ஓம்' என்னும் பதத்தோடு சேர்ந்திருப்பது வேதத்தில் சொல்லப்படுகிற கர்மங்களுக்கு அங்கமாக அவைகளைச் செய்ய ஆரம்பிக்கும் பொழுது சொல்லப்படுகிறபடியினால் 'தத், ஸத்' என்னும் பதங்களோடு சேர்ந்திருப்பதும் அவைகள் பூஜ்யங்களென்று தெரிவிப்பதற்காக அவைகளை இந்தப் பதங்கள் சொல்லுகிறபடியினால். இப்படிப்பட்ட மூன்று

---

களை யனுவதித்து அவைகளின் அர்த்தத்தைச் சொல்லுகிறார் —'வேதம் என்னும் பதத்தினால்' என்று. வேதத்தைப்பற்றி ப்ரயோகிக்கப்படுகிற 'ப்ரஹ்ம' என்னும் பதத்தினால் என்றர்த்தம். 'ப்ரஹ்மஶப்தேந (ப்ரம்மம் என்னும் பதத்தினால்)' என்றும் பாடாந்தரம். இதின் கருத்தாவது— 'ஓம் தத் ஸத்' என்கிற பதங்கள் நேரே பரமாத்மாவிற்குப் பேர்கள் என்பது ப்ரஸித்தந்தான். அப்படியிருந்தபோதிலும் இவ்விடத்தில் அதைச்சொல்லுவது யுக்தமல்ல, இந்த அத்யாயத்தில் அதைப்பற்றி கேள்வி முதலியதில்லாமையினாலும், மேலே 'ப்ராஹ்மணாஸ்தேந' என்பது முதலியதோடு அந்வயிக்காதாகையினாலும். ஆகையினால் வேதத்தையே குறிப்பாகக்கொண்டு வைதிகங்களுக்கு இந்த மூன்றுவிதமான பதங்களும் லக்ஷணம் என்றே சொல்லப்படுகிறது—என்பது. இத்தையேவிவரிக்கிறார்—'வேதங்களில்சொல்லப்பட்ட கர்மங்கள்'என்று. இந்த மூன்று விதப் பதங்களும் அந்வயிக்கும் விதத்தில் மேலே சொல்லப் போகிற உட்பிரிவை எடுத்துக்காட்டுகிறார்—'அதில்' என்றாரம்பித்து. கரணம், முதலிய அர்த்தங்கள் பொருந்தாதாகையினால் உபலக்ஷணம் என்னும் அர்த்தத்தைச்சொல்லுகிற மூன்றும் வேற்றுமையின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'இப்படிப்பட்ட மூன்றுவிதமான பதங்களோடு சேர்ந்தவைகளாகவே'என்று. 'ப்ராஹ்மணா:'என்னும் பதம் இவ்விடத்தில் 'ப்ரஹ்ம' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற வேதத்தில் ஸம்பந்தமுடையவர்களாகையினால்மூன்றுவர்ணத்தாரையும்சொல்லுகிறது. 1 'ப்ரஹ்மவாதிநாம்' என்றல்லவோ மேலே சொல்லப்படுகிறது. அதினாலேயே ப்ரணவத்தில் ஸம்பந்தம் உண்டாகும் விதமும் சொல்லப்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வேதத்தில் ஸம்பந்தத்தையுடைய' என்றாரம்பித்து. 'விஹிதா: (செய்யப்பட்டதுகள்)'

---

1 பகவத்கீதை-17-24.

விதமான பதங்களோடு சேர்ந்தவைகளாகவே வேதத்தில் ஸம்பந்தத்தையுடைய மூன்று வர்ணத்தார்களும், வேதங்களும், யஜ்ஞங்களும் முன்னால் செய்யப்பட்டதுகள், அதாவது முன்னால் என்னாலேயே செய்யப்பட்டதுகள் என்றர்த்தம். 23

பா - அ] மூன்றுவித வஸ்துக்களுக்கும் 'ஓம் தத் ஸத்' என்கிற பதங்களோடு சேர்ந்திருக்கிறவிதம் நிரூபிக்கப்படுகிறது. அதில் முதலில் 'ஓம்' என்னும் பதத்தோடு சேர்ந்திருக்கும் விதத்தைச் சொல்லுகிறார்—

தஸ்மாதோமித்யுதாஹ்ருத்ய யஜ்ஞதாநதப꞉க்ரியா꞉।
ப்ரவர்தந்தே விதாநோக்தா꞉ ஸததம் ப்ரஹ்மவாதிநாம் ॥ 24

ப - ரை] தஸ்மாத்-ஆகையினால், ப்ரஹ்மவாதிநாம்-வேதத்தைச்சொல்லுகிற மூன்று வர்ணத்தார்களினுடைய, விதாநோக்தா꞉ - வேதமாகிற ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட, யஜ்ஞதாநதப꞉ க்ரியா꞉ - யஜ்ஞம், தானம், தபஸ்ஸு, முதலிய க்ரியைகள், ஓமிதி - ஓமென்று, உதாஹ்ருத்ய-சொல்லி, ஸததம் - எப்பொழுதும், ப்ரவர்தந்தே- செய்யப்படுகின்றன.

---

என்பதற்குக் கர்த்தா யார்? என்றாக்ஷேபம் வரில் 1 'சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்' என்றிவை முதலியவைகளை நினைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'அதாவது முன்னால் என்னாலேயே' என்றாரம்பித்து. வேதங்கள் செய்யப்பட்டன என்பது முன்போலவே ப்ரவ்ருத்திக்கப்பட்டிருத்தல். ஏனெனில் 2 'எவன் அந்த ப்ரம்மாவிற்கு வேதங்களை உபதேசிக்கிறானோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினாலும், 3 'அநாதி நிதநாஹ்யேஷா வாகுத்ஸ்ருஷ்டா' என்றிவை முதலிய ஸ்ம்ருதிகளினாலும் வேதம் நித்யமென்றேற்பட்டிருக்கிறபடியினாலும். 23

'தஸ்மாத்'என்பது முதல் நாலு ஶ்லோகங்கள் கீழ் ப்ரஸ்தாவித்திருப்பதையே விவரிக்கின்றன என்று சொல்லுகிறார்—'மூன்றுவித' என்றாரம்பித்து. ப்ராம்மணர்கள், வேதங்கள், யஜ்ஞம், இவைகளுக்கு என்றர்த்தம். 'யஜ்ஞ' என்னும் பதம் இவ்விடத்தில் தபஸ்ஸு, தானம், முதலியவைகளையும் குறிக்கிறது, 'யஜ்ஞதாநதப꞉க்ரியா꞉' என்றல்லவோ மேலே சொல்லப்படுகிறது. அனுஷ்டானத்திலே சேர்ந்திருப்பதினாலும் அதிலும் முதன்மையாக இருப்பதினாலும் முதலில் ப்ரணவத்

---

1 பகவத்கீதை-4-13. 2 ஶ்வேதாஶ்வதரம்-6-17.

3 பாரதம் - சாந்திபர்வம்-மோக்ஷதர்மம் - 23-93. ஏஷா-இந்த, அநாதிநிதநா-ஆதியும் அந்தமுமில்லாத, வாக்-வார்த்தையானது, (பகவானால்) உத்ஸ்ருஷ்டா - சொல்லப்பட்டது.

பா] ஆகையினால் வேதத்தைச் சொல்லுகிற மூன்று வர்ணத்தார்களினுடைய யாகம், தானம், தபஸ்ஸு, முதலிய வேதமாகிற ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட க்ரியைகள் முதலில் 'ஓம்' என்று சொல்லிவிட்டு எப்பொழுதும் செய்யப்படுகின்றன. வேதங்களும் 'ஓம்' என்று சொல்லிவிட்டு

---

தைப் பற்றிச் சொல்லி யிருக்கிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'முதலில்' என்று. 'தஸ்மாத் (ஆகையினால்)' என்பதற்கு எல்லாவற்றையும் ஸ்ருஷ்டித்தவனாகிய என்றால் அப்பொழுதே ப்ரணவத்தோடு சேர்ந்ததாகவே ஸ்ருஷ்டிக்கப்பட்டிருப்பதினால் என்றர்த்தம். இத்தால் விதிக்கப்படுகிறது என்கிற வ்யுத்பத்தியினால் 'விதாநம்' ஆவது இவ்விடத்தில் வேதத்தி லிருக்கிற கர்மங்களை விதிக்கிற வாக்யம் என்று சொல்லுகிறார்—'வேதமாகிற ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட' என்று. யஜ்ஞம், தானம், முதலியவைகள் ப்ரணவத்தை முன்னிட்டுக் கொண்டிருக்கின்றன என்பது அவைகளை விதிக்கிற ஶாஸ்த்ரங்களினாலேயே ஏற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'முதலில்' என்று. 'ஓம்' என்று சொல்லுவதும் இவ்விடத்தில் வேதாந்த ஶாஸ்த்ரத்தைத் தெரிந்தவர்கள் எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாகிய பரமாத்மாவை அனுஸந்தானம் செய்து கொண்டு அதினால் இந்தக் கர்மம் அவனுக்கு ஆராதனம் என்று எண்ணிக்கொள்ளுவதற்காக. அப்படியேபகவானாகிய ஶௌனகர் 1 'ஹரிமேவஸ்மரேந்நித்யம் கர்மபூர்வாபரேஷு' என்று சொல்லி யிருக்கிறார். வேதாந்த ஶாஸ்த்ரம் தெரியாதவர்களுக்கும் அந்தப் பரமாத்மாவைச் சொல்லுகிற பதத்தைச் சொல்லுவதினால் மங்களம் முதலியவைகள் கிடைக்கிறதென்பது தானாகவே ஏற்பட்டது ஆகையினால் ப்ரணவத்திற்கு வைதிகங்களான எல்லா வஸ்துக்களுடனும் ஸம்பந்தம் ஏற்பட்டது. 'வஸந்த ருதுக்கள்தோறும் ஜ்யோதிஷ்டோமயாகம் செய்ய வேண்டும், ஶரத்காலத்தில் வாஜபேய யாகம் செய்ய வேண்டும்' என்பவை முதலியவைகளினால் க்ரியைகள் சில காலங்களிலேயே செய்யவேண்டியதாக விதிக்கப்பட்டிருக்கின்றன. அப்படி யிருந்தபோதிலும் எல்லா க்ரியைகளுக்கும் ப்ரணவத்தை முன்னிட்டுக் கொண்டு செய்யும் பொழுது கால விஶேஷங்களிலேயே செய்யவேண்டு மென்கிற ஏற்பாடில்லை என்று 'ஸததம் (எப்பொழுதும்)' என்னும் பதத்தின் தாத்பர்யம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எப்பொழுதும் செய்யப்படுகின்றன' என்று.

---

1 விஷ்ணு தர்மம். நித்யம் - எப்பொழுதும், கர்மபூர்வாபரேஷு - கர்மங்களின் முன்னும் பின்னும், ஹரிமேவ - பகவானையே, ஸ்மரேத் - நினைக்க வேண்டும்.

ஆரம்பிக்கப்படுகின்றன. இப்படி வேதங்களுக்கும், வேதத்தில் சொல்லப்பட்ட யஜ்ஞம்முதலிய கர்மங்களுக்கும் 'ஓம்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் முன் நிரூபிக்கப்பட்டது. 'ஓம்' என்கிற பதத்தோடு சேர்ந்த வேதங்களைத் தரிப்பதினாலும், அத்துடன் சேர்ந்த யஜ்ஞம் முதலிய கர்மங்களைச் செய்வதினாலும் ப்ராம்மணர்கள் என்று சொல்லப்பட்ட மூன்று வர்ணத்தார்களுக்கும் 'ஓம்' என்னும்பதத்தோடு ஸம்பந்தம் நிரூபிக்கப்பட்டது. 24

---

ஸ்வர்க்கத்திற்கு ஸாதனமானமாக அனுஷ்டிக்கும் பொழுதும், மோக்ஷத்திற்கு ஸாதனமாக அனுஷ்டிக்கும் பொழுதும் ப்ரணவத்தோடு சேர்ந்திருக்கிறதென்பது பொது என்று தாத்பர்யம். இந்த ஶ்லோகத்தில் வேதங்களைப்பற்றிச் சொல்லாமலிருந்தபோதிலும் முன் ஶ்லோகத்தில் 1 'ப்ராஹ்மணாஸ்தேந வேதாஶ்ச' என்று சொல்லப்பட்டிருப்பதினாலும், 2 'எந்த ப்ரணவம் வேதத்தின் முதலில் சொல்லப்பட்டதோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தையும், 3 'ப்ராஹ்மண: ப்ரணவம் குர்யாதாதாவந்தே ச ஸர்வதா। ஸ்ரவத்யநோங்க்ருதம் பூர்வம்' என்றிவை முதலியவைகளையும் அனுஸரித்துச் சொல்லுகிறார்—'வேதங்களும்' என்றாரம்பித்து. 'வியாநோக்தா:' என்பதினாலும், 'ப்ரஹ்மவாதிநாம்' என்பதினாலும் வேதங்களுக்கும் இந்த ஶ்லோகத்தில் ப்ரணவத்தோடு ஸம்பந்தம் காட்டப்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படி வேதங்களுக்கும்' என்றாரம்பித்து. 'ஓம்' என்னும் பதத்தைச்சொல்லுகிறார்கள் என்று சொல்லியிருப்பதினாலும் அந்தப் பதத்தோடு சேர்ந்த வேதத்தைச் சொல்லுகிறவர்கள் என்று சொல்லியிருப்பதினாலும் ப்ராம்மணர்களுக்கும் 'ஓம்' என்கிற பதத்துடன் ஸம்பந்தம் காட்டப்பட்டது என்று சொல்லுகிறார்—'ஓம் என்கிற பதத்தோடு சேர்ந்த' என்றாரம்பித்து. 24

---

1 பகவத்கீதை - 17 - 23.

2 தைத்திரீயம், நாராயணம் - 6 - 10 - 24.

3 மனுஸ்ம்ருதி - 2 - 74. ப்ராம்மண:—வேதத்திற்கு, ஆதௌ - ஆரம்பத்திலும், அந்தே ச - முடிவிலும், ஸர்வதா - எப்பொழுதும், ப்ரணவம் - ப்ரணவத்தை, குர்யாத் - செய்ய வேண்டும், பூர்வம் - முதலில், அநோங்க்ருதம் - ப்ரணவத்தைச் சொல்லாமலிருக்கிற வேதம், ஸ்ரவதி - பெருகுகிறது, அதாவது ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறதென்கிறகட்டுக்குள்ளடங்காமல் போய் விடுகிறது என்று தாத்பர்யம்.

பா - அ] பிறகு இவைகளுக்கு 'தத்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் இருக்கும் விதத்தைச் சொல்லுகிறார்—

*தஇத்யநபிஸந்தாய பலம் யஜ்ஞதப꞉ க்ரியா꞉ ।*
*தாநக்ரியாஶ்ச விவிதா꞉ க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி꞉ ॥ 25*

ப - ரை] தத், இதி - என்று, பலம் - பலத்தை, அநபிஸந்தாய - ஆசைப்படாமல், யஜ்ஞ தப꞉க்ரியா꞉ – யஜ்ஞம், தபஸ்ஸு, முதலிய க்ரியைகளும், விவிதா꞉ - அனேக விதங்களான, தாநக்ரியாஶ்ச – தானமாகிற க்ரியைகளும், மோக்ஷகாங்க்ஷிபி꞉ - மோக்ஷத்திலாசை யுடையவர்களினால், க்ரியந்தே - செய்யப்படுகின்றன. 25

பா] பலத்தைஆசைப்படாமல்வேதம்ஓதுதல், யாகம், தபஸ்ஸு, தானம், இவைகளாகிற க்ரியைகள்மோக்ஷத்தில் ஆசையுடையவர்களினால் செய்யப்படுகின்றன. அவைகள்பரமாத்மாவை அடைவதற்குபாயங்களாகையினால் பரமாத்மாவைச்சொல்லுகிற 'தத்' என்னும் பதத்தினால் சொல்

---

தா] இப்படி ஸ்வர்க்கம், மோக்ஷம், இவைகளுக்கு உபாயங்களாகிய எல்லா வைதிகக் கர்மங்களுக்கும் பொதுவாக இருக்கிற ப்ரணவத்தோடுசேர்ந்திருக்கையாகிற லக்ஷணம்சொல்லப்பட்டது. பிறகு 'தத்' என்னும்பதம், 'ஸத்' என்னும்பதம், இவைகள் மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய கர்மங்களுக்கும், மற்ற மூன்று புருஷார்த்தங்களுக்கும் ஸாதனங்களாகிய கர்மங்களுக்கும் விசேஷ லக்ஷணங்களாகச் சொல்லப்படுகின்றன. இத்தையும் பாஷ்யத்தில் 'வைதிகங்களாகிற எல்லாக் கர்மங்களுக்கும் பொதுவாகிய லக்ஷணம் ப்ரணவத்துடன் சேர்ந்திருப்பது. அதில் மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய கர்மங்களுக்கும்மற்ற புருஷார்த்தங்களுக்கு ஸாதனமாகிய கர்மங்களுக்கும் 'தத்', 'ஸத்' என்னும் பதங்களினால் சொல்லப்பட்டிருப்பதினால் பேதம் உண்டு' என்று மேலே சொல்லப் போகிறார். 'இவைகளுக்கு' என்று கீழ்ச் சொல்லிய மூன்றையும் சேர்த்துச் சொல்லி யிருக்கிறது. இந்த ஶ்லோகத்தில் சொல்லப்பட்டிருக்கிற யஜ்ஞம், முதலியவைகள் உபலக்ஷணங்களாகையினால் வேதங்களிலும் 'தத்' என்னும் பதம் ப்ரயோகிக்கப்படுகிறது, என்று தெரிவிப்பதற்காக 'வேதம் ஓதுதல்' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'மோக்ஷகாங்க்ஷிபி꞉' என்பதினால் குறிக்கப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்— 'பரமாத்மாவை அடைவதற்குபாயங்களாகையினால், என்று. 'தத் இதி பலம் அநபிஸந்தாய' என்று பதங்களை அந்வயித்துக் கொள்ள வேண்டியது. 'தத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற ப்ரம்மத்தை அடை

லத்தக்கவைகள். * 'ஸ ஸ: ஸ:கிம் யத்தத்பதம்' என்று 'தத்' என்னும் பதம் பரமாத்மாவைச் சொல்லுகிறதாக ப்ரஸித்தமாக இருக்கிறதல்லவா. இப்படி மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய வேதம் ஓதுதல், யஜ்ஞம், முதலியவைகள் 'தத்' என்னும் பதத்தினால் சொல்லத்தக்கவைகளாகையினால் அவைகளுக்கு 'தத்' என்னும் பதத்தோடு ஸம்பந்

வதற்கு ஸாதனங்களாகையினால் 'தத்' என்னும் பதத்தினால் உபசாரமாகச் சொல்லப்படுகின்றன என்கிற புத்தியினால் வேறு பலத்தை ஆசைப்படாமல் என்றர்த்தம். 'இதி(என்று)' சொல்லியிருப்பதினால் 'உதாஹ்ருத்ய (சொல்லிவிட்டு)' என்கிற பதத்தை முன் ஶ்லோகத்திலிருந்து சேர்த்துக்கொள்ள வேண்டியதாகவுமாம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'தத்'என்னும் பதத்தினால் சொல்லத் தக்கவைகள்' என்று. 'தத்' என்னும் பதம் பரமாத்மாவிற்குப் பேர் என்பது ஏற்பட்டாலல்லவோ அதை அடைவதற்கு ஸாதனமாகையினால் அந்தப் பதத்தினால் மேற்சொல்லிய கர்மங்கள் லக்ஷணையாகச் சொல்லப்படும். அதுவே எப்படி ஏற்பட்டது? என்று ஆக்ஷேபம் வரில் 'தத்' என்றாரம்பிக்கும் ஶ்ருதி வாக்யத்தின் அர்த்தம் புராணம் முதலியவைகளினாலும் விசதப்படுத்தப்பட்டிருக்கிறது என்பதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'ஸ ஸ:' என்றாரம்பித்து பகவானுடைய ஸஹஸ்ரநாமத்தில் 1 'யானி நாமானி கௌணானி விக்யாதானி மஹாத்மந:' என்று ஆரம்பிக்கப்பட்டிருப்பதினாலும், 2 'நாம்நாம் ஸஹஸ்ரம்' என்று முடித்திருப்பதினாலும், 'யத்தத்' முதலிய பதங்கள் ஸர்வ நாமங்களாகையினால் எல்லா வஸ்துக்களையும் சொல்லக்கூடியவைகளாக இருந்தபோதிலும் விசேஷித்து நேரில் பரமாத்மாவிற்குப் பேர்கள் என்பதும் ஏற்பட்டது என்று தாத்பர்யம். இந்த ஶ்லோகத்தில் சொல்லப்படாமலிருந்தபோதிலும் வேதம் ஓதுதல் மொத்தமாகச் சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதைச் சொல்லுகிறார்—'இப்படி' என்றாரம்பித்து. அப்படியிருந்தபோதிலும் மூன்றுக்கும் 'தத்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் ஸித்திக்கவில்லை, 'ப்ராஹ்மணா:' என்னும் பதத்தினால் சொல்லப்

* பாரதம் - ஆநுஶாஸநிகபர்வம் - 254 - 93.

1 பாரதம் - ஆநுஶாஸநிக பர்வம் - 254 - 13. யாநி - எந்த, கௌணாநி - குணங்களாலேற்பட்டவைகளாகிய, நாமாநி-பேர்கள், மஹாத்மந: - பகவானுக்கு, விக்யாதாநி - ப்ரஸித்தங்களாக இருக்கின்றனவோ (அவைகளைச் சொல்லுகிறேன்). 2 பாரதம் ஆநுஶாஸநிக பர்வம் - 254 - 158.

தம் சொல்லப்பட்டது. மூன்று வர்ணத்தார்களுக்கும் அப்படிப்பட்ட வேதம் ஓதுதல், முதலியவைகளை அனுஷ்டிப்பதிலேயே 'தத்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் இருக்கிறது. 25

பா - அ] பிறகு இந்த மூன்று வஸ்துக்களுக்கும் 'ஸத்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் இருக்கும் விதத்தைச் சொல்லுவதற்காக லோகத்தில் 'ஸத்' என்னும் பதத்திற்கு அர்த்தம் ஏற்பட்டிருக்கும் விதத்தைச் சொல்லுகிறார்—

ஸத்பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத் ப்ரயுஜ்யதே ।
ப்ரஶஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த² யுஜ்யதே ॥ 26

ப - ரை] பார்த² - அர்ஜுந, ஸத் இதி - ஸத் என்கிற, ஏதத் - இந்தப் பதமானது, ஸத்பாவே - இருப்பதிலும், ஸாதுபாவே ச - நன்றாக இருப்பதிலும், ப்ரயுஜ்யதே - ப்ரயோகிக்கப்படுகிறது, ததா - அப்படி, ப்ரஶஸ்தே - மங்களகரமாகிய, கர்மணி - கார்யத்தில், ஸச்சப்த: - ஸத் என்னும் பதம், யுஜ்யதே - ப்ரயோகிக்கப்படுகிறது. 26

பா] இருப்பதிலும், மங்களகரமாக இருப்பதிலும், எல்லா வஸ்துக்களிலும் 'ஸத்' என்கிற இந்தப் பதம் லோகத்திலும் வேதத்திலும் ப்ர

---

*பட்ட மூன்றுவர்ணத்தார்களும் மோக்ஷத்திற்கு ஸாதனங்கள் என்கிற காரணத்தைக்கொண்டு 'தத்' என்னும் பதத்தினால் சொல்லக்கூடியவர்களல்லவானபடியினால் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'மூன்று வர்ணத்தார்களுக்கும்' என்றாரம்பித்து. 'மோக்ஷகாங்க்ஷிபி: க்ரியந்தே' என்பதினால் பரம்பரையாக 'தத்' என்னும் பதத்தோடு ஸம்பந்தம் காட்டப்பட்டது என்று தாத்பர்யம். 25*

*மூன்று வஸ்துக்களுக்கும் மூன்றுவித லக்ஷணங்களோடு ஸம்பந்தம் நிரூபிக்கவேண்டியதாயிருக்க'ஸத்பாவே ஸாதுபாவே' என்று ப்ரஸ்தாவமில்லாத அர்த்தத்தை எதற்காகச் சொல்லியிருக்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம்சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து. எப்படி ப்ரயோகம் இருப்பதினால் இருப்பது முதலிய அர்த்தங்களில் 'ஸத்' என்னும் பதம் ப்ரயோகிக்கப் படுகிறதென்று ஒப்புக்கொள்ளப்படுகிறதோ அப்படியே ப்ரக்ருதத்திலும் என்கிற அபிப்ராயத்தினால் அநேக அர்த்தங்களை உதாஹரணமாகச்சொல்லி இருக்கிறது.'இருப்பதிலும்' என்பது லோகத்தில் இல்லாத வஸ்துக்களை விடவேறுபட்டது என்பதைச் சொல்லுகிறதாகவுமாம். நிகழ்காலத்தில் இருக்கிறது என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதாகவுமாம், 'ஸத்பாவ' என்*

யோகிக்கப்படுகிறது. அப்படியே ஒரு புருஷனால் அனுஷ்டிக்கப்பட்ட மங்களகரமாகிய லௌகிக கார்யத்திலும் இது 'ஸச்சப்3:' என்று 'ஸத்' என்னும் பதம் ப்ரயோகிக்கப்படுகிறது என்றர்த்தம். 26

---

னும்பதம் என்றுதாத்பர்யம். 1 'புண்யகர்மத்தைச்செய்கிறவன் புண்ய பலத்தை அடைந்தவனாகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளிலேபோல இவ்விடத்திலும் 'ஸாது4' என்னும் பதம் புண்யமாக இருப்பதை மாத்திரம் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்— 'மங்களகரமாக இருப்பதிலும்' என்று. 'தத்' என்னும்பதத்துடன் சேர்ந்திருப்பதைச் சொல்லுகிற இடத்தில் 'மோக்ஷகாங்க்ஷிபி4:' என்கிற விசேஷணம் சொல்லப்பட்டிருப்பதினாலும், இவ்விடத்தில் 'ப்ரஶஸ்தே கர்மணி' என்று மங்களகரமாக இருப்பது மாத்திரம் காரணம் என்று சொல்லியிருப்பதினாலும், மோக்ஷத்தைத் தவிர இதர புருஷார்த்தங்களுக்கு ஸாதனங்களாகிய கர்மங்களுக்கு லக்ஷணமாக 'ஸத்' என்னும் பதம் இவ்விடத்தில் நிரூபிக்கப்படுகிறது என்று தாத்பர்யம். மிகவும் வேறுபட்ட வஸ்துக்களிலும் கீழ்ச்சொன்ன இரண்டு காரணங்களிலும் 'ஸத்' என்னும் பதம் எல்லா இடங்களிலும் ப்ரயோகிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எல்லா வஸ்துக்களிலும்' என்று 'ப்ரயுஜ்யதே' என்ற எந்த இடத்திலென்று விசேஷித்துக்குறிக்காமல் சொல்லியிருப்பதினால் அந்த ப்ரயோகம் எல்லா இடத்திலும் பரவி இருக்கிறபடியினாலே உறுதியானது என்பது தெரிவிக்கப்படுகிறது என்று சொல்லுகிறார்—'லோகத்திலும் வேதத்திலும்' என்று. 'அப்படியே' என்பது அடுத்த ஸமீபத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட விஷயத்தில் லௌகிகமான உதாஹரணத்தைக் காட்டுவதற்காக. அப்படிக்கில்லாவிடில் புனருக்தி வருகிறபடியினால்என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'லௌகிககார்யத்திலும்' என்று. 'ஸாது4பா4வே' என்று சொல்லப்பட்டகாரணமேஸமீபமாகப்ரஸ்தாவிக்கப்பட்ட மற்றொருஉதாஹரணத்தில் 'ப்ரஶஸ்தே' என்கிற பதத்தினால் நிரூபித்துக்காட்டப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'மங்களகரமாகிய' என்று. தாதுவில் மறைந்திருக்கிற அர்த்தத்தை ப்ரகாசப் படுத்துவது மாத்திரம் உபஸர்க்கத்தினால் செய்யப்படுகிறது. ஆகையினால் இந்த ஶ்லோகத்தில் 'யுஜ்யதே ப்ரயுஜ்யதே' என்கிற இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று சொல்லுகிறார்— 'ப்ரயோகிக்கப்படுகிறது என்றர்த்தம்' என்று. 26

---

1 ப்ருஹதாரண்யகம் - 6 - 4.

யஜ்ஞே தபஸி தாநே ச ஸ்திதி꞉ ஸதிதி சோச்யதே ।
கர்ம சைவ தத³ர்தீ²யம் ஸதி³த்யேவாபி⁴தீ⁴யதே ॥ 27

ப - ரை] யஜ்ஞே - யாகத்திலும், தபஸி - தபஸ்ஸிலும், தாநே ச - தானத்திலும், ஸ்திதி꞉ - நிஷ்டையானது, ஸத் இதி - ஸத் என்று, உச்யதே - சொல்லப்படுகிறது, தத³ர்தீ²யம் - அந்த மூன்று வர்ணத்தார்களுக்கும் ப்ரயோஜனத்தைக் கொடுக்கக்கூடிய, கர்ம - கர்மமும், ஸதி³த்யேவ - ஸத் என்றே, அபி⁴தீ⁴யதே - சொல்லப்படுகிறது. 27

பா] ஆகையினால் வைதிகர்களாகிய மூன்று வர்ணத்தார்களினுடைய வும் யஜ்ஞத்திலும், தபஸ்ஸிலும், தானத்திலும், நிஷ்டை மங்களகரமாகையினால் ஸத்தென்று சொல்லப்படுகிறது. அந்த மூன்று வர்ணத்தார்க

தா] இப்படி 'ஸத்' என்னும் பதம் அர்த்தம் சொல்லும் விதத்தையும் அதின் ப்ரயோகத்தையும் நிரூபித்துவிட்டு அதைக்காரணமாகக் கொண்டு பிறகு லக்ஷணம் சொல்லவேண்டியதாக ஏற்பட்ட ப்ராம்மணர் முதலிய மூன்று வஸ்துக்களிடங்களிலும் அந்தப் பதத்தை ப்ரயோகித்திருப்பதற்குக் காரணத்தை நிரூபித்து முடிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. நிஷ்டையைச் சொல்லுவதினால் நிஷ்டையையுடையவர்களுக்கும் அதில் நிஷ்டையையுண்டாக்குகிற வேதங்களுக்கும் 'ஸத்' என்னும் பதத்தின் அர்த்தத்தோடு ஸம்பந்தமுண்டென்று சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வைதிகர்களாகிய' என்று. ஒவ்வொரு அத்யாயங்களின் முடிவிலும் ஓம், தத், ஸத், என்னும் பதங்கள் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் இவ்விடத்தில் 'ஸ்திதி꞉' என்னும் பதம் முடிவைச்சொல்லுகிறதென்று மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்திருப்பது இந்த ஸந்தர்ப்பத்திற்குப் பொருளதாயும் ப்ரஸித்தமாயுமிருக்கும் அர்த்தம் ஸம்பவிக்கும் பொழுது உசிதமல்ல என்று தாத்பர்யம். 'ஸ்திதி꞉' என்னும் பதத்தினால் புத்தியில் ஜ்ஞாபகப்படுத்தப்பட்ட அவ்வித நிஷ்டையையுடையவர்கள் 'தத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறார்கள் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்த மூன்று வர்ணத்தார்களுக்கும்' என்றாரம்பித்து. இந்த மூன்றுவிதமான பதங்களினாலும் சொல்லப்படுகிறவனாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட பகவானுக்காக ஏற்பட்ட கர்மம் என்று மற்றவர்கள் வ்யாக்யானஞ் செய்திருப்பது கீழே அதிகத் தூரம்விட்டுப்போன அர்த்தத்தை, 'தத்' என்னும்பதத்தினால்சொல்லவேண்டியதாயிருப்பதினாலும், யஜ்ஞம், முதலிய எல்லாக் கர்மங்களும் பகவானுடைய ஆராதனத்திற்

ளுக்கும் ப்ரயோஜனத்தைக் கொடுக்கக் கூடியதாகிய யஜ்ஞம், தானம், முதலிய கர்மங்களும் ஸத் என்றே சொல்லப்படுகிறது. ஆகையினால் வேதங்களும் வேதத்தில் சொல்லப்படுகிற கர்மங்களும் ப்ராம்மணர்கள் என்று சொல்லப்படுகிற மூன்று வர்ணத்தார்களும் 'ஓம் தத் ஸத்' என்கிற மூன்று பதங்களோடு சேர்ந்திருக்கையாகிற லக்ஷணத்தினால் வேதங்களல்லாதவைகளைக் காட்டிலும் வைதிகங்களாகாத கர்மங்களைக் காட்டிலும் வேறுபட்டவைகளாகத் தெரிந்துகொள்ளத் தக்கவைகள். 27

---

*காகஏற்பட்டவைகளல்லவாகையினாலும் யுக்தமல்ல என்று தாத்பர்யம். அந்த யஜ்ஞம், முதலியவைகளுக்காக ஏற்பட்டதாகிய அதின் ஸாமக்ரிகளை ஸம்பாதிக்கிறதாகிய கர்மமும் 'ஸத்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுவதைப் பார்க்கிலும் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட யஜ்ஞம்முதலியகர்மங்களிலேயே அதை நிரூபிப்பது இவ்விடத்தில் உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'யஜ்ஞம், தானம்' என்றாரம்பித்து. 'யஜ்ஞாதிகம்' என்று மொத்தமாகச் சொல்லியிருப்பதை ஆதாரமாகக் கொண்டிருக்கிற 'முதலிய' என்னும் பதத்தினால் வேதம் ஓதுதலும் சேர்த்துக் கொள்ளப்படுகிறபடியினால் வேதங்களுக்கும் 'ஸத்' என்னும் பதத்துடன் ஸம்பந்தம் உண்டென்று இவ்விடத்தில் நிரூபிக்கப்பட்டது. இப்படி மூன்று வஸ்துக்களுக்கும் மூன்றுவிதமானபதங்களோடு ஸம்பந்தம் இருக்கட்டுமே. அதை இவ்விடத்தில் சொல்லியிருப்பது எதற்காக என்றாக்ஷேபம் வரில் லக்ஷணத்தைச் சொல்லுவதற்கு ப்ரயோஜனமாகிய மற்றவைகளை விட வேறுபட்டதென்று தெரிந்துகொள்ளுவதுதான் என்று நிரூபித்துக்கொண்டு 'ஓம் தத் ஸத்' என்றிவை முதலிய ஶ்லோகங்களினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லிக்கொண்டு முடிக்கிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. சிலர் 'ஓம் தத் ஸத்' என்று இந்த மூன்று பதங்களையும் வாக்யமாக வைத்துக்கொண்டு எது பலத்தில் ஆசையில்லாமல் செய்யப்படுகிற கர்மமோ அது மங்களகரம் என்பது உசிதம், அதாவது, 'ஓம் தத் ஸத்' என்று அந்வயித்துக்கொள்ள வேண்டியது என்று அந்த வாக்யத்திற்கு அர்த்தமும் சொல்லுகிறார்களே, அது உசிதமல்ல. இவ்விடத்தில் இப்படித்தான் அர்த்தம் சொல்லப்படுகிறது என்பதில் ஒரு காரணமும் இல்லை. அப்படிச் சொல்லுவதில் ஒருவித உபயோகமும் இல்லை. லக்ஷணமென்று சொல்லுவதோவெனில் அநுஷ்டானம் செய்வதற்குபயோகமானது என்று தாத்பர்யம்.* 27

அஶ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத் ।
அஸதித்யுச்யதே பார்த² ந ச தத் ப்ரேத்ய நோ இஹ ॥ 28

ஸ்ரீ கண்ணபிரானருளிச்செய்த ஸ்ரீ பகவத்கீதையில்
பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.
ஸ்ரீக்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:



ப - ரை] பார்த² - அர்ஜுந, அஶ்ரத்தயா-ஶ்ரத்தையில்லாமையினால், க்ருதம் - செய்யப்பட்ட, ஹுதம்-ஹோமமும், தத்தம் - தானமும், தப்தம்-செய்யப்பட்ட, தப:-தபஸ்ஸும், யத் - எதுவோ (அது), அஸதிதி - அஸத்தென்று, உச்யதே - சொல்லப்படுகிறது, தத் - அது, ப்ரேத்ய - லோகாந்தரத்தில் (ந) என்றும் ந - ஸுகத்திற்குக் காரணமல்ல, இஹ - இந்த லோகத்திலும், நோ - ஸுகத்திற்குக் காரணமல்ல 28

பா] ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதாயிருந்தபோதிலும் ஹோமம்

---

தா] 'யே ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய' என்றாரம்பித்து இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் கேட்கப்பட்டதற்குப் பதிலாக ஶ்ரத்தையோடு கூடியதாயிருந்தபோதிலும் ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கர்மம் அஸுரர்களின். ஸ்வபாவமுடையவர்களைச் சேர்ந்ததாகையினால் மங்களகரமல்ல என்று நிரூபித்து ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மத்திற்கு அதைவிட வ்யத்யாஸமும் நிரூபிக்கப்பட்டது. இப்பொழுது அஶாஸ்த்ரீயமான கர்மங்களுக்கு எதிர்நடையாகக் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுகிற கர்மங்கள் 'ஸத்' என்னும் பதத்தினால் சொல்லக்கூடியவைகள் என்பதை உறுதிப்படுத்துவதற்காக ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்டவைகளாயிருந்தபோதிலும் ஶ்ரத்தையில்லாத கர்மம் அஸத்தென்னப்படுகிறது என்பது சொல்லப்படுகிறது. சேர்ந்தவஸ்து இல்லாமலிருப்பது விசேஷ்யமில்லாமற் போனபோதிலும், விசேஷணமில்லாமற்போனபோதிலும் ஸமானமாகையினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதாயிருந்த போதிலும்' என்றாரம்பித்து. 'க்ருதம்' என்னும் பதம் 'ஹுதம், தத்தம்' என்னும் பதங்களோடு அந்வயிக்கிறது. 'தப்தம்' என்பதினாலேயே தபஸ்ஸு செய்யப்பட்டதென்பது ஏற்பட்டபடியினால் 'ஹுதம் தத்தம்' என்னும் பதங்களும் இவ்விடத்தில் ஹோமம் தானங்களாகிற க்ரியைகளைச் சொல்லுகின்றன. இப்படி 'க்ருதம்' என்னும் பதத்திற்கு அவைகளுக்கு விசேஷணமாக அந்வயம் சொல்லவேண்டியிருக்கப் பொதுவாகிய பரோய

முதலியது அஸத்தென்று சொல்லப்படுகிறது. ஏனெனில் அது மோக்ஷத்திற்கும் காரணமல்ல, ஸம்ஸாரத்திலுண்டாகும் பலத்திற்கும் காரணமல்லவாகையினால். 28

பகவத் ராமானுஜன் என்னும் உடையவர் அருளிச்செய்த
ஸ்ரீமத் கீதாபாஷ்யத்தில்
பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.
ஶ்ரீமதே பகவதே பாஷ்யகாராய நம:
எம்பெருமானார் திருவடிகளே சரணம்.

---

காரம் முதலியவைகளைச் சொல்லுகிறது என்று சொல்லுவது யுக்தமல்ல என்று தாத்பர்யம். ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படாத கார்யங்களைப்போல இது நரகத்தில் விழுவதற்குக் காரணம் என்பதில்லை. அப்படியிருந்தபோதிலும் அந்தந்த வாக்யங்களில் சொல்லப்பட்ட பலங்களில்லாமையினால் அஸத்தென்பது உசிதந்தான் என்கிற அபிப்ராயத்தினால் காரணத்தைப்பற்றிய கேழ்வையைக் காட்டுகிறார்—‘ஏனெனில்’ என்று. 1 ‘மோக்ஷத்தையடைந்தவன் விஷயத்தில் எந்த இவ்விதமாகிய ஸந்தேஹம் இருக்கிறது’ என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்திற்கு விரோதமில்லாமல் ‘ப்ரேத்ய’ என்னும் பதம் முக்தியையடைந்திருக்கும் தசையைச் சொல்லுகிறதென்பது உசிதமாகையினால் ‘மோக்ஷகாங்க்ஷிபி:’ என்றிவை முதலியவைகளினால் சொல்லப்பட்ட பலம் இல்லையென்பது ‘நச தத் ப்ரேத்ய’ என்பதினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—‘மோக்ஷத்திற்கும் காரணமல்ல’ என்று. மீதியாக ஏற்பட்டிருக்கிற ‘இஹ’ என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—‘ஸம்ஸாரத்திலுண்டாகும் பலத்திற்கும் காரணமல்ல’ என்று. ஶ்ரத்தையோடு கூடியதாயிருந்தபோதிலும் வேதத்தில்விதிக்கப்படாத கர்மமும் வேதத்தில் விதிக்கப்பட்டதாயிருந்தபோதிலும் ~~ஶ்ரத்தை~~யில்லாத கர்மமும் இஹலோகத்திலும் பரலோகத்திலும் ப்ரயோஜனமற்றவைகளாகையினால் அநுஷ்டிக்கத் தக்கவைகளல்ல. இந்த இரண்டுவித ப்ரயோஜனங்களையும் உடையதாகையினால் வேதங்களில் விதிக்கப்பட்ட கர்மமே ஶ்ரத்தையோடு கூடினதாகவே அநுஷ்டிக்கத்தக்கது என்று இந்த அத்யாயத்தின் ஸாரமான அர்த்தம் என்று தாத்பர்யம். 28

ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரரான ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிகன்
அருளிச்செய்த தாத்பர்ய சந்த்ரிகையில்
பதினேழாவது அத்யாயம் முற்றிற்று.
ஶ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

---

1 கடவல்லி - 1 - 1 - 21.

## ஸ்ரீ ஆளவந்தாரருளிச்செய்த ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹம்.

*ஆளவந்தார் திருவடிகளே சரணம்.*

அஶாஸ்த்ரமாஸுரம் க்ருத்ஸ்நம் ஶாஸ்த்ரீயம் குணத꞉ ப்ருதக் |
லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா ஸப்தத³ஶோதிதம் || 21

ப - ரை] அஶாஸ்த்ரம் - ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத, க்ருத்ஸ்நம் - எல்லாக்கர்மமும், ஆஸுரம் - அஸுரர்களின் ஸ்வபாவத்தை தச் சேர்ந்தது, ஶாஸ்த்ரீயம் - ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட கர்மமும், குணத꞉ - ஸத்வம் முதலிய குணங்களினால், ப்ருதக் - வேறுபட்டது (என்பதும்), ஶாஸ்த்ரஸித்தஸ்ய - ஶாஸ்த்ரங்களிலேற்பட்ட கர்மங்களுக்கு, த்ரிதா - மூன்று விதமாகிய, லக்ஷணம் - அடையாளம், (இது) ஸப்தத³ஶோதிதம் - பதினேழாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டது. 21

*ஸ்ரீமந் நிகமாந்த மஹா தேசிகனருளிச்செய்த*

### ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

*இவ்விடத்தில் பாஷ்யத்தில் 1 'இப்பொழுது ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்படாத கர்மம் ஆஸுரஸ்வபாவத்தைச் சேர்ந்த தாகையினால் ப்ரயோஜன மற்றதென்பதும் ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மம் ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவிதமென்பதும் ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட கர்மத்திற்கு லக்ஷணமும் சொல்லப்படுகிறது' என்று சொல்லப்பட்டது. எந்தக் கர்மத்தை ஶாஸ்த்ரம் விதிக்கவில்லையோ அது 'அஶாஸ்த்ரீயம்' என்கிற அபிப்ராயத்தினால் சொல்லப்பட்டது. 'ஓம் தத், ஸத்,' என்று ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கர்மத்திற்கு மூன்று விதமான லக்ஷணமும் சொல்லப்பட்டது.*

பதினேழாவது அத்யாயம் கீதார்த்த ஸங்க்ரஹ ரக்ஷை.

*சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*



1 பகவத்கீதை, 17-வது அத்யாயத்தின் பாஷ்ய அவதாரிகை.

*ஸ்ரீமந் நிகமாந்த மஹாதேசிக னருளிச்செய்த*

ஸ்ரீ கீதார்த்த ஸங்க்ரஹப்பாட்டு.

*சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.*

மறைபொருந்ாதவை வல்லசுரர்க்கு வகுத்தமையும்
மறைபொருந்தும் நிலையும் வண்குணப்படி மூவகையும்
மறைநிலை தன்னை வகுக்குங்குறி மூன்றின் மேன்மையையும்
மறையுமிழ்ந்தானுரைத்தான் வாசவன்றன் சிறுவனுக்கே. 18

ப - ரை] மறை - வேதத்துடன், பொருந்தாதவை – சேராத கர்மங்கள், வல்–பலிஷ்டர்களான, அசுரர்க்கு - அஸுரஸ்வபாவ முடையவர்களுக்கு, வகுத்தமையும்-வகுக்கப்பட்டிருப்பதையும், மறைபொருந்தும்- வேதத்துடன் பொருத்தமுடைய, நிலையும்-நிஷ்ட்டையும், வண் - ஒன்றுக்கொன்று விலக்ஷணங்களான, குண-ஸத்வம், முதலிய குணங்களினுடைய, படி - ப்ரகாரத்தினால், மூவகையும் - மூன்றுவிதமாக இருப்பதையும், மறை நிலைதன்னை - வேதத்தில் சொல்லப்பட்ட வைதிகக் கர்மங்களில் நிஷ்ட்டையை, வகுக்கும் - பிரித்துக்காட்டும், குறி மூன்றின்- மூன்றுவிதங்களான அடையாளங்களின், மேன்மையையும் - உத்கர்ஷத்தையும், மறையுமிழ்ந்தான் - வேதத்தை ப்ரகாசம் செய்தவனாகிய பகவான், வாசவன் தன்–இந்திரனுடைய, சிறுவனுக்கு – புத்திரனாகிய அர்ஜுநனுக்கு, உரைத்தான் - சொன்னான். 18

*'மறை பொருந்தாதவை' என்று சொல்லியிருப்பதினால் வேதத்தில் விதிக்கப்படாமலிருந்தபோதிலும் அதின் அபிப்ராயத்தை அநுஸரித்திருந்தால் போதும் என்று ஏற்படுகிறபடியினால் வேதத்தை அநுஸரித்த ஸ்ம்ருதி, இதிஹாஸம், புராணம், பாஞ்சராத்ரம், முதலிய சாஸ்த்ரங்களுக்கு விரோதமானவைகளும்சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. இத்தால் கீழ் அத்யாயத்தில் 1 'தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யாகார்ய வ்யவஸ்திதௌ | ஜ்ஞாத்வா சாஸ்த்ரவிதாநோக்தம்' இத்யாதிகளில் 'சாஸ்த்ர' என்னும் பதம் வேதத்தை மாத்திரம் சொல்லுவதாக வ்யாக்யானம் செய்யப் பட்டிருந்தபோதிலும் அதை அநுஸரித்த மற்ற ஸ்ம்ருதி முதலிய க்ரந்தங்களும் குறிக்கப்படுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் இந்த அத்யாயத்தின் ஸங்க்ரஹ ச்லோகத்தில்*

1 *பகவத்கீதை* - 16-24.

‘ஸாத்விகராஜஸதாமஸம்’ என்று பொதுவாக அருளிச்செய்யப்பட்டது என்று திருவுள்ளம். ‘பொருந்தாதவை’ என்று பன்மையினால் ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் ‘த்ரயம்’ என்னும் பதம் விவரிக்கப்பட்டது. அதாவது ஶ்ரத்தையோடு கூடியதாயிருந்தபோதிலும் ஶ்ரத்தையில்லாமலிருந்தபோதிலும் அவைகெல்லாம் அஸுரஸ்வபாவமுடையவர்களினுடைய நிஷ்டை என்பது தாத்பர்யம். மேலும் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படாத யாகம், தானம், தபஸ்ஸு, முதலிய எல்லாக் கர்மங்களும் என்றுநவுமாம். ‘வல்லசுரர்க்கு’ என்பதற்கு 1 ‘யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்யே’ என்று கீழ் அத்யாயத்தில் சொல்லியிருக்கிறபடி தங்களுடைய பலத்தையே ப்ரதான காரணமாகக்கொண்ட என்றர்த்தம். அன்றிக்கே‘வல்’ என்பதினால்ஶாஸ்த்ரங்களுக்குக் கீழ்படியாமையாகிற வன்மையைச் சொல்லுகிறதாகவுமாம். ‘வண்குணப்படி’ என்பதினால் ஸத்வம் முதலிய குணங்கள் வெவ்வேறான ஸ்வபாவங்களை யுடையவைகளாகையினால் அப்படிப்பட்ட குணங்களின் ஸம்பந்தத்தோடுகூடிய ஶ்ரத்தைகளினால் செய்யப்படுகிறயாகம், தானம், முதலிய கர்மங்களும் மூன்றுவிதங்கள் என்று கருத்து. இத்தால் ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் ‘ஶாஸ்த்ரீயம் குணத: ப்ருதக்’ என்பதின் அர்த்தம் விவரிக்கப்பட்டது. ‘மறை நிலைதன்னை வகுக்கும்’ என்பதினால் இவ்விடத்தில் வைதிகக் கர்மங்களுக்கு லக்ஷணத்தைச் சொல்லியிருப்பது அவைதிகமான கர்மங்களை விட இவைகளைத்தனித்துக் கண்டறிவதற்காக என்பதேற்பட்டது. ‘குறிமூன்றின் மேன்மையும்’ என்பதினால் ஸங்க்ரஹ ஶ்லோகத்தில் ‘லக்ஷணம் ஶாஸ்த்ரஸித்தஸ்ய த்ரிதா’ என்றருளிச் செய்யப்பட்டிருந்தபோதிலும் கீதையில் 2 ‘ப்ரஹ்மவாதிநாம்’, 3 ‘மோக்ஷகாங்க்ஷிபி:’, 4 ‘ஸத்பாவே ஸாதுபாவே’, இத்யாதிகளினால் இவைகளுக்கு மேன்மை ஏற்படுகிறபடியினாலும், 5 ‘அஶ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்। அஸதித்யுச்யதே பார்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ॥’ என்கிற ஶ்லோகத்தில் இப்படிச் செய்யாதது ஒருவித பலத்திற்கு ஸாதனமல்லவாகையினால் அஸத்தென்று சொல்லப்படுகிறது என்று மற்றதை நிந்தித்திருப்பதினாலும் வைதிகக் கர்மங்களும் அத்துடன் சேர்ந்தவைகளான அடையாளங்களின் மேன்மையும், சொல்லப்பட்டதாகிறது என்று திருவுள்ளம். ‘மறையுமிழ்ந்தான்’ என்பதினால் 6 ‘ப்ராஹ்மணாஸ்தேந வேதாஶ்ச யஜ்ஞாஶ்ச விஹிதா:

1 பகவத்கீதை - 16-15.
2 பகவத்கீதை-17-24.
3 பகவதகீதை - 17-25.
4 பகவத்கீதை - 17 - 26.
5 பகவத்கீதை - 17 - 28.
6 பகவத்கீதை - 17 - 23.

‘ப்ரபா’ என்கிற இடத்தில் வேதங்களையும் வைதிககர்மங்களையும் அதைச்செய்ய அதிகாரிகளான ப்ராம்மணர்களையும் ஸ்ருஷ்டித்தவனாகிய என்றால் என்று பாஷ்யத்தில் அருளிச்செய்யப்பட்டபடியே முதலில் 1 ‘சாதுர்வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம்’ 2 ‘ஸஹயஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா’, இத்யாதிகளிலும் ப்ராம்மணர் முதலியவர்களை ஸ்ருஷ்டித்தவனையும், 3 ‘ஆதியிலே எவன் ப்ரம்மாவை ஸ்ருஷ்டிக்கிறானோ, எவன் வேதங்களை அவனுக்குபதேசிக்கிறானோ’ என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யத்திலும், 4 ‘ஶ்ருதிஸ்ம்ருதிர் மமைவாஜ்ஞா’ என்றும், 5 பன்னுகலை நால்வேதப்பொருளையெல்லாம் பரிமுகமாயருளிய எம்பரமன்’ என்றும், 6 ‘அன்னமதாயிருந்து அங்கறநூலுரைத்த’ என்றும், சொல்லுகிறபடியே வேத வைதிகங்களை ஸ்ருஷ்டித்தவனாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் என்று திருவுள்ளம். ‘உமிழ்ந்தான்’ என்பதினால் ப்ரளயகாலத்தில் மறைந்துகொண்டிருந்த வேதங்களை மறுபடியும் ப்ரகாசம் செய்தான் என்பதும் அதில் ப்ரமாஸமில்லாமல் செய்தான் என்பதும் ஏற்பட்டது. ‘வாசவன்றன் சிறுவனுக்கே’ என்பதினால் 7 ‘மா ஶுச: ஸம்பதம் தைவீமபிஜாதோஸி பாண்டவ’ என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட அதிகாரியின் வைலக்ஷண்யம் சொல்லப்படுகிறது. 18

சீரார்தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே சரணம்.

---

1 பகவத்கீதை - 4 - 13.

2 பகவத்கீதை - 8.

3 ஶ்வேதாஶ்வதரம் - 6 - 17.

4 விஷ்ணுதர்மம் - 76 - 31. ஶ்ருதி, ஸ்ம்ருதி, முதலியவைகள் என்னுடைய உத்திரவுகள்.

5 பெரிய திருமொழி - 7.

6 பெரிய திருமொழி - 11 - 4 - 8.

7 பகவத்கீதை - 16 - 5.

# ஸ்ரீ பகவத்கீதை.

ஸ்ரீ க்ருஷ்ணாய பரப்ரஹ்மணே நம:.
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:.
ஸ்ரீமதே நிகமாந்த மஹா தேசிகாய நம:.

பா - அ] கீழ் இரண்டத்யாயங்களினுல் மோக்ஷம், இதர புருஷார்த்தங்கள், இவைகளுக்குக்காரணமாகிய நு,வேதத்தில்சொல்லப்படுகிறயஜ்ஞம்' தபஸ்ஸு, தானம் முதலிய கர்மங்களே ஒழிய வேறல்ல. வேதத்தில் சொல்லப்படுகிற கர்மத்திற்கும் பொதுவாகிய லக்ஷணம் ப்ரணவத்தோடு சேர்ந்திருப்பது. அதில் மோக்ஷம், இதர புருஷார்த்தங்கள், இவைகளுக்கு ஸாதனமான கர்மங்களுக்கு ஒன்றுக்கொன்று வ்யத்யாஸம் 'தத்', 'ஸத்', என்னும் பதங்களினுல் சொல்லப்படுகிறபடியினுல்.மோக்ஷத்திற்கு ஸாதனமான கர்மம், பலத்தில் ஆசையில்லாத யஜ்ஞம் முதலியவை. அவைகளை ஆரம்பிப்பதும் ஸத்வகுணம் வ்ருத்தியடைவதினுல் உண்டாகிறது. ஸத்வம் வ்ருத்தியடைவதும் ஸத்வகுணமுடைய ஆஹா

---

தா] *செய்ய வேண்டிய கர்மங்களை நிரூபிப்பதில் தாத்பர்யத்தையுடைய கடைசி மூன்று அத்யாயங்களுக்குள் இந்த அத்யாயம் கடைசி என்பதைத் தெரிவிப்பதற்காக பதினுருவது, பதினேழாவது அத்யாயங்கள் தேவஸ்வபாவமுடையவர்கள், அஸுர ஸ்வபாவமுடையவர்கள், இவர்களின் பிரிவை நிரூபித்துக்கொண்டு அதன் வழியாக விடத்தகுந்தது, அங்கீகரிக்கத் தகுந்தது இவைகளைப் பிரித்துக் காட்டுகிறபடியினுல் தொடர்ச்சி ஒன்றுயிருக்கிறது என்பதை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிருர்—'கீழ் இரண்டத்யாயங்களினுல்' என்று. 'வேதத்தில் சொல்லப்படுகிற கர்மத்திற்கும்' என்ருரம்பித்துப் பிரித்திருப்பதற்குக் கருத்தாவது— இந்தப் பிரிவு விசேஷணங்களின் ஸாமர்த்தியத்தினுல் ஏற்பட்டது. ப்ரம்மம் நமக்குப் புலப்படாதாகையினுல் அதை 'தத்' என்று சொல்லியிருக்கிறது. அதைப் பற்றிய ஜ்ஞானம் மங்களகரமாகையினுல் 'ஸத்' என்னும் பதம் அதைச் சொல்லுகிறது. இவை மூன்றும் முறையே ஸாத்விகம், ராஜஸம், தாமஸம் என்னப்படுகிறது என்று பிரித்திருப்பதோ வெனில் தன்னுடைய ஊஹத்தினுல் கல்பனை செய்யப்பட்டது—என்பது. இப்படிக் கீழ்ச் சொல்லப்பட்ட*

ரங்களைப் புசிப்பதினால் என்று சொல்லப்பட்டது. பிறகு மோக்ஷத்திற்குக் காரணமாகச் சொல்லப்படுகிற த்யாகம், ஸந்நியாஸம் இவையிரண்டும் ஒன்றென்பதும், த்யாகத்தின் ஸ்வரூபமும், எல்லாவற்றிற்கும் ஈச்வரனாகிய பகவானிடத்தில் எல்லாக்கர்மங்களுக்கும் கர்த்தாவாயிருக்கிறான் என்பதை அநுஸந்திப்பதும், ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் இவைகளின் கார்யங்களை நிரூபிப்பதினால் ஸத்வகுணமே அவச்யம் அங்கீகரிக்கத்தகுந்தது என்பதும், தன்னுடைய வர்ணாச்ரம தர்மங்களுக்குத்தகுந்த கர்மங்கள் பரமாத்மாவிற்கு ஆராதனங்களாக இருந்து பரமாத்மாவை அடைவதை உண்டாக்குகிற விதமும், கீதாசாஸ்த்ரம் முழுமைக்கும் ஸாரமான அர்த்தமாகிய பக்தியோகமும் என்கிற இவைகள் சொல்லப்படுகின்றன. அவ்விடத்தில் முதலில் த்யாகம், ஸந்நியாஸம் இவை

*அர்த்தங்களுக்குள் மோக்ஷத்திற்கு ஸாதனமாகியபாகத்தை நிரூபிப்பது மேல் அத்யாயத்தில் செய்யப்படுகிறது என்று ஸங்கதியை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'பிறகு' என்றாரம்பித்து.* 1 'ஸந்ந்யாஸ த்யாகயோரைக்யம் க்ருதாவீச்வரே ததா। ஸத்வோபாதேயதோக்தாச ஸ்வகர்மபரிணாமத: ஸாரார்த்தோபஸம்ஹ்ருதி: ॥' *என்கிற ஸங்க்ரஹ ச்லோகத்தில் த்யாகம், ஸந்நியாஸம் இவைகள் ஒன்றென்பதையும் அவைகளின் ஸ்வரூபங்களையும் சொல்லாமல் விருந்தது பகவானே கர்த்தா என்கிற புத்திக்கு அங்கமாக இதை உபந்யாஸம் செய்திருப்பதினால் என்று நினைக்க வேண்டியது. ஸத்வகுணத்தை அங்கீகரிக்க வேண்டுமென்பது இவ்விடத்தில் தாத்பர்யத்தினால் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'ஸத்வகுணம், ரஜோகுணம், தமோகுணம் இவைகளின் கார்யங்களை நிரூபிப்பதினால்' *என்று.* 2 'ஸ்வதர்மஜ்ஞாநவைராக்யஸாத்யபக்த்யேகஸோசர:' *என்று ஸங்க்ரஹத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்ட முக்யமாகச் செய்ய வேண்டியதைச் சொல்லுகிறது இவ்விடத்தில்* 'ஸாரார்த்தோபஸம்ஹ்ருதி:' *என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*— 'ஸாரமான அர்த்தமாகிய பக்தியோகமும்' *என்று. ஸ்வர்க்கம் முதலியவைகளுக்கு ஸாதனங்களாகிய யஜ்ஞம், தானம் முதலியவைகளினுடைய ஸ்வரூபம் ஒன்றாயிருந்த போதிலும் எதின் ஸம்பந்தத்தினால் அவைகள் மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகின்றனவோ அப்படிப்பட்டதை இப்போது விசேஷணங்களுடன் நிரூபிப்பதற்காக அர்ஜுனன் கேட்கிறான் என்கிற அபிப்ராயத்தினால் இவ்விடத்தில் கேள்விக்கு ஸங்கதி சொல்லுகிறார்*—'அவ்விடத்தில் முதலில்'

1 *கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகம்* - 22. 2 *கீதார்த்த ஸங்க்ரஹ ச்லோகம்* - 1

கள் வெவ்வேறு? ஒன்று? என்று நிஶ்சயம் செய்து கொள்ளுவதற்காகவும், அதின் ஸ்வரூபத்தை நிஶ்சயம் செய்து கொள்ளுவதற்காகவும் அர்ஜுநன் கேட்கிறான்—

॥ 𑌅𑌰𑍍𑌜𑍁𑌨 𑌉𑌵𑌾𑌚 ॥

𑌅𑌰𑍍𑌜𑍁𑌨𑌃 — அர்ஜுநன், 𑌉𑌵𑌾𑌚 — சொன்னான்.

𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑌿𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍 ।
𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌯 𑌚 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 𑌪𑍃𑌥𑌕𑍍𑌕𑍇𑌶𑌿𑌨𑌿𑌷𑍂𑌦𑌨 ॥ 1

ப - தை] 𑌕𑍇𑌶𑌿𑌨𑌿𑌷𑍂𑌦𑌨 - கேசி என்னும் அஸுரனைக் கொன்றவனாகிய, 𑌮𑌹𑌾𑌬𑌾𑌹𑍋 - பாஹுபல முடையவராகிய, 𑌹𑍃𑌷𑍀𑌕𑍇𑌶 - ஸ்ரீ க்ருஷ்ண, 𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌸𑍍𑌯 - ஸந்நியாஸத்தினுடையவும், 𑌤𑍍𑌯𑌾𑌗𑌸𑍍𑌯 𑌚 - த்யாகத்தினுடையவும், 𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌮𑍍-உண்மையை, 𑌪𑍃𑌥𑌕𑍍—தனியாக, 𑌵𑍇𑌦𑌿𑌤𑍁𑌮𑍍 - அறிய, 𑌇𑌚𑍍𑌛𑌾𑌮𑌿 - விரும்புகிறேன். 1

பா] த்யாகம், ஸந்நியாஸம் இவைகள் மோக்ஷத்திற்கு ஸாதனங்களாக * 'கர்மத்தினாலும் அடையவில்லை, ப்ரஜைகளையுண்டு பண்ணுவதினா

என்று. ஸத்வ குணம் வ்ருத்தி யடைவதையும் அதற்குபாயத்தையும் சொல்லி யிருப்பது ஸாத்விகத்யாகத்தோடு கூடிய மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகிய கர்மங்களைச்செய்வதற்காக வாதலாலும், '𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸' என்னும் பதம் ஒருவித ஆஶ்ரமத்தைச் சொல்லுகிற தாகையினாலும், விடுவது என்பதை மாத்திரம் சொல்லுமாகையினாலும், இவைகள் ஒன்று? வெவ்வேறு? என்கிற ஸந்தேஹம் உண்டாகிறது. வாதிகள் வெவ்வேறாக அர்த்தங்களைச் சொல்லுகிற படியினால் இவைகளின் ஸ்வரூபத்தைப் பற்றிய நிஶ்சயமில்லை. '𑌤𑍍𑌯𑌾𑌗𑌂', '𑌸𑌨𑍍𑌨𑍍𑌯𑌾𑌸𑌂' இவைகளைப்பற்றி விஶேஷித்து உண்மையை அறிய வேண்டு மென்கிற ஆசைக்குக் காரணத்தைச்சொல்லுகிறார்—'த்யாகம், ஸந்நியாஸம், இவைகள்' என்றாரம்பித்து. கர்மங்களின் ஸ்வரூபம் ஸ்வர்க்கம், மோக்ஷம் இவைகளுக்குப் பொதுவாக இருக்க த்யாகம் முதலிய பேர்களை உடைய விஶேஷத்தோடு சேர்ந்திருப்பதினாலேயே அல்லவோ மோக்ஷத்திற்கு ஸாதனங்களாகின்றன. ஆகையினால் இதில் உசிதாநுசிதங்களை யோசித்துப் பகுத்தறியு மிடத்து விஶேஷணத்தையே மோக்ஷத்திற்கு ஸாதனம் என்று சொல்லி யிருக்கிறது. ஸந்தேஹம், விபரீதமான ஜ்ஞானம் இவைகளைத் தடுக்கக் கூடிய விஶேஷம் இவ்விடத்தில் '𑌤𑌤𑍍𑌤𑍍𑌵𑌂' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'உண்மையை'

* தைத்திரீயம் - நாராயணம் - 10 - 21-22.

லும் அடையவில்லை, பணத்தினுலும் அடையவில்லை, சிலர் த்யாகத்தினுல் அடைந்தார்கள்' என்றும், 'வேதாந்தங்களில் சொல்லப்படுகிற ஜ்ஞானத்தினுல் நன்ருய் நிஶ்சயம் செய்யப்பட்ட அர்த்தங்களையுடைய யதிகள் பரிசுத்த ஸத்வகுணம் உடையவர்களாய் ஸந்நியாஸயோகத்தினுல் (அடைகிருர்களோ), அவர்கள் ஶரீரம் மரணமடையும் ஸமயத்தில் பகவானுடைய லோகத்தில் எல்லா வஸ்துக்களையும் விட மேலான பகவானையடைந்து முக்தியை அடைகிருர்கள்' என்று மர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யங்களில் சொல்லப்பட்டன. இந்த ஸந்நியாஸம், த்யாகம் இவைகளின் உண்மையைத் தனியாகத்தெரிந்து கொள்ளவிரும்புகிறேன். இதின் கருத்தாவது இந்த ஸந்நியாஸம், த்யாகம் என்னும் பதங்கள் வெவ்வேறர்த்தத்தைச் சொல்லுகிறதா? அல்லது ஒரே அர்த்தத்தைச்சொல்லுகிறதா? வெவ்வேறர்த்தங்களைச் சொல்லுவதாக இருந்தால் அப்பொழுது இவைகளின் ஸ்வரூபங்களை வெவ்வேருக அறியவிரும்புகிறேன். ஒன்ருகயிருந்த போதிலும் அதின் ஸ்வரூபத்தைப்பற்றிச் சொல்லவேண்டியது—என்பது. பா-அ] பிறகு அவைகளின் ஸ்வரூபம் ஒன்று தான், அதுவும் இப்படிப்

---

*என்று. 'ப்ருதக் தத்வம் வேதிதுமிச்சாமி (தனித்தனியாக இவைகளின் உண்மையை அறிய விரும்புகிறேன்)' என்று சொல்லி யிருக்கும்பொழுது இவைகள் வெவ்வேறென்று தெரிந்துகொண்டிருக்கிற அர்ஜுநனுக்கு அவைகளின் உண்மையான ஸ்வரூபத்தை அறியவேண்டுமென்கிற ஆசை உண்டாயிருக்கிறதென்று தோன்றுகிறது. அது யுக்தமல்ல, இவைகள் வெவ்வேறென்று நிஶ்சயம் செய்வதற்குக்காரணம் முன்பில்லாமையினுலும்,மேலே இவைஇரண்டும் ஒன்றென்றுசொல்லப்போகிறபடியினுலும். ஆகையினுல் இப்படிக்கேட்டிருப்பது உசிதமல்ல, மேலே பதில் சொல்லி யிருப்பது பொருந்தாதாகையினுல் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர் — 'இதின் கருத்தாவது' என்ருரம்பித்து. உண்மையை அறிய விரும்புகிறேன் என்கிற இவ்வளவு மாத்திரம் தான் இங்கே சொல்லப்படுகிறது. வெவ்வேருக என்று சொல்லியிருப்பதோ வெனில் ஸந்தேஹத்தின் ஒரு பாகத்தை எடுத்துக் காட்டியிருக்கிறது. வெவ்வேருக இருந்தால் அதையும் அறியவிரும்புகிறேன் என்று வாக்யத்தைத் திருப்பிவைத்துக்கொள்ள வேண்டியதாகவுமாம் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்— 'இந்த' என்ருரம்பித்து.* 1

*தா] இவைகள் வெவ்வேரு? ஒன்ரு? என்று ஸ்வரூபத்தை அறியவேண்டுமென்கிற ஆசையினுலே கேட்டிருந்தால் அதில் 'காம்யாநாம் கர்மணாம்' என்ருரம்பித்து வெவ்வேறு மதங்களை உபந்நியாஸம்செய்தி*

பட்டது என்று நிஶ்சயம் செய்வதற்காக வாதிகள் வெவ்வேறாகச் சொல் லியிருப்பதை நிரூபித்துக்கொண்டு ஸ்ரீ பகவான் சொல்லுகிறார்—

|| ஶ்ரீபகவாநுவாச ||

ஶ்ரீபகவாந் - பகவானாகிய ஸ்ரீ க்ருஷ்ணன் உவாச - சொன்னார்.

காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது: |
ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: || 2

ப-ரை[1] கவய: (சில) புத்திமான்கள், காம்யாநாம்-காம்யங்களாகிய, கர்மணாம் - கர்மங்களினுடைய, ந்யாஸம் - விட்டுவிடுவதை, ஸந்ந்யா ஸம் - ஸந்நியாஸமாக, விது: - அறிகிறார்கள், விசக்ஷணா: - (சில) பண் டிதர்கள், ஸர்வகர்மபலத்யாகம் — எல்லாக் கர்மங்களினுடையவும் பலங்களை விட்டுவிடுவதை, த்யாகம் - த்யாகமாக, ப்ராஹு: - சொன் னார்கள். 2

பா] சில வித்வான்கள் காம்யகர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிடுவதே

*ருப்பது எந்தப் பாகத்தில் சேருகிறது என்ற ஆக்ஷேபத்திற்கு ஸமா தானம்சொல்லுகிறார்—'பிறகு'என்றாரம்பித்து. இதின் கருத்தாவது— ந்யாயங்களைக் கொண்டல்லவோ இவ்விடத்தில் நிஶ்சயம் நிரூபிக்கப் படுகிறது. ஸந்தேஹமுள்ள இடத்திலேயே ந்யாயத்தை நிரூபிக்கிறத ற்கு இடம் உண்டாகிறது. ஸந்தேஹமும் இவ்விடத்தில் வாதிகள் வெ வ்வேறாகச் சொல்லி யிருப்பதினால் உண்டாகிறது என்று ந்யாயத்தை நிரூபிப்பதற்கு இடமுண்டு என்று சொல்லுவதற்காக வாதிகள் வெவ் வேறாகச் சொல்லி யிருப்பதை உபந்யாஸம் செய்திருக்கிறது—என் பது. இத்தால் ஸந்நியாஸம், த்யாகம் இவைகளின் அர்த்தம் முன்பு சொல்லப்பட்டிருந்தபோதிலும் ஸந்தேஹத்தை நீக்குவதற்காக இந்த அத்யாயத்தில் மறுபடியும் கேழ்க்கப்பட்டிருக்கிறது என்றும் தெரிவி க்கப்பட்டது. ஒன்றென்று ஒப்புக்கொண்டு பதில் சொல்லுகிற படியி னால் வெவ்வேறென்பதை நிராகரித்ததும் ஏற்பட்டது என்கிற அபிப் ராயத்தினால் சொல்லுகிறார்—'இவைகளின் ஸ்வரூபம் ஒன்று தான்' என்று. தன்னுடைய மதம் 1'நிஶ்சயம் ஶ்ருணு' என்று மேலே சொ ல்லப்போகிறபடியினால் 'கவய:', 'விசக்ஷணா:' என்கிற இரண்டு பதங்களும் அவர்களால் சொல்லப்படுகிற அர்த்தம் விஶேஷமானது என்பதற்காக அர்த்தத்தைச் சொல்லுகிறவர்களின் கௌரவத்தைச் சொல்லுகிறதல்ல. பின்னை எப்படி என்னில் வெவ்வேறாகச் சொல்லு*

1 பகவத்கீதை - 18 - 4

ஸந்நியாஸமாகத்தெரிந்து கொள்ளுகிறார்கள். சில பண்டிதர்கள் நித்யம், நைமித்திகம், காம்யம் இந்த எல்லாக் கர்மங்களினுடையவும் பலங்களைவிட்டுவிடுவதே மோக்ஷ ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற 'த்யாக'

வதற் குபயோகமான ஜ்ஞானம் மாத்திரத்தைச் சொல்லுகின்றன என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'சில வித்வான்கள்' என்று. அடுத்த ஶ்லோகத்தில் வாதிகள் வெவ்வேறென்பது 'ஏகே', 'அபரே' என்று வ்யக்தமாகச் சொல்லப்பட்டிருக்கிறபடியினால் இந்த ஶ்லோகத்திலும் அப்படியே சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'சில' என்று சொல்லப்பட்டது. 'காம்யாநாம் கர்மணாம் ந்யாஸம்' என்று விஶேஷித்துச் சொல்லியிருப்பதினால் மற்றவைகளை விடக்கூடாதென்பது ஏற்படுகிறது. மேலே 'ஸர்வகர்மபலத்யாகம்' என்று விஶேஷித்துச் சொல்லியிருப்பதினால் காம்யகர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிட வேண்டுமென்பதும் ஏற்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸ்வரூபத்தை விட்டுவிடுவதே' என்று. காம்ய கர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டுவிடவேண்டு மென்பவர்களின்கருத்தாவது நித்யம், நைமித்திகம், இவைகளைப்போலக்காம்ய கர்மங்களைச் செய்யாவிடில் தோஷமுண்டாகிற படியினாலாவது வேறு கர்மங்களைச்செய்ய யோக்யதை இல்லாமற்போய்விடுமே என்கிற பயத்தினாலாவது காம்யகர்மம் அனுஷ்டிக்கப்படுகிறதில்லை, த்ரிவர்க்கபலங்களை அடைவதற்காகவுமில்லை, அவைகள் மோக்ஷத்திற்கு விருத்தங்களாகையினால். மேலும் அந்த காம்யகர்மங்கள் தாங்களே மோக்ஷத்திற்கு ஸாதனமென்பதுமில்லை, உபாஸனம் முதலியவைகள் வ்யர்த்தமாய்ப்போக வேண்டிவருமாகையினால் உபயோகம் வெவ்வேறாக ஏற்பட்டிருப்பதினாலே வித்யைகளுக்கு அங்கமாக இவைகளை அங்கீகரிக்க வேண்டியதென்பதுமில்லை, யஜ்ஞம் முதலியவைகளைச்செய்யவேண்டுமென்று சொல்லுகிற ஶ்ருதிவாக்யம் நித்யங்களையும், நைமித்திகங்களையும் மாத்திரம் பற்றிச் சொல்லுகிறதாயிருந்தாலும் விரோதமில்லையாகையினால். ஆகையினாலல்லவோ [1] 'ஸர்வாபேக்ஷா ச யஜ்ஞாதி ஶ்ருதேரஶ்வவத்' என்கிற அதிகரணம் ஆஶ்ரம தர்மங்களை அவஶ்யம் செய்யவேண்டியது என்பதைச் சொல்லுகிறது என்று பாஷ்

1 ஶாரீரக ஸூத்ரம் - 3 - 4 - 26-யஜ்ஞம் முதலியவைகளினால் அறிய விரும்புகிறார்கள் என்று ஶ்ருதிசொல்லி யிருக்கிறபடியினால்-அஶ்வவத்-குதிரையைப்போல, அதாவது குதிரையினால் போக விரும்புகிறான் என்கிற வார்த்தையினால் குதிரையைப்போல, ஸர்வாபேக்ஷாச - யஜ்ஞம் முதலிய எல்லாக் கர்மங்களையும் அபேக்ஷிப்பதும் (உண்டு).

என்னும் பதத்திற்கு அர்த்தம் என்று சொன்னார்கள். இவ்விடத்தில் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற 'த்யாக' ஆவது காம்யகர்மங்களின் ஸ்வரூபத்தைப்பற்றியது என்றும், எல்லாக் கர்மங்களினுடைய பலங்களைப்பற்றியது என்றும் விவாதப்படுகிறார்கள் என்று நிரூபிக்கும் பொழுது ஓரிடத்தில் 'ஸந்ந்யாஸ' என்னும் பதத்தையும் மற்றோரிடத்தில் 'த்யாக' என்னும் பதத்தையும் ப்ரயோகித்தார். ஆகையினால் 'த்யாக', 'ஸந்ந்யாஸ', என்னும் பதங்கள் ஒரே அர்த்தத்தைச்

---

*யத்தில் சொல்லப்படுகிறது. ஆகையினால் ஸ்வர்க்கம் முதலிய பேர்களை யுடைய நரகங்களுக்குக் காரணங்களாகிய காம்ய கர்மங்கள் மோக்ஷத்திலாசை யுடையவர்களால் அனுஷ்டிக்கத் தக்கவைகளல்ல—என்பது. எல்லாக் கர்மங்களினுடையவும் பலங்களை விட்டுவிட வேண்டுமென்று சொல்லுகிறவர்களின் கருத்தோ வெனில்—பலம் விரோதமாயிருக்கிறபடியினாலல்லவோ காம்ய கர்மங்களை விட்டுவிட வேண்டுமென்று ஆக்ஷேபிக்கப் படுகிறது. ஆகையினால் பலத்தை விட்டுவிடலாமே. ப்ரயோஜன மற்ற கார்யத்தை அனுஷ்டிக்க வேண்டி வருமே என்பது மில்லை, நித்யங்களையும், நைமித்திகங்களையும் போலவே பகவானுடைய ப்ரீதிமாத்திரத்திற்காகக் காம்யகர்மங்களையும் அனுஷ்டானம்செய்வது பொருந்து மாகையினால். இப்படி விதியில்லையே என்பது மில்லை, 1 'ஓ! கார்கியே! எவன் இந்த அக்ஷரத்தைத் தெரிந்து கொள்ளாமல் அநேகம் ஆயிரம் வருஷங்கள் ஹோமங்களைச் செய்கிறானோ, யாகங்களைச் செய்கிறானோ, தபஸ்ஸைச் செய்கிறானோ, அவைகள் இவனுக்கு அழியக் கூடியவைகளாகவே ஆகின்றன' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளில் அக்ஷரம் என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற பரமாத்மாவைத் தெரிந்து கொள்ளுவதினாலும், தெரிந்து கொள்ளாமையினாலும், அதே கர்மம் நித்யமாயும் அநித்யமாயு மிருக்கிற பலங்களுக்கு ஸாதனங்களாகின்றன என்று ஶ்ருதியில் சொல்லி யிருக்கிறபடியினால். ஆகையினால் நித்யங்களையும், நைமித்திகங்களையும் போலவே காம்ய கர்மங்களின் ஸ்வரூபத்தை விட வேண்டியதில்லை—என்பது. விவாதம் வெவ்வேறு விஷயத்தைப் பற்றி யிருக்கிறதென்பது பொருந்தா தாகையினால் இவ்விடத்தில் 'த்யாக', 'ஸந்ந்யாஸ' என்னும் பதங்கள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்பது அவஶ்யமாக ஒப்புக்கொள்ள வேண்டி யிருப்பதினால் வெவ்வேறர்த்தங்களைச் சொல்லுகின்றன என்கிற ஆக்ஷேபத்திற்குப் பரிஹாரமும் ஏற்பட்டது, என்று சொல்லுகிறார்— 'இவ்விடத்தில்'*

---

1 ப்ருஹதாரண்யகம் - 5 - 8 - 10

சொல்லுகின்றன வென்பது ஒப்புக்கொள்ளப்பட்ட தென்று அறியப்படுகிறது. அப்படியே * 'நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம' என்று 'த்யாக' என்னும் பதத்தைக் கொண்டே நிஶ்சயத்தைச் சொல்லி யிருக்கிறபடியினாலும், † 'நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே । மோஹாத்தஸ்ய பரித்யாக: தாமஸ: பரிகீர்த்தித:॥', ‡ 'அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவிதம் கர்மண:

---

என்றாரம்பித்து. இத்தால் 'ஸந்ந்யாஸ, த்யாக' என்னும் பதங்கள் தனித்தனி அர்த்தங்களைச் சொல்லுகின்றன என்று ஒப்புக்கொண்டு ஒன்று காம்யகர்மங்களின் ஸ்வரூபத்தை விட்டு விடுவதைச் சொல்லுகிறது, மற்றொன்று நித்யநைமித்திக கர்மங்களின் பலங்களை விட்டுவிடுவதைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறவர்கள் நிராகரிக்கப்பட்டார்கள். இவ்விடத்தில் காம்யகர்மங்களைத் தவிர மற்றகர்மங்களின் பலங்களைவிட்டு விடுவது என்று சொல்லப்படவில்லையல்லவா ஆகையினால் சுருக்கிச் சொல்லுவதற்குக் காரண மில்லாமையினால் மூன்றுவிதமான கர்மங்களும் சேர்த்துக் கொள்ளப்படுகின்றன. அதுதான் 'நித்யம், நைமித்திகம்' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. நித்ய கர்மங்களுக்கு 4 'ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம்' என்றிவை முதலிய வசனங்களினால் பலம் உண்டென்று அறியப்படுகிறது. இந்த ஸ்லோகத்தில் 'த்யாக', 'ஸந்ந்யாஸ', இந்தப் பதங்களுக்கு அர்த்தம் வெவ்வேறு என்று சொல்லப்படுகிறது என்றுசொல்லுவதை நிராகரிப்பதற்காக ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிற தென்பதில் ஸ்பஷ்டமான இரண்டு காரணங்களைச் சொல்லுகிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. இரண்டு அர்த்தங்களைப்பற்றி இவ்விடத்தில் விசாரம்செய்வதாக இருந்தால் அவைகளில் ஒன்றைப்பற்றி நிஶ்சயம்செய்திருப்பது பொருந்தாதல்லவா என்கிற அபிப்ராயத்தினால் 'த்யாகம் என்னும் பதத்தைக்கொண்டே' என்று சொல்லப்பட்டது. 'ஒரே இடத்தில் ப்ரயோகித்திருப்பதைப் பார்க்கிறபடியினால்' என்பதின் கருத்தாவது—'நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே' என்று தடுக்கப்பட்டிருக்கிற ஸந்நியாஸமே அல்லவோ 'மோஹாத்தஸ்ய பரித்யாக:' என்று 'த்யாக' என்னும் பதத்தினால் அனுவாதம் செய்துகொண்டு தாமஸம் என்று நிந்திக்கப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில்

---

* பகவத்கீதை - 18 - 4 † பகவத்கீதை - 18-7 ‡ பகவத்கீதை 18 - 12.

4 விஷ்ணு புராணம் - 1 - 6 37-க்ருஹஸ்தாநாம் - க்ருஹஸ்தர்களுக்கு, ப்ராஜாபத்யம் - ப்ராஜாபதியின் லோகத்தை யடைவது பலம்.

ஹேதும் | ஹவத்ர த்ராமிநாம்ஹௌத்ர நதூஸவஹ்ராவிநாம் கவிக்' ||' என்றிவைகளில் ஒன்றுக் கொன்று ஒரே இடத்தில் ப்ரயோகித்திருப்பதைப் பார்க்கிறபடியினால் இவைகள் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்பது ஏற்படுகிறது என்று நிஶ்சயிக்கப்படுகிறது. 2

த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர் மநீஷிண: |
யஜ்ஞதாநதப: கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே || 3

ப - ரை] ஏகே - சில, மநீஷிண:-புத்திமான்கள், தோஷவத்-தோஷங்களைப்போலவே, அல்லது தோஷவத் - ராகம், முதலிய தோஷங்களையுடைய, கர்ம - கர்மமானது, த்யாஜ்யம் - விடத்தக்கது, இதி - என்று, ப்ராஹு:-சொன்னார்கள், அபரே - மற்றவர்கள், யஜ்ஞதாநதப:கர்ம-யஜ்ஞம், தானம், தபஸ்ஸு, முதலிய கர்மம், நத்யாஜ்யம் - விடத்தக்கதல்ல, இதி - என்று (சொன்னார்கள்). 3

---

'ஜாதூவ' முதலிய வாக்யங்களைப்போல ஒன்றோடொன்று பொருத்தமில்லாமல் போக வேண்டிவரும். இப்படியே 'ஹவத்ர த்ராமிநாம் ஹௌத்ர' என்று சொல்லப்பட்ட அர்த்தமே 'நதூ ஸவஹ்ராவிநாம் கவிக்' என்று அதற்குமாறான அர்த்தத்தைக்கொண்டு உறுதிப்படுத்தப்படுகிறது. வேறொன்றை விதித்திருப்பது மற்றொன்றில்லாமைக்கு விரோதமில்லை யல்லவா. ஆகையினால் இந்த இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகின்றனவென்று இவ்விடத்திலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது — என்பது. இவ்விடத்தில் நிஶ்சயிக்கப்படுகிறதென்பதற்கு முன், பதில் சொல்லுகிற பகவானால் என்று சேர்த்துக் கொள்ளவேண்டியது. 9

இப்படி 'காம்யாநாம்' என்கிற ஶ்லோகத்தினால் பலங்கள் விரோதமாக இருக்கின்றன என்றும் அப்படி இல்லை என்றும் சொல்லுகிறபடியினால் வாதிகளின் அபிப்ராயத்தில் விரோதம் காண்பிக்கப்பட்டது. பிறகு 'த்யாஜ்யம்தோஷவத்' என்கிற ஶ்லோகத்தினால் ஸ்வரூபத்திலேயே தோஷத்தோடு கூடியதாகையினாலும் அப்படிக்கில்லாமையினாலும் பாபம் என்றும், அப்படி இல்லை என்றும், வாதிகளின் விவாதம் காண்பிக்கப்படுகிறது. ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டிருக்கிற ஹிம்ஸையும் பொதுவாக ஶாஸ்த்ரத்தில் மறுக்கப்பட்டிருப்பதினால் தோஷம் தான் என்று ஸாங்க்யர்களினால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. அப்

பா] சில ஸாங்க்யர்களும் அவர்கள் மதத்தை அனுஸரித்த வைதிகர்களும் ராகம் முதலிய தோஷங்களைப் போலவே ஸம்ஸார பந்தத்திற்குக் காரணங்களாகையினால், அல்லது ராகம் முதலிய தோஷங்களையுடையதாகையினாலே ஸம்ஸாரபந்தத்திற்குக் காரணங்களாகையினால் யஜ்ஞம்

படியே பகவான் க்ருஷ்ணனால் 1 'த்ருஷ்டவதாநுஶ்ரவிக: ஸ ஹ்யவிஶுத்திக்ஷயாதிஶயயுக்த:' என்று சொல்லப்பட்டது. பஞ்சசிகாசார்யராலும் 2 'ஸ்வல்ப: ஸங்கர: ஸபரிஹார: ஸப்ரத்யவமர்ஷ:' என்று சொல்லப்பட்டது. ஆகையினால் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட ஹிம்ஸையும் ஜீவாத்மாவிற்குத் தோஷத்தை உண்டுபண்ணப் போகிறது, யாகத்திற்கும் உபகாரம் செய்யப்போகிறது, என்று அவர்களுடைய மதம். ஆகையினால் 'ஏகே' என்னும் பதத்தினால் பொதுவாகச் சொல்லப்பட்டிருக்கிற வாதிகள் 'தோஷவத்' என்கிற காரணத்தோடு சேர்ந்திருக்கிறதினாலும், தோஷங்களை உதாஹரணமாகச் சொல்லியிருப்பதினாலும் விஶேஷித்து இன்னாரென்று தெரிவிக்கப்படுகிறார்கள் என்று சொல்லுகிறார்—'ஸாங்க்யர்களும்' என்றாரம்பித்து. இத்தால் எல்லாக் கர்மங்களினுடையவும் ஸ்வரூபங்களை விட்டுவிடவேண்டுமென்று சொல்லுகிறவர்களின் மதமும் வேதங்களுக்குப் புறம்பானது என்று காட்டப்பட்டது. ராகம் முதலிய தோஷங்கள் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணங்கள் என்பது எல்லா ஸித்தாந்திகளாலும் ஒப்புக்கொள்ளப்பட்ட படியினால் அதை உதாஹரணமாகச் சொல்லியிருக்கிறதாகவுமாம், அன்றிக்கே கர்மமே ராகம் முதலிய தோஷத்தை யுடையது. ஆகையினால் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணம் என்றபிப்ராயமாகவுமாம். இந்த அர்த்தத்தில் 'முதலிய' என்னும் பதம் ஹிம்ஸை முதலிய தோஷத்தையும் சேர்த்துக் கொள்ளுகிறது. 'யஜ்ஞம் முதலிய எல்லாக் கர்மமும்' என்றதற்கு இவ்விடத்தில் 'கர்ம' என்னும் பதம் பொதுவாக இருந்தபோதிலும் 'யஜ்ஞதாநதப: கர்ம ந த்யாஜ்யம்' என்று மற்றொரு பக்ஷத்தில் விஶேஷித்துச் சொல்லப்பட்டிருப்பதினால் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப் பட்ட கர்மங்களைச் சொல்

1 த்ருஷ்டவத் - கண்ணால் பார்க்கப்பட்ட கார்யத்தைப்போலவே, ஆநுஶ்ரவிக:-வேதத்தில் சொல்லப்பட்ட, க்ஷயாதிசயயுக்த:-அதிக ப்ராணி ஹிம்ஸையோடு சேர்ந்த, ஸ:-அந்தக் கர்மமும், அவிசுத்த:-அபரிசுத்தமல்லவா.

2 ஸ்வல்ப:—அல்பமாகிய, ஸங்கர:-தோஷத்தின் ஸம்பந்தம், ஸப்ரத்யவமர்ச:—பின்னால் யோசிக்கப்பட்டதாய்க் கொண்டு ஸபரிஹார:—ஸுகமாய்ப் பரிஹரிக்கத்தக்கது.

முதலிய எல்லாக் கர்மமும் மோக்ஷத்தில் ஆசையுடையவனால் விடத்தக்கது என்று சொன்னார்கள். மற்றும் சில பண்டிதர்கள் யஜ்ஞம், முதலிய கர்மம் விடத்தக்கதல்ல என்று சொன்னார்கள். 3

நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே ப⁴ரதஸத்தம |
த்யாகோ³ ஹி புருஷவ்யாக்⁴ர த்ரிவித⁴ஸ்ஸம்ப்ரகீர்திதஃ || 4

ப - ரை] ப⁴ரதஸத்தம - பரதவம்ஶத்தில் உத்தமனாகிய அர்ஜுந, தத்ர - அப்படிப்பட்ட, த்யாகே - த்யாகத்தைப் பற்றிய விஷயத்தில், மே - என்னுடைய, நிஶ்சயம் - நிஶ்சயத்தை, ஶ்ருணு - கேள், புருஷவ்யாக்⁴ர -புருஷர்களுக்குள் ஶ்ரேஷ்டனாகிய அர்ஜுந, த்யாக³ஃ- த்யாகமானது, த்ரிவித⁴ஃ - மூன்றுவிதமாக, ஸம்ப்ரகீர்திதஃ ஹி - முன்னமேயே சொல்லப்பட்டதல்லவா. 4

பா] இப்படி வாதிகள் விவாதப்பட்டுக் கொண்டிருக்கிற த்யாகத்தைப்

---

னுகிறது. அதிலும் சிலவற்றைத் தனித்துச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் காம்ய கர்மங்களை மாத்திரம் சொல்லுவதாயிருந்தால் புனருக்தி வருகிறபடியினாலும் எல்லாக் கர்மங்களையும் பற்றிச் சொல்லுகிறானென்று தாத்பர்யம். எல்லோராலும் விடத்தக்கதாகஇருந்தால் அத்தை விதிக்கிற ஶாஸ்த்ரம் ப்ரமாணமல்லாமல் போகவேண்டி வருமாகையினால் 'மோக்ஷத்தில் ஆசையுடையவனால்' என்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. 'அபரே' என்னும் பதம் இவ்விடத்தில் தன்னுடைய மதத்தை யநுஸரித்தவர்களைச் சொல்லுகிறது. 'யஜ்ஞதா³நதபஃ கர்ம நத்யாஜ்யம் கார்யமேவ தத்' என்றல்லவோ தன்னுடைய மதம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'பண்டிதர்கள்' என்று. விடத்தக்கது அங்கீகரிக்கத் தகுந்தது இவைகளின் வ்யத்யாஸங்களின் உண்மையைத் தெரிந்தவர்கள் என்றர்த்தம். 3

'தத்ர' என்னும் பதம் ப்ரஸ்தாவிக்கப்படுகிற விஷயத்தில் வாதிகளின் வாதம் இருக்கிறதென்பதை அநுவதித்துக் கொண்டு அதின் வழியாக ந்யாய நிருபணம் செய்வதற்குத் தகுந்ததாகிய ஸந்தேஹிக்கப்பட்டதாயிருக்கை இருக்கிறது என்று தெரிவிக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இப்படி வாதிகள் விவாதப்பட்டுக்கொண்டிருக்கிற' என்று. 'மே நிஶ்சயம் (என்னுடைய நிஶ்சயத்தை)' என்பதில் மேலிருந்த பதம் உன்னை போகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'த்யாகத்தைப்பற்றிய நிஶ்சயத்தை

பற்றிய நிஶ்சயத்தை என்னிடத்திலிருந்து கேள். த்யாகமாவது வேதத்தில் சொல்லப்படுகிற கர்மங்களைச் செய்துகொண்டே அவைகளின் பலத்தைப் பற்றியதாயும், அந்தக் கர்மங்களைப் பற்றியதாயும், கர்த்தாவாக இருக்கையைப் பற்றியதாயும் முன்னமேயே என்றால் மூன்று விதமாகச் * * 'ஐயிவஸவ்ஹாணி கஊ்ஹாணி ஸஹுஸ்யாயூத்ம வெதஸா। நிராஶீ நிஜ்ஊஜொ ஹுஸ்வ யுயஸ் விஸதஜ்ஜ:॥' என்று சொல்லப்பட்ட தஸ்லவா. கர்மங்களினால் உண்டாக்கப்படுகிற ஸ்வர்க்கம் முதலிய பலம் எனக்கு வேண்டியதில்லை என்றது பல த்யாகம். எனக்குப் பலமுண்டாவதற்கு ஸாதனமாகையினால் இந்தக் கர்மம் என்னுடையது என்று கர்மத்தில் தன்னுடையதென்கிற அபிமானத்தை விடுதல் கர்மங்களைப் பற்றிய த்யாகம். எல்லாவற்றிற்கும் ஈஶ்வரனாகியபகவா

*என்று. 'என்னிடத்திலிருந்து' என்பதற்கு ப்ரமம்முதலிய தோஷங்களில்லாதஎன்னிடத்திலிருந்து என்றர்த்தம். 'த்யாகே மாஹி' என்பது முதலியவாக்யம் மேலேசொல்லப்போகிற ஸாத்விகத்யாகம் முதலியமூன்று விதத்தைப்பற்றியதல்ல. பின்னை எப்படி என்னில் ஸாத்விக த்யாகத்தின் உட்பிரிவைச் சொல்லுகிறது. 'ஸம்ப்ரகீர்த்தித:' என்பதற்கு முன்னமே சொல்லப்பட்டது என்கிற அர்த்தத்தைச் சொல்லுவது ஸ்வாரஸ்யமாகையினாலும், 'ஶ்ருணு' என்னும் பதத்தினால் கேட்கிறவனுக்கும் அது தெரிந்துகொள்ளப்பட்டது என்று ஏற்படுகிறபடியாலும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'த்யாகமாவது வேதத்தில் சொல்லப்படுகிற' என்றாரம்பித்து. 'ஐயிவஸவ்ஹாணி' என்கிற ஒரு ஶ்லோகம் மூன்றுவித த்யாகத்தையும் சொல்லுகிறது என்பது தீர்ந்த பொருள். இவ்விடத்தில் கர்மங்களின் ஸ்வரூபத்தையே விட்டு விடுவது என்பதையும் ஸாங்க்ய மதத்தை அனுஸரித்த ஆக்ஷேபத்தையும் நிராகரிப்பதற்காக மூன்றினுடையவும் ஸ்வரூபத்தைப் பிரித்துக்காட்டுகிறார்—'கர்மங்களினால் உண்டாக்கப்படுகிற' என்றாரம்பித்து. 'எனக்குப் பலமுண்டாவதற்கு ஸாதனமாகையினால்' என்றாரம்பிக்கும் வாக்யத்திற்குத தனனுடைய பரிக்கு ஸாதனமாகையினால் தன்னுடைய ப்ரயோஜனத்திற்காகவே பகவான் நம்மைக் கர்மத்தில் ப்ர. குப்படி செய்கிறான் என்றல்லவோ மோக்ஷத்தில் ஆசையுடையவன் அனுஸந்தானம் செய்யவேண்டுமென்று தாத்பர்யம். தனக்குக் கர்த்ருத்வம் உண்டாயிருப்பது அவனுக்கு வசப்பட்டது. அவனுடைய அனுமதியினால் உண்டானது. ஆகையினால் பகவானிடத்திலேயே*

* பகவத்கீதை - 3 - 30

னிடத்தில் கர்த்தாவா யிருக்கையை அனுஸந்தானம் செய்வதினால் தன க்குக் கர்த்ருத்வம் இல்லை என்று விடுதல் கர்த்தாவாக இருக்கையைப்பற் றிய த்யாகம். 4

**யஜ்ஞதாநதப꞉ கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவ தத் |** *

ப - ரை] **யஜ்ஞதாநதப꞉ கர்ம** - யஜ்ஞமும், தானம், தபஸ்ஸு, முதலிய கர்மம், **ந த்யாஜ்யம்** - விடத்தக் கதல்ல, **தத்** - அது, **கார்யமேவ** - செய்யத்தகுந்ததே. *

பா] யஜ்ஞமும், தானம், தபஸ்ஸு, முதலிய வேதங்களில்சொல்லப்பட்ட கர்மம் மோக்ஷத்திலாசையுடையவனால் ஒருபோழுதும் விடத்தக்கதல்ல. பின்னை எப்படி என்னவில் மரணம் அடைகிற வரையில் தினந்தோறும் அனுஷ்டிக்கத் தக்கதே. *

---

*கர்த்தாவாயிருக்கையை அனுஸந்தானம் செய்யவேண்டும். தான் கர்த்தாவாக இருக்கையை விடுவதேதெனில் அநேகம் பேர்களினால் செய்யப்படுகிற கார்யத்தில் அயலாரால் ஏவப்பட்டவனாய்த் தானும் கர்த்தாவாக இருக்கிறான் என்பதை அனுஸந்தானம் செய்வது என்று மேலே நிரூபிக்கப்படுகிறது.* 4

*இப்படி மூன்றுவிதமாக த்யாகங்களை அனுவாதம் செய்திருப்பது ஸ்வரூப த்யாகத்தை விலக்குவதற்காக என்று சொல்லப்படுகிறது— இந்தப் பாதி ஶ்லோகத்தினால். ப்ரம்மத்தை அறியவேண்டுமென்கிற ஆசை உண்டாகிறதற்கு முன் யஜ்ஞம் முதலிய கர்மங்களை அனுஷ்ட்டிக்க வேண்டும், பிறகு விட்டுவிட வேண்டுமென்று சொல்லுகிறார், என்று சிலர் வ்யாக்யானம் செய்திருக்கிறார்கள். அவர்கள் மதத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'ஒருபோழுதும்' என்று. 1 'அவன் ஆயுஸ்ஸுவரையிலும் இவ்விதமாக இருந்துகொண்டு,' என்கிற ஶ்ருதி வாக்யத்தை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'பின்னை எப்படி என்னில்' என்றாரம்பித்து. அப்படியே ஸூத்ரக்காரரும் 2 'ஆப்ரயாணாத் தத்ராபி ஹி த்ருஷ்டம்' என்று சொல்லியிருக்கிறார். 'தினந்தோறும்' என்பது ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட காலங்களைக் குறிக்கிறது.* *

---

1 *சாந்தோக்யம்* - 8 - 15 - 10.

2 *ஶாரீரகஸூத்ரம்* - 4 - 1 - 12. *ஆப்ரயாணாத் - ப்ரயாணம் புறப்படுகிற வரையிலும் (கர்மங்களைச் செய்யவேண்டும்), தத்ராபி - இந்த விஷயத்திலும், ஹி - எந்தக்காரணத்தினால், த்ருஷ்டம் - ஶ்ருதி இருக்கிறதோ.*

பா - அ] ஏனெனில்—

*யஜ்ஞதாநம் தபஶ்சைவ பாவநாநி மநீஷிணாம் ||* 5

ப - ரை] *யஜ்ஞ:* - யாகம், *தாநம்* - தானம் செய்வது, *தபஶ்சைவ* - தபஸ்ஸும், *மநீஷிணாம்* - உபாஸநம் செய்கிறவர்களுக்கு, *பாவநாநி* - பரிசுத்தம் செய்யக்கூடியவைகள். 5

பா] யஜ்ஞம், தானம், தபஸ்ஸு, முதலிய வர்ணாஶ்ரமங்களைச் சேர்ந்த கர்மங்கள் மனனம் செய்பவர்களுக்குப் பரிசுத்தியைக் கொடுக்கக் கூடிய

---

தா] *ப்ரம்ம வித்யையில் நிஷ்டையுடையவனுக்குக் கர்மம் எதற்காகச் செய்யவேண்டும்? அதற்கு ஒத்தாசையாயிருந்து உபகாரம் செய்வதற்காக என்பது இல்லை, இரண்டும் சேர்ந்து மோக்ஷத்தைக் கொடுக்கின்றன என்பது முதலிய பக்ஷங்கள் ஒப்புக்கொள்ளப்படவில்லையாகையினால். தத்வஜ்ஞானம் உண்டாவதற்காக என்பதுமில்லை, ஒத்தாசையோடு கூடிய ப்ரமாணத்தினாலேயே அது ஏற்படுகிறபடியினால். அதை த்யானம் செய்வதாகிற உபாஸநத்திற்காக என்பதும் இல்லை, அதுவும் உறுதியான ஸம்ஸ்காரத்தினால் உண்டாக்கப்படுகிறதாகையினால். மோக்ஷத்திலாசையுடையவனுக்கு வேண்டியதாயும், கர்மங்களால் உண்டாக்கக்கூடியதாயுமிருக்கிற வேறொரு ப்ரயோஜனத்தையும் நாம் அறியவில்லை. ப்ரயோஜனத்தை உத்தேசிக்காமல மூடனுக்கும் ப்ரவ்ருத்தி உண்டாகாது என்கிற அபிப்ராயத்தினால் 'ஏனெனில்' என்கிற ஆக்ஷேபத்தைக் காட்டியிருக்கிறார். 'ச' என்பது சொல்லாதவைகளையும் சேர்த்துக் கொள்ளுவதற்காக என்கிற அபிப்ராயத்தினால் 'முதலிய' என்னும் பதம். 'வர்ணாஶ்ரமங்களைச் சேர்ந்த' என்பதற்கு, நித்யங்களினுடையவும் நைமித்திகங்களினுடையவும் ஸ்வரூபத்தை விட்டுவிட வேண்டும் என்கிற பக்ஷம் நிராகரிக்கப்படுகிறது என்று தாத்பர்யம். யஜ்ஞம் முதலியவைகள் காரணத்தை வ்ருத்தி செய்து அதின் வழியாக உபகாரம் செய்கின்றன என்று தெரிவிப்பதற்காக, அப்படி இதனால் உபகாரம் செய்யக் கூடிய ஜ்ஞானத்தைச் சொல்லுகிறது, இவ்விடத்தில் 'மநீஷி' என்னும் பதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'மனனம் செய்பவர்களுக்கு' என்று. 'மநஸ: ஈஷிண: (மனதை இச்சைப் படுகிறவர்கள்)' 'மநீஷிண:' என்கிற வ்யுத்பத்தியைச் சொல்லில் அதினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லி யிருக்கிறது. ஆசார்யனிடத்தில் கேட்ட பிறகு உண்டாகக்கூடிய யுக்திகளை அனுஸரித்து மனனம் செய்வதை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'மனனமாவது உபாஸநம்' என்று. 'பாவநாநி*

வைகள். மனனமாவது உபாஸநம். மோக்ஷத்திலாசை யுடையவர்களாய் உயிரோடிருக்கும் வரையில் உபாஸநம் செய்துகொண்டிருப்பவர்களுக்கு அந்த உபாஸநம் பூர்த்தியாவதற்குத் தடங்கலாகிய பழைய கர்மங்களை நாசம் செய்யக் கூடியவைகள் என்றர்த்தம். 5

ஏதாந்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா ப²லாநி ச |
கர்தவ்யாநீதி மே பார்த² நிஶ்சிதம் மதமுத்தமம் || 6

ப - ரை] பார்த² - அர்ஜுந, ஏதாந்யபி - இந்த, கர்மாணி - கர்மங்கள், ஸங்கம் - தன்னுடையதென்கிற ஸம்பந்தத்தையும், ப²லாநி ச - பலங்களையும், த்யக்த்வா - விட்டுவிட்டு, கர்தவ்யாநி - செய்யத்தக்கவைகள், இதி - என்று, மே - என்னுடைய, நிஶ்சிதம் - நிஶ்சயிக்கப்பட்ட, உத்தமம் - உயர்ந்ததாகிய, மதம் - மதம். 6

பா] எந்தக் காரணத்தினால் உபாஸநம் செய்பவர்களுக்கு யஜ்ஞம், தா

---

உநீஷிணாம்' என்று சேர்த்துச் சொல்லி யிருப்பதினு லேற்பட்ட உபகாரம் செய்யும் விதத்தை ப்ரகாசம் செய்கிறார்—'மோக்ஷத்திலாசை யுடையவர்களாய்' என்றாரம்பித்து. 1 'ப்ராணம் புறப்படுகிற வரையில் இந்த ப்ரணவத்தை த்யானம் செய்யவேண்டும்,' என்றாரம்பித்து 1'எவன் இந்தப் பரமபுருஷனை மூன்றுமாத்திரையுடையதாகிய இந்தப்ரணவமாகிற அக்ஷரத்தினால் த்யானம்செய்வானோ' என்கிற வரையிலும் அர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தினால் உபாஸநம் உயிரோடிருக்கும் வரையில் அநுஷ்டிக்க வேண்டு மென்பதேற்பட்டது. ஆகையினால் அதின் அங்கமும் உயிரோடிருக்கும் வரையில் அநுஷ்டிக்கத் தக்கதுதான். அதுவும் 2 'அவன் ஆயுஸ்ஸுவரையில் இவ்விதமாக இருந்துகொண்டு' என்றர்த்தமுள்ள ஶ்ருதி வாக்யம் முதலியவைகளினால் சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். உபாஸனத்தைப்போல இனிச் செய்யப்போகிற பாபத்தை நிவ்ருத்தி செய்யும் தன்மை இல்லாமையினால் 'பழைய கர்மங்களை' என்னும் பதம்.

இப்படிப் பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியதென்று சொன்னதினால் 3 'த்யாஜ்யம் தோ³ஷவத்' என்று சொல்லப்பட்ட பக்ஷம் நிராகரிக்கப்பட்டது. 'நிஶ்சயம் ஶ்ருணு' என்றாரம்பித்துச் சொல்லப்பட்ட அர்த்தமே 'ஏதாந்யபி' என்கிற ஶ்லோகத்தினால் இவைகள் தோஷமில்லாதவைகள் என்று நிஶ்சயத்தை உண்டாக்குவதற்

---

1 ப்ரஶ்நோபநிஷத் - 5 - 5.  2 சாந்தோக்யம் - 8 - 15 - 10.
3 பகவத்கீதை - 18 - 3

னம், தபஸ்ஸு, முதலியவைகள் பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியவைகளோ, ஆகையினால் உபாஸநத்தைப்போலவே இந்த யஜ்ஞம், முதலிய கர்மங்களும் எனக்கு ஆராதனங்களாக அந்தக் கர்மங்களில் தன்னுடையதென்கிற எண்ணத்தையும், பலத்தையும் விட்டு விட்டு ப்ரயாணம் புறப்படுகிற வரையில் தினந்தோறும் உபாஸநம் பூர்த்தியடைவதற்காக மோக்ஷத்தில் ஆசையுடையவனால் செய்யத்தக்கவைகள் என்று என்னுடைய நிஶ்சயம் செய்யப்பட்ட உயர்ந்த மதம். 6

*நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே ।*
*மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥* 7

ப - ரை। *நியதஸ்ய* - விடத்தகாததாகிய, *கர்மண:* – கர்மத்தினுடைய, *ஸந்ந்யாஸ:* – விட்டு விடுதல், *நோபபத்யதே* - ஸம்பவிக்காது, *மோஹாத்* – அஜ்ஞானத்தினால், *தஸ்ய* - அந்தக் கர்மத்தை, *பரித்யாக:* – விட்டு விடுவது, *தாமஸ:* - தாமஸமாக, *பரிகீர்த்தித:* - சொல்லப்பட்டது. 7

---

*காக நிகமனம் செய்து உறுதிப்படுத்தப் படுகிறதாகையினால் புனருக்தி இல்லை. காரணத்தையும் அதினால் ஸாதிக்கப்படுகிறதையும் சொல்லுகின்றன என்று கீழ் ஶ்லோகத்தையும் இந்த ஶ்லோகத்தையும் சேர்க்கிறார்—'எந்தக் காரணத்தினால்' என்றாரம்பித்து. 'உபீஷிணாம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற உபாஸநத்தைப் போலவே இவைகளும் என்று தெரியப்படுத்துவதற்காக 'அபி' என்னும் பதம் என்று சொல்லுகிறார்—உபாஸநத்தைப் போலவே இந்த யஜ்ஞம், முதலிய கர்மங்களும்' என்று. பரமாத்மாவினுடைய ப்ரீதியை யுண்டாக்கி அதின் வழியாகக் கர்மங்கள் பரிசுத்தியைக் கொடுக்கின்றன என்பதைத் தெரிவிப்பதற்காகச் சொல்லுகிறார்—'எனக்கு ஆராதனங்களாக' என்று. 'ஸங்கம்' என்கிற பதத்திற்கு 'ஃபலானி' என்னும் பதத்தோடு புனருக்தியைப் பரிஹரிக்கிறார்—'தன்னுடையதென்கிற எண்ணத்தையும்' என்று. 'நிஶ்சயம் செய்யப்பட்ட' என்பதற்கு இந்த விஷயத்தில் உன்னால் மறுபடியும் ஸந்தேஹிக்கத் தக்கதல்ல என்று தாத்பர்யம். 'உயர்ந்த' என்பதற்கு எல்லாவற்றையும் அறிந்தவர்களல்லாத மற்றவர்களினுடைய இதற்கு விருத்தமாகிய ஸ்வரூபத்தையே விட்டு விடவேண்டும் என்கிற மதங்களெல்லாம் தாழ்ந்தவைகளாகையினால் அநாதரிக்கத்தக்கது என்று தாத்பர்யம்.* 6

பா] விடத்தகாததாகிய நித்யங்களும் நைமித்திகங்களுமாகியபஞ்சமஹாய ஜ்ஞம் முதலிய கர்மங்களை விட்டு விடுவது ஸம்பவிக்காது, * 'ஶரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேதகர்மண:' என்று தேஹயாத்திரையே நடக்காதாகையினால். தேஹ யாத்திரை யஜ்ஞங்களில் மிகுதியான ஆஹாரங்களைக்கொண்டு செய்யப்படுகிறதே யானால் நல்ல ஜ்ஞான முண்டாவதற்குக்காரணமாகிறது. அப்படிக்கில்லாவிடில் †'தேசவிம்ஹாஜ தே பாபா:' என்று யஜ்ஞத்தில் மிகுதியல்லாத தாகையினால் பாடங்

தா] பிறகு 'நியதஸ்ய து' என்கிற ஶ்லோகத்தினால் இதர மதங்கள் தாழ்ந்த தென்பதும் தன்னுடைய மதம் உயர்ந்ததென்பதும் விஸ்தாரமாக நிரூபிக்கப்படுகிறது. வர்ணாஶ்ரமங்களைச் சேர்ந்ததாகையினாலே விடத்தகாதவைகள் என்பது 'நியத' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டது என்று சொல்லுகிறார்—'நித்யங்களும் நைமித்திகங்களுமாகிய' என்று. 'து' என்னும் பதத்தோடு சேர்ந்த 'ஸந்ந்யாஸ' என்னும் பதம் இவ்விடத்தில் 1 'த்யாஜ்யம் தோஷவத்' என்கிற ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ஸ்வரூபத்தை விட்டு விடுவதை அநுவாதம் செய்கிறது. அதுவேயல்லவோ 'மோஹாத்தஸ்ய பரித்யாக:' என்கிற மேல் பாதி ஶ்லோகத்தினால் நிந்திக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'விட்டு விடுவது' என்று சொல்லப்பட்டது. பரிசுத்தியைக் கொடுக்கக்கூடியதாகையினால் அவஶ்யமாகச் செய்யவேண்டியதென்று சொல்லப்பட்டிருக்கும் பொழுது மறுபடியும் விடுவது ஸம்பவிக்காது என்று சொல்லியிருப்பது முன்பு விஸ்தாரமாகச் சொல்லப்பட்ட த்ருஷ்டத்திலும் அத்ருஷ்டத்திலுமுண்டாகிய தோஷங்களை ஜ்ஞாபகப்படுத்துவதற்காக என்கிற அபிப்ராயத்தினால் ஸம்பவிக்காதென்பதை விவரிக்கிறார்—'ஶரீரயாத்ராபி' என்றாரம்பித்து. கேவலமாகிய ஆஹாரம் முதலியவைகளினாலும் லோகத்தில் தேஹயாத்திரை செய்யலாமே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதனம் சொல்லுகிறார்—'தேஹயாத்திரை யஜ்ஞங்களில் மிகுதியான' என்றாரம்பித்து. 2 'பஞ்சபூதாத்மகைர்போகை: பஞ்சபூதாத்மகம் வபு:। ஆப்யாயதே' என்று ஸ்ம்ருதியில் சொல்

* பகவத்கீதை - 3-8. † பகவத்கீதை-3-13.

1 பகவத்கீதை - 18 - 3.

2 பஞ்ச பூதாத்மகை: - பஞ்ச பூதங்களினால் உண்டாக்கப்பட்ட, போகை:- போகங்களினால், பஞ்ச பூதாத்மகம் - பஞ்ச பூதங்களினாலுண்டாக்கப்படுகிற, வபு: - ஶரீரம், ஆப்யாயதே - வ்ருத்தி செய்யப்படுகிறது.

களாகிய ஆஹாரத்தினால் மனதை வ்ருத்தி செய்வதுவிபரீதமான ஜ்ஞான த்திற்குக் காரணமாகிறது. ‡ 'ஓ! ஸௌம்யனே! மனது அன்ன மயமல்ல வோ' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தின்படி ஆஹாரத்தினாலல்லவோ மனது வ்ருத்தி செய்யப்படுகிறது. $ 'ஆஹாரம் சுத்தமா யிருந்தால் மனது சுத்தமா யிருக்கிறது. மனதுசுத்தமாயிருநதால் இடைவிடாதத்யானம்உண் டாகிறது. அப்படி த்யானம் உண்டானால் ஸம்ஸார பந்தங்களெல்லாம் விட்டு விடுகிறது'என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் பரமாத்மாவை ஸா க்ஷாத்கரிப்பதாகிய ஜ்ஞானம் ஆஹாரத்தின் சுத்தியைப்பொறுத்ததுஎன்று சொல்லப்படுகிறது.ஆகையினால் மஹா யஜ்ஞங்கள் முதலியநித்ய நைமித் திகக்கர்மங்கள்ப்ரயாணம் புறப்படுகிற வரையில் ப்ரம்மஜ்ஞானத்திற்காக வே அங்கீகரிக்கத்தக்கது.ஆகையினால் அதை விட்டுவிடுவது பொருந்தாது. இப்படி ஜ்ஞானத்தை உண்டாக்குகிற கர்மத்தை இது ஸம்ஸார பந்தத்

*ல்லியிருக்கிறபடியினால் ஆஹாரத்தினால் மனது வ்ருத்தி செய்யப்படு கிறது என்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமா தானம் சொல்லுகிறார்—'ஓ! ஸௌம்யனே!' என்றாரம்பித்து. ஸாத்வி காஹங்காரத்தினால் உண்டாக்கப்படுகிற மனது அன்னத்தினால் உண் டாக்கப்படுகிறது என்பது ஸம்பவிக்காதாகையினால் 'வ்ருத்திசெய்யப்படு கிறது' என்று சொல்லப்படுகிறது. 'அப்படி த்யானம் உண்டானால்' என் றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் 1 'மனதின் பந்தம் விட்டுவிடுகிறது' என் றர்த்தமுள்ளதாயும் இதின் அர்த்தத்தையே சொல்லுகிறதாயுமிருக் கிற ஶ்ருதிவாக்யத்தினால் 'பார்க்கிறது' என்னும் பதத்தினால் விசேஷி த்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'பரமாத்மாவை ஸாக்ஷாத்கரிப்பதாகிய ஜ்ஞானம்' என்று சொல்லப்பட்டது. மிகவும் விசதமாக இருக்கிறபடியினால் ஸாக்ஷாத்காரம் என்று இவ்விடத்தில் சொல்லியிருக்கிறது என்றறியவேண்டும். ஒருதரம் அனுஷ்டிக்கப் பட்ட கர்மம் வித்யைக்கு உபகாரம் செய்கிறது என்கிற ஆக்ஷேபத் தைப் பரிஹரித்துக்கொண்டு முடிக்கிறார்—'ஆகையினால்' என்றாரம் பித்து. 'பொருந்தாது' என்பதற்குக் காரணமில்லாவிடில் கார்யம் எப் படி உண்டாகும் என்று தாத்பர்யம். இப்படிக்கீழ்ச் சொல்லியவித மாக எப்பொழுதும் விடக்கூடாததாக இருக்கை 'தஸ்ய' என்பதி னால் அனுவதிக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லு கிறார்—'இப்படி ஜ்ஞானத்தை உண்டாக்குகிற'என்றாரம்பித்து. 2 'த்யா ஜ்யம்தோஷவத்' என்று கீழே அனுவதிக்கப்பட்ட மதத்திற்கு இது*

‡ சாந்தோக்யம் - 6 - 5 - 4 $ சாந்தோக்யம் - 7 - 26 - 2
1 முண்டகம் - 2 - 2 - 8. 2 பகவத்கீதை - 18 - 3

திற்குக் காரணம் என்கிற அஜ்ஞானத்தினுல் விட்டுவிடுவேது தாமஸமே ன்று சொல்லப்பட்டது. தமோகுணத்தினுலுண்டான த்யாகம் தாமஸம். அதாவது தமோகுணத்தினுலுண்டாகிற அஜ்ஞானத்தைக் காரணமாக வுடைய த்யாகம் தமோகுணத்தினுலுண்டானது. தமோகுணமல்லவோ அஜ்ஞானத்திற்குக் காரணம் என்று ¶ 'ப்ரமாத3மோஹௌ தமஸோ ப4வதோ(அ)ஜ்ஞாநமேவ ச' என்கிற இடத்தில் சொல்லப்பட்டது. அஜ்ஞானமாவது ஜ்ஞானத்திற்கு விரோதமாகிய விபரீத ஜ்ஞானம். அப்படியே ‖ 'அத4ர்மம் த4ர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா | ஸர்வார்தா2ந்

---

தூஷணம் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறூர்—'இது ஸம்ஸாரபந் தத்திற்குக் காரணம்' என்றூரம்பித்து. அதில் உண்டாகியது என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற 'அண்' என்னும் விக்ருதியை யுடையது என்று 'தாமஸ' என்னும் பதத்திற்கு வ்யுத்பத்தி சொல்லுகிறூர்— 'தமோகுணத்தினு லுண்டான' என்று. தமோகுணத்தைச் சேர்ந்தது என்று பொதுவாக ஸம்பந்தத்தை மாத்திரம் சொல்லுகிற 'தத்3தி4த' என்னும் விக்ருதியைக்கொள்ளில் ஏற்பட்ட விசேஷத்தைச்சொல்லியிரு க்கிறதாகவுமாம். தமோகுணத்தினுலுண்டாகிற புத்தியைக்காரணமாக வுடையதாகையினுல் பரம்பரையாகத் தமோகுணத்தினு லுண்டானது என்பதைவிவரிக்கிறூர்—'அதாவது தமோகுணத்தினுலுண்டாகிற' என்றூ ரம்பித்து. இவ்விடத்தில்ஸமீபத்தில்சொல்லியிருக்கிற அஜ்ஞானத்தைக் காரணமாக வுடையதாகையினுலே தமஸ்ஸைக் காரணமாக வுடையது (அதாவது தமஸ்ஸென்பதே அஜ்ஞானம்) என்று சொல்லக் கூடிய தாக இருக்கத் தமோகுணத்தினுலுண்டாகிறஅஜ்ஞானத்தினு லுண்டா கிறது என்று சொல்லியிருக்கிறது எதற்காக என்னில் 'மோஹாத்' என்றுச் சொன்னதையே 'தாமஸ:' என்று வேறொரு பதத்தினுல் மறுபடியும்சொல்லுவதில் ப்ரயோஜனம்ஒன்றுமில்லை. அதை விடவேற திக அர்த்தத்தைச் சொல்லுவதோ வெனில் உசிதமாகவும் விரோத மில்லாமலும் இருக்கிறது என்கிற அபிப்ராயத்தினுல். 'ப்ரமாத3மோஹௌ தமஸோ ப4வதோ(அ)ஜ்ஞாநமேவ ச|' என்கிற ஶ்லோகத்தில் 'மோஹ' என்னும் பதத்தினுல் விபரீதஜ்ஞானம் தனித்துச் சொல்லப் பட்டபடியினுலே 'அஜ்ஞாந' என்னும் பதத்தினுல் ஜ்ஞானமில்லாமை சொல்லப்படுகிறது என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. இவ்விடத் திலோ வெனில் அஜ்ஞானமாவது ஜ்ஞானத்திற்கு விரோதியாகிய விப ரீதஜ்ஞானம் என்று எப்படிச் சொல்லப்படுகிறது? எனில், இவ்விதமாக

---

¶ பகவத்கீதை - 14 - 17    ‖ பகவத்கீதை - 18 - 32.

விபரீதாம்ஶ்ச ஸர்வார்த்தாந் புத்திஸ் ஸா பார்த்த தாமஸீ ||' என்று மேலேசொல்லப் படுகிறது ஆகையினால் நித்யம், நைமித்திகம், முதலிய கர்மங்களை விடுவது விபரீத ஜ்ஞானத்தைக் காரணமாகவுடையது என்றர்த்தம். 7

துஃகமித்யேவ யத் கர்ம காயக்லேஶபயாத் த்யஜேத் |
ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் || 8

ப - ரை.] யத் - எந்த, கர்ம - கர்மத்தை, துஃகம் - கஷ்டம், இதிஏவ - என்றே, காயக்லேஶபயாத் - ஶரீரத்திற்கு ஶ்ரம முண்டாகு மென்கிற பயத்தினால், த்யஜேத் - விட்டு விடுவானோ, ஸஃ - அவன், ராஜஸம் - ரஜோகுணத்தினா லுண்டாகிய, த்யாகம் - விடுதலை, க்ருத்வா - செய்து விட்டு, த்யாகபலம் - த்யாகத்தின் ப்ரயோஜனத்தை, நைவலபேத் - அடையவே மாட்டான். 8

ஸமாதானம் சொல்ல வேண்டியது—ஜ்ஞான மில்லாமை வஸ்துவை மறைப்பதற்குக் காரணமாவதும் விபரீதஜ்ஞானத்தை முன்னிட்டு என்று காட்டுவதற்காகவுமாம். ஶ்லோகத்திலிருக்கிற 'மோஹ' என்னும் பதத்திற்கு வேறொரு ப்ரயோஜனத்தை அபிப்ராயத்தில் வைத்துகொண்டு ஶ்லோகத்திலிருக்கும் 'அஜ்ஞாந' என்னும் பதமே மோஹத்தை சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காகவுமாம். தமோ குணத்தினாலுண்டாகியபுத்தி கர்மங்களை விட்டுவிடுவதற்குக் காரணமாகிறது என்பதைமேலே சொல்லப்போகிறதைக்கொண்டு விவரிக்கிறார்—'அப்படியே' என்றாரம்பித்து. தத்துவத்தைத் தெரிந்தவர்கள் விடுகிறதில்லை என்கிற அபிப்ராயத்தினால்'தாமஸம்' என்று சொல்லியிருப்பதினாலேற்பட்ட தாத்பர்யத்தைச்சொல்லிமுடிக்கிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 'நித்யம், நைமித்திகம், முதலிய' என்கிற இடத்தில் 'முதலிய' என்னும் பதத்தினால் மேலே சொல்லப்படுகிற பலங்களில் ஆசையில்லாமல் செய்யப்படுகிற காம்யகர்மங்களும் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன. 'விபரீதஜ்ஞானத்தை' என்பதினால் ஸரியாகத்தெரிந்துகொள்ளாததினால் உண்டான ராஜஸத்யாகத்தைப் பார்க்கிலும் வ்யத்யாஸத்தைக்காட்டியிருக்கிறது. 1 'அயதாவத்' என்றல்லவோ ரஜோகுணத்தினால் உண்டான புத்தியைப்பற்றி மேலே சொல்லப்படுகிறது. 7

ஆக இப்படி மிகவும் அந்தரங்கமாக இருப்பதினாலே இதுவே ஸ்வரூபம் என்று சொல்லக் கூடியதாகிய ஸ்வரூப நிரூபகங்களான ஸ்வபாவங்களி னுடையவும் வஸ்துவின் ப்ரமாணனுக்கே காரணமாகிய ஸ்வபாவங்களி னுடையவும் வ்யத்யாஸங்களில்லாமலி

1 பகவத்கீதை - 18 - 31.

பா] கர்மம் பரம்பரையாக மோக்ஷத்திற்கு ஸாதகந்தான் அப்படி யிருந்த போதிலும் கஷ்டமாகிய பணம் ஸம்பாதிப்பதினால் செய்யக் கூடியதாகை யினாலே அதிக ஶ்ரமமாக இருப்பதினாலும், ஶரீரத்திற்குக் கஷ்டத்தை உண்டுபண்ணுகிறபடியினாலும் மனதிற்கு ஶ்ரமத்தை உண்டு பண்ணு கிறது என்று நினைத்து அதிலிருந்து பயத்தினால் யோகம் நிறைவேறுவதற் காக ஜ்ஞானத்தின் அப்யாஸம் செய்வதிலேயே யத்னம் செய்யத் தக்கது என்று நினைத்து எவன் பஞ்சமஹாயஜ்ஞம் முதலிய ஆஶ்ரமத்தைச் சேர் ந்த கர்மங்களை விட்டு விடுவானோ அவன் ரஜோகுணத்தினாலுண்டான த்யாகத்தைச் செய்து, அதாவது அப்படி விடுவது உள்ளபடியல்லாதஶாஸ்

---

*ருந்தபோதிலும் நிரூபித ஸ்வரூப விஶேஷணங்களாகிய ஸ்வபாவங் களின் மாறுபாட்டம் இருப்பதினால் மேலே சொல்லப்படுகிற ரஜோ குணத்தினால் உண்டாகிய புத்தியை நினைத்துக்கொண்டு ரஜோகுணத் தினாலுண்டான த்யாகத்தை விவரிக்கிறார்—'கர்மம்' என்றாரம்பித்து. '**து:₂க₂மித்யேவ**' என்று சொல்லியிருப்பதினாலும், '**காயக்லேஶப₄யாத்**' என்று சொல்லியிருப்பதினாலும் இது அதர்மம் என்கிற அஜ் ஞானம் இவ்விடத்தில் இல்லையென்றேற்பட்டது. 1 '**அர்த்தா₂நாமர்ஜநே து:₂க₂ம்**' என்றிவை முதலியவைகளை அனுஸரித்துச் சொல்லு கிறார்—'கஷ்டமாகிய' என்றாரம்பித்து. 'மனதிற்கு ஶ்ரமத்தை உண்டு பண்ணுகிறது' என்பதற்கு ஶ்ரமமில்லாமை அல்லவோ விவேகம் முத லிய ஏழுவிதங்களாகிய ஸாமக்ரிகளின் நடுவே எண்ணப்பட்டது என் று தாத்பர்யம். அந்தரங்கத்திற்கும்பஹிரங்கத்திற்கும் விரோதம்வரும் பொழுது பஹிரங்கத்தை விட்டுவிடுவது உசிதம்என்கிற அபிப்ராயத்தி னால் சொல்லுகிறார்—'ஜ்ஞானத்தின் அப்யாஸம் செய்வதிலேயே' என்று. 2 '**யதோ₂க்தாந்யபி கர்மாணி பரிஹாய த்₃விஜோத்தம। ஆத்மஜ்ஞாநே ஶமே ச ஸ்யாத்₃வேதா₃ப்₄யாஸே ச யத்நவாந்।**' என்கிற அனுவாதம் செய்கிற வசனங்கள் இந்த எண்ணத்திற்குக் காரணம். '**ஸக்ருத்வா ராஜஸம் த்யாக₃ம்**' என்று அனுவாதம்செய்திருப்பதினால் சொல்லப்படுகிற அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'உள்ளபடியல்லாத'*

---

1 *பாரதம் - ஆரண்யபர்வம் -* 2 - 44. *அர்த்தாநாம்-பணங்களை, ஆர்ஜநே-ஸம் பாதிப்பதில், துக்கம் - கஷ்டம்.*

2 *த்விஜோத்தம - ப்ராம்மணஶ்ரேஷ்டனே, யதோக்தாந்யபி - கீழ்ச்சொல் லப்பட்டிருக்கிற, கர்மாணி - கர்மங்களையும், பரிஹாஸ்ய - விட்டுவிட்டு, ஆத்ம ஜ்ஞானே - ஆத்மாவைப்பற்றிய ஜ்ஞானத்திலும், ஶமேச - சாந்தியிலும், வேதாப் யேஶ்ச-வேதத்தை அப்யாஸம் செய்வதிலும், ப்ரயத்நவாந்-ப்ரயத்தினமுடையவ னாக, ஸ்யாத்-ஆகவேண்டும்.*

த்ரத்தின் அர்த்தம் ஆகையினால் ஜ்ஞானம் உண்டாவதாகிய த்யாகத்தின் பலத்தை அடையமாட்டான். * 'ஸ்வயமேவ ஸ்ரீஜாநாதி ஸாக்ஷிஸா வாயுஷாரஜஸீ' என்றல்லவோ மேலே சொல்லப்படுகிறது. கர்மங்கள் த்ருஷ்டத்தில் ப்ரயோஜனத்தை உண்டு பண்ணி அதின் வழியாக மன தின் தெளிவுக்குக் காரணங்களல்லவே. பின்னை எப்படி என்னில் பகவா னுடைய அனுக்ரஹத்தை உண்டுபண்ணி அதின் வழியாக வல்லவோ காரணம். 8

*காயமித்யேவ யத் கர்ம நியதம் க்ரியதேऽர்ஜுந |*
*ஸங்கம் த்யக்த்வா ஃபலம் சைவ ஸ த்யாக: ஸாத்த்விகோ மத: ||* 9

ப-ரை] **அர்ஜுந** - அர்ஜுநா, **யத்** - எந்த, **நியதம்** - அவஶ்யம் செய்யக் கூடியதாகிய, **கர்ம** – கர்மமானது, **காயமித்யேவ** - செய் யவேண்டியது தான் என்று நினைத்துக் கொண்டு, **ஸங்கம்** - இது என்னு டையது என்கிற அபிமானத்தையும், **ஃபலம் சைவ** - பலத்தையும், **த்யக்த்வா** - விட்டுவிட்டு, **க்ரியதே** - செய்யப்படுகிறதோ, **ஸ:** – அது, **ஸாத்த்விக:** – ஸத்வகுணத்தினால் உண்டாகிய, **த்யாக:** - த்யாகமாக, **மத:** - எண்ணப்பட்டது. 9

பா] நித்யங்களும் நைமித்திகங்களுமாகிய மஹா யஜ்ஞம், முதலிய வர் ணங்களுக்கும் ஆஶ்ரமங்களுக்கும் விதிக்கப்பட்ட சர்மம் எனக்கு ஆரா

*என்றாரம்பித்து. மேலே சொல்லப்போகிற ஸாத்விக த்யாகத்தின் ப்ர யோஜனம் 'த்யாகஃபலம் (த்யாகத்தின் ப்ரயோஜனத்தை)' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. ஏனெனில் முமுக்ஷுவைப்பற்றிச் சொ ல்லிக்கொண்டு வரும் ஸந்தர்ப்பமாகையினாலும், கர்மங்களை விட்டுவிட் டால் அவைகளாலுண்டாக்கப்படுகிற ஸ்வர்க்கம், முதலிய பலங்களைப் பற்றி ப்ரஸ்தாவமே இல்லை ஆகையினாலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஜ்ஞானம் உண்டாவதாகிய' என்று. கஷ்டமாக இருப் பது முதலிய காரணங்களினால் ஏற்பட்ட மனதின் ஶ்ரமத்தைப்பற்றிய ஆக்ஷேபத்தைப் பரிஹரிக்கிறார்—'கர்மங்கள்' என்றாரம்பித்து. 1 'ஃபல ஸம்ஸித்தயாஹி' என்றாரம்பித்துச் சொல்லிய க்ரமத்தினால் கர்மங் களினால் அனுக்ரஹம் உண்டாகும்படி செய்விக்கப்பட்ட பகவான் மன திற்குத் தைர்யத்தையே உண்டு பண்ணுகிறார் என்றர்த்தம்.* 8

*பிறகு 'த்யாகோ ஹி' என்றாரம்பித்துக் கீழ் ஜ்ஞாபகப் படுத்தப் பட்டதையே எடுத்து ஸத்வ குணத்தினாலுண்டாகிய உள்ளபடி யிரு*

* பகவத்கீதை-18-31. 1 த்ரமிடபாஷ்யக்காரரின் வாக்யம்.

தனமாகையினால் இதுவே ப்ரயோஜனம் என்று நினைத்துக்கொண்டு அந்தக் கர்மத்தில் என்னுடையது என்கிற அபிமானத்தையும் பலத்தையும் விட்டு விட்டு எது செய்யப்படுகிறதோ அந்த த்யாகம் ஸாத்விகமாக எண்ணப்பட்டது. அது ஸத்வகுணத்தைக் காரணமாக வுடையது, அதாவது உள்ளபடி இருக்கிற ஶாஸ்த்ரங்களின் அர்த்தத்தைப் பற்றிய ஜ்ஞானத்தைக் காரணமாக வுடையது என்றர்த்தம். ஸத்வகுணம் உள்ளபடி இருக்கிற வஸ்துவைப் பற்றிய ஜ்ஞானத்தை உண்டாக்குகிறது என்பது * 'ஸத்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' என்று கீழே சொல்லப்பட்டது. மேலேயும் † 'ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே | பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திஸ்ஸா பார்த்த ஸாத்விகீ||' என்று சொல்லப்படுகிறது. 9

ந த்வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நாநுஷஜ்ஜதே|
த்யாகீ ஸத்வஸமாவிஷ்டோ மேதாவீ சிந்நஸம்ஶய:|| 10

ப - ரை] ஸத்வஸமாவிஷ்ட: - ஸத்வகுணத்தினால் வ்யாபரிக்கப்பட்டவனும், மேதாவீ- தத்துவஜ்ஞானமுடையவனும், சிந்நஸம்ஶய:- ஸந்தேஹங்களில்லாதவனும், த்யாகீ - ஸாத்விகத்யாகம் செய்பவனு

க்கிற ஜ்ஞானத்தைக் காரணமாகவுடைய தாகையினாலே இதுவே ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டது என்பதை உறுதிப் படுத்துகிறார்— இந்த ஶ்லோகத்தினால். 1 'நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே' என்றாரம்பித்திருப்பதினால் இவ்விடத்திலும் 'நியதம்' என்னும் பதம் கர்மங்களுக்கே விஶேஷணம், என்று நினைத்து அதின் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'நித்யங்களும்' என்றாரம்பித்து. முக்கியமாக அவஶ்யம் செய்யக்கூடியதாயிருக்கை ப்ரயோஜனத்திற்கே உண்டு. அதற்குக் காரணமாகையினால் அதின் ஸாதனத்திற்கும் செய்யக்கூடியதாயிருக்கை உண்டாகிறது. ஆகையினால் ப்ரயோஜனம் அல்லாதக் கர்மம் செய்யத்தக்கதென்பது எப்படிப்பொருந்தும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'எனக்கு ஆராதனமாகையினால்' என்று. இதின் அபிப்ராயத்தில் இருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'இதுவே ப்ரயோஜனம்' என்று. கர்த்தாவாக இருக்கையை விட்டுவிடுவதும் இவ்விடத்தில் சேர்த்தறியத்தக்கது. ஆகையினாலல்லவோ மேல் ஶ்லோகத்திலிருக்கும் 'த்யாகீ' என்னும் பதம் 'ஸங்கம், பலம், கர்த்ருத்வம்' இவைகளைவிட்டவன் என்று வ்யாக்யானஞ் செய்யப்படுகிறது. 9

* பகவத்கீதை - 14 - 17. † பகவத்கீதை - 18 - 30.
1 பகவத்கீதை - 18 - 7.

யும் இருப்பவன்; அகுஶலம் - அநிஷ்டபலத்தைக் கொடுக்கக்கூடிய, கர்ம - கர்மத்தைப்பற்றி, ந த்வேஷ்டி - த்வேஷம் செய்கிறதில்லை, குஶலே - இஷ்டபலத்தைக் கொடுக்கக்கூடிய கர்மத்தில், ந அநுஷஜ்ஜதே - ஆசைப்படுவேதுமில்லை. 10

பா] இவ்விதமாக ஸத்வகுணம் நிறைந்தவனாயும், உள்ளபடி இருக்கிற தத்த்வஜ்ஞானத்தையுடையவனாயும், அதினாலேயே ஸந்தேஹமில்லாதவனாயும் கர்மங்களில் என்னுடையது என்கிற அபிமானத்தையும், பலத்தையும் கர்த்ருத்வத்தையும்விட்டவனாயுமிருப்பவன், அகுசலமான கர்மத்தில் ஆசைப்படுவேதுமில்லை. அகுசலமான கர்மமாவது அநிஷ்டபலத்தைக்

தா] ஸத்வகுணத்தினால் உண்டாகிற ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட த்யாகத்தைச் செய்துகொண் டிருப்பவனுக்கு 1 'வர்த்ததே ஸாத்விகோ பாவ: இத்யுபேக்ஷேத தத்ததா', 2 'உதாஸீநவதாஸீந:' என்றிவை முதலிய இடங்களில் ப்ரஸித்தமா யிருக்கிற விகார மில்லாமை சொல்லப்படுகிறது இந்த ஶ்லோகத்தினால். அத்தால் கீழ்ச்சொல்லிய லக்ஷணமுடைய த்யாகம் ஸத்வ குணத்தைக் காரணமாக வுடையதென்பதும் நிரூபிக்கப்பட்டதாகிறது. அதில் காரணங்களாயும் கார்யங்களாயு மிருக்கிற க்ரமத்திற்குசிதமாக ஶ்லோகத்தில் சொல்லியிருக்கிற வரிசையை மாற்றி வ்யாக்யானஞ் செய்கிறார்— 'இவ்விதமாக ஸத்வகுணம் நிறைந்தவனாயும்' என்றாரம்பித்து. 3 'தீர்தாரணாவதீ மேதா' என்று நிகண்டுவில் சொல்லப்பட் டிருக்கிறது. 'ஶ்ருதியிலும் 4 'நல்லதாகிய மேதையும் மநீஷையும் முன்னிருந்த வஸ்துக்களையும் மேல் வரப்போகிற வஸ்துக்களையும் தெரிந்து கொள்ளுவதற்காக என்னை அடைய வேண்டும்'என்றர்த்தமுள்ளவாக்யம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினால்ஆசார்யனால் உபதேசம்செய்யப்பட்ட அர்த்தங்களில் ஒன்றும்மறவாமையினாலும்,வேறொரு அர்த்தம்கலக்காமையினாலும்ஏற்பட்டதைச் சொல்லுகிறார்—'உள்ளபடியே இருக்கிற' என்றாரம்பித்து. இவ்விடத்தில் சுபம், அசுபம் என்னுமர்த்தத்தைச்சொல்லுகிற 'குஶலம்'' அகுஶலம்' என்கிற பதங்களினால் மேலேதடுக்கப்போகிற த்வே

1 ஸாத்விக: பாவ: - ஸத்வகுணம் மேலிட்ட ஸ்வபாவம், வர்த்ததே - தன் கார்யத்தைச் செய்கிறது, இதி - என்று, தத் - அதை, ததா - அப்பொழுது, உபேக்ஷேத - உபேக்ஷை செய்யவேண்டும்.

2 பகவத்கீதை - 14 - 23.

3 நாமலிங்கானு ஶாஸநம் - 1 வது காண்டம்.

4 ஆரண்யகம் - 5 - 42

கொடுக்கக்கூடியது. குசலமான கர்மமாவது இஷ்டமாகிய ஸ்வர்க்கம், பிள்ளை, பசு, அன்னம் முதலிய பலங்களைக்கொடுக்கக்கூடியது எல்லாக் கர்மங்களினிடத்திலும் என்னுடையது என்கிற அபிமானம் இல்லாமையினுலும், ப்ரம்மத்தைத் தவிர மற்றெல்லாப் பலங்களையும் விட்டவனுன படியினுலும், கர்த்ருத்வத்தை விட்டவனுனபடியினுலும் அந்தக் கர்மங்களைச் செய்துகொண்டிருக்கும்போழுதே அவைகளிடத்தில் ப்ரீதியையும் த்வேஷத்தையும் செய்கிறதில்லை. அநிஷ்ட பலத்தைக் கொடுக்கக்கூடிய பாப கர்மமாவது இவ்விடத்தில் அஜ்ஞாக்கிரதையினுல் செய்யப்பட்

---

ஷத்திற்கும் ஆசைக்கும் காரணங்களை அனுவாதம் செய்திருக்கிறது என்கிற அபிப்ராயத்தினுல் அநிஷ்ட பலத்தைக் கொடுக்கக்கூடியது என்பது முதலியது சொல்லப்பட்டிருக்கிறது. 'த்யாகீ' என்னும் பதத்தினுல் சொல்லப்பட்ட த்யாகம் காரணம் என்பதை விவரிக்கிறுர் —'எல்லாக் கர்மங்களிடத்திலும்' என்றுரம்பித்து. எப்படி அயலானுடையதாயும் அயலானுல் செய்யப்படுகிறதாயு மிருக்கிற கர்மத்தில் தனக்கு ஸம்பந்தமில்லாமையினுலே அது நமக்குப்பாதகமுமல்ல ஸாதகமுமல்ல என்கிற நிஶ்சயத்தினுல் த்வேஷம் முதலியவைகள் உண்டாவதில்லையோ அதைப்போலவே இவ்விடத்திலும்என்றபிப்ராயம். அவைகளை அனுஷ்ட்டானம் செய்யாமலிருக்கும்பொழுது அவைகளிடத்தில் த்வேஷமும் ப்ரீதியும் உண்டாவதற்கு ப்ரஸ்தாவமே இல்லையாகையினுல் 'செய்துகொண்டிருக்கும் போழுதே' என்று சொல்லப்பட்டது. 'கூமாஜெ நாநுஷஜூதெ' என்பது உசிதம்தான், ஏனெனில் ஸ்வர்க்கம் முதலியவைகளில் ஆசையில்லாமல் காம்ய கர்மங்களை அனுஷ்ட்டித்தாலும் அந்தப்பலங்களுண்டாகாதென்று ஶாஸ்த்ரங்களில் சொல்லியிருக்கிறபடியினுல். 'நஜெஷ்வி அகூமாஜம் கூஉலு' என்பதோவெனில் விருத்தமாயிருக்கிறது, பலத்தில் ஆசையில்லாமலிருக்கும் பொழுதே ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்ட கர்மங்களுக்குப் பலம் உண்டாகிறபடியினுல், அப்படிக்கில்லாவிடில் ஒரு இடத்திலும் அந்தக் கர்மங்கள் தோஷமில்லாமல் போகவேண்டிவரும். நரகம், முதலியது ஒருவனுக்கும் இஷ்டமாக இருக்காதல்லவா? இப்படியே த்ருஷ்டத்தில் தோஷத்திற்குக் காரணங்களான கர்மங்களில் த்வேஷமில்லாமலிருப்பது யுக்தமல்ல என்கிற ஆக்ஷேபத்திற்கு இது 'அஜ்ஞாக்கிரதையினுல் செய்யப்பட்டது' என்று பரிஹாரம் சொல்லப்பட்டது. சில அதிகாரிக்குப் புத்தி பூர்வமாகச் செய்யப்படுகிற பாபகர்மங்களினுலும் பலம் உண்டாகிறதில்லையென்று எணிருக்கக்கூடாது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமா

டது சொல்லப்படுகிறது. * 'கெட்ட நடத்தையிலிருந்து ஓயாதவனல்லாமலும் ஶாந்தியை யடையாதவனல்லாமலும் ஸாவதான மில்லாதவனாக வல்லாமலும் ஶாந்தியையடையாத மனதையுடையவனல்லாமலும் இருந்து கொண்டே ஜ்ஞானத்தினால் இந்தப் பரமாத்மாவை அடைவான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யத்தில் கெட்ட நடத்தையி லிருந்து ஓயாமலிருப்பது ஜ்ஞானம் உண்டாவதற்கு விரோதி என்று சொல்லியிருக்கிறபடியினால் ஆகையினால் கர்மத்தில் கர்த்ருத்வம், என்னுடைய தென்கிற அபிமானம், பலம் இவைகளை விடுவது தான் ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுகிற த்யாகம். ஸ்வரூபத்தை விட்டுவிடுவதல்ல. 10

பா - அ] இதையே சொல்லுகிறார்—

*𑌨 𑌹𑌿 𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂 𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑍍𑌯𑌶𑍇𑌷𑌤𑌃 ।*
*𑌯𑌸𑍍𑌤𑍁 𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌸 𑌤𑍍𑌯𑌾𑌗𑍀𑌤𑍍𑌯𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇 ॥* 11

ப - ரை] ***𑌦𑍇𑌹𑌭𑍃𑌤𑌾*** - தேஹத்தோடிருப்பவனால், ***𑌕𑌰𑍍𑌮𑌾𑌣𑌿*** - கர்மங்களை, ***𑌅𑌶𑍇𑌷𑌤𑌃*** - முழுமையும், ***𑌤𑍍𑌯𑌕𑍍𑌤𑍁𑌂*** - விட, ***𑌨 𑌶𑌕𑍍𑌯𑌂 𑌹𑌿*** - முடியாதல்லவா, ***𑌯𑌸𑍍𑌤𑍁*** - எவன், ***𑌕𑌰𑍍𑌮𑌫𑌲𑌤𑍍𑌯𑌾𑌗𑍀*** - கர்மங்களின் பலங்களை விட்டவனோ, ***𑌸𑌃*** - அவன், ***𑌤𑍍𑌯𑌾𑌗𑍀 𑌇𑌤𑌿*** - த்யாகி என்று, ***𑌅𑌭𑌿𑌧𑍀𑌯𑌤𑍇*** - சொல்லப்படுகிறான். 11

பா] ஶரீரத்தைத் தரித்துக்கொண்டிருப்பவனால் கர்மங்களை முழுமை

---

*தானம் சொல்லுகிறார்—'கெட்ட நடத்தையிலிருந்து' என்றாரம்பித்து. இந்த ஶ்லோகத்தின் அர்த்தத்தைக்கீழ்ப்ரஸ்தாவித்த அர்த்தத்திற்குக் காரணமாகச் சேர்த்துக்கொண்டு முக்யமாக ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்தை நிகமனம் செய்கிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து.* 10

தா] 1'*நியதஸ்ய*' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டிருக்கிற யுக்தியை விவரித்துக்கொண்டு பலத்தை விட்டு விடுவதை உபலக்ஷணமாகச் சொல்லிக்கொண்டு அதினால் முன்புசொல்லப்பட்ட மூன்று விதமான ஸாத்விகத்யாகம் இந்த ஶ்லோகத்தினால் நிகமனம்செய்யப்படுகிறது என்று சொல்லுகிறார்—'இதையே சொல்லுகிறார்' என்று. இவ்விடத்தில் '*தேஹப்ருதா*' என்று எல்லா ப்ராணிகளையும் சொல்லி யிருக்கிறதல்ல, உபயோக மில்லை யாகையினால். ஆகையினால் கர்மங்களின் ஸ்வரூபங்களை விட்டுவிட முடியாமைக்குக் காரணமாகிய, ஸமாஸத்தினாலேற்படுகிற அர்த்தம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶரீரத்தைத் தரித்துக்கொண்டிருப்பவனால்' என்று '*ஶக்யம்*'

---

* கடோபநிஷத் - 2 - 28. 1 பகவத்கீதை - 18 - 7.

யும் விட்டுவிட முடியாது. தேஹத்தைத் தரிப்பதற்காக வேண்டியவைகளாகிய ஸாப்பிடுவது, தண்ணீர் குடிப்பது முதலியவைகளும், அதைச் சேர்ந்தவைகளாகிய கர்மங்களும் விடமுடியாதாகையினால். அதற்காகப் பஞ்சமஹா யஜ்ஞம், முதலியவைகளை அனுஷ்ட்டிப்பது விட முடியாது. எவன் பஞ்சமஹா யஜ்ஞம், முதலிய அந்தக் கர்மங்களில் அவைகளின் பலத்தை விட்டவனோ அவனே * 'சிலர் த்யாகத்தினால் மோக்ஷத்தை யடைந்தார்கள்,' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலிய ஶாஸ்த்ரங்களில் த்யாகீ என்று சொல்லப்படுகிறான். 'ஃபலத்யாகீ (பலத்தைவிட்டவன்)' என்பது பலம், கர்த்ருத்வம், இந்தக் கர்மம் என்னுடையதென்கிற அபிமானம், இவைகளை விட்டவன் என்று குறிப்பதற்காக, † 'த்ரிவிதஸ் ஸம் ப்ரகீர்த்தித:' என்று முன்னமேயே சொல்லி யிருப்பதினால். 11

பா-அ] அக்னி ஹோத்ரம், தர்சபூர்ணமாஸம், ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களும், பஞ்சமஹாயஜ்ஞம் முதலிய கர்மங்களும் ஸ்வர்க்கம்

---

*என்பது த்யாகத்தைச் சொல்லுகிறபடியினால் நபும்ஸகலிங்கமாயும் ஒருமையாயும் இருக்கிறது. மொத்தமாகச் சொல்லப்படுகிறதினாலாகவுமாம். தேஹத்தைத் தரிப்பதைக் காரணமாகவுடைய முடியாமையை விவரிக்கிறார்—'தேஹத்தைத் தரிப்பதற்காக' என்றாரம்பித்து. அதைச் சேர்ந்தவைகளாகிய லௌகிகங்களான பணம் ஸம்பாதிப்பது முதலியது இருக்கட்டும். ஶாஸ்த்ரங்களினால் விதிக்கப்படுகிற கர்மங்களினால் என்ன ப்ரயோஜனம்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதற்காகப் பஞ்சமஹாயஜ்ஞம், முதலியவைகளை' என்றாரம்பித்து. ஶ்ருதிவாக்யத்தின் ஸ்வாரஸ்யத்தைக் காரணமாகவுடைய ஸ்வரூபத்தை விட்டுவிடவேண்டுமென்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காக 'யஸ்து' என்றாரம்பித்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'எவன்' என்றாரம்பித்து. 'அபிதீயதே (சொல்லப்படுகிறான்)' என்பதற்கு எவர்களால் என்று சொல்லவேண்டியதவஶ்யமாகையினால் அந்தக் கேள்விக்குப் பதில் சொல்லவேண்டியதற்காக 'சிலர்' என்றாரம்பித்து ஶ்ருதிவாக்யத்தை எடுத்திருக்கிறது. கீழே ஆரம்பித்திருப்பதை நிகமனம் செய்கிறதாகையினால் மற்றவைகளையும் குறிக்கிறதென்பதை உறுதிப்படுத்துகிறார்—'த்ரிவித:' என்றாரம்பித்து.* 11

---

* *தைத்திரீயம், நாராயணம்* - 10 - 21.

† *பகவத்கீதை* - 18 - 4.

முதலிய பலங்களோடு சேர்ந்தவைகளாகவே ஶாஸ்த்ரங்களினால் விதிக்கப்படுகின்றன. நித்யங்களுக்கும் நைமித்திகங்களுக்கும் * 'ப்ராஜாபத்யம் க்ருஹஸ்தாநாம்' என்பவை முதலிய பலங்களோடு சேர்ந்தே விதி ஏற்பட்டிருக்கிறது. ஆகையினால் அந்தந்தப் பலங்களுக்கு ஸாதனங்களாயிருக்கையை ஸ்வபாவமாகவுடையவைகளாக ஏற்பட்ட கர்மங்களை அனுஷ்ட்டானம் செய்தால் விதை விதைப்பதைப் போலவே பலத்தில் ஆசையில்லாதவனுக்கும் இஷ்டம், அநிஷ்டங்களாகிய பலங்களோடு ஸம்பந்தம் விடத்தக்கதல்ல. ஆகையினால் மோக்ஷத்திற்கு விரோதியான பலங்களையுடையதாகையினால் மோக்ஷத்தில் ஆசையுடையவனால் கர்மம் அனுஷ்ட்டிக்கத்தக்கதல்ல என்று ஆக்ஷேபம் வருகிறபடியினால் அதற்குப்பதில் சொல்லுகிறார்—

அநிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவிதம் கர்மண: ஃபலம் |
பவத்யத்யாகிநாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித் ||

---

தா] லோகத்திலேற்பட்ட பலங்களுக்கு ஸாதனங்களாகிய கர்மங்களைப் போலவேயல்லவோ வேதங்களில் சொல்லப்பட்ட கர்மங்களும் பலங்களுக்கு ஸாதனங்களாகின்றன என்பதேற்படுத்தப் படுகிறது. லோகத்திலேற்பட்ட கர்மங்களோவெனில் அதின் பலங்களில் ஆசை இல்லாமல் போனபோதிலும் தங்கள் சக்திக்குத் தகுந்தபடி பலித்து விடுகின்றன. இப்படியே வேதங்களிலேற்பட்ட கர்மங்களினுமிருக்க வேண்டும் என்கிற அபிப்ராயத்தினால் ஆக்ஷேபிக்கிறார்— 'அக்னிஹோத்ரம்' என்றாரம்பித்து. அக்னிஹோத்ரம், மஹா யஜ்ஞம் முதலியவைகள் வெவ்வேறு அதிகாரங்களில் உபயோகப்படுத்தப்பட்டிருப்பதினால் ஆஶ்ரமங்களுக்கு அங்கமாகவும், ஸ்வர்க்கம் முதலியவைகளுக்கு ஸாதனங்களாகவும் இருப்பதில் விரோதமில்லையாகையினால் ஸ்வர்க்கம் முதலிய பலங்களுக்காக அனுஷ்ட்டானம் செய்ய வேண்டியதில்லை. ஆஶ்ரமங்களுக்கு அங்கமாக அனுஷ்ட்டானம் செய்தால் என்ன விரோதம் வரும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—நித்யங்களுக்கும் நைமித்திகங்களுக்கும்' என்றாரம்பித்து. விதை விதைப்பதை உதாஹரணமாகச் சொல்லியிருப்பதினால் அசுபம் என்று சொல்லப்பட்ட கர்மம் புத்தி பூர்வகமல்லாமல் செய்யப்பட்டிருந்த போதிலும் ஸம்ஸார பந்தத்திற்குக் காரணமாகிறது என்பது காட்டப்பட்டது. பூமியில் அஜாக்கிரதையால் விழுந்த வீதை பலிக்கிறதில்லை என்பதில்லையல்லவா. ஆகையினால் அம்ருதத்தின் ரஸத்தை

* மனுஸம்ருதி - க்ருஹஸ்தாநாம் - க்ருஹஸ்தாஶ்ரமத்திலிருப்பவர்களுக்கு ப்ராஜாபத்யம் - ப்ராஜாபதியினுடைய லோகம் (கிடைக்கிறது).

ப - ரை] அநிஷ்டம் - அநிஷ்டமானதும், இஷ்டம் – இஷ்டமானதும், மிஶ்ரம் ச - கலந்ததுமாகிய, த்ரிவிதம் - மூன்றுவிதமாகிய, கர்மண: கர்மத்தினுடைய, ஃபலம் - ப்ரயோஜனம், ப்ரேத்ய - கர்மங்களை அனுஷ்ட்டித்தபிறகு, அத்யாகிநாம் - த்யாகம் செய்யாதவர்களுக்கு, பவதி – உண்டாகிறது, ஸந்ந்யாஸிநாம் - த்யாகம் செய்தவர்களுக்கு, க்வசித் – ஒருபோழுதும், ந - (உண்டாகிறது) இல்லை. 12

பா] அநிஷ்டம் – நரகம் முதலிய பலம், இஷ்டம் - ஸ்வர்க்கம் முதலியது, மிஶ்ரம் - அநிஷ்டத்தோடுசேர்ந்த பிள்ளை, பசு, அன்னம் முதலியது, இவை மூன்றுவிதமாகிய கர்மத்தினுடைய பலம் கர்த்ருத்வத்தையும், என்னுடையதென்கிற எண்ணத்தையும், பலத்தையும், விடாதவர்களுக்குக் கர்மங்களை அனுஷ்ட்டித்த பிறகு உண்டாகிறது. கர்த்ருத்வம் முதலியவைகளை விட்டவர்களுக்கோவெனில் ஒரு ஸமயத்திலும் மோ

*ன விஷமாதத்தின விதைதயை விதைபபதறகு ஸமமா யிரு*

*கர்ம கலாபங்களை அனுஷ்ட்டித்தல் என்கிற அபிப்ராயத்தினால் ஏற்பட்டதாகிய ஸ்வரூபத்தையே விட்டுவிட வேண்டும் என்கிற முடிவைச் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. அநிஷ்டம், முதலாக மூன்றுவிதமாகச் சொல்லியிருப்பது மோக்ஷத்தில் ஆசையில்லாதவனைப் பற்றியது, மோக்ஷத்தில் ஆசையுடையவனுக்கு ஸ்வர்க்கம் முதலியதும் அநிஷ்டமாகையினால் என்கிற அபிப்ராயத்தினால் 'நரகம் ஸ்வர்க்கம்' முதலியவைகளைச் சொல்லியிருக்கிறது. காரிரீ முதலிய யாகங்களினால் உண்டாக்கப்படுகிற மழை முதலிய பலங்கள் உயிரோடிருக்கும் பொழுதே உண்டாகிறதென்று ஏற்பட்டிருக்கிற படியினால் 'ப்ரேத்ய (மரணமடைந்த பிறகு)' என்பது மற்றக்காலத்தையும் குறிப்பதற்காக. அப்படிச் சொல்லாவிடில் த்யாகம் செய்தவர்களுக்கும் அந்தச் ஶரீரத்தில் இந்த மூன்றுவிதமான பலங்களும் உண்டாகிறதென்று ஒப்புக்கொள்ளப்பட்டதாகும். மேலும் 'ந து ஸந்ந்யாஸிநாம் க்வசித்' என்று இதற்கு எதிர் நடையாகச் சொல்லியிருக்கும் இடத்தில் இந்தச் ஶரீரத்திலும் பலமுண்டாகாதென்று தடுத்திருப்பதினாலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'கர்மங்களை அனுஷ்டித்த பிறகு' என்று. இவ்விடத்திலும் அநிஷ்ட பலங்கள் உண்டாவதில்லை என்பது முன்பு சொல்லிய விதமாகப் புத்தி பூர்வகமில்லாமல் செய்யப்பட்ட கர்மங்களைப் பற்றியதென்று நினைக்க வேண்டியது. கீழ்ச் சொன்ன ஆக்ஷேபத்திற்கு ப்ரதிஜ்ஞையாக மாத்திரம் ஸமாதானம் சொல்லப்படுகிறதே ஒழிய ஒருவித யுக்தியைக் கொ*

க்ஷத்திற்கு விரோதியாகிய பலம் உண்டாகிறதில்லை. இத்தால் சொல்லப்பட்டதாவது அக்னிஹோத்ரம், மஹாயஜ்ஞம், முதலியவைகள் நித்ய கர்மங்கள் தான். அப்படியிருந்தபோதிலும் உயிரோடிருப்பதாகிய அதிகாரத்திலும் பலங்களில் ஆசையாகிற அதிகாரத்திலும் உபயோகப்படுத்தப் படுகிறபடியினால் எப்படி விரோதமில்லையோ அப்படியே மோக்ஷத்தில் ஆசையுடையவன் என்கிற அதிகாரத்திலும் உபயோகப்படுத்துகிறபடியினால் பரிஹரிக்கப்படுகிறது. மோக்ஷத்தில் உபயோகமும் *'அப்படிப்பட்ட இந்தப் பரமாத்மாவை ப்ராம்மணர்கள் வேதங்களை ப்ரவசனம் செய்வதினாலும், யாகத்தினாலும், தானத்தினாலும், தபஸ்ஸினாலும், உபவாஸம்

---

*ண்டும் அது ஸ்தாபிக்கப்படவில்லையே என்றாக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இத்தால் சொல்லப்பட்டதாவது' என்றாரம்பித்து. வெவ்வேறாக உபயோகிக்கப்பட்டிருப்பதாவது இந்தக் கர்மங்களை அந்தந்தப்பலங்களுக்காக உபயோகப்படுத்துகிற ஶ்ருதிவாக்யம் வெவ்வேறாக இருப்பதினால் என்றறிய வேண்டும். இப்படி வெவ்வேறாக உபயோகப் படுத்தப்பட்டிருப்பதினாலே ஜ்யோதிஷ்டோமம் முதலியவைகள் பாபத்தைப் போக்கடிப்பது முதலிய அநேக பலங்களுக்கு ஸாதனங்கள் என்பது ஏற்பட்டது. 'பரிஹரிக்கப்படுகிறது' என்பதற்கு முன் 'ஒன்றுக் கொன்று விருத்தங்களான பலங்களை யுடையது என்கிற ஆக்ஷேபம்' என்று சேர்த்துக்கொள்ள வேண்டியது. 1 'அப்படிப்பட்ட பகவானை இவ்விதமாகத் தெரிந்துகொண்டவன் இந்த ஜன்மத்திலேயே மோக்ஷமடைந்தவனாகிறான், வேறு வழியில்லை' என்று நியமித்துச் சொல்லியிருப்பதினால் ஜ்ஞானமே மோக்ஷத்திற்கு ஸாதனமாக விதிக்கப்படுகிறது. கர்மமோ வெனில் விலக்கப்படுகிறது. ஆகையினால் மோக்ஷத்தில் ஆசையுடையவன் என்கிற அதிகாரத்தில் உபயோகப்படுத்தப் படுகிறது என்று சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? என்று இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'மோக்ஷத்தில் உபயோகமும்' என்றாரம்பித்து. கத்தியினால் வெட்ட விரும்புகிறான், குதிரையினால் போக விரும்புகிறான், என்றிவைமுதலிய ப்ரயோகங்களிலே போல வஸ்துவின் ஸ்வபாவத்தினால் இவ்விடத்திலும் விரும்பப் படுகிற தாதுவின் அர்த்தத்திற்குக் காரணமாக அந்வயிக்கிறது. ஆகையினால் ஜ்ஞானத்தை உண்டாக்கி அதின் வழியாகப் பரம்பரையாக ஸாதனமாகையினால் மோக்ஷத்தில் உபயோகப் படுத்தப் படுகிறது நேரில் ஸாதனமல்ல என்கிற தாத்பர்யத்தினால் 'வேற*

---

* ப்ராஹதாரண்யகம் - 6 - 4 - 22.

1 புருஷஸூக்தம்.

முதலியதினாலும் அறியவேண்டுமென்று விரும்புகிறார்கள்' என்றர்த்த முள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளினாலேற்பட்டது—என்பது. 12

பா - அ] ஆக இப்படிக் கர்மங்களைச் செய்துகொண்டிருக்கும்பொழுதே அவைகளில் கர்த்ருத்வம், முதலியவைகளை விட்டுவிடவேண்டுமென்பது தான் ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்ட ஸந்யாஸம். அதுவேதான் த்யாகம் என்று சொல்லப்பட்டது. இப்பொழுது அந்தர்யாமியாயும், பகவானாயுமிருக்கிற புருஷோத்தமனிடத்தில் கர்த்ருத்வத்தை அநுஸந்தானம் செய்வதினால் தன்னிடத்தில் கர்த்தாவல்ல என்பதை அநுஸந்தானம் செய்யும் விதத்தைச் சொல்லுகிறார். இதினாலேயே பலம், கர்மம், இவை

---

*வழியில்லை,' என்றர்த்த முள்ள வாக்யத்தினால் மறுக்கப்பட்டிருக்கிறது என்று தாத்பர்யம்.* 12

*இப்படிக் கேள்வியின் அபிப்ராயத்திலேற்பட்ட அர்த்தத்திற்கு வேறொரு விதமாகப் பதில் சொல்ல ஆரம்பிக்கிறார் என்கிற அபிப்ராயத்தினால் அதற்கு ஸங்கதி சொல்லுவதற்காகக் கீழ்ச்சொல்லப்பட்ட பாகத்தை நிகமனம் செய்வதைப்போல அநுவாதம் செய்கிறார்— 'ஆக இப்படி' என்றாரம்பித்து. 'ஆக' என்பதற்கு ஸ்வரூபத்தையே விட்டுவிடுவது தாமஸமாகையினால் என்றர்த்தம். 'இப்படி' என்பதற்கு வர்ணாஶ்ரமங்களுக்கு ஏற்பட்ட கர்மம் விடமுடியாதாகையினால் என றர்த்தம். அந்த ஶ்லோகத்திலேயே* **'ஹவதூதூாமிநாం வெுதூ ந தூ ஸஹூாவிநாం கவிசு'** *என்று* **'சுதூாம'** *என்னும் பதத் திற்கு எதிர்தடையான அர்த்தத்தைச் சொல்லும்பொழுது* **'ஸஹூாஸ'** *என்னும் பதத்தினால்சொல்லியிருப்பதினாலே* **'தூாமం', 'ஸஹூாஸం'** *இவை வெவ்வேறென்கிற ஆக்ஷேபமும் பரிஹரிக்கப்பட்டது என்று சொல்லுகிறார்—*'அதுவே தான் த்யாகம் என்று சொல்லப்பட்டது' *என்று.* **'சுநிஷூவிஷூ'** *என்கிற ஶ்லோகத்திற்குப் பிறகு ஐந்து காரணங்களைச் சொல்லி யிருப்பதற்கு ஸங்கதி என்ன என்கிற ஆக்ஷேபத் திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—* 'இப்பொழுது' *என்றாரம்பித்து. கேள்வியின் விஷயத்தைப் பற்றி நேராகப்பதில் சொன்ன பிறகு என் றர்த்தம்.* 'பகவானாயு மிருக்கிறபுருஷோத்தமனிடத்தில்' *என்கிற இரண்டு பதங்களினாலும் முன்பு சொல்லப்பட்ட விதமாக எல்லாவற்றிற்கும் அந்தர்யாமியாக இருப்பவனுக்கு அவைகளிடத்தி லிருக்கும் தோஷங்களும் அவைகளோடு ஸம்பந்தப்படுவதினால் உண்டாகிய தோஷங்களும் இல்லை என்று தெரிவிக்கப்படுகிறது.* 'விதத்தைச் சொல்லுகிறார்' *என்பதினால் மூன்றாவது அத்யாயம் முதற்கொண்டு தொடர்ந்து*

களிலும் என்னுடையது என்கிற அபிமானத்தை விட்டுவிடுவது ஏற்படு கிறது என்கிற அபிப்ராயத்தினுல் பரமாத்மா தனக்கு ஶேஷங்களாகிய ஜீவாத்மாவைக்கொண்டு தனக்குச்ஶேஷங்களாகிய ஶரீரம், இந்த்ரியம், ப்ராணன், இவைகளினுல் தன்னுடைய லீலையாகிற ப்ரயோஜனத் திற்காக ஆரம்பிக்கிருனல்லவா. ஆகையினுல் ஜீவாத்மாவிற்கு உண் டாகிற பசி நிவ்ருத்திப்பது, முதலிய பலமும் அதற்கு ஸாதனமாகிய கர்ம மும் பரமாத்மாவினுடையதே—

**பஞ்சைதாநி மஹாபாஹோ காரணாநி நிபோத மே|**
**ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தாநி ஸித்தயே ஸர்வகர்மணாம்||**

---

*கொண்டிருக்கிற கர்த்தாவல்ல என்கிற அனுஸந்தானத்தைப் பற்றி இவ்விடத்திலேயே காரணங்களோடு கூட உள்ளபடியே இருக்கிற ஸ்வ ரூபத்தை நிரூபித்திருக்கிறது என்று காட்டப்பட்டது. கீழ் ஆரம்பிவிக் கப்பட்டிருக்கிற மூன்று விதமான த்யாகங்களுக்குள் ஒன்றின் ஸ்வரூப த்தை நிரூபிக்கிறது என்று ஸங்கதி அறியவும். மூன்று விதமான த்யா கமும் ஸாத்விக மென்று சொல்லப்பட்டிருக்க எதற்காக கர்த்ருத்வ த்யாகத்தின் விதத்தை மாத்திரம் நிரூபித்திருக்கிறது என்கிற ஆக்ஷே பத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'இதிலேயே' என்ருரம்பித்து. 'என்கிற' என்னும் பதம் இவ்விடத்தில் காரணத்தைச் சொல்லுகிறது. ருத்விக் முதலியவர்கள் கர்த்தாவாக இருந்தபோதிலும் யஜமானனுக்கு அந்தக் கர்மத்தினிடத்திலும் அதின் பலத்தினிடத்திலும் என்னு டையது என்கிற அபிமானம் காணப்படுகிறது. அப்படியே ஏன் இந்த ஜீவாத்மாவிற்கும் இருக்கக் கூடாது. ஆகையினுல் கர்த்தாவாக இருக் கையை விட்ட மாத்திரத்தினுல் கர்மத்தினிடத்திலும் அதின் பலத்தி னிடத்திலும் என்னுடைய தென்கிற புத்தி எப்படி நிவ்ருத்திக்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'பரமாத்மா' என்ருரம்பித்து. 'அல்லவா' என்பது ப்ரமாணங்களில் ப்ரஸித்தமாக இருப்பதைக்காட்டுகிறது.* [1] *'த்வம் ந்யஞ்சத்பி: உதஞ்சத்பி: கர்மஸூத்ரோபபாதிதை:| ஹரே விஹரஸி க்ரீடா கந்துகைரிவ*

---

*1 ஹரே - விஷ்ணுவே, த்வம் - நீர், ந்யஞ்சத்பி:—கீழே விழுகிறதுகளாக கவும், உதஞ்சத்பி:—மேலே கிளம்புகிறதாகவுமிருக்கிற, கர்மஸூத்ரோபபாதி தை:—கர்மங்களாகிற கயிறுகளினுல் கட்டப்பட்டிருக்கிற, க்ரீடாகந்துகைரிவ— விளையாடுவதற்காக ஏற்பட்ட பந்துகள்போலிருக்கிற, ஜந்துபி:—ப்ராணிகளினுல், விஹரஸி விளையாடுகிறீர்.*

ப - ரை] மஹாபாஹோ - பாஹு பலமுள்ளவனாகிய அர்ஜுந, ஸாங்க்யே - ஆத்மஜ்ஞானத்தைச் சொல்லுகிற, க்ருதாந்தே - நிச்சயத்தில், ஸர்வகர்மணாம் - எல்லாக்கர்மங்களினுடையவும், ஸித்தயே - உத்பத்திக்காக, ப்ரோக்தாநி - சொல்லப்பட்ட, காரணாநி - காரணங்களாயிருக்கிற, பஞ்ச - ஐந்துவிதமாகிய, ஏதாநி - இவைகளை, மே - என்னுடைய வார்த்தையினால், நிபோத - தெரிந்துகொள். 13

பா| 'ஸங்க்யா' ஆவது புத்தி, ஸாங்க்யே க்ருதாந்தே - உள்ளபடி

வஜ்ஞோஹி: ||', 1 'பாலா: க்ரீடநகைரிவ', 2 'க்ருஷ்ணஸ்ய ஹி க்ருதே பூதமிதம் விஶ்வம் சராசரம்' என்றிவை முதலிய வசனங்களில் ப்ரஸித்தமான அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'தனக்குச் ஶேஷமாகிய' என்றாரம்பித்து. இந்த்ரியங்களுக்கு யஜமானனாகிய ஜீவாத்மாவிற்கும் யஜமானன் என்றல்லவோ பரமாத்மா ஶ்ருதியில் சொல்லப்படுகிறான். ஆகையினால் இந்த்ரியங்கள் ஜீவாத்மாவிற்குச் ஶேஷங்களாக இருக்கும்பொழுதும் யானை, குதிரை, இவைகளின் அலங்காரங்களில் ராஜாவுக்குப்போலப் பரமாத்மாவின் ஶேஷியாக இருக்கும் தன்மை நிவ்ருத்திக்கிறதில்லை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தனக்குச் ஶேஷங்களாகிய ஶரீரம்' என்றாரம்பித்து. சுருக்கிச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினால் த்ருஷ்டத்திலும் அத்ருஷ்டத்திலும் பலங்களைக் கொடுப்பது முதலியதும் அவனுக்கு லீலை என்றுசொல்லுகிறார்—'தன்னுடைய லீலையாகிற ப்ரயோஜனத்திற்காக' என்று. 3 'லோகவத்து லீலாகைவல்யம்' என்றிவை முதலியவைகளினால் இது விசாரிக்கப்பட்டது என்று தாத்பர்யம். 'லீலை முதலிய ப்ரயோஜனத்திற்காக' என்றும் பாடமுண்டு. அப்பொழுது 'முதலிய' என்னும் பதத்தினால் காருண்யத்தைக் காரணமாகவுடைய பக்தர்களை ரக்ஷிப்பது சேர்த்துக்கொள்ளப்படுகிறது. ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுகிற கர்மத்தைப் பரமாத்மாவிற்கு ஆராதனமாகவே விதித்திருக்கிறபடியினால் பலங்களோடு சேர்ந்த அந்தக்கர்மம் பரமாத்மாவிற்குச் ஶேஷம் என்பது உசிதம். லோகத்திலேற்பட்ட கர்மமோ

1 பாரதம், ஸபாபர்வம் - 61 - 31. பால:-சிறுபிள்ளை, க்ரீடநகைரிவ - விளையாடுகிற கருவிகளினாலே போல (விளையாடுகிறீர்).

2 பாரதம் - ஸபா பர்வம் - 41 - 23 - இதம் - இந்த, விஶ்வம்—எல்லா, சராசரம் - ஸ்தாவரஜங்கமமாகிய, பூதம்—ப்ராணியானது, க்ருஷ்ணஸ்ய க்ருதேஹி—க்ருஷ்ணனுக்காக ஏற்பட்டதல்லவா.

3 ஶாரீரகஸூத்ரம் - 2 - 1 - 33.

இருக்கிற தத்துவங்களைப்பற்றியதாகிய வேதத்திலேற்பட்ட புத்தியினால்

வெனில் அப்படி ஶாஸ்த்ரங்களிலும் சொல்லப்படவில்லை, அப்படி ப்ரத்யக்ஷத்தாலும் கண்டறியப்படவில்லை, பசி நிவ்ருத்திப்பது முதலிய பலம் ஜீவாத்மாவிற்கு உண்டாவதாகவே நம்மால் அறியப்படுகிறதாகையினால். ஆகையினால் லோகத்திலேற்பட்ட பலங்கள் ஜீவாத்மாவிற்குச் ஶேஷமாக இருக்கும்பொழுது அந்தப் பலத்திற்கு ஸாதனமாகிய கர்மமும் அந்த ஜீவாத்மாவிற்கே ஶேஷமென்பது உசிதம். ஆகையினால் 'ஸர்வ கர்மாணி' என்றிவை முதலியவைகளினால் எல்லாக் கர்மங்களையும் பற்றிய ஸங்கத்தை விட்டுவிடவேண்டும் என்று நிரூபித்திருப்பது முடியாது என்னில்? இந்த ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 'பரமாத்மாவினுடையதே' என்கிற இடத்தில் ஆறும் வேற்றுமை யஜமானன், அவனுடைய பொருள், என்கிற விஶேஷமான ஸம்பந்தத்தைச் சொல்லுகிறது. எப்படிக் கிளியைக் கூண்டில் வைத்து வளர்ப்பது முதலியதும் அதற்குண்டாகும் ஸுகம் முதலியதும் ராஜவிற்குச் ஶேஷமோ அதைப்போலவே இவ்விடத்திலும் என்று தாத்பர்யம். 'ஸாங்க்யே க்ருதாந்தே' என்பதினால் இவ்விடத்தில் ஸாங்க்யர்களின் ஸித்தாந்தம் சொல்லப்படுகிறதல்ல, அந்த ஸித்தாந்தத்தில் பரமாத்மாவை ஒப்புக்கொள்ளவில்லையாகையினால். ஶரீரத்தைத் தவிர வேறொன்றிற்குக் கர்த்ருத்வத்தையும் ஒப்புக்கொள்ளவில்லை. ஆகையினாலே 'கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம்' என்று மேலே கர்த்தாவையும் கரணத்தையும் தனித்தனியாகப் பிரித்துச் சொல்லியிருப்பதும்ஸம்பவிக்காதாகையினாலும், அது வேதத்திற்கு விருத்தமாக இருக்கும்பக்ஷத்தில் தத்துவத்தை உபதேசம் செய்வதற்காக அந்த மதத்தை உபந்யாஸம் செய்திருப்பது பொருந்தாதாகையினாலும், விரோதமில்லாத பக்ஷத்தில் வேதத்தையே மூலமாகவுடையது என்றொப்புக்கொள்ளவேண்டியதாகையினாலே வேதத்திலேயே முடிவுபெறுகிறதாகையினாலும், உசிதமான அர்த்தத்தைச் சொல்லுவதற்காக இடுகுறிப்பெயர் என்கிறதை விட்டுக் காரணப்பெயர் என்றர்த்தம் சொல்லுவது எல்லோராலும் ஒப்புக்கொள்ளப்பட்டிருப்பதினாலும். ஆகையினால் வேதங்களிலேயே உள்ளபடியே இருக்கிற தத்துவத்தை நிஶ்சயம் செய்வதற்காக ப்ரவ்ருத்தித்திருக்கும் பாகம் 'ஸாங்க்யே க்ருதாந்தே' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் அதற்கு வ்யுத்பத்தி சொல்லுகிறார்—'ஸங்க்யா' ஆவது புத்தி' என்று. இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்துப்புத்தியைவிஶேஷித்துச் சொல்லுகிறார்—'உள்ளபடியே

விசாரிக்கப்பட்ட நிஶ்சயத்தில் எல்லாக் கர்மங்களின் உத்பத்திக்காகச் சொல்லப்பட்டவைகளாகிய ஐந்துவிதங்களாகிய காரணங்களை என்னிடத்திலிருந்துத் தெரிந்துகொள். வேதத்திலேற்பட்ட புத்தி, ஶரீரம், இந்த்ரி

---

இருக்கிற' என்றாரம்பித்து. இந்த இடத்தில் வஸ்துக்கள் எந்த ஶாஸ்த்ரத்தில் எண்ணப்படுகின்றனவோ அது 'ஸாங்க்ய' என்னப்படுகிறது, அதாவது வேதாந்தம், அதுவே 'க்ருதாந்த' என்னப்படுகிறது. செய்யப்படுகிற கர்மங்களுக்கு இதிலே முடிவுண்டாகிற படியினால் என்று சங்கராசார்யரால் சொல்லப்பட்ட அர்த்தம் உசிதமல்ல, வேதாந்த ஶாஸ்த்ரங்களிலும் கர்மங்களின் ஸம்பந்தமுண்டென்று ஸ்தாபிக்கப் பட்டிருப்பதினாலும், இடுகுறிப்பெயர் என்பதை விட்டுவிடவேண்டுமென்பது அவஶ்யமானால் உசிதமான அர்த்தத்தைச் சொல்லுவது யுக்தமாகையினாலும். 'க்ருத' என்னும் பதம் நிஶ்சயத்தைச் சொல்லுகிறதாக நிகண்டுக்காரர்களினால் படிக்கப்பட்டிருக்கிறது. அந்த நிஶ்சயமே தன்னுடைய புத்தியைக்கொண்டு விசாரிப்பதினால் உண்டாக்கப் பட்டதாகையினால் 'க்ருத' என்னும் பதத்தினால் விஶேஷித்துச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'விசாரிக்கப்பட்ட நிஶ்யத்தில்' என்று சொல்லப்பட்டது. அதுவுமன்றிக்கே 'அந்த' என்னும் பதமே நிஶ்சயிக்கப்பட்ட வஸ்துவைச் சொல்லுகிறது. 'க்ருதாந்த' என்னும் பதம் 'ஸித்தாந்த' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறபடியினாலே அவரவர்களினால் ஒப்புக்கொள்ளப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறதாகையினால். ஆகையினால் 'விசாரிக்கப்பட்ட' என்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. நிஶ்சயமே விசாரிக்கத் தக்கதல்லவா. அதுவுமல்லாமல் பெரியோர்களின் நிஶ்சயம் பின்புள்ள மற்றவர்களினால் விசாரிக்கப்பட்டது என்று தாத்பர்யமாகவுமாம். நிஶ்சயமுண்டாவதற்குக் காரணமாகிய பதங்களை இவ்விடத்தில் 'ஸாங்க்ய' என்னும் பதம் சொல்லுகிறதாகவுமாம். இப்படிச் சொல்லில் 'ப்ரோக்தானி (சொல்லப்பட்டிருக்கிற)' என்பதோடு ஸரியான அந்வயம் வருகிறது. 'ஸித்தயே' என்னும் பதத்தினால் இவ்விடத்தில் பலன்களுக்குக் காரணமாக ஆகுகை முதலியதும் சொல்லப்படுகிறது. 'யஜ்ஞ ப்ராஹ்மணே . . ஸம்பவதேதஸ்ய ஹேதவ:' என்று கர்மங்களின் ஸ்வரூபம் உண்டாவதைப்பற்றியே மேலே சொல்லியிருக்கிறபடியினால் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'உத்பத்திக்காக' என்று. எனக்குக் காரணங்கள் என்பது ஸம்பவிக்காதாகையினாலும், எனக்குச் ஶேஷங்களாகிய காரணங்கள் என்று சொல்லுவது இவ்விடத்தில் 'தைவம்' என்று மேலே சொல்லப்படுகிற தான்

யங்கள், ப்ராணவாயு, ஜீவாத்மா, இவைகளை ஒத்தாசைக் கருவிகளாக வுடைய பரமாத்மாவையே கர்த்தாவாக * 'எவன் ஆத்மாவிலிருந்து கொண்டு ஆத்மாவிற்குள்ளே இருக்கிறானோ, எவனை இந்த ஆத்மா தெரிந்துகொள்ளவில்லையோ, எவனுக்கு ஜீவாத்மா ஶரீரமோ, எவன் ஆத்மாவை உள்ளே இருந்துகொண்டு நியமிக்கிறானோ, அழிவில்லாத அவன் உனக்கு அந்தர்யாமியாகிய ஆத்மா' என்றும், † 'எல்லா ஜனங்களுக்கும் உள்ளே நுழைந்துகொண்டு நியமிக்கிறவன் எல்லாவற்றிற்கும் ஆத்மா' என்றுமர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் தெரிவிக்கிறதல்லவா. 13

பா — அ] இதையே சொல்லுகிறார் —

*அதிஷ்டாநம் ததா கர்தா கரணம் ச ப்ருதக்விதம்।*
*விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம்॥ 14*

*ஶரீரவாங்மநோபிர்யத்கர்ம ப்ராரபதே நர:।*
*ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ:॥ 15*

---

*தனக்குச் ஶேஷமல்ல வாகையினாலே அந்வயிக்காதாகையினாலும் உசிதமான அந்வயத்தைச் சொல்லுகிறார்—'என்னிடத்திலிருந்து' என்று. மேலே சொல்லப்படுகிற ஐந்தும் ஶாஸ்த்ரங்களில் சொல்லியபடியும் தனித்தனியாகக் காரணங்கள் என்பதில் மனதை ஸாவதானமாகச் செலுத்தவேண்டும் என்று விதிப்பதற்காக இது சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். இருபத்தாறுவதாகிய பரமாத்மாவை ஒப்புக்கொள்ளாதவர்களும், இருபத்தைந்தாவது தத்துவமாகிய ஜீவாத்மாவும் வேறிடத்திலிருக்கிற கர்த்ருத்வத்தை ஆரோபிப்பதற்கு மாத்திரம் இடமாக இருக்கிறான் என்று நிரூபிக்கிறவர்களுமாயிருக்கிற ஸாங்க்யர்களுக்கு இந்த ஸந்தர்ப்பம் முழுமையும் விருத்தம் என்கிற அபிப்ராயத்தினால் காரணப்பெயராக அர்த்தத்தைச் சொல்லுகிறது என்பதை நிரூபிக்கிறார்—'வேதத்திலேற்பட்ட புத்தி' என்றாரம்பித்து. 'ஒத்தாசைக்கருவி' ஆவது செய்யவேண்டுமென்றபிப்ராயத்தில் கொள்ளப்பட்ட கார்யத்திற்காக அங்கீகரிக்கப்பட்டதாகிய வஸ்து. 13*

*கீழ்ச் சொல்லியதை விவரிக்கிறதாகையினால் மேல் இரண்டு ஶ்லோகங்களுக்குப் புனருக்தி இல்லை என்பதையும், மற்றவர்கள் மதத்தில் இந்த ஶ்லோகம் விரோதமாக இருக்கிறது என்பதையும் அபிப்பிராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'இதையே சொல்லுகிறார்' என்று. 'இதை' என்பதற்கு ஶ்ருதியில் ஏற்பட்டதும் கீழே*

* ப்ருஹதாரண்யகம் - 5 - 7 - 22. † தைத்திரீயம், நாராயணம்.

ப - ரை] நர: - மனுஷ்யன், ந்யாய்யம்வா - ஶாஸ்த்ரங்களை அனுஸரித்தாவது, விபரீதம்வா - ஶாஸ்த்ரங்களுக்கு விருத்தமாயாவதிருக்கிற. யத் - எந்த, கர்ம - கர்மத்தை, ஶரீரவாங்மனோபி: - ஶரீரம், வாக்கு, மனது, இவைகளினால், ப்ராரபதே - ஆரம்பிக்கிறானோ, தஸ்ய - அந்தக் கர்மத்திற்கு, அதிஷ்டானம் - ஶரீரம், ததா - அப்படியே, கர்தா - ஜீவாத்மா, ப்ருதக்விதம் - வெவ்வேறாக இருக்கிற, கரணம் - இந்த்ரியம், விவிதா - அநேகவிதமாயிருக்கிற, ப்ருதக்சேஷ்டா - வேறான வ்யாபாரத்தையுடைய ப்ராணவாயு, அத்ர-இந்த விஷயத்தில், பஞ்சமம்-ஐந்தாவதாகிய, தைவம் - பரமாத்மா, ஏதே - இந்த, பஞ்ச - ஐந்தும், ஹேதவ: - காரணங்கள். 14—15

பா] ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்டதாயும் ஶாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்டதாயுமிருக்கிற ஶரீரத்தினால் செய்யப்படுகிறதும், வாக்கினால் செய்யப்படுகிறதும், மனதினால் செய்யப்படுகிறதுமாகிற எல்லாக் கர்மத்திலும் இந்த

---

சொல்லப்பட்டதுமாகிய என்றர்த்தம். 'ந்யாய்யம்' என்பதற்கு ந்யாயத்தை விட்டுத் தவறாதது என்றர்த்தம், 1 'தர்மபத்யர்த்தந்யாயாதநபேதே' என்று சொல்லி யிருப்பதினால். 'ந்யாய' என்னும் பதம் இவ்விடத்தில் வேறு அர்த்தங்களைச் சொல்லுவது உசிதமில்லையாகையினாலும்,வ்யுத்பத்தியை யனுஸரித்தும் ஶாஸ்த்ரத்தையேஅபிப்ராயத்தில் கொண்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்டதாயும்' என்று. ஶாஸ்த்ரங்களில் ஏற்பட்டதோடு லோகத்தி லேற்பட்ட கர்மத்தையும் சொல்லுவதாக இருந்தால் அதை விட மற்றெந்தக் கார்யமும் என்று சொல்லியிருக்க வேண்டும். ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களைச் சொன்ன பிறகு 'விபரீதம்' என்னும் பதமானது அதற்கு விரோதமான ஸ்வபாவமுடைய ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்ட கார்யங்களைச் சொல்லுகிறதென்பது ஸ்வராஸ்ய முடையது. கைமுதிக ந்யாயத்தினால் லோகத்திலேற்பட்ட கர்மமும் ஏற்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் தடுக்கப்பட்டதாயு மிருக்கிற' என்று. 'எல்லாக் கர்மத்திலும்' என்பது இதினால் ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறது. ஶரீரத்தினால் செய்யப்படுகிறதும், மனதினால் செய்யப்படு

---

1 அஷ்டாத்யாயீ 4 - 4 - 92, தர்ம, பதி, அர்த்த, ந்யாய, என்கிற பதங்களின் மேல் இவைகளைவிட்டு மாறாதது என்னும் அர்த்தத்தில் 'ய' என்னும் விகுதி சேரும்.

ஐந்தும் காரணங்கள் (அவையாவன), அதிஷ்டாநம் - ஶரீரம் ஜீவாத்மாவினால் அதிஷ்டானம் செய்யப்படுகிறது. ஆகையினால் பஞ்சபூதங்களின் சேர்க்கையாகிற ஶரீரம் அதிஷ்டானம் என்னப்படுகிறது. அப்படியே

---

*கிறதும், வாக்கினால் செய்யப்படுகிறதுகளுமாகிய கர்மங்களில் ஶரீரம் முதலியவைகள் ப்ரதான காரணமாக எப்படி வெவ்வேறாக ஏற்பட்டிருக்கிறதோ அப்படி இந்த ஐந்து காரணங்களும் அல்ல. பின்னை எப்படி என்னில் ஒவ்வொரு கர்மத்திலும் இந்த ஐந்தும் அவஶ்யமாக வேண்டியவைகள் என்கிற அபிப்ராயத்தினால் 'ஶரீரத்தினால் செய்யப்படுகிறதும்' என்பது முதலியது சொல்லப்படுகிறது. எல்லாக் கர்மங்களும் இந்த ஐந்து வஸ்துக்களையும் காரணங்களாக வுடையவைகளாக இருக்க சில கர்மங்களில் ஶரீரம் முதலியது முக்கிய காரணமாகையினாலல்லவோ ஶரீரத்தினால்செய்யப்படுகிறது, முதலிய பிரிவுகள் ஏற்பட்டிருக்கிறது. லோகங்களை ஸ்ருஷ்டிப்பது முதலிய கார்யங்களில் பரமாத்மா ஒருவனே காரணமாக இருந்தபோதிலும் ஜீவாத்மாவினால் செய்யப்படுகிற கர்மங்களில் பரமாத்மாவினால் தன்னுடைய ஸங்கல்பத்தினாலேயே மற்ற இந்த வஸ்துக்களும் ஒத்தாசைக் கருவிகளாக அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றன என்கிற அபிப்ராயத்தினால் மற்றக் காரணங்களைச் சொல்லி இருக்கிறது. 1 'அதிஷ்டாநம் க்ஷேத்ரமாஹு:' என்று வஸிஷ்டர் காரளன் என்பவனுக்குச் சொல்லியிருக்கிறார். அதை அநுஸரித்துச் சொல்லுகிறார்—'அதிஷ்டாநம் ஶரீரம்' என்று. ஶ்ருதியிலும் 2 'ஓ! இந்திரனே! இந்தச் ஶரீரம் அழியக்கூடியது, ம்ருத்யுவால் பிடிக்கப்பட்டது. அப்படிப்பட்ட இந்தச் ஶரீரம் அழிவில்லாதவனும் ஸ்வபாவத்தில் ஶரீரத்தில் ஸம்பந்தமில்லாதவனுமாயிருக்கிற ஜீவாத்மாவிற்கு அதிஷ்டானம்' என்றர்த்தமுள்ள வாக்யத்தில் ஶரீரத்தில் 'அதிஷ்டாநம்' என்னும் பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. 3 'க்ருத்யல்யுடோ பஹுலம்' என்பதினால் 'கர்மணி (செய்யப்படுபொருள்)' என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதாகச் ஶரீரத்தில் 'அதிஷ்டாந' என்னும் பதத்திற்கு வ்யுத்பத்தி சொல்லுகிறார்—'ஜீவாத்மாவினால்' என்றாரம்பித்து. அதிஷ்டாதாவாகிய ஜீவாத்மாவும் பரமாத்மாவினால் அதிஷ்டானம் செய்யப்படுகிறானாகையினால் அவனை விலக்குவதற்காக 'ஜீவாத்மாவினால்' என்று விஶேஷித்துச் சொல்லப்பட்டது. ஜீவாத்மாவினால் அதிஷ்டானம் செய்யப்படுகிற இந்த்ரியங்களைத் தனியா*

---

1 பாரதம், மோக்ஷதர்மம் - 312 - 14-ஶரீரத்தை அதிஷ்டானம் என்று சொல்லுகிறார்கள்.

2 சாந்தோக்யம் - 7 - 12 - 1. 3 அஷ்டாத்யாயீ - 3 - 3 - 113.

கதா - ஜீவாத்மா. இந்த ஜீவாத்மாவிற்கு ஜ்ஞாத்ருத்வம், கர்த்ருத்வம், உண்டென்று * 'ஜ்ஞோऽத ஏவ' † 'கர்தா ஶாஸ்த்ரார்தவத்வாத்' என்கிற ஸூத்ரங்களில் நிரூபிக்கப்பட்டது. கரணம்ச ப்ருதக்விதம் - வாக்கு, கை, கால், முதலிய மனதுடன் கூடிய ஐந்துவிதமான கர்மேந்த்ரியம்,

---

கச் சொல்லி இருப்பதினால் அதிலிருந்து சுருக்கிச் சொல்லுவதற்காகச் சொல்லுகிறார்—'பஞ்ச பூதங்களின் சேர்க்கையாகிற' என்று. எல்லாவற்றிற்கும் கர்த்தாவாகிய பரமாத்மா இவ்விடத்தில் 'தைவம்' என்னும் பதத்தினால் தனித்துச் சொல்லப்படுகிறபடியினாலும் இவ்விடத்தில் 'கர்தா' என்னும் பதம் 1 'ஶாஸ்த்ரபலம் ப்ரயோக்தரி' என்கிற ந்யாயத்தைத் தெரிவிப்பதற்காக ஆகையினாலும் 'கர்தா- ஜீவாத்மா' என்று சொல்லப்பட்டது. கர்த்தாவாக இருக்கையாவது ஒன்றை அறிந்து அதில் ஆசையுடையவனாகி அந்த ஆசையினால் ப்ரயத்தினம் செய்பவனாயிருக்கை. ஜ்ஞான ஸ்வரூபனாகிய ஜீவாத்மாவிற்கு அறியும் தன்மையே ஸம்பவிக்காதாகையினால் அதினால் உண்டாகக் கூடிய கர்த்தாவாக இருக்கை உண்டாகவே உண்டாகாது என்றாக்ஷேபம் வருகிறபடியினால் அதற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இந்த ஜீவாத்மாவிற்கு' என்றாரம்பித்து. 'ஜ்ஞோऽத ஏவ' என்றிவை முதலிய ஸூத்திரங்களை எடுத்தது ஶ்ருதி முதலியவைகளும் இதினாலேயே இழுக்கப்படுகின்றனவாகையினால். கர்மங்கள் உண்டாவதற்குக்காரணங்களை நிரூபிக்கிறபடியினால் இவ்விடத்தில் 'கரணம்' என்னும் பதம் கர்மேந்த்ரியம் மாத்திரத்தைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'வாக்கு' என்றாரம்பித்து. ஜ்ஞானேந்த்ரியங்களுக்கும் அந்தந்த விஷயங்களைப் பற்றிய ஜ்ஞானங்களை உண்டாக்கி அதின் வழியாகப் பரம்பரையாகக் கர்மங்களில் காரணமாகும் தன்மை இருக்கிறது. அப்படி இருந்தபோதிலும் வஸ்துவின் ஸ்வபாவங்களை ஆலோசிக்கும் பொழுது மனதினால் இந்தக் கார்யத்தைச் செய்யவேண்டுமென்று ஸங்கல்பம் செய்துகொண்டே கர்மங்களைச் செய்கிறபடியினாலும், மனதிற்கு மற்ற ஜ்ஞானேந்த்ரியங்களைப் போல் வேறொன்றின் வழியாகப் பரம்பரையாகக் காரணமாகும் தன்மை இல்லாமையினாலும் 'மனதுடன் கூடிய' என்று சொல்லப்பட்டது மனது ஜ்ஞானேந்த்ரியமாக இருந்தபோதி

---

* ஶாரீரகஸூத்ரம் - 2 - 1 - 19.   † ஶாரீரகஸூத்ரம் - 2 - 3 - 33.

1. பூர்வமீமாம்ஸை-3-7-17-ஶாஸ்த்ரத்தினுடைய ப்ரயோஜனம் இந்த ஶாஸ்த்ரத்தில் சொல்லியபடி அனுஷ்டிப்பவனுக்கு உண்டாகிறது.

வ்யுஷ்டிபம் - கர்மங்களைச் செய்வதில் வெவ்வேறு விதமான வ்யாபா ரத்தை உடைய என்றர்த்தம். விவிதாஸ ஷேஷ்டா - இவ்விடத்தில் ப்ராணவாயுவின் வ்யாபாரத்தைச் சொல்லுகிற 'செஷ்டா' என்னும் பதத்

---

லும் கர்மேந்த்ரியங்கள் ப்ரவ்ருத்தி செய்வதிலும் பொதுவாகையினால் 'கர்மேந்த்ரியம்' என்று சொல்லி இருக்கிறது. 'ஶ்ரோத்ராதீனீந்த்ரியாண்யன்யே' என்றிங்கேயே சொல்லியிருப்பதினாலும் மனது ஸங்கல்பம் முதலிய கார்யங்களைச் செய்வதினாலும் 'கர்மேந்த்ரியம்' என்று சொல்லியிருக்கிறது. ஸாங்க்யர்களினாலும் இப்படியே 1 'புத்தீந்த்ரியாணி சக்ஷுஶ்ரோத்ர க்ராண ரஸநத்வகாக்யாநி। வாக்பாணிபாதபாயூபஸ்தாந் கர்மேந்த்ரியாண்யாஹு:॥ உபயாத்மகமத்ர மன: ஸங்கல்பகமிந்த்ரியம் ச ஸாதர்ம்யாத்।' என்று சொல்லப்பட்டது. கர்மங்களின் காரணங்களை நிரூபித்துக்கொண்டு வரும் பொழுது 'வ்யுஷ்டிபம்' என்று விசேஷணம் சொல்லியிருப்பது அந்தக் கர்மங்களுக்குபயோகங்களாகிய வ்யாபாரங்களாகிற விதங்களைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்—'கர்மங்களைச் செய்வதில்' என்றாரம்பித்து. வாய் முதலிய ஒவ்வொரு இந்த்ரியத்தினுடையவும் வார்த்தை சொல்லுவது, வஸ்துவை எடுப்பது, நடப்பது, மலாதிகளை விடுவது, ஆநந்தத்தை உண்டாக்குவது, ஸங்கல்பத்தைச் செய்வது, முதலிய வ்யாபாரங்கள் வெவ்வேறாகவன்றோ இருக்கின்றன. ப்ரயத்னத்தைக் காரணமாகவுடைய ஶரீரத்தின் வ்யாபாரம் சேஷ்டை என்று சொல்லப்படுகிறது. ஆகையினாலிவ்விடத்தில் கர்மத்திற்கு அதுவே காரணமென்னில் (தனக்குத்தானே காரணமாகையினால்) ஆத்மாஶ்ரயம் என்னும் தோஷம் வருகிறதே என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவ்விடத்தில் ப்ராணவாயுவின் வ்யாபாரத்தைச் சொல்லுகிற' என்றாரம்பித்து. 'சொல்லப்படுகிறது' என்னும் பதத்தினால் தெரிவிக்கப்படுகிறது என்பது மாத்திரம் சொல்லப்படுகிறது. இவ்விடத்தில் அந்தச் சேஷ்டைக்குக் காரணமாகிய மற்றொரு வஸ்துவை லக்ஷணையாகச் சொல்லவேண்டியதென்பதேற்பட்டிருக்கிறபடியினால் வாக்கு முதலியவைகள் காரணம் என்னும் பதம் முதலியவைகளினால் சொல்லப்பட்டபடியினாலும்,

1. கண், காது, மூக்கு, நாக்கு, தோல், என்று பேருடையவைகள் ஜ்ஞானேந்த்ரியங்கள், வாக்கு, கை, கால், அபானம், உபஸ்தம், இவைகளைக் கர்மேந்த்ரியங்கள் என்று சொல்லுகிறார்கள். ஸங்கல்பத்தைச் செய்கிற மனது என்கிற இந்த்ரியம் இவை இரண்டிற்கும் பொதுவாகையினால் கர்மேந்த்ரியமாகவும் ஜ்ஞானேந்த்ரியமாகவும்

திறால் ஐந்துவிதமாகிய வாயு சொல்லப்படுகிறது. ஶரீரம், இந்த்ரியம், இவைகளைத்தரிக்கிற ப்ராணன்,அபானன்,என்கிற பிரிவுகளையுடையஐந்து விதமான வாயுவின் வெவ்வேறு விதமான வ்ருத்திகளும். தைவம் சைவாத்ர பஞ்சமம் - இந்தக் கர்மங்களின் காரணங்களினுடைய கும்பலில்

ப்ராணஸம்வாதம் முதலியவைகளில் இந்த்ரியங்களும் ஶரீரமும் இருப்பதும் ப்ரவ்ருத்தி செய்வதும் ப்ராணவாயுவிற்கு வசப்பட்டதென்பது ஶ்ருதியில் சொல்லியிருக்கிறபடியினால் 'ப்ராண' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிற 'சேஷ்டா' என்னும் பதத்தினால் ப்ராணவாயுவை லக்ஷணையாகச் சொல்லுவது இவ்விடத்தில் யுக்தம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார் 'ப்ராணவாயுவின் வ்யாபாரத்தைச் சொல்லுகிற' என்று. ப்ராணஸம்வாதம், முதலியவைகளை ஜ்ஞாபகப்படுத்துவதினால் ப்ராணவாயுவை லக்ஷணையாகச் சொல்லுவது உசிதம் தான் என்பதையும், அதின் வ்யாபாரங்கள் அனேகம் என்பதையும் விவரிக்கிறார்—'ஶரீரம், இந்த்ரியம், இவைகளைத் தரிக்கிற'என்றாரம்பித்து. 'ப்ருதக்' என்னும் பதத்திற்கும் 'விவிதா' என்னும் பதத்திற்கும் புனருக்தியைப்பரிஹரிப்பதற்காகச்சொல்லுகிறார்—'ப்ராணன், அபானன், என்கிற பிரிவுகளையுடைய' என்று. அதிஷ்டானம், கர்த்தா, காரணங்கள், இவைகளின் வ்யாபாரத்தைவிட ஶரீரம், இந்த்ரியம், இவைகளைத் தரிப்பதாகிய வ்யாபாரம் வெவ்வேறாகையினால் 'ப்ருதக்' என்று சொல்லப்படுகிறது. ப்ராணன் முதலிய வ்ருத்திகளின் வ்யத்யாஸத்தினால் உண்டாக்கப்பட்ட மூச்சுவிடுதல், இமைக்கொட்டுதல் முதலிய வ்யாபாரங்கள் வெவ்வேறாகையினால் 'விவிதா' என்னப்படுகிறது என்றும் தாத்பர்யம். 'ஐந்து விதமான' என்னும் பதம் இவ்விடத்தில் ஐந்துவிதமான வ்ருத்திகளையுடைய என்பதைச் சொல்லுகிறது. அப்படியே ஸூத்ரத்திலும் 1 'பஞ்சவ்ருத்தி ர்மனோவத் வ்யபதிஶ்யதே' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஐந்து விதம் என்று சொல்லியிருப்பதும் நாகம், கூர்மம், க்ருகரம், தேவதத்தம், தனஞ்ஜயம், என்கிற மற்றொரு ஐந்து வ்ருத்திகளையும் குறிக்கின்றது. 'தைவம் சைவாத்ர பஞ்சமம்' என்கிற இடத்தில் தைவமென்று பேருடைய முக்கியமான காரணத்தைத் தனித்துச் சொல்லுவதற்காக 'அத்ர' என்றனுவாதம் செய்திருக்கிறது என்று சொல்லுகிறார்—'இந்தக் கர்மங்களின்' என்றாரம்பித்து. பரமாத்மாவை ஐந்தாவ

1 ஶாரீரக ஸூத்ரம் - 2 - 4-11.

தைவம் ஐந்தாவது, அதாவது அந்தர்யாமியாகிய பரமாத்மா கர்மங்களை

தாகச் சொல்லியிருப்பதில் ஸ்ருதியினாலும், வஸ்துஸ்வபாவத்தினாலும், பாபம் முதலியவைகளினாலு மேற்பட்ட க்ரமங்கள் ஸம்பவிக்காதாகை யினாலும், வார்த்தை க்ரமமாகத் தான் சொல்ல முடியுமாகையினாலும், க்ரமப்படி சொல்லியிருந்த போதிலும் 'பஞ்சமம்' என்று கணக்கிட்டுச் சொல்லியிருப்பதில் ப்ரயோஜனமில்லாமையினாலும், எப்படிக் கடவல் லியில் 1 'இந்த்ரியங்களைவிட விஷயங்கள் மேலானவைகள்' என்றர்த்த முள்ள வாக்யம் முதலாக ஆரம்பித்து 'மஹானைவிட அவ்யக்தம் மேலா னது', அவ்யக்தத்தைவிடப் புருஷன் மேலானவன், புருஷனைவிட மே லானவன் ஒருவருமில்லை, அதுவே மேலானது, அதுவே மேலானகதி' என்றர்த்தமுள்ள வாக்யம் முடிவாகவுள்ள வாக்யத்தில் இந்த்ரியம் முதலிய எல்லா வஸ்துக்களும் ப்ரவ்ருத்தி செய்வதற்கு முக்கிய கார ணமாகிய பரமாத்மா ஸ்வாதீனப் படுத்திக்கொள்ள வேண்டிய வஸ்துக் களுக்குள் மேலானதாகச் சொல்லப்படுகிறதோ அதைப்போலவே இவ்விடத்திலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதாவது அந்தர்யாமியாகிய பரமாத்மா' என்றாரம்பித்து. 2 'தைவம் ப்ராக்தனம் கர்ம', 3 'தைவம் திஷ்டம் பாகதேயம்', என்றிவை முதலியவை களில் முன் செய்த கர்மமாகிய பாக்யம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுவதாக 'தைவம்' என்னும் பதத்தைச் சொல்லியிருக்கிறார் கள். அது காரணம் என்பதும் பொருத்தமாகவே இருக்கிறது. ஆகையினால் இவ்விடத்தில் பரமாத்மா என்று எப்படி அர்த்தம் சொ ல்லப்படுகிறது என்னில்? அதற்கு ஸமாதானம்—முன்பே அழிந்து போன கர்மங்கள் தங்கள் ஸ்வரூபத்தினால் காரணம் என்பது ஸம்ப விக்காது, ஆகையினால் கர்மங்களினால் உண்டாக்கப்படுகிற அத்ருஷ்டம் என்று சொல்லப்படுகிற பரமாத்மாவின் ஸங்கல்பமே காரணம் என்று சொல்லவேண்டும். அதைவிட 'தைவம்' என்னும் பதத்தினாலே அந்தப்பரமாத்மாவையே சொல்லுவது மேலானது. மேலும் 'தை வம்' என்னும் பதம் தேவதை என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுவதாக லோகத்திலும் வேதத்திலும் ப்ரஸித்தமாக இருக் கிறது. எங்கே என்னில் 4 'ஸத்யம் ஸத்யம் புனஸ்ஸத்யமுத்ருத்ய

1 கடவல்லி - 1 - 3 - 10.

2 தைவம் என்பது முன் செய்யப்பட்ட கர்மம்.

3 நாமலிங்கானுஸாஸநம், 1—வது காண்டம், கால வர்க்கம்.

4 நாரஸிம்ஹ புராணம் - 18 - 33. புஜம் - கையை, உத்ருத்ய - தூக்கிக் கொண்டு, ஸத்யம் ஸத்யம் புனஸ்ஸத்யம்-மூன்று தரம் ஸத்யமாக, உச்யதே-சொல்

த்வஹம்ஜஸம்வ்ருதே। வேதஶாஸ்த்ராத் பரம் நாஸ்தி ந தைவம் கேஶவாத் பரம்॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. இவ்விடத்தில் வேறு அர்த்தம் ஸம்பவிக்காது. இப்படியே ஸ்ரீமத் ராமாயணத்திலும் 1 'ஸ்வாதீநம் ஸமதிக்ரம்ய மாதரம் பிதரம் குரும்। அஸ்வாதீநம் கதம் தைவம் ப்ரகாரைரபிராத்யதே॥' என்றும், அப்படியே ஸபாபர்வத்திலும் 2 'ஶ்ரூயதாம் பரமம் தைவம் துர்விஜ்ஞேயம் மயாபி ச। நாராயணஸ்து புருஷோ விஶ்வரூபோ மஹாத்யுதி:॥' என்றும், அப்படியே யாஜ்ஞவல்க்யரினால் செய்யப்பட்ட யோக ஶாஸ்த்ரத்தில் 3 'ஆர்ஷம் சந்தஶ்ச மந்த்ராணாம் தைவதம் ப்ராஹ்மணம் ததா' என்று முதலில் சொல்லப்பட்ட அர்த்தமே மறுபடியும் 'ஆர்ஷம் சந்தஶ்ச தைவம் ச' என்றும் சொல்லப்படுகிறது. அதிலேயே அஸுரர்களை மயக்குவதற்காக ப்ரம்மாவின் உபதேசத்தை அனுவாதம் செய்யுமிடத்தில் 4 'ஆத்மாநம் பூஜயேந்நித்யம் பூஷணாச்சாதநாதிபி:। ஸ்வதேஹ ஏவ தைவம் ஸ்யாத் அந்யத் தைவம் ந வித்யதே॥' என்

லப்படுகிறது, வேதஶாஸ்த்ராத் - வேதமென்கிற ஶாஸ்த்ரத்தைவிட, பரம் - மேலான ஶாஸ்த்ரம், நாஸ்தி - இல்லை, கேஶவாத் - பகவானைவிட, பரம் - மேலான, தைவம் - தேவதை, ந-இல்லை.

1 ராமாயணம்-அயோத்யாகாண்டம், ஸ்வாதீனம்-தனக்கதீனமான, மாதரம்-தாயாரையும், பிதரம் - தகப்பனாரையும், குரும் - ஆசார்யனையும், ஸமதிக்ரம்ய-தாண்டி, அஸ்வாதீநம் - தனக்கதீனமல்லாத, தைவம் - தேவதையானது, ப்ரகாரை:—எவ்விதங்களினால், கதம் - எப்படி, அபிராத்யதே - ஆராதனம் செய்யப்படுகிறது.

2 பரமம் - மேலானதாகிய, மயாபிச - என்னாலும், துர்விஜ்ஞேயம் - அறியத் தகாததாகிய, தைவம்-தேவதை, ஶ்ரூயதாம் - கேழ்க்கத்தக்கது (அது எதென்னில்), விஶ்வரூப:—ப்ரபஞ்சத்தைச் ஶரீரமாகவுடைய, மஹாத்யுதி:—விஶேஷமான காந்தியையுடைய, புருஷ:—புருஷனாகிய, நாராயணஸ்து - நாராயணன் தான்.

3 மந்த்ராணாம் - மந்த்ரங்களினுடைய, ஆர்ஷம் - ருஷியையும், சந்தஶ்ச-சந்தஸ்ஸையும், தைவதம் - தேவதையையும், ததா - அப்படி, ப்ராம்மணம்-ப்ராம்மண வாக்யத்தையும் (அறியவேண்டும்).

4 நித்யம் - எப்பொழுதும், பூஷணாச்சாதநாதிபி:—ஆபரணம், வஸ்திரம், முதலியவைகளினால், ஆத்மானம் - தன்னுடைய தேஹத்தை, பூஜயேத் - பூஜை செய்யவேண்டும், ஸ்வதேஹ ஏவ - தன்னுடைய ஶரீரமே, தைவதம் - தேவதையாக, ஸ்யாத் - ஆகும், அந்யத் - வேறு, தைவம்-தைவமானது, நவித்யதே-இல்லவா.

றும், அப்படியே 1 'தைவாதீநம் ஜகத்ஸர்வம் மந்த்ராதீநம் து தைவதம்| தந்மந்த்ரம் ப்ராஹ்மணாதீநம் தஸ்மாத் விப்ரா ஹி தைவதம்||' என்றும், இந்தக்கீதா ஶாஸ்த்ரத்திலும் 2 'ஸாதிபூதாதி தைவம்' என்று ப்ரஸ்தாவித்துக் கொண்டு 3 'அதிதைவம் கிமுச்யதே' என்று கேழ்க்கப்பட்ட அர்த்தத்திற்கு 4 'புருஷஶ்சாதிதைவதம்' என்று பதில் சொல்லுகிறார். சாந்தோக்யத்திலும் ஸூர்யன் என்கிற தேவதையினிடத்தி லிருக்கிற புருஷனுக்கு அதிதைவதம் என்று பெயர் சொல்லப்படுகிறது. 'அவனுக்கு ரஹஸ்யமான பேர் 'அஹஃ' என்று அதிதைவதம் சொல்லப்பட்டது. அவனுக்கு ரஹஸ்யமான பேர் 'அஹம்' என்று இப்படி அத்யாத்மம் சொல்லப்பட்டது' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் சொல்லப்படுகிறது. இப்படியே வேறு இடங்களிலும் பார்த்துக் கொள்ளவேண்டியது. மற்றவர்களாலும் இவ்விடத்திலிருக்கும் 'தைவம்' என்னும் பதம் கண் முதலிய இந்த்ரியங்களுக்கு ஒத்தாசை செய்கிற ஸூர்யன் முதலிய தேவதைகளைச் சொல்லுகிறதாக வ்யாக்யானம் செய்யப்பட்டது. நாம் அந்த ஸூர்யன் முதலிய தேவதைகளுக்கும் ஒத்தாசை செய்கிற பரமாத்மாவை 'தைவம்' என்று சொல்லுகிறோம். இவ்வளவுதான் வ்யத்யாஸம். ஸ்தோத்திரத்திலும் 5 'ப்ரஸித்த தைவ பரமார்த்த விதாம் மதேஷு' என்று ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. லக்ஷ்மீ கல்யாணத்திலும் 6 'தர்மே ப்ரமாணம் ஸமயஸ்ததீயோ வேதாஶ்ச தத்வம் ச ததிஷ்ட தைவம்' என்று ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால் 'தைவம்' என்னும் பதம் இவ்விடத்தில் தேவதை என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. அந்தத் தேவதையும் எல்லா வஸ்துக்களையும் ப்ரவ்ருத்தி செய்விக்கக்கூடிய காரணத்தைச்

1 விஹகேந்த்ர ஸம்ஹிதை, 22-வது படலம் - 15-ஸர்வம் - எல்லா, ஜகத்-லோகமும், தைவாதீநம் - தேவதைக்கு அடங்கியது, தைவதம்து - தேவதையோவெனில், மந்த்ராதீநம் - மந்த்ரத்திற்கடங்கியது, தத் - அந்த, மந்த்ரம்-மந்த்ரமும், ப்ராம்மணாதீநம் - ப்ராம்மணர்களுக்கு அடங்கியது, தஸ்மாத் - ஆகையினால், விப்ராஹி - ப்ராம்மணர்களல்லவோ, தைவதம்—தேவதை.

2 பகவத்கீதை 7 - 30. 3 பகவத்கீதை 8 - 1. 4 பகவத்கீதை 8 - 4.

5 ஸ்தோத்திர ரத்னம்-15. ப்ரஸித்தமாகிய தேவதையின் உண்மையை அறிந்தவர்களுடைய மதங்களிலும்.

6 தர்மே - தர்மத்தில், ப்ரமாணம் - ப்ரமாணமாவது, ததீய:—அந்தப் பெரியோர்களினுடையதாகிய, ஸமய:—ஆசாரமும், வேதாஶ்ச—வேதங்களும், தத்வம்ச—தத்துவமும், ததிஷ்டதைவம்—அவர்களுக்கு இஷ்டமான தேவதைதான்.

உண்டுபண்ணுவதில் முக்கியமான காரணம் என்றர்த்தம். இதுவும் கீழே * '𑌸𑌰𑍍𑌵𑌸𑍍𑌯 𑌚𑌾𑌹𑌂 𑌹𑍃𑌦𑌿 𑌸𑌨𑍍𑌨𑌿𑌵𑌿𑌷𑍍𑌟𑍋 𑌮𑌤𑍍𑌤𑌃 𑌸𑍍𑌮𑍃𑌤𑌿𑌰𑍍𑌜𑍍𑌞𑌾𑌨𑌮𑌪𑍋𑌹𑌨𑌂 𑌚॥' என்று சொல்லப்பட்டதல்லவா. மேலேயும் † '𑌈𑌶𑍍𑌵𑌰𑌸𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌾𑌂 𑌹𑍃𑌦𑍍𑌦𑍇𑌶𑍇𑌽𑌰𑍍𑌜𑍁𑌨 𑌤𑌿𑌷𑍍𑌠𑌤𑌿। 𑌭𑍍𑌰𑌾𑌮𑌯𑌨𑍍𑌸𑌰𑍍𑌵𑌭𑍂𑌤𑌾𑌨𑌿 𑌯𑌨𑍍𑌤𑍍𑌰𑌾𑌰𑍂𑌢𑌾𑌨𑌿 𑌮𑌾𑌯𑌯𑌾॥' என்று சொல்லப்போகிருர். ஜீவாத்மாவினு

---

சொல்லுகிறதாகையினலும், வேறு தேவதையை விஶேஷித்துச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினலும், பரதேவதையைச் சொல்லுகிறது என்பது உசிதம், என்கிற அபிப்ராயத்தினல் 'அதாவது அந்தர்யாமியாகிய பரமாத்மா' என்பது முதலியது சொல்லப்பட்டது. எப்படி இவன்எல்லா வஸ்துக்களுக்கும் ஆத்மாவோ அப்படி இவனுக்கு ஆத்மா ஒருவரும் இல்லை. ஆகையினல் பரமாத்மா என்னப்படுகிறுன். எப்படிச் ஶரீரம் முதலியவைகள் ப்ரவ்ருத்திப்பதற்கு ஜீவாத்மா முக்கியமான காரணமோ அப்படியே அவன் ப்ரவ்ருத்திப்பதற்கு இவன் என்கிற அபிப்ராயத்தினல் 'அந்தர்யாமியாகிய' என்று சொல்லியிருக்கிறது. இப்படிப்பட்ட தாத்பர்யத்தை இந்தக் கீதாஶாஸ்த்ரத்தில் முன்பின் ஸந்தர்ப்பங்களைக்கொண்டு ஸ்தாபிக்கிருர்—'இதுவும் கீழே' என்ருரம்பித்து. 1 '𑌸𑍍𑌵𑌤𑌨𑍍𑌤𑍍𑌰𑌃 𑌕𑌰𑍍𑌤𑌾' என்று கர்த்தாவிற்கு லக்ஷணம் ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டது. இவ்விடத்திலும் கர்த்தா என்று ஜீவாத்மா சொல்லப்பட்டான். ஆகையினல் மற்றக்காரணங்களை ஏவுகிறவன் என்பதும் வேருெரு காரணத்தினல் தான் ஏவப்படாதவனென்பதும் அவனுக்கு ஒப்புக்கொள்ளவேண்டும். ஆகையினல் தைவமும் இவ்விடத்தில் அதிஷ்டானம் முதலியவைகளைப்போல அந்த ஜீவாத்மாவிற்கு அடங்கியதாகவே சொல்லவேண்டும் என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'ஜீவாத்மாவினுடைய' என்ருரம்பித்து. ஜ்ஞானம், செய்யவேண்டுமென்கிற ஆசை, அதில் ப்ரயத்நம், இவைகள் உண்டானபிறகல்லவோ ஜீவாத்மாவிற்கு மற்றக்காரணங்களை ஏவும் தன்மை உண்டாகிறது. ஜ்ஞானம், முதலியவைகள் உண்டாவதே பரமாத்மாவிற்கு வசப்பட்டதென்று ஶ்ருதியிலேற்பட்டிருப்பதினல் ஜீவாத்மாவிற்குப் பரமாத்மாவிற்கு வசப்பட்ட கர்த்ருத்வமும், மற்றக்காரணங்களைக் குறித்து ஸ்வதந்த்ரனக இருக்கையும் விருத்தங்களல்லவென்று ஶாரீரக ஸூத்ரத்தில் ஸ்தாபிக்கப்பட்டது என்று தாத்பர்யம். இந்த அபிப்ராயத்தைத் தெரிந்துகொள்ளாமல் காற்று, ஜலம், முதலியவைகளைப்போல பரமாத்மா

---

* பகவத்கீதை - 15 - 15.  † பகவத்கீதை - 18 - 61.

1 அஷ்டாத்யாயீ - 1 - 4 - 54. கர்த்தாவானவன் ஸ்வதந்த்ரன்.

டைய கர்த்ருத்வமும் பரமாத்மாவிற்கு வசப்பட்டதென்பது‡ ‘பராத்து தச்ச்ருதே:’ என்கிற ஸூத்ரத்தில் நிரூபிக்கப்பட்டது. இப்படி ஆனால் ஜீவாத்மாவிற்குக் கர்த்ருத்வம் பரமாத்மாவிற்கு வசப்பட்டதாயிருந்தால் ஜீவாத்மா கர்மங்களில் ஏவத்தகாதவனாகிறான். ஆகையினால் இதைச் செய்யாதே என்று சொல்லுகிற ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தங்களாய் விடுமே

*ஏவுகிறான் என்று நினைத்துக்கொண்டு ஆக்ஷேபிக்கிறார்—‘இப்படி ஆனால்’ என்றாரம்பித்து. ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களில் பரமாத்மா ப்ரேரணம் செய்வதாயிருந்தால் அப்பொழுது ஜீவாத்மாவைப்பற்றி ஒன்றையும் விதிக்க வேண்டியதில்லை. ஏனென்னில் பலசாலியாகிய ஒருவனால் இழுத்துக் கொண்டு போகப்படுகிறவனைக் குறித்துப்போ என்று விதிக்கவேண்டியதில்லையல்லவா. அவன் தடுக்கிறதாயிருந்தாலும் அப்பொழுதும் விதிக்க வேண்டியதில்லை. அதிகபலமுள்ளவனால் தடுக்கப்பட்டிருக்கிற துர்ப்பலனைக்குறித்துப்போ என்று விதிப்பது உசிதமில்லையல்லவா. இப்படியே எந்தக் கார்யத்தில் பரமாத்மா ஏவுகிறானோ அந்தக் கார்யத்தில் நிவ்ருத்திக்க முடியாதாகையினால் மறுப்பதும் ப்ரயோஜன மற்றது. எந்தக் கார்யத்தில் அவன் ஏவுகிறதில்லையோ அந்தக் கார்யத்தில் ப்ரவ்ருத்திக்க முடியாதாகையினால் மறுக்க வேண்டிய தவஶ்யமில்லை என்று தாத்பர்யம். இவ்விடத்தில் சார்வாகனைத்தவிரமற்ற ஸித்தாந்தங்களைப்பற்றி வரும்ஆக்ஷேபத்தின் முடிவு இது—*[1] ‘நிக்ரஹாநுக்ரஹாஶக்த ஸர்வேஶ்வர ப்ரஷ்ட்ருரேவோதித: | நிக்ரஹாநுக்ரஹாப்யாம் ச ஜதீதம் ஶாஸ்த்ரைக்யம்||’ *என்பது. ஜீவாத்மாவிற்கு அறியும் தன்மை, கர்த்தாவாக இருக்கை, பாதந்த்ரனாக இருக்கை, இவைகளில்லை என்கிறஆக்ஷேபங்களைப் போலவே அவன் பரதந்த்ரனாக இருந்தால் விதிக்கிற வாக்யங்களும் தடுக்கிற வாக்யங்களும் ப்ரயோஜன மற்றவைகளாக வேண்டிவரும் என்கிற ஆக்ஷேபத்தையும்,ஐந்தாவது வேதத்தையும், அதின் உபநிஷத்தையும் ப்ரத்யக்ஷமாகக் கண்டறிந்தவராகிய பகவானாகிய வ்யாஸர் தானே பரிஹரித்திருக்கிறார் என்று சொல்லுகிறார்—‘இந்த ஆக்ஷேபமும்’ என்றாரம்பித்து. ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டதும் தடுக்கப்*

‡ *ஶாரீரகஸூத்ரம்* - 2 - 3 - 40.

1 *தாத்பர்ய சந்த்ரிகைக்காரருடைய காரிகை. நிக்ரஹம் என்றும் அநுக்ரஹம் என்றும் சொல்லப்படுகிற முன் செய்த அத்ருஷ்டத்தினால் ஏவப்பட்டவனாகிய ஜீவாத்மா அனுக்ரஹம் செய்யவும் நிக்ரஹம் செய்யவும் தகுந்தவனாகிறான் என்கிற இது எப்படிப் பொருந்தும்.*

என்கிற இந்த ஆக்ஷேபமும் ஸூத்ரகாரராலேயே $ ‘க்ருதப்ரயத்நாபேக்ஷஸ்து விஹிதப்ரதிஷித்தாவையர்த்யாதிப்ய:’ என்கிற ஸூத்ரத்தில் பரிஹரிக்கப்பட்டது. இத்தால் சொல்லப்பட்டதாவது—பரமாத்மாவினால் கொடுக்கப்பட்டதும் அவனையே ஆதாரமாகவுடையதும், அவ

பட்டவைகளும் வ்யர்த்தமாகாமலிருக்க வேண்டியகாரணத்தினாலேயே ஜீவாத்மாவினால் செய்யப்பட்ட ப்ரயத்னத்தை எதிர்பார்த்து பரமாத்மா மேன்மேலும் கார்யங்களில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறான் என்று ஸூத்ரத்தின் அர்த்தம். இவ்விடத்தில் எல்லா ப்ரவ்ருத்திகளும் பரமாத்மாவிற்கு வசப்பட்டிருக்க முதலில் செய்யப்பட்ட ப்ரயத்னத்தை எதிர்பார்த்து என்று எப்படிச்சொல்லப்படுகிறது? ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தமாய்ப் போகவேண்டி வரும் என்கிற ஆக்ஷேபத்திற்கு அப்படி வ்யர்த்தமாகாமலிருப்பதற்காக என்று பரிஹாரம் சொல்லில் நாம் சொல்லுவதற்கும் நீர் சொல்லுவதற்கும் வ்யத்யாஸமில்லையே என்றாக்ஷேபம் வரில் ஸூத்ரத்தின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—‘இத்தால் சொல்லப்பட்டதாவது’ என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—ஈஶ்வரன் யந்த்ரம், முதலியவைகளைப் போலத் தன்னுடைய ஸங்கல்பத்தினால் உண்டாக்கப்பட்ட ப்ரவ்ருத்தி செய்யக்கூடிய சக்தியையுடைய ஶரீரத்தையும் இந்த்ரியங்களையும் கொடுத்திருக்கிறானே அதுவும், பூமி முதலியவைகளைப்போல எல்லா ப்ரவ்ருத்திகளுக்கும் எல்லா நிவ்ருத்திகளுக்கும் பொதுவாக ஸ்வரூபத்தினாலும் ஸங்கல்பத்தினாலும் எல்லாவஸ்துக்களுக்கும் ஆதாரமாக இருக்கிறானே அதுவும், அந்தச் ஶரீரம், இந்த்ரியம், முதலியவைகளை அதிஷ்டானம் செய்யக்கூடிய ஶக்தியை ஜீவாத்மாவிற்குக் கொடுத்திருக்கிறானே அதுவும், இவன் ப்ரவ்ருத்திப்பதற்கு இடமாகிய வெளியிலிருக்கும் விஷயங்களை இவனுக்கு நேரும்படி செய்கிறானே அதுவும், இவையெல்லாம் ஜீவாத்மா கர்த்தா என்பதற்கு அனுகுணமானது. எல்லா ப்ரவ்ருத்திகளுக்கும் நிவ்ருத்திகளுக்கும் பொதுவானது. ஆகையினால் இந்த விஷயத்தில் ஆக்ஷேபிக்க இடமில்லை. இதினாலேயே எல்லா ப்ரவ்ருத்திகளுக்கும் நிவ்ருத்திகளுக்கும் பொதுவாக பகவான் உதாஸீநன் என்று சொல்லப்படுகிறது. இப்படி சக்தியை அடைந்தவனாகிய ஜீவாத்மா ப்ரவ்ருத்தி செய்யும்பொழுது கார்யம் முடிவுபெறுவதற்காகப் பகவான் அனுமதி செய்கிறானே அதுவும் ஜீவாத்மாவிற்குக் கர்த்ருத்வத்தைத் தடுக்காது. பின்னை எப்படி என்னில் அதையே வ்ருத்தி செய்கிறது. ஆகையினால் அதைக்

$ ஶாரீரகஸூத்ரம் - 2 - 3 - 41.

ளுல் கொடுக்கப்பட்ட சக்தியையுடையதுகளாயு மிருக்கிற ஶரீரம், இந்த்ரியம், இவைகளைக்கொண்டு ஜீவாத்மாவாகிய தானும் அவனையேஆதாரமாகவுடையவனுய்க் கொண்டும், அவனுல் கொடுக்கப்பட்ட சக்தியையுடையவனுய்க்கொண்டும், கர்மங்கள் உண்டாவதற்காகத் தன்னுடைய இஷ்டத்திளுல் இந்த்ரியம் முதலியவைகளை அதிஷ்டானம்செய்வதாகிய ப்ரயத்னத்தைச் செய்ய ஆரம்பிக்கிறுன். அவனுக்குள்ளே இருக்கிற பர

---

கொண்டும் விதிக்கிறதும் தடுக்கிறதுமாகிய ஶாஸ்த்ரங்கள் வ்யர்த்தம் என்பது ஸம்பவிக்காது. ஒரே கார்யத்தில் பரமாத்மாவாகிய மற்றொரு கர்த்தா சேர்ந்திருப்பது ஜீவாத்மா ஸ்வதந்த்ரனல்ல என்பதற்குக் காரணமாகாது. தனித்தனி மனுஷ்யனுல் செய்யமுடியாததாய் அனேகம் பேர்களிளுல் சேர்ந்து செய்யப்படுகிற கார்யத்திலும் லோகத்தில் விதிப்பதையும் தடுப்பதையும் அவைகளின் ப்ரயோஜனத்தையும் கண்டிருப்பதிளுல் ப்ரவ்ருத்தி செய்யக்கூடிய சக்தியையுடையவனுக்கு ஆசை உண்டாகும்பொழுதுமற்றொருவரால் தடுக்கமுடியாமலிருப்பதிளுல் ஸ்வதந்த்ரன் என்பதும் ஏற்படுகிறது. இப்படி 1 'கார்யதேஹஸ்வஶ: கஉ ஸஹ்ஃ ஷுக்ரதிபெஜ மஃமணெ:' என்றிவை முதலிய இடங்களிலும் ஜ்ஞானம், ஆசை, இவைகளை முன்னிட்டு ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறபடியிளுலும் விஶேஷமாகிய இச்சையும் அந்தந்தக் குணங்களின் வாஸனைகளின் விஶேஷங்களைக் காரணமாக உடையதிளுல் ஜீவாத்மாவிற்குக் கர்த்ருத்வம் ஸ்தாபிக்கப்பட்டது. ஆகையிளுலேயே இவ்விடத்திலும் ஐந்து காரணங்களுக்குள் 'கர்தா' என்று பெயரிருப்பதிளுல் கர்த்தாவாகவே ஜீவாத்மா நிரூபிக்கப்படுகிறுன். ஶரீரம், இந்த்ரியங்கள், சக்தி, ஜ்ஞானம், இச்சை, இவைகளில், வ்யத்யாஸத்தைக் கொடுத்திருப்பதும் கெட்ட கார்யத்தில் ப்ரவ்ருத்திக்கும் பொழுது தடுக்காமல் இருப்பதும், அனுமதி செய்வதும், பாபத்தையுண்டாக்குவதும் செய்கிறுனே அதுவும் அநாதியாகிய முன்செய்த கர்மங்களின் வ்யத்யாஸத்தைக் காரணமாகவுடையதாகையிளுல் பகவானுக்குப் பக்ஷபாதம், தயையில்லாமை, இவைகளை உண்டாக்காது. ப்ரவ்ருத்திகளின் வ்யத்யாஸம் அத்ருஷ்டங்களின் வ்யத்யாஸத்தைக் காரணமாக வுடையதாயிருந்த போதிலும் அந்த அத்ருஷ்டமே ஶாஸ்த்ரத்தை முன்னிட்டு இவனுக்கு மேல்வரும் அத்ருஷ்டத்தை உண்டுபண்ணுகிறது. அந்த அத்ருஷ்டமும் அப்படியே. ஆகையிளுல் விதிக்கிறதும் தடுக்கிறதுமாகிய ஶாஸ்த்ரங்களுக்கு இட

---

1 பகவத்கீதை -3 - 5,

மாத்மா தான் அனுமதி கொடுப்பதினால் அவனை ப்ரவ்ருத்திப்பிக்கிறான். ஜீவாத்மாவிற்கும் தன்னுடைய புத்தியினாலேயே ப்ரவ்ருத்தி செய்யக் காரணமாகும் தன்மை இருக்கிறது. எப்படி அதிகக் கனமுள்ள பாறை

முண்டாகிறது. முன் ஜன்மத்தில் யஜ்ஞம் முதலியவைகளுக்குக் காரணமாகிய அத்ருஷ்டம் செய்யப்பட்டதென்று அந்த அத்ருஷ்டத்தினாலேயே இந்த ஜன்மத்தில் யஜ்ஞம், முதலியன முடிவு பெறவல்லவா. ஏனெனில் அந்த யஜ்ஞம், முதலியன ஶாஸ்த்ரங்களினாலுண்டாக்கப் படுகிற புத்தி முதலியவைகளை அபேக்ஷித்திருக்கிறபடியினால். இப்படியே பாபத்திற்குக் காரணமாகிய அத்ருஷ்டமும் தன்னுடைய புத்தியினாலேயே நிவ்ருத்தி செய்யவேண்டியதென்று உத்திரவு செய்யத் தகாததான தசையையுண்டாக்கிப் பாபத்தில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்கிறது. அந்தப் பாபமும் அப்படியே செய்கிறது. இப்படி ஒப்புக் கொள்ளாமல் நல்ல கார்யத்திலும் கெட்ட கார்யத்திலும் ப்ரவ்ருத்திப்பது அத்ருஷ்டத்தையே காரணமாகவுடையதாகையினால் அவைகளுக்கு ஶாஸ்த்ரம் வேண்டியதில்லை என்று சொல்லுகிறவனுக்கு இதற்குமுன் அத்ருஷ்டத்திலும் இப்படியே சொல்லலாமாகையினால் 1 'தன்னுடைய வார்த்தைக்கே' விரோதம் வருகிறது. ஆனால் எல்லா ப்ரவ்ருத்திகளும் அத்ருஷ்டத்தையே காரணமாக வுடையதாயிருந்தால் ஶாஸ்த்ரம் ப்ரயோஜனமற்றதாய்ப் போகவேண்டி வருகிறது. ஶாஸ்த்ரமோ எல்லோராலும் ப்ரயோஜனமுடையது என்று ஒப்புக் கொள்ளப்படுகிறது. ஆகையினால் அத்ருஷ்டத்தைக் காரணமாக வுடையதென்பது உசிதமல்ல என்று நினைக்கிறாயோ? அப்படிக்கும் சொல்ல வழியில்லை. ஏனெனில் லோகத்தில் உண்டாகிய விதிப்பது, மறுப்பது, இவைகளைப்பற்றியும் இப்படிச் சொல்லலாமாகையினால். அவ்விடத்திலும் தந்தம் காரணங்களினுடைய வ்யத்யாஸத்தைக்காரணமாகவுடையது ப்ரவ்ருத்திப்பது, நிவ்ருத்திப்பது, முதலியவைகளின் வ்யத்யாஸம் என்று சொல்லில் '஗ாஂ ஆநய (மாட்டைக் கொண்டுவா)' என்றிவை முதலிய உத்திரவினால் என்ன ப்ரயோஜனம். ஆனால் அந்த உத்திரவும் தன்னுடைய காரணத்தினால் உண்டாக்கப்பட்டதாய் ப்ரவ்ருத்திப்பது, நிவ்ருத்திப்பது, இவைகளின் காரணங்களினுடைய நடுவாலே சேர்ந்திருக்கிறது என்று நினைக்கிறாயோ? அப்படியாகில்

1 அத்ருஷ்டம் என்பது ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்படுகிற கர்மங்களினால் உண்டாகிறது என்று முன் சொல்லி அத்ருஷ்டத்தினாலேயே எல்லாக் கர்மங்களும் செய்விக்கப்படுகிறபடியினால் ஶாஸ்த்ரம் எப்பொழுதும் வேண்டியதில்லை என்று சொல்லுவது ஒன்றுக்கொன்று விரோதமாயிருக்கிறது.

கள், மரங்கள், முதலியவைகள் சலிப்பதற்குக் காரணமாகிய வ்யாபாரங்களில் அநேக மனிதர்களினால் செய்யக்கூடியதாயிருக்க அநேகம் பேரைக்காரணமாக இருக்கையும், அதில் ஒருவனுக்குச் செய் என்கிற

வேதத்தில் சொல்லப்படுகிற உத்திரவும் என்று தெரிந்துகொள். இப்படியாகில் லோகத்திலேற்பட்ட உத்திரவையும் விட்டுவிடுகிறோம் என்று சொல்லில் அஹோ! ஒருவர்க்கொருவர் வ்யவஹாரங்களும், வ்யுத்பத்தி முதலியவைகளும் ஸம்பவிக்காதாகையினால் சார்வாகனுக்கும் வேறு வழியில்லை. ஆகையினால் ஊமையாயிருந்துவிடவேண்டியதுதான். இப்படிப் பொதுவாக எல்லாக் கர்மங்களும் அத்ருஷ்டங்களின் வ்யத்யாஸத்தைக் காரணங்களாக வுடையதாயிருந்தபோதிலும் ஶாஸ்த்ரத்திற்கும் இடமுண்டாக இருக்க அந்த ஶாஸ்த்ரமே பரமாத்மாவின் புத்தியே அத்ருஷ்டம் என்று உபதேசிக்கிறது. அப்படிப்பட்ட ஈஶ்வரனும் ப்ரமாணத்தினால் அறியப்படுகிறான். ஆகையினால் இந்த விஷயத்தில் ஒருவித ஆக்ஷேபங்களுக்கும் இடமில்லை. ஆனால் பக்ஷபாதம், தயையில்லாமை, முதலிய தோஷங்களும் பரமாத்மாவிற்கில்லை. அப்படியே நம்மாசார்யனாகிய வாதிஹம்ஸாம்புதாசார்ய (அப்புள்ளார்) ரால் 1 'கர்மணாம் வைஷம்யேஸதி க்ருதி கிம்நாம குர்யாத் வரத: உதாரதயா துர்கதிம் வாஞ்சந்தி சேத் கிம் வா தததீத' என்றருளிச் செய்யப்பட்டது. ஆகையினால் சார்வாகனைத் தவிர மற்ற எல்லா ஸித்தாந்தத்திலிருப்பவர்களும் பொதுவாகிய ஸமாதானத்தின் ஸாராம்ஶம் இது— 2 'தத்தத்திஷ்டாத்ருஷ்ட மூல ஶாஸ்த்ரவஶ்ய தஶா...'

1 கர்மணாம் - கர்மங்களுக்கு, வைஷம்யேஸதி - வ்யத்யாஸங்கள் உண்டாயிருக்க, க்ருதி-எல்லாவற்றையும் செய்கிற பகவான், கிம்நாமகுர்யாத்-என்ன செய்வான், வரத:—வரத்தைக்கொடுப்பவனாகிய பகவான், உதாரதயா-உதாரனாக இருப்பதினால் (இவர்கள்), துர்கதிம் - கெட்டகதியை, வாஞ்சந்திசேத் ஆசைப்படுவார்களேயானால், கிம்வாததீத - வேறு எதைக்கொடுப்பான்.

2 தாத்பர்யசந்த்ரிகைக்காரருடைய காரிகை - தத்ததிஷ்டா-அந்தந்த ஸித்தாந்தத்திலிருப்பவர்களினால் ஒப்புக்கொள்ளப்பட்ட, அத்ருஷ்ட - அத்ருஷ்டத்தை, மூல - காரணமாகவுடைய, ஶாஸ்த்ரவஶ்யதஶா—ஶாஸ்த்ரத்திற்குக் கீழ்படிந்திருக்கும் தசையின், அந்வயாத்-ஸம்பந்தத்தினால், புன:—மறுபடியும், ததா ததா-அந்தந்தவிதமாகவே, அத்ருஷ்ட ஸம்பத்தி:-அத்ருஷ்டத்தின் உத்பத்தி, உபபத்யதே-உசிதமாகிறது, புமான் - ஜீவாத்மா, புமர்த்தஸாதனத்வேந - புருஷார்த்தங்களுக்கு ஸாதனமாக, ப்ரதிதே-அறியப்படுகிறபடியினால், ஸ்வேச்சயா-தன்னுடைய இஷ்டத்தினால், ப்ரவர்த்தேத-ப்ரவ்ருத்தி செய்வான், இதி-என்று, தாதர்த்யாத்—இதற்காக ஏற்பட்டிருப்பதினால், சோதனா - விதி, அத்ர - இவ்விடத்தில், ஸாவகாசா - இடமுடையது.

விதிக்கும், செய்யாதே என்கிற மறுத்தலுக்கும் விஷயமாக இருக்கையும் ஸம்பவிக்கிறதோ அதைப்போல— என்பது. 14—15

𑌤𑌤𑍍𑌰𑍈𑌵𑌂 𑌸𑌤𑌿 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌮𑌾𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌕𑍇𑌵𑌲𑌂 𑌤𑍁 𑌯𑌃 ।
𑌪𑌶𑍍𑌯𑌤𑍍𑌯𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌨𑍍𑌨 𑌸 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃 ॥ 16

ப. ரை] 𑌏𑌵𑌂 𑌸𑌤𑌿 – இப்படி இருக்கும்பொழுது, 𑌯𑌃 - எவன், 𑌤𑌤𑍍𑌰 - அந்தக் கர்மத்தில், 𑌕𑍇𑌵𑌲𑌂 - ஒருவனாகிய, 𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 - ஜீவாத்மாவை, 𑌕𑌰𑍍𑌤𑌾𑌰𑌂 - கர்த்தாவாக, 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 – தெரிந்து கொள்ளுகிறானோ, 𑌦𑍁𑌰𑍍𑌮𑌤𑌿𑌃 - விபரீதமான புத்தியையுடைய, 𑌸𑌃 - அவன், 𑌅𑌕𑍃𑌤𑌬𑍁𑌦𑍍𑌧𑌿𑌤𑍍𑌵𑌾𑌤𑍍 - உள்ளபடியான புத்தி உண்டாகாமையினால், 𑌨 𑌪𑌶𑍍𑌯𑌤𑌿 - (கர்த்தாவை உள்ளபடி) அறிகிறதில்லை. 16

பா] ஜீவாத்மாவிற்குக் கர்த்ருத்வம் பரமாத்மாவின் அனுமதியினால் உண்

---

𑌤𑍍 । 𑌸𑌾𑌨𑍍𑌨𑌿𑌧𑍍𑌯𑌾𑌤𑍍𑌯𑌥𑌾 𑌦𑍃𑌷𑍍𑌟𑌾 𑌸𑌂𑌵𑌿𑌤𑍍𑌤𑌿𑌃 𑌸𑌂𑌪𑍍𑌰𑌵𑌰𑍍𑌤𑌤𑍇 ॥ 𑌸𑌾𑌕𑍍𑌷𑍍𑌯 𑌸𑌾𑌯𑌂 𑌨𑌚𑍈𑌵 𑌨 𑌹𑍍𑌯𑌿𑌤𑍋𑌽𑌸𑍍𑌵𑌤𑍍𑌵𑌯𑌾 𑌸𑌾𑌧𑌨𑌮𑍍 । 𑌹𑍍𑌯𑌤𑍇𑌷𑍁 𑌤𑍇𑌷𑍁 𑌤𑌥𑍈𑌵 𑌸𑌾𑌵𑌕𑌾𑌶𑌾𑌤𑍍𑌪𑍍𑌰𑌵𑍇𑌷𑌣𑌾 ॥' என்பது. இவ்விடத்தில் ஶரீரம், இந்த்ரியம், இவைகளைக் கொடுப்பது முதலிய பொதுவான உபகாரங்களை எதிர்பார்க்கிறபடியினால் ஜீவாத்மாவின் கர்த்ருத்வம் பரமாத்மாவினால் உண்டானது என்பது 'ஶக்தியுடையவனாய்க் கொண்டு' என்கிற வரையிலுள்ள வாக்யத்தினால் சொல்லப்பட்டது. 'கர்மங்கள் உண்டாவதற்காக' என்றாரம்பிக்கும் வாக்யத்தினாலோ வெனில் விஶேஷமான ப்ரவ்ருத்தியில் ஜீவாத்மாவிற்கு ஸ்வாதந்த்ரியம் உண்டு என்று காட்டப்பட்டது. அதிலும் பரமாத்மாவின் உபகாரம் 'அவனுக்குள்ளே இருக்கிற' என்பது முதலியதினால் சொல்லப்பட்டது. 'அவனை' என்பதற்கு ப்ரயத்தனம் செய்ய ஆரம்பித்துக்கொண்டிருப்பவனை என்றர்த்தம். 14—15

இப்படி ஐந்து வஸ்துக்கள் சேர்ந்து காரணமாக இருந்தபோதிலும் ஜீவாத்மாவே கர்த்தாவாக இருக்கும் பக்ஷத்தில் கர்த்தாவல்ல என்றனுஸந்தானம் செய்வது ப்ரமமாகவே இருக்கவேண்டியதல்லவா. விதிக்கிறதாயும், மறுக்கிறதாயுமிருக்கிற ஶாஸ்த்ரங்களுக்கு ப்ரயோஜனமுண்டாவதற்காகக் கர்த்ருத்வத்தை இல்லையென்று சொல்லமுடியாது. ஒத்தாசைக் கருவிகளை எதிர்பாராத கர்த்ருத்வம் மறுக்கப்படுகிறது என்று சொல்லுவதும் ஸரியல்ல, அப்படிப்பட்ட கர்த்ருத்வத்திற்கு ப்ரஸ்தாவமே இல்லாமையினால் அதை மறுப்பது பொருந்தாதாகையினால். ஒருவனும் தேஹம், இந்த்ரியங்கள், தடி, சக்கிரம், முதலியவைகளை எதிர்பாராமல் செய்கிறேன் என்று எண்ணுவதில்லையல்ல

டானதாக இருக்க அந்தக் கர்மத்தில் கேவலம் ஜீவாத்மாவையே கர்த்தா

---

வா என்றுக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக தேஹமே ஆத்மா என்கிற ப்ரமமுடையவர்களுக்கு உண்டாகிற வேறொரு நியமிப்பவனை எதிர்பாராமல் ஸ்வபாவத்திலேயே தனக்குக் கர்த்ருத்வம் உண்டு என்கிற ப்ரமத்தையும், அநேகம் வஸ்துக்கள் சேர்ந்து செய்யப்படுகிற கர்மத்தில் வேறொருவருக்கும் வசப்பட்டதல்ல என்கிற அபிமானத்தையும் தடுப்பது அகர்த்ருத்வானுஸந்தானம், என்று சொல்லப்படுகிறது —இந்த ஸ்லோகத்தினுல். 'பரமாத்மாவின் அனுமதியினுல் உண்டானதாக இருக்க' என்றது எல்லாக்காரணங்களையும் நியமிக்கக் கூடியவனுகிய முக்யமான காரணத்தைச் சொல்லியிருக்கிறது. 'ஜீவாத்மாவையே' என்பது தன்னுடைய ஆத்மாவை என்றர்த்தம். ஆகையினுலேயே 'கர்த்தாரம்' என்னும் பதமும் முன் ஸ்லோகத்திலே போல் ஜீவாத்மாவைச் சொல்லுகிறதல்ல. அப்படிக்கில்லாவிடில் கர்மங்களை யாரம்பிப்பதற்குக் காரணமாக என்று சேர்த்துக்கொள்ளவேண்டிவரும் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறுர்—'கேவலம் ஜீவாத்மாவையே கர்த்தாவாக' என்று. ஸ்லோகத்திலிருக்கிற 'து' என்னும் பதம் ஆத்மாவையே என்கிற அர்த்தத்தைச் சொல்லுவதாக வ்யாக்யானஞ்செய்யப்பட்டது. அன்றிக்கே ஆக்ஷேபத்தைக் கடுப்பதாகிய அர்த்தத்தைச் சொல்லுவதாக இருந்தபோதிலும் 'கேவலு' என்னும் பதத்தினுல்சொல்லப்பட்டஅர்த்தத்தை ப்ரகாசப்படுத்துவதற்காக'ஆத்மாவையே' என்று சொல்லியிருக்கிறதாகவுமாம். இவ்விடத்தில் 'கேவலு'என்னும்பதத்தினுல்ஸ்வபாவத்திலேயே கர்த்தாஎன்றனுவாதம்செய்வதாக ஏன் இருக்கக்கூடாது என்னில் நாலுபேர்களோடு சேர்ந்து கர்மத்தைச் செய்கிறுனென்று கீழே ப்ரஸ்தாவிததுக்கொண்டு வந்து இப்படித்தெரிந்து கொள்ளாதவனை நிந்திக்கிற இடத்தில் கீழ்ச்சொன்ன அர்த்தத்தை விலக்குவதுஸ்வாரஸ்யமாகையினுலும், அப்படியேசொல்ல வேண்டிய தவஸ்யமாகையினுலும். இவ்விடத்தில் மற்றவர்களால் ஆத்மா விகாரத்தை அடையத்தகாத ஸ்வபாவத்தை யுடையவனுகையினுல் ஶரீரம் முதலியவைகளோடு சேருவது பொருந்தாதாகையினுல், ஏனெனில் விகாரத்தை உடையவனுக்கல்லவோ மற்றவஸ்துக்களோடு சேர்க்கையும் அப்படிச்சேர்ந்துகர்த்தாவாயிருக்கையும் ஸம்பவிக்கும். விகாரமில்லாத ஜீவாத்மாவிற்கு ஒன்றோடும் சேர்க்கையில்லாமையினுலே சேர்ந்து கர்த்ருக்வம் பொருந்தாது என்று வ்யாக்யானம் செய்யப்பட்டது. அது உசிதமல்ல. ஸ்வரூபத்தில் உத்பத்தி, முதலிய விகாரங்

வாக எவன் அறிகிறானோ, விபரீதபுத்தியை யுடைய அவன் உள்ளபடியே இருக்கிற வஸ்துவைப் பற்றிய புத்தி உண்டாகாமையினால் உள்ளபடியே இருக்கிற கர்த்தாவை அறியவில்லை. 16

---

களில்லாத ஜீவாத்மாவிற்கு 1 'दारुण्यग्निर्यथा तैलं तिले तद्वत् पुमानपि । प्रधानेऽवस्थितो व्याप्य चेतनात्मात्मवेदनः ॥' என்றிவை முதலிய ஶாஸ்த்ரங்களினால் மற்றொரு வஸ்துக்களோடு சேர்ந்திருப்பதும், ஜ்ஞானம், செய்யவேண்டுமென்கிற ஆசை, இவை முதலியவைகளுக்கு ஆதாரமாக இருக்கையினாலே ஒத்தாசைக் கருவிகளுடன் சேர்ந்து கர்த்தாவாக இருக்கை ஸ்தாபிக்கப் பட்டிருப்பதினால். அப்படிக்கில்லாவிடில் இவ்விடத்திலேயே 2 'पञ्चैते तस्य हेतवः' என்று ஜீவாத்மாவையும் காரணமாகஎண்ணியிருப்பதற்கு விரோதம் வருமாகையினால். 'दुर्मतिः' என்பது கீழ்ச்சொல்லியதை அனுவாதம் செய்கிறது, அப்படிச் சொல்லாவிடில் புனருக்தி வருகிறபடியினால் என்கிறஅபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'விபரீத புத்தியையுடைய' என்று. 'अकृतबुद्धित्वात्' என்பதற்கு இவ்விடத்தில் வேதாந்த ஶாஸ்த்ரங்களினால் உண்டாக்கப் பட்ட ஜ்ஞானத்தை உடையவனல்லாதவன் என்றர்த்தம். இதையே சொல்லுகிறார்—'உள்ளபடியே இருக்கிற' என்றாரம்பித்து. 'यः पश्यति न स पश्यति (எவன் அறிகிறானோ அவன் அறிகிறதில்லை)' இவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாக இருக்கிறபடியினால் அவனுக்கு ஜ்ஞானம் இருந்தபோதிலும் அது உள்ளபடியே இல்லாமையினாலே இல்லாததற்கு ஸமானமாகையினால் நிந்திக்கப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'உள்ளபடியே இருக்கிற கர்த்தாவை அறியவில்லை' என்று. வெளியிலிருக்கும் வஸ்துக்களைப்பற்றி உள்ளபடியான ஜ்ஞானம் ஸம்பவிக்குமாகையினால் அறியவில்லை என்பது ப்ரக்ருத விஷயத்தைப்பற்றி என்று சுருக்கிச் சொல்லுகிறார்—'கர்த்தாவை' என்று. ஸ்வபாவத்தினாலேற்பட்டதும், ப்ரயோஜனங்களுக்காக ஏற்பட்டதும், ஶாஸ்த்ரங்களினாலேற்பட்டதுமாகிய கர்மத்தைத் தவிர மற்ற விஷயங்களில் ப்ரவ்ருத்திக்கக் கூடாது. அவஶ்யமாகச் செய்யவேண்டியவைகளாகிய ஸ்வபாவத்தினாலேற்பட்டது முதலிய மேலேசொல்

---

1 தாருணி - மரத்தில், அக்னி - நெருப்பும், திலே - எள்ளில், தைலம் - எண்ணெயும், யதா - எப்படியோ, தத்வத் - அதைப்போல, புமாநபி - ஜீவாத்மாவும், ப்ரதானே - ப்ராக்ருதியில், வ்யாப்ய - வ்யாபரித்துக்கொண்டு, சேதநாத்மா-ஜ்ஞான ஸ்வரூபனாகவும், ஆத்மவேதந:- ஸ்வயம்ப்ராகாசனாகவும், அவஸ்தித:- இருக்கிறான்.

2 பகவத்கீதை - 13 - 15.

யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர் யஸ்ய ந லிப்யதே|
ஹத்வாபி ஸ இமாம் லோகாந் ந ஹந்தி ந நிபத்யதே || 17

ப—ரை] யஸ்ய - எவனுடைய, பாவ:—அபிப்ராயம், நாஹங்க்ருத:—நான் என்கிற அபிமானத்தினால் உண்டாகவில்லையோ, யஸ்ய - எவனுடைய, புத்தி:—புத்தியானது, நலிப்யதே - பற்றுதலை அடைவதில்லையோ, ஸ: – அவன், இமாந்—இந்த, லோகாந் - லோகங்களை, ஹத்வாபி - கொன்றும், நஹந்தி - கொல்லுவதில்லை, ந நிபத்யதே - கர்மத்தினால் கட்டப்படுகிறது மில்லை. 17

பா] பரமாத்மாவே கர்த்தா என்று அனுஸந்தானம் செய்வதினால்கர்த்ருத்வத்தைப்பற்றிய எவனுடைய மனதின் வ்யாபாரம் நான் என்கிற அபி

*லிய கர்மங்களிலும், தன்னிடத்திலும் ஶரீரம் முதலியவைகளினிடங்களிலும் பாகப்படிக் கர்மங்களின் பந்தத்தை வைத்துவிட்டு ப்ரவ்ருத்திக்கவேண்டும் என்று தாத்பர்யம்.* 16

*விபரீதபுத்தியையுடையவனைப்பற்றி ப்ரஸ்தாவம் வந்திருக்கும் பொழுது இப்படியாகில் எவன் நல்ல புத்தியையுடையவன் என்று தெரிந்து கொள்ளவேண்டுமென்கிற ஆசை உண்டாகிறபடியினால் அதற்குப்பதிலாக இப்படி அகர்த்தா என்னும் அனுஸந்தானம் செய்வதின் ப்ரயோஜனம் சொல்லப்படுகிறது—இந்த ஶ்லோகத்தினால். இவ்விடத்தில் 'பாவம்' ஆவது அபிப்ராயம், வேறர்த்தம் பொருந்தாதாகையினால். அதுவும் இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்தும் ஸமீபத்திலிருக்கும் மற்றப்பதங்களை அனுஸரித்தும் விஶேஷித்துச் சொல்லப்படுகிறது—'கர்த்ருவத்தைப்பற்றிய எவனுடைய மனதின் வ்யாபாரம்' என்று. 'அஹங்க்ருத:' என்கிற இடத்தில் நான் என்கிற அபிமானத்தைச் செய்கிறது என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறதாயிருந்தால் அந்வயிக்காதாகையினாலும், நான் என்கிற அபிமானத்திற்கு விஷயமாக இருக்கிறது என்றர்த்தம் சொல்லும் மனதின் வ்யாபாரம் நான் என்கிற அபிமானத்திற்கு விஷயமாயிருக்கிறதென்பது ஸம்பவிக்காதாகையினாலும், நான் என்கிற அபிமானத்தைக் காரணமாகவுடையது என்பது இவ்விடத்தில் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'நான் என்கிற அபிமானத்தினால் உண்டாக்கப்படவில்லையோ' என்று. இவ்விடத்தில் 'அஹம்' என்னும் பதத்தினால் நான் என்கிற அபிமானம் லக்ஷணையாகச் சொல்லப்படுகிறதாகவுமாம். அதுவுமன்றிக்கே 'அஹங்க்ருத:' என்பது 'பூக்ருதா: ப்ராஹ்மணா:' என்கிற இடத்திலே போலக்கர்த்தா என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற 'க்த' என்னும் விகுதியை யுடைய*

மானத்தினுல் உண்டாக்கப்படவில்லையோ அதாவது நான் செய்கிறேன் என்கிற ஜ்ஞானம் எவனுக்கில்லையோ என்றர்த்தம், இந்தக் கர்மத்தில் எனக்குக் கர்த்ருத்வம் இல்லாமையினுல் இதினுடைய ப்ரயோஜனமும் என்னுடன் ஸம்பந்தப்படுவேதில்லை, இந்தக் கர்மமும் என்னுடையதல்ல என்று எவனுக்குப் புத்தி உண்டாகிறதோ என்றர்த்தம். அவன் இந்தலோகங்களை யுத்தத்தில் கொன்ற போதிலும் அவனதைச் கொல்லுவதில்லை.

---

தாகவுமாம். 'நான் என்கிற அபிமானத்தினுல் உண்டாக்கப்படவில்லையோ' என்பது அதிமேலற்பட்ட அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறதாகவுமாம். ஆத்மா 'அஹம் (நான்) என்கிற பதத்திற்கு அர்த்தமாகையினுல் நான் என்கிற அபிமானத்தை விட்டுவிடுவேதென்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்— 'அதாவது நான் செய்கிறேன்' என்றுரம்பித்து. இதுவும் நானே என்று சேர்த்து அர்த்தம் சொல்லிக்கொள்ளத் தக்கது, அப்படிக்கில்லாவிடில் நேரில்கர்த்தா என்று சொல்லியிருப்பதற்கு விரோதம் வருகிறபடியினுல். இப்படிக் கர்த்ருத்வத்யாகம் நேரில் சொல்லப்பட்ட பிறகு மிகுதியாக இருக்கிறபடியினுல் தானுகவே ஏற்பட்ட பலம், ஸங்கம், இவைகளின் த்யாகம் 'யஸ்ய புத்திர் ந லிப்யதே' என்றனுவாதம் செய்யப்படுகிறது என்று சொல்லுகிருர்—'இந்தக் கர்மத்தில்' என்றுரம்பித்து. 1 'கெட்ட நடத்தையிலிருந்து ஓய்வாதவனும் இல்லாதவனும்' என்றர்த்தமுள்ள ச்ருதிவாக்யம் முதலியவைகளில் தடுக்கப்பட்ட ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்டவைகளைத் தவிர மற்றக்கொல்லுதலை விலக்குவதற்காக இந்தச் ஶாஸ்த்ரத்தின் ஆரம்பத்தில் ஏற்பட்டதாகிய அர்த்தத்தைச் சேர்த்துக்கொண்டு சொல்லுகிருர்—'யுத்தத்தில் கொன்றபோதிலும்' என்று. 'ந ஹந்தி (கொல்லுவதில்லை)' என்பதற்கு நானே கொல்லுகிறேன் என்கிற அபிமானத்தினுல் உண்டாக்கப்படுகிற அத்ருஷ்டத்தை உடையவனுகையினுலே அதின் ப்ரயோஜனத்தோடு ஸம்பந்தம் அடைவதற்குத் தகுந்தவர்களாகிய மற்றக்கொல்லுகிறவர்களைவிட வேறுபட்டவன் என்றர்த்தம். அப்படிச் சொல்லாவிடில் 'ஹத்வாபி ந ஹந்தி (கொன்றபோதிலும் கொல்லுவதில்லை)' என்பவைகள் ஒன்றுக்கொன்று விரோதமாகுமாகையினுல், இவ்விடத்தில் மற்றவர்களால் ஜீவாத்மாவிற்குச் கொல்லுவதில் கர்த்ருத்வம் இல்லாமையினுலே அதின் கார்யமாகிய அதர்மத்தின் ப்ரயோஜனத்துடன் அவன் ஸம்பந்தப்படுகிறதில்லை என்று சொல்

---

1 கடோபநிஷத் - 1 - 2 - 24.

கேவலம் இந்தப்பீஷ்மர்முதலியவர்களை மாத்திரமல்லஎன்றர்த்தம். ஆகையினால் அந்த யுத்தமென்னு பேருடையகர்மத்தினால்கட்டப்படுவதுமில்லை. அதாவது அதின் பலத்தை அனுபவிக்கிறதில்லை என்றர்த்தம். 17

பா-அ] கர்த்தா அல்ல என்பவை முதலியவைகளைப்பற்றிய இந்த அனுஸந்தானமெல்லாம் ஸத்வகுணம் வ்ருத்தியடைவதினாலேயே உண்டா

---

லப்படுகிறது என்று அர்த்தம் சொல்லப்பட்டது. அது உசிதமல்ல, 'யஸ்ய நாஹங்க்ருதோ பாவ:' என்றிவை முதலிய விசேஷணங்கள் ப்ரயோஜனமற்றதாகையினால். ஏனெனில் இப்படித்தெரிந்துகொள்ளாத மற்றொருவனுக்கும் அவர்கள் மதத்தில் கர்த்ருத்வம் இல்லையாகையினாலும், அவனிடத்திலும் காமங்களின் பலங்களுடைய ஸம்பந்தம் பொய்யென்றேற்புக் கொள்ளப்பட்டிருப்பதினாலும். 1 'கதம் பீஷ்மம்' என்றிவை முதலிய கேள்வையைக் கைமுதிக ந்யாயத்தினாலே நிராகரிப்பதற்காக 'இமாந் லோகாந் (இந்த லோகங்களை)' என்று பொதுவாகச் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கேவலம் இந்தப் பீஷ்மர்' என்றாரம்பித்து. இவ்விடத்தில் 'ந ஹந்தி' என்பதற்கு 'ந நிபத்யதே' என்பது வ்யாக்யானம் என்று மற்றவர்கள் அர்த்தம் சொன்னது வேறு நல்லகதி ஸம்பவிக்கும்பொழுது யுக்தமல்ல. ஆகையினால் 'யஸ்ய நாஹங்க்ருதோ பாவ: புத்திர்யஸ்ய ந லிப்யதே' என்று காரணமும் கார்யமுமாக இருக்கிற இவைகளின் ப்ரயோஜனமும் காரணமும் கார்யமுமாக இருக்கிறதென்று 'ந ஹந்தி ந நிபத்யதே' என்பதினால் சொல்லப்படுகிறது, என்று சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. 'ந நிபத்யதே' என்பதினால் கர்மங்களினாலுண்டாக்கப்படுகிற மோக்ஷத்திற்கு விரோதியாகிய பலத்துடன் ஸம்பந்தமில்லை என்பது சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதின் பலத்தை அனுபவிப்பதில்லை' என்று. இத்தால் கர்மங்களைச் செய்யும் பொழுது அஹங்காரம் இல்லாமலிருப்பதும் கர்மங்களைச்செய்த பிறகு என்னால் செய்யப்பட்டது என்று எண்ணிக்கொண்டிராமையும் கீழே சொல்லப்பட்டது. 'ந ஹந்தி', 'ந நிபத்யதே' என்கிற இவை இரண்டினாலும் இந்த லோகத்தில் தோஷமில்லை என்பதும் லோகாந்தரத்தில் தோஷமில்லை என்பதும் சொல்லப்படுகிறது என்றர்த்தம் சொன்னது நிராகரிக்கப்பட்டது. 17

---

1 பகவத்கீதை - 2-4.

கிறதாகையினுல் ஸத்வகுணத்தை அங்கீகரிக்க வேண்டும் என்று தெரிவிப்பதற்காகக் கர்மங்களில் ஸத்வம் முதலிய குணங்களினுல் ஏற்பட்ட வ்யத்யாஸத்தை விஸ்தாரமாக நிரூபிக்கப்போகிறவராய் கர்ம விதிகளின் விதத்தை முதலில் சொல்லுகிறுர்—

ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதநா |
கரணம் கர்ம கர்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ: || 18

ப - ரை] கர்மசோதநா - கர்மங்களைப்பற்றிய விதி, ஜ்ஞாநம் - கர்மங்களைப்பற்றிய ஜ்ஞானம், ஜ்ஞேயம் – அறியத்தகுந்த கர்மம், பரிஜ்ஞாதா - அறிகிற புருஷன் (என்று), த்ரிவிதா - மூன்றுவிதமானது, அதாவது இந்த மூன்றுமே சேர்ந்தது, கர்மஸங்க்ரஹ: - கர்மமானது, கரணம் – த்ரவ்யம், கர்ம – கர்மம், கர்தா - அனுஷ்டிக்கிறவன், இதி - என்று, த்ரிவித: - மூன்றுவிதமானது, அதாவது இந்த மூன்றுமே சேர்ந்தது. 18

பா] ஜ்ஞாநம் - செய்யவேண்டிய கர்மங்களைப்பற்றிய ஜ்ஞானம், ஜ்ஞேயம் - அனுஷ்டிக்கவேண்டிய கர்மம், பரிஜ்ஞாதா - அவைகளை அறி

---

தா] இப்படி ஸாத்விக த்யாகம் நிரூபிக்கப்பட்டது. பிறகு அதற்காக 'நித்யஸத்வஸ்த:' என்றிவை முதலியவைகளினுல் அநேகவிதமாக முன்பு ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஸத்வகுணம் அங்கீகரிக்கத்தகுந்தது என்பது பூர்த்தியாக நிரூபிக்கத்தக்கது. அவ்விடத்தில் நடுவில் கர்மவிதிகளின் விதங்கள் முதலியதைச் சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறுர்—'கர்த்தா அல்ல' என்றாரம்பித்து. கர்மவிதிகளின் விதத்தைச் சொல்லியிருப்பது அதைச் சேர்ந்தவைகளாகிய ஜ்ஞானம் முதலியவைகளில் ஸத்வம் முதலிய குணங்களினுல் மூன்றுவிதமான வ்யத்யாஸமுண்டென்பதை நிரூபிப்பதற்காக என்றர்த்தம். 'செய்யவேண்டிய கர்மங்களைப்பற்றிய' என்பவைமுதலியவைகளுக்கு 'ஜ்ஞாநம்' 'ஜ்ஞேயம்' 'பரிஜ்ஞாதா' என்னும் பதங்கள் பொதுவான அர்த்தத்தைச் சொல்லுகிறவைகளாக இருந்தபோதிலும் கர்மவிதிகள் மூன்றுவிதம் என்பதைச் சொல்ல வந்ததாகையினுல் விசேஷமான அர்த்தத்தைச் சொல்லுகின்றன என்று தாத்பர்யம். இத்தால் இவ்விடத்தில் 'ஜ்ஞாநம்' என்னும் பதம் ஶாஸ்த்ரத்தைச் சொல்லுகிறது என்று வ்யாக்யானஞ் செய்தது நிராகரிக்கப்பட்டது. ப்ரவ்ருத்திக்குக் காரணமாகிய வார்த்தையாகிய விதியைவிட வேறுக இருக்கிற ஜ்ஞானம் முதலியவைகளை விதியின்

கிறவன், என்று மூன்றுவிதம் கர்மங்களைப்பற்றிய விதி, அதாவது ஜ்யோதிஷ்டோமம் முதலிய கர்மங்களைப்பற்றிய விதி ஜ்ஞானம், அறியத்தகுந்த கர்மம், அறிகிற புருஷன், இவைகளோடு சேர்ந்தது, அதில் 'ஜ்ஞேயம்' என்று சொல்லப்பட்ட கர்மம் அனுஷ்டிக்கப்படுகிறதாகையினால் 'ஸம்க்ரஹ:' என்னப்படுகிறது. அது மூன்றுவிதம். கரணம்-கர்மங்களுக்கு

உட்பிரிவுகள் என்று சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'அதாவது ஜ்யோதிஷ்டோமம் முதலிய' என்றாரம்பித்து. ஜ்ஞானம், முதலியவைகள் அந்தக் கர்மவிதிகளுடன் ஸம்பந்தப்பட்டிருப்பது மாத்திரத்தினால் அதின் விதமாகச் சொல்லப்படுகிறது என்றர்த்தம். இப்படியே 'த்ரிவித: கர்மஸம்க்ரஹ: (கர்மம் மூன்றுவிதம்)' என்கிற இடத்திலும் இந்த இரண்டு காரணங்களுடன் சேர்ந்து கர்மம் மூன்றுவிதம் என்பது சொல்லப்படுகிறது. கீழே சொல்லப்படாத விஷயத்தைப்பற்றி வேறு விதமாக மூன்றுவித வ்யத்யாஸம் சொல்லப்படுகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக கீழ்ச்சொல்லப்பட்ட மூன்றுகளில் ஒன்றே பிரித்துக்காட்டப்படுகிறது என்று சொல்லுகிறார்—'அதில் 'ஜ்ஞேயம்' என்று சொல்லப்பட்ட' என்றாரம்பித்து. 'ஸம்க்ரஹ:'' என்னும் பதத்திற்கு கர்மம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிற வ்யுத்பத்தியைக் காட்டுகிறார்—'அனுஷ்டிக்கப்படுகிறதாகையினால்' என்று. கர்மமாகிற ஸங்க்ரஹம் என்று கர்மதாரயஸமாஸம் சொல்லவேண்டியது கர்மத்தின் அனுஷ்டானம் என்றர்த்தமாகவுமாம். 1 'வ்ரீஹிபிர் யஜேத' 2 'தத்னா ஜுஹோதி' என்றிவைமுதலிய வாக்யங்களினால் நிரூபிக்கப்படுகிற கர்மங்களுக்கு ஸாதனமாகிய த்ரவ்யம் இங்கு 'கரணம்' என்னும்பதத்தினால் சொல்லப்படுகிறது. பலத்தைக் குறித்தோவெனில் கர்மமே காரணமாகையினால், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஸாதனமாகிய த்ரவ்யம் முதலியது' என்று. 'முதலியது' என்னும் பதத்தினால் ஜாதி முதலியவைகளும் சொல்லப்பட்டது. இவ்விடத்தில் இத்தால் அறியப்படுகிறதாகையினால் 'ஜ்ஞானம்' என்று அந்த த்ரவ்யமே சொல்லப்படுகிறது. ஜ்ஞானம், முதலிய மூன்றே கரணம், கர்ம, கர்த்தா, என்னும் பதங்களினால் விவரிக்கப்படுகிறது என்பது உசிதம். ஆகையினாலல்லவோ அடுத்த

1 ஆபஸ்தம்ப ஸ்ரௌதம் - 6-31-24. நெல்லுகளைக்கொண்டு யாகம்செய்ய வேண்டும்.

2 ஆபஸ்தம்ப ஸ்ரௌதம்-6-25-10. தயிரினால் ஹோமம் செய்யவேண்டும்.

ஸாதனமாகிய த்ரவ்யம் முதலியது, கர்ம - யாகம் முதலியது, கர்தா - அனுஷ்டிக்கிறவன், என்று. 18

ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச த்ரிதைவ குணபேதத: |
ப்ரோச்யதே குணஸங்க்யாநே யதாவச்ச்ருணு தாந்யபி ||

ப - ரை] ஜ்ஞாநம் - ஜ்ஞானமும், கர்ம - கர்மமும், கர்தா ச - கர்த்தாவும், குணபேதத:—ஸத்வம் முதலிய குணங்களின் பேதத்தினால், குணஸங்க்யாநே - குணங்களின் கார்யங்களை எண்ணும் பொழுது, த்ரிதா - மூன்றுவிதமாக, ப்ரோச்யதே - சொல்லப்படுகின்றன, தாந்யபி - அவைகளையும், யதாவத் - உள்ளபடியே, ஶ்ருணு - கேள். 19

பா] நம்மால் செய்யப்படுகிற கர்மங்களைப்பற்றிய ஜ்ஞானமும், அனுஷ்ட்

---

*ஶ்லோகத்திலும் 'ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச' என்றனுவாதம் செய்திருப்பதும் பொருத்தமுடையதாகிறது என்னில், இது உசிதமல்ல, அப்படிச் சொல்லுவதில் பதத்திற்கு ஸ்வாரஸ்யமில்லாமையினாலும், கீழ்ச் சொல்லியது மாத்திரத்தை வேறு பதத்தினால் மறுபடியும் சொல்லுவதில் ப்ரயோஜனமில்லாமையினாலும், கீழ்ச்சொல்லி இருப்பதின் உட்பிரிவைச் சொல்லுவதோவெனில் பகுத்தறிவிற்கு உபயோகமுள்ளதாகையினாலும் என்று தாத்பர்யம். கர்தா, கரணம், என்கிற பதங்களோடு சேர்த்துச் சொல்லியிருக்கிறபடியினால் 'கர்ம' என்னும் பதமும் யாகம், முதலிய கர்மங்களின் ஒருவித ஒத்தாசைக் கருவியைச் சொல்லுகிறதென்கிற ஆக்ஷேபத்தை நிராகரிக்கிறார்—'கர்ம - யாகம் முதலியது' என்று. கர்மங்களின் ஸ்வரூபமல்லவோ மேலே ஸத்வம், முதலிய குணங்களினால் மூன்றுவிதமாகப் பிரித்துக் காட்டப்படுகிறது என்று தாத்பர்யம். ஶாஸ்த்ரங்களினால் ஏவப்படுகிற தசையிலிருக்கும் பொழுது 'பரிஜ்ஞாதா' என்று சொல்லப்படுகிற ஜீவாத்மாவே கர்மங்களை அனுஷ்ட்டிக்கிறவனாகிய தசையுடன் இருக்கும்பொழுது அந்தக் கர்மங்களுக் கங்கமாகையினால் கர்மங்களின் உட்பிரிவாக 'கர்தா' என்று சொல்லப்படுகிறான், என்று சொல்லுகிறார்—'கர்தா - அனுஷ்ட்டிக்கிறவன்' என்று.* 18

*'ஜ்ஞாநம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா' என்று சொல்லப்பட்ட வஸ்துக்களே 'ஜ்ஞாநம் கர்ம ச கர்தா ச' என்று அனுவாதம் செய்யப்படுகின்றன. அறிகிறவனாயிருக்கையும், கர்த்தாவாக இருக்கையும் ஒரு ஜீவாத்மாவின் வெவ்வேறு அவஸ்த்தைகள் மாத்திரமாகையினால் ஜ்ஞானத்தைச் சொன்னதினாலேயே அந்த ஜ்ஞானத்திற் காதாரமாகிய அறி*

டிக்கப் படுகிற கர்மமும், அதை அனுஷ்டிக்கிறவனும் ஸத்வம், முதலிய குணங்களின் வ்யத்யாஸத்தினால் மூன்றுவிதமாகக் குணங்களின் கார்யங்களை எண்ணும் பொழுது சொல்லப்படுகிறது. அந்தக் குணங்களினால் வேவ்வேறுபட்ட ஜ்ஞானம், முதலியவைகளை உள்ளபடியே கேள். 19

ஸர்வபூதேஷு யேநைகம் பாவமவ்யயமீக்ஷதே|
அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ஸாத்விகம் || 20

ப-ரை] யேந - எந்த ஜ்ஞானத்தினால், விபக்தேஷு - வெவ்வேறாக இருக்கிற, ஸர்வபூதேஷு - எல்லா ப்ராணிகளிடங்களிலும், ஏகம் - ஒரு, அவிபக்தம் - வ்யத்யாஸங்களில்லாத, அவ்யயம் - விகாரமில்லாத, பாவம் - (ஆத்மாவாகிய) வஸ்துவை, ஈக்ஷதே - பார்க்கிறானோ, தத் - அந்த, ஜ்ஞாநம் - ஜ்ஞானத்தை, ஸாத்விகம் - ஸத்வகுணத்தினாலுண்டானதாக, வித்தி - அறி. 20

பா] ப்ராம்மணன், க்ஷத்திரியன், ப்ரம்மசாரி, க்ரஹஸ்தன், முதலியவை

---

கிறவனும் ஏற்பட்டுவிட்டபடியினால் இவ்விடத்தில் தனித்துச் சொல்லப்படவில்லை. 'ஜ்ஞேயம்' என்பதும் கர்மங்களைச் சொல்லுகிறபடியினாலும் அதுவும் தனித்துச் சொல்லப்படவில்லை. 'காரணம் (த்ரவ்யங்கள்)' என்பதோவெனில் கர்மங்களுக்குள்ளேயே சேர்ந்தபடியினால் தனித்துச் சொல்லப்படவில்லை. 'குணஸங்க்யாநே' என்னும் பதத்தில் ஸாங்க்யர்களினுடைய ஸித்தாந்தத்தைச் சொல்லில் அது ப்ரமாணமல்லவாகையினாலும், இந்த ஸந்தர்ப்பத்தில் உபயோகமில்லாதவாகையினாலும், குணங்களின் ஸ்வரூபத்தை எண்ணுவதில் ஜ்ஞானம் முதலியவைகள் அதற்குள்ளடங்கினவைகளல்லவாகையினாலும் 'குணங்களின் கார்யங்களை எண்ணும்பொழுது' என்று சொல்லப்பட்டது. 'உள்ளபடியே கேள்' என்பதற்கு உள்ளபடி கேழ்ப்பதற்குத் தகுந்த ஸாவதானத்தைச் செய் என்றர்த்தம். 'உள்ளபடி' என்பதினால் சொல்லப்படுகிற விதத்தைச் சொல்லுகிறார்—'குணங்களினால் வேவ்வேறுபட்ட' என்று. 19

ஸாத்விகமான ஜ்ஞானம், முதலியவைகளைச் சொல்லியிருப்பது இதனுடைய கர்த்ருத்வம் ஸத்வம் முதலிய குணங்களுக்கு வசப்பட்டது என்று தெரிவிப்பதற்காக. 'ஸர்வபூதேஷு' என்னும் பதத்தினால் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டதும், ஆத்மாவைத் தெரிந்து கொள்ளாதவர்களால் அனுஸந்தானம் செய்யப்பட்டதுமாகிய வெளி ஆகாரங்களின் வ்யத்யாஸங்களைச் சொல்லுகிறார்—'ப்ராம்மணன்' என்

களாக வெவ்வேறாக இருக்கிற கர்மங்களில் அதிகாரிகளாகிய எல்லா ப்ராணிகளிடங்களிலும் எந்த ஜ்ஞானத்தினால் ஆத்மா என்று பேருடைய ஒரு வஸ்துவைப் பார்க்கிறானோ, அவ்விடத்திலும் இந்த ப்ராம்மணனாயிருக்கைமுதலிய எல்லாஆகாரங்களோடும் கூடியதாயும்,வெளுப்பு, நீளம், முதிலிய பிரிவுகளையுடையதாயு மிருக்கிற இந்த வஸ்துக்களில் ஜ்ஞானம் ஒன்றையே ஆகாரமாகவுடைய ஆத்மாவினிடத்தில் இந்தப் பிரிவுகளில்லாததாகவும் அழியக்கூடிய ஸ்வபாவங்களையுடைய ப்ராம்மணன் முதலி

னாரம்பித்து. 'ஜ்ஞாநம்' என்னும் பதம் இவ்விடத்தில் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட கர்மவிதிகளைச் சேர்ந்த கர்மங்களை யனுஷ்டிக்கும்பொழுது உண்டாகிற ஜ்ஞானத்தைச் சொல்லுகிறதாகையினால் 'கர்மங்களில் அதிகாரிகளாகிய' என்று ப்ராணிகள் விசேஷித்துச் சொல்லப்பட்டன. 'பாவம்' என்னும் பதம் இவ்விடத்தில் வஸ்து என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறது. 'ஏகம் (ஒன்று)' என்று ஜாதி ஒன்றென்கிற அபிப்ராயத்தினால் சொல்லப்படுகிறது. ஜீவாத்மாக்கள் அநேகம் என்பது முன்னமேயே ஸ்தாபிக்கப்பட்டிருப்பதினாலும், அத்வைதத்தைப் பார்ப்பது அதாவது எல்லா வஸ்துக்களும் ஒன்றென்று பார்ப்பது ஸாத்விக ஜ்ஞானம் என்று மற்றவர்கள் சொல்லிய அர்த்தம் ப்ரமாணமில்லாததாகையினாலும், 'நாநாபாவாந்' என்று அடுத்த ஶ்லோகத்தில் வெவ்வேறென்று சொல்லியிருப்பதினாலும், ஸமம் என்று அனுஸந்தானம் செய்வதை நிரூபிப்பது இவ்விடத்தில் ஜ்ஞாபகப்படுத்தப்படுகிற படியினாலும், 'கர்தா' என்று கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஜீவாத்மாவைச் சொல்லுகிறதென்பது உசிதமாகையினாலே பரமாத்மாவைச் சொல்லுகிறதென்பது பொருந்தாதாகையினாலும், என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ஆத்மா என்று பேருடைய ஒரு வஸ்துவை' என்று. 'வெளுப்பு, நீளம்' என்றிவை முதலியவாக்யத்தினால் 1 'அநேகவிதமான வர்ணங்களையுடைய பசுமாடுகளின் பால் ஒரே நிறமுடையதாக இருக்கிறது' என்றிவை முதலிய ஶ்ருதி வாக்யம் முதலியவைகள் குறிக்கப்படுகிறது. இவ்விடத்தில் 'அவிபக்தம்' என்னும் பதத்தினால் ப்ராம்மணன் முதலிய ஜாதி சொல்லப்படுகிறபடியினால் குணம் முதலியவைகளினாலுண்டாகிய உட்பிரிவைச் சொல்லுகிறது 'விபக்தேஷு' என்னும் பதம் என்றும் தாத்பர்யம். எந்த ஆகாரத்தினால் ஒன்றாயிருக்கிறது என்கிற ஆக்ஷேபத்திற்குப் பதில் சொல்லுகிறார்—'ஜ்ஞானம் ஒன்றையே ஆகாரமாகவுடைய' என்று. இங்கே தடுக்கப்படுகிற விகாரத்தின் ப்ரஸ்தாவமுண்டாவதற்குக் காரணத்தைச்சொல்லுகிறார்—'அழியக்கூடிய ஸ்வபா

1 அம்ருதபிந்தூபநிஷத்.

ய ஶரீரங்களில் இருந்தபோதிலும் விகாரங்களில்லாததும், பலம் முதலிய வைகளில் பற்றுதல் உண்டாகத்தகாதவனாகவும், கர்மத்தில் அதிகாரியா கும்போழுது பார்க்கிறானோ அந்த ஜ்ஞானத்தை ஸத்வகுணம் மேலிட்ட தாக அறி. 20

ப்ருதக்த்வேந து யஜ்ஜ்ஞாநம் நாநாபாவாந் ப்ருதக்விதாந் |
வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞாநம் வித்தி ராஜஸம் ||

ப - ரை] யத் - எந்த, ஜ்ஞாநம் - ஞானம், ஸர்வேஷு - எல்லா, பூதேஷு - ப்ராணிகளிடங்களிலும், பாவாந் - ஆத்ம வஸ்துக்களை, நாநா - அனேகங்களாகவும், ப்ருதக்த்வேந - இந்த வஸ்துக்களின் வ்யத்யாஸத்தினாலே, ப்ருதக்விதாந் - வேறுபட்டவைகளாகவும், வேத்தி - அறிகிறதோ, தத் - அந்த, ஜ்ஞாநம் - ஜ்ஞானத்தை, ராஜஸம் - ரஜோ குணத்தினாலுண்டானதாக, வித்தி - அறி. 21

பா] ப்ராம்மணன், முதலிய எல்லா ப்ராணிகளிடங்களிலும் ப்ராம்ம ணன் முதலிய ஆகாரங்கள் வெவ்வேறாக இருப்பதினால் ஆத்மாவென்று

---

வங்களையுடைய' என்றாரம்பித்து. முன்னால் சொல்லப்பட்ட பலம் முத லியவைகளில் ஆசையாகிற விகாரமில்லாமையும் விகாரமில்லாமையைச் சொல்லுகிற 'அவ்யயம்' என்னும் பதத்தினால் சேர்த்துக்கொள்ளப்படு கிறது என்று சொல்லுகிறார்—'பலம் முதலியவைகளில்' என்றாரம் பித்து. 'பற்றுதல்' ஆவது இவ்விடத்தில் ஸம்பந்தம், அதாவது அவை களை அனுபவிப்பது என்றர்த்தம். ஆசையைச் சொல்லுவதாக இரு ந்தபோதிலும் அனுபவம் தானாகவே ஏற்பட்டது. கர்மவிதிகளைச் சேர்ந்த ஜ்ஞானத்தைச் சொல்லுகிறதாகையினால் 'கர்மத்தில் அதிகாரி யாகும்பொழுது' என்று சொல்லப்பட்டது. அதாவது என்னால் இந்தக் கர்மம் செய்யத்தக்கது என்று தெரிந்துகொள்ளும் பொழுது என்றர்த் தம். 'எந்த ஜ்ஞானத்தினால் பார்க்கிறானோ' என்பதற்கு எந்த ஜ்ஞா னத்தினால் அறிகிறானோ என்றர்த்தம். 20

'ப்ருதக்த்வேந ப்ருதக்விதாந்' என்பதற்கு வ்யத்யாஸங்களோடு கூடியவைகளாக என்றர்த்தம். 'ப்ருதக்த்வேந' முதலிய பதங்களுக்குப் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகச் சொல்லுகிறார்—'ப்ராம்மணன் முதலிய ஆகாரங்கள் வெவ்வேறாக இருப்பதினால்' என்று. 'ஸர்வேஷு பூதேஷு' என்பது ஜீவாத்மாவும் ஶரீரமும் சேர்ந்த வஸ்துக்களை அனுவாதம் செய்கிறது. அதில் 'பாவாந்' என்பது விஶேஷ்யமாகிய ஜீவாத்மாவைத் தனித்துச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால்

பேருடைய வஸ்துக்களையும் வேறுபட்டவைகளாகவும், வெளுப்பு, நீளம், முதலிய வ்யத்யாஸங்களினால் வ்யத்யாஸத்தை யுடையவைகளாகவும், பலம் முதலியவைகளோடு பற்றுதலை அடையத் தகுந்தவைகளாகவும், கர்மங்களில் அதிகாரியாகும்பொழுது எந்த ஜ்ஞானம் அறிகிறதோ அந்த ஜ்ஞானத்தை ரஜோகுணத்தினாலுண்டானதாக அறி. 21

*யத்து க்ருத்ஸ்நவதே³கஸ்மிந் கார்யே ஸக்தமஹைதுகம் |*
*அதத்த்வார்த²வத³ல்பம் ச தத்தாமஸமுதா³ஹ்ருதம் ||* 22

ப - ரை] யத்து - எந்த ஜ்ஞானம், ஏகஸ்மிந் - ஒரு, கார்யே - கார்யத்தில், க்ருத்ஸ்நவத் - எல்லாவற்றிலும்போல, அஹைதுகம்-காரணமில்லாமல், ஸக்தம் - பற்றுதலையுடையதோ, அதத்த்வார்த²வத் - உண்மையான அர்த்தத்தை அறியாத, அல்பம் - அல்பமாய் இருக்கிறதோ, தத் - அந்தஜ்ஞானம், தாமஸம் - தமோகுணத்தினாலுண்டானதாக, உதா³ஹ்ருதம் - சொல்லப்பட்டது. 22

பா] எந்த ஜ்ஞானம் ப்ரேதம், பூதகணம், இவைகளுக்கு ஆராதனமாகிய மிகவும் அல்பமாகிய பலத்தையுடைய செய்யவேண்டியதாகிய ஒரு

---

சொல்லுகிறார்—'ஆத்மாவென்று பேருடைய வஸ்துக்களை' என்று. ஜாதிகளின் வ்யத்யாஸத்தையும், ஶரீரங்களின் வ்யத்யாஸத்தையும், குணம் முதலியவைகளின் வ்யத்யாஸத்தையும் சொல்லுகிறபடியினால் 'ப்ருத²க்த்வேந, நாநா, ப்ருத²க்³விதா⁴ந்,' என்னும் பதங்களுக்குப் புனருக்தி இல்லை. கீழ்ச் சொல்லிய ஸ்வபாவத்திற்கு எதிர்நடையான ஸ்வபாவத்தைச் சொல்லுகிறதாகையினால் 'பலம் முதலியவைகளோடு பற்றுதலை அடையத்தகுந்தவைகளாகவும்' என்று சொல்லியிருக்கிறது. ஜ்ஞானம் அறிகிறது என்று உபசாரமாகக் கர்த்தாவாகச் சொல்லியிருக்கிறது. 21

'கார்யே' என்னும் பதம் இவ்விடத்தில் உத்பத்தியையுடைய என்னுமர்த்தத்தை மாத்திரம் சொல்லுகிறதல்ல, தன்னால் செய்யவேண்டிய கர்மத்தைப்பற்றியதாகையினால். 'ஏகஸ்மிந் (ஒரு)' என்னும் பதமும் பற்றுதல் வைப்பதற்குத் தகாதது என்று தெரிவிப்பதற்காக ப்ரயோஜனத்தினாலே அல்பமானது என்பதைச் சொல்லுகிறது. அதற்குக் காரணம் முன்பு சொல்லப்பட்டதாகிய அல்ப ஶக்திகளையுடையவைகளின் ஆராதனமாக இருக்கை என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'ப்ரேதம், பூதகணம்' என்றாரம்பித்து. கர்மங்களின் ஸ்வரூபம் மாத்திரமே பற்றுதல் வைக்கத்தகாதது. அதிலும்

கார்யத்தில் எல்லாப் பலங்களிலும் போலக் காரணமில்லாமல் பற்றுதலை யுடையதோ, வாஸ்தவத்தில் பூர்ணமான பலத்தையுடைத்தாகாததாகை யிஞல் அவ்விதமாகப் பற்றுதல் உண்டாவதற்குக் காரணமில்லாததோ, முன்போலவே ஆத்மாவினிடத்தில் வ்யத்யாஸம் முதலியவைகளை அறி கிறபடியினாலே பொய்யான அர்த்தங்களைப்பற்றியதோ, அல்பமான பலத் தையுடையதோ, ப்ரேதம், பூதம் இவைகளின் ஆராதனத்தைப்பற்றிய தாகையிஞல்தானும் அல்பமாகியதோ, அந்த ஜ்ஞானம் தமோகுணத்திஞ லுண்டாதென்று சொல்லப்பட்டது. 22

பா - அ] இப்படிச் செய்யவேண்டிய கர்மங்களைப்பற்றிய ஜ்ஞானம் கர்மங் களின் அதிகாரியாகும் பொழுது அதிகாரியாகிய ஜீவாத்மாவைப் பற்றிய தாய் ஸத்வம் முதலிய குணங்களிஞல் மூன்றுவிதம் என்பதைச் சொல்லி

---

*பலத்தில் ஆசை உண்டாகிறது என்று சொல்லுகிருர்—எல்லாப் பலங் களையும் போல' என்று. அதாவது எல்லாப் பலங்களுக்கும் காரணமா கிய கர்மத்திலே போல என்றர்த்தம். கார்யமாகிய ஜ்ஞானத்திற்கா வது அந்தக் கர்மங்களில் பற்றுதலுக்காவது காரணமே இல்லை என்று தடுப்பது பொருந்தாதாகையிஞல் புத்திமான்கள் பற்றுதல் வைக்கக் கூடிய காரணம் இவ்விடத்தில் இல்லையென்று தடுக்கப்படுகிறது என்று சொல்லுகிருர்—'வாஸ்தவத்தில்' என்ருரம்பித்து. 'அஹைதுகம்' என் றுபாடமானபோதிலும் காரணத்திஞலுண்டானதைவிட வேறுபட்டது என்று தாத்பர்யமாகையிஞல் இதே அர்த்தம் என்று அறிந்துகொள் ளவும். 'முன்போலவே' என்பதற்கு ரஜோகுணத்திஞல் உண்டாகிய ஜ்ஞானத்தைப்போலவே என்றர்த்தம். 'அதத்த்வார்த்தவத் அல்பம் அஹைதுகம்' என்பதிஞலேயே அல்பப் பலத்தையுடையதென்பது ஏற் பட்டபடியிஞல் மினுமினும்பூச்சியின் ப்ரகாசத்தைப்போல ஸ்வரூபத் திஞலேயே அல்பமாயிருக்கிறதென்பது 'அல்பம்' என்னும் பதத்திஞல் சொல்லப்படுகிறது. ஆகையிஞல் புனருக்தி இல்லை என்கிற அபிப்ரா யத்திஞல் 'அல்பமான பலத்தையுடையதோ . . தானும் அல்பமாகிய தோ' என்று சொல்லப்பட்டது. 1 'ஸத்வாத் ஸஞ்ஜாயதே ஜ்ஞாநம்' என்று முன்பு சொல்லப்பட்டதோவெனில் ரஜோகுணத்திஞலும் தமோகுணத்திஞலும் உண்டாயே ஜ்ஞானங்கள் அஜ்ஞானங்கள் என் கிற தாத்பர்யத்திஞல். இதுவும் 2 'ஏதஜ்ஜ்ஞாநமிதி ப்ரோக்தமஜ்ஞாநம் யததோऽந்யதா' என்று கீழே சொல்லப்பட்டதல்லவா.* 22

---

1 பகவத்கீதை - 14 - 17.
2 பகவத்கீதை - 13 - 11.

அனுஷ்டிக்கத்தகுந்த கர்மங்கள் ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவிதம் என்பதைச் சொல்லுகிறார்—

*நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத: க்ருதம்।*
*அபலப்ரேப்ஸுநா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே॥* 23

ப - ரை] *நியதம்* — அவஶ்யம் செய்யவேண்டியதாயும், *ஸங்கரஹிதம்* — கர்த்ருத்வம் முதலிய பற்றுதலில்லாததாயும், *அராகத்வேஷத: க்ருதம்* - ஆசை, த்வேஷம், இவைகளினால் செய்யப்படாததாயுமிருக்கிற, *யத்* - எந்த, *கர்ம* - கர்மமானது, *அபலப்ரேப்ஸுநா*-பலத்தில் ஆசை இல்லாதவனால் (செய்யப்படுகிறதோ), *தத்* - அந்தக் கர்மம், *ஸாத்விகம்* - ஸாத்விகம் என்று, *உச்யதே* - சொல்லப்படுகிறது. 23

பா] தன்னுடைய வர்ணாஶ்ரமங்களுக்குத் தகுந்ததாயும், கர்த்ருத்வம் முதலியவைகளில் ஸம்பந்தமில்லாததாயும், கீர்த்தியில் ஆசை, அபகீர்த்தி

---

தா] 'அதிகாரியாகிய ஜீவாத்மாவைப் பற்றியதாய்' என்பதற்கு ஒன்றாயிருப்பது, வெவ்வேறாயிருப்பது முதலிய விஶேஷணங்களையுடைய கர்மங்களில் அதிகாரியாகிய ஜீவாத்மாவின் ஸ்வரூபத்தை யறிவதினால் என்றர்த்தம். எல்லா வஸ்துக்களும் சேர்ந்த கர்மத்தில் விஶேஷணமாகையினால் அதிகாரியும் ஒருபாகம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'ஸங்க' என்னும் பதம் தனித்தனியாக 'ஸங்கம், ஸங்கம், கர்த்ருத்வம்,' இவைகளின் த்யாகத்தைச் சொல்லுகிற இடத்தில் என்னுடையது என்கிற அபிமானத்தைச் சொல்லுகிறதாயிருந்தபோதிலும் 'ஸங்கரஹிதம்' என்கிற இந்த இடத்தில் அப்படிச் சுருக்கிச் சொல்லுவதற்குக் காரணமில்லாமையினாலும் எல்லாம் இங்கே சொல்லவேண்டியிருப்பதினாலும் நேரில் சொல்லப்பட்ட பலத்தில் ஆசையைத் தவிர மற்றவைகளைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'கர்த்ருத்வம் முதலியவைகளில்' என்றாரம்பித்து. 'முதலிய' என்னும் பதத்தினால் என்னுடையது என்கிற அபிமானமும் சேர்த்துக்கொள்ளப்படுகிறது. 1 'முக்தஸங்கோऽநஹம்வாதீ' என்றிவை முதலியவைகளில் சொல்லப்பட்ட கர்த்தாவின் ஸ்வபாவம் இவ்விடத்தில் அந்தக் கர்த்தாவின் வழியாகக் கர்மங்களுக்கே விஶேஷணமாகச் சொல்லப்பட்டது. பரமாத்மாவினிடத்தில் ஆசையினாலும், ஸம்ஸாரத்தில் த்வேஷத்தினாலும் செய்யப்படுகிற கர்மத்திற்கு 'அராகத்வேஷத: க்ருதம்' என்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'கீர்த்தியில் ஆசை' என்றாரம்பித்து. 'ஸங்கரஹிதம்'

1 பகவத்கீதை - 18 - 26.

யில் த்வேஷம், இவைகளினால் செய்யப்படாததாயும், அதாவது டம்பமில்லாமல் செய்யப்பட்டதாயும் என்றர்த்தம். பலத்தில் ஆசையில்லாத புருஷனால் இது செய்யவேண்டியதுதான் என்று எந்தக் கர்மம் செய்யப்படுகிறதோ அது ஸாத்விகமென்று சொல்லப்படுகிறது. 23

யத்து காமேப்ஸுநா கர்ம ஸாஹங்காரேண வா புந: ।
க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ॥ 24

ப-ரை] காமேப்ஸுநா - பலத்தில் ஆசையுடையவனாலும், ஸாஹங்காரேண வா - அஹங்காரத்தோடு கூடியவனாலும், பஹுலாயாஸம் - அதிக ஶ்ரமத்தையுடைய, யத்து — எந்த, கர்ம - கர்மம், க்ரியதே-செய்யப்படுகிறதோ, தத் - அது, ராஜஸம் — ராஜஸமாக, உதாஹ்ருதம்-சொல்லப்பட்டது. 24

பா] பலங்களில் ஆசையுடையவனாலும் அஹங்காரத்தோடு கூடியவனாலும், இங்கு 'வா' என்பது 'ச' என்பதின் அர்த்தத்தைச் சொல்லுகிறது, அதாவது நானே கர்த்தா என்கிற அபிமானத்தையுடையவனாலும். அதிக ஶ்ரமத்தையுடைய எந்தக் கர்மம்செய்யப்படுகிறதோ அது ராஜஸம். அதா

---

என்பதோடு புனருக்தியும் இதினால் பரிஹரிக்கப்பட்டது. 'ச' என்பது தனியாகிய அவ்யயம் என்கிற தாத்பர்யத்தினாலாவது, ஏற்பட்ட அர்த்தத்தைச் சொல்லியிருக்கிறதென்கிற தாத்பர்யத்தினாலாவது 'இவைகளினால் செய்யப்படாததாயும்' என்று சொல்லப்பட்டது. 1 'தபோ யஜ்ஞம் தேவ யத்' என்றிவை முதலியவைகளில் சொல்லப்பட்ட அர்த்தத்தைத் தடுப்பதற்காக இது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதாவது டம்பமில்லாமல்' என்று. 'இது செய்யவேண்டியதுதான்' என்பது ஸாத்விக த்யாகத்தை ஜ்ஞாபகப்படுத்தி இருக்கிறது. 23

'காமேப்ஸுநா' என்பதினால் 'ஸஹைவோத்ப்ஸுநா' என்று கீழ்ச் சொல்லியிருப்பதற்கு விரோதமான ஸ்வபாவம் சொல்லப்படுகிறது என்று ப்ரகாசப்படுத்துகிறார்—'பலங்களில் ஆசையுடையவனாலும்' என்று. இவ்விடத்தில் விகல்பம் முதலியது ஸம்பவிக்காதாகையினால் 'வா' என்னும் பதம் 'ச' என்னும் பதத்தின் அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று சொல்லப்பட்டது. ப்ரவ்ருத்தி செய்வதையே முக்யமான கார்யமாகவுடைய ரஜோகுணத்தினாலுண்டாகிறபடியினாலே உபயோகமில்லாத ப்ராயஸத்துடன் சேர்ந்திருப்பதினால் 'பஹுலாயாஸம்'

---

1 பகவத்கீதை - 17 - 18.

வது அதிக ஶ்ரமத்தையுடைய இந்தக்கர்மம் என்றாலேயே செய்யப்படுகிறது என்றிவ்விதமான அபிமானத்தோடு கூடினவனால் எந்தக் கர்மம் செய்யப்படுகிறதோ அது ராஜஸம் என்றர்த்தம் 24

𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂 𑌕𑍍𑌷𑌯𑌂 𑌹𑌿𑌂𑌸𑌾𑌮𑌨𑌵𑌕𑍍𑌷𑍍𑌯 𑌚 𑌪𑍌𑌰𑍁𑌷𑌮𑍍।
𑌮𑍋𑌹𑌾𑌦𑌾𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 𑌕𑌰𑍍𑌮 𑌯𑌤𑍍𑌤𑌤𑍍𑌤𑌾𑌮𑌸𑌮𑍁𑌚𑍍𑌯𑌤𑍇॥ 25

ப - ரை] 𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂 - மேல்வரப்போகிற கஷ்டத்தையும், 𑌕𑍍𑌷𑌯𑌂 - பணச்செலவையும், 𑌹𑌿𑌂𑌸𑌾𑌂 - ப்ராணிகளின் ஹிம்ஸையையும், 𑌪𑍌𑌰𑍁𑌷𑌂 - தன்னுடைய ஸாமர்த்தியத்தையும், 𑌅𑌨𑌵𑌕𑍍𑌷𑍍𑌯 - யோசிக்காமல், 𑌮𑍋𑌹𑌾𑌤𑍍 — அஜ்ஞானத்தினால், 𑌯𑌤𑍍 - எந்த, 𑌕𑌰𑍍𑌮 - கர்மம், 𑌆𑌰𑌭𑍍𑌯𑌤𑍇 - ஆரம்பிக்கப்படுகிறதோ, 𑌤𑌤𑍍 — அது, 𑌤𑌾𑌮𑌸𑌂 - தாமஸமாக, 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 - சொல்லப்படுகிறது. 25

பா] கர்மத்தைச் செய்தபிறகு அத்துடன் தொடர்ந்துவருகிற துக்கம் அநுபந்தம். 𑌕𑍍𑌷𑌯𑌂 - ஆவது கர்மத்தைச் செய்யும்பொழுது உண்டாகும் பணச்செலவு. 𑌹𑌿𑌂𑌸𑌾 — அந்தக் கர்மங்களில் ப்ராணிகளின் ஹிம்ஸை, 𑌪𑍌𑌰𑍁𑌷𑌂 - தனக்கு அந்தக் கார்யத்தைச் செய்துமுடிக்கும் ஸாமர்த்தியம்,

---

*என்னப்படுகிறது. அதில் எல்லாவற்றிலும் தானே காரணம் என்கிற அபிமானம் '𑌸𑌾𑌹𑌙𑍍𑌕𑌾𑌰𑍇𑌣' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது. ஆகையினாலேயே '𑌬𑌹𑍁𑌲𑌾𑌯𑌾𑌸𑌂' என்னும் பதமும் ப்ரயோஜனத்தோடுகூடியது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'அதிக ஶ்ரமத்தையுடைய எந்தக்கர்மம்' என்றாரம்பித்து.* 24

*'𑌕𑍍𑌷𑌯𑌂' என்னும் பதத்தினால் கர்மத்தைச் செய்யும்பொழுதுண்டாகும் பணச்செலவு முதலிய தோஷங்கள் சொல்லப்படுகிறபடியினாலும், '𑌅𑌨𑍁' என்னும் உபஸர்க்கத்தின் ஶக்தியினாலும், '𑌅𑌨𑍁𑌬𑌨𑍍𑌧𑌂' என்னும் பதம் இந்தக் கர்மத்தைச் சேர்ந்ததாக மேல்வரப்போகிற துக்கத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'கர்மத்தைச் செய்த பிறகு' என்றாரம்பித்து. ஹிம்ஸை தன்னைப் பற்றியதாகவுமாம், அயலாரைப்பற்றியதாகவுமாம் என்கிற அபிப்ராயத்தினால் 'அந்தக்கர்மங்களில் ப்ராணிகளின் ஹிம்ஸை' என்று பொதுவாகச் சொல்லியிருக்கிறது. தைவத்திற்கு எதிர்நடையான அர்த்தத்தைச் சொல்லுகிற '𑌪𑍌𑌰𑍁𑌷𑌂' என்னும் பதம் புருஷனுடையதாகிய இந்த லோகத்திலுண்டான ஸாமக்ரிகளின் சேர்க்கையைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'தனக்கு அந்தக் கார்யத்தைச் செய்துமுடிக்கும் ஸாமர்த்தியம்' என்று. வரப்போகிற அநுபந்தம் முதலியவைகளை நேராகப்*

இவைகளை யோசிக்காமலும், பரமாத்மா கர்த்தா என்று தெரிந்துகொள்ளாமலும் எந்தக் கர்மம் ஆரம்பிக்கப்படுகிறதோ அது தாமஸமென்று சொல்லப்படுகிறது. 25

முக்தஸங்கோऽநஹம்வாதீ த்⁴ருத்யுத்ஸாஹஸமந்வித꞉ ।
ஸித்⁴யஸித்⁴யோர்நிர்விகார꞉ கர்தா ஸாத்த்விக உச்யதே ॥ 26

ப - ரை] முக்தஸங்க꞉ - பலங்களில் ஆசையில்லாதவனாகவும், அநஹம்வாதீ - நானே கர்த்தா என்று சொல்லாதவனாகவும், த்⁴ருத்யுத்ஸாஹஸமந்வித꞉ - தைர்யம், உத்ஸாஹம், இவைகளோடு கூடினவனாகவும், ஸித்⁴யஸித்⁴யோ꞉ - பலம்ஸித்தித்தபோதிலும் ஸித்திக்காமல் போனபோதிலும், நிர்விகார꞉ - விகாரங்களில்லாதவனாகவுமிருக்கிற, கர்தா - கர்த்தாவானவன், ஸாத்த்விக꞉ – ஸத்வகுணம் மேலிட்டவனென்று, உச்யதே - சொல்லப்படுகிறான். 26

பா] பலங்களில் ஆசையில்லாதவனாகவும், நானே கர்த்தா என்கிற அபிமானம் இல்லாதவனாகவும், 'த்⁴ருதி' ஆவது ஆரம்பிவிக்கப்பட்ட கர்மத்தில் அந்தக் கர்மம் முடியும் வரையிலும் விடமுடியாத துக்கங்களைப்

---

*பார்ப்பது ஸம்பவிக்காதாகையினால் யுக்திகளைக்கொண்டும் ஶாஸ்த்ரங்களைக்கொண்டும் பராமர்சிக்காமலிருப்பது 'அநபேக்ஷ்ய' என்னப்படுகிறது என்று சொல்லுகிறார்*—'யோசிக்காமலும்' *என்று. அனுபந்தம், முதலியவைகளைப்பற்றிய அஜ்ஞானம் முன்பு சொல்லப்பட்டபடியினால் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட நான் கர்த்தாவல்ல என்கிற ஜ்ஞானத்திற்கு விரோதமான அர்த்தத்தைச் சொல்லுகிறது இவ்விடத்தில் 'மோஹ' என்னும் பதம் என்று சொல்லுகிறார்*—'பரமாத்மா கர்த்தா என்று தெரிந்துகொள்ளாமலும்' *என்று.* 25

*'அநஹம்வாதீ' என்பதினால் கர்த்தா என்கிற அபிமானமாகிய ஸங்கத்தை தனித்து மறுத்திருப்பதினால் 'முக்தஸங்க꞉' என்கிற இடத்தில் இருக்கிற 'ஸங்க꞉' என்னும் பதம் தன் அர்த்தத்தைச் சுருக்கிச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்*—'பலங்களில் ஆசையில்லாதவனாகவும்' *என்று. அதினாலேயே கர்மத்தில் தன்னுடையதென்கிற அபிமானமாகிய ஸங்கமும் தடுக்கப்பட்டது. நான் என்று சொல்லுவதையே ஸ்வபாவமாக உடையவன், 'அஹம்வாதீ', அப்படிக்கல்லாதவன் 'அநஹம்வாதீ'. அதில் மனதை முன்னிட்டல்லவோ வார்த்தையுண்டாகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்*—'நானே கர்த்தா என்கிற அபிமானம் இல்லாதவனாகவும்' *என்று. கர்த்தாவைப்பற்றிப் பிரித்துச்*

பொறுத்துக்கொள்ளுதல், 'உத்ஸாஹ' ஆவது மேன்மேலே ப்ரயத்நம் செய்து கொண்டிருக்கிற மனதையுடையவனாயிருக்கை, இவைகளோடு கூடினவனாகவும், யுத்தம் முதலிய கர்மத்திலும் அதற்கு ஸாதனங்களாகிய பணம் ஸம்பாதிப்பது முதலியவைகளிலும் பலம் கிடைத்தபோதிலும் கிடைக்காமல் போனபோதிலும் விகாரத்தையடையாத மனதை உடையவனாகவுமிருக்கிற கர்த்தா ஸாத்விகனென்று சொல்லப்படுகிறான்.

*ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ ஹிம்ஸாத்மகோऽஶுசி: |*
*ஹர்ஷஶோகாந்வித: கர்தா ராஜஸ: பரிகீர்தித: ||* 27

ப - ரை] ராகீ - ஆசையையுடையவனும், கர்மபலப்ரேப்ஸு: - கர்மங்களின் ப்ரயோஜனத்தை விரும்புகிறவனாகவும், லுப்த: - கர்மங்களுக்கு வேண்டிய த்ரவ்யங்களைச் செலவழிக்கும் ஸ்வபாவமில்லாதவனாகவும், ஹிம்ஸாத்மக: - ஹிம்ஸை செய்வதையே ஸ்வபாவமாக உடையவனாகவும், அஶுசி: - பரிசுத்தி இல்லாதவனாகவும், ஹர்ஷஶோகாந்வித:- ஸந்தோஷம், துக்கம், இவைகளோடு கூடிக்கொண்டவனாகவுமிருக்கிற, கர்தா - கர்த்தாவானவன், ராஜஸ: - ரஜோகுணம் மேலிட்டவனாக, பரிகீர்தித: - சொல்லப்பட்டான். 27

பா] யஶஸ்ஸை விரும்புகிறவனாகவும், கர்மங்களின் பலங்களை விரும்பு

---

*சொல்லப்படுகிறபடியினால் அப்படிக் கர்த்தாவாயிருப்பதற்குபயோகமாகிய 'த்ருதி' இங்கு சொல்லப்படுகிறதென்று சொல்லுகிறார்—'ஆரம்பிக்கப்பட்ட' என்றாரம்பித்து. ப்ரயத்நமாகிய உத்ஸாஹம் கர்த்தா என்னும் பதத்தினாலேயே ஏற்பட்டபடியினாலும், ராஜஸம் முதலிய கர்த்தாக்களுக்குப் பொதுவாகையினாலும், விசேஷமான அர்த்தத்தைச் சொல்லுகிறதென்று சொல்லுகிறார்—'மேன்மேலே' என்றாரம்பித்து. 'முக்தஸங்க:' என்பதினால் ஸ்வர்க்கம் முதலிய பலங்களில் ஆசையில்லை என்பதுசொல்லப்பட்டபடியினால் 'ஸித்த்யஸித்த்யோர்நிர்விகார:' என்பது த்ருஷ்டமான பலத்தைச்சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'யுத்தம் முதலிய' என்றாரம்பித்து. ஆசைகளில்லாமலிருப்பதின் ப்ரயோஜனம் விகாரங்களில்லாமலிருக்கைபாகவுமாம்.* 26

*'கர்மபலப்ரேப்ஸு:' என்பதினால் வேதங்களில் சொல்லப்படுகிற ஸ்வர்க்கம் முதலிய பலங்களின் ஆசை உண்டென்பது சொல்லப்பட்டபடியினால் 'ராகீ' என்று நடுவில் நேரிடக்கூடிய இந்த லோகத்திலுண்டாகிற பலத்தில் ஆசை சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'யஶஸ்ஸை விரும்புகிறவனாகவும்' என்று. அபாத்திரத்தில் செலவிடு*

திறவனுகவும், கர்மங்களுக்கு வேண்டிய த்ரவ்யங்களைச் செலவிடும் ஸ்வபாவமில்லாதவனுகவும், அயலாரைப் பீடைசெய்து அவர்களைக்கொண்டு கர்மங்களைச் செய்கிறவனுகவும், கர்மங்களுக்குவேண்டிய சுத்தியல்லாதவனுகவும், யுத்தம், முதலிய கர்மங்களில் ஜயம் முதலியவைகள் கிடைத்தால் ஸந்தோஷமும், கிடைக்காமல்போனுல் துக்கமும், இவைகளோடு கூடினவனுகவுமிருக்கிற கர்த்தாவானவன் ரஜோகுணம் மேலிட்டவனுகச் சொல்லப்பட்டான். 27

𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 𑌶𑌠𑍋 𑌨𑍈𑌕𑍃𑌤𑌿𑌕𑍋𑌽𑌲𑌸𑌃 ।
விஷாதீ 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 𑌚 𑌕𑌰𑍍𑌤𑌾 𑌤𑌾𑌮𑌸 𑌉𑌚𑍍𑌯𑌤𑍇 ॥ 28

ப - ரை] 𑌅𑌯𑍁𑌕𑍍𑌤𑌃-சர்மங்களைச் செய்யத்தகாதவனுகவும், 𑌪𑍍𑌰𑌾𑌕𑍃𑌤𑌃-வித்யைகளைக்கற்றுக் கோள்ளாதவனுகவும், 𑌸𑍍𑌤𑌬𑍍𑌧𑌃 - கர்மங்களை ஆரம்பிவிக்காமலிருப்பதையே ஸ்வபாவமாக வுடையவனுகவும், 𑌶𑌠𑌃 - மறைந்து கொண்டு அநிஷ்டத்தைச் செய்பவனுகவும், 𑌨𑍈𑌕𑍃𑌤𑌿𑌕𑌃-வஞ்சனை செய்பவனுகவும், 𑌅𑌲𑌸𑌃 - சோம்பேறியாகவும், விஷாதீ - துக்கப்படுவதையே ஸ்வபாவமாகவுடையவனுகவும், 𑌦𑍀𑌰𑍍𑌘𑌸𑍂𑌤𑍍𑌰𑍀 - வெகு காலத்திற்கு துடர்ந்துகொண்டுவருகிற அநிஷ்டத்தையோசித்துக் கொண்டிருக்

---

*வது முதலியதில்லாமலிருப்பது குணமாகையிஞல் 'கர்மங்களுக்கு வேண்டிய' என்று விசேஷித்துச் சொல்லப்பட்டது* 1 '𑌆𑌤𑍍𑌮𑌾𑌨𑌂 𑌭𑌾𑌰𑍍𑌯𑌾𑌂 𑌪𑍁𑌤𑍍𑌰𑌂 𑌵𑌾 𑌉𑌪𑌰𑍁𑌨𑍍𑌧𑍍𑌯𑌾𑌤𑍍 𑌨 𑌤𑍍𑌵𑍇𑌵 𑌦𑌾𑌸𑌕𑌰𑍍𑌮𑌕𑌰𑌮𑍍' *என்றிவை முதலிய வசனங்களில் சொல்லப்பட்டதற்கு விரோதமான ஸ்வபாவத்தை யுடையவனுயிருக்கை இவ்விடத்தில்* '𑌹𑌿𑌂𑌸𑌾𑌤𑍍𑌮𑌕𑌃' *என்னும் பதத்திஞல் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிருர்—* 'அயலாரைப் பீடைசெய்து' *என்ருரம்பித்து, கர்த்தாவாக இருப்பதற்கு உபயோகமாவதற்காக* 'அவர்களைக்கோண்டு கர்மங்களைச் செய்கிறவனுகவும்' *என்று அதிஞலேற்பட்ட அர்த்தத்தைச்சொல்லிஇருக்கிறது. இப்படியே* 'கர்மங்களுக்கு வேண்டிய சுத்தி இல்லாதவனுகவும்' *என்று சொல்லியிருப்பதும் தொடுவது 'பார்ப்பது' முதலியவைகள் செய்யத்தகுந்த சுத்தியாக இருப்பது மாத்திரத்திஞல் கர்மங்களைச் செய்ய யோக்யதை உண்டாகிறதில்லை என்று தாத்பர்யம்.* 27

1 *ஆபஸ்தம்பதர்மம் - 2 - 4 - 9 - 11. ஆத்மானம் - தன்னையும், பார்யாம் - பெண்சாதியையும், புத்ரம் வா - பிள்ளையையுமாவது, உபருந்த்யாத் - ஹிம்ஸை செய்யலாம், தாஸகர்மகரம் - ஏவல் தொழில் செய்கிறவனை, ந - நிர்ப்பந்தம் செய்யக்கூடாது.*

கிறவனாகவுமிருக்கிற, கர்த்தா - கர்த்தா, தாமஸ: - தமோகுணம்மேலிட்டவனாக, உச்யதே - சொல்லப்படுகிறான். 28

பா] ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற கர்மங்களைச்செய்ய யோக்யதை இல்லாத ஶாஸ்த்ரங்களுக்கு விரோதமான கர்மங்களைச் செய்துகொண்டிருப்பவனாகவும், வித்யைகளை அறியாதவனாகவும். ஒருகார்யத்தையும் ஆரம்பிவிக்காமலிருப்பதையே ஸ்வபாவமாகவுடையவனாகவும், அபி

---

தா] ஸாவதானமில்லாமை முதலியது 'ப்ராக்ருத:' என்பது முதலிய பதங்களினால் ஏற்படுகிறபடியினால் 'அயுக்த:' என்னும் பதத்தினால் அநர்ஹன் என்பதே சொல்லப்படுகிறது என்றுசொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகிற' என்றாரம்பித்து. 'அஶுசி:' என்னும் பதத்தினால் சொல்லப்பட்ட ராஜஸனான கர்த்தாவினுடைய அயோக்யதையைவிட அதிகமான அயோக்யதை இங்கே சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரங்களுக்கு விரோதமான கர்மங்களைச் செய்து கொண்டிருப்பவனாகவும்' என்று. அவனுடைய அயோக்கியதையின்மேன்மைஇப்படிப்பட்டதல்லவோ—1 'ஶைவாந்பாஶுபதாந் ஸ்ப்ருஷ்ட்வா லோகாயதிகநாஸ்திகாந்। விகர்மஸ்தாந் த்விஜாந் ஶூத்ராந் ஸவாஸோ ஜலமாவிஶேத் ॥' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஶாஸ்த்ரங்களைப் படித்தல், அதின் அர்த்தங்களை உபதேசம் பெற்றுக் கொள்ளுதல், முதலியவைகளினா லுண்டாக்கப்பட்ட ஸாத்விகமான கர்மங்களை அனுஷ்டிப்பதற்குத்தகுந்த விஶேஷங்களில்லாமை 'ப்ராக்ருத:' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'வித்யைகளை அறியாதவனாகவும்' என்று. பூஜை செய்யத்தகுந்தவர் விஷயத்திலும் அதிவேகமாய் அவஶ்யமாய்ச் செய்யவேண்டிய அவரவர்களுக்குத் தகுந்த நமஸ்காரம் முதலிய கார்யங்களை ஆரம்பிப்பதற்கு விரோதமாகிய அசங்காமலிருப்பதையே ஸ்வபாவமாகவுடையவனாக இருக்கை இவ்விடத்தில் 'ஸ்தப்த:' என்னும் பதத்திற்கு அர்த்தம் என்று சொல்லுகிறார்—'ஒரு கார்யத்தையும்' என்றாரம்பித்து. மறைந்துகொண்டிருந்து அநிஷ்டத்தைச் செய்தல் 'ஶட:' என்பது. அதுவும் இந்த ஸந்தர்ப்பத்தை அனுஸரித்துத் தாமஸமான கர்மங்களைச் செய்து அதின் வழியாக என்று சொல்லுகிறார்—'அபிசாரம், முதலிய' என்றாரம்பித்து. புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகக் கபடம்,

---

1 சைவர்களையும், பாசுபத ஆகம நிஷ்டர்களையும், சார்வாகரையும், நாஸ்திகர்களையும், வர்ணாஶ்ரமங்களுக்கு விருத்தமாகச் செய்கிற ப்ராம்மணர்களையும், சூத்ரர்களையும் தொட்டால் வஸ்த்ரத்துடன் கூட ஜலத்தில் முழுகவேண்டும்.

சாரம், முதலிய கர்மங்களில் ஆசையையுடையவனாகவும், வஞ்சனை செய்பவனாகவும், ஆரம்பிவிக்கப்பட்ட கர்மங்களிலும் மந்தமாகிய ப்ரயத்தினத்தை உடையவனாகவும், அதிகத் துக்கப்படுவதையே ஸ்வபாவமாகவுடையவனாகவும், அபிசாரம், முதலிய கார்யங்களைச் செய்துகொண்டு அயலாருக்கு வெகுகாலம் தொடர்ந்திருக்கிற அநிஷ்டத்தைப்பற்றி யோசனை

---

மோசம், முதலிய லோகங்களிலேற்பட்ட கார்யங்களின் வழியாக 'நைக்ருதிகம்' என்பது என்று சொல்லுகிறார்—'வஞ்சனை செய்பவனாகவும்' என்று. நாளைக்குச் செய்யவேண்டிய கார்யத்தை இன்றைக்கே செய்யவேண்டும் என்று ந்யாயமிருப்பதினால் ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்ட கார்யங்களில் த்வரையோடு கூடினவனாக இருக்கவேண்டும். அதற்கு விரோதமாக இருக்கை இவ்விடத்தில் 'அலஸ:' என்பது. அதில் கார்யங்களை ஆரம்பிவிக்காமலிருப்பது 'ஸ்தப்த:' என்னும் பதத்தினால் சொல்லப்பட்டபடியினால் 'ஆரம்பிவிக்கப்பட்ட' என்று விஶேஷித்துச்சொல்லப்பட்டது. 'விஷாதீ' என்கிற இடத்தில் தாதுவே துக்கம் என்னும் அர்த்தத்தைச் சொல்லுகிறபடியினால் உபஸர்க்கத்தினால் அது அதிகமென்பதும், விகுதியினால் அதையே ஸ்வபாவமாகவுடையவனாக இருக்கையும் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்— 'அதிக' என்றாரம்பித்து. வாக்யக்காரனால் துக்கத்திற்கு லக்ஷணம் 1 'தேஶகால வைகுண்யாத் ஶோகவஸ்த்வநுஸ்ம்ருதேஶ்ச । தஜ்ஜம் தைந்யம் [illegible] ஸந்தாபாதிஷு:॥' என்று சொல்லப்பட்டது. ஆரம்பிவிக்கப்பட்ட கர்மங்களைச் சீக்கிரமாக முடிக்காமலிருப்பதாகிற மந்தமான ப்ரயத்தினத்தையுடையவனாக இருக்கை 'அலஸ:' என்பது முதலிய பதத்தினால் சொல்லப்பட்டபடியினால் காரணப்பெயராக இருப்பதற்கும், 'ஶட:' என்பவை முதலிய பதங்களோடு சேர்த்துச் சொல்லியிருப்பதற்கும் தகுந்ததாகிய 'தீர்க்கஸூத்ரீ' என்பதை விவரிக்கிறார்—'அபிசாரம், முதலிய கர்மங்களைச் செய்துகொண்டு' என்றாரம்பித்து. 'ஸூத்ரு ஸூத்ரணே' என்று தாது. ஸூத்ரணமாவது நினைத்துக்கொண்டிருத்தல், விகுதி அதையே ஸ்வபாவமாகவுடையவன் என்னும் அர்த்

---

1 இடம், காலம், இவைகள் ஸரியாயில்லாமையினாலும், துக்கத்தை உண்டாக்கக்கூடிய வஸ்துக்களை நினைத்துக்கொள்ளுவதினால் உண்டாகியதாயும், மற்றவர்களுக்கு இப்படிப்பட்ட காரணங்களினால் உண்டாகிற துக்கத்தினால் தனக்கு உண்டாகிறதாயும் இருக்கிற மனதிற்கு ப்ரகாசமில்லாமையாகிற தீனமான தன்மை துக்கம்.

செய்வதை ஸ்வபாவமாகவுடையவனுகவு மிருக்கிற கர்த்தா எவனே அவன் தாமஸன். 28

பா – அ] இப்படிச் செய்யவேண்டிய கர்மங்களைப்பற்றிய ஜ்ஞானத்திலும் செய்யவேண்டிய கர்மங்களிலும் அவைகளை அனுஷ்டானம் செய்கிற கர்த்தாவிலும் ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவித முண்டென்பது சொல்லப்பட்டது. இப்பொழுது எல்லாத் தத்துவங்களையும் எல்லாப் புருஷார்த்தங்களையும் பற்றிய நிஶ்சயமாகிய புத்திக்கும் த்ருதிக்கும்ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்று வித வ்யத்யாஸத்தைச் சொல்லுகிருர்—

புத்தேர்பேதம் த்ருதேஶ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஶ்ருணு |
ப்ரோச்யமாநமஶேஷேண ப்ருதக்த்வேந தநஞ்ஜய || 29

ப-ரை] தநஞ்ஜய - அர்ஜுந, ப்ருதக்த்வேந - வெவ்வேருக, ப்ரோச்யமாநம் - சொல்லப்படுகிற, புத்தே: - புத்தியினுடையவும், த்ருதேஶ்சைவ - த்ருதியினுடையவும், குணத: - ஸத்வம் முதலிய குணங்களினால், த்ரிவிதம் - மூன்றுவிதமாக இருக்கிற, பேதம் – வ்யத்யாஸத்தை, அஶேஷேண - மிகுதியில்லாமல், ஶ்ருணு - கேள். 29

---

*தத்தைச் சொல்லுகிறது. வெகுகாலம் நினைத்துக்கொண்டிருக்கிறபடியினுல் 'தீர்கஸூத்ரீ' என்னப்படுகிருன். குற்றமொன்றில்லாத பக்ஷி முதலியவைகளைப் பிடிப்பதற்காக வெகு நீளமாக நூல்களைக் கட்டுவதற்கு ஸமமாக இருக்கிறபடியினுல் 'தீர்கஸூத்ரீ' என்று ஔபசாரிகமாகச் சொல்லியிருக்கிறது என்பது அவ்வளவு உசிதமல்ல என்று தாத்பர்யம்.* 28

*தா] ஜ்ஞானம் மூன்றுவிதமென்பது முன்னே சொல்லப்பட்டது, மறுபடியும் புத்தி மூன்றுவிதமென்று சொல்லப்படுகிறது. அதில் இந்த இரண்டு பதங்களும் ஒரே அர்த்தத்தைச் சொல்லுகிறபடியினுல் புனருக்திவருகிறது என்னும் ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காகக் கீழ்ச் சொல்லியது விஶேஷமான விஷயத்தைப்பற்றியது, என்றனுவாதம் செய்கிருர்—'இப்படி' என்ருரம்பித்து. இந்த ஸந்தர்ப்பத்திற்குபயோகமானது மேலே ப்ரஸ்தாவிக்கப்படுகிறது என்கிற ஸங்கதியை அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிருர்—'இப்பொழுது' என்ருரம்பித்து. ஜ்ஞானம் மூன்றுவிதம் என்பது முன்னமேயே சொல்லப்பட்டது. மறுபடியும் இவ்விடத்தில் அது மூன்றுவிதமென்று சொல்லுவது எதற்காக? என்ருக்ஷேபம்வரில் அதற்கு ஸமாதானமாகக் கர்மங்களை அனுஷ்டிக்கும்பொழுது வருகிற அனுஸந்தானத்தைவிட*

பா] 'பு³த்³தி⁴:' ஆவது பகுத்தறிவை முன்னிட்ட நிஸ்சயமாகிய ஜ்ஞானம், 'த்⁴ருதி:' ஆவது ஆரம்பிவிக்கப்பட்ட கார்யத்திற்குத் தடங்கல்கள் வந்தபோதிலும் விடாமலிருத்தல், இவைகளுக்கு ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவிதமான வ்யத்யாஸத்தையும் வெவ்வேறாக என்னால் சொல்லப்படுகிறதை உள்ளபடியே கேள். 29

---

*வேறுபட்டதாயும் அதற்கும் காரணமாகையினால் அதற்கு முன்பே உண்டானதாயும் ஶாஸ்த்ரம் முதலியவைகளினால் உண்டாக்கப்பட்டதாயுமிருக்கிற நிஸ்சயம் இவ்விடத்தில் 'பு³த்³தி⁴:' என்னும் பதத்திற்கு அர்த்தம் என்று சொல்லுகிறார்—'எல்லாத் தத்துவங்களேயும்' என்றாரம்பித்து இத்தால் 'ஜ்ஞாநம்' ஆவது புத்தியின் வ்யாபாரம், 'பு³த்³தி⁴:' ஆவது அந்த வ்யாபாரத்தையுடையது என்று மற்றவர்கள் சொன்ன அர்த்தம் நிராகரிக்கப்பட்டது. இதையே ப்ரகாசப்படுத்துகிறார்—'பு³த்³தி⁴:' ஆவது பகுத்தறிவை முன்னிட்ட' என்றாரம்பித்து. 'பகுத்தறிவை முன்னிட்ட' என்பதற்கு மற்றப் பக்ஷங்களை நிராகரிக்கும் வரையில் முடிவு பெறுகிற விசாரத்தை முன்னிட்டு என்றர்த்தம். ப்ரஸ்தாவிக்கப்படுகிற மூன்றுவிதமான அனுஷ்டானங்களுக்குத் தகுந்தவிதமாக மூன்று விதமாகிய த்ருதிக்கும் பொதுவான ரூபத்தைச் சொல்லுகிறார்—'ஆரம்பிவிக்கப்பட்ட' என்றாரம்பித்து. இதுவும் உறுதியான ஸங்கல்பமாகிய புத்தியின் ஒருவிதமான ஸ்வபாவந்தான். ஸத்வம் முதலிய குணங்களினால் பிரிக்கப்பட்டிருக்கிறது என்பதையும் அர்த்தத்திலும் வார்த்தையிலும் ஒன்றோடொன்று கலக்காமலிருக்கிற ஸ்வபாவத்தை யுடையது என்பதையும் சொல்லுகிறபடியினால் 'த்ரிவித⁴ம், ப்ருத²க்த்வேந', என்னும் பதங்களுக்குப் புனருக்தி இல்லை என்று சொல்லுகிறார்—'மூன்றுவிதமான வ்யாத்யாஸத்தையும் வெவ்வேறாக என்னால் சொல்லப்படுகிறதை' என்று. இப்படிப் புத்தி முதலியவைகளின் கார்யங்கள் எல்லாவற்றையும் சொல்லுகிற 'ப்ரோச்யமாநம்' என்னும் பதம் 'ஶ்ருணு (கேள்)' என்பதில் அந்வயிக்கிறபடியினால் புனருக்தியில்லை என்பது 'உள்ளபடியே கேள்' என்பதினால் காட்டப்பட்டது. ஸாவதானமாகவும், ஸந்தேஹம், விபரீத ஜ்ஞானம், இவைகளில்லாமலிருக்கும்படியாகவும் கேள் என்றர்த்தம். திக்விஜயம் செய்யும்பொழுது மனுஷ்யர்களினுடையதாகவும் தேவதைகளினுடையதாகவு மிருக்கிற பணங்களைப்போலவே ஶாந்தி, முதலிய தனமும் ஸம்பாதிக்கத்தக்கது என்பது 'த⁴நஞ்ஜய' என்றழைத்ததின் அபிப்ராயம்.* 29

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே |
பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்திஸ் ஸா பார்த்த ஸாத்த்விகீ || 30

ப - ரை] பார்த்த - அர்ஜுந, யா — எந்தப்புத்தி, ப்ரவ்ருத்திம் ச - ப்ரவ்ருத்தி தர்மத்தையும், நிவ்ருத்திம் ச-நிவ்ருத்தி தர்மத்தையும், கார்யாகார்யே-செய்யத் தகுந்ததையும் செய்யத்தகாததையும், பயாபயே - பயத்தையும், பயமில்லாமையையும், பந்தம் - ஸம்ஸார பந்தத்தையும், மோக்ஷம் ச — மோக்ஷத்தையும், வேத்தி - அறிகிறதோ, ஸா - அந்த, புத்தி: - புத்தியானது, ஸாத்த்விகீ — ஸத்வகுணத்திலுண்டானது. 30

பா] ப்ரவ்ருத்தி: - ஐஶ்வர்யத்திற்கு ஸாதனமாகிய கர்மம், நிவ்ருத்தி:— மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய கர்மம், இவை இரண்டையும் உள்ளபடியே எந்தப் புத்தியறிகிறதோ, கார்யாகார்யே - ப்ரவ்ருத்தி தர்மம் நிவ்ருத்தி தர்மம் இவைகளுக்குள் ஏதாவதொன்றில் நிஷ்டையையுடைய

தா] 'கார்யாகார்யே' என்னும் பதத்துடன் புனருக்தி வருகிறதென்கிற ஸந்தேஹத்தைப் பரிஹரிப்பதற்காக 1 'ப்ரவ்ருத்திலக்ஷணம் தர்மம் ப்ரஜாபதிரதாப்ரவீத் || நிவ்ருத்திலக்ஷணம் தர்மம் ருஷிர் நாராயணோப்ரவீத்' என்றிவை முதலிய வசனங்களை அனுஸரித்து 'ப்ரவ்ருத்திம்' 'நிவ்ருத்திம்' என்னும் பதங்கள் முக்கியமான கர்மங்களைச் சொல்லுகின்றன என்று சொல்லுகிறார்—'ஐஶ்வர்யத்திற்கு ஸாதனமாகிய' என்றாரம்பித்து. ராஜஸமாயும் தாமஸமாயுமிருக்கிற புத்திகளைப்பற்றிச் சொல்லுமிடத்தில் 'அயதாவத் (உள்ளபடியல்லாமல்)' என்று விஶேஷணம் சொல்லி இருக்கிறபடியினால் இவ்விடத்தில் வஸ்து ஸ்வபாவத்தை அனுஸரித்து அப்படிக்கில்லாமலிருப்பது சொல்லப்படுகிறது என்று தெரிவிப்பதற்காக 'உள்ளபடியே' என்று சொல்லி இருக்கிறது 'கார்யாகார்யே' என்னும் பதங்கள் இவ்விடத்தில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட முக்கியமான கர்மங்களுக்கு அங்கங்களாக இருக்கிற த்ருஷ்டத்திலும் அத்ருஷ்டத்திலும் ஒத்தாசையாயுமிருக்கிற வ்யாபாரங்களைச்சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'ப்ரவ்ருத்தி தர்மம்' என்றாரம்பித்து. அதில் ஸூக்ஷ்மமாகிய புத்தியைக்கொண்டு அறியவேண்டியதென்று தெரிவிப்பதற்காக 'இடம், காலம், தசை, இவைகளின் விசேஷங்களில்' என்று விஶேஷித்துச்சொல்லப்பட்டது. அப்படியே 2 'ஶரீரம் பலம்

1 267-ம் பக்கம், 1 - வது புட்னோட்டைப் பார்க்க.

2 தேஹத்தையும், பலத்தையும், காலத்தையும் செய்யவேண்டிய கர்மத்தையும் தன்னுடைய புத்தியினால் யோசித்துப்பார்த்து ப்ராயஶ்சித்தங்களைச்சொல்ல

எல்லா வர்ணங்களுக்கும் இடம், காலம், தசை, இவைகளின் விசேஷங்களில் இன்னது செய்யத்தக்கது இன்னது செய்யத்தகாதது என்றெந்தப் புத்தி அறிகிறதோ, *பயாபயே* - ஶாஸ்த்ரத்தை மீறி நடப்பது பயத்திற்கிடம், அதை அனுஸரித்து நடப்பது பயமில்லாமைக்கு இடம், இதையும் ஸம்ஸாரத்தின் உண்மையையும், அது நீங்கும் உண்மையையும், எந்தப்புத்தி அறிகிறதோ அது ஸாத்விகமான புத்தி. 30

***யயா த⁴ர்மமத⁴ர்மம் ச கார்யம் சாகார்யமேவ ச।***
***அயதா²வத் ப்ரஜாநாதி பு³த்³தி⁴: ஸா பார்த² ராஜஸீ॥*** 31

*ஆயாஸ்து வய: காலஞ்ச கர்ம ச। ஸமீக்ஷ்ய த⁴ர்மவித் பு³த்³த்⁴யா ப்ராயஶ்சித்தானி நிர்தி³ஶேத்॥' என்றும், 1 'தே³ஶம் காலம் ததா²த்மானம்' என்றிவை முதலியதும் ஸ்ம்ருதியில் சொல்லப்படுகிறதல்லவா. இவ்விடத்தில் செய்யக்கூடியதும் செய்யக்கூடாததும் 'கார்யாகார்யே' என்னும் பதங்களிலேயே சேர்த்துக்கொள்ளப்படுகிறது. பயம், அபயம், இவைகளின் ஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளுவது எல்லோருக்கும் பொதுவாகையினால் இவ்விடத்தில் அவைகளின் காரணங்களைத் தெரிந்துகொள்ளுவது சொல்லப்படுகிறது. அதுவும் இந்த ஸந்தர்ப்பத்தில் சொல்லப்படுகிற விசேஷமான காரணத்தைப்பற்றியது என்று சொல்லுகிறார்—'ஶாஸ்த்ரத்தைமீறி நடப்பது' என்றாரம்பித்து. 'பி³பே⁴த்யஸ்மாத் (இதில் நின்றும் பயப்படுகிறான்)' என்கிற வ்யுத்பத்தியினால் பயம் என்னப்படுகிறது. எல்லாவற்றையும் நியமிக்கிறவனாகிய பகவானிடத்திலிருந்தல்லவோ உண்மையை அறிந்தவர்களுக்குப் பயமும் அபயமும் உண்டாகிறது. அவனுடைய உத்தரவன்றியில் ஒருவனால் பீடிக்கவும் பீடை செய்யாமலிருக்கவும் முடியாதல்லவா. ஆகையினால் அவனுடைய உத்தரவை அனுஸரித்து நடப்பதும் அதை மீறி நடப்பதுமே பயத்திற்கும் அபயத்திற்கும் காரணம் என்று தாத்பர்யம். ஸம்ஸாரபந்தம், மோக்ஷம், இவைகள் உண்டென்கிற ஜ்ஞானம் எல்லோருக்கும் பொதுவாகையினாலும், ஸம்ஸாரபந்தம் பொய்யென்று சொல்லுகிறதும் மோக்ஷம் ஸுகதுக்கங்களற்றுக் கல்லைப்போலிருக்கிறதென்று சொல்லுகிறவர்களினுடைய மதமும் 'உண்மையை' என்னும் பதத்தினால் நிராகரிக்கப்பட்டது. அறிகிறது என்று உபசாரமாகக்கர்த்தாவாகச்சொல்லி இருக்கிறது. தன்னிஷ்டப்ரகாரம் அவைகளை அறிகிறது என்றர்த்தம்.* 30

1 இடத்தையும் காலத்தையும், அப்படியே தன்னையும் யோசித்துப்பார்த்து ப்ராயஶ்சித்தம் செய்யவேண்டும்.

ப - ரை] பார்த2 - ஓ! அர்ஜுந, யயா - எந்தப் புத்தியினால், த4ர்மம் - தர்மத்தையும், அத4ர்மம் ச - அதர்மத்தையும், கார்யம் ச - கார்யத்தையும், அகார்யமேவ ச - செய்யத்தகாத கார்யத்தையும், அயதா2வத் - உள்ளபடியல்லாமல், ப்ரஜாநாதி - அறிகிறானோ, ஸா - அந்த, பு3த்3தி4: - புத்தியானது, ராஜஸீ - ரஜோகுணத்தினாலுண்டாகியது. 31

பா] எந்தப்புத்தியினால் முன்பு சொல்லப்பட்ட இரண்டு விதமான தர்மங்களையும் அதற்கு விரோதமானதையும், அந்தத் தர்மங்களில் நிஷ்டையுடையவர்களுக்கு இடம், காலம், தசை முதலியவைகளில் செய்யத்தகுந்ததையும் செய்யத்தகாததையும் உள்ளபடியே அறியவில்லையோ அந்தப்புத்தி ராஜஸீ. 31

அத4ர்மம் த4ர்மமிதி யா மந்யதே தமஸாவ்ருதா |
ஸர்வார்தா2ந் விபரீதாம்ஶ்ச பு3த்3தி4: ஸா பார்த2 தாமஸீ || 32

ப - ரை] பார்த2 - அர்ஜுந, யா - எந்தப்புத்தியானது, தமஸா - தமோகுணத்தினால், ஆவ்ருதா - மறைக்கப்பட்டதாய்க் கொண்டு, அத4ர்மம் - அதர்மத்தை, த4ர்மமிதி - தர்மமென்றும், ஸர்வார்தா2ந் - எல்லா வஸ்துக்களையும், விபரீதாம்ஶ்ச - விருத்தமான ஸ்வபாவமுள்ளவைகளாகவும், மந்யதே - அறிகிறதோ, ஸா - அந்தப்புத்தியானது, தாமஸீ - தமோகுணத்தினாலுண்டானது. 32

பா] தாமஸப்புத்தியானது தமஸ்ஸினால் மறைக்கப்பட்டதாய்க்கொண்டு எல்லா வஸ்துக்களையும் விபரீதங்களாக அறிகிறது அதாவது அதர்மத்

தா] 'த்4ரியதே ஸாத்4யதயா அநேந த4ர்ம:' (பலத்திற்கு ஸாதனமாகியது தர்மம்)' என்கிற வ்யுத்பத்தியினால் 'த4ர்ம' என்னும் பதம் ப்ரவ்ருத்திதர்மம், நிவ்ருத்தி தர்மம், இவை இரண்டிற்கும் பொதுவாகையினாலும், இவை இரண்டும் முன்பு ப்ரஸ்தாவிக்கப்பட்டிருப்பதினாலும் 'முன்பு சொல்லப்பட்ட இரண்டுவிதமான' என்று சொல்லப்பட்டது. 31

தா] 'தாமஸீ' என்கிற இதினாலேயே தமோகுணத்தினாலுண்டானதென்றேற்பட்டிருப்பதினால் 'தமஸாவ்ருதா:' என்பதினால் அந்தக் காலத்தில் தமோ குணத்தினால் தடுக்கப்பட்டதென்று சொல்லப்படுகிறதென்று சொல்லுகிறார்—'தமஸ்ஸினால் மறைக்கப்பட்டதாய்க் கொண்டு' என்று. 'ஸர்வார்தா2ந்' என்பதினால் ஸித்தமாயும் ஸாத்யமாயுமிருக்கிற எல்லா அர்த்தங்களும் சேர்த்துச் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'இருக்கிற வஸ்துவை' என்றாரம்பித்து. இத்தால் வேதபாஹ்யர்களினுடையவும் குத்ருஷ்டிகளினுடையவும் மதம்

தைத் தர்ம்மாகவும், தர்மத்தை அதர்மமாகவும், இருக்கிற வஸ்துவை இல்லாததாகவும், இல்லாத வஸ்துவை இருக்கிறதாகவும், உயர்ந்த தத்துவத்தைத் தாழ்ந்ததாகவும், தாழ்ந்த தத்துவத்தை உயர்ந்ததாகவும் இப்படி எல்லாவற்றையும் விபரீதமமாகத் தெரிந்துகொள்ளுகிறதென்றர்த்தம். 32

த்ருத்யா யயா தாரயதே மந: ப்ராணேந்த்ரியக்ரியா: ।
யோகேநாவ்யபிசாரிண்யா த்ருதிஸ்ஸா பார்த ஸாத்த்விகீ ॥33

ப-ரை] பார்த – அர்ஜுந, யயா - எந்த, த்ருத்யா - தைர்யத்தினுல், அவ்யபிசாரிண்யா – வேறொரு இடத்திலும் செலுத்தாத, யோகேந – பக்தியோகத்தினுல், அதாவது பக்தியோகம் செய்வதற்காக, மந: ப்ராணேந்த்ரிய க்ரியா: – மனது, ப்ராணவாயு, இந்த்ரியங்கள், இவைகளின் கார்யங்களை, தாரயதே - தரிக்கிறுனே, ஸா - அந்த, த்ருதி: - தைர்யமானது, ஸாத்விகீ - ஸத்வகுணம் மேலிட்டது. 33

---

*தாமஸமென்றுகாட்டப்பட்டது. மனுவினுலும் இப்படியே [1]'யாவேத பாஹ்யா: ஸ்ம்ருதயோ யாஶ்ச காஶ்ச குத்ருஷ்டய:। ஸர்வாஸ்தா நிஷ்பலா: ப்ரேத்ய தமோநிஷ்டாஹிதா: ஸ்ம்ருதா: ॥' என்று சொல்லப்பட்டது இவ்விடத்தில் ரஜோகுணத்தினுல் உண்டான புத்திக்கும் தமோகுணத்தினுல் உண்டான புத்திக்கும் வ்யத்யாஸம் இது. பூர்ணமாகத் தெரிந்துகொள்ளாததும் வேறுவிதமாகத் தெரிந்துகொள்ளுவதும் ராஜஸ ஜ்ஞானத்தினுல் உண்டாகிறது, 'உள்ளபடியே அறிகிறதில்லை' என்று வ்யாக்யானம் செய்தபடியினுல். தாமஸமான புத்தியோவெனில் எல்லாவற்றையும் விருத்தமாகத் தெரிந்து கொள்ளுகிறது, 'ஸர்வார்தாந்' என்று சொல்லியிருக்கிறபடியினுல் என்று சிலர் சொல்லுகிறுர்கள். மற்றவர்களோவெனில் ஸ்வபாவத்தை வேறுவிதமாகத் தெரிந்துகொள்ளுவதும் வஸ்துவையே வேறுவிதமாகத் தெரிந்துகொள்ளுவதும் வ்யத்யாஸம். இரண்டு ஜ்ஞானத்திலும் அதிஷ்டானமாகத் தோன்றுகிற வஸ்துவினிடத்தில் அதற்கில்லாத ஸ்வபாவம் ஆரோபிக்கப்படுகிறது. அப்படியிருந்தபோதிலும் ஸ்வரூப நிரூபகதர்மத்திற்கு மாராட்டம் உண்டாகில் அந்தப்புத்தி தாமஸம். எப்படி என்னில் முத்துச்சிப்பியை வெள்ளியென்று ப்ரமிப்பதைப் போல. நிரூபித ஸ்வரூபக விஶேஷணதர்மத்திற்கு மாராட்டம் உண்டானுல் அது ராஜஸம். எப்படி என்னில் சங்கத்தை மஞ்சளாக ப்ரமிப்பதுபோல என்று சொல்லுகிறுர்கள்.* 32

---

1-298-ம் பக்கம் 1-வது புட்நோட்டைப்பார்க்க.

பா] யோகமாவது மோக்ஷத்திற்கு ஸாதநமாகிய பகவானைப்பற்றிய உபாஸநம். வேறொருவரிடத்திலும் செலுத்தாத யோகமாகிற ப்ரயோஜநத்தினாலே, அதாவது அந்த யோகம் செய்வதற்காக உண்டாகிய அந்த யோகத்திற்கு ஸாதனங்களாகிய மனது முதலியவைகளின் கார்யங்களை எந்தத் தைர்யத்தினால் தரிக்கிறானோ அது ஸாத்விகம் என்றர்த்தம். 33

தா] ராஜஸமாகிய தைர்யத்தைச் சொல்லுமிடத்தில் த்ரிவர்க்கங்களைச் சொல்லியிருப்பதினால் மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய யோகம் இங்கே சொல்லப்படுகிறது. அதுவும் முன்பு சொல்லப்பட்ட வேறொருவரிடத்திலும் செலுத்தப்படாத உபாஸநம் தான் என்று சொல்லுகிறார்— 'யோகமாவது' என்றாரம்பித்து. வேறு பலங்களில் ஆசை இவ்விடத்தில் 'வ்யபிசாரம்' என்னப்படுகிறது. யோகம் அதைத்தடுப்பதும் ரூபத்தினாலும் ப்ரயோஜனத்தினாலும் விலக்ஷணமான ஆனந்த ஸ்வரூபமாக இருக்கிறபடியினால் என்று சொல்லுகிறார்—'யோகமாகிற ப்ரயோஜநத்தினாலே' என்று யோகத்தையும் வ்யபிசாரமில்லாமையையும் சொல்லியிருப்பதினால் அந்தந்த இந்த்ரியங்களில் ஸம்பவிக்கக் கூடியபடி உபகாரம் செய்கிறது என்கிற தாத்பர்யத்தினால் 'யோகம் செய்வதற்காக உண்டாகிய' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. மனதினுடைய கார்யம் நேராகப்பார்ப்பது. ப்ராணவாயுவினுடைய கார்யமும் எந்த இடத்தில் மனது செல்லுகிறதோ அந்த இடத்தில் ப்ராணவாயு சொல்லுகிறது. எந்த இடத்தில் ப்ராணவாயு செல்லுகிறதோ அந்த இடத்தில் மனது செல்லுகிறது. இப்படி ஒன்றுக்கொன்று சேர்ந்திருக்கிறபடியினால் ஏற்படுகிறது. அப்படியே 'ப்ராணவாய்வாயத்தம் மநஸ் இதி யோகவித:' என்று சொல்லப்படுகிறது. அப்படியே ப்ராணாயாமம் செய்வதினாலும் யோகத்திற்கு விரோதியாகிய கஷ்டம் பாபம் முதலியவைகளை ஜயிப்பதற்குக் காரணமாக இருப்பதினாலும் ஏற்படுகிறது. வெளி இந்த்ரியங்களின் கார்யமோ வெனில் [1]'ஸ்வாத்யாயாத் யோகமாஸீத யோகாத் ஸ்வாத்யாயமாமநேத் | ஸ்வாத்யாய யோக ஸம்பத்த்யா பரமாத்மா ப்ரகாஶதே ||' என்றிவை முதலிய வசனங்களினால் சொல்லியபடி யோகத்தைவிட்டு எழுந்திருந்த காலங்களில் மேல்செய்யப்போகிற யோகத்திற்கு அங்கங்களை அடைவதினாலும், ப்ரத்யாஹாரத்தினால் தடுக்கப்பட்டிருப்பதினாலும் ஏற்படுகிறது. 33

1 விஷ்ணுபுராணம் - 6 - 2 - ஸ்வாத்யாயாத் - வேதாத்யயனத்திலிருந்து, யோகம் - உபாஸனத்தை, ஆஸீத - செய்யவேண்டும், யோகாத் - யோகத்திலிருந்து, ஸ்வாத்யாயம் - வேதத்தை, ஆமநேத் - மனனம்செய்யவேண்டும், ஸ்வாத்யாய யோகஸம்பத்யா - வேதமும் யோகமும் சேருவதினால், பரமாத்மா-பரமாத்மாவானவன், ப்ரகாஶதே - ப்ரகாசிக்கிறான்.

*யயா து தர்மகாமார்த்தாந் த்ருத்யா தாரயதேऽர்ஜுந |*
*ப்ரஸங்கேந பலாகாங்க்ஷீ த்ருதிஸ்ஸா பார்த்த ராஜஸீ ||* 34

ப-ரை] *பார்த்த* - குந்தியின் பிள்ளையாகிய அர்ஜுந, *பலாகாங்க்ஷீ* - பலங்களில் ஆசையையுடையவன், *ப்ரஸங்கேந* – மிகுந்த ஆசையினுல், *யயா* – எந்த, *த்ருத்யா* - தைர்யத்தினுல், *தர்மகாமார்த்தாந்* - தர்மம், காமம், அர்த்தம், இவைகளை, *தாரயதே* - தரிக்கிருனே, *ஸா* – அந்த, *த்ருதி:*- தைர்யமானது, *ராஜஸீ* – ரஜோகுணத்தினுலுண்டானது. 34

பா] பலங்களில் ஆசையையுடைய புருஷன் அதிகமான ஆசையினுல் தர்மம், காமம், அர்த்தம், இவைகளை எந்தத் தைர்யத்தினுல் தரிக்கிருனே அந்தத் தைர்யம் '*ராஜஸீ*' என்னப்படுகிறது. '*தர்மகாமார்த்தாந்*' என்னும் பதத்தினுல் தர்மம், காமம், அர்த்தம், இவைகளுக்கு ஸாதனங்களாகிய மனது, ப்ராணன், இந்த்ரியங்கள், இவைகளின் கார்யங்கள், லக்ஷணையாகச் சொல்லப்படுகின்றன. '*பலாகாங்க்ஷீ*' என்கிற இடத்திலும் '*பல*' என்னும் பதத்தினுல் ரஜோகுணம் மேலிட்டவைகளாகையினுல் தர்மம், காமம், அர்த்தம், இவைகளே சொல்லப்படுகின்றன. ஆகையினுல் தர்மம், காமம், அர்த்தம், இவைகளில் ஆசையினுல் மனது முதலியவைகளின் கார்யங்களை எந்தத் தைர்யத்தினுல் தரிக்கிருனே அது ராஜஸம் என்று சொல்லப்பட்டதாகிறது. 34

---

தா] '*ப்ரஸங்கேந*' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ரஸக்தாநுப்ரஸக்தியாய் வந்தது என்கிற அர்த்தத்தைச் சொல்லுகிறதல்ல, அதற்கிங்குபயோகமில்லை யாகையினுல், தைர்யம், தன்னுடைய வ்யாபாரத்தினுல் செய்யப்படுகிறதென்று தெரிவிப்பதற்காகவும் கீழே ப்ரஸ்தாவிக்கப்பட்ட மாதிரியை அநுஸரித்திருப்பதற்காகவும் '*தர்ம*' முதலிய பதங்களினுல் அவைகளுக்கு ஸாதனங்களில் லக்ஷணை சொல்லப்பட்டது. '*பல*' என்னும் பதம் இவ்விடத்தில் பொதுவாக இருந்தபோதிலும் ஸாத்விக பலமாகிய மோக்ஷத்தை நீக்கிச் சுருக்கிச் சொல்லப்படுகிறது என்று தெரிப்பதற்காகச் சொல்லுகிறுர் — '*பலாகாங்க்ஷீ* என்கிற இடத்திலும்' என்று. லக்ஷணையாக ப்ரயோகித்திருப்பதின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தை விவரித்துக்கொண்டு மப்தத்திலுைம் அர்த்தத்தினுலு மேற்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறுர்—'ஆகையினுல்' என்றாரம்பித்து. 34

யயா ஸ்வப்நம் பயம் ஶோகம் விஷாதம் மதமேவ ச ।
ந விமுஞ்சதி துர்மேதா த்ருதிஸ்ஸா பார்த்த தாமஸீ ॥ 35

ப—ரை] பார்த்த - ஓ! அர்ஜுந, யயா - எந்தத்தைர்யத்தினால், ஸ்வப்நம் - தூக்கத்தையும், பயம் - பயத்தையும், ஶோகம் - துக்கத்தையும், விஷாதம் — வ்யஸனத்தையும், மதமேவ ச - கொழுப்பையும், துர்மேதா: - கெட்டபுத்தியையுடைய மனுஷ்யன், ந விமுஞ்சதி-விடுகிறதில்லையோ, ஸா - அந்த, த்ருதி: - தைர்யம், தாமஸீ - தாமஸமென்னப்படுகிறது 35

பா] ஸ்வப்னமாவது தூக்கம், மதமாவது விஷயங்களை யனுபவிப்பதினாலுண்டாகிய கொழுப்பு, எந்தத் தைர்யத்தினால் தூக்கம்,கொழுப்பு இவைகளைக் குறித்த மனது, ப்ராணன், இவைகளின் வ்யாபாரங்களைக் கெட்ட புத்தியையுடைய மனுஷ்யன் தரித்துக்கொண்டிருக்கிறானோ, 'பயம்' 'ஶோகம்' 'விஷாதம்', என்னும் பதங்கள் பயம், துக்கம், வ்யஸனம் முதலியவைகளைக் கொடுக்கக்கூடிய விஷயங்களைச் சொல்லுகின்றன. அவைகளுக்கு ஸாதனங்களாகிய மனது, ப்ராணன், முதலியவைகளின்

---

தா] இவ்விடத்தில் 'ஸ்வப்நம்' என்னும் பதம் ஸுஷுப்தியையும் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தூக்கம்' என்று. தைவவசத்தினாலுண்டாகிய வைத்தியம் முதலியவைகளை விலக்குவதற்காக இவ்விடத்தில் 'மதம்' என்பது கெட்ட நடத்தையினால் உண்டானது என்பதைக்காட்டுகிறார்—'விஷயங்களை' என்றாரம்பித்து. தனக்கு ஸ்வாதீனமில்லாத தூக்கம் முதலியவைகளைப் புருஷன் தரிப்பதெப்படி என்றாக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக இவ்விடத்திலும் முன்போலவே அவைகளின் காரணங்களை லக்ஷணையாகச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'தூக்கம், கொழுப்பு, இவைகளை' என்றாரம்பித்து. தூக்கமும், மதமும், இவைகள் ஸுகமென்று அபிமானம் வைக்கக்கூடியவைகளாகையினால் பயம் முதலியவைகளைவிடப் பிரித்து வ்யாக்யானம் செய்யப்பட்டது. இவைகளைத் தரித்துக்கொண்டிருப்பதே, இவ்விடத்தில் இவைகள் அவஶ்யமாக விடத்தக்கவைகள் என்று தெரிவிப்பதற்காக 'நவிமுஞ்சதி' என்று சொல்லப்படுகிறது, என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'தரித்துக்கொண்டிருக்கிறானோ' என்று. இவ்விடத்தில் பயந்தவனுக்குத் தைர்யம்விருத்தம் என்றுசொல்லுவது உசிதமல்ல, வரப்போகிறதை யோசிக்காமல் கெட்ட புத்தியையுடைய மனுஷ்யன் அந்தப்பயம் முதலியவைகளின் காரணங்களையே விடாமல் செய்துகொண்டு வருவதைத்தைர்யம் என்னும்பதம் சொல்லுகிறபடியி

வ்யாபாரங்களையும் எந்தத் தைர்யத்தினால் தரிக்கிறானோ, அந்தத் தைர்யம் தாமஸமென்னப்படுகிறது. 35

ஸுகம் த்விதாநீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப। *

ப - ரை] பரதர்ஷப - பரதவம்ஸத்தில் ஶ்ரேஷ்டனாகிய அர்ஜுநா, இதாநீம் - இப்பொழுது, த்ரிவிதம் - மூன்றுவிதமாகிய, ஸுகம் - ஸுகத்தையும், மே - என்னிடத்திலிருந்து, ஶ்ருணு - கேள். *

பா] முன்பு சொல்லப்பட்ட ஜ்ஞானம், கர்மம், கர்த்தா முதலிய எல்லாம் எதற்கங்கங்களோ அப்படிப்பட்ட ஸுகமும் ஸத்வம் முதலிய குணங்களினால் மூன்றுவிதமென்பதை இப்பொழுது கேள். *

அப்யாஸாத்ரமதே யத்ர து:கா₂ந்தம் ச நிக₃ச்ச₂தி ॥ 36

ப - ரை] யத்ர - எந்த ஸுகத்தில், அப்யாஸாத் - பழக்கத்தினால், ரமதே - த்ருப்தியை யடைகிறானோ, து:கா₂ந்தம் - துக்கங்களின் முடிவையும், நிக₃ச்ச₂தி - அடைகிறானோ. 36

பா] எந்த ஸுகத்தில் வெகுகாலம் பழகுவதினால் க்ரமமாக எல்லையில்

---

னால். பயத்தைக் கொடுக்கக்கூடிய விஷயமாவது கெட்ட அபிமானத்தினா லுண்டாகிய அதிக பலமுள்ளவர்களுடன் விரோதம் முதலியது. துக்கத்தைக் கொடுக்கக்கூடிய விஷயமாவது கோபம் முதலியவைகளினால் உண்டாகிய பந்துக்களைக்கொல்லுவது முதலியது. வ்யஸனத்தைக் கொடுக்கக்கூடிய விஷயமாவது வீணாகப் பணச்சிலவு முதலியது. 'கெட்ட புத்தியையுடைய' என்பதற்குக் கெட்ட புத்தியை யுடையவனானதனால் என்றர்த்தம். 35

அடுத்தக் கிரந்தத்திற்கு ஸங்கதி சொல்லுவதற்காக 'து' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிற தாத்பர்யத்தை ப்ரகாசம் செய்கிறார்—'முன்பு சொல்லப்பட்ட' என்றாரம்பித்து. 'பரதர்ஷப' என்னும் பதம் இவ்விடத்தில் மிகவும் உயர்ந்த ஸத்வகுணம் மேலிட்ட ஸுகத்தில் ஆசைவைப்பதற்குத் தகுந்தவன் நீ என்று தெரிவிப்பதற்காக. 'இப்பொழுது' என்பதற்கு ஸாதனங்களின் வ்யத்யாஸத்தைச் சொன்னபிறகு அதின் ப்ரயோஜனங்களின் வ்யத்யாஸத்தைப்பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்கிற ஆசை உண்டாகும்பொழுது என்றர்த்தம். *

மேலெழுந்தபடி பார்க்கில் இனிமையுள்ளதல்லவாகையினால் ஸாத்விகமான ஸுகம் பழக்கத்தை அபேக்ஷிக்கிறது. லோகத்திலும் பழக்

லாத மேன்மையையுடைய த்ருப்தியை யடைகிறான், ஸம்ஸாரத்தி லுண்டாகிய எல்லாத் துக்கங்களினுடையவும் முடிவை யடைகிறான்.

பா - அ] இதையே விசதமாகச் சொல்லுகிறார்—

யத்தக்ரே விஷமிவ பரிணாமேம்ருதோபமம் |
தத்ஸுகம் ஸாத்விகம் ப்ரோக்தமாத்மபுத்திப்ரஸாதஜம் || 37

ப - ரை] யத் - எந்த ஸுகமானது, அக்ரே - முதலில், விஷமிவ - விஷத்தைப்போலவும், பரிணாமே - பரிபாக தசையில், அம்ருதோபமம் - அம்ருதத்திற்கு ஸமானமாயும் (இருக்கிறதோ), தத் – அந்த, ஆத்மபுத்திப்ரஸாதஜம் - ஜீவாத்மாவைப் பற்றிய புத்தியின் தெளிவினால் உண்டாகிய, ஸுகம் - ஸுகமானது, ஸாத்விகம் - ஸாத்விகமாக, ப்ரோக்தம் - சொல்லப்பட்டது. 37

பா] எந்த ஸுகம் யோகம் ஆரம்பிக்கும்பொழுது அதிக ஶ்ரமப்பட்டுச் செய்யவேண்டியதாகையினாலும், பரிசுத்தமான ஜீவாத்மாவின் ஸ்வரூபம் இதுவரையில் அனுபவிக்கப் படாததாகையினாலும் துக்கம்போலிருக்கிற

கத்தினால் அல்பமான ப்ரீதி உண்டாகிறதே அதை விலக்குவதற்காக 'க்ரமமாக எல்லையில்லாத' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. 'த்ருப்தியை' என்பதற்கு அதிக ஆதரவை என்றர்த்தம். 'ஸர்வ' என்னும் பதத்திற்கு அர்த்தத்தைச் சுருக்கிச்சொல்ல இவ்விடத்தில் காரணமில்லாமையினால் எல்லா விஷயங்களையும் பற்றியது என்று சொல்லியிருக்கிறது. 36

பழக்கத்தை அபேக்ஷிக்கிறது என்பதற்குத் துக்கங்களின் முடிவுக்குக்காரணம் என்பதற்கும் உபயோகமான ஸ்வபாவம் அடுத்த ஶ்லோகத்தில் சொல்லப் படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'இதையே விசதமாகச் சொல்லுகிறார்' என்று. 'யத்தத்' என்று 'தத்' என்னும் பதத்தோடு கூடிய 'யத்' என்றும் பதத்தினால் அநுவாதம் செய்திருப்பது ஶ்ருதி முதலியவைகளில் மிகவும் ப்ரஸித்தம் என்று தெரிவிப்பதற்காக. 'தத் ஸுகம்' என்பதற்கு அப்படிப்பட்ட ப்ரீதிக்குக்காரணமாகிய ஸுகம் என்றர்த்தம். 'விஷமிவ' என்பதினால் மேலெழுந்தபடி நோக்கில் விரோதம் போலத்தோன்றும் என்பது மாத்திரம் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'துக்கம் போல' என்று. இத்தால் அல்ப புத்தியுடையவர்களுக்கு இதில் விடவேண்டுமென்கிற ஆசை உண்டாகிறது என்பது காட்டப்பட்டது. ஸுகமென்று பேருடைய ஒரே வஸ்து விஷம் போலவும் அம்ருதம் போ

தோ, பரிபாகத்தை அடையும்போழுது, அதாவது பழக்கத்தினால் பரிசுத்தமான ஆத்மஸ்வரூபம் ப்ரகாசித்த பிறகு அம்ருதம் போலிருக்கிறதோ, அதுவும் ஆத்மாவைப்பற்றிய புத்தியின் தெளிவினால் உண்டாகிறதோ, தெளிவாவது மற்றெல்லா விஷயங்களையும் விட்டுத்திரும்பி இருத்தல், அதாவது மற்றெல்லா விஷயங்களையும் விட்டுத் திரும்பி இருக்கிற புத்தியினால் பரிசுத்தமான ஸ்வபாவத்தையுடைய ஜீவாத்மாவை அனுபவிப்பதினால் உண்டாகிய ஸுகம் அம்ருதத்திற்கு ஸமானமாக இருக்கிறது. அந்த ஸுகம் ஸாத்விகமென்று சொல்லப்பட்டது. 37

விஷயேந்த்ரியஸம்யோகாத் யத்தத³க்³ரே(அ)ம்ருதோபமம் |
பரிணாமே விஷமிவ தத்ஸுக²ம் ராஜஸம் ஸ்ம்ருதம் || 38

ப - ரை] யத் - எந்தஸுகம், விஷயேந்த்ரியஸம்யோகாத் - விஷயங்களும் இந்த்ரியங்களும் சேருவதினால், அக்³ரே - முதலில், அம்ருதோபமம் - அம்ருதம் போலிருக்கிறதோ, பரிணாமே - பரிபாகதசையில், விஷமிவ - விஷம் போலிருக்கிறதோ, தத் - அந்த, ஸுக²ம் - ஸுகமானது, ராஜஸம் - ராஜஸமாக, ஸ்ம்ருதம் - நினைக்கப்பட்டது. 38

பா] அனுபவிக்கும்போழுது விஷயங்களும் இந்த்ரியங்களும் சேருகிறபடியினால் அம்ருதம் போலிருக்கிறதோ, பரிபாகதசையில், அதாவது விஷயங்

---

*வும் மாறுதல்களையடையாதல்லவா? ஆகையினால் அத்தால்உபசாரமாகச் சொல்லப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'பழக்கத்தினால்' என்றாரம்பித்து. புத்திதன்னுடையது என்பதை மாத்திரம் சொல்லுவதில் ப்ரயோஜனமில்லை ஆகையினால் 'ஆத்மாவைப்பற்றிய' என்று சொல்லப்பட்டது. புத்திக்குத்தகாத விஷயங்களோடு சேர்க்கையாகிற கலக்கம் நிவ்ருத்திப்பதல்லவோ தெளிவு என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அதாவது மற்றெல்லா விஷயங்களையும் விட்டு' என்றாரம்பித்து. கிழத்தனம், மரணம் முதலியவைகளை நிவ்ருத்திக்கும்படி செய்வதினாலும், மிகவும் ஸுகமாக இருப்பதினாலும், விடமுடியாதாகையினாலும் 'அம்ருதத்திற்கு ஸமானமாக இருக்கிறது' என்று சொல்லப்பட்டது. பகவானுக்குச் சேஷமாக இருப்பதொன்றையே ஸ்வபாவமாகவுடைய தன்னுடைய ஸ்வரூபம் உள்ளபடியே ப்ரகாசித்ததேயானால் பரமாத்மாவை அனுபவிப்பதினால் உண்டான ஸுகமும் அதற்குள்ளடங்கியதாகையினால் இங்கே அதைத் தனித்துச் சொல்லவில்லை.* 37

*'விஷயங்கள்' என்பதற்கு அந்தந்த இந்த்ரியங்களுக்கு விஷயங்களாகிய ஆஹாரம், பானம் முதலியவைகள் என்றர்த்தம். 'ஸுகமாக*

கள் ஸுகமாக இருக்கிறதற்குக் காரணமாகிய பசி முதலியவை நிவ்ருத்தித்தபிறகும், அந்த ஸுகம் பின்பு நரகம் முதலியவைகளுக்குக் காரணங்களாகையினாலும், விஷத்தை ஸாப்பிட்டது போலிருக்கிறதோ அந்த ஸுகம் ராஜஸம் என்னப்படுகிறது 38

யதக்ரே சாநுபந்தே ச ஸுகம் மோஹநமாத்மந: |
நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம் தத்தாமஸமுதாஹ்ருதம் || 39

இருப்பதற்குக் காரணமாகிய பசி முதலியவைகள் நிவ்ருத்தித்தபிறகு' என்பதினால் ராஜஸ ஸுகம் த்ருஷ்டத்திலேயே விரோதம் என்பதற்குக் காரணம் சொல்லப்பட்டது. அப்படியே பகவானாகிய பராசரினால் 1 'கர்ம்முஷ்ணேந தோயஸ்ய த்ருஷா பக்தஸ்ய க்ஷுதா | க்ரியதே ஸுகக்த்ருத்வம் தத்விலோமஸ்ய சேதரை: ||' என்று சொல்லப்பட்டது. அப்படியே 2 'க்ஷுத்த்ருஷ்ணோபஶமம் தத்வத் ஶீதாத்யுபஶமம் ஸுகம் | மந்யதே பாலபுத்தித்வாத் து:கமேவ ஹி தத் புந: ||' என்றும் சொல்லப்பட்டது. த்ருஷ்டத்தில் ஸுகமாயிருப்பதற்குக் காரணங்கள் நிவ்ருத்தித்த பிறகு உபேக்ஷை செய்யத்தகுந்தது என்பது மாத்திரத்தை விலக்குவதற்காக துக்கத்தைப் பலமாகவுடையது என்பது 'பரிணாமே விஷமிவ' என்பதினால் சொல்லப்படுகிறது. பரஸ்த்ரீ முதலியவர்களினால் உண்டாகக்கூடிய ஸுகங்கள் பயத்தோடு கூடியதாயும், மிகவும் அல்பமாகிய ஸுகங்களுக்குக் காரணங்களாயும் இருந்தபோதிலும் மேல்வரப்போகிற காலத்தில் உண்டாகப்போகிற அதி பயங்கரமான எல்லையில்லாத துக்கத்திற்குக் காரணங்கள் ஆகின்றன. ஆகையினால் அது விஷம்போலிருக்கிறது என்பது மேலே வரப்போகிறதைப் பற்றியது என்று சொல்லுகிறார்—'நரகம் முதலியவைகளுக்கு' என்றாரம்பித்து. 38

1 விஷ்ணுபுராணம் - 1 - 17 - 64. அக்நே:—நெருப்புக்கு, ஶீதேந - குளிரினாலும், தோயஸ்ய - ஜலத்திற்கு, த்ருஷா - தாகத்தினாலும், பக்தஸ்யச - அன்னத்திற்கு, க்ஷுதா - பசியினாலும், ஸுககர்த்ருத்வம் - ஸுகத்தை உண்டாக்கும் ஸ்வபாவம், க்ரியதே - செய்யப்படுகிறது, தத்விலோமஸ்ய - அதற்கு விரோதமானவஸ்துக்களுக்கு, இதரை:—இதற்கு விரோதமான ஸ்வபாவங்களினால் (ஸுகத்தை உண்டாக்கும் தன்மை செயயப்படுகிறது).

2 விஷ்ணுபுராணம் - 1 - 17 - 60. க்ஷுத்த்ருஷ்ணோபஶமம் - பசி, தாகம், இவைகளை நிவ்ருத்திப்பதையும், தத்வத் - அதைப்போல, ஶீதாத்யுபஶமம் - குளிர் முதலியவைகளை நிவ்ருத்திப்பதையும், பாலபுத்தித்வாத்-சிறுபிள்ளையின் புத்தியையுடையவனாகையினால், ஸுகம் -'ஸுகமாக, மந்யதே எண்ணுகிறான், தத்புந: - அவைகளோவெனில், துக்கமேவஹி - துக்கமே அல்லவா.

ப-ரை] யத் - எந்த, ஸுகம் - ஸுகமானது, அக்ரே - ஆரம்பிக்கும் பொழுதும், அநுபந்தே ச - பரிபாகதசையிலும், ஆத்மந: - தனக்கு, மோஹநம் - மோஹத்தை யுண்டாக்கக்கூடியதோ, நித்ராலஸ்ய ப்ரமாதோத்தம் — நித்ரா - தூக்கம், ஆலஸ்யம் - சோம்பல், ப்ரமாதம் - அஜாக்கிரதை, இவைகளினால் உண்டானதோ, தத் - அந்த ஸுகம், தாமஸம் - தாமஸமாக, உதாஹ்ருதம் - சொல்லப்பட்டது. 39

பா] எந்த ஸுகம் அனுபவிக்கும் பொழுதும் பரிபாக தசையிலும் தனக்கு மோஹத்திற்குக் காரணமாகிறதோ, மோஹமாவது இவ்விடத்தில் வஸ்துக்கள் உள்ளபடியே ப்ரகாசிக்காமலிருப்பது. தூக்கம், சோம்பல் அஜாக்கிரதை இவைகளினால் உண்டாக்கப்பட்டதோ, தூக்கம் முதலியவைகள் அனுபவிக்கும் பொழுதும் மோஹத்திற்குக் காரணங்கள், அதில் தூக்கம் மோஹத்திற்குக் காரணமென்பது ஸ்பஷ்டமாக ஏற்பட்டிருக்கிறது. சோம்பல் இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் குறைந்துபோய் விடுவது.

---

*தா] 'அநுபத்யதே (தொடர்ந்து வருகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'அநுபந்த:' என்பது பரிபாகம். 'மோஹநம்' என்னும் பதம் தாதுவின் அர்த்தத்தையே சொல்லுவதாக இருந்தால் இவ்விடத்தில் அந்வயிக்காதாகையினால் காரணமென்னுமர்த்தத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'மோஹத்திற்குக் காரணம்' என்று. தூக்கம் முதலியவைகளினால் உண்டாக்கப்படுகிற ஸுகம் விபரீதமான ஜ்ஞானத்திற்குக் காரணமல்லவாகையினால் 'மோஹமாவது இவ்விடத்தில்' என்றாரம்பித்துச் சொல்லப்பட்டது. ராஜஸ ஸுகம் பரிபாக தசையில் மோஹத்திற்குக்காரணமாகிறது, தாமஸ ஸுகமோவெனில் அப்பொழுதே மோஹத்திற்குக் காரணமாகிறது என்பது லோகத்திலேற்பட்டது என்கிற அபிப்ராயத்தினால் கீழ்ச்சொல்லியதை விவரிக்கிறார்—'தூக்கம், முதலியவைகள்' என்றாரம்பித்து. 'ஸ்பஷ்டமாக ஏற்பட்டிருக்கிறது' என்பதற்கு இந்த விஷயத்தில் யுக்திகள், ஶாஸ்த்ரங்கள் வேண்டியதில்லை என்றர்த்தம். சோம்பேறிக்கு ஒரு கார்யத்திலும் ப்ரவ்ருத்திக்காமை மாத்திரம் காணப்படுகிறது, ஜ்ஞானமில்லாமை காணப்படுகிறதில்லை என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'சோம்பலாவது' என்றாரம்பித்து. இப்படியானால் ஜ்ஞானமில்லாமைக் கென்னகாரணம்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் குறைந்துபோனால்' என்றாரம்பித்து. ஸாமக்ரிகளின் வ்யாபாரங்களின் வ்யத்யாஸத்திற்குத் தக்கபடியல்லவோ கார்யங்களில் வ்யத்யாஸமுண்டாகிறது. ஜ்ஞானத்*

இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் குறைந்துபோனால் ஜ்ஞானமும் குறைந்து போகிறது. அஜாக்ரதையாவது செய்யவேண்டிய கார்யத்தில் ஊக்கமில்லாமை. அதிலும் ஜ்ஞானத்தின் குறைவுண்டாகிறது ஆகையினால் இவைகளும் மோஹத்திற்குக்காரணங்கள் என்னப்படுகிறது. அந்த ஸுகம் தாமஸமென்று சொல்லப்பட்டது. ஆகையினால் மோக்ஷத்தில் ஆசை

திற்குக் குறைவாவது அல்பமான விஷயங்களைப் பற்றியதாயிருக்கை. அதுவும் மற்ற விஷயங்கள் ப்ரகாசிக்காமலிருப்பதை உள்ளடக்கிக் கொண்டிருக்கிறதென்று தாத்பர்யம். அஜாக்ரதையென்பது ஸ்வரூபத்தினாலேயே அவஶ்யமாகத் தெரிந்துகொள்ள வேண்டியவைகளைப் பற்றிய ஜ்ஞானமில்லாமை என்று சொல்லுகிறார்—'செய்யவேண்டிய கார்யத்தில் ஊக்கமில்லாமை' என்று இப்படிச் சோம்பல், அஜாக்ரதை முதலியவைகள் அஜ்ஞானத்தோடு சேர்ந்திருக்கின்றன என்பது காட்டப்பட்டது. அதற்குக் காரணமாக இருக்கை எப்படி ஸம்பவிக்கும், என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து. ஜ்ஞானத்தின் குறைவு க்ரமமாக ஜ்ஞானம் முழுமையும் இல்லாமையில் முடிவுபெறுகிறது என்று தாத்பர்யம். தூக்கம் ஸுகத்திற்குக் காரணமென்பது இளைப்பாறுவதற்குக் காரணமாயிருக்கை முதலியவைகளினாலும், அதைக் கெடுத்தவர்களிடத்தில் கோபம் உண்டாகிறபடியினாலும் லோகத்தில் ஏற்பட்டிருக்கிறது. இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் குறைந்துவிடுவதும் அவயவங்கள் ஶ்ரமப்படுவதிலிருந்து நிவ்ருத்தியுண்டாக்கி அதின் வழியாக ஸுகத்திற்குக் காரணமாகிறது. அஜாக்ரதையோவெனில் புத்தியை ஒரே வஸ்துவினிடத்தில் ஊக்கமாகச் செலுத்துவதாகிய ப்ரயாஸத்தை நிவ்ருத்தி செய்து அதின் வழியாக ஸுகத்திற்குக் காரணமாகிறது. அல்பமான ஸுகங்களின் ஆசையினால் அகாலத்தில் தூக்கம் முதலியவைகள் அங்கீகரிக்கத்தக்கவைகளல்ல என்று சொல்லப்பட்டதாகிறது. ஸ்ம்ருதியில் 1 'யாமத்வயம் ஶயாநஸ்து ப்ரஹ்மபூயாய கல்பதே' என்றிவை முதலியது சொல்லப்பட்டிருக்கிறது. ஆயுர்வேதம் தெரிந்தவர்களும் 2 'அதிப்ரஸங்காத் அகாலே ஸா நித்ரா நிஷேவிதா ஸுகா

1 யாமத்வயம் - இரண்டு யாமம், ஶயானஸ்து - படுத்துக்கொண்டு தூங்குகிறவன், ப்ரம்மபூயாய - ப்ரம்மமாவதற்கு, கல்பதே - தகுந்தவனாகிறான்.

2 அதிப்ரஸங்காத் - அதிக ஆசையினால், அகாலே - காலமில்லாத காலத்தில், நிஷேவிதா - அடையப்பட்ட, ஸா - அந்த, நித்ரா - தூக்கம், அபரா - மற்றொரு, காளராத்ரிரிவ - காளராத்ரியைப்போல, ஸுகாயுஷி - ஸுகத்தையும் ஆயுஸ்ஸையும், பராகுர்யாத் - போக்கடித்துவிடும்.

யுடையவனால் ரஜோகுணம் தமோகுணம் இவைகளை யடக்கி ஸத்வ குணமே அங்கீகரிக்கத்தகுந்தது என்று சொல்லப்பட்டதாகிறது. 39

**ந ததஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புந: ।**
**ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர் முக்தம் யதேபி: ஸ்யாத் த்ரிபிர் குணை: ॥**

ப - ரை] ப்ருதிவ்யாம்வா - பூமியிலாவது, திவி - ஆகாசத்தில், தேவேஷுவா — தேவதைகளுக்குள்ளாவது, யத் - எந்த, ஸத்த்வம் - ப்ராணி, ப்ரக்ருதிஜை: - ப்ரக்ருதியிலுண்டாகிய, ஏபி: - இந்த, த்ரிபி: - மூன்று, குணை: - குணங்களினால், முக்தம்-விடப்பட்டதாக, ஸ்யாத் ஆகுமோ, தத் - அப்படிப்பட்டது, நாஸ்தி - இல்லை. 40

பா] பூமியில் மனுஷ்யன், முதலியவர்களுக்குள்ளும், ஆகாசத்தில் தேவதை முதலியவர்களுக்குள்ளும் ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கிற ப்ரம்மா முதல் ஸ்த்தாவரம் வரையிலுள்ள ப்ராணிகளுக்குள் ப்ரக்ருதியிலுண்டா

---

*யாஷீவராகாபுராஸ காமாஸ்த்ரிவிதாமதா ॥' என்று சொல்லுகிறார்கள். ஸத்வம் முதலிய குணங்களினாலுண்டாகிய பிரிவுகளை நிரூபித்திருக்கிற இந்த ஸந்தர்ப்பத்தின் தாத்பர்யத்தை, இதை அனுஷ்டிக்க வேண்டுமென்பதில் முடிவுபெறுகிறது என்றிதின் ப்ரயோஜனத்தைச் சொல்லி முடிக்கிறார்—'ஆகையினால்' என்றாரம்பித்து.* 39

*ப்ரக்ருதியைச் சேர்ந்த குணங்களைத் தாண்டினதாயும் சுத்தஸத்வமயமாயுமிருக்கிற பகவானை யனுபவிப்பதையே ஸ்வபாவமாகவுடைய மோக்ஷமுண்டாவதற்குமுன் இடம், காலம், இவைகளின் ஏற்பாட்டுடன் கூடிய பலன்களின் அனுபவத்தையுடைய தாழ்ந்தது உயர்ந்ததுமாகிய எல்லா ஜீவாத்மாக்களினாலும் கீழ்ச்சொல்லிய மூன்று குணங்கள் நிஶ்ஶேஷமாகவிடமுடியாது என்று சொல்லிக்கொண்டு குணங்களின் கார்யங்களை நிரூபிக்கிற இந்த ஸந்தர்ப்பம் நிகமனம் செய்யப்படுகிறது— இந்த ஶ்லோகத்தினால். மூன்று குணங்களைப் பற்றி நிரூபிக்கும் ஸந்தர்ப்பமோவெனில் இவ்விடத்தில் நிகமனம் செய்யப்படவில்லை, மேலும் 1 'ஸ்வபாவப்ரபவைர்குணை:' என்று சொல்லியிருப்பதினால். 'திவி தேவேஷு' என்றது ஸத்வகுணம் மேலிட்ட இடம், அதிகாரிகள், இவைகளைக் குறிக்கிறது. அதற்கு ஸமமாக இருப்பதினால் 'ப்ருதிவ்யாம்' என்கிற இடத்திலும் 'மனுஷ்யன் முதலியவர்களுக்குள்' என்று ரஜோகுணம் தமோகுணம் மேலிட்ட அதிகாரிகள் சொல்லப்படுகிறார்கள். 2 'ஹிரண்யகர்ப்போ பகவாந்', 3 'க்ஷுபெ ஹுவஸு*

---

1 பகவத்கீதை - 18 - 41. 2 விஷ்ணுபுராணம் - 6 - 7 - 56.
3 விஷ்ணுதர்மம் - 104 - 23.

கிய இந்த மூன்று குணங்களினால் விடப்பட்ட ப்ராணி ஜாதம் எதுவோ அப்படிப்பட்டதில்லை. 40

பா-அ] * 'சிலர் த்யாகத்தினால் மோக்ஷத்தை யடைந்தார்கள்' என்றர்த்த முள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் மோக்ஷத்திற்கு ஸாதனமாகச் சொல்லப்படுகிற த்யாகம் ஸந்ந்யாஸத்தைவிட வேறுபட்டதல்ல, அதாவது கர்மங்களைச்செய்து கொண்டிருக்கும்போழுதே அவைகளில் கர்த்ருத்வ த்யாகத்தினாலுண்டாகிற பலம், என்னுடைய தென்கிற அபிமானம், இவைகளின் த்யாகம்.கர்த்ருத்வ த்யாகமும் பரமாத்மாவினிடத்தில் கர்த்ருத்வத்தைத்தெரிந்து கொள்ளுவதினால் என்று சொல்லப்பட்டது. இவை யெல்லாம் ஸத்வகுணம் வ்ருத்தியடைவதினால் உண்டாக்கக் கூடியதா

வயடுஜாஃ' என்றிவை முதலியவைகளை பலுவரித்துப் பன்மையாகச் சொல்லியிருப்பதின் அபிப்ராயத்திலிருக்கும் அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'ப்ரம்மா முதல்' என்றாரம்பித்து. குணங்களைச்சொல்லும் ஸந்தர்ப்பமாகையினாலும்'ஸத்வ' என்னும்பதம் ஒருவிதக்குணத்தைச்சொல்லுகிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காக 'ப்ராணி' என்னும் பதம் கும்பல் கும்பலாக பிரித்துப்பார்த்த போதிலும் குணங்களினால் விடப்பட்ட ப்ராணி ஒன்றுமில்லை என்கிற அபிப்ராயத்தினால் பாஷ்யத்தில் 'ப்ராணிஜாதம்' என்று சொல்லப்படுகிறது. அன்றிக்கே 'ஜாதம்' என்று தனிப்பதமாக வைத்துக்கொண்டு ஸம்ஸாரத்தில் உத்பத்தியடைந்திருக்கிற ப்ராணி என்றர்த்தமாகவுமாம். ஸம்ஸாரம் முடியும் வரையிலும் பிறந்தது முதல் குணங்களினாலே கட்டப்பட்டிருக்கிறதென்று தெரிவிப்பதற்காகவாகவுமாம். 40

தா] இப்படி ஸம்ஸாரிகளெல்லாம் மூன்று குணங்களுக்கும் வசப்பட்டவர்களென்றுசொல்லப்பட்டது. பிறகு அந்தந்தக் குணங்களின் வ்யத்யாஸங்களையுடைய தேஹத்தோடு சேர்ந்திருக்கும் அதிகாரிகளுக்கு அவரவர்கள் அதிகாரத்திற்குத்தக்கபடி ஶாஸ்த்ரங்களினால் பிரிக்கப்பட்டிருக்கிற கர்மம் முதலியவைகள் நிரூபிக்கப்படுகின்றன. இதற்கு முக்கியமான முதலில் ப்ரஸ்தாவிக்கப்பட்ட அர்த்தத்துடன் ஸங்கதி சொல்லுவதற்காக இந்த அத்யாயத்தின் முதலில் ஆரம்பிக்கப்பட்ட அர்த்தத்தைச் சொல்லுகிறார்—'சிலர் என்றாரம்பித்து. 'ஸந்ந்யாஸத் [illegible] ஶ்ருதியிலும் I 'த்யாகத்தினால் [illegible] என்றும், இவை இரண்டும் ஒரே

* தைத்திரீயம், நாராயணம், 10.

மின்றும் ஸத்வகுணமே அங்கீகரிக்கத்தகுந்தது என்று தெரிவிப்பதற்காக ஸத்வம், ரஜஸ்ஸு, தமஸ்ஸு, இவைகளின் கார்யங்களினுடைய வ்யத்யாஸங்களும் விஸ்தாரமாக நிரூபிக்கப்பட்டன. இப்பொழுது இப்படிப்பட்ட மோக்ஷத்திற்குபாயமாகச் செய்யப்படுகிற கர்மம் பரமாத்மாவின் ஆராதனம் என்பதையும், அப்படி யனுஷ்டிக்கப்படுகிற கர்மத்திற்கு அந்தப் பரமாத்மாவையடைவதே ப்ரயோஜனம் என்பதையும், நிரூபிப்பதற்காக ப்ராம்மணன் முதலிய அதிகாரிகளுக்கு அவரவர்களின் ஸ்வபாவங்களோடு சேர்ந்த ஸத்வம் முதலிய குணங்களின்வ்யத்யாஸங்களினால் வெவ்வேறாக இருக்கிற [1]ஜீவனோபாயத்துடன் செய்யவேண்டிய கர்மங்களின் ஸ்வரூபத்தையும் சொல்லுகிறார்—

*ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்ராணாம் ச பரந்தப |*
*கர்மாணி ப்ரவிபக்தாநி ஸ்வபாவப்ரபவைர் குணை: ||* 41

ப-ரை] *பரந்தப* - சத்ருக்களை ஜயிக்கக்கூடிய அர்ஜுந, *ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம்* - ப்ராம்மணன், க்ஷத்திரியன், வைஶ்யன், இவர்களுக்கும், *ஶூத்ராணாம் ச* - சூத்திரர்களுக்கும், *ஸ்வபாவப்ரபவை:*-தங்களுடைய அநாதி கர்மத்தினாலுண்டாகிய, *குணை:*- ஸத்வம், முதலிய குணங்களினால், *கர்மாணி* - கர்மங்கள், *ப்ரவிபக்தாநி* - பிரிக்கப்பட்டிருக்கிறதுகள். 41

பா] ப்ராம்மணன், க்ஷத்திரியன், வைஶ்யன், இவர்களுக்கு ப்ராம்மணன் முதலிய ஜன்மங்களுக்குக் காரணமாகிய பழைய கர்மத்தினாலுண்டாகியவைகள் ஸத்வம் முதலிய குணங்கள். ப்ராம்மணனுக்கு ஸ்வபாவத்தினுண்டாகிய குணம் ரஜோகுணத்தையும் தமோகுணத்தையுமடக்கி வ்ருத்தியடைந்திருக்கிற ஸத்வகுணம். க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்திலுண்டாகிய குணம் தமோகுணத்தையும் ஸத்வகுணத்தையும் அடக்கி

*அர்த்தத்தைச் சொல்லுவதாகவே சொல்லப்படுகின்றன என்று தாத்பர்யம். 'இப்படிப்பட்ட' என்பதற்கு மூன்றுவித த்யாகங்களுடன் கூடிய என்றர்த்தம். 'ஜீவனோபாயத்துடன்' என்பதற்கு மேலே சொல்லப்போகிற பயிரிடுதல், பசுமாடுகளைக் காப்பாற்றுதல் முதலியவைகள் ஜீவனோபாயங்களல்லவா என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம்' என்று சேர்த்துச் சொல்லியிருப்பது இந்த மூன்றுபேர்களும் இருபிறப்புடையவர்களாகையினாலே வேதத்தில் அதிகாரமுள்ளவர்களாகையினால். பழையகர்மங்களுக்குத் தக்கபடி*

1. *தைத்திரீயம், நாராயணம்.*

வெவ்வேறாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன. ப்ராம்மணன் முதலியவர்கள் இப்படிப்பட்ட குணங்களையுடையவர்கள், அவர்களுக்குக் கர்மங்கள் இவைகள், அவர்களுக்கு ஜீவனோபாயங்கள் இவைகள், என்றல்லவோ ஶாஸ்த்ரங்கள் பிரித்துச்சொல்லுகின்றன. 41

ஶமோ தமஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।
ஜ்ஞானம் விஜ்ஞானமாஸ்திக்யம் ப்ராஹ்மம் கர்ம ஸ்வபாவஜம்॥ 42

ப - ரை] ஶம: - ஶமம், தம: – தமம், தப: – தபஸ்ஸு, ஶௌசம்– பரிசுத்தி, க்ஷாந்தி: - பொறுமை, ஆர்ஜவம் - கபடமில்லாமை, ஜ்ஞானம் – ஜ்ஞானம், விஜ்ஞானம் - பகுத்தறிவு, ஆஸ்திக்யம் - ஆஸ்திகத்தன்மை, இவைகள், ப்ராஹ்மம் - ப்ராம்மணனுடையதாகிய, ஸ்வபாவஜம் - ஸ்வபாவத்திலுண்டாகிய, கர்ம – கர்மம் 42

பா] ஶம: - வெளி இந்த்ரியங்களை யடக்குதல், தம: - மனதை யடக்குதல், தப: - போகங்களைச் சுருக்கிக்கொள்ளுதலாகிய ஶாஸ்த்ரங்களிலேற்பட்ட காயக்லேசம், ஶௌசம் – ஶாஸ்த்ரங்களிலேற்பட்ட கர்மங்களைச் செய்யத்தகுந்த யோக்யதை, க்ஷாந்தி: - அயலாரால் பீடிக்கப்பட்

---

*னுல் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று ஔபசாரிகமாகச் சொல்லியிருக்கிறதாகையினுல் இந்த அர்த்தமே உசிதமாகவுமாம் என்று தாத்பர்யம். யாரால் பிரிக்கப்பட்டது என்று க்ஷேபம் வரில் ஶாஸ்த்ரங்களினுல் என்று ப்ரக்ருதியை சேர்த்துக்கொள்ள வேண்டியது. ஸ்வரூபங்களின் பிரிவு ஶாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டதல்ல; ஆகையினுல் வெவ்வேறாகத் தெரிவிக்கிறதுசொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'வெவ்வேறாக நிரூபிக்கப்பட்டிருக்கின்றன' என்று. பிரித்துச் சொல்லியிருக்கிறதை விவரிக்கிறார்—'ப்ராம்மணன் முதலியவர்கள்' என்றாரம்பித்து. 'கர்ம' என்னும் பதமே பொதுவாக ஜீவனோபாயத்தையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறது. கர்மமே ஜீவனத்திற்காகவாகையினுல் அதைக்குறிக்கிறதாகவுமாம் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்—'ஜீவனோபாயங்கள்' என்று.* 41

'ஶம:, தம:' என்றிவை முதலிய இடங்களில் முன்பு வ்யாக்யானம் செய்யப்பட்டிருந்தபோதிலும் இந்தக் குணங்களை மறுபடியும் வ்யாக்யானம் செய்திருப்பது ப்ராம்மணன் முதலிய வர்ணங்களைச் சேர்ந்ததாக விதிக்கிற இடத்தில் அது உட்பிரிவான விஶேஷங்களைச் சொல்லுகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகவும், 'ப்ராஹ்மம்கர்ம' என்று சொல்லப்பட்ட கர்மம் என்றேற்படுகிறதற்காகவும்,

டிருந்தபோதிலும் விகாரத்தையடையாமலாதபடியாயிருக்கை, **ஆர்ஜவம்** - அயலாரிடங்களில் மனதிற்குத் தக்கபடி வெளிவ்யாபாரங்களைச் செய்தல், **ஜ்ஞாநம்** - உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம், இவைகளின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானம், **விஜ்ஞாநம்**-பரமாத்மாவினிடத்திலிருக்கிற அஸாதாரணமான விசேஷங்களைப்பற்றிய ஜ்ஞானம், **ஆஸ்திக்யம்** - வேதங்களில் சொல்லப்பட்ட அர்த்தம் முழுமையும் உண்மை என்று ஒரு காரணத்தினாலும் அசைக்கமுடியாத உறுதியான நிஸ்சயம், அதாவது பகவானாயும் புருஷோத்தமனாயுமிருக்கிற ஸ்ரீ க்ருஷ்ணன் பரப்ரம்மம் என்னும் பதத்தினால் சொல்லத்தகுந்தவர், தோஷங்களின் ஸம்பந்தமில்லாதவன், ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட எல்லையில்லாத ஆநந்தத்தையுடைய ஜ்ஞானம், சக்தி, முதலிய எண்ணிறந்த கல்யாண குணங்களின் கூட்டங்களையுடையவன், எல்லா வேதங்களினாலும், வேதாந்தங்களினாலும் அறியத்தகுந்தவன், அவனே ஸகலலோகங்களுக்கும் முக்கியமான காரணம், ஸகல லோகங்களுக்கும் ஆதாரமாகஇருப்பவன்;

---

*இந்த்ரியங்களை அடக்குவதாகிய புருஷனுடைய வ்யாபாரத்தினால் செய்யக்கூடியதென்று தெரிவிப்பதற்காகவும். ஆகையினால் '**ஶௌசம்**' முதலிய இடங்களிலும் இப்படியே ப்ரயோஜனம் அறியவேண்டியது. '**அஸ்தி மதிர் யஸ்ய** (இவனுக்குப் புத்தி இருக்கிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் '**ஆஸ்திக:**' என்னப் படுகிறான் ஆஸ்திகனாக இருக்கை '**ஆஸ்திக்யம்**'. அதுவும் அப்ராமாணிகமான அர்த்தங்களில் அந்தப் புத்தி உண்டாகுமானால் தோஷத்திற்குக் காரணமாகிறது. ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களின் மேற்பட்டிருக்கிற விஷயங்களின் மேற்படுமானால் அது விசேஷமல்ல. ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களிலேயே சில விஷயங்களில் ஸம்ஶயம் முதலியது உண்டாகுமானால் குத்ருஷ்டியாக வேண்டிவருமாகையினால் 'வேதத்தில் சொல்லப்பட்ட அர்த்தம் முழுமையும்' என்று சொல்லப்பட்டது. கூடச்சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிற ஜ்ஞானம் முதலியவைகளைவிட வ்யத்யாஸத்தைத் தெரிவிப்பதற்காக ஸத்யம் என்கிற நிஶ்சயம் உறுதியாயிருக்கிறதென்று சொல்லியிருக்கிறது. இதையே விவரிக்கிறார்—'ஒரு காரணத்தினாலும்' என்றாரம்பித்து. 'வேதத்தில் சொல்லப்பட்ட அர்த்தம்முழுமையும்' என்று கீழ்ச்சொல்லியிருப்பதை, குத்ருஷ்டி முதலியவர்களினால் வேதத்தில் சொல்லப்படுகிறதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அர்த்தங்களை விலக்குவதற்காக முக்கியமான அர்த்தத்தைச் சேர்த்து விவரிக்கிறார்—'பகவானாயும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில்விசேஷணங்கள்முன்னமேயே வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்ப;*

வெவ்வேருக நிருபிக்கப்பட்டிருக்கின்றன. ப்ராம்மணன் முதலியவர்கள் இப்படிப்பட்ட குணங்களையுடையவர்கள், அவர்களுக்குக் கர்மங்கள் இவைகள், அவர்களுக்கு ஜீவனோபாயங்கள் இவைகள், என்றல்லவோ ஶாஸ்த்ரங்கள் பிரித்துச்சொல்லுகின்றன. 41

**ஶமோ தமஸ்தப: ஶௌசம் க்ஷாந்திரார்ஜவமேவ ச ।**
**ஜ்ஞாநம் விஜ்ஞாநமாஸ்திக்யம் ப்ராஹ்மம் கர்ம ஸ்வபாவஜம்॥** 42

ப - ரை] **ஶம:** - ஶமம், **தம:** — தமம், **தப:** — தபஸ்ஸு, **ஶௌசம்**— பரிசுத்தி, **க்ஷாந்தி:** - பொறுமை, **ஆர்ஜவம்** - கபடமில்லாமை, **ஜ்ஞாநம்** — ஜ்ஞானம், **விஜ்ஞாநம்** - பகுத்தறிவு, **ஆஸ்திக்யம்** - ஆஸ்திகத்தன்மை, இவைகள், **ப்ராஹ்மம்** - ப்ராம்மணனுடையதாகிய, **ஸ்வபாவஜம்** - ஸ்வபாவத்திலுண்டாகிய, **கர்ம** — கர்மம் 42

பா] **ஶம:** - வெளி இந்த்ரியங்களை யடக்குதல், **தம:** - மனதை யடக்குதல், **தப:** - போகங்களைச் சுருக்கிக்கோள்ளுதலாகிய ஶாஸ்த்ரங்களிலேற்பட்ட காயக்லேசம், **ஶௌசம்** — ஶாஸ்த்ரங்களிலேற்பட்ட கர்மங்களைச் செய்யத்தகுந்த யோக்யதை, **க்ஷாந்தி:** - அயலாரால் பீடிக்கப்பட்

---

ளுல் பிரிக்கப்பட்டிருக்கிறதென்று ஔபசாரிகமாகச் சொல்லியிருக்கிறதாகையினல் இந்த அர்த்தமே உசிதமாகவுமாம் என்று தாத்பர்யம். யாரால் பிரிக்கப்பட்டது என்று ஆக்ஷேபம் வரில் ஶாஸ்த்ரங்களினல் என்று ப்ரக்ருதியை சேர்த்துக்கொள்ள வேண்டியது. ஸ்வரூபங்களின் பிரிவு ஶாஸ்த்ரங்களுக்கு வசப்பட்டதல்ல; ஆகையினல் வெவ்வேருகத் தெரிவிக்கிறதுசொல்லப்படுகிறது என்று சொல்லுகிருர்—'வெவ்வேருக நிருபிக்கப்பட்டிருக்கின்றன' என்று. பிரித்துச் சொல்லியிருக்கிறதை விவரிக்கிருர்—'ப்ராம்மணன் முதலியவர்கள்' என்றுரம்பித்து. 'கர்ம' என்னும் பதமே பொதுவாக ஜீவனோபாயத்தையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறது. கர்மமே ஜீவனத்திற்காகவாகையினல் அதைக்குறிக்கிறதாகவுமாம் என்கிற அபிப்ராயத்தினல் சொல்லுகிருர்—'ஜீவனோபாயங்கள்' என்று. 41

'ஶம:, தம:' என்றிவை முதலிய இடங்களில் முன்பு வ்யாக்யானம் செய்யப்பட்டிருந்தபோதிலும் இந்தக் குணங்களை மறுபடியும் வ்யாக்யானம் செய்திருப்பது ப்ராம்மணன் முதலிய வர்ணங்களைச் சேர்ந்ததாக விதிக்கிற இடத்தில் அது உட்பிரிவான விசேஷங்களைச் சொல்லுகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகவும், 'ப்ராஹ்மம்கர்ம' என்று சொல்லப்பட்ட கர்மம் என்றேற்படுகிறதற்காகவும்,

டிருந்தபோதிலும் விகாரத்தையடையாத மனதையுடையவனாயிருக்கை, ஆர்ஜவம் - அயலாரிடங்களில் மனதிற்குத் தக்கபடி வெளி வ்யாபாரங்களைச் செய்தல், ஜ்ஞாநம் - உயர்ந்த தத்துவம், தாழ்ந்த தத்துவம், இவைகளின் உண்மையைப்பற்றிய ஜ்ஞானம், விஜ்ஞாநம்-பரமாத்மாவினிடத்திலிருக்கிற அஸாதாரணமான விசேஷங்களைப்பற்றிய ஜ்ஞானம், ஆஸ்திக்யம் - வேதங்களில் சொல்லப்பட்ட அர்த்தம் முழுமையும் உண்மை என்று ஒரு காரணத்தினாலும் அசைக்கமுடியாத உறுதியான நிஸ்சயம், அதாவது பகவானும் புருஷோத்தமனுமாயிருக்கிற ஸ்ரீ க்ருஷ்ணன் பரப்ரம்மம் என்னும் பதத்தினால் சொல்லத்தகுந்தவன், தோஷங்களின் ஸம்பந்தமில்லாதவன், ஸ்வபாவத்திலேயே ஏற்பட்ட எல்லையில்லாத ஆநந்தத்தையுடைய ஜ்ஞானம், சக்தி, முதலிய எண்ணிறந்த கல்யாண குணங்களின் கூட்டங்களையுடையவன், எல்லா வேதங்களினாலும், வேதாந்தங்களினாலும் அறியத்தகுந்தவன், அவனே ஸகலலோகங்களுக்கும் முக்கியமான காரணம், ஸகல லோகங்களுக்கும் ஆதாரமாகஇருப்பவன்,

---

*இந்த்ரியங்களை அடக்குவதாகிய புருஷனுடைய வ்யாபாரத்தினால் செய்யக்கூடியதென்று தெரிவிப்பதற்காகவும். ஆகையினால் '**ஸௌசம்**' முதலிய இடங்களிலும் இப்படியே ப்ரயோஜனம் அறியவேண்டியது. '**அஸ்தி மதிர்யஸ்ய** (இவனுக்குப் புத்தி இருக்கிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் '**ஆஸ்திக:**' என்னப் படுகிறான் ஆஸ்திகனாக இருக்கை '**ஆஸ்திக்யம்**'. அதுவும் அப்ராமாணிகமான அர்த்தங்களில் அந்தப் புத்தி உண்டாகுமானால் தோஷத்திற்குக் காரணமாகிறது. ப்ரத்யக்ஷம் முதலிய ப்ரமாணங்களினால் ஏற்பட்டிருக்கிற விஷயங்களிலேற்படுமானால் அது விசேஷமல்ல. ஸாஸ்த்ரங்களில் சொல்லப்பட்ட அர்த்தங்களிலேயே சில விஷயங்களில் ஸம்ஸயம் முதலியது உண்டாகுமானால் குத்ருஷ்டியாக வேண்டிவருமாகையினால் 'வேதத்தில் சொல்லப்பட்ட அர்த்தம் முழுமையும்' என்று சொல்லப்பட்டது. கூடச்சேர்த்துச் சொல்லப்பட்டிருக்கிற ஜ்ஞானம் முதலிய வைகளைவிட வ்யத்யாஸத்தைத் தெரிவிப்பதற்காக ஸத்யம் என்கிற நிஸ்சயம் உறுதியாயிருக்கிறதென்று சொல்லியிருக்கிறது. இதையே விவரிக்கிறார்—'ஒரு காரணத்தினாலும்' என்றாரம்பித்து. 'வேதத்தில் சொல்லப்பட்ட அர்த்தம்முழுமையும்' என்று கீழ்ச்சொல்லியிருப்பதை, குத்ருஷ்டி முதலியவர்களினால் வேதத்தில் சொல்லப்படுகிறதாக ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிற அர்த்தங்களை விலக்குவதற்காக முக்கியமான அர்த்தத்தைச் சேர்த்து விவரிக்கிறார்—'பகவானும்' என்றாரம்பித்து. இவ்விடத்தில்விசேஷணங்கள்முன்னமேயே வ்யாக்யானம் செய்யப்பட்டிருப்பதினால் இவ்விடத்*

ஸகல ப்ராணிகளையும் நியமிக்கிறவனுமவனே, வேதங்களில் சொல்லப் பட்ட எல்லாக் கர்மமும் அவனுக்கு ஆராதனமாகியது, அந்தந்தக் கர்மங்களினால் ஆராதிக்கப்பட்டவனாய் தர்மம். அர்த்தம், காமம், மோக்ஷம், என்கிற ப்ரயோஜனங்களை அவனே கொடுக்கிறான் என்கிற இந்த அர்த்தம் உண்மை என்கிற நிஶ்சயம், * 'வெடைஶ்ச ஸவெவெ-ரஹமெவ வெ஡ுஃ', † 'அஹம் ஸவ-ஸ்ய ப்ரஹவொ மத்தஃஸவ-ம் ப்ரவத-தெ', ‡ 'மயி ஸவ-மிடம் ப்ரொதம்', $ 'ஹொக்தாரம் யஜ்ஞதவஸாம் ...ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம்ருச்சதி', ¶ 'மத்தஃ பரதரம் நாந்யத்கிம்சிதஸ்தி தநஞ்ஜய', ‖ 'யதஃ ப்ரவ்ருத்திர் பூதாநாம் யேந ஸவ-மிடம் ததம் | ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவஃ ||', ** 'யோமாமஜமநாதிம் ச வெத்தி லோகமஹெஶ்வரம்' என்றல்லவோ சொல்லப்படுகின்றன, இவைகள் ப்ராம்மணனுக்கு ஸ்வபாவத்திலேற்பட்ட கர்மம். 42

ஶௌர்யம் தெஜோ த்ருதிர் தாக்ஷ்யம் யுத்தெ சாப்யபலாயநம் |
தாநமீஶ்வரஹாவஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வஹாவஜம் || 43

[ப - ரை ஶௌர்யம் - சௌர்யமும், தெஜஃ-தேஜஸ்ஸும், த்ருதிஃ - தைர்யமும், தாக்ஷ்யம் - ஸாமர்த்தியமும், யுத்தெ அபி-யுத்தத்திலும், அபலாயநம் — ஓடாமலிருப்பதும் தாநம் - கொடுப்பதும், ஈஶ்வர

---

தில் எல்லா வேதங்களுக்கும் ஸாரம்ஶமாக எடுத்துச் சொல்லப்பட்டிருக்கிற அர்த்தம் அதற்கு உபப்ரம்மணமாகிய இந்தக்கீதாஶாஸ்த்ரத்திலும் அப்படியே ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டிருக்கிறது என்று சொல்லுகிறார்—'வெடைஶ்ச' என்றாரம்பித்து. எல்லா வேதங்களிலும் எல்லா வேதாந்தங்களிலும் அறியத்தக்கது என்று சொல்லப்பட்ட அர்த்தங்களின் க்ரமத்தை யனுஸரித்துத் தனித்தனியாகச் சிதறி இருக்கிற வாக்யங்களை எடுத்திருக்கிறது. ஶ்லோகத்தின் அர்த்தத்தை முடிக்கிறார்—'இவைகள்' என்றாரம்பித்து. ப்ரம்மத்தின் கர்மம் 'ப்ராஹ்மம்', 'ப்ரஹ்மம்' என்னும் பதம் இவ்விடத்தில் ப்ராம்மண ஜாதியைச் சொல்லுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'ப்ராம்மணனுக்கு' என்று. 42

---

* பகவத்கீதை - 15 - 15. † பகவத்கீதை - 10 - 8.
‡ பகவத்கீதை - 7 - 7. $ பகவத்கீதை - 5 - 29.
¶ பகவத்கீதை - 7 - 7. ‖ பகவத்கீதை - 18 - 46.
** பகவத்கீதை - 10 - 3.

ஸ்வபா வஜம் - நியமிக்கும் ஸ்வபாவமும், க்ஷாத்ரம் - க்ஷத்திரியனுடைய தாகிய ஸ்வபாவஜம்—ஸ்வபாவத்தினுலுண்டான, கர்ம - கர்மம். 43

பா] ஶௌர்யம் - சண்டையில் பயமில்லாமல் ப்ரவேசிக்கக் கூடிய ஸாமர்த்தியம், தேஜ: - சத்துருக்களினுல் அவமானம் செய்யக்கூடாமை, த்ருதி: - ஆரம்பித்த கார்யத்தில் தடங்கல்கள் நேரிட்டபோதிலும் அதை முடிக்கும் ஸாமர்த்தியம், தாக்ஷ்யம் - எல்லாக்கார்யங்களையும் செய்து முடிக்கும் தன்மை, யுத்தே சாப்யபலாயநம் - சண்டையில் தனக்கு மரணம் நேரிடும் என்கிற நிச்சயம் உண்டானபோதிலும் திரும்பாமை, தாநம் - தன்னுடைய பொருளை அயலானுக்கு ஸ்வாதீனப்படுத்துவதாகிய, த்யாகம், ஈஶ்வரபாவ: - தன்னைத்தவிர மற்றெல்லா ஜனங்களையும் நியமிக்கும் ஸாமர்த்தியம், இது க்ஷத்திரியனுக்கு ஸ்வபாவத்தினு லேற்பட்ட கர்மம். 43

---

*தா] 'ஶூரம் வீரம் ஸவ்யஸாசிநம்' என்று சொல்லியிருப்பதினுல் பயந்தவனுக்கு எதிர்நடையான ஸ்வபாவமுடையவனிடத்தில் 'ஶூர:' என்னும்பதம் ப்ரயோகிக்கப்பட்டிருக்கிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'பயமில்லாமல் ப்ரவேசிக்கக்கூடிய' என்று. மனதின் வ்யாபாரம் ஶரீரத்தின் வ்யாபாரம், இவை இரண்டையும் சேர்த்துச் சொல்லியிருக்கிறது இது. அப்படி நுழைந்தவனுக்குச் சத்துருக்களினுல் அவமானம் நேரிட்டால் அது குற்றமாகும் ஆகையினுல் அதைப் பரிஹரிப்பதற்காக இவ்விடத்தில் தேஜஸ்ஸூ சொல்லப்பட்டது என்று சொல்லுகிருர்—'சத்துருக்களினுல் அவமானம்செய்யக்கூடாமை' என்று. 'தாக்ஷ்யம்' என்பதைவிட 'த்ருதி:' என்பதற்கு வ்யத்யாஸம் 'தடங்கல்கள் நேரிட்டபோதும்' என்பதினுல் காட்டப்பட்டது. ப்ரவ்ருத்தி செய்யும் ஸாமர்த்தியத்தைவிட ப்ரவ்ருத்தித்த கார்யத்தைவிடாமை வேறு. 'யுத்தே சாபி' என்கிற இடத்தில் 'அபி' என்னும் பதத்தினுல் குறிக்கப்பட்டதாகிய ஓடுவதற்கு முக்கியமான காரணத்தைச் சொல்லுகிருர்—'தனக்கு மரணம் நேரிடும் என்கிற நிச்சயம் உண்டானபோதிலும்' என்று. இவ்விடத்தில் 'ஈஶ்வரபாவ' என்னும் பதத்தினுல் துஷ்டர்களை அடக்குவதற்கும் சிஷ்டர்களைக் காப்பாற்றுவதற்கும் உபயோகமான சக்தி சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'தன்னைத்தவிர' என்றாரம்பித்து. 'எல்லா ஜனங்களையும்' என்பது தன்னுடைய தேசங்களுக்குள்ளடங்கிய ஜனங்களைப்பற்றியது. 43*

க்ருஷிகோரக்ஷ்யவாணிஜ்யம் வைஶ்யம் கர்ம ஸ்வபாவஜம் | *

ப - ரை] க்ருஷி - பயிரிடுதல், கோரக்ஷ்ய - பசுக்களைக் காப்பாற்றுதல், வாணிஜ்யம்-வ்யாபாரம் செய்தல், இவைகள், வைஶ்யம் - வைஶ்யர்களினுடையதாகிய, ஸ்வபாவஜம் - ஸ்வபாவத்தினுலுண்டாகிய கர்ம - கர்மம். *

பா] க்ருஷி: – பயிரை உண்டாக்குவதற்காக உழுதல், கோரக்ஷ்யம்- பசுமாடுகளைக்காப்பாற்றுதல், வாணிஜ்யம்- பணம் பெறுவதற்குக் காரணமாகிய விற்பனைசெய்தல், வாங்குதல் முதலான கார்யதத்தைச்செய்தல். இவைகள் வைஶ்யர்களினுடைய ஸ்வபாவத்திலேற்பட்ட கர்மம். *

பரிசர்யாத்மகம் கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் || 44

ப – ரை' பரிசர்யாத்மகம் - பணிவிடையாகிற, கர்ம-கர்மமானது, ஶூத்ரஸ்யாபி – சூத்ரனுக்கும், ஸ்வபாவஜம் - ஸ்வபாவத்திலேற்பட்டது. 44

பா முன்பு சோல்லிய முன்று வர்ணத்தாருக்கும் பணிவிடைசூத்ரனுக்கு

---

தா] லோகத்தில் ப்ரயோகத்தையும் வ்யுத்பத்தியையும் அனுஸரித்து ப்ரயோஜனத்தைக்கொண்டும் ஸ்வரூபத்தைக் கொண்டும் 'க்ருஷி' என்பதை நிரூபிக்கிறார்—'பயிரை உண்டாக்குவதற்காக' என்று. இப்படியே 'வாணிஜ்யம்' என்பதின் வ்யாக்யானத்திலும் அறியவேண்டியது. எந்தக்கார்யத்தில் பசுமாடு காப்பாற்றத்தக்கதோ அந்தக் கார்யம் 'கோரக்ஷ்யம்' என்னப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறார்- 'பசுமாடுகளைக் காப்பாற்றுதல்' என்று. 'ரக்ஷ்யம்' என்கிற பதமே தாதுவின் அர்த்தத்தையே சொல்லுகிறது. அதாவது ரக்ஷித்தல் என்றர்த்தமாகவுமாம். 'கௌரக்ஷ்யம்' என்றும் பாடமுண்டு. அப்பொழுது 'காம் ரக்ஷதி (பசுக்களைக்காக்கிறான்)' என்கிற வ்யுத்பத்தியினுல் 'கோரக்ஷ:' என்னப்படுகிறான். அவனுடைய கர்மம் 'கௌரக்ஷ்யம்' என்னப்படுகிறது, வணிகனுடைய கார்யம் 'வாணிஜ்யம்' என்று சொல்லுவதைப்போல. இப்படியே 'வைஶ்யம்' என்கிற இடத்திலும் ப்ராம்மணன் முதலியவர்களின் கர்மங்களைச் சொல்லுமிடத்திலும் 'ஷ்யஞ்' என்னும் விகுதிவரும் என்றல்லவோ சொல்லப்படுகிறது. *

மற்ற ஶாஸ்த்ரங்களை யனுஸரித்துப் பணிவிடை என்பது கீழ் ப்ரஸ்தாவிக்கபபட்ட மூன்று வர்ணத்தார்களையும் பற்றியது என்று சொல்லுகிறார்—'முன்பு சோல்லிய' என்றாரம்பித்து. இவ்விடத்தில்

ஸ்வபாவத்தினலேற்பட்ட கர்மம். இது நான்கு வர்ணத்தார்களுக்கும் ஜீவனோபாயங்களுடன் அவஶ்யம் செய்யவேண்டியவைகளாக ஶாஸ்த்ரங்களினல் விதிக்கப்பட்ட கர்மங்களையும் குறிப்பதற்காகச் சொல்லப்பட்டது. யஜ்ஞம், முதலியவைகள் மூன்று வர்ணத்தாருக்கும் பொதுவானவைகள். ஶமம் முதலியவைகளும் மோக்ஷத்திலாசையையுடைய மூன்று வர்ணத்தாருக்கும் பொதுவானவைகள். ப்ராம்மணனுக்கோ வெனில் ஸத்வகுணத்தின் வ்ருத்தி ஸ்வபாவத்திலேயே ஏற்பட்டிருப்பதி

ஆறுகர்மங்களை யுடையவர்கள் ப்ராம்மணர்கள், மூன்று மூன்று கர்மங்களையுடையவர்கள் க்ஷத்திரியர்களும் வைஶ்யர்களும் என்றும், ஶூத்திரனுக்கும் 1 'ஸாயாஹ்ர திஶ்ஶுசிர் ஸ்ருத்ய ஸத்ஹா ஶ்ராத்த க்ரியாந்விதஃ | நமஸ்காரேண மந்த்ரேண பஞ்சயஜ்ஞாந் ஹாபயேத்॥' என்றிவை முதலிய கர்மங்கள் விதிக்கப்படுகின்றன. அப்படியிருக்க அவரவர்களின் கர்மங்கள் இவ்வளவு தான் என்று அளவிட்டுச் சொல்லியிருப்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இது நான்கு வர்ணத்தார்களுக்கும்' என்றாரம்பித்து. இதினல் குறிக்கப்படுகிற கர்மங்களை உதாஹரிக்கிறார்—'யஜ்ஞம் முதலியவைகள்' என்றாரம்பித்து. இது குறிப்பதற்காக என்பதற்கு மற்றொருகாரணம் சொல்லுகிறார்—'ஶமம் முதலியவைகளும்' என்றாரம்பித்து. ஶமம் முதலியவைகள் மோக்ஷத்திலாசையுடைய மூன்று வர்ணத்தார்களுக்கும் பொதுவாக இருந்தால் எப்படி அது ப்ராம்மணனுடைய கர்மம் என்று சொல்லப்பட்டது என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ப்ராம்மணனுக்கோ வெனில்' என்றாரம்பித்து. 2 'ஸ்வபாவப்ரபவைஃ' என்று முன்பு சொல்லியிருப்பதை அனுஸரித்து இவைகள் இவனுக்கு ஸ்வபாவத்தி லேற்பட்டவைகள் என்கிற தாத்பர்யத்தினல் இவ்விடத்தில் 'ஸ்வபாவஜம்' என்னும் பதம் சொல்லப்பட்டது என்கிற அபிப்ராயத்தினல் சொல்லுகிறார்—'ஸத்வகுணத்தின் வ்ருத்தி ஸ்வபாவத்தினலேயே ஏற்பட்டிருப்பதினல்' என்றாரம்பித்து. மற்ற வர்ணத்தார்களுக்கு இவைகளைக் குணமாகச் சொல்லாததற்குக் காரணத்தை நிரூபிக்கிறார்—

1 யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி-1-5-121. பார்யாரதி:-பத்னியிடத்தில் ஆசையுடையவனும், சுசி:-பரிசுத்தனும், ப்ருத்யபர்த்தா - வேலைக்காரனைப் போஷிப்பவனும், ஶ்ராத்தக்ரியாந்வித:-ஶ்ராத்தம், முதலிய கர்மங்களைச் செய்கிறவனும் (இருக்கவேண்டும்). நமஸ்காரேண மந்த்ரேண - நமஸ்காரமாகிற மந்த்ரத்தைக் கொண்டு, பஞ்சயஜ்ஞாந் - பஞ்சமஹாயஜ்ஞங்களை, நஹாபயேத் - விடக்கூடாது.

2 பகவத்கீதை - 18 - 41.

கள் என்று நினைத்து ப்ராம்மணனுக்கு அந்த ஶமம் முதலியவைகள் ஸ்வ பாவத்திலேற்பட்ட கர்மம் என்று சொல்லப்பட்டது. க்ஷத்திரியன், வைஶ்யன், இவர்களுக்கோ வெனில் ரஜோகுணம் தமோகுணம் அதிகரித்திருப்பதினால் ஶமம், தமம், முதலியவைகள் கஷ்டப்பட்டே அடையக்கூடியவைகள் என்று நினைத்து அவர்களுக்குக் கர்மமாகச்சொல்லப்படவில்லை. ப்ராம்மணனுக்கு ஜீவனோபாயம், யஜனம் செய்வித்தல், அத்யயனம் செய்வித்தல், தானம் வாங்குதல், இவைகள். க்ஷத்திரியனுக்கு ஜீவனோபாயம் ராஜ்யத்தைப் பரிபாலனம் செய்தல். வைஶ்யனுக்கு ஜீவனோபாயம் முன்பு சொல்லப்பட்ட பயிரிடுதல் முதலியவைகள். சூத்திரனுக்

---

'க்ஷத்திரியன், வைஶ்யன், இவர்களுக்கோ வெனில்' என்றாரம்பித்து. கீழ்ச் சொல்லிய ஜீவனோபாயங்கள் மற்ற ஜீவனோபாயங்களையும் குறிப்பதற்காக வாகையினால் நான்குவர்ணத்தார்களுக்கும் ஜீவனோபாயத்தைப் பிரித்துச் சொல்லுகிறார்—'ப்ராம்மணனுக்கு ஜீவனோபாயம்' என்றாரம்பித்து. சூத்திரனுக்குக் கர்மமும் ஜீவனோபாயமும் யாஜ்ஞவல்க்யரினால் 1 'ஶூத்ரஸ்ய த்விஜ ஶுஶ்ரூஷா தயா ஜீவந் வணிக்பவேத் | ஶில்பைர்வா விவிதை ஜீவேத் த்விஜாதி ஹிதமாசரந் ||' என்று ஸ்ம்ருதியில் சொல்லப்பட்டது. இதில் மனு விஶேஷம் சொல்லுகிறார்—2 'விப்ர ஸேவைவ ஶூத்ரஸ்ய விஶிஷ்டம் கர்ம கீர்த்யதே' என்று. இவை எல்லாவற்றையும் அபிப்ராயத்தில் வைத்துக்கொண்டு சொல்லுகிறார்—'சூத்திரனுக்கோ வெனில்' என்றாரம்பித்து. இப்படிச் சொல்லுவது உசிதமல்ல, 'ஹாயாசாந்தி:' என்றிவை முதலியகர்மங்கள் சொல்லப்பட்டிருப்பதினாலும். 3 'மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய . . ஸ்த்ரியோ வைஶ்யாஸ்ததா ஶூத்ரா

---

1 யாஜ்ஞவல்க்ய ஸ்ம்ருதி - 1 - 5 - 120. சூத்ரஸ்ய - சூத்திரனுக்கு, த்விஜ ஶுஶ்ரூஷா-ப்ராம்மணர்களுக்குப் பணிவிடை, கர்மம் - கர்மம், தயா - அதினால், ஜீவந் - ஜீவித்துக்கொண்டு, வணிக்பவேத் - வ்யாபாரம் செய்யலாம், த்விஜாதி ஹிதமாசரன் - ப்ராம்மணர்களுக்கு நன்மையைச் செய்துகொண்டு, விவிதை:- அனேகவிதங்களான, ஶில்பைர்வா - சித்திர கர்மங்களினாலாவது, ஜீவேத்-ஜீவிக்க வேண்டும்.

2 சூத்ரஸ்ய - சூத்திரனுக்கு, விப்ரஸேவைவ - ப்ராம்மணர்களின் ஶுஶ்ருஷையே, விசிஷ்டம் - உயர்ந்த, கர்ம - கர்மமாக, கீர்த்யதே - சொல்லப்படுகிறது. 3 பகவத்கீதை - 9 - 32.

ஶூத்ரவியாஜிவாராதிதம்' என்று தானே சொல்லியிருக்கிறார். 1 'வஸந்தே தீக்ஷயேத் விப்ரம்' என்றாரம்பித்து 'ஹேமந்தே ஶூத்ரமேவ ச | ஸ்த்ரியம் ச வர்ஷாகாலே து பஞ்சராத்ரவிதாநத: ||' என்று பகவானை ஆராதிப்பதற்காகத் தீக்ஷையும் சூத்திரர்களுக்கு விதிக்கப்பட்டிருக்கிறது. அப்படியே 2 'ப்ராஹ்மணை: க்ஷத்ரியைர் வைஶ்யை: ஶூத்ரைஶ்ச க்ருதலக்ஷணை: | அர்ச்சநீயஶ்ச ஸேவ்யஶ்ச நித்யயுக்தை: ஸ்வகர்மஸு || ஸாத்வதம் விதிமாஸ்தாய கீத: ஸங்கர்ஷணேந ய: |' என்று தீக்ஷை பெற்றுக்கொண்ட சூத்திரன் முதலியவர்களுக்கும் பகவானை ஆராதனம் செய்வது முதலிய கர்மம் ஸ்பஷ்டமாகச் சொல்லப்பட்டது. அப்படியே யுகங்களின் தர்மங்களைச்சொல்ல ஆரம்பித்து 3 'க்ருதம் நாம யுகம் பூர்வம்

1 வஸந்தே - வஸந்தருதுவில், விப்ரம் - பிராம்மணனை, தீக்ஷயேத் - தீக்ஷை செய்விக்கவேண்டும், ஹேமந்தே - ஹேமந்தருதுவில், ஶூத்ரம் - சூத்திரனையும், வர்ஷாகாலே - வர்ஷருதுவில், ஸ்த்ரியம்ச - ஸ்திரீயையும், பஞ்சராத்ரவிதாநத: - பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் விதித்திருக்கிறபடி (தீக்ஷை செய்விக்கவேண்டும்).

2 பாரதம் - பீஷ்மபர்வம் - 66 - 39 - 40 - க்ருதலக்ஷணை: - சங்கசக்ரம் முதலிய சின்னங்களைத் தரித்துக்கொண்டிருக்கிற, ஸ்வகர்மஸு - தங்கள்தங்கள் கர்மங்களில், நித்யயுக்தை: - எப்பொழுதும் ஸாவதானமா யிருந்துகொண்டிருக்கிற, ப்ராம்மணை: - ப்ராம்மணர்களினாலும், க்ஷத்ரியை: - க்ஷத்திரியர்களினாலும், வைஶ்யை: - வைஶ்யர்களினாலும், ய: - எந்த ஶாஸ்த்ரம் (த்வாபரயுகத்தின் கடைசியிலும் கலியுகத்தின் ஆரம்பத்திலும்), ஸங்கர்ஷணேந - ஸங்கர்ஷணனால், கீத: - சொல்லப்பட்டதோ அப்படிப்பட்ட, ஸாத்வதம் - ஸாத்வத ஶாஸ்த்ரத்தில் சொல்லப்பட்ட, விதிம் - விதியை, ஆஸ்தாய - அடைந்து, அர்ச்சநீயஶ்ச - ஆராதனம் செய்யத்தகுந்தவன், ஸேவ்யஶ்ச - ஸேவிக்கவும் தகுந்தவன்.

3 விஷ்ணுதர்மம் - 103 - 19. பூர்வம் - முதலில், க்ருதம்நாம - க்ருதம் என்று பேருடைய, யுகம் - யுகம், யத்ர - எந்த யுகத்தில், ஸநாதந: - அநாதியான, தர்ம: - தர்மம் (செய்யப்படுகிறதோ), யஸ்மிந் - எந்த, காலே - காலத்தில், நரோத்தம-மனிதர்களுக்குள் சிறந்தவனே, க்ருதமேவ - (எல்லாத் தர்மங்களும) செய்யப்பட்டதோ, நகர்த்தவ்யம் - இனிச் செய்யவேண்டியதென்பதில்லை, க்ருதே யுகே — க்ருதயுகத்தில், ப்ராம்மணா: - ப்ராம்மணர்களும், க்ஷத்ரியா: - க்ஷத்திரியர்களும், வைஶ்யா: - வைஶ்யர்களும், ஶூத்ராஶ்ச - சூத்திரர்களும், க்ருதலக்ஷணா: - செய்யப்பட்ட சங்க சக்ரம் முதலிய அடையாளங்களை யுடையவர்களாகவும், ஸதா - எப்பொழுதும், ஸ்வகர்மநிரதா:-தங்கள தங்கள் கர்மங்களில் ஆசையுடையவர்களாயும், ஏகவேத ஸமாயுக்தா:-ஒரே வேதத்தை அங்கீகரித்தவர்களாயும், ஏக மந்த்ரவிதிக்ரியா:-ஒரேமந்த்ரம், ஒரேவிதி, இவைகளையுடையவர்களாயும், ப்ருதக்தர்மா:-தனித்தனித் தர்மங்களை அனுஷ்டிப்பவர்களாயும், ஏகவேதபா:-

யத்த்வயைகஸ்ஸநாதந:| க்ருதைவ நகர்தவ்யம் யஸ்மிந்நரோத்தம:| ப்ராஹ்மணா: க்ஷத்ரியா: வைஶ்யாஶ்ஶூத்ராஶ்ச க்ருதலக்ஷணா:| க்ருதே யுகே மஹாபாக ஸ்வகர்மநிரதாஸ்ஸதா || ஏகவேதஸமாயுக்தா ஏகமந்த்ரவிதிக்ரியா:| ப்ருதக்தர்மாஸ்த்வேகவேத்யாஶ்ரயஶ்சைகமநுவ்ரதா:|| சாதுராஶ்ரம்யயுக்தேந கர்மணா காலயோகிநா | அகாமபலஸம்யோகாத் ப்ராப்நுவந்தி பராங்கதிம்||' என்று சொல்லப்படுகிறது. ஸ்ரீஸாத்வதஸம்ஹிதையிலும் 1 'அஷ்டாங்கயோகயுக்தாநாம் ஹ்ருத்யாகநிரதா

---

அறியத்தகுந்த வஸ்து ஒன்றென்கிற எண்ணமுடையவர்களாயும், ஏகம் - ஒரு, தர்மம் - தர்மத்தை, அனுவ்ரதா:-அநுஸரித்தவர்களாயும், ஸம்பவந் - இருந்தார்களோ, காலயோகிநா - காலத்திற்குத் தகுந்ததாகிய, சாதுராஶ்ரம்யுக்தேந - நாலு ஆஶ்ரமங்களுக்குத் தகுந்ததாகிய, கர்மணா-கர்மத்தினால், அகாமபலஸம்யோகாத்-காம்யபலங்களில் ஆசை இல்லாமையினால், பராம்கதிம் - மேலான கதியை, ப்ராப்நுவந்தி - அடைந்தார்கள்.

1 ஸ்ரீஸாத்வத ஸம்ஹிதை 2 - 7 - 11. அஷ்டாங்கயோக யுக்தாநாம் - யமம் நியமம், முதலிய, எட்டுவித அங்கங்களையுடைய யோகம்செய்துகொண்டிருப்பவர்களாயும், ஹ்ருத்யாக நிரதாத்மனும் - ஹ்ருதயகமலத்திலிருக்கும் பகவானை ஆராதனம் செய்வதில் ஆசையுடையவர்களாயும் இருக்கிற, யோகிநாம் - யோகிகளுக்கு, ஹ்ருதயேசயே - ஹ்ருதய கமலத்திலிருக்கிற, ஏகஸ்மிந் - ஒருவராகிய பகவானிடத்தில் அதாவது அவரை ஆராதிப்பதில், அதிகார:-அதிகாரமானது, ஸ்யாத்-உண்டாகும், வ்யாமிஶ்ரயாகயுக்தானும் - மிஶ்ரமான மந்த்ரங்களைக் கொண்டு ஆராதனம் செய்கிற, வேதவாதிநாம் - வேதங்களைச் சொல்லிக்கொண்டிருக்கிற, விப்ராணும் - ப்ராம்மணர்களுக்கு, ஸமந்த்ரே - மந்த்ரங்களோடுகூடிய, சதுர்வ்யூஹே - நான்கு வ்யூஹத்திலும், அதாவது அவைகளை ஆராதனம் செய்வதில், அதிகார: - அதிகாரம் (உண்டாகிறது), அந்யதா - வேறுவிதமாக, ந - இல்லை, தத்வத:-உண்மையாக, ப்ரபந்நாநாம்-ப்ரபத்தி செய்து கொண்டிருக்கிற, க்ஷத்திரியாதீனும் - க்ஷத்திரியன் முதலாகிய, த்ரயாணும் - மற்ற மூன்று வர்ணத்தார்களுக்கும், அமந்த்ரம் - மந்த்ரமில்லாமல், சதுர்வ்யூஹக்ரியாக்ரமே-நான்குவ்யூஹங்களையும் ஆராதனம் செய்வதில், அதிகார:—அதிகாரம் இருக்கிறது, விவேகிநாம்-விவேகமுள்ளவர்களாயும், மமதாஸங்நிரஸ்தாநாம் - என்னுடையதென்கிற அபிமானமில்லாதவர்களாயும், ஸ்வகர்மநிரதாத்மனும் - தன்னுடைய கர்மங்களைச் செய்துகொண்டிருப்பவர்களாயும், கர்மவாங்மனஸை: - கர்மம், வாக்கு, மனது, இவைகளினால், பரமேஶ்வரே - பகவானிடத்தில், ஸம்யக் - நன்றாக, பக்தானும் - பக்தி செய்துகொண்டிருப்பவர்களாயுமிருக்கிற, சதுர்ணும் - நான்குவர்ணத்தார்களுக்கும், ஸக்ரியே - ஆராதனத்துடன் கூடிய, வைபவீயே - விபவாவதாரங்களினுடையதாகிய, மந்த்ரசக்ரே - மந்த்ரங்களின் ஸமூஹத்தில், தீக்ஷாக்ரமே - தீக்ஷையின் க்ரமம், வ்ருத்தேஸதி - செய்யப்பட்ட பிறகு, அதிகார: - அதிகாரம் (உண்டாகிறது).

த்³தா⁴நாம்| யோ'தி⁴காரஸ்ஸ்வதே³ஹஸித்³தோ⁴ ஹ்ருத³யே ஶயே |
ப்ராதி⁴ஶ்ரயாத³யுக்தாநாம் விப்ராணாம் வேத³வாதி³நாம்| ஸமம்
த்ரேதா⁴ ததா² வ்யூஹவிப⁴வாதி⁴காரோ நசாந்யதா²|| த்ரயா
ணாம் க்ஷத்ரியாதீ³நாம் ப்ரபந்நாநாம் ப⁴க³வத:| ஸமந்த்ர
தா⁴தி⁴காரஸ்து வ்யூஹே க்ரியா க்ருதே || ஸக்ரியே மந்த்ர
பக்ரேஷு வைப⁴வீயே விவேகிநாம்| ஶ்ரத்³தா⁴ஸந்த்ருப்தாநாம்
ஸ்வகர்மநிரதாத்மநாம் || கர்மஜ்ஞாநவிஶேஷஸம்ஹ்ருதகாநாம் ப்ர
ஶஸ்யதே| பராதி⁴காரோ நைவ ப்ரதீக்ஷாக்ருதே ஸதி||' என்று அதிகார விசேஷங்களின் ஏற்பாடு செய்யப்பட்டது.
அதிலேயே வ்ரதங்களைவிதிக்கிற ஏழாவது பரிச்சேதத்தில் [1] 'தா³நா
ர்ச்சநே ஶூத்³ராணாம் வ்ரதகர்மணி ஸர்வதா³| அஸித்³தா⁴
ந்நம் விஹிதம் ஸித்³த⁴ம் வா ப்³ராஹ்மணேச்ச²யா|| ஸ்வகர்மணா
யதோ²த்கர்ஷமப்யேதி ச ததா²ர்ச்சநாத்| தஸ்மாத் ஸ்வேநாதி⁴
காரேண கார்யமாராத⁴நம் ஸதா³|| ஸர்வத்ராதி⁴க்ருதோ
விப்ரோ வாஸுதே³வாதி³பூஜநே| யதா² ததா² ந க்ஷத்ராத்³யா
ஸ்தஸ்மாச்சா²ஸ்த்ரார்த²மாசரேத்|| நயேத்³ப⁴க்த்யா நக்தாஶநைர்தி³
நாந்யேதாநி மௌத்³க³ல | வ்ரதாத்³யந்தே து விஹிதம் பரிப்லு

1 ஸ்ரீ ஸாத்வதஸம்ஹிதை - 7 - 53 - 56. ஶூத்ராணாம் - சூத்திரர்களுக்கு, தாநார்ச்சநே - கொடுப்பதிலும், ஆராதனத்திலும், வ்ரதகர்மணி - வ்ரதமாகிய கர்மத்திலும், ஸர்வதா - எப்பொழுதும், அஸித்தாந்நம் - பாகம்செய்யப்படாத அன்னமானது, ப்ராம்மணேச்சயா - ப்ராம்மணனுடைய இஷ்டத்தினுல், ஸித்தம்வா - பாகம் செய்யப்பட்ட அன்னமாவது, விஹிதம் - விதிக்கப்பட்டது, ஸ்வகர்மணு - தன்னுடைய கர்மத்தினுல், யதா - எப்படி, உத்கர்ஷம் - மேன்மையை, அப்யேதி - அடைகிருனே, ததா - அப்படியே, அர்ச்சனுத் - ஆராதனம் செய்வதினுலும், தஸ்மாத் - ஆகையினுல், ஸ்வேந - தன்னுடைய, அதிகாரேண - அதிகாரத்தினுல், ஸதா - எப்பொழுதும், ஆராதனம் - பகவானுடைய ஆராதனத்தை, குர்யாத் - செய்யவேண்டும், விப்ர: - ப்ராம்மணன், யதா - எப்படி, ஸர்வத்ர -எல்லா, வாஸுதேவாதிபூஜனே - பரவாஸுதேவன் முதலியவர்களை ஆராதனம் செய்வதில், அதிக்ருத: - அதிகாரமுடையவனே, ததா - அப்படி, க்ஷத்ராத்யா: - க்ஷத்திரியன் முதலானவர்கள், ந - இல்லை, தஸ்மாத் - ஆகையினுல், ஶாஸ்த்ரார்த்தம் - ஶாஸ்த்ரத்தின் அர்த்தத்தை, ஆசரேத் - செய்யவேண்டும், மௌத்கல - ஓ! சூத்திரனே, ஏதாநி - இந்த, தினானி - தினங்களை, நக்தாஶநை:-ராத்திரி சாப்பிடுவதினுல், பக்த்யா - பக்தியினுல், நயேத் - போக்கடிக்கவேண்டும், வ்ரதாத்யந்தே - வ்ரதங்களின் ஆரம்பத்திலும் முடிவிலும், தஸ்ய-அவனுக்கு, பரிப்லுதம்- உபவாஸம், விஹிதம் - விதிக்கப்பட்டது.

ஸம் ஹிதஸ்ய வா ||' என்று வ்ரதங்களின் கர்மமும்சொல்லப்பட்டது. 'ஶௌத்ரு' என்று பாஞ்சராத்ர ஶாஸ்த்ரத்தில் ஶூத்ரனுக்குப்பெயர். 'ஹரிவாஸரம்' என்பது உபவாஸம். அப்படியே மந்த்ரங்களிலும் நியமங்கள் மற்றோரிடத்திலும் 1 'வௌஷட் ஸ்வாஹா வஷட்கார நிர்ஹாராணாம் து ப்ரதிக்ரியா | நமஸ்காரேண விஹிதா' என்று சொல்லப்பட்டது. அப்படியே நாரதருஷியினால் சொல்லப்பட்ட ஸ்ரீமத் அஷ்டாக்ஷர கல்பத்தில் 2 'ந ஸ்வர: ப்ரணவோங்காநி நாப்யந்யவிதயஸ்ததா| ஸ்த்ரீணாம் து ஶூத்ரஜாதீநாம் மந்த்ரமாத்ரோக்திரிஷ்யதே ||' என்று சொல்லப்பட்டது. இப்படியே எல்லாருக்கும் பொதுவாகிய ஏகாதசி வ்ரதம் முதலியவைகளும்புராணம் முதலியவைகளில் ஶூத்திரர்களுக்கும்சொல்லப்படுகின்றன. அப்படியே இன்னும் சில செய்யத்தக்க கர்மங்கள், விடத்தக்க கர்மங்கள், இவைகள் எவ்வளவோ ஶூத்திரர்களுக்கு தர்மஶாஸ்த்ரங்களில் சொல்லப்படுகின்றன. எங்கே என்னில் 3 'கபிலாக்ஷீரபாநேந ப்ராஹ்மணீ கமநேந ச | ஶூத்ரே வேதாக்ஷரேணைவ நிஷ்க்ருதிர் ந விதீயதே ||', 4 'ஹ்ருத்கண்டதாலுகாபிஸ்து யதாஸங்க்யம் த்விஜாதய: | ஶுத்யேரந் ஸ்த்ரீ ச ஶூத்ரஶ்ச ஸக்ருத்ஸ்ப்ருஷ்டாபிர

1 வௌஷட் ஸ்வாஹா-வௌஷட், ஸ்வாஹா, இவைகளுக்கு, ப்ரதிக்ரியா - பதில், நமஸ்காரேண - நம: என்பதினால், விஹிதா-விதிக்கப்பட்டது.

2 நாரதீய அஷ்டாக்ஷர கல்பம் - 1-102. ஸ்வர:-ஸ்வரமும், ப்ரணவ:-ப்ரணவமும், அங்காநி - அங்கங்களும், ந - இல்லை, ததா - அப்படியே, அந்யவிதய:- மற்றவிதிகளும், ந - இல்லை, ஸ்த்ரீணாம் - ஸ்த்ரீகளுக்கும், ஶூத்ரஜாதீநாம் - ஶூத்திர ஜாதிகளுக்கும், மந்த்ரமாத்ரோக்தி:-மந்திரத்தை மாத்திரம் சொல்லுவது, இஷ்யதே - ஒப்புக்கொள்ளப்படுகிறது.

3 லகுபராசரஸ்ம்ருதி-1 - 74. கபிலாக்ஷீரபாநேந - காராம்பசுவின் பாலைக் குடிப்பதினாலும், ப்ராம்மணீ கமநேந - ப்ரம்மண ஸ்திரீயினிடத்தில் போவதினாலும், வேதாக்ஷரேணைவ - வேதத்தின் எழுத்துக்களைச்சொல்லுவதினாலும், ஶூத்ரே - ஶூத்திரன் விஷயத்தில், நிஷ்க்ருதி:-ப்ராயஶ்சித்தம்,நவிதீயதே -விதிக்கப்படு

4 யதாஸங்க்யம் - முறைப்படி, த்விஜாதய:-ப்ராம்மண க்ஷத்ரிய வைஶ்யர்கள், ஹ்ருத்கண்டதாலுகா பிஸ்து - ஹ்ருதயம், கழுத்து, தாடைகள், இவைகளையடைந்திருக்கிற (தீர்த்தத்தினால்), ஶுத்யேரன் - ஶுத்தியடைவார்கள், ஸ்த்ரீச - ஸ்திரீயும், ஶூத்ரஶ்ச - ஶூத்திரனும், அந்தத:- கடைசியில், ஸக்ருத் - ஒருதரம், ஸ்ப்ருஷ்டாபி: - தொடப்பட்டிருக்கிற (தீர்த்தங்களினால் ஶுத்தமடைவார்கள்).

ஷித:॥" 1 'தேஷாம் ஸைவ ஆசமனகல்ப அஹரஹ அதிக கேச ஶ்மஶ்ருலோமநகவாபநம்' என்றிவை முதலியவைகள் சொல்லப்படுகின்றன. ஆகையினுல் 2 'ஜபஸ்தபஸ்தீர்த்தயாத்ரா ப்ரவ்ருஜ்யா மந்த்ரஸாதநம்| தேவதாராதநம் சைவ ஸ்த்ரீ ஶூத்ரபதநாநி ஷட்॥' என்றிவை முதலியது விதிக்கப்பட்ட கர்மங்களைத் தவிர மற்றவைகளாயும் மூன்று வர்ணத்தார்களின் பணிவிடைக்கு விருத்தங்களாயுமிருக்கிற கர்மங்களைப்பற்றியதென்று நினைக்கவேண்டியது. மேலும் 3 'ந ஶூத்ரா பகவத்பக்தா விப்ரா பாகவதா: ஸ்ம்ருதா:' என்றிவை முதலிய வசனங்களிருப்பதினுலும் ஜயாக்ய ஸம்ஹிதை முதலிய இடங்களில் பாகவதர்களாகிய நான்கு வர்ணத்தார்களும் ஸமமானவர்களென்று சொல்லியிருப்பதினுலும் பகவானுக்குப்பணிவிடை செய்யவேண்டிய தவர்யமாகையினுல் மற்ற மூன்று வர்ணத்தாரினுடையபணிவிடை நிவ்ருத்தித்துவிடலாம். ஆகையினுல் 'சூத்திரனுக்கோவெனில்செய்யவேண்டிய கர்மமும் ஜீவனுேபாயமும்மூன்று வர்ணத்தார்களினுடைய பணிவிடைதான்' என்றுபாஷ்யத்தில் சொல்லியிருப்பது எப்படிப்பொருந்தும்? எனில் இதற்கு ஸமாதானம் சொல்லுகிறோம். சில கர்மங்களைத் தடுத்திருப்பதெல்லாம் விதிக்கப்பட கர்மங்களைத் தவிரமற்றவைகளைப்பற்றியதுதான். உயர்ந்த ஸம்ஸ்காரங்கள் விசேஷ குணங்கள் முதலியவைகளையுடைய சூத்திரர்களுக்கும் சில தர்மங்கள் விதிக்கப்பட்டிருக்கின்றன. அப்படி இருந்தபோதிலும் அவைகளெல்லாம் மூன்று வர்ணத்தார்களின் பணிவிடையாகிய முக்கியமான தர்மத்திற்கு விரோதமில்லாமல் அவர்களால் உத்திரவு செய்யப்பட்ட சூத்திரர்களினுல் இதுவும் அவர்களுக்குப் பணி

1 தேஷாம் - அந்தச் சூத்திரர்களுக்கு, ஸைவ - அந்த, ஆசமனகல்ப:-ஆசமனம் செய்யும் விதம், அஹரஹ:-தினந்தோறும், அதிக:-அதிகம், கேச தலைமயிர், ஶ்மஶ்ருலோம - மீசை, நக - நகங்கள், இவைகளை, வாபநம் - க்ஷௌரம் செய்வித்துக்கொள்ளல்.

2 ஜப: - ஜபம்செய்தல், தப: - தபஸ்ஸு செய்தல், தீர்த்தயாத்ரா - தீர்த்தயாத்திரை செல்லுதல்,ப்ரவ்ருஜ்யா - ஸந்நியாஸாஶ்ரமத்தையடைதல், மந்த்ரஸாதனம் - மந்த்ரங்களைஸாதித்தல், தேவதாராதனம்சைவ - தேவதைகளை ஆராதனம் செய்தல், ஷட் - இந்த ஆறும், ஸ்த்ரீ ஶூத்ரபதனாநி -ஸ்திரீகளுக்கும் சூத்திரர்களுக்கும் பாபத்தை யுண்டாக்கக் கூடியவைகள்.

3 விஹகேந்த்ர ஸம்ஹிதை - 24 - 10. பகவத்பக்தா: - பகவானிடத்தில் பக்திசெய்கிறவர்கள், நஶூத்ரா: - சூத்திரர்களல்ல, விப்ரா பாகவதா: - ப்ராம்மணர்களாகவும் பாகவதர்களாகவும், ஸ்ம்ருதா: - நினைக்கப்பட்டார்கள்.

விடை என்கிற எண்ணத்துடன் அநுஷ்டிக்கத்தக்கவைகள். ஆகையினாலல்லவோ இவ்விடத்தில் 'பரிசர்யாத்மகம் கர்ம' என்று சொல்லப்படுகிறது. அப்படிக்கில்லாவிடில் 'பரிசர்யம்' என்றிவ்வளவு மாத்திரம் சொல்லவேண்டியதாகும். ப்ரயோஜனமில்லாமல் அதிகப்பதம் ப்ரயோகித்திருப்பது யுக்தமில்லையல்லவா. ரஹஸ்யாம்நாயத்தில் 'தானறிவது, அயலாருக்குத் தெரிவிப்பது, கர்மங்களில் ப்ரவ்ருத்திக்கும்படி செய்வது, இவைகளைத் தொழிலாகவுடையவன் ப்ராம்மணன். தானறிவது, காப்பாற்றுவது, இவைகளைத் தொழிலாகவுடையவன் க்ஷத்திரியன். தானறிவது, பயிர்களை வ்ருத்திசெய்வது, இவைகளைத்தொழிலாகவுடையவன் வைஸ்யன். தானறிவது, பணிவிடைசெய்வது, இவைகளைத் தொழிலாகவுடையவன் சூத்திரன். க்ருதயுகத்தின் கடைசியில் த்ரேதாயுகத்தின் முதலில் ப்ராம்மணன், க்ஷத்திரியன், வைஸ்யன், சூத்திரன், இவர்கள் வெவ்வேறு அபிப்ராயமுள்ளவர்களாக ஆனார்கள். அவர்களுக்கு அப்படி வெவ்வேறு அபிப்ராயத்தை யுடையவர்களான பிறகு முன்போல ஜ்ஞானமுண்டாகவில்லை. அவர்களுடைய நாக்குகள் நல்ல ஆஹாரத்தையுடையவைகளாகவும் ஆகவில்லை. செடி கொடி மரம்முதலியவைகள் முன்போலப் புஷ்பங்கள், பழங்கள், இவைகளை யுண்டாக்கவில்லை. இதைப்பார்த்து ப்ராம்மணன், க்ஷத்திரியன், வைஸ்யன், சூத்திரன், இவர்களுக்கு ஒருவர்க்கொருவர் பொறாமை உண்டானது. சூத்திரன் நான் முதலாவது ஜாதி, ஆகையினால் உங்களுக்குப்பணிவிடை செய்யமாட்டேன் என்றுசொன்னான். வைஸ்யன் இரண்டாவது ஜாதி. நான் உங்களுக்குப் பயிர்களை வ்ருத்தி செய்யப்போகிறதில்லை என்று சொன்னான். க்ஷத்திரியன் மூன்றாவது ஜாதியாகிய நான் உங்களை ரக்ஷிக்கமாட்டேனென்றான். இவர்களைப்பார்த்து ப்ராம்மணன் நீங்கள் தனித்தனியே முதன்மையையடைந்து விட்டீர்களாகையினால் உங்களுக்கு ஸாஸ்த்ரத்தைச் சொல்லுவதுமில்லை என்று சொன்னான்' என்றர்த்தமுள்ள வாக்யங்களிருப்பதாக அந்த வேதம் தெரிந்தவர்கள் சொல்லுகிறார்கள். இப்படியே 1 'ஶூத்³ரஸ்ஸாது:' என்றிவை முதலிய மற்ற ஸந்தர்ப்பங்களும் அறியத்தக்கது. இத்தால் 'நமஶ்ஶூத்³ராஹமவச ஹஸ்தா:' என்றிவை முதலிய ஸ்தோத்திரம் செய்யும் வாக்யங்களைக்கொண்டு மூன்று வர்ணத்தாரினுடைய பணிவிடை நிவ்ருத்தித்துவிடலாம் என்றுக்ஷேபித்ததும் நிராகரிக்கப்பட்டது. பகவானிடத்தில் ஒரே நிஸ்சயத்துடன் கூடிய சூத்திரனுக்கே பணிவிடையை விதித்திருப்பதினால் பகவானிடத்திலுண்டான பக்தியை

1 விஷ்ணுபுராணம் - 6 - 2 - 6. சூத்திரன் மேலானவன்.

ஸ்தோத்திரம் செய்வதில் இந்தவசனத்திற்கு தாத்பர்யமாகையினாலல்லவோ 1 'ஸர்வவர்ணேஷு தே ஶூத்ரா யே ஹ்யபக்தா ஜநார்த்தநே' என்று பகவத்பக்தி இல்லாதவனைக் குறித்து நிந்தித்திருப்பது பொருந்தும் ஆனால் இவ்விடத்தில் ஸ்தோத்திரம் செய்திருப்பதற்கும், நிந்தித்திருப்பதற்கும் ஆதாரம் என்ன? எனில் மனதில் உண்டாகிய ஸத்வம் முதலிய குணங்களின் வ்ருத்திதான். எப்படிப்பட்ட குணங்களிருப்பதினால் ப்ராம்மணன் முதலியவர்களுக்கே ப்ராம்மணனாகயிருக்கும் தன்மை உண்டென்று 2 'மௌனத்தையும், அமௌனத்தையும் அடைந்து பிறகு ப்ராம்மணனாகிறான்' என்றர்த்தமுள்ள ஶ்ருதிவாக்யம் முதலியவைகளில் சொல்லப்படுகிறதோ, 3 'விஷ்ணும் க்ராந்தம் வாஸுதேவம் விஜாநந் விப்ரோ விப்ரத்வம் கச்சதே தத்வதர்ஶீ', 4 'சண்டாளமபி வ்ருத்தஸ்தம் தம் தேவா ப்ராஹ்மணம் விது:' என்றிவை முதலியதும் சொல்லப்படுகிறதோ, ஶரீரத்திலுண்டாகிய ஸத்வம் முதலிய குணங்களின் வ்யத்யாஸத்தைக் காரணமாகவுடைய ப்ராம்மணன் முதலிய ஜாதி எதுவோ, அது மனதில் ஸத்வ குணம் வ்ருத்தியடைந்தபோதிலும் ஶரீரத்தைப்பற்றித் தொடர்ந்திருப்பதினால் இந்தச் ஶரீரம் விழுமளவும் ஜாதிகளின் நியமங்கள் ஸ்திரமாகவே இருக்கின்றன. அந்தஜ் ஜாதியை யனுஸரித்த கர்மங்களும் அதினாலேயே அப்படியே இருக்கின்றன. ஆகையினாலல்லவோ ப்ரம்மவித்யையை யறிந்தவராகிய விதுரர் தனக்கதைச் சொல்லுவதி லதிகாரமில்லையென்று 5 'ஶூத்ரயோநாவஹம் ஜாதோ நாதோऽந்ய

1 விஹகேந்த்ர ஸம்ஹிதை - 24 - 10. யே - எவர்கள், ஜநார்த்தனே - பகவானிடத்தில், அபக்தா: - பக்தி இல்லாதவர்களோ, தே - அவர்கள், ஸர்வ வர்ணேஷு - எந்த வர்ணங்களி லிருந்தபோதிலும், ஶூத்ரா: - சூத்திரர்கள்.

2 ப்ருஹதாரண்யகம் - 5 - 5 - 2.

3 பாரதம் - ஆநுஶாஸநிக பர்வம் - 16 - 2. க்ராந்தம் - லோகங்களை அளந்தவனாகிய, வாஸுதேவம் - வஸுதேவருக்குப் பிள்ளையாகிய, விஷ்ணும் - பகவானை, விஜாநந் - தெரிந்துகொண்டவனாகிய, தத்வதர்ஶீ - உண்மையை அறிந்தவனாகிய, விப்ர: - ப்ராம்மணன், விப்ரத்வம் - ப்ராம்மணனாயிருக்கையை, கச்சதே - அடைகிறான்.

4 வ்ருத்தஸ்தம் - தன் ஜாதிக்குரிய நடத்தையிலிருக்கிற, சண்டாளமபி - சண்டாளனையும், தேவா: - தேவதைகள், ப்ராம்மணம் - ப்ராம்மணனாக, விது: - தெரிந்துகொண்டார்கள்.

5 பாரதம் - உத்யோகபர்வம் - ஸநத்ஸுஜாதீயம், 41 - 5. அஹம் - நான், ஶூத்ரயோனௌ - சூத்திர ஸ்திரீயினிடத்தில், ஜாத: - பிறந்தவன், அத: - ஆகையினால், அந்யத் - மற்றொரு விஷயத்தை, வக்தும் - சொல்ல, நோத்ஸஹே - உத்ஸாஹமுள்ளவனாக இல்லை.

வக்தா ச ச்ரோதா ச ஸ:' என்பதினால் சொல்லியிருக்கிறார். ஶமம் முதலிய குணங்கள் நிறைந்த சூத்திரன் முதலியவர்களிடங்களிலும் 1 ஸ்திரீகளின் ஸ்வபாவத்தையுடைய தாயாரிடத்திலேபோல அவமானம் முதலியவைகள் செய்யக்கூடாது என்பதை உத்தேசித்து மற்றஜாதியாரைப்போலப்பார்க்கக்கூடாதென்று மறுத்திருக்கிறது. அப்படியே ஸ்ம்ருதியில் 2 'ஏதை: ஸமேத: சூத்ரோऽபி வார்த்தகே மாநமர்ஹதி' என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆகையினாலே 3 'பக்திரஷ்டவிதா ஹ்யேஷா யஸ்மிந் ம்லேச்சேऽபி வர்த்ததே। தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம் ஸ ச பூஜ்யோ யதா ஹ்யஹம்' என்றிவை முதலியதும் 4 ஜாதிதர்மங்களுக்கு விருத்தமில்லாதபடி அர்த்தம்சொல்லி நிரூபிக்கப்பட்டது. ஸமம் என்று சொல்லியிருப்பதும் எல்லாவற்றையும் விட மேல்பட்ட பலம் இவர்களுக்கு ஸமம் என்பதைப்பற்றியது. ஆகையினால் அபஶூத்ராதிகரண ந்யாயத்திற்கு விரோதமில்லை. நம்மாசாரியனாகிய 5 அப்புளாரினாலும் பகவத்பத்தியுள்ளவானாகையினால்

1 ஸ்திரீ ஸ்வபாவமாவது மாதவிடாய் காலத்தில் ஒதுங்கி இருக்கிறது. அப்படிப்பட்ட தாயாரை மற்றக்காலங்களைப்போல் நமஸ்காரம் செய்யக்கூடாமலிருந்தபோதிலும் அலக்ஷியம் செய்யக்கூடாது, அதைப்போல என்று தாத்பர்யம்.

2 ஏதை: - இந்தக் குணங்களோடு ஸமேத: - கூடிக்கொண்டிருக்கிற, சூத்ரோபி-சூத்திரனும், வார்த்தகே - கிழவயதில், மாநம் - பூஜையை, அர்ஹதி- அடையத்தகுந்தவனாகிறான்.

3 காருடபுராணம் - பூர்வகண்டம்-219-8. ஏஷா-இந்த, அஷ்டவிதா - எட்டு விதமான, பக்தி:-பக்தி, யஸ்மிந்-எந்த, ம்லேச்சேபி - ம்லேச்சனிடத்திலும், வர்த்ததே - இருக்கிறதோ, தஸ்மை - அவன்பொருட்டு, தேயம் - கொடுக்கவேண்டும், தத:-அவனிடத்திலிருந்து, க்ராஹ்யம் - க்ரஹிக்கத்தகுந்தது, ஸச - அவனும், யதாஹ்யஹம் - என்னைப்போல, பூஜ்ய: - பூஜிக்கத்தகுந்தவன்.

4 திருமாலை - 42-வது பாட்டு - 'தொழுமினீர் கொடுமின்கொண்மின்' என்கிற இடத்தில் 'அவர்கள் உங்கள் பக்கல் ஒரு ஜ்ஞானாபேக்ஷை பண்ணில் நீங்கள் ஆதரித்துச் சொல்லுங்கோள். அவர்கள் பகவத் ஜ்ஞானத்தை உங்களுக்கு ப்ரஸாதிக்கில் கேட்டு க்ருதார்த்தராகுங்கோள்' என்று வ்யாக்யானம் செய்து இதற்கு ஸம்வாதமாக 'தஸ்மை தேயம் ததோ க்ராஹ்யம்' என்கிறவசனம் எடுத்து உதாஹரிக்கப்பட்டது. ஆகையினால் இது ஜ்ஞானத்தைக் கொடுத்தல், கொள்ளுதல், இவைகளைச் சொல்லுகிறதென்றேற்பட்டது. ஆகையினால் ஜாதி தர்மங்களுக்கு விரோதமான பெண் கொடுப்பது முதலியது இங்கு தாத்பர்யமல்ல.

5 இவ்வர்த்தத்தைத் தாமே ஸ்ரீமத் ரஹஸ்யத்ரயஸாரத்தில் ப்ரபாவவ்யவஸ்தாதிகாரத்தில் 'கேவல ப்ராம்மணனுக்கும் கேவல சூத்திரனுக்குமுள்ள எல்லை பாகவத ப்ராம்மணனுக்கும் பாகவத சூத்திரனுக்கும் கொள்ளவேண்டுமென்றும் இவர்களை ஸமர் என்கிற ஶாஸ்த்ரங்களும் பரம புருஷார்த்த ஸாம்யாதிகளாலே என்றும் கிடாம்பி அப்புள்ளார் அருளிச் செய்தார்' என்று விசதமாக அருளிச் செய்திருக்கிறார்.

கோவேனில் செய்யவேண்டிய கர்மமும் ஜீவனோபாயமும் மூன்று வர்ணத்தாரினுடைய பணிவிடைதான். 44

ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।
ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச்ச்ருணு ॥ 45

ப - ரை] நர: - மனிதன், ஸ்வே ஸ்வே - தன் தன்னுடையதாகிய, கர்மணி - கர்மத்தில், அபிரத: - ஆசையுடையவனாய்க் கொண்டு, ஸம்ஸித்திம் - பரமபதத்தை, லபதே - அடைகிறான், ஸ்வகர்மநிரத: - தன்னுடைய கர்மத்தைச் செய்துகொண்டிருப்பவன், யதா - எப்படி, ஸித்திம் - பரமபதத்தை, விந்ததி - அடைகிறானோ, தத் - அதை, ஶ்ருணு - கேள்.

பா] ஶாஸ்த்ரங்களில் சொல்லப்பட்டதாகிய தன் தன் கர்மத்தைச் செய்துகொண்டிருக்கிற மனிதன் பரமபதத்தை அடைகிறான். தன்னுடைய

---

சூத்திரனுக்கு மேன்மையுண்டாகில் அந்தப் பகவத்பக்தியினாலேயே ப்ராம்மணனுக்கும் மேன்மை உண்டாகலாமாகையினால் மறுபடியும் பாகவத சூத்திரனுக்கும் பாகவத ப்ராம்மணனுக்கும் வ்யத்யாஸமே ஏற்படுகிறது என்றருளிச் செய்யப்பட்டது. ஆகையினால் யுக்திக்கும் ப்ரமாணங்களுக்கும் ஒருவித விரோதமுமில்லை யாகையினால் 'சூத்திரனுக்கு ஜீவனோபாயமும் கர்மமும்' ஒன்றென்று பாஷ்யத்தில் சொல்லியிருப்பது மிகவும் பொருத்தமுடையது. 44

தா] மோக்ஷத்தைப் பற்றி உபதேசம் செய்யும் ஶாஸ்த்ரத்தில் வர்ணாஶ்ரமதர்மங்களைப் பிரித்திருப்பது எதற்காக? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—இந்த ஶ்லோகத்தினால். 'ஸம்ஸித்தி' என்னும் பதம் இவ்விடத்தில் பரமபதத்தைச் சொல்லுகிறது என்பது இந்த ஸந்தர்ப்பத்தினாலேற்பட்டது. 1 'ஶாஶ்வதம் பதமவ்யயம்' என்றல்லவோ மேலேயும் சொல்லப்போகிறார். அன்றிக்கே 'ஸித்தி' என்னும் பதம் 'நைஷ்கர்ம்யஸித்தி' என்று மேலே சொல்லப்போகிற ஜ்ஞான நிஷ்டையைச் சொல்லுகிறதாகவுமாம். அதுவும் பரமபதத்தளவும் முடிவு பெறுகிறது என்று தெரிவிப்பதற்காக இவ்விடத்தில் மேலான ப்ரயோஜனமாகிய பரம பதத்தைச் சொல்லியிருக்கிறதாகவுமாம். தன் கர்மங்களைச் செய்து கொண்டிருந்த போதிலும் சூத்திரனுக்குப் பரமபதத்தை யடைவது எப்படி ஸம்பவிக்கும்? அவனுக்கு மோக்ஷத்திற்கு ஸாதனமாகிய ப்ரம்ம வித்யையில் அதிகாரமில்லையென்பது ஶாரீரக ஶாஸ்த்ரத்தில் அபஶூத்ராதிகரணத்தில் ஸ்தாபிக்கப்பட்டிரு

---

1 பகவத்கீதை -18 - 56

கர்மத்தைச் செய்துகொண்டிருக்கிறவன் எவ்விதமாகப் பரமபதத்தை யடைகிருனே அந்த விதத்தைக் கேள். 45

யத꞉ ப்ரவ்ருத்திர் பூதாநாம் யேந ஸர்வமிதம் ததம் |
ஸ்வகர்மணா தமப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மாநவ꞉ | 46

ப - ரை] பூதாநாம் — ப்ராணிகளுக்கு, யத꞉ - எவனிடத்திலிருந்து, ப்ரவ்ருத்தி꞉ - உத்பத்தி முதலிய வ்யபாரம் (உண்டாகிறதோ), யேந - எவனால், இதம் - இந்த, ஸர்வம் - எல்லாம், ததம் - வ்யாபிக்கப்பட்டிருக்கிறதோ, தம் - அவனை, ஸ்வகர்மணா - தன்னுடைய கர்மத்தினால், அப்யர்ச்ய - ஆராதனம் செய்து, மாநவ꞉ - மனிதன், ஸித்திம் - ஸித்தியை, விந்ததி - அடைகிறன். 46

---

க்கிறதே என்னில் அது உண்மையே யானாலும் வேறு ஜன்மங்களில் ப்ரம்ம வித்யையில் அதிகாரமுண்டாகி அதின்வழியாகப் பரம்பரையாய் பரமபதத்தை அடைவதுண்டாகிறது என்று சொல்லப்படுகிற படியினால் விரோதமில்லை. விதுரர் முதலியவர்களைப் போல முன் ஜன்மத்தில் நடந்ததை அறியும் ஶக்தியுடையவர்களாய் முன் ஜன்மத்தில் ஆரம்பிக்கப்பட்ட ப்ரம்ம வித்யையை அப்யாஸம் செய்துகொண்டிருப்பவர்களுக்குத் தந்தம் வர்ணங்களுக்குரிய தர்மங்கள், அதைச்செய்யாமையினால் உண்டாகும் தோஷத்தைப் பரிஹரிப்பதற்காக என்பதும், அவர்களுக்கு நேரிலேயே பரமபத ப்ராப்தி உண்டாகிற தென்பதும் ஸ்பஷ்டமாயறியத் தக்கது. அப்படியே பகவானுகிய ஶௌனகரினால் [1] 'தர்மவ்யாதாதயோऽப்யந்யே பூர்வாப்யாஸாஜ்ஜுகுப்ஸிதே | வர்ணாவரத்வே ஸம்ப்ராப்தா꞉ ஸம்ஸித்திம் ஶ்ரமணீ யதா ||' என்று சொல்லப்பட்டது. அல்பப் பலத்தைக்கொடுக்கும் ஶக்தியையுடைய இந்திரன் முதலிய தேவதைகளின் ஆராதனங்களாகிய வர்ணாஶ்ரம தர்மங்கள் பரமபதத்தை அடைவதற்குக் காரணங்கள் என்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் 'ஸ்வகர்மநிரத꞉' என்று சொல்லப்படுகிறது. 'யதா (எப்படி)' என்பதற்குப் பதிலாக இருப்பதினால் 'தத்' என்னும் பதமும் அந்த விதத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'அந்த விதத்தைக் கேள்' என்று. 45

---

1 விஷ்ணு தர்மம் - 102 - 30. அந்யே - இன்னும் சில, தர்ம வ்யாதாதயோபி - தர்ம வ்யாதர் முதலியவர்களும், பூர்வாப்யாஸாத்-முன் ஜன்மத்தில் சொன்ன பழக்கத்தினால், ஜுகுப்ஸிதே - அருவருக்கப்பட்டிருக்கிற, வர்ணாவரத்வே - தாழ்ந்த ஜாதியில் பிறந்திருக்கும் பொழுதே, ஸம்ஸித்திம் - மோக்ஷத்தை, ஶ்ரமணீ யதா-ஶபரியைப் போல, ஸம்ப்ராப்தா - அடைந்தார்கள்.

பா] ப்ராணிகளுக்கு உத்பத்தி முதலிய வ்யாபாரம் எவனிடத்தி லிருந்து உண்டாகிறதோ, எவனால் இவை எல்லாம் வ்யாபரிக்கப்பட் டிருக்கிறதோ, அப்படிப்பட்டவனாகிய இந்திரன் முதலிய தேவதைகளுக்கு அந்தர்யாமியாக இருக்கிற என்னைத் தன்னுடைய கர்மத்தினால் ஆராதனம் செய்து என்னுடைய அனுக்ரஹத்தினாலேயே என்னை அடைவதாகிய ஸித்தியை மனிதன் அடைகிறான் எல்லாம் என்னிடத்தி லிருந்தே உண்டாகிறது இவை யெல்லாம் என்னாலேயே வ்யாபரிக்கப்பட் டிருக்கிறது என்பது * 'அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா। மத்த: பரதரம் நாந்யத் கிஞ்சிதஸ்தி தநஞ்ஜய॥' † 'மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்திநா।' ‡ 'மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸசராசரம்'

தா] எல்லாவற்றிற்கும் காரணமாயும், எல்லாவற்றிற்கு மந்தர்யாமியுமாகிய பரமாத்மா தன்னால் ஸ்ருஷ்டிக்கப்பட்டவைகளும் தனக்குச் சரீரங்களுமாகிய இந்திரன் முதலியவர்களைச் சொல்லுகிற பதங்களினால் வேதத்தில் சொல்லப்படுகிறானாகையினால் வர்ணாச்ரம தர்மங்கள் அந்தப் பகவானுடைய ஆராதன மாகையினால் பரம பதத்திற்கு ஸாதனங்கள் என்பது உசிதந்தான் என்று இந்த ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது. 'ப்ரவ்ருத்தி:' என்னும் பதம் இவ்விடத்தில் சலிப்பதை மாத்திரம் சொல்லுகிறது என்கிற ப்ரமத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'உத்பத்தி முதலிய' என்று. சேதனாசேதனங்களைச் சொல்லுகிற 'பூத' என்னும் பதத்தோடு சேர்ந்திருக்கிற 'ப்ரவ்ருத்தி:' என்னும் பதம், இவ்விடத்தில் விசேஷித்து அர்த்தம் சொல்லக்காரணமில்லாமையினால் எல்லாவித வ்யாபாரங்களையும் சேர்த்துச் சொல்லுகிறது என்று தாத்பர்யம். எல்லாவிதக் காரணங்களாயு மிருப்பதற் குபயோகமான ஆகாரம்சொல்லப்படுகிறது-'யேந ஸர்வமிதம் ததம்' என்று.'ததம் (வ்யாபரிக்கப்பட் டிருக்கிறது)' என்பதற்கு நியந்தாவாக இருந்துகொண்டு என்று தாத்பர்யம். 'தம்' (அவனை)' என்று வேறொருவனைச் சொல்லுவது போலச் சொல்லி யிருக்கிற பதம் 'என்னை' என்று எப்படி வ்யாக்யானம் செய்யப்படுகிறது? என்றாக்ஷேபம் வரில் அதற்கு ஸமாதானமாக 'யத: (எவனிடத்தி லிருந்து)' என்றனுவாதம் செய்திருப்பது முன்னால் சொல்லி யிருப்பதை எதிர் பார்க்கிறபடியினால் அப்படி முன்னால் சொல்லியிருக்கிறதை ஜ்ஞாபகப்படுத்துகிறார்—'எல்லாம் என்னிடத்திலிருந்தே' என்றாரம்பித்து. எல்லாவற்றிற்கும் காரணமென்பதிலும் எல்லாவற்றையும் விட மேலானவன் என்பதிலும், எல்லா

* பகவத்கீதை - 7 - 6 † பகவத்கீதை 9 - 4 ‡ பகவத்கீதை 9-10.

ஸம்' ¶ 'அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்தஸ்ஸர்வம் ப்ரவர்த்ததே' என்றிவை முதலிய இடங்களில் முன்பே சொல்லப்பட்டது. 46

ஶ்ரேயாந் ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத் ஸ்வநுஷ்டிதாத் | *

ப-ரை] ஸ்வதர்ம: - தன்னால் அனுஷ்டிக்கக்கூடிய வர்ணாஶ்ரமதர்மம், விகுண: - அங்கங்களினால் குறைவு பட்டிருந்தபோதிலும், ஸ்வநுஷ்டிதாத் - நன்றாயனுஷ்டிக்கப்பட்ட, பரதர்மாத் - இந்த்ரியங்களை ஜயித்தவனால் அனுஷ்டிக்கக்கூடிய ஜ்ஞானயோகமாகிற தர்மத்தைவிட, ஶ்ரேயாந் - சிறந்தது

பா] இவ்விதமாகக் கர்த்ருத்வம் முதலியவைகளைவிட்டு எனக்காராதனமாகச் செய்கிற கர்மம் ஸ்வதர்மம். தன்னாலேயே செய்யத்தகுந்ததாகையினால் 'ஸ்வதர்மம்' என்னப்படுகிறது. ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கிற புருஷ

---

வற்றையும் வ்யாபித்திருக்கிறான் என்பதிலும், எல்லாவற்றையும் நியமிக்கிறான் என்பதிலும் உதாஹரித்திருக்கும் வசனங்களுக்கு ஸம்பவிப்பதைப்போலத் தாத்பர்யம் கண்டுகொள்ளவும். 46

தா] இப்படி வர்ணாஶ்ரம தர்மங்கள் ஸ்வரூபத்தினால் விடத்தக்கவைகளல்ல என்பதும் பரமாத்மாவை அடைவதற்கு ஸாதனமாகும் விதமும் சொல்லப்பட்டது. பிறகு 1 'தைவமேவாபரே யஜ்ஞம்' என்றிவை முதலிய இடங்களில் சொல்லப்பட்ட முக்கியமான தர்மத்தோடு சேர்ந்திருப்பதினாலும் சில நியமம் முதலியவைகளோடு சேர்ந்திருப்பதினாலும் கர்மயோகத்திற்குள்ளடங்கியதாகிய அந்த வர்ணாஶ்ரம தர்மங்கள் ஜ்ஞானயோகத்தில் அதிகாரமுள்ளவனாலும் விடத்தக்கவைகளல்ல என்று முன் சொன்னது ஜ்ஞாபகப்படுத்தப்படுகிறது—இந்த ஶ்லோகம் முதலாக. இவ்விடத்தில் 'ஸ்வதர்ம' என்னும் பதம் தன்னுடைய வர்ணாஶ்ரமங்களுக் கேற்பட்ட தர்மங்களைச் சொல்லுகிறதல்ல. அப்படியாகில் 'பரதர்ம' என்னும் பதத்தினால் வேறு வர்ணம், முதலியவைகளின் தர்மத்தைச் சொல்லவேண்டிவரும். அது உசிதமல்ல, அது ஶாஸ்த்ரங்களினால் மறுக்கப்பட்டிருப்பதினாலே அதர்மமாகையினாலே தன்னுடைய தர்மம் அதைவிட மிகவும் சிறந்தது என்று சொல்லியிருப்பது பொருந்தாதாகையினால். ஏனெனில் பாபத்தைவிடப் புண்ணியம் சிறந்ததென்று சொல்லப்படுகிறதில்லையல்லவா [illegible]லேயே வேதத்திற்குப் புறம்பான [illegible] வேதத்தில் சொல்லப்படுகிற தர்மம் சிறந்தது என்று சொல்லப்படுகிறது என்

---

¶ பகவத்கீதை - 10 - 8. 1 பகவத்கீதை - 4 25.

ஞல் இந்த்ரியங்களின் வ்யாபாரங்களாகிய கர்மயோகமென்கிற தர்மம்ஸுலபமாய்ச் செய்யக்கூடியதாயாகிறதல்லவா, ஆகையினுல் கர்மயோகம்என்று பேருடைய தன்னுடைய தர்மம் அங்கங்களினுல் குறைவுபட்டிருந்த போதிலும் இந்த்ரியங்களை ஜயிக்கஸாமர்த்தியமுடைய புருஷனுல்அனுஷ்ட்டிக்கக்கூடியதாயும் எல்லா இந்த்ரியங்களையும் அடக்குவதாகையினுலே தவறுதல் நேரிடக்கூடியதாயும், எப்போழுதாவது ஒரு ஸமயத்தில் பூர்ணமாயனுஷ்ட்டிக்கப்பட்டதாயுமிருக்கிற ஜ்ஞானயோகத்தைவிடமேலானது

---

*பது உசிதமல்ல. க்ஷத்திரியனுகிய அர்ஜுநனைக்குறித்து 1 'ஶ்ரேயோ போக்தும் பைக்ஷம்' என்றவனுலேயே சொல்லப்பட்ட ப்ராம்மணர்களின் தர்மமாகிய ஸந்நியாஸத்தை மறுத்திருக்கிறது இது என்பதும் உசிதமல்ல. அது இவனுக்கு ஶாஸ்த்ரத்தினுல் விதிக்கப்பட்டிருந்தால் அதை மறுப்பது பொருந்தாது. ஶாஸ்த்ரத்தினுல் விதிக்கப்படாமலிருந்தால் அது பாபமாகையினுலேயே முன்பு சொல்லியதினுல் ஸமாதானமேற்பட்டு விட்டபடியினுலும். ஆபத்காலங்களில் அடுத்த தாழ்ந்ததாகிய ஜீவனோபாயம் இவனுல் விடக்கூடியதல்ல ஆகையினுல் இவ்விடத்தில் 'ஸ்வயமே', 'பரயமே' என்னும் பதங்கள் முன்போலவே கர்மயோகம், ஜ்ஞானயோகம், இவைகளைச் சொல்லுகின்றனவாக வ்யாக்யானம் செய்யப்பட்டதுகள். 'ஸ்வ' என்னும் பதம் ஜாதியைச் சொல்லுகிறது என்பதை விலக்குவதற்காகச் சொல்லுகிறுர்—'தன்னுலேயே' என்றுரம்பித்து. 'ஸ்வபாவநியதம் கர்ம' என்று மேலே சொல்லியிருப்பதை யனுஸரித்துங் கர்மங்களைச் சொல்லுகிற 'யமே' என்னும் பதம் இந்த ஸந்தர்ப்பத்தை யனுஸரித்தும் பலங்களில் ஆசையில்லாமல் செய்கிற கர்மங்களைச் சொல்லுகிறது. அவ்விடத்தில் தன்னுலேயே செய்யத்தகுந்ததாகையினுல் என்பதை விவரிக்கிருர்—'ப்ரக்ருதியோடு சேர்ந்திருக்கிற' என்றுரம்பித்து. 'விகுணஃ' என்னும் பதம் விடத்தக்கது என்கிற ஆக்ஷேபத்தைக் காட்டுகிறது என்று சொல்லுகிருர்—'அங்கங்களினுல்' என்றுரம்பித்து. வேறு சக்தியில்லாமையினுலே முக்கிய கல்பமாகச் செய்ய முடியவில்லை என்றெருப்புக்கொள்ளப்பட்டிருந்தபோதிலும் என்றர்த்தம். 'ஸ்வ' என்னும் பதத்தினுல் சொல்லப்படுகிற கர்மயோகம் செய்பத்தகுந்தவனைவிட மற்றெருவன் இவ்விடத்தில் பரன் என்னப்படுகிறுன். அவனுவது ஜ்ஞானயோகத்தைச் செய்யத்தகுந்தவன் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிருர்—'இந்த்ரியங்களை ஜயிக்க ஸாமர்த்தியமுள்ளபுருஷனுல்' என்று. தவறுதல் நேரிடக்கூடிய தர்மம் நன்றுயனுஷ்ட்டிக்கப்பட்டதென்பது எப்படி ஸம்பவிக்கும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிருர்—'எப்போழுதாவது ஒரு ஸமயத்தில்' என்று.* *

---

1 பகவத்கீதை - 2 - 5

பா-அ] இதையே நிரூபிக்கிறார்—

ஸ்வபாவநியதம் கர்ம குர்வந்நாப்நோதி கில்பிஷம் ॥ 47

ப-ரை] ஸ்வபாவநியதம் - ஸ்வபாவத்தினாலேயே ஏற்பட்டதாகிய, கர்ம - கர்மத்தை, குர்வந் - செய்துகொண்டிருப்பவன், கில்பிஷம் - ஸம்ஸாரத்தை, நாப்நோதி - அடைவதில்லை. 47

பா] ப்ரக்ருதியோடு சேர்ந்திருப்பவனுக்கு இந்த்ரியங்களின் வ்யாபாரங்களாகையினாலே கர்மங்கள் ஸ்வபாவத்தினாலேயே ஏற்பட்டவைகளாகையினால் கர்மங்களைச்செய்து கொண்டிருப்பவன் ஸம்ஸாரத்தை அடைவதில்லை, கர்மங்கள் தவறுதல்கள் நேரிடக்கூடியவைகளல்லவாகையினால். ஜ்ஞானயோகம் எல்லா இந்த்ரியங்களையும் அடக்குவதினால் உண்டாகக் கூடியதாகையினாலே தவறுதல் நேரிடக்கூடியதாகையினால் அதில்நிஷ்டையுடையவன் தவறுதலினால் ஸம்ஸாரத்தை அடைந்தாலுமடைவான். ஆகையினால் கர்மநிஷ்டையே மேலானது என்று மூன்றாவது அத்யாயத்தில் சொல்லப்பட்டதை ஜ்ஞாபகப்படுத்துகிறார். 47

---

*தா] 'ஸ்வபாவநியதம்' என்கிற இடத்தில் ஜாதிக்கேற்பட்டது என்றர்த்தம் என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகச் சொல்லுகிறார்—'இதையே' என்றாரம்பித்து எப்படி எட்டிமரம், வேப்பமரம், புளி, இவைகளிலுண்டாகிய புழுக்களுக்கு ஆஹாரங்கள் அதின்ஸ்வபாவத்தினால் ஏற்பட்டிருக்கிறதோ அதைப்போல என்று தாத்பர்யம். 'கில்பிஷ' என்னும் பதம் அதிக அநிஷ்டத்தைச் சொல்லுகிறது என்று தெரிவிப்பதற்காகப் பாபத்தின் பலத்தைச் சொல்லுகிற 'ஸம்ஸார' என்னும் பதத்தினால் வ்யாக்யானம் செய்யப்பட்டது. ஜ்ஞானயோக நிஷ்டையில் ஸம்பவிக்கக் கூடியது ஸம்ஸாரம், அது இதற்கில்லை என்று தெரிவிப்பதற்காகவாவது, கர்மயோகத்தைச் செய்தவன் ஸம்ஸாரத்தை யடைவதில்லை யென்று மறுத்ததினால் மற்றவனடைகிறான் என்றேற்படுகிறது என்கிற அபிப்ராயத்தினாலாவது சொல்லுகிறார்—'ஜ்ஞானயோகம்' என்றாரம்பித்து. வேறு அர்த்தத்தைச் சொல்லுகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காகவும், இதில் அதிக ப்ரீதி உண்டென்று தெரிவிப்பதற்காகவும் புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகவும் 'மூன்றாவது அத்யாயத்தில்' என்பது முதலியது சொல்லப்பட்டது.* 47

ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷமபி ந த்யஜேத் ।
ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேநாக்நிரிவாவ்ருதா꞉ ॥ 48

ப - ரை] கௌந்தேய — அர்ஜுந, ஸஹஜம் - ஸ்வபாவத்திலேற்பட்டதாகிய, கர்ம - கர்மத்தை, ஸதோஷமபி - தோஷத்தோடு கூடியிருந்தபோதிலும், ந த்யஜேத் - விடக்கூடாது, ஹி-எந்தக் காரணத்தினுல், ஸர்வாரம்பா꞉ — எல்லாக் கர்மங்களின் ஆரம்பங்களும், தூமேந - புகையினுல், அக்நிரிவ - நெருப்பைப் போல, தோஷேண — தோஷத்தினுல், ஆவ்ருதா꞉ — வ்யாபரிக்கப்பட் டிருக்கின்றனவோ. 48

பா] ஆகையினுல் ஸ்வபாவத்தினுலேயே ஏற்பட்டதாகையினுல் ஸுலபமாய்ச் செய்யக்கூடியதாயும் தவறுதல் நேரிடக்கூடாததாயுமிருக்கிற கர்மத்தை அது துக்கத்தோடு கூடியிருந்தபோதிலும் விடக்கூடாது.ஜ்ஞாநயோகத்தைச் செய்யத் தகுந்தவனு யிருந்தபோதிலும் கர்மயோகத்தையே செய்

தா] 'ஸ்வபாவத்தினுலேயே ஏற்பட்டதாகையினுல்' என்பதற்கு அவரவர்களின் வாஸனையினுல் ஏற்பட்டிருக்கிறபடியினுல் என்றர்த்தம். இப்படியாகில் விடக்கூடாதென்பது எப்படிப் பொருந்தும்? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர்—'ஸுலபமாய்ச் செய்யக்கூடியதாயும்' என்று. 'தோஷம்' என்னும் பதத்தினுல் பாபத்தைச் சொல்லுகிறது யுக்தமல்ல, ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கார்யத்தில் பாபமுண்டாகாதாகையினுல். அப்படிப் பாபமுண்டாகில் 'ந த்யஜேத்' என்பது உசிதமல்ல, பாபம் எல்லோராலும் விடத்தக்கதாகையினுல். ஆகையினுல் இவ்விடத்தில் ஶரீரத்திற்கு ஶ்ரமம் முதலியவைகளுடன் சேர்ந்திருக்கிறதென்பது 'ஸதோஷம்'என்று சொல்லப்படுகிறது. இவ்வளவு மாத்திரத்தினுலும் சோம்பேறிகளுக்கு விடவேண்டும் என்கிற புத்தி உண்டாய்விடும் என்கிற அபிப்ராயத்தினுல் சொல்லுகிறர்—'துக்கத்தோடுகூடி யிருந்தபோதிலும்' என்று. இத்தால் கபிலருடைய மதத்தை ஆரோபித்துக்கொண்டு 'ஸதோஷம்' என்றனுவாதம் செய்திருக்கிறது என்று மற்றவர்கள் வ்யாக்யானம் செய்திருப்பது நிராகரிக்கப்பட்டது. மோக்ஷத்தில் ஆசையுடையவனுக்கு ஶாஸ்த்ரத்தில் விதிக்கப்பட்டதாயும் சிறந்ததென்று கீழே சொல்லப்பட்டதாயுமிருக்கிற கர்மயோகத்தில் அல்பமான கஷ்டத்தைப் பொறுக்காமையினுல் விடவேண்டுமென்கிற புத்தி எப்படி உண்டாகும்? ஆகையினுல்விடுவதற்குப்ரஸ்தாவமே இல்லாமையினுல் விடக்கூடாதென்று மறுத்திருப்பது உசிதமல்ல, என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறர்— 'ஜ்ஞானயோகத்தைச் செய்யத்தகுந்தவனு யிருந்தபோதிலும்' என்று.

என்றர்த்தம். கர்மயோகத்தின் ஆரம்பங்களும் ஜ்ஞானயோகத்தின் ஆரம்பங்களும் புகையினால் அக்னிபோலத் துக்கத்தினால் சூழப்பட்டிருக்கின்றன. இவ்வளவுதான் வ்யத்யாஸம். கர்மயோகம் ஸுலபமாய்ச் செய்யக்கூடியது, தவறுதல் நேரிடக்கூடாதது. ஜ்ஞானயோகம் இதற்கு விரோதமான ஸ்வபாவமுடையது என்பது. 48

அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிதாத்மா விகதஸ்ப்ருஹ:|
நைஷ்கர்ம்யஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேநாதிகச்சதி ‖ 49

ப - ரை] ஸர்வத்ர - எல்லா விஷயங்களிலும், அஸக்தபுத்தி: - பற்றுதலையடையாத புத்தியையுடையவனாய்க் கொண்டும், ஜிதாத்மா-ஜயிக்

'போதிலும்' என்னும்பதம் மற்றவர்களைப்பற்றிக்கேழ்க்கவே வேண்டியதில்லை என்று தெரிவிப்பதற்காக. கஷ்டமில்லாத உபாயத்தைப்பார்த்தால் தன்னுடைய அதிகாரத்தை யோசிக்காமல் அதில் ப்ரவ்ருத்தியுண்டாகுமாகையினால் அதிலிருந்தும் தடுக்கப்படுகிறான் என்றர்த்தம். துக்கத்தோடுகூடியது, துக்கமில்லாதது என்கிற வ்யத்யாஸத்தை ஒப்புக்கொண்டு தவறுதல்நேரிடக்கூடாதது முதலிய காரணங்களினால் கர்மயோகமே செய்யவேண்டுமென்று நியமம் சொல்லப்பட்டது. பிறகு துக்கத்தோடு கூடினதென்பது இரண்டிற்கும் ஸமானம் என்று சொல்லப்படுகிறது—'ஸர்வாரம்பா ஹி' என்றாரம்பித்து. 'கர்மயோகத்தின் ஆரம்பங்களும் ஜ்ஞானயோகத்தின் ஆரம்பங்களும்' என்பதினால் 'ஸர்வ' என்னும் பதத்தினால் இவ்விடத்தில் கீழ் ப்ரஸ்தாவிக்கப்பட்ட ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட எல்லாக் கர்மங்களும் சொல்லப்படுகின்றன என்று சொல்லுகிறார். துக்கம் ஸமமாக இருந்தால் ஒன்றைமாத்திரம் செய்யவேண்டுமென்று நியமிப்பதில் என்ன ப்ரயோஜனம்? அந்தத்துக்கம் கர்மயோகத்தை விடுவதற்கு ஏன் காரணமாகாது? என்கிற ஆக்ஷேபங்களுக்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'இவ்வளவுதான் வ்யத்யாஸம்' என்றாரம்பித்து. கர்மங்களை ஆரம்பிப்பதில் ஶரீரத்திற்கு ஶ்ரமம் மாத்திரம். ஜ்ஞானயோகத்தை ஆரம்பிப்பதிலோவெனில் அதிக ஸமீபத்திலிருந்தபோதிலும் 1 'முழங்கை முண்டு' நடுவில் ஒட்டிக்கொண்டிருக்கிற வஸ்துவைப்போலிருக்கிற ஜீவாத்மாவைத்தேடுவதினால் இந்த்ரியங்கள், மனது, இவைகளை யடக்குவதினால் உண்டாகிய ஶ்ரமம் அதிகதுக்கம் என்று தாத்பர்யம். 48

1 தாத்பர்ய சந்த்ரிகையின் மற்றொரு பாடாந்தரப்படி 'முழங்கை முண்டில் ஒட்டிக்கொண்டிருக்கிற வெல்லம் போல் இருக்கிற ஜீவாத்மாவை' என்றர்த்தமாகவுமாம்.

கப்பட்ட மனதையுடையவனாய்க் கொண்டும், விகதஸ்ப்ருஹ: - ஆசை யில்லாதவனாய்க் கொண்டும் (இருக்கிறவன்), ஸந்ந்யாஸேந - கீழ்ச் சொல்லிய கர்ம ஸந்ந்யாஸத்தினால், பரமாம் - உயர்ந்ததாகிய, நைஷ்கர்ம்ய ஸித்திம் - த்யானயோகத்தின் ஸித்தியை, அதிகச்சதி - அடைகிறான். 49

பா] பலம் முதலியவைகளிடத்தில் பற்றுதலில்லாத புத்தியையுடையவனாயும், ஜயிக்கப்பட்ட மனதையுடையவனாயும், பரமாத்மாவையே கர்த்தா என்றனுஸந்தானம் செய்வதினால் தான் கர்த்தா என்பதில் ஆசையில்லாதவனாயும், கீழ்ச் சொல்லியபடி த்யாகத்தைவிட வேறுபட்டதல்ல என்று நிஸ்சயம் செய்யப்பட்ட ஸந்ந்யாஸத்துடன் கர்மங்களைச் செய்து கொண்டிருப்பவன் உயர்ந்ததாயும், ஜ்ஞான யோகத்திற்கும் ப்ரமாணமாயுமிருக்கிற த்யான நிஷ்டையை யடைகிறான். அதாவது எல்லா

தா] 'அஸக்தபுத்தி:' என்று சொல்லி இருந்தபோதிலும் மறுபடியும் 'விகதஸ்ப்ருஹ:' என்று சொல்லியிருப்பது பலம், ஸங்கம், இவைகள் நிவ்ருத்திப்பதாகிய த்யாகத்தோடு சேர்த்துச் சொல்லப்பட்ட கர்த்ருத்வ த்யாகத்தைச் சொல்லுகிறதென்பது உசிதமாகையினால் கனவிலும் தன்னிடத்தில் கர்த்ருத்வம் உண்டாகிறதென்றனுஸந்தானத்தின் ப்ரஸ்தாவமே இல்லாமலிருப்பதாகிய த்யாகத்தின் உயர்ந்த தசையைச் சொல்லுவதற்காக என்று சொல்லுகிறார்—'தான் கர்த்தா என்பதில் ஆசை இல்லாதவனாயும்' என்று. 'ஸந்ந்யாஸேந' என்பது ஜ்ஞானயோகம் முதலியதைச் சொல்லுகிறதல்ல, கீழ்க்கர்மங்களைவிடக் கூடாதென்று சொல்லியிருப்பது பொருந்தாதாகையினாலும், இந்த அத்யாயத்தின் ஆரம்பத்தில் சொல்லப்பட்ட ஸந்ந்யாஸத்தைச் சொல்லுகிறதென்பது உசிதமாகையினாலும் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'கீழ்ச் சொல்லியபடி' என்றாரம்பித்து. இவ்விடத்தில் 'நைஷ்கர்ம்யஸித்திம்' என்னும் பதம் மோக்ஷத்தைச் சொல்லுகிறதல்ல, 'ஸித்திம் ப்ராப்த:' என்றாரம்பித்து மறுபடியும் அவனுக்குச் செய்யவேண்டிய கார்யத்தை விதித்திருக்கிறபடியினால். ஜ்ஞானயோகம் மாத்திரத்தைச் சொல்லுகிறதுமல்ல, 'பரமாம்' என்று இங்கு விசேஷணமிருக்கிறபடியினாலும், 'நைஷ்கர்ம்ய' என்னும் பதத்தினால் மாத்திரம் அதைச் சொல்லலாமாகையினாலும். ஆகையினால் இவ்விடத்தில் ஜ்ஞான நிஷ்டையின் பலத்தினுடைய ஆரம்பம் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'த்யான நிஷ்டையை' என்று. 'நைஷ்கர்ம்யஸித்திம்' என்கிற இடத்தில் ஸமஸ்த

இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் ஓய்ந்துவிடுவதாகிய மேலே சொல்லப் போகிற த்யான யோகத்தை அடைகிறான். 49

𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑍋 𑌯𑌥𑌾 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 𑌤𑌥𑌾𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 𑌨𑌿𑌬𑍋𑌧 𑌮𑍇 ।
𑌸𑌮𑌾𑌸𑍇𑌨𑍈𑌵 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 𑌯𑌾 𑌪𑌰𑌾 ॥ 50

ப-ரை] 𑌕𑍌𑌨𑍍𑌤𑍇𑌯 - அர்ஜுந, 𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 - த்யான யோகத்தின் ஸித்தியை, 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃 - அடைந்தவன், 𑌯𑌥𑌾 - எவ்விதத்தினால், 𑌬𑍍𑌰𑌹𑍍𑌮 - ப்ரம்மத்தை, 𑌆𑌪𑍍𑌨𑍋𑌤𑌿 - அடைகிறானோ, . 𑌤𑌥𑌾 - அந்தவிதத்தை, 𑌮𑍇 - என்னிடத்திலிருந்து, 𑌸𑌮𑌾𑌸𑍇𑌨 - சுருக்கமாக, 𑌨𑌿𑌬𑍋𑌧 - தெரிந்துகொள், 𑌯𑌾 - எந்த ப்ரம்மமானது, 𑌜𑍍𑌞𑌾𑌨𑌸𑍍𑌯 - த்யானத்திற்கு, 𑌪𑌰𑌾 - உயர்ந்ததாகிய, 𑌨𑌿𑌷𑍍𑌠𑌾 - அடைய வேண்டிய ப்ரயோஜனமோ. 50

பா] ப்ரயாணம் புறப்படுகிற வரையில் தினந்தோறும் அனுஷ்ட்டிக்கப் படுகிற கர்ம யோகத்தினால் உண்டாக்கப்பட்ட த்யானமாகிற ஸித்தியை அடைந்தவன் எவ்விதமாக இருந்துகொண்டு ப்ரம்மத்தை அடைகிறானோ,

---

ம்யத்தின் ஸித்தியாகிய என்கிற ஸமாஸத்தினாலாவது '𑌪𑌰𑌮𑌂' என்கிற விசேஷணத்தினாலாவது ஏற்பட்டதை விவரிக்கிறார்—'ஜ்ஞான யோகத்திற்கும் ப்ரயோஜனமாயுமிருக்கிற' என்று. மேல் சொல்லப் போகிற க்ரந்தத்தை அனுஸரித்தும் இந்த அர்த்தத்தைச் சொல்லுகிறது உசிதம் என்று சொல்லுகிறார்—'மேலே சொல்லப்போகிற' என்று. '𑌨𑌿𑌵𑍃𑌤𑍍𑌤𑌕𑌰𑍍𑌮𑌾 𑌨𑌿𑌷𑍍𑌕𑌰𑍍𑌮𑌾 (கர்மங்களொன்றுமில்லாதவன் அவனுடைய ஸ்வபாவம் நைஷ்கர்ம்யம்)' என்கிற வ்யுத்பத்தியை விவரிக்கிறார்—'எல்லா இந்த்ரியங்களினுடையவும்' என்றாரம்பித்து. 49

'𑌸𑌿𑌦𑍍𑌧𑌿𑌂 𑌪𑍍𑌰𑌾𑌪𑍍𑌤𑌃' என்பது கீழ்ச்சொல்லியதை அனுவாதம் செய்கிறது என்பதை அதின் விசேஷணங்களோடு கூடின காரணத்தை விவரித்துக்கொண்டு சொல்லுகிறார்—'ப்ரயாணம் புறப்படுகிறவரையில்' என்றாரம்பித்து. ஸித்தியை யடைந்தவன் ப்ரம்மத்தை யடைகிறான் என்று சொல்லியிருப்பதினால் மற்றவர்களைச் சொல்லுகிறது இது என்று தெரிவிப்பதற்காக 'த்யானமாகிற ஸித்தியை யடைந்தவன்' என்று சொல்லப்பட்டது. '𑌯𑌥𑌾' என்பது மேல்க்ரந்தத்தை அனுஸரித்துப் புருஷனுடைய வ்யாபாரத்தினால் செய்யத்தகுந்த உபாயத்தின் விதத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—' எவ்விதமாக இருந்துகொண்டு' என்று. '𑌮𑍇 𑌨𑌿𑌬𑍋𑌧' என்பதற்கு என்னிடத்திலிருந்து நிஶ்சயமாய்த் தெரிந்துகொள் என்றர்த்தம். உயர்ந்த பலத்தி

அந்த விதத்தைச் சுருக்கமாக என்னிடத்திலிருந்து தெரிந்துகொள். அந்த ப்ரம்மமே 'நிஷ்டாஜ்ஞாநஸ்ய பராபரா' என்று விசேஷித்துச் சொல்லப்படுகிறது. த்யானமாகிய ஜ்ஞானத்திற்கு எந்த ப்ரம்மம் மேலான அடைய வேண்டிய ப்ரயோஜனமோ என்றர்த்தம். 50

புத்த்யா விஶுத்தயா யுக்தோ த்ருத்யாத்மாநம் நியம்ய ச |
ஶப்தாதீந் விஷயாம்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச || 51

விவிக்தஸேவீ லக்வாஶீ யதவாக்காயமாநஸ꞉ |
த்யாநயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஶ்ரித꞉ || 52

அஹங்காரம் பலம் தர்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் |
விமுச்ய நிர்மம꞉ ஶாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே || 53

ப-ரை] விஶுத்தயா - பரிசுத்தமாகிய, புத்த்யா - புத்தியுடன், யுக்த꞉ - சேர்ந்தவனாய். த்ருத்யா - தைர்யத்தினால், ஆத்மாநம் - மனதை, நியம்ய - அடக்கிக்கொண்டும், ஶப்தாதீந் - ஶப்தம் முதலிய, விஷயாந் - விஷயங்களை, த்யக்த்வா - விட்டு விட்டு, ராகத்வேஷௌ - ஆசையையும் த்வேஷத்தையும், வ்யுதஸ்ய - தள்ளி, விவிக்தஸேவீ - ஜனமில்லாத இடத்தை அடைந்தவனாயும், லக்வாஶீ - மிதமான ஆஹாரத்தை ஸாப்பிட்டுக் கொண்டும், யதவாக்காயமாநஸ꞉ - அடக்கப்பட்டவாக்கு, ஶரீரம், மனது, இவைகளை யுடையவனாய்க் கொண்டும், நித்யம் - எப்பொழுதும், த்யாநயோகபர꞉ - த்யான யோகம் செய்து கொண்டும், வைராக்யம் - மற்ற விஷயங்களில் ஆசையில்லாமையை, ஸமுபாஶ்ரித꞉ - அடைந்தவனாய்க் கொண்டும், அஹங்காரம் - அஹங்காரத்தையும், பலம் - தன் வாஸனையின் பலத்தையும், தர்பம் - கொழுப்பையும், காமம் - காமத்தையும், க்ரோதம் - கோபத்தையும், பரிக்ரஹம் - மற்றெல்லா வஸ்துக்களையும், விமுச்ய - விட்டு விட்டு, நிர்மம꞉ - மமகார மில்லாதவனாயும்,

ஸல்லவோ உபாயம் முடிவு பெறுகிறது. ஆகையினால் அதுவே உபாயம் முடியுமிடமாகையினால் 'நிஷ்டா' என்று சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'அந்த ப்ரம்மமே' என்று. 'ஜ்ஞாந' என்னும் பதம் இவ்விடத்தில் மேலே சொல்லப்போகிற த்யானத்தில் முடிவு பெறுகிறது என்று சொல்லுகிறார்—'த்யானமாகிற' என்றாரம்பித்து. 50

ஶாந்த: - சாந்தியை யுடையவனுயு மிருக்கிற (த்யான யோக நிஷ்ட்டன்), ப்ரஹ்ம பூயாய - பரிசுத்தமான ஆத்மாவை அடைவதற்கு, கல்பதே - யோக்கியனாகிறான். 51—53

பா] உள்ளபடியே இருக்கிற ஜீவாத்மாவின் உண்மையைப் பற்றிய புத்தியோடு கூடினவனுயும், மனதை விஷயங்களி லிருந்து திருப்புவதினுல் யோகம் செய்யத் தகுந்ததாகச் செய்து கொண்டும், ஶப்தம் முதலிய விஷயங்களை ஸமீபத்தி லில்லாதவைகளாகச் செய்துகொண்டும் அவைகளி லுண்டாகிற ஆசை த்வேஷம், இவைகளைத் தள்ளிக் கொண்டும், த்யானம் செய்வதற்கு விரோதிகளாகிய வஸ்துக்க ளொன்று மில்லாத இடத்தி

---

தா] இவ்விடத்தில் 'புத்தி' என்னும் பதம் மேலே ப்ரஸ்தாவிக்கப் படுகிற 'ப்ரஹ்ம' என்னும் பதத்தின் அபிப்ராயத்திலேற்பட்ட அர்த்தத்தைப்பற்றிய புத்தியைச் சொல்லுகிறது. அதற்கு சுத்தியாவது பூர்ணமாகத் தெரிந்துகொள்ளாமை, ஸந்தேஹம், விருத்தமாக அறிதல் முதலிய தோஷங்களில்லாமை. என்று சொல்லுகிறார்—'உள்ளபடியே இருக்கிற' என்றாரம்பித்து. 'த்ருத்யா' என்பதினுல் முன்பு சொல்லிய விதமான ஸாத்விக த்ருதி சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'விஷயங்களிலிருந்து திருப்புவதினுல்' என்று. இவ்விடத்தில் தைர்யத்தினுல் மனதை அடக்குவதாகிய கர்மம் சொல்லப்பட்டது. மறுபடியும் முன்பே விடப்பட்ட ஶப்தம் முதலிய விஷயங்களைப்பற்றி அப்பொழுது விட்டு என்று சொல்லப்படுகிறதே அது எப்படிப்பட்டது? என்கிற ஆக்ஷேபத்திற்கு ஸமாதானம் சொல்லுகிறார்—'ஸமீபத்தில் இல்லாதவைகளாய்ச் செய்துகொண்டு' என்று. விஷயங்கள் ஸமீபத்திலிருப்பது ஜிதேந்த்ரியனையும் கலக்கிவிடுமல்லவா என்று தாத்பர்யம். 'ராகத்வேஷௌ வ்யுதஸ்ய' என்று விஷயங்களி லுண்டாகிய ராகத்வேஷங்களைத் தள்ளுவதும் அப்பொழுது செய்யவேண்டியதைப்பற்றியது என்று தெரிவிப்பதற்காகவும் 'வைராக்யம் ஸமுபாஶ்ரித:' என்பதோடு புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகவும் சொல்லுகிறார்—'அவைகளிலுண்டாகிற' என்றாரம்பித்து. இத்தால் விஷயங்கள் ஸமீபத்தில் இல்லாமையின் ப்ரயோஜனம் காட்டப்பட்டது. அன்றிக்கே தூரத்திலிருந்தபோதிலும் அவைகளில் ஸூக்ஷ்மமாகிய ஆசையும் விடத்தக்கது என்று தாத்பர்யமாகவுமாம். 'விவிக்த' என்பதற்கு இல்லாமலிருக்கிற என்றர்த்தம். அதை இந்த ஸந்தர்ப்பத்திற்குபயோகமான அர்த்தத்தினுல் விஶேஷித்துச் சொல்லுகிறார்—'த்யானம் செய்வதற்கு விரோதிகளாகிய' என்றாரம்பித்து. 'விவிக்தஸேவீ' என்பதினுல் முன்பு

லிருந்து கொண்டும், அதிகமாக ஸாப்பிடுவது, ஸாப்பிடாமலிருப்பது, இவைகளில்லாமலிருப்பவனாயும், த்யானத்திற்கனுகுணமாகச் செய்யப்பட்ட ஶரீரம் வாக்கு, மனது, இவைகளின் வ்யாபாரங்களை யுடையவனாய்க் கொண்டும் இப்படிப்பட்டவனாய் ப்ரயாணம் புறப்படுகிற வரையில் தினந்தோறும் த்யானம் செய்து கொண்டும், த்யானம் செய்யப்படுகிற வஸ்துவைத் தவிர மற்ற விஷயங்களில் தோஷங்களை நிரூபிப்பதினால் அந்தந்த விஷயங்களில் ஆசை இல்லாமையை வ்ருத்தி செய்து கொண்டும், ஆத்மாவல்லாத வஸ்துவினிடத்தில் இதுவே ஆத்மா என்கிற அபிமானத்தையும், அது வ்ருத்தி யடைவதற்குக் காரணமாகிய வாஸனையின்

---

சொல்லப்பட்ட 'லகுாஶீ' என்பது முதலிய பதுஜ்ஞாபகப்படுத்தப்படுகிறதுஎன்றுசொல்லுகிறார்—'அதிகமாகஸாப்பிடுவது' என்றாரம்பித்து. 'யதவாக்காயமாநஸ:' என்பதோடு 'யதவாக்காயமாநஸ:' என்பதற்குப்புனருக்தியைப் பரிஹரிப்பதற்காகச்சொல்லுகிறார்—'த்யானத்திற்கனுகுணமாகச்செய்யப்பட்ட' என்றாரம்பித்து.ஶரீரத்தை த்யானத்திற்கனுகுணமாகச் செய்வதாவது உறுதியான ஆஸநம் முதலியவைகளை அடைதல். வாக்குக்கோவெனில் ப்ரணவம் முதலியவைகளைத் தவிர மற்ற வார்த்தைகளை விட்டுவிடுதல். மனதிற்கோவெனில் ஶுபாஶ்ரயமாகிய பகவானுடைய திவ்ய மங்கள விக்ரஹத்தை நினைத்துக்கொண்டிருத்தல்.கீழ்ச்சொல்லியவைகளெல்லாம் த்யானயோகத்திற்கங்கங்கள் என்று சொல்லுகிறார்—'இப்படிப்பட்டவனாய்' என்று. 'நித்யம்' என்னும் பதத்தின் தாத்பர்யத்தைச் சொல்லுகிறார்-'ப்ரயாணம் புறப்படுகிற வரையில் தினந்தோறும்' என்று. 'ராகத்வேஷௌ வ்யுதஸ்ய' என்பதினால் ஶப்தம் முதலிய விஷயங்களிலுண்டாகிய ஆசை, த்வேஷம், இவைகளை விலக்கவேண்டுமென்று சொல்லப்பட்டபடியினால் 'வைராக்யம் ஸமுபாஶ்ரித:' என்கிற இது அபிமானத்தினாலுண்டாகிய வஸ்துக்களைப்பற்றியது. அதில் 'ஸம்' என்னும் உபஸர்க்கத்தின் அர்த்தமாகிய நன்மையாவது முன்பு ஏற்பட்டிருந்தபோதிலும் அதையே நன்றாக உறுதிப்படுத்தல் என்கிற அபிப்ராயத்தினால் 'ஆசையில்லாமையை வ்ருத்திசெய்துகொண்டும்' என்று சொல்லப்பட்டது. இப்படியே அஹங்காரம் முதலியவைகளை விடுவதிலும் அறியவேண்டியது. ஶரீரம், மனது, ப்ராணவாயு முதலியவைகளின் பலங்கள் யோகத்திற்கு விரோதி இல்லாமையினால் 'வாஸனையின் பலத்தையும்' என்று விஶேஷித்துச் சொல்லி இருக்கிறது. கர்வமாவது இவ்விடத்தில் கீழ்ச்சொல்லிய அஹங்காரம், பலம், இவைகளைக் காரணமாகவுடையதாகிய செய்யவேண்டிய கார்யத்தைச் செய்யாமை, நான்

பலத்தையும், இதனாலுண்டாகிற கர்வத்தையும், காமத்தையும், கோபத்தையும், மற்றெல்லா வஸ்துக்களையும் விட்டு விட்டுத் தன்னைச் சேர்ந்தவைகளல்லாத எல்லா வஸ்துக்களிடங்களிலும் தன்னுடையதென்கிற புத்தி இல்லாதவனாயும், ஆத்மாவை அனுபவிப்பதொன்றையே ஸுகமாக வுடையவனாயும், இப்படிப் பட்டவனாய்க்கொண்டு த்யானயோகம் செய்கிறவன் ப்ரம்மமாவதற்குத் தகுந்தவனாகிறான். எல்லா ஸம்ஸார பந்தங்களிலிருந்து விடுபட்டவனாய் உள்ளபடியே இருக்கிற ஜீவாத்மாவை அனுபவிக்கிறான் என்றர்த்தம். 51—53

ப்ரஹ்மபூத: ப்ரஸந்நாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி।
ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம்॥ 54

ப-ரை] ப்ரஹ்மபூத: - பரிசுத்த ஆத்மாவை யனுபவிக்கிறவனாய், ப்ரஸந்நாத்மா-துக்கம்முதலியவைகளில்லாதஸ்வரூபத்தையுடையவனாய், நஶோசதி-வேறொன்றைப்பற்றித் துக்கிப்பதுமில்லை, நகாங்க்ஷதி-

---

யோகீ, நான் ஶாந்தன் என்றுண்டாகும் கர்வமும் விடத்தக்கது. 1 'ஹ்ருஷ்டோ த்ருப்யதி த்ருப்தோ தர்மமதிக்ராமதி' என்று ஸ்ம்ருதியில் சொல்லியிருப்பதினால் மனது, வாக்கு, ஶரீரம் இவைகளின் வ்யாபாரங்கள் நிவ்ருத்தி சொல்லப்பட்டபடியினால் 'ஶாந்த:' என்னும் பதம் இவ்விடத்தில் ஶாந்திக்கு விஶேஷமான காரணத்தைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'ஆத்மாவை அனுபவிப்பதொன்றையே ஸுகமாகவுடையவனாயும்' என்று. இந்த்ரியங்களின் வ்யாபாரங்கள் ஓய்வதும் கோபம் முதலியவைகள் நிவ்ருத்திப்பதும் வெளியிலுண்டாகும் ஸுகத்தில் ஆசை இல்லாமையினால். அதுவும் அதைவிட விஶேஷமான ஆத்மாவை அனுபவிப்பதாகிய ஸுகம் ஸித்தித்துவிட்டபடியினால் என்று தாத்பர்யம். கீழ்ச்சொல்லிய எல்லாக் கர்மங்களிலும் த்யானயோகம் முக்கியம் என்று சொல்லுகிறார்—'இப்படிப் பட்டவனாய்க்கொண்டு த்யானயோகம் செய்கிறவன்' என்று. இவ்விடத்தில் த்யானமே யோகமென்று சொல்லப்படுகிறது. த்யானத்தினால் உண்டாகிறயோகமாகவுமாம். அடுத்த ஶ்லோகத்தின் அர்த்தத்தை யோசித்து இவ்விடத்தில் 'ப்ரஹ்ம' என்னும் பதம் பரிசுத்தமான ஜீவாத்மாவைச் சொல்லுகிறது என்று சொல்லுகிறார்—'எல்லா ஸம்ஸார பந்தங்களிலிருந்து' என்றாரம்பித்து. 51—53

---

1 ஹ்ருஷ்ட: - ஸந்தோஷத்தை யடைந்தவன், த்ருப்யதி - கொழுப்படைகிறான், த்ருப்த: - கொழுப்படைந்தவன், தர்மம் - தர்மத்தை, அதிக்ராமதி - மீறி

ஆசைப்படுவதுமில்லை, ஸர்வேஷு - எல்லா, பூதேஷு - ப்ராணிகளிடங்களில், ஸம: - ஸமமான புத்தியையுடையவனாய்க்கொண்டு, பராம் – மிகவும் உயர்ந்ததாகிய, மத்பக்திம் - என்னிடத்தில் பக்தியை, லபதே – அடைகிறான். 54

பா] ப்ரகாசித்துக்கொண்டிருக்கிற அளவில்லாத ஜ்ஞானமொன்றையே ஸ்வரூபமாகவுடையதாயும், எனக்குச் சேஷமாயிருப்பதொன்றையே ஸ்வபாவமாக வுடையதாயுமிருக்கிற தன்னுடைய ஆத்மஸ்வரூபத்தை யுடையவனாயும், * 'இதஸ்த்வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்' என்பதினால் தனக்குச் சேஷமென்று சொல்லப்பட்டதல்லவா, கஷ்டம், கர்மம், முதலியவைகளினால் கலக்கத்தை யடையாத ஸ்வரூபத்தை யுடையவ

---

தா] இப்படிக் கர்மயோகம் முதலியவைகளினால் உண்டாக்கப்பட்ட ஜீவாத்மாவை யனுபவிப்பது பரபக்தியில் அதிகாரத்தை உண்டாக்குகிறது என்பது இந்த ஶ்லோகத்தினால் சொல்லப்படுகிறது. இந்த அபிப்ராயத்தினால் பகவானுக்குச் சேஷமாயிருக்கை ஒன்றையே ஸ்வபாவமாக வுடையவனாயிருக்கையும் ப்ரகாசிக்கிறதென்று சொல்லப்பட்டது. யோகத்தினாலுண்டாக்கப்பட்ட 'ப்ருஹ' என்று சொல்லப்பட்டது பெரிதாக இருக்கை என்கிற அபிப்ராயத்தினால் 'அளவில்லாதஜ்ஞானம்' ப்ரகாசிக்கிறது என்று சொல்லி இருக்கிறது. பகவானுக்குச் சேஷமாக இருக்கை ஆத்மாவிற்கு ஸ்வரூபத்தோடு சேர்ந்ததென்பது முன்னமேயே சொல்லப்பட்டது என்று சொல்லுகிறார்—'இதஸ்த்வந்யாம்' என்றாரம்பித்து. 1 'ராகாதிதூஷிதே சித்தே நாஸ்பதீ மதுஸூதந:' என்றிவை முதலியவைகளில் சொல்லப்பட்ட பரபக்தி, செய்பத்தகாத அயோக்யதை இல்லாமை, 'அஸம்ஸ்ப்ருஷ்டா' என்பதினால் சொல்லப்படுகிறது என்று சொல்லுகிறார்—'கஷ்டம், கர்மம், முதலியவைகளினால் கலக்கத்தையடையாத' என்று. 'முதலிய' என்னும் பதத்தினால் விபாகம், ஆசை, இவைகளும் சேர்த்துக்கொள்ளப்படுகின்றன, அவைகளும் கலக்கங்களாகையினாலும், 2 'க்லேசகர்மவிபாகாசயை:' என்று சேர்த்துச் சொல்லப்பட்டிருப்பதினாலும். அவித்யை, அஹங்காரம் முதலியவைகள் ஐந்தும் க்லேசங்கள். புண்ணியம் பாபம் இவை

* - 7 -5

1 விஷ்ணுதர்மம் - 9 - 10. மதுஸூதந: பகவான் ராகாதிதூஷிதே-ஆசை முதலியவைகளினால் கெடுக்கப்பட்டிருக்கிற, சித்தே - மனதில், நாஸ்பதீ - இடத்தையுடையவனல்ல, அதாவது வஸிக்கமாட்டான் என்றர்த்தம்.

2 யோகஸூத்ரம்.

ளையுமிருப்பவன் என்னைத் தவிர வேறொரு ப்ராணியையும் குறித்துத் துக்கிப்பதுமில்லை ஆசைப்படுவதுமில்லை. பின்னை எப்படி என்னில் என்னைத் தவிர மற்றெல்லா ப்ராணிகளைப்பற்றியும் இவைகள் அநாதரிக்கத் தக்கவைகள் என்கிற விஷயத்தில் ஸமமான புத்தியையுடையவனாய்க்கொண்டு எல்லா வஸ்துக்களையும் த்ருணம்போல் நினைத்துக்கொண்டு எல்லாவற்

---

இரண்டும் கர்மம். ஜாதி, வயது, ஸுகங்கள், இவைகள் விபாகங்கள். அவைகளினால் உண்டாகும் ஸம்ஸ்காரங்கள் ஆசயங்கள். [1] 'யஸ்மிந் ஸ்திதோ ந து:கேந குருணாபி விசால்யதே' என்று முன்பு சொன்னதே 'ந ஶோசதி' என்பதினால் சொல்லப்பட்டது. அப்படியே 'யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத:' என்று சொல்லப்பட்டது 'ந காங்க்ஷதி' என்பதினால் ஜ்ஞாபகப் படுத்தப்பட்டது. இவ்விடத்தில் 'ந ப்ரஹ்ருஷ்யதி' என்கிற பாடாந்தரம் அப்ரஸித்தமாகையினால் ஒப்புக்கொள்ளப்படவில்லை. அதில் ஆத்மாவை அனுபவிப்பதினால் உண்டாகிய ஸுகத்தினால் வெளியிலிருக்கும் விஷயங்களில் ஆசை இல்லாமை உண்டாகிறது. பரமாத்மாவோ வெனில் ஜீவாத்மாவை விட மேலான ஸுகமாகச் ஶாஸ்த்ரங்களில் கேழ்க்கப்பட்டிருப்பதினால் அவனை அனுபவிக்க வேண்டுமென்கிற ஆசை மிகுதியாக நிற்கிறது என்கிற அபிப்ராயத்தினால் 'என்னைத்தவிர வேறொரு ப்ராணியையும் குறித்து' என்று சொல்லப்பட்டிருக்கிறது. துக்கமும் ஆசையும் உண்டாகாமலிருப்பதற்குக் காரணம் 'ஸம:' என்பதினால் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் 'அநாதரிக்கத்தக்கவைகள் என்கிற விஷயத்தில் ஸமமான புத்தியை யுடையவனாய்க்கொண்டு' என்று சொல்லப்பட்டது. அதாவது எல்லா வஸ்துக்களிடங்களிலும் ஸமமான அநாதரவை உடையவனாய்க் கொண்டு என்றர்த்தம். மேலான தத்துவம், தாழ்ந்த தத்துவம், இவைகளின் பகுத்தறிவிற்கு ப்ரயோஜனமாகிய மற்ற வஸ்துக்களைப்பற்றிய அநாதரவு ஸமம் என்பதை ப்ரகாசப்படுத்துகிறார்—'எல்லாவஸ்துக்களையும்' என்றாரம்பித்து. 'எல்லா வஸ்துக்களையும்' என்பதினால் ப்ரம்மா முதல் புழுவரையிலுள்ள எல்லா வஸ்துக்களுக்கும் ஒன்றுக்கொன்றுள்ள வ்யத்யாஸம் மேரு பர்வதத்தைக்குறித்து உளுந்து, கடுகு, இவைகளுக்கு ஒன்றுக்கொன்றுள்ள வ்யத்யாஸத்தைப்போல அநாதரிக்கத்தக்கது என்பது காட்டப்பட்டது. 'த்ருணம் போல்' என்பதற்கு ரத்னமயமான மலையில் ஏறுவதற்கு யத்தினம் செய்து கொண்டிருப்ப

---

1 பகவத்கீதை-6-22.

றிற்கு மீஶ்வரனும் எல்லாலோகங்களினுடையவும் உத்பத்தி, ஸ்திதி, லயம், இவைகளை விளையாட்டாகஉடையவனும், கெட்ட குணங்களின் ஸம்பந்தமில்லாதவனும், எல்லை இல்லாத மேன்மையையுடைய எண்ணிறந்த கல்யாண குணங்களுக்கே இருப்பிடமாயும், அழகு நிறைந்த

---

*வனுக்கு வைக்கோலின் கும்பல்களில் ஆசை உண்டாகாதல்லவா என்று தாத்பர்யம். இவ்விடத்தில் 'ச'* என்னும் பதத்தினால் பரபக்தியுண்டாவதற்கும் அது வ்ருத்தியடைவதற்கும் காரணமாக இந்தக் கீதாஶாஸ்த்ரத்தில் முன்னும், மற்ற ஶாஸ்த்ரங்களிலும் விஸ்தாரமாகச் சொல்லப்பட்டவைகளும் உபாஸநம் செய்யும்பொழுது அனுஸந்திக்கவேண்டியவைகளுமான ஆகாரங்கள் அபிப்ராயத்தில் கொள்ளப்பட்டன என்று சொல்லுகிறார்—'எல்லாவற்றிற்கு மீஶ்வரனும்' என்றாரம்பித்து. 'எல்லாவற்றிற்கு மீஶ்வரனும்' என்பதற்கு, என்னால் நியமிக்கப்பட்டவனும் ஸம்ஸாரத்தில் கட்டுப்பட்டவனுமிருக்கிறவனுக்குத் தன்னைப்போலவே இருக்கிற என்னால் நியமிக்கப்படுகிறவர்களினால் என்ன ப்ரயோஜனம் என்று தாத்பர்யம். 'எல்லா லோகங்களினுடையவும்' என்றாரம்பிக்கும்வாக்யத்திற்கு 1 'காரணவஸ்துவே த்யானம் செய்யத்தக்கது' என்றர்த்தமுள்ளவாக்யம் ஶ்ருதியில் சொல்லப்படுகிறது என்றுதாத்பர்யம். அன்றிக்கேஇந்த்ரியங்கள், ஶரீரம், இவைகளைக் கொடுத்தது முதலியவைகளினால்மிகவும் உபகாரம்செய்தவனும்நான்குவிதப்புருஷார்த்தங்களுக்கும்காரணமாயுமிருக்கிற அந்தப்பரமாத்மா இருக்க அவனால்ஸ்ருஷ்டிக்கப்படுகிறவனும் ஸம்ஹரிக்கப்படுகிறவனுமிருக்கிற மற்ற எவன் ஆஶ்ரயிக்கத்தகுந்தவன் என்று தாத்பர்யம். 'கெட்ட குணங்களின் ஸம்பந்தமில்லாதவனும்' என்பதற்கு இந்தப் பரமாத்மா உள்ளபடியே அறியப்பட்டானேயானால் மற்ற வஸ்துக்களிடங்களிலேபோல அலக்ஷியம் ஆசையில்லாமை முதலியவைகள் உண்டாவதற்குக் காரணமில்லையல்லவா என்று தாத்பர்யம். 'எல்லையில்லாத' என்பது முதலியவற்றிற்கு ஒவ்வொரு குணங்களின் மேன்மையும் மனதை இழுக்கக்கூடியது. இப்படிப்பட்டகுணங்கள் அநேகம் சேர்ந்திருந்தால் கேழ்க்கவே வேண்டியதில்லை என்று தாத்பர்யம். எது மேலானதும் ஸுலபமானதுவோ அதுவேயல்லவோ ஆஶ்ரயிக்கத்தக்கது. ஆகையினால் ஸௌலப்யத்திற் குபயோகமான குணங்களையும் இங்கே சேர்த்துக்கொள்ள வேண்டியது. 'அழகு நிறைந்த அம்ருத ஸமுத்திரமாயும்' என்பது ஶுபாஶ்ரயமான திவ்யமங்கள விக்ரஹத்தின் குணங்களைக் குறிக்கிறது.

---

1 அதர்வஶிகோபநிஷத்.

அம்ருத ஸமுத்ரமாயும், லக்ஷ்மியை யுடையவனாயும், தாமரைப்பூக்களைப் போன்ற கண்களை யுடையவனாயும், தனக்கு ஸ்வாமியாயுமிருக்கிற என்

'லக்ஷ்மியை யுடையவனாயும்' என்பதற்கு ஸ்ரீ என்பவள் எல்லாருக்கும் ஆஸ்ரயிக்கத்தகுந்தவளல்லவா, அவளும் இவனை எப்பொழுது மாஸ்ரயித்திருக்கிறாள் என்று தாத்பர்யம். ஸ்ரீயதே - எல்லாராலும் அடையப்படுகிறாள், ஸ்ரயதே — பகவானை அடைந்திருக்கிறாள், என்றல்லவோ ஸ்ரீஎன்னும் பதம் நிர்வசனம் செய்யப்பட்டது. 'ஈச' என்னும் விகுதி எப்பொழுதும் சேர்ந்திருக்கிறாள் என்பதைக் காட்டுகிறது. 1 'பூமியும் லக்ஷ்மியும் உனக்குப் பத்னிகள்' என்றர்த்தமுள்ள ஸ்ருதிவாக்யங்களுமிருக்கின்றன. புராணத்திலும் 2 'நித்யைவைஷா ஜகந்மாதா விஷ்ணோ: ஸ்ரீ: அநபாயிநீ' என்று சொல்லப்படுகிறது. இத்தால் உபாஸிக்கத்தக்கவனாயிருக்கை அடையத்தக்கவனாயிருக்கை முதலிய எல்லாம் பத்னியோடு கூடிய பகவானுக்கே என்று தெரிவிக்கப்பட்டது. ரஹஸ்யாம்நாயம் தெரிந்தவர்களும் இந்த அர்த்தத்தையே 'எப்பொழுதும் ஸமீபத்திலிருக்கிற ஸக்தி' என்றர்த்தமுள்ள வாக்யத்தினால் சொல்லுகிறார்கள். 'தாமரைப்பூக்களைப்போன்ற கண்களையுடையவனாயும்' என்றது அவயவங்களின் ஸௌந்தர்யங்கள் எல்லாவற்றையும் குறிக்கிறது. 3 'அவனுக்கு ஸூர்யனால் மலர்த்தப்பட்ட தாமரைப்புஷ்பங்கள் எப்படியோ அப்படிக்கண்கள் இருக்கின்றன, அவனுக்கு உத் என்று திருநாமம், இவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் மேற்பட்டவன், எவன் இப்படி த்யானம் செய்கிறானோ அவன் எல்லாப் பாபங்களிலிருந்தும் மேலேபோகிறான்' என்றர்த்தமுள்ள ஸ்ருதிவாக்யத்தில் எல்லாப் பாபங்களும் விடவேண்டுமென்றாசையுடையவன் உபாஸநம் செய்ய வேண்டியதற்காகத் தாமரைப் பூக்களைப்போன்ற கண்களையுடையவனாயிருக்கிறான் என்று சொல்லப்பட்டது. 4 'சக்ஷுஷா தவ ஸௌம்யேந பூதாஸ்மி', 5 'யம் பஸ்யந்து ஸூர்யமஸூஹ்ருதஃ' என்றிவை முதலிய

1 புருஷஸூக்தம்.

2 விஷ்ணுபுராணம் - 8 - 17. ஜகந்மாதா - லோகங்களுக்குத் தாயாராகிய, ஏஷா - இந்த, ஸ்ரீ: - லக்ஷ்மி, விஷ்ணோ: - பகவானுக்கு, நித்யைவ - எப்பொழுதும் இருக்கிறவள், அநபாயிநீ - விட்டுப் பிரியாதவள்.

3 சாந்தோக்யம் - 1 - 1 - 6.

4 ராமாயணம் - ஆரண்யகாண்டம் - 74 - 13. சபரி ஸ்ரீராமனைப்பார்த்துச் சொல்லுகிறாள் - உம்முடைய மிகவும் குளிர்ந்த கடாக்ஷங்களினால் பரிசுத்தையானேன். 5 261-ம் பக்கம், 1-ம் புட்நோட்டைப் பார்க்க.

னிடத்தில் எல்லையில்லாத ப்ரியமாகிய அனுபவமாகிற மேலான பக்தியை யடைகிறான். 54

பா-அ] இதின் பலத்தைச்சொல்லுகிறார்—

பக்த்யா மாமபிஜாநாதி யாவாந் யஶ்சாஸ்மி தத்த்வத:।
ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே ததநந்தரம்॥ 55

ப—ரை] (நான்) - ய: - எப்படிப்பட்டவனாகவும், யாவாந் - எவ்வளவாகவும், அஸ்மி – ஆகிறேனே, (அப்படிப்பட்ட) மாம் - என்னை, பக்த்யா – பக்தியினால், தத்த்வத: - உள்ளபடியே, அபிஜாநாதி - அறிகிறான், மாம் - என்னை, தத்த்வத: - உள்ளபடியே, ஜ்ஞாத்வா - அறிந்து, ததநந்தரம் – அதற்குப்பிறகு, தத: – அந்தப் பக்தியினாலேயே, விஶதே - அடைகிறான் 55

பா] நான் ஸ்வரூபத்தினாலும் ஸ்வபாவங்களினாலும் எப்படிப்பட்டவனோ, குணங்களினாலும் விபூதிகளினாலும் எவ்வளவானவனோ,அப்படிப்

---

இடங்களிலும் அவனுடைய கடாக்ஷம் மிகவும் பரிசுத்தமான தென்பது சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். பக்தி உண்டாவது முதலியவற்றில் கீழ்ச் சொல்லிய தெல்லாம் ஒருதட்டாகவும் ஸ்வாமி என்பது ஒருதட்டாகவுமிருக்கிறது. இவன் ஒன்று குறைந்த எல்லாவற்றிற்கும் யஜமானனல்லவே என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்— 'தனக்கு ஸ்வாமியாயுமிருக்கிற' என்று. 54

'இதின் பலத்தைச் சொல்லுகிறார்' என்கிற இடத்தில் பரம்பரையாகவும் நேராகவுமிருக்கிற பலத்தை என்று சேர்த்துக்கொள்ளவும். கீழே சொல்லப்பட்ட லோகங்களுக்குக் காரணமாக இருக்கையை லக்ஷணமாகவுடைய எல்லாவற்றிற்கு மீஶ்வரனாகிய ஸ்வரூபத்தைச் சொல்லுகிறதென்கிற அபிப்ராயத்தினால் 'ய:' என்பதற்கு அர்த்தம் சொல்லுகிறார்—'ஸ்வரூபத்தினாலும்' என்று. சில குணங்கள் உண்டென்றும் சில கெட்ட குணங்கள் இல்லாதவனென்றும் சொல்லியிருக்கிற போதகவாக்யங்களினா லறியப்பட்ட எல்லாவித்யைகளிலும் அனுஸந்திக்கத்தகுந்த ஸ்வரூபநிரூபக தர்மங்களை உடையவனாயிருக்கை 'ஸ்வபாவங்களினாலும்' என்று சொல்லப்பட்டது. ஸ்வரூபநிரூபக தர்மங்களில்லாவிடில் ஸ்வரூபமே நிரூபிக்கப்படாமையினால் வஸ்து ஒரு ஸ்வபாவமுமில்லாததாகிவிடும் 'ஸர்வ' என்னும் பதம் ஸ்வரூபநிரூபக தர்மங்களைச் சொல்லுகிறது. 'ஸ்வரூப' என்னும் பதம் ஸௌலப்யத்தைச் சொல்லுகிறது என்றும் சிலர்சொல்லுகிறார்கள்.'யாவாந்'

பட்ட என்னை இப்படிப்பட்ட பக்தியினால் உள்ளபடியே அறிகிறான், என்னை உள்ளபடியே அறிந்து அப்படி யறிந்த பிறகு அந்தப் பக்தியினாலே யே என்னை அடைகிறான். உள்ளபடியே ஸ்வரூபம், ஸ்வபாவம், குணங்கள், விபூதிகள், இவைகளைப் பார்த்தபிறகுண்டாகிய எல்லை இல்லாத

---

என்னும் பதம் அதிகம் குறைவு என்று சொல்லத்தகுந்த ஆகாரத்தைப்பற்றியதென்பது உசிதம் என்கிற அபிப்ராயத்தினால் சொல்லுகிறார்—'குணங்களினாலும் விபூதிகளினாலும்' என்று. இவ்விடத்தில் '**குண**' என்னும்பதம்நிரூபிதஸ்வரூபவிஶேஷணங்களாகிய ஜ்ஞானம், ஶக்தி, முதலிய எல்லா ஸ்வபாவங்களையும் சொல்லுகிறது. '**யாவாந் யஶ்ச**' என்கிற பதங்களை ஶ்லோகத்தில் சொல்லியிருக்கும் வரிசையை மாற்றி வ்யாக்யானஞ் செய்தது புத்தியில் விஷயமாகும் வரிசையைக் காட்டுவதற்காக. '**தத்த்வத:**'என்பது'**யாவாந்யஶ்ச**'என்கிற இடத்தில் வேண்டியதில்லை யாகையினாலும், '**அபிஜாநாதி**' என்கிற இடத்தில் ஸம்ஶயம் முதலியவைகளை விலக்குவதற்காக வேண்டியிருக்கிறபடியினாலும் '**தத்த்வத: அபிஜாநாதி**' என்றந்வயம் சொல்லப்பட்டது. '**மாம் தத்த்வதோऽபிஜாநாதி**' என்று கீழ்ச்சொல்லிய அர்த்தத்தையே '**மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா**' என்றநுவாதம் செய்திருப்பது உபாயமாக இருந்தபோதிலும் மிகவும் போக்யமாகையினாலும் கிடைப்பது மிகவும் அரிதாகையினாலும் இதில் அதிக ப்ரீதியைக் காட்டுவதற்காக. '**தத்த்வதோஜ்ஞாத்வா**' என்பதினாலேயே ஜ்ஞான முண்டான பிறகு ஸித்தி உண்டாகிறது என்றேற்படுகிறபடியினால் காரணங்கள் பூர்த்தியாக இருக்கிறதென்பதும் ஏற்பட்டிருப்பதினாலும், '**ததநந்தரம்**'என்பதினால் ஜ்ஞானத்திற்குப் பிறகு அடைவதுண்டாகிறதென்று நேரில் சொல்லியிருக்கிறபடியினாலும், '**பக்த்யாத்வநந்யயா**' என்கிற இடங்களில் முன்பே பகவானை அடைவதில் பக்தியே காரணமென்று சொல்லி இருப்பதினாலும் '**தத:**' என்பதற்கு'பக்தியினாலேயே' என்றர்த்தம் சொல்லப்பட்டது. '**ப்ரவேஷ்டும்**'என்று முன்பு சொன்ன அர்த்தமே இங்கும் சொல்லப்படுகிறது என்று தெரிவிப்பதற்காக 'அடைகிறான்' என்று சொல்லப்பட்டது. உள்ளபடியே அறிவதும் உயர்ந்த தசையையடைந்ததாகிய பக்தியினால் அந்யோந்யாஶ்ரயதோஷமும் பக்திக்கு வெவ்வேறுவரிசை க்ரமங்கள் இருக்கிறபடியினால் பரிஹரிக்கப்பட்டது. அப்படிப்பட்ட தசையையுடைய அந்தப்பக்தியே நேரில் மோக்ஷத்திற்கு ஸாதனம் என்று சொல்லுகிறார்—'உள்ளபடியே ஸ்வரூபம், ஸ்வபாவம்' என்றாரம்பித்து. 'பார்த்த பிறகுண்டாகிய' என்று சொல்லியிருப்பதி

மேன்மையையுடைய பக்தியினால் என்னை அடைகிறானென்றர்த்தம். இவ்விடத்தில் 'ததஃ' என்பதினால் அடைவதற்குக் காரணமாகக் கீழ்ச்சொல்லப்பட்ட பக்தியே சொல்லப்படுகிறது, * 'பக்த்யா த்வநந்யயா ஶக்ய:' என்று அந்தப் பக்தியே, உள்ளபடியே பகவானை யடைவதற்குக் காரண மென்று சொல்லி யிருப்பதினால். 55

பா - அ] இப்படிப் பலம் முதலியவைகளை விட்டுப் பரமாத்மாவிற் காராதனங்களாக அனுஷ்டிக்கப்படுகிற வர்ணாஶ்ரமங்களுக்குத் தகுந்ததாகிய நித்யநைமித்திகக் கர்மங்களின் பரிபாகம் சொல்லப்பட்டது இப்பொழுது கீழ்ச்சொல்லிய விதமாக அனுஷ்டிக்கப்படுகிற காம்யகர்மங்களுக்கும் இதே பரிபாக முண்டாகிறதென்று சொல்லுகிறார்—

**ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாஶ்ரய: |**
**மத்ப்ரஸாதாதவாப்நோதி ஶாஶ்வதம் பதமவ்யயம் ||** 56

---

*...னால் 'தத்த்வதோऽபிஜாநாதி' என்பது ஸாக்ஷாத்காரத்தைச் சொல்லுகிறதென்று காட்டப்பட்டது. பரபக்தியினாலும் தத்வ ஜ்ஞானமே உண்டாக்கப்படுகிறது. அந்தஜ்ஞானமே நேரில் மோக்ஷத்திற்கு ஸாதனமென்கிற குத்ருஷ்டிகளின் மதத்தை நிராகரிக்கிறார்—'இவ்விடத்தில்' என்றாரம்பித்து. 'பக்தியே' என்பதினால் ஸாக்ஷாத்காரத்தை விலக்குகிறது. இவ்விடத்தில் பக்தி தூரத்தில் சொல்லப்பட்டது, ஜ்ஞானம் ஸமீபத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. அப்படி இருந்தபோதிலும் தூரத்தில் சொல்லப்பட்ட பக்தியைச் சொல்லுவதுசிதம். அப்படிக் கில்லாவிடில் 'தத்த்வதோ ஜ்ஞாத்வா' என்பவை முதலியவைகளோடு புனருக்திவரும். இவ்விடத்தில் ஸாக்ஷாத் காரத்திற்குக்காரணமாகிய பக்தியை யனுவாதம் செய்வதில் ப்ரயோஜனமில்லாமையினால் அதற்கு மேல்பட்ட தசையோடு கூடிய அந்தப் பக்தியே சொல்லப்படுகிறது என்று தாத்பர்யம். முன்பு சொன்ன காரணத்தைச் சொல்லுகிறார்— 'பக்த்யா த்வநந்யயா' என்றாரம்பித்து. இதின் கருத்தாவது—உபக்ரமாதிகரணந்யாயத்தையனுஸரித்து முதலில் சொல்லியிருப்பது ப்ரபலம், விசதமாகவும் அவிசதமாகவுமிருக்கிற ப்ரமாணங்களுக்குள் விசதமாகச் சொல்லியிருக்கிறதை யனுஸரித்து மற்றொன்றுக்கு அர்த்தம் சொல்ல வேண்டும்—என்பது.* 55

*கீழ் ஜ்ஞானநிஷ்டை சொல்லப்பட்டது. மேலே கர்மநிஷ்டை சொல்லப்படுகிறது என்கிற ஸந்தேஹத்தை விலக்குவதற்காக முன்பும் கர்மநிஷ்டையிலேயே சில உட்பிரிவுகளின் பரிபாகம் சொல்லப்பட்டது என்றனுவாதம் செய்துகொண்டு ஸங்கதியைச் சொல்லு*

---

* பகவத்கீதை - 11 - 54.

ப - ரை] மத்³வ்யபாஶ்ரய꞉ - என்னை ஆஶ்ரயித்தவனாய்க்கொண்டு, அதாவது என்னிடத்திலே பலாதிகளை ஸமர்ப்பித்துவிட்டு, ஸர்வ கர்மாண்யபி - எல்லாக் கர்மங்களையும், ஸதா³ - எப்பொழுதும், குர்வாண꞉ - செய்துகொண்டிருக்கிறவன், மத்ப்ரஸாதா³த் - என்னுடைய அனுக்ரஹத்தினால், ஶாஶ்வதம் - அழிவில்லாத, அவ்யயம் - குறைவில்லாத, அதாவது பூர்த்தியான, பத³ம் - அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய என்னை, அவாப்நோதி - அடைகிறான். 56

பா] கேவலம் நித்யங்களாயும் நைமித்திகங்களாயு மிருக்கிற தர்மங்களை மாத்திரமல்ல, பின்னை எதை என்னில் காம்யங்களாகிய எல்லாக் கர்மங்களையும் கர்த்ருத்வம் முதலியவைகளை என்னிடத்தில் விட்டுவிட்டுச் செய்கிறவன் என்னுடைய அனுக்ரஹத்தினால் அழிவில்லாததான அடையவேண்டிய ப்ரயோஜனமாகிய என்னைப் பூர்ணமாக அடைகிறான். 'பத்³யதே (அடையப்படுகிறது)' என்கிற வ்யுத்பத்தியினால் 'பத³ம்' என்னப் படுகிறது. 56

---

கிறார்—'இப்படி' என்றாரம்பித்து. 'பரிபாகம்' ஆவது இவ்விடத்தில் கீழிரண்டு ஶ்லோகங்களில் சொல்லப்பட்ட பரபக்தி, பரஜ்ஞானம், பரம பக்திவரையிலுள்ள பலங்கள். ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்கள் முன்பு சொல்லப்பட்ட படியினால் 'ஸர்வ கர்மாண்யபி' என்று ஶாஸ்த்ரங்களில் மறுக்கப்பட்டவைகளை அனுஷ்டானம் செய்வது பகவான் ஒருவனிடத்திலேயே பக்தியை யுடையவனாயிருக்கையை ஸ்தோத்திரம் செய்வதற்காகச் சொல்லப்படுகிறதென்று தன்னிஷ்ட ப்ரகாரம் நடப்பதில் ஆசையுடைய சங்கராசாரியர் முதலியவர்களினுடைய மதத்தை நிராகரிக்கிறார்—'இப்பொழுது' என்றாரம்பித்து. 'ஸர்வ' என்னும் பதம் இவ்விடத்தில் ஶாஸ்த்ரங்களில் விதிக்கப்பட்ட கர்மங்களிலேயேகீழ்ச்சொல்லப்படாதவைகளைச் சேர்த்துக்கொள்ளுவதற்காக என்று தாத்பர்யம். இதையே விவரிக்கிறார்—'கேவலம்' என்றாரம்பித்து. கீழ் ஶ்லோகத்தில் சொல்லப்பட்ட ப்ரயோஜனமே இவ்விடத்திலும் 'ஶாஶ்வதம்' என்கிற விஶேஷணத்தோடு கூடிய 'பத³ம்' என்னும் பதத்தினால் சொல்லப்படுகிறது என்கிற அபிப்ராயத்தினால் அதற்கு வ்யுத்பத்தி சொல்லுகிறார் —'பத்³யதே' என்றாரம்பித்து. 56

## (9) கூ. பொது - திருவங்கமாலை - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

தலையேநீவணங்காய் - தலை - மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத் தலையேநீவணங்காய். (௧)
கண்காள்காண்மின்களோ - கடல் - நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக் கண்காள்காண்மின்களோ. (௨)
செவிகாள்கேண்மின்களோ - சிவ - னெம்மிறைசெம்பவள
எரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதுஞ் செவிகாள்கேண்மின்களோ. (௩)
மூக்கேநீமுரலாய் - முது - காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை மூக்கேநீமுரலாய். (௪)
வாயேவாழ்த்துகண்டாய் - மத - யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை வாயேவாழ்த்துகண்டாய். (௫)
நெஞ்சேநீநினையாய் - நிமிர் - புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை நெஞ்சேநீநினையாய். (௬)
கைகாள்கூப்பித்தொழீர் - கடி - மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக் கைகாள்கூப்பித்தொழீர். (௭)
ஆக்கையாற்பயனென் - அரன் - கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ் ஆக்கையாற்பயனென். (௮)
கால்களாற்பயனென் - கறைக் - கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக் கால்களாற்பயனென். (௯)
உற்றாராருளரோ - வுயிர் - கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக் குற்றாராருளரோ. (௰)
இறுமாந்திருப்பன்கொலோ - வீசன் - பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங் கிறுமாந்திருப்பன்கொலோ. (௧௧)
தேடிக்கண்டுகொண்டேன் - திரு - மாலொடுநான்முகனும்
தேடித்தேடொணாத்தேவனையென்னுளே தேடிக்கண்டுகொண்டேன். (௧௨)

திருச்சிற்றம்பலம்.

## (10) ௰. திருவதிகை - வீரட்டானம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

முளைக்கதிரிளம்பிறைமுழுகவெள்ளநீர்
வளைத்தெழுசடையினர்மழலைவீணையர்
திளைத்ததோர்மான்மழுக்கையர்செய்யபொன்
கிளைத்துழித்தோன்றிடுங்கெடிலவாணரே.

## ௯. பொது - திருவங்கமாலை - பண் - சாதாரி.

திருச்சிற்றம்பலம்

வணஙகாய மாலைதலைக்கணிந்து
தலையாலேபலிதேருந்தலைவனைத் தலையேநீவணங்காய். (௧)
கண்காள்காண்மின்களோ - கடல் - நஞ்சுண்டகண்டன்றன்னை
எண்டோள்வீசிநின்றாடும்பிரான்றன்னைக் கண்காள்காண்மின்களோ. (௨)
செவிகாள்கேண்மின்களோ - சிவ - னெம்மிறைசெம்பவள
எரிபோன்மேனிப்பிரான்றிறமெப்போதும் செவிகாள்கேண்மின்களோ. (௩)
மூக்கேநீமுரலாய் - முது - காடுறைமுக்கணனை
வாக்கேநோக்கியமங்கைமணாளனை மூக்கேநீமுரலாய். (௪)
வாயேவாழ்த்துகண்டாய் - மத - யானையுரிபோர்த்துப்
பேய்வாழ்காட்டகத்தாடும்பிரான்றன்னை வாயேவாழ்த்துகண்டாய். (௫)
நெஞ்சேநீநினையாய் - நிமிர் - புன்சடைநின்மலனை
மஞ்சாடுமலைமங்கைமணாளனை நெஞ்சேநீநினையாய். (௬)
கைகாள்கூப்பித்தொழீர் - கடி - மாமலர்தூவிநின்று
பைவாய்ப்பாம்பரையார்த்தபரமனைக் கைகாள்கூப்பித்தொழீர். (௭)
ஆக்கையாற்பயனென் - அரன் - கோயில்வலம்வந்து
பூக்கையாலட்டிப்போற்றியென்னாதவிவ் ஆக்கையாற்பயனென். (௮)
கால்களாற்பயனென் - கறைக் - கண்டனுறைகோயில்
கோலக்கோபுரக்கோகரணஞ்சூழாக் கால்களாற்பயனென். (௯)
உற்றாராருளரோ - வுயிர் - கொண்டுபோம்பொழுது
குற்றாலத்துறைகூத்தனல்லானமக் குற்றாராருளரோ. (௧௦)
இறுமாந்திருப்பன்கொலோ - வீசன் - பல்கணத்தெண்ணப்பட்டுச்
சிறுமானேந்திதன்சேவடிக்கீழ்ச்சென்றங் கிறுமாந்திருப்பன்கொலோ. (௧௧)
தேடிக்கண்டுகொண்டேன் - திரு - மாலொடுநான்முகனும்
தேடித்தேடொணாத்தேவனையென்னுளே தேடிக்கண்டுகொண்டேன். (௧௨)

றம்பலம்.

## ௧௦. கை - வீரட்டானம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

முளைக்கதிரிளம்பிறைமூழ்கவெள்ளநீர்
வளைத்தெழுசடையினர்மழலைவீணையர்
திளைத்ததோர்மான்மழுக்கையர்செய்யபொன்
கிளைத்துழித்தோன்றிடுங்கெடிலவாணரே.

ஏறினரே.
கூறினர்கூறினர்வேதமங்கமும்
ஆறினாறிடுசடையர்பக்கமும்
ஈறினவுடையினர்கெடிலவாணரே. (௨)

விடந்திகழ்கெழுதருமிடற்றர்வெள்ளைநீ
றுடம்பழகெழுதுவர்முழுதும்வெண்ணிலாப்
படர்ந்தழகெழுதருசடையிற்பாய்புனல்
கிடந்தழகெழுதியகெடிலவாணரே. (௩)

விழுமணியயிலெயிற்றம்புவெய்யதோர்
கொழுமணிநெடுவரைகொளுவிக்கோட்டினார்
செழுமணிமிடற்றினர்செய்யர்வெய்யதோர்
கெழுமணியரவினர்கெடிலவாணரே. (௪)

குழுவினர்தொழுதெழுமடியர்மேல்வினை
தழுவினகழுவுவர்பவளமேனியர்
மழுவினர்மான்மறிக்கையர்மங்கையைக்
கெழுவினயோகினர்கெடிலவாணரே. (௫)

அங்கையிலனலெரியேந்தியாறெனும்
மங்கையைச்சடையிடைமணப்பர்மால்வரை
நங்கையைப்பாகமுநயப்பர்தென்றிசைக்
கெங்கையதெனப்படுங்கெடிலவாணரே. (௬)

கழிந்தவர்தலைகலனேந்திக்காடுறைந்
திழிந்தவரொருவரென்றெள்கவாழ்பவர்
வழிந்திழிமதுகரமிழற்றமந்திகள்
கிழிந்ததேனுகர்தருங்கெடிலவாணரே. (௭)

கிடந்தபாம்பருகுகண்டரிவைபேதுறக்
கிடந்தபாம்பவளையோர்மயிலென்றையுறக்
கிடந்தநீர்ச்சடைமிசைப்பிறையுமேங்கவே
கிடந்துதானகுதலைக்கெடிலவாணரே. (௮)

வெறியுறுவிரிசடைபுரளவீசியோர்
பொறியுறுபுலியுரியரையதாகவும்
நெறியுறுகுழலுமைபாகமாகவும்
கிறிபடவுழிதர்வர்கெடிலவாணரே. (௯)

பூண்டதேரரக்கனைப்பொருவின்மால்வரைத்
வைபடவடர்த்ததா
ஈண்டுநீர்க்கமலவாய்மேதிபாய்தரக்
கீண்டுதேன்சொரிதருங்கெடிலவாணரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## கக. பொது - நமச்சிவாயப்பதிகம் - பண் - காந்தாரம்.

திருச்சிற்றம்பலம்

சொற்றுணைவேதியன்சோதிவானவன்
பொற்றுணைதிருந்தடிபொருந்தக்கைதொழக்
கற்றுணைப்பூட்டியோர்கடலிற்பாய்ச்சினும்
நற்றுணையாவதுநமச்சிவாயவே. (க)

பூவினுக்கருங்கலம்பொங்குதாமரை
ஆவினுக்கருங்கலமரனஞ்சாடுதல்
கோவினுக்கருங்கலங்கோட்டமில்லது
நாவினுக்கருங்கலநமச்சிவாயவே. (உ)

உண லவையொன்றுமில்லையாம்
பண் ப்பயின்றபாவத்தை
வே. (௩)

இடுக்கண்பட்டிருக்கினுமிரந்தியாரையும்
விடுக்கிற்பிரானென்றுவினவுவோமல்லோம்
அடுக்கற்கீழ்க்கிடக்கினுமருளினாற்றற
நடுக்கத்தைக்கெடுப்பதுநமச்சிவாயவே. (ச)

வெந்தநீறருங்கலம்விரதிகட்கெலாம்
அந்தணர்க்கருங்கலமருமறையாறங்கம்
திங்களுக்கருங்கலந்திகழுநீண்முடி
நங்களுக்கருங்கலநமச்சிவாயவே.

சலமிலன்சங்கரன்சார்ந்தவர்க்கலால்
நலமிலனாடொறுநல்குவானலன்
குலமிலராகினுங்குலத்திற்கேற்பதோர்
நலமிகக்கொடுப்பதுநமச்சிவாயவே. (சு)

வீடினாருலகினில்விழுமியதொண்டர்கள்
கூடினாரந்நெறிகூடச்சென்றலும்
ஓடினேனோடிச்சென்றுருவங்காண்டலும்
நாடினேனாடிற்றுநமச்சிவாயவே.

இல்லகவிளக்கதுவிருள்கெடுப்பது
சொல்லகவிளக்கதுசோதியுள்ளது
பல்லகவிளக்கதுபலருங்காண்பது
நல்லகவிளக்கதுநமச்சிவாயவே. (அ)

முன்னெறியாகியமுதல்வன்முக்கணான்
தன்னெறியேசரணாதறிண்ணமே
அந்நெறியேசென்றங்கடைந்தவர்க்கெலாம்
நன்னெறியாவதுநமச்சிவாயவே. (௯)

மாப்பிணைதழுவியமாதொர்பாகத்தன்
பூப்பிணைதிருந்தடிபொருந்தக்கைதொழு
நாப்பிணைதழுவியநமச்சிவாயப்பத்
தேத்தவல்லார்தமக்கிடுக்கணில்லையே. (௧௦)

றம்பலம்.

சமணர்கள் கற்றூணிற்கட்டிக் கடலிலே வீழ்த்தினபோது ஓதியது.

## ௧௨. திருப்பழனம் - பண் - பழந்தக்கராகப்.



திருச்சிற்றம்பலம்

சொன்மாலைபயில்கின்றகுயிலினங்காள்சொல்லீரே
பன்மாலைவரிவண்டுபண்மிழற்றும்பழனத்தான்
முன்மாலைநகுதிங்கண்முகிழ்விளங்குமுடிச்சென்னிப்
பொன்மாலைமார்பனென்புதுநலமுண்டிகழ்வானோ. (௧)

நலகாள்

பண்டரங்கவேடத்தான்பாட்டோவாப்பழனத்தான்
வண்டுலாந்தடமூழ்கிமற்றவனென்றளிர்வண்ணம்
கொண்டநாடானறிவான்குறிக்கொள்ளாதொழிவானோ. (௨)

பனைக்கைம்மாவுரிபோர்த்தான்பலர்பாடும்பழனத்தான்
நினைக்கின்றநினைப்பெல்லாமுரையாயோநிகழ்வண்டே
சுனைக்குவளைமலர்க்கண்ணாள்சொற்றூதாய்ச்சோர்வாளே. (௩)

புதியையாயினியையாம்பூந்தென்றல்புறங்காடு
பதியாவதிதுவென்றுபலர்பாடும்பழனத்தான்
மதியாதார்வேள்விதனைமதித்திட்டமதிக்கங்கை

(௪)

மண்பொருந்திவாழ்பவர்க்குமாதீர்த்தவேதியர்க்கும்
விண்பொருந்துதேவர்க்கும்வீடுபேறாய்நின்றானைப்
பண்பொருந்தவிசைபாடும்பழனஞ்சேரப்பனையென்

(௫)

* மனைக்காஞ்சியென்பது வீட்டுக்குச் சமீபத்திலிருக்குங் காஞ்சிமரம்.

பொங்கோதமால்கடலிற்புறம்புறம்போயிரைதேரும்
செங்கால்வெண்மடநாராய்செயற்படுவதறிவேனுன்
அங்கோலவளைகவர்ந்தானணிபொழில்சூழ்பழனத்தான்
தங்கோலநறுங்கொன்றைத்தாரருளாதொழிவானே. (சு)

துணையாரமுயங்கிப்போய்த்துறைசேருமடநாராய்
பணையாரவாரத்தான்பாட்டோவாப்பழனத்தான்
கணையாரவிருவிசும்பிற்கடியாணம்பொடிசெய்த
இணையாரமார்பனென்னெழினலமுண்டிகழ்வானே. (எ)

* கூவைவாய்மணிவரன்றிக்கொழித்தோடும் † காவிரிப்பூம்
பாவைவாய்முத்திலங்கப்பாய்ந்தாடும்பழனத்தான்
கோவைவாய்மலைமகள்கோன்கொல்லேற்றின்கொடியாடைப்
பூவைகாண்மழலைகாள்போகாதபொழுதுளதே. (அ)

புள்ளிமான்பொறியரவப்புள்ளுயர்த்தான்மணிநாகப்
பள்ளியான்றொழுதேத்தவிருக்கின்றபழனத்தான்
உள்குவார்வினைதீர்க்குமென்றுரைப்பருலகெல்லாம்
கள்ளியேனானிவற்கென்கனவளையுங்கடவேனே. (கூ)

வஞ்சித்தென்வளைகவர்ந்தான்வாரானேயாயிடினும்
பஞ்சிக்காற்சிறகன்னம்பரந்தார்க்கும்பழனத்தான்
அஞ்சிப்போய்க்கலிமெலியவழலோம்புமப்பூதி
குஞ்சிப்பூவாய்நின்றசேவடியாய்கோடியையே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆபச்சகாயர்; முதல்வி - பெரியநாயகியம்மை.

---

## 13 க௩. திருவையாறு - பண் - பழந்தக்கராகம்.

திருச்சிற்றம்பலம்

விடகிலேனடிநாயேன்வேண்டியக்காலியாதொன்றும்
இடைகிலேனமணர்கடமறவுரைகேட்டலமந்தேன்
தொடர்கின்றேனுன்னுடையதூமலர்ச்சேவடிகாண்பான்
அடைகின்றேனையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (க)

* கூவைவாய்மணி என்பதற்குப் பூமியினிடத்தில் பொருந்திய முத்துக்கள் - அவை யாவன-யானைக்கொம்பு-பன்றிக்கொம்பு-நாகம்-பசுவின்பால்-மூங்கிற்கணு-கொக்கின்கழுத்து - கற்புள்ள மாதர்கண்டம் என்னுமிவ்விடங்களி லுண்டாயிருக்கு முத்துக்களாம்.

† காவிரிப்பூம்பாவையாய் முத்து என்பது நீர்முத்து எனக்கொள்க. அவை - சங்கு - இப்பி - மீன் - தாமரைமலர் என்னு மிவைகளிலுண்டாகு முத்துக்கள். இதனை "சிறைகொள் நீர்த்தரளத் திரல்கொணித்திலத்த" எனத் திருமாளிகைத்தேவர் அருளிச்செய்த திருவிசைப்பா, உ - வது பதிகம் ௫ - வது திருப்பாடலானுமுணர்க.

செம்பவளத்திருவுருவர்திகழ்சோதிக்குழைக்காதர்
கொம்பமருங்கொடிமருங்கிற்கோல்வளையாளொருபாகர்
வம்பவிழுமலர்க்கொன்றைவளர்சடைமேல்வைத்துகந்த
அம்பவளஐயாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௨)

நணியானேசேயானேநம்பானேசெம்பொன்னின்
துணியானேதோலானேசுண்ணவெண்ணீற்றானே
மணியானேவானவர்க்குமருந்தாகிப்பிணிதீர்க்கும்
அணியானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௩)

ஊழித்தீயாய்நின்றுபுல்குவாருள்ளத்தாய்
வாழித்தீயாய்நின்றாய்வாழ்த்துவார்வாயானே
பாழித்தீயாய்நின்றாய்படர்சடைமேற்பனிமதியம்
ஆழித்தீயையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௪)

சடையானேசடையிடையேதவழுந்தண்மதியானே
விடையானேவிடையேறிப்புரமெரித்தவித்தகனே
உடையானேயுடைதலைகொண்டூரூரன்பலிக்குழலும்
அடையானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௫)

நீரானேதீயானேநெதியானேகதியானே
ஊரானேயுலகானேயுடலானேயுயிரானே
பேரானேபிறைசூடிபிணிதீர்க்கும்பெருமானென்
ஆராதஐயாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௬)

கண்ணானாய்மணியானாய்கருத்தானாய*அருத்தானாய்
எண்ணானாயெழுத்தானாயெழுத்தினுக்கோரியல்பானாய்
விண்ணானாய்விண்ணிடையேபுரமெரித்தவேதியனே
அண்ணானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௭)

மின்னானாயுருவானாய்வேதத்தின்பொருளானாய்
பொன்னானாய்மணியானாய்பொருகடல்வாய்முத்தானாய்
நின்றானாயிருவர்க்குங்காண்பரியநிமிர்சோதி
அன்னானையையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௮)

முத்திசையும்புனற்பொன்னிமொய்பவளங்கொழித்துந்தப்
பத்தர்பலர்நீர்மூழ்கிப்பலகாலும்பணிந்தேத்த
எத்திசையும்வானவர்களெம்பெருமானெனவிறைஞ்சும்
அத்திசையாமையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௯)

* அருத்தானையென்பதற்கு - உண்ணப்படும் வஸ்துக்களாயினை எனப் பொருள்படு

கரைவரைசூழ்கடலிலங்கைக்கோமானைக்கருத்தழியத்
திருவிரலாலுதகரணஞ்செய்துகந்தசிவமூர்த்தி
பெருவரைசூழ்வையகத்தார்பேர்நந்தியென்றேத்தும்
அருவரைசூழையாறர்க்காளாய்நானுய்ந்தேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௧௪. பொது - தசபுராணம் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

பருவரையொன்றுசுற்றியரவங்கைவிட்டவிமையோரிரிந்துபயமாய்த்
திருநெடுமானிறத்தையடுவான்விசும்புசுடுவானெழுந்தவிசைபோய்
பெருகிடமற்றிதற்கொர்பிதிகாரமொன்றையருளாய்பிரானேயெனலும்
அருள்கொடுமாவிடத்தையெரியாமலுண்டவவனண்டரண்டரரசே. (௧)

நிரவொலிவெள்ளமண்டிநெடுவண்டமூடநிலநின்றுதம்பமதுவப்
பரமொருதெய்வமெய்தவிதுவொப்பதில்லையிருபாலுநின்றுபணியப்
பிரமனுமாலுமேலைமுடியோடுபாதமறியாமைநின்றபெரியோன்
பரமுதலாயதேவர்சிவனாயமூர்த்தியவனாநமக்கொர்சரணே. (௨)

காலமுநாள்களூழிபடையாமுனேகவுருவாகிமூவருருவில்
சாலவுமாகிமிக்கசமயங்களாறினுருவாகிநின்றதழலோன்
ஞாலமுமேலைவிண்ணொடுலகேழுமுண்டுகுறளாயொராலினிலைமேல்
பாலனுமாயவற்கொர்பரமாயமூர்த்தியவனாநமக்கொர்சரணே. (௩)

நீடுயர்மண்ணும்விண்ணுநெடுவேலைகுன்றொடுலகேழுமெங்குநலியச்
சூடியகையராகியிமையோர்கணங்கடுதியோதிநின்றுதொழலும்
ஓடியதாருகன்றனுடலம்பிளந்துமொழியாதகோபமொழிய
ஆடியமாநடத்தெமனலாடிபாதமவையாநமக்கொர்சரணே. (௪)

'யந,
தலைநலிவஞ்சியோடியரியோடுதேவரரணம்புகத்தனருளால்
ரவநகைநா 'மா
மலைசிலைகையிலொல்கவளைவித்தவள்ளலவனாநமக்கொர்சரணே.

நீலநன்மேனிசெங்கண்வளைவெள்ளெயிற்றனெரிகேசனேடிவருநாள
காலநன்மாலைகொண்டுவழிபாடுசெய்யுமளவின்கண்வந்துகுறுகிப்
பாலனையோடவோடப்பயமெய்துவித்தவுயிர்வவ்வுபாசம்விடுமக்
காலனைவீடுசெய்தகழல்போலுமண்டர்தொழுதோதுசூடுகழலே. (௬)

உயர்தவமிக்கதக்கனுயர்வேள்விதன்னிலவியுண்ணவந்தவிமையோர்
பயமுறுமெச்சனங்கிமதியோனுமுற்றபடிகண்டுநின்றுபயமாய்
அயனொடுமாலுமெங்களறியாமையாதிகமியென்றிறைஞ்சியகலச்
சயமுறுதன்மைகண்டதழல்வண்ணனெந்தைகழல்கண்டுகொள்கைசரசே (௭)

மங்கை ... யாடிநயனத்தலங்கள்கரமா
உலகினையேழுமுற்றுமிருண்மூடமூடவிருளோடநெற்றியொருக
அலர்தரவஞ்சிமற்றைநயனங்கைவிட்டுமடவாளிறைஞ்சமதிபோல்
அலர்தருசோதிபோலவலர்வித்தமுக்கணவனெமக்கோர்சரணே. (௮)

கழைபடுகாடுதென்றல்குயில்கூவவஞ்சுகணையோனணைந்துபுகலும்
மழைவடிவண்ணனெண்ணிமகவோனைவிட்டமலரானதொட்டமதனன்
எழில்பொடிவெந்துவீழவிமையோர்கணங்களெரியென்றிறைஞ்சிபகலத்
தழல்படுநெற்றியொற்றைநயனஞ்சிவந்ததழல்வண்ணனெந்தைசரணே. (௯)

தடமலராயிரங்கள்குறைவொன்றதாகநிறைவென்றுதன்கணதனால்
உடன்வழிபாடுசெய்ததிருமாலையெந்தைபெருமானுகந்துமிகவும்
சுடரடியான்முயன்றுசுழல்வித்தரக்கனிதயம்பிளந்தகொடுமை
அடல்வலியாழிபாழியவனுக்களித்தவவனெமக்கோர்சரணே. (௧௦)

கடுகியதேர்செலாதுகயிலாயமீதுகருதேலுன்வீரமொழிநீ
முடுகுவதன்றுதன்மமெனநின்றுபாகன்மொழிவானைநன்றுமுனியா
விடுவிடுவென்றுசென்றுவிரைவுற்றரக்கன்வரையுற்றெடுக்கமுடிதோள்
நெடுநெடுவிற்றுவீழவிரலுற்றபாதநினைவுற்றதென்றன்மனனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௧௫. பொது - பாவநாசத்திருப்பதிகம் - பண் - பழம்பஞ்சுரம்.

திருச்சிற்றம்பலம்

பற்றற்றார்சேர்பழம்பதியைப்பாசூர்நிலாயபவளத்தைச்
சிற்றம்பலத்தெந்திகழ்கனியைத்தீண்டற்கரியதிருவுருவை
*வெற்றியூரில்விரிசுடரைவிமலர்கோனைத்திரைசூழ்ந்த
ஒற்றியூரெமுத்தமனையுள்ளத்துள்ளேவைத்தேனே. (௧)

ஆனைக்காவிலணங்கினையாரூர்நிலாயவம்மானைக்
கானப்பேரூர்க்கட்டியைக்கானூர்முளைத்தகரும்பினை
வானப்பேரார்வந்தேத்தும்வாய்மூர்வாழும்வலம்புரியை
மானக்கயிலைமழகளிற்றைமதியைச்சுடரைமறவேனே. (௨)

மதியங்கண்ணிஞாயிற்றைமயக்கந்தீர்க்குமருந்தினை
அதிகைமூதூரரசினையையாறமர்ந்தவையனை
விதியைப்புகழைவானோர்கள்வேண்டித்தேடும்விளக்கினை
நெதியைஞானக்கொழுந்தினைநினைந்தேற்குள்ளநிறைந்ததே. (௩)

* வெற்றியூரென்பது - வைப்புத்தலத்திலொன்று.

புறம்பயத்தெம்முத்தினைப்புகலூரிலா
*உறந்தையோங்குசிராப்பள்ளியுலகம்விளக்குஞாயிற்றைக்
கறங்குமருவிக்கழுக்குன்றிற்காண்பார்காணுங்கண்ணானை
கைவீரட்டத்தரிமானேற்றையடைந்( (௪)

கோலக்காவிற்குருமணியைக் † குடமூக்குறையும்விடமுண்ணியை
ஆலங்காட்டிலந்தேனையமரர்சென்னியாய்மலரைப்
பாலிற்றிகழும்பைங்கனியைப்பராய்த்துறையெம்பசும்பொன்னைச்
சூலத்தானைத்துணையிலியைத்தோளைக்குளிரத்தொழுதேனே. (௫)

மருகலுறைமாணிக்கத்தைவலஞ்சுழியினம்மாலையைக்
கருகாவூரிற்கற்பகத்தைக்காண்டற்கரியகதிரொளியைப்
பெருவேளூரெம்பிறப்பிலியைப்பேணுவார்கள்பிரிவரிய
திருவாஞ்சியத்தெஞ்செல்வனைச்சிந்தையுள்ளேவைத்தேனே. (௬)

எழிலாரிராசசிங்கத்தையிராமேச்சுரத்தெமெழிலேற்றைக்
குழலார்கோதைவரைமார்பிற்குற்றாலத்தெங்கூத்தனை
நிழலார்சோலைநெடுங்களத்துநிலாயநித்தன்மணாளனை

(௭)

காட

சோலைத்துருத்திநகர்மேயசுடரிற்றிகழுந்துளக்கிலியை
மேலைவானோர்பெருமானைவிருப்பால்விழுங்கியிட்டேனே. (௮)

சோற்றுத்துறையெஞ்சோதியைத்துருத்திமேயதூமணியை
ஆற்றிற்பழனத்தம்மானையாலவாயெம்மருமணியை
நீற்றிற்பொலிந்தநிமிர்திண்டோணெய்த்தானத்தெந்நிலாச்சுடரைத்
தோற்றக்கடலையடலேற்றைத்தோளைக்குளிரத்தொழுதேனே. (௯)

புத்தூருறையும்புநிதனைப்பூவணத்தெம்போரேற்றை
வித்தாய்மிழலைமுளைத்தானைவேள்விக்குடியெம்வேதியனைப்
பொய்த்தார்புரமூன்றெரித்தானைப் § பொதியின்மேயபுராணனை
வைத்தேனென்றன்மனத்துள்ளே ○ மாத்தூர்மேயமருந்தையே. (௧௦)

---

* உறந்தையென்பது - உறையூர். இதுவே திருமூக்கீச்சரமென்னுந்தலம்.

† குடமூக்கென்பது - கும்பகோணம்.

§ பொதியில் என்பது பொதிகைமலை, இது வைப்புத்தலத்திற் சேர்ந்தது. இங்களூர் பிடவூர் கோவந்தபுத்தூர் குருக்கேத்திரம் பொதிகைமலை யென்னுஞ் செய்யுளானு முணர்க. தனியே பதிகமில்லாமல் இவ்வாறு சில பதிகங்களில் வைத்துச் சொல்லி யிருப்பதினால் வைப்புதலமென்று முன்னோர்கள் ஏற்பாடு செய்திருக்கிறார்கள். தேவர்களுக்கு முனிவர்களுக்கும் பொதுஸ்தானமா யிருப்பதினால் பொதுவில் எனப் பெயர் பெற்ற மலையானது பொதியில் பொதியம் பொதிகை என மருவிகின்றது. இந்தத் தலமுதல் அநேகந் தலங்களுக் கிருந்த பதிகங்கள் இலமாய் விட்டன. அவைகளில் நூற்றெண்பது தலம் வைப்புத்தலமென்று சொல்லப்படுகின்றது.

○ மாத்தூரென்பது - திருவாமாத்தூர்.

முந்தித்தானேமுளைத்தானைமூரிவெள்ளேறூர்ந்தானை
அந்திச்செவ்வான்படியானையரக்கனாற்றலழித்தானைச்
சிந்தைவெள்ளப்புனலாட்டிச்செஞ்சொன்மாலையடிசேர்த்தி
எந்தைபெம்மானென்னெம்மானென்பார்பாவநாசமே. (கக)

திருச்சிற்றம்பலம்

---

## கரு. திருப்புகலூர் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

செய்யர்வெண்ணூலர்கருமான்மறிதுள்ளும்
கையர்கனைகழல்கட்டியகாலினர்
மெய்யர்மெய்ந்நின்றவர்க்கல்லாதவர்க்கென்றும்
பொய்யர்புகலூர்ப்புரிசடையாரே. (க)

மேகநலூர்தியர்மின்போன்மிளிர்சடைப்
பாகமதிநுதலாளையொர்பாகத்தர்
நாகவளையினர்நாகவுடையினர்
போகர்புகலூர்ப்புரிசடையாரே. (உ)

பெருந்தாழ்சடைமுடிமேற்பிறைசூடிக்
கருந்தாழ்குழலியுந்தாமுங்கலந்து
திருந்தாமனமுடையார்திறத்தென்றும்
பொருந்தார்புகலூர்ப்புரிசடையாரே. (ங)

அக்காரணிவடமாகத்தர்நாகத்தர்
நக்காரிளமதிக்கண்ணியர்நாடொறும்
உக்கார்தலைபிடித்துண்பலிக்கூர்தொறும்
புக்கார்புகலூர்ப்புரிசடையாரே. (ச)

ஆர்த்தாருயிரடுமந்தகன்றன்னுடல்
பேர்த்தார்பிறைநுதற்பெண்ணினல்லாளுட்கக்
கூர்த்தார்மருப்பிற்கொலைக்களிற்றீருரி
போர்த்தார்புகலூர்ப்புரிசடையாரே.

உதைத்தார்மறலியுருளவொர்காலால்
சிதைத்தார்திகழ்தக்கன்செய்தநல்வேள்வி
பதைத்தார்சிரங்கரங்கொண்டுவெய்யோன்கண்
புதைத்தார்புகலூர்ப்புரிசடையாரே. (சு)

தூமன்சுறவந்துதைந்ததம்நாடியுடைக்
காமன்கணைவலங்காய்ந்தமுக்கண்ணினர்
சேமநெறியினர்சீரையுடையவர்

யர்கடிமதின்மூன்றும்
தெரிந்தார்கணைகள்செழுந்தழலுண்ண
புரிந்தார்புகலூர்ப்புரிசடையாரே. (அ)

ஈண்டாரழலினிருவருங்கைதொழ
நீண்டார்நெடுந்தடுமாற்றநிலையஞ்ச
மாண்டார்தமென்புமலர்க்கொன்றைமாலையும்
பூண்டார்புகலூர்ப்புரிசடையாரே. (கூ)

க
டிபத்தும்
மறு
பொ 'சடையாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - அக்கினீசுவரர்; முதல்வி - கருந்தார்குழலியம்மை.

## கஎ. திருவாரூர் - அரநெறி பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

காத்தீபுகினுமெமக்கொருதீதிலை
தெத்தேயெனமுரன்றெம்முளுழிதர்வர்
ம்வேல்பிடித் (க)

வீரமும்பூண்பர்விசயனொடாயதொர்
தாரமும்பூண்பர்தமக்கன்புபட்டவர்
பாரமும்பூண்பர்நற்பைங்கண்மிளிரர
வாரமும்பூண்பரரநெறியாரே. (உ)

தஞ்சவண்ணத்தர்சடையினர்தாமுமோர்
வஞ்சவண்ணத்தர்வண்டார்குழலாளொடும்
துஞ்சவண்ணத்தர்துஞ்சாதகண்ணார்தொழும்
அஞ்சவண்ணத்தரரநெறியாரே. (ங)

ன
மிழித்தனர்கங்கையையேத்தினர்பாவம்
கழித்தனர்கல்சூழ்கடியரண்மூன்றும்
அழித்தனாரூரரநெறியாரே.

* உழிதர்வர்-சஞ்சரிப்பர் உழிதருவர் என்றபாலது உழிதர்வர் என விகாரமாயிற்.

துற்றவர்வெண்டலையிற்சுருள்கோவணம்
தற்றவர்தம்வினையானவெலாமற
அற்றவராரூரநெறிகைதொழ
உற்றவர்தாமொளிபெற்றனர்தாமே. (௫)

கூடரவத்தர்குரற்கிண்கிணியடி
நீடரவத்தர்முன்மாலையிடையிருள்
பாடரவத்தர்பணமஞ்சுடைவிரித்
தாடரவத்தரரநெறியாரே. (௬)

கூடவல்லார்குறிப்பில் உமையாளொடும்
பாடவல்லார்பயின்றந்தியுஞ்சந்தியும்
ஆடவல்லார்திருவாரூரரநெறி
நாடவல்லார்வினைவீடவல்லாரே. (௭)

பாலைக்குபனிவெண்மதிபைங்கொன்றை
மாலையுங்கண்ணியுமாவனசேவடி
காலையுமாலையுங்கைதொழுவார்மனம்
ஆலயமாரூரரநெறியார்க்கே. (௮)

முடிவண்ணம்வானமின்வண்ணந்தம்மார்பின்
பொடிவண்ணந்தம்புகழூர்தியின்வண்ணம்
படிவண்ணம்பாற்கடல்வண்ணஞ்செஞ் * ஞாயி
றடிவண்ணமாரூரநெறியார்க்கே. (௯)

பொன்னவில்புன்சடையானடியின்னிழல்
இன்னருள்சூடியெள்காதுமிராப்பகல்
மன்னவாகின்னரர்வானவர்தாந்தொழும்
அன்னவராரூரநெறியாரே. (௧௦)

○ பொருண்மன்னனைப்பற்றிப்புட்பகங்கொண்ட
மருண்மன்னனையெற்றிவாளுடனீந்து
கருண்மன்னுகண்டங்கறுக்கநஞ்சுண்ட
அருண்மன்னராரூரநெறியாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வன்மீகநாதர்; முதல்வி - அல்லியங்கோதையம்மை.

18

## ௧௮. பொது - விடந்தீர்த்ததிருப்பதிகம் - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

கொலாமவர்
யொன்றுகொலாமுயரும்மதிசூடுவர்

* ஞாயிறு அடிவண்ணம் என்பது உதயகால சூரியனது நிறம் எனப் பொருள் கொள்க. ○ பொருள்மன்னன் என்பது குபேரன்.

ஒன்றுகொலாமிடுவெண்டலைகையது
ஒன்றுகொலாமவரூர்வதுதானே.

இரண்டுகொலாமிமையோர்தொழுபாதம்
இரண்டுகொலாமிலங்குங்குழைபெண்ணாண்
இரண்டுகொலாமுருவஞ்சிறுமான்மழு
இரண்டுகொலாமவரெய்தினதாமே. (௨)

மூன்றுகொலாமவர்கண்ணுதலாவன
மூன்றுகொலாமவர்சூலத்தின்மொய்யிலை

மூன்றுகொலாம்புரமெய்தனர்தாமே. (௩)

நாலுகொலாமவர்தம்முகமாவன
நாலுகொலாஞ்சனனம்முதற்றோற்றமும்
நாலுகொலாமவரூர்தியின்பாதங்கள்
நாலுகொலாமறைபாடினதாமே. (௪)

அஞ்சுகொலாமவராடரவின்படம்
அஞ்சுகொலாமவர்வெல்புலனாவன
அஞ்சுகொலாமவர்காயப்பட்டான்கணை
அஞ்சுகொலாமவராடினதாமே. (௫)

கொலாமவரங்கம்படைத்தன
கொலாமவர்தம்மகனார்முகம்
ஆறுகொலாமவர்தார்மிசைவண்டின்கால்
காலாஞ்சுவையாக்கினதாமே. (௬)

ஏழுகொலாமவரூழிபடைத்தன
ஏழுகொலாமவர்கண்டவிருங்கடல்
ஏழுகொலாமவராளுமுலகங்கள்
ஏழுகொலாமிசையாக்கினதாமே. (௭)

எட்டுக்கொலாமவரீறில்பெருங்குணம்
எட்டுக்கொலாமவர்சூடுமினமலர்
எட்டுக்கொலாமவர்தோளிணையாவன
எ மே. (௮)

ஒன்பதுபோலவர்வாசல்வகுத்தன
ஒன்பதுபோலவர்மார்பினினூலிழை
ஒன்பதுபோலவர்கோலக்குழற்சடை
ஒன்பதுபோலவர்பாரிடந்தானே. (௯)

* வாய்வுதேவன் பாணத்தின் ஈர்க்கும் விஷ்ணு ல்பூட்டிய அலகும் தேவன் அந்த அலகின் முனையில் கூர்மையுமாயிரு யென்றருளிச்செய்தது.

பத்துக்கொலாமவர்பாம்பின்கண்பாம்பின்பல்
பத்துக்கொலாமெயிறுநெரிந்துக்கன
பத்துக்கொலாமவர்காயப்பட்டான்றலை
பத்துக்கொலாமடியார்செய்கைதானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இது அப்பூதிநாயனார் புத்திரரைத் தீண்டியவிஷம் நீங்கும்படி அருளிச்செய்தது.

## ௧௬. பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

சூலப்படையானைச்சூழாகவீழருவிக்
கோலத்தோட்டுங்குமஞ்சேர்குன்றெட்டுடையானைப்
பாலொத்தமென்மொழியாள்பங்கனைப்பாங்காய
ஆலத்தின்கீழானைநான்கண்டதாரூரே. (க)

பக்கமேபாரிடங்கள்சூழப்படுதலையில்
புக்கவூர்ப்பிச்சையேற்றுண்டுபொலிவுடைத்தாய்க்
கொக்கிறகின்றூவல்கொடியெடுத்தகோவணத்தோ
டக்கணிந்தவம்மானைநான்கண்டதாரூரே. (உ)

சேயவுலகமுஞ்செல்சார்வுமானானை
மாயப்போர்வல்லானைமாலைதாழ்மார்பானை
வேயொத்ததோளியர்தமென்முலைமேற்றண்சாந்தின்
ஆயத்திடையானைநான்கண்டதாரூரே. (௩)

ஏறேற்றமாவேறியெண்கணமும்பின்படர
மாறேற்றார்வல்லரணஞ்சீறியயானத்தில்
நீறேற்றமேனியனாய்நீள்சடைமேனீர்ததும்ப
ஆறேற்றவந்தணனைநான்கண்டதாரூரே. (௪)

தாங்கோலவெள்ளெலும்புபூண்டுதம்மேறேறிப்
பாங்கானவூர்க்கெல்லாஞ்செல்லும்பரமனார்
தேங்காவிநாறுந்திருவாரூர்த்தென்னகரில்
பூங்கோயிலுண்மகிழ்ந்துபோகாதிருந்தாரே. (௫)

எம்பட்டம்பட்டமுடையானையேர்மதியின்
நும்பட்டஞ்சேர்ந்தநுதலானையந்திவாய்ச்
செம்பட்டுடுத்துச்சிறுமானுரியாடை
அம்பட்டசைத்தானைநான்கண்டதாரூரே. (௬)

போழொத்தவெண்மதியஞ்சூடிப்பொலிந்திலங்கு
வேழத்துரிபோர்த்தான்வெள்வளையாடான்வெருவ
ஊழித்தீயன்னானையோங்கொலிமாப்பூண்டதோர்
[illegible] நகரீ [illegible] கண்டதாரூரே. (எ)

ததேர் - சக்கிராகாரமாயிருக்குந் தேரென அறிக.

வஞ்சனையாரார்பாடுஞ்சாராதமைந்தனைத்
துஞ்சிருளாடலுகந்தானைத்தன்றொண்டர்
நெஞ்சிருள் கூரும்பொழுதுநிலாப்பாரித்
தஞ்சுடராய்நின்றானைநான்கண்டதாரூரே. (அ)

*காரமுதுகொன்றைகடிநாறுதண்ணென்ன
நீரமுதகோதையோடாடியநீண்மார்பன்
பேரமுதமுண்டார்களுய்யப்பெருங்கடனஞ்
சாரமுதாவுண்டானைநான்கண்டதாரூரே. (க)

தாடவுடுக்கையன்றாமரைப்பூஞ்சேவடியன்
கோடலாலேவடத்தன்கொண்டதோர்வீணையினான்
ஆடரவக்கிண்கிணிக்காலன்றானோர்சேடனை
ஆடுந்தீக்கூத்தனைநான்கண்டதாரூரே. (க0)

மஞ்சாடுகுன்றடரவூன்றிமணிவிரலால்
துஞ்சாப்போர்வாளரக்கன்றோணெரியக்கண்குருதிச்
செஞ்சாந்தணிவித்துத்தன்மார்பிற்பால்வெண்ணீற்
றஞ்சாந்தணிந்தானைநான்கண்டதாரூரே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## 20. திருவாரூர் - பண் - சீகாமரம்.

திருச்சிற்றம்பலம்

கண்டாலேகருத்தாய்நினைத்திருந்தேன்மனம்புகுந்தாய்கழலடி
பூண்டுகொண்டொழிந்தேன்புறம்போயினாலறையோ
ஈண்டுமாடங்கணீண்டமாளிகைமேலெழுகொடிவானிளம்மதி
தீண்டிவந்துலவுந்திருவாரூரம்மானே. (க)

கடம்படந்நடமாடினாய்களைகண்ணினக்கொருகாதல்செய்தடி
ஒடுங்கிவந்தடைந்தேனொழிப்பாய்பிழைப்பவெல்லாம்
முடங்கிறான்முதுநீர்மலங்கிளவாளைசெங்கயல்சேல்வரால்களி
றடைந்ததண்கழனியணியாரூரம்மானே. (உ)

அருமணித்தடம்பூண்முலையரம்பையரொடருளிப்பாடியர்
உரிமையிற்றொழுவாருருத்திரபல்கணத்தார்
விரிசடைவிரதிகளந்தணர்சைவர் † பாசுபதர்கபாலிகள்
தெருவினிற்பொலியுந்திருவாரூரம்மானே. (ங)

பூங்கழல்தொழுதும்பரவியும்புண்ணியாபுனிதாவுன்பொற்கழல்
ஈங்கிருக்கப்பெற்றேனென்னகுறையுடையேன்

* கொன்றைமலர் கார்காலத்தில மலரு பெல்லைப்பற்றிக் கார்முதுகொன்றை யென்றருளிச் செய்தது.

† பாசுபதர் - கபாலிகள் வகையாரும் அறுவகை உட்சமயத்தாரிற் சேர்ந்தவர்கள்.

ஓங்குதெங்கிலையார்கமுகிளவாழைமாவொடுமாதுளம்பல
தீங்கனிசிதறுந்திருவாரூரம்மானே. (௪)

நீறுசேர்செழுமார்பினாய்நிரம்பாமதியொடுநீள்சடையிடை
ஆறுபாயவைத்தாயடியேயடைந்தொழிந்தேன்
ஏறிவண்டொடுதும்பியஞ்சிறகூன்றவிண்டமலரிதழ்வழி
தேறல்பாய்ந்தொழுகுந்திருவாரூரம்மானே. (௫)

அளித்துவந்தடிகைதொழுமவர்மேல்வினைகெடுமென்றிவையகம்
களித்துவந்துடனேகலந்தாடக்காதலராய்க்
குளித்துமூழ்கியுந்தூவியுந்துடைந்தாடுகோதையர்குஞ்சிப்புள்புகத்
தெளிக்குந்தீர்த்தமறுத்திருவாரூரம்மானே. (௬)

திரியுமூவெயில்தீயெழச்சிலைவாங்கிநின்றவனேயென்சிந்தைபுண்
பிரியுமாறெங்ஙனேபிழைத்தேயும்போகலொட்டேன்
பெரியசெந்நெற்பிரம்பரிகெந்தசாலிதிப்பியமென்றிவையகத்
தரியுந்தண்கழனியணியாரூரம்மானே. (௭)

பிறத்தலும்பிறந்தாற்பிணிப்படவாய்ந்தசைந்துடலம்புகுந்துநின்
றிறக்குமாறுளதேபிழைத்தேன்பிறப்பினைநான்
அறத்தையேபுரிந்தமனத்தனாயார்வச்செற்றக்குரோதநீக்கியுன்
திறத்தனாயொழிந்தேன்றிருவாரூரம்மானே. (௮)

முளைத்தவெண்பிறைமொய்சடையுடையாயெப்போதுமென்னெஞ்சிடங்கொள்ள
வளைத்துக்கொண்டிருந்தேன்வலிசெய்துபோகலொட்டேன்
அளைப்பிரிந்தவலவன்போய்ப்புகுந்தங்காலமுங்கண்டுதன்பெடை
திளைக்குந்தண்கழனித்திருவாரூரம்மானே. (௯)

நாடினார்கமலம்மலரயனோடிரணியனாகங்கீண்டவன்
நாடிக்காணமாட்டாத்தழலாயநம்பானைப்
பாடுவார்பணிவார்பல்லாண்டிசைக்கூறுபத்தர்கள்சித்தத்துள்புக்குத்
தேடிக்கண்டுகொண்டேன்றிருவாரூரம்மானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

21

## ௨௧. திருவாரூர்த்திருவாதிரைத்திருப்பதிகம் - பண் - குறிஞ்சி.

திருச்சிற்றம்பலம்

முத்துவிதானமணிப்பொற்கவரிமுறையாலே
பத்தர்களோடுபாவையர்சூழ்ப்பலிப்பின்னே
வித்தகக்கோலவெண்டலைமாலைவிரதிகள்
அத்தனாரூராதிரைநாளாலதுவண்ணம். (௧)

நணியார்சேயார்நல்லார்தீயார்நாடோறும்
பிணிதான்றீருமென்றுபிறங்கிக்கிடப்பாரும்

ம[illegible] ரம[illegible] வனபாரகட
ராதிரைநாளாலதுவண்ணம்.

வீதிகடோறும்வெண்கொடியோடுவிதானங்கள்
சோதிகள்விட்டுச்சுடர்மாமணிகளொளிதோன்றச்
சாதிகளாயபவளமுமுத்துத்தாமங்கள்
ஆதியா

குணங்கள்பேசிக்கூடிப்பாடித்தொண்டர்கள்
பிணங்கித்தம்மிற்பித்தரைப்போலப்பிதற்றுவார்
வணங்கிநின்றுவானவர்வந்துவைகலும்
அணங்கனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

நிலவெண்சங்கும்பறையுமார்ப்பநிற்கில்லாப்
பலருமிட்டகல்லவடங்கள்பரந்தெங்கும்
கலவமஞ்ஞைகாரென்றெண்ணிக்களித்துவந்
தலமராரூராதிரைநாளாலதுவண்ணம்.

விம்மாவெருவாவிழியாத்தெழியாவெருட்டுவார்
தம்மாண்பிலராய்த்தரியார்தலையான்முட்டுவார்
எம்மானீசனெந்தையெனப்பனென்பார்கட்
கம்மானாரூராதிரைநாளாலதுவண்ணம்.

செந்துவர்வாயார்செல்வனசேவடிசிந்திப்பார்
மைந்தர்களோடுமங்கையர்கூடிமயங்குவார்
இந்திரனாதிவானவர்சித்தரெடுத்தேத்தும்
அந்திரனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

முடிகள்வணங்கிமூவாதார்கண்முன்செல்ல
அடிகொள்வேய்த்தோள்வானரமங்கையர்பின்செல்லப்
பொடிகள்பூசிப்பாடுந்தொண்டர்புடைசூழ
அடிகளாரூராதிரைநாளாலதுவண்ணம்.

துன்பநும்மைத்தொழாதநாள்களென்பாரும்
இன்பநும்மையேத்துநாள்களென்பாரும்
நும்பினெம்மைநுழையப்பணியேயென்பாரும்
அன்பனாரூராதிரைநாளாலதுவண்ணம்.

பாரூர்பவ்வத்தானைப்பத்தர்பணிந்தேத்தச்
சீரூர்பாடலாடலறாதசெம்மாப்பார்ந்
தோரூரொழியாதுலகமெங்குமெடுத்தேத்தும்

(௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௨. கோயில் - திருநேரிசை - பண் - கொல்லி

திருச்சிற்றம்பலம்

செஞ்சடைக்கற்றைமுற்றத்திளநிலாவெறிக்குஞ்சென்னி
நஞ்சடைக்கண்டனாரைக்காணலாநறவநாறு
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
துஞ்சடையிருள்கிழியத்துளங்கெரியாடுமாறே. (௧)

வறனுறேறுதம்பாலிளநிலாவெறிக்குஞ்சென்னி
யாறனாராறுசூடியாயிழையாளோர்பாக
நாறுபூஞ்சோலைத்தில்லைநவின்றசிற்றம்பலத்தே
நீறுமெய்பூசிநின்றுநீண்டெரியாடுமாறே. (௨)

சடையனார்சாந்தநீற்றர்தனிநிலாவெறிக்குஞ்சென்னி
யுடையனாருடைதலையிலுண்பதும்பிச்சையேற்றுக்
கடிகொள்பூந்தில்லைதன்னுட்கருதுஞ்சிற்றம்பலத்தே
அடிகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (௩)

பையரவசைத்தவல்குற்பனிநிலாவெறிக்குஞ்சென்னி
மையரிக்கண்ணியாளுமாலுமோர்பாகமாகிச்
செய்யெரிதில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
கையெரிவீசிநின்றுகனலெரியாடுமாறே. (௪)

ஓதினார்வேதம்வாயாலொளிநிலாவெறிக்குஞ்சென்னிப்
பூதனார்பூதஞ்சூழப்புலியுரியதளனார்தா
நாதனார்தில்லைதன்னுளவின்றசிற்றம்பலத்தே
காதில்வெண்குழைகடாழக்கனலெரியாடுமாறே. (௫)

ஓருடம்பிருவராகியொளிநிலாவெறிக்குஞ்சென்னிப்
பாரிடம்பாணிசெய்யப்பயின்றவெம்பரமமூர்த்தி
காரிடந்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
பேரிடம்பெருகநின்றுபிறங்கெரியாடுமாறே. (௬)

முதற்றனிச்சடையைமூழ்கமுகிழ்நிலாவெறிக்குஞ்சென்னி
மதக்களிற்றுரிவைபோர்த்தமைந்தரைக்காணலாகு
மதத்துவண்டறையுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
கதத்ததோரரவமாடக்கனலெரியாடுமாறே. (௭)

மறையனார்மழுவொன்றேந்திமணிநிலாவெறிக்குஞ்சென்னி
இறைவனாரெம்பிரானாரேத்துவாரிடர்களைப்பார்
சிறைகொணீர்த்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
அறைகழலார்க்கநின்றுவனலெரியாடுமாறே. (௮)

விருத்தனைப்பாலனைகவிரிநிலாவெறிக்குஞ்சென்னி
நிருத்தனார்நிருத்தஞ்செய்யநீண்டபுன்சடைகடாழக்

கருத்தனார்தில்லைதன்னுட்கருதுசிற்றம்பலத்தே
அருத்தமாமேனிதன்னோடனலெரியாடுமாறே. (௯)

பாலனாய்விருத்தனாகிப்பனிநிலாவெறிக்குஞ்சென்னி
காலனைக்காலாற்காய்ந்தகடவுளார்விடையொன்றேறி
ஞாலமாந்தில்லைதன்னுணவின்றசிற்றம்பலத்தே
நீலஞ்சேர்கண்டனார்தாநீண்டெரியாடுமாறே. (௧௦)

மதியிலாவரக்கனோடிமாமலையெடுக்கநோக்கி
நெதியன்றோணெரியவூன்றிநீடிரும்பொழில்கள்சூழ்ந்த
பதிபந்தோய்தில்லைதன்னுள்மல்குசிற்றம்பலத்தே
அதிசயம்போலநின்றுவனலெரியாடுமாறே. (௧௧)

பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மூலத்தானநாயகர், சபாநாதர்; முதல்வி - சிவகாமியம்மை.

---

## 23 உ௩. கோயில் - திருநேரிசை - பண் - கொல்லி.

றமபலம

பத்தனாய்ப்பாடமாட்டேன்பரமனேபரமயோகி
யெத்திறப்பத்திசெய்கேனென்னைநீயிகழவேண்டாம்
முத்தனேமுதல்வாதில்லையம்பலத்தாடுகின்ற
(௧)

ருத்தனாய்ப்பாடமாட்டேன்காம்பனதோளிபங்கா
திருத்தமாந்தில்லைதன்னுட்டிகழ்ந்தசிற்றம்பலத்தே
நிருத்தநான்காணவேண்டிநேர்படவந்தவாறே. (௨)

கேட்டிலேன்கிளைபிரியேன்கேட்குமாகேட்டியாகில்
நாட்டினேனின்றன்பாதநடுப்படநெஞ்சினுள்ளே
மாட்டிநீர்வாளைபாயுமல்குசிற்றம்பலத்தே
கூட்டமாங்குவிலைமுலையாள் கூடநீயாடுமாறே. (௩)

சிந்தையைத்திகைப்பியாதேசெறிவுடையடிமைசெய்ய
எந்தைநீயருளிச்செய்யாயாதுநான்செய்வதென்னே
...றம்பலத்தே
அந்தியும்பகலுமாடவடியிணையலசுங்கொல்லோ. (௪)

கண்டவாதிரிந்துநாளுங்கருத்தினானின்றன்பாதங்
கொண்டிருந்தாடிப்பாடிக்கூடுவேன்குறிப்பினாலே
வண்டுபண்பாடுஞ்சோலைமல்குசிற்றம்பலத்தே
எண்டிசையோருமேத்தவிறைவநீயாடுமாறே. (௫)

பார்த்திருந்தடியனே...
...ல்வனென்பன்

எத்துவாரிடர்கடீர்ப்பாய்வதில்லைச்சிற்றம்பலத்துக்
கூத்தாவுன்கூத்துக்காண்பான்கூடநான்வந்தவாறே. (௬)

பொய்யினைத்தவிரவிட்டுப்புறமலாவடிமைசெய்ய
ஐயநீயருளிச்செய்யாயாதியேயாதிமூர்த்தி
வையகந்தன்னின்மிக்கமல்குசிற்றம்பலத்தே
பையநுன்னுடல்காண்பான்பரமநான்வந்தவாறே. (௭)

மனத்தினார்திகைத்துநாளுமாண்பலாநெறிகண்மேலே
கனைப்பராலென்செய்கேனோகறையணிகண்டத்தானே
தினைத்தனைவேதங்குன்றாத்தில்லைச்சிற்றம்பலத்தே
அனைத்துநின்னிலயங்காண்பானடியனேன்வந்தவாறே. (௮)

நெஞ்சினைத்தூய்மைசெய்துநினைக்குமாநினைப்பியாதே
வஞ்சமேசெய்தியாலோவானவர்தலைவனேநீ
மஞ்சடைசோலைத்தில்லைமல்குசிற்றம்பலத்தே
அஞ்சொலாள்காணநின்றுவழகநீயாடுமாறே. (௯)

மண்ணுண்டமாலவனுமலர்மிசைமன்னினானும்
வுண்ணுண்டதிருவுருவம்விரும்பினார்காணமாட்டார்
திண்ணுண்டதிருவேமிக்கதில்லைச்சிற்றம்பலத்தே
பண்ணுண்டபாடலோடும்பரமநீயாடுமாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௪. திருவதிகைவீரட்டானம் - கொப்பளித்ததிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கொப்பளித்தயானையீருரிபோர்த்தவீசன்
கரும்புகொப்பளித்தவின்சொற்காரிகைபாகமாகச்
சுரும்புகொப்பளித்தகங்கைத்துவலைநீர்சடையிலேற்ற
அரும்புகொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (௧)

கொம்புகொப்பளித்ததிங்கட்கோணல்வெண்பிறையுஞ்சூடி
வம்புகொப்பளித்தகொன்றைவளர்சடைமேலும்வைத்துச்
செம்புகொப்பளித்தமூன்றுமதிலுடன்சுருங்கவாங்கி
அம்புகொப்பளிக்கவெய்தாரதிகைவீரட்டனாரே. (௨)

விடையுங்கொப்பளித்தபாதம்விண்ணவர்பாவியேத்தச்
சடையுங்கொப்பளித்ததிங்கட்சாந்தம்வெண்ணீறுபூசி
உடையுங்கொப்பளித்தநாகமுள்குவாருள்ளத்தென்றும்
அடையுங்கொப்பளித்தசீராரதிகைவீரட்டனாரே. (௩)

கறையுங்கொப்பளித்தகண்டர்காமவேளுருவமங்க
இறையுங்கொப்பளித்தகண்ணரேத்துவாரிடர்கடீர்ப்பார்
மறையுங்கொப்பளித்தநாவர்வண்டுண்டுபாடுங்கொன்றை
அறையுங்கொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (௪)

நீறுகொப்பளித்தமார்பர்நிழறிகழ்மழுவொன்றேந்திக்
கூறுகொப்பளித்தகோதைக்கோல்வளைமாதோர்பாகம்
ஏறுகொப்பளித்தபாதமிமையவர்பரவியேத்த
ஆறுகொப்பளித்தசென்னியதிகைவீரட்டனாரே. (௫)

வணங்குகொப்பளித்தபாதம்வானவர்பரவியேத்த
பிணங்குகொப்பளித்தசென்னிச்சடையுடைப்பெருமையண்ணல்
சுணங்குகொப்பளித்தகொங்கைச்சுரிகுழல்பாகமாக
அணங்குகொப்பளித்தமேனியதிகைவீரட்டனாரே. (௬)

சூலங்கொப்பளித்தகையர்சுடர்விடுமழுவாள்வீசி
நூலுங்கொப்பளித்தமார்பினுண்பொறியரவஞ்சேர்த்தி
மாலுங்கொப்பளித்தபாகர்வண்டுடன்பாடுங்கொன்றை
ஆலங்கொப்பளித்தகண்டத்ததிகைவீரட்டனாரே. (௭)

நாகங்கொப்பளித்தகையர்நான்மறையறையாயபாடி
மேகங்கொப்பளித்ததிங்கள்விரிசடைமேலும்வைத்துப்
பாகங்கொப்பளித்தமாதர்பண்ணுடன்பாடியாட
ஆகங்கொப்பளித்ததோளாரதிகைவீரட்டனாரே. (௮)

பரவுகொப்பளித்தபாடல்பண்ணுடன்பத்தரேத்த
விரவுகொப்பளித்தகங்கைவிரிசடைமேவவைத்து
இரவுகொப்பளித்தகண்டரேத்துவாரிடர்கடீர்ப்பார்
அரவுகொப்பளித்தகையரதிகைவீரட்டனாரே. (௯)

தொண்டைகொப்பளித்தசெவ்வாய்த்துடியிடைப்பரவையல்குற்
கொண்டைகொப்பளித்தகோதைக்கோல்வளைபாகமாக
ரிக்கயல்பருகிமாந்தக்
கெண்டைகொப்பளித்ததெண்ணீர்க்கெடிலவீரட்டனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

25

௨ திருவதிகைவீரட்டானம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மதியந்தன் மேவவைத்து
உண்ணிலாப்
விண்ணிலாமீயச்சூரார்வேண்டுவார்வேண்டுவார்க்கே
அண்ணியார்பெரிதுஞ்சேயாரதிகைவீரட்டனாரே.

பாடினார்மறைகணான்கும்பாயிருள்புகுந்தென்னுள்ளம்
கூடினார்கூடலாலவாயிலார்நல்லகொன்றை
சூடினார்சூடல்மேவிச்சூழ்சுடர்ச்சுடலைவெண்ணீ
றாடினாராடன்மேவியதிகைவீரட்டனாரே. (உ)

னகளுளளத்துளம்ள

தேனையமலர்கள்கொண்டுசிந்தையுட்சிந்திக்கின்ற
ஏனையபலவுமாகியிமையவரேத்தநின்று
ஆனையினுரிவைபோர்த்தாரதிகைவீரட்டனாரே. (௩)

துருத்தியாங்குரம்பைதன்னிற்றொண்ணூற்றறுவர்நின்று
விருத்திதான்றருகவென்றுவேதனைபலவுஞ்செய்ய
வருத்தியால்வல்லவாறுவந்துவந்தடையநின்ற
அருத்தியார்க்கன்பர்போலுமதிகைவீரட்டனாரே.

பத்தியாலேத்திநின்றுபணிபவர்நெஞ்சத்துள்ளார்
துத்தியைந்தலையநாகஞ்சூழ்சடைமுடிமேல்வைத்து
உத்தரமலையர்பாவையுமையவணடுங்கவன்று
அத்தியினுரிவைபோர்த்தாரதிகைவீரட்டனாரே. (௫)

வரிமுடிபாடியென்றும்வல்லவாறடைந்துநெஞ்சே
கரியுரிமூடவல்லகடவுளைக்காலத்தாலே
சுரிபுரிவிரிகுழலாடுடியிடைப்பரவையல்குல்
அரிவையோர்பாகர்போலுமதிகைவீரட்டனாரே. (௬)

நீதியானினைசெய்நெஞ்சேநிமலனைநித்தமாகப்
பாதியாமுமைதன்னோடும்பாகமாய்நின்றவெந்தை
சோதியாச்சுடர்விளக்காச்சுண்ணவெண்ணீறதாடி
ஆதியுமீறுமானாரதிகைவீரட்டனாரே. (௭)

எல்லியும்பகலுமெல்லாந்துஞ்சுவேற்கொருவர்வந்து
புல்லியமனத்துக்கோயில்புக்கனர்காமனென்னும்
வில்லியைங்கணையினானைவெந்துகநோக்கியிட்டார்
அல்லியம்பழனவேலியதிகைவீரட்டனாரே. (௮)

ஒன்றவேயுணர்திராகிலோங்காரத்தொருவனாகும்
வென்றவைம்புலன்கடம்மைவிலக்குதற்குரியீரெல்லாம்
நன்றவநாரணனுநான்முகனடிக்காண்குற்
றன்றவர்க்கரியர்போலுமதிகைவீரட்டனாரே. (௯)

நடவரைகுலுங்கவாததுக்

கிடக்கையாலிடர்களோங்கக்கிளர்மணிமுடிகள்சாய
முடக்கினார்திருவிரலான்முறுகமர்கோதைபாகத்
தடக்கினாரென்னையாளுமதிகைவீரட்டனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௬. திருவதிகைவீரட்டானம் - ைச.

திருச்சிற்றம்பலம்

நம்பனேயெங்கள்கோவேநாதனேயாதிமூர்த்தி
பங்கனேபரமயோகியென்றென்றேபரவிநாளும்
செம்பொனேபவளக்குன்றேதிகழ்மலர்ப்பாதங்காண்பான்
அன்பனேயலைந்துபோனேனதிகைவீரட்டனீரே. (௧)

பொய்யினுன்மிடைந்தபோர்வைபுரைபுரையழுகிவீழ
மெய்யனாய்வாழமாட்டேன்வேண்டிற்றொன்றைவர்வேண்டார்
செய்யதாமரைஎன்னசேவடியிரண்டுங்காண்பான்
ஐயநானலைந்துபோனேனதிகைவீரட்டனீரே. (௨)

நீதியால்வாழமாட்டேனித்தலுந்தூயேனல்லேன்
ஓதியுமுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
சோதியேசுடரேயுன்றன்றூமலர்ப்பாதங்காண்பான்
[illegible]ந்துபே[illegible]கை[illegible] (௩)

தெருளுமாதெருளுமாட்டேன்றீவினைச்சுற்றமென்னும்
பொருளுளேயழுந்திநாளும்போவதோர்நெறியுங்காணேன்
இருளுமாமணிகண்டாநின்னிணையடியிரண்டுங்காண்பான்
அருளுமாறருளவேண்டுமதிகைவீரட்டனீரே. (௪)

அஞ்சினாலியற்றப்பட்டவாக்கைபெற்றதனுள்வாழும்
அஞ்சினாலடர்க்கப்பட்டிங்குழிதருமாதனேனை
அஞ்சினாலுய்க்கும்வண்ணங்காட்டினாய்க்கஞ்சநீர்ந்தேன்
[illegible] (௫)

உறுகயிறூசல்போலவொன்றுவிட்டொன்றுபற்றி
மறுகயிறூசல்போலவந்துவந்துலவுநெஞ்சம்
பெறுகயிறூசல்போலப்பிறைபுல்குசடையாய்பாதத்
தறுகயிறூசலானேனதிகைவீரட்டனீரே. (௬)

கழித்திலேன்காமவெந்நோய்காதன்மையென்னும்பாசம்
ஒழித்திலேனூன்கணோக்கியுணர்வெனுமிமைதிறந்து
விழித்திலேன்வெளிறுதோன்றவினையெனுஞ்சரக்குக்கொ டன்
அழித்திலேனயர்த்துப்போனேனதிகைவீரட்டனீரே. (௭)

மன்றத்துப்புன்னைபோலமரம்படுதுயரமெய்தி
ஒன்றினாலுணரமாட்டேனுன்னையுள்வைக்கமாட்டேன்
கன்றியகாலன்வந்துகருக்குழிவிழுப்பதற்கே
அன்றினாலமந்திட்டேனதிகைவீரட்டனீரே.

பிணிவிடாவாக்கைபெற்றேன்பெற்றமொன்றேறுவானே
பணிவிடாவிடும்பையென்னும்பாசனத்தழுந்துகின்றேன்

துணிவிலேன்றாயனல்லேன்றாமலர்ப்பாதங்காண்பான்
அணியனாயறியமாட்டேனதிகைவீரட்டனீரே. (௯)

திருவினாள்கொழுநனாருந்திசைமுகமுடையகோவும்
இருவருமெழுந்தும்வீழ்ந்துமிணையடிகாணமாட்டா
ஒருவனேயெம்பிரானேயுன்றிருப்பாதங்காண்பான்
அருவனேயருளவேண்டுமதிகைவீரட்டனீரே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

## ௨௭. திருவதிகைவீரட்டானம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ர்புலியின்றோலைமாமணிநாகக்கச்சா
முடக்கினார்முகிழ்வெண்டிங்கள்மொய்சடைக்கற்றைதன்மேல்
தொடக்கினார்தொண்டைச்செவ்வாய்த்துடியிடைப்பரவையல்குல்
அடக்கினார்கெடிலவேலியதிகைவீரட்டனாரே. (௧)

சூடினார்கங்கையாளைச்சூடியதுழனிகேட்டங்
கூடினாணங்கையாளூடலையொழிக்கவேண்டிப்
பாடினார்சாமவேதம்பாடியபாணியாலே
ஆடினார்கெடிலவேலியதிகைவீரட்டனாரே. (௨)

கொம்பினார்குழைந்தவேனற்கோமகன்கோலநீர்மை
நம்பினார்காணலாகாவகையதோர்நடலைசெய்தார்
வெம்பினார்மதில்கண்மூன்றும்வில்லிடையெரித்துவீழ்த்த
அம்பினார்கெடிலவேலியதிகைவீரட்டனாரே. (௩)

மறிபடக்கிடந்தகையர்வளரிளமங்கைபாகம்
செறிபடக்கிடந்தசெக்கர்ச்செழுமதிக்கொழுந்துசூடிப்
பொறிபடக்கிடந்தநாகம்புகையுமிழ்ந்தழலவீக்கி
கிறிபடநடப்பர்போலுங்கெடிலவீரட்டனாரே. (௪)

நரிவரால்கவ்வச்சென்றுநற்றசையிழந்ததொத்த
தெரிவரால்மால்கொள்சிந்தைதீர்ப்பதோர்சிந்தைசெய்வார்
வரிவராலுகளுந்தெண்ணீர்க்கழனிசூழ்பழனவேலி
அரிவரால்வயல்கள்சூழ்ந்தவதிகைவீரட்டனாரே. (௫)

புள்ளலைத்துண்டவோட்டிலுண்டுபோய்ப்பலாசங்கொம்பின்
கள்ளலைச்சுடலைவெண்ணீறணிந்தவர்மணிவெள்ளேற்றுத்
துள்ளலைப்பாகன்றன்னைத்தொடர்ந்திங்கேகிடக்கின்றேனை
அள்ளலைக்கடப்பித்தாளுமதிகைவீரட்டனாரே. (௬)

நீறிட்டநுதலர்வேலைநீலஞ்சேர்கண்டர்மாதர்
கூறிட்டமெய்யராகிக்கூறினாராறுநான்கும்

கீறிட்டதிங்கள்சூடிக்கிளர்தருசடையினுள்ளால்
ஆறிட்டுமுடிப்பர்போலுமதிகைவீரட்டனாரே. (எ)

நில்வாரரார்திருத்தலார்பொருத்தலாகார்
வணிலாரிறப்புமில்லார்பிறப்பிலார்துறக்கலாகார்
காணிலாரைவரோடுமிட்டெனைவிரவிவைத்தார்
ஆணலார்பெண்ணுமல்லாரதிகைவீரட்டனாரே. (அ௲க)

ஞ்சப்பெருவிரலதனையூன்றிச்
சிர்த்தமாமுடிகள்பத்துஞ்சிதறுவித்தவனையன்று
ஆர்த்தவாயலரவைத்தாரதிகைவீரட்டனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## உஅ. திருவதிகைவீரட்டானம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

முன்பெலாமிளையகாலமூர்த்தியைநினையாதேடிக்
னறிப்
பின்பகலுணங்கலட்டும்பேதைமார்போன்றேனுள்ளம்
அன்பனாய்வாழமாட்டேனதிகைவீரட்டனீரே. (௧)

கறைப்பெருங்கண்டத்தானேகாய்கதிர்நமனையஞ்சி
நிறைப்பெருங்கடலைக்கண்டேனீள்வரைபுச்சிகண்டேன்
பிறைப்பெருஞ்சென்னியானேபிஞ்ஞகாவிவையனைத்தும்
அறுப்பதோருபாயங்காணேனதிகைவீரட்டனீரே. (௨)

நாதனாரென்னநாளுநடுங்கினராயிற்றங்கள்
ஏதங்களறியமாட்டாரிணையடிதொழுதோமென்பர்
ஆதனாவனென்றெள்கியதிகைவீரட்டனேநின்
பாதநான்பரவாதுய்க்கும்பழவினைப்பரிசிலேனே. (௩)

சுடலைசேர்சுண்ணமெய்யர்சுரும்புணவிரிந்தகொன்றைப்
படலைசேரலங்கன்மார்பர்பழனஞ்சேர்கழனித்தெங்கின்
மடலைநீர்கிழியவோடியதனிடைமணிகள்சிந்தும்
கெடிலவீரட்டமேயகிளர்சடைமுடியனாரே. (௪)

மந்திரமுள்ளதாகமறிகடலெழுநெய்யாக
இந்திரன்வேள்வித்தீயிலெழுந்ததோர்கொழுந்தின்வண்ணம்
சிந்திரமாகநோக்கித்தெருட்டுவார்தெருட்டவந்து
கந்திரமுரலுஞ்சோலைக்கானலங்கெடிலத்தாரே. ‒ ௫‒௭‒அ௲க.)

மைஞ்ஞலமனையகண்ணாள்பங்கன்மாமலையையோடி
மெஞ்ஞரம்புதிரம்பில்கவிசைதணித்தரக்கன்வீழ்ந்து
கைஞ்ஞரம்பெழுவிக்கொண்டுகாதலாலினிதுசொன்ன
கின்னரங்கேட்டுகந்தார்கெடிலவீரட்ட ரே. (௧௦)

ற்றம்பலம்.

## உகூ. திருச்செம்பொன்பள்ளி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

ஊனினுள்ளுயிரைவாட்டியுணர்வினார்க்கெளியராகி
வானினுள்வானவர்க்குமறியலாகாதவஞ்சர்
நானெனிற்றானேயென்னுஞானத்தார்பத்தர்நெஞ்சுள்
தேனுமின்னமுதுமானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (க)

நொய்யவர்விழுமியாருநூலினுண்ணெறியைக்காட்டும்
மெய்யவர்பொய்யுமில்லாருடலெனுமிடிஞ்சிறன்னில்
நெய்யமர்திரியுமாகிநெஞ்சத்துள்விளக்குமாகிச்
செய்யவர்கரியகண்டர்திருச்செம்பொன்பள்ளியாரே. (உ)

வெள்ளியர்கரியர்செய்யர்விண்ணவரவர்கணெஞ்சுள்
ஒள்ளியரூழியூழியுலகமதேத்தநின்ற
பள்ளியர்நெஞ்சத்துள்ளார்பஞ்சமம்பாடியாடும்
தெள்ளியர்கள்ளந்தீர்ப்பார்திருச்செம்பொன்பள்ளியாரே. (ங)

தந்தையுந்தாயுமாகித்தானவன்ஞானமூர்த்தி
முந்தியதேவர்கூடிமுறைமுறையிருக்குச்சொல்லி
எந்தைநீசரணமென்றங்கிமையவர்பரவியேத்தச்
சிந்தையுட்சிவமதானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (ச)

ஆறுடைச்சடையர்போலுமன்பருக்கன்பர்போலும்
கூறுடைமெய்யர்போலுங்கோளரவரையர்போலும்
நீறுடையழகர்போலுநெய்தலேகமழுநீர்மைச்
சேறுடைக்கமலவேலித்திருச்செம்பொன்பள்ளியாரே. (ரு)

ஞாலமுமறியவேண்டினன்றெனவாழலுற்றீர்
காலமுங்கழியலானகள்ளத்தையொழியகில்லீர்
கோலமும்வேண்டாவார்வச்செற்றங்கள்குரோதநீக்கிச்
சீலமுநோன்புமாவார்திருச்செம்பொன்பள்ளியாரே. (சு)

புரிகாலேநேசஞ்செய்யவிருந்தபுண்டரீகத்தாரும்
எரிகாலேமூன்றுமாகியிமையவர்தொழநின்றாரும்
தெரிகாலேமூன்றுசந்தியானித்துவணங்கநின்று
திரிகாலங்கண்டவெந்தைதிருச்செம்பொன்பள்ளியாரே. (எ)

காருடைக்கொன்றைமாலைக்கதிர்மதியரவினோடும்
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியுள்ளார்
பாரொடுவிண்ணுமண்ணும்பதினெட்டுக்கணங்களேத்தச்
சீரொடுபாடலானார்திருச்செம்பொன்பள்ளியாரே. (அ)

ஓவாதமறைவல்லானுமோதநீர்வண்ணன்காணா
மூவாதபிறப்பிலாருமுனிகளானார்கணத்தும்

பூவானமூன்றுமுன்னூற்றறுபதுமாகுமெந்தை
தேவாதிதேவரென்றுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (௯)

அங்கங்களாறுநான்குமந்தணர்க்கருளிச்செய்து
சங்கங்கள்பாடவாடுஞ்சங்கரன்மலையெடுத்தான்
அங்கங்களுதிர்ந்துசோரவலறிடவடர்த்துநின்றும்
செங்கண்வெள்ளேறதேறுந்திருச்செம்பொன்பள்ளியாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சொர்ணபுரீசர்; முதல்வி - சுகந்தவனநாயகி.

---

## ௩௦. திருக்கழிப்பாலை - திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்.

நங்கையைப்பாகம்வைத்தார்ஞானத்தைநவிலவைத்தார்
அங்கையிலனலும்வைத்தாரானையினுரிவைவைத்தார்
தங்கையின்யாழும்வைத்தார்தாமரைமலரும்வைத்தார்
கங்கையைச்சடையுள்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௧)

விண்ணினைவிரும்பவைத்தார்வேள்வியைவேட்கவைத்தார்
பண்ணினைப்பாடவைத்தார்பத்தர்கள்பயிலவைத்தார்
மண்ணினைத்தாவநீண்டமாலினுக்கருளும்வைத்தார்
கண்ணினைநெற்றிவைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௨)

வாமனைவணங்கவைத்தார்வாயினைவாழ்த்தவைத்தார்
சோமனைச்சடைமேல்வைத்தார்சோதியுட்சோதிவைத்தார்
ஆமனெய்யாடவைத்தாரன்பெனும்பாசம்வைத்தார்
காமனைக்காய்ந்தகண்ணார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௩)

அரியனவங்கம்வேதமந்தணர்க்கருளும்வைத்தார்
பெரியனபுரங்கண்மூன்றும்பேரழலுண்ணவைத்தார்
பரியதீவண்ணராகிப்பவளம்போனிறத்தைவைத்தார்
கரியதோர்கண்டம்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௪)

கூரிருள்கிழியநின்றகொடுமழுக்கையில்வைத்தார்
பேரிருள்கழியமல்குபிறைபுனற்சடையுள்வைத்தார்
ஆரிருளண்டம்வைத்தாரறுவகைச்சமயம்வைத்தார்
காரிருள்கண்டம்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௫)

உட்டங்குசிந்தைவைத்தாருள்குவார்க்குள்ளம்வைத்தார்
விட்டங்குவேள்விவைத்தார்வெந்துயர்தீரவைத்தார்
நட்டங்குநடமும்வைத்தார்ஞாலமுநாவில்வைத்தார்
கட்டங்கந்தோண்மேல்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (௬)

ஊனப்பேரொழியவைத்தாரோதியேயுணரவைத்தார்
ஞானப்பேர்நவிலவைத்தார்ஞானமுநடுவும்வைத்தார்
வானப்பேராறும்வைத்தார்வைகுந்தற்காழிவைத்தார்
கானப்பேர்காதல்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (எ)

கொங்கினுமருமபுவைத்தார்கூற்றங்கள்கெடுக்கவைத்தார்
சங்கினுண்முத்தம்வைத்தார்சாம்பலும்பூசவைத்தார்
அங்கமும்வேதம்வைத்தாராலமுமுண்டுவைத்தார்
கங்குலும்பகலும்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (அ)

சதுர்முகன்றானுமாலுந்தம்மிலேயிகலக்கண்டு
எதிர்முகமின்றிநின்றவெரியுருவதனைவைத்தார்
பிதிர்முகன்காலன்றன்னைக்காறனிற்பிதிரவைத்தார்
கதிர்முகஞ்சடையில்வைத்தார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (கூ)

மாவினுணங்கையஞ்சமதிலிலங்கைக்குமன்னன்
வேவினன்வெகுண்டெடுக்கக்காண்டலும்வேதனாவன்
நூவினனேக்கிநக்குநொடிப்பதோரளவில் வீழக்
கிட்டார்கழிப்பாலைச்சேர்ப்பனாரே. (கய)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன - பால்வண்ணவீசுவரர்; முதல்வி - பொற்பதவேதநாயகி.

---

## ௩௧. திருக்கடவூர்வீரட்டம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பொள்ளத்தகாயமாயப்பொருளினைப்போகமாதர்
வெள்ளத்தைக்கழிக்கவேண்டில்விரும்புமின்விளக்குத்தூபம்
உள்ளத்ததிரியொன்றேற்றியுணருமாறுணரவல்லார்
கள்ளத்தைக்கழிப்பர்போலுங்கடவூர்வீரட்டனாரே. (க)

மண்ணிடைக்குரம்பைதன்னைமதித்துநீர்மையலெய்தில்
விண்ணிடைத்தருமராசன்வேண்டினல்விலக்குவாரார்
பண்ணிடைச்சுவைகள்பாடியாடிடும்பத்தர்க்கென்றும்
கண்ணிடைமணியர்போலுங்கடவூர்வீரட்டனாரே. (உ)

பொருத்தியகுரம்பைதன்னுட்பொய்நடைசெலுத்துகின்றீர்
ஒருத்தனையுணரமாட்டீருள்ளத்திற்கொடுமைநீக்கீர்
வருத்தினகளிறுதன்னைவருத்துமாவருத்தவல்லார்
கருத்தினிலிருப்பர்போலுங்கடவூர்வீரட்டனாரே. (௩)

பெரும்புலர்காலைமூழ்கிப்பித்தற்குப்பத்தராகி
அரும்பொடுமலர்கள்கொண்டாங்கார்வத்தைபுள்ளேவைத்து

விரும்பிநல்விளக்குத்தூபம்விதியினாலிடவல்லார்க்குக்
கரும்பினிற்கட்டிபோல்வார்கடவூர்வீரட்டனாரே. (௪)

தலக்கமேசெய்துவாழ்ந்துதக்கவாறொன்றுமின்றி
விலக்குவாரிலாமையாலேவிளக்கிற்கோழிபோன்றேன்
மலக்குவார்மனத்தினுள்ளேகாலனார்தமர்கள்வந்து
கலக்கநான்கலங்குகின்றேன்கடவூர்வீரட்டனீரே. (௫)

பழியுடையாக்கைதன்னிற்பாழுக்கேநீரிறைத்து
வழியிடைவாழமாட்டேன்மாயமுந்தெளியகில்லேன்
அழிவுடைத்தாயவாழ்க்கையைவரால்அலைக்கப்பட்டுக்
கழியிடைத்தோணிபோன்றேன்கடவூர்வீரட்டனீரே. (௬)

மாயத்தையறியமாட்டேன்மையல்கொண்மனத்தனாகிப்
பேயொத்துக்கூகையானேன்பிஞ்ஞகாபிறப்பொன்றில்லீ
நேயத்தாநினையமாட்டேனீதனேநீசனேனான்
காயத்தைக்கழிக்கமாட்டேன்கடவூர்வீரட்டனீரே. (௭)

பற்றிலாவாழ்க்கைவாழ்ந்துபாழுக்கேநீரிறைத்தேன்
உற்றலாற்கயவர்தேறாரென்னுங்கட்டுரையோடொத்தேன்
எற்றுளேனென்செய்கேனானிடும்பையால்ஞானமேதும்
கற்றிலேன்களைகண்காணேன்கடவூர்வீரட்டனீரே. (௮)

சேவினேரனையகண்ணார்திறம்விட்டுச்சிவனுக்கன்பாய்ப்
பாலுநற்றயிர்நெய்யோடுபலபலவாட்டியென்றும்
மாவினைத்தவிரநின்றமார்க்கண்டர்க்காகவன்று
காலனையுதைப்பர்போலுங்கடவூர்வீரட்டனீரே. (௯)

முந்திருவிருவரோடுமூவருமாயினாரும்
இந்திரனோடுதேவரிருடிகளின்பஞ்செய்ய
வந்திருபதுகடோளாலெடுத்தவன்வலியைவாட்டிக்
கந்திருவங்கள்கேட்டார்கடவூர்வீரட்டனீரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - அமிர்தகடேசுவரர்; முதல்வி - அபிராமியம்மை.

---

## 32 ௩௨. திருப்பயற்றூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

உரித்திட்டாரானையின்றோலுதிரவாறொழுகியோட
விரித்திட்டாருமையாளஞ்சிவிரல்விதிர்த்தலக்கணோக்கித்
தரித்திட்டார்சிறிதுபோதுதரிக்கிலராகித்தாமுஞ்
சிரித்திட்டாரெயிறுதோன்றத்திருப்பயற்றூரனாரே. (௧)

உவந்திட்டங்குமையோர்பாகம்வைத்தவரூழியூழி
பவந்திட்டபரமனார்தாமலைச்சிலைநாகமேற்றிக்
கவர்ந்திட்டபுரங்கள்மூன்றுங்கனலெரியாகச்சீறிச்
சிவந்திட்டகண்ணர்போலுந்திருப்பயற்றூரனாரே. (௨)

நங்களுக்கருளதென்றுநான்மறையோதுவார்கள்
தங்களுக்கருளுமெங்கடத்துவன்றழலன்றன்னை
எங்களுக்கருள்செயென்னநின்றவனாகமஞ்சுந்
திங்களுக்கருளிச்செய்தார்திருப்பயற்றூரனாரே. (௩)

பார்த்தனுக்கருளும்வைத்தார்பாம்பரையாடவைத்தார்
சாத்தனைமகனாவைத்தார்சாமுண்டிசாமவேதம்
கூத்தொடும்பாடவைத்தார்கோளராமதியநல்ல
தீர்த்தமுஞ்சடையில்வைத்தார்திருப்பயற்றூரனாரே. (௪)

மூவகைமூவர்போலுமுற்றுமாநெற்றிக்கண்ணர்
நாவகைநாவர்போலுநான்மறைஞானமெல்லாம்
ஆவகையாவர்போலுமாதிரைநாளர்போலும்
தேவர்கடேவர்போலுந்திருப்பயற்றூரனாரே.

நாயிறாய்நமனுமாகிவருணனாய்ச்சோமனாகித்
தீயறாநிருதிவாயுத்திப்பியசாந்தனாகிப்
பேயறாக்காட்டிலாடும்பிஞ்ஞகனெந்தைபெம்மான்
தீயறாக்கையர்போலுந்திருப்பயற்றூரனாரே. (௬)

ஆவியாயவியுமாகியருக்கமாய்ப்பெருக்கமாகிப்
பாவியர்பாவந்தீர்க்கும்பரமனாய்ப்பிரமனாகிக்
காவியங்கண்ணளாகிக்கடல்வண்ணனாகிநின்ற
தேவியைப்பாகம்வைத்தார்திருப்பயற்றூரனாரே. (௭)

தந்தைதாய்த்தாயுமாகித்தரணியாய்த்தரணியுள்ளார்க்
கெந்தையுமென்னநின்றவேழுலகுடனுமாகி
எந்தையெம்பிரானேயென்றென்றுள்குவாருள்ளத்தென்றுஞ்
சிந்தையுஞ்சிவமுமாவார்திருப்பயற்றூரனாரே. (௮)

புலன்களைப்போகநீக்கிப்புந்தியையொருங்கவைத்து
இணங்களைப்போகநின்றுவிரண்டையுநீக்கியொன்றாய்
மலங்களைமாற்றவல்லார்மனத்தினுட்போகமாகிச்
சினங்களைக்களைவர்போலுந்திருப்பயற்றூரனாரே. (௯)

மூர்த்திதன்மலையின்மீதுபோகாதாமுனிந்துநோக்கிப்
பார்த்துத்தான்பூமிமேலாற்பாய்ந்துடன்மலையைப்பற்றி
ஆர்த்திட்டான்முடிகள்பத்துமடர்த்துநல்லரிவையஞ்சத்
தேத்தெத்தாவென்னக்கேட்டார்திருப்பயற்றூரனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

த்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - ப்பயத்தீசுவரர்; முதல்வி - காவியங்கண்ணி.

## ௩௩. திருமறைக்காடு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

இந்திரனோடுதேவரிருடிகளேத்துகின்ற
சுந்தரமானார்போலுந்துதிக்கலாஞ்சோதிபோலும்
சந்திரனோடுங்கங்கையரவையுஞ்சடையுள்வைத்து
மந்திரமானார்போலுமாமறைக்காடனாரே. (௧)

தேயனநாடராகித்தேவர்கள்தேவர்போலும்
பாயனநாடறுக்கும்பத்தர்கள்பணியவம்மின்
காயனநாடுகண்டங்கதனுளார்காளகண்டர்
மாயனநாடர்போலுமாமறைக்காடனாரே. (௨)

அறுமையிவ்வுலகுதன்னையாமெனக்கருதிநின்று
வெறுமையின்மனைகள்வாழ்ந்துவினைகளானலிவுணாதே
சிறுமதியரவுகொன்றைதிகழ்தருசடையுள்வைத்து
மறுமையுமிம்மையாவார்மாமறைக்காடனாரே. (௩)

கால்கொடுத்திருகையேற்றிக்கழிநிரைத்திறைச்சிமேய்ந்து
தோல்படுத்துதிரநீராற்சுவரெடுத்திரண்டுவாசல்
ஏல்வுடைத்தாவமைத்தங்கேழுசாலேகம்பண்ணி
மால்கொடுத்தாவிவைத்தார்மாமறைக்காடனாரே. (௪)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கள்விரும்பியோதப்
பண்ணினார்கின்னரங்கள்பத்தர்கள்பாடியாடக்
கண்ணினார்கண்ணினுள்ளேசோதியாய்நின்றவெந்தை
மண்ணினார்வலங்கொண்டேத்துமாமறைக்காடனாரே. (௫)

அங்கையுளனலும்வைத்தாரறுவகைச்சமயம்வைத்தார்
தங்கையில்வீணைவைத்தார்தம்மடிபரவவைத்தார்
திங்களைக்கங்கையோடுதிகழ்தருசடையுள்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (௬)

கீதராய்க்கீதங்கேட்டுக்கின்னரந்தன்னைவைத்தார்
வேதராய்வேதமோதிவிளங்கியசோதிவைத்தார்
ஏதராய்நட்டமாடியிட்டமாய்க்கங்கையோடு
மாதையோர்பாகம்வைத்தார்மாமறைக்காடனாரே. (௭)

கனத்தினார்வலியுடையகடிமதிலரணமூன்றும்
சினத்தினுட்சினமாய்நின்றுதீயெழச்செற்றார்போலும்
தனத்தினைத்தவிர்ந்துநின்றுதம்மடிபரவுவார்க்கு
மனத்தினுண்மாசுதீர்ப்பார்மாமறைக்காடனாரே. (௮)

தேசனைத்தேசன்றன்னைத்தேவர்கள்போற்றிசைப்பார்
வாசனைசெய்துநின்றுவைகலும்வணங்குமின்கள்

காசினைக்கனலையென்றுங்கருத்தினில்வைத்தவர்க்கு
மாசினைத்தீர்ப்பர்போலுமாமறைக்காடனாரே. (கூ)

பிணியுடையாக்கைதன்னைப்பிறப்பறுத்துய்யவேண்டில்
பணியுடைத்தொழில்கள்பூண்டுபத்தர்கள்பற்றினாலே
துணிவுடையரக்கனோடியெடுத்தலுங்கோவைபத்தும்
மணிமுடிப்பத்திறுத்தார்மாமறைக்காடனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - வேதாரணியேசுவரர்; முதல்வி - [illegible] யம்மை.

## ருச. திருமறைக்காடு - திருநேரிசை

[illegible]

தேரையுமேல்கடாவித்திண்ணமாத்தெளிந்துநோக்கி
ஆரையுமேலுணராவாண்மையான்மிக்கானைப்
பாரையும்விண்ணுமஞ்சப்பரந்ததோள்முடியடர்த்துக்
காரிகையஞ்சலென்பார்கலிமறைக்காடனாரே. (க)

முக்கிமுன்வெகுண்டெடுத்தமுடியுடையரக்கர்கோனை
நக்கிருந்தூன்றிச்சென்னிநாண்மதிவைத்தவெந்தை
அக்கரவாமைபூண்டவழகனார்கருத்தினாலே
தெக்குநீர்த்திரைகண்மோதுந்திருமறைக்காடனாரே. (உ)

மிகப்பெருத்துலாவமிக்கானக்கொருதேர்கடாவி
அகப்படுத்தென்றுதானுமாண்மையான்மிக்கரக்கன்
உகைத்தெடுத்தான்மலையையூன்றலுமவனையங்கே
நகைப்படுத்தருளினானார்நான்மறைக்காடனாரே. (ங)

அந்தரந்தேர்கடாவியாரிவனென்றுசொல்லி
உந்தினான்மாமலையையூன்றலுமொல்லரக்கன்
பந்தமாந்தலைகள்பத்தும்வாய்கள்விட்டலறிவீழச்
சிந்தனைசெய்துவிட்டார்திருமறைக்காடனாரே. (ச)

தடுக்கவுந்தாங்கவொண்ணாத்தன்வலியுடையனாகிக்
கடுக்கவோர்தேர்கடாவிக்கையிருபதுகளாலும்
எடுப்பனானென்னபண்டமென்றெடுத்தானையேங்க
அடுக்கவேவல்லனாராமணிமறைக்காடுதானே. (ரு)

நாண்முடிக்கின்றசீரானடங்கியேமீதுபோகாமக்
கோள்பிடித்தார்த்தகையான்கொடியன்மாவலியனென்று
நீண்முடிச்சடையர்சேருநீள்வரையெடுக்கலுற்றான்
[illegible]யலை[illegible]ன்மறைக்காடனாரே. (சா)

பத்துவாயிரட்டிக்கைகளுடையன்மாவலியனென்று
பொத்திவாய்தீமைசெய்தபொருவலியரக்கர்கோனைக்
கத்திவாய்கதறவன்றுகால்விரலூன்றியிட்டார்
முத்துவாய்த்திரைகண்மோதுமுதுமறைக்காடனாரே. (௭

பக்கமேவிட்டகையான்பாங்கிலாமதியனாகிப்
புக்கனன்மாமலைக்கீழ்ப்போதுமாறறியமாட்டான்
மிக்கமாமதிகள்கெட்டுவீரமுமிழந்தவாறே
நக்கனபூதமெல்லாநான்மறைக்காடனாரே. (௮)

நாணஞ்சுகையனாகிநன்முடிபத்தினோடு
பாணஞ்சுமுன்னிழந்துபாங்கிலாமதியனாகி
நீணஞ்சுதானுணராநின்றெடுத்தானையன்று
ஏணஞ்சுகைகள்செய்தாரெழின்மறைக்காடனாரே. (௯)

கங்கைநீர்சடையுள்வைக்கக்காண்டலுமங்கையூடத்
தென்கையான்றேர்கடாவிச்சென்றெடுத்தான்மலையை
முன்கையானரம்புவெட்டிமுன்னிருக்கிசைகள்பாட
அங்கைவாளருளினானணிமறைக்காடுதானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௩௫. திருவிடைமருதூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

காடுடைச்சுடலைநீற்றர்கையில்வெண்டலையர்தையல்
பாடுடைப்பூதஞ்சூழப்பரமனார்மருதவைப்பில்
தோடுடைக்கைதையோடுஞ்சூழ்கிடங்கதனைச்சூழ்ந்த
ஏடுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧)

முந்தையார்முந்தியுள்ளார்மூவர்க்குமுதல்வரானார்
சந்தியார்சந்தியுள்ளார்தவநெறிதரித்துநின்றார்
சிந்தையார்சிந்தையுள்ளார்சிவநெறியனைத்துமானார்
எந்தையாரெம்பிரானாரிடைமருதிடங்கொண்டாரே. (௨)

காருடைக்கொன்றைமாலைகதிர்மணியரவினோடு
நீருடைச்சடையுள்வைத்தநீதியார்நீதியாய
போருடைவிடையொன்றேறவல்லவர்பொன்னித்தென்பால்
ஏருடைக்கமலமோங்குமிடைமருதிடங்கொண்டாரே. (௩)

விண்ணினார்விண்ணின்மிக்கார்வேதங்கணான்குமங்கம்
பண்ணினார்பண்ணின்மிக்கபாடலார்பாவந்தீர்க்கும்

கண்ணினார்கண்ணின்மிக்கநுதலினார்காமற்காய்ந்த
எண்ணினாரெண்ணின்மிக்காரிடைமருதிடங்கொண்டாரே. (௪)

வேதங்கணான்குங்கொண்டுவிண்ணவர்பரவியேத்தப்
பூதங்கள்பாடியாடலுடையவன்புனிதனெந்தை
பாதங்கள்பரவிநின்றபத்தர்கடங்கண்மேலை
ஏதங்கடீரநின்றாரிடைமருதிடங்கொண்டாரே. (௫)

பொறியரவரையிலார்த்துப்பூதங்கள்பலவுஞ்சூழ
முறிதருவன்னிகொன்றைமுதிர்சடைமுழ்கவைத்து
மறிதருகங்கைதங்கவைத்தவரெத்திசையும்
எறிதருபுனல்கொள்வேலியிடைமருதிடங்கொண்டாரே. (௬)

படரொளிசடையினுள்ளாற்பாய்புனலரவினோடு
சுடரொளிமதியம்வைத்துத்தூவொளிதோன்றுமெந்தை
அடரொளிவிடையொன்றேறவல்லவனன்பர்தங்கள்
இடரவைகெடவுநின்றாரிடைமருதிடங்கொண்டாரே. (௭)

கமழ்தருசடையினுள்ளார்கடும்புனலரவினோடு
தவழ்தருமதியம்வைத்துத்தன்னடிபலருமேத்த
மழுவதுவலங்கையேந்திமாதொருபாகமாகி
எழில்தருபொழில்கள்சூழ்ந்தவிடைமருதிடங்கொண்டாரே. (௮)

பொன்றிகழ்கொன்றைமாலைபுதுப்புனல்வன்னிமத்தம்
மின்றிகழ்சடையில்வைத்துமேதகத்தோன்றுகின்ற
அன்றவரளக்கலாகாவனலெரியாகிநீண்டார்
இன்றுடனுலகமேத்தவிடைமருதிடங்கொண்டாரே. (௯)

மலையுடன்விரவிநின்றுமதியிலாவரக்கனாக்கத்
தலையுடனடர்த்துமீண்டேதலைவனையருள்கணல்கிச்
சிறையுடைமலையைவாங்கித்திரிபுரமூன்றுமெய்தார்
இலையுடைக்கமலவேலியிடைமருதிடங்கொண்டாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மருதீசர்; முதல்வி - நலமுலைநாயகியம்மை.

---

36

## ௩௬. திருப்பழனம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ரொருவர்போலுமலர்கமழ்குழலினாளைக்
கூடினாரொருவர்போலுங்குளிர்புனல்வளைந்ததிங்கள்
சூடினாரொருவர்போலுந்தூயநன்மறைகணான்கும்
பாடினாரொருவர்போலும்பழனத்தெம்பரமனாரே. (௧)

போவதோர்நெறியுமானார்புரிசடைப்புனிதனார்நான்
வேவதோர்வினையிற்பட்டுவெம்மைதான்விடவுங்கில்லேன்
கூவருனவர்கள்கேளார்குணமிலாவைவர்செய்யும்
பாவமேதீரநின்றார்பழனத்தெம்பரமனாரே.

கண்டராய்முண்டராகிக்கையிலோர்கபாலமேந்தித்
தொண்டர்கள்பாடியாடித்தொழுகழற்பரமனார்தாம்
விண்டவர்புரங்களெய்தவேதியாவேதநாவர்
பண்டையென்வினைகடீர்ப்பார்பழனத்தெம்பரமனாரே.

நீரவன்றீயினோடுநிழலவனெழிலதாய
பாரவன்விண்ணின்மிக்கபரமவன்பரமயோகி
ஆரவனண்டமிக்கதிசையினோடொளிகளாகிப்
பாரகத்தமுதமானார்பழனத்தெம்பரமனாரே.

[illegible]ழியாரூழிதோறுமுலகினுக்கொருவராகி
பாழியார்பாவந்தீர்க்கும்பராபரர்பரமதாய
ஆழியானன்னத்தானுமன்றவர்க்களப்பரிய
பாழியார்பரவியேத்தும்பழனத்தெம்பரமனாரே.

[illegible]லின்கீழறங்களெல்லாமன்றவர்க்கருளிச்செய்து
நூலின்கீழவர்கட்கெல்லாநுண்பொருளாகிநின்று
காலின்கீழ்க்காலன்றன்னைக்கடுகத்தான்பாய்ந்துபின்னும்
பாலின்கீழ்நெய்யுமானார்பழனத்தெம்பரமனாரே.

ஆதித்தனங்கிசோமனயனொடுமால்புதனும்
போதித்துநின்றுலகிற்போற்றிசைத்தாரிவர்கள்
சோதித்தாரேழுலகுஞ்சோதியுட்சோதியாகிப்
பாதிப்பெண்ணுருவமானார்பழனத்தெம்பரமனாரே.

காற்றனாற்காலற்காய்ந்துகாரிருள்போர்த்தவீசர்
தோற்றனார்கடலுணஞ்சைத்தோடுடைக்காதர்சோதி
ஏற்றினாரிளவெண்டிங்களிரும்பொழில்சூழ்ந்தகாயம்
பாற்றினார்வினைகளெல்லாம்பழனத்தெம்பரமனாரே.

கண்ணனும்பிரமனோடுகாண்கிலராகிவந்தே
எண்ணியுந்துதித்துமேத்தவெரியுருவாகிநின்று
வண்ணநன்மலர்கடூவிவாழ்த்துவாராவாழ்த்தநேயத்தப்
பண்ணுலாம்பாடல்கேட்டார்பழனத்தெம்பரமனாரே.

குடையுடையரக்கன்சென்றுகுளிர்கயிலாயவெற்பின்
இடைமடவரலையஞ்சவெடுத்தலுமிறைவனோக்கி
விடையுடைவிகிர்தன்றானும்விரலினாலூன்றிமீண்டும்
படைகொடையடிகள்போலும்பழனத்தெம்பரமனாரே.

திருச்சிற்றம்பலம்

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
முதல்வன் - ஆபத்சகாயர்; முதல்வி - பெரியநாயகியம்மை.

## ௩௭. திருநெய்த்தானம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

காலனைவீழச்செற்றகழலடியிரண்டும்வந்தென்
மேலவாயிருக்கப்பெற்றேன்மேதகத்தோன்றுகின்ற
கோலநெய்த்தானமென்னுங்குளிர்பொழிற்கோயின்மேய
நீலம்வைத்தனையகண்டத்தினைக்குமாநினைக்கின்றேனே. (௧)

காமனையன்றுகண்ணாற்கனலெரியாகநோக்கித்
தூபமுந்தீபங்காட்டித்தொழுமவர்க்கருள்கள்செய்து
சேமநெய்த்தானமென்னுஞ்செறிபொழிற்கோயின்மேய
வாமனைநினைந்தநெஞ்சம்வாழ்வுறநினைந்தவாறே. (௨)

பிறைதருசடையின்மேலேபெய்புனற்கங்கைதன்னை
உறைதரவைத்தவெங்களுத்தமனூழியாய
நிறைதருபொழில்கள்சூழநின்றநெய்த்தானமென்று
குறைதருமடியவர்க்குக்குழகனைக்கூடலாமே. (௩)

வடிதருமழுவொன்றேந்திவார்சடைமதியம்வைத்துப்
பொடிதருமேனிமேலேபுரிதருநூலர்போலும்
நெடிதருபொழில்கள்சூழநின்றநெய்த்தானமேவி
அடிதருகழல்களார்ப்பவாடுமெம்மண்ணலாரே. (௪)

காடிடமாகநின்றுகனலெரிகையிலேந்திப்
பாடியபூதஞ்சூழப்பண்ணுடன்பலவுஞ்சொல்லி
ஆடியகழலார்சீராரந்தநெய்த்தானமென்றும்
கூடியகுழகனாரைக்கூடுமாறறிகிலேனே. (௫)

வானவர்வணங்கியேத்திவைகலுமலர்கடூவத்
தானவர்க்கருள்கள்செய்யுஞ்சங்கரன்செங்கணேற்றன்
தேனமர்பொழில்கள்சூழத்திகழுநெய்த்தானமேய
கூனிளமதியினானைக்கூடுமாறறிகிலேனே. (௬)

காலதிர்க்கழல்களார்ப்பக்கனலெரிகையில்வீசி
ஞாலமுங்குழியநின்றுநட்டமதாடுகின்ற
மேலவர்முகடுதோயவிரிசடைதிசைகள்பாய
மாலொருபாகமாகமகிழ்ந்தநெய்த்தானனாரே. (௭)

பந்தித்தசடையின்மேலேபாய்புனலதனைவைத்து
அந்திப்போதனலுமாடியடிகளையாறுபுக்கார்
வந்திப்பார்வணங்கிநின்றுவாழ்த்துவார்வாயினுள்ளார்
சிந்திப்பார்சிந்தையுள்ளார்திருந்துநெய்த்தானனாரே. (௮)

சோதியாய்ச்சுடருமானார்சுண்ணவெண்சாந்துபூசி
ஓதிவாயுலகமேத்தவுகந்துதாமருள்கள்செய்வார்

ஆதியாயந்தமானார்யாவருமிறைஞ்சியேத்த
நீதியாய்நியமமாகிநின்றநெய்த்தானனாரே. (௯)

இலையுடைப்படைகையேந்துமிலங்கையர்மன்னன்றன்னைத்
தலையுடனடர்த்துமீண்டேதானவற்கருள்கள்செய்து
சிலையுடன்கணையைச்சேர்த்துத்திரிபுரமெரியச்செற்ற
நிலையுடையடிகள்போலுநின்றநெய்த்தானனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - நெய்யாடியப்பர்; முதல்வி - பாலாம்பிகையம்மை.

---

38

## ௩அ. திருவையாறு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கங்கையைச்சடையுள்வைத்தார்கதிர்பொறியரவும்வைத்தார்
திங்களைத்திகழவைத்தார்திசைதிசைதொழவும்வைத்தார்
மங்கையைப்பாகம்வைத்தார்மான்மறிமழுவும்வைத்தார்
அங்கையுளனலும்வைத்தாரையனையாறனாரே. (௧)

பொடிதனைப்பூசவைத்தார்பொங்குவெண்ணூலும்வைத்தார்
கடியதோர்நாகம்வைத்தார்காலனைக்காலவைத்தார்
வடிவுடைமங்கைதன்னைமார்பிலோர்பாகம்வைத்தார்
அடியிணைதொழவும்வைத்தாரையனையாறனாரே. (௨)

உடைதரு [illegible] ளும்வைத்தாருலக
படைதருமழுவும்வைத்தார்பாயபுலித்தோலும்வைத்தார்
விடைதருகொடியும்வைத்தார்வெண்புரிநூலும்வைத்தார்
அடைதரவருளும்வைத்தாரையனையாறனாரே. (௩)

தொண்டர்கடொழவும்வைத்தார்தூமதிசடையில்வைத்தார்
இண்டையைத்திகழவைத்தாரெமக்கென்றுமின்பம்வைத்தார்
வண்டுசேர்குழலினாளைமருவியோர்பாகம்வைத்தார்
அண்டவானவர்களேத்துமையனையாறனாரே. (௪)

வானவர்வணங்கவைத்தார்வல்வினைமாயவைத்தார்
கானிடைநடமும்வைத்தார்காமனைக்கனலாவைத்தார்
ஆனிடையைந்தும்வைத்தாராட்டுவார்க்கருளும்வைத்தார்
ஆனியனூரிவைவைத்தாரையனையாறனாரே. (௫)

சங்கணிகுழையும்வைத்தார்சாம்பர்மெய்ப்பூசவைத்தார்
வெங்கதிரெரியவைத்தார்விரிபொழிலனைத்தும்வைத்தார்
ங்குலும்பகலும்வைத்தார்கடுவினைகளையவைத்தார்
அங்கமதோதவைத்தாரையனையாறனாரே. (௬)

பத்தர்கட்கருளும்வைத்தார்பாய்விடையேறவைத்தா
சித்தத்தையொன்றவைத்தார்சிவமதேநினையவைததாா
முத்தியைமுற்றவைத்தார்முறைமுறைநெறிகள்வைத்தார்
ரிவைவை ஞரே. (எ)

ஏறுகந்தேறவைத்தாரிடைமருதிடமும்வைத்தார்
நாறுபூங்கொன்றைவைத்தார்நாகமுமரையில்வைத்தார்
கூறுமையாகம்வைத்தார்கொல்புலித்தோலும்வைத்தார்
ஆறுமோர்சடையில்வைத்தாரையனையாறனாரே. (அ)

பூதங்கள்பலவும்வைத்தார்பொங்குவெண்ணீறும்வைத்தார்
கீதங்கள்பாடவைத்தார்கின்னரந்தன்னைவைத்தார்
பாதங்கள்பரவவைத்தார்பத்தர்கள்பணியவைத்தார்
ஆதியுமந்தம்வைத்தாரையனையாறனாரே. (கூ)

இரப்பவர்க்கீயவைத்தாரீபவர்க்கருளும்வைத்தார்
கரப்பவர்தங்கட்கெல்லாங்கடுநரகங்கள்வைத்தார்
பரப்புநீர்க்கங்கைதன்னைப்படர்சடைப்பாகம்வைத்தார்
அரக்கனுக்கருளும்வைத்தாரையனையாறனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - செம்பொற்சோதீசுவரர்; முதல்வி - அறம்வளர்த்தநாயகி.

---

## 39 ருகூ. திருவையாறு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

குண்டனாய்ச்சமணரோடேகூடிநான்கொண்டமாலைத்
துண்டனேசுடர்கொள்சோதிதூநெறியாகிநின்ற
அண்டனேயமரரேறேதிருவையாறமர்ந்ததேனே
தொண்டனேன்றொழுதுன்பாதஞ்சொல்லிநான்றிரிகின்றேனே. (க)

பீலிகையிடுக்கிநாளும்பெரியதோர்தவமென்றெண்ணி
வாலியதறிகள்போலமதியிலார்பட்டதென்னே
வாலியார்வணங்கியேத்துந்திருவையாறமர்ந்ததேனே
டாலியாவெழுந்தநெஞ்சமழகிதாவெழுந்தவாறே. (உ)

தட்டிடுசமணரோடேதருக்கிநான்றவமென்றெண்ணி
ஒட்டிடுமனத்தினீரேயும்மையான்செய்வதென்னே
மொட்டிடுகமலப்பொய்கைத்திருவையாறமர்ந்ததேனே
பொட்டிடுமுள்ளத்தீரேயும்மைநானுகந்திட்டேனே. (ங)

பாசிப்பன்மாசுமெய்யர்பலமிலாச்சமணரோடு
நேசத்தாலிருந்தநெஞ்சைநீக்குமாறறியமாட்டேன்

தேசத்தார்பரவியேத்துந்திருவையாறமர்ந்ததேனை
வாசத்தால்வணங்கவல்லார் வல்வினைமாயுமன்றே. (௪)

கடுப்பொடியட்டிமெய்யிற்கருதியோர்தவமென்றெண்ணி
வடுக்களோடிசைந்தநெஞ்சேமதியிலிபட்டதென்னே
மடுக்களில்வாளைபாயுந்திருவையாறமர்ந்ததேனை
அடுத்துநின்றுன்னுநெஞ்சேயருந்தவஞ்செய்தவாறே.

துறவியென்றவமதோரேன்சொல்லியேசெலவுசெய்து
உறவினலமணரோடுமுணர்விலேனுணர்வொன்றின்றி
நறவமார்பொழில்கள்சூழ்ந்ததிருவையாறமர்ந்ததேனை
மறவிலாநெஞ்சமேநன்மதியுனக்கடைந்தவாறே. (௬)

பல்லுரைச்சமணரோடேபலபலகாலமெல்லாம்
சொல்லியசெலவுசெய்தேன்சோர்வனானினைந்தபோது
மல்லிகைமலருஞ்சோலைத்திருவையாறமர்ந்ததேனை
எல்லியும்பகலுமெல்லாநினைந்தபோதினியவாறே. (௭)

மண்ணுளார்விண்ணுளாரும்வணங்குவார்பாவம்போக
எண்ணிலாச்சமணரோடேயிசைந்தனையேழைநெஞ்சே
தெண்ணிலாவெறிக்குஞ்சென்னித்திருவையாறமர்ந்ததேனைக்
கண்ணினாற்காணப்பெற்றுக்கருதிற்றேமுடிந்தவாறே. (௮)

குருந்தமதொசித்தமாலுங்குலமலர்மேவினானும்
திருந்துநற்றிருவடியுந்திருமுடிகாணமாட்டார்
அருந்தவமுனிவரேத்துந்திருவையாறமர்ந்ததேனைப்
பொருந்திநின்றுன்னுநெஞ்சேபொய்வினைமாயுமன்றே. (௯)

அறிவிலாவரக்கனோடியருவரையெடுக்கலுற்று
முறுகினான்முறுகக்கண்டுமூதறிவாளனோக்கி
நிறுவினான்சிறுவிரலானெரிந்துபோய்நிலத்தில்வீழ
அறிவினலருள்கள்செய்தான்றிருவையாறமர்ந்ததேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - செம்பொற்சோதீசுவரர்; முதல்வி - அறம்வளர்த்தநாயகி.

## ௩௦. திருவையாறு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தானலாதுலகமில்லைச்சகமலாதடிமையில்லைக்
கானலாதாடலில்லைக்கருதுவார்தங்களுக்கு
வானலாதருளுமில்லைவார்குழன்மங்கையோடும்
ஆனலாதூர்வதில்லையையனையாறனார்க்கே. (௧)

ஆலலாவிருக்கையில்லையருந்தவமுனிவர்க்கன்று
நூலலாநொடிவதில்லைநுண்பொருளாய்ந்துகொண்டு

## ௪௧. திருச்சோற்றுத்துறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொய்விராமேனிதன்னைப்பொருளெனக்காலம்போக்கி
மெய்விராமனத்தனல்லேன்வேதியாவேதநாவா
ஐவராலலைக்கப்பட்டவாக்கைகொண்டயர்த்துப்போனேன்
செய்வராலுகளுஞ்செம்மைத்திருச்சோற்றுத்துறையனாரே. (௧)

கட்டராய்நின்றுநீங்கள்காலத்தைக்கழிக்கவேண்டா
எட்டவாங்கைகள்வீசியெல்லிநின்றாடுவானை
அட்டமாமலர்கள்கொண்டேயானஞ்சுமாட்டவாடிச்
சிட்டராயருள்கள்செய்வார்திருச்சோற்றுத்துறையனாரே. (௨)

கல்லினாற்புரமூன்றெய்தகடவுளைக்காதலாலே
எல்லியும்பகலுமுள்ளேயேகாந்தமாகவேத்தும்
பல்லில்வெண்டலைகையேந்திப்பல்லிலந்திரியுஞ்செல்வர்
சொல்லுநன்பொருளுமாவார்திருச்சோற்றுத்துறையனாரே. (௩)

கறையராய்க்கண்டநெற்றிக்கண்ணராய்ப்பெண்ணோர்பாகம்
இறையராயினியராகித்தனியராய்ப்பனிவெண்டிங்கட்
பிறையராய்ச்செய்ததெல்லாம்பீடராய்க்கேடில்சோற்றுத்
துறையராய்ப்புகுந்தெனுள்ளச்சோர்வுகண்டருளினாரே. (௪)

பொந்தையைப்பொருளாவெண்ணிப்பொருக்கெனக்காலம்போனேன்
எந்தையேயேகமூர்த்தியென்றுநின்றேத்தமாட்டேன்
பந்தமாய்வீடுமாகிப்பரம்பரமாகிநின்று
சிந்தையுட்டேறல்போலுந்திருச்சோற்றுத்துறையனாரே. (௫)

பேர்த்தினிப்பிறவாவண்ணம்பிதற்றுமின்பேதைபங்கன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபாசுபதன்றிறமே
ஆர்த்துவந்திழிவதொத்தவலைபுனற்கங்கையேற்றுத்
தீர்த்தமாப்போதவிட்டார்திருச்சோற்றுத்துறையனாரே. (௬)

கொந்தார்பூங்குழலினாரைக்கூறியேகாலம்போன
எந்தையெம்பிரானாய்நின்றவிறைவனையேத்தாதந்தோ
முந்தராவல்குலாளையுடன்வைத்தவாதிமூர்த்தி
செந்தாதுபுடைகள்சூழ்ந்ததிருச்சோற்றுத்துறையனாரே. (௭)

அங்கதிரோனவனையண்ணலாக்கருதவேண்டா
வெங்கதிரோன்வழியேபோவதற்கமைந்துகொண்மின்
அங்கதிரோனவனையுடன்வைத்தவாதிமூர்த்தி
செங்கதிரோன்வணங்குந்திருச்சோற்றுத்துறையனாரே. (௮)

ஓதியேகழிக்கின்றீர்களுலகத்தீரொருவன்றன்னை
நீதியானினையமாட்டீர்நின்மலனென்றுசொல்லீர்

## ௬௧. திருச்சோற்றுத்துறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பொய்விராமேனிதன்னைப்பொருளெனக்காலம்போக்கி
மெய்விராமனத்தனல்லேன்வேதியாவேதநாவா
ஐவராலலைக்கப்பட்டவாக்கைகொண்டயர்த்துப்போனேன்
செய்வராலுகளுஞ்செம்மைத்திருச்சோற்றுத்துறையனாரே. (௧)

கட்டராய்நின்றுநீங்கள்காலத்தைக்கழிக்கவேண்டா
எட்டவாங்கைகள்வீசியெல்லிநின்றாடுவானை
அட்டமாமலர்கள்கொண்டேயானஞ்சுமாட்டவாடிச்
சிட்டராயருள்கள்செய்வார்திருச்சோற்றுத்துறையனாரே. (௨)

கல்லினாற்புரமூன்றெய்தகடவுளைக்காதலாலே
எல்லியும்பகலுமுள்ளேயேகாந்தமாகவேத்தும்
பல்லில்வெண்டலைகையேந்திப்பல்லிலந்திரியுஞ்செல்வர்
சொல்லுநன்பொருளுமாவார்திருச்சோற்றுத்துறையனாரே. (௩)

கறையராய்க்கண்டநெற்றிக்கண்ணராய்ப்பெண்ணோர்பாகம்
இறையராயினியராகித்தனியராய்ப்பனிவெண்டிங்கட்
பிறையராய்ச்செய்ததெல்லாம்பீடராய்க்கேடில்சோற்றுத்
துறையராய்ப்புகுந்தென்னுள்ளச்சோர்வுகண்டருளினாரே. (௪)

பொந்தையைப்பொருளாவெண்ணிப்பொருக்கெனக்காலம்போனேன்
எந்தையேயேகமூர்த்தியென்றுநின்றேத்தமாட்டேன்
பந்தமாய்வீடுமாகிப்பரம்பரமாகிநின்று
சிந்தையுட்டேறல்போலுந்திருச்சோற்றுத்துறையனாரே.

பேர்த்தினிப்பிறவாவண்ணம்பிதற்றுமின்பேதைபங்கன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபாசுபதன்றிறமே
ஆர்த்துவந்திழிவதொத்தவலைபுனற்கங்கையேற்றுத்
தீர்த்தமாப்போதவிட்டார்திருச்சோற்றுத்துறையனாரே. (௬)

கொந்தார்பூங்குழலினாரைக்கூறியேகாலம்போன
எந்தையெம்பிரானாய்நின்றவிறைவனையேத்தாதந்தோ
முந்தராவல்குலாளையுடன்வைத்தவாதிமூர்த்தி
செந்தாதுபுடைகள்சூழ்ந்ததிருச்சோற்றுத்துறையனாரே. (௭)

அங்கதிரோனவனையண்ணலாக்கருதவேண்டா
வெங்கதிரோன்வழியேபோவதற்கமைந்துகொண்மின்
அங்கதிரோனவனையுடன்வைத்தவாதிமூர்த்தி
செங்கதிரோன்வணங்குந்திருச்சோற்றுத்துறையனாரே. (௮)

ஓதியேகழிக்கின்றீர்களுலகத்திரொருவன்றன்னை
நீதியானினையமாட்டீர்நின்மலனென்றுசொல்லீர்

சாதியாநான்முகனுஞ்சக்கரத்தானுங்காணாச்
சோதியாய்ச்சுடராதானார்திருச்சோற்றுத்துறையனாரே. (௯)

ர்மனம்வையாதேமறுமையைக்கழிக்கவேண்டில
பெற்றதோருபாயந்தன்னாற்பிரானையேபிதற்றுமின்கள்
கற்றுவந்தரக்கனோடிக்கயிலாயமலையெடுக்கச்
செற்றுகந்தருளிச்செய்தார்திருச்சோற்றுத்துறையனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - தொலையாச்செல்வர்; முதல்வி - ஒப்பிலாம்பிகை.

## ௩௨ நத்தி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பொருத்தியகுரம்பைதன்னைப்பொருளெனக்கருதவேண்டா
இருத்தியெப்போதுநெஞ்சுளிறைவனையேத்துமின்கள்
ஒருத்தியைப்பாகம்வைத்தங்கொருத்தியைச்சடையுள்வைத்த
துருத்தியஞ்சுடரினானைத்தொண்டனேன்கண்டவாறே. (௧)

சவைதனைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்ற
இவையொருபொருளுமல்லவிறைவனையேத்துமின்னோ
அவைபுரமூன்றுமெய்துமடியவர்க்கருளிச்செய்த
சுவையினைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௨)

உன்னியெப்போதுநெஞ்சுளொருவனையேத்துமின்னோ
கன்னியையொருபால்வைத்துக்கங்கையைச்சடையுள்வைத்துப்
பொன்னியினடுவுதன்னுட்பூம்புனல்பொலிந்துதோன்றும்
துன்னியதுருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௩)

ஊன [illegible] புலத்துளுயிர்கட்கெல்லாம்
தான்றலைப்பட்டுநின்றுசார்கனலகத்துவீழ
வான்றலைத்தேவர்கூடிவானவர்க்கிறைவாவென்னும்
தோன்றலைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௪)

உடறனைக்கழிக்கலுற்றவுலகத்துளுயிர்கட்கெல்லாம்
இடர்தனைக்கழிக்கவேண்டிலிறைவனையேத்துமின்னோ
கடறனினஞ்சமுண்டுகாண்பரிதாகிநின்ற
சுடர்தனைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே.

அள்ளலைக்கடக்கவேண்டிலரனையேநினைமினீர்கள்
பொள்ளலிக்காயந்தன்னுட்புண்டரீகத்திருந்த
வள்ளலைவானவர்க்குங்காண்பரிதாகிநின்ற
துள்ளலைத்துருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே.

பாதியிலுமையாள்தன்னைப்பாகமாவைத்தபண்பன்
வேதியனென்றுசொல்லிவிண்ணவர்விரும்பியேத்தச்
சாதியாஞ்சதுமுகனுஞ்சக்கரத்தானுங்காணாச்
சோதியைத்திருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (எ)

சாமனைவாழ்க்கையானசளத்துளேயழுந்தவேண்டா
தூமநல்லகிலுங்காட்டித்தொழுதடிவணங்குமின்றோ
சோமனைச்சடையுள்வைத்துத்தொன்னெறிபலவுங்காட்டும்
தூமனற்றிருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (அ)

குண்டரேசமணர்புத்தர்குறியறியாதுநின்று
கண்டதேகருதுவார்கள்கருத்தெண்ணாதொழிமினீர்கள்
விண்டவர்புரங்களெய்துவிண்ணவர்க்கருள்கள்செய்த
தொண்டர்கள்துணையினானைத்துருத்திநான்கண்டவாறே. (கூ)

பிண்டத்தைக்கழிக்கவேண்டிற்பிரானையேபிதற்றுமின்கள்
அண்டத்தைக்கழியநீண்டவடலரக்கன்றனுண்மை
கண்டொத்துக்கால்விரலாலூன்றிமீண்டருளிச்செய்த
துண்டத்துத்திருத்தியானைத்தொண்டனேன்கண்டவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வேதேசுவரர்; முதல்வி - முகிழாம்பிகையம்மை.

---

## சங. திருக்கச்சிமேற்றளி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மறையதுபாடிப்பிச்சைக்கென்றகந்திரிந்துவாழ்வார்
பிறையதுசடைமுடிமேற்பெய்வளையாடன்னோடும்
கறையதுகண்டங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
இறையவர்பாடலாடலிலங்குமேற்றளியனாரே. (௧)

மாலனமாயன்றன்னைமகிழ்ந்தனர்விருத்தராகும்
பாலனார்பசுபதியார்பால்வெள்ளைநீறுபூசிக்
காலனைக்காலாற்செற்றார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏலநற்கடம்பன்றந்தையிலங்குமேற்றளியனாரே. (௨)

ருமபவநதுறைஞ்சிவாழ்த்தப்
பண்ணிடைச்சுவையின்மிக்ககின்னரம்பாடல்கேட்பார்
கண்ணிடைமணியினொப்பார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணிடையெழுத்துமானாரிலங்குமேற்றளியனாரே. (௩)

ரக்கங்கை சூடும்
ரகளவலங்கொடுவந்துபோற்றக்
ரக்காயந்தகண்ணார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏமநின்றாடுமெந்தையிலங்குமேற்றளியனாரே. (௪)

ஊனவனுயிரினோடுமுலகங்களூழியாகித்
தானவர்தனமுமாகித்தனஞ்சயனோடேந்
கானவர்களாகண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏனமக்கோடுபூண்டாரிலங்குமேற்றளியனாரே. (௫)

மாயனாய்மாலனாகிமலரவனாகிமண்ணாய்த்
தேயமாய்த்திசையெட்டாகித்தீர்த்தமாய்த்திரிதர்கின்ற
காயமாய்க்காயத்துள்ளார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
ஏயமென்றோளிபாகரிலங்குமேற்றளியனாரே. (௬)

மண்ணினையுண்டமாயன்றன்னையோர்பாகங்கொண்டார்
பண்ணினைப்பாடியாடும்பத்தர்கள்சித்தங்கொண்டார்
கண்ணினைமூன்றுங்கொண்டார்காஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எண்ணினையெண்ணவைத்தாரிலங்குமேற்றளியனாரே. (௭)

செல்வியைப்பாகங்கொண்டார்சேந்தனைமகனாக்கொண்டார்
மல்லிகைக்கண்ணியோடுமாமலர்க்கொன்றைசூடிக்
கல்வியைக்கரையிலாதகாஞ்சிமாநகர்தன்னுள்ளால்
எல்லியைவிளங்கநின்றாரிலங்குமேற்றளியனாரே. (௮)

வேறிணையின்றியென்றும்விளங்கொளிமருங்கினாளைக்
கூறியல்பாகவைத்தார்கோளராமதியும்வைத்தார்
ஆறினைச்சடையுள்வைத்தாரணிபொழிற்கச்சிதன்னுள்
ஏறினையேறுமெந்தையிலங்குமேற்றளியனாரே. (௯)

தென்னவன்மலையெடுக்கச்சேயிழைநடுங்கக்கண்டு
மன்னவன்விரலாலூன்றமணிமுடிநெரியவாயால்
கன்னலின்கீதம்பாடக்கேட்டவர்காஞ்சிதன்னுள்
இன்னவற்கருளிச்செய்தாரிலங்குமேற்றளியனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

முதல்வர் - திருமேற்றளிநாதர்; முதல்வி - காமாட்சியம்மை

---

## ௪௪. திருக்கச்சியேகம்பம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

நம்பனைநகரமூன்றுமெரியுணவெருவநோக்கும்
அம்பனையமுதையாற்றையணிபொழிற்கச்சியுள்ளே
கம்பனைக்கதிர்வெண்டிங்கட்செஞ்சடைக்கடவுடன்னைச்
சொம்பொனைப்பவளத்தூணைச்சிந்தியாவெழுகின்றேனே

ஒருமுழமுள்ளகுட்டமொன்பதுதுளையுடைத்தாய்
அரைமுழமதனகலமதனில்வாழ்முதலையைந்து

பெருமழைவாய்நல்பற்றிக்கிடந்துநான்பிதற்றுகின்றேன்
கருமுகிறவழுமாடக்கச்சியேகம்பனீரே.

ம ர்மழுவொன்றேந்திச்
சிலையினன்மதில்கண்மூன்றுந்தீயெழச்செற்றசெல்வர்
மந்தியேகம்பமேவினாரைத்
தலையினல்வணங்கவல்லார்தலைவர்க்குந்தலைவர்தாமே. (௩)

பூத்தபொற்கொன்றைமாலைபுரிசடைக்கணிந்தசெல்வர்
தீர்த்தமாங்கங்கையாளைத்திருமுடிதிகழவைத்து
ஏத்துவாரேத்தநின்றவேகம்பமேவினாரை
வாழ்த்துமாறறியமாட்டேன்மால்கொடுமயங்கினேனே. (௪)

மையினார்மலர்நெடுங்கண்மங்கையோர்பங்கராகிக்
கையிலோர்கபாலமேந்திக்கடைதொறும்பலிகொள்வார்தாம்
எய்வதோரேனமோட்டியேகம்பமேவினாரைக்
கையினாற்றொழுவல்லார்க்குக்கடுவினைகளையலாமே.

தருவினைமருவுங்கங்கைதங்கியசடையனெங்கள்
அருவினையகலநல்குமண்ணலையமரர்போற்றும்
திருவினைத்திருவேகம்பஞ்செப்பிடவுறையவல்ல
உருவினையுருகியாங்கேயுள்ளத்தாலுகக்கின்றேனே. (௬)

கொண்டதோர்கோலமாகிக்கோலக்காவுடையகூத்தன்
உண்டதோர்நஞ்சமாகியுலகெலாமுய்யவுண்டான்
எண்டிசையோருமேத்தநின்றவேகம்பன்றன்னைக்
கண்டுநானடிமைசெய்வான்கருதியேதிரிகின்றேனே. (௭)

படமுடையரவினோடுபனிமதியதனைச்சூடிக்
கடமுடையுரிவைமூடிக்கண்டவரஞ்சவம்ம
இடமுடைக்கச்சிதன்னுளேகம்பமேவினான்றன்
நடமுடையாடல்காணஞாலந்தானுய்ந்தவாறே. (௮)

பொன்றிகழ்கொன்றைமாலைபொருந்தியநெடுந்தண்மார்பர்
நன்றியிற்புகுந்தெனுள்ளமெள்ளவேநவிலநின்று
குன்றியிலடுத்தமேனிக்குவளையங்கண்டரெம்மை
இன்றுயில்போதுகண்டாரினியரேகம்பனாரே. (௯)

திருத்தியார்பழனத்துள்ளார்தொண்டர்கள்பலருமேத்த
அருத்தியாலன்புசெய்வாரவரவர்க்கருள்கள்செய்தே
எருத்தினையிசையவேறியேகம்பமேவினார்க்கு
வருத்திநின்றடிமைசெய்வார்வல்வினைமாயுமன்றே. (க0)

ம்பலம்.

## ரு. திருவொற்றியூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

பண்பாதம்

மெள்ளத்தானடையவேண்டின்மெய்தருஞானத்தீயால்
கள்ளத்தைக்கழியநின்றார்காயத்துக்கலந்துநின்று
உள்ளத்துளொளியுமாகுமொற்றியூருடையகோவே. (க)

வசிப்பெனும்வாழ்க்கைவேண்டாவானவரிறைவனின்று
புசிப்பதோர்பொள்ளலாக்கையதனொடும்புணர்வுவேண்டில்
அசிர்ப்பெனுமருந்தவத்தாலான்மாவினிடமதாகி
உசிர்ப்பெனுமுணர்வுமுள்ளாரொற்றியூருடையகோவே. (உ)

தானத்தைச்செய்துவாழ்வான்சலத்துளேயழுந்துகின்றீர்
வானத்தைவணங்கவேண்டில்வம்மின்கள்வல்லீராகில்
ஞானத்தைவிளக்கையேற்றிநாடியுள்ளிரவவல்லார்
ஊனத்தையொழிப்பர்போலுமொற்றியூருடையகோவே. (ந)

காமத்துளழுந்திநின்றுகண்டராலொறுப்புண்ணாதே
சாமத்துவேதமாகிநின்றதோர்சயம்புதன்னை
ஏமத்துமிடையிராவுமேகாந்தமியம்புவார்க்கு
ஓமத்துளொளியதாகுமொற்றியூருடையகோவே. (ச)

சமையமேலாறுமாகித்தானொருசயம்புவாகி
இமையவர்பரவியேத்தவினிதினங்கிருந்தவீசன்
கமையினையுடையராகிக்கழலடிபரவுவார்க்கு
உமையொருபாகர்போலுமொற்றியூருடையகோவே. (ரு)

ஒருத்திதன்றலைச்சென்றாளைக்கரந்திட்டானுலகமேத்த
ஒருத்திக்குநல்லனாகிமறுப்படுத்தொளித்துமீண்டே
ஒருத்தியைப்பாகம்வைத்தானுணர்வினாலையமுண்ணி
ஒருத்திக்குநல்லனல்லனொற்றியூருடையகோவே. (சு)

பிணமுடையுடலுக்காகப்பித்தராய்த்திரிந்துநீங்கள்
புணர்வெனும்போகம்வேண்டாபோக்கலாம்பொய்யைநீங்க
நிணமுடைநெஞ்சினுள்ளானினைக்குமாநினைக்கின்றார்க்கு
உணர்விளேடிருப்பர்போலுமொற்றியூருடையகோவே. (எ)

பின்னுவார்சடையான்றன்னைப்பிதற்றிலாப்பேதைமார்கள்
துன்னுவார்நரகந்தன்னுட்டொல்வினைதீரவேண்டின்
மன்னுவான்மறைகளோதிமனத்தினுள்விளக்கொன்றேற்றி
உன்னுவாருள்ளத்துள்ளாரொற்றியூருடையகோவே. (அ)

முள்குவார்போகம்வேண்டின்முயற்றியாலிடர்கள்வந்தால்
எள்குவாரெள்கிநின்றங்கிதுமொருமாயமென்பார்

பள்குவார்பத்தராகிப்பாடியுமாடிநின்றும்
உள்குவாருள்ளத்துள்ளாரொற்றியூருடையகோவே. (௯)

கப் 'வண்டுமெநஞ்சே
மறுத்துகவாரவசமசறறசகுமாரதஙகளானமாயப்
பொறுத்துகப்புட்பகத்தேருடையானையடரவூன்றி
ஒறுத்துகந்தருள்கள்செய்தாரொற்றியூருடையகோவே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.
முதல்வன் - மாணிக்கத்தியாகர்; முதல்வி - வடிவுடையம்மை.

## ௪௬. திருவொற்றியூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ஓம்பினேன்கூட்டைவாளாவுள்ளத்தோர்கொடுமைவைத்துக்
காம்பிலாமூழைபோலக்கருதிற்றேமுகக்கமாட்டேன்
(௧)

மனமெனுந்தோணிபற்றிமதியெனுங்கோலையூன்றிச்
சினமெனுஞ்சரக்கையேற்றிச்செறிகடலோடும்போது
மதனெனும்பாறைதாக்கிமறியும்போதறியவொண்ணா
துனையுனுமுணர்வைநல்காயொற்றியூருடையகோவே. (௨

திருச்சிற்றம்பலம்.

## ௪௭. திருக்கைலாயம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கனகமாவயிரமுந்துமாமணிக்கயிலைகண்டு
உனகனாயரக்கனோடியெடுத்தலுமுமையாளஞ்ச
அனகனுப்நின்றவீசனூன்றலுமலறிவீழ்ந்தான்
மனகனாயூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே.

கதித்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
அதிர்த்தவனெடுத்திடல்மரிவைதானஞ்சவீசன்
நெதித்தவனூன்றியிட்டநிலையழிந்தலறிவீழ்ந்தான்
மதித்திறையூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே.

கறுத்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையைக்கையால்
மறித்தலுமங்கையஞ்சவானவரிறைவனக்கு
நெரித்தொருவிரலாலூன்றநெடுவரைபோலவீழ்ந்தான்
மறுத்திறையூன்றினேன்மறித்துநோக்கில்லைய

கடுத்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
எடுத்தலுமங்கையஞ்சவிறையவனிறையேநக்கு
கொடிப்பாவிரலாலூன்றநோவதுமலறியிட்டான்
மடித்திறையூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௪)

கன்றித்தன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
வென்றித்தன்கைத்தலத்தாலெடுத்தலும்வெருவமங்கை
நன்றுத்தானக்குநாதனூன்றலுநகழவீழ்ந்தான்
மன்றித்தானூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௫)

களித்தவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
நெளித்தவனெடுத்திடலுநேரிழையஞ்சநோக்கி
வெளித்தவனூன்றியிட்டவெற்பினாலலறிவீழ்ந்தான்
மளித்திறையூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௬)

ய்க்கண்சிவந்துகயிலைநன்மலையைக்கையால்
ீசன்
தேவன ந்தான்
வருத்துவானூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௭)

கடியவன்கண்சிவந்துகயிலைநன்மலையையோடி
வடிவுடைமங்கையஞ்சவெடுத்தலுமருவநோக்கிச்
செடிபடத்திருவிரலானூன்றலுஞ்சிதைந்துவீழ்ந்தான்
வடிவுறவூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௮)

கரியத்தான்கண்சிவந்துகயிலைநன்மலையைப்பற்றி
இரியத்தானெடுத்திடலுமேந்திழையஞ்சவீசன்
நெரியத்தானூன்றுமுன்னநிற்கிலாதலறிவீழ்ந்தான்
மரியத்தானூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௯)

கற்றனன்கயிலைதன்னைக்காண்டலுமாரக்கனோடிச்
செற்றவனெடுத்தவாறேசேயிழையஞ்சவீசன்
உற்றிறையூன்றுமுன்னமுனர்வழிவகையால்வீழ்ந்தான்
மற்றிறையூன்றினேன்மறித்துநோக்கில்லையன்றே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் வடநாட்டில் உள்ளது.
முதல்வன் - கைலாயநாதர்; முதல்வி - பார்வதியம்மை.

---

48

## ௪அ. திருவாப்பாடி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கடலகமேழினோடும்புவனமுங்கலந்த
உடலகத்துயிரும்பாருமொள்ளழலாகிநின்று
தடமலர்க்கந்தமாலைதண்மதிபகலுமாகி
மடலவிழ்கொன்றைசூடிமன்னுமாப்பாடியாரே. (௧)

ஆதியுமறிவுமாகியறிவினுட்செறிவுமாகிச்
சோதியுட்சுடருமாகித்தூநெறிக்கொருவனாகிப்
பாதியிற்பெண்ணுமாகிப்பரவுவார்பாங்கராகி
வேதியர்வாழுஞ்சேய்ஞல்விரும்புமாப்பாடியாரே.

எண்ணுடையிருக்குமாகியிருக்கினுட்பொருளுமாகிப்
பண்ணொடுபாடறன்னைப்பரவுவார்பாங்கனாகிக்
கண்ணொருநெற்றியாகிக்கருதுவார்கருதலாகாப்
பெண்ணொருபாகமாகிப்பேணுமாப்பாடியாரே.

அண்டமாரமரர்கோமானாதியெம்மண்ணல்பாதம்
கொண்டவன்குறிப்பினாலேகூப்பினான்றாபரத்தைக்
கண்டவன்றாதைபாய்வான்காலறவெறியக்கண்டு
தண்டியார்க்கருள்கள்செய்ததலைவராப்பாடியாரே.

சிந்தையுந்தெளிவுமாகித்தெளிவினுட்சிவமுமாகி
வந்தனன்பயனுமாகிவாணுநல்பாகமாகி
மந்தமாம்பொழில்கள்சூழ்ந்தமண்ணித்தென்கரைமேன்மன்னி
அந்தமோடளவிலாதவடிகளாப்பாடியாரே.

[illegible] தமதியமுமாறுஞ்சூடி
மின்னியவுருவாஞ்சோதிமெய்ப்பொருட்பய[illegible]
கன்னியோர்பாகமாகிக்கருதுவார்கருத்துமாகி
இன்னிசைதொண்டர்பாடவிருந்தவாப்பாடியாரே.

உள்ளுமாய்ப்புறமுமாகியுருவுமாயருவுமாகி
வெள்ளமாய்க்கரையுமாகிவிரிகதிர்ஞாயிறாகிக்
கள்ளமாய்க்கள்ளத்துள்ளார்கருத்துமாயருத்தமாகி
அள்ளுவார்க்கள்ளல்செய்திட்டிருந்தவாப்பாடியாரே.

மயக்கமாய்த்தெளிவுமாகிமால்வரைவளியுமாகித்
தியக்கமாயொருக்கமாகிச்சிந்தையுளொன்றிநின்று
இயக்கமாயிருதியாகியெண்டிசைக்கிறைவராகி
அயக்கமாயடக்கமாயவைவராப்பாடியாரே.

ஆரழலுருவமாகியண்டமேழ்கடந்தவெந்தை
பேரொளியுருவினானைப்பிரமனுமாலுங்காணாச்
சீரவைபாடியேத்திச்சென்றடிவணங்குவார்க்குப்
பேரருளருளிச்செய்வார்பேணுமாப்பாடியாரே.

திண்டிறலரக்கனோடிச்சீகயிலாயந்தன்னை
எ[illegible]
விண்டிறனெரியவூன்றிமிகக்கடுத்தலறிவீழப்
பண்டிறல்கேட்டுகந்தபரமராப்பாடியாரே.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பாலுகந்தநாயகர்; முதல்வி - பெரியநாயகி.

## சக. திருக்குறுக்கைவீரட்டம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ஆதியிற்பிரமனார்தாமர்ச்சித்தாரடியிணைக்கீழ்
ஓதியவேதநாவருணருமாருணரலுற்றார்
சோதியுட்சுடராய்த்தோன்றிச்சொல்லினையிறந்தார்பல்பூக்
கோதிவண்டறையுஞ்சோலைக்குறுக்கைவீரட்டனாரே. (க)

நீற்றினைநிறையப்பூசிநித்தலுநியமஞ்செய்து
ஆற்றுநீர்பூரித்தாட்டுமந்தணாளனைக்கொல்வான்
சாற்றுநாளற்றதென்றுதருமராசற்காய்வந்த
கூற்றினைக்குமைப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (உ)

தழைத்ததோராத்தியின்கீழ்த்தாபரமணலாற்கூப்பி
அழைத்தங்கேயாவின்பாலைக்கறந்துகொண்டாட்டக்கண்டு
பிழைத்ததன்றாதைதாளைப்பெருங்கொடுமழுவால்வீசக்
குழைத்ததோரமுதமீந்தார்குறுக்கைவீரட்டனாரே. (ந)

சிலந்தியுமானைக்காவிற்றிருநிழற்பந்தர்செய்து
உலந்தவணிறந்தபோதேகோச்செங்கணானுமாகக்
கலந்தநீர்க்காவிரிசூழ்சோணாட்டுச்சோழர்தங்கள்
குலந்தனிற்பிறப்பித்திட்டார்குறுக்கைவீரட்டனாரே. (ச)

ஏறுடனேழடர்த்தானெண்ணியாயிரம்பூக்கொண்டு
ஆறுடைச்சடையினானையர்ச்சித்தானடியிணைக்கீழ்
வேறுமோர்பூக்குறையமெய்ம்மலர்க்கண்ணையீண்டக்
கூறுமோராழியீந்தார்குறுக்கைவீரட்டனாரே.

கல்லினாலெறிந்துகஞ்சிதாமுணுஞ்சாக்கியனார்
நெல்லினார்சோறுணாமேநீள்விசும்பாளவைத்தார்
எல்லியாங்கெரிகையேந்தியெழிறிகழ்நட்டமாடிக்
கொல்லியாம்பண்ணுகந்தார்குறுக்கைவீரட்டனாரே. (சு)

காப்பதோர்வில்லுமம்புங்கையதோரிறைச்சிப்பாரம்
தோற்பெருஞ்செருப்புத்தொட்டுத்தூயவாய்க்கலசமாட்டித்
தீப்பெருங்கண்கள்செய்யக்குருதிநீரொழுகத்தன்கண்
கோப்பதும்பற்றிக்கொண்டார்குறுக்கைவீரட்டனாரே. (எ)

க்காடுதன்னினீண்டெரிதீபந்தன்னைக்
கறைநிறத்தெலிதன்மூக்குச்சுட்டிடக்கனன்றுதூண்ட
நிறைகடன்மண்ணும்விண்ணும்நீண்டவானுலகமெல்லாம்
குறைவறக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (அ)

அணங்குமைபாகமாகவடக்கியவாதிமூர்த்தி
வணங்குவாரிடர்கடீர்க்குமருந்துநல்லருந்தவந்த

கணம்புல்லர்க்கருள்கள்செய் துகாதலாமடியார்க்கென்றும்
குணங்களைக்கொடுப்பர்போலுங்குறுக்கைவீரட்டனாரே. (௯)

எடுத்தனனெழிற்கயிலையிலங்கையர்மன்னன்றன்னை
அடுத்தொருவிரலாலூன்றவலறிப்போயவனும்வீழ்ந்து
விடுத்தனன்கைநரம்பால்வேதகீதங்கள்பாடக்
கொடுத்தனர்கொற்றவாளுள்குறுக்கைவீரட்டனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

## ௫0. திருக்குறுக்கைவீரட்டம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

நெடியமால்பிரமனோடுநீரெனும்பிலயங்கொள்ள
அடியொடுமுடியுங்காணாருருச்சுனற்கம்பும்விலும்
துடியுடைவேடராகித்தூயமந்திரங்கள்சொல்லிக்
கொடிநெடுந்தேர்கொடுத்தார்குறுக்கைவீரட்டனாரே. (௧)

ஆத்தமாமயனுமாலுமன்றிமற்றொழிந்ததேவர்
சோத்தமெம்பெருமானென்றுதொழுதுதோத்திரங்கள்சொல்லத்
தீர்த்தமாமட்டமீமுன்சீருடையேழுநாளும்
கூத்தராய்வீதிபோந்தார்குறுக்கைவீரட்டனாரே. (௨)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வீரட்டேச்சுவரர்; முதல்வி - ஞானம்பிகை.

---

## ௫௧. திருக்கோடிகா - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கெற்றிமேற்கண்ணினானேநீறுமெய்பூசினானே
கற்றைப்புன்சடையினானேகடல்விடம்பருகினானே
செற்றவர்புரங்கண்மூன்றுஞ்செவ்வழல்செலுத்தினானே
குற்றமில்குணத்தினானேகோடிகாவுடையகோவே. (௧)

கடிகமழ்கொன்றையானேகபாலங்கையேந்தினானே
வடிவுடைமங்கைதன்னைமார்பிலோர்பாகத்தானே
அடியிணைபரவநாளுமடியவர்க்கருள்செய்வானே
கொடியணிவிழவதோவாக்கோடிகாவுடையகோவே. (௨)

நீறுமெய்பூசினானேநிழறிகழ்மழுவினானே
ஏறுகந்தேறினானேயிருங்கடலமுதொப்பானே
ஆறுமோர்நான்குவேதமறமுரைத்தருளினானே
கூறுமோர்பெண்ணினானேகோடிகாவுடையகோவே. (௩)

காலனைக்காலாற்செற்றன்றருள்புரிகருணையானே
நீலமார்கண்டத்தானேநீண்முடியமரர்கோவே
ஞாலமாம்பெருமையானேநளிரிளந்திங்கள்சூடும்
கோலமார்சடையினானேகோடிகாவுடையகோவே. (ச)

பூணரவாரத்தானேபுலியுரியரையினானே
காணில்வெண்கோவணமும்கையிலோர்கபாலமேந்தி
ஊணுமூர்ப்பிச்சையானேயுமையொருபாகத்தானே
கோணல்வெண்பிறையினானேகோடிகாவுடையகோவே. (ரு)

கேழல்வெண்கொம்புபூண்டகிளரொளிமார்பினானே
ஏழையேனேழையேனானென்செய்கேனெந்தைபெம்மான்
மாழையொண்கண்ணினார்கள்வலைதனின்மயங்குகின்றேன்
கூழையேறுடையசெல்வாகோடிகாவுடையகோவே. (சு)

அழலுமிழங்கையானேயரிவையோர்பாகத்தானே
தழலுமிழரவமார்த்துத்தலைதனிற்பலிகொள்வானே
நிழலுமிழ்சோலைசூழநீள்வரிவண்டினங்கள்
குழலுமிழ்கீதம்பாடுங்கோடிகாவுடையகோவே. (எ)

ஏவடுசிலையினானேபுரமவையெரிசெய்தானே
மாவடுவகிர்கொள்கண்ணாண்மலைமகள்பாகத்தானே
ஆவடுதுறையுளானேயைவரால்ஆட்டப்பட்டேன்
கோவடுகுற்றந்தீராய்கோடிகாவுடையகோவே. (அ)

...க்கவை

நாற்றமாமலர்மேலேறுநான்முகனிவர்கள்கூடி
ஆற்றலாலளக்கலுற்றார்க்கழலுருவாயினானே
கூற்றுக்குங்கூற்றதானாய்கோடிகாவுடையகோவே. (கூ)

பழகநானடிமைசெய்வேன்பசுபதீபாவநாசா
மழகளியானையின்றோல்மலைமகள்வெருவப்போர்த்த
அழகனேயரக்கன்றிண்டோளருவரைநெரியவூன்றும்
குழகனேகோலமார்பாகோடிகாவுடையகோவே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - கோடீச்சுவரர்; முதல்வி - வடிவாம்பிகை.

52

## ௫௨. * திருவாரூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

படுகுழிப்பவ்வத்தன்னபண்டியைப்பெய்தவாற்றால்
கெடுவதிம்மனிதர்வாழ்க்கைகாண்டொறுங்கேதுகின்றேன்
முடுகுவரிருந்துளைவர்மூர்க்கரேயிவர்களோடும்
அடியனேன்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௧)

புழுப்பெய்தபண்டிதன்னைப்புறமொருதோலான்மூடி
ஒழுக்கறுமொன்பதுவாயொற்றுமையொன்றுமில்லை
சழக்குடையிதனுளைவர்சங்கடம்பலவுஞ்செய்ய
அழிப்பனாய்வாழமாட்டேனாரூர்மூலட்டனீரே. (௨)

பஞ்சின்மெல்லடியினார்கள்பாங்கராயவர்கணின்று
நெஞ்சினோய்பலவுஞ்செய்துநினையினுநினையவொட்டார்
நஞ்சணிமிடற்றினானேநாதனேநம்பனேநான்
அஞ்சினேற்கஞ்சலென்னீராரூர்மூலட்டனீரே. (௩)

கெண்டையந்தடங்கணல்லார்தம்மையேகெழுமவேண்டிக்
குண்டராய்த்திரிதந்தைவர்குலைத்திடர்க்குழியினாக்கக்
கண்டுநான்றரிக்ககில்லேன்காத்துக்கொள்கறைசேர்கண்டா
அண்டவானவர்கள்போற்றுமாரூர்மூலட்டனீரே. (௪)

தாழ்குழலின்சொனல்லார்தங்களைத்தஞ்சமென்று
ஏழையேனாகினானுமென்செய்கேனெந்தைபெம்மான்
வாழ்வதேதலரிதுபோலும்வைகலுமைவர்வந்து
...ப்படுத்தவாற்றேனாரூர்மூலட் . னீரே. (௫)

மாற்றமொன்றருளகில்லீர்மதியிலேன்விதியிலாமை
சீற்றமுந்தீர்த்தல்செய்யீர்சிக்கெனவுடையாகிக்
கூற்றம்போலைவர்வந்துகுலைத்திட்டுக்கோகுசெய்ய
... நர்மூலட் ... (௬)

உயிர்நிலையுடம்பேகாலாயுள்ளமேதாழியாகத்
துயரமேயேற்றமாகத்துன்பக்கோலதனைப்பற்றிப்
பயிர்தனைச்சுழியவிட்டுப்பாழ்க்குநீரிறைத்துமிக்க
அயர்வினாலைவர்க்காற்றேனாரூர்மூலட்டனீரே. (௭)

... டிப்
பெற்றதேற்பெரிதுந்துன்பம்பேதையேன்பிழைப்பினாலே
முற்றினாலைவர்வந்துமுறைமுறைதுயரஞ்செய்ய
அற்றுநானலைந்துபோனேனாரூர்மூலட்டனீரே. (௮)

பத்தனாய்வாழமாட்டேன்பாவியேன்பரவிவந்து
... சய்ய

* ...என்பதத்துப்பொருள் இலக்குமிவாசஞ்செய்யுமூரென்பர்.

மத்துறுதயிரேபோலமறுகுமென்னுள்ளந்தானும்
அத்தனேயமரர்கோவேயாரூர்மூலட்டனீரே. (கூ)

தடக்கைநாலைந்துகொண்டுதடவரைதன்னைப்பற்றி
எடுத்தவன்பேர்க்கவோடியிரிந்தனபூதமெல்லாம்
முடித்தலைபத்துந்தோளுமுறிதரவிறையேயூன்றி
அடர்த்தருள்செய்ததென்னேயாரூர்மூலட்டனீரே. (கO)

திருச்சிற்றம்பலம்.

## ருங. திருவாரூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

குழல்வலங்கொண்டசொல்லாள்கோலவேற்கண்ணிதன்னைக்
கழல்வலங்கொண்டுநீங்காக்கணங்களைக்கண்களார
அழல்வலங்கொண்டகையானருட்கதிரெறிக்குமாரூர்
தொழவலங்கொண்டல்செய்வான்றோன்றினார்தோன்றினாரே. (க)

நாகத்தைநங்கையஞ்சநங்கையைமஞ்ஞையென்று
வேகத்தைத்தவிரநாகம்வேழத்தினுரிவைபோர்த்துப்
பாகத்தினிமிர்தல்செய்யாத்திங்களைமின்னென்றஞ்சி
ஆகத்திற்கிடந்தநாகமடங்குமாரூரனாரே. (உ)

தொழுதகங்குழையமேவித்தோட்டிமைபுடையதொண்டர்
அழுதகம்புகுந்துநின்றாரவரவர்போலுமாரூர்
எழிலகநடுவெண்முற்றமின்றியுமேர்கொள்வேலிப்
பொழிலகம்விளங்குதிங்கட்புதுமுகிழ்சூடினாரே. (ங)

நஞ்சிருள்மணிகொள்கண்டர்நகையிருளீமக்கந்தல்
வெஞ்சுடர்விளக்கத்தாடிவிளங்கினார்போலுமூவா
வெஞ்சுடர்முகடுதீண்டிவெள்ளிநாராசமென்ன
அஞ்சுடரணிவெண்டிங்களணியுமாரூரனாரே. (ச)

எந்தளிர்நீர்மைகோலமேனியென்றிமையோரேத்தப்
பைந்தளிர்க்கொம்பரன்னபடர்கொடிபயிலப்பட்டுத்
தஞ்சடைத்தொத்தினாலுந்தம்மதோர்நீர்மையாலும்
அந்தளிராகம்போலும்வடிவராரூரனாரே. (ரு)

வானகம்விளங்கமல்கும்வளங்கெழுமதியஞ்சூடித்
தானகமழியவந்துதாம்பலிதேர்வர்போலும்
ஊனகங்கழிந்தவோட்டிலுண்பதுமொளிகொணஞ்சம்
ஆனகமஞ்சுமாடுமடிகளாரூரனாரே (சு)

அஞ்ச[illegible] க்க

ய

தளியினார்பாதநாளுந்நினைவிலாத்தகவில்நெஞ்சந்
தெளிவிலேன்செய்வதென்னே திருப்புகலூரனீரே. (ரு)

இலவினார்மாதர்பாலேயிசைந்துநானிருந்துபின்னும்
நிலவுநாள்பலவென்றெண்ணிநீதனேநாதியுன்னை
உலவிநாளுள்கமாட்டேனுன்னடிபரவுஞானம்
செலவிலேன்செய்வதென்னே திருப்புகலூரனீரே. (சு)

காத்திலேனிரண்டுமூன்றுங்கல்வியேல்இல்லையென்பால்
வாய்த்திலேனடிமைதன்னுள்வாய்மையாற்றூயனல்லன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபரமனேபரவுவார்கள்
தீர்த்தமேதிகழும்பொய்கைத்திருப்புகலூரனீரே. (எ)

நீருமாய்த்தீயுமாகிநிலனுமாய்விசும்புமாகி
ஏருடைக்கதிர்களாகிஇமையவரிறைஞ்சநின்று
ஆய்வதற்கரியராகியங்கங்கேயாடுகின்ற
தேவர்க்குந்தேவராவார்திருப்புகலூரனாரே. (அ)

மெய்ப்புளேவிளக்கையேற்றிவேண்டளவுயரத்தூண்டி
உய்வதோருபாயம்பற்றிஉகக்கின்றேனுகவாவண்ணம்
ஐவரையகத்தேவைத்தீரவர்களேவலியர்சாலச்
செய்வதொன்றறியமாட்டேன்திருப்புகலூரனீரே. (கூ)

அருவரைதாங்கினானுமருமறையாதியானும்
இருவருமறியமாட்டாவீசனாரிலங்கைவேந்தன்
கருவரையெடுத்தஞான்றுகண்வழிகுருதிசோரத்
திருவிரல்சிறிதுவைத்தார்திருப்புகலூரனாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - அக்கினீச்சுவரர்; முதல்வி - கருந்தார்க்குழலியம்மை.

---

## ருரு. திருவலம்புரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தெண்டிரையோங்கியோதஞ்சென்றடிவீழுங்காலைத்
தொண்டிரைத்தண்டர்கோனைத்தொழுதடிவணங்கியெங்கும்
வண்டுகெண்டமதுக்கண்மாந்துவலம்புரத்தடிகடம்மைக்
கொண்டுநற்கீதம்பாடக்குழகர்தாமிருந்தவாறே. (க)

மடுக்களில்வாளைபாயவண்டினமிரிந்தபொய்கைப்
பிடுக்களிறென்னத்தம்மிற்பிணைபயின்றணைவரால்கள்

தளியினார்பாதநாளுந்நினைவிலாத்தகவில்நெஞ்சம்
தெளிவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே.

இலவினார்மாதர்பாலேயிசைந்துநானிருந்துபின்னும்
நிலவுநாள்பலவென்றெண்ணிநீதனேநாதியுன்னை
உலவிநானுள்கமாட்டேனுன்னடிபரவுஞானம்
செலவிலேன்செய்வதென்னேதிருப்புகலூரனீரே. (௬)

காத்திலேனிரண்டுமூன்றுங்கல்வியேயில்லையென்பால்
வாய்த்திலேனடிமைதன்னுள்வாய்மையாற்றூயேனல்லன்
பார்த்தனுக்கருள்கள்செய்தபரமனைபரவுவார்கள்
தீர்த்தமேதிகழும்பொய்கைத்திருப்புகலூரனீரே. (௭)

நீருமாய்த்தீயுமாகிநிலனுமாய்விசும்புமாகி
ஏருடைக்கதிர்களாகியிமையவரிறைஞ்சநின்று
ஆய்வதற்கரியராகியங்ஙனேயாடுகின்ற
தேவர்க்குந்தேவராவார்திருப்புகலூரனாரே. (௮)

மெய்யுளேவிளக்கையேற்றிவேண்டளவுயரத்தூண்டி
உய்வதோருபாயம்பற்றியுகக்கின்றேனுகவாவண்ணம்
ஐவரையகத்தேவைத்தீரவர்களேவலிபர்சாலச்
செய்வதொன்றறியமாட்டேன்திருப்புகலூரனீரே. (௯)

அருவரைதாங்கினானுமருமறையாதியானும்
இருவருமறியமாட்டாவீசனாரிலங்கைவேந்தன்
கருவரையெடுத்தஞான்றுகண்வழிகுருதிசோரத்
தோரல்சிறிதுவைத்தார்திருப்புகலூரனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - அக்கினீச்சுவரர்; முதல்வி - கருந்தார்க்குழலியம்மை.

## ௫௫. திருவலம்புரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தெண்டிரையோங்கியோதஞ்சென்றடிவீழுங்காலைத்
தொண்டிரைத்தண்டர்கோனைத்தொழுதடிவணங்கியெங்கும்
வண்டுகண்மதுக்கண்மாந்துவலம்புரத்தடிகடம்மைக்
கொண்டுநற்கீதம்பாடக்குழகர்தாமிருந்தவாறே. (௧)

மடுக்களில்வாளைபாயவண்டினமிரிந்தபொய்கைப்
பிடுக்களிறென்னத்தம் ப ல்கள்

தொடுத்தநன்மாலையேந்தித்தொண்டர்கள்பரவியேத்த
... பாகர்வல... (உ)

... ந்தச்சேர்த்தி
ஆனிடையஞ்சுங்கொண்டுவன்பினாலமரவாட்டி
வானிடைமதியஞ்சூடும்வலம்புரத்தடிகடம்மை
நானடைந்தேத்தப்பெற்றுநல்வினைப்பயனுற்றேனே. (ங)

முளையெயிற்றிளநல்லேனம்பூண்டுமொய்சடைகடாழ
வளையெயிற்றிளையநாகம்வலித்தரையிசையவீக்கிப்
புழைநகையபோர்வைபோர்த்துப்புனலொடுமதியஞ்சூடி
வளையயிலிளையவேத்தும்வலம்புரத்தடிகடாமே. (ச)

சுருளுறுவரையின்மேலாற்றுளங்கிளம்பளிங்குசிந்த
இருளுறுகதிர்நுழைந்தவிளங்கதிர்ப்பசலைத்திங்கள்
அருளுறுமடியரெல்லாமங்கையின்மலர்களேந்த
மருளுறுகீதங்கேட்டார்வலம்புரத்தடிகளாரே.

நினைக்கின்றேனெஞ்சுதன்னுணீண்டபுன்சடையினானை
அனைத்துடன்கொண்டுவந்தங்கன்பினாலமையவாட்டிப்
புனைக்கின்றேன்பொய்ம்மைதன்னைமெய்ம்மையைப்புணரமாட்டேன்
எனக்குநான்செய்வதென்னேயினிவலம்புரவனீரே. (சு)

செங்கயல்சேல்கள்பாய்ந்துதேம்பழமினியநாடித்
தங்கயந்துறந்துபோந்துதடம்பொய்கையடைந்துநின்று
கொங்கையர்குடையுங்காலைக்கொழுங்கனியழுங்கினாராம்
மங்கலமனையின்மிக்கார்வலம்புரத்தடிகளாரே. (எ)

அருநெலாங்குவளைசெந்நெலகவிலையாம்பனெய்தல்
தெருவெலாந்தெங்குமாவும்பழம்விழும்படப்பையெல்லாம்
குருகினங்கூடியாங்கேகும்மலித்திறகுலர்த்தி
மருவலாமிடங்கள்காட்டும்வலம்புரத்தடிகளாரே. (அ)

கருவரையனையமேனிக்கடல்வ... ...ங்காணான்
... ...
ஒருவரையுச்சியேறியோங்கினாரோங்கிவந்து
அருமையிலெளிமையானாரவர்வலம்புரவனாரே. (கூ)

வாளெயிறிலங்கநக்குவளர்கயிலாயந்தன்னை
ஆள்வலிகருதிச்சென்றவரக்கனைவரைக்கீழன்று
தோளொடுபத்துவாயுந்தொலைத்துடனழுந்தவூன்,
...ண்மையுங்... ...நீர்ப்பாரவர்வலம்புரவனாரே.

திருச்சிற்றம்ப...

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
முதல்வன் - வலம்புரநாதர்; முதல்வி - வடுவகிர்க்கண்ணியம்மை.

## ருசு. திருவாவடுதுறை - திருநேரிசை.

சிற்றம்பலம்

மாயிருஞாலமெல்லாமலரடிவணங்கும்போலும்
பாயிருங்கங்கையாளைப்படர்சடைவைப்பர்போலும்
காயிரும்பொழில்கள்சூழ்ந்தகழுமலவூரர்க்கம்பொன்
ஆயிரங்கொடுப்பர்போலுமாவடுதுறையனாரே. (௧)

மடந்தைபாகத்தர்போலுமான்மறிக்கையர்போலும்
குடந்தையிற்குழகர்போலுங்கொல்புலித்தோலர்போலும்
கடைந்தநஞ்சுண்பர்போலுங்காலனைக்காய்வர்போலும்
அடைந்தவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௨)

உற்றநோய்தீர்ப்பர்போலுமுறுதுணையாவர்போலும்
செற்றவர்புரங்கண்மூன்றுந்தீயெழச்செறுவர்போலும்
கற்றவர்பரவியேத்திக்கலந்துலந்துதலந்துபாடும்
அற்றவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௩)

மழுவமர்கையர்போலுமாதவள்பாகர்போலும்
எழுநுணைவேலர்போலுமென்புகொண்டணிவர்போலும்
தொழுதெழுந்தாடிப்பாடித்தோத்திரம்பலவுஞ்சொல்லி
அழுமவர்க்கன்பர்போலுமாவடுதுறையனாரே. (௪)

பொடிபணிமெய்யர்போலும்பொங்குவெண்ணூலர்போலும்
கடிபதோர்விடையர்போலுங்காமனைக்காய்வர்போலும்
வெடிபடுதலையர்போலும்வேட்கையாற்பரவுந்தொண்டர்
அடிமையையளப்பர்போலுமாவடுதுறையனாரே. (௫)

வக்கரனுயிரைவவ்வக்கண்மலர்கொண்டுபோற்றச்
சக்கரங்கொடுப்பர்போலுந்தானவர்தலைவர்போலும்
துக்கமாமூடர்தம்மைத்துயரிலேவீழ்ப்பர்போலும்
அக்கரையார்ப்பர்போலுமாவடுதுறையனாரே. (௬)

விடைதருகொடியர்போலும்வெண்புரிநூலர்போலும்
படைதருமழுவர்போலும்பாய்புலித்தோலர்போலும்
உடைதருகீளர்போலுமுலகமுமாவர்போலும்
அடைபவரிடர்கடீர்க்குமாவடுதுறையனாரே. (௭)

முந்திவானோர்கள்வந்துமுறைமையால்வணங்கியேத்த
நந்திமாகாளரென்பார்நடுவுடையார்கணிற்பச்
சிந்தியாதேயொழிந்தார்திரிபுரமெரிப்பர்போலும்
அந்திவான்மதியஞ்சூடுமாவடுதுறையனாரே. (௮)

பானமரேணமாகிப்பாரிடந்திட்டமாலும்
தேனமர்ந்தேறுமல்லித்திசைமுகமுடையகோவும்

தினைரைத்தியக்கறுத்ததிருவுருவுடையர்போலும்
ஆனரையேற்றார்போலுமாவடுதுறையனாரே. (௯)

பார்த்தனுக்கருள்வர்போலும்படர்சடைமுடியர்போலும்
ஏத்துவாரிடர்களைவரின்பங்கள்கொடுப்பர்போலும்
கூத்தராய்ப்பாடியாடிக்கொடுவலியரக்கன்றன்னை
ஆர்த்தவாயலறுவிப்பாராவடுதுறையனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மாசிலாமணியீச்சுவரர்; முதல்வி - ஒப்பிலாமுலையம்மை.

---

## ௫௭. திருவாவடுதுறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மஞ்சனேமணியுமானாய்மரகதத்திரளுமானாய்
நெஞ்சுளேபுகுந்துநின்றுநினைதருநிகழ்வினானே
துஞ்சும்போதாகவந்துதுணையெனக்காகிநின்று
அஞ்சலென்றருளவேண்டுமாவடுதுறையுளானே. (௧)

நானுகந்துன்னைநாளுநணுகுமாகருதியேயும்
ஊனுகந்தோம்புநாயேனுள்ளுறவைவர்நின்றார்
தானுகந்தேயுகந்ததகவிலாத்தொண்டனேனான்
ஆனுகந்தேறுவானேயாவடுதுறையுளானே. (௨)

கட்டமேவினைகளானகாத்திவைநோக்கியாளாய்
ஒட்டவேயொட்டிநாளுமுன்னையுள்வைக்கமாட்டேன்
பட்டவான்றலைகையேந்திப்பலிதிரிந்தூர்கடோறும்
அட்டமாவுருவினானேயாவடுதுறையுளானே. (௩)

பெருமைநன்றுடையதில்லையென்றுநான்பேசமாட்டேன்
ஒருமையாலுன்னையுள்கியுகந்துவானேறமாட்டேன்
கருமையிட்டாயவூனைக்கட்டமேகழிக்கின்றேனான்
அருமையானஞ்சமுண்டவாவடுதுறையுளானே. (௪)

துட்டனாய்வினையதென்னுஞ்சுழித்தலையகப்பட்டேனைக்
ளவாய
-விழ்கோதைதன்னைமகிழ்ந்தொருபாகம்வைத்து
அட்டமாநாகமாட்டுமாவடுதுறையுளானே. (௫)

காரழற்கண்டமேயாய்கடிமதிற்புரங்கண்மூன்றும்
ஓரழலம்பினாலேயுலைத்துத்தீயெரியமூட்டி
நீரழற்சடையுளானேநினைப்பவர்வினைகளைப்பாய்
ஆரழலேந்தியாடுமாவடுதுறையுளானே.

செறிவிலேன்சிந்தையுள்ளேசிவனடிதெரியமாட்டேன்
குறியிலேன்குணமொன்றில்லேன்கூறுமாகூறமாட்டேன்
நெறிபடுமதியொன்றில்லேனினையுமாநினையமாட்டேன்
அறிவிலேனயர்த்துப்போனேனாவடுதுறையுளானே. (௭)

கோலமாமங்கைதன்னைக்கொண்டொருகோலமாய
சீலமேயறியமாட்டேன்செய்வினைமூடிநின்று
ஞாலமாமிதனுள்ளென்னைநைவியாவண்ணநல்காய்
ஆலமாநஞ்சமுண்டவாவடுதுறையுளானே. (௮)

நெடியவன்மலரினானுநேர்ந்திருபாலுநேடக்
கடியதோருருவமாகக்கனலெரியாகிநின்ற
வடிவினைவண்ணமென்றேயென்றுதாம்பேசலாகார்
அடியனேனெஞ்சினுள்ளாராவடுதுறையுளானே. (௯)

மலைக்குநேராயரக்கன்சென்றுறமங்கையஞ்சத்
தலைக்குமேற்கைகளாலேதாங்கினான்வலியைமாள
வுலப்பிலாவிரலாலூன்றியொறுத்தவற்கருள்கள்செய்து
அலைத்தவான்கங்கைசூடுமாவடுதுறையுளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.
முதல்வன் - மாசிலாமணியீசர், செம்பொற்றியாகர்; முதல்வி - ஒப்பிலாமுலையம்மை.

---

## 58 ௫௮. திருப்பருப்பதம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

கன்றினார்புரங்கண்மூன்றுங்கனலெரியாகச்சீறி
நின்றதோருருவந்தன்னானீர்மையுநிறையுங்கொண்டு
ஒன்றியாங்குமையுந்தாமுமூர்பலிதேர்ந்துபின்னும்
பன்றிப்பின்வேடராகிப்பருப்பதநோக்கினாரே. (௧)

கற்றமாமறைகள்பாடிக்கடைதொறும்பலியுந்தேர்வார்
வற்றலோர்தலைகையேந்திவானவர்வணங்கிவாழ்த்த
முற்றவோர்சடையினீரையேற்றமுக்கண்ணர்தம்மைப்
[illegible]ர்க்க[illegible]ள்செய்துபருப்பதநோக்கினாரே. (௨)

கரவிலாமனத்தராகிக்கைதொழுவார்கட்கென்றும்
இரவுநின்றெரியதாடியின்னருள்செய்யுமெந்தை
மருவலர்புரங்கண்மூன்றுமாட்டியவகையராகிப்
பரவுவார்க்கருள்கள்செய்துபருப்பதநோக்கினாரே. (௩)

கட்டிட்டதலைகையேந்திக்கனலெரியாடிச்சீறிச்
சுட்டிட்டநீறுபூசிச்சுடுபிணக்காடராகி
வெட்டிட்டவேட்கையார்க்குவேறிருந்தருள்கள்செய்து
பட்டிட்டவுடையராகிப்பருப்பதநோக்[illegible] (௪)

கையராய்க்கபாலமேந்திக்காமனைக்கண்ணாற்காய்ந்து
மெய்யராய்மேனிதன்மேல்விளங்குவெண்ணீறுபூசி
உய்யராயுள்குவார்கட்குவகைகள்பலவுஞ்செய்து
பையராவரையிலார்த்துப்பருப்பதநோக்கினாரே. (ரு)

வேடராய்வெய்யராகிவேழத்தினுரிவைபோர்த்து
ஓடராயுலகமெல்லாமுழுதர்வருமையுந்தாமும்
காடராய்க்கனல்கையேந்திக்கடியதோர்விடைமேல்கொண்டு
பாடராய்ப்பூதஞ்சூழப்பருப்பதநோக்கினாரே. (சு)

மேகம்போன்மிடற்றராகிவேழத்தினுரிவைபோர்த்து
ஏகம்பமேவினார்தாமிமையவர்பரவியேத்தக்
காகம்பர்கழறராகிக்கடியதோர்விடையொன்றேறிப்
பாகம்பெண்ணுருவமானார்பருப்பதநோக்கினாரே. (எ)

பேரிடர்ப்பிணிகடீர்க்கும்பிஞ்ஞகனெந்தைபெம்மான்
காருடைக்கண்டராகிக்கபாலமோர்கையிலேந்திச்
சீருடைச்செங்கண்வெள்ளேறேறியசெல்வர்நல்ல
பாரிடம்பாணிசெய்யப்பருப்பதநோக்கினாரே. (அ)

அங்கண்மாலுடையராயவைவராலாட்டுணாதே
உங்கண்மாறீரவேண்டிலுள்ளத்தாலுள்கியேத்தும்
செங்கண்மால்பரவியேத்திச்சிவனெனநின்றசெல்வர்
பைங்கண்வெள்ளேறதேறிப்பருப்பதநோக்கினாரே. (கூ)

அடல்விடையூர்தியாகியரக்கன்றோளடரவூன்றிக்
கடலிடைநஞ்சமுண்டகறையணிகண்டனார்தாம்
சுடர்விடுமேனிதன்மேற்சுண்ணவெண்ணீறுபூசிப்
படர்சடைமதியஞ்சேர்த்திப்பருப்பதநோக்கினாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் வடநாட்டில் உள்ளது.

முதல்வன் - பருப்பதநாதர்; முதல்வி - பருப்பதநாயகி.

---

59

## ருகூ. திருவவளிவணல்லூர் - திருநேரிசை.

---

திருச்சிற்றம்பலம்

தோற்றினானெயிறுகவ்வித்தொழிலுடையரக்கன்றன்னைத்
தேற்றுவான்சென்றுசொல்லச்சிக்கெனத்தவிருமென்று
வீற்றினையுடையனாகிவெடுவெடுத்தெழுந்தவன்றன்
ஆற்றலையழிக்கவல்லா ரவளிவணல்லூராரே. (க)

வெம்பினாரரக்கரெல்லாமிகச்சழக்காயிற்றென்று
செம்பினாலெடுத்தகோயில்சிக்கெனச்சிதையுமென்ன

நம்பினாரென்றுசொல்லிநன்மையான்மிக்குநோக்கி
அம்பினாலழியவெய்தாரவளிவணல்லூராரே. (௨)

கீழ்ப்படக்கருதலாமோகீர்த்தியைப்புள்ளகாதில்
தோட்பெருவலியினாலேதொலைப்பனான்மலையையென்று
வேட்படவைத்தவாறேவிதிர்விதிர்த்தரக்கன்வீழ்ந்து
ஆட்படக்கருதிப்புக்காரவளிவணல்லூராரே. (௩)

நிலைவலம்வல்லனல்லனேர்மையைநினையமாட்டான்
சிலைவலங்கொண்டசெல்வன்சிரியகயிலைதன்னைத்
தலைவலங்கருதிப்புக்குத்தாக்கினான்றன்னையன்று
அலைகுலையாக்குவித்தாரவளிவணல்லூராரே. (௪)

தவ்வலியொன்றனாகித்தனதொருபெருமையாலே
மெய்வ்வலியுடையனென்றுமிகப்பெருந்தேரையூர்ந்து
செவ்வலிகூர்விழியாற்சிரம்பதனாலெடுக்குற்றானை
அவ்வலிதீர்க்கவல்லாரவளிவணல்லூராரே. (௫)

நன்மைதானறியமாட்டானடுவிலாவரக்கர்கோமான்
வன்மையேகருதிச்சென்றுவலிதனைச்செலுத்தலுற்றுக்
கன்மையான்மலையையோடிக்கருதித்தானெடுத்தவாயால்
அம்மையோவென்னவைத்தாரவளிவணல்லூராரே. (௬)

கதம்படப்போதுவார்கள்போதுமக்கருத்தினாலே
சிதம்படநின்றநீர்கள்சிக்கெனத்தவிருமென்று
மதம்படுமனத்தனாகிவன்மையான்மிக்குநோக்க
அதம்பழத்துருவுசெய்தாரவளிவணல்லூராரே. (௭)

நாடுமிக்குழிதர்கின்றநடுவிலாவரக்கர்கோனை
ஓடுமிக்கென்றுசொல்லியூன்றினானுகிரினாலே
பாடுமிக்குய்வனென்றுபணியநற்றிறங்கள்காட்டி
ஆடுமிக்கரவம்பூண்டாரவளிவணல்லூராரே. (௮)

ஏனமாயிடந்தமாலுமெழிறருமுளரியானும்
ஞானந்தானுடையராகிநன்மையையறியமாட்டார்
சேனந்தானிலாவரக்கன்செழுவரையெடுக்கவூன்றி
ஆனந்தவருள்கள்செய்தாரவளிவணல்லூராரே. (௯)

ஊக்கினான்மலையையோடியுணர்விலாவரக்கன்றன்னைத்
தாக்கினான்விரலினாலேதலைபத்துந்தகரவூன்றி
நோக்கினானஞ்சத்தன்னைநோன்பிறவூன்றுசொல்லி
ஆக்கினாரமுதமாகவவளிவணல்லூராரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - சாட்சிநாதர்; முதல்வி - சவுந்தரநாயகி.

60

## கூ0. திருப்பெருவேளூர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மறை வானைக்
ககனலெரியாடினானைப்
பிறையணிசடையினானைப்பெருவேளூர்பேணினானை
நறையணிமலர்கடூவிநாடொறும்வணங்குவேனே. (க)

நாதனையுலகமெல்லாநம்பிரானெனவுநின்ற
பாதனும்பரமயோகிபலபலதிறத்தினாலும்
பேதனைத்தோன்றினானைப்பெருவேளூர்பேணினானை
ஓதநாவுடையனாகியுரைக்குமாறுரைக்கின்றேனே. (உ)

குற்விதோண்மணந்தசெல்வக்குமரவேடாதையென்றும்
நறவிளநறுமென்கூந்தனங்கையோர்பாகத்தானைப்
பிறவியைமாற்றுவானைப்பெருவேளூர்பேணினானை
உறவினால்வல்லனாகியுணருமாறுணர்த்துவேனே. (ங)

மைஞ்ஞவில்கண்டன்றன்னைவலங்கையின்மழுவொன்றேந்திக்
கைஞ்ஞவின்மானினோடுங்கனலெரியாடினானைப்
பிஞ்ஞகன்றன்னையந்தண்பெருவேளூர்பேணினானைப்
பொய்ஞ்ஞெகினையமாட்டாப்பொறியிலாவறிவிலேனே. (ச)

ஓடைசேர்நெற்றியானையுரிவையைமூடினானை
வீடதேகாட்டுவானைவேதநான்காயினானைப்
பேடைசேர்புறவநீங்காப்பெருவேளூர்பேணினானைக்
கூடனான்வல்லமாற்றங்குறுகுமாறறிகிலேனே. (ரு)

கச்சைசேர்நாகத்தானைக்கடல்விடங்கண்டத்தானைக்
கச்சியேகம்பன்றன்னைக்கனலெரியாடுவானைப்
பிச்சைசேர்ந்துழல்வினானைப்பெருவேளூர்பேணினானை
யிச்சைசேர்ந்தமரநானுமிறைஞ்சுமாறிறைஞ்சுவேனே. (சா)

ராய்வந்துதன்னைத்திருவடிவணங்குவார்கள்
முத்தனைமூர்த்தியாயமுதல்வனைமுழுதுமாய
பித்தனைப்பிறருமேத்தப்பெருவேளூர்பேணினானை
மெத்தநேயவனைநாளும்விரும்புமாறறிகிலேனே. (எ)

முண்டமேதாங்கினானைமுற்றியஞானத்தானை
வண்டுலாங்கொன்றைமாலைவளர்மதிக்கண்ணியானைப்
பிண்டமேயாயினானைப்பெருவேளூர்பேணினானை
அண்டமாமாதியானையறியுமாறறிகிலேனே (அ)

விரிவிலாவறிவினார்கள்வேறொரு மயஞ்செய்து
எரிவினாற்சொன்னாரேனுமெம்பிராற்கேற்றதாகும்

பரிவினாற்பெரியோரேத்தும்பெருவேளூர்பற்றினானை
மருவிநான்வாழ்த்தியுய்யும்வகையதுநினைக்கின்றேனே. (கூ)

பொருகடலிலங்கைமன்னனுடல்கெடப்பொருத்திநல்ல
கருகியகண்டத்தானைக்கதிரிளங்கொழுந்துசூடும்
பெருகியசடையினானைப்பெருவேளூர்பேணினானை
உருகியவடியரேத்துமுள்ளத்தாலுள்குவேனே. (கoo)

லம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பிரியாதநாதர்; முதல்வி - ஏலவார்குழலியம்மை.

## சாக. திருவிராமேச்சுரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பாசமுங்கழிக்ககில்லாவரக்கரைப்படுத்துத்தக்க
வாசமிக்கலர்கள்கொண்டுமதியினான்மால்செய்கோயில்
நேசமிக்கன்பினாலேநினைமினீர்நின்றுநாளும்
தேசமிக்கானிருந்ததிருவிராமேச்சுரமே, (க)

முற்றினநாள்களென்றுமுடிப்பதேகாரணமாய்
உற்றவன்போர்களாலேயுணர்விலாவரக்கர்தம்மைச்
செற்றமால்செய்தகோயிறிருவிராமேச்சுரத்தைப்
பற்றிநீபரவுநெஞ்சேபடர்சடையீசன்பாலே. (உ)

கடலிடைமலைகடம்மாலடைத்துமால்கருமமுற்றித்
திடலிடைச்செய்தகோயிற்றிருவிராமேச்சுரத்தைத்
தொடலிடைவைத்துநாவிற்சுழல்கின்றேன்றூய்மையின்றி
உடலிடைநின்றும்பேராவைவராட்டுண்டுநானே. (ங)

குன்றுபோற்றோளுடையகுணமிலாவரக்கர்தம்மைக்
கொன்றுபோராழியம்மால்வேட்கையாற்செய்தகோயில்
நன்றுபோல்நெஞ்சமேநீநன்மையையறிதியாயில்
சென்றுநீதொழுதுய்கண்டாய்திருவிராமேச்சுரமே. (ச)

வீரமிக்கெயிறுகாட்டிவிண்ணுறநீண்டரக்கன்
கூரமிக்கவனைச்சென்றுகொன்றுடன்கடற்படுத்துத்
தீரமிக்கானிருந்ததிருவிராமேச்சுரத்தைக்
கோரமிக்கார்தவத்தாற்கூடுவார்குறிப்புளாரே. (ரு)

ஆர்வலநம்மின்மிக்காரென்றவவ்வரக்கர்கூடிப்
போர்வலஞ்செய்துமிக்குப்பொருதவர்தம்மைவீட்டித்
தேர்வலஞ்செற்றமால்செய்திருவிராமேச்சுரத்தைச்
சேர்மடநெஞ்சமேநீசெஞ்சடையெந்தைபாலே. (சு)

வாக்கினாலின்புரைத்துவாழ்கிலார்தம்மையெல்லாம்
போக்கினாற்புடைத்தவர்களுயிர்தனையுண்டுமாலுந்
தேக்குநீர்செய்தகோயிறிருவிராமேச்சுரத்தை
நோக்கினால்வணங்குவார்க்குநோய்வினைநாறுமன்றே. (௭)

பலவுநாடீமைசெய்துபார்தன்மேற்குழுமிவந்து
கொலைவிலார்கொடியராயவரக்கரைக்கொன்றுவீழ்த்த
சிலையினான்செய்தகோயிறிருவிராமேச்சுரத்தைத்
தலையினால்வணங்குவார்கள்தாழ்வராந்தவமதாமே. (௮)

கோடிமாதவங்கள்செய்தான்குன்றினார்தம்மையெல்லாம்
வீடவேசக்கரத்தாலெறிந்துபின்னன்புகொண்டு
தேடிமால்செய்தகோயிறிருவிராமேச்சுரத்தை
நாடிவாழ்நெஞ்சமேநீநன்னெறியாகுமன்றே. (௯)

வன்கண்ணர்வாளரக்கர்வாழ்வினையொன்றறியார்
புன்கண்ணராகிநின்றுபோர்கள்செய்தாரைமாட்டிச்
செங்கண்மால்செய்தகோயிறிருவிராமேச்சுரத்தைத்
தங்கணாலெய்தவல்லார்தாழ்வராந்தலைவன்பாலே. (௧௦)

வரைகளொத்தேயுயர்ந்தமணிமுடியரக்கர்கோனை
விரையமுற்றறவொடுக்கிமீண்டுமால்செய்தகோயில்
திரைகண்முத்தால்வணங்குந்திருவிராமேச்சுரத்தை
உரைகள்பத்தாலுரைப்பாருள்குவாரன்பினாலே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ளது.
முதல்வன் - இராமலிங்கேச்சுரர்; முதல்வி - பருவதவர்த்தனியம்மை.

---

## ௬௨. * திருவாலவாய் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வேதியாவேதகீதாவிண்ணவரண்ணாவென்றென்
றோதியேமலர்கடூவியொருங்கிநின்கழல்கள்காணப்
பாதியோர்பெண்ணைவைத்தாய்படர்சடைமதியஞ்சூடும்
ஆதியேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௧)

நம்பனே [illegible] ஞானமூர்த்தி
என்பொனேயீசாவென்றென்றேத்திநானேசற்றென்றும்
பின்பினேதிரிந்துநாயேன்பேர்த்தினிப்பிறவாவண்ணம்
அன்பனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௨)

ஒருமருந்தாகியுள்ளாயும்பரோடுலகுக்கெல்லாம்
பெருமருந்தாகிநின்றாய்பேரமுதின்சுவையாய்க்
கருமருந்தாகியுள்ளாயாளும்வல்வினைகடீர்க்கும்
அருமருந்தாலவாயிலப்பனேயருள்செயாயே.

* திருவாலவாய் என்பது மதுரை.

செய்யநின்கமலபாதஞ்சேருமாதேவர்தேவே
மையணிகண்டத்தானேமான்மறிமழுவொன்றேந்தும்
சைவனேசாலஞானங்கற்றறிவிலாதநாயேன்
ஐயனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௪)

வெண்டலைகையிலேந்திமிகவுமூர்பலிகொண்டென்றும்
உண்டதுமில்லைசொல்லிலுண்டதுநஞ்சுதன்னைப்
பண்டுனைநினையமாட்டாப்பளகனேனுளமதார
அண்டனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௫)

எஞ்சலில்புகலிதென்றென்றேத்திநானேசற்றென்றும்
வஞ்சகமொன்றுமின்றிமலரடிகாணும்வண்ணம்
நஞ்சினைமிடற்றில்வைத்தநற்பொருட்பதமேநாயேற்
கஞ்சலென்றாலவாயிலப்பனேயருள்செயாயே. (௬)

வழுவிலாதுன்னைவாழ்த்திவழிபடுந்தொண்டனேனுன்
செழுமலர்ப்பாதங்காணத்தெண்டிரைநஞ்சமுண்ட
குழகனேகோலவில்லீகூத்தனேமாத்தாயுள்ள
அழகனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௭)

நறுமலர்நீருங்கொண்டுநாடொறுமேத்திவாழ்த்திச்
செறிவனசித்தம்வைத்துத்திருவடிசேரும்வண்ணம்
மறிகடல்வண்ணன்பாகாமாமறையங்கமாறும்
அறிவனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௮)

நலந்திகழ்வாயினூலாற்சருகிலைப்பந்தர்செய்த
சிலந்திக்கயரசதாளவருளினையென்றுநிண்ணம்
கலந்துடன்வந்துநின்றாள்கருதிநான்காண்பதாக
அலந்தனனாலவாயிலப்பனேயருள்செயாயே. (௯)

பொடிக்கொடுபூசிப்பொல்லாக்குரம்பையிற்புக்கியொன்றிப்
பிடித்துநின்றாள்களென்றும்பிதற்றிநானிருக்கமாட்டேன்
எடுப்பனென்றிலங்கைக்கோன்வந்தெடுத்தலுமிருபதுதோள்
அடர்த்தனேயாலவாயிலப்பனேயருள்செயாயே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ளது.

முதல்வன் - சொக்கநாதேச்சுரர்; முதல்வி - மீனாட்சியம்மை.

---

63

## ௬௩. அண்ணாமலை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

ஓதிமாமலர்கள்தூவியுமையவள்பங்காமிக்க
சோதியேதுளங்குமெண்டோட்சுடர்மழுப்படையினானே
யேயமரர்கோவேயணியணாமலையுளானே
ல்லா லேனே. (௧)

பண்டனைவென்றவின்சொற்பாவையோர்பங்கநீல
கண்டனேகார்கொள்கொன்றைக்கடவுளேகமலபாதா
அண்டனேயமரர்கோவேயண்ணாமலையுளானே
தொண்டனேனுன்னையல்லாற்சொல்லுமாசொல்லிலேனே. (உ)

உருவமுமுயிருமாகியோதியவுலகுக்கெல்லாம்
பெருவினைபிறப்புவீடாய்நின்றவெம்பெருமான்மிக்க
அருவிபொன்சொரியுமண்ணாமலையுளாயண்டர்கோவே
[illegible] லேனே.

பைம்பொனேபவளக்குன்றேபரமனேபால்வெண்ணீற்றா
செம்பொனேமலர்செய்பாதாசீர்தருமணியேமிக்க
அம்பொனேகொழித்துவீழுமண்ணாமலையுளானே
என்பொனேயுன்னையல்லாலேதுநானினைவிலேனே.

பிறையணிமுடியினானேபிஞ்ஞகாபெண்ணோர்பாகா
மறைவலாவிறைவாவண்டார்கொன்றையாய்வாமதேவா
அறைகழலமரரேத்துமண்ணாமலையுளானே
இறைவனேயுன்னையல்லால்யாதுநானினைவிலேனே.

புரிசடைமுடியின்மேலோர்பொருபுனற்கங்கைவைத்துக்
கரியுரிபோர்வையாகக்கருதியகாலகாலா
அரிகுலமலிந்தவண்ணாமலையுளாயலரின்மிக்க
வரிமிகுவண்டுபண்செய்பாதநான்மறப்பிலேனே. (சு)

இரவியுமதியும்விண்ணுமிருநிலம்புனலுங்காற்றும்
உரகமார்பவனமெட்டுந்திசையொளியுருவமானாய்
அரவுமிழ்மணிகொள்சோதியண்ணாமலையுளானே
பரவுநின்பாதமல்லாற்பரமநான்பற்றிலேனே. (எ)

பார்த்தனுக்கன்றுநல்கிப்பாசுபதத்தையீந்தாய்
நீர்த்ததும்புலாவுகங்கைநெடுமுடிநிலாவவைத்தாய்
ஆர்த்துவந்தீண்டுகொண்டலணியண்ணாமலையுளானே
தீர்த்தனேநின்றன்பாதத்திறமலாற்றிறமிலேனே. (அ)

பாலுநெய்முதலாமிக்கபசுவிலைந்தாடுவானே
மாலுநான்முகனுங்கூடிக்காண்கிலாவகையுணின்றாய்
ஆலுநீர்கொண்டல்பூகமணியண்ணாமலையுளானே
வாலுடைவிடையாயுன்றன்மலரடிமறப்பிலேனே. (கூ)

இரக்கமொன்றியாதுமில்லாக்காலனைக்கடிந்தவெம்மான்
உரத்தினால்வரையையூக்கவொருவிரனுதியினாலே
அரக்கனைநெரித்தவண்ணாமலையுளாயமரரேறே
சிரத்தினால்வணங்கியேத்தித்திருவடிமறப்பிலேனே.

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டிலுள்ளது

முதல்வன் அருணாசலேச்சுரர்; முதல்வி - உண்ணாமுலையம்மை.

64

## சுச. திருவீழிமிழலை - திருநேரிசை.

ென்படையர்பாம்பின்பூணினர்பூணநூலர்
சீதத்திற்பொலிந்ததிங்கட்கொழுந்தர்நஞ்சமுந்துகண்டர்
கீதத்திற்பொலிந்தவோசைக்கேள்வியர்வேள்வியாளர்
ளா                                        ரே. (க)

காலையிற்கதிர்செய்மேனிகங்குலிற்கறுத்தகண்டர்
மாலையின்மதியஞ்சேர்ந்தமகுடத்தர்மதுவும்பாலும்
ஆலையிற்பாகும்போலவண்ணித்திட்டடியார்க்
வேலையினமுதர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (உ)

வருந்தினநெருநலின்றாய்வழங்கினநாளராற்கீழ்
இருந்துநன்பொருள்களால்வர்க்கியம்பினரிருவரோடும்
பொருந்தினர்பிரிந்துதம்பாற்பொய்யராமவர்கட்கென்றும்
விருந்தினர்திருந்துவீழிமிழலையுள்விகிர்தனாரே. (ங)

நிலையுலாவூர்மூன்றொன்றநெருப்பரிகாற்றம்பாகச்
சிலையுநாணதுவுநாகங்கொண்டவர்தேவர்தங்கள்
தலையினாற்றரித்தவென்புந்தலைமயிர்வடமும்பூண்ட
விலையிலாவேடர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (ச)

மறையிடைப்பொருளர்மொட்டின்மலர்வழிவாசத்தேனர்
கறவிடைப்பாலினெய்யர்கரும்பினிற்கட்டியாளர்
பிறையிடைப்பாம்புகொன்றைப்பிணையல்சேர்சடையுணீரர்
லை          யர்வீழிமிழலையுள்விகிர்தனாரே.

எண்ணக                    நளரல்லரிமவான்பெற்ற
ரையர்காற்றிற்பெருவலியிருவராகி
மண்ணகத்தைவர்நீரினால்வர்தீயதனில்மூவர்
விண்ணகத்தொருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (சு)

சந்தணிகொங்கையாளோர்பங்கினர்சாமவேதர்
எந்தையுமெந்தைதந்தைதந்தையுமாயவீசர்
அந்தியோடுதயமந்தணாளராநெய்யால்வேட்கும்
வெந்தழலுருவர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (எ)

நீற்றினைநிறையப்பூசிநித்தலாயிரம்பூக்கொண்டு
ஏற்றுழியொருநாளொன்றுகுறையக்கண்ணிறையவிட்ட
ஆற்றலுக்காழிநல்கியவன்கொணர்ந்திழிச்சுங்கோயில்
வீற்றிருந்தளிப்பர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (அ)

சித்திசெய்பவர்கட்கெல்லாஞ்சேர்விடஞ்சென்றுகூடப்
பத்திசெய்பவர்கள்பாவம்பறைப்பவரிறப்பிலாளர்

முத்திசெய்பவளமேனிமுதிரொளிநீலகண்டர்
வித்தினின்முளையர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௯)

தருக்கினவரக்கன்றேரூர்சாரதிதடைநிலாது
பொருப்பினையெடுத்ததோளும்பொன்முடிபத்துமிற்று
நெரிப்புண்டங்கலறிமீண்டுநினைந்தடிபரவ[illegible]
விருப்பொடுங்கொடுப்பர்வீழிமிழலையுள்விகிர்தனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.
முதல்வன் - வீழியழகீசுரர்; தேவி - சுந்தரகுசாம்பிகை.

## ௬௫. திருச்சாய்க்காடு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

தோடுலாமலர்கடூவித்தொழுதெழுமார்க்கண்டேயன்
வீடுநாளணுகிற்றென்றுமெய்கொள்வான்வந்தகாலன்
பாடுதான்செலலுமஞ்சிப்பாதமேசரணமென்னச்
சாடினார்காலன்மாளச்சாய்க்காடுமேவினாரே. (௧)

வடங்கெழுமலைமத்தாகவானவரசுரரோடு
கடைந்திடவெழுந்தநஞ்சங்கண்டுபல்தேவரஞ்சி
அடைந்துநுஞ்சரணமென்னவருள்பெரிதுடையராகித்
தடங்கடனஞ்சமுண்டார்சாய்க்காடுமேவினாரே. (௨)

அரணிலாவெளியநாவலருநிழலாகவீசன்
[illegible]னூறுபந்தர்செய்ய
முரணிலாச்சிலந்திதன்னைமுடியுடைமன்னனாக்கித்
தரணிதானாளவைத்தார்சாய்க்காடுமேவினாரே. (௩)

அரும்பெருஞ்சிலைக்கைவேடனாய்விறற்பார்த்தற்கன்று
உரம்பெரிதுடைமைகாட்டியொள்ளமர்செய்துமீண்டே
வரம்பெரிதுடையனாக்கிவாளமர்முகத்தின்மன்னு
சரம்பொலிதூணியீந்தார்சாய்க்காடுமேவினாரே. (௪)

இந்திரன்பிரமனங்கியெண்வகைவசுக்களோடு
மந்திரமறையதோதிவானவர்வணங்கிவாழ்த்தத்
தந்திரமறியாத்தக்கன்வேள்வியைத்தகர்த்தஞான்று
சந்திரற்கருள்செய்தாருஞ்சாய்க்காடுமேவினாரே. (௫)

ஆமலிபாலுநெய்யுமாட்டியர்ச்சனைகள்செய்து
பூமலிகொன்றைசூட்டப்பொறாததன்றாதைதாளைக்
கூர்மழுவொன்றாலோச்சக்குளிர்சடைக்கொன்றைமாலை
தாமெனத்தண்டிக்கீந்தார்சாய்க்காடுமேவினாரே. (௬)

கடகரியுரியர்போலுங்கனமழுவாளர்போலும்
படவரவரையர்போலும்பாரிடம்பலவுங்கூடிக்
குடமுடைமுழவமார்ப்பக்கூளிகள்பாடநாளும்
நடநவிலடிகள்போலுநாகவீச்சரவனாரே. (௫)

பிறையுறுசடையர்போலும்பெண்ணொருபாகர்போலும்
மறையுறுமொழியர்போலுமான்மறையவன்றனோடும்
முறைமுறையமரர்கூடிமுடிகளால்வணங்கநின்ற
நறவமர்கழலர்போலுநாகவீச்சரவனாரே. (௬)

வஞ்சகர்க்கரியர்போலுமருவினோர்க்கெளியர்போலும்
குஞ்சரத்துரியர்போலுங்கூற்றினைக்குமைப்பர்போலும்
விஞ்சையரிரியவன்றுவேலைவாய்வந்தெழுந்த
நஞ்சணிமிடற்றர்போலுநாகவீச்சரவனாரே. (௭)

போகமார்மோடிகொங்கைபுணர்தருபுனிதர்போலும்
வேகமார்விடையர்போலும்வெண்பொடியாடிமேனிப்
பாகமாலுடையர்போலும்பருப்பதவில்லர்போலும்
நாகநாணுடையர்போலுநாகவீச்சரவனாரே. (௮)

கொக்கரைதாளம்வீணைபாணிசெய்குழகர்போலும்
அக்கரையணிவர்போலுமைந்தலையரவர்போலும்
வக்கரையமர்வர்போலுமாதரைமையல்செய்யும்
நக்கரையுருவர்போலுநாகவீச்சரவனாரே. (௯)

வின்மையாற்புரங்கண்மூன்றும்வெந்தழல்விரித்தார்போலும்
தன்மையாலமரர்தங்கடலைவர்க்குந்தலைவர்போலும்
வன்மையான்மலையெடுத்தான்வலியினைத்தொலைவித்தாங்கே
நன்மையாலளிப்பர்போலுநாகவீச்சரவனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - சண்பகாரண்ணியேச்சுரர்; முதல்வி - குன்றமுலைநாயகி.

---

## ௬௭. திருக்கொண்டீச்சரம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வரைகிலேன்புலன்களைந்தும்வரைகிலாப்பிறவிமாயப்
புரையிலேயடங்கிநின்றுபுறப்படும்வழியுங்காணேன்
அரையிலேமிளிருநாகத்தண்ணலேயஞ்சலென்னாய்
திரையுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௧)

தொண்டனேன்பிறந்துவாளாதொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநைந்துபோவதோர்வழியுங்காணேன்
அண்டனேயண்டவாணாவறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௨)

கடகரியுரியர்போலுங்கனமழுவாளர்போலும்
படவரவரையர்போலும்பாரிடம்பலவுங்கூடிக்
குடமுடைமுழவமார்ப்பக்கூளிகள்பாடநாளும்
நடநவிலடிகள் [illegible] ச்சரவனாரே.

பிறையுறுசடையர்போலும்பெண்ணொருபாகர்போலும்
மறையுறுமொழியர்போலுமான்மறையவன்றலையேந்தும்
முறைமுறையமரர்கூடிமுடிகளால்வணங்கநின்ற
நறவமர்கழலர்போலுநாகவீச்சரவனாரே. (௬)

வஞ்சகர்க்கரியர்போலுமருவினோர்க்கெளியர்போலும்
குஞ்சரத்துரியர்போலுங்கூற்றினைக்குமைப்பர்போலும்
விஞ்சையரிரியவன்றுவேலைவாய்வந்தெழுந்த
நஞ்சணிமிடற்றர்போலுநாகவீச்சரவனாரே. (௭)

பொகமார்மோடிகொங்கைபுணர்தருபுனிதர்போலும்
வேகமார்விடையர்போலும்வெண்பொடியாடிமேனிப்
பாகமாலுடையர்போலும்பருப்பதவில்லர்போலும்
நாகநாணுடையர்போலுநாகவீச்சரவனாரே. (௮)

கொக்கரைதாளம்வீணைபாணிசெய்குழகர்போலும்
அக்கரையணிவர்போலுமைந்தலையரவர்போலும்
வக்கரையமர்வர்போலுமாதரைமையல்செய்யும்
நக்கரையுருவர்போலுநாகவீச்சரவனாரே. (௯)

விண்மையாற்புரங்கண்மூன்றும்வெந்தழலெரித்தார்போலும்
தன்மையாலமரர்தங்கடலைவர்க்குத்தலைவர்போலும்
வன்மையான்மலையெடுத்தான்வலியினைத்தொலைவித்தாங்கே
நன்மையாலளிப்பர்போலுநாகவீச்சரவனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - சண்பகாரண்ணியேச்சுரர்; முதல்வி - குன்றமுலைநாயகி.

## ௬௭. திருக்கொண்டீச்சரம் - திருநேரிசை.



திருச்சிற்றம்பலம்

வரைகிலேன்புலன்களைந்தும்வரைகிலாப்பிறவிமாயப்
புரையிலேயடங்கிநின்றுபுறப்படும்வழியுங்காணேன்
அரையிலேமிளிருநாகத்தண்ணலேயஞ்சலென்னாய்
திரையுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே.

தொண்டனேன்பிறந்துவாளாதொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்தைந்துபேர்வதோர்வழியுங்காணேன்
அண்டனேயண்டவாணாவறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே.

கால்கொடுத்தெலும்புமுட்டிக்கதிர்நரம்பாக்கையார்த்துத்
தோலுடுத்துதிரமட்டித்தொகுமயிர்மேய்ந்தகூரை
ஓலெடுத்துழைஞர்கூடியொளிப்பதற்கஞ்சுகின்றேன்
சேலுடைப்பழனஞ்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௩)

கூட்டமாயைவர்வந்துகொடுந்தொழிற்குணத்தராகி
ஆட்டுவார்க்காற்றகில்லேனாடரவசைத்தகோவே
காட்டிடையாங்கமாகவாடியகடவுளேயோ
சேட்டிரும்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௪)

பொக்கமாய்நின்றபொல்லாப்புழுமிடைமுடைகொளாக்கை
தொக்குநின்றைவர்தொண்ணூற்றறுவருந்துயக்கமெய்த
மிக்குநின்றிவர்கள்செய்யும்வேதனைக்கலந்துபோனேன்
செக்கரேதிகழுமேனித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௫)

ஊனுலாமுடைகொளாக்கையுடைகலமாவதென்றும்
மானுலாமழைக்கண்ணார்தம்வாழ்க்கையைமெய்யென்றெண்ணி
நானெலாமினையகாலநண்ணிலேனெண்ணமில்லேன்
தேனுலாம்பொழில்கள்சூழ்ந்ததிருக்கொண்டீச்சரத்துளானே. (௬)

சரணிருமடங்குநீண்டசழக்குடைப்பதிக்குநாதர்
வாணிகரைவர்தொண்ணூற்றறுவருமயக்கஞ்செய்து
பேணியபதியினின்றுபெயரும்போதறியமாட்டேன்
சேணுயர்மாடநீடுதிருக்கொண்டீச்சரத்துளானே. (௭)

பொய்மறித்தியற்றிவைத்துப்புலால்கமழ்பண்டம்பெய்து
பைமறித்தியற்றியன்னபாங்கிலாக்குரம்பைநின்று
கைமறித்தனையவாவிகழியும்போதறியமாட்டேன்
செந்நெறிச்செலவுகாணேன்றிருக்கொண்டீச்சரத்துளானே. (௮)

பாலனாய்க்கழிந்தநாளும்பனிமலர்க்கோதைமார்தம்
மேலனாய்க்கழிந்தநாளுமெலிவொடுமூப்புவந்து
கோலனாய்க்கழிந்தநாளுங்குறிக்கோளிலாதுகெட்டேன்
சேலுலாம்பழனவேலித்திருக்கொண்டீச்சரத்துளானே. (௯)

விரைதருகருமென்கூந்தல்விளங்கிழைவேலொண்கண்ணாள்
வெருவரவிலங்கைக்கோமான்விலங்கலையெடுத்தஞான்று
பருவரையனையதோளுமுடிகளும்பாறிவீழத்
திருவிரலூன்றினானேதிருக்கொண்டீச்சரத்துளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பசுபதிச்சுரர்; முதல்வி - சாந்தநாயகி.

# திருநாவுக்கரசுசுவாமிகள்

## சாஅ. திருவாலங்காடு - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வெள்ளநீர்ச்சடையர்போலும்விரும்புவார்க்கெளியர்போலும்
உள்ளுளேயுருகிநின்றங்குகப்பவர்க்கன்பர்போலுங்
கள்ளமேவினைகளெல்லாங்கரிசறுத்திடுவர்போலும்
அள்ளலம்பழனைமேயவாலங்காட்டடிகளாரே.

செந்தழலுருவர்போலுஞ்சினவிடையுடையர்போலும்
வெந்தவெண்ணீறுகொண்டுமெய்க்கணிந்திடுவர்போலும்
மந்தமாம்பொழிற்பழனைமல்கியவள்ளல்போலும்
அந்தமிலடிகள்போலுமாலங்காட்டடிகளாரே.

கண்ணினாற்காமவேளைக்கனலெழவிழித்தார்போலும்
எண்ணிலார்புரங்கண்மூன்றுமெரியுணச்சிரித்தார்போலும்
பண்ணினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனைமேய
அண்ணலாரெம்மையாளுமாலங்காட்டடிகளாரே.

காறிடுவிடத்தையுண்டகண்டரோவண்டர்போலும்
தூறிடுசுடலைதன்னிற்சுண்ணவெண்ணீற்றர்போலும்
கூறிடுமுருவர்போலுங்குளிர்பொழிற்பழனைமேய
ஆறிடுசடையர்போலுமாலங்காட்டடிகளாரே.

பார்த்தனோடமர்பொருதுபத்திமைகாண்பர்போலும்
கூர்த்தவாயம்புகோத்துக்குணங்களையறிவர்போலும்
பேர்த்துமோராவநாழியம்பொடுங்கொடுப்பர்போலும்
தீர்த்தமாம்பழனைமேயதிருவாலங்காடனாரே.

வீட்டினார்சுடுவெண்ணீறுமெய்க்கணிந்திடுவர்போலும்
காட்டினின்றாடல்பேணுங்கருத்தினையுடையர்போலும்
பாட்டினார்முழவமோவாப்பைம்பொழிற்பழனைமேயார்
ஆட்டினாரரவந்தன்னையாலங்காட்டடிகளாரே.

தாளுடைச்செங்கமலத்தடங்கொள்சேவடியர்போலும்
நாளுடைக்காலன்வீழவுதைசெய்தநம்பர்போலும்
கோளுடைப்பிறவிதீர்ப்பார்குளிர்பொழிற்பழனைமேய
ஆளுடையண்ணல்போலுமாலங்காட்டடிகளாரே.

கூடினாருமைதன்னோடேகுறிப்புடைவேடங்கொண்டு
சூடினார்கங்கையாளைச்சுவறிடுசடையர்போலும்
பாடினார்சாமவேதம்பைம்பொழிற்பழனைமேயார்
ஆடினார்காளிகாணவாலங்காட்டடிகளாரே.

வெற்றரைச்சமணரோடும்விலையுடைக்கூறைபோர்க்கும்
ஒற்றரைச்சொற்கள்கொள்ளார்குணங்களையுகப்பர்போலும்
பெற்றமேயுகந்தங்கேறும்பெருமையையுடையர்போலும்
அற்றங்களறிவர்போலுமாலங்காட்டடிகளாரே. (௯)

மத்தனாய்மலையெடுத்தவரக்கனைக்கரத்தோடொல்க
ஒத்தினார்திருவிரலாலூன்றியிட்டருள்வர்போலும்
பத்தர்தம்பாவந்தீர்க்கும்பைம்பொழிற்பழனமேய
அத்தனார்நம்மையாள்வாராலங்காட்டடிகளாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஊர்த்ததாண்டவேச்சுரர்; முதல்வி - வண்டார்குழலியம்மை.

---

69

## ௬௯. திருக்கோவலூர்வீரட்டம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

செத்தையேன்சிதம்பநாயேன்செடியனேனழுக்குப்பாயும்
பொத்தையேபோற்றிநாளும்புகலிடமறியமாட்டேன்
எத்தைநான்பற்றிநிற்கேனிருளறநோக்கமாட்டாக்
கொத்தையேன்செய்வதென்னேகோவல்வீரட்டனீரே. (௧)

தலைசுமந்திருகைநாற்றித்தரணிக்கேபொறையதாகி
நிலையிலாநெஞ்சந்தன்னுணித்தலுமைவர்வேண்டும்
விலைகொடுத்தறுக்கமாட்டேன்வேண்டிற்றேவேண்டியெய்த் ன
குலைகொண்மாங்கனிகள்சிந்துங்கோவல்வீரட்டனீரே. (௨)

வழித்தலைப்படவுமாட்டேன்வைகலுந்தூய்மைசெய்து
பழித்திலேன்பாசமற்றுப்பரமநான்பரவமாட்டேன்
இழித்திலேன்பிறவிதன்னையென்னினைந்திருக்கமாட்டேன்
கொழித்துவந்தலைக்குந்தெண்ணீர்க்கோவல்வீரட்டனீரே. (௩)

சாற்றுவரைவர்வந்துசந்தித்தகுடிமைவேண்டிக்
காற்றுவர்கனலப்பேசிக்கண்செவிமூக்குவாயுள்
ஆற்றுவரலந்துபோனேனாதியையறிவொன்றின்றிக்
கூற்றுவர்வாயிற்பட்டேன்கோவல்வீரட்டனீரே. (௪)

தடுத்திலேனைவர்தம்மைத்தத்துவத்துயர்வுநீர்மைப்
படுத்திலேன்பரப்புநோக்கிப்பன்மலர்ப்பாதமுற்ற
அடுத்திலேன்சிந்தையாரவார்வலித்தன்புதிண்ணம்
கொடுத்திலேன்கொடியவாநான்கோவல்வீரட்டனீரே. (௫)

மாச்செய்தகுரம்பைதன்னைமண்ணிடைமயக்கமெய்து
நாச்செய்தநாலுமைந்துநல்லனவாய்தல்வைத்துக்
காய்செய்தகாயந்தன்னுணித்தலுமைவர்வந்து
கோச்செய்துகுமைக்கவாற்றேன்கோவல்வீரட்டனீரே. (௬)

படைகள்போல்வினைகள்வந்துபற்றியென்பக்கநின்றும்
விடகிலாவாதலாலேவிகிர்தனைவிரும்பியேத்தும்
இடையிலேனென்செய்கேனோவிரப்பவர்தங்கட்கென்றுங்
கொடையிலேன்கொள்வதேநான்கோவல்வீரட்டனீரே. (௭)

பிச்சிலேன்பிறவிதன்னைப்பேதையேன்பிணக்கமென்னும்
துச்சுளேயழுந்திவீழ்ந்துதுயரமேயிடும்பைதன்னுள்
அச்சனாயாதிமூர்த்திக்கன்பனாய்வாழமாட்டாக்
கொச்சையேன்செய்வதென்னேகோவல்வீரட்டனீரே. (௮)

நிணத்திடையாக்கைபேணிநியமஞ்செய்திருக்கமாட்டேன்
மணத்திடையாட்டம்பேசிமக்களேசுற்றமென்னும்
கணத்திடையாட்டப்பட்டுக்காதலாலுன்னைப்பேணுங்
குணத்திடைவாழமாட்டேன்கோவல்வீரட்டனீரே. (௯)

விரிகடலிலங்கைக்கோனைவியன்கயிலாயத்தின்கீழ்
இருபதுதோளும்பத்துச்சிரங்களுநெரியவூன்றிப்
பரவியபாடல்கேட்டுப்படைகொடுத்தருளிச்செய்தார்
குரவொடுகோங்குசூழ்ந்தகோவல்வீரட்டனாரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - வீரட்டேசநாதர்; முதல்வி - சிவாநந்தவல்லி.

## ௭௦. திருநனிபள்ளி - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

யா டவாகுமுதலை
ையயாதரித்து
ளகச்சுவுடையவர்க்கு
நற்றுணையாவர்போலுநனிபள்ளியடிகளாரே. (௧)

பாற்றமாட்டா
வலஞ்செய்துவாயினூலால்வட்டணைப்பந்தர்செய்த
சிலந்தியையரசனாக்கிச்சீர்மைகளருளவல்லார்
நலந்திகழ்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே. (௨)

எண்பதும்பத்துமாறுமென்னுளேயிருந்துமன்னிக்
கண்பழக்கொன்றுமின்றிக்கலக்கநானலக்கழிந்தேன்
செண்பகந்திகழும்புன்னைசெழுந்திரட்குரவம்வேங்கை
நண்புசெய்சோலைசூழ்ந்தநனிபள்ளியடிகளாரே. (௩)

பண்ணினார்பாடலாகிப்பழத்தினிலிரதமாகிக்
கண்ணினார்பார்வையாகிக்கருத்தொடுகற்பமாகி
எண்ணிலாரெண்ணமாகியேழுலகனைத்துமாகி
நண்ணினார்வினைகடீர்ப்பார்நனிபள்ளியடிகளாரே. (௪)

துஞ்சிருள்காலைமாலைதொடர்ச்சியைமறந்திராதே
அஞ்செழுத்தோதிநாளுமரனடிக்கன்பதாகும்
வஞ்சனைப்பாற்சோறாக்கிவழக்கிலாவமணர்தந்த
நஞ்சமுதாக்குவித்தார்நணிபள்ளியடிகளாரே. (

செம்மலர்க்கமலத்தோனுந்திருமுடிகாணமாட்டான்
அம்மலர்ப்பாதங்காண்பானாழியானகழ்ந்துங்காணான்
நின்மலனென்றங்கேத்து நினைப்பினையருளிநாளும்
நம்மலமறுப்பர்போலுநணிபள்ளியடிகளாரே. (

அரவத்தால்வரையைச்சுற்றியமரரோடசுரர்கூடி
அரவித்துக்கடையத்தோன்றுமாலநஞ்சமுதாவுண்டார்
விரவித்தம்மடியராகிவீடிலாத்தொண்டர்தம்மை
நரகத்தில்வீழவொட்டார்நணிபள்ளியடிகளாரே. (

மண்ணுளேதிரியும்போதுவருவனபலவுங்குற்றம்
புண்ணுளேபுரைபுரையன்புழுப்பொதிபொள்ளலாக்கை (அ-

பத்துமோடிரட்டிதோளான்பாரித்துமலையெடுக்கப்
பத்துமோரிரட்டிதோள்கள்படருடம்படரவூன்றிப்
பத்துவாய்கீதம்பாடப்பரிந்தவற்கருள்கொடுத்தார்
பத்தர்தாம்பரவியேத்துநணிபள்ளிப்பரமனாரே. (

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - நற்றுணையப்பர்; முதல்வி - பருவதராசபுத்திரி.

---

எக. * திருநாகைக்காரோணம் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மனைவிதாய்தந்தைமக்கள்மற்றுளசுற்றமென்னும்
வினையுளேவிழுந்தழுந்திவேதனைக்கிடமாகாதே
கனையுமாகடல்சூழ்நாகைமன்னுகாரோணத்தானை
நினையுமாவல்லீராகிலுய்யலாநெஞ்சினீரே. (

வையனைவையமுண்டமாலங்கந்தோண்மேற்கொண்ட
செய்யனைச்செய்யபோதிற்றிசைமுகன்சிரமொன்றேத்தும்
கையனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
ஐயனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (

நிருத்தனைநிமலன்றன்னைநீணிலம்விண்ணின்மிக்க
விருத்தனைவேதவித்தைவிளைபொருண்மூலமான
கருத்தனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
ஒருத்தனையுணர்தலாலுமுய்ந்தவாநெஞ்சினீரே. (

* திருநாகைக்கா என்பது நாகப்பட்டினம்.

மண்டனையிரந்துகொண்டமாயனோடசுரர்வானோர்
தெண்டிரைகடையவந்ததீவிடந்தன்னையுண்ட
கண்டனைக்கடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
அண்டனைநினைந்தநெஞ்சேயம்மநாமுய்ந்தவாறே. (ச)

நிறைபுனலணிந்தசென்னிநீணிலாவரவஞ்சூடி
மறையொலிபாடியாடன்மயானத்துமகிழ்ந்தமைந்தன்
கறைமலிகடல்சூழ்நாகைக்காரோணங்கோயில்கொண்ட
இறைவனைநாளுமேத்தவிடும்பைபோயின்பமாமே. (ரு)

வெம்பனைக்கருங்கையானைவெருவவன்றுரிவைபோர்த்த
கம்பனைக்காலற்காய்ந்தகாலனைஞாலமேத்தும்
உம்பனையும்பர்கோனைநாகைக்காரோணமேய
செம்பொனைநினைந்தநெஞ்சேதிண்ணநாமுய்ந்தவாறே. (சு)

வெங்கடுங்கானத்தேழைதன்னொடும்வேடனாய்ச்சென்
றங்கமர்மலைந்துபார்த்தற்கடிசரமருளிச்செய்தான்
மங்கைமாராடலோவாமன்னுகாரோணந்தன்னைக்
கங்குலும்பகலுங்காணப்பெற்றுநாங்களித்தவாறே. (எ)

தெற்றினர்புரங்கண்மூன்றுந்தீயினில்விழவோரம்பாற்
செற்றவெஞ்சிலையர்வஞ்சர்சிந்தையுட்சேர்விலாதார்
கற்றவர்பயிலுநாகைக்காரோணங்கருதியேத்தப்
பெற்றவர்பிறந்தார்மற்றுப்பிறந்தவர்பிறந்திலாரே. (அ-கூ)

கருமலிகடல்சூழ்நாகைக்காரோணர்கமலபாதத்
தொருவிரனுதிக்குநில்லாதொண்டிடலரக்கனுக்கன்
இருதிறமங்கைமாரோடெம்பிரான்செம்பொனாகந்
திருவடிதரித்துநிற்கத்திண்ணநாமுய்ந்தவாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - காயாரோகணேசர்; முதல்வி - நீலாயதாட்சி.

---

## எஉ. திருவின்னம்பர் - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

விண்ணவர்மகுடகோடிமிடைந்தசேவடியர்போலும்
பெண்ணொருபாகர்போலும்பேடலியாணர்போலும்
வண்ணமாலயனுங்காணுமால்வரையெரியர்போலும்
எண்ணுருவநேகர்போலுமின்னம்பரீசனாரே. (க)

பன்னியமறையர்போலும்பாம்பரையுடையர்போலும்
துன்னியசடையர்போலுந்தூமதிமத்தர்போலும்
மன்னியவழுவர்போலுமாதிடமகிழ்வர்போலும்
[illegible]டையர் [illegible] சனாரே. (உ)

மறிபெ நகையர்போலுமாதுமையுடையர்போலும்
ப ப

எறிபுனற்சடையர்போலுமின்னம்பரீசனாரே. (௩)

விடமலிகண்டர்போலும்வேள்வியையழிப்பர்போலும்
கடவுநல்விடையர்போலுங்காலனைக்காய்வர்போலும்
படமலியரவர்போலும்பாய்புலித்தோலர்போலும்
இடர்களைந்தருள்வர்போலுமின்னம்பரீசனாரே. (௪)

அளிமலர்க்கொன்றைதுன்றுமவிர்சடையுடையர்போலும்
களிமயிற்சாயலோடுங்காமனைவிழிப்பர்போலும்
வெளிவளருருவர்போலும்வெண்பொடியணிவர்போலும்
எளியவரடியர்க்கென்றுமின்னம்பரீசனாரே. (௫)

கணையமர்சிலையர்போலுங்கரியுரியுடையர்போலும்
துணையமர்பெண்ணர்போலுந்தூமணிக்குன்றர்போலும்
அணையுடையடியர்கூடியன்பொடுமலர்கடூவும்
இணையடியுடையர்போலுமின்னம்பரீசனாரே. (௬)

பொருப்பமர்புயத்தர்போலும்புனலணிசடையர்போலும்
மருப்பிளவாமைதாங்குமார்பில்வெண்ணூலர்போலும்
உருத்திரமூர்த்திபோலுமுணர்விலார்புரங்கண்மூன்றும்
எரித்திடுஞ்சிலையர்போலுமின்னம்பரீசனாரே. (௭)

காடிடமுடையர்போலுங்கடிகுரல்விளியர்போலும்
வேடுருவுடையர்போலும்வெண்மதிக்கொழுந்தர்போலும்
கோடலர்வன்னிதும்பைகொக்கிறகலர்ந்தகொன்றை
ஏடமர்சடையர்போலுமின்னம்பரீசனாரே. (௮)

காறிடுவிடத்தையுண்டகண்டரெண்டோளர்போலும்
நீறுடையுருவர்போலுநினைப்பினையரியர்போலும்
பாறுடைத்தலைகையேந்திப்பலிதிரிந்துண்பர்போலும்
ஏறுடைக்கொடியர்போலுமின்னம்பரீசனாரே. (௯)

ஆர்த்தெழுமிலங்கைக்கோனையருவரையடர்ப்பர்போலும்
பார்த்தனோடமர்பொருதுபடைகொடுத்தருள்வர்போலும்
தீர்த்தமாங்கங்கைதன்னைத்திருச்சடைவைப்பர்போலும்
ஏத்தவேழுலகும்வைத்தாரின்னம்பரீசனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - எழுத்தறிந்தநாதர்; முதல்வி - பூங்கொம்பநாயகி.

## எரு. திருச்சேறை - திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

பெருந்திருவிமவான்பெற்றபெண்கொடிபிரிந்தபின்னை
வருந்துவான்றவங்கள்செய்யமாமணம்புணர்ந்துமன்னும்
அருந்திருமேனிதன்பாலங்கொருபாகமாகத்
திருந்திடவைத்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.

ஓர்த்துளவாறுநோக்கியுண்மையையுணராக்குண்டர்
வார்த்தையைமெய்யென்றெண்ணிமயக்கில்வீழ்ந்தழுந்துவேனைப்
பேர்த்தெனையாளாக்கொண்டுபிறவிவான்பிணிகளெல்லாம்
தீர்த்தருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே.

ஒன்றியதவத்துமன்னியுடையனாயுலப்பில்காலம்
நின்றுதங்கழல்களேத்துநீள்சிலைவிசையனுக்கு
வென்றிகொள்வேடனாகிவிரும்பிவெங்கானகத்தூடு
சென்றருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (௩)

அஞ்சையுமடக்கியாற்றலுடையனாயனேககாலம்
மஞ்சமர்தவத்துணின்றுமன்னியபகீரதற்கு
வெஞ்சினமுகங்களாகிவிசையொடுபாயுங்கங்கை
செஞ்சடையேற்றார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (௪)

நிறைந்தமாமணலைக்கூப்பிநேசமோடாவின்பாலைக்
கறந்துகொண்டாட்டக்கண்டுசெறுத்ததன்றாதைதாளை
எறிந்தமாணிக்கப்போதேயெழில்கொள்தண்டீசனென்னச்
சிறந்தபேரளித்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (௫)

விரித்தபல்கதிர்கொள்சூலம்வெடிபடுதமருகங்கை
தரித்ததோர்கோலகாலபயிரவனாகிவேழம்
உரித்துமையஞ்சக்கண்டுமொண்டிருமணிவாய்விள்ளச்
சிரித்தருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (௬)

சுற்றமுன்னிமையோர்நின்றுதொழுதுதூமலர்கடூவி
மற்றெமையுய்யக்கொளென்னமன்னுவான்புரங்கண்மூன்றும்
உற்றொருநொடியின்முன்னமொள்ளழல்வாயின்வீழச்
செற்றருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (எ)

முந்தியிவ்வுலகமெல்லாம்படைத்தவன்மாலினோடும்
[illegible] யன் [illegible]
[illegible] னாயடிமுடியறியாவண்ணம்
செந்தழலானார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (அ-க)

ஒருவருநிகரிலாதவொண்டிறலரக்கனோடிப்
பெருவரையெடுத்ததிண்டோள்பிறங்கியமுடிகளிற்று
மருவியெம்பெருமானென்னமலரடிமெள்ளவாங்கித்
திருவருள்செய்தார்சேறைச்செந்நெறிச்செல்வனாரே. (௧௦)

லம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - செந்நெறியப்பர்; முதல்வி - ஞானவல்லியம்மை.

## ௭௪. பொது - நினைந்த திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

முத்தினைமணியைப்பொன்னைமுழுமுதற்பவளமேய்க்கும்
கொத்தினைவயிரமாலைக்கொழுந்தினையமரர்சூடும்
வித்தினைவேதவேள்விகேள்வியைவிளங்கநின்ற
அத்தனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (௧)

முன்பனையுலகுக்கெல்லாமூர்த்தியைமுனிகளேத்தும்
இன்பனையிலங்குசோதியிறைவனையரிவையஞ்ச
வன்பனைத்தடக்கைவேழக்களிற்றினையுரித்தவெங்கள்
அன்பனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (௨)

கரும்பினுமினியான்றன்னைக்காய்கதிர்ச்சோதியானை
இருங்கடலமுதந்தன்னையிறப்பொடுபிறப்பிலானைப்
பெரும்பொருட்கிளவியானைப்பெருந்தவமுனிவரேத்தும்
அரும்பொனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (௩)

செருத்தனையருத்திசெய்துசெஞ்சரஞ்செலுத்தியூர்மேல்
கருத்தனைக்கனகமேனிக்கடவுளைக்கருதும்வானோர்க்
கொருத்தனையொருத்திபாகம்பொருத்தியுமருத்திதீரா
[illegible]ஞ்சேநேர்படநினைந்தவாறே. (௪)

கூற்றினையுதைத்தபாதக்குழகனைமழலைவெள்ளே
றேற்றனையிமையோரேத்தவிருஞ்சடைக்கற்றைதன்மேல்
ஆற்றனையடியரேத்துமமுதனையமுதயோக
நீற்றனைநினைந்தநெஞ்சநேர்படநினைந்தவாறே.

கருப்பனைத்தடக்கைவேழக்களிற்றினையுரித்தகண்டன்
விருப்பனைவிளங்குசோதிவியன்கயிலாயமென்னும்
பொருப்பனைப்பொருப்பன்மங்கைபங்கனையங்கையேற்ற
நெருப்பனைநினைந்தநெஞ்சேநேர்படநினைந்தவாறே. (௬)

நீதியாணினைப்புளானைநினைப்பவர்மனத்துளானைச்
சாதியைச்சங்கவெண்ணீற்றண்ணலைவிண்ணில்வானோர்
சோதியைத்துளக்கமில்லாவிளக்கினையளக்கலாகா
ஆதியைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (௭)

பழகனையுலகுக்கெல்லாம்பருப்பனைப்பொருப்போடொக்கும்
மழகளியானையின்றோல்மலைமகளொடுங்கப்போர்த்த
குழகனைக்குழவித்திங்கள்குளிர்சடைமருவவைத்த
அழகனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (அ)

விண்ணிடைமின்னொப்பானைப் பெய்ப்பெரும்பொருவொப்பானைக்
கண்ணிடைமணியொப்பானைக்கடுவிருட்சுடரொப்பானை
எண்ணிடையெண்ணலாகாவிருவரைவெருவநீண்ட
அண்ணலைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே.

உரவனைத்திரண்டதிண்டோளரக்கனையூன்றிமுன்னாள்
நிரவனைநிமிர்ந்தசோதிநீண்முடியடர்த்தங்கள்
குரவனைக்குளிர்வெண்டிங்கட்சடையிடைப்பொதியுமைவாய்
அரவனைநினைந்தநெஞ்சமழகிதாநினைந்தவாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## எரு. பொது - தனித்திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்.

தொண்டனேன்பட்டதென்னேதூயகாவிரியினன்னீர்
கொண்டிருக்கோதியாட்டிக்குங்குமக்குழம்புசாத்தி
இண்டைகொண்டேறநோக்கியீசனையெம்பிரானைக்
கண்டனைக்கண்டிராதேகாலத்தைக்கழித்தவாறே. (க)

பின்னிலேன்முன்னிலேனான்பிறப்பறுத்தருள்செய்வானை
என்னிலேனாயினேனானங்கதிர்ப்பயத்திங்கள்
சின்னிலாவெறிக்குஞ்சென்னிச்சிவபுரத்தமரரேறே
நின்னலால்களைகணாரேநீறுசேரகலத்தானே. (உ)

கள்ளனேன்கள்ளத்தொண்டாய்க்காலத்தைக்கழித்துப்போக்கித்
தெள்ளியேனாகிநின்றுதேடினேனாடிக்கண்டேன்
உள்குவாருள்கிற்றெல்லாமுடனிருந்தறிதியென்று
வெள்கினேன்வெள்கிநானும்விலாவிறச்சிரித்திட்டேனே. (௩)

உடம்பெனுமனையகத்துளுள்ளமேதகளியாக
மடம்படுமுணர்நெய்யட்டியுயிரெனுந்திரிமயக்கி
இடம்படுஞானத்தீயாலெரிகொளவிருந்துநோக்கில்
கடம்பமர்காளைதாதைகழலடிகாணலாமே. (ச)

வஞ்சப்பெண்ணரங்குகோயில்வாளெயிற்றரவந்துஞ்சா
வஞ்சப்பெண்ணிருந்தசூழல்வான்றவழ்மதியந்தோயும்
வஞ்சப்பெண்வாழ்க்கையாளன்வாழ்வினைவாழலுற்று
வஞ்சப்பெண்ணுறக்கமானேன்வஞ்சனேனென்செய்கேனே. (ரு)

உள்குவாருள்ளத்தானையுணர்வெனும்பெருமையானை
உள்கினேனானுங்காண்பானுருகினேனூறியூறி
எள்கினேனெந்தைபெம்மானிருதலைமின்னுகின்ற
கொள்ளிமேலெறும்பென்னுள்ளமெங்ஙனங் கூடுமாறே. (௬)

மோத்தையைக்கண்டகாக்கைபோலவல்வினைகள்மொய்த்துன்
வார்த்தையைப்பேசலொட்டாமயக்கநான்மயங்குகின்றேன்
சீத்தையைச்சிதம்புதன்னைச்செடிகனாய்வடிவொன்றில்லா
ஊத்தையைக்கழிக்கும்வண்ணமுணர்வுதாவுலகமூர்த்தி. (எ)

அங்கத்தைமண்ணுக்காக்கியார்வத்தைஉனக்கேதந்து
பங்கத்தைப்போகமாற்றிப்பாவித்தேன்பரமாநின்னைச்
சங்கொத்தமேனிச்செல்வாசாதனாயேனுன்னை
எங்குற்றாயென்றபோதாவிங்குற்றேனென்கண்டாயே. (அ)

வெள்ளநீர்ச்சடையனார்தாம்வினவுவார்போலவந்தென்
உள்ளமேபுகுந்துநின்றார்க்குறங்குநான்புடைகள்போந்து
கள்ளரோபுகுந்தீரென்னக்கலந்துதானோக்கிநக்கு
வெள்ளரோமென்றுநின்றார்விளங்கிளம்பிறையனாரே. (௯)

மறைதானுன்றப்பிறையெயிற்றிலங்கவங்காந்
தருவரையனையதோளானரக்கனன்றலறிவீழ்ந்தான்
இருவருமொருவனாயவுருவமங்குடையவர்கள்
திருவடிசுமந்துகொண்டுகாண்கநான்றிரியுமாறே. (௧௦)

ம்பலம்.

## ௭௬. பொது - தனித்திருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

மருளவாமனத்தனாகிமயங்கினேன்மதியிலாதேன்
இருளவாவறுக்குமெந்தையிணையடிநீழலென்னும்
அருளவாப்பெறுதலின்றியஞ்சினானலமந்தேற்குப்
பொருளவாத்தந்தவாறேபோதுபோய்ப்புலந்ததன்றே. (௧)

மெய்ம்மையாமுழவைச்செய்துவிருப்பெனும்வித்தைவித்திப்
பொய்ம்மையாங்களையைவாங்கிப்பொறையெனுநீரைப்பாய்ச்
தம்மையுநோக்கிக்கண்டுதகவெனும்வேலியிட்டுச்
செம்மையுணிற்பராகிற்சிவகதிவிளையுமன்றே. (௨)

எம்பிரானென்றதேகொண்டென்னுளேபுகுந்துநின்றிங்
கெம்பிரானாட்டவாடியென்னுளேயுழிதர்வேனை
எம்பிரானென்னைப்பின்னைத்தன்னுளேகரக்குமென்றால்
எம்பிரானென்னிலல்லாலென்செய்கேனேழையேனே. (௩)

கோவணமுடுத்தவாறுங்கோளரவசைத்தவாறும்
தீவணச்சாம்பர்பூசித்திருவுருவிருந்தவாறும்
பூவணக்கிழவனாரைப்புலியுரியரையனாரை
ஏவணச்சிலையினாரையாவரேயெழுதுவாரே. (௨)

விளக்கினார்பெற்றவின்பமெழுகினாற்பதிற்றியாகும்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ஞ்ஞெறிஞானமாகும்
அளப்பிலகீதஞ்சொன்னார்க்கடிகடாமருளுமாறே. (௩)

சந்திரற்சடையில்வைத்தசங்கரன்சாமவேதி
அந்தரத்தமரர்பெம்மானானல்வெள்ளூர்தியான்றன்
மந்திரநமச்சிவாயவாகநீறணியப்பெற்றால்
வெந்தறும்வினையுநோயும்வெவ்வழல்விறகிட்டன்றே. (௪)

புள்ளுவரைவர்கள்வர்புனத்திடைப்புகுந்துநின்று
துள்ளுவர்சூறைகொள்வர்தூநெறிவிளையவொட்டார்
முள்ளுடையவர்கடம்மைமுக்கணான்பாதநீழல்
உள்ளுடைமறைந்துநின்றங்குணர்வினாலெய்யலாமே. (௫)

தொண்டனேன்பிறந்துவாளாத்தொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநாளும்பெரியதோரவாவிற்பட்டேன்
அண்டனேயமரர்கோவேயறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைக்கங்கைசூடுந்திகழ்தருசடையினானே. (௬-௭-௮)

பாறினாய்பாவிநெஞ்சேபன்றிபோலளற்றிற்பட்டுத்
தேறிநீநினைதியாயிற்சிவகதிதிண்ணமாகும்
ஊறலையுவர்ப்புநாறியுதிரமேயொழுகும்வாசல்
கூறையான்மூடக்கண்டுகோலமாக்கருதினாயே. (௯)

உய்த்தகாலுதயத்தும்பருமையவணடுக்கந்தீர
வைத்தகாலரக்கனாதன்வான்முடிதனக்குநேர்ந்தான்
மொய்த்தநான்முகிழ்வெண்டிங்கண்மூர்த்தியெனுச்சிதன்மேல்
வைத்தகால்வருந்துமென்றுவாடிநானொடுங்கினேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## 78) எஅ. பொது - குறைந்ததிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வென்றிலேன்புலன்களைந்தும்வென்றவர்வளாகந்தன்னுள்
சென்றிலேனாதலாலேசெந்நெறியதற்குஞ்சேயேன்
நின்றுளேதுளும்புகின்றேனீசனேனீசனேயோ
இன்றுளேனாளையில்லேனென்செய்வான்றோன்றினேனே. (௧)

கோவணமுடுத்தவாறுங்கோளரவசைத்தவாறும்
தீவணச்சாம்பர்பூசித்திருவுருவிருந்தவாறும்
பூவணக்கிழவனாரைப்புலிபுரியரையனாரை
ஏவணச்சிலைபினாரையாவரேயெழுதுவாரே. (உ)

விளக்கினார்பெற்றவின்பமெழுகினற்பதிற்றியாகும்
துளக்கினன்மலர்தொடுத்தாற்றூயவிண்ணேறலாகும்
விளக்கிட்டார்பேறுசொல்லின்மெய்ஞ்ஞெறிஞானமாகும்
அளப்பிலகீதஞ்சொன்னார்க்கடிகடாமருளுமாறே. (ங.)

சந்திரற்சடையில்வைத்தசங்கரன்சாமவேதி
அந்தரத்தமரர்பெம்மானானல்வெள்ளூர்தியான்றன்
மந்திரநமச்சிவாயவாகநீறணியப்பெற்றால்
வெந்தறும்வினையும்நோயும்வெவ்வழல்விறகிட்டன்றே. (ச)

புள்ளுவரைவர்கள்வர்புனத்திடைப்புகுந்துநின்று
துள்ளுவர்சூறைகொள்வர்தூநெறிவிளையவொட்டார்
முள்ளுடையவர்கடம்மைமுக்கணான்பாதநீழல்
நடைம (ரு)

தொண்டனேன்பிறந்துவாளாத்தொல்வினைக்குழியில்வீழ்ந்து
பிண்டமேசுமந்துநாளும்பெரியதோரவாவிற்பட்டேன்
அண்டனேயமரர்கோவேயறிவனேயஞ்சலென்னாய்
தெண்டிரைக்கங்கைசூடுந்திகழ்தருசடையினானே. (சு-எ-அ)

பா ய்பாவிநெஞ்சேபன்றிபோலளற்றிற்பட்டுத்
தேறிநீநினைதியாயிற்சிவகதிதிண்ணமாகும்
ஊறலேயுவர்ப்புநாறியுதிரமேயொழுகும்வாசல்
கூறையான்மூடக்கண்டுகோலமாக்கருதினாயே. (கூ)

உய்த்தகாலுதயத்தும்பருமையவணடுக்கந்தீர
வைத்தகாலரக்கனைதன்வான்முடிதனக்குநேர்ந்தான்
மொய்த்தநான்முகிழ்வெண்டிங்கண்மூர்த்தியெனுர்சிதன்மேல்
வைத்தகால்வருந்துமென்றுவாடிநாளொடுங்கினேனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## 78) எஅ. பொது - குறைந்ததிருநேரிசை.

திருச்சிற்றம்பலம்

வென்றினேன்புலன்களைந்தும்வென்றவர்வளாகந்தன்னுள்
சென்றிலேஞ்தலாலேசெந்நெறியதற்குஞ்சேயேன்
நின்றுளேதுளும்புகின்றேனீசனேனீசனேயோ
இன்றுளேனாளையில்லேனென்செய்வான்றோன்றினேனே. (க)

கற்றிலேன்கலைகள்ஞானங்கற்றவர்தங்களோடும்
உற்றிலேனாதலாலேயுணர்வுக்குஞ்சேயனானேன்
பெற்றிலேன்பெருந்தடங்கண்பேதைமார்தமக்கும்பொல்லேன்
எற்றுளேனிறைவனேநானென்செய்வான்றோன்றினேனே.

மாட்டினேன்மனத்தைமுன்னேமறுமையையுணரமாட்டேன்
மூட்டினான்முன்னைநாளேமுதல்வனைவணங்ககாட்டேன்
பாட்டினாய்போலநின்றுபற்றநாம்பாவந்தன்னை
ஈட்டினேன்களையமாட்டேனென்செய்வான்றோன்றினேனே.

கரைக்கடந்தோதமேறுங்கடல்விடமுண்டகண்டன்
உரைக்கடந்தோதுசீர்மையுணர்ந்திலேனாதலாலே
அரைக்கிடந்தசையுநாகமசைப்பனையின்பவாழ்க்கைக்
கிரைக்கிடந்துருகுகின்றேனென்செய்வான்றோன்றினேனே. (௫)

செம்மைவெண்ணீறுபூசுஞ்சிவனவன்றேவதேவன்
வெம்மைநோய்வினைகடீர்க்கும்விகிர்தனுக்கார்வமெய்தி
அம்மைநின்றடிமைசெய்யாவடிவிலாமுடிவில்வாழ்க்கைக்
கிம்மைநின்றுருகுகின்றேனென்செய்வான்றோன்றினேனே.

பேச்சொடுபேச்சுக்கெல்லாம்பிறர்தமைப்புறமேபேசக்
கூச்சிலேனாதலாலேகொடுமையைவிடுமாறோரேன்
நாச்சொலிநாளுமூர்த்திநன்மையையுணரமாட்டேன்
ஏச்சுளேநின்றுமெய்யேனென்செய்வான்றோன்றினேனே. (௬)

தேசனைத்தேசமாகுந்திருமாலோர்பங்கன்றன்னைப்
பூசனைப்புனிதன்றன்னைப்புணரும்புண்டரீகத்தானை
நேசனைநெருப்பன்றன்னைநிவஞ்சகத்தகன்றசெம்மை
ஈசனையறியமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௭)

விளைக்கின்றவினையைநோக்கிவெண்மயிர்விரவிமேலும்
முளைக்கின்றவினையைப்போகமுயல்கின்றேனறியலென்னாம்
திளைக்கின்றமுடியினான்றன்றிருவடிபரவமாட்டா
திளைக்கின்றேனிருமியூன்றியென்செய்வான்றோன்றினேனே. (௮)

விளைவறிவிலாமையாலேவேதனைக்குழியிலாழ்ந்து
களைகணுமில்லேனெந்தாய்காமரங்கற்றுமில்லேன்
தளையவிழ்கோதைநல்லார்தங்களோடின்பமெய்த
இளையனுமல்லேனெந்தாயென்செய்வான்றோன்றினேனே. (௯)

வெட்டனவுடையனாகிவீரத்தான்மலையெடுத்த
கேட்ட
அட்டமாமூர்த்தியாயவாதியையறியாதுநாளும
எட்டனையெட்டமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

79

## ௭௯. பொது - குறைந்த திருநேரிசை.

லம்

தம்மானங்காப்பதாகித்தையலார்வலையுளாழ்ந்து
அம்மானையமுதன்றன்னையாதியையந்தமாய
செம்மானவொளிகொண்மேனிச்சிந்தையுளொன்றிநின்ற
னறினேனே (௧)

இக்குளேயழுந்தியீசன்றிறம்படேன்றவமதோரேன்
கொப்புளேபோலத்தோன்றியதனுளேமறையக்கண்டும்
இக்களேபரத்தையோம்பவென்செய்வான்றோன்றினேனே, (௨)

கூடை

ஏழினின்னிசையினாலுமிறைவனையேத்தமாட்டேன்
மாழையொண்கண்ணினல்லமடந்தைமார்தமக்கும்பொல்லேன்
ஏழையேனாகினாளுமென்செய்வான்றோன்றினேனே. (௩)

முன்னையென்வினையினாலேமூர்த்தியைநினையமாட்டேன்
பின்னைநான்பித்தனாகிப்பிதற்றுவன்பேதையேனான்
என்னுளேமன்னிநின்றசீர்மையதாயினானை
என்னுளேநினையமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௪)

கறையணிகண்டன்றன்னைக்காமரங்கற்றுமில்லேன்
பிறைநுதற்பேதைமாதர்பெய்வளையார்க்குமல்லேன்
மடநவினாவினானைமன்னிநின்றிறைஞ்சிநாளும்
இறையேயுமேத்தமாட்டேனென்செய்வான்றோன்றினேனே. (௫)

வளைத்துநின்றைவர்கள்வர்வந்தெனைநடுக்கஞ்செய்யத்
தளைத்துவைத்துலையையேற்றித்தழலெரிமடுத்தநீரில்
திளைத்துநின்றாடுகின்றவாமைபோற்றெளிவிலாதேன்
இளைத்துநின்றாடுகின்றேனென்செய்வான்றோன்றினேனே. (௬-௭-௮-௯-௧௦)

திருச்சிற்றம்பலம்.

80

## ௮௦ ※ கோயில் - திருவிருத்தம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்.

பாளையுடைக்கமுகோங்கிப்பன்மாடநெருங்கியெங்கும்
வாளையுடைப்புனல்வந்தெறிவாழ்வயற்றில்லைதன்னுள்
ஆளவுடைக்கழற்சிற்றம்பலத்தரனாடல்கண்டாற்
பீளையுடைக்கண்களாற்பின்னைப்பேய்த்தொண்டர்காண்பதென்னே. (௧)

பொருவிடையொன்றுடைப்புண்ணியமூர்த்திபுலியதளன்
உருவுடையம்மலைமங்கைமணாளனுலகுக்கெல்லாம்
திருவுடையந்தணர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
திருவடியைக்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௨)

* கோயில் என்பது சிதம்பரம்,

தொடுத்தமலரொடுதூபமுஞ்சாந்துங்கொண்டெப்போதும்
அடுத்துவணங்குமயனொடுமாலுக்குங்காண்பரியான்
பொடிக்கொண்டணிந்துபொன்னாகியதில்லைச்சிற்றம்பலவன்
உடுத்ததுகில்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௩)

வைச்சபொருணமக்காகுமென்றெண்ணிநமச்சிவாய
அச்சமொழிந்தேனணிதில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபேர்நந்தியுந்தியின்மேலசைத்த
கச்சினழகுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௪)

செய்ஞ்ஞின்றநீலமலர்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
மைஞ்ஞின்றவொண்கண்மலைமகள்கண்டுமகிழ்ந்துநின்ற
மெய்ஞ்ஞின்றெரியும்விளக்கொத்தநீலமணிமிடற்றன்
கைஞ்ஞின்றவாடல்கண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௫)

ஊனத்தைநீக்கியுலகறியவென்னையாட்கொண்டவன்
தேனொத்தெனக்கினியான்றில்லைச்சிற்றம்பலவனெங்கோன்
வானத்தவருய்யவன்னஞ்சையுண்டகண்டத்திலங்கும்
ஏனத்தெயிறுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகாண்பதென்னே. (௬)

தெரித்தகணையாற்றிரிபுரமூன்றுஞ்செந்தீயின்மூழ்க
எரித்தவிறைவனிமையவர்கோமானிணையடிகள்
தரித்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
சிரித்தமுகங்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௭)

சுற்றுமமரர்சுரர்பதிநின்றிருப்பாதமல்லாற்
பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டான்
செற்றங்கநங்கனைத்தீவிழித்தான்றில்லையம்பலவன்
நெற்றியிற்கண்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௮)

சித்தத்தெழுந்தசெழுங்கமலத்தன்னசேவடிகள்
வைத்தமனத்தவர்வாழ்கின்றதில்லைச்சிற்றம்பலவன்
முத்தும்வயிரமுமாணிக்கந்தன்னுள்விளங்கியதூ
மத்தமலர்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே. (௯)

தருக்கிமிகுத்துத்தன்றோள்வலியுன்னித்தடவரையை
வரைக்கைகளாலெடுத்தார்ப்பமலைமகள்கோன்சிரித்து
அரக்கன்மணிமுடிபத்துமணிதில்லையம்பலவன்
நெருக்கிமிதித்தவிரல்கண்டகண்கொண்டுகாண்பதென்னே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சபாநாயகர்; முதல்வி - உமையம்மை.

## ௮௩. கோயில் - திருவிருத்தம் - பண் - கொல்லி.

திருச்சிற்றம்பலம்

கருநட்டகண்டனையண்டத்தலைவனைக்கற்பகத்தைச்
செருநட்டமும்மதிலெய்யவல்லானைச்செந்தீமுழங்கத்
திருநட்டமாடியைத்தில்லைக்கிறையைச்சிற்றம்பலத்துப்
பெருநட்டமாடியைவானவர்கோனென்றுவாழ்த்துவனே. (௧)

ஒன்றியிருந்துநினைமின்களுந்தமக்கூனமில்லைக்
கன்றியகாலனைக்காலாற்கடந்தானடியவர்க்காச்
சென்றுதொழுமின்கடில்லையுட்சிற்றம்பலத்துநட்டம்
என்றுவந்தாயெனுமெம்பெருமான்றன்றிருக்குறிப்பே. (௨)

கன்மனவீர்கழியுங்கருத்தேசொல்லிக்காண்பதென்னே
நன்மனவாநவிறில்லையுட்சிற்றம்பலத்துநட்டம்
பொன்மலையில்வெள்ளிக்குன்றதுபோலப்பொலிந்திலங்கி
என்மனமேயொன்றிப்புக்கனன்போந்தசுவடில்லையே. (௩)

குனித்தபுருவமுங்கொவ்வைச்செவ்வாயிற்குமிண்சிரிப்பும்
பனித்தசடையும்பவளம்போன்மேனியிற்பால்வெண்ணீறும்
இனித்தமுடையவெடுத்தபொற்பாதமுங்காணப்பெற்றால்
மனித்தப்பிறவியும்வேண்டுவதேயிந்தமாநிலத்தே. (௪)

வாய்த்ததுநந்தமக்கீதோர்பிறவிமதித்திடுமின்
பார்த்தற்குப்பாசுபதமருள்செய்தவன்பத்தருள்ளீர்
கோத்தன்றுமுப்புரந்தீவளைத்தான்றில்லையம்பலத்துக்
கூத்தனுக்காட்பட்டிருப்பதன்றோநந்தங்கூழைமையே. (௫)

பூத்தனபொற்சடைபொன்போன்மிளிரப்புரிகணங்கள்
ஆர்த்தனகொட்டியரித்தனபல்குறட்பூதகணந்
தேத்தெனவென்றிசைவண்டுகள்பாடுசிற்றம்பலத்துக்
கூத்தனிற்கூத்துவல்லாருளரோவென்றன்கோல்வளைக்கே. (௬)

முடிகொண்டமத்தமுமுக்கண்ணினோக்குமுறுவலிப்புந்
துடிகொண்டகையுந்துதைந்தவெண்ணீறுஞ்சுரிகுழலாள்
படிகொண்டபாகமும்பாய்புலித்தோலுமென்பாவிநெஞ்சிற்
குடிகொண்டவாதில்லையம்பலக்கூத்தன்குரைகழலே. (௭)

படைக்கலமாகவுன்னாமத்தெழுத்தஞ்சென்னாவிற்கொண்டேன்
இடைக்கலமல்லேனெழுபிறப்புமுனக்காட்செய்கின்றேன்
றுடைக்கினும்போகேன்றொழுதுவணங்கித்தூநீறணிந்துன்
அடைக்கலங்கண்டாயணிதில்லைச்சிற்றம்பலத்தரனே. (௮)

பொன்னொத்தமேனிமேல்வெண்ணீறணிந்துபுரிசடைகண்
மின்னொத்திலங்கப்பலிதேர்ந்துழலும்விடங்கர்வேடச்

டசிற்றம்பலத்துநட்டம்
என்னத்தனுடல்கண்டின்புற்றதாலிவ்விருநிலமே.

சாடவெடுத்ததுதக்கன்றன்வேள்வியிற்சந்திரனை
வீடவெடுத்ததுகாலனைநாரணனான்முகனுந்
தேடவெடுத்ததுதில்லைப்புட்சிற்றம்பலத்துநட்டம்
ஆடவெடுத்திட்டபாதமன்றோநம்மையாட்கொண்டதே.

---

## 82 ௮௨ * திருக்கழுமலம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பார்கொண்டுமூடிக்கடல்கொண்டஞான்றுநின்பாதமெல்லாம்
நாலஞ்சுபுள்ளினமேந்தினவென்பர்நளிர்மதியங்
கால்கொண்டவண்கைச்சடைவிரித்தாடுங்கழுமலவர்க்
காளன்றிமற்றுமுண்டோவந்தணாழியகலிடமே.

கடையார்கொடிநெடுமாடங்களெங்குங்கலந்திலங்க
உடையானுடைதலைமாலையுஞ்சூடியுங்கந்தருவி
விடைதானுடையவவ்வேதியன்வாழுங்கழுமலத்துள்
அடைவார்வினைகளவையெங்கநாடொறும்பாடுவனே.

திரைவாய்ப்பெருங்கடன்முத்தங்குவிப்பமுகந்துகொண்டு
நுரைவாய்நுளைச்சியரோடிக்கழுமலத்துள்ளழுந்து
விரைவாய்நறுமலர்சூடியவிண்ணவன்றன்னடிக்கே
வரையாப்பரிசிவைநாடொறுநந்தமையாள்வனவே.

விரிக்குமரும்பதம்வேதங்களோதும்விழுமியநூல்
உரைக்கிலரும்பொருளுள்ளவர்கேட்கிலுலகமுற்றும்
இரிக்கும்பறையொடுபூதங்கள்பாடக்கழுமலவன்
நிருத்தம்பழம்படியாடுங்கழனம்மையாள்வனவே.

யாமுன்கழுமலத்தைப்
பந் [illegible] வல் [illegible] தீர்க்கவல்லானைப்பசுபதியைச்
சந்தித்தகாலமறுத்துமென்றெண்ணியிருந்தவர்க்கு
முந்தித்தொழுகழனாடொறுநந்தம்மையாள்வனவே.

நிலையும்பெருமையுநீதியுஞ்சாலவழகுடைத்தாய்
அலையும்பெருவெள்ளத்தன்றமிதந்தவித்தோணிபுரஞ்
சிலையின்றிரிபுரமூன்றெரித்தார்தங்கழுமலவர்
அலருங்கழலடிநாடொறுநந்தம்மையாள்வனவே.

முற்றிக்கிடந்துமுந்நீரின்மிதந்துடன்மொய்த்தமரர்
சுற்றிக்கிடந்துதொழப்படுகின்றதுசூழரவந்
தெற்றிக்கிடந்துவெங்கோன்றளந்தான்றிவெண்டிங்கள்சூடுங்
கற்றைச்சடைமுடியார்க்கிடமாயகழுமலமே.

---

* திருக்கழுமலம் என்பது சீகாழி.

உடலுமுயிருமொருவழிச்செல்லுமுலகத்துள்ளே
அடையுமுணைவந்தடைந்தாரமராடியிணைக்கீழ்
நடையும்விழுவொடுநாடொறுமல்குகழுமலத்துள்
விடையன்றனிப்பதநாடொறுநந்தம்மையாள்வனவே. (அ)

பரவைக்கடனஞ்சமுண்டதுமில்லையிப்பார்முழுதும்
நிரவிக்கிடந்துதொழப்படுகின்றதுநீண்டிருவர்
சிரமப்படவந்துசார்ந்தார்கழலடிகாண்பதற்கே
அரவக்கழலடிநாடொறுநந்தம்மையாள்வனவே. (கூ)

கரையார்கடல்சூழிலங்கையர்கோன்றன்முடிசிதறத்
தொலையாமலரடியூன்றலுமுள்ளம்விதிர்விதிர்த்துத்
தலையாய்க்கிடந்துயர்ந்தான்றன்கழுமலங்காண்பதற்கே

(க .)

பலம.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பிரமபுரீசர்; முதல்வி - திருநிலைநாயகி.

திருத்தோணியில் வீற்றிருப்பவர் தோணியப்பர்.

## 83 அங. திருக்கழுமலம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

படையார்மழுவொன்றுபற்றியகையன்பதிவினவில்
கடையார்கொடிநெடுமாடங்களோங்குகழுமலமாம்
மடைவாய்க்குருகினம்பாளைவிரிதொறும்வண்டினங்கள்
பெடைவாய்மதுவுண்டுபேராதிருக்கும்பெரும்பதியே. (க)

திருச்சிற்றம்பலம்.

## 84 அச. பொது - ஆருயிர்த்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

எட்டாந்திசைக்குமிருதிசைக்குமிறைவாமுறைறயென்
றிட்டாரமரர்வெம்பூசலெனக்கேட்டெரிவிழியா
ஒட்டாக்கயவர்திரிபுரமுன்றையுமோரம்பினால்
அட்டானடிநிழற்கீழதன்றேவென்றனாருயிரே. (க)

பேழ்வாயரவினரைக்கசைத்தேறிப்பிறங்கிலங்கு
தேய்வாயிளம்பிறைசெஞ்சடைமேல்வைத்ததேவர்பிரான்
மூவாணிளகான்முழுவுலகோடுமண்விண்ணுமற்றும்
ஆவானடிநிழற்கீழதன்றேவென்றனாருயிரே. (உ)

தெரியாவெகுளியனாய்த்தக்கன்வேள்விதகர்த்துகந்த
எரியாரிலங்கியசூலத்தினானிமையாதமுக்கட்

பெரியான்பெரியார்பிறப்பறுப்பானென்றுந்தன்பிறப்பை
அரியானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

வடிவுடைவாணெடுங்கண்ணுமையாளையோர்பான்மகிழ்ந்து
வெடிகொளரவொடுவேங்கையதள்கொண்டுமேன்மருவிப்
பொடிகொள்கலந்துப்பொலிந்திருந்தன்னொடுபைங்கொன்றையந்தார்
அடிகளடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

எனமரர்க்கமுதருளிநஞ்சமுண்டகண்டர்.

கறுத்தான்கறுப்பழகாவுடையான்கங்கைசெஞ்சடைமேல்
செறுத்தான்றனஞ்சயன்சேனைகலங்கக்கணையொன்றினால்
அறுத்தானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

காய்ந்தான்செறற்கரியானைக்காலனைக்காலொன்றினால்
பாய்ந்தான்பணைமதில்மூன்றுங்கணையொன்றினாலுமுலாய்
மேய்ந்தான்வியனுலகேழும்விளங்கவிழுமியநூல்
ஆய்ந்தானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

உளைந்தான்செறுத்தற்கரியான்றலையையுகிரொன்றினால்
களைந்தானதனைநிறையநெடுமால்கணற்குருதி
வளைந்தானொருவிரலினொடுவீழ்வித்துச்சாம்பர்வெண்ணீ
றளைந்தானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

முந்திவட்டத்திடைப்பட்டதெல்லாமுடிவேந்தர்தங்கள்
பந்திவட்டத்திடைப்பட்டலைப்புண்பதற்கஞ்சிக்கொல்லோ
நந்திவட்டநறுமாமலர்க்கொன்றையுங்கங்கைசெஞ்சடை
அந்திவட்டத்தொளியானடிச்சேர்ந்ததென்னாருயிரே.

மிகத்தான்பெரியதோர்வேங்கையதள்கொண்டுமெய்ம்மருவி
அகத்தான்வெருவல்லநொடுக்குறப்பாலவருமெய்பொன்
முகத்தாற்குளிர்ந்திருந்தம்மாளைத்திருச்சேகப்பரிவைகந்த
அகத்தானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

பைம்மாணரவல்குற்பங்கயச்சீறடியாள்வெருவக்
கைமாவரிசில்க்காமனையட்டகடவுண்முக்கண்
எம்மானிவனென்றிருவருமேத்தவெரிநிமிர்ந்த
அம்மானடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

பழகவோரூர்தியரன்பைங்கட்பாரிடம்பாணிசெய்பக்
குழலுமுழவொடுமாநடமாடியுயரிலங்கைக்
கிழவனிருபதுதோளுமொருவிரலாலிறுத்த
அழகனடிநிழற்கீழதன்றேயென்றனாருயிரே.

திருச்சிற்றம்பலம்.

௫. திருச்சோற்றுத்துறை - திருவிருத்தம்.

பலம்

மலர் தூயனதாங்கொணர்ந்து
மேலையமரர்விரும்புமிடம்விரையான்மலிந்த
மேல்
மாலைமதியமன்றேயெம்பிரானுக்கழகியதே. (க)

வண்டணைகொன்றையும்வன்னியுமத்தமும்வாளரவும்
கொண்டணைந்தேறுமுடியுடையான்குரைசேர்கழற்கே
தொண்டணைந்தாடியசோற்றுத்துறையுறைவார்சடைமேல்
வெண்டலைமாலையன்றேயெம்பிரானுக்கழகியதே. (உ)

அளக்குநெறியினனன்பர்கடம்மனத்தாய்ந்துகொள்வான்
விளக்குமடியவர்மேல்வினைதீர்த்திடும்விண்ணவர்கோன்
துளக்குங்குழையணிசோற்றுத்துறையுறைவார்சடைமேல்
திளைக்குமதியமன்றேயெம்பிரானுக்கழகியதே. (ங)

யெங்கும்
பேர்ந்தகைமானடமாடுவர்பின்னுசடையிடையே
சேர்ந்தகைமாமலர்துன்னியசோற்றுத்துறையுறைவார்
ஏந்தகைச்சூலமழுவெம்பிரானுக்கழகியதே. (ச)

கூற்றைக்கடந்ததுங்கோளரவார்த்ததுங்கோளுழுவை
நீற்றிற்றுதைந்துதிரியும்பரிசதுநாமறியோம்
ஆற்றிற்கிடந்தங்கலைப்பவலைப்புண்டசைந்தொதுக்கும்
சோற்றுத்துறையுறைவார்சடைமேலதோர்தூமதியே. (௫)

வல்லாடிநின்றுவலிபேசுவார்கோளர்வல்லசுரர்
கொல்லாடிநின்றுகுமைக்கிலும்வானவர்வந்திறைஞ்சச்
சொல்லாடிநின்றுபயில்கின்றசோற்றுத்துறையுறைவார்
வில்லாடிநின்றநிலையெம்பிரானுக்கழகியதே. (சா)

ஆயமுடையதுநாமறியோமரணத்தவரைக்
காயக்கணைசிலைவாங்கியுமெய்துங்துயக்கறுத்தான்
தூயவெண்ணீற்றனன்சோற்றுத்துறையுறைவார்சடைமேல்
பாயும்வெண்ணீர்த்திரைகங்கையெம்மானுக்கழகியதே. (எ)

அண்டரமரர்கடைந்தெழுந்தோடியநஞ்சதனை
உண்டுமதனையொடுக்கவல்லான்மிக்கவும்பர்கள்கோன்
சாற்றுத்துறையுறைவார்சடைமேல்
இண்டைமதியமன்றேயெம்பிரானுக்கழகியதே. (அ)

கடன்மணிவண்ணன்கருதியநான்முகன்றானறியா
விடமணிகண்டமுடையவன் றுடையான்

சுற்றிவண்டியாழ்செயுஞ்சோலையுங்காவுந்துதைந்திலங்கு
பெற்றிகண்டான்மற்றியாவருங்கொள்வர்பிறரிடைநீ
ஒற்றிகொண்டாயொற்றியூரையுங்கைவிட்டுறுமென்றெண்ணி
விற்றிகண்டாய்மற்றிதுவொப்பதில்லிடம்வேதியனே. (அ)

சுற்றிக்கிடந்தொற்றியூரனென்சிந்தைபிரிவறியான்
ஒற்றித்திரிதந்துநீயென்னசெய்தியுலகமெல்லாம்
பற்றித்திரிந்ததுபல்லொடுநாமென்றுகண்குழித்துத்
தெற்றித்திருப்பதல்லாலென்னசெய்யுமித்தீவினையே. (௯)

அங்கட்கடுக்கைக்குழலைப்புறவமுறுவல்செய்யும்
பைங்கட்டலைக்குச்சுடலைக்களரிபருமணிசேர்
கங்கைக்குவேலையரவுக்குப்புற்றுக்கலைநிரம்பாத்
திங்கட்குவானந்திருவொற்றியூர்திருமுடியே. (௰)

தருக்கினவாளரக்கன்முடிபத்திறப்பாதந்தன்னால்
ஒருக்கினவாறடியேனைப்பிறப்பறுத்தாளவல்லான்
நெருக்கினவானவர்தானவர்கூடிக்கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய்கேனொற்றியூருறைபண்டங்கனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆதிபுரிநாதர், மாணிக்கத்தியாகர்; முதல்வி - வடிவுடைநாயகி.

---

## 87 அஎ. திருப்பழனம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மேவித்துநின்றுவிளைந்தனவெந்துயர்த்துக்கமெல்லாம்
ஆவித்துநின்றுகழிந்தனவல்லலவையறுப்பான்
பாவித்தபாவனைநீயறிவாய்பழனத்தரசே
கூவித்துக்கொள்ளுந்தனையடியேனைக்குறிக்கொள்வதே. (௧)

சுற்றிநின்றார்புறங்காவலமரர்கடைத்தலையின்
மற்றுநின்றார்திருமாலொடுநான்முகன்வந்தடிக்கீழ்ப்
பற்றிநின்றார்பழனத்தரசேயுன்பணியறிவான்
உற்றுநின்றாரடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௨)

ஆடிநின்றாயண்டமேழுங்கடந்துபோய்மேலவையும்
கூடிநின்றாய்குவிமென்முலையாளையுங்கொண்டுடனே
பாடிநின்றாய்பழனத்தரசேயங்கொர்பான்மதியம்
சூடிநின்றாயடியேனையஞ்சாமைக்குறிக்கொள்வதே. (௩)

எரித்துவிட்டாயம்பினாற்புரமூன்றுமுன்னேபடவும்
உரித்துவிட்டாயுமையாணடுக்கெய்தவொர்குஞ்சரத்தைப்
பரித்துவிட்டாய்பழனத்தரசேகங்கைவார்சடைமேல்
தரித்துவிட்டாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (௪)

சுற்றிவண்டியாழ்செயுஞ்சோலையுங்காவுந்துதைந்திலங்கு
பெற்றிகண்டான்மற்றியாவருங்கொள்வர்பிறரிடைநீ
கொண்டாயொற்றியூரையுங்கைவிட்டுறுமெ
கண்டாயமற்றிதுவொப்பதில்லிடம்வேதியனே. (அ)

சுற்றிக்கிடந்தொற்றியூரனென்சிந்தைபிரிவறியான்
ஒற்றித்திரிதந்துநீயென்னசெய்தியுலகமெல்லாம்
பற்றித்திரிந்ததுபல்லொடுநாமென்றுகண்குழித்துத்
நப்பதல்லாலென்னசெய்யுமித்தீவினையே. (கூ)

அங்கட்கடுக்கைக்குமுல்லைப்புறவமுறவல்செய்யும்
பைங்கட்டலைக்குச்சுடலைக்களரிபருமணிசேர்
கங்கைக்குவேலையரவுக்குப்புற்றுக்கலைநிரம்பாத்
திங்கட்குவானந்திருவொற்றியூர்திருமுடியே. (கo)

தருக்கினவாளரக்கன்முடிபத்திறப்பாதந்தன்னால்
ஒருக்கினவாறடியேனைப்பிறப்பறுத்தாளவல்லான்
நெருக்கினவானவர்தானவர்கூடிக்கடைந்தநஞ்சைப்
பருக்கினவாறென்செய்கேனொற்றியூருறைபண்டரங்கனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆதிபுரிநாதர், மாணிக்கத்தியாகர்; முதல்வி - வடிவுடைநாயகி.

## 87 அஎ. திருப்பழனம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மேவித்துநின்றுவிளைந்தனவெந்துயர்த்துக்கமெல்லாம்
ஆவித்துநின்றுகழிந்தனவல்லலவையறுப்பான்
பாவித்தபாவனைநீயறிவாய்பழனத்தரசே
கூவித்துக்கொள்ளுந்தனையடியேனைக்குறிக்கொள்வதே. (க)

சுற்றிநின்றூர்புறங்காவலமரர்கடைத்தலையின்
மற்றுநின்றூர்திருமாலொடுநான்முகன்வந்தடிக்கீழ்ப்
பற்றிநின்றூர்பழனத்தரசேயுன்பணியறிவான்
உற்றுநின்றூரடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (உ)

ஆடிநின்றுயண்டமேழுங்கடந்துபோய்மேலவையும்
கூடிநின்றுய்குவிமென்முலையாளையுங்கொண்டுடனே
பாடிநின [illegible] பான்மதியம்
சூடிநின்றுயடியேனையஞ்சாமைக்குறிக்கொள்வதே. (ங)

எரித்துவிட்டாயம்பினுற்புரமூன்றுமுன்னேபடவும்
உரித்துவிட்டாயுமையாணடுக்கெய்தவொர்குஞ்சரத்தைப்
பரித்துவிட்டாய்பழனத்தரசேகங்கைவார்சடைமேல்
தரித்துவிட்டாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (ச)

முன்னியுமுன்னிமுளைத்தனமூவெயிலுமுடனே
மன்னியுமங்கிருந்தனைமாயமனத்தவர்கள்
பன்னியநூலின்பரிசறிவாய்பழனத்தரசே
உன்னியுமுன்னடியேனைக்குறிக்கொண்டருளுவதே.

ஏய்ந்தறுத்தாயின்பனிருந்தேபடைத்தான்றலையைக்
காய்ந்தறுத்தாய்கண்ணினாலன்றுகாமனைக்காலனையும்
பாய்ந்தறுத்தாய்பழனத்தரசேயென்பழவினைநோய்
ஆய்ந்தறுத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே.

மற்றுவைத்தாயங்கொர்மாதொருபாகநதியுடனே
உற்றுவைத்தாயுமையாளொடுங்கூடும்பரிசெனவே
பற்றிவைத்தாய்பழனத்தரசேயங்கொர்பாம்பொடுநீ
சுற்றிவைத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (எ)

ஊரினின்றாயொன்றிநின்றுவிண்டாரையும்பொன்றப்புலால்
போரினின்றாய்பொறையாயுயிராவியுடம்புமொன்றாய்
பாரினின்றாய்பழனத்தரசேபணிசெய்பவர்கட்
காரினின்றாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (அ)

போகம்வைத்தாய்புரிபுன்சடைமேலொர்புனலதனை
யாகம்வைத்தாய்மலையார்மடமங்கைநெஞ்சுடனே
பாகம்வைத்தாய்பழனத்தரசேயுன்பணியருளால்
ஆகம்வைத்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (கூ)

அடுத்திருந்தாயரக்கன்முடிவாயொடுதோணெரியக்
கெடுத்திருந்தாய்கிளர்ந்தார்வலியைக்கிளையோடுடனே
படுத்திருந்தாய்பழனத்தரசேபுலியின்னுரிதோல்
அடுத்திருந்தாயடியேனைக்குறிக்கொண்டருளுவதே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.
முதல்வன் - ஆபத்சகாயர்; முதல்வி - பெரியநாயகி.

## அஅ. திருப்பூந்துருத்தி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாலினைமாலுறநின்றான்மலைமகடன்னுடைய
பாலனைப்பான்மதிசூடியைப்பண்புணரார்மதின்மேல்
போலனைப்போர்விடையேறியைப்பூந்துருத்திமகிழும்
ஆலனையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (க)

மறியுடையான்மழுவாளினன்மாமலைமங்கையொர்பால்
குறியுடையான்குணமொன்றறிந்தாரில்லைக்கூறிலவன்
பொறியுடைவாளரவத்தவன்பூந்துருத்தியுறையும்
அறிவுடையாதிபுராணனைநாமடிபோற்றுவதே. (உ)

மறுத்தவர்மும்மதில்மாயவொர்வெஞ்சிலைகோத்தொரம்பால்
அறுத்தனையாலதன்கீழனையால்விடமுண்டதனைப்

பொறுத்தனைப்பூதப்படையனைப்பூந்துருத்திய்யுறையு
நிறத்தனைநீலமிடற்றனையானடிபோற்றுவதே. (௩)

உருவினை யூழிமுதல்வனை யோதிநிறைந்துநின்ற
திருவினைத்தேசம்படைத்தனைச்சென்றடைந்தேனுடைய
பொருவினையெல்லாந்துரந்தனைப்பூந்துருத்திப்புறையும்
கருவினைக்கண்மூன்றுடையனையானடிபோற்றுவதே. (௪)

தக்கன்றன்வேள்விதகர்த்தவன்சாரமதுவன்றுகோள்
மிக்கனமும்மதில்வீயவொர்வெஞ்சிலைகோத்தொரம்பால்
புக்கனன்பொன்றிகழ்ந்தன்னதொர்பூந்துருத்திப்புறையும்
நக்கனைநங்கள்பிரான்றனைநானடிபோற்றுவதே. (௫)

அருகடைமாலையுந்தானுடையானழகாலமைந்த
உருவுடைமங்கையுந்தன்னொருபாலுலகாயுநின்றான்
பொருபடைவேலினன்வில்லினன்பூந்துருத்திப்புறையும்
திருவுடைத்தேசமதியனையானடிபோற்றுவதே. (௬)

மன்றியுநின்றமதிலரைமாயவகைகெடுக்கக்
கன்றியுநின்றுகடுஞ்சிலைவாங்கிக்கனலம்பினால்
பொன்றியும்போகப்புரட்டினன்பூந்துருத்திப்புறையும்
அன்றியுஞ்செய்தபிரான்றனையானடிபோற்றுவதே. (௭)

மின்னிறமிக்கவிடையுமைகங்கையொர்பான்மகிழ்ந்தான்
எந்நிறமென்றமரர்பெரியாரின்னந்தாமறியார்
பொன்னிறமிக்கசடையவன்பூந்துருத்திப்புறையும்
என்னிறவெந்தைபிரான்றனையானடிபோற்றுவதே. (௮)

அந்தியைநல்லமதியினையார்க்குமறிவரிய
செந்தியைவாட்டுஞ்செம்பொன்னினைச்சென்றடைந்தேனுடைய
புந்தியைப்புக்கவறிவினைப்பூந்துருத்திப்புறையும்
நந்தியைநங்கள்பிரான்றனைநானடிபோற்றுவதே. (௯)

பைக்கையும்பாந்திவிழிக்கையும்பாம்புசடையிடையே
வைக்கையும்வானிழிகங்கையுமங்கைநடுக்குறவே
மொய்க்கைபரக்கனையூன்றினன்பூந்துருத்திப்புறையும்
மிக்கநல்வேதவிகிர்தனைநானடிபோற்றுவதே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - புட்பவனநாதர்; முதல்வி - அழகார்ந்தநாயகி.

## 89 அகூ. திருநெய்த்தானம் - திருவிருத்தம்.

றம்பலம்

பாரிடஞ்சாடியபல்லுயிர்வானமரர்க்கருளிக்
காரடைந்தகடல்வாயுமிழ்நஞ்சமுதாகவுண்டான்
ஊரடைந்திவ்வுலகிற்பலிகொள்வதுநாமறியோம்
நீரடைந்தகரைநின்றநெய்த்தான னே. (க)

தேய்ந்திலங்குஞ்சிறுவெண்மதியாய்நின் றிருச்சடைமேல்
பாய்ந்தகங்கைப்புனல்பன்முகமாகிப்பரந்தொலிப்ப
ஆர்ந்திலங்குமழுவேலுடையாயடியேற்குரைநீ
ஏய்ந்திளமங்கையுநீயுநெய்த்தானத்திருந்ததுவே. (௨)

கொன்றடைந்தாடிக்குமைத்திடுங்கூற்றமொன்றார்மதின்மேல்
சென்றடைந்தாடிப்பொருத்துந்தேசமெல்லாமறியும்
குன்றடைந்தாடுங்குளிர்பொழிற்காவிரியின்கரைமேல்
சென்றடைந்தார்வினைதீர்க்குநெய்த்தானத்திருந்தவனே. (௩)

கொட்டுமுழவரவத்தொடுகோலம்பலவணிந்து
நட்டம்பலபயின்றாடுவர்நாகமரைக்கசைத்துச்
சிட்டர்திரிபுரந்தீயெழச்செற்றசிலையுடையான்
இட்டமுமையொடுநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௪)

கைமலர்க்கொன்றைதுழாய்வன்னிமத்தமுங்கூவிளமும்
மெய்மலர்வேய்ந்தவிரிசடைக்கற்றைவிண்ணோர்பெருமான்
மைமலர்நீலநிறங்கருங்கண்ணியோர்பான்மகிழ்ந்தான்
நின்மலனாடனிலயநெய்த்தானத்திருந்தவனே. (௫)

பூந்தார்நறுங்கொன்றைமாலையைவாங்கிச்சடைக்கணிந்து
கூர்ந்தார்விடையினையேறிப்பல்பூதப்படைநடுவே
போந்தார்புறவிசைபாடவுமாடவுங்கேட்டருளிச்
சேர்ந்தாருமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே. (௬)

பற்றினபாம்பன்படுத்தபுலியுரித்தோலுடையன்
முற்றினமூன்றுமதில்களைமூட்டியெரித்தறுத்தான்
சுற்றியபூதப்படையினன்சூலமழுவொருமான்
செற்றநந்தீவினைதீர்க்குநெய்த்தானத்திருந்தவனே. (௭)

விரித்தசடையினன்விண்ணவர்கோன்விடமுண்டகண்டன்
உரித்தகரியுரிமூடியொன்னார்மதின்மூன்றுடனே
எரித்தசிலையினனீடழியாத்தன்னையாண்டுகொண்ட
தரித்தவுமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே. (௮)

தூங்கான்றுளங்கான்றுழாய்கொன்றைதுன்னியசெஞ்சடைமேல்
வாங்காமதியமும்வாளரவுங்கங்கைதான்புனைந்தான்
தேங்கார்திரிபுரந்தீயெழவெய்துதியங்கறுத்த
நீங்கானுமையவளோடுநெய்த்தானத்திருந்தவனே. (௯)

ஊட்டிநின்றான்பொருவானிலமும்மதிநீயப்பிறல்
மாட்டிநின்றானன்றினார்வெந்துவீழவும்வானவர்க்குக்
காட்டிநின்றான்கதமாக்கங்கைபாயவொர்வார்சடையை
நீட்டிநின்றான்றிருநின்றநெய்த்தானத்திருந்தவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - நெய்யாடியப்பர்; முதல்வி - பாலாம்பிகை.

## கூ0. திருவேதிகுடி - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கையதுகாலெரிநாகங்கனல்விடுசூலமது
வெய்யதுவேலைநஞ்சுண்டவிரிசடைவிண்ணவர்கோன்
செய்யினினீலமணங்கமழுந்திருவேதிகுடி
ஐயனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (க)

கைத்தலைமான்மறியேந்தியகையன்கனன்மழுவன்
பொய்த்தலையேந்திநற்பூதியணிந்துபலிதிரிவான்
செய்த்தலைவாளைகள்பாய்ந்துகளுந்திருவேதிகுடி
மே. (உ)

நலவனமுனிவனெம்மேலைவிழினைகழித்தான்
அன்பினிலையிலவுணர்புரம்பொடியானசெய்யும்
செம்பொனைநன்மலர்மேலவன்சேர்திருவேதிகுடி
அன்பனைநம்மையுடையனைநாமடைந்தாடுதுமே. (௩)

பத்தர்களுளுமறவார்பிறவியையொன்றறுப்பான்
முத்தர்கண்முன்னம்பணிசெய்துபாரிடமுன்னுயர்த்தான்
கொத்தனகொன்றைமணங்கமழுந்திருவேதிகுடி
ரயாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (ச)

ஆனணைந்தேறுங்குறிகுணமாரறிவாரவர்கை
மானணைந்தாடுமதியும்புனலுஞ்சடைமுடியன்
தேனணைந்தாடியவண்டுபயிறிருவேதிகுடி
ரநாமடைந்தாடுதுமே.

எண்ணுமெழுத்துங்குறியுமறிபவர்தாமொழியப்
பண்ணினிசைமொழிபாடியவானவர்தாம்பணிவார்
திண்ணெனவினைகளைத்தீர்க்கும்பிரான்றிருவேதிகுடி
நண்ணவரியவமுதினைநாமடைந்தாடுதுமே. (சா)

ஊர்ந்தவிடையுகந்தேறியசெல்வனைநாமறியோம்
ஆர்ந்தமடமொழிமங்கையொர்பாகமகிழ்ந்துடையான்
சேர்ந்தபுனற்சடைச்செல்வப்பிரான்றிருவேதிகுடிச்
சார்ந்தவயலணிதண்ணமுதையடைந்தாடுதுமே. (எ)

எரியுமழுவினனெண்ணியுமற்றொருவன்றலையுள்
திரியும்பலியினன்றேயமுநாடெல்லாமுடையான்
விரியும்பொழிலணிசேறுதிகழ்திருவேதிகுடி
அரியவமுதினையன்பர்களோடடைந்தாடுதுமே. (அ)

கண்டனமறைவாநாவனமதுததுகநத
மெய்யணிநீற்றன்விழுமியவெண்மழுவாட்படையான்

செய்யகமலமணங்கமழுந்திருவேதிகுடி
ஐயனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (கூ)

வருத்தனைவாளரக்கன்முடிதோளொடுபத்திறுத்த
பொருத்தனைப்பொய்யாவருளனைப்பூதப்படையுடைய
திருத்தனைத்தேவர்பிரான்றிருவேதிகுடியுடைய
அருத்தனையாராவமுதினைநாமடைந்தாடுதுமே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வேதபுரீசர்; முதல்வி - மங்கையர்க்கரசியம்மை.

## 91) கூக. திருவையாறு - திருவிருத்தம்.

சிற்றம்பலம்

[illegible]னைகாட்டிக்குறுவித்தநோய்
உறுவித்தவாவுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
அறிவித்தவாறடியேனையையாறனடிமைக்களோ
செறிவித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (க)

கூர்வித்தவாகுற்றநோய்வினைகாட்டியுங்கூர்வித்தநோய்
ஊர்வித்தவாவுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
ஆர்வித்தவாறடியேனையையாறனடிமைக்களே
சேர்வித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (உ)

தாக்கினவாசலமேவினைகாட்டியுந்தண்டித்தநோய்
நீக்கினவாநெடுநீரினின்றேற்றிநினைந்தருளி
ஆக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
நோக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (ங)

தருக்கினநான்றகவின்றியுமோடச்சலமதனால்
நெருக்கினவாநெடுநீரினின்றேற நினைந்தருளி
உருக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
பெருக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (ச)

இழிவித்தவாறிட்டநோய்வினைகாட்டியிடர்ப்படுத்துக்
கழிவித்தவாகட்டநோய்வினைதீர்ப்பான்கலந்தருளி
அழிவித்தவாறடியேனையையாறனடிமைக்களோ
[illegible]ாண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (ரு)

இடைவித்தவாறிட்டநோய்வினைகாட்டியிடர்ப்படுத்து
உடைவித்தவாறுற்றநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
அடைவித்தவாறடியேனையையாறனடிமைக்களே
தொடர்வித்தவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (சு)

படக்கினவாபடநின்றுபனைநெடும்படக்கினநோய்
அடக்கினவாறதுவன்றியுந்தீவினைபாவமெல்லாம்

தொடக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (எ)

மறப்பித்தவாவல்லைநோய்வினைகாட்டிமறப்பித்தநோய்
துறப்பித்தவாதுக்கநோய்வினைதீர்ப்பானுகந்தருளி
இறப்பித்தவாறடியேனையையாறனடிமைக்களே
...ாண்ட... ...டக்கீழெனையே. (அ)

துயக்கினவாதுக்கநோய்வினைகாட்டித்துயக்கிநோய்
...யக்... ...நளி
அயக்கினவாறடியேனையையாறனடிமைக்களே
மயக்கினவாதொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௯)

...தொள்
அறுத்துமிட்டாரடியேனையையாறனடிமைக்களே
பொறுத்துமிட்டார்தொண்டனேனைத்தன்பொன்னடிக்கீழெனையே. (௧০)

திருச்சிற்றம்பலம்.

## ௯௨. திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

சிந்திப்பரியனசிந்திப்பவர்க்குச்சிறந்துசெந்தேன்
முந்திப்பொழிவனமுத்திகொடுப்பனமொய்த்திருண்டு
பந்தித்துநின்றபழவினைதீர்ப்பனபாம்புசுற்றி
அந்திப்பிறையணிந்தாடுமையாறனடித்தலமே. (௧)

இழித்தனவேழேழ்பிறப்புமறுத்தனவென்மனத்தே
பொழித்தனபோரெழிற்கூற்றையுதைத்தனபோற்றவர்க்காய்க்
கிழித்தனதக்கன்கிளரொளிவேள்வியைக்கீழ்முன்சென்
றழித்தனவாறங்கமானவையாறனடித்தலமே. (௨)

மணிநிறமொப்பனபொன்னிறமன்னினமின்னிலவாய்
கணிநிறமன்னகயிலைப்பொருப்பனகாதல்செய்யத்
துணிவனசீலத்தராகித்தொடர்ந்துவிடாததொண்டர்க்
கணியனசேயனதேவர்க்கையாறனடித்தலமே. (௩)

இருடருதுன்பப்படலமறைப்பமெய்ஞ்ஞானமென்னும்
பொருடருகண்ணிழந்துண்பொருணாடிப்புகலிழந்த
குருடருந்தம்மைப்பரவக்கொடுநரகக்குழிநின்
றருடருகைக்கொடுத்தேற்றுமையாறனடித்தலமே. (௪)

எழுவாயிறுவாயிலாதனவெங்கள்பிணிதவிர்த்து
வழுவாமருத்துவமாவனமாநரகக்குழிவாய்
விழுவாரவர்தம்மைவீழ்ப்பனமீட்டனமிக்கவன்போ
டழுவார்க்கமுதங்கள்காண்கவையாறனடித்தலமே.

ஞானச்சுடராய்நடுவேபுகுப்பனநங்கையஞ்ச
ஆனையுரித்தனகாண்கவையாறனடித்தலமே. (௪)

மாதிரமானிலமாவனவானவர்மாமுகட்டின்
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெந்நமனார்
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொண்டுபட்டார்க்
காதரமாவனகாண்கவையாறனடித்தலமே. (௫)

பேணித்தொழுமவர்பொன்னுலகாளப்பிறங்கருளால்
ஏணிப்படிநெறியிட்டுக்கொடுத்திமையோர்முடிமேல்
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவயிரமன்னி
ஆணிக்கனகமுமொக்குமையாறனடித்தலமே. (௬)

ஓதியஞானமுஞானப்பொருளுமொலிசிறந்த
வேதியர்வேதமும்வேள்வியுமாவனவிண்ணுமண்ணும்
சோதியுஞ்செஞ்சுடர்ஞாயிறுமொப்பனதூமதியோ
டாதியுமந்தமுமானவையாறனடித்தலமே. (௭)

சுணங்குமுகத்துத்துணைமுலைப்பாவைசுரும்பொடுவண்
டணங்குங்குழலியணிவார்வளைக்கரங்கூப்பிநின்று
வணங்கும்பொழுதும்வருடும்பொழுதும்வண்காந்தளொண்போ
தணங்குமரவிந்தமொக்குமையாறனடித்தலமே. (௮)

சுழலார்துயர்வெயிற்சுட்டிடும்போதடித்தொண்டர்துன்னும்
நிழலாவனவென்றுநீங்காப்பிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகள்கழற்றுவகாலவனங்கடந்த
அழலாரொளியனகாண்கவையாறனடித்தலமே. (௯)

வலியான்றலைபத்தும்வாய்விட்டலறவரையடர்த்து
மெலியாவலியுடைக்கூற்றையுதைத்துவிண்ணோர்கண்முன்னே
பலிசேர்படுகடைப்பார்த்துப்பன்னாளும்பலரிகழ
அலியாநிலைநிற்குமையனையாறனடித்தலமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௯௪. திருக்கண்டியூர்வீரட்டம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வானவர்தானவர்வைகன்மலர்கொணர்ந்திட்டிறைஞ்சித்
தானவர்மால்பிரமன்னறியாததகைமையினான்
ஆனவனாதிபுராணனன்றோடியபன்றியெய்த
கானவனைக்கண்டியூரண்டவாணர்தொழுகின்றதே. (௧)

வானமதியமும்வாளரவும்புனலோடுசடைத்
தானமதுவெனவைத்துழல்வான்றழல்போலுருவன்
கானமறியொன்றுகையுடையான்கண்டியூரிருந்த
ஊனமில்வேதமுடையானைநாமடியுள்குதுமே. (௨)

ஞானச்சுடராய்நடுவேயுதிப்பனநங்கையஞ்ச
ஆனையுரித்தனகாண்கவையாறனடித்தலமே. (௪)

மா
மீதனமென்கழல்வெங்கச்சுவீக்கினவெந்நமனார்
தூதரையோடத்துரப்பனதுன்பறத்தொண்டுபட்டார்க்
காதரமாவனகாண்கவையாறனடித்தலமே. (௫)

பேணித்தொழுமவர்பொன்னுலகாளப்பிறங்கருளால்
ஏணிப்படிநெறியிட்டுக்கொடுத்திமையோர்முடிமேல்
மாணிக்கமொத்துமரகதம்போன்றுவயிரமன்னி
ஆணிக்கனகமுமொக்குமையாறனடித்தலமே. (௬)

ஓதியஞானமுஞானப்பொருளுமொலிசிறந்த
வேதியர்வேதமும்வேள்வியுமாவனவிண்ணுமண்ணும்
சோதியுஞ்செஞ்சுடர்ஞாயிறுமொப்பனதூமதியோ
டாதியுமந்தமுமானவையாறனடித்தலமே. (௭)

சுணங்குமுகத்துத்துணைமுலைப்பாவைசுரும்பொடுவண்
டணங்குங்குழலியணிவார்வளைக்கரங்கூப்பிநின்று
வணங்கும்பொழுதும்வருடும்பொழுதும்வண்காந்தளொண்போ
தணங்குமரவிந்தமொக்குமையாறனடித்தலமே. (௮)

சுழலார்துயர்வெயிற்சுட்டிடும்போதடித்தொண்டர்துன்னும்
நிழலாவனவென்றுநீங்காப்பிறவிநிலைகெடுத்துக்
கழலாவினைகள்கழற்றுவகாலவனங்கடந்த
அழலாரொளியனகாண்கவையாறனடித்தலமே. (௯)

வலியானமுலபத்தும்வாய்விட்டலறவரையடர்த்து
மெலியாவலிவுடைக்கூற்றையுதைத்துவிண்ணோர்கண்முன்னே
பலிசேர்படுகடைப்பார்த்துப்பன்னாளும்பலரிகழ
அலியாநிலைநிற்குமையனையாறனடித்தலமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௯௪. திருக்கண்டியூர்வீரட்டம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

வானவர்தானவர்வைகன்மலர்கொணர்ந்திட்டிறைஞ்சித்
தானவர்மால்பிரமன்னறியாததகைமையினான்
ஆனவனாதிபுராணனன்றோடியபன்றியெய்த
கானவனைக்கண்டியூரண்டவாணர்தொழுகின்றதே. (௧)

வானமதியடு
தானமதுவெனவைத்துழல்வான்றழல்போலுருவன்
கானமறியொன்றுகையுடையான்கண்டியூரிருந்த
ஊனமில்வேதமுடையானைநாமடியுள்குதுமே. (௨)

பண்டங்கறுத்ததோர்கையுடையான்படைத்தான்றலையை
உண்டங்கறுத்ததுமூரொடுநாடவைதானறியும்
கண்டங்கறுத்தமிடறுடையான்கண்டியூரிருந்த
தொண்டர்பிரானைக்கண்டீரண்டவாணர்தொழுகின்றதே. (௩)

முடியின்முற்றாததொன்றில்லையெல்லாமுடன்றானுடையான்
கொடியமுற்றாவிடையேறியோர்கூற்றொருபாலுடையான்
கடியமுற்றவ்வினைநோய்களைவான்கண்டியூரிருந்தான்
அடியுமுற்றார்தொண்டரில்லைகண்டீரண்டவானவரே. (௪)

பற்றியோரானையுரித்தபிரான்பவளத்திரள்போல்
முற்றுமணிந்ததோர்நீறுடையான்முன்னமேகொடுத்த
கற்றங்குடையவன்றானறியான்கண்டியூரிருந்த
குற்றமில்வேதமுடையானையாமண்டர்கூறுவதே. (௫)

போர்ப்பனையானையுரித்தபிரான்பொறிவாயரவம்
சேர்ப்பதுவானத்திரைகடல்சூழுலகம்மிதனைக்
காப்பதுகாரணமாகக்கொண்டான்கண்டியூரிருந்த
கூர்ப்புடையொள்வாண்மழுவனையாமண்டர்கூறுவதே. (௬)

அட்டதுகாலனையாய்ந்ததுவேதமாறங்கமன்று
சுட்டதுகாமனைக்கண்ணதனாலேதொடர்ந்தெயிற்
கட்டவைமூன்றுமெரித்தபிரான்கண்டியூரிருந்த
குட்டமுன்வேதப்படையனையாமண்டர்கூறுவதே. (௭)

அட்டமொலிநீரணிமதியும்மலரானவெல்லாம்
இட்டுப்பொதியுஞ்சடைமுடியானிண்டைமாலையங்கைக்
கட்டுமரவதுதானுடையான்கண்டியூரிருந்த
கொட்டும்பறையுடைக்கூத்தனையாமண்டர்கூறுவதே. (௮)

மாய்ந்தனதீவினைமங்கினநோய்கண்மறவிபறந்
தேய்ந்தனபாவஞ்செறக்ககில்லாதமைச்செற்றங்களைக்
காய்ந்தபிரான்கண்டியூரெம்பிரானங்கமாறினையும்
ஆய்ந்தபிரானல்லனோவடியேனையாட்கொண்டவனே. (௯)

மண்டிமலையையெடுத்துமத்தாகியவாசுகியைத்
தண்டியமரர்கடைந்தகடல்விடங்கண்டருளி
உண்டபிரானஞ்சொளித்தபிரானஞ்சியோடிநண்ணக்
கண்டபிரானல்லனோகண்டியூரண்டவானவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வீரட்டானேசுரர்; முதல்வி - மங்கைநாயகி.

## ௬௫. திருப்பாதிரிப்புலியூர் -

திருச்சிற்றம்பலம்

ஈன்றாளுமாயெனக்கெந்தையுமாயுடன்றோன்றினராய்
மூன்றாயுலகம்படைத்துகந்தான் மனத்துள்ளிருக்க
ஏன்றானிமையவர்க்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்த்
தோன்றாத்துணையாயிருந்தனன் றன்னடியோங்களுக்கே. (க)

பற்றாய்நினைந்திடப்போதுநெஞ்சேயிந்தப்பாரைமுற்றும்
சுற்றாயலைகடன்மூடினுங்கண்டேன்புகனமக்கு
உற்றானுமையவட்கன்பன்றிருப்பாதிரிப்புலியூர்
முற்றாமுளைமதிக்கண்ணியினான் றனமொய்கழலே. (௨)

விடையான்விரும்பியென்னுள்ளத்திருந்தானினிநமக்கிங்
கடையாவவலமருவினைசாராநமனையஞ்சோம்
புடையார்கமலத்தயன்போல்பவர்பாதிரிப்புலியூர்
உடையானடியாரடியடியோங்கட்கரியதுண்டே. (௩)

மாயமெலாமுற்றவிட்டிருணீங்கிமலைமகட்கே
நேயநிலவவிருந்தானவன்றன் றிருவடிக்கே
தேயமெல்லாநின்றிறைஞ்சுந்திருப்பாதிரிப்புலியூர்
மேயநல்லான்மலர்ப்பாதமென்சிந்தையுணின்றனவே. (௪)

வைத்தபொருணமக்காமென்றுசொல்லிமனத்தடைத்துச்
சித்தமொருக்கிச்சிவாயநமவென்றிருக்கினல்லால்
மொய்த்தகதிர்மதிபோல்வாரவர்பாதிரிப்புலியூர்
அத்தனருள்பெறலாமோவறிவிலாப்பேதைநெஞ்சே. (௫)

கருவாய்க்கிடந்துன்கழலேநினையுங்கருத்துடையேன்
உருவாய்த்தெரிந்துன்றனாமம்பயின்றேனுனதருளால்
திருவாய்ப்பொலியச்சிவாயநமவென்றுநீறணிந்தேன்
தருவாய்சிவகதிநீபாதிரிப்புலியூரரனே. (௬)

Hரககபபரவையுணஞசையுணடாய
திண்ணாரசுரர்திரிபுரந்தீயெழச்செற்றவனே
பண்ணார்ந்தமைந்தபொருள்கள்பயில்பாதிரிப்புலியூர்க்
ஈங்கருத்திலுடையனவே. (எ)

புழுவாய்ப்பிறக்கினும்புண்ணியாவுன்னடியென்மனத்தே
வழுவாதிருக்கவரந்தரவேண்டுமிவ்வையகத்தே
தொழுவார்க்கிரங்கியிருந்தருள்செய்பாதிரிப்புலியூர்ச்
செழுநீர்ப்புனற்கங்கைசெஞ்சடைமேல்வைத்ததீவண்ணனே. (அ)

மண்பாதலம்புக்குமால்கடன்மூடிமற்றேழுலகும்
விண்பாறிசைகெட்டிருசுடர்வீழினுமஞ்சனெஞ்சே

திண்பானமக்கொன்றுகண்டோந்திருப்பாதிரிப்புலியூர்க்
கண்பாவுநெற்றிக்கடவுட்சுடரான்கழலிணையே. (௯)

திருந்தாவமணர்தந்நெறிப்பட்டுத்திகைத்துமுத்தி
தருந்தாளிணைக்கேசரணம்புகுந்தேன்வரையெடுத்த
பொருந்தாவரக்கனுடனெரித்தாய்பாதிரிப்புலியூர்
இருந்தாயடியேனினிப்பிறவாமல்வந்தேன்றுகொள்ளே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - தோன்றாத்துணையீசர்; முதல்வி - தோகையம்பிகையம்மை.

## ௯௯. திருவீழிமிழலை - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

வான்சொட்டச்சொட்டநின்றட்டும்வளர்மதியோடயலே
தேன்சொட்டச்சொட்டநின்றட்டுந்திருக்கொன்றைசென்னிவைத்தீர்
மான்பெட்டைநோக்கிமணாளீர்மணிநீர்மிழலையுள்ளீர்
நான்சட்டநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௧)

அந்தமுமாதியுமாகிநின்றீரண்டமெண்டிசைக்கும்
பந்தமும்வீடும்பரப்புகின்றீர்பசுவேற்றுகந்தீர்
வெந்தழலோம்புமிழலையுள்ளீரென்னைத்தென்றிசைக்கே
உந்திடும்போதுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௨)

அலைக்கின்றநீர்நிலங்காற்றனலம்பரமாகிநின்றீர்
கலைக்கன்றுசேருங்கரத்தீர்கலைப்பொருளாகிநின்றீர்
விலக்கின்றிநல்குமிழலையுள்ளீர்மெய்யிற்கையொடுகால்
குலைக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௩)

தீத்தொழிலான்றலைத்தீயிலிட்டுச்செய்தவேள்விசெற்றீர்
பேய்த்தொழிலாட்டியைப்பெற்றுடையீர்பிடித்துத்திரியும்
வேய்த்தொழிலாளர்மிழலையுள்ளீர்விக்கியஞ்செழுத்தும்
ஓத்தொழிந்தும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௪)

தோட்பட்டநாகமுஞ்சூலமுஞ்சுற்றியும்பத்திமையால்
மேற்பட்டவந்தணர்வீழியுமென்னையும்வேறுடையீர்
நாட்பட்டுவந்துபிறந்தேனிறக்கநமன்றமர்தம்
கோட்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே.

கண்டியிற்பட்டகழுத்துடையீர்கரிக்காட்டிடை
பண்டியிற்பட்டபரிகலத்தீர்பதிவீழிகொண்டீர்
உண்டியிற்பட்டினிநோயிலுறக்கத்திலும்மையைவர்
கொண்டியிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௬)

தோற்றங்கண்டான்சிரமொன்றுகொண்டீர்தூயவெள்ளெருதொன்
றேற்றங்கொண்டீரெழில்வீழிமிழலையிருக்கைகொண்டீர்

சிற்றங்கொண்டென்மேற்சிவந்ததொர்பாசத்தால்வீசியவெம்
கூற்றங்கண்டும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௭)

சுழிப்பட்டகங்கையுந்திங்களுஞ்சூடிச்சொக்கம்பயின்றீர்
பழிப்பட்டபாம்பரைப்பற்றுடையீர்படர்தீப்பருக
[illegible]
ழிப்பட்டுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௮)

பிள்ளையிற்பட்டபிறைமுடியீர்மறையோதவல்லீர்
வெள்ளையிற்பட்டதோர்நீற்றீர்விரிநீர்மிழலையுளீர்
கள்ளையிற்பட்டவர்கக்கரைப்பிக்குமன்றமர்தம்
கொள்ளையிற்பட்டுமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௯)

கறுக்கொண்டரக்கன்கயிலையைப்பற்றியகையுமெய்யும்
நெறுக்கென்றிறச்செற்றசேவடியாற்கூற்றைநீறுசெய்தீர்
வெறிக்கொன்றைமாலைமுடியீர்விரிநீர்மிழலையுளீர்
இறக்கின்றுநும்மைமறக்கினுமென்னைக்குறிக்கொண்மினே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வீழியழகர்; முதல்வி - சுந்தரகுசாம்பிகை.

## ௯௭. திருச்சத்திமுற்றம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கோவாய்முடுகியடுதிறற்கூற்றங்குமைப்பதன்முன்
பூவாரடிச்சுவடென்மேற்பொறித்துவைபோகவிடில்
மூவாமுழுப்பழிமூடுங்கண்டாய்முழங்குந்தழற்கைத்
தேவாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧)

காய்ந்தாயனங்கனுடலம்பொடிபடக்காலனைமுன்
பாய்ந்தாயுயிர்செகப்பாதம்பணிவார்தம்பல்பிறவி
ஆய்ந்தாய்ந்தருப்பாயடியேற்கருளாயுன்னன்பர்சிந்தை
சேர்ந்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௨)

பொத்தார்குரம்பைபுகுந்தைவர்நாளும்புகலழிப்ப
மத்தார்தயிர்போன்மறுகுமென்சிந்தைமறுக்கொழிவி
அத்தாவடியேனடைக்கலங்கண்டாயமரர்கடம்
சித்தாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௩)

நில்லாக்குரம்பைநிலையாக்கருதியிந்நீணிலத்தொன்
றல்லாக்குழிவீழ்ந்தயர்வுறுவேனைவந்தாண்டுகொண்டாய்
வில்லேர்புருவத்துமையாள்கணவாவிடிற்கெடுவேன்
செல்வாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௪)

கருவுற்றிருந்துன்கழலேநினைந்தேன்கருப்புவியில்
தெருவிற்புகுந்தேன்றிகைத்தடியேன்றன்றிகைப்பொழிவி

உருவிற்றிகழுமுமையாள்கணவாவிடிற்கெடுவேன்
திருவிற்பொலிசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௫)

வெம்மைநமன்றமர்மிக்குவிரவிவிழுப்பதன்முன்
இம்மையுன்றாளென்றன்னெஞ்சத்தெழுதிவையீங்கிகழில்
அம்மையடியேற்கருளுதியென்பதிங்காரறிவார்
செம்மைதருசத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௬)

விட்டார்புரங்களொருநொடிவேவவொர்வெங்கணையால்
சுட்டாயென்பாசத்தொடர்பறுத்தாண்டுகொடும்பிபம்பும்
மட்டார்குழலிமலைமகள்பூசைமகிழ்ந்தருளும்
சிட்டாதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௭)

இகழ்ந்தவன்வேள்வியழித்திட்டிமையோர்பொறைபிரப்ப
நிகழ்ந்திடவன்றேவிசயமுங்கொண்டதுநீலகண்டா
புகழ்ந்தவடியேன்றன்புன்மைகளராப்புரிந்துநல்காய்
திகழ்ந்ததிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௮)

தக்கார்வமெய்திச்சமண்டவிர்ந்துன்றன்சரண்புகுந்தேன்
எக்காதலெப்பயனுன்றிறமல்லாலெனக்குளதே
மிக்கார்திலையுள்விருப்பாமிகவடமேருவென்னும்
திக்காதிருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௯)

பொறித்தேரரக்கன்பொருப்பெடுப்புற்றவன்பொன்முடிதோள்
இறத்தாளொருவிரலூன்றிட்டலறவிரங்கியொள்வாள்
குறித்தேகொடுத்தாய்கொடியேன்செய்குற்றக்கொடுவினைநோய்
செறுத்தாய்திருச்சத்திமுற்றத்துறையுஞ்சிவக்கொழுந்தே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சிவக்கொழுந்தீசர்; முதல்வி - பெரியநாயகி.

---

## ௯௮. திருநல்லூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அட்டுமினில்பலியென்றென்றகங்கடைதோறும்வந்து
மட்டவிழுங்குழலார்வளைகொள்ளும்வகையென்கொலோ
கொட்டியபாணியெடுத்திட்டபாதமுங்கோளரவும்
நட்டநின்றாடியநாதர்நல்லூரிடங்கொண்டவரே. (௧)

பெண்ணிட்டம்பண்டையதன்றிவைபெய்பலிக்கென்றுழல்வார்
நண்ணிட்டுவந்துமனைபுகுந்தாருநல்லூரகத்தே
பண்ணிட்டபாடலராடலராய்ப்பற்றிநோக்கிநின்று
கண்ணிட்டுப்போயிற்றுக்காரணமுண்டுகறைக்கண்டரே. (௨)

படவேரரவல்குற்பாவைநல்லீர்பகலேயொருவர்
இடுவாரிடைப்பலிகொள்பவர்போலவந்தில்புகுந்து

நடவாரடிகணடம்பயின்றாடியகூத்தர்கொலோ
வடபாற்கயிலையுந்தென்பானல்லூருந்தம்வாழ்பதியே. (௩)

செஞ்சுடர்ச்சோதிப்பவளத்திரடிகழ்முத்தனைய
நஞ்சணிகண்டனல்லூருறைநம்பனைநாவொருகால்
துஞ்சிடைக்கண்டுகனவின்றலைத்தொழுதேற்கவன்றான்
நெஞ்சிடைநின்றகலான்பலகாலமுநின்றனனே. (௪)

வெண்மதிசூடிவிளங்கிநின்றானைவிண்ணோர்கடொழ
நண்ணிலயத்தொடுபாடலறாதநல்லூரகத்தே
திண்ணிலையங்கொடுநின்றான்றிரிபுரமூன்றெரித்தான்
ற்சேவடியே. (௫)

தேற்றப்படத்திருநல்லூரகத்தேசிவனிருந்தால்
தோற்றப்படச்சென்றுகண்டுகொள்வார்தொண்டர்துன்மதியால்
ஆற்றிற்கெடுத்துக்குளத்தினிற்றேடியவாதரைப்போல்
காற்றிற்கெடுத்துலகெல்லாந்திரிதர்வர்காண்பதற்கே. (௬)

நாட்கொண்டதாமரைப்பூந்தடஞ்சூழ்ந்தநல்லூரகத்தே
கீட்கொண்டகோவணங்காவென்றுசொல்லிக்கிறிபடத்தான்
வாட்கொண்டநோக்கிமனைவியொடுமங்கோர்வாணிகனை
ஆட்கொண்டவார்த்தையுரைக்குமன்றேயிவ்வகலிடமே. (௭)

அறைமல்குபைங்கழலார்க்கநின்றானணியார்சடைமேல்
நறைமல்குகொன்றையந்தாருடையானுநல்லூரகத்தே
பறைமல்குபாடலொடாடலறாதுபரிசழித்தான்
பிறைமல்குசெஞ்சடைதாழநின்றாடியபிஞ்ஞகனே. (௮)

மன்னியமாமறையோர்மகிழ்ந்தேத்தமருவியெங்கும்
துன்னியதொண்டர்களின்னிசைபாடித்தொழுநல்லூர்க்
கன்னியர்தாமுங்கனவிடையுன்னியகாதலரை
அன்னியராற்றவரங்கணனேயருணல்கென்பரே. (௯)

திருவமர்தாமரைசீர்வளர்செங்கழுநீர்கொணெய்தல்
குருவமர்கோங்கங்குராமகிழ்செண்பகங்கொன்றைவன்னி
மருவமர்நீள்கொடிமாடமலிமறையோர்கணல்லூர்
உருவமர்பாகத்துமையவள்பாகனையுள்குதுமே. (௧௦)

செல்லேரகொடியன்சிவன்பெருங்கோயில்சிவபுரமும்
வல்லேன்புகவுமதில்சூழிலங்கையர்காவலனைக்
கல்லார்முடியொடுதோளிறச்செற்றகழலடியான்
நல்லூரிருந்தபிரானல்லனோநம்மையாள்பவனே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பெரியவாண்டவர்; முதல்வி - பருவதசுந்தரி.

## கூகூ. திருவையாறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

அந்திவட்டத்திங்கட்கண்ணியனையாறமர்ந்துவந்தென்
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனோ
சிந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந்திவட்டத்தொடுகொன்றைவளாவியநம்பனையே. (க)

பாடகக்கால்கழற்கால்பருதிக்கதிருக்கவந்தி
நாடகக்கானங்கைமுன்செங்கணானைத்தின்பின்னடந்த
காடகக்கால்கணங்கைதொழுங்காலெங்களப்பன்றன்கால்
ஆடகக்காலரிமான்றேர்வலவனையாற்றனவே. (உ)

திருச்சிற்றம்பலம்.

## க௦௦. திருக்கச்சியேகம்பம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

ஓதுவித்தாய்முன்னறவுரைகாட்டியமணரொடே
காதுவித்தாய்கட்டநோய்பிணிதீர்த்தாய்கலந்தருளிப்
போதுவித்தாய்நின்பணிபிழைக்கிற்புளியம்வளாரால்
மோதுவிப்பாயுகப்பாய்முனிவாய்கச்சியேகம்பனே.

எத்தைக்கொண்டெத்தகையேழையமணொடிசைவித்தெனைக்
கொத்தைக்குமூங்கர்வழிகாட்டுவித்தென்னைக்கோகுசெய்தாய்
முத்திற்றிரளும்பளிங்கினிற்சோதியுமொய்பவளத்
தொத்தினையேய்க்கும்படியாய்பொழிற்கச்சியேகம்பனே.

மெய்யம்புகோத்தவிசயனொடன்றொருவேடுவனாய்ப்
பொய்யம்பெய்தாவருளிச்செய்தாய்புரமூன்றெரியக்
கையம்பெய்தாய்நுன்கழலடிபோற்றாக்கயவர்நெஞ்சில்
குய்யம்பெய்தாய்கொடிமாமதில்சூழ்கச்சியேகம்பனே.

குறிக்கொண்டிருந்துசெந்தாமரையாயிரம்வைகல்வைகல்
நெறிப்படவிண்டைபுனைகின்றமாலைநிறையழிப்பான்
கறைக்கண்டநீயொருபூக்குறைவித்துக்கண்சூல்விப்பதே
பிறைத்துண்டவார்சடையாய்பெருங்காஞ்சியெம்பிஞ்ஞகனே. (௪)

உரைக்குங்கழிந்திங்குணர்வரியானுள்குவார்வினையைக்
கரைக்குமெனக்கைதொழுவதல்லாற்கதிரோர்களெல்லாம்
விரைக்கொண்மலரவன்மாலெண்வசுக்களேகாதசர்கள்
இரைக்குமமிர்தர்க்கறியவொண்ணானெங்களேகம்பனே. (௫)

கருவுற்றநாண்முதலாகவுன்பாதமேகாண்பதற்கு
உருகிற்றெனுள்ளமுநானுங்கிடந்தலந்தெய்த்தொழிந்தேன்
திருவொற்றியூராதிருவாலவாயாதிருவாரூரா
ஒருபற்றிலாமையுங்கண்டிரங்காய்கச்சியேகம்பனே. (௬)

அரியயனிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாம்
உரியநின்கொற்றக்கடைத்தலையாருணங்காக்கிடந்தார்
புரிதருபுன்சடைப்போகர்முனிவர்புலம்புகின்றார்
எரிதருசெஞ்சடையேகம்பவென்னேதிருக்குறிப்பே. (௭)

பாம்பரைச்சேர்த்திப்படருஞ்சடைமுடிப்பால்வண்ணனே
கூம்பலைச்செய்தகரதலத்தன்பர்கள்கூடிப்பன்னாள்
சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்சரணென்
றேம்பலிப்பார்கட்கிரங்குகண்டாய்கச்சியேகம்பனே. (௮)

ஏன்றுகொண்டாயென்னையெம்பெருமானினியல்லமென்னில்
சான்றுகண்டாயிவ்வுலகமெல்லாந்தனியேனென்றென்னை
ஊன்றிநின்றாரைவர்க்கொற்றிவைத்தாய்பின்னையொற்றிமெ
சோன்றுகொண்டாய்கச்சியேகம்பமேயசுடர்வண்ணனே. (௯)

உகந்துநின்றாருன்றனேலக்க [illegible] கள்வாய்தல்ப
துன்றிநின்றார்தொல்லைவானவரீட்டம்பணியறிவான்
வந்துநின்றாரயனுந்திருமாலுமதிட்கச்சியாய்
இந்தநின்றேமினியெங்ஙனமோவந்திறைஞ்சுவதே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௧௦௩. திருவின்னம்பர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மன்னுமலைமகள்கையால்வருடினமாமறைகள்
சொன்னதுறைதொறுந்தூப்பொருளாயினதூக்கமலத்
தன்னவடிவினவன்புடைத்தொண்டர்க்கமுதருப்பி
[illegible] யடியே. (௧)

பைதற்பிணக்குழைக்காளிவெங்கோபம்பங்கப்படுப்பான்
செய்தற்கரியதிருநடஞ்செய்தனசீர்மறையோன்
உய்தற்பொருட்டுவெங்கூற்றையுதைத்தனவும்பர்க்கெல்லாம்
எய்தற்கரியனவின்னம்பரான்றனிணையடியே. (௨)

சுணங்குநின்றார்கொங்கையாளுமைசூடினதூமலரால்
வணங்கிநின்றும்பர்கள்வாழ்த்தினமன்னுமறைகடம்மில்
பிணங்கிநின்றின்னனவென்றறியாதனபேய்க்கணத்தோ
டிணங்கிநின்றாடினவின்னம்பரான்றனிணையடியே. (௩)

ஆறொன்றியசமயங்களினவ்வவர்க்கப்பொருள்கள்
வேறொன்றிலாதனவிண்ணோர்மதிப்பனமிக்குவமன்
மாறொன்றிலாதனமண்ணொடுவிண்ணகமாய்நிடினும்
ஈறொன்றிலாதனவின்னம்பரான்றனிணையடியே. (௪)

அரக்கர்தம்முப்புரமம்பொன்றினாலடலங்கிபின்வாய்க்
கரக்கமுன்வைதிகத்தேர்மிசைநின்றனகட்டுருவம்

பரக்கவெங்கானிடைவேடுருவாயினபல்பதிதோ
றிரக்கநடந்தனவின்னம்பரான்றனிணையடியே. (௫)

கீண்டுங்கிளர்ந்தும்பொற்கேழன்முன்றேடினகேடுபடா
ஆண்டும்பலபலவூழியுமாயினவாரணத்தின்
வேண்டும்பொருள்கள்விளங்கநின்றாடினமேவுஞ்சிலம்
பீண்டுங்கழலினவின்னம்பரான்றனிணையடியே. (௬)

போற்றுந்தகையனபொல்லாமுயலகன்கோபப்புன்மை
ஆற்றுந்தகையனவாறுசமயத்தவரவரைத்
தேற்றுந்தகையனதேறியதொண்டரைச்செந்நெறிக்கே
ஏற்றுந்தகையனவின்னம்பரான்றனிணையடியே. (௭)

பயம்புன்மைசேர்தருபாவந்தவிர்ப்பனபார்ப்பதிதன்
குயம்பொன்மைமாமலராகக்குலாவினகூடவொண்ணாச்
சயம்புவென்றேதகுதாணுவென்றேசதுர்வேதங்கணின்
றியம்புங்கழலினவின்னம்பரான்றனிணையடியே. (௮)

அயனெடுமாலிந்திரன்சந்திராதித்தரமரரெல்லாம்
சயசயவென்றுமுப்போதும்பணிவனதண்கடல்சூழ்
வியனிலமுற்றுக்கும்விண்ணுக்குநாகர்வியனகர்க்கும்
இயபரமாவனவின்னம்பரான்றனிணையடியே. (௯)

தருக்கியதக்கன்றன்வேள்விதகர்த்தனதாமரைப்போ
தருக்கியசெம்பொனுவமனிலாதனவொண்கயிலை
நெருக்கியவாளரக்கன்றலைபத்துநெரித்தவன்றன்
இருக்கியல்பாயினவின்னம்பரான்றனிணையடியே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௧௦௨. திருவாரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

குலம்பலம்பாவருகுண்டர்முன்னேநமக்குண்டுகொலோ
அலம்பலம்பாவருதண்புனலாரூரவிர்சடையான்
சிலம்பலம்பாவருசேவடியான்றிருமூலட்டானம்
புலம்பலம்பாவருதொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (௧)

மற்றிடமின்றிமனைதுறந்தல்லுணாவல்லமணர்
சொற்றிடமென்றுதுரிசுபட்டேனுக்குமுண்டுகொலோ
விற்றிடம்வாங்கிவிசயனொடன்றொருவேடுவனாய்ப்
புற்றிடங்கொண்டான்றன்றொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (௨)

ஒருவடிவின்றிநின்றுண்குண்டாமுன்னமக்குண்டுகொலோ
செருவடிவெஞ்சிலையாற்புரமட்டவன்சென்றடையாத்
திருவுடையான்றிருவாரூர்த்திருமூலட்டானன்செங்கண்
பொருவிடையானடித்தொண்டர்க்குத்தொண்டராம்புண்ணியமே. (௩)

மாசினையேறியமேனியர்வன்கண்ணர்மொண்ணரை
டீசனையேநினைந்தேசறுவேனுக்குமுண்டுகொலோ
தேசனையாரூர்த்திருமூலட்டானனைச்சிந்தைசெய்து
பூசனைப்பூசுரர்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (ச)

அருந்தும்பொழுதுரையாடாவமணர்திறமகன்று
வருந்திநினைந்தரனேயென்றுவாழ்த்துவோர்க்குண்டுகொலோ
திருந்தியமாமதிலாரூர்த்திருமூலட்டானனுக்குப்
பொருந்துந்தவமுடைத்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (ரு)

வீங்கியதோள்களுந்தாள்களுமாய்நின்றுவெற்றரையே
மூங்கைகள்போலுண்ணுமூடர்முன்னேநமக்குண்டுகொலோ
தேங்கமழ்சோலைத்தென்னாரூர்த்திருமூலட்டானன்செய்ய
பூங்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (சு)

பண்ணியசாத்திரப்பேய்கள்பறிதலைக்குண்டரைவிட்
டெண்ணில்புகழீசன்றன்னருள்பெற்றேற்குமுண்டுகொலோ
திண்ணியமாமதிலாரூர்த்திருமூலட்டானனெங்கள்
புண்ணியன்றன்னடித்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (எ)

கரப்பர்கண்மெய்யைத்தலைபறிக்கச்சுகமென்னுங்குண்டம்
உரைப்பனகேளாதிங்குய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
திருப்பொலியாரூர்த்திருமூலட்டானன்றிருக்கயிலைப்
பொருப்பன்விருப்பமர்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (அ)

கையிலிடுசோறுநின்றுண்ணுங்காதலமணரைவிட்
டுய்யுநெறிகண்டிங்குய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
ஐயனணிவயலாரூர்த்திருமூலட்டானனுக்குப்
பொய்யன்பிலாவடித்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (கூ)

குற்றமுடையவமணர்திறமதுகையகன்றிட்
டுற்றகருமஞ்செய்துய்யப்போந்தேனுக்குமுண்டுகொலோ
மற்பொலிதோளானிராவணன்றன்வலிவாட்டுவித்த
பொற்கழலானடித்தொண்டர்க்குத்தொண்டாம்புண்ணியமே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## கoரு. ஆரூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

வேம்பினைப்பேசிவிடக்கினையோம்பிவினைபெரு
தூம்பினைத்தூர்த்தங்கோர்சுற்றந்துணையென்றிருத்திர்தொண்டீர்
ஆம்பலம்பூம்பொய்கையாரூரமர்ந்தானடிநிழற்கீழ்ச்
சாம்பலைப்பூசிச்சலமின்றித்தொண்டுபட்டுய்ம்மின்களே. (க)

ஆராய்ந்தடித்தொண்டராணிப்பொன்னாரூரகத்தடக்கிப்
பாரூர்பரிப்பத்தம்பங்குனியுத்திரம்பாற்படுத்தான்

பழிவழியோடியபாவிப்பறிதலைக்குண்டர்தங்கள்
மொழிவழியோடிமுடிவேன்முடியாமைக்காத்துக்கொண்டாய்
கழிவழியோதமுலவுகடனாகைக்காரோணவென்
வழிவழியாளாகும்வண்ணமருளெங்கள்வானவனே. (௪)

செந்துவர்வாய்க்கருங்கண்ணிணைவெண்ணகைத்தேமொழியார்
வந்துவலஞ்செய்துமாநடமாடமலிந்தசெல்வக்
கந்தமலிபொழில்சூழ்கடனாகைக்காரோணமென்றும்
சிந்தைசெய்வாரைப்பிரியாதிருக்குந்திருமங்கையே. (௫)

பனைபுரைகைம்மதயானையுரித்தபரஞ்சுடரே
கனைகடல்சூழ்தருநாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
மனைதுறந்தல்லுணாவல்லமண்குண்டர்மயக்கநீக்கி
எனைநினைந்தாட்கொண்டாய்க்கென்னினியான்செயுமிச்சைகளே. (௬)

சீர்மலிசெல்வம்பெரிதுடையசெம்பொன்மாமலையே
கார்மலிசோலைசுலவுகடனாகைக்காரோணனே
வார்மலிமென்முலையார்பலிவந்திடச்சென்றிரந்து
ஊர்மலிபிச்சைகொண்டுண்பதுமாதிமையோவுரையே. (௭)

வங்கமலிகடனாகைக்காரோணத்தெம்வானவனே
எங்கள்பெருமானோர்விண்ணப்பமுண்டதுகேட்டருளீர்
கங்கைசடையுட்கரந்தாயக்கள்ளத்தைமெள்ளவுமை
நங்கையறியிற்பொல்லாதுகண்டாயெங்கணாயகனே. (௮, ௯)

கருந்தடங்கண்ணியுந்தானுங்கடனாகைக்காரோணத்தான்
இருந்ததிருமலையென்றிறைஞ்சாதன்றெடுக்கலுற்றான்
பெருந்தலைபத்துமிருபதுதோளும்பிதிர்ந்தலற
இருந்தருளிச்செய்ததேமற்றுச்செய்திலனெம்மிறையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௧௦௫. திருவதிகைவீரட்டானம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாசிலொள்வாள்போன்மறியுமணிநீர்த்திரைத்தொகுதி
ஊசலையாடியங்கொண்சிறையன்னமுறங்கலுற்றால்
பாசறைநீலம்பருகியவண்டுபண்பாடல்கண்டு
வீசுங்கெடிலவடகரைத்தேயெந்தைவீரட்டமே. (௧)

பைங்காற்றவளைபறைகொட்டப்பாசிலைநீர்ப்படுகர்
அங்காற்குவளைமேலாவியுயிர்ப்பவருகுலவும்
செங்காற்குருகிவைசேருஞ்செறிகெடிலக்கரைத்தே
வெங்காற்குருசிலைவீரனருள்வைத்தவீரட்டமே. (௨)

பழிவழியோடியபாவிப்பறிதலைக்குண்டர்தங்கள்
மொழிவழியோடிமுடிவேன்முடியாமைக்காத்துக்கொண்டாய்
கழிவழியோதமுலவுகடனாகைக்காரோணவென்
வழிவழியாளாகும்வண்ணமருளெங்கள்வானவனே. (௪)

செந்துவர்வாய்க்கருங்கண்ணிணைவெண்ணகைத்தேமொழியார்
வந்துவலஞ்செய்துமாநடமாடமலிந்தசெல்வக்
கந்தமலிபொழில்சூழ்கடனாகைக்காரோணமென்றும்
சிந்தைசெய்வாரைப்பிரியாதிருக்குந்திருமங்கையே. (௫)

பனைபுரைகைம்மதயானையுரித்தபரஞ்சுடரே
கனைகடல்சூழ்தருநாகைக்காரோணத்தெங்கண்ணுதலே
மனைதுறந்தல்லுணாவல்லமண்குண்டர்மயக்கநீக்கி
எனைநினைந்தாட்கொண்டாய்க்கென்னினியான்செயுமிச்சைகளே. (௬)

சீர்மலிசெல்வம்பெரிதுடையசெம்பொன்மாமலையே
கார்மலிசோலைசுலவுகடனாகைக்காரோணனே
வார்மலிமென்முலையார்பலிவந்திடச்சென்றிரந்து
ஊர்மலிபிச்சைகொண்டுண்பதுமாதிமையோவுரையே. (௭)

வங்கமலிகடனாகைக்காரோணத்தெம்வானவனே
எங்கள்பெருமானோர்விண்ணப்பமுண்டதுகேட்டருளீர்
கங்கைசடையுட்கரந்தாயக்கள்ளத்தைமெள்ளவுமை
நங்கையறியிற்பொல்லாதுகண்டாயெங்கணாயகனே. (௮, ௯)

கருந்தடங்கண்ணியுந்தானுங்கடனாகைக்காரோணத்தான்
இருந்ததிருமலையென்றிறைஞ்சாதன்றெடுக்கலுற்றான்
பெருந்தலைபத்துமிருபதுதோளும்பிதிர்ந்தல
க்செய்ததேமற்றுச்செய்திலனெம்மிறையே. (௧௦)

ம்பலம்.

௧௦௫. வ ரணம -

திருச்சிற்றம்பலம்

மாசிலொள்வாள்போன்மறியுமணிநீர்த்திரைத்தொகுதி
ஊசலையாடியங்கொண்சிறையன்னமுறங்கலுற்றால்
பாசடை
வீசுங்கெடிலவடகரைத்தேயெந்தைவீரட்டமே. (௧)

பைங்காற்றவளைபறைகொட்டப்பாசிலைநீர்ப்படுகர்
அங்காற்குவளைமேலாவியுயிர்ப்பவருகுலவும்
செங்காற்குருகிவைசேருஞ்செறிகெடிலக்கரைத்தே
வெங்காற்குருசிலைவீரனருள்வைத்தவீரட்டமே. (௨)

அம்மலர்க்கண்ணியரஞ்சனஞ்செய்தவர்வாயிளையார்
வெம்முலைச்சாந்தம் விலைபெறுமாலையெடுத்தவர்கள்
தம்மருங்கிற்கிரங்கார்தடங்கோண்மெலியக்குடைவார்
விம்முபுனற்கெடிலக்கரைத்தே நகர்வீரட்டமே. (௩)

[illegible]டைத்தண்புனல்வீரட்ட[illegible] வென்[illegible]ன்ற
[illegible]யா [illegible]டச்சில்குழை[illegible]யா[illegible] [illegible]
[illegible]டைக்கொன்றை[illegible]ஞ்சடை[illegible]கந்தை[illegible]
கூனுடைத்திங்கட்குழவியெட்[illegible]க்குறு[illegible]ண்மினே. (௪)

ஆரட்டதேனுமிரந்து[illegible]டகமகவன்[illegible]
வேரட்டநிற்பித்தி[illegible]கின்ற[illegible]
சூரட்டவேலவன்றாதை[illegible] சூழ்வயல்[illegible]கை
வீரட்டத்தானைவிரும்பா[illegible]ம்[illegible]வே[illegible]. (௫)

படர்பொற்சடையும்பகுவாயரவு[illegible]
சுடலைப்பொடியுமெல்லாமுளவேயவர்[illegible]
கெடிலக்கரைத்திரு[illegible]ரட்டரா வர்[illegible]ட்டைக்கார்
நடலைக்குநற்றுணையாகுங்கண்டீரவர்நாமங்களே. (௬)

காளங்கடந்ததொர்கண்டத்தராகிக்கண்ணார்கெடில
நாளங்கடிக்கோர்நரகமுமாதிற்குதன்னிசைந்த
தாளங்கள்கொண்டுங்குழல்கொண்டுந்தாமங்களே
வேடங்கள்கொண்டும்விசும்புசெல்வாரவர்வீரட்டரே. (எ, அ, ௯, ௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௧௦௬. திருப்புகலூர் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

தன்னைச்சரணென்றுதாளடைந்தேன்றன்னடியடையப்
புன்னைப்பொழிற்புகலூரண்ணல்செய்வனகேண்மின்களோ
என்னைப்பிறப்பறுத்தென்வினைகட்டறுத்[illegible]ழ்நரகத்
தென்னைக்கிடக்கலொட்டான்சிவலோகத்திருத்திடுமே. (௧)

பொன்னைவகுத்தன்னமேனியனேபுனர்மென்முலையாள்
தன்னைவகுத்தன்னபாகத்தனேதமியேற்கிரங்காய்
புன்னைமலர்த்தலைவண்டுறங்கும்புகலூரரனே
என்னைவகுத்திலையேலிடும்பைக்கிடம்யாதுசொல்லே. (உ, ௩)

பொன்னளவார்சடைக்கொன்றையினாய்புகலூரரசே
மன்னுளதேவர்கடேடுமருந்தேநவலஞ்சுழிபாய்
என்னளவேயுனக்காட்பட்டிடைக்கலந்தேயிடப்பார்
உன்னளவேயெனக்கொன்றுமிரங்காதவுந்தமனே. (௪, ௫, ௬, எ, அ, ௯)

[illegible]

காணப்பராவியுங்காண்கின்றிலர்கரநாலைந்துடைத்
தோணப்பிரானைவலிதொலைத்தோன்றொல்லைநீர்ப்புகலூர்க்
[illegible]னையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## கoஎ. திருக்கழிப்பாலை - திருவிருத்தம்.

நெய்தற்குருகுதன்பிள்ளையென்றெண்ணிநெருங்கிச்சென்று
கைதைமடற்புல்குதென்கழிப்பாலையதனுறைவாய்
பைதற்பிறையொடுபாம்புடன்வைத்தபரிசறியோம்
எய்தப்பெறினிரங்காதுகண்டாய்நம்மிறைவனே. (க)

பருமாமணியும்பவளமுத்தும்பரந்துந்திவரை
பொருமால்கரைமேற்றிரைகொணர்ந்தெற்றப்பொலிந்திலங்கும்
கருமாமிடறுடைக்கண்டனெம்மான்கழிப்பாலையெந்தை
பெருமானவனென்னையாளுடையானிப்பெருநிலத்தே. (உ)

நாட்பட்டிருந்தின்பமெய்தலுற்றிங்குநமன்றமராற்
கோட்பட்டொழிவதன்முந்துறவேகுளிரார்தடத்துத்
தாட்பட்டதாமரைப்பொய்கையந்தண்கழிப்பாலையண்ணற்
காட்பட்டொழிந்தவன்றேவல்லமாயிவ்வகலிடத்தே. (௩)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பால்வண்ணநாதர்; முதல்வி - வேதநாயகி.

---

## கoஅ. திருக்கடவூர் - வீரட்டம்.

திருச்சிற்றம்பலம்

மருட்டுயர்தீரவன்றர்ச்சித்தமாணிமார்க்கண்டேயற்காய்
இருட்டியமேனிவளைவாளெயிற்றெரிபோலுங்குஞ்சிச்
சுருட்டியநாவில்வெங்கூற்றம்பதைப்பவுதைத்துங்கனே
உருட்டியசேவடியான்கடவூருறையுத்தமனே. (க)

பதத்தெழுமந்திரமஞ்செழுத்தோதிப்பரிவினொடும்
[illegible]
கதத்தெழுகாலனைக்கண்குருதிப்புனலாறொழுக
உதைத்தெழுசேவடியான்கடவூருறையுத்தமனே. (உ)

கரப்புறுசிந்தையர்காண்டற்கரியவன்காமனையும்
நெருப்புமிழ்கண்ணினனீள்புனற்கங்கையும்பொங்கரவும்
பரப்பியசெஞ்சடைப்பால்வண்ணன்காலனைப்பண்டொருகால்
உரப்பியசேவடியான்கடவூருறையுத்தனே. (௩)

மறுத்தகழ்கையினன்வானவர்கோனைமனமகிழ்ந்து
குறித்தெழுமாணிதனுருயிர்கொள்வான்கொதித்தசிந்தை
கறுத்தெழுமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
உறுக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௪)

குழைத்திகழ்காதினன்வானவர்கோனைக்குளிர்ந்தெழுந்து
பழக்கமொடர்ச்சித்தமாணிதனுருயிர்கொள்ளவந்த

அழற்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்தானலற
உழக்கியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௬)

பாலனுக்காயன்றுபாற்கடலீந்துபணைத்தெழுந்த
ஆனிழற்கீழிருந்தாரணமோதிபருமுனிக்காச்
சூலமும்பாசமுங்கொண்டுதொடர்ந்தடர்ந்தோடிவந்த
காலனைக்காய்ந்தபிரான்கடவூருறையுத்தமனே. (௭)

படர்சடைக்கொன்றையும்பன்னகமாலைபணிகயிறா
உடைதலைக்கோத்துழல்மேனியன்வெண்பலிக்கென்றுழல்வோன்
சுடர்பொதிமூவிலைவேலுடைக்காலனைத்துண்டமதா
உடறியசேவடியான்கடவூருறையுத்தமனே. (௮)

வெண்டலைமாலையுங்கங்கைக்கரோடிதிரிசடைமேல்
பெண்டணிநாயகன்பேயுகந்தாடும்பெருந்தகையான்
கண்டணிநெற்றியன்காலனைக்காய்ந்துகடலின்விடம்
உண்டருள்செய்தபிரான்கடவூருறையுத்தமனே. (௯)

கேழலதாகிக்கிளறியகேசவன்காண்பரிதாய்
வாழிநன்மாமலர்க்கண்ணிடந்திட்டவம்மாலவற்கன்
றாழியுமீந்துவடுதிறற்காலனையன்றடர்த்து
ஊழியுமாயபிரான்கடவூருறையுத்தமனே. (௰)

தேன்றிகழ்கொன்றையுங்கூவிளமாலைதிருமுடிமேல்
ஆன்றிகழைந்துகந்தாடும்பிரான்மலையார்த்தெடுத்த
கூன்றிகழ்வாளரக்கன்முடிபத்துங்குலைந்துவிழ
ஊன்றியசேவடியான்கடவூருறையுத்தமனே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
முதல்வன் - அமிர்தகடேசர், முதல்வி - அபிராமி.

---

## கoகூ. திருமாற்பேறு - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

மாணிக்குயிர்பெறக்கூற்றையுதைத்தனமாவலிபால்
காணிக்கிரந்தவன்காண்டற்கரியனகண்டதொண்டர்
பேணிக்கிடந்துபரவப்படுவனபேர்த்துமஃதே
மாணிக்கமாவனமாற்பேறுடையான்மலரடியே. (க)

கருடத்தனிப்பாகன்காண்டற்கரியனகாதல்செய்யிற்
குருடர்க்குமுன்னேகுடிகொண்டிருப்பனகோலமல்கு
செருடக்கடிமலர்ச்செல்விதன்செங்கமலங்கரத்தால்
வருடச்சிவப்பனமாற்பேறுடையான்மலரடியே. (உ)

திருச்சிற்றம்பலம்.
இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.
முதல்வன் - மால்வணங்குமீசர்; முதல்வி - கருணைநாயகி.

## ௧௧௦. திருத்தூங்கானைமாடம் - திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

கான்றுண்டுவிண்ணப்பம்போற்றிசெய்யும்
என்னுவிகாப்பதற்கிச்சையுண்டேலிருங்கூற்றகல
மின்னுருமூவிலைச்சூலமென்மேற்பொறிமேவுகொண்டல்
துன்னார்கடந்தையுட்டூங்கானைமாடச்சுடர்க்கொழுந்தே. (௧-௨-௩-௪)

ஆவாசிறுதொண்டனென்னினைந்தாயென்றரும்பிணிநோய்
காவாதொழியிற்கலக்குமுன்மேற்பழிகாதல்செய்வார்
தேவாதிருவடிநீறென்னைப்பூசுசெந்தாமரையின்
பூவார்கடந்தையுட்டூங்கானைமாடத்தெம்புண்ணியனே. (௫-௬-௭-௮-௯)

கடவுந்திகிரிகடவாதொழியக்கயிலையுற்றான்
படவுந்திருவிரலொன்றுவைத்தாய்பனிமால்வரைபோல்
இடபம்பொறித்தென்னையேன்றுகொள்ளாயிருஞ்சோலைதிங்கள்
தடவுங்கடந்தையுட்டூங்கானைமாடத்தெந்தத்துவனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - சுடர்க்கொழுந்துநாதர்; முதல்வி - கடந்தைநாயகி.

## ௧௧௧. பொது - பசுப ம.

திருச்சிற்றம்பலம்

சாம்பலைப்பூசித்தரையிற்புரண்டுநின்றாள்பரவி
ஏம்பலிப்பார்கட்கிரங்குகண்டாயிருங்கங்கை
காம்பலைக்கும்பணைத்தோளிகதிர்ப்பூண்வனமுலைமேல்
பாம்பலைக்குஞ்சடையாயெம்மையாளும்பசுபதியே. (௧)

உடம்பைதொலைவதுனபாதந்தலைவைத்தவுத்தமர்கள்
இடும்பைப்படாமலிரங்குகண்டாயிருளோடச்செந்தீ
அடும்பொத்தனையவழன்மழுவாவழலேயுமிழும்
படம்பொத்தரவரையாயெம்மையாளும்பசுபதியே. (௨)

தாரித்திரந்தவிராவடியார்தடுமாற்றமென்னும்
மூரித்திரைப்பவ்வநீக்குகண்டாய்மூன்னைநாளொருகால்
வேரித்தண்பூஞ்சுடரைங்கணைவேள்வெந்துவீழச்செந்தீப்
பாரித்தகண்ணுடையாயெம்மையாளும்பசுபதியே. (௩)

ஒருவரைத்தஞ்சமென்றெண்ணுதுன்பாதமிறைஞ்சுகின்றார்
அருவினைச்சுற்றமகல்விகண்டாயண்டமேயணவும்
பெருவரைக்குன்றம்பிளிறப்பிளந்துவேய்த்தோளியஞ்சப்
பருவரைத்தோலுரித்தாயெம்மையாளும்பசுபதியே. *(௪)

இடுக்கொன்றுமின்றியெஞ்சாமையுன்பாதமிறைஞ்சுகின்றார்க்
கடர்க் சையும

மாலைப்பிறையுமணிவாயரவும்விரவியெல்லாம்
சாலக்கிடக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௫)

வீழிட்டகொன்றையந்தாராயென்விண்ணப்பமேவிலங்கு
சூழிட்டிருக்குநற்சூளாமணியுஞ்சுடலைநீறும்
ஏழிட்டிருக்குநல்லக்குமரவுமென்பாமையொடும்
தாழிட்டிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௬)

விண்டார்புரமூன்றுமெய்தாயென்விண்ணப்பமேவிலங்கு
தொண்டாடியதொண்டடிப்பொடிநீறுந்தொழுதுபாதம்
கண்டார்கள்கண்டிருக்குங்கயிலாயமுங்காமர்கொன்றைத்
தண்டாரிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௭)

விடுபட்டியேறுகந்தேறியென்விண்ணப்பமேவிலங்கு
கொடுகொட்டிகொக்கரைதக்கைகுழலுளம்வீணைமொந்தை
வடுவிட்டகொன்றையும்வன்னியுமத்தமும்வாளரவும்
தடுகுட்டமாடுஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௮)

வெண்டிரைக்கங்கைவிகிர்தாவென்விண்ணப்பமேவிலங்கு
கண்டிகைபூண்டுகடிசூத்திரமேற்கபாலவடம்
குண்டிகைகொக்கரைகோணற்பிறைகுறட்பூதப்படை
தண்டிவைத்திட்டசரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௯)

வேதித்தவெம்மழுவாளியென்விண்ணப்பமேவிலங்கு
சோதித்திருக்குநற்சூளாமணியுஞ்சுடலைநீறும்
பாதிப்பிறையும்படுதலைத்துண்டமும்பாய்புலித்தோல்
சாதித்திருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௧௦)

விவந்தாடியகழலெந்தாயென்விண்ணப்பமேவிலங்கு
தவந்தானெடுக்கத்தலைபத்திறுத்தனைதாழ்புலித்தோல்
சிவந்தாடியபொடிநீறுஞ்சிரமாலைசூடிநின்று
தவந்தானிருக்குஞ்சரக்கறையோவென்றனிநெஞ்சமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௧௧௩. பொது - தனித்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

வெள்ளிக்குழைத்துணிபோலுங்கபாலத்தன்வீழ்ந்திலங்கு
வெள்ளிப்புரியன்னவெண்புரிநூலன்விரிசடைமேல்
வெள்ளித்தகடன்னவெண்பிறைசூடிவெள்ளெண்பணிந்து
வெள்ளிப்பொடிப்பவளப்புறம்பூசியவேதியனே. (௧)

உடலைத்துறந்துலகேழுங்கடந்துலவாததுன்பக்
கடலைக்கடந்துய்யப்போயிடலாகுங்கனகவண்ணப்

படலைச்சடைப்பரவைத்திரைக்கங்கைப்பனிப்பிறைவெண்
சுடலைப்பொடிக்கடவுட்கடிமைக்கட்டுணிநெஞ்சமே. (௨)

முன்னேயுரைத்தான்முகமனேயொக்குமிம்மூவுலகுக்
கன்னையுமத்தனுமாவாயழல்வணாநீயலையோ
உன்னைநினைந்தேகழியுமென்னாவிகழிந்ததன்பின்
என்னைமறக்கப்பெறாயெம்பிரானுன்னைவேண்டியதே. (௩)

நின்னையெப்போதுநினையவொட்டாய்நீநினையப்புகில்
பின்னையப்போதேமறப்பித்துப்பேர்த்தொன்றுநாடுவித்தி
உன்னையெப்போதுமறந்திட்டுனக்கினிதாவிருக்கும்
என்னையொப்பாருளரோசொல்லுவாழியிறையவனே. (௪)

முழுத்தழன்மேனித்தவளப்பொடியர்கனகக்குன்றத்
தெழிற்பெருஞ்சோதியையெங்கள்பிரானையிகழ்திர்கண்டீர்
தொழப்படுந்தேவர்தொழப்படுவானைத்தொழுதபின்னைத்
தொழப்படுந்தேவர்தம்மாற்றொழுவிக்குந்தன்றொண்டரையே. (௫)

விண்ணகத்தான்மிக்கவேதத்துளான்விரிநீருடுத்த
மண்ணகத்தான்றிருமாலகத்தான்மருவற்கினிய
பண்ணகத்தான்பத்தர்சித்தத்துளான்பழநாயடியேன்
கண்ணகத்தான்மனத்தான்சென்னியானெங்கறைக்கண்டனே. (௬)

பெருங்கடன்மூடிப்பிரளயங்கொண்டுபிரமனும்போய்
இருங்கடன்மூடியிறக்குமிறந்தான்களேபரமும்
கருங்கடல்வண்ணன்களேபரமுங்கொண்டுகங்காளராய்
வருங்கடன்மீளநின்றெம்மிறைநல்வீணைவாசிக்குமே. (௭)

வானந்துளங்கிலென்மண்கம்பமாகிலென்மால்வரையுந்
தானந்துளங்கித்தலைதடுமாறிலென்றண்கடலும்
மீனம்படிலென்விரிசுடர்வீழிலென்வேலைநஞ்சுண்
டூனமொன்றில்லாவொருவனுக்காட்பட்டவுத்தமர்க்கே. (௮)

சிவனெனுநாமந்தனக்கேயுடையசெம்மேனியெம்மான்
அவனெனையாட்கொண்டளித்திடுமாகிலவன்றனையான்
பவனெனுநாமம்பிடித்துத்திரிந்துபன்னாளழைத்தால்
இவனெனைப்பன்னாளழைப்பொழியானென்றெதிர்ப்படுமே. (௯)

என்னையொப்பாருன்னையெங்ஙனங்காண்பரியம்பியுன்னை
நின்னையொப்பார்நின்னைக்காணும்படித்தன்றுநின்பெருமை
பொன்னையொப்பாரித்தழலைவளாவிச்செம்மானஞ்செற்று
மின்னையொப்பாரமிளிருஞ்சடைக்கற்றைவேதியனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## ககச. பொது - தனித்திருவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்

பவளத்தடவரைபோலுந்திண்டோள்களத்தோள்மிசையே
பவளக்குழைதழைத்தாலொக்கும்பல்சடையச்சடைமேல்
பவளக்கொழுந்தன்னபைம்முகநாகமந்நாகத்தொடும்
பவளக்கண்வாலமதியெந்தைசூடும்பனிமலரே. (௧)

முருகார்நறுமலரிண்டைதழுவிவண்டேமுரலும்
பெருகாரடைசடைக்கற்றையிஞப்பிணிமேய்ந்திருந்த
இருகாற்குரம்பையிதுநானுடையதிதுபிரிந்தால்
தருவாயெனக்குன்றிருவடிக்கீழொர்தலைமறைவே. (௨)

மூவாவுருவத்துமுக்கண்முதல்வமிக்கூரிடும்பை
காவாயெனக்கடைதூங்குமணியைக்கைபாலமரர்
நாவாயசைத்தவொலியொலிமாறியதில்லையப்பால்
தீயாயெரிந்துபொடியாக்கழிந்ததிரிபுரமே. (௩)

பந்தித்தபாவங்களம்மையிற்செய்தனவிம்மைவந்து
சந்தித்தபி ள
முந்திச்செழுமல
நந்திக்குமுந்துறவாட்செய்கிலாவிட்டஎன்னெஞ்சமே. (௪)

அந்திவட்டத்திளங்கண்ணியனாறமர்செஞ்சடையான்
புந்திவட்டத்திடைப்புக்குநின்றானையும்பொய்யென்பனோ
சந்திவட்டச்சடைக்கற்றையலம்பச்சிறிதலர்ந்த
நந னையே. (௫)

உன்மத்தகமலர்சூடியுலகந்தொழச்சுடலைப்
பன்மத்தகங்கொண்டுபல்கடைதோறும்பலிதிரிவான்
என்மத்தகத்தேயிரவும்பகலும்பிரிவரியான்
தன்மத்தகத்தோரிளம்பிறைசூடியசங்கரனே. (௬)

அரைப்பாலுடுப்பனகோவணச்சின்னங்கலையமுணல்
வரைப்பாவையைக்கொண்டதெக்குடிவாழ்க்கைக்குவானிரைக்கும்
இரைப்பாபடுதலையேந்துகையாமறந்தேடுமெந்தாய்
உரைப்பாருரைப்பனவேசெய்தியாலெங்கணுத்தமனே. (௭)

துறக்கப்படாதவுடலைத்துறந்துவெந்தூதுவரோ
டிறப்பனிறந்தாலிருவிசும்பேறுவனேறிவந்து
பிறப்பன்பிறந்தாற்பிறையணிவார்சடைப்பிஞ்ஞகன்பேர்
மறப்பன்கொலோவென்றென்னுள்ளங்கிடந்துமறுகிடுமே. (௮)

வேரிவளாயவிரைமலர்க்கொன்றைபுனைந்தனகன்
சேரிவளாயவென்சிந்தைபுகுந்தான்றிருமுடிமேல்
வாரிவளாயவருபுனற்கங்கைசடைமறிவாய்
ஏரிவளாக்கிடந்தாற்போலுமிளம்பிறையே. (௯)

கன்னெடுங்காலம்வெதும்பிக்கருங்கடனீர்சுருங்கிப்
பன்னெடுங்காலமழைதான்மறுக்கினும்பஞ்சமுண்டென்
றென்னொடுஞ்சூளறுமஞ்சனெஞ்சேயிமையாதமுக்கட்
பொன்னெடுங்குன்றமொன்றுண்டுகண்டீரிப்புகலிடத்தே. (௧௦)

மேலுமறிந்திலனான்முகன்மேற்சென்றுகீழிடந்து
மாலுமறிந்திலன்மாலுற்றதேவழிபாடுசெய்யும்
பாலன்மிசைச்சென்றுபாசம்விசிறிமறிந்தசிந்தைக்
காலனறிந்தானறிதற்கரியான்கழலடியே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

நான்காந்திருமுறை முற்றியது.

திருநாவுக்கரசுகள் திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்

திருக்கச்சிஞானப்பிரகாசமுனீந்திரர்
மடாலய ஏட்டின்படியே
சி நாகலிங்க முனிவர் பார்வையிட்டது.

கணபதிதுணை

திருநாவுக்கரசுசுவாமிகள்

# ரண்டாந் ருமுறையின்

## அட் வணை.

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

ஐந்தாந்திருமுறை

## ககரு. கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
என்னம்பாலிக்குமாறுகண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே. (க)

அரும்பற்றப்படவாய்மலர்கொண்டுநீர்
சுரும்பற்றப்படத்தூவித்தொழுமினோ
கரும்பற்றச்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பெரும்பற்றப்புலியூரெம்பிரானையே. (உ)

அருச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீர்
எரிச்சுற்றக்கிடந்தாரென்றயலவர்
சிரிச்சுற்றப்பலபேசப்படாமுன்னந்
திருச்சிற்றம்பலஞ்சென்றடைந்துய்ம்மினே. (ங)

அல்லலென்செயுமருவினையென்செயுந்
தொல்லைவல்வினைத்தொண்டர்ந்தானென்செயுந்
தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோரடிமைபூண்டேனுக்கே. (ச)

ஊனிலாவியுயிர்க்கும்பொழுதெலாம்
நானிலாவியிருப்பனென்னாதனைத்
தேனிலாவியசிற்றம்பலவனார்
வானிலாவியிருக்கவும்வைப்பரே. (ரு)

சிட்டர்வானவர்சென்றுவரங்கொளுஞ்
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலத்துறை
சிட்டன்சேவடிகைதொழச்செல்லுமச்
சிட்டர்பாலணுகான்செறுகாலனே. (சா)

உ

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்.

## ககரு. கோயில் - தொகை.

திருச்சிற்றம்பலம்

அன்னம்பாலிக்குந்தில்லைச்சிற்றம்பலம்
பொன்னம்பாலிக்குமேலுமிப்பூமிசை
என்னம்பாலிக்குமாறுகண்டின்புற
வின்னம்பாலிக்குமோவிப்பிறவியே. (க

அரும்பற்றப்படவாய்மலர்கொண்டுநீர்
சுரும்பற்றப்படத்தூவித்தொழுமினோ
கரும்பற்றச்சிலைக்காமனைக்காய்ந்தவன்
பெரும்பற்றப்புலியூரெம்பிரானையே. (உ

அருச்சுற்றவினையாலடர்ப்புண்டுநீர்
எரிச்சுற்றக்கிடந்தாரென்றயலவர்
சிரிச்சுற்றப்பலபேசப்படாமுன்னந்
திருச்சிற்றம்பலஞ்சென்றடைந்துய்ம்மினே. (ந

தொல்லைவல்வினைத்தொண்டர்தானென்செயுந்
தில்லைமாநகர்ச்சிற்றம்பலவனார்க்
கெல்லையில்லதோரடிமைபூண்டேனுக்கே. (ச

ம

நானிலா

ய

வானிலாவியிருக்கவும்வைப்பரே. (ரு

சிட்டர்வானவர்சென்றுவரங்கொளுஞ்
சிட்டர்வாழ்தில்லைச்சிற்றம்பலத்துறை
சிட்டன்சேவடிகைதொழச்செல்லுமச்
சிட்டர்பாலணுகான்செறுகாலனே. (சு

ஒருத்தனாருலகங்கட்கொருசுடர்
திருத்தனார்தில்லைச்சிற்றம்பலவனார்
விருத்தனாரிளையார்விடமுண்டவெம்
அருத்தனாரடியாரையறிவரே. (௭)

விண்ணிறைந்ததோர்வெவ்வழலின்னுரு
எண்ணிறந்தவிருவர்க்கறிவொணாக்
கண கடிபொழிலம்பலத்
ன்றாடுமொருவனே. (௮)

வில்லைவட்டப்படவாங்கியவுணர்தம்
வல்லைவட்டம்மதின்மூன்றுடன்மாய்த்தவன்
றில்லைவட்டந்திசைகைதொழுவார்வினை
ஒல்லைவட்டங்கடந்தோடுதலுண்மையே. (௯)

நாடிநாரணனான்முகனென்றிவர்
தேடியுந்திரிந்துங்காணவல்லரோ
மாடமாளிகைசூழ்தில்லையம்பலத்
தாடிபாதமென்னெஞ்சுளிருக்கவே. (௰)

மதுரவாய்மொழிமங்கையோர்பங்கினன்
சதுரன்சிற்றம்பலவன்றிருமலை
அதிரவார்த்தெடுத்தான்முடிபத்திற
மிதிகொள்சேவடிசென்றடைந்துய்ம்மினே. (௰௧)

திருச்சிற்றம்பலம்.

## ௧௧௬. கோயில் - திருக்குறுந்தொகை.

---

திருச்சிற்றம்பலம்

பனைக்கைமும்மதவேழமுரித்தவன்
நினைப்பவர்மனங்கோயிலாக்கொண்டவன்
அனைத்தும்வேடமாமம்பலக்கூத்தனைத்
தினைத்தனைப்பொழுதும்மறந்துய்வனோ. (௧)

தீர்த்தனைச்சிவனைச்சிவலோகனை
மூர்த்தியைமுதலாயவொருவனைப்
பார்த்தனுக்கருள்செய்தசிற்றம்பலக்
யென்மறந்துய்வனோ. (௨)

கட்டும்பாம்புங்கபாலங்கைமான்மறி
இட்டமாயிடுகாட்டெரியாடுவான்
சிட்டர்வாழ்தில்லையம்பலக்கூத்தனை
எட்டனைப்பொழுதும்மறந்துய்வனோ. (௩)

மாணிபால்கறந்தாட்டிவழிபட
நீணுலகெலாமாளக்கொடுத்தவன்

ஞணியைச்செம்பொனம்பலத்துண்ணின்ற
தாணுவைத்தமியேன்மறந்துய்வனே. (௪)

டை

வணம

ய துயவ

ன
ஓதியையொருவர்க்குமறிவொணுச்
சோதியைச்சுடர்செம்பொனினம்பலத்
தாதியையடியேன்மறந்துய்வனே. (௬)

மைகொள்கண்டனெண்டோளன்முக்கண்ணினன்
பைகொள்பாம்பரையார்த்தபரமனர்
செய்யமாதுறைசிற்றம்பலத்தெங்கள்
யவ (௭)

முழுதுமவானுலகத்துளதேவர்கள்
தொழுதும்போற்றியுந்தூயசெம்பெ ல
எழுதிமேய்ந்தசிற்றம்பலக்கூத்தனை
(௮)

காருலாமலர்க்கொன்றையந்தாரனை
வாருலாமுலைமங்கைமணளனைத்

தமறந்துய்வனே (௯)

யந்தனுற்றன்

ரீர்வயல்சூழ்தில்லைக்கூத்தனைப்
பாங்கிலாத்தொண்டனேன்மறந்துய்வனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ௧௧௭. திருநெல்வாயிலரத்துறை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

கடவுளைக்கடலுள்ளெழுநஞ்சுண்ட
உடலுளானையொப்பாரியலாதவெம்
அடலுளானையரத்துறைமேவிய
சுடருளானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௧)

கரும்பொப்பானைக்கரும்பினிற்கட்டியை
விரும்பொப்பானைவிண்ணேருமறிகிலா
அரும்பொப்பானையரத்துறைமேவிய
சுரும்பொப்பானைக்கண்டீர்நாந்தொழுவதே. (௨)

வாணனைம்மதிசூடியமைந்தனைத்

ஏணனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
ய்வனே. (௨)

மத்தனைம்மதயானையுரித்தவெம்

முத்தனைம்முனிந்தார்புரமூன்றெய்த
அத்தனையடியேன்மறந்துய்வனே. (௩)

காற்றனைக்கலக்கும்வினைபோயறத்
தேற்றனைத்திருவண்ணாமலையனைக்
கூற்றனைக்கொடியார்புரமூன்றெய்த
ஆற்றனையடியேன்மறந்துய்வனே. (௪)

மின்னனைவினைதீர்த்தெனையாட்கொண்ட
தென்னனைத்திருவண்ணாமலையனை
என்னனையிகழ்ந்தார்புரமூன்றெய்த
அன்னனையடியேன்மறந்துய்வனே. (௫)

மன்றனைம்மதியாதவன்வேள்விமேல்
சென்றனைத்திருவண்ணாமலையனை
வென்றனைவெகுண்டார்புரமூன்றையும்
கொன்றனைக்கொடியேன்மறந்துய்வனே. (௬)

வீரனைவிடமுண்டனைவிண்ணவர்
ஈரனைத்திருவண்ணாமலையனை
ஊரனையுணரார்புரமூன்றெய்த
ஆரனையடியேன்மறந்துய்வனே. (௭)

கருவினைக்கடல்வாய்விடமுண்டவெம்
திருவினைத்திருவண்ணாமலையனை
உருவினையுணரார்புரமூன்றெய்த
அருவினையடியேன்மறந்துய்வனே. (௮)

அருத்தனையரவைந்தலைநாகத்தைத்
திருத்தனைத்திருவண்ணாமலையனைக்
கருத்தனைக்கடியார்புரமூன்றெய்த
அருத்தனையடியேன்மறந்துய்வனே. (௯)

அரக்கனையலறவ்விரலூன்றிய
திருத்தனைத்திருவண்ணாமலையனை
இரக்கமாயென்னுடலுறுநோய்களைத்
துரக்கனைத்தொண்டனேன்மறந்துய்வனே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

## கக௯. திருவண்ணாமலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பட்டியேறுகந்தேறிப்பலவிடம்
இட்டமாகவிரந்துண்டுழிதரும்
அட்டமூர்த்தியண்ணாமலைகைதொழக்
கெட்டுப்போம்வினைகேடில்லைகாண்மினே. (௧)

பெற்றமேறுவர்பெய்பலிக்கென்றுவர்
சுற்றமாமிகுதொல்புகழாளொடும்
அற்றந்தீர்க்குமண்ணாமலைகைதொழ
நற்றவத்தொடுஞானத்திருப்பரே. (௨)

பல்லிலோடுகையேந்திப்பலவிடம்
ஒல்லைச்சென்றுணங்கல்கவர்வாரவர்
அல்லல்தீர்க்குமண்ணாமலைகைதொழ
நல்லவாயினநம்மையடையுமே. (௩)

பாடிச்சென்றுபலிக்கென்றுநின்றவர்
ஓடிப்போயினர்செய்வதொன்றென்கொலோ
ஆடிப்பாடியண்ணாமலைகைதொழ
ஓடிப்போகுநம்மேலைவினைகளே. (௪)

தேடிச்சென்றுதிருந்தடியேத்துமின்
நாடிவந்தவர்நம்மையுமாட்கொள்வர்
ஆடிப்பாடியண்ணாமலைகைதொழ.
ஓடிப்போநமதுள்ளவினைகளே. (௫)

கட்டியொக்குங்கரும்பினிடைத்துணி
வெட்டிவினைகள்பாறும்விகிர்தனார்
அட்டமூர்த்தியண்ணாமலைமேவிய
நட்டமாடியைநண்ணநன்காகுமே. (௬)

கோணிக்கொண்டையர்வேடமுன்கொண்டவர்
பாணிநட்டங்களாடும்பரமனார்
ஆணிப்பொன்னையண்ணாமலைகைதொழப்
பேணிநின்றபெருவினைபோகுமே. (௭)

கண்டந்தான்கறுத்தான்காலனாருயிர்
பண்டுகால்கொடுபாய்ந்தபரமனார்
அண்டத்தோங்குமண்ணாமலைகைதொழ
விண்டுபோகுநம்மேலைவினைகளே. (௮)

முந்திச்சென்றுமுப்போதும்வணங்குமின்

ரண்ணாமலை

இந்தியாவெழுவார்வினைதீர்த்திடும்
கந்தமாமலர்சூடுங்கருத்தனே (௯)

மறையினானொடுமாலவன்காண்கிலா
நிறையும்நீர்மையுணின்னருள்செய்தவன்
உறையுமாண்பினண்ணுமலை..கர்த்தொழப்
பறையுநாஞ்செய்தபாவங்களானவே. (௧0)

ற்றம்பலம்.

## ௪௨௭. திருவாரூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

எப்போதும்மிறையும்மறவாதுநீர்
முப்போதும்பிரமன்றொழுநின்றவன்
செப்போதும்பொனின்மேனிச்சிவனவன்
அப்போதைக்கஞ்சலென்னுமாரூரனே. (௧)

சடையின்மேலுமொர்தையலைத்தைவர்
அடைகிலாவரவையரையார்த்தவர்
படையினேர்தடங்கண்ணுமைபாகமா
அடைவர்போலிடுகாடரூரரே. (௨)

விண்டவெண்டலையேகலனாகவே
கொண்டகம்பலிதேருங்குழகனார்
துண்டவெண்பிறைவைத்தவிறையவர்
அண்டவாணர்க்கருளுமாரூரரே. (௩)

விடையுமேறுவர்வெண்டலையிற்பலி
கடைகடோறுந்திரியுமெங்கண்ணுதல்
உடையுஞ்சீரையுறைவதுகாட்டிடை
அடைவர்போலரங்காகவாரூரரே. (௪)

துளைக்கைவேழத்துரியுடல்போர்த்தவர்
வளைக்கையாளையொர்பாகமகிழ்வெய்தித்
திளைக்குந்திங்கட்சடையுட்டிசைமுழு
தெந்தையர்போலுமாரூரரே.

பண யாபாகமா
மமதிருடியே

சுண்ணநீறுமெய்பூசிச்சுடலையின்
அண்ணியாடுவர்போலுமாரூரரே. (௬)

மட்டுவார்குழலாளொடுமால்விடை
இட்டமாவுகந்தேறுமிறைவனார்

எம்மையாருமிதுசெயவல்லரே
அம்மையாரெனக்கென்றென்றாற்றினேற்
கம்மையாரைத்தந்தாராரூரையரே. (௬)

தண்டவாளியைத்தக்கன்றன்வேள்வியைச்
செண்டதாடியதேவாகண்டனைக்
கண்டுகண்டிவள்காதலித்தன்பதாய்க்
கொண்டியாயினவாறென்றன்கோதையே. (௭)

இவணமைப்பலபேசத்தொடங்கினாள்
அவணமென்றெனிலாரூரனெனும்
பவனிவீதிவிடங்கனைக்கண்டிவள்
ரதை (௮)

நீரைச்செஞ்சடைவைத்தநிமலனார்
காரொத்தமிடற்றார்கனல்வாயரா
ஆரத்தருறையும்மணியாரூரைத்
தூரத்தேதொழுவார்வினைதூளியே. (௯)

உள்ளமேயொருறுதியுரைப்பனன்
வெள்ளந்தாங்குவிரிசடைவேதியன்
அள்ளல்நீர்வயலாரூரமர்ந்தவெம்
வள்ளல்சேவடிவாழ்த்திவணங்கிடே. (௧0)

விண்டமாமலர்மேலுறைவானொடும்
கொண்டல்வண்ணனுங்கூடியறிகிலா
அண்டவாணன்றனாரூரடிதொழப்
பண்டைவல்வினைநில்லாபறையுமே. (௧௧)

யகண்டதனண்டதன
கையுலாவியசூலத்தன்கண்ணுதல்
ஐயனாரூரடிதொழுவார்க்கெல்லாம்
உய்யலாமல்லலொன்றிலைகாண்மினே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

## ௧௨௨. திரு அன்னியூர் - திருக் ... ாகை.

திருச்சிற்றம்பலம்.

பாறலைத்தபடுவெண்டலையினன்
நீறலைத்தசெம்மேனியனேரிழை
கூறலைத்தமெய்கோளரவாட்டிய
சடையன் (௧)

பண்டொத்தமொழியாளையொர்பாகமாய்
இண்டைச்செஞ்சடையன்னிருள்சேர்ந்

## கஉ௩. திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

ஓதமால்கடல்பாவியுலகெலாம்
மாதரார்வலங்கொண்மறைக்காடரோ
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (க)

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
ஆக்கந்தானுடைமாமறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியாரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநம்பணிசெய்யிலே. (உ)

புன்னைநாழல்புறணியருகெலாம்
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
அன்னமென்னடையாளையொர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே. (௩)

அட்டமாமலர்சூடியம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியும்
இட்டமாகவிருக்குமிடமதே. (௪)

நெய்தலாம்பல்நிறைவயல்சூழ்தரும்
மெய்யினார்வலங்கொள்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டார்கவர்புன்சடைப்
பைதல்வெண்பிறைபாம்புடன்வைப்பதே. (௫)

துஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
வஞ்சின்றிவலங்கொள்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணர்ந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (௬)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
உருவினாளுமையாளையொர்பாகமாய்
மருவினாய்கங்கையைச்சென்னிதன்னிலே. (௭)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமார்வலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
அங்கையில்லனலேந்தலழகிதே. (௮)

## கஉரு. திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

ஓதமால்கடல்பாவியுலகெலாம்
மாதரார்வலங்கொண்மறைக்காடரோ
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (க)

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
ஆக்கந்தானுடைமாமறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியாரடியார்தம்மை
நோக்கிக்காண்பதுநம்பணிசெய்யிலே. (உ)

புன்னைநாழல்புறணியருகெலாம்
மன்னினார்வலங்கொண்மறைக்காடரோ
அன்னமென்னடையாளையொர்பாகமாச்
சின்னவேடமுகப்பதுசெல்வமே. (௩)

அட்டமாமலர்சூடியம்பொடு
வட்டப்புன்சடைமாமறைக்காடரோ
நட்டமாடியுநான்மறைபாடியும்
இட்டமாகவிருக்குமிடமதே. (௪)

நெய்தலாம்பல்நிறைவயல்சூழ்தரும்
மெய்யினார்வலங்கொள்மறைக்காடரோ
தையல்பாகங்கொண்டீர்கவர்புன்சடைப்
பைதல்வெண்பிறைபாம்புடன்வைப்பதே. (ரு)

துஞ்சும்போதுந்துயிலின்றியேத்துவார்
நெஞ்சினின்றிவலங்கொள்மறைக்காடரோ
பஞ்சின்மெல்லடிப்பாவைபலிகொணர்ந்
தஞ்சிநிற்பதுமைந்தலைநாகமே. (௬)

திருவினார்செல்வமல்குவிழாவணி
மருவினார்வலங்கொண்மறைக்காடரோ
உருவினாளுமையாளையொர்பாகமாய்
ம 'ளுய் கங்கையைச்சென்னிதன்னிலே. (௭)

சங்குவந்தலைக்குந்தடங்கானல்வாய்
வங்கமார்வலங்கொண்மறைக்காடரோ
கங்கைசெஞ்சடைவைப்பதுமன்றியே
அங்கையில்லனலேந்தலட (௮)

குறைக்காட்டான்விட்டகோகுத்தமாமலை
இறைக்காட்டியெடுத்தான்றலையீரைந்தும்
மறைக்காட்டானிறையூன்றலும்வாய்விட்டான்
இறைக்காட்டாயெம்பிரானுனையேத்தவே. (க)

* * * * *

திருச்சிற்றம்பலம்.

## கஉச. திருமறைக்காடு - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பண்ணினேர்மொழியாளுமைபங்கரோ
மண்ணினார்வலஞ்செய்மறைக்காடரோ
கண்ணினாலுமைக்காணக்கதவினைத்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே.

ஈண்டுசெஞ்சடையாகத்துளீசரோ
மூண்டகார்முகிலின்முறிக்கண்டரோ
ஆண்டுகொண்டநீயருள்செய்திடீர்
நீண்டமாக்கதவின்வலிநீக்குமே.

அட்டமூர்த்தியதாகியவப்பரோ
துட்டர்வான்புரஞ்சுட்டசுவண்டரோ
பட்டங்கட்டியசென்னிப்பரமரோ
சட்டவிக்கதவந்திறப்பிம்மினே.

அரியநான்மறையோதியநாவரோ
பெரியவான்புரஞ்சுட்டசுவண்டரோ
விரிகொள்கோவணவாடைவிருத்தரோ
பெரியவான்கதவம்பிரிவிக்கவே.

மலையினீடிருக்கும்மறைக்காடரோ
[illegible]முலைக்கரோ
விலையின்மாமணிவண்ணவுருவரோ
தொலைவிலாக்கதவந்துணைநீக்குமே.

பூக்குந்தாழைபுறணியருகெலாம்
ஆக்குந்தண்பொழில்சூழ்மறைக்காடரோ
ஆர்க்குங்காண்பரியீரடிகேளுமை
[illegible]மே.

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தரோ
அந்தமில்லியணிமறைக்காடரோ
என்[illegible]
[illegible]ந்தமாக்கதவம்பிணிநீக்குமே.

ஆறுசூடுமணிமறைக்காடரோ
கூறுமாதுமைக்கீந்தகுழகரோ
ஏறதேறியவெம்பெருமானிந்த
மாறிலாக்கதவம்வலிநீக்குமே. (அ)

சுண்ணவெண்பொடிப்பூசுஞ்சுவண்டரோ
பண்ணியேறுகந்தேறும்பரமரோ
அண்ணலாதியணிமறைக்காடரோ
திண்ணமாக்கதவந்திறப்பிம்மினே. (௯)

விண்ணுளார்விரும்பியெதிர்கொள்ளவே
மண்ணுளார்வணங்கும்மறைக்காடரோ
ண்ணிஞலுமைககாணக்
திண்ணமாகத்திறந்தருள்செய்ம்மினே. (௧௦)

அரக்கனைவிரலாலடர்த்திட்டநீ
இரக்கமொன்றிலீரெம்பெருமானிரே
சுரக்கும்புன்னைகள்சூழ்மறைக்காடரோ
சரக்கவிக்கதவந்திறப்பிம்மினே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## க௨௫. திருமீயச்சூரிளங்கோயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

தோற்றுங்கோயிலுந்தோன்றிய
வேற்றுக்கோயில்பலவுளமீயச்சூர்க்
கூற்றம்பாய்ந்தகுளிர்புன்சடையரற்
கேற்றங்கோயில்கண்டீரிளங்கோயிலே. (௧)

வந்தனையடைக்கும்மடித்தொண்டர்கள்
பந்தனைசெய்துபாவிக்கநின்றவன்
சிந்தனைதிருத்துந்தியமீயச்சூர்
எந்தமையுடையாரிளங்கோயிலே. (௨)

பஞ்சமந்திரமோதும்பரமனார்
அஞ்சவானையுரித்தனலாடுவார்
நெஞ்சம்வாழிநினைந்திருமீயச்சூர்
எந்தமையுடையாரிளங்கோயிலே, (௩)

நாறுமல்லிகைகூவிளஞ்செண்பகம்
வேறுவேறுவிரித்தசடையிடை
ஆறுகொண்டுகந்தான்றிருமீயச்சூர்
ஏறுகொண்டுகந்தாரிளங்கோயிலே. (௪)

வெவ்வவண்ணத்துநாகம்வெருவவே
கவ்வவண்ணக்கனல்விரித்தாடுவார்
செவ்வவண்ணந்திகழ்திருமீயச்சூர்
எவ்வவண்ணம்பிரானிளங்கோயிலே.

பாடத்தார்பழிப்பார்பழிப்பல்லதோர்
வேடத்தார்தொழும்வீழிமிழலையே. (௪)

எடுத்தவெல்கொடியேறுடையானமர்
உடுப்பர்கோவணமுண்பதுபிச்சையே
கெடுப்பதாவதுகீழ்நின்றவல்வினை
விடுத்துப்போவதுவீழிமிழலையே. (௫)

குழலையாழ்மொழியாரிசைவேட்கையால்
உழலையாக்கையையூனுமுணர்விலீர்
தழலைநீர்மடிக்கொள்ளன்மின்சாற்றினேம்
மிழலையானடிசாரவின்றோர்வரே. (௬)

தீரணற்றதுரளனசடைத்
நீறுடியநீற்றன்வண்டார்கொன்றைநத்
தாரன்மாலையன்றண்ணறுங்கண்ணியன்
வீரன்வீழிமிழலைவிகிர்தனே. (௭)

எரியினாரிறையாரிடுகாட்டிடை
நரியினார்பிரியாமகிழ்கின்றதோர்
பெரியினார்தம்பிறப்பொடுசாதலை
ர்தொழவீழிமிழலையே. (௮)

நீண்டசூழ்சடைமேலொர்நிலாமதி
காண்டுசேவடிமேலொர்கனைகழல்
வேண்டுவாரவர்வீதிபுகுந்திலர்
மீண்டும்போவதுவீழிமிழலைக்கே. (௯)

பாலையாழொடுசெவ்வழிபண்கொள
மாலைவானவர்வந்துவழிபடும்
ஆலையாரழலந்தணராகுதி
வேலையார்தொழும்வீழிமிழலையே. (௧௦)

மழலையேற்றுமணாளன்றிருமலை
சுழலவார்த்தெடுத்தான்முடிதோளிறக்
கழல்கொள்காலிற்றிருவிரலூன்றலும்
மிழலையானடிவாழ்கெனவிட்டதே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௧௨௭ திருவீழிமிழலை - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்.

பண்பொனேயிமையோர்தொழுடைங்கழல்
நம்பொனேநலந்தீங்கறிவொன்றிலேன்
செம்பொனேதிருவீழிமிழலையுள்
அன்பனேயடியேனைக்குறிக்கொளே. (௧)

கண்ணினாற்களிகூரக்கையாற்றொழு
தெண்ணுமாறறியாதிளைப்பேன்றனை
விண்ணுளார்தொழும்வீழிமிழலையுள்
அண்ணலேயடியேனைக்குறிக்கொளே. (௨)

ஞாலமேவிசும்பேநலந்தீமையே
காலமேகருத்தேகருத்தாற்றொழும்
சீலமேதிருவீழிமிழலையுள்
கோலமேயடியேனைக்குறிக்கொளே. (௩)

முத்தனேமுதல்வாமுகிழும்முளை
ஒத்தனேயொருவாவுருவாகிய
சித்தனேதிருவீழிமிழலையுள்
அத்தனேயடியேனைக்குறிக்கொளே. (௪)

கருவனேகருவாய்த்தெளிவார்க்கெலாம்
ஒருவனேயுயிர்ப்பாயுணர்வாய்நின்ற
திருவனேதிருவீழிமிழலையுள்
குருவனேயடியேனைக்குறிக்கொளே. (௫)

காத்தனேபொழிலேழையுங்காதலால்
னையமரர்க்கயன்றன்றலை .

கூத்தனேயடியேனைக்குறிக்கொளே. (௬)

நீதிவானவர்நித்தனியமஞ்செய்
தோதிவானவரும்முணராததோர்
வேதியாவிகிர்தாதிருவீழியுள்
ஆதியேயடியேனைக்குறிக்கொளே. (௭)

பழகநின்னடிசூடியபாலனைக்
கழகின்மேல்வைத்தகாலனைச்சாடிய
அழகனேயணிவீழிமிழலையுள்
குழகனேயடியேனைக்குறிக்குளே. (௮)

அண்டவானவர்கூடிக்கடைந்தநஞ்
சுண்டவானவனேயுணர்வொன்றிலேன்
விண்டவான்பொழில்வீழிமிழலையுள்
கொண்டனேயடியேனைக்குறிக்கொளே. (௯)

ஒருத்தனோங்கலைத்தாங்கலுற்றானுரம்
வருத்தினாய்மஞ்சனேமனமன்னிய
திருத்தனேதிருவீழிமிழலையுள்
அருத்தனேயடியேனைக்குறிக்கொளே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## கஉ௮. திருவிடைமருதூர் -

திருச்சிற்றம்பலம்

பாசமொன்றிலராய்ப்பலபத்தர்கள்
வாசநாண்மலர்கொண்டடிவைகலும்
ஈசனெம்பெருமானிடைமருதினில்
பூசநாம்புகுதும்புனலாடவே. (க)

மறையிலுண்மலர்
முறையினுன்முனிகள்வழிபாடுசெய்
[illegible]டைமருதினில்
உறையுமீசனையுள்குமெனுள்ளமே. (உ)

கொன்றைமாலையுங்கூவிளமத்தமும்
சென்றுசேரத்திகழ்சடைவைத்தவன்
என்றுமெங்கைபிரானிடைமருதினை
நன்றுகைதொழுவார்வினைநாசமே. (௩)

அம்மைப[illegible] [illegible]
எம்மையா[illegible] [illegible]டைமருதனகழல்
செம்மையேதொழுவார்வினைசிந்துமே. (௪)

வண்டணைந்தனவன்னியுங்கொன்றையும்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனார்
எண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே. (௫)

ஏற்[illegible]த[illegible]டைமருதீசனா
கூறுவார்வினைதீர்க்குங்குழகனார்
ஆறுசெஞ்சடைவைத்தவழகனார்க்
கூறியூறியுருகுமென்னுள்ளமே. (௬)

விண்ணுளாரும்விரும்பப்படுபவர்
மண்ணுளாருமதிக்கப்படுபவர்
எண்ணிலார்பொழில்சூழிடைமரு[illegible]
நண்ணினாரைநண்ணாவினைநாசமே. (௭)

வெந்தவெண்பொடிப்பூசும்விகிர்தனார்
[illegible]நத்தனார்
எந[illegible] [illegible]டைம[illegible]
[illegible]வார் [illegible]யும. (௮)

வேதமோதும்விரிசடையண்ணலார்
பூதம்பாடநின்றாடும்புனிதனார்
ஏதந்தீர்க்குமிடைமருதாவென்று
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௯

பட்ட கரும்பினும்
பணிமலர்க்குழற்பாவைநல்லாரினும்
தனிமுடிகவித்தாளுமரசினும்
இனியன்றன்னடைந்தார்க்கிடைமருதனே. (௧௦)

முற்றிலாமதிசூடுமுதல்வனார்
ஒற்றினார்மலையாலரக்கன்முடி
எற்றினார்கொடியாரிடைமருதினைப்
பற்றினாரைப்பற்றாவினைபாவமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மருதவாணர்; முதல்வி - நன்முலைநாயகி.

## ௧௨௧. திருவிடைமருது - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பறையினோசையும்பாடலினோசையும்
மறையினோசையும்வைகும்வயலெலாம்
இறைவனெங்கள்பிரானிடைமருதினில்
உறையுமீசனையுள்குமென்னுள்ளமே. (௧)

மனத்துண்மாயனைமாசறுசோதியைப்
புனிற்றுப்பிள்ளைவெண்மதிசூடியை
எனக்குத்தாயையெம்மானிடைமருதனை
நினைத்திட்டூறிநிறைந்ததென்னுள்ளமே. (௨)

வண்டணைந்தனவன்னியுமத்தமும்
கொண்டணிந்தசடைமுடிக்கூத்தனை
எண்டிசைக்குமிடைமருதாவென
விண்டுபோயறுமேலைவினைகளே. (௩)

துணையிலாமையிற்றூங்கிருட்பேய்களோ
டணையலாவதெமக்கரிதேயெனா
இணையிலாவிடைமாமருதில்லெழு
பணையிலாகமஞ்சொல்லுந்தன்பாங்கிக்கே. (௪)

யுண்டமால்காணான்மலரடி
விண்ணைவிண்டயன்காணான்வியன்முடி
மொண்ணைமாமருதாவென்றென்மொய்குழல்
பண்ணையாயமுந்தானும்பயிலுமே. (௫)

மங்கைகாணக்கொடார்மணமாலையைக்
கங்கைகாணக்கொடார்முடிக்கண்ணியை
நங்கைமீரிடைமருதரிந்நங்கைக்கே
எங்குவாங்கி யே. (௬, ௭, ௮, ௯, ௧௦, ௧௧)

திருச்சிற்றம்பலம்.

## கூ0. திருப்பேரெயில் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

மறையுமோதுவர்மான்மறிக்கையினர்
கறைகொள்கண்டமுடையகபாலியார்
துறையும்போகுவர் தூயவெண்ணீற்றினர்
பிறையுஞ்சூடுவர்பேரெயிலாளரே. (க)

கணக்கிலாரையுங்கற்றுவல்லாரையும்
வணக்கிலாநெறி கண்டுகொண்டாரையும்
தணக்குவார்தணிப்பாரெப்பொருளையும்
பிணக்குவாரவர்பேரெயிலாளரே. (உ)

சொரிவிப்பார்மழைசூழ்கதிர்த்திங்களை
விரிவிப்பார்வெயிற்பட்டவிளங்கொளி
எரிவிப்பார்தணிப்பாரெப்பொருளையும்
பிரிவிப்பாரவர்பேரெயிலாளரே. (ங)

செறுவிப்பார்சிலையால்மதிதீர்த்தங்கள்
உறுவிப்பார்பலபத்தர்களுள்வினை
அறுவிப்பாரதுவன்றியுநல்வினை
பெறுவிப்பாரவர்பேரெயிலாளரே. (ச)

மற்றையாரறியார்மழுவாளினார்
பற்றியாட்டியோரைந்தலைப்பாம்பரைச்
சுற்றியாரவர்தூநெறியாண்மிகு
பெற்றியாரவர்பேரெயிலாளரே.

திருக்குவார்குழற்செல்வனசேவடி
இருக்குவாய்மொழிபாற்றலையேத்துவார்
கருக்குவார்துயர்தோற்றங்களாற்றறப்
பெருக்குவாரவர்பேரெயிலாளரே. (சு)

முன்னையார்மயிலூர்திமுருகவேள்
தன்னையாரெனிற்றானோர்தலைமகன்
என்னையாளுமிறையவனெம்பிரான்
பின்னையாரவர்பேரெயிலாளரே. (எ)

உழைத்துத்துள்ளியுமுள்ளத்தாளையுரு
இழைத்துமெந்தைபிரானென்றிராப்பகல்
அழைக்குமன்பினராயவடியவர்
பிழைப்புநீக்குவர்பேரெயிலாளரே. (அ)

நீருலாநிமிர்புன்சடையாவென்று
ஏருலாவனங்கன்றிறல்வாட்டிய

வாருலாவனமென்முலையாளொடும்
பேருலாரவர்பேரெயிலாளரே. (௯)

பாணியார்படுதம்பெயர்ந்தாடுவர்
தூணியார்விசயற்கருள்செய்தவர்
மாணியாய்மண்ணளந்தவனான்முகன்
பேணியாரவர்பேரெயிலாளரே. (௧0)

மதத்தவாளரக்கன்மணிப்புட்பகம்
சிதைக்கவேதிருமாமலைக்கீழ்ப்புக்குப்
பதைத்தங்கார்த்தெடுத்தான்பத்துநீண்முடி
சிதக்கவூன்றியபேரெயிலாளரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
முதல்வன் - ஜகதீச்சுரர்; முதல்வி - பெண்ணமிர்தநாயகி.

## ௧௩௧. திருவெண்ணியூர் - திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

முத்தினைப்பவளத்தைமுளைத்தவெம்
தொத்தினைச்சுடரைச்சுடர்போலொளிப்
பித்தினைக்கொலுநஞ்சினைவானவர்
நித்தனைநெருநற்கண்டவெண்ணியே. (௧)

வெண்ணித்தொன்னகர்மேயவெண்டிங்களார்
கண்ணித்தொத்தசடையர்கபாலியர்
எண்ணித்தம்மைநினைந்திருந்தேனுக்கு
அண்ணித்திட்டமுதூறுமென்னாவுக்கே. (௨)

காற்றினைக்கனலைக்கதிர்மாமணி
நீற்றினைநினைப்பார்வினைநீக்கிடும்
கூற்றினையுதைத்திட்டகுணமுடை
வீற்றினைநெருநற்கண்டவெண்ணியே. (௩)

நல்லனைத்திமழ்நான்மறையோதியைச்
சொல்லனைச்சுடரைச்சுடர்போலொளிர்
கல்லனைக்கடிமாமதின்மூன்றெய்த
வில்லனைநெருநற்கண்டவெண்ணியே. (௪)

சுடரைப்போலொளிர்சுண்ணவெண்ணீற்றனை
அடருஞ்சென்னியில்வைத்தவமுதினைப்
படருஞ்செஞ்சடைப்பான்மதிசூடியை
இடரைநீக்கியையான்கண்டவெண்ணியே. (௫)

பூதநாதனைப்பூம்புகலூரனைத்
தாதெனத்தவழும்மதிசூடியை
நாதனைநல்லநான்மறையோதியை
வேதனைநெருநற்கண்டவெண்ணியே. (௬)

ளக்கிய

ஒப்பத்தீர்த்திடுமொண்கழலாற்கல்ல
தெப்பற்றும்மிலனெந்தைபிரானிரே. (எ)

திகழுஞ்சூழ்சுடர்வானொடுவைகலும்
நிகழுமொண்பொருளாயினநீதியென்
புகழுமாறுமலானுனபொன்னடி
இகழுமாறிலனெந்தைபிரானிரே. (அ)

கைபப.
எய்ப்பற்றியறிதற்கரியாயருள்
அப்பற்றல்லதுமற்றடிநாயினேன்
எப்பற்றும்மிலனெந்தைபிரானிரே. (கூ)

எந்தையெம்பிரானென்றவர்மேன்மனம்
எந்தையெம்பிரானென்றிறைஞ்சித்தொ(
தெந்தையெம்பிரானென்றடியேத்துவார்
எந்தையெம்பிரானென்றடிசேர்வரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

## 97 உகக. பொது - சித்தத்தொகைத்திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

சிந்திப்பார்மனத்தான்சிவன்செஞ்சுடர்
அந்திவாணிறத்தானணியார்மதி
முந்திச்சூடியமுக்கண்ணினனடி
வந்திப்பாரவர்வானுலகாள்வரே. (க)

அண்டமாரிருளூடுகடந்தும்பர்
உண்டுபோலுமோரொண்சுடரச்சுடர்
கண்டிங்காரறிவாரறிவாரெலாம்
கண்ட (உ)

ஆதியாயவனாருமிலாதவன்
போதுசேர்புனைநீண்முடிப்புண்ணியன்
பாதிபெண்ணுருவாகிப்பரஞ்சுடர்ச்
சோதியுட்சோதியாய்நின்றசோதியே. (௩)

இட்டதிட்டதோரேறுகந்தேறியூர்
பட்டிதுட்டங்களுய்ப்பலிதேர்வதோர்
கட்டவாழ்க்கையனாகிலும்வானவர்
அட்டமூர்த்தியருளென்றடைவரே. (௪)

ஈறிலகூறையனாகியெரிந்தவெண்
நீறுபூசிநிலாமதிசூடினும்
வீறிலாதனசெய்யினும்விண்ணவர்
ஊறலாலருளாயென்றுரைப்பரே.

உச [illegible] ருப்
பச்சைவெண்டலையேந்திப்பலவிலம்
பிச்சையேபுகுமாகிலும்வானவர்
அச்சந்தீர்த்தருளாயென்றடைவரே.

ஊரிலாயென்றொன்றாகவுரைப்பதோர
பேரிலாய்பிறைசூடியபிஞ்ஞகா
காருலாங்கண்டனேயுன்கழலடி
சேர்விலார்கட்குத்தீயவைதீயவே. (௭)

எந்தையேயெம்பிரானேயெனவுள்கிச்
சிந்திப்பாரவர்தீவினைதீருமால்
வெந்தநீறுமெய்பூசியவேதியன்
அந்தமாவளப்பாரடைந்தார்களே. (௮)

ண்புபூண்டெழில்
கனலாடினும்
தானவண்ணத்தனாகிலுந்தன்னையே
வானநாடர்வணங்குவர்வைகலே. (௯)

பண்ணுமாம்
வெண்பொடிப்பூசிய
மைகொள்கண்டத்தன்மான்மறிக்கையினான்
பைகொள்பாம்பரையார்த்தபரமனே. (௧௦)

ஒருவனாகிநின்றானிவ்வுலகெலாம்
இருவராகிநின்றார்கட்கறிகிலான்
அருவவராரையார்த்தவனாழல்
பரவுவாரவர்பாவம்பறையுமே. (௧௧)

ஓதவண்ணனுமொண்மலர்ச்செல்வனும்
நாதனேயருளாயென்றுநாடொறும்
காதல்செய்துகருதப்படுமவர்
பாதமேத்தப்பறையுநம்பாவமே. (௧௨)

பராக்கையான்
வெவ்வதன்மையனென்பதொழிமினோ
மெளவ்வநீண்மலர்மே [illegible]
பெளவ்வவண்ணனுமாய்ப்பணிவார்களே.

அக்குமாலையும்பூண்டனலேந்தியில்
புக்குப்பல்பலிதேரும்புராணனை
நக்குநீர்களரகம்புகேண்மினோ
தொக்கவானவராற்றொழுவானையே. (கச)

கங்கைதங்கியசெஞ்சடைமேலிளம்
திங்கள்சூடியதீநிறவண்ணனார்
இங்கணுறெழில்வானம்வணங்கவே
ன்மைமே. (கரு)

நகரவெல்கொடியானொடுநன்னெஞ்சே
நுகரநீயுனைக்கொண்டுயப்போக்குறில்
மகரவெல்கொடிமைந்தனைக்காய்ந்தவன்
புகரில்சேவடியேபுகலாகுமே. (கசு)

சரணமாம்படியார்பிறரியாவரோ
கரணந்தீர்த்துயிர்கையிலிகழ்ந்தபின்
மரணமெய்தியபின்னவைநீக்குவான்
அரணமூவெயிலெய்தவனல்லனே. (கஎ)

ஞமனென்பானரகர்க்குநமக்கெலாம்
சிவனென்பான்செழுமாமறிக்கையினான்
கவனஞ்செய்யுங்கனவிடையூர்தியான்
தமரொன்றுலுங்கெடுந்தடுமாற்றமே. (கஅ)

இடபமேறியுமில்பலியேற்பவர்
அடவிகாதலித்தாடுவரைந்தலைப்
படவம்பாம்பரையார்த்தபரமனைக்
கடவிராய்ச்சென்றுகைதொழுதுய்ம்மினே. (கசு)

இணர்ந்துகொன்றைபொற்றாதுசொரிந்திடும்
புணர்ந்தவாளரவம்மதியோடுடன்
அணைந்தவஞ்சடையானவன்பாதமே
உணர்ந்தவுள்ளத்தவருணர்வார்களே. (உ0)

தருமந்தான்றவந்தான்றவத்தால்வரும்
கருமந்தான்கருமாமறிக்கையினான்
அருமந்தன்னவதிர்கழல்சேர்மினோ
(உக)

நமச்சிவாயவென்பாருளரேலவர்
தமச்சநீங்கத்தவநெறிசார்தலால்
அமைத்துக்கொண்டதோர்வாழ்க்கையனாகிலும்
இமைத்துநிற்பதுசாலவரியதே. (உஉ)

பற்பல்காலம்பயிற்றிப்பரமனைச்
சொற்பல்காலநின்றேத்துமின்றொல்வினை
வெற்பிற்றோன்றியவெங்கதிர் கண்டவப்
புற்பனிக்கெடுமாறதுபோலுமே. (௨௩)

மணிசெய்கண்டத்துமான்மறிக்கையினான்
கணிசெய்வேடத்தராயவர் காப்பினால்
பணிகடாஞ்செயவல்லவர்யாவர்தம்
பிணிசெயாக்கையைநீக்குவர்பேயரே. (௨௪)

ரிந்திரன்றானவர்
நயக்கநின்றவனான்முகனாழியான்
மயக்கமெய்தவன்மாலெரியாயினான்
வியக்குந்தன்மையினானெம்விகிர்தனே. (௨௫

அரவமார்த்தனலாடியவண்ணலைப்
பரவுவாரவர்பாவம்பறைதற்குக்
குரவைகோத்தவனுங்குளிர்போதின்மேல்
கரவினான்முகனுங்கரியல்லரே. (௨௬)

அலங்கையினனந்தரத்தேதாங்கிநின்
றழலுமூவெயிலொள்ளழலூட்டினான்
தழலுந்தாமரையானொடுதாவினான்
கழலுஞ்சென்னியுங்காண்டற்கரியனே. (௨௭)

இளமைகைவிட்டகறலுமூப்பினார்
வளமைபோய்ப்பிணியோடுவருதலால்
உளமெலாமொளியாய்மதியாயினான்
கிளமையேகிளையாகநினைப்பனே. (௨௮)

தன்னிற்றன்னையறியுந்தலைமகன்
றன்னிற்றன்னையறியிற்றலைப்படுந்
தன்னிற்றன்னையறிவிலனாயிடில்
தன்னிற்றன்னையுஞ்சார்தற்கரியனே. (௨௯)

இலங்கைமன்னனையீரைந்துபத்துமன்
றலங்கலோடுடனேசெலவூன்றிய
நலங்கொள்சேவடிநாடொறுநாடொறும்
வலங்கொண்டேத்துவார்வானுலகாள்வரே. (௩௰)

திருச்சிற்றம்பலம்.

---

## 94 ௨௧௨. பொது - உள்ளத்திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

ார்மேனிநிமிர்சடை

ையைத்தெளிவாய்த்ததோர்
க்கண்டுகொண்ட

பொந்தையைப்புக்குநீக்கப்புகுந்திடும்
தந்தையைத்தழல்போல்வதோர்மேனியைச்
சிந்தையைத்தெளிவைத்தெளிவாய்த்ததோர்
எந்தையைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (௨)

வெள்ளத்தார்விஞ்சையார்கள்விரும்பவே
வெள்ளத்தைச்சடைவைத்தவிகிர்தனார்
கள்ளத்தைக்கழியம்மனமொன்றிநின்
றுள்ளத்திலொளியைக்கண்டதுள்ளமே. (௩)

அம்மானையமுதின்னமுதேயென்று
தம்மானைத்தத்துவத்தடியார்தொழும்
செம்மானநிறம்போல்வதோர்சிந்தையுள்
எம்மானைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (௪)

கூறேறும்முமைபாகமோர்பாலராய்
ஆறேறுஞ்சடைமேற்பிறைசூடுவர்
பாறேறுந்தலையேந்திப்பலவிலம்
ஏறேறுமெந்தையைக்கண்டதேனுள்ளமே. (௫)

முன்னெஞ்சம்மின்றிமூர்க்கராய்ச்சாகின்றார்
தன்னெஞ்சந்தமக்குத்தாமிலாதவர்
வன்னெஞ்சம்மதுநீங்குதல்வல்லீரே
என்னெஞ்சிலீசனைக்கண்டதுள்ளமே. (௬)

வென்றானைப்புலனைந்துமென்றீவினை
கொன்றானைக்குணத்தாலேவணங்கிட
நன்றானன்மனம்வைத்திடுஞானமாம்
கொண்ட[illegible]மே. (௭)

மருவினைமடநெஞ்சமனம்புகும்
குருவினைக்குணத்தாலேவணங்கிடும்
திருவினைச்சிந்தையுட்சிவனாய்நின்ற
உருவினைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (௮)

தேசனைத்திருமால்பிரமன்செயும்
பூசனைப்புணரிற்புணர்வாயதோர்
நேசனைநெஞ்சிலுண்ணிறைவாய்நின்ற
ஈசனைக்கண்டுகொண்டதெனுள்ளமே. (௯)

[illegible]ரமனா[illegible]

அறுத்தானையரக்கன்கயிலாயத்தைக்
கறுத்தானைக்காலில்விரலொன்றினால்
[illegible]கொண்டதெனுள்ளமே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## 99 ௨௧௩. பொது - பாவநாசத் திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

பாவமும்பழிப்பற்றறவேண்டுவீர்
ஆவிலைஞ்சுகந்தாடுமவன்கழல்
மேவராய்மிகவும்மகிழ்ந்தார்குமின்
காவலாளன்கலந்தருள்செய்யுமே. (௧)

கங்கையாடிலென்காவிரியாடிலென்
கொங்குதண்குமரித்துறையாடிலென்
ஓங்குமாகடலோதநீராடிலென்
எங்குமீசனெனாதவர்க்கில்லையே. (௨)

பட்டராகிலென்சாத்திரங்கேட்கிலென்
இட்டுமட்டியுமீதொழில்பூணிலென்
எட்டுமொன்றுமிரண்டுமறியிலென்
இட்டமீசனெனாதவர்க்கில்லையே. (௩)

வேதமோதிலென் * வேள்விகள்செய்கிலென்
நீதிநூல்பலநித்தல்பயிற்றிலென்
ஓதியங்கமோராறுமுணரிலென்
ஈசனையுள்குவார்க்கன்றியில்லையே. (௪)

காலைசென்றுகலந்துநீர்மூழ்கிலென்
வேலைதோறும்விதிவழிநிற்கிலென்
ஆலைவேள்வியடைந்ததுவேட்கிலென்
ஏலவீசனென்பார்க்கன்றியில்லையே. (௫)

கானநாடுகலந்துதிரியிலென்
ஈனமின்றியிருந்தவஞ்செய்யிலென்
ஊனையுண்டலொழிந்துவானோக்கிலென்
ஞானனென்பவர்க்கன்றிநன்கில்லையே. (௬)

கூடவேடத்தராகிக்குழுவிலென்
வாடியூனைவருத்தித்திரியிலென்
ஆடல்வேடத்தனம்பலக்கூத்தனைப்
பாடலாளர்க்கல்லாற்பயனில்லையே. (௭)

நன்றுநோக்கிலென் பட்டினியாகிலென்
குன்றமேறியிருந்தவஞ்செய்யிலென்
சென்றுநீரிற்குளித்துத்திரியிலென்
என்றுமீசனென்பார்க்கன்றியில்லையே.

(பா-ம்.) * சாத்திரங்கேட்கிலென்.

கோடிதீர்த்தங்கலந்துகுளித்தவை
யல
ஓடுநீரினையோட்டைக்குடத்தட்டி
மூடிவைத்திட்டமூர்க்கனொடொக்குமே. (௯)

மற்றுநற்றவஞ்செய்துவருந்திலென்
பொற்றையுற்றெடுத்தானுடல்புக்கிறக்
குற்றநற்குரையார்கழற்சேவடி
பற்றிலாதவர்க்குப்பயனில்லையே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

100

## உ௧௪. பொது - ஆதிபுராணத்திருக்குறுந்தொகை.

திருச்சிற்றம்பலம்

வேதநாயகன்வேதியர்நாயகன்
மாதிநாயகன்மாதவர்நாயகன்
ஆதிநாயகனாதிரைநாயகன்
பூதநாயகன்புண்ணியமூர்த்தியே. (௧)

செத்துச்செத்துப்பிறப்பதேதேவென்று
பத்திசெய்மனப்பாறைகட்கேறுமோ
அத்தனென்றரியோடுபிரமனும்
துத்தியஞ்செயநின்றநற்சோதியே. (௨)

நூறுகோடிபிரமர்கணொந்தினார்
ஆறுகோடிநாராயணரங்ஙனே
ஏறுகங்கைமணலெண்ணிலிந்திரர்
ஈறிலாதநல்லீசனொருவனே. (௩)

வாதுசெய்துமயங்குமனத்தராய்
ஏதுசொல்லுவீராகிலுமேழைகாள்
யாதோர்தேவரெனப்படுவார்க்கெல்லாம்
மாதேவனலாற்றேவர்மற்றில்லையே. (௪)

கூவலாமைகுரைகடலாமையைக்
கூவலோடொக்குமோகடலென்றல்போல்
பாவகாரிகள்பார்ப்பரிதென்பரால்
தேவர்தேவன்சிவன்பெருந்தன்மையே. (௫)

பேய்வனத்தமர்வானைப்பிரார்த்தித்தார்க்
கீவனையிமையோர்முடிதன்னடிச்
சாய்வனைச்சலவர்கடமக்குடற்
றீவனைச்சிவனைச்சிந்தியார்களே. (௬)

எரிபெருக்குவரவ்வெரியீசனை
தருவருக்கமதாவ துணர்கிலார்
அரியயற்கரியானையயர்த் துப்போய்
நரிவிருத்தமதாகுவர்நாடரே. (எ)

அருக்கன்பா தம்வணங்குவ ரந்தியில்
அருக்கனுவான ரனுருவல்லனோ
இருக்குநான்மறையீசனையேதொழும்
கருத்தினை நினைப்பார்கன்மனவரே. (அ)

தாயினுநல்லசங்கர னுக்கன்பர்
ஆயவுள்ளத் தமுதருந்தப்பெறார்
'ய
மாயன்மாயத்துப்பட்டமனத்தரே. (கூ)

அரக்கன்வல்லரட்டாங்கொழித்தா ரருள்
பெருக்கச்செய்தபிரான்பெருந்தன்மையை
அருத்திசெய்தறியப்பெறுகின்றிலர்
கருத்திலாக்கயவக்கணத்தோர்களே. (கூ௦)

றம்பலம்.

ஐந்தாந்திருமுறை முற்றியது.

திருநாவுக்கரசுகள் திருவடி வாழ்க.

திருச்சிற்றம்பலம்

திருக்கச்சிஞானப்பிரகாசமுனிந்திரர்

மடாலய ஏட்டின்படியே

காஞ்சி நாகலிங்க முனிவர் பார்வையிட்டது.

கணபதி துணை

திருநாவுக்கரசுசுவாமிகள்

# மூன்றாந் திருமுறையின்

## அட்டவணை.

# அ வணை.



அட்டவணை முற்றியது.

---

ட

திருச்சிற்றம்பலம்

# திருநாவுக்கரசுசுவாமிகள்

அருளிச்செய்த

# தேவாரப்பதிகங்கள்

ஆறாந்திருமுறை

(1)

## ௨௧௫. கோயில் - பெ[illegible]டகம்.

திருச்சிற்றம்பலம்

அரியானையந்தணர்தஞ்சிந்தையானையருமறையினகத்தானையணுவையார்க்கும், தெரியாததத்துவனைத்தேனைப்பாலைத்திகழொளியைத்தேவர்கடங்கோனைமற்றைக், கரியானைநான்முகனைக்கனலைக்காற்றைக்கனைகடலைக்குலவரையைக்கலந்துநின்ற, பெரியானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

கற்றானைக்கங்கைவார்சடையான்றன்னைக்காவிரிசூழ்வலஞ்சுழியுங்கருதினானை அற்றார்க்குமலர்ந்தார்க்குமருள்செய்வானையாரூரும்புகுவானையறிந்தோமன்றே மற்றாருந்தன்னொப்பாரில்லாதானைவானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தப் பெற்றானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. ௨)

கருமானினுரியதளேயுடையாவீக்கிக்கனைகழல்கள்கலந்தொலிப்பவனல்கையேந்தி, வருமானத்திரடோள்கண்மட்டித்தாடவளர்மதியுஞ்சடைக்கணிந்துமானேர்நோக்கி, அருமானவாண்முகத்தாளமர்ந்துகாணவமரர்கணமுடிவணங்கவாடுகின்ற, பெருமானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

அருந்தவர்கடொழுதேத்துமப்பன்றன்னையமரர்கடம்பெருமானையரனைமூவா, மருந்தமரர்க்கருள்புரிந்தமைந்தன்றன்னைமறிகடலுங்குலவரையும்மண்ணும்விண்ணும், திருந்தொளியதாரகையுந்திசைகளெட்டுந்திரிசுடர்களோரிரண்டும்பிறவுமாய,பெருந்தகையைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே.

அருந்துணையையடியார்தம்மல்லறீர்க்குமருமருந்தையகன்ஞாலத்தகத்துட்டோன்றி, வருந்துணையுஞ்சுற்றமும்பற்றும்விட்டுவான்புலன்களகத்தடக்கிமடவாரோடும், பொருந்துணைமேல்வரும்பயனைப்போகமாற்றிப்பொதுநீக்கித்தனைநினையவல்லோர்க்கென்றும், பெருந்துணையைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (ரு)

கரும்பமருமொழிமடவாள்பங்கன்றன்னைக்கனவயிரக்குன்றதனைக்காட்சியானை, அரும்பமரும்பூங்கொன்றைத்தாரான்றன்னையருமறையோடாறங்கமாயினானைச், சுரும்பமருங்கடிபொழில்கள்சூழ்தென்னாரூர்ச்சுடர்க்கொழுந்தைத்துளக்கிலாவிளக்கைமிக்க,பெரும்பயனைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (சு)

வரும்பயனையெழுநரம்பினோசையானைவரைசிலையாவானவர்கண்முயன்றவாளி, அரும்பயஞ்செயவுணர்புரமெரியக்கோத்தவம்மானையலைகடனஞ்சயின்றான்றன்னைச், சுரும்பமருங்குழன்மடவார்கடைக்கணோக்கிற்றுளங்காதசிந்தையராய்த்துறந்தோருள்ளப், பெரும்பயனைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (எ)

காரானையீருரிவைப்போர்வையானைக்காமருபூங்கச்சியேகம்பன்றன்னை
ஆரேனுமடியவர்கட்கணியான்றன்னையமரர்களுக்கறிவரியவளவிலானைப் [ல்
பாரோரும்விண்ணோரும்பணியநட்டம்பயில்கின்றபரஞ்சுடரைப்பரனையெண்ணி
பேரானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (அ)

முற்றாதபான்மதியஞ்சூடினானைமூவுலகுந்தானாயமுதல்வன்றன்னைச் [பாலைக்
செற்றார்கள்புரமூன்றுஞ்செற்றான்றன்னைத்திகழொளியைமரகதத்தைத்தேனைப்
குற்றாலத்தமர்ந்துறையுங்குழகன்றன்னைக்கூத்தாடவல்லானைக்கோனைஞானம்
பெற்றானைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (கூ)

காரொளியதிருமேனிச்செங்கண்மாலுங்கடிக்கமலத்திருந்தவனுங்காணாவண்ணஞ், சீரொளியதழற்பிழம்பாய்நின்றதொல்லைத்திகழொளியைச்சிந்தைதனைமயக்கந்தீர்க்கும், ஏரொளியையிருநிலனும்விசும்பும்விண்ணுமேழுலகுங்கடந்தண்டத்தப்பால்நின்ற, பேரொளியைப்பெரும்பற்றப்புலியூரானைப்பேசாதநாளெல்லாம்பிறவாநாளே. (க0)

திருச்சிற்றம்பலம்.

## உகசு. கோயில் - புக்க திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மங்குன்மதிதவழுமாடவீதிமயிலாப்பிலுள்ளார்மருகலுள்ளார்
கொங்கிற்கொடுமுடியார்குற்றாலத்தார்குடமூக்கிலுள்ளார்போய்க்கொள்ளம்பூது
தங்குமிடமறியார்சாலநாளார்தருமபுரத்துள்ளார்தக்களூரார் [ர்
பொங்குவெண்ணீறணிந்துபூதஞ்சூழப்புலியூர்ச்சிற்றம்பலமேபுக்கார்தாமே. (க)

முண்டத்திற்பொலிந்திலங்குமேனியானேமுதலாகிநடுவாகிமுடிவானானே
கண்டத்தில்வெண்மருப்பின்காறையானேகதநாகங்கொண்டாடுங்காட்சியானே
பிண்டத்தினியற்கைக்கோர்பெற்றியானேபெருநிலநீர்தீவளியாகாசமாகி
அண்டத்துக்கப்பாலாயிப்பாலானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௩)

செய்யனேகரியனேகண்டம்பைங்கண்வெள்ளெயிற்றாடரவனேவினைகள்போக
வெய்யனேதண்கொன்றைமாலைக்கறசென்னிச்சடையனேவிளங்குமழுச்சூலமேந்து
கையனேகாலங்கள்மூன்றானானேகருப்புவிற்றனிக்கொடும்பூண்காமற்காய்ந்த ங்
ஐயனேபருத்துயர்ந்தவானேற்றானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௪)

பாடுமேயொழியாமேநால்வேதமும்படர்சடைமேலொளிதிகழப்பனிவெண்டிங்கள், சூடுமேயரைதிகழத்தோலும்பாம்புஞ்சுற்றுமேதொண்டைவாயுமையோர்பாகம், கூடுமேகுடமுழவம்வீணைதாளங்குறுநடையசிறுபூதமுழக்கமாக்கத், தாடுமேயந்தடக்கையனலேந்துமேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௫)

ஒழித்திடுமேயுள்குவாருள்ளத்துள்ள உறுபிணியுஞ்செறுபகையுமொற்றைக்கண்ணால், விழித்திடுமேகாமனையும்பொடியாய்வீழவெள்ளப்புனற்கங்கைசெஞ்சடைமேல், இழித்திடுமேயேழுலகுந்தானாகும்மேயியங்குந்திரிபுரங்களோரம்பினால், அழித்திடுமேயாதிமாதவத்துளானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௬)

குழலோடுகொக்கரைகைத்தாளமொத்தகுறட்பூதமுன்பாடத்தானாடும்மே
கழலாடுதிருவிரலாற்கானஞ்செய்துகனலின்கட்டிருவுருவந்தான்காட்டுமே
எழிலாருந்தோள்வீசிநடமாடும்மேயீமப்புறங்காட்டிலேமந்தோறும்
அழலாடுமேயட்டமூர்த்தியாமேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௭)

மாலாகிமதமிக்ககளிறுதன்னைவதைசெய்துமற்றதனினுரிவைகொண்டு
மேலாலுங்கீழாலுந்தோன்றாவண்ணம்வெம்புலால்கைகலக்கமெய்போர்த்தானே
கோலாலம்படவரைநட்டரவுசுற்றிக்குரைகடலைத்திரையலறக்கடைந்துகொண்ட
ஆலாலமுண்டிருண்டகண்டத்தானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௮)

செம்பொனாற்செய்தழகுபெய்தாற்போலுஞ்செஞ்சடையெம்பெருமானேதெய்வநாறும், வம்பினாண்மலர்க்கூந்தலுமையாள்காதன்மணவாளனேவலங்கைமழுவாளனே, நம்பனேநான்மறைகடொழநின்றானேநடுங்காதார்புரமூன்றுநடுங்கச்செற்ற, அம்பனேயண்டகோசரத்துளானேயவனாகிலதிகைவீரட்டனாமே. ( )

எழுந்ததிரைநதித்துவலைநனைந்ததிங்களிளநிலாத்திகழ்கின்றவளர்சடையனே, கொழும்பவளச்செங்கனிவாய்க்காமக்கோட்டிகொங்கையிணையமர்பொருதுகோலங்கொண்ட, தழும்புளவேவரைமார்பில்வெண்ணூலுண்டேசாந்தமொடுசந்தனத்தினளறுதங்கி, அழுந்தியசெந்திருவுருவில்வெண்ணீற்றானேயவனாகிலதிகைவீரட்டனாமே. (௧௦)

நெடியானுநான்முகனுநேடிக்காணாநீண்டானேநேரொருவரில்லாதானே
கொடியேறுகோலமாமணிகண்டனேகொல்வேங்கையதளனேகோவணவனே
பொடியேறுமேனியனேயையம்வேண்டிப்புவலோகந்திரியுமேபுராணனே
அடியாரையமருலகமாள்விக்குமேயவனுறைகெடிலவீரட்டனுமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உகக. திருவீரட்டானம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

எல்லாருஞ்சிவனென்னநின்றாய்போற்றியெரிசுடராய்நின்றவிறைவாபோற்றி
கொல்லார்மழுவாட்படையாய்போற்றிகொல்லுங்கூற்றொன்றையுதைத்தாய்போ
கல்லாதார்காட்சிக்கரியாய்போற்றிகற்றாரிடும்பைகளைவாய்போற்றி [ற்றி
வில்லாலவியனரணமெய்தாய்போற்றிவீரட்டங்காதல்விமலாபோற்றி. (க)

பாட்டுக்குமாட்டுக்கும்பண்பாபோற்றிபல்லூழியாயபடைத்தாய்போற்றி
ஓட்டகத்தேயூணாவுகந்தாய்போற்றியுள்குவாருள்ளத்துறைவாய்போற்றி
காட்டகத்தேயாடன்மகிழ்ந்தாய்போற்றிகார்மேகமன்னமிடற்றாய்போற்றி
ஆட்டுவதோர்நாகமசைத்தாய்போற்றியலைகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. ()

முல்லையங்கண்ணிமுடியாய்போற்றிமுழுநீறுபூசியமூர்த்திபோற்றி
எல்லைநிறைந்தகுணத்தாய்போற்றியேழ்நரம்பினோசைபடைத்தாய்போற்றி
சில்லைச்சிரைத்தலையிலூணாய்போற்றிசென்றடைந்தார்தீவினைகடீர்ப்பாய்போற்றி
தில்லைச்சிற்றம்பலமேயாய்போற்றிதிருவீரட்டானத்தெஞ்செல்வாபோற்றி. (ங)

சாம்பலகலத்தணிந்தாய்போற்றிதவநெறிகள்சாதித்துநின்றாய்போற்றி
கூம்பித்தொழுவார்தங்குற்றேவலைக்குறிக்கொண்டிருக்குங்குழகாபோற்றி
பாம்புமதியும்புனலுந்தம்மிற்பகைதீர்த்துடன்வைத்தபண்பாபோற்றி
ஆம்பல்மலர்கொண்டணிந்தாய்போற்றியலைகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. ()

நீறேறுநீலமிடற்றாய்போற்றிநிழறிகழும்வெண்மழுவாள்வைத்தாய்போற்றி
கூறேறுமையொருபாற்கொண்டாய்போற்றிகோளரவமாட்டுங்குழகாபோற்றி
ஆறேறுசென்னியுடையாய்போற்றியடியவர்கட்காரமுதமானாய்போற்றி
ஏறேறவென்றுமுகப்பாய்போற்றியிருங்கெடிலவீரட்டத்தெந்தாய்போற்றி. (நி)

பாடுவார்பாடலுகப்பாய்போற்றிபழையாற்றுப்பட்டீச்சுரத்தாய்போற்றி
வீடுவார்வீடருளவல்லாய்போற்றிவேழத்துரிவெருவப்போர்த்தாய்போற்றி
நாடுவார்நாடற்கரியாய்போற்றிநாகமரைக்கசைத்தநம்பாபோற்றி
ஆடுமானஞ்சுமுகப்பாய்போற்றியலைகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. சா)

மண்டுளங்கவாடன்மகிழ்ந்தாய்போற்றிமால்கடலுமால்விசும்புமானாய்போற்றி
விண்டுளங்கமும்மதிலுமெய்தாய்போற்றிவேழத்துரிமூடும்விகிர்தாபோற்றி
ப… ளங்கப்பாடல்பயின்றாய்போற்றிபார்முழுதுமாயபரமாபோற்றி [றி.
…ங்கக்காமனைமுன்காய்ந்தாய்போற்றிகார்க்கெடிலங்கொண்டகபாலிபோற்

வெஞ்சினவெள்ளேறூர்தியுடையாய்போற்றிவிரிசடைமேல்வெள்ளம்படை
,, ய்போற்றி, துஞ்சாப்பலிதேருந்தோன்றால்போற்றிதொழுதகைதுன்பந்து
டைப்பாய்போற்றி, நஞ்சொடுங்குங்கண்டத்துநாதாபோற்றிநான்மறையோடா
றங்கமானாய்போற்றி, அஞ்சொலாள்பாகமமர்ந்தாய்போற்றியலைகெடிலவீரட்டத் (௮)

சிந்தையாய்நின்றசிவனேபோற்றிசீபர்ப்பதஞ்சிந்தைசெய்தாய்போற்றி
புந்தியாய்ப்புண்டரிகத்துள்ளாய்போற்றிபுண்ணியனேபோற்றிபுனிதாபோற்றி
சந்தியாய்நின்றசதுராபோற்றிதத்துவனேபோற்றியென்றாதாய்போற்றி
அந்தியாய்நின்றவரனேபோற்றியலைகெடிலவீரட்டத்தாள்வாய்போற்றி. (௯)

முக்கணாபோற்றிமுதல்வாபோற்றிமுருகவேடன்னைப்பயந்தாய்போற்றி
தக்கணாபோற்றிதருமாபோற்றிதத்துவனேபோற்றியென்றாதாய்போற்றி
தொக்கணாவென்றிருவர்தோள்கைகூப்பத்துளங்காதெரிசுடராய்நின்றாய்போற்றி
எக்கண்ணுங்கண்ணிலேனெந்தாய்போற்றியெறிகெடிலவீரட்டத்தீசாபோற்றி. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௨௦. திருவதிகைவீரட்டானம் - திருவடித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அரவணையான்சிந்தித்தரற்றும்மடியருமறையான்சென்னிக்கணியாமடி
சரவணத்தான்கைதொழுதுசாரும்மடிசார்ந்தார்கட்கெல்லாஞ்சரணாமடி
பரவுவார்பாவம்பறிக்கும்மடிபதினெண்கணங்களும்பாடும்மடி
திரைவிரவுநீர்த்தென்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௧)

கொடுவினையாரென்றுங்குறுகாவடிகுறைந்தடைந்தாராழாமைக்காக்குமடி
படுமுழவம்பாணிபயிற்றும்மடிபதைத்தெழுந்தவெங்கூற்றைப்பாய்ந்தவடி
கடுமுரணேறூர்ந்தான்கழற்சேவடிகடல்வையங்காப்பான்கருதும்மடி
நெடுமதியங்கண்ணியணிந்தானடிநிறைகெடிலவீரட்டநீங்காவடி. (௨)

வைதெழுவார்காமம்பொய்போகாவடிவஞ்சவலைப்பாடொன்றில்லாவடி
கைதொழுநாமேத்திக்காணும்மடிகணக்குவழக்கைக்கடந்தவடி
நெய்தொழுதுநாமேத்தியாட்டும்மடிநீள்விசும்பையூடறுத்துநின்றவடி
தெய்வப்புனற்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௩)

அரும்பித்தசெஞ்ஞாயிறேய்க்கும்மடியழகெழுதலாகாவருட்சேவடி
சுரும்பித்தவண்டினங்கள்சூழ்ந்தவடிசோமனையுங்காலனையுங்காய்ந்தவடி
பெரும்பித்தர்கூடிப்பிதற்றும்மடிபிழைத்தார்பிழைப்பறியவல்லவடி
திருந்துநீர்த்தென்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௪)

ஒருகாலத்தொன்றாகிநின்றவடியூழிதோறூழியுயர்ந்தவடி
பொருகழலும்பலசிலம்புமார்க்கும்மடிபுகழ்வார்புகழ்தகையவல்லவடி
இருநிலத்தோரின்புற்றங்கேத்தும்மடியின்புற்றாரிட்டபூவேறும்மடி
திருவதிகைத்தென்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௫)

திருமகட்குச்செந்தாமரையாமடிசிறந்தவர்க்குத்தேனாய்விளைக்கும்மடி
பொருளவர்க்குப்பொன்னுரையாய்நின்றவடிபுகழ்வார்புகழ்த்தகையவல்லவடி
உருவிரண்டுமொன்றோடொன்றொவ்வாவடியுருவென்றுணரப்படாதவடி
திருவதிகைத்தென்கெடிலநாடன்னடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௬)

உரைமாலையெல்லாமுடையவடியுரையாலுணரப்படாதவடி
வரைமாதைவாடாமைவைக்கும்மடிவானவர்கடாம்வணங்கிவாழ்த்தும்மடி
அரைமாத்திரையிலடங்கும்மடியகலமளக்கிற்பாரில்லாவடி
கரைமாங்கலிக்கெடிலநாடன்னடிகமழ்வீரட்டானக்கபாலியடி. (௭)

நறுமலராய்நாறும்மலர்ச்சேவடிநடுவாயுலகநாடாயவடி
செறிகதிருந்திங்களுமாய்நின்றவடிதீத்திரளாயுள்ளே திகழ்ந்தவடி
மறுமதியைமாசுகழுவும்மடிமந்திரமுந்தந்திரமுமாயவடி
செறிகெடிலநாடர்பெருமானடிதிருவீரட்டானத்தெஞ்செல்வனடி. (௮)

அணியனவுஞ்சேயனவுமல்லாவடியடியார்கட்காரமுதமாயவடி
பணிபவர்க்குப்பாங்காகவல்லவடிபற்றற்றார்பற்றும்பவளவடி
மணியடிபொன்னடிமாண்பாமடிமருந்தாய்ப்பிணிதீர்க்கவல்லவடி
தணிபாடுதண்கெடிலநாடன்னடிதகைசார்வீரட்டத்தலைவன்னடி. (௯)

அந்தாமரைப்போதலர்ந்தவடியரக்கனையுமாற்றலழித்தவடி
முந்தாகிமுன்னேமுளைத்தவடிமுழங்கழலாய்நீண்டவெம்மூர்த்தியடி
பந்தாடுமெல்விரலாள்பாகன்னடிபவளத்தடவரையேபோல்வானடி
வெந்தார்சுடலைநீறாடும்மடிவீரட்டங்காதல்விமலன்னடி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - திருவீரட்டேசுவரர்; முதல்வி - திருவதிகைநாயகியம்மை.

## 7) ௨௨௧. திருவீரட்டானம் - காப்புத்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

செல்வப்புனற்கெடிலவீரட்டமுஞ்சிற்றேமமும்பெருந்தண்குற்றாலமும்
தில்லைச்சிற்றம்பலமுந்தென்கூடலுந்தென்னானைக்காவுஞ்சிராப்பள்ளியும்
நல்லூருந்தேவன்குடிமருகலுநல்லவர்கடொழுதேத்துநாரையூரும்
கல்லலகுநெடும்புருவக்காபாலமேந்திக்கட்டங்கத்தோடுறைவார்காப்புக்களே. (௧)

தீர்த்தப்புனற்கெடிலவீரட்டமுந்திருக்கோவல்வீரட்டம்வெண்ணெய்நல்லூர்
ஆர்த்தருவிவீழ்சுனைநீரண்ணாமலையறையணிநல்லூருமரநெறியும்
ஏத்துமின்கணீரேத்தநின்றவீசனிடைமருதினம்பரேகம்பமும்
காத்தயங்குசோலைக்கயிலாயமுங்கண்ணுதலான்றன்னுடையகாப்புக்களே. (௨)

சிறையார்புனற்கெடிலவீரட்டமுந்திருப்பாதிரிப்புலியூர்திருவாமாத்தூர்
துறையார்வனமுனிகளேத்தநின்றசோற்றுத்துறைத்துருத்திநெய்த்தானமும்
அறையார்புனலொழுகுகாவிரிசூழையாற்றமுதன்பழனநல்ல
கறையார்பொழில்புடைசூழ்கானப்பேருங்கழுக்குன்றுந்தம்முடையகாப்புக்களே.

திரையார்புனற்கெடிலவீரட்டமுந்திருவாரூர்தேவூர்திருநெல்லிக்கா
உரையார்தொழநின்றவொற்றியூருமோத்தூருமாற்பேறுமாந்துறையும்
வரையாரருவிசூழ்மாநதியுமாகாளங்கேதாரமாமேருவும்
கரையார்புனலொழுகுகாவிரிசூழ்கடம்பந்துறையுறைவார்காப்புக்களே. (௪)

செழுநீர்ப்புனற்கெடிலவீரட்டமுந்திரிபுராந்தகந்தென்னூர்தேவீச்சரம்
கொழுநீர்புடைசுழிக்குங்கோட்டுக்காவுங்குடமூக்குங்கோகரணங்கோலக்காவும்
பழிநீர்மையில்லாப்பனங்காட்டூரும்பனையூர்பயற்றூர்பராய்த்துறையும்
கழுநீர்மதுவிரியுங்காளிங்கமுங்கணபதீச்சரத்தார்தங்காப்புக்களே. (௫)

தெய்வப்புனற்கெடிலவீரட்டமுஞ்செழுந்தண்பிடவூருஞ்சென்றுநின்று
பவ்வந்திரியும்பருப்பதமும்பறியலூர்வீரட்டம்பாவநாசம்
மவ்வந்திரையுமணிமுத்தமும்மறைக்காடும்வாய்மூர்வலஞ்சுழியும்
கவ்வைவரிவண்டுபண்ணேபாடுங்கழிப்பாலைதம்முடையகாப்புக்களே. (௬)

தெண்ணீர்ப்புனற்கெடிலவீரட்டமுஞ்சீர்காழிவல்லந்திருவேட்டியும்
உண்ணீராரேடகமுமூறலம்பருறையூர்நறையூரரணநல்லூர்
விண்ணார்விடையான்விளமர்வெண்ணிமீயச்சூர்வீழிமிழலைமிக்க
கண்ணார்நுதலார்கரபுரமுங்கபாலியாரவர்தங்காப்புக்களே. (௭)

தெள்ளும்புனற்கெடிலவீரட்டமுந்திண்டீச்சரமுந்திருப்புகலூர்
எள்ளும்படையானிடைத்தானமுமேயீச்சுரமுநல்லேமங்கூடல்
கொள்ளுமிலயத்தார்கோடிகாவுங்குரங்கணின்முட்டங்குறும்பலாவும்
கள்ளருந்தத்தெள்ளியாருள்கியேத்துங்காரோணந்தம்முடையகாப்புக்களே. (௮)

சீரார்புனற்கெடிலவீரட்டமுந்திருக்காட்டுப்பள்ளிதிருவெண்காடும்
பாரார்பரவுஞ்சீர்ப்பைஞ்ஞீலியும்பந்தணநல்லூரும்பாசூர்நல்ல
நீரார்நிறைவயல்சூழ்நின்றியூருநெடுங்களமுநெல்வெண்ணெய்நெல்வாயிலும்
காரார்கமழ்கொன்றைத்தாரார்க்கென்றுங்கடவூரில்வீரட்டங்காப்புக்களே. (௯)

சிந்தும்புனற்கெடிலவீரட்டமுந்திருவாஞ்சியமுந்திருநள்ளாறும்
அந்தண்பொழில்புடைசூழயோகந்தியுமாக்கூருமாவூருமான்பட்டியும்
எந்தம்பெருமாற்கிடமாவதுவிடைச்சுரமுமெந்தைதலைச்சங்காடுங்
கந்தங்கமழுங்கரவீரமுங்கடம்பூர்கரக்கோயில்காப்புக்களே. (௧௦)

தேனார்புனற்கெடிலவீரட்டமுந்திருச்செம்பொன்பள்ளிதிருப்பூவணமும்
வானோர்வணங்குமணஞ்சேரியுமதிலுஞ்சைமாகாளம்வாரணாசி
ஏனோர்களேத்துவெகுளீச்சரமிலங்கார்பருப்பதத்தோடேனோர்சோலைக்
கானார்மயிலார்கருமாரியுங்கறைமிடற்றார்தம்முடையகாப்புக்களே. (௧௧)

திருநீர்ப்புனற்கெடிலவீரட்டமுந்திருவளப்பூர்தெற்கேறுசித்தவடம்
வருநீர்வளம்பெருகுமாணிருபமும்மயிலாப்பின்மன்னினார்மன்னியேத்தும்
பெருநீர்வளர்சடையான்பேணிநின்றபிரமபுரஞ்சுழியல்பெண்ணாகடம்
கருநீலவண்டரற்றுங்காளத்தியுங்கயிலாயந்தம்முடையகாப்புக்களே. (௧௨)

திருச்சிற்றம்பலம்.

உஉஉ. ரண்டகம்.

திருச்சிற்றம்பலம்

லலாதநல்கூர்ந்தான்காண்வியன்கச்சிக்கம்பன்காண்பிச்சையல்லால், மற்றூணொன்றில்லாதமாசதுரன்காண்மயானத்துமைந்தன்காண்மாசொன்றில்லாப், பொற்றூண்காண்மாமணிநற்குன்றொப்பான்காண்பொய்யாதபொழிலேழுந்தாங்கிநின்ற, கற்றூண்காண்காளத்திகாணப்பட்டகணநாதன்காணவனென்கண்ணுளானே. (க)

இடிப்பான்காணென்வினையையேகம்பன்காணெலும்பாபரணன்காணெல்லாமுன்னே, முடிப்பான்காண்மூவுலகுமாயினான்காண்முறைமையாலைம்பொறியும்வழுவாவண்ணம், படித்தான்றலையறுத்தபாசுபதன்காண்பராய்த்துறையான்பழனம்பைஞ்ஞீலியான்காண், கடித்தார்கமழ்கொன்றைக்கண்ணியான்காண்காளத்தியானவனென்கண்ணுளானே. (உ)

நாரணன்காணான்முகன்காணால்வேதன்காண்ஞானப்பெருங்கடற்கோர்நாவாயன்ன, பூரணன்காண்புண்ணியன்காண்புராணன்றான்காண்புரிசடைமேற்புனலேற்றபுனிதன்றான்காண், சாரணன்காண்சந்திரன்காண்கதிரோன்றான்காண்டன்மைக்கட்டானேநாண்டக்கோர்க்கெல்லாம், காரணன்காண்காளத்திகாணப்பட்டகணநாதன்காணவனென்கண்ணுளானே. (ங)

செற்றான்காணென்வினையைத்தீயாடிகாண்டிருவொற்றியூரான்காண்சிந்தைசெய்வார்க், குற்றான்காணேகம்பமேவினான்காணுமையாணற்கொழுநன்காணிமையோரேத்தும், சொற்றான்காண்சோற்றுத்துறையுளான்காண்சுறாவேந்தனேவலத்தைநீறாநோக்கக், கற்றான்காண்காளத்திகாணப்பட்டகணநாதன்காணவனென்கண்ணுளானே. (ச)

மனத்தகத்தான்றலைமேலான்வாக்கினுள்ளான்வாயாரத்தன்னடியேபாடுந்தொண்டர், இனத்தகத்தானிமையவர்தஞ்சிரத்தின்மேலானேழண்டத்தப்பாலானிப்பாற்செம்பொன், புனத்தகத்தார்நறுங்கொன்றைப்போதினுள்ளான்பொருப்பிடையானெருப்பிடையான்காற்றினுள்ளான், கனத்தகத்தான்கயிலாயத்துச்சியுள்ளான்காளத்தியானவனென்கண்ணுளானே. (ரு)

ல்லாமுன்றோன்றுமேதோன்றினான்காணேகம்பமேயான்காணிமையோரேத்தப், பொல்லாப்புலனைந்தும்போக்கினான்காண்புரிசடைமேற்பாய்கங்கைபூரித்தான்காண், நல்லவிடைமேல்கொண்டுநாகம்பூண்டுநளிர்சிரமொன்றேந்தியோர்நாணயற்ற, கல்லாடைமேல்கொண்டகாபாலிகாண்காளத்தியானவனென்கண்ணுளானே. (சு)

கரியுருவுகண்டத்தெங்கண்ணுளான்காண்கண்டன்காண்
யானகாண எரிபவளவண்ணன்காணேகம்பன்காணெண்டிசை
ன்காண், திரிபுரங்கள்தீயிட்டதீயாடிகாண்டீவினைகடீர்த்திடுமென்சிந்தையானகாண
கரிபுரிவைபோர்த்துகந்தகாபாலிகாண்காளத்தியானவனென்கண்ணுளானே. (

இல்லாடிச்சில்பலிசென்றேற்கின்றான்காணிமையவர்கடொழுதிறைஞ்சவிருக்கின்றான்காண், வில்லாடிவேடனாயோடினான்காண்வெண்ணூலுஞ்சேர்ந்தவகலத்தான்காண், மல்லாடுதிரடோண்மேன்மழுவாளன்காண்மலைமகடன்மணாளன்காண்மகிழ்ந்துமுன்னாட், கல்லாலின்கீழிருந்தகாபாலிகாண்காளத்தியானவனென்கண்ணுளானே. (௮)

தேனப்பூவண்டுண்டகொன்றையான்காண்டிருவேகம்பத்தான்காண்டேனார்ந்துக்க
ஞானப்பூங்கோதையாள்பாகத்தான்காணம்பன்காண்ஞானத்தொளியானான்காண்
வானப்பேரூர்மறியவோடிமட்டித்தாடினான்காண்வண்டார்சோலைக்
கானப்பேரூரான்காண்கறைக்கண்டன்காண்காளத்தியானவனென்கண்ணுளானே.

இறையவன்காணேழுலகுமாயினான்காணேழ்கடலுமேழ்மலையுமாயினான்காண், குறையுடையார்குற்றேவல்கொள்வான்றான்காண்குடமூக்கிற்கீழ்க்கோட்டமேவினான்காண், மறையுடையவானோர்பெருமான்றான்காண்மறைக்காட்டுறையுமணிகண்டன்காண், கறையுடையகண்டத்தெங்காபாலிகாண்காளத்தியானவ (௧௦)

உண்ணாவருநஞ்சமுண்டான்றான்காணூழித்தீயன்னான்காணுகப்பார்காணப்
பண்ணாரப்பல்லியம்பாடினான்காண்பயின்றநால்வேதத்தின்பண்பினான்காண்
அண்ணாமலையான்காணடியாரீட்டமடியிணைகடொழுதேத்தவருளுவான்காண்
கண்ணாரக்காண்பார்க்கோர்காட்சியான்காண்காளத்தியானவனென்கண்ணுளானே

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டில் உள்ளது.

முதல்வன் - காளத்திநாதர்; முதல்வி - ஞானப்பூங்கோதையாரம்மை.

## ௨௨௧. திருவாமாத்தூர் - திருத்தாண்டகம்.

பலம்

வண்ணங்கடாம்பாடிவந்துநின்றுவலிசெய்துவளைகவர்ந்தார்வகையானம்மைக்
கண்ணம்பானின்றெய்துகனலப்பேசிக்கடியதோர்விடையேறிக்காபாலியார் ற
சுண்ணங்கடாங்கொண்டுதுதையப்பூசித்தோலுடுத்துநூல்பூண்டுதோன்றத்தோன்
அண்ணலார்போகின்றார்வந்துகாணீரழகியரோவாமாத்தூரையனாரே. (௧)

வெந்தார்வெண்பொடிப்பூசிவெள்ளைமாலைவிரிசடைமேற்றான்சூடிவீணையேந்திக்
கந்தாரந்தாமுரலாப்போகாநிற்கக்கறைசேர்மணிமிடற்றீரூரேதென்றேன்
கொந்தார்போல்வந்தெனதில்லேபுக்குநுடங்கேரிடைமடவாய்நம்மூர்கேட்கில்
அந்தாமரைமலர்மேலளிவண்டியாழ்செய்யாமாத்தூரென்றடிகள்போயினாரே. (௨)

கட்டங்கந்தாமொன்றுகையிலேந்திக்கடியவிடையேறிக்காபாலியார்
இட்டங்கடாம்பேசியில்லேபுக்குவிப்பலியுமிடக்கொள்ளார்போவாரல்லர்

பட்டிமையும்படிறுமேபேசுகின்றார்பார்ப்பாரைப்பரிகழிப்பார்போல்கின்றார்தாம்
அட்டியசில்பலியுங்கொள்ளார்விள்ளாரழகியரேயாமாத்தூரையனாரே. (௩)

பசைந்தபலபூதத்தார்பாடலாடல்படநாகக்கச்சையர்பிச்சைக்கென்றங்
கிசைந்ததோரியல்பினரெரியின்மேனியிமையாமுக்கண்ணினர்நால்வேதத்தர் [கை
பிசைந்ததிருநீற்றினர்பெண்ணோர்பாகம்பிரிவறியார்பிஞ்ஞகனார்தெண்ணீர்க்கங்
கசைந்ததிருமுடியரங்கைத்தீயரழகியரேயாமாத்தூரையனாரே. (௪)

உருளுடையதேர்புரவியோடும்யானையொன்றாலுங்குறைவில்லையூர்இவெள்ளே
றிருளுடையகண்டத்தர்செந்தீவண்ணரிமையவர்கடொழுதேத்துமிறைவனார்தாம்
பொருளுடையரல்லரிலருமல்லர்புலித்தோலுடையாகப்பூதஞ்சூழ
அருளுடையவங்கோதைமாலைமார்பரழகியரேயாமாத்தூரையனாரே. (௫)

வீறுடையவேறேறிநீறுபூசிவெண்டோடுபெய்திடங்கைவீணையேந்திக்
கூறுடையமடவாளோர்பாகங்கொண்டுகுழையாடக்கொடுகொட்டிகொட்டாவந்து
பாறுடையபடுதலையோர்கையிலேந்திப்பலிகொள்வாரல்லர்படிறேபேசி
ஆறுடையசடைமுடியெம்மடிகள்போலுமழகியரேயாமாத்தூரையனாரே. (௬)

கையோர்கபாலத்தர்மானின்றோலர்கருத்துடையர்நிருத்தராய்க்காண்பார்முன்னே, செய்யதிருமேனிவெண்ணீறாடித்திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடி, மெய்பொருபாகத்துமையைவைத்துமேவார்திரிபுரங்கள்வேவச்செய்து, ஐயனார்போகின்றார் வந்துகாணீரழகியரேயாமாத்தூரையனாரே. (௭)

ஒன்றாலுங்குறைவில்லையூர்இவெள்ளேறேற்றியூரும்மூரேயுணரக்கூறீர்
நின்றாதானென்செய்வீர்போவீராகினெற்றிமேற்கண்காட்டிநிறையுங்கொண்டீர்
வென்றாற்றானிவ்வகையேயிடர்செய்கின்றீர்விருத்தர்குமரினியறிந்தோமேகம்பமோ
அன்றித்தான்போகின்றீரடிகளெம்மோடழகியரேயாமாத்தூரையனாரே. (௮)

கல்லலகுதாங்கொண்டுகாளத்தியார்கடியவிடையேறிக்காணக்காண [ன்
இல்லமேநாம்புகுதாவிடுமின்பிச்சையென்றுருக்கெதிரெழுந்தேனெங்குங்காணே
சொல்லாதேபோகின்றீருமூரேதுருத்திபழனமோநெய்த்தானமோ
அல்லலேசெய்தடிகள்போகின்றீர்தாமழகியரேயாமாத்தூரையனாரே. (௯)

மழுங்கலாநீறாடுமார்பர்போலுமணிமிழலைமேயமணாளர்போலும், கொழுங்குவளைக்கோதைக்கிறைவர்போலுங்கொடுகொட்டிதாளமுடையார்போலும், செழுங்கயிலாயத்தெஞ்செல்வர்போலுந்தென்னதிகைவீரட்டஞ்சேர்ந்தார்போலும், அழுங்கினாரையுறவுதீர்ப்பார்போலுமழகியரேயாமாத்தூரையனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆமாத்தீசுவரர்; முதல்வி - அழகியநாயகியம்மை.

## (0) ௨௨௪. திருப்பந்தணைநல்லூர் - 5கந்தாணல். கா.

திருச்சிற்றம்பலம்

நோதங்கமில்லாதார்நாகம்பூண்டார் நூல்பூண்டார் நூன்மேலோராமைபூண்டார், பேய்கங்குநீள்காட்டினட்டமாடிப்பிறைசூடுஞ்சடைமேலோர்புனலுஞ்சூடி, ஆதங்குபைங்குழலாள்பாகங்கொண்டாரனல்கொண்டாரந்திவாய்வண்ணங்கொண்டார், பாதங்கணீரேற்றார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. ( )

காடலாற்கருதாதார்கடனஞ்சுண்டார்களிற்றுரிவைமெய்போர்த்தார்கலனதாக, ஓடலாற்கருதாதாரொற்றியூராருறுபிணியுஞ்செறுபகையுமொற்றைக்கண்ணால், பீடுலாந்தனைசெய்வார்பிடவமொந்தைகுடமுழவங்கொடுகொட்டிகுழலுமோங்கப், பாடலாராடலார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. ( )

பூதப்படையுடையார்பொங்குநூலார்புலித்தோலுடையினர்போரேற்றினர்
வேதத்தொழிலார்விரும்பநின்றார்விரிசடைமேல்வெண்டிங்கட்கண்ணிசூடி
ஓதத்தொலிகடல்வாய்நஞ்சமுண்டாரும்பரோடம்பொன்னுலகமாண்டு
பாதத்தொடுகழலார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௩)

நீருலாஞ்சடைமுடிமேற்றிங்களேற்றார்நெருப்பேற்றாரங்கையினிறைபுமேற்றார்
ஊரெலாம்பலியேற்றாரரவமேற்றாரொலிகடல்வாய்நஞ்சமிடற்றிலேற்றார்
வாருலாமுலைமடவாள்பாகமேற்றார்மழுவேற்றார்மான்மறியோர்கையிலேற்றார்
பாருலாம்புகழேற்றார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௪)

தொண்டர்தொழுதேத்துஞ்சோதியேற்றார் துளங்காமணிமுடியார் தூயநீற்றார்
இண்டைச்சடைமுடியாரீமஞ்சூழ்ந்தவிடுபிணக்காட்டாடலாரேமந்தோறும்
அண்டத்துக்கப்புறத்தாராதியானாருக்கனுயாரழலாயடியார்மேலப்
பண்டைவினையறுப்பார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௫)

கடமன்னுகளியானையுரிவைபோர்த்தார்கானப்பேர்காதலார்காதல்செய்து
மடமன்னுமடியார்தம்மனத்தினுள்ளார்மானுரிதோன்மிசைத்தோளார்மங்கைகா
நடமன்னியாடுவார்நாகம்பூண்டார்நான்மறையோடாறங்கமின்றாவார் [ணா
படமன்னுதிருமுடியார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௬)

முற்றாமதிச்சடையார்மூவரானார்மூவுலகுமேத்துமுதல்வரானார்
கற்றார்பரவுங்கழலார்திங்கள்கங்கையாள்காதலார்காம்பேய்தோளி
பற்றாரும்பாகத்தார்பால்வெண்ணீற்றார்பான்மையாலூழியுலகமானார்
பற்றார்மதிலெரித்தார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௭)

கண்ணமருநெற்றியார்காட்டார்நாட்டார்கனமழுவாட்கொண்டதோர்கையார்சென்னிப், பெண்ணமருஞ்சடைமுடியார்பேரொன்றில்லார்பிறப்பிலாரிறப்பிலார்பிணியொன்றில்லார், மண்ணவரும்வானவருமற்றையோருமறையவரும்வந்தெதிரேவணங்கியேத்தப், பண்ணமரும்பாடலார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௮)

ஏறேறியேழுலகுமேத்தநின்றாரிமையவர்களெப்பொழுதுமிறைஞ்சநின்றார்
நீறேறுமேனியார்நீலமுண்டார்நெருப்புண்டாரங்கையனலுமுண்டார்
றைமைவாயரவுமாத்தார்
பாறேறுவெண்டலையார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௯)

கல்லூர்கடிமதில்கண்மூன்றுமெய்தார்காரோணங்காதலார்காதல்செய்து
நல்லூரார்ஞானத்தார்ஞானமானார்நான்மறையோடாறங்கநவின்றநாவார்
மல்லூர்மணிமலையின்மேலிருந்துவாளரக்கர்கோன்றலையைமாளச்செற்றுப்
பல்லூர்பலிதிரிவார்பைங்கணேற்றார்பலியேற்றார்பந்தணைநல்லூராரே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பசுபதீசுவரர்; முதல்வி - காம்பன்னதோளியம்மை.

## ௨௨௫. திருப்புன்கூரும் திருநீடூரும் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பிறவாதேதோன்றியபெம்மான்றன்னைப்பேணாதாரவர்தம்மைப்பேணாதானைத்
துறவாதேகட்டறுத்தசோ நறியாய
திறமாயவெத்திசைக்குந்தானேயாகித்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிறமாமொளியானைநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (௧)

பின்றானுமுன்றானுமானான்றன்னைப்பித்தர்க்குப்பித்தனாய்நின்றான்றன்னை
நன்றாங்கறிந்தவர்க்குந்தானேயாகிநல்வினையுந்தீவினையுமானான்றன்னைச்
சென்றோங்கிவிண்ணளவுந்தீயானானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நின்றாயநீடூர்நிலாவினானைநீதனேனென்னேநானினையாவாறே. (௨)

இல்லானையெவ்விடத்துமுள்ளான்றன்னையினியநினையாதார்க்கின்னாதானை [னைச்
வல்லானைவல்லடைந்தார்க்கருளும்வண்ணமாட்டாதார்க்கெத்திறத்துமாட்டாதா
செல்லாதசெந்நெறிக்கேசெல்விப்பானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நெல்லால்விளைகழனிநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (௩)

கலைஞானங்கல்லாமேகற்பித்தானைக்கடுநரகஞ்சாராமேகாப்பான்றன்னைப்
பலவாயவேடங்கடானேயாகிப்பணிவார்கட்கங்கங்கேபற்றானானைச்
சிலையாற்புரமெரித்ததீயாடியைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிலையார்மணிமாடநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (௪)

நோக்காதேயெவ்வளவுநோக்கினானைநுணுகாதேயாதொன்றுநுணுகினானை
ஆக்காதேயாதொன்றுமாக்கினானையணுகாதாரவர்தம்மையணுகாதானைத்

தேக்காதேதெண்கடனஞ்சுண்டான்றன்னைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நீக்காதபேரொளிசேர்நீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (ரு)

பூணலாப்பூணானைப்பூசாச்சாந்தமுடையானைமுடைநாறுபுன்கலத்தில்
ஊணலாவூணானையொருவர்காணாவுத்தமனையொளிதிகழும்மேனியானைச்
லாஞ்செழும்பவளக்குன்றொப்பானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
ாமலர்க்கழனிநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (சு)

உரையார்பொருளுக்குலப்பிலானையொழியாமேயெவ்வுயிருமானான்றன்னைப்
புரையாய்க்கனமாயாழ்ந்தாழாதானைப்புதியனவுமாய்மிகவும்பழையான்றன்னைத்
திரையார்புனல்சேர்மகுடத்தானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிரையார்மணிமாடநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (எ)

கூரரவத்தணையானுங்குளிர்தண்பொய்கைமலரவனுங்கூடிச்சென்றறியமாட்டார்
ஆரொருவரவர்தன்மையறிவார்தேவரறிவோமென்பார்க்கெல்லாமறியலாகாச்
சீரரவக்கழலானைநிழலார்சோலைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நீரரவத்தண்கழனிநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (அ)

கையெலாநெய்பாயக்கழுத்தேகிட்டக்காணிமிர்த்துநின்றுண்ணுங்கையர்சொன்ன
பொய்யெலாமெய்யென்றுகருதிப்புக்குப்புள்ளுவராலகப்படாதுய்யப்போந்தேன்
செய்யெலாஞ்செழுங்கமலப்பழனவேலித்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நெய்தல்வாய்ப்புனற்படப்பைநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (கூ)

இகழுமாறெங்ஙனேயேழைநெஞ்சேயிகழாதுபரங்கொண்டொன்றாய்நின்றான்றன்னை
நகழுமாவரைக்கீழிட்டரக்கர்கோனைநலனழித்தாங்கருளிச்செய்தான்றன்னைத்
திகழுமாமதகரியினுரிபோர்த்தானைத்திருப்புன்கூர்மேவியசிவலோகனை
நிகழுமாவல்லானைநீடூரானைநீதனேனென்னேநானினையாவாறே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

திருப்புன்கூர் முதல்வன் - சிவலோகநாதர்; முதல்வி - சொக்கநாயகி.

திருநீடூர் முதல்வன் - அருட்சோமநாதர்; முதல்வி - வேயுறுதோளி.

---

## உஉகூ. திருக்கழிப்பாலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஊனுடுத்தியொன்பதுவாசல்வைத்துவெள்ளெலும்புதூணாவுரோமமேய்ந்து
தாமெடுத்தகூரைதவிரப்போவார்தயக்கம்பலபடைத்தார்தாமரையினார்
கானெடுத்துமாமயில்களாடுஞ்சோலைக்கழிப்பாலைமேயகபாலப்பனார்
வானிடத்தையூடறுத்துவல்லைச்செல்லும்வழிவைத்தார்க்கவ்வழியேபோதுமாமே

முறையார்ந்தமும்மதிலும்பொடியாச்செற்று முன்னுமாய்ப்பின்னுமாய்முக்க ணெந்தை, பிறையார்ந்தசடைமுடிமேற்பாம்புகங்கைபிணக்கந்தீர்த்துடன்வைத் தார்பெரியநஞ்சு, கறையார்ந்தமிடற்றடங்கக்கண்டவெந்தைகழிப்பாலைமேயகபா லப்பனார், மறையார்ந்தவாய்மொழியான்மாயயாக்கைவழிவைத்தார்க்கவ்வழியே போதுநாமே. (௨)

தெளிவுண்டாக்கருதாதேநிமலன்றன்னைநினைமின்கணித்தலுநேரிழையாளாய
ஒளிவண்டார்கருங்குழலியுமையாடன்னையொருபாகத்தமர்ந்தடியாருள்கியேத்தக்
களிவண்டார்கரும்பொழில்சூழ்கண்டல்வேலிக்கழிப்பாலைமேயகபாலப்பனார்
வளிவுண்டார்மாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௩)

பொடிநாறுமேனியர்பூதிப்பையர்புலித்தோலர்பொங்கரவர்பூணநூலர்
அடிநாறுங்கமலத்தாரயனாதியானைஞ்சுமாடுமாதிரையினார்தாங்
கடிநாறும்பூஞ்சோலைகமழ்ந்துநாறுங்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மடிநாறுமேனியிம்மாயநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௪)

விண்ணானைவிண்ணவர்கள்விரும்பிவந்துவேதத்தாய்கீதத்தாய்விரவியெங்குங்
கண்ணானையெழுத்தானைக்கடலேழானையிறையானையெம்பிறையேயென்றுநிற்குங்
கண்ணானைக்காரானைப்பாருமானைக்கழிப்பாலையுள்ளுறையுங்கபாலப்பனார்
மண்ணானைமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௫)

விண்ணப்பவிச்சாதரர்களேத்தவிரிகதிரோனெரிசுடரான்விண்ணுமாகிப்
பண்ணப்பன்பத்தர்மனத்துளேயும்பசுபதிபாசுபதன்றேசமூர்த்தி
கண்ணப்பன்கண்ணப்பக்கண்டுகந்தார்கழிப்பாலைமேயகபாலப்பனார்
வண்ணப்பிணிமாயயாக்கைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௬)

பிணம்புல்குபீறற்குரம்பைமெய்யாப்பேதப்படுகின்றபேதைமீர்காள்
நிணம்புல்குசூலத்தர்நீலகண்டரெண்டோளரெண்ணிறைந்தகுணத்தினாலே
கணம்புல்லன்கருத்துகந்தார்காஞ்சியுள்ளார்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மணம்புல்குமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௭)

இயல்பாயவீசனையெந்தைதந்தையென்சிந்தைமேவியுறைகின்றானை
முயல்வானைமூர்த்தியைத்தீர்த்தமானதிரியம்பகன்றிரிசூலத்தன்னைநயன்
கயல்பாயுங்கண்டல்சூழ்வுண்டவேலிக்கழிப்பாலைமேயகபாலப்பனார்
மயலாயமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே. (௮)

செற்றதோர்மனமொழிந்துசிந்தைசெய்துசிவமூர்த்தியென்றெழுவார்சிந்தை யுள்ளால், உற்றதோர்நோய்களைந்திவ்வுலகமெல்லாங்காட்டுவானுத்தமன்றானோதா தெல்லாங், கற்றதோர்நூலினன்களிறுசெற்றான்கழிப்பாலைமேயகபாலப்பனார், மற் றிதோர்மாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுநாமே.

பொருநலங்கனீண்முடியான்போரரக்கர்கன்புட்பகந்தான்பொருப்பின்மீதே டாதாக, இருநிலங்கண்டுக்கெய்தவெட்டுத்திந்தனுமேந்திழையாடான்வெருவவிறை

வணக்கிக், கரதலங்கள்கதிர்முடியாறஞ்சினோடுகால்விரலாலூன்றுகழிப்பாலையார்
வருதலங்கமாயக்குரம்பைநீங்கவழிவைத்தார்க்கவ்வழியேபோதுமாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பால்வண்ணநாதர்; முதல்வி - வேதநாயகியம்மை.

## (13) ௨௨௭. திருப்புறம்பயம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கொடிமாடநீடெருவுகூடல்கோட்டூர்கொடுங்கோளூர்தண்வளவிகண்டியூரும்
நடமாடுநன்மருகல்வைகிநாளுநலமாகுமொற்றியூரொற்றியாகப்
படமாலைவண்டறையும்பழனம்பாசூர்பழையாறும்பாற்குளமுங்கைவிட்டிந்நாள்
பொடியேறுமேனியராய்ப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (௧)

முற்றொருவர்போலமுழுநீறாடிமுளைத்திங்கள்சூடிமுந்நூலும்பூண்டு
ஒற்றொருவர்போலவுறங்குவேன்கையொளிவளையையொன்றொன்றாவெண்ணுகின்றார்
மற்றொருவரில்லைத்துணையெனக்குமால்கொண்டாற்போலமயங்குவேற்குப்
புற்றரவக்கச்சார்த்துப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (௨)

ஆகாதநஞ்சுண்டவந்திவண்ணரைந்தலையமாசுணங்கொண்டம்பொற்றோண்மேல்
ஏகாசமாவிட்டொன்றேந்திவந்திடுந்திருவேபலியென்றார்க்கில்லேபுக்கேன்
பாகேதுங்கொள்ளார்பலியுங்கொள்ளார்பாவியேன்கண்ணுளேபற்றிநோக்கிப்
போகாதவேடத்தர்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (௩)

பண்மலிந்தவெண்டலைகையிலேந்திப்பனிமுகில்போன்மேனிப்பவந்தநாதர்
நெண்மலிந்தநெய்த்தானஞ்சோற்றுத்துறைநியமந்துருத்தியூர்பாச்சில்
கண்மலிந்தோங்குகழுநீர்க்குன்றங்கடனாகைக்காரோணங்கைவிட்டிந்நாள்
பொன்மலிந்தகோதையருந்தாமுமெல்லாம்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. ( )

செத்தவர்தந்தலைமாலைகையிலேந்திச்சிரமாலைசூடிச்சிவந்தமேனி
மத்தகத்தயானையுரிவைமூடிமடவாளவளோடுமானொன்றேந்தி
அத்தவத்ததேவராறுபதின்மராறுநூறாயிரவர்க்காடல்காட்டிப்
புத்தகங்கைக்கொண்டுபுலித்தோல்வீக்கிப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (௫)

* நஞ்சடைந்தகண்டத்தர்வெண்ணீறாடிநல்லபுலியதள்மேலாகங்காட்டிப், பஞ்சடைந்தமெல்விரலாள்பாகமாகப்பராய்த்துறைமேயனென்றோர்பவளவண்ணர், துஞ்சிடையேவந்துதுடியுங்கொட்டத்துண்ணென்றெழுந்திருந்தேன்சொல்லமாட்டேன், புன்சடையின்மேலோர்புனலுஞ்சூடிப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே.

மறியிலங்குகையர்மழுவொன்றேந்திமறைக்காட்டேனென்றோர்மழலைபேசிச்
செறியிலங்குதிண்டோண்மேனீறுகொண்டுதிரிமுண்டமாவிட்டதிலகநெற்றி
நெறியிலங்குகூந்தலார்பின்பின்சென்றுநெடுங்கண்பனிசோரநின்றுநோக்கிப்
பொறியிலங்குபாம்பார்த்துப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (எ)

நில்லாதேபல்லூரும்பலிகள்வேண்டிநிரைவளையார்பலிபெய்யநிறையுங்கொண்டு
கொல்லேறுங்கொக்கரையுங்கொடுகொட்டியுங்குடமூக்கிலங்கொழியக்குளிர்தண்
நல்லாளைநல்லூரேதவிரேனென்றுநறையூரிற்றாமுந்தவிர்வார்போலப் [பொய்கை
பொல்லாதவேடத்தர்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (அ)

விரையேறுநீறணிந்தோராமைபூண்டுவெண்டோடுபெய்திடங்கைவீணையேந்தித்
திரையேறுசென்னிமேற்றிங்கட்டன்னைத்திசைவிளங்கவைத்துகந்தசெந்தீவண்ணர்
அரையேறுமேகலையாள்பாகமாகவாரிடத்திலாடலமர்ந்தவையன்
புரையேறுதாமேறிப்பூதஞ்சூழப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (கூ)

கோவாயவிந்திரனுள்ளிட்டாராகக்குமரனும்விக்கினவிநாயகனும்
பூவாயபீடத்துமேலயனும்பூமியளந்தானும்போற்றிசைப்பப்
பாவாயவின்னிசைகள்பாடியாடிப்பாரிடமுந்தாமும்பரந்துபற்றிப்
பூவார்ந்தகொன்றைபொறிவண்டார்க்கப்புறம்பயநம்மூரென்றுபோயினாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சாட்சிநாதர்; முதல்வி - கரும்படுசொல்லம்மை.

---

## 14 உஉஅ. திருநல்லூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நினைந்துருகுமடியாரைநையவைத்தார்நில்லாமேதீவினைகணீங்கவைத்தார், சினந்திருகுகளிற்றுரிவைப்போர்வைவைத்தார்செழுமதியின்றளிர்வைத்தார்சிறந்துவானோர், இனந்துருவிமணிமகுடத்தேறத்துற்றவினமலர்கள்போதவிழ்ந்துமதுவாய்ப்பில்கி, நனைந்தனையதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (க)

பொன்னலத்தநறுங்கொன்றைசடைமேல்வைத்தார்புலியுரியினதள்வைத்தார்புனலும்வைத்தார், மன்னலத்ததிண்டோண்மேன்மழுவாள்வைத்தார்வார்காதிற்குழைவைத்தார்மதியும்வைத்தார், மின்னலத்தநுண்ணிடையாள்பாகம்வைத்தார்வேழத்தினுரிவைத்தார்வெண்ணூல்வைத்தார், நன்னலத்ததிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (உ)

தோடேறுமலர்க்கொன்றைசடைமேல்வைத்தார்துன்னெருக்கின்வடம்வைத்தார்துவலைசிந்தப், பாடேறுபடுதிரைகளெறியவைத்தார்பனிமத்தமலர்வைத்தார்பாம்பும்வைத்தார், சேடேறுதிருநுதன்மேனாட்டம்வைத்தார்சிலைவைத்தார்மலை

பெற்றமகளை வைத்தார், நாடேறு திருவடியென் றலைமேல்வைத்தார்நல் லூரெம் பெருமானார்நல்லவாறே. (௪)

வில்லருளிவருபுருவத்தொருத்திபாகம்பொருத்தாகிவிரிசடைமேலருவிவைத்தார் கல்லருளிவருசிலையாவைத்தாருராக்கயிலாயமலைவைத்தார்கடவூர்வைத்தார் [தார் சொல்லருளியறநால்வர்க்கறியவைத்தார்சுடுசுடலைப்பொடிவைத்தார்துறவிவைத் நல்லருளாற்றிருவடியென்றலைமேல்வைத்தார்நல் லூரெம்பெருமானார்நல்லவாறே.

விண்ணிரியுந்திரிபுரங்களெரியவைத்தார்வினைதொழுவார்க்கறவைத்தார்துற விவைத்தார், கண்ணெரியாற்காமனையும்பொடியாவைத்தார்கடிக்கமலமலர்வைத் தார்கயிலைவைத்தார், திண்ணெரியுந்தண்புனலுமுடனேவைத்தார்திசைதொழுது மிசையமரர்திகழ்ந்துவாழ்த்தி, நண்ணரியதிருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூ ரெம்பெருமானார்நல்லவாறே. (௫)

உற்றுலவுபிணியுலகத்தெழுமைவைத்தாருயிர்வைத்தாருயிர்செல்லுங்கதி கள்வைத்தார், மற்றமரர்கணம்வைத்தாரமரர்காணாமறைவைத்தார்குறைமதியம் வளரவைத்தார், செற்றமலியார்வமொடுகாமலோபஞ்செற்றவர்க்கு நெறிவைத்தார் துறவிவைத்தார், நற்றவர்சேர்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெரு மானார்நல்லவாறே. (௬)

மாறுமலைந்தாராணமெரியவைத்தார்மணிமுடிமேலரவைத்தாரணிகொள்மணி நீறுமலிந்தெரியாடனிலவவைத்தார்நெற்றிமேற்கண்வைத்தார்நிலையம்வைத்தார் ஆறுமலிந்தறுதிரைகளெறியவைத்தாரார்வத்தாலடியமர்க்கருளவைத்தார் நாறுமலர்த்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே.

குலங்கண்மிகுமலைகடல்கண்ஞாலம்வைத்தார்குருமணிசேரரவைத்தார்கோ லம்வைத்தார், உலங்கிளருமரவத்திணுக்கைவைத்தாருண்டருளிவிடம்வைத்தாரெ ண்டோள்வைத்தார், நிலங்கிளரும்புனல்கனலுமனிலம்வைத்தார்நிமிர்விசும்பின் மிசைவைத்தார்நினைந்தாரிக்நாள், நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார் நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (௮)

சென்றுருளுங்கதிரிரண்டும்விசும்பில்வைத்தார்திசைபத்துமிருநிலத்திற்றிரு ந்தவைத்தார், நின்றருளியடியமர்வணங்கவைத்தார்நிறைதவமுமறைப்பொருளு நிலவவைத்தார், கொன்றருளிக்கொடுங்கூற்றை நிலையோடக்குமைகழற்சேவடி வைத்தார்விடையும்வைத்தார், ருவடியென்றலைமேல்வைத்தார்நல் லூரெம்பெருமானார்நல்லவாறே. (௯)

பாம்புரிஞ்சிமதிகிடந்துதிரைகளோங்கப்பணிக்கொன்றைசடைவைத்தார்பணி செய்வானோர், ஆம்பரிசுதமக்கெல்லாமருளும்வைத்தாரடுசுடலைப்பொடிவைத்தா ரழகும்வைத்தார், ஓம் ரைவைத்தாருமையையொருபால்வை த்தாருகந்துவானோர், நாம்பரவுந்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெ ருமானார்நல்லவாறே. (௰)

குலங்கிளரும்வருதிரைகளேழும்வைத்தார்குருமணிசேர்மலைவைத்தார்மலையைக்கையால், உலங்கிளரவெடுத்தவன்றோண்முடியுநோவவொருவிரலாலுறவைத்தாரிறைவாவென்று, புலம்புதலுமருளொடுபோர்வாளும்வைத்தார்புகழ்வைத்தார்புரிந்தாளாக்கொள்ளவைத்தார், நலங்கிளருந்திருவடியென்றலைமேல்வைத்தார்நல்லூரெம்பெருமானார்நல்லவாறே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டிலுள்ளது.

முதல்வன் - பெரியாண்டேசுவரர்; முதல்வி - திரிபுரசுந்தரியம்மை.

## (15) உஉக. திருக்கருகாவூர் திருத்தாண்டகம்.

ம்பலம்

குருகாம்வயிரமாங்கூறுநாளாங்கொள்ளுங்கிழமையாங்கோளேதானும்
பருகாவமிர்தமாம்பாலினெய்யாம்பழத்தினிரதமாம்பாட்டிற்பண்ணாம்
ஒருகாலுமையாளோர்பாகனுமாமுண்ணின்றநாவிற்குரையாடியாம்
கருவாயுலகுக்குமுன்னேதோன்றுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (க)

வித்தாமுளையாகும்வேரேதானும்வேண்டுமுருவமாம்விரும்பிநின்ற
பத்தாமடியார்க்கோர்பாங்கனுமாம்பானிறமுமாம்பரஞ்சோதிதானும்
தொத்தாமமரர்கணஞ்சூழ்ந்துபோற்றத்தோன்றுமென்னுள்ளத்தினுள்ளேநின்ற
கத்தாமடியேற்குக்காணாகாட்டுங்கண்ணாங்கருகா[illegible]னே. (உ)

பூத்தானும்பூவினிறத்தானுமாம்பூக்குளால்வாசமாய்மன்னிநின்ற
கோத்தானுங்கோல்வளையாள்கூறனாகுங்கொண்டசமயத்தார்தேவனாகி
ஏத்தாதார்க்கென்றுமிடரேதுன்பமீவானுமென்னெஞ்சத்துள்ளேநின்று
காத்தானுங்காலனடையாவண்ணங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (ங)

இரவனாமெல்லிநடமாடியாமெண்டிசைக்குந்தேவனாமென்னுளானாம்
அரவனாமல்லலறுப்பானுமாமாகாயமூர்த்தியாமானேறேறும்
குரவனாங்கூற்றையுதைத்தான்றானாங்கூறுதவஞ்சக்குயலர்க்கென்றும்
கரவனாங்காட்சிக்கெளியானுமாங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (ச)

படைத்தானும்பாரையிடந்தானாகும்பரிசொன்றறியாமைநின்றான்றானும்
உடைத்தானுமொன்னார்புரங்கண்மூன்றுமொள்ளழலான்மூட்டியொருக்கிநின்று
அடைத்தானுஞ்சூழமழுவேர்நாகமசைத்தானுமானேறொன்றூர்ந்தானுந்தம்
கடைத்தானுங்கள்ளமறிவார்நெஞ்சிற்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (ரு)

மூலனாமூர்த்தியாமுன்னேதானாமூவாதமேனிமுக்கண்ணினானும்
சீலனுஞ்சேர்ந்தாரிடர்கடிக்குஞ்செல்வனுஞ்செஞ்சுடர்க்கோர்சோதிதானும்
மாலனுமங்கையோர்பங்கனாகுமன்றாடியாம்வானோர்தங்கட்கெல்லாம்
காலனுங்காலனைக்காய்ந்தானாகுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (சு)

அரைசேரரவனுமாலத்தானுமாதிரைநாளானுமண்டவானோர்
சேர்திருமுடித்திங்களானுந்தீவினைநா

உரைசேருலகத்தாருள்ளானுமாமுமையாளோர்பாகனுமோதவேலிக்
கரைசேர்கடனஞ்சையுண்டானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௭)

துடியாந்துடியின்முழக்கந்தானுஞ்சொல்லுவார்சொல்லெல்லாஞ்சோதிப்பானும்
படிதானும்பாவமறுப்பானும்பானீற்றானும்பரஞ்சோதிதானுங்
கொடியானுங்கூற்றையுதைத்தானுங்கூறுதவஞ்சக்குயலர்க்கென்றுங்
கடியானுங்காட்சிக்கரியானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௮)

விட்டுருவங்கிளர்கின்றசோதியானும்விண்ணவர்க்குமறியதசூழலானும்
பட்டுருவமால்யானைத்தோல்கீண்டானும்பலபலவும்பாணிபயின்றான்றானும்
எட்டுருவமூர்த்தியாமெண்டோளானுமென்னுச்சிமேலானுமெம்பிரானும்
கட்டுருவங்கடியானைக்காய்ந்தானுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௯)

பொறுத்திருந்தபுள்ளூர்வானுள்ளானுமிப்புள்ளிருந்தங்குண்டேனுய்க்ளைவான்றானுய்ச், செறுத்திருந்தமும்மதில்கண்மூன்றும்வேவச்சிலைகுனியத்தீமூட்டுந்திண்மைதானும், அறுத்திருந்தகையானுமந்தாரல்லிபிருந்தானையொருதலையைத்தெரியநோக்கிக், கறுத்திருந்தகண்டமுடையான்போலுங்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௧௦)

ஒறுத்தானுமொன்னார்புரங்கள்மூன்றுமொள்ளழலைமாட்டியுடனேவைத்து,
இறுத்தானுமெண்ணான்முடிகள்பத்துமிசைந்தானுமின்னிசைகள்கேட்டானுகும்
அறுத்தானுமஞ்சுமடக்கியங்கேயாகாயமந்திரமுமானானுகும்
கறுத்தானுங்காலனைக்காலால்வீழக்கண்ணாங்கருகாவூரெந்தைதானே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - முல்லைவனநாதர்; முதல்வி - கரும்பனையாள்.

---

## ௨௫௦. திருவிடைமருதூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

சூலப்படையுடையார்தாமேபோலுஞ்சுடர்த்திங்கட்கண்ணியுடையார்போலும்
மாலைமகிழ்ந்தொருபால்வைத்தார்போலுமந்திரமுந்தந்திரமுமானார்போலும்
வேலைக்கடனஞ்சமுண்டார்போலுமேல்வினைகடீர்க்கும்விகிர்தர்போலும்
ஏலக்கமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (௧

காரார்கமழ்கொன்றைக்கண்ணிபோலுங்காரானையீருரிவைபோர்த்தார்போலும்
பாரார்பரவப்படுவார்போலும்பத்துப்பல்லூழிபரந்தார்போலும்
சீரால்வணங்கப்படுவார்போலுந்திசையனைத்துமாய்மற்றுமானார்போலும்
ஏரார்கமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (௨)

வேதங்கள்வேள்வியயந்தார்போலும்விண்ணுலகுமண்ணுலகுமானார்போலும்
பூதங்களாயபுராணர்போலும்புகழவளரொளியாய்நின்றார்போலும்
பாதம்பரவப்படுவார்போலும்பத்தர்களுக்கின்பம்பயந்தார்போலும்
ஏதங்களானகடிவார்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (௩)

திண்குணத்தார்தேவர்கணங்களேத்தித்திசைவணங்கச்சேவடியைவைத்தார் போலும், விண்குணத்தார்வேள்விசிதையநூறிவியன்கொண்டன்மேற்செல்விகிர் தர்போலும், பண்குணத்தார்பாடலோடாடலோவாப்பரங்குன்றமேவியபரமர் போலும், எண்குணத்தா*ரெண்ணுயிரவர்போலுமிடைமருதுமேவியவீசனாரே.()

ஊகமுகிலுரிஞ்சுஞ்சோலைசூழ்ந்தவுயர்பொழிலண்
பாகம்பணிமொழியாள்பங்கராகிப்படுவெண்டலையிற்பலிகொள்வாரும்
மாகமடையும்மதிலுமெய்தார்தாமுமணிபொழில்சூழாருருறைகின்றாரும்
ஏகம்பமேயாருமெல்லாமாவாரிடைமருதுமேவியவீசனாரே. (ரு)

ஐயிரண்டுமொன்றுமானார்போலுமறுமூன்றுநான்மூன்றுமானார்போலும் [ம்
செய்வினைகளல்வினைகளானார்போலுந்திசையனைத்துமாய்நிறைந்தசெல்வர்போலு
கொய்மலராங்கொன்றைச்சடையார்போலுங்கூத்தாடவல்லகுழகர்போலும்
எய்யவந்தகாமனையுங்காய்ந்தார்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (சு)

பிரியாதகுணமுயிர்கட்கஞ்சோடஞ்சாய்ப்பிரிவுடையகுணம்பேசிற்பத்தோ டொன்றாய், விரியாதகுணமொருகானென்கேயென்பர்விரிவிலாக்குணநாட்டத்தா றேயென்பர், தெரிவாயகுணமஞ்சுஞ்சமிதையஞ்சும்பதமஞ்சுங்கதியஞ்சுஞ்செப் பினாரும், எரியாயதாமரைமேவியங்கினாருமிடைமருதுமேவியவீசனாரே. (எ)

தோலிற்பொலிந்தவுடையார்போலுஞ்சுடர்வாயரவசைத்தசோதிபோலும்
ஆலமமிர்தாகவுண்டார்போலுமடியார்கட்காரமிர்தமானார்போலும்
காலனையுங்காய்ந்தகழலார்போலுங்கயிலாயந்தம்மிடமாக்கொண்டார்போலும்
ஏலங்கமழ்குழலாள்பாகர்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (அ)

பைந்தளிர்க்கொன்றையந்தாரார்போலும்படைக்கணாள்பாகமுடையார்போலும்
அந்திவாய்வண்ணத்தழகர்போலுமணிநீலகண்டமுடையார்போலும்
வந்தவாவுஞ்செலவுமாகிமாறிதென்னுள்ளத்திருந்தார்போலும்
பந்தமிடர்தீர்க்கவல்லார்போலுமிடைமருதுமேவியவீசனாரே. (கூ)

கொன்றையங்கூவிளமாலைதன்னைக்குளிர்சடைமேல்வைத்துகந்தகொள்கையாரும்
நின்றவணங்கனைநீறாநோக்கிநெருப்புருவாய்நின்றநிமலனாரும்
அன்றவரக்கனலறவீழ்வருவரையைக்காலாலழுத்தினாரும்
என்றுமிடும்பிச்சையேற்றுண்பாருமிடைமருதுமேவியவீசனாரே. (க0)

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மருதீசர்; முதல்வி - நலமுலைநாயகியம்மை.

* எண்ணுயிருந்தா ரெனவும் பாடம்.

## உ௬௧. திருவிடைமருதூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆறுசடைக்கணிவரங்கைத்தீயரழகர்படையுடையரம்பொற்றோண்மேல்
நீறுதடவந்திடபமேறிநித்தம்பலிகொள்வர்மொய்த்தபூதம்
கூறுங்குணமுடையர்கோவணத்தர்கோடாலவேடத்தர்கொள்கைசொல்லின்
ஈறுந்நடுவுமுதலுமாவாரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௧)

மங்குன்மதிவைப்பர்வானநாடர்மடமானிடமுடையர்மாதராளைப்
பங்கின்மிகவைப்பர்பால்போனீற்றர்பளிக்குவடம்புனைவர்பாவநாசர்
சங்குதிரையுகளுஞ்சாய்க்காடாள்வர்சரிதைபலவுடையர்தன்மைசொல்லின்
எங்கும்பலிதிரிவரென்னுணீங்காரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௨)

ஆலநிழலிருப்பராகாசத்தாருவரையினுச்சியரானர்பெண்ணர்
காலம்பலகழித்தார்கறைசேர்கண்டர்கருத்துக்குச்சேயார்தாங்காணாதார்க்குக்
கோலம்பலவுடையர்கொல்லையேற்றர்கொழுமழுவர்கோழம்பமேயவீசர்
ஏலமணநாறுமீங்கோய்நீங்காரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௩)

தேசர்திறநினைவார்சிந்தைசேருஞ்செல்வர்திருவாரூரென்றுமுள்ளார்
வாசமலரின்கண்மான்றோல்போர்ப்பர்மருவுங்கரியுரியர்வஞ்சக்கள்வர்
நேசரடைந்தார்க்கடையாதார்க்குநிட்டுருவர்கட்டங்கர்நினைவார்க்கென்றும்
ஈசர்புனற்பொன்னித்தீர்த்தர்வாய்த்தவிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௪)

கரப்பர்கரியமனக்கள்வர்க்குள்ளங்கரவாதேதன்னினையகிற்பார்பாவம்
துரப்பர்தொடுகடலினஞ்சமுண்பர்தூயமறைமொழியர்தீயாலொட்டி
நிரப்பர்புரமூன்றுநீறுசெய்வர்நீள்சடையர்பாய்விடைகொண்டெங்குமையம்
இரப்பரெமையாள்வரென்னுணீங்காரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௫)

கொடியாரிடபத்தர்கூத்துமாடிக்குளிர்கொன்றைமேல்வைப்பார்கோலமார்ந்த
பொடியாருமேனியர்பூதிப்பையர்புலித்தோலர்பொங்கரவர்பூணநூலர்
அடியார்குடியாவரந்தணாளராகுதியின்மந்திரத்தாலமரர்போற்ற
இடியார்களிற்றுரியரெவரும்போற்றவிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௬)

பச்சைநிறமுடையர்பாலர்சாலப்பழையர்பிழையெலாநீக்கியாள்வர்
கச்சைக்கதநாகம்பூண்டதோளர்கலனொன்றுகையேந்தியில்லந்தோறும்
பிச்சைகொளநுகர்வர்பெரியர்சாலப்பிறங்குசடைமுடியர்பேணுந்தொண்டர்
இச்சைமிகவறிவரென்றுமுள்ளாரிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௭)

காவார்சடைமுடியர்காரோணத்தர்கயிலாயமன்னினார்பன்னுமின்சொற்
பாவார்பொருளாளர்வாளார்கண்ணிபயிலுந்திருவுருவம்பாகமேயார்
[illegible]
ஏவார்சிலைமலையரெங்குந்தாமேயிடைமருதுமேவியிடங்கொண்டாரே. (௮)

புரிந்தார்நடனத்தின்கட்பூதநாதர்பொழிலாரூர்புக்குறைவர்போந்துதம்மிற்
பிரிந்தாரகல்வாயபேயுந்தாமும்பிரியாரொருநாளும்பேணுகாட்டில்

எரிந்தாரனலுகப்பரேழிலோசையெவ்விடத்துந்தாமேயென்றேத்துவார்பால்
இருந்தாரிமையவர்கள்போற்றவென்றுமிடைமருதுமேவிபிடங்கொண்டாரே. ()

விட்டிலங்குமாமழுவர்வேலைநஞ்சர்விடங்கர்விரிபுனல்சூழ்வெண்காட்டுள்ளார்
மட்டிலங்குதார்மாலைமார்பினீற்றர்மழபாடியுள்ளுறைவார்மாகாளத்தர்
சிட்டிலங்குவல்லரக்கர்கோனையன்றுசெழுமுடியுந்தோளைஞ்ஞான்கடரக்காலால்
இட்டிரக்கமற்றவனுக்கீந்தார்வென்றியிடைமருதுமேவியிடங்கொண்டாரே. ()

திருச்சிற்றம்பலம்.

## உ௬உ. திருப்பூவணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வடியேறுதிரிசூலந்தோன்றுந்தோன்றும்வளர்சடைமேலிளமதியந்தோன்றுந்தோன்றும், கடியேறுகமழ்கொன்றைக்கண்ணிதோன்றுங்காதில்வெண்குழைதோடுகலந்துதோன்றும், இடியேறுகளிற்றுரிவைப்போர்வைதோன்றுமெழிறிகழுந்திருமுடியுமிலங்கித்தோன்றும், பொடியேறுதிருமேனிபொலிந்துதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௧)

ஆணாகிப்பெண்ணாயவடிவுதோன்றுமடியவர்கட்காரமுதமாகித்தோன்றும், ஊணாகவூர்திரிவானாகித்தோன்றுமொற்றைவெண்பிறைதோன்றும்பற்றார்தம்மேல் சேணாகவரைவில்லாலெரித்தறோன்றுஞ்செற்றவர்தம்மெலும்பினாற்செறியச்செய்த, பூணாணுமரைநாணும்பொலிந்துதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (உ)

கல்லாலினீழலிற்கலந்துதோன்றுங்கவின்மறையோர்நால்வர்க்குநெறிகளன்று, சொல்லாகச்சொல்லியவாதோன்றுந்தோன்றுஞ்சூழரவுமான்மறியுந்தோன்றுந்தோன்றும், அல்லாதகாலனைமுன்னடர்த்தறோன்றுமைவகையானினைவார்பாலமர்ந்துதோன்றும், பொல்லாதபுலாலெலும்புபூணாய்த்தோன்றும்பொழிறிகழும் பூவணத்தெம்புனிதனார்க்கே. (௩)

படைமலிந்தமழுவாளுமானுந்தோன்றும்பன்னிரண்டுகண்ணுடையபிள்ளைதோன்றும், நடைமலிந்தவிடையோடுகொடியுந்தோன்றுநான்மறையினொலிதோன்றுநயனந்தோன்றும், உடைமலிந்தகோவணமுங்கீளுந்தோன்றுமூரல்வெண்சிரமாலையுலாவித்தோன்றும், புடைமலிந்தபூதத்தின்பொலிவுதோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௪)

மயலாகுந்தன்னடியார்க்கருளுந்தோன்றுமாசிலாப்புன்சடைமேன்மதியந்தோன்றும், இயல்பாகவிடுபிச்சைமேற்றறோன்றுமிருங்கடனஞ்சுண்டிருண்டகண்டந்தோன்றும், கயல்பாயக்கடுங்கலுழிக்கங்கைநங்கையாயிரமாமுகத்தினொடுவானிற்றோன்றும், புயல்பாயச்சடைவிரித்தபொற்புத்தோன்றும்பொழிறிகழும்பூவணத் தெம்புனிதனார்க்கே. (௫)

பாராழிவட்டத்தார்பரவியிட்டபன்மலருநறும்புகையும்பரந்துதோன்றும்
சீராழித்தாமரையின்மலர்களன்னதிருந்தியமாநிறத்தசேவடிகடோன்றும்

ஓராழித்தேருடையவிலங்கைவேந்தனுடலுணித்தவிடர்பாவங்கெடுப்பித்தன்று பேராழிமுன்னீந்தபொற்புத்தோன்றும்பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே.

தன்னடியார்க்கருள்புரிந்ததகவுதோன்றுஞ்சதுமுகனைத்தலையரிந்ததன்மை தோன்றும் மின்னனையநுண்ணிடையாள்பாகந்தோன்றும்வேழத்தினுரிவிரும்பி ப்போர்த்தறோன்றும், துன்னியசெஞ்சடைமேலோர்புனலும்பாம்புந்தூயமாமதி யுடனேவைத்தறோன்றும், பொன்னனையதிருமேனிபொலிந்துதோன்றும்பொழி றிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (எ)

செறிகழலுந்திருவடியுந்தோன்றுந்தோன்றுந்திரிபுரத்தையெரிசெய்தசிலையுந் தோன்றும், நெறியதனைவிரித்துரைத்தநேர்மைதோன்றும்நெற்றிமேற்கண்டோன் றும்பெற்றந்தோன்றும், மறுபிறவியறுத்தருளும்வகையுந்தோன்றுமலைமகளுஞ் சலமகளுமலிந்துதோன்றும், பொறியரவுமிளமதியும்பொலிந்துதோன்றும்பொழி றிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (அ)

அருட்பொட்டுமுலைமடவாள்பாகந்தோன்றுமணிகிளருமுருமென்னவடர்க் குங்கேழல், மருப்பொட்டுமணிவயிரக்கோவைதோன்றுமணமலிந்தநடந்தோன் றுமணியார்வைகைத், திருக்கோட்டிநின்றதோர்திறமுந்தோன்றுஞ்செக்கர்வா னொளிமிக்குத்திகழ்ந்தசோதிப், பொருப்பொட்டிநின்றதிண்புயமுந்தோன்றும் பொழிறிகழும்பூவணத்தெம்புனிதனார்க்கே. (௯)

ஆங்கணைந்தசண்டிக்குமருளியன்றுதன்முடிமேலலர்மாலையளித்தறோன்றும், பாங்கணைந்துபணிசெய்வார்க்கருளியன்றுபலபிறவியறுத்தருளும்பரிசுதோன்றும், கோங்கணைந்தகூவிளமுமதமத்தமுங்குழற்கணிந்தகொள்கையொடு கோலந்தோன் றும், பூங்கணைவேளுருவழித்தபொற்புத்தோன்றும்பொழிறிகழும்பூவணத்தெம் புனிதனார்க்கே. (க0)

ஆருருவவுள்குவாருள்ளத்துள்ளேயவ்வுருவாய்நிற்கின்றவருளுந்தோன்றும், வாருருவப்பூண்முலைநன்மங்கைதன்னை மகிழ்ந்தொருபால்வைத்துகந்தவடிவுந்தோ ன்றும், நீருருவக்கடலிலங்கையரக்கர்கோனைநெறுநெறெனவடர்த்திட்டநிலையுந் தோன்றும், போருருவக்கூற்றுதைத்தபொற்புத்தோன்றும்பொழிறிகழும்பூவண த்தெம்புனிதனார்க்கே. (கக)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டிலுள்ளது.

முதல்வன் - பூவணநாதர்; முதல்வி - மின்னனையம்மை.

## உகூங. திருவாலவாய் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

முளைத்தானையெல்லார்க்குமுன்னேதோன்றிமுதிருஞ்சடைமுடிமேன்முகிழ் வெண்டிங்கள், வளைத்தானைவல்லசுரர்புரங்கண்மூன்றும்வரைசிலையாவாசுகிமாநா ணாக்கோத்துத், துளைத்தானைச்சுடுசரத்தாற்றுவளநீறாத்தூமுத்தவெண்முறுவலு

மையோடாடித், திளைத்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப் பெற்றேனானே. க)

விண்ணுலகின்மேலார்கண்மேலான்றன்னைமேலாடுபுரமூன்றும்பொடிசெய்தானைப், பண்ணிலவுடைபம்பொழில்சூழ்பழனத்தானைப்பசும்பொன்னிறத்தானைப் பானீற்றானை, உண்ணிலவுசடைக்கற்றைறக்கங்கையாளைக்கரந்துமையோடுடனாகியிருந்தான்றன்னைத், தெண்ணிலவுதென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப் பெற்றேனானே. (உ)

சீர்த்திரளைநீள்சடைமேனிறைவித்தானை நிலமருவிநீரோடக்கண்டான்றன்னைப், பாற்றிரளைப்பயின்றாடவல்லான்றன்னைப்பதைத்தெழுந்தவெங்கூற்றைப் பாய்ந்தான்றன்னைக், காற்றிரளாய்மேகத்தினுள்ளேநின்றுகடுங்குரலாயிடிப்பானைக் கண்மூன்றார்நெற்றிச், சீர்த்திரளைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப் பெற்றேனானே. (ங)

வானமிறுவெல்லாமுடையான்றன்னைவரியரவக்கச்சானைவன்பேய்சூழக் கானமதினடமாடவல்லான்றன்னைக்கடைக்கணான்மங்கையுமைநோக்காவென்மே வானமதுவெல்லாமொழித்தான்றன்னையுணர்வாகிஅடியேனதுள்ளேநின்ற [ல் தேனமுதைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. ()

ஊரானையுலகேழாய்நின்றான்றன்னையொற்றைவெண்பிறையானையுமையோ டென்றும், பேரானைப்பிறர்க்கென்றுமரியான்றன்னைப்பிணக்காட்டினடமாடல்பேயோடென்றும், ஆரானையமரர்களுக்கமுதீந்தானையருமறையானான்முகனுமாலும் போற்றுஞ், சீரானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றே

மூவனை மூர்த்தியைமூவாமேனியுடையானைமூவுலகுந்தானேயெங்கும் பாவனைப்பாவமறுப்பான்றன்னைப்படியெழுதலாகாதமங்கையோடு மேவனைவிண்ணோர்நடுங்கக்கண்டுவிரிகடலினஞ்சுண்டமுதமீந்த தேவனைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (சு)

துறந்தார்க்குத்தூநெறியாய்நின்றான்றன்னைத்துன்பந்துடைத்தாளவல்லான் றன்னை, இறந்தார்களென்பேயணிந்தான்றன்னையெல்லிநடமாடவல்லான்றன்னை, மறந்தார்மதின்மூன்றுமாய்த்தான்றன்னைமற்றொருபற்றில்லாவடியார்க்கென்றும், சிறந்தானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே. (எ)

வாயானைமனத்தானைமனத்துணின்றகருத்தானைக்கருத்தறிந்துமுடிப்பான்றன்னைத், தூயானைத்தூவெள்ளையேற்றான்றன்னைச்சுடர்த்திங்கட்சடையானைத்தொடர்ந்துநின்றென், தாயானைத்தவமாயதன்மையானைத்தலையாயதேவாதிதேவர்க் கென்றுஞ், சேயானைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற் றேனானே. (அ)

பகைச்சுடராய்ப்பாவமறுப்பான்றன்னைப்பழியிலியாய ...
... கைச்சுடராய்வல்லசுரர்புரமட்டானைவளைவியர்யெல்லார்க்குமருள்செய்வானை

மிகைச்சுடரைவிண்ணவர்கண்மேலப்பாலைமேலாயதேவாதிதேவர்க்கென்றும்
திகைச்சுடரைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

மலையானைமாமேருமன்னினானைவளர்புன்சடையானைவானோர்தங்கள்
தலையானையென்றலையினுச்சியென்றுந்தாபித்திருந்தானைத்தானேயெங்கும்
துலையாகவொருவரையுமில்லாதானைத்தோன்றாதார்மதின்மூன்றும்வாளவெய்த
கூட[illegible] நவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்றேனானே.

தூர்த்தனைத்தோண்முடிபத்திறுத்தான்றன்னைத்தொன்னரம்பினின்னிசை
கேட்டருள்செய்தானைப், பார்த்தனைப்பணிகண்டுபரிந்தான்றன்னைப்பரிந்தவற்குப்
பாசுபதமீந்தான்றன்னை, ஆத்தனையடியேனுக்கன்பன்றன்னையளவிலாப்பல்லூழி
கண்டுநின்ற, தீர்த்தனைத்தென்கூடற்றிருவாலவாய்ச்சிவனடியேசிந்திக்கப்பெற்
றேனானே. (கக)

திருச்சிற்றம்பலம்.

## உ௩௪. திருநள்ளாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆதிக்கணான்முகத்திலொன்றுசென்றுவல்லாதசொல்லுரைக்கத்தன்கைவாளால்
சேதித்ததிருவடியைச்செல்லநல்லசிவலோகநெறிவகுத்துக்காட்டுவானை
மாதிமையமாதோர்கூறாயினானைமாமலர்மேலயனோடுமாலுங்காணா
நாதியைநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (க)

படையானைப்பாசுபதவேடத்தானைப்பண்டனங்கற்பார்த்தானைப்பாவமெல்லாம்
அடியாமைக்காப்பானையடியார்தங்களருமருந்தையாவாவென்றருள்செய்வானைச்
சடையானைச்சந்திரனைத்தரித்தான்றன்னைச்சங்கத்தமுத்தனையவெள்ளையேற்றி
நடையானைநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (உ)

படவரவமொன்றுகொண்டரையிலார்த்தபராபரனைப்பைஞ்ஞீலிமேவினானை
அடலரவம்பற்றிக்கடைந்தநஞ்சையமுதாகவுண்டானையாதியானை
மடலரவமன்னுபூங்கொன்றையானைமாமணியைமாணிக்காய்க்காலன்றன்னை
நடலரவஞ்செய்தானைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௩)

கட்டங்கமொன்றுதங்கையிலேந்திக்கங்கணமுங்காதில்விடுதோடுமிட்டுச்
சுட்டங்கங்கொண்டுதுதையப்பூசிச்சுந்தரனாய்ச்சூலங்கையேந்தினானைப்
பட்டங்கமாலைநிறையச்சூடிப்பல்கணமுந்தாமும்பார்தகாட்டில்
நட்டங்கமாடியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (௪)

உலந்தார்தம்மங்கங்கொண்டுலகமெல்லாமொருகொடியினுழல்வானையுலப்பில்
செல்வம், சிலந்திதனக்கருள்செய்ததேவதேவைத்திருச்சிராப்பள்ளியெஞ்சிவலோ

கனைக், கலந்தார் தம்மனத்தென் றுங்காதலானைக்கச்சியேகம்பனைக்கமழ்பூங்கொன்றை, நலந்தாங்குநம்பியைநள்ளாற்றானை நானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே.()

குலங்கொடுத்துக்கோணீக்கவல்லான்றன்னைக்குலவரையின்மடப்பாவையிடப்பாலானை, மலங்கெடுத்துமாதீர்த்தமாட்டிக்கொண்டமறையவனைப்பிறைதவழ்செஞ்சடையினானைச், சலங்கெடுத்துத்தயாமூலதன்மமென்னுந்தத்துவத்தின்வழிநின்றுதாழ்ந்தார்க்கெல்லா, நலங்கொடுக்குநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (சு)

பூவிரியுமலர்க்கொன்றைச்சடையினானைப்புறம்பயத்தெம்பெருமானைப்புகலூரானை, மாவிரியக்களிறுரித்தவுரந்தன்றன்னைமறைக்காடும்வலிவலமுமன்னினானைத், தேவிரியத்திகழ்தக்கன்வேள்வியெல்லாஞ்சிதைத்தானையுதைத்தவன்றன்சிரங்கொண்டானை, நாவிரியமறைநவின்றநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (எ)

சொல்லானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தொல்லவுணர்புரமூன்றுமெரியச்செற்
வில்லானையெல்லார்க்குமேலானானைமெல்லியலாள்பாகனைவேதநான்கும் [ற
கல்லாலினீழற்கீழறங்கண்டானைக்காளத்தியானைக்கயிலைமேய
நல்லானைநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (அ)

குன்றாதமாமுனிவன்சாபநீங்கக்குரைகழலாற்கூற்றுவனைக்குமைத்ததேனை
அன்றவ்வவுணர்புரமூன்றும்வேவவாரழல்வாயோட்டியடர்வித்தானைச் [கென்றும்
சென்றுதுவேண்டிற்றொன்றீவான்றன்னைச்சிவனேயெம்பெருமானென்றிருப்பார்க்
நன்றுகுநம்பியைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே. (கூ)

இறவாமேவரம்பெற்றேனென்றுமிக்கவிராவணனையிருபதுதோணெரியவூன்றி
உறவாகியின்னிசைகேட்டிரங்கிமீண்டேயுற்றபிணிதவிர்த்தருளவல்லான்றன்னை
மறவாதார்மனத்தென்றுமன்னினானைமாமதியமலர்க்கொன்றைவன்னிமத்தம்
நறவார்செஞ்சடையானைநள்ளாற்றானைநானடியேனினைக்கப்பெற்றுய்ந்தவாறே.

திருச்சிற்றம்பலம்.

21

உ௯௫. நவாக்கூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

முடித்தாமரையணிந்தமூர்த்திபோலுமூவுலகுந்தாமாகிநின்றார்போலும
கடித்தாமரையேய்ந்தகண்ணார்போலுங்கல்லலகுபாணிபயின்றார்போலும்
கொடித்தாமரைக்காடேநாடுந்தொண்டர்குற்றேவலுமகிழ்ந்தகுழகர்போலும்
அடித்தாமரைமலர்மேல்வைத்தார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே.

ஓதிற்றொருநூலுமில்லைபோலுமுணராப்படாததொன்றில்லைபோலும்
காதிற்குழையிலங்கப்பெய்தார்போலுங்கவலைப்பிறப்பிடும்மைகாப்பார்போலும்
வேதத்தோடாறங்கஞ்சொன்னார்போலும்விடஞ்சூழ்ந்திருண்டமிடற்றார்போலும்
ஆதிக்கணாகிநின்றார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே.

மையார்மலர்க்கண்ணாள்பாகர்போலுமணிநீலகண்டமுடையார்போலும்
நெய்யார்திரிசூலங்கையார்போலுநீறேறுதோளெட்டுடையார்போலும்
வையார்மழுவாட்படையார்போலும்வளர்ஞாயிறன்னவொளியார்போலும்
ஐவாயரவமொன்றார்த்தார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௩)

வடிவிளங்குவெண்மழுவாள்வல்லார்போலும்வஞ்சர்க்கரு[illegible]ண்டார்போலும், பொடிவிளங்குமுந்நூல்சேர்மார்பர்போலும்பூங்கங்கைசோர்ந்தசடையார்போலும், கடிவிளங்குகொன்றையந்தாரார்போலுங்கட்டங்கமேந்தியகையர்போலும், அடிவிளங்குசெம்பொற்கழலார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்ப(னாரே). (௪)

ஏகாசமாம்புலித்தோல்பாம்புதாழ்விடுவெண்டலைகலனாவேந்தினாரும்
மேகாசங்கட்டழித்தவெள்ளிமாலைபுனலார்சடைமுடிமேற்புனைந்தார்போலும்
மாகாசமாயவெண்ணீருந்தியுமதியுமதிபிறந்தவிண்ணுமண்ணும்
ஆகாசமென்றிவையுமானார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௫)

மாதூரும்வாணெடுங்கண்செவ்வாய்மென்றோண்மலைமகளைமார்பத்தணைந்தார்
மூதூர்முதுதிரைகளானார்போலுமுதலுமிறுதியுமில்லார்போலும் [போலும்
தீதூரநல்வினையாய்நின்றார்போலுந்திசையெட்டுந்தாமேயாஞ்செல்வர்போலும்
ஆதிரைநாளாயமர்ந்தார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௬)

மால்யானைமத்தகத்தைக்கீண்டார்போலுமான்றோலுடையாமகிழ்ந்தார்போலும், கோலானைக்கோலழலாற்காய்ந்தார்போலுங்குழவிப்பிறைசடைமேல்வைத்தார்போலும், காலனைக்காலாற்கடந்தார்போலுங்கயிலாயந்தம்மிடமாக்கொண்டார்போலும், ஆலானைந்தாடலுகப்பார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே.

கண்ணார்ந்தநெற்றியுடையார்போலுங்காமனையுங்கண்ணழலாற்காய்ந்தார்போலும், உண்ணவருநஞ்சமுண்டார்போலுமூழித்தீயன்னவொளியார்போலும், எண்ணாயிரங்கோடிப்பேரார்போலுமேறேறிச்செல்லுமிறைவர்போலும், அண்ணாவுமாரூருமேயார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௮)

கடியார்தளிர்கலந்தகொன்றைமாலைகதிர்போதுதாதணிந்தகண்ணிபோலும்
நெடியானசதுமுகனுந்தேடநின்றநீலநற்கண்டத்திறைவர்போலும்
[illegible] ந்தம்வண்ணமாவார்போலும்
அடியார்புகலிடமதானார்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே. (௯)

திரையானுஞ்செந்தாமரைமேலானுந்தேர்ந்தவர்கடாந்தேடிக்காணார்நாணும்
புரையானெனப்படுவார்தாமேபோலும்போரேறுதாமேறிச்செல்வார்போலும்
கரையாவரைவில்லேநாகநாணக்காலத்தீயன்னகனலார்போலும்
வரையார்மதிலெய்தவண்ணர்போலுமாக்கூரிற்றான்றோன்றியப்பனாரே, (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சுயம்புநாதர்; முதல்வி - கட்கநேத்திரிகை.

## ௨௩௫. திருநாகைக்காரோணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாரார்பரவும்பழனத்தானைப்பருப்பதத்தானைப்பைஞ்ஞீலியானைச்
சீரார்செழும்பவளக்குன்றொப்பானைத்திகழுந்திருமுடிமேற்றிங்கள்சூடிப்
பேராயிரமுடையபெம்மான்றன்னைப்பிறர்தன்னைக்காட்சிக்கரியான்றன்னைக்
காரார்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. (௧)

விண்ணோர்பெருமானைவீரட்டானைவெண்ணீறுமெய்க்கணிந்தமேனியானைப்
பெண்ணானையாணானைப்பேடியானைப்பெரும்பெற்றத்தண்புலியூர்பேணினானை
அண்ணாமலையானையானைந்தாடுமணியாரூர்வீற்றிருந்தவம்மான்றன்னைக்
கண்ணார்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. (௨)

சிறையார்வரிவண்டுதேனேபாடுந்திருமறைக்காட்டெந்தைசிவலோகனை
மறையான்றன்வாய்மூருங்கீழ்வேளூரும்வலிவலமுந்தேவூருமன்னியங்கே
உறைவானையுத்தமனையொற்றியூரிற்பற்றியாள்கின்றபரமன்றன்னைக்
கறையார்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. (௩)

அன்னமாம்பொய்கைசூழம்பரானையாச்சிராமநகருமானைக்காவும்
முன்னமேகோயிலாக்கொண்டான்றன்னைமூவுலகுந்தானாயமூர்த்திதன்னைச்
சின்னமாம்பன்மலர்களன்றேசூடிச்செஞ்சடைமேல்வெண்மதியஞ்சேர்த்தினானைக்
கன்னியம்புன்னைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. (௪)

கடையுடையநல்லெருதொன்றூர்வான்றன்னைஞானப்பெருங்கடலைநல்லூர்மேய
படையுடையமழுவாளொன்றேந்தினானைப்பன்மையேபேசும்படிறன்றன்னை
மடையிடையேவாளையுகளும்பொய்கைமருகல்வாய்ச்சோதிமணிகண்டனைக்
கடையுடையநெடுமாடமோங்குநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. ( )

புலங்கொள்பூந்தேறல்வாய்ப்புகலிக்கோனைப்பூம்புகார்க்கற்பகத்தைப்புன்கூர்மேய
அலங்கலங்கழனிசூழணிநீர்க்கங்கையவிர்சடைமேலாதரித்தவம்மான்றன்னை
இலங்குதலைமாலைபாம்புகொண்டேகாசமிட்டியங்குமீசன்றன்னைக்
கலங்கற்கடல்புடைசூழ்ந்தநாகைக்காரோணத்தென்றுங்காணலாமே. (௬)

பொன்மணியைப்பூங்கொன்றைமாலையானைப்புண்ணியனைவெண்ணீறுபூசினானைச்
சின்மணியமூவிலையஞ்சூலத்தானைத்தென்சிராப்பள்ளிச்சிவலோகனை
மன்மணியைவான்சுடர்...ராப்பேணி...கொண்டு...மமை றவல்
கன்மணிகள்வெண்டிரைசூழ்ந்தணுகைக்காரோணத்தென்ஞான்றுங்காணலாமே. ()

வெண்டலையும்வெண்மழுவுமேந்தினானைவிரிகோவணமசைத்தவெண்ணீற்றானைப்
புண்டலையமால்யானையுரிபோர்த்தானைப்புண்ணியனைவெண்ணீறணிந்தான்றன்னை
எண்டிசையுமெரியாடவல்லான்றன்னையேகம்பமேயானையெம்மான்றன்னைக்
கண்டலங்கழனிசூழ்ந்தணுகைக்காரோணத்தென்ஞான்றுங்காணலாமே. (அ)

சொல்லார்ந்தசோற்றுத்துறையான்றன்னைத்தொன்னர ? நன்னெறியாற்றார்ப் பான்றன்னை, வில்லானைமீயச்சூர்மேவினானைவேதியர்களால்வர்க்கும்வேதஞ்சொல் லிப், பொல்லாதார்தம்மரணம்மூன்றும்பொன்றப்பொறியரவமார்பாரப்பூண்டான் றன்னைக், கல்லாலின்கீழானைக்கழிசூழ்நாகைக் காரோணத்தென்ஞான்றுங்காண லாமே. (கூ)

மனைதுறந்தவல்லமணர்தங்கள்பொய்யுமாண்புரைக்குமனக்குண்டர்தங்கள் பொய்யும், சினைபொதிந்தசீவரத்தர்தங்கள்பொய்யுமெய்யென்றுகருதாதேபோத நெஞ்சே, பனையுரியைத்தன்னுடலிற்போர்த்தவெந்தையவன்பற்றேபற்றாகக்காணி னல்லால், கனைகடலின்றென்கழிசூழ்ந்தணுகைக்காரோணத்தென்ஞான்றுங்காண லாமே. (கo)

நெடியானுமலரவனுநேடியாங்கேநேருருவங்காணுமேசென்றுநின்ற
படியானைப்பாம்புரமேகாதலானைப்பாம்பரையோடார்த்தபடிறன்றன்னைச்
செடிநாறும்வெண்டலையிற்பிச்சைக்கென்றுசென்றானைநின்றியூர்மேயான்றன்னைக்
கடிநாறும்பூஞ்சோலையந்தணுகைக்காரோணத்தென்ஞான்றுங்காணலாமே. (கக)

திருச்சிற்றம்பலம்.

---

## உகஎ. திருமறைக்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தூண்டுசுடரனையசோதிகண்டாய்தொல்லமரர்சூளாமணிதான்கண்டாய்
காண்டற்கரியகடவுள்கண்டாய்கருதுவார்க்காற்றவெளியான்கண்டாய்
வேண்டுவார்வேண்டுவதேயீவான்கண்டாய்மெய்ந்நெறிகண்டாய்விரதமெல்லாம்
மாண்டமனத்தார்மனத்தான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (க)

...ரவல்லவன்கண்டாய்காபாலிகண்டாய்திகழுஞ்சோதி
மெய்கிளருஞானவிளக்குக்கண்டாய்மெய்யடியாருள்ளத்துவித்துக்கண்டாய்
பைகிளருநாகமசைத்தான்கண்டாய்பராபரன்கண்டாய்பாசூரான்கண்டாய்
வைகிளருங்கூர்வாட்படையான்கண்டாய்மறைக்காட்டுறையுமணாளன்றானே. (உ)

## 24 ௨௩ அ. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கைம்மான்மதகளிற்றினுரிவையான்காண்கறைக்கண்டன்காண்கண்ணார்நெற்றியான்காண், அம்மான்காணாடரவொன்றாட்டினான்காணனலாடிகாணயில்வாய்ச்சூலத்தான்காண், எம்மான்காணேழுலகுமாயினான்காணெரிசுடரோன்காணிலங்குமழுவாளன்காண், செம்மானத்தொளியன்னமேனியான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௧)

ஊனேறுபடுதலையிலுண்டியான்காணோங்காரன்காணூழிமுதலானான்காண், ஆனேறொன்றூர்ந்துழலுமையாறன்காணண்டன்காணண்டத்துக்கப்பாலான்காண் மானேறுகரதலத்தெம்மணிகண்டன்காண்மாதவன்காண்மாதவத்தின்விளைவானான்காண், தேனேறுமலர்க்கொன்றைக்கண்ணியான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௨)

ஏவணத்தசிலையான்முப்புரமெய்தான்காணிறையவன்காண்மறையவன்காணீசன்றான்காண், தூவணத்தசுடர்ச்சூலப்படையினான்காண்சுடர்மூன்றுங்கண்மூன்றாக்கொண்டான்றான்காண், ஆவணத்தாலென்றன்னையாட்கொண்டான்காணனலாடிகாணடியார்க்கமிர்தானான்காண், தீவணத்ததிருவுருவிற்கரியுருவன்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௩)

கொங்குவார்மலர்க்கண்ணிக்குற்றாலன்காண்கொடுமழுவன்காண்கொல்லைவெள்ளேற்றான்காண், எங்கள்பாற்றுயர்கெடுக்குமெம்பிரான்காணேழ்கடலுமேழ்மலையுமாயினான்காண், பொங்குமாகருங்கடனஞ்சுண்டான்றான்காண்பொற்றூணன்காண்செம்பவளத்திரள்போல்வான்காண், செங்கண்வாளரவமதியோடுடன்வைத்தான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௪)

காரேறுநெடுங்குடுமிக்கயிலாயன்காண்கறைக்கண்டன்காண்கண்ணார்நெற்றியான்காண், போரேறுநெடுங்கொடிமேறுயர்த்தினான்காண்புண்ணியன்காணெண்ணரும்பல்குணத்தினான்காண், நீரேறுசுடர்ச்சூலப்படையினான்காணின்மலன்காணிகரேதுமில்லாதான்காண், சீரேறுதிருமாலோர்பாகத்தான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௫)

பிறையரவக்குறுங்கண்ணிச்சடையினான்காண்பிறப்பிலிகாண்பெண்ணோடாணாயினான்காண், கறையுருவமணிமிடற்றுவெண்ணீற்றான்காண்கழற்றொழுவார்பிறப்பறுக்குங்காபாலிகாண், இறையுருவக்கனவளையாளிடப்பாகன்காணிருநிலன்காணிருநிலத்துக்கியல்பானான்காண், சிறையுருவக்களிவண்டார்செம்மையான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௬)

தலையுருவச்சிரமாலைசூடினான்காண்டமருலகந்தலைகலனாப்பலிகொள்வான்காண் அலையுருவச்சுடராழியாக்கினான்காணவ்வாழிநெடுமாலுக்கருளினான்காண் கொலையுருவக்கூற்றுதைத்தகொள்கையான்காண்கூரெரிநீர்மண்ணொடுகாற்றாயினான் சிலையுருவச்சரந்துரந்ததிறத்தினான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே.

ஐயன்காண்குமரன்காணாதியான்காணடன்மழுவாடாளொன்றுபியன்மேலேந்து, கையன்காண்கடற்பூதப்படையினான்காண்கண்ணெரியாலங்கணையோனுடல்காய்ந்தான்காண், வெய்யன்காண்டண்புனல்சூழ்செஞ்சடையான்காண்வெண்ணீற்றான்காண்விசயற்கருள்செய்தான்காண், செய்யன்காண்கரியன்காண்வெளியோன்றான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௮)

மலைவளர்த்தமடமங்கைபாகத்தான்காண்மயானத்தான்காண்மதியஞ்சூடினான்காண், இலைவளர்த்தமலர்க்கொன்றைமாலையான்காணிறையவன்காணெறிதிரைநீர்நஞ்சுண்டான்காண், கொலைவளர்த்தமூவிலையசூலத்தான்காண்கொடுங்குன்றன்காண்கொல்லையேற்றினான்காண், சிலைவளர்த்தசரந்துரந்ததிறத்தினான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௯)

பொற்றாதுமலர்க்கொன்றைசூடினான்காண்புரிநூலன்காண்பொடியார்மேனியான்காண், மற்றாருந்தன்னொப்பாரில்லாதான்காண்மறையோதிகாணெறிநீர்நஞ்சுண்டான்காண், எற்றாலுங்குறையொன்றுமில்லாதான்காணிறையவன்காண்மறையவன்காணீசன்றான்காண், செற்றார்கள்புரமூன்றுஞ்செற்றான்றான்காண்டிருவாரூரான்காணென்சிந்தையானே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

## 25 ௨௩௧. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

உயிராவணமிருந்துற்றுநோக்கியுள்ளக்கிழியினுருவெழுதி
உயிராவணஞ்செய்திட்டுன்கைத்தந்தாலுணரப்படுவாரோடொட்டிவாழ்தி
அயிராவணமேறாதானேறேறியமரர்நாடாளாதேயாரூராண்ட
அயிராவணமேயென்னம்மானேநின்னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே. (௧)

எழுதுகொடியிடையாரேழைமென்றோளிளையவர்கணம்மையிகழாமுன்னம்
பழுதுபடநினையேல்பாவிநெஞ்சேபண்டுதானென்னோடுபகைதானுண்டோ
முழுதுலகில்வானவர்கண்முற்றுங்கூடிமுடியாலுறவணங்கிமுற்றம்பற்றி
அழுதுதிருவடிக்கேபூசைசெய்யவிருக்கின்றானூர்போலுமாரூர்தானே. (௨)

தேரூரார்மாவூரார்திங்களூரார்திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடிக்
காரூராநின்றகழனிச்சாயற்கண்ணார்ந்தமாடங்கலந்துதோன்றும்
ஓரூராவுலகெலாமொப்பக்கூடியுமையாண்மணவாளாவென்றுவாழ்த்தி
ஆரூராவாரூராவென்கின்றார்களமரர்கடம்பெருமானேயெங்குற்றாயே. (௩)

கோவணமோதோலோவுடையாவதுகொல்லேறோவேழமோவூர்வதுதான் •[யோ
பூவணமோபுறம்பயமோவன்றாயிற்றான்பொருந்தாதார்வாழ்க்கைதிருந்தாமை [ர்
தீவணத்தசெஞ்சடைமேற்றிங்கள்சூடித்திசைநான்கும்வைத்துகந்தசெந்தீவண்ண
ஆவணமோவொற்றியோவம்மானார்தாமறியேன்மற்றாராமாரூர்தானே. (௪)

ஐயன்காண்குமரன்காணுதியான்காணடன்மழுவாடாஞென்றுபியன்மேலே ந்து, கையன்காண்கடற்பூதப்படையினன்காண்கண்ணொரியாலெங்கணையோனுட ல்காய்ந்தான்காண், வெய்யன்காண்டண்புனல் ணீற்றான்காண்விசயற்கருள்செய்தான்காண், செய்யன்காண்கரியன்காண்வெளி யோன்றான்காண்டிருவாரூரான்காணெஞ்சிந்தையானே. (அ)

மலைவளர்த்தமடமங்கைபாகத்தான்காண்மயானத்தான்காண்மதியஞ்சூடிஞ ன்காண், இலைவளர்த்தமலர்க்கொன்றைமாலையான்காணிறையவன்காணெறிதிரை நீர்நஞ்சுண்டான்காண், கொலைவளர்த்தமூவிலையசூலத்தான்காண்கொடுங்குன்றன் காண்கொல்லையேற்றினன்காண், சிலைவளர்த்தசரந்துரந்ததிறத்தினன்காண்டிரு வாரூரான்காணெஞ்சிந்தையானே. (கூ)

பொற்றாதுமலர்க்கொன்றைசூடினன்காண்புரிநூலன்காண்பொடியார்மேனி யான்காண், மற்றாருந்தன்னொப்பாரில்லாதான்காண்மறையோதிகாணெறிநீர்நஞ் சுண்டான்காண், எற்றாலுங்குறையொன்றுமில்லாதான்காணிறையவன்காண்ம றையவன்காணீசன்றான்காண், செற்றார்கள்புரமூன்றுஞ்செற்றன்றான்காண்டிரு வாரூரான்காணெஞ்சிந்தையானே. (கம)

திருச்சிற்றம்பலம்.

## உரு௲. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

உயிராவணமிருந்துற்றுநோக்கியுள்ளக்கிழியினுருவெழுதி
உயிராவணஞ்செய்திட்டுன்கைத்தந்தா லுணரப்படுவாரோடொட்டிவாழ்தி
அயிராவணமேறாதானேறேறியமரர்நாடாளாதேயாரூராண்ட
அயிராவணமேயென்னம்மானே நின்னருட்கண்ணானோக்காதாரல்லாதாரே. (க)

எழுதுகொடியிடையாரேழைமென்றோளிளையவர்கணம்மையிகழாமுன்னம்
பழுதுபடநினையேல்பாவிநெஞ்சேபண்டுதானென்னோடுபகைதானுண்டோ
முழுதுலகில்வானவர்கண்முற்றுங்கூடிமுடியாலுறவணங்கிமுற்றம்பற்றி
அழுதுதிருவடிக்கேபூசைசெய்யவிருக்கின்றானூர்போலுமாரூர்தானே. (உ)

தேரூரார்மாவூரார்திங்களூரார்திகழ்புன்சடைமுடிமேற்றிங்கள்சூடிக்
காரூராநின்றகழனிச்சாயற்கண்ணார்ந்தமாடங்கலந்துதோன்றும்
ஓரூராவுலகெலாமொப்பக்கூடியுமையாண்மணவாளாவென்றுவாழ்த்தி
ஆரூராவாரூராவென்கின்றார்களமரர்கடம்பெருமானேயெங்குற்றாயே. (ங)

கோவணமோதோலோவுடையாவதுகொல்லேறோவேழமோவூர்வதுதான் [யோ
பூவணமோபுறம்பயமோவன்றாயிற்றான்பொருந்தாதார்வாழ்க்கைதிருந்தாமை [ர்
தீவணத்தசெஞ்சடைமேற்றிங்கள்சூடித்திசைநான்கும்வைத்துகந்தசெந்தீவண்ண
ஆவணமோவொற்றியோவம்மானார்தாமறியேன்மற்றாராமாரூர்தானே. (ச)

## ௨௪௦. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாதித்தன்றிருவுருவிற்பெண்கொண்டானைப்பண்டொருகாற்றசமுகனையழு
வித்தானை, வாதித்துத்தடமலரான்சிரங்கொண்டானைவண்கருப்புச்சிலைக்காமனு
டல்கொண்டானைச், சோதிச்சந்திரன்மேனிமறுச்செய்தானைச்சுடரங்கிதேவனை
யோர்கைக்கொண்டானை, ஆதித்தன்பற்கொண்டவம்மான்றன்னையாரூரிற்கண்ட
டியேனயர்த்தவாறே. (௧)

வெற்புறுத்ததிருவடியாற்கூற்றட்டானைவிளக்கினொளிமின்னினொளிமுத்தின்
சோதி, ஒப்புறுத்ததிருவுருவத்தொருவன்றன்னையோதாதேவேதமுணர்ந்தான்
றன்னை, அப்புறுத்தகடனஞ்சமுண்டான்றன்னையமுதுண்டாருலந்தாலுமுலவா
தானை, அப்புறத்தநீரகத்தேயழலானானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௨)

ஒருகாலத்தொருதேவர்கண்கொண்டானையூழிதோறூழியுயர்ந்தான்றன்னை,
வருகாலஞ்செல்காலமாயினானைவண்கருப்புச்சிலைக்காமனுடலட்டானைப், பொரு
வேழக்களிற்றுரிவைப் போர்வையானைப் புள்ளரையனுடறன்னைப் பொடிசெய்தா
னை, அருவேள்விதகர்த்தெச்சன்றலைகொண்டானை யாரூரிற்கண்டடியேனயர்த்த
வாறே. (௩)

மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானைவெண்பளிங்கினுட்பதித்தசோதி
யானை, ஒப்பானையொப்பிலாவொருவன்றன்னை யுத்தமனைநித்திலத்தை யுலகமெல்
லாம், வைப்பானைக்களைவானைவருவிப்பானைவல்வினையேன்மனத்தகத்தேமன்னினா
னை, அப்பாலைக்கப்பாலைக்கப்பாலானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௪)

பிண்டத்திற்பிறந்ததொருபொருளைமற்றைப்பிண்டத்தைப்படைத்ததனைப்
பெரியவேதத், துண்டத்திற்றுணிபொருளைச்சுடுதீயாகிச்சுழல்காலாய்நீராகிப்பா
ராயிற்றைக், கண்டத்திற்றீநஞ்சமுதுசெய்துகண்மூன்றுபடைத்ததொரு கரும்
பைப்பாலை, அண்டத்துக்கப்புறத்தார்தமக்குவித்தையாரூரிற்கண்டடியேனயர்த்
தவாறே. (௫)

நீதியாய்நிலனாகிநெருப்பாய்நீராய்நிறைகாலாயிவையிற்றினியமமாகிப்
பாதியாயொன்றாகியிரண்டாய்மூன்றாய்ப்பரமாணுவாய்ப்பழுத்தபண்களாகிச்
சோதியாயிருளாகிச்சுவைகளாகிச்சுவைகலந்தவப்பாலாய்வீடாய்வீட்டின்
ஆதியாயந்தமாய்நின்றான்றன்னையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௬-௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௪௧. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பொய்ம்மாயப்பெருங்கடலிற்புலம்பாநின்றபுண்ணியங்காடீவினைகாடினீவ
ரீங்கள், இம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க்கில்லையேகிடந்துதான்யானில்
வானோர், தம்மானைத்தலைமானைத்தண்ணலாரூர்த்தடங்கடலைத்தொடர்ந்தோரை
யடங்கச்செய்யும், எம்மான்றனடித்தொடர்வானுழிதர்கின்றேனிடையேநின்கெடு
வீர்காளிடதேன்மின்னே. (௧)

## ௨௬௦. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாதித்தன்றிருவுருவிற்பெண்கொண்டானைப்பண்டொருகாற்றசமுகனையழுவித்தானை, வாதித்துத்தடமலரான்சிரங்கொண்டானைவண்கருப்புச்சிலைக்காமனுடல்கொண்டானைச், சோதிச்சந்திரன்மேனிமறுச்செய்தானைச்சுடரங்கிதேவனையோர்கைக்கொண்டானை, ஆதித்தன்பற்கொண்டவம்மான்றன்னையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௧)

வெற்புறுத்ததிருவடியாற்கூற்றட்டானைவிளக்கினொளிமின்னினொளிமுத்தின்சோதி, ஒப்புறுத்ததிருவுருவத்தொருவன்றன்னையோதாதேவேதமுணர்ந்தான்றன்னை, அப்புறுத்தகடனஞ்சமுண்டான்றன்னையமுதுண்டாருலந்தாலுமுலவாதானை, அப்புறத்தநீரகத்தேயழலானானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௨)

ஒருகாலத்தொருதேவர்கண்கொண்டானையூழிதோறூழியுயர்ந்தான்றன்னை, வருகாலஞ்செல்காலமாயினானைவண்கருப்புச்சிலைக்காமனுடலட்டானைப், பொருவேழக்களிற்றுரிவைப் போர்வையானைப் புள்ளரையனுடறன்னைப்பொடிசெய்தானை, அருவேள்விதகர்த்தெச்சன்றலைகொண்டானை யாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௩)

மெய்ப்பால்வெண்ணீறணிந்தமேனியானைவெண்பளிங்கினுட்பதித்தசோதியானை, ஒப்பானையொப்பிலாவொருவன்றன்னை யுத்தமனைநித்திலத்தை யுலகமெல்லாம், வைப்பானைக்களைவானைவருவிப்பானைவல்வினையேன்மனத்தகத்தேமன்னினானை, அப்பாலைக்கப்பாலைக்கப்பாலானையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௪)

பிண்டத்திற்பிறந்ததொருபொருளைமற்றைப்பிண்டத்தைப்படைத்ததனைப்பெரியவேதத், துண்டத்திற்றுணிபொருளைச்சுடுதீயாகிச்சுழல்காலாய்நீராகிப்பாராயிற்றைக், கண்டத்திற்றீநஞ்சமுதுசெய்துகண்மூன்றுபடைத்ததொரு கரும்பைப்பாலை, அண்டத்துக்கப்புறத்தார்தமக்குவித்தையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௫)

நீதியாய்நிலனாகிநெருப்பாய்நீராய்நிறைகாலாயிவையிற்றினியமமாகிப்
பாதியாயொன்றாகியிரண்டாய்மூன்றாய்ப்பரமாணுவாய்ப்பழுத்தபண்களாகிச்
சோதியாயிருளாகிச்சுவைகளாகிச்சுவைகலந்தவப்பாலாய்வீடாய்வீட்டின்
ஆதியாயந்தமாய்நின்றான்றன்னையாரூரிற்கண்டடியேனயர்த்தவாறே. (௬-௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௬௧. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பொய்ம்மாயப்பெருங்கடலிற்புலம்பாநின்றபுண்ணியங்காடீவினைகாடிருவே நீங்கள், இம்மாயப்பெருங்கடலையரித்துத்தின்பீர்க்கில்லையேகிடந்துதான்யானேல் வானோர், தம்மானைத்தலைமகனைத்தண்ணாரூர்த்தடங்கடலைத்தொடர்ந்தோரையடங்கச்செய்யும், எம்மான்றனடித்தொடர்வானுழிதர்கின்றேனிடையிலேன்கெடுவீர்காளிடேகன்மின்னே. (௧)

ஐம்பெருமாபூதங்காளொருவீர்வேண்டிற்றொருவீர்வேண்டீரீண்டிவ்வவனி
யெல்லாம், முப்புரமேயும்வசமேயாக்கவல்லீர்க்கில்லையேநுகர்போகம்யானேல்வா
னோர்,உம்பருமாயூழியுமாயுலகேழாகியொள்ளாரூர்நள்ளாறர்தாம்வள்ளல்வானோர்,
தம்பெருமானாய்நின்ற வரனைக்காண்பேன் றடைப்படுவேனாக்கருதித் தருக்கேன்
மின்னே. (௨)

சில்லுருவிற்குறியிருத்திநித்தல்பற்றிச்செழுங்கணுணேக்குறிதூங்கமன்று
பல்லுருவிற்றொழில்பூண்டபஞ்சபூதப்பளகீரும்வசமன்றேபாரேலெல்லாம்
சொல்லுருவிற்சுடர்மூன்றாயுருவுமூன்றாய்த்தூநயனமூன்றாகியாண்டவாரூர் [னே.
நல்லுருவிற்சிவனடியேயடைவேனும்மானமைப்புண்ணேனென்கணமைக்குமீர்கடமின்க

உன்னுருவிற்சுவையொளியூறோசைநாற்றத் துறுப்பினதாகுறிப்பாகுமைவீர்
நுங்கள், மன்னுருவத்தியற்கைகளால்வைப்பிர்க்கையோவையகமேப்பாதாதேயா
னேல்வானோர், பொன்னுருவைத்தென்னாரூர்மன்னுகுன்றைப்புகிக்கெழிலார்ந்தசி
வக்கொழுந்தைப்புகுந்தென்சிந்தை, தன்னுருவைத்தந்தவனையெந்தநன்னைத்த
லைப்படுவேன்றலைப்படுப்பான்றருக்கேன்மின்னே. (௪)

துப்பினைமுன்பற்றறுவிறலேமிக்கசோர்வுபடுசூட்சியமேசுகமேநீங்கள், துப்
பினையைப்பாவித்திவ்வுலகமெல்லா முழறுமிதுகுறைமுடிப்பீர்க்கிதேயன்றன்
வைப்பினைப்பொன்மதிலாரூர்மணியைவைகன்மணாளனையெம்பெருமானைவானோர்
தங்கள், அப்பனைச்செப்படவடைவேனும்மானுமாட்டுணேனொட்டந்தீங்கலை
யேன்மின்னே. (௫)

பொங்குமதமானமேயார்வச்செற்றக்குரோதமேயுலோபமேபொறையேநீங்
கள், உங்கள்பெருமாநிலத்தினெல்லையெல்லாமுழமிதுகுறைமுடிப்பீர்க்கிதேயா
னேல், அங்கமலத்தயனொடுமாலாகிமற்றுமதற்கப்பாலொன்றாகியறியவொண்ணாச்,
செங்கனகத்தனிக்குன்றைச்சிவனையாரூர்ச் செல்வனைச்சேர்வேனும்மாற்செறுக்
(௬)

இடர்பாவமெனமிக்கதுக்கவேட்கைவெறுப்பேயென்றனைவீருமுலகமேயா
டிக், குடைகின்றீர்க்குலசங்கள்குலுங்கிநுங்கள்குறிநின்றதமையாதேயானேல்
வானோர், அடையார்தம்புரமூன்றுமெரிசெய்தானையமரர்கட்பெருமானையாரனை
யாரூர், உடையானைக்கடுகச்சென்றடைவேனும்மாலாட்டுணேனொட்டந்தீங்கலை
யேன்மின்னே. (௭)

விரைந்தாளுநல்குரவேசெல்வேபொல்லாவெகுட்சியேமகிழ்ச்சியேவெறுப்
பேநீங்கள், இரைந்தோடிமாநிலத்தையரித்துத்தின்பீர்க்கில்லையேநுகர்போகம்
யானேல்வானோர், கரைந்தோடவருநஞ்சையமுதாச்செய்தகற்பகத்தைத்தற்பரத்
தைத்திருவாரூரில், பரஞ்சோதிதனைக்காண்பேன்படேனும்பண்பிற்பரிந்தோடி
யோட்டந்துபகட்டேன்மின்னே. (௮)

மூள்வாயதொழிற்பஞ்சேந்திரியவஞ்சமுகரிகாண்முழுதுமிவ்வுலகையோடி
நாள்வாயுநும்முடையவம்மரானைநடாத்துகின்றீர்க்கமையாதேயானேல்வானோர்

நீள்வானமுகடதனைத்தாங்கிநின் றநெடுந்தூணைப்பாதாளக்கருவையாரூர் [னே.
ஆவானைக்கடுகச்சென் றடைவேனும்மாலாட்டுணேனேட்டந்தீங்கலையேன்மின்

சுருக்கமொடுபெருக்கநிலைநீத்தல்பற்றித்துப்பறையென்றனைவீரிவ்வுலகை யோடிச், செருக்கிமிகைசெலுத்தியும்செய்கைவைகல்செய்கின்றீர்க்கமையாதே யானேன்மிக்க, தருக்கிமிகவரையெடுத்தவரக்கனுகந்தளரவடியெடுத்தவன்றன்பா டல்கேட்டு, இரக்கமெழுந்தருளியவெம்பெருமான்பாதத்திடையிலேன்கெடுவீர் காளிடறேன்மின்னே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## உசஉ. ௺ - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நீற்றினையுநெற்றிமேலிட்டார்போலுநீங்காமேவெள்ளெலும்புபூண்டார்போ லும்,காற்றினையுங்கடிதாகநடந்தார்போலுங்கண்ணின்மேற்கண்ணொன்றுடையார் போலும், கூற்றினையுங்குரைகழலாலுதைத்தார்போலுங்கொல்புலித்தோலாடைக் குழகர்போலும், ஆற்றினையுஞ்செஞ்சடைமேல்வைத்தார்போலுமணியாரூர்த் திருமூலட்டானனுரே. (க)

பரியதோர்பாம்பரைமேலார்த்தார்போலும்பாசுபதம்பார்த்தற்களித்தார் போலும், கரியதோர்களிற்றுரிவைபோர்த்தார்போலுங்காபாலங்கட்டங்கக்கொ டியார்போலும், பெரியதோர்மலைவில்லாலெய்தார்போலும்பேர்நந்தியென்னும்பெ யரார்போலும், அரியதோரரணங்களட்டார்போலுமணியாரூர்த்திருமூலட்டான (உ)

துணியுடையர்தோலுடையரென்பார்போலுந்தூயதிருமேனிச்செல்வர்போ லும், பிணியுடையவடியாரைத்தீர்ப்பார்போலும்பேசுவார்க்கெல்லாம்பெரியார் போலும், மணியுடையமாநாகமார்ப்பார்போலும்வாசுகிமாநாணுகவைத்தார்போ லும், அணியுடையநெடுவீதிநடப்பார்போலுமணியாரூர்த்திருமூலட்டானனுரே.

ஒட்டகத்தேயூனுகவுகந்தார்போலுமோருருவாய்த்தோன்றியுயர்ந்தார்போ லும், நாட்டகத்தேநடைபலவுநவின்றார்போலுஞானப்பெருங்கடற்கோர்நாதர் போலும், காட்டகத்தேயாடலுடையார்போலுங்காமரங்கள்பாடித்திரிவார்போ லும், ஆட்டகத்திலானைந்துகந்தார்போலுமணியாரூர்த்திருமூலட்டானனுரே. (ச)

ஏனத்திளமருப்புப்பூண்டார்போலுமிமையவர்களேத்தவிருந்தார்போலும்
கானக்கல்லாற்கீணிழலார்போலுங்கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போலும்
வானத்திளமதிசேர்சடையார்போலும்வான்கயிலைவெற்பின்மகிழ்ந்தார்போலும்
ஆனத்துமுன்னெழுத்தாய்நின்றார்போலுமணியாரூர்த்திருமூலட்டானனுரே. (ரு)

காமனையுங்கரியாகக்காய்ந்தார்போலுங்கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போ லும், சோமனையுஞ்செஞ்சடைமேல்வைத்தார்போலுஞ்சொல்லாகிச்சொற்பொ

ஏற்றானை யேழுலகு மானான் றன்னை யேழ்கடலு மேழ்மலையு மானான் றன்னைக்
கூற்றானைக் கூற்றமுதைத் தான் றன்னைக் கொடுமழுவாள் கொண்டதோர் கையான் றன்னைக்
காற்றானைத் தீயானை நீரு மாகிக் கடிகமழும் புன்சடைமேற் கங்கைவெள்ள
ஆற்றானை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௩)

வாதமே க்கண ச

சந்திரனும் வெங்கதிரு மாயினானைச் சங்கரனைச் சங்கக் குழையான் றன்னை
மந்திரமு மறைப்பொருளு மானான் றன்னை மறுமையு மிம்மையு மானான் றன்னை
அந்திரனை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௪)

பிறநெறியாய்ப் பீடாகிப் பிஞ்ஞக னுமாய்ப் பித்தனுமாய்ப் பத்தர்மனத் தினுள்ளே
உறநெறியா யோமமாய் ஈமக் காட்டி லோரிபல விடநட்ட மாடினானைத்
துறநெறியாய்த் தூபமாய்த் தோற்ற மாகி நாற்றமாய் நன்மலர்மே லுறைவா னின்ற
அறநெறியை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே.

பழகியவல் வினைகள் பாற்று வானைப் பசுபதியைப் பாவகனைப் பாவந் தீர்க்குங்
குழகனைக் கோளரவொன் றாட்டு வானைக் கொடுகொட்டி கொண்டதோர் கையான் றன்
விழவனை வீரட்ட மேவி னானை விண்ணவர்க ளேத்தி விரும்பு வானை [னை
அழகனை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௬)

சூளாமணிசேர் முடியான் றன்னைச் சுண்ணவெண் ணீறணிந்த சோதியானைக்
கோள்வா யரவ மசைத்தான் றன்னைக் கொல்புலித்தோ லாடைக் குழகன் றன்னை
நாள்வாயும் பத்தர் மனத்து ளானை நம்பனை நக்கனை முக்க ணானை
ஆள்வானை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௭)

முத்தினை மணிதன்னை மாணிக் கத்தை மூவாத கற்பகத்தின் கொழுந்து தன்னைக்
கொத்தினை வயிரத்தைக் கொல்லே றூர்ந்து கோளரவொன் றாட்டுங் குழகன் றன்னைப்
பத்தனைப் பத்தர்மனத் துளானைப் பருதிபோற் றிருமேனி யுடையான் றன்னை
அத்தனை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௮)

பையாட ரவங்கையி லேந்தினானைப் பருதிபோற் றிருமேனிப் பானீற் றானை
நெய்யாடு திருமேனி நிமலன் றன்னை நெற்றிமேன் மற்றொருகண் ணிறைவித் தானை
செய்யானைச் செழும்பவளத் திரளொப் பானைச் செஞ்சடைமேல் வெண்டிங்கள் சேர்
ஐயாறு மேயானை யாரூரானை யறியா தடிநாயே னயர்த்த வாறே. [த்தினானை

சீரார் முடிபத் துடையான் றன்னைத் தேசழியத் திருவிரலாற் சிதைய நூக்கிப்
பேரார் பெருமை கொடுத்தான் றன்னைப் பெண்ணிரண்டு மாணுமாய் நின்றான் றன்னை
போரார் புரங்கள் புரள நூறும் புண்ணியனை வெண்ணீ றணிந்தான் றன்னை [ப்
ஆரானை யாரூரி லம்மான் றன்னை யறியா தடிநாயே னயர்த்த வாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௪௪. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

எம்பந்தவல்வினைநோய்தீர்த்திட்டான்காணேழ்கடலுமேழுலகுமாயினான்காண், வம்புந்துகொன்றையந்தார்மாலையான்காண்வளர்மதிசேர்கண்ணியன்காண்வானோர்வேண்ட, அம்பொன்றுன்மூவெயிலுமெரிசெய்தான்காணனலாடியானஞ்சுமாடினான்காண், செம்பொன்செய்மணிமாடத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௧)

அக்குலாமரையினன்காணடியார்க்கென்றுமாரமுதாயண்ணிக்குமையாறன்காண், கொக்குலாம்பீலியொடுகொன்றைமாலைகுளிர்மதியுங்கூரரவுநீருஞ்சென்னித், தொக்குலாஞ்சடையினன்காண்டொண்டர்சொல்லுந்தூநெறிகாண்வானவர்கடுதிசெய்தேத்தும், திக்கெலாநிறைந்தபுகழ்த்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்சென்வன்றானே. (௨)

நீரேறுசடைமுடியெந்நிமலன்றான்காணெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தான்காண், வாரேறுவனமுலையாள்பாகத்தான்காண்வளர்மதிசேர்சடையான்காண்மாதேவன்காண், காரேறுமுகிலனையகண்டத்தான்காண்கல்லாலின்கீழறங்கள்சொல்லினான்காண், சீரேறுமணிமாடத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௩)

கானேறுகளிற்றுரிவைப்போர்வையான்காண்கற்பகங்காண்காலனையன்றுதைசெய்தான்காண், ஊனேறுமுடைதலையிற்பலிகொள்வான்காணுத்தமன்காணொற்றியூர்மேவினான்காண், ஆனேறொன்றதுவேறுமண்ணறான்காணாதித்தன்பல்லிறுத்தவாதிதான்காண், தேனேறுமலர்ச்சோலைத்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௪)

பிறப்போடிறப்பென்றுமில்லாதான்காண்பெண்ணுருவோடாணுருவமாயினான்காண், மறப்படுமென்சிந்தைமருணீக்கினான்காண்வானவருமறியாதநெறிதந்தான்காண், நறப்படுபூமலர்தூபநல்லநறுஞ்சாந்தங்கொண்டேத்திநாளும்வானோர், சிறப்போடுபூசிக்குந்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௫)

சங்கரன்காண்சக்கரமாற்கருள்செய்தான்காண்தருணேந்துசேகரன்காண்டலைவன்றான்காண், அங்கமலத்தயன்சிரங்களைந்திலொன்றையறுத்தவன்காணணிபொழில்சூழையாற்றான்காண், எங்கள்பெருமான்காணென்னிடர்கள்போகவருள்செய்யுமிறைவன்காணிமையோரேத்தும், செங்கமலவயல்புடைசூழ்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௬)

நன்றருளித்தீதகற்றுநம்பிரான்காணான்மறையோடாறங்கமாயினான்காண், மின்றிகழுஞ்சோதியன்காணாதிதான்காண்வெள்ளேறுநின்றுலவுகொடியினான்காண், துன்றுபொழிற்கச்சியேகம்பன்றான்காண்சோற்றுத்துறையான்காண்சோலைசூழ்ந்த, தென்றலார்மணங்கமழுந்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௭)

பொன்னலத்தநறுங்கொன்றைச்சடையினான்காண்புகலூரும்பூணமும்பொறன்காண், மின்னலத்தநுண்ணிடையாள்பாகத்தான்காண்வேதியன்காண் வெண்புரிநூன்மார்பினான்காண், கொன்னலத்தமூவிலைவேலேந்தினான்காண்கோலமாநீறணிந்தமேனியான்காண், செந்நலத்தவயல்புடைசூழ்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௮)

விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்வேலைவிடமுண்டிருண்டகண்டத்தான்காண், மண்டலத்திலொளிவளரவிளங்கினான்காண்வாய்மூருமறைக்காடுமருவினான்காண், புண்டரிகக்கண்ணானும்பூவின்மேலைப்புத்தேளுங்காண்பரியபுராணன்றான்காண், தெண்டிரைநீர்வயல்புடைசூழ் திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௯)

செருவளருஞ்செங்கண்மாலேற்றினான்காண்டென்னானைக்காவான்காண்டயில்வீழ, மருவலர்தம்புரமூன்றுமெரிசெய்தான்காண்வஞ்சகர்பாலணுகாதமைந்தன்றான்காண், அருவரையையெடுத்தவன்றன்சிரங்கள்பத்துமைந்நான்குதோளுநெரிந்தலறவன்று, திரவிரலாலடர்த்தவன்காண்திருவாரூரிற்றிருமூலட்டானத்தெஞ்செல்வன்றானே. (௧௦)

ம்பலம்.

## 3/ ௨௪௫. வாரூர் - ண்டகம்

ம்பலம்

இடர்கெடுமாறெண்ணுதியேனெஞ்சேநீவாவீண்டொளிசேர்கங்கைச்சடையாயென்றும், சுடரொளியாயுள்விளங்குசோதியென்றுந்தூநீறுசேர்ந்திலங்குதோளாயென்றும், கடல்விடமதுண்டிருண்டகண்டாவென்றுங்கலைமான்மறியேந்துகையாவென்றும், அடல்விடையாயாரமுதேயாதியென்றுமாரூராவென்றென்றேயலறாநில்லே. (௧)

செடியேறுதீவினைகடீரும்வண்ணஞ்சிந்தித்தேநெஞ்சமேதிண்ணமாகப், பொடியேறுதிருமேனியுடையாயென்றும் புரந்தரன்றன்றோடுணித்தபுனிதாவென்றும், அடியேனையாளாக்கொண்டாயென்றுமம்மானேயாரூரெம்மரசேயென்றும், கடிநாறுபொழிற்கச்சிக்கம்பாவென்றுங்கற்பகமேயென்றென்றேகதறாநில்லே. (௨)

நிலைபெறுமாறெண்ணுதியேனெஞ்சேநீவாநித்தலுமெம்பிரானுடையகோயில்புக்குப், புலர்வதன்முன்னலகிட்டுமெழுக்குமிட்டுப்பூமாலைபுனைந்தேத்திப்புகழ்ந்துபாடித், தலையினாற்கும்பிட்டுக்கூத்துமாடிச்சங்கராசயபோற்றிபோற்றியென்றும், அலைபுனல்சேர்செஞ்சடையெம்மாதியென்றுமாரூராவென்றென்றேயலறாநில்லே.

புண்ணியமுநன்னெறியுமாவதெல்லாநெஞ்சமேயிதுகண்டாய்பொருந்தக்கேணீ, நுண்ணியவெண்ணூல்கிடந்தமார்பாவென்றுநுந்தாதவொண்சுடரேயென்றுநாளும், விண்ணியங்குந்தேவர்களும்வேதநான்கும்விரைமலர்மேனான்முகனுமாலுங்கூடி, எண்ணரியதிருநாமமுடையாயென்றுமெழிலாரூராவென்றேயேத்தாநில்லே. (௪)

இழைத்தநாளெல்லைகடப்பதன்றாலிரவினொடுநண்பகலுமேத்திவாழ்த்திப், பிழைத்ததெலாம்பொறுத்தருள்செய்பெரியோயென்றும்பிஞ்ஞகனேமைஞ்ஞவிலுங்கண்டாவென்றும், அழைத்தலறியடியேனுன்னரணங்கண்டாயணியாரூரிடங்கொண்டவழகாவென்றும், குழற்சடையெங்கோனென்றுங்கூறுநெஞ்சேகுற்றமிலையென்மேனான்கூறினேனே (௫)

நீப்பரியபல்பிறவிநீக்கும்வண்ணநினைந்திருந்தேன்காணெஞ்சேநித்தமாகச் சேப்பிரியாவெல்கொடியினானேயென்றுஞ்சிவலோகநெறிதந்தசிவனேயென்றும், பூப்பிரியாநான்முகனும்புள்ளின்மேலைப்புண்டரிகக்கண்ணானும்போற்றிசைப்பத் தீப்பிழம்பாய்நின்றவனேசெல்வமல்குந்திருவாரூராவென்றுஞ்சிந்திநெஞ்சே. (௬)

பற்றிநின்றபாவங்கள்பாற்றவேண்டிற்பரகதிக்குச்செல்வதொருபரிசுவேண்டில், சுற்றிநின்றசூழ்வினைகள்வீழ்க்கவேண்டிற்சொல்லுகேன்கேணெஞ்சேதுஞ்சாவண்ணம், உற்றவருமுறுதுணையுநீயேயென்றுமுன்னையல்லாலொருதெய்வமுள்ளேனென்றும், புற்றரவக்கச்சார்த்தபுனிதாவென்றும்பொழிலாரூராவென்றேபோற்றா நில்லே. (௭)

மதிதருவநெஞ்சமேயுஞ்சுபோகவழியாவதிதுகண்டாய்வானோர்க்கெல்லாம் அதிபதியேயாரமுதேயாதியென்றுமம்மானேயாரூரெம்மையாவென்றும், துதிசெய்துதுன்றுமலர்கொண்டுதூவிச்சூழும்வலஞ்செய்துதொண்டுபட்டுக் கதிர்மதிசேர்சென்னியனேகாலகாலாகற்பகமேயென்றென்றேகதறாநில்லே. (௮)

பாசத்தைப்பற்றறுக்கலாகுநெஞ்சேபரஞ்சோதிபண்டரங்காபாவநாசா தேசத்தொளிவிளக்கேதேவதேவேதிருவாரூர்த்திருமூலட்டானாவென்று நேசத்தைநீபெருக்கிநேர்நின்றுள்கிநித்தலுஞ்சென்றடிமேல்வீழ்ந்துநின்று ஏசற்றுநின்றிமையோரேறேயென்றுமெம்பெருமானென்றென்றேயேத்தாநில்லே

புலன்களைந்தாலாட்டுண்டுபோதுபோக்கிப்புறம்புறமேதிரியாதேபோதுநெஞ்சே, சலங்கொள்சடைமுடியுடையதலைவாவென்றுந்தக்கன்செய்பெருவேள்வி தகர்த்தாயென்றும், இலங்கையர்கோன்சிரநெரித்தவிறைவாவென்றுமெழிலாரூரிடங்கொண்டவெந்தாயென்றும், நலங்கொளடியென்றலைமேல்வைத்தாயென்றுநாடோறுநவின்றேத்தாய்நன்மையாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௪௯. திருவாரூர் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கற்றவர்களுண்ணுங்கனியேபோற்றிகழலடைந்தார்செல்லுங்கதியேபோற்றி அற்றவர்கட்காரமுதமானாய்போற்றியல்லலறுத்தடியேனையாண்டாய்போற்றி மற்றொருவரொப்பில்லாமைந்தாபோற்றி வானவர்கள்போற்றுமருந்தேபோற்றி செற்றவர்தம்புரமெரித்தசிவனேபோற்றி திருமூலட்டானனேபோற்றிபோற்றி. ()

வங்கமலிகடனஞ்சமுண்டாய்போற்றிமதயானையீருரிவைபோர்த்தாய்போற்றி, கொங்கலருநறுங்கொன்றைத்தாராய்போற்றிகொல்புலித்தோலாடைக்குழகா போற்றி, அங்கணனேயமரர்கடம்மிறைவாபோற்றியாலமாநீழலறஞ்சொன்னாய் போற்றி, செங்கனகத்தனிக்குன்றேசிவனேபோற்றிதிருமூலட்டானனேபோற்றி போற்றி. (௨)

மலையான்மடந்தைமணாளாபோற்றிமழவிடையாய்நின்பாதம்போற்றிபோற்றி, நிலையாகவென்னெஞ்சினின்றாய்போற்றி நெற்றிமேலொற்றைக்கண்ணுடையாய்போற்றி, இலையார்ந்தமூவிலைவேலேந்திபோற்றியேழ்கடலுமேழ்பொழிலுமானாய்போற்றி, சிலையாலன்றெயிலெரித்தசிவனேபோற்றிதிருமூலட்டானனே போற்றிபோற்றி. (௩)

பொன்னியலுமேனியனேபோற்றிபோற்றிபூதப்படையுடையாய்போற்றி போற்றி, மன்னியசீர்மறைநான்குமானாய்போற்றிமறியேந்துகையானேபோற்றி போற்றி, உன்னுமவர்க்குண்மையனேபோற்றிபோற்றியுலகுக்கொருவனேபோற்றிபோற்றி, சென்னிமிசைவெண்பிறையாய்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி. (௪)

நஞ்சுடையகண்டனேபோற்றிபோற்றிநற்றவனேநின்பாதம்போற்றிபோற்றி, வெஞ்சுடரோன்பல்லிறுத்தவேந்தேபோற்றிவெண்மதியங்கண்ணிவிகிர்தா போற்றி, துஞ்சிருளிலாடலுகந்தாய்போற்றிதூநீறுமெய்க்கணிந்தசோதிபோற்றி, செஞ்சடையாய்நின்பாதம்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி.

சங்கரனேநின்பாதம்போற்றிபோற்றிசதாசிவனேநின்பாதம்போற்றிபோற்றி
பொங்கரவாநின்பாதம்போற்றிபோற்றிபுண்ணியனேநின்பாதம்போற்றிபோற்றி
அங்கமலத்தயனோடுமாலுங்காணாவனலுருவாநின்பாதம்போற்றிபோற்றி
செங்கமலத்திருப்பாதம்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி. ()

வம்புலவுகொன்றைச்சடையாய்போற்றிவான்பிறையும்வாளரவும்வைத்தாய்போற்றி, கொம்பனையநுண்ணிடையாள்கூறாபோற்றிகுரைகழலாற்கூற்றுதைத்தகோவேபோற்றி, நம்புமவர்க்கரும்பொருளேபோற்றிபோற்றிநால்வேதமாறங்கமானாய்போற்றி, செம்பொனேமரகதமேமணியேபோற்றிதிருமூலட்டானனே போற்றிபோற்றி. (௭)

உள்ளமாயுள்ளத்தேநின்றாய்போற்றியுகப்பார்மனத்தென்றுநீங்காய்போற்றி
வள்ளலேபோற்றிமணாளாபோற்றிவானவர்கோன்றோடுணித்தமைந்தாபோற்றி
வெள்ளையேறேறும்விகிர்தாபோற்றிமேலோர்க்குமேலோர்க்குமேலாய்போற்றி
தெள்ளுநீர்க்கங்கைச்சடையாய்போற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி. ()

பூவார்ந்தசென்னிப்புனிதாபோற்றிபுத்தேளிர்போற்றும்பொருளேபோற்றி
தேவார்ந்ததேவர்க்குந்தேவேபோற்றிதிருமாலுக்காழியளித்தாய்போற்றி
சாவாமேகாத்தென்னையாண்டாய்போற்றிசங்கொத்தநீற்றெஞ்சதுராபோற்றி
சேவார்ந்தவெல்கொடியாய்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற்றிபோற்றி

பிரமன்றன் சிரமரிந்தபெரியோய்போற்றிபெண் ணுருவோடா ணுருவாய்நின் றாய்போற்றி, கரநான்கு முக்கண் ணுமுடையாய்போற்றிகாதலிப்பார்க்காற்றவெ ளியாய்போற்றி, அருமந்தத்தேவர்க்கரசேபோற்றியன் றரக்கனைஞ் ஞான்குதோ ளுந்தாளும், சிரநெரித்தசேவடியாய்போற்றிபோற்றிதிருமூலட்டானனேபோற் றிபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## 33 உ௬எ. திருவாரூரறநெறி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பொருங்கைமதகரியுரிவைப்போர்வையானைப்பூவணையும்வலஞ்சுழியும்பொ ருந்தினானைக், கரும்புதருகட்டியையின்னமிர்தைத்தேனைக்காண்பரியசெழுஞ்சுட ரைக்கனகக்குன்றை, இருங்கனகமதிலாரூர்மூலட்டானத்தெழுந்தருளிநின் யிமையோரேத்தும் ந்தவனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவி (௧)

கற்பகமுமிருசுடருமாயினானைக்காளத்திகயிலாயமலையுளானை, விற்பயிலு மதனழியவிழித்தான்றன்னைவிசயனுக்குவேடுவனாய்நின்றான்றன்னைப், பொற்பமரும்பொழிலாரூர்மூலட்டானம்பொருந்தியவெம்பெருமானைப்பொருந்தார்சிந்தை, அற்புதனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. ()

பாதியொருபெண்முடிமேற்கங்கையானைப்பாசூரும்பரங்குன்றமேயான்றன் னை, வேதியனைத்தன்னடியார்க்கெளியான்றன்னைமெய்ஞ்ஞானவிளக்கானைவிரிவா யோராறும், போதியலும்பொழிலாரூர்மூலட்டானம்புற்றிடங்கொண்டிருந்தானைப் போற்றுவார்கள், ஆதியனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோ யறுத்தவாறே. (௩)

நந்திபணிகொண்டருளுநம்பன்றன்னைநாகேச்சரமிடமாநண்ணினானைச், சந்தி மலரிட்டணிந்துவானோரேத்துந்தத்துவனைச்சக்கரமாங்கீந்தான்றன்னை, இந்துபு னைபொழிலாரூர்மூலட்டானமிடங்கொண்டபெருமானையிமையோர்போற்றும், அந்தணனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே.)

சுடர்ப்பவளத்திருமேனிவெண்ணீற்றானைச்சோதிலிங்கத்தூங்கானைமாடத் தானை, விடக்கிடுகாடிடமாகவுடையான்றன்னைமிக்கரணமெரியூட்டவல்லான்றன் னை, மடற்குலவுபொழிலாரூர்மூலட்டானமன்னியவெம்பெருமானைமதியார்வேள் வி, அடர்த்தவனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்த வாறே. (௫)

யவவுயிர்க்குர்
ன்னை, மாயவனுமலரவனும்வானோரேத்தமறிகடனஞ்சுண்டுகந்தமைந்தன்றன்னை, மேயவனைப்பொழிலாரூர்மூலட்டானம் விரும்பியவெம்பெருமானையெல்லாமுன்னே, ஆயவனையரநெரியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே.

பொருளியனற்சொற்பதங்களாயினானைப்புகலூரும்புறம்பயமும்மேயான்றன்னை, மருளியலுஞ்சிந்தையர்க்குமருந்துதன்னைமறைக்காடுஞ்சாய்க்காடுமன்னினானை, இருளியனற்பொழிலாரூர்மூலட்டானத்தினிதமரும்பெருமானையிமையோரேத்த, அருளியனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (௭)

காயநதகட க்க பபா
ப், பாலனுக்குப்பாற்கடலன்றீந்தானறனைபபணியுகந்தவடியாரக
ன்னைச், சேறுகளும்வயலாரூர்மூலட்டானஞ்சேர்ந்திருந்தபெருமானைப்பவளமீன்ற, ஆலவனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே.

ஒப்பொருவரில்லாதவொருவன்றன்னையோத்தூருமுறையூருமேவினானை, வைப்பவனைமாணிக்கச்சோதியானைமாருதமுந்தீவெளிநீர்மண்ணுமானைப், பொ ()

பகலவன்றன்பல்லுகுத்தபடிறன்றன்னைப்பராய்த்துறைபைஞ்ஞீலியிடம்பாவித்தானை, இகலவனையிராவணனையிடர்செய்தானையேத்தாதார்மனத்தகத்துளிருளானானைப், புகழ்நிலவுபொழிலாரூர்மூலட்டானம்பொருந்தியவெம்பெருமானைப்போற்றார்சிந்தை, அகலவனையரநெறியிலப்பன்றன்னையடைந்தடியேனருவினைநோயறுத்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## 34 ௨௪௮. திருவாரூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஒருவனாயுலகேத்தநின்றநாளோவோருருவேமூவுருவமானநாளோ, கருவனாய்க்காலனைமுன்காய்ந்தநாளோகாமனையுங்கண்ணழலால்விழித்தநாளோ, மருவனாய்மண்ணும்விண்ணுந்தெரித்தநாளோமான்மறிக்கையேந்தியோர்மாதோர்பாகம், திருவினாள்சேர்வதற்குமுன்னோபின்னோதிருவாரூர்கோயிலாக்கொண்டநாளே.

மலையார்பொற்பாவையொடுமகிழ்ந்தநாளோவானவரைவலியமுதமூட்டியநாள், நிலைபேறுபெறுவித்துநின்றநாளோநினைப்பரியதழற்பிழம்பாய்நிமிர்ந்தநாளோ, அலைசாமேயலைகடனஞ்சுண்டநாளோவமரர்கணம்புடைசூழவிருந்தநாளோ, சிலையால்முப்புரமெரித்தமுன்னோபின்னோதிருவாரூர்கோயிலாக்கொண்டநாளே.

பாடகஞ்சேர்மெல்லடிநற்பாவையாளுநீயும்போய்ப்பார்த்தனதுபலத்தைக்காண்பான், வேடனாய்வில்வாங்கியெய்தநாளோவிண்ணவர்க்குங்கண்ணவனாய்நின்

## ௨௪௯. திருவெண்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தூண்டுசுடர்மேனித்தூநீறாடிச்சூலங்கையேந்தியோர்சுழல்வாய்நாகம்
பூண்டுபொறியரவங்காதிற்பெய்துபொற்சடைகளவைதாழப்புரிவெண்ணூலர்
நீண்டுகிடந்திலங்குதிங்கள்சூடிநெடுந்தெருவேவந்தெனதுநெஞ்சங்கொண்டார்
வேண்டுநடைநடக்கும்வெள்ளேறேறிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (௧)

பாதந்தனிப்பார்மேல்வைத்தபாதர்பாதாளமேழுருவப்பாய்ந்தபாதர்
ஏதப்படாவண்ணநின்றபாதரேழுலகுமாய்நின்றவேகபாதர்
ஓதத்தொலிமடங்கியூருண்டேறியொத்துலகமெல்லாமொடுங்கியபின்
வேதத்தொலிகொண்டுவீணைகேட்பார்வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௨)

நென்னலையோரோடேந்திப்பிச்சைக்கென்றுவந்தார்க்குவந்தேனென்றில்லே புக்கேன், அந்நிலையேநிற்கின்றாரையங்கொள்ளாரருகேவருவார்போனோக்குகின்றார், நுந்நிலைமையேதோநும்மூர்தானேதோவென்றேனுக்கொன்றாகச்சொல்ல மாட்டார், மென்முலையார்கூடிவிரும்பியாடும்வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௩)

ஆகத்துமையடக்கியாறுசூடியையவாயரவசைத்தங்கானேறேறிப்
போகம்பலவுடைத்தாய்ப்பூதஞ்சூழப்புலித்தோலுடையாப்புகுந்துநின்றார்
பாகிடுவானென்றேனைப்பற்றிநோக்கிப்பரிசழித்தென்வளைகவர்ந்தார்பாவியேனை
மேகமுகிலுரிஞ்சுஞ்சோலைசூழ்ந்தவெண்காடுமேவியவிகிர்தனாரே. (௪)

கொள்ளைக்குழைக்காதிற் குண்டைப்பூதங்கொடுகொட்டிகொட்டிக்குனித்து ப்பாட, உள்ளங்கவர்ந்திட்டுப்போவார்போலவுழிதருவர்நான்றெரியமாட்டேன் மீண்டேன், கள்ளவிழிவிழிப்பர்காணாக்கண்ணாற்கண்ணுளார்போலேகரந்துநிற் பர், வெள்ளச்சடைமுடியர்வேதநாவர்வெண்காடுமேவியவிகிர்தனாரே, (௫)

தொட்டிலங்குசூலத்தர்மழுவாளேந்திச்சுடர்க்கொன்றைத்தாரணிந்துசுவை கள்பேசிப், பட்டிவெள்ளேறேறிப் பலிபுங்கொள்ளார்பார்ப்பாரைப்பரிசழிப்பா ரொக்கின்றாரால், கட்டிலங்குவெண்ணீற்றர்கனலப்பேசிக்கருக்கழிக்கத்துவளைகவர் ந்தார்காலைமாலை, விட்டிலங்குசடைமுடியர்வேதநாவர்வெண்காடுமேவியவிகிர்த னாரே. (௬)

பெண்பாலொருபாகம்பேணாவாழ்க்கைக்கோணாகம்பூண்பனவுநாணுஞ்சொல்லார்
உண்பாருறங்குவாரொவ்வாநங்காயுண்பதுநஞ்சன்றேலோபியுண்ணார்
பண்பால்விரிசடையர்பற்றிநோக்கிப்பாலைப்பரிசழியப்பேசுகின்றார்
விண்பான்மதிசூடிவேதமோதிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (௭)

மருதங்களாமொழிவர்மங்கையோடுவானவருமாலயனுங்கூடித்தங்கள்
சுருதங்களாற்றுதித்துத்தூநீராட்டித்தோத்திரங்கள்பலசொல்லித்தூபங்காட்டிக்
கருதுங்கொலெம்பெருமான்செய்குற்றேவலென்பார்க்குவேண்டும்வரங்கொடுத்து
விகிர்தங்களாநடப்பர்வெள்ளேறேறிவெண்காடுமேவியவிகிர்தனாரே. (௮)

புள்ளானுநான்முகனும்புக்கும்போந்துங்காணார்பொரியழலாய்நின்றான்றன்னை
உள்ளானையொன்றல்லாவுருவினானையுலகுக்கொருவிளக்காய்நின்றான்றன்னைக்
கள்ளேந்துகொன்றைதூய்க்காலைமூன்றுமோவாமேநின்றுதவங்கள்செய்த
வெள்ளானைவேண்டும்வரங்கொடுப்பார்வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௯)

மாக்குன்றெடுத்தான்றன்மைந்தனாகிமாவேழம்வில்லாமதித்தான்றன்னை
நோக்குந்துணைத்தேவரெல்லாநிற்கநொடிவரையினோவவிழித்தான்றன்னைக்
காக்குங்கடலிலங்கைக்கோமான்றன்னைக்கதிர்முடியுங்கண்ணும்பிதுங்கவூன்றி
வீக்கந்தவிர்த்தவிரலார்போலும்வெண்காடுமேவியவிகிர்தனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## 36 ௨௫௦. திருப்பழனம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அலையார்கடனஞ்சமுண்டார்தாமேயமரர்களுக்கருள்செய்யுமாதிதாமே [தாமே
கொலையாயகூற்றமுதைத்தார்தாமேகொல்வேங்கைத்தோலொன்றசைத்தார்
சிலையாற்புரமூன்றெரித்தார்தாமேதீநோய்களைந்தென்னையாண்டார்தாமே
பலிதேர்ந்தழகாயபண்பர்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௧)

வெள்ளமொருசடைமேலேற்றார்தாமேமேலார்கண்மேலார்கண்மேலார்தாமே
கள்ளங்கடிந்தென்னையாண்டார்தாமேகருத்துடையபூதப்படையார்தாமே
உள்ளத்துவகைதருவார்தாமேயுறுநோய்சிறுபிணிகடீர்ப்பார்தாமே
பள்ளப்பரவைநஞ்சுண்டார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௨)

இரவும்பகலுமாய்நின்றார்தாமேயெப்போதுமென்னெஞ்சத்துள்ளார்தாமே
அரவமரையிலசைத்தார்தாமேயனலாடியங்கைமறித்தார்தாமே
குரவங்கமழுங்குற்றாலர்தாமேகோலங்கண்மேன்மேலுகப்பார்தாமே
பரவுமடியார்க்குப்பாங்கர்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௩)

மாறின்மதின்மூன்றுமெய்தார்தாமேவரியரவங்கச்சாகவார்த்தார்தாமே
நீறுசேர்திருமேனிநிமலர்தாமேநெற்றிநெருப்புக்கண்வைத்தார்தாமே
ஏறுகொடுஞ்சூலக்கையார்தாமேயென்பாபரணமணிந்தார்தாமே
பாறுண்டலையிற்பலியார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௪)

சீரால்வணங்கப்படுவார்தாமேதிசைக்கெல்லாந்தேவாகிநின்றார்தாமே
ஆராவமுதமுமானார்தாமேயளவில்பெருமையுடையார்தாமே
நீரார்நியமமுடையார்தாமேநீள்வரைவில்லாகவளைத்தார்தாமே
பாரார்பரவப்படுவார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௫)

காலனுயிர்வௌவவல்லார்தாமேகடிதோடும்வெள்ளைவிடையார்தாமே
கோலம்பலவுமுகப்பார்தாமேகோணாகநாணாகப்பூண்டார்தாமே
நீலம்பொலிந்தமிடற்றார்தாமேநீள்வரையினுச்சியிருப்பார்தாமே
பாலவிருத்தருமானார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௬)

ஏய்ந்தவுமைநங்கைபங்கர்தாமேயேழூழிக்கப்புறமாய்நின்றார்தாமே
ஆய்ந்துமலர்தூவநின்றார்தாமேயளவில்பெருமையுடையார்தாமே
தேய்ந்தபிறைசடைமேல்வைத்தார்தாமேதீவாயரவதனையார்த்தார்தாமே
பாய்ந்தபடர்கங்கையேற்றார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௭)

ஓராதாருள்ளத்தினில்லார்தாமேயுள்ளூறுமன்பர்மனத்தார்தாமே
பேராதென்சிந்தையிருந்தார்தாமேபிறர்க்கென்றுங்காட்சிக்கரியார்தாமே
ஊராருமூவுலகத்துள்ளார்தாமேயுலகைநடுங்காமற்காப்பார்தாமே
பாரார்முழவத்திடையார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௮)

நீண்டவர்க்கோர்நெருப்புருவமானார்தாமேநேரிழையையொருபாகம்வைத்தார்தாமே, பூண்டரவைப்புலித்தோன்மேலார்த்தார்தாமேபொன்னிறத்தவெள்ளச்சடையார்தாமே, ஆண்டுலகேழனைத்தினையும்வைத்தார்தாமேயங்கங்கேசிவமாகிநின்றார்தாமே, பாண்டவரிற்பார்த்தனுக்குப்பரிந்தார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௯)

விடையேறிவேண்டுலகத்திருப்பார்தாமேவிரிகதிரோன்சோற்றுத்துறையார்தாமே, புடைசூழத்தேவர்குழாத்தார்தாமேபூந்துருத்திநெய்த்தானமேயார்தாமே, அடைவேபுனல்சூழையாற்றார்தாமேயரக்கனையுமாற்றலழித்தார்தாமே, படையாப்பல்பூதமுடையார்தாமேபழனநகரெம்பிரானார்தாமே. (௰)

ம்பலம்.

37

## ௨௫௩. திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆரார்திரிபுரங்கணீறாநோக்குமனலாடியாரமுதேயென்றேனானே
கூரார்மழுவாட்படையொன்றேந்திகுறட்பூதப்பல்படையாயென்றேனானே
பேராயிரமுடையாயென்றேனானேபிறைசூடும்பிஞ்ஞகனேயென்றேனானே
ஆராவமுதேயென்னையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௧)

தீவாயின்முப்புரங்கணீறாநோக்குந்தீர்த்தாபுராணனேயென்றேனானே
மூவாமதிசூடியென்றேனானேமுதல்வாமுக்கண்ணனேயென்றேனானே
ஏவார்சிலையானேயென்றேனானேயிடும்பைக்கடனின்றுமேறவாங்கி
ஆவாவென்றருள்புரியுமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௨)

அஞ்சுண்ணவண்ணனேயென்றேனானேயடியார்கட்காரமுதேயென்றேனானே
நஞ்சணிகண்டனேயென்றேனானேநாவலர்கணன்மறையேயென்றேனானே
நெஞ்சுணரவுள்புக்கிருந்தபோதுநிறையுமமுதமேயென்றேனானே
அஞ்சாதேயாள்வானேயையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௩)

தொல்லைத்தொடுகடலேயென்றேனானேதுலங்குமிளம்பிறையாயென்றேனானே
எல்லையிறந்தானேயென்றேனானேயெழுநரம்பினின்னிசையாயென்றேனானே

அல்லற்கடல்புக்கு
ழுன்றேனே. (௪)

இண்டைச்சடைமுடியாயென்றேனானேயிருசுடர்வானத்தாயென்றேனானே, தொண்டாற்றெழப்படுவா யென்றேனானே துருத்திநெய்த்தானத்தா யென்றேனானே, கண்டங்கறுத்தானேயென்றேனானேகனலாகுங்கண்ணானேயென்றேனானே, அண்டத்துக்கப்பாலாமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௫)

பற்றார்புரமெரித்தாயென்றேனானேபசுபதிபாண்டரங்காவென்றேனானே
கற்றார்கணாவிணாவென்றேனானேகடுவிடையொன்றூர்தியாயென்றேனானே
பற்றானார்நெஞ்சுளாயென்றேனானேபார்த்தற்கருள்செய்தாயென்றேனானே
அற்றார்க்கருள்செய்யுமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௬)

விண்ணோர்தலைவனேயென்றேனானேவிளங்குமிளம்பிறையாயென்றேனானே
எண்ணாரெயிலெரித்தாயென்றேனானேயேகம்பமேயானேயென்றேனானே
பண்ணார்மறைபாடியென்றேனானேபசுபதிபாணீற்றாயென்றேனானே
அண்ணாவையாறனேயென்றேனானேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௭)

அவனென்றுநானுன்னையஞ்சாதேனையல்லலறுப்பானேயென்றேனானே
சிவனென்றுநானுன்னையெல்லாஞ்சொல்லச்செல்வந்தருவானேயென்றேனானே
பவனாகியென்னுள்ளத்துள்ளேநின்றுபண்டைவினையறுப்பாயென்றேனானே
அவனென்றேயாதியேயையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௮)

கச்சியேகம்பனேயென்றேனானேகயிலாயாகாரோணாவென்றேனானே
நிச்சன்மணாளனேயென்றேனானேநினைப்பார்மனத்துளாயென்றேனானே
உச்சம்போதேறேறீயென்றேனானேயுள்குவாருள்ளத்தாயென்றேனானே
அச்சம்பிணிதீர்க்குமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௯)

வில்லாடிவேடனேயென்றேனானேவெண்ணீறுமெய்க்கணிந்தாயென்றேனானே, சொல்லாயசூழலாயென்றேனானேசுலாவாயதொன்னெறியேயென்றேனானே, எல்லாமாயென்னுயிரேயென்றேனானேயிலங்கையர்கோன்சிரநெரித்தாயென்றேனானே, அல்லாவினைதீர்க்குமையாறனேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௰)

திருச்சிற்றம்பலம்.

௩௫ ௨௫௨. திருவையாறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஓசையொலியெலாமானாய்நீயேயுலகுக்கொருவனாய்நின்றாய்நீயே
வாசமலரெலாமானாய்நீயேமலையான்மருகனாய்நின்றாய்நீயே
பேசப்பெரிதுமினியாய்நீயேபிரானாயடியேன்மேல்வைத்தாய்நீயே
தேசவிளக்கெலாமானாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௧)

நோக்கரியதிருமேனியுடையாய்நீயேநோவாமேநோக்கருளவல்லாய்நீயே
காப்பரியவைம்புலனுங்காத்தாய்நீயேகாமனையுங்கண்ணழலாற்காய்ந்தாய்நீயே
ஆர்ப்பரியமாநாகமார்த்தாய்நீயேயடியானென்றடியென்மேல்வைத்தாய்நீயே
நீர்ப்பாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௨)

கனத்தகத்துக்கடுஞ்சுடராய்நின்றாய்நீயேகடல்வரைவானாகாயமானாய்நீயே
தனத்தகத்துத்தலைகலனுக்கொண்டாய்நீயேசார்ந்தாரைத்தகைந்தாளவல்லாய்நீயே
மனத்திருந்தகருத்தறிந்துமுடிப்பாய்நீயேமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
சினத்திருந்ததிருநீலகண்டனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௩)

வானூற்றமாமலைகளானாய்நீயேவடகயிலைமன்னியிருந்தாய்நீயே [யே
ஊனூற்றவொளிமழுவாட்படையாய்நீயே யொளிமதியோடரவுபுனல்வைத்தாய்நீ
ஆனூற்றவைந்துமமர்ந்தாய்நீயேயடியானென்றடியென்மேல்வைத்தாய்நீயே
தேனூற்றசொன்மடவாள்பங்கனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௪)

பெண்ணாண்பிறப்பிலியாய்நின்றாய்நீயேபெரியார்கட்கெல்லாம்பெரியாய்நீயே
உண்ணாவருநஞ்சமுண்டாய்நீயேயூழிமுதல்வனாய்நின்றாய்நீயே
கண்ணாயுலகெலாங்காத்தாய்நீயேகழற்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
திண்ணார்மழுவாட்படையாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௫)

உற்றிருந்தவுணர்வெலாமானாய்நீயேயுற்றவர்க்கோர்சுற்றமாய்நின்றாய்நீயே
கற்றிருந்தகலைஞானமானாய்நீயேகற்றவர்க்கோர்கற்பகமாய்நின்றாய்நீயே
பெற்றிருந்ததாயவளினல்லாய்நீயேபிரானாயடியென்மேல்வைத்தாய்நீயே
செற்றிருந்ததிருநீலகண்டனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ, (௬)

எல்லாவுலகமுமானாய்நீயேயேகம்பமேவியிருந்தாய்நீயே
நல்லாரைநன்மையறிவாய்நீயேஞானச்சுடர்விளக்காய்நின்றாய்நீயே
பொல்லாவினைகளறுப்பாய்நீயேபுகழ்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
செல்வாயசெல்வந்தருவாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௭)

ஆவினிலைந்துமமர்ந்தாய்நீயேயளவில்பெருமையுடையாய்நீயே
பூவினினாற்றமாய்நின்றாய்நீயேபோர்க்கோலங்கொண்டெயிலெய்தாய்நீயே
நாவினனுவுரையாய்நின்றாய்நீயேநண்ணியடியென்மேல்வைத்தாய்நீயே
தேவரறியாததேவனீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௮)

எண்டிசைக்கு மொண்சுடராய் நின்றாய்நீயே யேகம்பமேயவிறைவனீயே, வண்டிசைக்கு நறுங்கொன்றைத் தாராய்நீயே வாராவுலகருள வல்லாய்நீயே, தொண்டிசைத்துன்னடிபரவநின்றாய்நீயே தூமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய் நீயே, திண்சிலைக்கோர்சரங்கூட்டவல்லாய்நீயே திருவையாறகலாதசெம்பொற் (௯)

விண்டார்புரமூன்றுமெய்தாய்நீயேவிண்ணவர்க்குமேலாகிநின்றாய்நீயே
கண்டாரைக்கொல்லுநஞ்சுண்டாய்நீயேகாலங்களூழியாய்நின்றாய்நீயே

தொண்டாயடியேனையாண்டாய்நீயே தூமலர்ச்சேவடியென்மேல்வைத்தாய்நீயே
திண்டோள்விட்டெரியாடலுகந்தாய்நீயே திருவையாறகலாதசெம்பொற்சோதீ.

ஆருமறியாவிடத்தாய்நீயேயாகாயந்தேரூரவல்லாய்நீயே
பேரும்பெரியவிலங்கைவேந்தன்பெரியமுடிபத்திறுத்தாய்நீயே
ஊரும்புரமூன்றுமட்டாய்நீயேயொண்டாமரையானுமாலுங்கூடித்
தேருமடியென்மேல்வைத்தாய்நீயேதிருவையாறகலாதசெம்பொற்சோதீ. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௫௩. திருமழபாடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நீறேறுதிருமேனியுடையான்கண்டாய்நெற்றிமேலொற்றைக்கண்ணிறைந்தான்கண்டாய், கூறாகவுமைபாகங்கொண்டான்கண்டாய்கொடியவிடமுண்டிருண்டகண்டன்கண்டாய், ஏறேறியெங்குந்திரிவான்கண்டாயேழுலகுமேழ்மலையுமானான்கண்டாய், மாறானார்தம்மரணமட்டான்கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௧)

கொக்கிறகுசென்னியுடையான்கண்டாய்கொல்லைவிடையேறுங்கூத்தன்கண்டாய்
அக்கரைமேலாடலுடையான்கண்டாயனலங்கையேந்தியவாதிகண்டாய்
அக்கொடரவமணிந்தான்கண்டாயடியார்கட்காரமுதமானான்கண்டாய்
மலைதிருந்தகங்கைச்சடையான்கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௨)

நெற்றித்தனிக்கணுடையான்கண்டாய்நேரிழையோர்பாகமாய்நின்றான்கண்டாய், பற்றிப்பாம்பாட்டும்படிறன்கண்டாய்பல்லூர்பலிதேர்பரமன்கண்டாய், செற்றார்புரமூன்றுஞ்செற்றான்கண்டாய் செழுமாமதிசென்னிவைத்தான்கண்டாய் மற்றொருகுற்றமிலாதான்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (௩)

அலையார்ந்தபுனற்கங்கைச்சடையான்கண்டாயண்டத்துக்கப்பாலாய்நின்றான்கண்டாய், கொலையானைக்கூற்றங்குமைத்தான்கண்டாய்கொல்வேங்கைத்தோலொன்றுடுத்தான்கண்டாய், சிலையாற்றிரிபுரங்கள்செற்றான்கண்டாய்செழுமாமதிசென்னிவைத்தான்கண்டாய், மலையார்மடந்தைமணாளன்கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௪)

உலந்தார்தமங்கமணிந்தான்கண்டாயுவகையோடின்னருள்கள்செய்தான்கண்டாய், நலந்திகழுங்கொன்றைச்சடையான்கண்டாய்நால்வேதமாறங்கமானான்கண்டாய், உலந்தார்தலைகலனாக்கொண்டான்கண்டாயுமையாள்தங்கள்பெருமான்கண்டாய், மலர்ந்தார்திருவடியென்றலைமேல்வைத்தமழபாடிமன்னுமணாளன்றானே. ()

தாமரையான்றன்றலையைச்சாய்த்தான்கண்டாய்தகவுடையார்நெஞ்சிருக்கைகொண்டான்கண்டாய் பூமலரானேத்தும்புநிதன்கண்டாய்புணர்ச்சிப்பொருளாகிநின்றான்கண்டாய், ஏமருவுவெஞ்சிலையொன்றேந்திகண்டாயிருளார்ந்தகண்டத்திறைவன்கண்டாய், மாமருவுங்கலைகையிலேந்திகண்டாய்மழபாடிமன்னுமணாளனே. (௬)

நீராகிநெடுவரைகளானான்கண்டாய்நிழலாகிநீள்விசும்புமானான்கண்டாய்
பாராகிப்பவ்வமேழானான்கண்டாய்பகலாகிவானாகிநின்றான்கண்டாய்
க்கன்பன்கண்டாயனுவாகியாதியாய்நின்றானகண்டாய
வ யாள்பங்கன் கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (எ)

பொன்னியலுந்திருமேனியுடையான்கண்டாய்பூங்கொன்றைத்தாரொன்றணிந்தான்கண்டாய், மின்னியலும்வார்சடையெம்பெருமான்கண்டாய்வேழத்தினுரிவிரும்பிப்போர்த்தான்கண்டாய், தன்னியல்பார்மற்றொருவரில்லான்கண்டாய் தாங்கரியசிவந்தானாய்நின்றான்கண்டாய், மன்னியமங்கையோர்கூறன்கண்டாய் மழபாடிமன்னுமணாளன்றானே. (அ)

ஆலாலமுண்டுகந்தவாதிகண்டாயடையலர்தம்புரமூன்றுமெய்தான்கண்டாய்
காலாலக்காலனையுங்காய்ந்தான்கண்டாய்கண்ணப்பர்க்கருள்செய்தகாளைகண்டாய்
பாலாருமொழிமடவாள்பாகன்கண்டாய்பசுவேறிப்பலிதிரியும்பண்பன்கண்டாய்
மாலாலுமறிவரியமைந்தன்கண்டாய்மழபாடிமன்னுமணாளன்றானே. (௯)

ஒருசுடராயுலகேழுமானான்கண்டாயோங்காரத்துட்பொருளாய்நின்றான்கண்டாய், விரிசுடராய்விளங்கொளியாய்நின்றான்கண்டாய் * விழவொலியும்வேள்வொலியுமானான்கண்டாய், இருசுடர்மீதோடாவிலங்கைக்கோனையீடழியவிருபதுதோளிறுத்தான்கண்டாய், மருசுடரின்மாணிக்கக்குன்றுகண்டாய்மழபாடி மன்னுமணாளன்றானே. (௧௦)

றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வச்சிரத்தம்பநாதர்; முதல்வி - அழகம்மை.

## ௫௪. திருமழபாடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அலையடுத்தபெருங்கடனஞ்சமுதாவுண்டுவமரர்கடந்த
சிலையெடுத்துமாநாகநெருப்புக்கோத்துத்திரிபுரங்கடீயிட்டசெல்வர்போலும் [ற்ற
நிலையடுத்தபசும்பொன்னான்முத்தாணீண்டநிரைவயிரப்பலகையாற்குவையார்த்து
மலையடுத்தமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (க)

அறைகலந்தகுழன்மொந்தைவீணையாழுமந்தாத்திற்கந்தருவரமரரேத்த
மறைகலந்தமந்திரமுநீருங்கொண்டுவழிபட்டார்வானாளக்கொடுத்தியன்றே

* விழவொலியுமிழவொலியுமெனச் சிலபிர

கறைகலந்தபொ . க்கம்பமேயகனவயிரத்திரடே ணகவிரும்மாட
மறைகலந்தமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (உ)

உரங்கொடுக்குமிருண்மெய்யர்முர்க்கர்பொல்லாவூத்தைவாயச்சமணாதமை
.. கொண்ட, பரங்கெடுத்திங்கடியேனையாண்டுகொண்ட பவளத்தின்றிரளி
ணேபசும்பொன்முத்தே, புரங்கெடுத்துப்பொல்லாதகாமனாகம்பொடியாகவிழித்
தருளிப்புவியோர்க்கென்றும், வரங்கொடுக்குமழபாடிவயிரத்தூணேயென்றென்
னே. (௩)

ர்பொல்லாவூத்தைவாய்ச்சமணர்தமவாகக்கொண்டு
ஞானகஞ்சேர்ந்துள்ளவயிரத்தைநன்றாகவேனைப்பொருளாகவாண்டுகொண்ட
மீனகஞ்சேர்வெள்ளநீர்விதியாற்சூடும்வேதனேவிண்ணவர்தம்பெருமானேமேக
வானகஞ்சேர்மழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௪)

சிரமேற்றநான்முகன்றன்றலையுமற்றைத்திருமாறன்செழுந்தலையும்பொன்றச்சிந்தி
உரமேற்றவிரவிபற்றகர்த்துச்சோமனொளிர்கலைகள்படவுழக்கியுபிரைகல்கி
நரையேற்றவிடையேறிநாகம்பூண்டநம்பியையேமறைநான்குமோலமிட்டு
வரமேற்குமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநைகின்றேனே. (௫)

சினந்திருத்துஞ்சிறுபெரியார்குண்டர்தங்கள்செதுமதியார்தீவினைக்கேகவிழ
ந்தேன்றேடிப், புனந்திருத்தும்பொல்லாதபிண்டிபேணும்பொறியிலியேனைப்
பொருளாவாண்டுகொண்டு, தனந்திருத்துமவர்திறத்தையொழியப்பாற்றித்தயா
மூலதன்மவழியெனக்குநல்கி, மனந்திருத்துமழபாடிவயிரத்தூணேயென்றென்றே
நானரற்றிநைகின்றேனே. (௬)

சுழித்துணையாம்பிறவிவழித்துக்கநீக்குஞ்சுருள்சடையெம்பெருமானேதூய
தெண்ணீர், இழிப்பரியபசுபாசப்பிறப்பைநீக்குமென்னானேயென்னுடையபெ
ம்மான்றம்மான், பழிப்பரியதிருமாலுமயனுங்காணாப்பரிதிபோற்றிருமேயமுடிக்கணி
யாய்வாய்த்த, வழித்துணையாமழபாடிவயிரத்தூணேயென்றென்றேநானரற்றிநை
னே, (எ, அ, கூ, ௰)

திருச்சிற்றம்பலம்.

## ௭. திருநெய்த்தானம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வகையெலாமுடையாயுநீயேயென்றும்வான்கயிலைமேயினாய்நீயேயென்றும்
மிகையெலாமிக்காயுநீயேயென்றும்வெண்காடுமேயினாய்நீயேயென்றும்
பகையெலாந்தீர்த்தாண்டாய்நீயேயென்றும்பாசூரமர்ந்தாயுநீயேயென்றும்
திகையெலாந்தொழச்செல்வாய்நீயேயென்றுநின்றநெய்த்தானாவென்னெஞ்சுளாயே. (க)

ஆர்த்தவெனக்கன்பனீயேயென்றுமாதிக்கயிலாயனீயேயென்றும்
கூர்த்தநடமாடிநீயேயென்றுங்கோடிகாமேயகுழகாவென்றும்
பார்த்தற்கருள்செய்தாய்நீயேயென்றும்பழையனூர்மேவியபண்பாவென்றும்
தீர்த்தன்சிவலோகனீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௨)

அல்லாய்ப்பகலானுய்நீயேயென்றுமாதிக்கயிலாயனீயேயென்றும்
கல்லாலமர்ந்தாயுநீயேயென்றுங்காளத்திக்கற்பகமுநீயேயென்றும் [றும்
சொல்லாய்ப்பொருளானுய்நீயேயென்றுஞ்சோற்றுத்துறையுறைவாய்நீயேயென்
செல்வாய்த்திருவானுய்நீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௩)

மின்னேரிடைபங்கனீயேயென்றும்வெண்காடுமேவினுய்நீயேயென்றும்
பொன்னேர்சடைமுடியாய்நீயேயென்றும்பூதகணநாதனீயேயென்றும்
மண்ணுவிர ந்க்தாய்நீயேயென்றுமேகம்பத்தென்னீசனீயேயென்றும்
தென்,ரார்ப்பதியுளாய்நீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. ()

முந்தியிருந்தாயுநீயேயென்றுமுன்கயிலைமேவினுய்நீயேயென்றும்
நந்திக்கருள்செய்தாய்நீயேயென்றுநடமாடிநள்ளாறனீயேயென்றும்
பந்திப்பரியாயுநீயேயென்றும்பைஞ்ஞீலிமேவினுய்நீயேயென்றும்
சிந்திப்பரியாயுநீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௫)

தக்காரடியார்க்குநீயேயென்றுந்தலையார்கயிலாயனீயேயென்றும்
அக்காரம்பூண்டாயுநீயேயென்றுமாக்கூரிற்றான்றோன்றிநீயேயென்றும்
புக்காயவேழுலகுநீயேயென்றும்புள்ளிருக்கும்வேளூராய்நீயேயென்றும்
தெக்காரமாகோணத்தானேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௬)

புகழும்பெருமையாய்நீயேயென்றும்பூங்கயிலைமேவினுய்நீயேயென்றும்
இகழுந்தலையேந்திநீயேயென்றுமிராமேச்சுரத்தின்பனீயேயென்றும்
அகழுமதிலுடையாய்நீயேயென்றுமாலவாய்மேவினுய்நீயேயென்றும்
திகழுமதிசூடிநீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௭)

வானவர்க்குமூத்திளையாய்நீயேயென்றும்வானக்கயிலாயனீயேயென்றும்
கானநடமாடிநீயேயென்றுங்கடவூரில்வீரட்டனீயேயென்றும்
ஊனுர்முடியறுத்தாய்நீயேயென்றுமொற்றியூராரூராநீயேயென்றும்
தேனுயமுதானுய்நீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௮)

தந்தைதாயில்லாதாய்னீயேயென்றுந்தலையார்கயிலாயனீயேயென்றும்
எந்தாயெம்பிரானுனய்நீயேயென்றுமேகம்பத்தென்னீசனீயேயென்றும்
முந்திய முக்கணுய்நீயேயென்றுமுவலூர்மேவினுய்நீயேயென்றும்
சிந்தையாய்த்தேனூராய்நீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௯)

வெறுத்தார்பிறப்பறுப்பாய [illegible]
அறுத்தாயமுதீந்தாய்நீயேயென்றும்யாவர்க்குந்தாங்கொணுநஞ்சமுண்
பொறுத்தாய்புலனைந்துநீயேயென்றுநின்றநெய்த்தானுவென்னெஞ்சுளாயே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

அஞ்சப்புலனிவற்றாலாட்டவாட்டுண்டருநோய்க்கிடமாயவுடலின்றன்மை
தஞ்சமெனக்கருதித்தாழேனெஞ்சேதாழக்கருதுதியேதன்னைச்சேரா [ம்
வஞ்சமனத்தவர்கள்காணவொண்ணாமணிகண்டன்வானவர்தம்பிரானென்றேத்து
நெஞ்சர்க்கினியவனைநெய்த்தானமென்றுநினையுமாநினைந்தக்காலுய்யலாமே. (அ)

பொருந்தாதவுடலகத்திற்புக்கவாவிபோமாறறிந்தறிந்தேபுலைவாழ்வுன்னி [சக்
இருந்தாங்கிடர்ப்படநீவேண்டாநெஞ்சேயிமையவர்தம்பெருமானன்றுமையாளஞ்
கருந்தாண்மதகரியைவெருவச்சீறுங்கண்ணுதல்கண்டமராடிக்கருதார்வேள்வி

ரித்தன்றுனக்கிவ்வுடலின்றன்மையுண்மையுரைத்தேன்விரதமெல்லாம், தரி
த்துத்தவமுயன்றும்வாழாநெஞ்சே தம்மிடையிலில்லார்க் கொன்றல்லாக்கன்னன்,
ரித்தானை டையானெண்டோளானேயெம்பெருமானென்றேத்தாவிலங்கைக்
கோனை, நெரித்தானைநெய்த்தானமேவினானைநினையுமாநினைந்தக்காலுய்யலாமே.

திருச்சிற்றம்பலம்.

இத்தலஞ்சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - நெய்யாடியப்பர்; முதல்வி - வாலாம்பிகையம்மை.

## உருஎ. திருப்பூந்துருத்தி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

நில்லாதநீர்சடைமேனிற்பித்தானைநினையாவென்னெஞ்சைநினைவித்தானைக், கல்லாதனவெல்லாங்கற்பித்தானைக்காணாதனவெல்லாங்காட்டினானைச், சொல்லாதனவெல்லாஞ்சொல்லியென்னைத்தொடர்ந்திங்கடியேனையாளாக்கொண்டு, பொல்லாவென்னோய்தீர்த்தபுனிதன்றன்னைப்புண்ணியனைப்பூந்துருத்திகண்டேனானே.

குற்றாலங்கோகரணமேவினானைக்கொடுங்கைக்கடுங்கூற்றைப்பாய்ந்தான்றன்னை
ற்றாலஞ்சுண்டொடுக்கினானையுணராவென்னெஞ்சையுணர்வித்தானைப்
பற்றாலின்கீழங்கிருந்தான்றன்னைப்பண்ணார்ந்தவீணைபயின்றான்றன்னைப்
புற்றாடரவார்த்தபுனிதன்றன்னைப்புண்ணியனைப்பூந்துருத்திக்கண்டேனானே. (உ)

எனக்கென்றுமினியானையெம்மான்றன்னையெழிலாருமேகம்பமேயான்றன்னை, மனக்கென்றும்வருவானைவஞ்சர்நெஞ்சினில்லானைநின்றியூர்மேயான்றன்னைத், தனக்கென்றுமடியேனையாளாக்கொண்டசங்கரனைச்சங்கவார்குழையான்றன்னைப், புனக்கொன்றைத்தாரணிந்தபுனிதன்றன்னைப் பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனானே. (௩)

வெறியார்மலர்க்கொன்றைசூடினானைவெள்ளானைவந்திறைஞ்சும்வெண்காட்டானை
அறியாதடியேனகப்பட்டேனையல்லற்கடனின்றுமேறவாங்கி
நெறிதானிதுவென்றுகாட்டினானைநிச்சனலிபிணிகடீர்ப்பான்றன்னைப்
பொறியாடரவார்த்தபுனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே

மிக்கானைவெண்ணீறுசண்ணித்தானைவிண்டார்புரமூன்றும்வேவநோக்கி, நக்கானைநான்மறைகள்பாடினானைநல்லார்கள்பேணிப்பரவநின்ற, தக்கானைத்தண்டாமரைமேலண்ணலைக்கொண்டியாத்திரைக்குலகமெல்லாம் புக்கானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௫)

ஆர்த்தானைவாசுகியையரைக்கோர்கச்சாவசைத்தானையழகாயபொன்னார்மேனிப், பூத்தானத்தான்முடியைப்பொருந்தாவண்ணம்புணர்ந்தானைப்பூங்கணையானுடலம்வேவப், பார்த்தானைப்பரிந்தானைப்பனிநீர்க்கங்கைபடர்சடைமேற்பயின்றானைப்பதைப்பயானை, போர்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௬)

எரித்தானையெண்ணார்புரங்கண்மூன்றுமிமைப்பளவிற்பொடியாகவெழிலார்கையால், உரித்தானைமதகரியையுற்றுப்பற்றியுமையவணடுங்கக்கண்டு, சிரித்தானைச்சீரார்ந்தபூதஞ்சூழத்திருச்சடைமேற்றிங்கள்பாம்புநீறு, புரித்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே.

வைத்தானைவானோருலகமெல்லாம்வந்திறைஞ்சிமலர்கொண்டுநின்றுபோற்றும், வித்தானைவேண்டிற்றொன்றீவான்றன்னைவிண்ணவர்தம்பெருமானைவினைகள்போக, உய்த்தானையொலிகங்கைசடைமேற்றாங்கியொளித்தானையொருபாகத்துமையோடாங்கே, பொய்த்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௮)

ஆண்டானைவானோருலகமெல்லாமந்நாளறியாததக்கன்வேள்வி, மீண்டானைவிண்ணவர்களோடுங்கூடிவிரைமலர்மேனான்முகனுமாலுந்தேட, நீண்டானைநெருப்புருவமானான்றன்னைநிலையிலார்மும்மதிலும்வேவவில்லைப், பூண்டானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௯)

மறுத்தானைமலைகோத்தங்கெடுத்தான்றன்னைமணிமுடியோடிருபதுதோணெரியக்காலால், இறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையெண்டிசைக்குங்கண்ணுளனைச்சிரமேலொன்றை, யறுத்தானையமரர்களுக்கமுதீந்தானையாவர்க்குந்தாங்கொணாநஞ்சமுண்டு, பொறுத்தானைப்புண்ணியனைப்புனிதன்றன்னைப்பொய்யிலியைப்பூந்துருத்திக்கண்டேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் உள்நாட்டில் உள்ளது.

முதல்வன் - புஷ்பவனநாதர்; முதல்வி - அழகார்ந்தநாயகியம்மை.

## ௨௫௮. திருச்சோற்றுத்துறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மூத்தவனாயுலகுக்குமுந்தினானேமுறைமையாலெல்லாம்படைக்கின்றானே, ஏத்தவனாயேழுலகுமாயினானேயின்பனாய்த்துன்பங்களைகின்றானே, காத்தவனாயெல்லாந்தான்காண்கின்றானேகடுவினையேன்றீவினையைக்கண்டுபோகத், தீர்த்தவனே திருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே. (௧)

தலையவனாயுலகுக்கோர்தன்மையானேதத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமுதானானே, நிலையவனாய்நின்னொப்பாரில்லாதானேநின்றுணராக்கூற்றத்தைச்சீறிப்பாய்ந்த, கொலையவனேகொல்யானைத்தோன்மேலிட்டகூற்றுவனேகொடிமதில்கண்மூன்றுமெய்த, சிலையவனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே. (௨)

முற்றாதபான்மதியஞ்சூடினானேமுளைத்தெழுந்தகற்பகத்தின்கொழுந்தொப்பானே, மற்றொன்றொருவரையுமில்லாதானேயுலகோம்புமொண்சுடரேயோதும்வேதம், கற்றானேயெல்லாக்கலைஞானமுங்கல்லாதேன்றீவினைநோய்கண்டுபோகச், செற்றானேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே. (௩)

கண்ணவனாயுலகெலாங்காக்கின்றானேகாலங்களூழிகண்டிருக்கின்றானே, விண்ணவனாய்விண்ணவர்க்குமருள்செய்வானேவேதனாய்வேதம்விரித்திட்டானே, எண்ணவனேயெண்ணார்புரங்கண்மூன்றுமிமையாமுன்னெரிகொளுவநோக்கிநக்க,திண்ணவனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே

நம்பனேநான்மறைகளாயினானேநடமாடவல்லானேஞானக்கூத்தா
கம்பனேகச்சிமாநகருளானேகடிமதில்கண்மூன்றினையும்பொடியாவெய்த
அம்பனேயளவிலாப்பெருமையானேயடியார்கட்காரமுதேயானேறேறும் [னே.
செம்பொனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநா

ஆர்ந்தவனேயுலகெலாநீயேயாகியமைந்தவனேயளவிலாப்பெருமையானே, கூர்ந்தவனேகுற்றாலமேயகூத்தாகொடுமூவிலையதோர்சூலமேந்திப், பேர்ந்தவனேபிரளயங்களெல்லாமாயபெம்மானென்றெப்போதும்பேசுநெஞ்சில், சேர்ந்தவனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே. (௬)

வானவனாய்வண்மைமனத்தினானேமாமணிசேர்வானோர்பெருமானீயே
கானவனாயேனத்தின்பின்சென்றானேகடியவரணங்கண்மூன்றட்டானே
தானவனாய்த்தண்கயிலைமேவினானேதன்னொப்பாரில்லாதமங்கைக்கென்றும்
தேனவனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே

தன்னவனாயுலகெலாந்தானேயாகித்தத்துவனாய்ச்சார்ந்தார்க்கின்னமுதானா
னே, என்னவனாயென்னிதயமேவினானேயீசனேபாசவினைகளறுக்கும், மன்னவ
னேமலைமங்கைபாகமாகவைத்தவனேவானோர்வணங்கும்பொன்னித், தென்னவ
னேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே. (அ)

எறிந்தானேயெண்டிசைக்குங்கண்ணானானேயேழுலகுமெல்லாமுன்னாய்நின்
றானே, அறிந்தார்தாமோரிருவரறியாவண்ணமாதியுமந்தமுமாயங்கே, பிறிந்தா
னேபிறரொருவரறியாவண்ணம்பெம்மானென்றெப்போதுமேத்துநின்றேல், செ
றிந்தானேதிருச்சோற்றுத்துறையுளானே திகழொளியேசிவனேயுன்னபயநானே.

மையனையகண்டத்தாய்மாலுமற்றைவானவருமறியாதவண்ணமாய்நின்ற, மை
யவனேகடியிலங்கைக்கோனையன்றுகால்விரலாற்கதிர்முடியுந்தோளுநெரித்த, மெ
ய்யவனேயடியார்கள்வேண்டிற்றீயும்விண்ணவனேவிண்ணவர்கட்கெல்லாஞ், செ
ய்யவனேதிருச்சோற்றுத்துறையுளானேதிகழொளியேசிவனேயுன்னபயநானே.

திருச்சிற்றம்பலம்.

45

## ௯. திருவொற்றியூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வண்டோங்குசெங்கமலக்கழுநீர்மல்குமதமத்தஞ்செஞ்சடைமேல்மதியஞ்சூ
டித், திண்டோள்களாயிரமும்வீசிநின்றுதிசைசேரநடமாடிச்சிவலோகனார், உண்
டார்நஞ்சுலகுக்கோருறுதிவேண்டியொற்றியூர்மேயவொளிவண்ணனார், கண்டே
னான்கனவகத்திற்கண்டேற்கென்றன்கடும்பிணியுஞ்சுடுதொழிலுங்கைவிட்டவே.

ஆகத்தோர்பாம்பசைத்துவெள்ளேறேறியணிகங்கைசெஞ்சடைமேலார்க
ச்சூடிப், பாகத்தோர்பெண்ணுடையாரானுமாவர் பசுவேறியுழிதருமெம்பரம
யோகி, காமத்தாலங்கணையான்றன்னைவீழக்கனலாவெரிவிழித்தகண்மூன்றினார்
ன்மறைகளோதலோவாவொளிதிகழுமொற்றியூருறைகின்றாரே. (௨)

வெள்ளத்தைச்செஞ்சடைமேல்விரும்பிவைத்தீர்வெண்மதியும்பாம்புமுடனே
வைத்தீர், கள்ளத்தைமனத்தகத்தேகரந்துவைத்தீர்கண்டார்க்குப்பொல்லாதுகண்
டீரெல்லே, கொள்ளத்தானிசைபாடிப்பலியுங்கொள்ளீர் கோளரவுங்குளிர்மதியுங்
கொடியுங்காட்டி, உள்ளத்தைநீர்கொண்டீரோதலோவாவொளிதிகழுமொற்றியூரு
டையகோவே. (௩)

நரையார்ந்தவிடையேறிநீறுபூசிநாகங்கச்சரைக்கார்த்தோர்தலைகையேந்தி,
உரையாவந்தில்புகுந்துபலிதான்வேண்டவெம்மடிகளுமூர்தானேதோவென்ன,
விரையாதேகேட்டியேல்வேற்கணல்லாய்விடுங்கலங்களொடுங்கடலும் நின்றதோ
ன்றும், திரைமோதக்கரையேறிச்சங்கமூருந்திருவொற்றியூரென்றார்தியவாறே. ()

மத்தமாகளியானையுரிவைபோர்த்துவானகத்தார்தானகத்தாராகிநின்று
பித்தர்தாம்போலங்கோர்பெருமைபேசிப்பேதையரையச்சுறுத்திப்பெயரக்கண்டு
பத்தர்கடாம்பலருடனேகூடிப்பாடிப்பயின்றிருக்குமூரேதோபணியீரென்ன
முத்தமைந்தவுத்திரநாடீர்த்தமாகவொளிதிகழுமொற்றியூரென்கின்றாரே.

கடியவிடையேறிக்காளகண்டர்கலையோடுமழுவாளோர்கையிலேந்தி
இடியபலிகொள்ளார்போவாரல்லரெல்லாந்தாணிவ்வடிகள்யாரென்பாரே
வடிவுடையமங்கையுந்தாமுமெல்லாம்வருவாரையெதிர்கண்டோமயிலாப்புள்ளே
செடிபடுவெண்டலையொன்றேந்திவந்துதிருவொற்றியூர்புக்கார்தீயவாறே. (௬)

வல்லராய்வானவர்களெல்லாங்கூடிவணங்குவார்வாழ்த்துவார்வந்துநிற்பார்
எல்லையெம்பெருமானைக்காணோமென்னவெவ்வாற்றாலெவ்வகையாற்காண்மாட்
நல்லார்கணான்மறையோர்கூடிநேடிநாமிருக்குமூர்பணியீரடிகேளென்ன [டார்
முல்லைத்தான்றிரையேறியோதமீளுமொளிதிகழுமொற்றியூரென்கின்றாரே. (௭)

நிலைப்பாடேநான்கண்டதேடிகேளாய்நெருநலைநற்பகலிங்கோரடிகள்வந்து
கலைப்பாடுங்கண்மலருங்கலக்கநோக்கிக்கலந்துபலியிடுவேனெங்குங்காணேன் [ணம்
சலப்பாடேயினியொருநாட்காண்பேனாகிற்றன்னாகத்தென்னாகமொடுங்கும்வண்
உலைப்பாடேபடத்தழுவிப்போகலொட்டேனொற்றியூருறைந்திங்கேதிரிவானையே.

மண்ணல்லைவிண்ணல்லைவலயமல்லைமலையல்லைகடலல்லைவாயுவல்லை
எண்ணல்லையெழுத்தல்லையெரியுமல்லையிரவல்லைபகலல்லையாவுமல்லை
பெண்ணல்லையாணல்லைபேடுமல்லைபிறிதல்லையானாயும்பெரியாய்நீயே
உண்ணல்லைநல்லார்க்குத்தீயையல்லையுணர்வரியவொற்றியூருடையகோவே. (௯)

மருவுற்றமலர்க்குழலிமடவாளஞ்சமலைதுளங்கத்திசைநடுங்கச்செறுத்துநோக்கிச்
செருவுற்றவாளரக்கன்வலிதான்மாளத்திருவடியின்விரலொன்றாலலறவூன்றி
உருவொற்றியங்கிருவரோடிக்காணவோங்கினவவ்வொள்ளழலாரிங்கேவந்து
திருவொற்றியூர்நம்மூரென்றுபோனார்செறிவளைகளொன்றொன்றாச்சென்றவாறே.

திருச்சிற்றம்பலம்.

## ௨௯௦. திருவாவடுதுறை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

**நம்பனைநால்வேதங்கரைகண்டானை**
**கம்பனைக்கல்லாலிருந்தான்றன்னைக்கற்பகமாயடியார்கட்கருள்செய்வானைச்**
**செம்பொன்னைப்பவளத்தைத்திரளுமுத்தைத்திங்களைஞாயிற்றைத்தீயைநீரை [யே**
**அம்பொன்னையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தே**

மின்னானைமின்னிடைச்சேருருமினானைவெண்முகிலாயெழுந்துமழைபொழி வான்றன்னைத், தன்னானைத்தன்னொப்பாரில்லாதானைத்தாயாகிப்பல்லுயிர்க்கோர் தந்தையாகி, என்னானையெந்தைபெருமான்றன்னையிருநிலமுமண்டமுமாய்ச்செக் கர்வானே, அன்னானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந் தேனே. (உ)

பத்தர்கள்சித்தத்தேபாவித்தானைப்பவளக்கொழுந்தினைமாணிக்கத்தின் [illegible]றமைந்த தொத்தினைத்தூநெறியாய்நின்றான்றன்னைச்சொல்லுவார்சொற்பொருளின்றோற் வித்தினைமுளைக்கிளையைவேரைச்சீரைவினை[illegible]ன்றன்சார்[illegible]வெய்ய[illegible]க்கும் அத்தானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. ()

பேணியநற்பிறைதவழ்செஞ்சடையினானைப்பித்தராமடியார்க்குமுத்திகாட் டும், ஏணியையிடர்க்கடலுட்சுழிக்கப்பட்டிங்கிளைக்கின்றேற்கக்கரைக்கேயேற வாங்கும், தோணியைத்தொண்டனேன்றூயசோதிச்சுலாவெண்குழையானைச் சுடர்பொற்காசின், ஆணியையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேன டைந்துய்ந்தேனே. (ச)

ஒருமணியையுலகுக்கோருறுதிதன்னையுதயத்தினுச்சியையுருமானானைப், பரு மணியைப்பாலோடஞ்சாடினானைப்பவித்திரனைப்பசுபதியைப்பவளக்குன்றைத், திருமணியைத்தித்திப்பைத்தேனதாகித்தீங்கரும்பின்இன்சுவையைத்திகழுஞ்சோ தி, அருமணியையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந் தேனே. (ரு)

ஏற்றானையெண்டோளுடையான்றன்னையெல்லிநடமாடவல்லான்றன்னைக் கூற்றானைக்கூற்றமுதைத்தான்றன்னைக்குரைகடல்வாய்நஞ்சுண்டகண்டன்றன்னை நீற்றானைநீளரவொன்றார்த்தான்றன்னைநீண்டசடைமுடிமேனீரார்கங்கை ஆற்றானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. (சு)

கைம்மானமதகளிற்றையுரித்தான்றன்னைக்கடல்வரைவானாகாசமானான்றன்னைச் செம்மானப்பவளத்தைத்திகழுமுத்தைத்திங்களைஞாயிற்றைத்தீயானானை எம்மானையென்மனமேகோயிலாகவிருந்தானையென்புருக்குமடியார்தங்கள் அம்மானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந்தேனே. ()

மெய்யானைப்பொய்யரொடும்விரவாதானைவெள்ளடையைத்தண்ணிழலைவெந் தீயேந்தும், கையானைக்காமனுடல்வேவக்காய்ந்தகண்ணானைக்கண்மூன்றுடையா ன்றன்னைப்,பையாடரவமதியுடனேவைத்தசடையானைப்பாய்புலித்தோலுடையா ன்றன்னை, ஐயானையாவடுதண்டுறையுண்மேயவரனடியேயடிநாயேனடைந்துய்ந் தேனே. (அ)

வேண்டாமைவேண்டுவதுமில்லான்றன்னைவிசயனைமுன்னசைவித்தவேடன் றன்னைத், தூண்டாமைச்சுடர்விடுநற்சோதியானைச்சூலப்படையானைக் காலன்

பயிலவைத்த, மதியவன்காண்வானவர்கள்வணங்கியேத்தும்வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௯)

பங்கயத்தின்மேலானும்பாலனாகியுலகளந்தபடியானும்பரவிக்காணா, கங்கைவைத்தசென்னியராயளக்கமாட்டா வனலவன்காணலைகடல்சூழிலங்கைவேந்தன், கொங்கலர்த்தமுடிநெரியவிரலாலூன்றுங்குழகன்காணழகன்காண்கோலமாய, மங்கையர்க்கோர்கூறன்காண்வானோரேத்தும் வலிவலத்தான்காணவனென்மனத்துளானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மனத்துணைநாதர்; முதல்வி - மாழையங்கண்ணி.

---

## ௨௬௩. திருக்கோகரணம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

சந்திரனுந்தண்புனலுஞ்சந்தித்தான்காண்டாழ்சடையான்காண்சார்ந்தார்க்கமுதானான்காண், அந்தரத்தில்சுரர்புரமூன்றட்டான்காணவ்வுருவிலவ்வுருவமாயினான்காண், பந்தரத்துநான்மறைகள்பாடினான்காண்பலபலவும்பாணிபயில்கின்றான்காண், மந்திரத்துமறைப்பொருளுமாயினான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௧

தந்தவத்தன்றன்றலையைத்தாங்கினான்காண்சாரணன்காண்சார்ந்தார்க்கின்னமுதானான்காண், கெந்தத்தன்காண்கெடிலவீரட்டன்காண்கேடிலிகாண்கெடுப்பார்மற்றில்லாதான்காண், வெந்தொத்தநீறுமெய்பூசினான்காண்வீரன்காண்வியன்கயிலைமேவினான்காண், வந்தொத்தநெடுமாற்குமறிவொணான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௨)

தன்னுருவமாருக்குந்தாக்காதான்காண்டாழ்சடையெம்பெருமான்காண்டக்கார்க்குள்ள பொன்னுருவச்சோதிப்புனலாடினான்காண்புராணன்காண்பூதங்களாயினான்காண், மின்னுருவநுண்ணிடையாள்பாகத்தான்காண்வேழத்துரிவெருவப்போர்த்தான்றான்காண், மன்னுருவாய்மாமறைகளோதினான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௩)

ஆறேறுசெஞ்சடையெம்மாரூரன்காணன்பன்காணணிபழனமேயான்றான்காண், நீறேறிநிழரிகழூமேனியான்காணிருபன்காணிகரொன்றுமில்லாதான்காண், கூறேறுகொடுமழுவாட்படையினான்காண் கொக்கரையன்காண்குழூநற்பூதத்தான்காண், மாறாயமதின்மூன்றுமாய்வித்தான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே

சென்றச்சிலைவாங்கிச்சேர்வித்தான்காண்டயம்பன்காண்டிரிபுரங்கண்மூன்றும்
பொன்றப்பொடியாகநோக்கினான்காண்பூதன்காண்பூதப்படையாளிகாண்

சவந்தாங்குமயானத்துச்சாம்பலென்புதலையோடுமயிர்க்கயிறுதரித்தான்றன்னைப்
பவந்தாங்குபாசுபதவேடத்தானைப்பண்டமரர்கொண்டுகந்தவேள்வியெல்லாம்
கவர்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னைக்கழலடைந்தான்மேற்கறுத்தகாலன்வீழச்
சிவந்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௨)

அன்றாலின்கீழிருந்தங்கறஞ்சொன்னானையகத்தியனையுகப்பானையயன்மாறேட
நின்றானைக்கிடந்தகடனஞ்சுண்டானைநேரிழையைக்கலந்திருந்தேபுலன்களைந்தும்
வென்றானைமீயச்சூர்மேவினானைமெல்லியலாடவத்தினிறையளக்கலுற்றுச்
சென்றானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௩)

தூயானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தோன்றியவெவ்வுயிர்க்குந்துணையாய்
நின்ற, தாயானைச்சக்கரமாற்கீந்தான்றன்னைச்சங்கரனைச்சந்தோகசாமமோதும்,
வாயானைமந்திரிப்பார்மனத்துளானை வஞ்சனையாலஞ்செழுத்தும் வழுத்துவார்க்
குச், சேயானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௪)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வந்தநஞ்சமுதுசெய்தானையமுதமுண்ட
மற்றமரருலந்தாலுமுலவாதானைவருகாலஞ்செல்காலம்வந்தகாலம் [றச்
உற்றவத்தையுணர்ந்தாருமுணரலாகாவொருசுடரையிருவிசும்பினூர்மூன்றெ
செற்றவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௫)

மைவானமிடற்றானையவ்வான்மின்போல்வளர்சடைமேன்மதியானைமழைமா
யெங்கும், பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்பில்வாயபேய்க்கணங்களார்க்கசூ
லம், பொய்வானைப்பொய்யிலாமெய்யன்றன்னைப்பூதலமுமண்டலமும்பொருந்து
வாழ்க்கை, செய்வானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்
றாரே (௬)

மிக்கானைக்குறைந்தடைந்தார்மேவலானைவெவ்வேறாயிருமூன்றுசமயமாகிப்,
புக்கானையெப்பொருட்கும்பொதுவானானைப்பொன்னுலகத்தவர்போற்றுமம்பொரு
ளுக்கெல்லாம், தக்கானைத்தானன்றிவேறொன்றில்லாத்தத்துவனைத்தடவரையை
நடுவுசெய்த திக்கானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே

வானவர்கோன்றோளிறுத்தமைந்தன்றன்னைவளைகுளமுமறைக்காடுமன்னினானை
ஊனவனையுயிரவனையொருநாட்பார்த்தனுயர்தவத்தினிலையறியவுற்றுச்சென்ற
கானவனைக்கயிலாயமேவினானைக்கங்கைசேர்சடையானைக்கலந்தார்க்கென்றுந்
தேனவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௮)

பரத்தானையிம்பக்கம்பலவானானைப்பசுபதியைப்பத்தர்க்குமுத்திகாட்டும், வர
தானைவணங்குவார்மனத்துளானைமாருதமாலெரிமூன்றுவாயம்பீர்க்காம், சரத்
தைச்சரத்தையுந்தன்றாட்கீழ்வைத்ததபோதனனைச்சடாமகுடத்தணிந்தபைங்
கிரத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. ()

காளை. அன்றப்பொழுதேயருள்செய்தான்காணனலாடிகாணடியார்க்கமுதானான்
காண், மன்றன்மணங்கமழும்வார்சடையான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னி
னானே. (௫)

பிறையோடுபெண்ணொருபால்வைத்தான்றான்காண்பேரவன்காண்பிறப்பொ
ன்றமில்லாதான்காண், கறையோடுமணிமிடற்றுக்காபாலிகாண்கட்டங்கன்காண்
கையிற்கபாலமேந்திப், பறையோடுபல்கீதம்பாடினான்கா ணாடினான்காண்பாணி
யாகநின்று, மறையோடுமாகீதங்கேட்டான்றான்காண் மாகடல்சூழ்கோகரணமன்
னினானே (௬)

மின்னளந்தமேன்முகட்டின்மேலுற்றான்காண்விண்ணவர்தம்பெருமான்காண்
மேவிலெங்கும், முன்னளந்தமூவர்க்குமுதலானான்காண்மூவிலைவேற்சூலத்தெங்
கோலத்தான்காண், எண்ணளந்தென்சிந்தையேமேவினான்கா ணேவலன்காணிமை
யோர்களேத்தநின்று, மண்ணளந்தமாலறியாமாயத்தான்காண்மாகடல்சூழ்கோக
ரணமன்னினானே. (௭)

பின்னுசடைமேற்பிறைசூடினான்காண் பேரருளன்காண்பிறப்பொன்றில்லா
தான்காண், முன்னியுலகுக்குமுன்னானான் காண்மூவெயிலுஞ்செற்றுகந்தமுதல்
வன்றான்காண், இன்னவுருவென்றறிவொண்ணாதான்றான்காணேழ்கடலுமேழுலகு
மாயினான்காண், மன்னுமடந்தையோர்பாகத்தான்காண்மாகடல்சூழ்கோகரண
மன்னினானே. (௮)

வெட்டவெடித்தார்க்கோர்வெவ்வழலன்காண் வீரன்காண்வீரட்டமேவினான்
காண்,பொட்டவணங்களையுநோக்கினான்காண்பூதன்காண்பூதப்படையினான்காண்,
கட்டக்கடுவினைகள்காத்தாள்வான்காண்கண்டன்காண்வண்டுண்டகொன்றையான்
காண், வட்டமதிப்பாகஞ்சூடினான்காண்மாகடல்சூழ்கோகரணமன்னினானே. (௯)

கையாற்கயிலையெடுத்தான்றன்னைக்கால்விரலாற்றோணெரியவூன்றினான்கா
ண்,மெய்யினரம்பிசையாற்கேட்பித்தாற்குமீண்டேயவற்கருள்கணல்கினான்காண்,
பொய்யர்மனத்துப்புறம்பாவான்காண்போர்ப்படையான்காண்பொருவாரில்லாதா
ன்காண் —கொண்மணிமிடற்றுவார்சடையான்காண்மாகடல்சூழ்கோகரணமன்
னினானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் துளுவநாட்டில் உள்ளது.

முதல்வன் - மாபலநாதர்;

## 50) ௨௯௪. திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

போரா ப்புலியதளேயுடையாடைபோ ப
ப ானானைப்பல்லுயிராய்நெடுவெளியாய்ப்பரந்துநின்ற
கா யானானை.நினையாதார்புரமெரியநினைந்ததெய்வத்
ா ர்க்கே (௧)

சவந்தாங்குமயானத்துச்சாம்பலென்புதலையோடுமயிர்க்கயிறுதரித்தான் றன்னைப்
பவந்தாங்குபாசுபதவேடத்தானைப்பண்டமரர்கொண்டுகந்தவேள்வியெல்லாம்
கவர்ந்தானைக்கச்சியேகம்பன் றன்னைக்கழலடைந்தான்மேற்கறுத்தகாலன்வீழச்
சிவந்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௨)

அன்றாலின்கீழிருந்தங்கறஞ்சொன்னானையகத்தியனையுகப்பானையயன்மாறேட
நின்றானைக்கிடந்தகடனஞ்சுண்டானைநேரிழையைக்கலந்திருந்தேபுலன்களைந்தும்
வென்றானைமீயச்சூர்மேவினானைமெல்லியலாடவத்தினிறையளக்கலுற்றுச்
சென்றானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௩)

தூயானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தோன்றியவெவ்வுயிர்க்குந்துணையாய்
நின்ற, தாயானைச்சக்கரமாற்கீந்தான்றன்னைச்சங்கரனைச்சந்தோகசாமமோதும்,
வாயானைமந்திரிப்பார்மனத்துளானை வஞ்சனையாலஞ்செழுத்தும் வழுத்துவார்க்
குச், சேயானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௪)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வந்தநஞ்சமுதுசெய்தானையமுதமுண்ட
மற்றமரருலந்தாலுமுலவாதானைவருகாலஞ்செல்காலம்வந்தகாலம் [றச்
உற்றவத்தையுணர்ந்தாருமுணரலாகாவொருசுடரையிருவிசும்பினூர்மூன்றொன்
செற்றவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௫)

மைவானமிடற்றானையவ்வான்மின்போல்வளர்சடைமேன்மதியானைமழையா
யெங்கும், பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்பில்வாயபேய்க்கணங்களார்க்கவாரு
லம், பொய்வானைப்பொய்யிலாமெய்யன்றன்னைப்பூதலமுமண்டலமும்பொருந்து
வாழ்க்கை, செய்வானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்
றாரே (௬)

மிக்கானைக்குறைந்தடைந்தார்மேவலானைவெவ்வேறாயிருமூன்றுசமயமாகிப்,
புக்கானையெப்பொருட்கும்பொதுவானானைப்பொன்னுலகத்தவர்போற்றுமெம்பொரு
ளுக்கெல்லாம், தக்கானைத்தானன்றிவேறொன்றில்லாத்தத்துவனைத்தடவரையை
நடுவுசெய்த திக்கானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே

வானவர்கோன்றோளிறுத்தமைந்தன்றன்னைவளைகுளமுமறைக்காடுமன்னினானை
ஊனவனையுயிரவனையொருநாட்பார்த்தனுயர்தவத்தினிலையறிவானுற்றுச்சென்ற
கானவனைக்கயிலாயமேவினானைக்கங்கைசேர்சடையானைக்கலந்தார்க்கென்றும்
தேனவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௮)

பரத்தானையிம்பக்கம்பலவானானைப்பசுபதியைப்பத்தர்க்குமுத்திகாட்டும், வர
தானைவணங்குவார்மனத்துளானைமாருதமாலெரிமூன்றுவாயம்பேர்க்காம், சரத்
தானைச்சரத்தையுந்தன்றாட்கீழ்வைத்த தபோதனனைச்சடாமகுடத்தணிந்தபைங்
சிரத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. ()

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றை யஞ்சாதேவரையெடுத்த வரக்கன் றோள்கள், இறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையிந்துவினைத் தேய்த்தானை யிரவிதன்பல், பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப் பரந்திழியும்புனற் கங்கைபனிபோலாகச், செறித்தானைத்திருவீழிமிழலையானைச் சேராதார்தீநெறி க்கேசேர்கின்றாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

57 உ.கூ( ரண்டகம்.

சிற்றம்பலம்

கயிலாயமலையுளார்காரோணத்தார்கந்தமாதனத்துளார்காளத்தியார்
மயிலாடுதுறையுளார்மாகாளத்தார்வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
அயில்வாயசூலமுங்காபாலமுமமருந்திருக்கரத்தாரானேறேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்வீழிமிழலையேமேவினாரே. (௧)

பூதியணிபொன்னிறத்தர்பூணநூலர்பொங்கரவர்சங்கரர்வெண்குழையோர்காதர்
கேதிசாமேவினார்கேதாரத்தார்கெடிலவடவதிகைவீரட்டத்தார்
மாதுயரதீர்த்தென்னையுய்யக்கொண்டார்மழபாடிமேயமணவாளனார்
வேதிகுடியுள்ளார்மீயச்சூரார்வீழிமிழலையேமேவினாரே. (௨)

அண்ணாமலையமர்ந்தாராரூருள்ளாரளப்பூராரந்தணர்கண்மாடக்கோயில்
உண்ணாழிகையாருமையாளோடுமிமையோர்பெருமானாரொற்றியூரார்
பெண்ணாகடத்துப்பெருந்தூங்கானைமாடத்தார்கூடத்தார்பேராவூரார்
நம்பியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௩)

வெண்காட்டார்செங்காட்டங் குடியார்வெண்ணி நன்னகரார்வேட்களத்தார் வேதநாவர், பண்காட்டும்வண்டார் பழனத்துள்ளார் பாராய்த்துறையார்சிராப் பள்ளியுள்ளார்பண்டோர், வெண்கோட்டுக்கருங்களிற்றைப் பிளிறப்பற்றியுரித் துரிவைபோர்த்தவிடலைவேடம், விண்காடும்பிறைநுதலியஞ்சக்காட்டிவீழிமிழலை (௪)

புடைசூழ்ந்தபூதங்கள் வேதம்பாடப் புலியூர்ச்சிற்றம்பலத்தே நடமாடுவார், உடைசூழ்ந்தபுலித்தோலர் கலிக்கச்சிமேற்றளியுளார் குளிர்சோலையேகம்பத்தார், கடைசூழ்ந்துபலிதேருங் கங்காளனார்கழுமலத்தார் செழுமலர்த்தார்க்குழலியோ டும், விடைசூழ்ந்தவெல்கொடியர்மல்குசெல்வவீழிமிழலையேமேவினாரே. (௫)

பெரும்புலியூர்விரும்பினார் பெரும்பாழியார்பெரும்பற்றப்புலியூர் மூலட் டானத்தார், இரும்புதலாரிரும்பூளையுள்ளாரேரா ரின்னம்பாரீங்கோய் மலையா ரின்சொல், கரும்பனையாளுமையோடுங்கருகாவூரார் கருப்பறிய லூரார்கரவீரத் தார், விரும்பமராிரவுபகற்பரவியேத்த வீழிமிழலையேமேவினாரே. (௬)

சவந்தாங்குமயானத்துச்சாம்பலென்புதலையோடுமயிர்க்கயிறுதரித்தான் றன்னைப்
பவந்தாங்குபாசுபதவேடத்தானைப்பண்டமரர்கொண்டுகந்தவேள்வியெல்லாம்
கவர்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னைக்கழலடைந்தான்மேற்கறுத்தகாலன்வீழச்
சிவந்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௨)

அன்றாலின்கீழிருந்தங்கறஞ்சொன்னானையகத்தியனையுகப்பானையயன்மாறேட
நின்றானைக்கிடந்தகடனஞ்சுண்டானைநேரிழையைக்கலந்திருந்தேபுலன்களைந்தும்
வென்றானைமீயச்சூர்மேவினானைமெல்லியலாடவத்தினிறையாக்கநூற்ச்
சென்றானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௩)

தூயானைச்சுடர்ப்பவளச்சோதியானைத்தோன்றியவெவ்வுயிர்க்குந்துணையாய் நின்ற, தாயானைச்சக்கரமாற்கீந்தான்றன்னைச்சங்கரனைச்சந்தோகசாமமோதும், வாயானைமந்திரிப்பார்மனத்துளானை வஞ்சனையாலஞ்செழுத்தும் வழுத்துவார்க்குச், சேயானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௪)

நற்றவத்தினல்லானைத்தீதாய்வந்தநஞ்சமுதுசெய்தானையமுதமுண்ட
மற்றமரருலந்தாலுமுலவாதானைவருகாலஞ்செல்காலம்வந்தகாலம் [றச்
உற்றவத்தையுணர்ந்தாருமுணரலாகாவொருசுடரையிருவிசும்பினூர்மூன்றெரித்த
செற்றவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௫)

மைவானமிடற்றானையவ்வான்மின்போல்வளர்சடைமேன்மதியானைமழையாயெங்கும், பெய்வானைப்பிச்சாடலாடுவானைப்பில்வாயபேய்க்கணங்களார்க்கவ்வகுலம், பொய்வானைப்பொய்யிலாமெய்யன்றன்னைப்பூதலமுமண்டலமும்பொருந்துவாழ்க்கை, செய்வானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே (௬)

மிக்கானைக்குறைந்தடைந்தார்மேவலானைவெவ்வேறாயிருமூன்றுசமயமாகிப், புக்கானையெப்பொருட்கும்பொதுவானானைப்பொன்னுலகத்தவர்போற்றுமெம்பொருளுக்கெல்லாம், தக்கானைத்தானன்றிவேறொன்றில்லாத்தத்துவனைத்தடவரையைநடுவுசெய்த திக்கானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே

வானவர்கோன்றோளிறுத்தமைந்தன்றன்னைவளைகுளமுமறைக்காடுமன்னினானை
ஊனவனையுயிரவனையொருநாட்பார்த்தனுயர்தவத்தினிலையறியவூற்றுச்சென்ற
கானவனைக்கயிலாயமேவினானைக்கங்கைசேர்சடையானைக்கலந்தார்க்கென்றும்
தேனவனைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௮)

பரத்தானையிம்பக்கம்பலவானானைப்பசுபதியைப்பத்தர்க்குமுத்திகாட்டும், வரத்தானைவணங்குவார்மனத்துளானைமாருதமாலெரிமூன்றுவாயம்பிற்காம், சரத்தானைச்சரத்தையுந்தன்றாட்கீழ்வைத்ததபோதனனைச்சடாமகுடத்தணிந்தபைங்கட், சிரத்தானைத்திருவீழிமிழலையானைச்சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. ()

அறுத்தானையயன்றலைகளஞ்சிலொன்றை யஞ்சாதேவரையெடுத்த வரக்கன்றோள்கள், இறுத்தானையெழுநரம்பினிசைகேட்டானையிந்துவினைத் தேய்த்தானையிரவிதன்பல், பறித்தானைப்பகீரதற்காவானோர்வேண்டப் பரந்திழியும்புனற் கங்கைபனிபோலாகச், செறித்தானைத்திருவீழிமிழலையானைச் சேராதார்தீநெறிக்கேசேர்கின்றாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## 57 ௨௫௫. திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கயிலாயமலையுளார்காரோணத்தார்கந்தமாதனத்துளார்காளத்தியார்
மயிலாடுதுறையுளார்மாகாளத்தார்வக்கரையார்சக்கரமாற்கீந்தார்வாய்ந்த
அயில்வாயசூலமுங்காபாலமுமமருந்திருக்கரத்தாரானேறேறி
வெயிலாயசோதிவிளங்குநீற்றார்வீழிமிழலையேமேவினாரே. (௧)

பூதியணிபொன்னிறத்தர்பூணநூலர்பொங்கரவர்சங்கரர்வெண்குழையோர்காதர்
கேதிசரமேவினார்கேதாரத்தார்கெடிலவடவதிகைவீரட்டத்தார்
மாதுயரதீர்த்தென்னையுய்யக்கொண்டார்மழபாடிமேயமணவாளனார்
வேதிகுடியுள்ளார்மீயச்சூரார்வீழிமிழலையேமேவினாரே. (௨)

அண்ணாமலையமர்ந்தாராரூருள்ளாரளப்பூராரந்தணர்கண்மாடக்கோயில்
உண்ணாழிகையாருமையாளோடுமிமையோர்பெருமானாரொற்றியூரார்
பெண்ணாகடத்துப்பெருந்தூங்கானைமாடத்தார்கூடத்தார்பேராவூரார்
விண்ணோர்களெல்லாம்விரும்பியேத்தவீழிமிழலையேமேவினாரே. (௩)

வெண்காட்டார்செங்காட்டங் குடியார்வெண்ணி நன்னகரார்வேட்களத்தார் வேதநாவர், பண்காட்டும்வண்டார் பழனத்துள்ளார் பாராய்த்துறையார்சிராப்பள்ளியுள்ளார்பண்டோர், வெண்கோட்டுக்கருங்களிற்றைப் பிளிறப்பற்றியுரித்துரிவைபோர்த்தவிடலைவேடம், விண்காடும்பிறைநுதலியஞ்சக்காட்டிவீழிமிழலையேமேவினாரே. (௪)

புடைசூழ்ந்தபூதங்கள் வேதம்பாடப் புலியூர்ச்சிற்றம்பலத்தே நடமாடுவார், உடைசூழ்ந்தபுலித்தோலர் கலிக்கச்சிமேற்றளியுளார் குளிர்சோலையேகம்பத்தார், கடைசூழ்ந்துபலிதேருங் கங்காளனார்கழுமலத்தார் செழுமலர்த்தார்க்குழலியோடும், விடைசூழ்ந்தவெல்கொடியர்மல்குசெல்வவீழிமிழலையேமேவினாரே. (௫)

பெரும்புலியூர்விரும்பினார் பெரும்பாழியார்பெரும்பற்றப்புலியூர் மூலட்டானத்தார், இரும்புதலாரிரும்பூளையுள்ளாரேராரின்னம்பராரீங்கோய் மலையாரின்சொல், கரும்பனையாளுமையோடுங்கருகாவூரார் கருப்பறியலூரார்கரவீரத்தார், விரும்பமரரிரவுபகற்பரவியேத்த வீழிமிழலையேமேவினாரே. (௬)

மறைகாட்டார்வலிவலத்தார் வாய்மூர்மேயார் வாள்கொளிபுத்தூரார்மாகாளத்தார், கறைக்காட்டுங்கண்டனூர்காபாலியார் கற்குடியார்விற்குடியார்கானப்பேரார், பறைகாட்டுங்குழிவிழிகட்பல்பேய்சூழப் பழையனூராலங்காட்டடிகள் பண்டேயோர், மிறைக்காட்டுங்கொடுங்காலன்வீடப்பாய்ந்தார் வீழிமிழலையேமேவினாரே. (எ)

அஞ்சைக்களத்துள்ளாரையாற்றுளாராரூரார்பேரூராரழுந்தூருள்ளார்,
தஞ்சைத்தளிக்குளத்தார்தக்களூரார்சாந்தையயவந்தித்தங்கினார்தாம்
நஞ்சைத்தமக்கமுதாவுண்டநம்பர்நாகேச்சரத்துள்ளார்நாரையூரார்
வெஞ்சொற்சமண்சிறையிலென்னைமீட்டார்வீழிமிழலையேமேவினாரே. (அ)

கொண்டலுள்ளார்கொண்டீச்சரத்தினுள்ளார் கோவலூர்வீரட்டங்கோயில்கொண்டார், தண்டலையார்தலையாலங்காட்டினுள்ளார் தலைச்சங்கைப்பெருங்கோயிறங்கினார்தாம், வண்டலொடுமணற்கொணரும்பொன்னிநன்னீர் வலஞ்சுழியார் வைகலின்மேன்மாடத்துள்ளார், வெண்டலைமான்கைக்கொண்ட விகிர்தவேடர் வீழிமிழலையேமேவினாரே. (கூ)

அரிச்சந்திரத்துள்ளாரம்பருள்ளாரரிபிரமரிந்திரர்க்குமரியரானார்
புரிச்சந்திரத்துள்ளார்போகத்துள்ளார்பொருப்பரையன்மகளோடுவிருப்பராகி
எரிச்சந்திரவேட்குமிடத்தாரேமகூடத்தார்பாடத்தேனிசையார்கீதர்
விரிச்சங்கையெரிக்கொண்டங்காடும்வேடர்வீழிமிழலையேமேவினாரே. (௧0)

புன்கூரார்புறம்பயத்தார்புத்தூருள்ளார்பூவணத்தார் புலிவலத்தார்வலியின்மிக்க, தன்கூர்மைகருதிவரையெடுக்கலுற்றான் றலைகளொடுமலைகளனைதாளுந்தோளும், பொன்கூருங்கழலடியோர்விரலாலூன்றிப் பொருப்பதன்கீழ்நெரித்தருள் செய்புவனநாதர், மின்கூருஞ்சடைமுடியார்விடையின்பாகர் வீழிமிழலையேமேவினாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௨௬௬. திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கண்ணவன்காண்கண்ணொளிசேர்காட்சியான்காண் கந்தருவம்பாட்டிசையிற்காட்டுகின்ற, பண்ணவன்காண்பண்ணவற்றின்றிறலானான்காண் பழமாகிச்சுவையாகிப்பயக்கின்றான்காண், மண்ணவன்காண்டீயவன்காணீரானான்காண் வந்தலைக்குமாருதன்காண்மழைமேகஞ்சேர், விண்ணவன்காண்விண்ணவர்க்குமேலானான்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௧)

ஆலைப்படுகரும்பின்சாறுபோலவண்ணிக்குமஞ்செழுத்தினாமத்தான்காண்
சீலமுடையடியார்சிந்தையான்காண்டிரிபுரமூன்றெரிபடுத்தசிலையினான்காண்
பாலினொடுதயிர்நறுநெய்யாடினான்காண்பண்டரங்கவேடன்காண்பலிதேர்வான்கா[ண்]
வேலைவிடமுண்டமிடற்றினான்காண்விண்ணிழிதண்வீழிமிழலையானே

ணோங்காரன்காண், கோங்குமலர்க்கொன்றையந்தார்க்கண்ணியான்காண் கொல்லேறுவெல்கொடிமேற் கூட்டினான்காண், வேங்கைவரிப்புலித்தோன்மே லாடையான்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௬௭. திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மானேறுகரமுடையவரதர்போலு மால்வரைகால்வளைவில்லா வளைத்தார்போலும், கானேறுகரிகதறவுரித்தார்போலுங் கட்டங்கக்கொடிதுடிகைக்கொண்டார்போலும், தேனேறுதிருவிதழித்தாரார்போலுந் திருவீழிமிழலையமர்செல்வர்போலும், ஆனேறதேறுமழகர்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (௧)

சமரமிகுசலந்தரன்போர்வேண்டினானைச் சக்கரத்தாற்பிளப்பித்தசதுரர்போலும், நமனையொருகால்குறைத்தநாதர்போலு நாரணனையிடப்பாகத்தடைத்தார்போலும், குமரனையுமகனாகவுடையார்போலுங் குளிர்வீழிமிழலையமர் குழகர்போலும், அமரர்கள்பினமுதுணநஞ்சுண்டார்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (௨)

நீறணிந்ததிருமேனிநிமலர்போலு நேமிநெடுமாற்கருளிச்செய்தார்போலும், ஏறணிந்தகொடியுடையெம்மிறைவர்போலு மெயின்மூன்றுமெரிசரத்தாலெய்தார்போலும், வேறணிந்தகோலமுடைவேடர்போலும் வியன்வீழிமிழலையுறைவிகிர்தர்போலும், ஆறணிந்தசடாமகுடத்தழகர்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (௩)

கைவேழமுகத்தவனைப்படைத்தார்போலுங் கயாசுரனையவனாற்கொல்வித்தார்போலும், செய்வேள்வித்தக்கனைமுன்சிதைத்தார்போலுந் திசைமுகன்றன்சிரமொன்றுசிதைத்தார்போலும், மெய்வேள்விமூர்த்திதலை யறுத்தார்போலும் வியன்வீழிமிழலையிடங் கொண்டார்போலும், ஐவேள்வியாறங்கமானார்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (௪)

துன்னத்தின்கோவணமொன் றுடையார்போலுஞ் சுடர்மூன்றுஞ்சோதியுமாய்த்தூயார்போலும், பொன்னொத்ததிருமேனிப்புனிதர்போலும் பூதகணம்புடைசூழவருவார்போலும், மின்னொத்தசெஞ்சடை வெண்பிறையார்போலும் வியன்வீழிமிழலைசேர் விமலர்போலும், அன்னத்தேரயன்முடிசே ரடிகள்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (௫)

மாலாலுமறிவரிய வரதர்போலு மறவாதார்பிறப்பறுக்க வல்லார்போலும், நாலாயமறைக்கிறைவ ரானார்போலு நாமவெழுத்தஞ்சாய நம்பர்போலும், வேலார்கைவீரியைமுன்படைத்தார்போலும் வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலும், ஆலாலமிடற்றடக்கி யளித்தார்போலு மடியேனையாளுடைய வடிகடாமே. (௬)

ணுங்காரன்காண், கோங்குமலர்க்கொன்றையந்தார்க்கண்ணியான்காண் கொல்லேறுவெல்கொடிமேற் கூட்டினான்காண், வேங்கைவரிப்புலித்தோன்மே லாடையான்காண் விண்ணிழிதண்வீழிமிழலையானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

## உசுஎ. திருவீழிமிழலை - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மானேறுகரமுடையவரதர்போலு மால்வரைகால்வளைவில்லா வளைத்தார் போலும், கானேறுகரிகதறவுரித்தார்போலுங் கட்டங்கக்கொடி துடிகைக்கொண்டார்போலும், தேனேறுதிருவிதழித்தாரார்போலுந் திருவீழிமிழலையமர்செல்வர் போலும், ஆனேறதேறுமழகர்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (க)

சமரமிகுசலந்தரன்போர்வேண்டினானைச் சக்கரத்தாற்பிளப்பித்தசதுரர்போலும், நமனையொருகால்குறைத்தநாதர்போலு நாரணனையிடப்பாகத்தடைத்தார் போலும், குமரனையுமகனாகவுடையார்போலுங் குளிர்வீழிமிழலையமர் குழகர் போலும், அமரர்கள்பின்முதுணநஞ்சுண்டார்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (உ)

நீறணிந்ததிருமேனிநிமலர்போலு நேமிநெடுமாற்கருளிச்செய்தார்போலும், ஏறணிந்தகொடியுடையெம்மிறைவர்போலு மெயின்மூன்றுமெரிசரத்தாலெய்தார் போலும், வேறணிந்தகோலமுடைவேடர்போலும் வியன்வீழிமிழலையுறைவிகிர்தர்போலும், ஆறணிந்தசடாமகுடத்தழகர்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (ந)

கைவேழமுகத்தவனைப்படைத்தார்போலுங் கயாசுரனையவனாற்கொல்வித்தார்போலும், செய்வேள்வித்தக்கனைமுன்சிதைத்தார்போலுந் திசைமுகன்றன் சிரமொன்றுசிதைத்தார்போலும், மெய்வேள்விமூர்த்திதலை யறுத்தார்போலும் வியன்வீழிமிழலையிடங் கொண்டார்போலும், ஐவேள்வியாறங்கமானார்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (ச)

துன்னத்தின்கோவணமொன் றுடையார்போலுஞ் சுடர்மூன்றுஞ்சோதியுமாய்த்தூயார்போலும், பொன்னொத்ததிருமேனிப்புனிதர்போலும் பூதகணம்புடைசூழவருவார்போலும், மின்னொத்தசெஞ்சடை வெண்பிறையார்போலும் வியன்வீழிமிழலைசேர் விமலர்போலும், அன்னத்தேரயன்முடிசே ரடிகள்போலு மடியேனையாளுடையவடிகடாமே. (ரு)

மாலாலுமறிவரிய வரதர்போலு மறவாதார்பிறப்பறுக்க வல்லார்போலும், நாலாயமறைக்கிறைவ ரானார்போலு நாமவெழுத்தஞ்சாய நம்பர்போலும், வேலார்கைவீரனைமுன்படைத்தார்போலும் வியன்வீழிமிழலையமர்விகிர்தர்போலும், ஆலாலமிடற்றடக்கி யளித்தார்போலு மடியேனையாளுடைய வடிகடாமே. (சு)

பஞ்சடுத்த மெல்விரலாள் பங்கர்போலும் பைந்நாகமரைக்கசைத்த பரமர் போலும், மஞ்சடுத்தமணிநீலகண்டர்போலும் வடகயிலைமலையுடைய மணாளர் போலும், செஞ்சடைக்கண் வெண்பிறைகொண் டணிந்தார்போலுந் திருவீழி மிழலையமர்சிவனார்போலும், அஞ்சடக்குமடியவர்கட் கணியார்போலு மடியேனை யாளுடைய வடிகடாமே. (எ)

குண்டரொடுபிரித்தெனையாட் கொண்டார்போலுங் குடமூக்கிலிடமாக்கிக் கொண்டார்போலும், புண்டரிகப்புதுமலராதனத்தார்போலும் புள்ளரசைக்கொன் றுயிர்பின் கொடுத்தார்போலும், வெண்டலையிற்பலிகொண்டவிகிர்தர்போலும் வியன்வீழிமிழலைநகருடையார்போலும், அண்டத்துப் புறத்தப்பாலானார்போலு மடியேனையாளுடைய வடிகடாமே. (அ)

முந்தனையமுகிழ்முறுவலுடையார்போலு மொய்பவளக்கொடியனைய சடையார்போலும், எந்தனையும்பத்திசெய்வார்க்கினியார்போலு மிருநான்குமூர்த்தி களுமானார்போலும், மித்திரவச்சிரவணற்குவிருப்பர்போலும் வியன்வீழிமிழலை யமர்விகிர்தர்போலும், அத்தனொடுமம்மையெனக்கானார்போலு மடியேனையாளு டைய வடிகடாமே. (௯

கரியுரிசெய் துமைவெருவக் கண்டார்போலுங் கங்கையையுஞ்செஞ்சடை மேற் கரந்தார்போலும், எரியதொரு கைதரித்த விறைவர்போலு மேனத்தின் கூனெயிறுபூண்டார்போலும், விரிகதிரோரிருவரைமுன் வெகுண்டார்போலும் வியன்வீழிமிழலையமர் விமலர்போலும், அரிபிரமர்துதிசெயநின்றளித்தார்போலு மடியேனையாளுடைய வடிகடாமே. (௧௰)

கயிலாய மலையெடுத்தான்கதறிவீழக் கால்விரலாலடர்த்தருளிச் செய்தார் போலும். குயிலாரு மென்மொழியாள்குளிர்ந்துநோக்கக் கூத்தாட வல்லகுழகர் போலும், வெயிலாயசோதிவிளக்கானார்போலும் வியன்வீழிமிழலையமர் விகிர்தர் போலும், அயிலாயமூவிலைவேற் படையார்போலு மடியேனையாளுடைய வடிக டாமே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

## ௨௬௮. திருப்புள்ளிருக்குவேளூர் - திருத்தாண்டகம்.

ம்பலம்

ஆண்டானையடியேனையாளாக்கொண்டு வடியோடுமுடியயன்மா லறியாவண்ணம், நீண்டானைநெடுங்களமாநகரான்றன்னை நேமிவான்படையானீ ளூரவோனுகம், கீண்டானைக்கேதாரமேவினானைக் கேடிலியைக்கிளர்பொறிவாளரவோடென்பு, பூண்டானைப்புள்ளிருக்கு வேளூரானைப்போற்றாதேயாற்றநாள் போக்கினேனே.

சீர்த்தானைச் சிறந்தடியேன் சிந்தையுள்ளே திகழ்ந்தானைச் சிவன்றன்னைத் தேவதேவைக், கூர்த்தானைக்கொடுநெடுவேற் கூற்றந்தன்னைக்குரைகழலாற்குமைத்துமுனி கொண்டவச்சம், பேர்த்தானைப்பிறப்பிலியையிறப்பொன்றில்லாப்பெம்

மானைக் கைம்மாவி னுரிவைபேணிப், போர்த்தானைப்புள்ளிருக்கு
போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௨)

பத்திமையாற் பணிந்தடியேன் றன்னைப் பன்னாட்பாமாலைபாடப் பயில்வித் தானை, எத்தேவுமேத்துமிறைவன் றன்னை யெம்மானையென் னுள்ளத் துள்ளே யூறும், அத்தேனையமுதத்தை யாவின்பாலையண்ணிக்குந்தீங்கரும்பை யரனையாதிப், புத்தேளைப் புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௩)

இருளாயவுள்ளத்தினிருளைநீக்கி யிடர்ப்பாவங்கெடுத்தேழையேனை யுய்யத், தெருளாதசிந்தைதனைத் தெருட்டித்தன்போற் சிவலோகநெறியறியச்சிந்தைதந்த, அருளானையாதிமா தவத்துளானை யாறங்கநால்வேதத்தப்பானின்ற, பொருளானைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௪)

மின்னுருவைவிண்ணகத்தி லொன்றாய்மிக்குவீசுங்காறன்னகத்திலிரண்டாய்ச் செந்தீத், தன்னுருவின் மூன்றாய்த்தாழ் புனலினான்காய்த் தரணிதலத்தஞ்சாகி யெஞ்சாத்தஞ்ச, மன்னுருவைவான்பவளக் கொழுந்தைமுத்தை வளரொளியை வயிரத்தைமாசொன்றில்லாப், பொன்னுருவைப்புள்ளிருக்குவேளூரானைப்போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௫)

அறையார்பொற்கழலார்ப்பவணியார்தில்லையம்பலத்துணடமாடுமழகன்றன்னைக், கறையார்மூவிலைநடுவேற்கடவுடன்னைக் கடனாகைக்காரோணங்கருதினானை, இறையானையென்னுள்ளத் துள்ளேவிள்ளா திருந்தானையேழ்பொழிலுந் தாங்கி நின்ற, பொறையானைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௬)

நெருப்பனைய திருமேனி வெண்ணீற்றானை நீங்காதென் னுள்ளத்தி னுள்ளே நின்ற, விருப்பவனைவேதியனைவேதவித்தை வெண்காடும்வியன்றுருத்திநகருமே வி, இருப்பவனையிடைமருதோடீங்கோய்நீங்கா விறையவனையெனையாளுங்கயிலை யென்னும், பொருப்பவனைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௭)

பேராயிரம்பரவி வானோரேத்தும்பெம்மானைப் பிரிவிலாவடியார்க்கென்றும், வாராதசெல்வம் வருவிப்பானைமந்திரமுந்தந்திரமுமருந்துமாகித், தீராநோய்தீர்த் தருள வல்லான்றன்னைத்திரிபுரங்கடீயெழத்திண்சிலைகைக்கொண்ட, போரானைப் புள்ளிருக்கு வேளூரானைப்போற்றாதேயாற்றநாள் போக்கினேனே. (௮)

பண்ணியனைப்பைங்கொடியாள்பாகன்றன்னைப் படர்சடைமேற் புனல்கரந்த படிறன்றன்னை, நண்ணியனையென்னாக்கித்தன்னானானை நான்மறையினற்பொருளை நளிவெண்டிங்கட் கண்ணியனைக்கடியநடைவிடையொன்றேறுங்காரணனைநாரண னைக் கமலத்தோங்கும், புண்ணியனைப்புள்ளிருக்கும்வேளூரானைப் போற்றாதே யாற்றநாள் போக்கினேனே. (௯)

இறுத்தானையிலங்கையர்கோன் சிரங்கள்பத்து மெழுநரம்பினின்னிசைகேட் டின்புற்றானை, அறுத்தானையடியார்தம்மருநோய்பாவ மலைகடலிலாலாலமுண்டுகண் டம், கறுத்தானைக்கண்ணழலாற் காமனாகங்காய்ந்தானைக் கனன்மழுவுங்கலையு மங்கை, பொறுத்தானைப்புள்ளிருக்குவேளூரானைப் போற்றாதேயாற்றநாள்போக் கினேனே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௯௧. ஸ்ரீகயிலாயம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ணாகி நின்றாய்போற்றி மீளாமேயாளென்னைக் கொண்டாய் போற்றி, ஊற்றாகியுள்ளே யொளித்தாய்போற்றி யோவாதசத்தத் தொலியேபோ ற்றி, ஆற்றாகியங்கேயமர்ந்தாய்போற்றி யாறங்கநால்வேத மானாய்போற்றி, காற் றாகியெங்குங் கலந்தாய்போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (௧)

பிச்சாடல்பேயோடுகந்தாய்போற்றி பிறவியறுக்கும்பிரானேபோற்றி
வைச்சாடனன்றுமகிழ்ந்தாய்போற்றி மருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி
பொய்ச்சார்புரமூன்றுமெய்தாய்போற்றி போகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
கச்சாகநாகமசைத்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௨)

மருவார்புரமூன்றுமெய்தாய்போற்றி மருவியென்சிந்தைபுகுந்தாய்போற்றி
உருவாகியென்னைப்படைத்தாய்போற்றி யுள்ளாவிவாங்கியொளித்தாய்போற்றி
திறவாகிநின்றதிறமேபோற்றி தேசம்பரவப்படுவாய்போற்றி
கருவாகியோடுமுகிலேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௩)

வானத்தார்போற்றுமருந்தேபோற்றி வந்தென்றன்சிந்தைபுகுந்தாய்போற்றி
ஊனத்தைநீக்குமுடலேபோற்றி யோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி
தேனத்தைவார்த்ததெளிவேபோற்றி தேவர்க்குந்தேவனாய்நின்றாய்போற்றி
கானத்தீயாடலுகந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௪)

ஊராகிநின்றவுலகேபோற்றி யோங்கியழலாய்நிமிர்ந்தாய்போற்றி
பேராகியெங்கும்பரந்தாய்போற்றி பெயராதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
நீராவியானநிழலேபோற்றி நேர்வாரொருவரையுமில்லாய்போற்றி
காராகிநின்றமுகிலேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௫)

சில்லுருவாய்ச்சென்றுதிரண்டாய்போற்றி தேவறியாததேவேபோற்றி
புல்லுயிர்க்கும்பூட்சிபுணர்த்தாய்போற்றி போகாதென்சிந்தைபுகுந்தாய்போற்றி
பல்லுயிராய்ப்பார்தோறுநின்றாய்போற்றி பற்றியுலகைவிடாதாய்போற்றி
கல்லுயிராய்நின்றகனலேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௬)

பண்ணின்னிசையாகிநின்றாய்போற்றி பாவிப்பார்பாவமறுப்பாய்போற்றி
எண்ணுமெழுத்துஞ்சொல்லானாய்போற்றி யென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி

விண்ணுநிலனுந்தீயாளுய்போற்றி மேலவர்க்குமேலாகிநின்ருய்போற்றி
கண்ணின்மணியாகிநின்ருய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (எ)

[illegible]
உமைபாகமாகத்தணைத்தாய்போற்றி யூழியேழானவொருவாபோற்றி
அமையாவருநஞ்சமார்ந்தாய்போற்றி யாதிபுராணனாய்நின்ருய்போற்றி
கமையாகிநின்றகனலேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (அ)

மூவாய்பிறவாயிறவாய்போற்றி முன்னமேதோன்றிமுளைத்தாய்போற்றி
தேவாதிதேவர்தொழுந்தேவேபோற்றி சென்றேறியெங்கும்பரந்தாய்போற்றி
ஆவாவடியேனுக்கெல்லாம்போற்றி யல்லலறுப்பவலந்தேன்போற்றி
காவாய்கனகத்திரளேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (கூ)

நெடியவிசும்போடுகண்ணேபோற்றி நீளவகலமுடையாய்போற்றி
அடியுமுடியுமிகலிபோற்றி யங்கொன்றறியாமைநின்ருய்போற்றி
கொடியவன்கூற்றமுதைத்தாய்போற்றி கோயிலாவென்சிந்தைகொண்டாய்போற் [றி
கடியவுருமொடுமின்னேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (க0)

உண்ணாதுறங்கா திருந்தாய்போற்றி யோதாதேவேத முணர்ந்தாய்போற்றி, எண்ணாவிலங்கைக்கோன்றன்னைப்போற்றி யிறைவிரலால் வைத்துகந்தவீசாபோற்றி, பண்ணாரிசையின்சொற் கேட்டாய்போற்றி பண்டேயென் சிந்தைபுகுந்தாய் போற்றி, கண்ணாயுலகுக்கு நின்ருய்போற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி.

திருச்சிற்றம்பலம்.

## உஎ0. ஸ்ரீகைலாயம் - போற்றித்திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பொறையுடையபூமிநீராளுய்போற்றி பூதப்படையாள்புனிதாபோற்றி
நிறையுடையநெஞ்சினிடையாய்போற்றி நீங்காதென்னுள்ளத்திருந்தாய்போற்றி
மறையுடையவேதம்விரித்தாய்போற்றி வானோர்வணங்கப்படுவாய்போற்றி
கறையுடையகண்டமுடையாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (க)

முன்பாகிநின்றமுதலேபோற்றி மூவாதமேனிமுக்கண்ணாபோற்றி
அன்பாகிநின்ருர்க்கணியாய்போற்றி யாறேறுசென்னிச்சடையாய்போற்றி
என்பாகவெங்குமணிந்தாய்போற்றி யென்சிந்தைநீங்காவிறைவாபோற்றி
கண்பாவிநின்றகனலேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (உ)

மாலையெழுந்தமதியேபோற்றி மன்னியென்சிந்தையிருந்தாய்போற்றி
மேலைவினைகளறுப்பாய்போற்றிமேலாடுதிங்கண்முடியாய்போற்றி
ஆலைக்கரும்பின்றெளிவேபோற்றி யடியார்கட்காரமுதமானாய்போற்றி
காலைமுளைத்தகதிரேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (ந)

அதிராவினைகளறுப்பாய்போற்றி யாலநிழற்கீழமர்ந்தாய்போற்றி
சதுராசதுரக்குழையாய்போற்றி சாப்பர்மெய்பூசுந்தலைவாபோற்றி
எதிராவுலகமமைப்பாய்போற்றி யென்றுமீளாவருள்செய்வாய்போற்றி
கதிரார்கதிருக்கோர்கண்ணேபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (உ)

செய்யாய்கரியாய்வெளியாய்போற்றி செல்லாதசெல்வமுடையாய்போற்றி
ஐயாய்பெரியாய்சிறியாய்போற்றி யாகாசவண்ணமுடையாய்போற்றி
வெய்யாய்தணியாயணியாய்போற்றி வேளாதவேள்வியுடையாய்போற்றி
கையார்கழலார்விடங்காபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (ங)

ஆட்சியுலகையுடையாய்போற்றி யடியார்க்கமுதெலாமீவாய்போற்றி
சூட்சிசிறிதுமிலாதாய்போற்றி சூழ்ந்தகடனஞ்சமுண்டாய்போற்றி
மாட்சிபெரிதுமுடையாய்போற்றி மன்னியென்சிந்தைமகிழ்ந்தாய்போற்றி
காட்சிபெரிதுமரியாய்போற்றி கயிலைமலையானேபோற்றி. (ச)

முன்னியாநின்றமுதல்வாபோற்றி மூவாதமேனியுடையாய்போற்றி
என்னியாயெந்தைபிரானேபோற்றி யேழினிசையேயுகப்பாய்போற்றி
மன்னியமங்கைமணாளாபோற்றி மந்திரமுந்தந்திரமுமானாய்போற்றி
கன்னியார்கங்கைத்தலைவாபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (ரு)

உரியாயுலகினுக்கெல்லாம்போற்றி யுணர்வென்னுமூர்வதுடையாய்போற்றி
எரியாயதெய்வச்சுடரேபோற்றி யேசுமாமுண்டியுடையாய்போற்றி
அரியாயமரர்கட்கெல்லாம்போற்றி யறிவேயடக்கமுடையாய்போற்றி
கரியானுக்காழியன்றீந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (சா)

எண்மேலுமெண்ணமுடையாய்போற்றி யேறரியவேறுங்குணத்தாய்போற்றி
பண்மேலேபாவித்திருந்தாய்போற்றி பண்ணொடியாழ்வீணைபயின்றாய்போற்றி
விண்மேலுமேலுமிமிர்ந்தாய்போற்றி மேலார்கண்மேலார்கண்மேலாய்போற்றி
கண்மேலுங்கண்ணொன்றுடையாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி.

முடியார்சடையின்மதியாய்போற்றி முழுநீறுசண்ணித்தமூர்த்திபோற்றி
துடியாரிடையுமையாள்பங்காபோற்றி சோதித்தார்காணாமைநின்றாய்போற்றி
அடியாரடிமையறிவாய்போற்றி யமரர்பதியாளவைத்தாய்போற்றி
கடியார்புரமூன்றுமெய்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (அ, கூ)

போற்றிசைத்துன்னடிபரவநின்றாய்போற்றி புண்ணியனேநண்ணலரியாய் போற்றி, யேற்றிசைக்கும்வான்மேலிருந்தாய்போற்றி யெண்ணாயிரநூறுபேராய் போற்றி, நாற்றிசைக்கும்விளக்காயநாதாபோற்றி நான்முகற்குமாற்குமறியாய் போற்றி, காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் வடநாட்டில் உள்ளது.

முதல்வன் - பரமசிவன்; முதல்வி - பார்வதியம்மை.

அதிராவினைகளறுப்பாய்போற்றி யாலநிழற்கீழமர்ந்தாய்போற்றி
சதுராசதுரக்குழையாய்போற்றி சாப்பர்மெய்பூசுந்தலைவாபோற்றி
எதிராவுலகமமைப்பாய்போற்றி யென்றுமீளாவருள்செய்வாய்போற்றி
கதிரார்க‌ (௨)

செய்யாய்கரியாய்வெளியாய்போற்றி செல்லாதசெல்வமுடையாய்போற்றி
ஐயாய்பெரியாய்சிறியாய்போற்றி யாகாசவண்ணமுடையாய்போற்றி
வெய்யாய்தணியாயணியாய்போற்றி வேளாதவேள்வியுடையாய்போற்றி
கையார்கழலார்விடங்காபோ (௩)

ஆட்சியுலகையுடையாய்போற்றி யடியார்க்கமுதெலாமீவாய்போற்றி
சூட்சிசிறிதுமிலாதாய்போற்றி சூழ்ந்தகடனஞ்சமுண்டாய்போற்றி
மாட்சிபெரிதுமுடையாய்போற்றி மன்னியென்சிந்தைமகிழ்ந்தாய்போற்றி
காட்சிபெரிதுமரியாய்போற்றி கயிலைமலையானேபோற்றி. (௪)

முன்னியாகின்றமுதல்வாபோற்றி மூவாதமேனியுடையாய்போற்றி
என்னியாயெந்தைபிரானேபோற்றி யேழினிசையேயுகப்பாய்போற்றி
மன்னியமங்கைமணாளாபோற்றி மந்திரமுந்தந்திரமுமானாய்போற்றி
கன்னியார்கங்கைத்தலைவாபோற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௫)

உரியாயுலகினுக்கெல்லாம்போற்றி யுணர்வென்னுமூர்வதுடையாய்போற்றி
எரியாயதெய்வச்சுடரேபோற்றி யேசுமாமுண்டியுடையாய்போற்றி
அரியாயமரர்கட்கெல்லாம்போற்றி யறிவேயடக்கமுடையாய்போற்றி
கரியானுக்காழியன்றீந்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௬)

எண்மேலுமெண்ணமுடையாய்போற்றி யேறரியவேறுங்குணத்தாய்போற்றி
பண்மேலேபாவித்திருந்தாய்போற்றி பண்ணொடியாழ்வீணைபயின்றாய்போற்றி
விண்மேலுமேலுநிமிர்ந்தாய்போற்றி மேலார்கண்மேலார்கண்மேலாய்போற்றி
கண்மேலுங்கண்ணொன்றுடையாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி.

முடியார்சடையின்மதியாய்போற்றி முழுநீறுசண்ணித்தமூர்த்திபோற்றி
துடியாரிடையுமையாள்பங்காபோற்றி சோதித்தார்காணாமைநின்றாய்போற்றி
அடியாரடிமையறிவாய்போற்றி யமரர்பதியாளவைத்தாய்போற்றி
கடியார்புரமூன்றுமெய்த்தாய்போற்றி கயிலைமலையானேபோற்றிபோற்றி. (௮, ௯)

போற்றிசைத்துன்னடிபரவநின்றாய்போற்றி புண்ணியனேநண்ணலரியாய் போற்றி, யேற்றிசைக்கும்வான்மேலிருந்தாய்போற்றி யெண்ணாயிரநூறுபேராய் போற்றி, நாற்றிசைக்கும்விளக்காயநாதாபோற்றி நான்முகற்குமாற்குமறியாய் போற்றி, காற்றிசைக்குந் திசைக்கெல்லாம் வித்தேபோற்றி கயிலைமலையானே போற்றிபோற்றி. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் வடநாட்டில் உள்ளது.

முதல்வன் - பரமசிவன்; முதல்வி - பார்வதியம்மை.

பல்லார்பயில்பழனம்பாசூரென்று பழனம்பதிபழமைசொல்லிநின்றார்
நல்லார்நனிபள்ளியின்றுவைகி நாளைப்போய்நள்ளாறுசேர்துமென்றார்
சொல்லாரொருவிடமாத்தோள்கைவீசிச்சுந்தராராய்வெந்தநீறாடியெங்கும்
மல்லார்வயல்புடைசூழ்மாடவீதி வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௮)

பொங்கடாவவொன்றுகையிற்கொண்டு போர்வெண்மழுவேந்திப்போகாநிற்பர் [ர்
தங்காரொருவிடத்துந்தம்மேலார்வந் தவிர்த்தருளார்தத்துவத்தேநின்றேனென்ப
எங்கேயிவர்செய்கையொன்றென்றெவ்வாவெண்கண்ணினின்றகலாவேடங்காட்டி
மங்குன்மதிதவழுமாடவீதி வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௯)

செங்கண்மால்சிலைபிடித்துச் சேனையோடுஞ் சேதுபந்தனஞ்செய்து சென்று புக்குப், பொங்குபோர்பலசெய்து புகலால்வென்ற போரரக்கனெடுமுடிகள் பொடியாய்வீழ, அங்கொருதன்றிருவிரலா லிறையேயூன்றி யடர்த்தவற்கேயருள்புரிந்த வடிகளிந்நாள், வங்கமலிகடல்புடைசூழ் மாடவீதி வலம்புரமேபுக்கங்கே மன்னினாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௭௩. திருவெண்ணியூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தொண்டிலங்கு மடியவர்க்கோர்நெறியினாருந் தூநீறுதுதைந்திலங்குமார்பினாரும், புண்டரிகத்தயனொடுமால்காணாவண்ணம் பொங்குதழற்பிழம்பாய புராணனாரும், வண்டமருமலர்க்கொன்றைமாலையாரும் வானவர்க்காநஞ்சுண்டமைந்தனாரும், விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧)

நெருப்பனையமேனிமேல்வெண்ணீற்றாரு நெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தாரும், பொருப்பரையன்மடப்பாவை யிடப்பாலாரும் பூந்துருத்திநகர்மேயபுராணனாரும், மருப்பனையவெண்மதியக்கண்ணியாரும் வளைகுளமுமறைக்காடுமன்னினாரும், விருப்புடையவடியவர்தம் முள்ளத்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்ற விகிர்தனாரே. (௨)

கையுலாமூவிலைவேலேந்தினாருங்கரிகாட்டிலெரியாடுங்கடவுளாரும்
பையுலாநாகங்கொண்டாட்டுவாரும் பரவுவார்பாவங்கள்பாற்றுவாரும்
செய்யுலாங்கயல்பாயவயல்கள்சூழ்ந்த திருப்புன்கூர்மேவியசெல்வனாரும் [ரே.
மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனா

சடையேறுபுனல்வைத்தசதுரனாருந் தக்கன்றன்பெருவேள்விதகர்த்தாரும்
உடையேறுபுலியதண்மேனாகங்கட்டி யுண்பலிக்கென்றூரூரினுழிதர்வாரும்
மடையேறிக்கயல்பாய்வயல்கள்சூழ்ந்த மயிலாடுதுறையுறையுமணாளனாரும்
விடையேறுவெல்கொடியெம்விமலனாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே

பல்லார்பயில்பழனம்பாசூரென்று பழனம்பதி பழமைசொல்லிநின்றார்
நல்லார்நணிபள்ளியின்று வைகி நாளைப்போய்நள்ளாறுசேர்துமென்றார்
சொல்லாரொருவிடமாத்தோள்கைவீசிச்சுந்தரராய்வெந்தநீறாடியெங்கும்
மல்லார்வயல்புடைசூழ்மாடவீதி வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௮)

பொங்காடரவொன்றுகையிற்கொண்டு போர்வெண்மழுவேந்திப்போகாநிற்பர் [ர்
தங்காரொருவிடத்துந்தம்மேலார்வந் தவிர்த்தருளார்தத்துவத்தேநின்றேனென்ப
எங்கேயிவர்செய்கையொன்றொன்றொவ்வாவெண்கண்ணினின்றகலாவேடங்காட்டி
மங்குன்மதிதவழுமாடவீதி வலம்புரமேபுக்கங்கேமன்னினாரே. (௯)

செங்கண்மால்சிலைபிடித்துச் சேனையோடுஞ் சேதுபந்தனஞ்செய்து சென்று புக்குப், பொங்குபோர்பலசெய்து புகலால்வென்ற போரரக்கனெடுமுடிகள் பொடியாய்வீழ, அங்கொருதன்றிருவிரலா லிறையேயூன்றி யடர்த்தவற்கேயருள்புரிந்த வடிகளிந்நாள், வங்கமலிகடல்புடைசூழ் மாடவீதி வலம்புரமேபுக்கங்கே மன்னினாரே. (௧௦)

நச்சிற்றம்பலம்.

---

## ௨௭௩. திருவெண்ணியூர் - திருத்தாண்டகம்.

பலம்

தொண்டிலங்கு மடியவர்க்கோர்நெறியினாருந் தூநீறுதுதைந்திலங்குமார்பினாரும், புண்டரிகத்தயனெடுமால்காணாவண்ணம் பொங்குதழற்பிழம்பாய புராணனாரும், வண்டமருமலர்க்கொன்றைமாலையாரும் வானவர்க்காநஞ்சுண்டமைந்தனாரும், விண்டவர்தம்புரமூன்றுமெரிசெய்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே. (௧)

நெருப்பனையமேனிமேல்வெண்ணீற்றாரு நெற்றிமேலொற்றைக்கண்ணிறைவித்தாரும், பொருப்பரையன்மடப்பாவை யிடப்பாலாரும் பூந்துருத்திநகர்மேயபுராணனாரும், மருப்பனையவெண்மதியக்கண்ணியாரும் வளைகுளமுமறைக்காடுமன்னினாரும், விருப்புடையவடியவர்தம் முள்ளத்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்ற விகிர்தனாரே. (௨)

கையுலாமூவிலைவேலேந்தினாருங்கரிகாட்டிலெரியாடுங்கடவுளாரும்
பையுலாநாகங்கொண்டாட்டுவாரும் பரவுவார்பாவங்கள்பாற்றுவாரும்
செய்யுலாங்கயல்பாயவயல்கள்சூழ்ந்த திருப்புன்கூர்மேவியசெல்வனாரும் [ரே.
மெய்யெலாம்வெண்ணீறுசண்ணித்தாரும் வெண்ணியமர்ந்[illegible]

சடையேறுபுனல்வைத்தசதுரனாருந் தக்கன்றன்பெருவேள்விதடைசெய்தாரும்
உடையேறுபுலியதண்மேனாகங்கட்டி யுண்பலிக்கென்றூரூரினுழிதர்வாரும்
மடையேறிக்கயல்பாய்வயல்கள்சூழ்ந்த மயிலாடுதுறையுறையுமணாளனாரும்
விடையேறுவெல்கொடியெம்விமலனாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்த

மண்ணிலங்கு நீரனல்கால் வானுமாகி மற்றவற்றின்குணமெலா மாய்நின் றாரும், பண்ணிலங்குபாடலோடாடலாரும் பருப்பதமும்பாசூரு மன்னினாரும், கண்ணிலங்குநுதலாருங் கபாலமேந்திக் கடைதோறும் பலிகொள்ளுங் காட்சி யாரும், விண்ணிலங்குவெண்மதியக் கண்ணியாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற ரே. (௫)

வீடுதனைமெய்யடியார்க் கருள்செய்வாரும் வேலைவிடமுண்டிருண்டகண்டத் தாரும், கூடலர்தம்மூவெயிலுமெரிசெய்தாருங் குரைகழலாற் கூற்றுவனைக்குமை செய்தாரும், ஆடுமரவரைக்கசைத்தங்காடுவாரு மாலமரநீழலிருந்தறஞ்சொன் னாரும், வேடுவனாய்மேல்விசயற் கருள்செய்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்ற ரே. (௬)

மட்டிலங்குகொன்றையந்தார்மாலைசூடி மடவாளவளோடுமானொன்றேந்திச்
சிட்டிலங்குவேடத்தராகிநாளுஞ் சில்பலிக்கென்றூரூர்திரிதர்வாரும்
கட்டிலங்குபாசத்தால்வீசவந்த காலன்றன்காலமறுப்பார்தாமும்
விட்டிலங்குவெண்குழைசேர்காதினாரும்வெண்ணியமர்ந்துறைகின்றவிகிர்தனாரே.

செஞ்சடைக்கோர் வெண்டிங்கள்சூடினாருந் திருவாலவாயுறையுஞ்செல்வ னாரும், அஞ்சனக்க ணரிவையொரு பாகத்தாரு மாறங்கநால்வேத மாய்நின்றா ரும், மஞ்சடுத்தநீள்சோலை மாடவீதி மதிலாரூர் புக்கங்கே மன்னினாரும், வெஞ் சினத்த வேழமதா வுரிசெய்தாரும் வெண்ணியமர்ந் துறைகின்ற விகிர்தனாரே. ()

வளங்கிளர்மா மதிசூடும் வேணியாரும் வானவர்க்காய் நஞ்சுண்டமைந்தனா ரும், களங்கொளவென் சிந்தையுள்ளே மன்னினாருங் கச்சியேகம்பத்தெங்கடவு ளாரும், உளங்குளிரவமுதூறி யண்ணிப்பாரு முத்தமரா யெத்திசையு மன்னி னாரும், விளங்கிளரும் வெண்மழுவொன் றேந்தினாரும் வெண்ணியமர்ந்துறை கின்ற விகிர்தனாரே. (௯)

பொன்னிலங்கு கொன்றையந்தார் மாலைசூடிப் புகலூரும் பூவணமும் பொ ருந்தினாரும் கொன்னிலங்கு மூவிலைவேலேந்தினாருங் குளிரார்ந்த செஞ்சடை யெங் குழகனாரும், தென்னிலங்கை மன்னவர்கோன் சிரங்கள்பத்துந் திருவிரலா லடர்த்தவனுக் கருள்செய்தாரும், மின்னிலங்கு நுண்ணிடையாள் பாகத்தாரும் வெண்ணியமர்ந்துறைகின்ற விகிர்தனாரே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - வெண்ணிநாயகர், முதல்வி - அழகியநாயகி.

---

## 60) உ௭௪. திருக்கற்குடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மூத்தவனை வானவர்க்கு மூவாமேனி முதலவனைத்திருவரையின் மூர்க்கப் பாம்பொன், றார்த்தவனையக்கரவ மாரமாக வணிந்தவனைப் பணிந்தடியாரடைக் தவன்போ, டேத்தவனை யிறுவரையிற் றேனையேனோர்க் கின்னமுத மளித்தவனை யிடரையெல்லாம், காத்தவனைக்கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக்கண்ணா ரக் கண்டேனானே. (௧)

செய்யானை வெளியானைக் கரியான்றன்னைத் திசைமுகனைத் திசையெட்டுஞ் செறிந்தான்றன்னை, ஐயானை நொய்யானைச்சீரியானை யணியானைச்சேயானை யானஞ் சாடும், மெய்யானைப்பொய்யாது மிலாதான்றன்னை விடையானைச் சடையானை வெறித்தமான்கொள் கையானைக்கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (௨)

மண்ணதனி லைந்தை மாநீரினான்கை வயங்கெரியின்மூன்றைமா ருதத்திரண்டை, விண்ணதனிலொன்றை விரிகதிரைத் தண்மதியைத் தாரகைகடம்மின்மிக்க, எண்ணதனி லெழுத்தை யேழிசையைக் காம னெழிலழிய வெரியுமிழ்ந்த விமை யாநெற்றிக், கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (௩)

நற்றவனைப்புற்றரவநாணினானை நாணாதுநகுதலையூ ணயந்தான்றன்னை முற்றவனைமூவாதமேனியானை முந்நீரினஞ்சமுகந் துண்டான்றன்னைப் பற்றவனைப்பற்றார்தம்பதிகள்செற்ற படையானையடைவார்தம்பாவம்போக்கக் கற்றவனைக் கற்குடியில்விழுமியானைக் கற்பகத்தைக்கண்ணாரக்கண்டேனானே. (௪)

சங்கைதனைத் தவிர்த்தாண்ட தலைவன்றன்னைச் சங்கரனைத் தழலுறுதாண் மழுவாடாங்கும், அங்கையனை யங்கமணி யாகத்தானை யாகத்தோர் பாகத்தே யமரவைத்த, மங்கையனை மதியொடுமா சுணமுந்தம்மின் மருவவிரிசடைமுடி மேல் வைத்தவானீர்க், கங்கையனைக் கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (௫)

பெண்ணவனை யாணவனைப் பேடானானைப் பிறப்பிலியை யிறப்பிலியைப் பேராவாணி, விண்ணவனை விண்ணவர்க்கு மேலானானை வேதியனை வேதத்தின் கீதம்பாடும், பண்ணவனைப் பண்ணில்வரு பயனானானைப் பாரவனைப் பாரில்வா ழுயிர்கட்கெல்லாம், கண்ணவனைக் கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (௬)

பண்டானைப் பரந்தானைக் குவிந்தான்றன்னைப் பாரானை விண்ணாயிவ்வுலக மெல்லாம், முண்டானை யுமிழ்ந்தானை யுடையான்றன்னை யொருவருந்தன்பெருமை தனை யறியவொண்ணா, விண்டானைவிண்டார்தம் புரங்கண்மூன்றும் வெவ்வழலில் வெந்துபொடி யாகிவீழக், கண்டானைக் கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக் கண்ணாரக் கண்டேனானே. (௭)

வானவனை வானவர்க்கு மேலானானை வணங்குமடி யார்மனத்துண் மருவிப் புக்க, தேனவனைத் தேவர்தொழு கழலான்றன்னைச் செய்குணங்கள் பலவாகி நின்றவென்றிக், கோனவனைக் கொல்லைவிடை யேற்றினானைக் குழன்முழவமியம் பக் கூத்தாடவல்ல, கானவனைக் கற்குடியில் விழுமியானைக் கற்பகத்தைக்கண்ணாரக் கண்டேனானே. (௮)

கொலையானை யுரிபோர்த்த கொள்கையானைக் கோளரியைக் கூரம்பாவரை மேற்கோத்த, சிலையானைச் செம்மைதரு பொருளான்றன்னைத் திரிபுரத்தோர்

மூவர்க்குச் செம்மைசெய்த, தலையானைத் தத்துவங்களானானைத் தையலோர்
பங்கினனைத் தன்கையேந்து, கலையானைக் கற்குடியில்விழுமியானைக் கற்பகத்தைக்
கண்ணாரக்கண்டேனே. (௯)

பொழிலானைப்பொழிலாரும் புன்கூரானைப் புறம்பயனையறம்புரிந்த புகலூ
ரானைப், பொழிலானையிடைமருதி னிடங்கொண்டானை யீங்கோய்நீங்காதுறையுமிறை
வன்றன்னை, அழலாடுமேனியனை யன்றுசென்றக் குன்றெடுத்தவரக்கன்றோ ணெரி
யவூன்றும். கழலானைக்கற்குடியில்விழுமியானைக் கற்பகத்தைக்கண்ணாரக் கண்டே
(௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது

முதல்வன் - உச்சிநாதர்; முதல்வி - அஞ்சனாட்சி

## உ௬௫. திருக்கன்றாப்பூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மாதினையோர்கூறுகந்தாய்மறைகொணுவா மதிசூடிவானவர்கடங்கட்கெல்லாம்
நாதனேயென்றென்றுபரவிநாளு நைந்துருகிவஞ்சகமற் றன்புகூர்ந்து
வாதனையான்முப்பொழுதும்பூநீர்கொண்டு வைகல்மறவாது வாழ்த்தியேத்திக்
காதன்மையாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே

விடிவதுமேவெண்ணீற்றைமெய்யிற்பூசி வெளுத்தமைந்தகீளொடுகோவண
முந்தற்றுச், செடியுடையவல்வினைநோய்தீர்ப்பாயென்றுஞ் செல்கதிக்குவழிகாட்
டுஞ்சிவனேயென்றும், துடியனையவிடைமடவாள்பங்காவென்றுஞ் சுடலைதனின
டமாடுஞ்சோதியென்றும், கடிமலர்தூய்த்தொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்
பூர்நடுதறியைக்காணலாமே (௨)

எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங்கண்டா லுள்கி
யுவராதேயவரவரைக்கண்டபோது வுகந்தடிமைத்திறநினைந்தங்குவந்துநோக்கி
இவர்தேவரவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக்
கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. (௩)

இலங்காலஞ்செல்லா நாளென்றுநெஞ்சத் திடையாதேயாவர்க்கும்பிச்சையி
ட்டு, விலங்காதேநெறிநின்றங்கறிவேமிக்கு மெய்யன்பு புகப்பெய்து பொய்யை
நீக்கித், துலங்காமெய்வானவரைக்காத்துநஞ்ச முண்டபிரானடியிணைக்கேசித்தம்
வைத்துக், கலங்காதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்
காணலாமே. (௪)

விருத்தனேவேலைவிடமுண்டகண்டா விரிசடைமேல்வெண்டிங்கள்விளங்கச்
சூடும், ஒருத்தனே யுமைகணவாவுலகமூர்த்தி நுந்தாதவொண்சுடரே யடியார்தங்
கள், பொருத்தனேயென்றென்று புலம்பிநாளும் புலனைந்துமகத்தடக்கிப்புலம்பி

நோக்கிக், கருத்தினாற்றொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக் காணலாமே. (௫)

பொசியினான்மிடைந்துபுழுப் பொதிந்தபோர்வைப் பொல்லாதபுலாலுடம் பைநிலாசுமென்று, பசியினான்மீதூரப்பட்டேயீட்டிப் பலர்க்குதவலதுவொழிந்து பவளவாயார், வசியினாலகப்பட்டுவீழாமுன்னம் வானவர்கோன்றிருநாமமஞ்சுஞ் சொல்லிக், கசிவினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காண லாமே. (௬)

ஐயினான்மிடறடைப்புண்டாக்கைவிட்டு ஆவியார்போவதுமேயகத்தார்கூடி மையினாற்கண்ணெழுதிமாலைசூட்டி மயானத்திலிடுவதன்முன்மதியஞ்சூடும் ஐயனார்க்காளாகியன்புமிக்கு வசுங்குழைந்துமெய்யரும்பியடிகள்பாதம் கையினாற்றொழுமடியார்நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே. ()

திருதிமையாலைவரையுங் காவலேவித் திகையாதேசிவாயநம வென்னுஞ்சிந் தைச், சுருதிதனைத்துயக்கறுத்துத் துன்பவெள்ளக் கடனீந்திக் கரையேறுங்கருத் தேமிக்குப், பருதிதனைப்பற்பறித்தபாவநாசா பரஞ்சுடரேயென்றென்று பரவி நாளும், கருதிமிகத்தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காண லாமே. (அ-கூ)

குனிந்தசிலையாற்புரமூன் றெரித்தாயென்றுங் கூற்றுதைத்தகுரைகழற்சே வடியாயென்றும், தனஞ்சயற்குப் பாசுபதமீந்தாயென்றுந் தசக்கிரிவன்மலையெ டுக்க விரலாலூன்றி, முனிந்தவன்றன்சிரம்பத்துந்தாளுந்தோளு முாணழித்திட் டருள்கொடுத்த மூர்த்தியென்றும், கனிந்துமிகத்தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே (க)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
முதல்வன் - நடுதறிநன்றுபகர்; முதல்வி - உமைநாயகி.

---

## ௨௭௬. திருவானைக்கா - திருத்தாண்டகம்.

மபலம்

எத்தாய ரெத்தந்தை யெச்சுற்றத்தா ரெம்மாடுசும்மாடா மேவர்நல்லார், செ த்தால்வந்துதவுவா ரொருவரில்லை சிறுவிறகாற்றீமூட்டிச் செல்லாநிற்பர், சித்தா யவேடத்தாய் நீடுபொன்னித் திருவானைக்காவுடைய செல்வாவென்றன், அத்தா வுன் பொற்பாதமடையப்பெற்றா லல்லகண்டங் கொண்ட [illegible]

[illegible] யதனுணனற வுணர்வாகிப் பிறவனைத்து நீயாய்நின்றாய் நானேதுமறியாமேயென்னுள்வந்து நல்லனவுந்தீயனவுங்காட்டாநின்றாய் [illegible]ங்கொன் [illegible] ராய் [illegible] முதசவமனஞானம் [னே [illegible] பொற்பாதமடையப்பெற்றாலல்லகண்டங்கொண்டடியேனென்செய்கே

ஒப்பாயிவ்வுலகத்தோ டொட்டிவாழ்வா னென்றலாத் தவத்தாரோடடனே நின்று, துப்பாருங்குறையடிசிறற்றினற்றுன்றிறமறிந்து திரிவேனைக்காத்துநீவந், தெப்பாலு நுண்ணுணர்வே யாக்கியென்னை யாண்டவனே யெழிலானைக்காவாவா னோர், அப்பாவுன்பொற்பாதமடையப்பெற்று லல்லகண்டங்கொண்டடியேனென் செய்கேனே. (௫)

நினைந்தவர்க ணெஞ்சுளாய் வஞ்சக்கள்வா நிறைமதியஞ் சடைவைத்தாய வடையாதுன்பால், முனைத்தவர்கள்புரமூன்று மெரியச்செற்றாய் முன்னானைத்தோல் போர்த்த முதல்வாவென்றும், கனைத்துவருமெருதேறுங் காளகண்டா கயிலாயம லையாநின்கழலேசேர்ந்தேன், அனைத்துலகுமாள்வானேயானைக்காவா வல்லகண் டங்கொண்டடியேனென்செய்கேனே. (௬)

இம்மாயப் பிறப்பென்னுங் கடலாந்துன்பத் திடைச்சுழிப்பட் டிளைப்பேனை யிளையாவண்ணம், கைம்மான மனத்துதவிக்கருணைசெய்து காதலருள்வைவைத் தாய் காணநில்லாய், வெம்மானமதகரியி னுரிவைபோர்த்த வேதியனே தென்னா னைக் காவுண்மேய, அம்மானின்பொற்பாத மடையப்பெற்று லல்லகண்டங்கொ ண்டடியே னென்செய்கேனே. (௭)

உரையாரும்புகழானே யொற்றியூரா கச்சியேகம்பனே காரோணத்தாய், விரையாருமலர்தூவிவணங்குவார்பான் மிக்கானேயக்கரவ மாரம்பூண்டாய் திரை யாரும் புனற்பொன்னித் தீர்த்தமல்கு திருவானைக் காவிலுறை தேனேவானோர், அரையாவுன்பொற்பாத மடையப்பெற்று லல்லகண்டங்கொண்டடியே னென் செய்கேனே. (௮)

மையாருமணிமிடற்றாய் மாதோர்கூறாய் மான்மறியுமாமழுவு மனலுமேந் துங், கையானேகாலனுடல் மாளச்செற்ற கங்காளா முன்கோளும் விளைவுமானாய், செய்யானேதிருமேனி யரியாய்தேவர் குலக்கொழுந்தே தென்னானைக் காவுண்மே ய, ஐயாவுன் பொற்பாத மடையப்பெற்று லல்லகண்டங் கொண்டடியே னென் செய்கேனே. (௯)

இலையாருஞ்சூலத்தாயெண்டோளானே யெவ்விடத்து நீயலாதில்லையென்று, தலையாரக்கும்பிடுவார் தன்மையானே தழன்மடுத்த மாமேருக் கையில்வைத்த, சிலையானே திருவானைக் காவுண்மேய தீயாடீசிறுநோயால் நலிவுண்டுள்ளம், அலை யாதே நின்னடியே யடையப்பெற்று லல்லகண்டங் கொண்டடியே னென்செய் கேனே. (௧௦)

விண்ணாரும் புனல்பொதிசெஞ் சடையாய்வேத நெறியானே யெறிகடலி னஞ்சமுண்டாய், எண்ணாரும்புகழானே யுன்னையெம்மா னென்றென்றே நாவினி லெப் பொழுதுமுன்னிக், களித்தெப்போதுங் கடிபொ ழில்சூழ் தென்னானைக் காவுண்மேய, அண்ணாநின் பொற்பாத மடையப்பெற்று லல்லகண்டங்கொண்டடியே னென்செய்கேனே. (௧௧)

கொடியேயும் வெள்ளேற்றாய்கூளிபாடக் குறட்பூதங் கூத்தாட நீயுமாடி, வடிவேயு வங்கைதனை வைத்தமைந்தா மதிலானைக் காவுளாய் மாகாளத்தாய்,

படியேயுங் கடலிலங்கைக் ப் பருமுடியுந் திரடோளு மடர்த்து கந்த, அடியேவந் தனை யாகப்பெற்று லல்லகண்டங் கொண்டடியே னென்செய்கேனே. (கo)

திருச்சிற்றம்பலம்.

---

௬ உஎஎ. ரக்கா - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

முன்னானைத்தோல்போர்த்தமூர்த்திதன்னை மூவாதசிந்தையேவனமேவாக்கே
தன்னானையாப்பண்ணியேறினானைச் சார்தற்கரியானைத்தாதைதன்னை
என்னானைக்கன்றினையென்னீசன் றன்னை யெறிநீர்த்திரையுகளுங்காவிரிசூழ்
தென்னானைக்காவானைத்தேனைப்பாலைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (க)

மருந்தானைமந்திரிப்பார்மனத்துளானை வளர்மதியஞ் சடையானை மகிழ்ந்தேனுள்ளத், திருந்தானை யிறப்பிலியைப் பிறப்பிலானை யிமையவர்தம் பெருமானை யுமையாளஞ்சக், கருந்தான மதகளிற்றி னுரிபோர்த்தானைக் கனமழுவாட்படையானைப் பலிகொண்டூர், திரிந்தானைத் திருவானைக் காவுளானைச் செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே. (உ)

முற்றாதவெண்டிங்கட் கண்ணியானை முந்நீர்நஞ்சுண்டிமையோர்க் கமுதநல்கும், முற்றானைப் பல்லுயிர்க்குந் துணையானானை யோங்காரத் துட்பொருளை யுலகமெல்லாம், பெற்றானைப் பின்னிரக்கஞ் செய்வான்றன்னைப் பிரானென்று போற்றாதார் புரங்கண்மூன்றுஞ், செற்றானைத் திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (ங)

காராரு மணிமிடற்றெம் பெருமான்றன்னைக் காதில்வெண் குழையானைக் கமழ்பூங்கொன்றைத், தாரானைப்புலியதளினுடையானைத் தானன்றி வேறொன்றுமில்லானானைப், பேரானைமணியார மார்பினானைப் பிஞ்ஞகனைத் தெய்வநான்மறைகள்பூண்ட, தேரானைத்திருவானைக் காவுளானைச் செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே. (ச)

பொய்யேதுமில்லாதமெய்யன்றன்னைப் புண்ணியனைநண்ணாதார்புரநீறாக
எய்தானைச்செய்தவத்தின்மிக்கான்றன்னை யேறமரும்பெருமானையிடமானேந்தும்
கையானைக்கங்காளவேடத்தானைக் கட்டங்கக்கொடியானைக்கனல்போல்மேனிச்
செய்யானைத்திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (ரு)

கலையானைப்பாசுபதபாணியானைக் கனவயிரத்திரளானைமணிமாணிக்க
மலையானையென்றலையினுச்சியானை வார்தருபுன்சடையானைமயானமன்னும்
நிலையானைவரியரவுநாணுக்கோத்து நினையாதார்புரமெரியவளைத்தமேருச்
சிலையானைத்திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (சு)

ஆதியனை யெறிமணியி னோசையானை யண்டத்தார்க் கறிவொண்ணாதப்பான்மிக்க, சோதியனைத் தூமறையின் பொருளான்றன்னைச் சுரும்பமரு மலர்க்

கொன்றைத்தொன்னூல்பூண்ட, வேதியனையறமுரைத்தபட்டன்றன்னை விளங்கு மலரயன்சிரங்களைந்திலொன்றைச், சேதியனைத்திருவானைக்காவுளானைச் செழுநீர்த் திரளைச்சென்றாடினேனே. (௭)

மகிழ்ந்தானைக்கச்சியேகம்பன்றன்னை மறவாதுகழலிணைகள்வாழ்த்தியேத்திப், புகழ்ந்தாரைப்பொன்னுலக மாள்விப்பானைப் பூதகணப்படையானைப்புறங்காட்டாடல், உகந்தானைப்பிச்சையேயிச்சிப்பானையொண்பவளத்திரளையென்னுள்ளத்துள்ளே, திகழ்ந்தானைத்திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச்சென்றாடினேனே. (௮)

நசையானைநால்வேதத்தப்பாலானை நல்குரவுந்தீப்பிணிநோய்காப்பான்றன்னை, இசையானையெண்ணிறந்தகுணத்தான்றன்னை யிடைமருதுமீங்கோயுநீங்காதேற்றின், மிசையானைவிரிகடலுமண்ணும்விண்ணு மிகுதீயும்புனலெறிகாற்றுமாகி யெட்டுத், திசையானைத் திருவானைக்காவுளானைச் செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே. (௯)

பார்த்தானைக்காமனுடல் பொடியாய்வீழப் பண்டயன்மாலிருவர்க்கு மறியாவண்ணம், சீர்த்தானைச்செந்தழல்போ லுருவினானைத் தேவர்கடம்பெருமானைத் திறமுன்றுதே, ஆர்த்தோடிமலையெடுத்த விலங்கைவேந்த னாண்மையெலாங்கெடுத்தவன்றனிடரப்போதே, தீர்த்தானைத்திருவானைக் காவுளானைச் செழுநீர்த்திரளைச் சென்றாடினேனே. (௧௰)

திருச்சிற்றம்பலம்.

## 64 ௨௭௮. திருக்கச்சியேகம்பம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கூற்றுவன்காண் கூற்றுவனைக் குமைத்தகோன்காண் குவலயன்காண் குவலயத்தினீரானான்காண், காற்றவன்காண் கனலவன்காண் கலிக்குமின்காண் கனபவளச்செம்மேனிகலந்தவெள்ளை, நீற்றவன்காணிலாவூருஞ் சென்னியான்காணிறையார்ந்த புனற்கங்கைநிமிர்சடைமேல், ஏற்றவன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௧)

பரந்தவன்காண்பல்லுயிர்களாகியெங்கும் பணிந்தெழுவார்பாவமும்வினையும் போகத், துரந்தவன்காண்தூமலராங்கண்ணியான்காண் தோற்றநிலையிறுதிப்பொருளாய்வந்த, மருந்தவன்காண்வையங்கள் பொறைதீர்ப்பான்காண் மலர்தூவிநினைந் தெழுவாருள்ளநீங்கா, திருந்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௨)

நீற்றவன்காணீராகித்தீயானான்கா ணிறைமழுவுந்தமருகமுமெரியுங்கையில், தோற்றவன்காண் தோற்றங்கேடில்லாதான்காண் துணையிலிகாண்டுணையென்று தொழுவாருள்ளம் போற்றவன்காண்புகழ்கடமைப் படைத்தான்றான்காண்பொறியரவும் விரிசடைமேற்புனலுங்கங்கை, ஏற்றவன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௩)

தாயவன்காணுலகிற்குத்தன்னொப்பில்லாத் தத்துவன்காண்மலைமங்கைபங்கா வென்பார், வாயவன்காண்வரும்பிறவிநோய்தீர்ப்பான்காண் வானவர்க்குந்தான

வர்க்குமண் ணுளோர்க்கும், மசயவனகாணனவாககுசஈததமாரத திருவடியே யுள்கிநினைந்தெழுவாருள்ளம், ஏயவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம் னே. (௪)

ான்காண். (௫)

அழித்தவன்காணெயின்மூன்று மயில்வாயம்பா லையாறுமிடைமருதுமாள் வான்றான்காண், பழித்தவன்காணடையாரையடைவார்தங்கள் பற்றவன்காண்புற் றரவநாணினான்காண், சுழித்தவன்காண்முடிக்கங்கை யடியேபோற்றுந் தூயமா முனிவர்க்காப்பார்மேனிற்க, இழித்தவன்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம் பன்காணவனென் னெண்ணத்தானே. (௬)

அசைந்தவன்காணடமாடிப் பாடல்பேணி யழல்வண்ணத்தில்லடியுமுடியுந் தேடப், பசைந்தவன்காண்பேய்க்கணங்கள் பரவியேத்தும்பான்மையன்காண் பர விநினைந்தெழுவார்தம்பால், கசிந்தவன்காண்கரியினுரிபோர்த்தான்றான்காண் கட லில்விடமுண்டமரர்க்கமுதமீய, இசைந்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௭)

முடித்தவன்காண்வன்கூற்றைச் சீற்றத்தீயால்வலியார்தம் புரமூன்றும்வே வச்சாபம், பிடித்தவன்காண்பிஞ்ஞகனும் வேடத்தான்காண் பிணையல்வெறிகமழ் கொன்றையரவுசென்னி, முடித்தவன்காண்மூவிலைநல்வேலினான்காண் முழங்கி யுருமெனத்தோன்றுமழையாய்மின்னி, இடித்தவன்காணெழிலாரும் பொழிலார் கச்சியேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௮)

வருந்தான்காண்மனமுருகி நினையாதார்க்கு வஞ்சன்காணஞ்செழுத்துநினை வார்க்கென்றும், மருந்தவன்காண்வான்பிணிகடீரும்வண்ணம் வானகமுமண்ணக மும்மற்றுமாகிப், பரந்தவன்காண்படர்சடையெட் டுடையான்றான்காண் பங்கயத் தோன் றன்சிரத்தையேந்தியூரூர், இரந்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௯)

வெம்மானவுழுவையத ளுரிபோர்த்தான்காண் வேதத்தின்பொருளான்கா ணென்றியம்பி, விம்மாநின்றழுவார்கட் களிப்பான்றான்காண் விடையேறித்திரி வான்காணடுஞ்செய்பூதத், தம்மான்காணகலிடங்கடாங்கினான்கா ணற்புதன்காண் சொற்பதமுங்கடந்துநின்ற, எம்மான்காணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன் காணவனென் னெண்ணத்தானே. (௰)

அறுத்தான்காணயன்சிரத்தை யமரர்வேண்ட வாழ்கடலினஞ்சுண்டங்கணி நீர்க்கங்கை, செறுத்தான்காண்டேவர்க்குந் தேவன்றான்காண்டிசையனைத்துந்தொ ழுதேத்தக்கலைமான்கையில், பொறுத்தான்காண்புகலிடத்தை நலியவந்துபொரு கயிலை யெடுத்தவன்றன்முடிதோணாலஞ், சிறுத்தான்காணெழிலாரும் பொழிலார் கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௧௧)

ம்பலம்.

## உ௭௧. திருக்கச்சியேகம்பம் - திருத்தாண்டகம்

திருச்சிற்றம்பலம்

உரித்தவன்கா ணுரக்களிற்றையுமையாளொல்க வோங்காரத் தொருவன்கா ணுணர்மெய்ஞ்ஞானம், விரித்தவன்காண் விரித்தநால்வேதத்தான்காண் வியனுலகிற்பல்லுயிரை விதியினாலே, தெரித்தவன்காண் சில்லுருவாய்த்தோன்றியெங்குந் திரண்டவன்காண்டிரிபுரத்தைவேவவில்லால், எரித்தவன்கா ணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௧)

நேசன்கா ணேசர்க்கு நேசந்தன்பா லில்லாத நெஞ்சத்து நீசர்தம்மைக், கூசன்காண் கூசாதார் நெஞ்சுதஞ்சே குடிகொண்டகுழகன்கா ணழகார்கொன்றை, வாசன்காண்மலைமங்கைபங்கன்றான்காண் வானவர்களெப்பொழுதும்வணங்கியேத்தும், ஈசன்காணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௨)

பொறையவன்காண் பூமியேழ்தாங்கியோங்கும் புண்ணியன்கா ணண்ணிய புண்டரீகப்போதில், மறையவன்காண் மறையவனைப் பயந்தோன்றான்காண் வார்சடைமா சுணமணிந்து வளரும்பிள்ளைப், பிறையவன்காண் பிறைதிகழுமெயிற்றுப்பேழ்வாய்ப் பேயோடங்கிடுகாட்டிலெல்லியாடும், இறையவன்கா ணெழிலாரும்பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௩)

பாரவன்காண் விசும்பவன்காண் பவ்வந்தான்காண் பனிவரைகளிரவினொடு பகலாய்நின்ற, சீரவன்காண்டிசையவன்காண் டிசைகளெட்டுஞ் செறிந்தவன்காண் சிறந்தடியார் சிந்தைசெய்யும், பேரவன்காண் பேராயிரங்க ளேத்தும் பெரியவன்கா ணரியவன்காண் பெற்றமூர்ந்த, ஏரவன்காணெழிலாரும் பொழிலார்கச்சியேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௪)

பெருந்தவத்தெம் பிஞ்ஞகன்காண் பிறைசூடிகாண் பேதையேன் வாதையுறுபிணியைத்தீர்க்கும், மருந்தவன்காண் மந்திரங்களாயினான்காண் வானவர்கடாம்வணங்குமாதேவன்காண், அருந்தவத்தாராயிழையாளுமையாள்பாகமமர்ந்தவன்காணமரர்கடா மர்ச்சித்தேத்த, இருந்தவன்கா ணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௫)

ஆய்ந்தவன்காணருமறையோடங்கமாறு மணிந்தவன்கா ணடரவோடென்புமாமை, காய்ந்தவன்காண் கண்ணழலாற்காமனாகங் கனன்றெழுந்தகாலனுடல்பொடியாய்வீழப், பாய்ந்தவன்காண் பண்டுபலசருகாற்பந்தர் பயின்றநூற்சிலந்திக்குப்பாராள்செல்வம், ஈந்தவன்காணெழிலாரும் பொழிலார்கச்சியேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௬)

உமையவளை யொருபாகஞ்சேர்த்தினான்கா ணுகந்தொளிநீர்க் கங்கைசடையொழுக்கினான்காண், இமையவடகயிலைச் செல்வன்றான்கா ணில்பலிக்குச்சென்றுழலுநல்கூர்ந்தான்காண், சமையமவையாறினுக்குந் தலைவன்றான்காண் டத்துவன்கா ணுத்தமன்காண்டானேயாய, இமையவன்கா ணெழிலாரும் பொழிலார்கச்சியேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௭)

தொண்டுபடு தொண்டர்துயர் தீர்ப்பான்றான்காண் றேமலர்ச்சேவடியிணை யென்சோதியான்காண், உண்டுபடுவிடங்கண்டத்தொடுக்கினான்கா ணொலிகடலி லமுதமரர்க் குதவினான்காண், வண்டுபடுமலர்க்கொன்றை மாலையான்காண் வாண் மதியாய்நாண்மீனுமாயினான் காண், எண்டிசையு மெழிலாரும் பொழிலார்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௮)

முந்தைகாண் மூவரினுமுதலானான்காண் மூவிலைவேன்மூர்த்திகாண் முருக வேட்குத், தந்தைகாண் டண்கடமாமுகத்தினார்க்குத் தாதைகாண்டாழ்ந்தடியே வணங்குவார்க்குச், சிந்தைகாண் சிந்தாதசித்தத்தார்க்குச் சிவனவன்காண் செங் கண்மால்விடையொன்றேறும், எந்தைகாணெழிலாரும் பொழிலார்கச்சி யேகம் பன்காணவனென் னெண்ணத்தானே. (௯)

பொன்னிசையும் புரிசடையெம் புனிதன்றான்காண் பூதகணநாதன்காண் புலித்தோலாடை, தன்னிசையவைத்த வெழிலாவினான்காண் சங்கவெண்குழைக் காதிற்சதிரன்றான்காண், மின்னிசையும் வெள்ளெயிற்றோன் வெகுண்டுவெற்பை யெடுக்கவடியடர்ப்பமீண்டவன்றன்வாயில், இன்னிசைகேட்டிலங்கொளிவாளீந் தோன்கச்சி யேகம்பன்காணவனென் னெண்ணத்தானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## 66 உ௮௦. திருநாகேச்சரம் - திருத்தாண்டகம்.

லம்

தாயவனைவானோர்க்குமேனோருக்குந் தலையவனைமலையவனையுலகமெல்லாம்
ஆயவனைச்சேயவனையணியான்றன்னை யழலவனைநிழலவனையறியவொண்ணா
மாயவனைமறையவனைமறையோர்தங்கண் மந்திரனைத்தந்திரனைவளராநின்ற
தீயவனைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (௧)

உரித்தானை மதவேழந்தன்னைமின்னா ரொளிமுடியெம்பெருமானை யுமை யோர்பாகம், தரித்தானைத் தரியலர்தம்புரமெய்தானைத் தன்னடைந்தார் தம்வினை நோய் பாவமெல்லாம், அரித்தானை யாலதன்கீழிருந்துநால்வர்க் கறம்பொருள் வீடின்பமா றங்கம்வேதம், தெரித்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார் நன்னெறிக்கட்சேராதாரே. (௨)

காரானையுரிபோர்த்தகடவுடன்னைக்காதலித்துநினையாதகயவர்நெஞ்சில்
வாரானைமதிப்பவர்தம்மனத்துளானை மற்றொருவர்தன்னொப்பாரொப்பிலாத
வாரானையிமையவர்தம்பெருமான்றன்னை யியல்பாகியுலகெலாநிறைந்துமிக்க
சீரானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (௩)

தலையானையெவ்வுலகுந்தானானைத்தன் னுருவம்யாவர்க்குமறியவொண்ணா
நிலையானைநேசர்க்குநேசன்றன்னை நீள்வானமுகடதனைத்தாங்கிநின்ற
மலையானைவரியரவுநாணாக்கோத்துவல்லசுரர்புரமூன் றுமடியவெய்த
சிலையானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (௪)

மெய்யானைத்தன்பக்கல் விரும்புவார்க்கு விரும்பாதவரும்பாவியவர்கட்கெ ன்றும் பொய்யானைப் புறங்காட்டிலாடலானைப் பொன்பொலிந்த சடையானைப்

பொடிகொள்பூதிப், பையானைப்பையரவமசைத்தான்றன்னைப் பரந்தானைப்பவள மால்வரைபோன்மேனிச், செய்யானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (ரு)

துறந்தானையறம்புரியாத்துரிசர்தம்மைத் தோத்திரங்கள்பலசொல்லிவானோரேத்த,நிறைந்தானைநீர்நிலந்தீவெளிகாற்ருகி நிற்பனவுநடப்பனவுமாயினானை,மறந்தானைத்தன்னினையாவஞ்சர்தம்மை யஞ்செழுத்தும்வாய்நவில வல்லோர்க்கென்றும், சிறந்தானைத் திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட் சேராதாரே. (சு)

மறையானைமால்விடையொன்றூர்தியானை மால்கடனஞ்சுண்டானைவானோர்தங்கள், இறையானையென்பிறவித்துயர்தீர்ப்பானை யின்னமுதைமன்னியசீரேகம்பத்தி லுறைவானையொருவருமீங்கறியாவண்ண மென்னுள்ளத்துள்ளேயொளித்துவைத்த, நிறையானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட்சேராதாரே. (எ)

எய்தானைப்புரமூன்றுமிமைக்கும்போதி லிருவிசும்பில்வருபுனலைத்திருவார்சென்னிப் பெய்தானைப்பிறப்பிலியையறத்தினில்லாப்பிரமன்றன் சிரமொன்றைக் கரமொன்றினால், கொய்தானைக்கூத்தாடவல்லான்றன்னைக்குறியிலாக்கொடியேனையடியேனாகச், செய்தானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட் சேராதாரே. (அ)

அளியானையண்ணிக்குமான்பாறன்னை வான்பயிரையப்பயிரின் வாட்டந்தீர்க்கும், துளியானை யயன்மாலுந் தேடிக்காணாச் சுடரானைத் துரிசறத்தொண்டுபட்டார்க், கெளியானையாவர்க்கு மரியான்றன்னை யின்கரும்பின் றன்னுள்ளா லிருந்ததேறற், றெளியானைத்திருநாகேச்சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட் சேராதாரே. (கூ)

சீர்த்தானையுலகேழுஞ் சிறந்துபோற்றச் சிறந்தானைநிறைந்தோங்கு செல்வன்றன்னைப், பார்த்தானைமதனவேள்பொடியாய்வீழப் பனிமதியஞ்சடையானைப் புனிதன்றன்னை, ஆர்த்தோடிமலையெடுத்த வரக்கனஞ்சவருவிரலா லடர்த்தானையடைந்தோர்பாவம், தீர்த்தானைத்திருநாகேச் சரத்துளானைச் சேராதார்நன்னெறிக்கட் சேராதாரே. (க0)

திருச்சிற்றம்பலம்.

67 உ அ௧. திருக்கீழ்வேளூர் - திருத்தாண்டகம்.

ஆளானவடியவர்கட்கன்பன்றன்னை யானஞ்சுமாடியைநானபயம்புக்க, தாளானைத்தன்னொப்பாரில்லாதானைச் சந்தனமுங்குங்குமமுஞ் சாந்துந்தோய்ந்த, தோளானைத்தோளாத முத்தொப்பானைத் தூவெளுத்த கோவணத்தையரையிலார்த்த, கேளானைக்கீழ்வேளூராளுங்கோவைக் கேடிலியை நாடுமவர்கேடிலாரே. (௧)

சொற்பாவும்பொருடெரிந்து தூய்மைநோக்கித் தூங்காதார் மனத்திருளை வாங்காதானை, நற்பான்மையறியாத நாயினேனை நன்னெறிக்கேசெலும் வண்ண நல்கினானைப், பற்பாவுவாயாரப்பாடியாடிப் பணிந்தெழுந்து குறைந்தடைந்தார் பாவம்போகக், கிற்பானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர் கேடிலாரே. (௨)

அளைவாயிலரவசைத்த வழகன்றன்னை யாதரிக்கு மடியவர்கட் கன்பேயென்றும், விளைவானைமெய்ஞ்ஞானப்பொருளானானை வித்தகனை யெத்தனையும் பத்தர் பத்திக், குளைவானையல்லாதார்க் குளையாதானை யுலப்பிலியையுள்புக்கென் மனப்பசாசு, கிளைவானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர்கேடிலாரே.

தாட்பாவுகமலமலர் தயங்குவானைத் தலையறுத்தமாவிரதந் தரித்தான்றன்னைக், கோட்பாவுநாளெல்லா மானான்றன்னைக் கொடுவினையேன் கொடுநரகக் குழியினின்றால், மீட்பானைவித்துருவின் கொத்தொப்பானை வேதியனைவேதத்தின் பொருள்கொள்வீணை, கேட்பானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக்கேடிலியை நாடுமவர் கேடிலாரே. (௪)

நல்லானைநரைவிடையொன் றூர்தியானை நால்வேதத்தாறங்க நணுகமாட்டாச், சொல்லானைச்சுடர்மூன்று மானான்றன்னைத் தொண்டாகிப்பணிவார்கட் கணியான்றன்னை, வில்லானைமெல்லியலோர் பங்கன்றன்னை மெய்பாய் நினையாதார் வினைகளுர்க்க, கில்லானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர் கேடிலாரே. (௫)

சுழித்தானைக் கங்கைமலர் வன்னிகொன்றை தூமத்தம் வாளரவஞ் சூடினானை, அழித்தானை யரணங்கண் மூன்றும்வேவ வாலாலநஞ்சதனை யுண்டான்றன்னை, விழித்தானைக்காமனுடல் பொடியாய்வீழ மெல்லியலோர் பங்கனைமூன் வேணிலானைக், கிழித்தானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர் கேடிலாரே. (௬)

உளரொளியையுள்ளத்தி னுள்ளேநின்ற வோங்காரத்துறுபொருள தாயினானை, விளரொளியை விடுசுடர்க ளிரண்டுமொன்றும் விண்ணொடுமண்ணாகாச மாயினானை, வளரொளியைமரகதத்தி னுருவினானை வானவர்களெப்பொழுதும் வாழ்த்தியேத்தும், கிளரொளியைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர்கேடிலாரே. (௭)

தடுத்தானைக் காலனைக் காலாற்பொன்றத் தன்னடைந்த மாணிக்கன்றருள் செய்தானை, உடுத்தானைப்புலியதளோ டக்கும்பாம்பு முள்குவாருள்ளத்தி னுள்ளான்றன்னை, மடுத்தானையருநஞ்ச மிடற்றுட்டங்க வானவர்கள்கூடியவத் தக்கன் வேள்வி, கெடுத்தானைக்கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியைநாடுமவர் கேடிலாரே. (௮)

மாண்டாரெலும்பணிந்த வாழ்க்கையானை மயானத்திற்கூத்தனை வாளரவோடென்பு பூண்டானைப் புறங்காட்டி லாடலானைப் போகாதென்னுள்புகுந் திடங்கொண்டென்னை, ஆண்டானை யறிவரிய சிந்தையானை யசங்கையனை

யமரர்கடஞ் சங்கையெல்லாம், இண்டானை கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலி யைநாடுமவர் கேடிலாரே. (கூ)

முறிப்பானபேசிமலையெடுத்தான்றூ மூதுகிறமுன்கைந்நரம்பையெடுத்துப் பாடப், பறிப்பான்கைச்சிற்றரிவாணீட்டினானைப் பாவியேனெஞ்சகத்தே பாதப் போது, பொறித்தானைப் புரமூன்று மெரிசெய்தானைப் பொய்யர்களைப் பொய் செய்து போதுபோக்கிக், கிறிப்பானைக் கீழ்வேளூ ராளுங்கோவைக் கேடிலியை நாடுமவர்கேடிலாரே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - அட்சயலிங்கநாதர்; முதல்வி - வனமுலைநாயகி.

## உகஅ. * திருமுதுகுன்றம் - திருத்தாண்டகம்.



திருச்சிற்றம்பலம்

கருமணியைக்கனகத்தின் குன்றொப்பானைக் கருதுவார்க்காற்ற வெளியான் றன்னைக், குருமணியைக் கோளரவமாட்டுவானைக் கொல்வேங்கை யதளானைக் கோவணவன் றன்னை, அருமணியையடைந்தவர்கட் கமுதொப்பானை யானஞ்சு மாடியையநா னபயம்புக்க, திருமணியைத் திருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவி னையேனறியாதே திகைத்தவாறே. (க)

காரொளியகண்டத்தெங்கடவுடன்னைக் காபாலிகட்டங்கமேந்தினானைப், பா ரொளியைவிண்ணொளியைப் பாதாளத்தானைப் பான்மதியஞ்சூடியோர் பண்பன் றன்னைப், பேரொளியைப்பெண்பாகம் வைத்தான்றன்னைப் பேணுவார்தம்வினை யைப் பேணிவாங்கும், சீரொளியைத்திருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவினை யேனறியாதே திகைத்தவாறே. (உ)

எத்திசையும்வானவர்க டொழநின்றானை யேறூர்ந்தபெம்மானை யெம்மானெ ன்று, பத்தனாய்ப்பணிந்தடியேன்றன்னைப் பன்னாட்பாமாலைபாடப் பயில்வித்தா னை, முத்தினையென்மணியை மாணிக்கத்தை முளைத்தெழுந்த செம்பவளக் கொ ழுந்தொப்பானைச், சித்தனையென் றிருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவினையே னறியாதே திகைத்தவாறே. (ங)

ஊனகருவி னுணர் [illegible] ாப்பத்தர்மனங் டானைக், கான்றிரிந்துகாண்டிப மேந்தினானைக் கார்மேகமிடற்றானைக் கனலைக்காற் றைத், தான்றெரிந்தங்கடியேனை யாளாக்கொண்டு தன்னுடைய திருவடியென் றலைமேல்வைத்த, தீன்கரும்பைத் திருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவினையே னறியாதே திகைத்தவாறே. (ச)

தக்கனதுபெருவேள் [illegible] ாமலை.
மிக்கதொருதீவளிநீராகாயமாய்மேலுலகுக்கப்பாலாயிப்பாலானை
அக்கினொடுமுத்தினையுமணிந்துதொண்டர்க்கங்கங்கேயறுசமயமாகிநின்ற [றே.
திக்கினையென்றிருமுதுகுன்றுடையான்றன்னைத்தீவினையேனறியாதேதிகைத்தவா

* திருமுதுகுன்றம் என்பது விருத்தாசலம்.

புகழொளியைப் புரமெரித்த புனிதன் றன்னைப் பொன்பொதிந்தமேனியனைப் புராணன் றன்னை, விழவொலியும்விண்ணொலியுமானான் றன்னை வெண்காடுமேவிய விகிர்தன் றன்னைக், கழலொலியுங் கைவளையு மார்ப்பவார்ப்பக் கடைதோறும்மிடு பிச்சைக் கென்றுசெல்லும், திகழொளியைத் திருமுதுகுன் றுடையான் றன்னைத் தீவினையேனறியாதே திகைத்தவாறே. (௬)

போர்த்தானை யின்னுரிதோல் பொங்கப்பொங்கப் புலியதளேயுடையாகத் திரிவான் றன்னைக், காத்தானை யைம்புலனும் புரங்கண்மூன் றுங் காலனையுங் குரைகழலாற்காய்ந்தான் றன்னை, மார்த்தாடிப்பத்தராய் வணங்குந்தொண்டர் வல்வினை வேரறும்வண்ண மருந்துமாகித், தீர்த்தானைத் திருமுதுகுன் றுடையான் றன்னைத் தீவினையேனறியாதே திகைத்தவாறே. (௭)

துறவாதே யாக்கைத் துறந்தான் றன்னைச் சோதிமுழுமுதலாய் நின்றான் றன்னைப், பிறவாதேயெவ்வுயிர்க்குந்தானேயாகிப் பெண்ணினோடா ணுருவாய்நின்றான் றன்னை; மறவாதேதன் றிறமே வாழ்த்துந்தொண்டர் மனத்தகத்தேயனவரத மன்னிநின்ற, திறலானைத்திருமுதுகுன் றுடையான் றன்னைத் தீவினையேனறியாதே திகைத்தவாறே. (௮)

பொற்றூணைப்புலானாறு கபாலமேந்திப் புவலோகமெல்லா முழிதந்தானை முற்றாதவெண்டிங்கட் கண்ணியானை முழுமுதலாய் மூவுலகு முடிவொன்றில்லாக் கற்றூணைக்காளத்திமலையான் றன்னைக் கருதாதார்புரமூன்று மெரியவம்பாற் [றே. செற்றானைத் திருமுதுகுன் றுடையான் றன்னைத் தீவினையேனறியாதேதிகைத்தவா

இகழ்ந்தானையிருபதுதோளெரியவூன்றி யெழுநரம்பினிசைபாட வினிதுகேட்டுப், புகழ்ந்தானைப் பூந்துருத்தி மேயான் றன்னைப் புண்ணியனை விண்ணவர்கணி தியந்தன்னை, மகிழ்ந்தானைமலைமகளோர் பாகம்வைத்து வளர்மதியஞ் சடைவைத்துமாலோர்பாகம், திகழ்ந்தானைத் திருமுதுகுன் றுடையான்றன்னைத் தீவினையேனறியாதே திகைத்தவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - பழமலைநாதர்; முதல்வி - பெரியநாயகி.

---

## ௨௮௩. திருப்பள்ளியின்முக்கூடல் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆராதவின்னமுதையம்மான் றன்னை யயனொடுமாலறியாதவாதியானைத் [னை
தாராருமலர்க்கொன்றைச் சடையான் றன்னைச் சங்கரனைத்தன்னொப்பா ரில்லாதா
னோரானைக்காற்றானைத்தீயானானை நீள்விசும்பாயாழ்கடல்களேழுஞ்சூழ்ந்த
பாரானைப்பள்ளியின்முக்கூடலானைப் பயிலாதேபாழேநா ளுழன்றவாறே. (௧)

விடையானைவிண்ணவர்களெண்ணத்தானை வேதியனை வெண்டிங்கள் சூடுஞ் சென்னிச், சடையானைச் சாமம்போல்கண்டத்தானைத் தத்துவனைத் தன்னொப்பா

ரில்லாதானை, அடையாதார் மும்மதிலுந் தீயின்மூழ்க வடுக்கணைகோத்தெய்தானையயில்கொள்சூலப், படையானைப் பள்ளியின்முக் கூடலானைப்பயிலாதேபாழே நானுழன்றவாறே. (௨)

பூதியனைப்பொன்வரையே போல்வான்றன்னைப் புரிசடைமேற் புனல்கரந்த புனிதன்றன்னை, வேதியனை வெண்காடு மேயான்றன்னை வெள்ளேற்றின்மேலானை விண்ணோர்க்கெல்லாம், ஆதியனையாதிரைநன் னாளான்றன்னை யம்மானை மைம்மேவு கண்ணியாளோர், பாதியனைப் பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதேபாழேநா னுழன்றவாறே. (௩)

போர்த்தானை யானையின்றோல் புரங்கண்மூன்றும் பொடியாக வெய்தானைப் புனிதன்றன்னை, வார்த்தாங்கு வனமுலையாள்பாகன்றன்னை மறிகடலுணஞ்சுண்டு வானோர்க்கு, தீர்த்தானைத் தென்றிசைக்கே காமன்செல்லச் சிறிதளவிலவனுடலம்பொடியாவங்கே, பார்த்தானைப் பள்ளியின்முக்கூடலானைப் பயிலாதேபாழே நானுழன்றவாறே. (௪)

அடைந்தார்தம் பாவங்களல்லனெய்ய வருவினைகணல்குரவு செல்லாவண்ணம், கடிந்தானைக் கார்முகில்போற் கண்டத்தானைக் கடுஞ்சினத்தோன்றன்னுடலை நேமியாலே, தடிந்தானைத் தன்னொப்பாரில்லாதானைத் தத்துவனையுத்தமனை நினைவார்நெஞ்சில், படிந்தானைப்பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதேபாழேநானுழன்றவாறே. (௫)

கரந்தானைச் செஞ்சடைமேற் கங்கைவெள்ளங் கனலாடு திருமேனிக்கமலத்தோன்றன், சிரந்தாங்குகையானைத் தேவதேவைத் திகழொளியைத் தன்னடியே சிந்தைசெய்வார், வருந்தாமைக் காப்பானை மண்ணாய்விண்ணாய் மறிகடலாய்மால் விசும்பாய்மற்றுமாகிப், பரந்தானைப்பள்ளியின்முக் கூடலானைப்பயிலாதேபாழே நானுழன்றவாறே. (௬)

நதியாருஞ்சடையானைநல்லூரானை நள்ளாற்றின்மேயானைநல்லத்தானை
மதுவாரும்பொழில்புடைசூழ்வாய்மூரானை மறைக்காடுமேயானையாக்கூரானை

பதியானைப்பள்ளியின் முக்கூடலானைப் பயிலாதேபாழேநானுழன்றவாறே. (௭)

நற்றவனை நான்மறைகளாயினானை நல்லானை நணுகாதார் புரங்கண்மூன்றும், செற்றவனைச் செஞ்சடைமேற் றிங்கள்சூடுந் திருவாரூர்த்திருமூலட்டானமேய, கொற்றவனைக் கூரரவம் பூண்டான்றன்னைக் குறைந்தடைந்து தன்றிறமே கொண்டார்க்கென்றும், பற்றவனைப் பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதேபாழேநானுழன்றவாறே. (௮)

ஊனவனையுடலவனையுயிரானானை யுலகேழுமானானையும்பர்கோவை
வானவனைமதிசூடும்வளவியானை மலைமகண்முன்வராகத்தின்பின்பேசென்ற
கானவனைக்கயிலாயமலையுளானைக் கலந்துருகிநைவார்தநெஞ்சினுள்ளே
பானவனைப்பள்ளியின்முக்கூடலானைப் பயிலாதேபாழேநானுழன்றவாறே. (௯)

தடுத்தானைத் தான்முனிந்து தன்றோள்கொட்டிக் கடவரையை யிருபது தோடலையினொடும், அடுத்தானைத்தாள்விரலால்மாளூன்றி யெழுநரம்பினிசைபாட

வினிதுகேட்டுக், கொடுத்தானைப் பேரோடுங் கூர்வாடன்னைக் குறைகழலாற்கூற் றுவனை மாளவன்று, படுத்தானைப் பள்ளியின்முக் கூடலானைப் பயிலாதேபாழே நாளுமுழன்றவாறே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - முக்கோணநாதர்; முதல்வி - மைமேவுங்கண்ணி.

## ௨௮௪. பொது - க்ஷேத்திரக்கோவை திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தில்லைச்சிற்றம்பலமுஞ்செம்பொன்பள்ளிதேவன்குடிசிராப்பள்ளிதெங்கூர்
கொல்லிக்குளிரறைப்பள்ளிகோவல் வீரட்டங்கோகரணங்கோடிகாவும்
முல்லைப்புறவமுருகன்பூண்டி முழையூர்பழையாறைசத்திமுற்றம்
கல்விற்றிகழ்சீரார்காளத்தியுங் கயிலாயநாதனையேகாணலாமே. (௧)

ஆரூர்மூலட்டானமானைக்காவு மாக்கூரிற்றான்றோன்றிமாடமாவூர்
பேரூர்பிரமபுரம்பேராவூரும் பெருந்துறைகாம்பீலிபிடவூர்பேணும்
கூரார்கொறுக்கைவீரட்டானமுங் கோட்டூர்குடமூக்குக்கோழம்பமும்
காரார்கழுக்குன்றுங்கானப்பேருங் கயிலாயநாதனையேகாணலாமே. (௨)

இடைமருதீங்கோயிராமேச்சுர மின்னம்பரேரிடவையேமப்பேறூர்
சடைமுடிசாலைக்குடிதக்களூர் தலையாலங்காடுதலைச்சங்காடு
கொடுமுடிகுற்றாலங்கொள்ளம்பூதூர் கோத்திட்டைகோட்டாறுகோட்டுக்காடு
கடைமுடிகானூர்கடம்பந்துறை கயிலாயநாதனையேகாணலாமே. (௩)

எச்சிலிளமரேமநல்லூ ரிலம்பையங்கோட்டூரிறையான்சேரி
அச்சிறுபாக்கமளப்பூரம்ப ராவடுதண்டுறையழுந்தூராறை
கச்சினங்கற்குடிகச்சூராலக் கோயில்கரவீரங்காட்டுப்பள்ளி
கச்சிப்பலதளியுமேகம்பத்துங் கயிலாயநாதனையேகாணலாமே. (௪)

கொடுங்கோளூரஞ்சைக்களஞ்செங்குன் றூர்கொங்கணங்குன்றியூர்குரக்குக்காவும்
நெடுங்களநன்னிலநெல்லிக்காவு நின்றியூர்நீடூர்நியமநல்லூர்
இடும்பாவனமெழுமூரேழூர்தோழூ ரெறும்பியூரேராருமேமகூடம்
கடம்பையிளங்கோயிறன்னிலுள்ளுங் கயிலாயநாதனையேகாணலாமே. (௫)

மண்ணிப்படிக்கரைவாழ்கொளிபுத்தூர் வக்கரைமந்தாரம்வாரணாசி
வெண்ணிவிளத்தொட்டிவேள்விக்குடி விளமர்விராடபுரம்வேட்களத்தும்
பெண்ணையருட்டுறைதண்பெண்ணாகடம் பிறம்பில்பெரும்புலியூர்பெருவேளூரும்
கண்ணைகளர்க்காறைகழிப்பாலையுங் கயிலாயநாதனையேகாணலாமே. (௬)

வீழிமிழலைவெண்காடுவேங்கூர் வேதிகுடிவிசயமங்கைவியலூர்
ஆழியகத்தியான்பள்ளியண்ணா மலையாலங்காடுமரதைப்பெரும்
பாழிபழனம்பனந்தாள்பாதாளம் பராய்த்துறைபைஞ்ஞீலிபனங்காட்டூர்தண்
காழிகடனாகைக்காரோணத்துங் கயிலாயநாதனையேகாணலாமே. (௭)

உஞ்சேனைமாகாளமூறலோத்தூ ருருத்திரகோடிமறைக்காட்டுள்ளும்
மஞ்சார்பொதியின்மலைதஞ்சைவழுவூர் வீரட்டமாதானங்கேதாரத்தும்
வெஞ்சமாக்கூடல்மீயச்சூர்வைகா வேதீச்சரம்வீவீச்சரம்மொற்றியூரும்
கஞ்சனூர்கஞ்சாறுபஞ்சாக்கையுங் கயிலாயநாதனையேகாணலாமே. (௮)

திண்டீச்சரஞ்சேய்ஞலூர்செம்பொன்பள்ளி தேவூர்சிரபுரஞ்சிற்றேமஞ்சேறை
கொண்டீச்சரங்கூந்தலூர்கூழையூர்கூடல் குறுகாவூர்வெள்ளடைகுமரிகொங்கு
அண்டர்தொழுமதிகைவீரட்டான மையாறசோகந்தியாமாத்தூரும்
கண்டியூர்வீரட்டங்கருகாவூருங் கயிலாயநாதனையேகாணலாமே. (௯)

நறையூரிற்சித்தீச்சரநள்ளாறு நாரையூர்நாகேச்சரநல்லூர்நல்ல
துறையூர்சோற்றுத்துறைசூலமங்கை தோணிபுரந்துருத்திசோமீச்சரம்
உறையூர்கடலொற்றியூரூற்றத்தூ ரோமாம்புலியூரோரேடகத்தும்
கறையூர்கருப்பறியல்கன்றாப்பூருங் கயிலாயநாதனையேகாணலாமே. (௧௦)

புலிவலம்புத்தூர்புகலூர்புன்கூர் புறம்பயம்பூவணம்பொய்கைநல்லூர்
வலிவலமாற்பேறுவாய்மூர்வைகல் வலஞ்சுழிவாஞ்சியம்மருகல்வன்னி [யூர்
நிலமலிநெய்த்தானத்தோடெத்தானத்து நிலவுபெருங்கோயில்பலகண்டாற்றொண்
கலிவலிமிக்கோனைக்கால்விரலாற்செற்ற கயிலாயநாதனையேகாணலாமே. (௧௧)

பலம்.

## 71) ௨௮௫. பொது அடைவு - திருத்தாண்டகம்.



சிற்றம்பலம்

பொருப்பள்ளிவரைவில்லாப் புரமூன்றெய்துபுலந்தழியச் சலந்தரனைப்பிளந் தான்பொற்சக், கரப்பள்ளிதிருக்காட்டுப் பள்ளிகள்ளார் கமழ்கொல்லி யறைப் பள்ளிகலவஞ்சாரற், சிரப்பள்ளிசிவப்பள்ளி செம்பொன்பள்ளி செழுநனிபள்ளி தவப்பள்ளிசீரார், பரப்பள்ளியென்றென்று பகர்வோரெல்லாம் பரலோகத்தினி தாகப்பாலிப்பாரே. (௧)

காவிரியின்கரைக்கண்டி வீரட்டானங் கடவூர்வீரட்டானங் காமருசீரதிகை, மேவியவீரட்டானம் வழுவைவீரட்டம் வியன்பறியல்வீரட்டம் விடையூர்திக்கிட மாம், கோவலூர்வீரட்டங் குறுக்கைவீரட்டங் கோத்திட்டைகுடிவீரட்டான மிவைகூறி, நாவினவின் றுரைப்பார்க்கு நணுகச்சென்றால் நமன்றமருஞ் சிவன்றம ரென்றகல்வர்நன்கே. (௨)

நற்கொடிமேல்விடையுயர்த்த நம்பன்செம்பங் குடிநல்லக்குடிநளிநாட்டியத் தான்குடி, கற்குடிதென்களக்குடி செங்காட்டங்குடி கருந்திட்டைக்குடி கடையக் குடிகாணுங்கால், விற்குடிவேள்விக்குடி நல்வேட்டக்குடி வேதிகுடிமாணிகுடி விடைவாய்க்குடி, புற்குடிமாகுடி தேவன்குடி நீலக்குடி புதுக்குடியும் போற்ற விடர் போகுமன்றே. (௩)

பிறையூருஞ்சடைமுடியெம்பெருமானாரூர் பெரும்பற்றப்புலியூரும்பேராவூரும்
நறையூருநல்லூருநல்லாற்றூரு நாலூருஞ்சேற்றூருநாரையூரும்
உறையூருமோத்தூருமூற்றத்தூரு மளப்பூரோமாம்புலியூரொற்றியூரும் [றே.
துறையூருந்துவையூருந் தோழூர்தானுந் துடையூருந்தொழவிடர்க டொடராவன்

பெருக்காறுசடைக்கணிந்த பெருமான்சேரும் பெருங்கோயி லெழுபதினோ டெட்டுமற்றும், கரக்கோயில்கடிபொழில்சூழ் ஞாழற்கோயில்கருப்பறியற்பொருப் பனையகொகுடிக்கோயில், இருக்கோதிமறையவர்கள் வழிபட்டேத்து மிளங்கோயின்மணிக்கோயி லாலக்கோயில், திருக்கோயில்சிவனுறையுங் கோயில்சூழ்ந்து தாழ்ந்திறைஞ்சத்தீவினைக டருமன்றே. (ரு)

மலையார்தமகளொடுமாதேவன்சேரு மறைக்காடுவண்பொழில்சூழ் தலைச்சங்காடு, தலையாலங்காடு தடங்கடல்சூழ்ந்தண் சாய்க்காடுதள்ளுபுனற் கொள்ளிக்காடு, பலர்பாடும்பழையனூராலங்காடு பனங்காடுபாவையர்கள் பாவநீங்க, விலையாடும்வளைதிளைக்குங் குடையும்பொய்கை வெண்காடுமடையவினை வேறுமன்றே.

கடுவாயர்தமைநீக்கி யென்னையாட்கொள் கண்ணுதலோ னண்ணுமிட மண்ணல்வாயில், நெடுவாயில் நிறைவயல்சூழ் நெய்தல்வாயினிகழ் முல்லைவாயி லொடு ஞாழல்வாயில், மடுவார்தென்மதுரைநகராலவாயின் மறிகடல்சூழ்புனவாயின்மாடநீடு, குடவாயில் குணவாயி லானவெல்லாம் புகுவாரைக் கொடுவினைகள் கூடாவன்றே. (எ)

நாடகமாடிடநந்திகேச்சுரமாகாளேச் சுரநாகேச்சுரநாகளேச்சுரநன்கான
கோடீச்சுரங்கொண்டீச்சுரந்திண்டீச்சுரங் குக்குடேச்சுரமக்கீச்சுரங்கூறுங்கால்
ஆடகேச்சுரமகத்தீச்சுரமயனீச்சுர மத்தீச்சுரஞ்சித்தீச்சுரமந்தண்கானல்
ஈடுதிரையிராமேச்சுரமென்றென்றேத்தியிறைவனுறைசுரம்பலவுமியம்புவோமே.

கந்தமாதனங்கயிலைமலைகேதாரங் காளாத்திகழுக்குன்றங்கண்ணாரண்ணா
மந்தமாம்பொழிற்சாரல்வடபற்பத மயேந்திரமாமலைநீலமேமகூடம்
விந்தமாமலைவேதஞ்சையமிக்க வியன்பொதியின்மலைமேருவுதையமத்தம்
இந்துசேகரனுறையுமலைகண்மற்று மேத்துவோமிடர்கெடநின்றேத்துவோமே.

நள்ளாறும் பழையாறுங் கோட்டாற்றோடு நலந்திகழு நாலாறுந்திருவையாறும், தெள்ளாறும் வளைகுளமுந் தளிக்குளமுநல் லிடைக்குளமுந் திருக்குளத்தோடஞ்சைக்களம், விள்ளாதநெடுங்களம்வேட்களநெல்லிக்கா கோலக்காவானைக்காவியன்கோடிகா, கள்ளார்ந்த கொன்றையா னின்றவாறுங் குளங்களங்காவெனவனைத்துங்கூறுவோமே. (க௦)

கயிலாயமலையெடுத்தான் கரங்களோடு சிரங்களுரநெரியக்கால் விரலாற் செற்றோன், பயில்வாயபராய்த்துறை தென்பாலைத்துறை பண்டெழுவர் தவத்துறைவெண்டுறை பைம்பொழிற், குயிலாலந்துறைசோற்றுத் துறைபூந்துறை பெருந்துறையுங் குரங்காடுதுறையினோடு, மயிலாடுதுறைகடம்பந் துறையாவடுதுறைமற்றுந்துறையனைத்தும் வணங்குவோமே.

திருச்சிற்றம்பலம்.

## உ௭௨. திருவலஞ்சுழி திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அலையார்புனற்கங்கைநங்கைகாண வம்பலத்திலருநட்டமாடிவேடம்
தொலையாதவென்றியார்நின்றியூரு நெடுங்களமுமேவிவிடையைமேல்கொண்
டலையார்படைக்கையிலேந்திவெங்கு மிமையவருமுமையவளுமிறைஞ்சியேத்த
மலையார்திரளருவிப்பொன்னிசூழ்ந்த வலஞ்சுழியேபுக்கிடமாமருவினாரே. (க-௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.
சுவாமி - கபர்த்தீசர்; முதல்வி - பெரியநாயகி.

## உ௭௩. திருவலஞ்சுழியும் - திருக்கொட்டையூர் திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கருமணிபோற் கண்டத்தழகன்கண்டாய் கல்லானிழற்கீழிருந்தான் கண்டாய்
பருமணிமாநாகம் பூண்டான்கண்டாய் பவளக்குன்றன்ன பரமன்கண்டாய் [டாய்
வருமணிநீர்ப்பொன்னி வலஞ்சுழியான்கண்டாய் மாதேவன்கண்டாய் வரதன்கண்
குருமணிபோலழகமருங் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங்கோமான்றானே.

கலைக்கன்றுதங்கு கரத்தான்கண்டாய் கலைபயில்வோர்ஞானக்க ணானான்கண்டாய், அலைக்கங்கைசெஞ்சடைமே லேற்றான்கண்டா யண்டகபாலத்தப்பா லானான்கண்டாய், மலைப்பண்டங்கொண்டு வருநீர்ப்பொன்னி வலஞ்சுழியின்மேவிய மைந்தன்கண்டாய், குலைத்தெங்கஞ்சோலைசூழ் கொட்டையூரிற்கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (உ)

செந்தாமரைப்போ தணிந்தான்கண்டாய் சிவன்கண்டாய்தேவர் பெருமான்கண்டாய், பந்தாடுமெல்விரலாள் பாகன்கண்டாய் பாலோடுநெய்தயிர் தேனாடிகண்டாய், மந்தாரமுந்தி வருநீர்ப்பொன்னி வலஞ்சுழியின்மன்னு மணாளன்கண்டாய், கொந்தார்பொழில்புடைசூழ் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (௩)

பொடியாடுமேனிப் புனிதன்கண்டாய் புட்பாகற்காழி கொடுத்தான்கண்டாய், இடியார்கடுமுழக்கே றூர்ந்தான்கண்டா யெண்டிசைக்கும்விளக்காகி நின்றான்கண்டாய், மடலார்திரைபுரளுங் காவிரிவாய்வலஞ்சுழியின் மேவியமைந்தன்கண்டாய், கொடியாடுநெடுமாடக் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (௪)

அக்கரவமரைக்கசைத்த வம்மான்கண்டா யருமறைகளாறங்க மானான்கண்டாய், தக்கனதுபெருவேள்வி தகர்த்தான்கண்டாய் சதாசிவன்காண்சலந்தரனைப் பிளந்தான்கண்டாய், மைக்கொண்மயிற் றழைகொண்டு வருநீர்ப்பொன்னி வலஞ்

சுழியான்கண்டாய் மழுவன்கண்டாய், கொக்கமரும்வயல்புடைசூழ் கொட்டை யூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (ரு)

சண்டனைநல் லண்டர்தொழச் செய்தான்கண்டாய் சதாசிவன்கண்டாய் சங் கரன்றான்கண்டாய், தொண்டர்பலர்தொழுதேத்துங் கழலான்கண்டாய் சுடரொ ளியாய்த் தொடர்வரிதாய் நின்றான்கண்டாய், மண்டுபுனற்பொன்னி வலஞ்சுழி யான்கண்டாய் மாமுனிவர்தம்முடைய மருந்துகண்டாய், கொண்டறவழ் கொடி மாடக் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (சு)

அணைவரியான்கண்டா யமலன்கண்டா யவிநாசிகண்டா யண்டத்தான் கண் டாய், பணமணிமாநாக முடையான்கண்டாய் பண்டரங்கன்கண்டாய் பகவன் கண்டாய், மணல்வருநீர்ப் பொன்னிவலஞ் சுழியான்கண்டாய் மாதவற்குநான்மு கற்கும் வரதன்கண்டாய், குணமுடைநல் லடியார்வாழ் கொட்டையூரிற் கோடீச் சரத்துறையுங் கோமான்றானே. (எ)

விரைகமழு மலர்க்கொன்றைத் தாரான்கண்டாய் வேதங்கடொழாநின்ற நாதன்கண்டாய், அரையதனிற்புள்ளியத ளுடையான்கண்டா யழலாடிகண்டா யழகன்கண்டாய், வருதிரைநீர்ப் பொன்னிவலஞ் சுழியான்கண்டாய் வஞ்சமனத் தவர்க்கரிய மைந்தன்கண்டாய், குரவமரும் பொழில்புடைசூழ் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (அ)

தளங்கிளருந்தாமரையா தனத்தான்கண்டாய் தசரதன்றன்மகனைசவு தவிர்த் தான்கண்டாய், இளம்பிறையு முதிர்சடைமேல் வைத்தான்கண்டா யெட்டெட் டிருங்கலையு மானான்கண்டாய், வளங்கிளர்நீர்ப்பொன்னிவலஞ்சுழியான்கண்டாய் மாமுனிகடொழுதெழுபொற் கழலான்கண்டாய், குளங்கிளர் செங்குவளைகிளர் கொட்டையூரிற் கோடீச்சரத்துறையுங் கோமான்றானே. (கூ)

விண்டார்புரமூன் றெரித்தான்கண்டாய் விலங்கலில்வல்லரக்க னுடலடர்த் தான்கண்டாய், தண்டாமரையானு மாலுந்தேடத் தழற்பிழம்பாய்நீண்ட கழலா ன்கண்டாய், வண்டார்பூஞ்சோலைவலஞ் சுழியான்கண்டாய் மாதேவன்கண்டாய் மறையோடங்கம், கொண்டாடுவேதியர்வாழ்கொட்டையூரிற் கோடீச்சரத்துறை யுங் கோமான்றானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சுந்தரகோடீசர்; முதல்வி - பந்தாடுநாயகி.

---

## உஅஅ. திருநாரையூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

சொல்லானைப் பொருளானைச் சுருதியானைச் சுடராழிநெடுமாலுக் கருள் செய்தானை, அல்லானைப்பகலானை யரியான்றன்னை யடியார்கட்கெளியானை யரண் மூன்றெய்த, வில்லானைச் சரம்விசயற் கருள்செய்தானை வெங்கதிரோன் மா

முனிவர் விரும்பியேத்தும், நல்லானைத்தீயாடு நம்பன்றன்னை நாரையூர்நன்னகரிற் கண்டேனானே. (௧)

பஞ்சுண்ட மெல்லடியாள் பங்கன்றன்னைப் பாரொடுநீர் சுடர்படர்காற்றாயி னானை, மஞ்சுண்டவானாகி வானந்தன்னின் மதியாகிமதிசடைமேல் வைத்தான்ற ன்னை, நெஞ்சுண்டநினைவாகி நின்றான்றன்னை நெடுங்கடலைக் கடைந்தவர்போய் நீங்கவோங்கும், நஞ்சுண்டுதேவர்களுக் கமுதீந்தானை நாரையூர்நன்னகரிற் கண்டே (௨)

மூவாதியாவர்க்கு மூத்தான்றன்னை முடியாத்தமுதனடுவு முடிவா
தேவாதிதேவர்கட்குந் தேவன்றன்னைத் திசைமுகன்றன் சிரமொன்றுசிதைத்தான் றன்னை, ஆவாதவடலேற்றொன் றுடையான்றன்னை யடியேற்குநினைதோறு மண் ணிக்கின்ற, நாவானைநாவினல் லுரையானானை நாரையூர் நன்னகரிற் கண்டே னே. (௩)

செம்பொன்னை நன்பவளந் திகழுமுத்தைச் செழுமணியைத் தொழுமவர் தஞ்சித்தத்தானை, வம்பவிழுமலர்க்கணைவே ளுலக்கநோக்கி மகிழ்ந்தானை மதிற் கச்சி மன்னுகின்ற, கம்பனையெங்கயிலாய மலையான்றன்னைக் கழுகினொடுகாகுத் தன் கருதியேத்தும், நம்பனையெம்பெருமானைநாதன்றன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே. (௪)

புரையுடைய கரியுரிவைப் போர்வையானைப் புரிசடைமேற் புனலடைத்த புனிதன்றன்னை, விரையுடைய வெள்ளெருக்கங் கண்ணியானை வெண்ணீறுசெம் மேனி விரவினானை, வரையுடைய மகடவஞ்செய்மணாளன்றன்னை வருபிணிநோய் பிரிவிக்கு மருந்துதன்னை, நரைவிடைநற் கொடியுடைய நாதன்றன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே. (௫)

பிறவாதுமிறவாதுபெருகினானைப் பேய்பாடநாடும்பித்தன்றன்னை
மறவாதமனத்தகத்துமன்னினானை மலையானைக்கடலானைவனத்துளானை
உறவானைப்பகையானையுயிரானானை யுள்ளானைப்புறத்தானையோசையானை
நறவாரும்பூங்கொன்றைசூடினானை நாரையூர்நன்னகரிற்கண்டேனானே. (௬)

தக்கனதுவேள்விகெடச் சாடினானைத் தலைகலனாப் பலியேற்ற தலைவன்றன் னைக், கொக்கரைச்சரிவீணைபாணியானைக் கோணாகம் பூணாகக் கொண்டான்றன் னை, அக்கினொடுமென்பணிந்த வழகன்றன்னை யறுமுகனோடானைமுகற்கன்பன் றன்னை, நக்கனைவக்கரையானை நள்ளாற்றானை நாரையூர்நன்னகரிற் கண்டேனானே.

அரிபிரமர்தொழுதேத்து மத்தன்றன்னை யந்தகனுக்கந்தகனை யளக்கலாகா
எரிபுரியுமிலிங்கபுராணத்துளானை யெண்ணாகிப்பண்ணாரெழுத்தானானைத் [னை
திரிபுரஞ்செற்றொருமூவர்க்கருள்செய்தானைச் சிலந்திக்குமரசளித்தசெல்வன்றன்
நரிவிரவுகாட்டகத்திலாடலானை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே. (௮)

ஆலாலமிடற்றணியாவடக்கினானை யால... ...ல்வர்க் க...
பாலாகித்தேனாகிப்பழமுமாகிப் பைங்கரும்பாயங்கருந்துஞ் சுவையானானை

மேலாயவேதியர்க்குவேள்வியாகி வேள்வியினின்பயனாயவிமலன்றன்னை நாலாயமறைக்கிறைவனாயினானை நாரையூர்நன்னகரிற் கண்டேனானே. (௯)

மீளாதவாளென்னை யுடையான்றன்னை வெளிசெய்தவழிபாடு மேவினானை, மாளாமைமறையவனுக் குயிரும்வைத்து வன்கூற்றி னுயிர்மாள வுதைத்தான்றன்னைத், தோளாண்மைகருதிவரை யெடுத்ததூர்த்தன் றோள்வலியுந் தாள்வலியுந் தொலைவித்தாங்கே, நாளோடுவாள்கொடுத்த நம்பன்றன்னை நாரையூர் நன்னகரிற் கண்டேனானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

## ௨௮௯. திருக்குடந்தைக்கீழ்க்கோட்டம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

சொன்மலிந்தமறைநான்காறங்கமாகிச் சொற்பொருளுங் கடந்தசுடர்ச்சோதிபோலும், கன்மலிந்தகயிலைமலைவாணர்போலுங் கடனஞ்சமுண்டிருண்டகண்டர்போலும், மன்மலிந்தமணிவரைத்திண்டோளர்போலு மலையரையன்மடப்பாவை மணாளர்போலும், கொன்மலிந்த மூவிலைமேற் குழகர்போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங்கூத்தனாரே. (௧)

கானலிளங்கலிமறவ னாகிப்பார்த்தன் கருத்தளவுசெருத்தொகுதி கண்டார்போலும், ஆனலிளங்கடுவிடையொன் றேறியண்டத் தப்பாலும்பலிதிரியு மழகர்போலும், தேனலிளந்துவலைமலிதென்றன்முன்றிற் செழும்பொழிற் பூம்பாளைவிரிதேறலூறும், கூனலிளம்பிறைதடவுகொடிகொண்மாடக்குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங் கூத்தனாரே. (௨)

நீறலைத்ததிருவுருவுநெற்றிக்கண்ணு நிலாவலைத்தபாம்பினொடு நிறைநீர்க்கங்கை, ஆறலைத்தசடைமுடியும்பொற்றோளு மடியவர்க்குக் காட்டியருள் புரிவார்போலும், ஏறலைத்தநிமிர்கொடியொன் றுடையார்போலு மேழுலகுந் தொழுகழலெம்மீசர்போலும், கூறலைத்தமலைமடந்தை கொழுநர்போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங்கூத்தனாரே. (௩)

தக்கனதுபெருவேள்வி தகர்த்தார்போலுஞ் சந்திரனைக் கலைகவர்ந்து தவிர்த்தார்போலும், செக்கரொளிபவளவொளிமின்னின்சோதிசெழுஞ்சுடர்த்தீஞாயிறெனச்செய்யர்போலும், மிக்கதிறன்மறையவரால் விளங்குவேள்வி மிகுபுகைபோய் விண்பொழியக்கழனியெல்லாம், கொக்கினியகனிசிதறித்தேறல்பாயுங்குடந்தைக் கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௪)

காலன்வலிதொலைத்தகழற் காலர்போலுங் காமனெழிலழல் விழுங்கக் கண்டார்போலும், ஆலதனிலறநால்வர்க் களித்தார்போலு மாணொடு பெண்ணலியல் லரானார்போலும், நீலவுருவயிரநிரைபச்சை செம்பொ னெடும்பளிங்கென்றறிவரியதிறத்தார்போலும், கோலமணி கொழித்திழியும் பொன்னிநன்னீர்க் குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங்கூத்தனாரே. (௫)

முடிகொண்ட வளர்மதியு மூன்றாய்த்தோன்று முளைநாயி றன்னமலர்க் கண்கண்மூன்றும், அடிகொண்ட சிலப்பொலியு மருளார்சோதி யணிமுறுவற்

செவ்வாயுமழகாய்த் தோன்றத், துடிகொண்டவிடைமடவாள் பாகங்கொண்டு சுடர்ச்சோதிக்கடற்செம்பொன் மலைபோலிந்நாள், குடிகொண்டென் மனத்தகத்தே புகுந்தார்போலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே. (௬)

காரிலங்குதிருவுருவத் தவற்குமற்றைக் கமலத்திற் காரணற்குங் காட்சியொண்ணாச், சீரிலங்குதழற்பிழம்பிற் சிவந்தார்போலுஞ் சிலைவளைவித் தவுணர்புரஞ் சிதைத்தார்போலும், பாரிலங்குபுனலனல்கால் பரமாகாசம் பருதிமதிசுருதியுமாய்ப் பரந்தார்போலும், கூரிலங்குவேற்குமரன் றாதைபோலுங் குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே. (௭)

பூச்சூழ்ந்தபொழிறழுவு புகலூருள்ளார் புறம்பயத்தா ரம்பர்பூந் துருத்திபுக்கு, மாச்சூழ்ந்தபழனத்தார் நெய்த்தானத்தார் மாதவத்துவளர்சோற்றுத்துறையார்நல்ல, தீச்சூழ்ந்ததிகிரிதிரு மாலுக்கீந்து திருவானைக்காவிலோர் சிலந்திக்கந்நாள், கோச்சோழர்குலத்தரசு கொடுத்தார்போலுங் குடந்தைக்கீழ்க்கோட்டத் தெங் கூத்தனாரே. (௮)

பொங்கரவர்புலித்தோலர் புராணர்மார்பிற் பொறிகிளர்வெண்பூணூற் புனிதர்போலும், சங்கபவங்கடன்முகடு தட்டவிட்டுச் சதுரநடமாட்டுகந்த சைவர்போலும், அங்கரவத்திருவடிக்காட் பிழைப்பத்தந்தை யந்தணனையறவெறிந்தார்க் கருளப்போதே, கொங்கரவச்சடைக்கொன்றை கொடுத்தார்போலுங் குடந்தைக் கீழ்க்கோட்டத்தெங் கூத்தனாரே. (௯)

ஏவியிடர்க்கடலிடைப்பட் டுளக்கின்றேனை யிப்பிறவியறுத்தேற வாங்கியாங்கே, கூவியமருலகனைத்து முருவிப்போகக் குறியிலறுகுணத்தாண்டு கொண்டார்போலும், தாவிமுதற்காவிரிநல் யமுனைகங்கை சரச்சுதிபொற்றாமரைபுட் கரணிதெண்ணீர்க், கோவியொடுகுமரிவரு தீர்த்தஞ்சூழ்ந்த குடந்தைக்கீழ்க் கோட்டத்தெங் கூத்தனாரே. (௧௦)

செறிகொண்டசிந்தைதனுட் டெளிந்துதேறித் தித்திக்குஞ்சிவபுவனத் தமுதம்போலும், நெறிகொண்டகுழலியுமைபாகமாக நிறைந்தமரர்கணம்வணங்க நின்றார்போலும், மறிகொண்டகரதலத்தெம் மைந்தர்போலு மதிளிலங்கைக்கோன்மலங்கவரைக்கீழிட்டுக், குறிகொண்டவின்னிசைகேட் டுகந்தார்போலுங் குடந்தைக்கீழ்க்கோட்டத்தெங் கூத்தனாரே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - மடந்தைபாகர்; முதல்வி - பெரியநாயகி.

76

## ௨௯௦. திருப்புத்தூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

புரிந்தமரர்தொழுதேத்தும் புகழ்தக்கோன்காண் போர்விடையின்பாகன்காண் புவனமேழும், விரிந்துபலவுயிராகி விளங்கினான்காண் விரைக்கொன்றைக் கண்ணியன்காண் வேதநான்கும், தெரிந்துமுதற்படைத்தோனைச் சிரங்கொண்டோன்

கான் மூர்த்தன்காண்டிருமாலோர் பங்கத்தான்காண், இருந்துவயல்புடைதழுவு திருப்புத்தூரிற், றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௧)

வாராருமுலைமங்கை பங்கத்தான்காண் மாமறைகளாயவன்காண் மண்ணும் விண்ணும், கூரார்வெந்தழலவனுங் காற்றுநீருங் குலவரையுமாயவன்காண் கொடு நஞ்சுண்ட, காராருங்கண்டன்கா ணெண்டோளன்காண் கயிலைமலைப்பொருப்பன் காண் விருப்போடென்றும், தேராருநெடுவீதித் திருப்புத்தூரிற் றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௨)

மின்காட்டுங்கொடிமருங்கு லுமையாட்கென்றும் விருப்பவன்காண் பொருப்புவலிசிலைக்கையோன்காண், நன்பாட்டுப்புலவனாய்ச் சங்கமேறி நற்கனகக்கிழி தருமிக் கருளினோன்காண், பொன்காட்டக்கடிக்கொன்றை மருங்கேநின்ற புனற் காந்தள்கைகாட்டக் கண்டுவண்டு, தென்காட்டுஞ்செழும்புறவிற் றிருப்புத்தூரிற் றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௩)

ஏடேறுமலர்க்கமலத் தயனுமாலு மிந்திரனும்பணிந்தேத்த விருக்கின்றான் காண், தோடேறுமலர்க்கடுக்கை வன்னிமத்தந் துன்னியசெஞ்சடையான்காண் டுகடீர்சங்கம், மாடேறிமுத்தீனுங் கானல்வேலி மறைக்காட்டுமாமணிகாண் வளங் கொண்மேதி, சேடேறிமடுப்படியுந்திருப்புத்தூரிற் றிருத்தளியான் காணவனென் சிந்தையானே. (௪)

கருமருவுவல்வினைநோய் காற்றினான்காண் காமருபூங்கச்சி யேகம்பத்தான் காண், பெருமருவுபேருலகிற் பிணிகடீர்க்கும் பெரும்பற்றத்தண்புலியூர் மன்றாடி காண், தருமருவுகொடைத்தடக்கை யளகைக்கோன்றன் சங்காத்தியாரூரிற் றனி யானைகாண், திருமருவுபொழில்புடைசூழ் திருப்புத்தூரிற் றிருத்தளியான் காண வனென்சிந்தையானே. (௫)

காம்பாடுதோளுமையாள் காணநட்டங் கலந்தாடல்புரிந்தவன்காண் கையில் வெய்ய, பாம்பாடப்படுதலையிற் பலிகொள்வான்காண் பவளத்தின்பருவரைபோற் படிமத்தான்காண், தாம்பாடுசினவிடையே பகடாக்கொண்ட சங்கரன்காண்பொங் கரவக் கச்சையோன்காண், சேம்பாடுவயல்புடைசூழ் திருப்புத்தூரிற் றிருத்தளி யான் காணவனென்சிந்தையானே. (௬)

வெறிவிரவுமலர்க்கொன்றை விளங்குதிங்கள் வன்னியொடுவிரிசடைமேன் மிலைச்சினான்காண், பொறிவிரவுகதநாகமக்கினோடு பூண்டவன்காண் பொருபுலித் தோ லாடையான்காண், அறிவரியநுண்பொருள்க ளாயினான்கா ணாயிரம்பேரு டையவன்கா ணந்தண்கானல், செறிபொழில்சூழ் மணிமாடத் திருப்புத்தூரிற் றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௭)

புக்கடைந்தவேதியற்காய்க் காலற்காய்ந்த புண்ணியன்காண் வெண்ணகை வெள்வளையாளஞ்ச, மிக்கெதிர்ந்தகரிவெருவ வுரித்தகோன்காண்வெண்மதியைக் கலைசேர்த்த திண்மையோன்காண், அக்கரும்புபெரும்புன்னை நெருங்குசோலை யாரூருக்கதிபதிகா ணந்தண்டென்றல், திக்கணைந்துவருமருங்கிற் றிருப்புத்தூரிற் றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௮)

ாக்குமவாமொருககும் பராபரன்காண்டககண நனவ்வள விசெற்ற, கொற்றவன்காண்கொடுஞ்சினத்தை யடங்கச்செற்று ஞானத்தைமேன் மிகுத்தல் கோளாக்கொண்ட, பெற்றியன்காண் பிறங்கருவிக்கழுக்குன்றத்தெம் பிஞ்ஞகன்காண் பேரெழிலார்காமவேளைச், செற்றவன்காண் சீர்மருவுதிருப்புத் தூரிற் றிருத்தளியான் காணவனென்சிந்தையானே. (௯)

உரமதித்தசலந்தரன்றனாகங்கீண்ட வோராழிபடைத்தவன்கா ணுலகுசூழும், வரமதித்தகதிரவனைப்பற்கொண்டான்காண் வானவர்கோன்புயநெரித்தவல்லாளன் காண், அரமதித்துச் செம்பொன்னினாரம்பூணு வணிந்தவன்கா ணலைகடல்சூழி லங்கைவேந்தன், சிரநெரித்தசேவடிகாண் டிருப்பத்தூரிற் றிருத்தளியான் காண (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டில் உள்ளது.

முதல்வன் - புத்தூரீசர்; முதல்வி - சிவகாமியம்மை.

77

## உ௬௩. திருவாய்மூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாடவடியார்பரவக்கண்டேன் பத்தர்கணங்கண்டேன்மொய்த்தபூதம்
ஆடன்முழவமதிரக்கண்டே னங்கையனல்கண்டேன்கங்கையாளைக்
கோடலரவார்சடையிற்கண்டேன் கொக்கிறகுகண்டேன் கொன்றைகண்டேன்
வாடற்றலையொன்றுகையிற்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௧)

பாலின்மொழியாளோர் பாகங்கண்டேன் பதினெண்கணமும் பயிலக்கண்டேன்
நீலநிறமுண்டகண்டங்கண்டே னெற்றிநுதல்கண்டேன் பெற்றங்கண்டேன்
காலைக்கதிர்செய்மதியங்கண்டேன் கரந்தைதிருமுடிமேற் றோன்றக்கண்டேன்
மாலைச்சடையுமுடியுங்கண்டேன் வாய்மூரடிகளைநான் கண்டவாறே. (௨)

மண்ணைத்திகழநடமதாடும் வரைசிலம்பார்க்கின்றபாதங்கண்டேன்
விண்ணிற்றிகழுமுடியுங்கண்டேன் வேடம்பலவாஞ்சரிதைகண்டேன்
நண்ணிப்பிரியாமழுவுங்கண்டே னாலுமறையங்கமோதக்கண்டேன்
வண்ணப்பொலிந்திலங்குகோலங்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. ()

விளைத்தபெரும்பத்திகூரநின்று மெய்யடியார்தம்மை விரும்பக்கண்டேன்
இளைக்குங்கதநாகமேனிகண்டே னென்பினகலந்திகழ்ந்துதோன்றக்கண்டேன்
திளைக்குந்திருமார்பினீறுகண்டேன் சேணார்மதின்மூன்றும்பொன்றவன்று
வளைத்தவரிசிலையுங்கையிற்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௪)

கான்மறையும் போதகத்தி னுரிவைகண்டேன் காலிற் கழல்கண்டேன் கரி யின்றோல்கொண், டேன்மறையப் போர்த்தவடிவுங்கண்டே னுள்கமனம்வைத்தவு ணர்வுங்கண்டேன், நான்மறையானோடுநெடியமாலு நண்ணி வரக்கண்டேன்றிண் ணமாக, மான்மறிதங்கையின் மருவக்கண்டேன் வாய்மூரடிகளை நான்கண்ட வாறே.

அடியார்சிலம்பொலிகளார்ப்பக்கண்டே னவ்வவர்க்கேயீந்தகருணைகண்டேன
முடியார்சடைமுடிமேலரவமூழ்க மூரிப்பிறைபோய்மறையக்கண்டேன்
கொடியாரதன்மேல்விடையுங்கண்டேன் கோவணமுங்கீளுங்குலாவக்கண்டேன்
வடியாருமூவிலைவேல்கையிற்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௬)

குழையார்திருத்தோடு காதிற்கண்டேன் கொக்கரையுஞ்சச்சரியுங்கொள் கைகண்டேன், இழையார்புரிநூல் வலத்தேகண்டே னேழிசையாழ்வீணைமுரலக் கண்டேன், தழையார்சடைகண்டேன் றன்மைகண்டேன் றக்கையொடுதாளங் கறங்கக்கண்டேன் மழையார் திருமிடறு மையுங்கண்டேன் வாய்மூரடிகளைநான் கண்டவாறே. (௭)

பொருந்தாதசெய்கை பொலியக்கண்டேன் போற்றிசைத்துவிண்ணோர் புக ழக்கண்டேன், பரிந்தார்க்கருளும் பரிசுங்கண்டேன் பாராகிப்புனலாகி நிற்கை கண்டேன், விருந்தாய்ப்பரந்த தொகுதிகண்டேன் மெல்லியலும் விநாயகனுந் தோன்றக்கண்டேன், மருந்தாய்ப்பிணிதீர்க்கு மாறுகண்டேன் வாய்மூரடிகளை நான் கண்டவாறே. (௮)

மெய்யன்பரானார்க்கருளுங்கண்டேன் வேடுவனாய்நின்றநிலையுங்கண்டேன்
கையம்பரணெரித்தகாட்சிகண்டேன் கங்கணமுமங்கைக்கனலுங்கண்டேன்
ஐயம்பலவூர்திரியக்கண்டே னற்றவன்றன்வேள்வியழித்துகந்து
வையம்பரவவிருத்தல்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௯)

கலங்கவிருவர்க்கழலாய்நீண்ட காரணமுங்கண்டேன்கருவாய்நின்று
பலங்கடரித்துகந்தபண்புங்கண்டேன் பாடலொலியெலாங்கூடக்கண்டேன்
இலங்கைத்தலைவன்சிரங்கள்பத்து மிறுத்தவனுக்கீந்தபெருமைகண்டேன்
வலங்கைத்தலத்துள்ளனலுங்கண்டேன் வாய்மூரடிகளைநான்கண்டவாறே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## 78 ௨௯௨. திருவாலங்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஒன்றாவுலகனைத்துமானார்தாமே யூழிதோறூழியுயர்ந்தார்தாமே
நின்றாகியெங்குநிமிர்ந்தார்தாமே நீர்வளிதீயாகாசமானார்தாமே
கொன்றாடுங்கூற்றையுதைத்தார்தாமே கோலப்பழனையுடையார்தாமே
சென்றாடுதீர்த்தங்களானார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௧)

மலைமகளைப்பாகமமர்ந்தார்தாமே வானோர்வணங்கப்படுவார்தாமே
சலமகளைச்செஞ்சடைமேல்வைத்தார்தாமேசரணென்றிருப்பார்கட்கன்பர்தாமே
பலபலவும்வேடங்களானார்தாமே பழனைபதியாவுடையார்தாமே
சிலைமலையாமூவெயிலுமட்டார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௨)

ஆவுற்றவைந்துமுகந்தார்தாமே யளவில்பெருமையுடையார்தாமே
பூவுற்றநாற்றமாய்நின்றார்தாமே புனிதப்பொருளாகிநின்றார்தாமே
பாவுற்றபாடலுகப்பார்தாமே பழனைபதியாவுடையார்தாமே
தேவுற்றடிபரவநின்றார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௩)

நாறுபூங்கொன்றைமுடியார்தாமே நான்மறையோடாறங்கஞ்சொன்னார்தாமே
மாறிலாமேனியுடையார்தாமே மாமதியஞ்செஞ்சடைமேல்வைத்தார்தாமே
பாறினார்வெண்டலையிலுண்டார்தாமே பழனபதியாவுடையார்தாமே
தேறினார்சித்தத்திருந்தார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௪)

அல்லும்பகலுமாய்நின்றார்தாமே யந்தியுஞ்சந்தியுமானார்தாமே
சொல்லும்பொருளெலாமானார்தாமே தோத்திரமுஞ்சாத்திரமுமானார்தாமே
பல்லுரைக்கும்பாவெலாமானார்தாமே பழனபதியாவுடையார்தாமே
செல்லுநெறிகாட்டவல்லார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௫)

தொண்டாய்ப்பணிவார்க்கணியார்தாமே தூநீறணியுஞ்சுவண்டர்தாமே
தண்டாமரையானுமாலுந்தேடத் தழலுருவாயோங்கிநிமிர்ந்தார்தாமே
பண்டானிசைபாடநின்றார்தாமே பழனபதியாவுடையார்தாமே
திண்டோள்களெட்டுமுடையார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. ()

மையாருங்கண்டமிடற்றார்தாமே மயானத்திலாடன்மகிழ்ந்தார்தாமே
ஐயாறமாரூருமானைக்காவு மம்பலமுங்கோயிலாக்கொண்டார்தாமே
பையாடரவமசைத்தார்தாமே பழனபதியாவுடையார்தாமே
செய்யாள்வழிபடவுநின்றார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௭)

விண்முழுதுமண்முழுதுமானார்தாமே மிக்கோர்களேத்துங்குணத்தார்தாமே
கண்விழியாற்காமனையுங்காய்ந்தார்தாமே காலங்களூழிகடந்தார்தாமே
பண்ணியலும்பாடலுகப்பார்தாமே பழனபதியாவுடையார்தாமே
திண்மழுவாளேந்துகரத்தார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௮)

காரார்கடனஞ்சையுண்டார்தாமே கயிலைமலையையுடையார்தாமே
ஊராவேகம்பமுகந்தார்தாமே யொற்றியூர்பற்றியிருந்தார்தாமே
பாரார்புகழப்படுவார்தாமே பழனபதியாவுடையார்தாமே
தீராதவல்வினைநோய்தீர்ப்பார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௯)

மாலைப்பிறைசென்னிவைத்தார்தாமே வண்கயிலைமாமலையைவந்தியாத
நீலக்கடல்சூழிலங்கைக்கோனை நெரியவிரலாலடர்த்தார்தாமே
பாலொத்தமேனிநிறத்தார்தாமே பழனபதியாவுடையார்தாமே
சீலத்தாரேத்துந்திறத்தார்தாமே திருவாலங்காடுறையுஞ்செல்வர்தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் தொண்டைநாட்டிலுள்ளது.

முதல்வன் - ஊர்த்ததாண்டவேசுவரர், முதல்வி - வண்டார்குழலி.

---

## 79 ௨௬௫. திருத்தலையாலங்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

தொண்டர்க்குத்தூநெறியாய்நின்றான்றன்னைச் சூழ்நரகில்வீழாமேகாப்பான்றன்னை
அண்டத்துக்கப்பாலைக்கப்பாலானை யாதிரைநாளாதரித்தவம்மான்றன்னை
முண்டத்தின்முளைத்தெழுந்ததீயானானை மூவுருவத்தோருருவாய்முதலாய்நின்ற
தண்டத்திற்றலையாலங்கண்டான்றன்னைச் சாராதேசாலநாள்போக்கினேனே. (௧)

அக்கிருந்தவரையானை யம்மான்றன்னை யவுணர்புரமொருநொடியி லெரிசெய்தானைக், கொக்கிருந்தமகுடத்தெங் கூத்தன்றன்னைக் குண்டலஞ்சேர்காதானைக் குறைவார்சிந்தை, புக்கிருந்துபோகாத புனிதன்றன்னைப் புண்ணியனை யெண்ணருஞ்சீர்ப் போகமெல்லாம், தக்கிருந்ததலையாலங் காடன்றன்னைச் சாராதேசால நாள் போக்கினேனே. (௨)

மெய்த்தவத்தை வேதத்தை வேதவித்தை விளங்கிளமாமதிசூடும் விகிர்தன்றன்னை, எய்த்தவமேயுழிதந்த வேழையேனை யிடர்க்கடலில்வீழாமே யேறவாங்கிப், பொய்த்தவத்தாரறியாத நெறிநின்றானைப் புனல்கரந்திட்டுமையொ டொருபாகநின்ற, தத்துவனைத்தலையாலங் காடன்றன்னைச் சாராதேசாலநாள் போக்கினேனே. (௩)

சிவனாகித்திசைமுகனாய்த்திருமாலாகிச் செழுஞ்சுடராய்த்தீயாகிநீருமாகிப்
புவனாகிப்புவனங்களனைத்துமாகிப் பொன்னாகிமணியாகிமுத்துமாகிப்
பவனாகிப்பவனங்களனைத்துமாகிப் பசுவேறித்திரிவானோர்பவனாய்நின்ற
தவனாயதலையாலங்காடன்றன்னைச் சாராதேசாலநாள்போக்கினேனே. (௪)

கங்கையெனுங்கடும்புனலைக் கரந்தான்றன்னைக் காமருபூம்பொழிற்கச்சிக் கம்பன்றன்னை, அங்கையினின்மான்மறியொன்றேந்தினானை யையாறுமேயானையாரூரானைப், பங்கமிலாவடியார்க்குப் பரிந்தான்றன்னைப் பருதிநியமத்தானைப் பாரூரானைச், சங்கரனைத்தலையாலங்காடன்றன்னைச் சாராதேசாலநாள்போக்கினேனே.

விடந்திகழுமரவரைமேல்வீக்கினானை விண்ணவர்க்குமெண்ணரியவளவிலானை
அடைந்தவரையமருலகமாள்விப்பானை யம்பொன்னைக்கம்பமாகளிற்றட்டானை
மடந்தையொருபாகனைமகுடந்தன்மேல் வார்புனலும்வாளரவுமதியும்வைத்த
தடங்கடலைத்தலையாலங்காடன்றன்னைச் சாராதேசாலநாள்போக்கினேனே. ()

விடையேறிக்கடைதோறும் பலிகொள்வானை வீரட்டமேயானை வெண்ணீற்றானை, முடைநாறுமுதுகாட்டிலாடலானை முன்னானைப்பின்னானையந்நாளானை, உடையாடையுரிதோலே யுகந்தான்றன்னை யுமையிருந்தபாகத்து ளொருவன்றன்னைச், சடையானைத்தலையாலங் காடன்றன்னைச் சாராதேசாலநாள் போக்கினேனே. (௭)

கரும்பிருந்தகட்டிதனைக் கனியைத்தேனைக் கன்றாப்பி னடுதறியைக் காறையானை, இரும்பார்ந்தமூவிலைவே லேந்தினானை யென்னானைத்தென்னானைக் காவான்றன்னைச், சுரும்பமருமலர்க்கொன்றை சூடினானைத் தூயானைத்தாயாகி யுலகுக் கெல்லாம், தரும்பொருளைத்தலையாலங்காடன்றன்னைச் சாராதேசாலநாள் போக்கினேனே. (௮)

பண்டளவுநரம்போசைப் பயனைப்பாலைப் படுபயனைக்கடுவெளியைக் கனலைக் காற்றைக், கண்டளவிற்களிகூர்வார்க் கெளியான்றன்னைக் காரணனைநாரணனைக் கமலத்தோனை, எண்டளவிலென்னெஞ்சத் துள்ளேநின்ற வெம்மானைக்கைம்மாவி னுரிவைபேணும், தண்டரனைத்தலையாலங் காடன்றன்னைச் சாராதேசாலநாள் போக்கினேனே. (௯)

கைத்தலங்களிருபதுடை யரக்கர்கோமான், கயிலைமலையதுதன்னைக்கருதா தோடி,முத்திலங்குமுடிதுளங்க வளைகளொற்றி முடுகுதலுந் திருவிரலொன் றவன் மேல்வைப்பப், பத்திலங்குவாயாலும் பாடல்கேட்டுப் பரிந்தவனுக் கிராவணனென்றீந்தநாம, தத்துவனைத்தலையாலங் காடன்றன்னைச் சாராதேசாலநாள் போக்கினேனே. (௧0)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆடவல்லவரதர்; முதல்வி - திருமடந்தையம்மை.

---

## உ௧௬௪. திருமாற்பேறு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பாரானைப்பாரினதுபயனானைப் படைப்பாகிப் பல்லுயிர்க்கும் பரிவோன் றன்னை, ஆராத வின்னமுதை யடியார்தங்கட் கனைத்துலகு மானானை யமரர்கோனைக், காராருங்கண்டனைக்கயிலைவேந்தைக் கருதுவார்மனத்தானைக்காலற்செற்ற, சீரானைச் செல்வனைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென்றடைந் தேனனே. (௧)

விளக்கின்றநீராகிவித்துமாகி விண்ணோடுமண்ணாகி விளங்குசெம்பொன் துளக்கின்ற துளையாகிச் சோதியாகித் தூண்டரிய சுடராகித் துளக்கில் வான் மேல், முளைக்கின்ற கதிர்மதியு மரவுமொன்றி முழங்கொலிநீர்க் கங்கையொடு மூவாதென்றும், திளைக்கின்ற சடையானைத்திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனனே. (உ)

மலைமகடங்கோனவனைமாநீர்முத்தை மரகதத்தைமாமணியைமையல்கூர்செல் வக், கலைநிலவுகையானைக்கம்பன்றன்னைக் காண்பினிய செழுஞ்சுடரைக்கனகக் குன்றை, விலைபெரிய வெண்ணீற்று மேனியானை மெய்யடியார் வேண்டியதே வேண்டுவானைச், சிலைநிலவுகரத்தானைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென்றடைந்தேனனே. (௩)

உற்றானை யுடறனக்கோ ருயிரானானை யோங்காரத் தொருவனையங் குமையோர்பாகம், பெற்றானைப் பிஞ்ஞகனைப் பிறவாதானைப் பெரியனவு மரியனவு மெல்லாமுன்னே, கற்றானைக்கற்பனவுந் தானேயாய கச்சியேகம்பனைக் காலன் வீழச், செற்றானைத்திகழொளியைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச் சென்றடைந்தேனனே. (௪)

நீறாகிநீறுமிழு நெருப்புமாகி நினைவாகி நினைவினிய மலையான்மங்கை, கூறாகிக்கூற்றாகிக் கோளுமாகிக் குணமாகிக் குறையாத வுவகைக்கண்ணீர், ஆறாதவானந்தத் தடியார்செய்த வனாசாரம் பொறுத்தருளி யவர்மே லென்றும், சீறாதபெருமானைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக் குன்றினைச்சென்றடைந்தேனனே.

மருவினியமறைப்பொருளை மறைக்காட்டானை மறப்பிலியை மதியேந்து சடையான்றன்னை, உருநிலவு மொண்சுடரை யும்பரானை யுரைப்பினிய தவத்தா

ந்தைக், கருநிலவு கண்டனைக் காளத்தியைக்கருதுவார் மனத்தானைக் கல்விதன்னைச், செருநிலவு படையானைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென் றடைந்தேனானே. (௬)

பிறப்பானைப்பிறவாதபெருமையானைப் பெரியானையரியானைப்பெண்ணாணாய, நிறத்தானைநின்மலனைநினையாதாரை நினையானை நினைவோரைநினைவோன்றன்னை, அறத்தானை யறவோனை யையன்றன்னை யண்ணறனை நண்ணரிய வமரரேத்தும், திறத்தானைத்திகழொளியைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன்றினைச்சென் றடைந்தேனானே. (௭)

வானகத்தில் வளர்முகிலை மதியந்தன்னை வணங்குவார் மனத்தானை வடிவார் பொன்னை, ஊனகத்தி லுறுதுணையை யுலவாதானை யொற்றியூ ருத்தமனை யூழிக் கன்றைக், கானகத்துக்கருங்களிற்றைக் காளத்தியைக் கருதுவார் கருத்தானைக் கருவைமூலத், தேனகத்தினின்சுவையைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன் றினைச்சென் றடைந்தேனானே. (௮)

முற்றாதமுழுமுதலை முளையைமொட்டை முழுமலரின்மூர்த்தியை முனியா தென்றும், பற்றாகிப்பல்லுயிர்க்கும் பரிவோன்றன்னைப் பராபரனைப் பரஞ்சுட ரைப் பரிவோர்நெஞ்சில், உற்றானையுயர்கருப்புச்சிலையோனீறா யொள்ளழல்வாய் வேவவரு நோக்கத்தானைச் செற்றானைத்திரிபுரங்க டிருமாற்பேற்றெஞ் செம்பவ ளக்குன்றினைச்சென் றடைந்தேனானே. (௯)

விரித்தானைநான்மறையோ டங்கமாறும் வெற்பெடுத்த விராவணனைவிரலா லூன்றி, நெரித்தானைநின்மலனை யம்மான்றன்னை நிலாநிலவுசெஞ்சடைமேனிறை நீர்க்கங்கை, தரித்தானைச்சங்கரனைச் சம்புதன்னைத் தரியலர்கள்புரமூன்றுந் தழல் வாய்வேவச், சிரித்தானைத்திகழொளியைத் திருமாற்பேற்றெஞ் செம்பவளக்குன் றினைச்சென் றடைந்தேனானே. (௰)

திருச்சிற்றம்பலம்.

---

## ௨௯௫. திருக்கோடிகா - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கண்டலஞ்சேர்நெற்றியிளங் காளைகண்டாய் கனல்மதிசூழ் கந்தமாதனத் தான்கண்டாய், மண்டலஞ்சேர்மயக்கறுக்கு மருந்துகண்டாய் மதிற்கச்சியேகம்ப மேயான்கண்டாய், விண்டலஞ்சேர் விளக்கொளியாய் நின்றான்கண்டாய் மியச்சூர் பிரியாத விகிர்தன்கண்டாய், கொண்டலஞ்சேர்கண்டத்தெங் கூத்தன்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௧)

வண்டாடு பூங்குழலாள் பாகன்கண்டாய் மறைக்காட்டுறையு மணாளன்கண் டாய், பண்டாடும்பழவினைநோய் தீர்ப்பான்கண்டாய் பரலோகநெறிகாட்டும் பர மன்கண்டாய், செண்டாடி யவுணர்புரஞ் செற்றான்கண்டாய் திருவாரூர்த்திருமூ லட்டானன்கண்டாய், கொண்டாடுமடியவர்தம் மனத்தான்கண்டாய் கோடிகாவ மர்ந்துறையுங் குழகன்றானே. (௨)

அலையார்ந்தபுனற்கங்கைச் சடையான்கண்டா யடியார்கட்காரமுத மானான் கண்டாய், மலையார்ந்தமடமங்கை பங்கன்கண்டாய் வானோர்கண்முடிக்கணியாய் நின்றான்கண்டாய், இலையார்ந்ததிரிசூலப் படையான்கண்டா யேழுலகுமாய்நின்ற வெந்தைகண்டாய், கொலையார்ந்தகுஞ்சரத்தோல் போர்த்தான்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௩)

மற்றொருந்தன்னொப்பா ரில்லான்கண்டாய் மயிலாடுதுறையிடமா மகிழ்ந்தான் கண்டாய், புற்றரவணிந்த புனிதன்கண்டாய் பூந்துருத்திப்பொய்யிலியாய் நின்றான்கண்டாய், அற்றார்கட்கற்றானாய் நின்றான்கண்டா யையாறகலாத வையன்கண்டாய், குற்றாலத்தமர்ந்துறையுங் கூத்தன்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௪)

வாரார்ந்தவனமுலையாள் பங்கன்கண்டாய் மாற்பேறுகாப்பா மகிழ்ந்தான் கண்டாய், போரார்ந்தமால்விடையொன் றூர்வான்கண்டாய் புகலூரையகலாத புனிதன்கண்டாய், நீரார்ந்தநிமிர்சடையொன் றுடையான்கண்டாய் நினைப்பார் தம்வினைப்பார மிழிப்பான்கண்டாய், கூரார்ந்தமூவிலைவேற் படையான்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௫)

கடிமலிந்தமலர்க்கொன்றைச் சடையான்கண்டாய் கண்ணப்பவிண்ணப்புக் கொடுத்தான்கண்டாய், படிமலிந்தபல்பிறவி யறுப்பான்கண்டாய் பற்றற்றார்பற்றவனாய் நின்றான்கண்டாய், அடிமலிந்தசிலம்பலம்பத் திரிவான்கண்டா யமரர்கணந் தொழுதேத்து மம்மான்கண்டாய், கொடிமலிந்தமதிட்டில்லைக் கூத்தன்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௬)

உழையாடுகரதலமொன் றுடையான்கண்டா யொற்றியூரொற்றியா வுடையான்கண்டாய், கழையாடுகழுக்குன்ற மமர்ந்தான்கண்டாய் காளத்திக்கற்பகமாய் நின்றான்கண்டாய், இழையாடுமெண்புயத்த விறைவன்கண்டா யென்னெஞ்சத் துண்ணீங்கா வெம்மான்கண்டாய், குழையாடநடமாடுங் கூத்தன்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௭)

படமாடுபன்னகக்கச் சசைத்தான்கண்டாய் பராய்த்துறையும் பாசூருமே யான்கண்டாய், நடமாடியேழுலகுந் திரிவான்கண்டாய் நான்மறையின்பொருள் கண்டாய் நாதன்கண்டாய், கடமாடுகளிறுரித்த கண்டன்கண்டாய் கயிலாயமேவி யிருந்தான்கண்டாய், குடமாடியிடமாகக் கொண்டான்கண்டாய் கோடிகாவமர்ந்துறையுங் குழகன்றானே. (௮, ௯, ௧௦)

திருச்சிற்றம்பலம்.

## 82 உ௯௯. திருச்சாய்க்காடு - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வானத்திளமதியும் பாம்புந்தன்னில் வளர்சடைமேலாதரிப்ப வைத்தார்போலும், தேனத்தினைத்துண்டு வண்டுபாடுந் தில்லைநடமாடுந்தேவர்போலும், ஞானத்திலொண்சுடராய் நின்றார்போலு நன்மையுந்தீமையு மானார்போலும், தேனைத் தடியார்க்கினியார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (௧)

விண்ணோர்பரவ நஞ்சுண்டார்போலும் வியன்றுருத்திவேள்விக் குடியார் போலும், அண்ணாமலையுறையு மண்ணல்போலு மதியரையமங்கை யமர்ந்தார்போலும், பண்ணார்களிவண்டு பாடியாடும் பராய்த்துறையுண்மேய பரமர்போலும், திண்ணார்புகார்முத் தலைக்குந்தெண்ணீர்த் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர்தாமே. (உ)

கானிரியவேழ முரித்தார்போலுங் காவிரிப்பூம்பட்டினத் துள்ளார்போலும், வானிரியவருபுரமூன் றெரித்தார்போலும் வடகயிலைமலையதுதம் மிருக்கைபோலும், மூனிரியத்தலைகலனா வுடையார்போலு முயர்தோணிபுரத்துறைய மொருவர்போலும், தேனிரியமீன்பாயுந் தெண்ணீர்ப்பொய்கைத் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர்தாமே. (ங)

ஊனுற்றவெண்டலைசேர் கையர்போலு மூழிபலகண் டிருந்தார்போலும், மானுற்றகரதலமொன் றுடையார்போலு மறைக்காட்டுக்கோடி மகிழ்ந்தார்போலும், கானுற்றவாடலமர்ந்தார்போலுங் காமனையுங்கண்ணழலாற் காய்ந்தார்போலும், தேனுற்றசோலை திகழ்ந்துதோன்றுந் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வ ர்தாமே. (௪)

கார்மல்குகொன்றையந் தாரார்போலுங் காலனையுமோருதையாற் கண்டார் போலும், பார்மல்கியேத்தப் படுவார்போலும் பருப்பதத்தேபல்லூழி நின்றார் போலும், ஊர்மல்குபிச்சைக்குழன்றார்போலு மோத்தூரொருநாளு நீங்கார்போலும், சீர்மல்குபாட லுகந்தார்போலுந் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர் தாமே. (ரு)

மாவாய்ப்பிளந்து கந்தமாலுஞ்செய்ய மலரவனுந்தாமேயாய் நின்றார்போலும், மூவாதமேனி முதல்வர்போலும் முதுகுன்றமூதூ ருடையார்போலுங், கோவாயமுனிதன்மேல் வந்தகூற்றைக் குரைகழலாலன்று குமைத்தார்போலுந், தேவாதிதேவர்க்கரியார்போலுந் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர்தாமே.

சுடுவெளியோடோரைந்து மானார்போலுங் காரோணத்தென்று மிருப்பார் போலும், இடிகுரல்வாய்ப்பூதப் படையார்போலு மேகம்பமேவி யிருந்தார்போலும், படியொருவரில்லாப் படியாபோலும் பாண்டிக்கொடுமுடியுந் தம்மூர்போலும், செடிபடுநோயடியாரைத் தீர்ப்பார்போலுந் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர்தாமே. (எ)

விலையிலாவாரஞ்சேர்மார்பர்போலும் வெண்ணீறுமெய்க்கணிந்தவிகிர்தர்போலும், மலையினார்மங்கை மணாளர்போலு மாற்பேறுகாப்பாய் மகிழ்ந்தார்போலுந், தலைவிலார்புரமூன்றுந் தலைத்தார்போலுஞ் சோற்றுத்துறைதுருத்தி யுள்ளார் போலுஞ், சிலையினார்செங்கணரவர்போலுந் திருச்சாய்க்காட்டினி துறையுஞ் செல்வர்தாமே. (அ)

அல்லலடியார்க்கறுப்பார்போலு மமருலகந்தம்மடைந்தார்க்காட்சிபோலும்
நல்லமுநல்லூருமேயார்போலு நள்ளாறுநாளும்பிரியார்போலும்

முல்லைமுகைநகையாள்பாகர்போலு முன்னமேதோன்றிமுளைத்தார்போலுந்
தில்லைநடமாடுந்தேவர்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ்செல்வர்தாமே.

உறைப்புடையவிராவணன்பொன்மலையைக்கையா லூக்கஞ்செய்தெடுத்தலு மேயுமையாளஞ்ச, நிறைப்பெருந்தோளிருபதும் பொன்முடிகள்பத்து நிலஞ்சேர விரல்வைத்தநிமலர்போலும், பிறைப்பிளவு சடைக்கணிந்த பெம்மான்போலும் பெண்ணாணுருவாகிநின்றார்போலுஞ், சிறப்புடையவடியார்கட்கினியார்போலுந் திருச்சாய்க்காட்டினிதுறையுஞ் செல்வர்தாமே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - சாயாவனேசுவரர்; முதல்வி - குயிலுநன்மொழி.



## உ௯௧. நபபாசூர் - ம.

திருச்சிற்றம்பலம்

விண்ணாகிநிலனாகிவிசும்புமாகி வேலைசூழ்ஞாலத்தார்விரும்புகின்ற
மண்ணாகியெழுத்தாகியியல்புமாகி யேழுலகுந்தொழுதேத்திக்காணநின்ற
கண்ணாகிமணியாகிக்காட்சியாகிக் காதலித்தங்கடியார்கள்பரவநின்ற
பண்ணாகியின்னமுதாம்பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே. (௧)

வேதமோர்நான்காயாறங்கமாகி விரிக்கின்றபொருட்கெல்லாம்வித்துமாகிக்
கூதலாய்ப்பொழிகின்றமாரியாகிக் குவலயங்கண்முழுதுமாய்க்கொண்டலாகிக்
காதலால்வானவர்கள்போற்றியென்றுங் கடிமலர்களவைதூவியேத்தநின்ற
பாதியோர்மாதினைப்பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்தவாறே. ()

தடவரைகளேழுமாய்க் காற்றாய்த்தீயாய்த் தண்விசும்பாய்த் தண்விசும்பி னுச்சியாகிக், கடல்வலையஞ்சூழ்ந்ததார் ஞாலமாகிக் காண்கின்றகதிரவனு மதியு மாகிக், குடமுழவச் சரிவழியே யனல்கையேந்திக் கூத்தாடவல்லகுழகனாகிப், படவரவொன் றதுவாட்டிப் பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்த வாறே. (௩)

நீராருஞ்செஞ்சடைமேலரவங்கொன்றை நிறைமதியமுடன்சூடிநீதியாலே
சீராருமறையோதியுலகமுய்யச் செழுங்கடலைக்கடைந்தகடனஞ்சமுண்ட
காராருங்கண்டனைக்கச்சிமேய கண்ணுதலைக்கடலொற்றிகருதினானைப்
பாரோரும்விண்ணோரும்பரசும்பாசூர்ப் பரஞ்சுடரைக்கண்டடியேனுய்ந்தவாறே.

வேடனாய்விசயன்றன் வியப்பைக்காண்பான் விற்பிடித்துக்கொம்புடையவே னத்தின்பின், கூடினாருமையவளுங் கோலங்கொள்ளக் கொலைப்பகழியுடன்கோத் துக்கோரப்பூசல், ஆடினார்பெருங்கூத்துக் காளிகாண வருமறையோடாறங்கமாய் ந்துகொண்டு, பாடினார்நால்வேதம் பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியே னுய்ந்த வாறே. (௫)

புத்தியினாற் சிலந்தியுந்தன் வாயினூலாற் பொதுப்பந்த லதுவிழைத்துச்சரு
கான்மேய்ந்த, சித்தியினாலரசாண்டு சிறப்புசெய்யச் சிவகணத்துப் புகப்பெய்தார்
திறலான்மிக்க, வித்தகத்தால் வெள்ளானை விள்ளாவன்பு விரவியவாகண்டதற்கு
வீடுகாட்டிப், பத்தர்களுக்கின்னமுதாம் பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியே
னுய்ந்தவாறே. (௬)

இணையொருவர்தாமல்லா லியாருமில்லா ரிடைமருதோடேகம்பத்தென்று
நீங்கார், அணைவரியரியாவர்க்குமாதிதேவ ரருமந்தநன்மையெலா மடியார்க்கீவர்,
தணன்முழுகு பொடியாடுஞ் செக்கர்மேனித் தத்துவனைச் சாந்தகிலினளறுதோ
ய்ந்த, பணைமுலையாள் பாகனையெம் பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்டடியே னுய்ந்
தவாறே. (௭)

அண்டவர்கள் கடல்கடைய வதனுட்டோன்றி யதிர்த்தெழுந்த வாலாலம்வே
லைஞாலம், எண்டிசையுஞ்சுடுகின்ற வாற்றைக்கண்டு மிமைப்பளவி லுண்டிருண்ட
கண்டர்தொண்டர், வண்டுபடுமதுமலர்க டூவிநின்று வானவர்க டானவர்கள்
வணங்கியேத்தும், பண்டரங்க வேடனையெம் பாசூர்மேய பரஞ்சுடரைக் கண்ட
டியே னுய்ந்தவாறே. (௮)

ஞாலத்தையுண்ட திருமாலுமற்றை நான்முகனுமறியாத நெறியான்கையில்,
சூலத்தாலந்தகனைச்சுருளக்கோத்துத் தொல்லுலகிற்பல்லுயிரைக் கொல்லுங்கூற்
றைக், காலந்தாலுதைசெய்து காதல்செய்த வந்தணனைக் கைக்கொண்ட செவ்
வான்வண்ணர், பாலொத்த வெண்ணீற்றர் பாசூர்மேய பரஞ்சுடரைக்கண்டடியே
னுய்ந்தவாறே. (௯)

வேந்தனெடு முடியுடைய வரக்கர்கோமான் மெல்லியலா ளுமைவெருவவி
ரைந்திட்டோடிச், சாந்தமென நீறணிந்தான் கயிலைவெற்பைத் தடக்கைகளாலெ
டுத்திடலுந் தாளாலூன்றி, ஏந்துதிரடிண்டோளுந் தலைகள்பத்து மிறுத்தவன்ற
னிசைகேட்டு விரக்கங்கொண்ட, பாந்தளணி சடைமுடியெம் பாசூர்மேய பரஞ்சு
டரைக் கண்டடியே னுய்ந்தவாறே. (௰)

திருச்சிற்றம்பலம்.

## 84 ௨௯௮. திருச்செங்காட்டங்குடி - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

பெருந்தகையைப் பெறற்கரிய மாணிக்கத்தைப் பேணிநினைந் தெழுவார்தம்
மனத்தேமன்னி, இருந்தமணி விளக்கதனை நின்றபூமே லெழுந்தருளியிருந்தானை
யெண்டோள்வீசி, அருந்திறன்மா நடமாடு மம்மான்றன்னை யங்கனகச் சுடர்க்
குன்றை யன்றாலின்கீழ்த், திருந்துமறைப்பொருணால்வர்க் கருள்செய்தானைச்
செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௧)

துங்கநகத்தாலன்றித் தொலையாவென்றித் தொகுதிறலவ் விரணியனையாகங்
கீண்ட, அங்கனகத்திருமாலுமயனுந்தேடு மாரழலை யனங்கனுடல் பொடியாய்
வீழ்ந்து, மங்கனகத்தான்வல்ல மருந்துதன்னை வண்கயிலைமாமலைமேன் மன்னி
நின்ற, செங்கனகத் திரடோளெஞ் செல்வன்றன்னைச் செங்காட்டங் குடியதனிற்
கண்டேனானே. (௨)

உருகுமனத் தடியவர்கட் கூறுந்தேனை யும்பர்மணிமுடிக்கணியை யுண்மை நின்ற, பெருகுநிலைக்குறியாள ரறிவுதன்னைப் பேணியவந்தணர்க்கு மறைப்பொருளைப்பின்னும், முருகுவிரிநறுமலர்மேலயற்குமாற்கு முழுமுதலை மெய்த்தவத்தோர் துணையைவாய்த்த, திருக்குழலுமைநங்கை பங்கன்றன்னைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௩)

கந்தமலர்க்கொன்றையணி சடையான்றன்னைக் கதிர்விடுமாமணிபிறங்கு கனகச்சோதிச், சந்தமலர்த்தெரிவையொரு பாகத்தானைச் சராசரநற்றாயானைநாயேன் முன்னைப், பந்தமறுத்தாளாக்கிப் பணிகொண்டாங்கே பன்னியநூற்றமிழ்மாலை பாடுவித்தென், சிந்தைமயக்கறுத்த திருவருளினானைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௪)

நஞ்சடைந்தகண்டத்து நாதன்றன்னை நளிர்மலர்ப்பூங்கணைவேளை நாசமாக, வெஞ்சினத்தீவிழித்ததொரு நயனத்தானை வியன்கெடிலவீரட்ட மேவினானை, மஞ்சடுத்தநீள்சோலை மாடவீதி மதிளாரூரிடங்கொண்ட மைந்தன்றன்னைச், செஞ்சினத்தகிரிசூலப் படையான்றன்னைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே.

கன்னியையங்கொருசடையிற் கரந்தான்றன்னைக் கடவூரில்வீரட்டங் கருதினானைப், பொன்னிசூழையாற்றெம் புனிதன்றன்னைப் பூந்துருத்திநெய்த்தானம் பொருந்தினானைப், பன்னியநான்மறைவிரிக்கும் பண்பன்றன்னைப் பரிந்திமையோர்தொழுதேத்திப் பரனேயென்று, சென்னிமிசைக்கொண்டணி சேவடியினானைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௬)

எத்திக்குமாய்நின்ற விறைவன்றன்னை யேகம்பமேயானை யில்லாத்தெய்வம், பொத்தித்தமயிர்பறிக்குஞ் சமணர்பொய்யிற் புக்கழுந்திவீழாமே போதவாங்கிப், பத்திக்கேவழிகாட்டிப் பாவந்தீர்த்துப் பண்டைவினைப்பயமான வெல்லாம் போக்கித், தித்தித்தென்மனத்துளே யூறுந்தேனைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௭)

கல்லாதார்மனத்தணுகாக் கடவுடன்னைக் கற்றார்களுற்றோருங் காதலானைப், பொல்லாதநெறியுகந்தார் புரங்கண்மூன்றும் பொன்றிவிழவன்றுபொரு சரந்தொட்டானை, நில்லாதநிணக்குரம்பைப் பிணக்கநீங்க நிறைதவத்தையடியேற்கு நிறைவித்தென்றும், செல்லாதசெந்நெறிக்கே செல்விப்பானைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௮)

அரியபெரும்பொருளாகி நின்றான்றன்னை யலைகடலிலாலா லமுதுசெய்த, கரியதொருகண்டத்துச் செங்கணேற்றுக் கதிர்விடுமாமணிபிறங்கு காட்சியானை, உரியபலதொழிற்செய்யு மடியார்தங்கட் குலகமெலாமுழுதளிக்கு முலப்பிலானைத் தெரிவையொருபாகத்துச் சேர்த்தினானைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (௯)

போரரவமால்விடையொன் றூர்தியானைப் புறம்பயமும் புகலூருமன்னினானை, நீரரவச்செஞ்சடைமே னிலாவெண்டிங்க ணீங்காமைவைத்தானை நிமலன்றன்னைப், போரவப்புட்பகத்தே ருடையவென்றிப் பிறங்கொளிவாளரக்கன்முடி

யிடியச்செற்ற, சீரரவக்கழலானைச் செல்வன்றன்னைச் செங்காட்டங்குடியதனிற் கண்டேனானே. (கo)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - கணபதீசுவரர்; முதல்வி - திருக்குழலாள்மாதம்மை.

---

## உகக. திருமுண்டீச்சரம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆர்த்தான்காணழகமரைக்குநாணு வடியவர்கட்கன்பன்கா ணானைத்தோலைப், போர்த்தான்காண்புரிசடைமேற் புனலோற்றான்காண் புறங்காட்டிலாடல் புரிந்தான்றான்காண், காத்தான்கா ணுலகேழுங் கலங்காவண்ணங் கனைகடல்வாய் நஞ்சதனைக் கண்டத்துள்ளே, சேர்த்தான்காண் டிருமுண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (க)

கருத்தன்காண்கமலத்தோன் றலையிலொன்றைக் காய்ந்தான்காண்பாய்ந்தநீர் பரந்தசென்னி, ஒருத்தன்கா ணுமையவளோர் பாகத்தான்கா ணோருருவின்மூவுருவா யொன்றாய்நின்ற, விருத்தன்காண் விண்ணவர்க்கு மேலானான்காண் மெய்யடியாருள்ளத்தே விரும்பிநின்ற, திருத்தன்காண் டிருமுண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (உ)

நம்பன்காணரவிடை யொன்றேறினான்கா ணாதன்காண்கீதத்தை நவிற்றினான்காண், இன்பன்காணிமையா முக்கண்ணினான்கா ணேசற்று மனமுருகுமடியார்தங்கட், கன்பன்காணாலதாடினான்கா ணவனிவனென்றியாவர்க்கு மறியவொண்ணாச், செம்பொன்காண் டிருமுண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (௩)

மூவன்காண்மூவர்க்கு முதலானான்காண் முன்னுமாய்ப்பின்னுமாய் முடிவானான்காண், காவன்கா ணுலகுக்கோர் கண்ணானான்காண் கங்காளன்காண் கயிலைமலையினான்காண், ஆவன்கா ணுவகத்தஞ் சாடினான்கா ணாழலாயயற்கரிக்கு மறியவொண்ணாத், தேவன்காண்டிரு முண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (௪)

கானவன்காண்கானவனாய்ப் பொருதான்றான்காண் கனலாடவல்லான்றான்காண் கையிலேந்தும், மானவன்காண்மறைநான்கு மாயினான்காண் வல்லேறொன்றது வேற வல்லான்றான்காண், ஊனவன்கா ணுலகத்துக் குயிரானான்கா ணுரையவன்கா ணுணர்வவன்கா ணுணர்ந்தார்க்கென்றும், தேனவன்காண்டிருமுண்டீச் சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (௫)

உற்றவன்கா ணுறவெல்லா மாவான்றான்கா ணொழிவறநின்றெங்கு முலப்பிலான்காண், புற்றரவேயாடையுமாய்ப் பூணுமாகிப் புறங்காட்டிலெரியாடல் புரிந்தான்றான்காண், நற்றவன்காணடியடைந்த மாணிக்காக நணுகியதோர்பெருங் கூற்றை சேவடியினால், செற்றவன்காண்டிருமுண்டீச் சரத்துமேய சிவலோகன் காணவனென் சிந்தையானே. (௬)

உதைத்தவன்காணுணராத தக்கன்வேள்வி யுருண்டோடத்தொடர்ந்தருக்கன் பல்லையெல்லாம், தகர்த்தவன்காண் டக்கன்றலையைச்செற்ற தலையவன்காண் மலைமகளாமுமையைச்சால, மதிப்பொழிந்தவல்லமரர் மாண்டார்வேள்வி வந்தவியுண்டவரோடு மதனையெல்லாம், சிதைத்தவன்காண் டிருமுண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (௭)

உரிந்தவுடையார்துவரா வுடம்பைமூடி யுழிதருமவ்வூமரவ ருணராவண்ணம், பரிந்தவன்காண் பனிவரைமீப் பண்டமெல்லாம் பறித்துடனே நிரந்துவருபாய்நீர்ப்பெண்ணை, நிரந்துவருமிருகரையுந் தடவாவோடி நின்மலனைவலங்கொண்டு நீளநோக்கித், திரிந்துலவுதிருமுண்டீச் சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (அ-௯)

அறுத்தவன்காணடியவர்க ளல்லலெல்லா மருப்பொருளாய் நின்றவன்காணநங்கனுக்கும், மறுத்தவன்காண்மலைதன்னை மதியாதோடி மலைமகடன்மனநடுங்க வானோரஞ்சக், கறுத்தவனாய்க்கயிலாய மெடுத்தான் கையுங் கதிர்முடியுங்கண்ணும் பிதுங்கியோடச், செறுத்தவன்காண் டிருமுண்டீச்சரத்துமேய சிவலோகன்காணவனென் சிந்தையானே. (௧௦)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் நடுநாட்டில் உள்ளது.

முதல்வன் - முண்டீசுரர்; முதல்வி - கானார்குழலியம்மை.

---

## 86 ௩௦௦. திருவாலம்பொழில் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

கருவாகிக்கண்ணுதலாய் நின்றான்றன்னைக் கமலத்தோன்றலையரிந்த காபாலியை, உருவார்ந்தமலைமகளோர் பாகத்தானை யுணர்வெலாமானானை யோசையாகி, வருவானைவலஞ்சுழியெம் பெருமான்றன்னை மறைக்காடுமாவடுதண் டுறையுமேய, திருவானைத்தென்பரம்பைக்குடியின்மேய திருவாலம்பொழிலானைச்சிந்திநெஞ்சே

உரித்தானைக்களிறதன்றோல் போர்வையாக வுடையானையுடைப்புலியி னதளேயாகத், தரித்தானைச்சடையதன்மேற் கங்கையங்கைத் தழலுருவைவிடமமுதா வுண்டிதெல்லாம், பரித்தானைப்பவளமால் வரையானைப் பாம்பணையான் றனக்கன்றங் காழிநல்கிச், சிரித்தானைத்தென்பரம்பைக் குடியின்மேய திருவாலம் பொழிலானைச் சிந்திநெஞ்சே. (௨)

உருமூன்றாயுணர்வின்க ணொன்றானானை யோங்காரமெய்ப்பொருளை யுடம்பினுள்ளார், கருவீன்றவெங்களைவை யறிவான்றன்னைக் காலனைத்தன் கழலடியாற் காய்ந்துமாணிக், கருளீன்றவாரமுதை யமரர்கோனை யள்ளூறியெம்பெருமா னென்பார்க்கென்றும், திருவீன்றதென்பரம்பைக் குடியின்மேயதிருவாலம்பொழிலானைச் சிந்திநெஞ்சே. (௩)

பார்முழுதாய்விசும்பாகிப் பாதாளமாம் பரம்பரனைச்சுரும்பமருங் குழலாள் பாகத், தாரமுதாம்மணிதில்லைக் கூத்தன்றன்னை வாட்போக்கியம்மானை யெம்மா னென்று, வாரமதாமடியார்க்கு வாரமாகி வஞ்சனைசெய்வார்க்கென்றும் வஞ்சனு கும், சீரரசைத்தென்பரம்பைக் குடியின்மேய திருவாலம்பொழிலானைச் சிந்தி நெஞ்சே. (௪)

வரையார்ந்தமடமங்கை பங்கன்றன்னை வானவர்க்கும்வானவனை மணியை முத்தே, அரையார்ந்தபுலித்தோன்மே லரவமார்த்த வம்மானைத்தம்மானை யடி யார்க்கென்றும், புரையார்ந்தகோவணத்தெம் புனிதன்றன்னைப் பூந்துருத்திமே யானைப் புகலூரானைத், திரையார்ந்ததென்பரம்பைக் குடியின்மேய திருவாலம் பொழிலானைச் சிந்திநெஞ்சே. (௫)

விரிந்தானைக்குவிந்தானை வேதவித்தை வியன்பிறப்போடிறப்பாகி நின்றான் றன்னை, அரிந்தானைச்சலந்தரன்ற னுடலம்வேறா யாழ்கடனஞ்சுண்டிமையோ ரெல்லாமுய்யப், பரிந்தானைப்பல்லசுரர் புரங்கண்மூன்றும் பாழ்படுப்பான்சிலைமலை நாணேற்றியம்பு, தெரிந்தானைத்தென்பரம்பைக் குடியின்மேய திருவாலம்பொழி லானைச் சிந்திநெஞ்சே. (௬)

பொல்லாதவென்னழுக்கிற் புகுவானென்னைப் புறம்புறமேசோதித்த புனி தன்றன்னை, எல்லாருந்தன்னையே யிகழவந்நா ளிடுபலியென்றகந்திரிபு மெம்பிரா னைச், சொல்லாதாரவர்தம்மைச் சொல்லாதானைத் தொடர்ந்துதன்பொன்னடியே பேணுவாரைச், செல்லாதநெறிசெலுத்த வல்லான்றன்னைத் திருவாலம்பொழி லானைச் சிந்திநெஞ்சே. (௭)

ஐந்தலையநாகவணைக் கிடந்தமாலோ டயன்றேடிநாடரிய வம்மான்றன்னைப், பந்தணவுமெல்விரலாள் பாகத்தானைப் பராய்த்துறையும்வெண்காடும் பயின்றான் றன்னைப், பொந்துடையவெண்டலையிற்பலிகொள்வானைப்பூவணமும்புறம்பயமும் பொருந்தினானைச், சிந்தியவெந்தீவினைகள் தீர்ப்பான்றன்னைத் திருவாலம்பொழிலா னைச் சிந்திநெஞ்சே. (௮)

கையிலுண்டுழல்வாருஞ் சாக்கியருங் கால்லாதவன்மூடர்க் கல்லாதானைப், பொய்யிலாதவர்க்கென்றும் பொய்யிலானைப் பூணாகநாணாகப் பொருப்புவில்லாக், கையினாம் பெரிகாலீர்க்குக்கோலாக் கடுந்தவத்தோர் நெடும்புரங்கள் கனல்வாய் வீழ்த்த, செய்யினார்தென்பரம்பைக் குடியின்மேய திருவாலம்பொழிலானைச் சிந்திநெஞ்சே. (௯, ௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - ஆத்மநாதர்; முதல்வி - ஞானம்பிகை.

## ௩௦௪. திருச்சிவபுரம் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

வானவன்காண் வானவர்க்குமேலானான்காண் வடமொழியுந் தென்றமிழுமறைகணான்கும், ஆனவன்காணானைந்துமாடினான்கா ணையன்காண்கைபிலனலேந்தியாடும், கானவன்காண்கானவனுக்கருள்செய்தான்காண் கருதுவாரிதயத்துக்கமலத்தூறும், தேனவன்காண்சென்றடையாச் செல்வன்றான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௧)

நக்கன்காணக்கரவ மரையிலார்த்த நாதன்காண் பூதகணமாடவாடும், சொக்கன்காண்கொக்கிறகுசூடினான்காண் டுடியிடையாடுணை முலைக்குச்சேர்வதாகும், பொக்கன்காண்பொக்கணத்தவெண்ணீற்றான்காண் புவனங்கண் மூன்றினுக்கும் பொருவாய்நின்ற, திக்கன்காண்செக்கர்துதிகழுமேனிச் சிவனவன்காண்சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௨)

வம்பின்மலர்க்குழலுமையாண் மணவாளன்காண் மலரவன்மால்காண்பரியமைந்தன்றான்காண், கம்பமதக்கரிபிளிறவுரிசெய்தோன்காண் கடனஞ்சமுண்டிருண்டகண்டத்தான்காண், அம்பர்நகர்ப்பெருங்கோயி லமர்கின்றான்கா ணயவந்தியுள்ளான்காணையாறன்காண், செம்பொனைத்திகழ்கின்றவுருவத்தான்காண் சிவனவன்காண்சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௩)

பித்தன்காண்டக்கன்றன்வேள்வியெல்லாம் பீடழியச்சாடியருள்கள்செய்த, முத்தன்காண் முத்தீயுமாயினான்காண் முனிவர்க்கும்வானவர்க்கு முதலாய்மிக்க, அத்தன்காண் புத்தூரிலமர்ந்தான்றான்கா ணரிசிற்பெருந்துறையே யாட்சிகொண்ட, சித்தன்காண் சித்தீச்சரத்தான்றான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௪)

தூயவன்காணீறுதைந்தமேனி துளங்கும் பளிங்கனையசோதியான்காண், தீயவன்காண்டீயவுணர்புரஞ்செற்றான்காண் சிறுமான்கொள் செங்கையெம்பெருமான்றான்காண், ஆயவன்காணாரூரிலம்மான்றான்கா ணடியார்கட்காரமுத மாயினான்காண், சேயவன்காண் சேமநெறியாயினான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௫)

பாரவன்காண்பாரதனிற் பயிரானான்காண் பயிர்வளர்க்குந்துளியவன்காண் டுளியினின்ற, நீரவன்காணீர்சடைமே னிகழ்வித்தான்கா ணிலவேந்தர் பரிசாகநினைவுற்றோங்கும், பேரவன்காண் பிறையெயிற்றுவெள்ளைப்பன்றி பிரியாதுபலநாளும் வழிபட்டேத்தும், சீரவன்காண்சீருடைய தேவர்க்கெல்லாஞ் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௬)

வெய்யவன்காண் வெய்யகனலேந்தினான்காண் வியன்கெடிலவீரட்ட மேவினான்காண், மெய்யவன்காண் பொய்யர்மனம்விரவாதான்காண் வீணையோடிசைந்துமிகு பாடன்மிக்க, கையவன்காண்கையின்மழுவேந்தினான்காண் காமரங்கம்பொடிவீழ்த்தகண்ணினான்காண், செய்யவன்காண் செய்யவளைமாலுக்கீந்த சிவனவன்காண்சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௭, ௮, ௯

கலையாரு நூலங்கமாயினான்காண் கலைபயிலுங் கருத்தன்காண்டிருத்தமாகி, மலையாகிமறிகடலேழ் சூழ்ந்துநின்ற மண்ணாகிவிண்ணாகி நின்றான்றான்காண், தலையாயமலையெடுத்ததகவிலோனைத் தகர்ந்துவிழவொருவிரலாற் சாதித்தாண்ட, சிலையாருமலைமகளோர் கூறன்றான்காண் சிவனவன்காண் சிவபுரத்தெஞ் செல்வன்றானே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - பிரமபுரிநாதர், முதல்வி - பெரியநாயகி.

---

## ௯௦௨. திருவோமாம்புலியூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

ஆராருமூவிலைவேலங்கையானை யலைகடனஞ் சயின்றானை யமரரேத்தும்
ஏராருமதிபொதியுஞ்சடையினானை யெழுபிறப்புமெனையாளா வுடையான்றன்னை
ஊராரும்படநாகமாட்டுவானை யுயர்புகழ்சேர்தருமோமாம்புலியூர்மன்னும்
சீராரும்வடதளியெஞ்செல்வன்றன்னைச்சேராதேதிகைத்துநாள்செலுத்தினேனே

ஆதியானரியயனென் றறியவொண்ணா வமரர்தொழுங்கழலானையமலன்றன்னைச், சோதிமதிகலைதொலையத் தக்கனெச்சன் சுடரிரவியயிலெயிறு தொலைவித்தானை, ஓதிமிகவந்தணர்களெரிமூன்றோம்பு முயர்புகழார்தருமோமாம்புலியூர்மன்னும், தீதிறிருவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதே திகைத்துநாள் செலுத்தினேனே. (௨)

வருமிக்கமதயானை யுரித்தான்றன்னை வானவர்கோன்றோளனைத்து மடிவித்தானைத், தருமிக்ககுழலுமையாள் பாகன்றன்னைச் சங்கரனெம்பெருமானைத் தரணிதன்மேல், உருமிக்கமணிமாடநிலாவுவீதி யுத்தமர்வாழ்தருமோமாம் புலியூர்மன்னும், திருமிக்கவடதளியெஞ் செய்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (௩)

அன்றினவர்புரமூன்றும் பொடியாய்வேவ வழல்விழித்தகண்ணானை யமரர்கோனை, வென்றிமிகுகாலனுயிர் பொன்றிவீழ விளங்குதிருவடியெடுத்தவிகிர்தன்றன்னை, ஒன்றியசீரிருபிறப்பர் முத்தீயோம்பு முயர்புகழ்நான்மறையோமாம் புலியூர்நாளும், தென்றன்மலிவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (௪)

பாங்குடையவெழிலங்கி யருச்சனைமுன்விரும்பப் பரிந்தவனுக்கருள்செய்தபரமன்றன்னைப், பாங்கிலாநரகதனிற்றொண்டரானோர் பாராதவகைபண்ண வல்லான்றன்னை, ஓங்குமதில்புடைதழுவு மெழிலோமாம் புலியூ ருயர்புகழந்தணரேத்தவுல்கர்க்கென்றும் தீங்கிறிருவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (௫)

அருந்தவத்தோர்தொழுதேத்து மம்மான்றன்னை யாராத வின்னமுதை யடியார்தம்மேல், வருந்துயரந்தவிர்ப்பானை யுமையாணங்கை மணவாளநம்பியை யென்மருந்துதன்னைப், பொருந்துபுன றழுவுவய னிலவுதுங்கப் பொழில்கெழுவு தருமோமாம் புலியூர்நாளும், திருந்துதிருவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (௬)

மலையானைவருமலையன் றுரிசெய்தானை மறையானைமறையாலு மறியவொண்ணாக், கலையானைக்கலையாருங் கையினானைக் கடிவானையடியார்க டுயரமெல்லாம், உலையாதவந்தணர்கள்வாழுமோமாம் புலியூரெம்முத்தமனைப் புரமூன்றெய்த, சிலையானைவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே.

சேர்ந்தோடுமணிக்கங்கை சூடினானைச் செழுமதியும்படவரவு முடன்வைத்தானைச், சார்ந்தோர்கட்கினியானைத் தன்னொப்பில்லாத் தழலுருவைத்தலைமகனைத் தகைநால்வேதம், ஓர்ந்தோதிப்பயில்வார்வாழ் தருமோமாம்புலியூருள்ளானைக் கள்ளாதவடியார்நெஞ்சில், சேர்ந்தானைவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (அ)

வார்கெழுவுமுலையுமையாள் வெருவவன்று மலையெடுத்த வாளரக்கன்றோ ளுந்தாளும், ஏர்கெழுவுசிரம்பத்து மிறத்துமீண்டே யின்னிசைகேட்டிருந்தானை யிமையோர்கோனைப், பார்கெழுவுபுகழ்மறையோர் பயிலுமாடப் பைம்பொழில் சேர்தருமோமாம் புலியூர்மன்னு, சீர்கெழுவுவடதளியெஞ் செல்வன்றன்னைச் சேராதேதிகைத்துநாள் செலுத்தினேனே. (௯-௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - துயர்தீர்த்தசெல்வர்; முதல்வி - பூங்கொடிநாயகி.

---

## ௯௰௯. திருவின்னம்பர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

அல்லிமலர்நாற்றத்துள்ளார்போலு மன்புடையார்சிந்தையகலார்போலும்
சொல்லிலருமறைநடாமேபோலுந் தூநெறிக்குவழிகாட்டுந்தொழிலார்போலும்
வில்லிற்புரமூன்றெரித்தார்போலும் வீங்கிருணல்வெளியுமானார்போலும்
எல்லிநடமாடவல்லார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௧)

கோழிக்கொடியோன்றன்றாதைபோலுங் கொம்பனாள்பாகங்குளிர்ந்தார்போலும்
ஊழிமுதல்வருந்தாமேபோலு முள்குவாருள்ளத்தினுள்ளார்போலும்
ஆழித்தேர்வித்தகருந்தாமேபோலு மடைந்தவர்கட்கன்பராய்நின்றார்போலும்
ஏழுபிறவிக்குந்தாமேபோலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௨)

தொண்டர்கடந்தகவினுள்ளார்போலுந் தூநெறிக்குந்தூநெறியாய்நின்றார்போலும்
பண்டிருவர்காணப்படியார்போலும் பத்தர்கடஞ்சித்தத்திருந்தார்போலும்
கண்டமிடறையேகறுத்தார்போலுங் காமனையுங்காலனையுங்காய்ந்தார்போலும்
இண்டைச்சடைசேர்முடியார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௩)

வானத்திளந்திங்கட்கண்ணிதன்னை வளர்சடைமேல்வைத்துகந்தமைந்தர்போலும்
ஊனொருத்தவேலொன்றுடையார்போலு மொளிநீறுபூசுமொருவர்போலும்
தானத்தின்முப்பொழுதுந்தாமேபோலுந் தம்மிற்பிறர்பெரியாரில்லைபோலும்
ஏனத்தெயிறிலங்கப்பூண்டார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௪)

சூழுந்துயரமறுப்பார்போலுந் தோற்றமிறுதியாய்நின்றார்போலும்
ஆழுங்கடனஞ்சையுண்டார்போலு மாடலுகந்தவழகர்போலும்
தாழ்வின்மனத்தேனையாளாக்கொண்டு தன்மையளித்ததலைவர்போலும்
ஏழுபிறப்புமறுப்பார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௫)

பாதத்தணையுஞ்சிலம்பர்போலும் பாரூர்விடையொன்றுடையார்போலும்
பூதப்படையாள்புனிதர்போலும் பூம்புகலூர்மேயபுராணர்போலும்
வேதப்பொருளாய்விளைவார்போலும் வேடம்பரவித்திரியுந்தொண்டர்
ஏதப்படாவண்ணநின்றார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௬)

பல்லார்தலையோட்டிலூணார்போலும் பத்தர்கடஞ்சித்தத்திருந்தார்போலும்
கல்லாதார்காட்சிக்கரியார்போலுங் கற்றவர்களேதங்களைவார்போலும்
பொல்லாதபூதப்படையார்போலும் பொருகடலுமேழ்மலையுந்தாமேபோலும்
எல்லாருமேத்தத்தகுவார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௭)

மட்டுமலியுஞ்சடையார்போலு மாதையோர்பாகமுடையார்போலும்
கட்டம்பிணிகடவிர்ப்பார்போலுங் காலன்றன்வாணாள்கழிப்பார்போலும்
நட்டம்பயின்றாடுநம்பர்போலு ஞாலமெரிநீர்வெளிகாலானார்போலும்
எட்டுத்திசைகளுந்தாமேபோலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௮)

கருவுற்றகாலத்தேயென்னையாண்டு கழற்போதுதந்தளித்தகள்வர்போலும்
செருவிற்புரமூன்றுமட்டார்போலுந் தேவர்க்குந்தேவராஞ்செல்வர்போலும்
மருவிப்பிரியாதமைந்தர்போலு மலரடிகளுடிவணங்கலுற்ற
இருவர்க்கொருவராய்நின்றார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௯)

அலங்கற்சடைதாழவையமேற்று வரவமரையார்க்கவல்லார்போலும்
வலங்கைமழுவொன்றுடையார்போலும்வான்றக்கன்வேள்விசிதைத்தார்போலும்
விலங்கலெடுத்துகந்தவெற்றியானை விறலழித்துமெய்ந்நரம்பாற்கீதங்கேட்டன்
றிலங்குசுடர்வாள்கொடுத்தார்போலு மின்னம்பர்த்தான்றோன்றியீசனாரே. (௰)

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் சோழநாட்டில் உள்ளது.

முதல்வன் - எழுத்தறிந்தவீசுவரர்; முதல்வி - கொந்தார்பூங்குழலம்மை.

---

## ௯௦௪. திருக்கஞ்சனூர் - திருத்தாண்டகம்.

திருச்சிற்றம்பலம்

மூவிலைநற்சூலம்வல னேந்தினானை மூன்றுசுடர்க்கண்ணானை மூர்த்திதன்னை
நாவலனைநரைவிடையொன்றேறுவானை நால்வேதமாறங்கமாயினானை
ஆவினிலைந்துகந்தானையமரர்கோவை யயன்றிருமாலானானை யனலோன்போற்றுங்
காவலனைக்கஞ்சனூராண்டகோவைக் கற்பகத்தைக்கண்ணாரக்கண்டுய்ந்தேனே )

பொல்லாப்புறங்காட்டகத்தாட்டொழியீர் புலால்வாயனபேயொடுபூச்சொழியீர்
எல்லாமறிவீரிதுவேயறியீரென் றிரங்குவேனெல்லியுநண்பகலும்
கல்லாநிழற்கீழொருநாள்கண்டதுங் கடம்பூர்க்கரக்கோயிலின்முன்கண்டதும்
அல்லால்விரகொன்றிலமெம்பெருமா னடிகேளுமக்காட்செயவஞ்சுதுமே. (ரு)

தென்னாத்தெனாத்தெத்தனாவென் றுபாடிச் சிலபூதமுநீருந்திசைதிசையன
பன்னான்மறைபாடுதிர்பாசூருளீர்படம் பக்கங்கொட்டுந்திருவொற்றியூரீர்
பண்ணார்மொழியாளையோர்பங்குடையீர் படுகாட்டகத்தென்றுமோர்பற்றொழியீர்
அண்ணாமலையேனென்றீராரூருளீ ரடியோ முமக்காட்செயவஞ்சுதுமே. (சு)

சிங்கத்துரிமூடுதிர்தேவர்கணந்தொழ நிற்றீர்பெற்றமுகந்தேறிடுதீர்
பங்கம்பலபேசிடப்பாடுந்தொண்டர்தமைப் பற்றிக்கொண்டாண்டுவிடவுங்கில்லீர்
கங்கைச்சடையீருங்கருத்தறியோங் கண்ணுமூன்றுடையீர்கண்ணேயாயிருந்தால்
அங்கத்துறுநோய்களைந்தாளகில்லீ ரடியோமுமக்காட்செயவஞ்சுதுமே. (எ)

பிணிவண்ணத்தவல்வினைதீர்த்தருளீர் பெருங்காட்டகத்திற்பெரும்பேயுநீரும்
துணிவண்ணத்தின்மேலுமோர்தோலுடுத்துச் சுற்றுநாகத்தராய்ச்சுண்ணநீறுபூசி
மணிவண்ணத்தின்மேலுமோர்வண்ணத்தராய் மற்றுமற்றும்பலவண்ணத்தராய்
அணிவண்ணத்தராய்நிற்றீரெம்பெருமானடி கேளுமக்காட்செயவஞ்சுதுமே. (அ)

கோளாளியகுஞ்சரங்கோளிழைத்தீர் மலையின்றலையல்லதுகோயில்கொள்ளீர்
வேளாளியகாமனைவெந்தழிய விழித்தீரதுவன்றியும்வெய்புரையும்
தோளாளுமைநங்கையோர்பங்குமீருடிகூறையுஞ்சோறுந்தந்தாளகில்லீர்
ஆளாளியவேகற்றீரெம்பெருமானடி கேளுமக்காட்செயவஞ்சுதுமே. (கூ)

பாரோடுவிண்ணும்பகலுமாகிப் பனிமால்வரையாகிப்பரவையாகி
நீரோடுதீயுநெடுங்காற்றுமாகி நெடுவெள்ளிடையாகிநிழலுமாகித்
தேரோடவரையெடுத்தவரக்கன் சிரம்பத்திறுத்தீருமசெய்கையெல்லாம்
ஆரோடுங்கூடாவடிகேளிதுவென்னடியோ முமக்காட்செயவஞ்சுதுமே. (கo)

அடிகேளுமக்காட்செயவஞ்சுதுமென் றமரர்பெருமானையாரூரனஞ்சி |யும்
முடியாலுலகாண்டமூவேந்தர்முன்னேமொழிந்தாறுமோர்நான்குமோரொன்றினை
படியாயிவைகற்றுவல்லவடியார்பரங்குன்றமேயபரமனடிக்கே
குடியாகிவானோர்க்குமோர்கோவுமாகிக்குலவேந்தராய்விண்முழுதாள்பவரே. ()

திருச்சிற்றம்பலம்.

இத்தலம் பாண்டிநாட்டில் உள்ளது.

முதல்வன் - பரங்கிரிநாதர்; முதல்வி - ஆவுடைநாயகியம்மை.

---

## ங. திருநெல்வாயில் திருஅரத்துறை - பண் - இந்தளம்.

திருச்சிற்றம்பலம்

கல்வாயகிலுங்கதிர்மாமணியுங்கலந்துந்திவருந்நிவவின்கரைமே
னெல்வாயிலரத்துறைநீடுறையுந்நிலவெண்மதிசூடியநின்மலனே

நல்வாயில்செய்தார்நடந்தாருடுத்தார்நரைத்தாரிறந்தாரென்றுநானிலத்திற் [லே.
சொல்லாய்க்கழிகின்றதறிந்தடியேன்றொடர்ந்தேனுய்யப்போவதோர்சூழல்சொல்

கறிமாமிளகும்மிகுவனமரமும்மிகவுந்திவருந்நிவவின்கரைமே
னெறிவார்குழலாரவர்காணநடஞ்செய்நெல்வாயிலரத்துறைநின்மலனே
வறிதேநிலையாதவிம்மண்ணுலகின்னரனாகவகுத்தனைநானிலையேன்
பொறிவாயிலிவ்வைந்தனையுமவியப்பொருதுன்னடியேபுகுஞ்சூழல்சொல்லே. ()

புற்றாடரவமரையார்த்துகந்தாய்புனிதாபொருவெள்விடையூர்தியினா
னெற்றேயொருகண்ணிலனின்னையல்லானெல்வாயிலரத்துறைநின்மலனே
மற்றேலொருபற்றிலனெம்பெருமான்வண்டார்குழலாண்மங்கைபங்கினனே
அற்றார்பிறவிக்கடனீந்தியேறியடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. (௫)

கோடுயர்கோங்கலர்வேங்கையலர்மிகவுந்திவருந்நிவவின்கரைமே
னீடுயர்சோலைநெல்வாயிலரத்துறைநின்மலனேநினைவார்மனத்தாய்
ஓடுபுனற்கரையாமிளமையுறங்கிவிழித்தாலொக்குமிப்பிறவி
வாடியிருந்துவருந்தல்செய்யாதடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. (௬)

உலவும்முகிலிற்றலைகற்பொழியவுயர்வேயொடிழிநிவவின்கரைமே
னிலவும்மயிலாரவர்தாம்பயிலுநெல்வாயிலரத்துறைநின்மலனே
புலனைந்துமயங்கியகங்குழையப்பொருவேலோர்நமன்றமர்தாநலிய
அலமந்துமயங்கியயர்வதன்முன்னடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. ()

ஏலம்மிலவங்கமெழிற்கனகமிகவுந்திவருந்நிவவின்கரைமே
னீலம்மலர்ப்பொய்கையிலன்னம்மலிநெல்வாயிலரத்துறைவாயொருநல்
வாலூன்றவருந்தும்முடம்பிதனைமகிழாதழகாவலந்தேனினியான்
ஆலநிழலமர்ந்தாயமராவடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. (௬)

சிகரம்முகத்திற்றிரளாரகிலும்மிகவுந்திவருந்நிவவின்கரைமே
னிகரின்மயிலாரவர்தாம்பயிலுநெல்வாயிலரத்துறைநின்மலனே
மகரக்குழையாய்மணக்கோலமதேபிணக்கோலமதாம்பிறவியிதுதான்
அகரம்முதலினெழுத்தாகிநின்றாயடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. (௭)

திண்டேர்நெடுவீதியிலங்கையர்கோன்றிரடோளிருபஃதுநெரித்தருளி
ஞெண்டாடுநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறைநின்மலனே
பண்டேமிகநான்செய்தபாக்கியத்தாற்பரஞ்சோதிநின்னாமம்பயிலப்பெற்றேன்
அண்டாவமரர்க்கமரர்பெருமானடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. (௮)

மாணாவுருவாகியோர்மண்ணளந்தான்மலர்மேலயன்றேடியுங்காண்பரியாய்
நீணீண்முடிவானவர்வந்திறைஞ்சுநெல்வாயிலரத்துறைநின்மலனே
வாணார்நுதலார்வலைப்பட்டடியேன்பலவின்கனியீய்ந்துபோல்வதன்முன்
ஆணோடுபெண்ணாமுருவாகிநின்றாயடியேனுய்யப்போவதோர்சூழல்சொல்லே. ()

நீரூருநெடுவயல்சூழ்புறவினெல்வாயிலரத்துறைநின்மலனைத்
தேரூர்நெடுவீதிநன்மாடமலிதென்னாவலர்கோனடித்தொண்டனணி

